# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உ௦]     விக்கிரமஹு ஆவணிமீ     [பகுதி—அ

## பொருளடக்கம்





☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.








# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-௨௦ விக்கிரமஸு ஆடிமீ பகுதி-எ


## பிரார்த்தனை



தாளாண் மையே நீ, தாள்தந் தருள்க
ஊக்க மேனியாய், ஊக்கம் அருள்க
உரத்தின் உருவு நீ, உரந்தந் தருள்க
ஆற்றலின் வைப்பே, ஆற்ற லருள்க
துணிவு நீ யானுய், துணிவே யருள்க
நோன்பின் நிறைவே, நோன்பெனக் கருள்க.

[தாளும் ஊக்கமும் உரமும் ஆற்றலும்
துணிவும் நோன்பும் நிறைய நீ அருளிடில்
சிற்றுயி ரின்பம் சிறந்து பெருகிடும்.]

ஒளியை அருளும் அருட்பெருஞ் சோதி !
அடியேம் அழிதொழில் அறவே களைந்து
மங்கள மாயின தந்தருள் புரிக.

ஒன்றே பொருளென ஒப்பு நோக்கி
எப்பொருட் கண்ணும் நட்பினே ஞக
ஒப்பு நோக்கினல் நட்பினேம் ஆகி
அன்பு வாழ்வுநாம் வாழுவேம் ஆக.

தந்தைநீ யாதலின் தந்தை யென்வே
அழியாது நாங்கள் விழுப்பம் உறவே
அறிவுரை தந்து அளித்தருள் எந்தாய்.

—சுக்லயதுர் வேதம்.

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

உலகத்தில் ஒரு நாட்டிற்கு அதிபதியாயிருப்பதினாலும், உலகத்தி லுள்ள மிக்க அழகு வாய்ந்த பொருள்களை அனுபவிப்பதினாலும், தாழ்மை யுடையவனுக்கு உரிமையாக வரும் அழிவற்ற ஆனந்தம் ஏற்படாது.

சமத்வ நிலையிலுள்ள மனிதன் தனது செயல்களில் நேர்மையான நெறியை விட்டு விலகமாட்டான்; அவன் பெருந்தன்மையும் உதாரகுண மும் உடையவனாகிறான். இத்தகைய மனிதன் நெருப்பால் எரிக்கப்படுவது மில்லை, நீரினால் கேடுறுவதுமில்லை; ஏனெனில், அவனது மனதின் மாறாத ஒரு தன்மையதான போக்கையும் அவனது ஒழுக்கத்தின் மிருதுவான தன்மையையும் எதுவும் மாற்ற முடியாது.

எல்லாப் பொருள்களையும் உதாசீனமான (பற்றற்ற) பார்வை யோடு நோக்குபவன் துன்பம் வரும்போதும் ஆபத்து வரும்போதும் ஒருக்காலும் அதிருப்தி யடையான்; மனச் சோர்வுமடையான். இத்தகைய மனிதன் ஸ்திரமான ஞானமுடையவன் எனப்படுவான்; இவனைத் தெய் வங்களும் மனிதரும் சமமாக வழிபடுவார். —ஞானவாசிஷ்டம்

* * * *

நமக்கு உலகவாழ்க்கையில் அதிக முன்னேற்றம் வேண்டாம், ஞான வாழ்க்கையில் அதிக முன்னேற்றம் நமக்கு அவசியம். அதிக அறிவு நமக்கு வேண்டாம், அதிக ஒழுக்கம் நமக்கு அவசியம். அதிக அரசாட்சி நமக்கு வேண்டாம், அதிகமான பயிற்சி நமக்கு அவசி யம். அதிகச்சட்டம் நமக்கு வேண்டாம், அதிக ஞானவாழ்க்கை நமக்கு அவசியம். கண்ணுக்குத் தோன்றும் பொருள்கள் அதிகமாக நமக்கு வேண்டாம், கண்ணுக்குப் புலப்படாத அரிய பொருள்களே நமக்கு அதிகமாக அவசியமாகின்றன.

—ஐக்கிய மாகாணங்களின் (அமெரிக்காவில்)
தலைவர் ஒருவர்.

# ஞானத்திற்குத் தயாராக்கிக் கொள்ளல்

[ஸ்ரீ பரமானந்த சுவாமிகள்]

முற்காலத்தில் நமது நாட்டிலுள்ள மனிதர் தம்மை எப்பொழுதும் ஞான விஷயமாகத் தயாராக்கிக் கொண்டிருந்தனர். ஞானத்திலே இயல்பாகவே ஊக்கமுடையோர் உயர்ந்த எண்ணங்களை எண்ணுதற்கும் உயர்ந்த நிலையில் வாழ்வதற்குமே தமது வாழ்க்கைகளை சமர்ப்பித்து வந்தனர்; நெஞ்சும் மனமும் சரியாயிருக்குமாயின், மனிதனது வெளியுலக சமாசாரங்கள் ஒழுங்கான முறையில் தாமாக நடந்துவரும்; வெற்றிகரமான முடிவை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும். அவர்கட்குப் பிறமக்களை வருத்தும் எண்ணமோ, எதிர்க்கும் எண்ணமோ எழாமல் இருந்தமையால், அவர்களும் பிறரால் எதிர்க்கப்படாத நிலையினில் பத்திரமாக இனிதே வாழ்ந்து வந்தனர். அவர்கள் தமது சகோதரர்க்கு நடுவே இறைவனைப் பற்றிய இன்பமான சிந்தனையில் மூழ்கியவராய் வாழ்ந்துவந்தனர்; பிறர்மீது பொறாமை சிறிதுமின்றியும் பிறர்பொருள்களின் மீது சற்றும் ஆசையின்றியும் இருந்ததுமல்லாமல் உயிரோடிருத்தற்கு மிகவும் இன்றியமையாதிருந்தவைகளைத் தவிர மற்றவைகளை மகிழ்ச்சியோடும் மனப்பூர்வமாகவும் துறந்தனர்; அவ்வாறு செய்தலின் சுதந்தரமாகவும் ஆனந்தமாகவும் வாழ்ந்தனர்.

பகவான் புத்தர் கூறுவதாவது:— "நம்மிடம் பகைமை கொண்டவர்மீது பகைமை பாராட்டாமல், சந்தோஷமாக வாழ்வோம். நம்மைப் பகைப்பவர்க்குள்ளே, பகைமை யின்றி நாம் வாழ்வோம்! பேராசையுள்ளவர்க்கு மத்தியில் பேராசையை ஒழித்து, ஆனந்தமாக வாழ்வோம். பேராசையுடையவர்க்கு மத்தியில் நாம் பேராசையை விடுத்து வாழ்வோம்.

தற்கால வாழ்க்கையில் இவ்வுலக முழுவதும் பரவியுள்ள ஒரு கஷ்டம் இருக்கின்றது; அது யாதெனில், மனிதர் தமக்குக் கஷ்டகாலம் வரும்போது அதை எதிர்த்து நிற்கத் தயார் பண்ணிக்கொள்ளாமையே. வேலையில்லாத் திண்டாட்டம் இப்போது எங்கும் பரவியுள்ளது; தங்கட்கு வேலை நீங்கும்போது, தாம் என்ன செய்வது என்பதை அவர்கட்கு அறிய முடியவில்லை. பலர் என்னிடம் வந்து, "என்னையும் என் கவலைகளையும் மறக்க நான் என்ன செய்யக் கூடும்? பிரதிகூலமாயுள்ள நிகழ்ச்சிகள் என்னைப் பலமாக அமுக்குவதினால் எனக்குப் பைத்தியம் பிடித்து விடுமோ என்று தோன்றுகிறது" என்று சொல்லுகிறார்கள். துன்பமும் கவலையும் துயரமும் நெருக்குகின்ற இந்த வேளையில்தான் மனிதன் தனது முழு நம்பிக்கையையும் பகவான் மீது வைத்து வாழும் மக்களுடைய உதவியை எப்போதும் நாடுகிறான். பகவானது சந்நிதியிலேயே வாழும் அத்தகைய மேன்மக்கள் தங்களை நாடிவரும் மக்கட்குச் செய்யும் பேருதவியாவது, ஞான வாழ்க்கைக்குத் தயாராக்கிக் கொள்ளும் நெறியை அவர்கட்குக் காட்டுவதேயாகும். நமது நிதியாளரும் வக்கீல்களும் உலகக் காரியத்தில் நிபுணர்களும் நம்மைக் கைவிடும்போது மட்டும், நாம் பகவானது உதவியை நாடத் தயாராயும் சம்மதமுள்ளவராயும் இருப்பது எக்காரணத்தினால்? எப்பொழுதும் நமது சுமைகளைச்

சுமப்பதற்குத் தயாராயும் சம்மதமுள்ளவ ராயும் இருக்கும் நமது இலக்ஷிய புருஷ ராகிய பகவானிடம் சதா நெருங்கி அள வளாவும் நிலையில் நம்மை வைத்துக் கொள்வது நமக்கு நலமல்லவா? "வேறு நினைவின்றி என்னையே வணங்குபவனது சுமைகளை நானே சுமக்கிறேன்" என்று ஜெகதாசாரியனாகிய பகவான் நமக்கு வாக் களிக்கவில்லையா? கிறிஸ்தவ வேதமாகிய பைபிளில் கிறிஸ்து நாதன், "உமது சுமை யைப் பகவான் மீது சுமத்தும்; அவர் உம்மைத் தாங்குவார்" என்று கூற வில்லையா? இவ்வாறு நாம் முழு மன தோடு செய்வோமாகில் நமது காரியங் களில் சிக்கல்கள் ஏற்படாது போகும்.

ஞானத்திற்குத் தயாராக்கிக்கொண்ட வன் ஒழுங்குணர்ச்சியோடு கூடிய நிலைமை யிலிருக்கிறான்; இக் காரணத்தினால் அவன் எதிர்பாராத நிகழ்ச்சிகட்கு உட் பட்டுத் துன்புறுதல் ஒருக்காலும் இல்லை. எல்லாம் ஒழுங்காக நிகழ்கின்றன என்ற உணர்ச்சியோடு கூடியவன், எது நிகழ்ந் தாலும், அதற்குத் தயாராக இருப்ப வன். அவனுக்கு உண்மையாகவே எதிர் பாராத நிகழ்ச்சிகள் என்பன இருக்க முடியாது. நமக்கு நிகழக்கூடியவற்றிற் கெல்லாம் நாம் ஓயாது நம்மைத் தயார் பண்ணிக் கொண்டிருக்கிறோம். தற்கால உலகிலுள்ள நெருக்கடியான நிலை தற் செயலாக ஏற்பட்ட தொன்றல்ல. பற்பல தேசத்தார்களும் போருக்காகத் தயார் பண்ணிக்கொண்டிருக்கும்போது, அவர் கள் போரை வரவழைத்துக் கொண் டிருக்கிறார்கள் என்பதே பொருளாகின் றது. மக்களது மனதுகளும் நெஞ்சுக ளும் போர் புரியும் நினைவுகளால் நிரம்பி யிருக்குமானால், போர் நிகழ்ந்தேதீரும்; அதைத் தடுக்க எதனாலும் இயலாது. நாம் சமாதானக் கக்ஷியைச் சேர்ந்தவ ரென்றும், உலகம் சமாதானத்தை எதிர் பார்த்து நிற்கிறது என்றும், எவ்வளவு கஷ்ட நஷ்டப் பட்டாவது உலகத்தில் சமாதானத்தை நிலைநாட்டவேண்டும் என் றும், நாம் மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருக்கலாம்; ஆனால் நாம் போருக் காகத் தயார் பண்ணிக் கொண்டிருக்கும் வரை சமாதானம் வராது. நிலையான சமாதானம் நமக்கு வந்து சேரவேண்டு மாயின், நமது மனத்தின் முயற்சிகளை மாற்ற வேண்டும். நாம் நினைப்பதெல் லாம் சமாதானமாகவும், பேசுவதெல்லாம் சமாதானமாகவும், நமது நெஞ்சில் ஏந்தி நிற்பதெல்லாம் சமாதான மாகவும் இருத்தல் வேண்டும். இது தனித்தனி யாக ஒவ்வொருவரிடத்தில் மட்டுமல்ல, ஸமூகத்தினிடத்தும் நிகழவேண்டும். முதலில் தனித்தனியாகவும், பின்னர் மொத்தமாகவும் நடைபெற வேண்டும்.

முதன் முதலாகவும் கடைசியாகவும் எல்லா சமயத்தும் மனிதன் செய்யவேண் டுவது ஒன்று உண்டு; அது யாதெனில், அவன் ஞானமாக வாழத் தயாராக்கிக் கொள்ள வேண்டும். செயல்களிலே ஞானம் பிரதி பலிக்க வேண்டுமாயின், நினைவுகள் ஞான வாழ்க்கைக்குரிய விதி கட்கு அடங்கி எழுதல் வேண்டும்; ஏனெ னில், ஒருவனது நினைவுக்குத் தக்கபடி தான், அவனது மொழிகளும் செயல் களும் ஏற்படும். ஒருவன் கடுமையாகப் பேசுவானாயின், அதன் காரணம் யாதெ னின், சில சமயங்களேனும் அவன் தன்னை அறியாமலே கடுமையான நினைவு களை நினைத்துப் பழகியிருக்கிறான் என் பதே. சில வேளைகளில் சிலர் கோபப் பார்வை பார்ப்பதைத் தடுத்துக் கொள்கி றார்கள்; ஏனெனில், முகத்தில் அழகற்ற சுருக்குகளையும் மடிப்புகளையும் அப் பார்வை உண்டு பண்ணுகிறது என்கிறார் கள்; ஆனால் கோபக்குறியை வெளிப் படுத்தும் இயல்பைப் போக்குவதற்கு

இது வழியல்ல. இன்னும் ஆழமாக நோக்க வேண்டும்; அப்பழக்கத்திற்குக் காரணம் அம்மனிதனது நினைவுகளாகிய பிரதேசத்தில் உள்ளது. முகத்திலுள்ள மடிப்புகளை ஒழிப்பதற்காக மருத்துவர்களிடம் செல்வதற்குப் பதிலாக, அத்துன்பத்திற்கு மூலகாரணத்தை அடியோடு ஒழித்தல் மூலமாக அவன் தானே முகத்திலுள்ள சுருக்குகளை நீக்கிக் கொள்ளலாம்; எவ்வாறெனில், மனதில் ஆழமான வரைகளை உண்டு பண்ணியுள்ள தவறான நினைவுகளை அவன் திருத்தி யமைத்து விட்டால், முகத்திலுள்ள வரைகளும் தாமாகவே அதன் பயனாக மாறிவிடும்.

நமது நினைவுகள் எல்லாக் காலத்தும் சரியாகவும் ஒழுங்கிற்கு ஒத்தும் இருக்குமாயின், நமது இளமையையும் அழகையும் காப்பாற்றும் பொருட்டு, புறத்தேயுள்ள வழிகளை உபயோகப்படுத்த வேண்டியிராது; ஒரு விசித்திரமான வழியில் நாம் காப்பாற்றப் படுவதை நாம் காண்போம். இன்னும், (எதிர்பாராத) ஆபத்து நேராதபடிப் பாதுகாக்கப் படுவதையும், பிரதிகூலமான சக்திகளினால் துன்புறாதபடி வாழ்வதையும், நாம் காண்கிறோம். இதன் காரணம் யாதெனில், ஞான சம்பந்தமான நினைவுகள் நம்மைச் சுற்றி ஒரு கூடுபோலவும் கேடயம்போலவும் உள்ள ஒரு பிரதேசத்தை உண்டு பண்ணுகின்றன; இம்மாதிரியான தெய்வீகமான பாதுகாப்புடையவர்கள் மிக அபாயகரமான இடங்களில் உலவும்போதும் தீயுமிழும் படைக்கலங்களின்றிச் செல்லலாம். நமது ஞான உணர்ச்சியும் நமது மனப்பழக்கங்களும் உடற் பழக்கங்களும் ஒன்றாக மருவுவதை நாம் இங்கே காணலாம்.

ஓர் எதிரியோடு போர் புரிவதற்காக ஒரு மனிதன் தன்னைத் தயார்பண்ணிக் கொண்டிருப்பானாயின், எதிரி நிச்சயமாகத் தோன்றுவான் என்பதை மனோ தத்துவ சாஸ்திரங் கற்கும் மாணவர்கள் நன்குணர்வார்கள். எட்வர்ட் கார்ப்பெண்டர் என்பவர் இது சம்பந்தமாகக் கூறுவதைக் கேட்போம்:—"நேராக முன் செல்க. ஆயினும், நன்னம்பிக்கையையும் விடாது பற்றுக; பிறர் கண்ணிற்குப் புலப்படாத அந்த செல்வத்தை மாசடையாதபடி வைத்துக் கொள்க. பலர் உன்னை ஆசீர்வதிப்பர். பலர்க்கும், நீ ஒரு வார்த்தையும் சொல்லாவிடினும், உனது முகம் ஒரு விளக்கைப் போலப் பிரகாசிக்கும். அதைப் பலரும் மனதில் பதித்து வைத்துக்கொள்வார். மௌனமாக நீ விரும்புவது உனக்கு ஏராளமாக வந்து சேரும்." காத்திருப்பதால் நாம் பொறுமையிழந்து களைப்படைந்தாலும், அது வந்தே தீரும். பயந்தும் நடுங்கிக் கொண்டும் நாம் மனதில் நினைப்பவைகள் யாவும் சீக்கிரத்திலோ காலஞ்சென்றோ முன் வந்து நிற்கும் என்பதும் உண்மைதான். இதற்காகவே நாம் ஞான விஷயமாகத் தயாராக்கிக் கொள்ளல் வேண்டும். நாம் எப்படி நினைப்பது, எதை நினைப்பது என்பதை அறியவேண்டும். நாம் சோதனை செய்து பார்க்கும்வரை இதை நம்பாமலிருக்கலாம். ஆனால், நமக்கு விரோதமாகவோ நமது பாத்யதைகட்கு விரோதமாகவோ எதிர்ப்பு ஏற்படும் என்னும் சந்தேகத்திற்கும் பயத்திற்கும் கவலைக்கும் உணர்ச்சிக்கும் இடம் வாய்க்காதபடி நல்ல ஞான நினைவுகளையே நினைத்துக் கொண்டிருப்போமாயின், நமது புற உலக நிகழ்ச்சிகளே மாறிவிடும்.

நமது ஞான சம்பந்தமான விதியை மடாலயங்களே தீர்மானித்துக் கொள்ளட்டும் என்று நாம் முழுதும் விட்டுவிடக் கூடாது; இதன் பொருளாவது, மடாலயத்திலுள்ளவர் நமக்காக நமது நினைவு

களை அவர்கள் நினைக்க முடியாது என்பதேயாம். மடம், ஆலயம் முதலியவை ஆச்சரியமான நிலையங்களே யாகும்; ஆனால், நீ ஞான சூன்யமாய் மடத்திற்குள் புகுவாயானால், மடமும் உனக்கு சூன்யமாகத்தான் தோன்றும். கோயிலில் விசித்திரமான ஞானச் செறிவு அமைந்திருக்கலாம்; மிக அழகான விக்கிரகமும் அமைந்திருக்கலாம்; ஆயினும் நீ உன்னுடைய ஆணவத்தைச் சூன்யமாக்கிக் கொள்ளா விட்டால், நேரான நினைவுகளை நினைக்க முயற்சி செய்திருக்காவிட்டால், அதன் புனிதமான உட்பக்கத்திற்குள் புகும்போது எப்படி இருந்தனையோ, அதே ஈரமற்ற புதுப்பிக்காத நிலையிலேயே அதைவிட்டு வெளியேறுவாய். அது உன்னைச் சிறிதும் பாதிக்க வில்லையே என்றால், அதன் காரணம் அதன் மேன்மைப் படுத்தும் இயல்பைப் பெறுதற்கு உன் மனத்தைத் திறந்து வைத்துக் கொள்ளவில்லை யென்பதேயாம்.

வட இந்தியாவில் மெய்ஞ்ஞான கீதங்களைப் பாடும் ஒரு மஹான், ராமப்பிரசாதர் என்பவர் வாழ்ந்தார். இன்றைக்கும் அவரது திவ்விய பாடல்களை, ஞான சாஸ்திரங்களைப் படியாத சாதாரண மக்களும் பாடுவதைத் தெருவில் கேட்கலாம். இவர்கள் இப்பாடல்களைப் பாடும் காரணமாவது, இப்பாடல்கள் ஆவேச நிலையில் பாடப்பட்டமையின், அவை மக்களது மனதுகளைக் கவலைகட்கும் சோதனைகட்கும் துயரங்கட்கும் மேலே உயர்த்தும் திறமை வாய்ந்துள்ளன என்பதே. இப் பாடல்களில் ஒன்றை இப்போது உங்கட்குத் தருகின்றேன். அவர் கூறுகிறார்:—

"மனமே, வாழ்க்கை யென்னும் நிலத்தைச் சாகுபடி செய்வதை நீ அறியாயே. ஓர் அழகான நிலத்தை உனக்குக் கொடுத்திருந்தும், அதைக் கவனியாது தருசாகக் கிடக்க விட்டு விட்டாயே. ஒழுங்காக அதை எப்படி சாகுபடி செய்வது என்பதை மட்டும் நீ அறிவாயானால், அதனால் உனக்குப் பொன் மாசூல் விளையுமே." இப்பெரியார் கூறியது உண்மையே. நாம் நினைத்தபடி பயிர் செய்வதற்கு என நமது மனமாகிய நிலம் நம்மிடம் அளிக்கப் பட்டுள்ளது; ஆகையினால்தான், பெரியார் தமது நெஞ்சை நோக்கிப் பின்வருமாறு கெஞ்சிக் கூறுகின்றனர்:—"ஏ மனமே, ஏராளமான மாசூல் விளைவதற்காக நீ ஏன் உன்னைத் தயாராக்கிக் கொள்ளாதிருக்கின்றனை. நீ நிரம்ப சாமர்த்திய முடையவனென்றும், அறிவுடையவனென்றும், நீ விரும்பியதை யெல்லாம் தந்திரத்தினாலும் சீர்தூக்கி யாராய்வதனாலும் பெற்றுக்கொள்ள முடியும்படி அவ்வளவு யுத்திசாலியென்றும் நீ நினைக்கின்றாய். ஆனால் உனது ஆசைகள் நிறைவேறும்போது உனக்கு ஆனந்தம் உண்டாவதில்லை; ஏனெனில் நீ தவறான வழியில் ஆசைப்பட்டுள்ளனை; பகவானது ஆணைக்கு இணங்கிய முறையில் ஆசைப் படவில்லை. உனது வாழ்க்கையை வீணாக்குவானேன்? உனக்குக் கொடுக்கப்பட்டுள்ள நிலத்தை நன்கு பண்படுத்தி, அதன் மூலமாகப் பொன் விளைவதற்கொப்பான மாசூலை ஏன்பெறக்கூடாது?" இவ் வுபதேசத்தையே நாம் ஒவ்வொருவரும் நமது நெஞ்சிற்கும் செய்யவேண்டும்.

(தொடரும்)

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் ஒரு ஞானப் பேராசிரியர், உத்தமகுரு, சிறந்த போதகர். ஆனால் அவர் கல்லூரியில் படித்தவரல்லர். போதனை முறைப் பள்ளியில் பயிற்சிபெற்றவரல்லர். மனோதத்துவத்தைப்பற்றி மேனாட்டு அறிஞர் எழுதியுள்ள அருமையான நூல்களில் யாதொன்றையும் அவர் ஓதினாரில்லை. ஆயினும் கல்வி முறையில் உயர்ந்த விதிகளென ஆராய்ச்சியாளர் கண்டு பிடித்துள்ள வழிகளைச் செம்மையான வகையில் பின்பற்றிய ஆசிரியராக விளங்கினார் அவர்.

இதற்குக் காரணம் என்ன? பரமஹம்ஸ தேவர், எல்லா அறிவுக்கும் அடிப்பொருளான ஞான சைதன்னியத்தைச் சாக்ஷாத்காரம் செய்ததால் ஓதாதுணர்ந்த பேரறிவாளரானார். புவனவிதிகள், மனிதனது உள்ள அமைப்பு—இவைகளைப்பற்றிய அறிவு அவருக்கு இயல்பாகவே ஏற்பட்டிருந்தது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு காம்தேனுவாக இருந்தார். தம்மை வந்தடைந்தவருடைய விருப்பத்தையும் தேவையையும் பூர்த்திசெய்யாமல் அவர் அம்மக்களைத் திருப்பியனுப்ப மாட்டார். அவர் ஒரு பெருங்கடல். அவரிடம் சென்ற பாத்திரங்கள் தம்தம் சக்திக்கேற்ப ஜீவாமிருதத்தால் தம்மை நிறப்பிக் கொண்டே திரும்பின.

மாணாக்கன் எத்தகைய இயல்பினனாயினும் அவனது இயற்கையை யொட்டியே சென்று, அவனை நல்வழிப்படுத்தவேண்டுமென்பது போதனை விதிகளுள் ஒன்றாகும். மாணாக்கரனைவருக்கும் ஒரே மாதிரியான போதனையை யளிக்காமல் அவரவரது அமைப்புக் கேற்றவாறு போதனையை மாற்றி யமைத்துக்கொள்ள வேண்டுமென்பது வேறொரு விதியாகும். நமது பள்ளிகளில் தற்காலத்தில் இவ்விதிகள் யாவும் சரியாகப் பின்பற்றப் படுவதில்லை. நாற்பதுபேரடங்கிய வகுப்பு ஒன்றுக்கு ஆசிரியர் ஒரே மாதிரியான பாடத்தையே போதிக்கிறார். மாணவனொருவனுக்குச் சித்திரம் வரைவதில் ஊக்கமும் இயல்பான சக்தியும் இருக்கலாம். வேறொருவனுக்கு அத்துறையில் சிரத்தை யேதுமில்லா திருக்கலாம். ஆனால் இருவரையும் ஒரே வகுப்பில் இருத்தி ஒரே மாதிரியான பயிற்சியையே நமது பாடசாலைகள் தருகின்றன. ஓடுவதில் ஒருவன் வெகு சாமர்த்தியசாலி. மற்றொருவன் நொண்டி. நாம் இருவரையும் ஒன்றாகப் பிணைத்து முதல்வனைத் தன் வேகத்தைக் குறைத்துக்கொள்ளும்படியும் பின்னவனைத் தன் சக்தி மீறி ஓடும்படியும் வற்புறுத்துகிறோம். ஆசிரியன் மனோ வைத்தியனெனப்படுவான். அறியாமை எனும் நோயைப் போக்குவது அவனது தொழிலாம். ஆனால் எல்லா நோயாளிகளுக்கும் ஒரே மாதிரியான ஔஷதத்தைக் கொடுக்கும் வைத்தியனைப்பற்றி என்னென்று கூறுவது !

இன்னுமொரு தவறும் நமது பாடசாலைகளில் இழைக்கப்படுகிறது. மக்கள் வெவ்வேறான விசேஷ சக்திகளையுடையவர் என்றும் ஒரே சக்தியை வெவ்வேறான அளவில் உடையவர் என்றும் பள்ளியாசிரியர் நினையாது போகின்றனர். கடவுளால் படைக்கப்பட்ட மாந்தரில் சீர்திருத்தப்படமுடியாத

முழு மோசமான ஜீவன்கள் யாருமே இல்லை. ஒவ்வொருவரிடமும் ஒரு விசேஷ அம்சம் உள்ளது. அந்தக் குறிப்பிட்ட அம்சம் யாதெனக் கண்டுபிடித்து அதை வெளிப்படுத்துவதே ஆசிரியர் தொழில். நமது பாடசாலைகளிலோ பரீக்ஷை யொன்று நடத்தி அதில் சிலரைத் தேரு தவர்களெனத் தள்ளுகிறோம். அவ்வாறு தேருதவர்கள் ஒன்றுக்கும் உதவாத பிர கிருதிகள் என்ற எண்ணம் அனைவர் மனத்திலும் எழுகின்றது. இது என்ன பேதமை! பரீக்ஷையில் தோற்றுப் போகும் மாணவன் ஒருவனுக்குச் சித் திரக் கலையில், சங்கீதக் கலையில், வியா பாரத் துறையில், வியவசாயத்தில், உல கானுபவத்தின் மூலம் அறிவு பெறும் முறையில் விசேஷ சக்தி இருக்கலாம். அக் குறிப்பிட்ட சக்தியை வெளிப்படுத் தாமல் பள்ளிப் பரீக்ஷையில் தோற்றவன் வாழ்வுக்குச் சிறிதும் ஏற்றவனல்லன் என்னும் உணர்ச்சியை மாணவன் மனத் திலும் பெற்றோர் மனத்திலும் புகட்டு வது எவ்வளவு மதியீனம்!

ஸ்ரீ ராமகிருஷ்ணரது கலாசாலையிலோ "சொத்தைப் புள்ளிகள்", "உதவாக் கரைகள்" என்று பாமரர் குறிப்பிடுவ தைப்போன்ற மாணவர் யாருமே இல்லை. காரியமே யானாலும், அம்மகானது ஸ்ப ரிச விசேஷத்தால் பொன்னுக மாருத பொருள் இல்லை. சீர்திருத்தி யமைக்கப் பட முடியாதவர் என்று சிலரை நமது பள்ளிகளில் உதறி எறிகின்றோமல்லவா? அவ்வாறு அவர் எவரையும் உதறி எறிந் தாரில்லை. அவரிடம் வந்த இளைஞர்களுள் சிலர் நாஸ்திகராவர். அவரோ கடவுளை யன்றி வேறு சிந்தனையே யற்றவர். நாஸ்திகருக்குத் தம்மிடம் வேலையில்லை என்று அவ்விளைஞர்களை அவர் விரட்டி யன்றோ இருக்க வேண்டும்? அவர் அவ் வாறு செய்தாரில்லை. அவ்விளைஞர்களை ஏற்ருர். மிகுந்த பொறுமையுடன், குன் ருத நல்லுணர்ச்சியுடன், அவர்களுக்கு ஒளிதந்தார். அன்னவரை ஆட்கொண் டார். என்னே அவரது பேரருட் சக்தி! அவர் ஒரு பெரும் பாம்பு. நாகசர்ப்பம். சிறு பாம்பொன்று தவளையைக் கவ்வி ஞல் தவளைக்கும் சீக்கிரம் உயிர் போகாது; பாம்பிற்கும் சுலபத்தில் பசி தீருது. பெரும் பாம்பின் வயப்பட்ட தவளையோ சீக்கிரத்தில் உட்சென்று விடும். அவர் வயப்பட்ட இளைஞர்கள் நாக சர்ப்பத்தால் கடிபுண்டவர்களாயினர். ஆம். ஞானக்கடி, அருட்கடி யுண்டவ ராயினர். அன்னவர் மாயைக்குத் திரும்பு வதும் உண்டோ?

காளிப் பிரஸாதர் என்ற இளைஞர் பரம ஹம்ஸரிடம் வந்தார். பரமஹம்ஸர் அவரை நோக்கி "குழந்தாய்! கடவுள் உண்டென்று நம்புகிருயா?" என்று வின விஞர்.

"இல்லை" என்ருர் சிறுவர்.

"மதத்திலேனும் உனக்கு நம்பிக்கை யுண்டா?" என்ருர் குருதேவர்.

"இல்லை. வேதங்களிலோ வேறெந்த சமய நூல்களிலோ, பாரமாத்திகமான எதிலுமே, எனக்குச் சிறிதும் நம்பிக்கை இல்லை" என்ருர் காளிப் பிரஸாத்.

குருதேவர் புன்னகை புரிந்தார்.

"குழந்தாய்! வேருெரு குருவினிடம் சென்று நீ இம்மாதிரி கூறியிருந்தால் என்ன நேர்ந்திருக்கும் தெரியுமா? ஆனல் கவலையுருதே. உன்னைப் போலவே பலர் இத்தகைய மனே நிலைகளுடன் என்னி டம் வந்தனர். நரேந்திரனைப் பார்; இப் பொழுது அவன் யாவற்றையும் நம்பு கிருன். உன் ஐயங்களும் தீரும். நீயும் ஒளி பெறுவாய். நீயும் நம்புவாய்" என் ருர்.

இதே காளிப் பிரஸாத் பிற்காலத்தில் சுவாமி அபேதாநந்தரெனப் புகழ்பெற்று

விளங்கினார். வேதாந்த ஞானத்தை ஏட்டறிவு, அனுபவம் எனும் இரு துறைகளிலும், நிறம்பப் பெற்றவரானார்.

நரேந்திரருக்கும் (விவேகானந்த சுவாமிகள்) ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு மிடையே இருந்த தொடர்பைப்பற்றிய வரலாறு ஒரு மகா காவியம் போன்றதாகும். ஆறு வருஷ காலம் நரேந்திரர் குருதேவருடன் போராடினார். அவரை எதிர்த்தார். அவரது ஞானானுபூதிகளைக் கேலிசெய்தார். காளியம்மையை ஏற்க மறுத்தார். யாவும் பிரம்ம மயம் என்ற உண்மையை ஒப்ப இணங்கினாரில்லை. ஆனால் பரமஹம்ஸர் ஒரு பொழுதேனும் சலிப்படைந்தாரா? நரேந்திரரிடம் நம்பிக்கை இழந்தாரா? நரேந்திரரைப் பற்றிப் பல அவதூறுகள் பேசப்பட்ட பொழுது மனங் கலங்கினாரா? இல்லை. முடிவில் நரேந்திரர் அவருக்கு தாஸானுதாஸனாக ஆனார்.

அவரவர் வழியே சீடரைப் போகச் செய்து முடிவில் அவர்களுக்குப் பேறிவு கிட்டுமாறு செய்யும் சூக்ஷ்மத்தை ஸ்ரீ ராமகிருஷ்ணர் அறிந்திருந்தார். எல்லா நதிகளும் தம்தம் வழியே சென்று இறுதியில் கடலை அடையுமென்பதை அவர் கண்டிருந்தார்.

கிரீஷ சந்திரகோஷர் என்ற நாடகாசிரியரை ஸ்ரீ ராமகிருஷ்ணர் தடுத்தாட்கொண்டவிதம் வியப்பை யளிக்கும் செயலொன்றாகும். கிரீசரிடம் பல தீயவழக்கங்கள் இருந்தன. சிற்சில சமயங்களில் குடிவெறியில் அவர் பரமஹம்ஸரை அவமதித்ததுமுண்டு. மதப் பயிற்சிக்கு இன்றியமையாத தன்னடக்கம், ஒழுங்கு, சீரிய தினசரி வாழ்வுமுறை, இவையாதும் அவரிடம் காணப்படவில்லை. ஈசனை தினமும் இருதடவைகள் நினைப்பதும் தன்னால் முடியாத காரியமென்று அவர் கூறினார். இத்தகைய மனிதனுக்கு ஞானப் பாதையில் இடமுண்டென்று யாரேனும் கூறுவரோ? ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் எனும் பெருஞ்சக்தி அவரையும் ஆட்கொண்டது.

சீடர்களின் இயல்பை மாற்றுவதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் பலாத்காரமான முறைகளைக் கையாள மாட்டார். அவரது முறை சாந்தமானது. ஆனால் வெகு சீக்கிரத்தில் நிச்சயமான நற்பயன் தரவல்லது. பக்தனொருவன் தம்மிடம் வந்தால் அவர் அவனுக்கு பக்தி மார்க்கத்தையே எடுத்தோதுவார். ஞானப்போக்குடையவனுக்கே அத்துவித மார்க்கத்தைப் போதிப்பார். ஒரே கொள்கையை, ஒரே முறையை அனைவருக்கும் அளிக்கமாட்டார். வளரும் செடிகளான ஜீவன்களுக்கு ஜீவாதாரமான உயிர் நீர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடமிருந்து பாய்ந்தோடும். ஆனால் செடிகள் யாவையும் பிடுங்கி ஒரே தோட்டத்தில் வைத்துப் பயிராக்குவது அவரது முறையல்ல. தமக்கேற்ற மண்ணில் தமக்கேற்ற சீதோஷ்ண நிலையில் செடிகள் வளருமாறு அவர் விட்டுவிடுவார். முடிவில் எல்லாச் செடிகளும் பூத்துப் பழுத்துப் பரிமளிக்கும்.

யோகின், நிரஞ்சன் என்று இரு சீடர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் பயிற்சி பெற்றனர். இருவரும் தனித்தனியாக வெவ்வேறு சமயங்களில் ஸ்ரீ ராமகிருஷ்ணரை இகழ்ந்த சில மனிதர்களது இடையே இருக்கும்படியான சந்தர்ப்பத்தைப் பெற்றனர். யோகின் அம்மக்களது கூற்றைக் கேட்டு மனம் வருந்தினாரே யொழிய அவர்களைக் கடியவில்லை. நிரஞ்சனே அம்மக்களை அச்சுறுத்தி அவர்கள் பேச்சை நிறுத்துமாறு செய்தார். இருவரும் குருதேவரிடம் உடனுக்குடனே இச்செய்தியைத் தெரிவித்தனர். குருதேவர் இருவர் செய்ததும் தவறென்று கூறினார்.

இதென்ன விந்தை! சீடரிருவரும் ஒருவர்க்கொருவர் நேர் விரோதமாக

நடந்தும் இருவரும் குருதேவரது அதிருப்திக்குப் பாத்திரமானதேன்? குருதேவருக்கு உறுதியான மனம் கிடையாதோ? நிரஞ்சன் என்பவர் ஆண்மையை அளவுக்கு மீறிப் பெற்றிருந்தார். அவருக்குச் சாந்தம் புகட்டுவது அவசியமாயிற்று. ஆதலால் குருதேவர் அவரிடம் "என்னைப் பற்றிப் பலர் பலவிதமாகப் பேசுவர். அதையெல்லாம் பொருட்படுத்தி நீ கோபங் கொள்ளுவது தகுதியாகாது" என்று கூறினர். யோகின் என்பவரிடம் தைரியமும் ஆண்மைக் குணமும் தேவையாயிருந்தன. அவருக்கு ஊக்கத்தை ஊட்டும் பொருட்டு அவர், "உன் குருவை நிந்திப்பவர்களைச் சும்மாவா விட்டு வந்தாய்!" என்று கடிந்து கொண்டார். நோய்க்கேற்ற மருந்து, இயல்புக்கேற்ற போதனை என்பது இதுதான்.

சீடர்கள் அனைவரும் குற்றங்குறைவு ஏதுமற்றவராக வளர வேண்டுமென்பது ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய பேரவாவாக இருந்தது. ஆதலால் அவர் தமது சீடருக்கு ஞான போதனையை மட்டும் அளிப்பதுடன் நின்றுவிட வில்லை. "பக்தனொருவன் முட்டாளாக இருக்கக்கூடாது. கடையில் சென்று சாமான்கள் வாங்கினால் ஒரு கடைக்கு இரு கடையாக விலை விசாரித்து வாங்கவேண்டும்" என்று ஒரு சமயம் அவர் உபதேசிப்பார். உடலுணர்ச்சியே அற்றிருந்த இவரது உலக அறிவும் வியக்கத் தக்கதாயிருந்தது. தமது அறைக்கு வருவோர் குடை, செருப்பு முதலியவற்றைப் பத்திரமான இடத்தில் விட்டு வைக்கும்படி வற்புறுத்துவார். அழுக்கு, கவனக் குறைவு, பொதுவான ஊக்கமின்மை இவற்றை ஞானத்தின் சின்னங்களாகச் சிலர் எண்ணுவதை அவர் கண்டிப்பார். வானத்தைப் போல் விரிந்த உள்ளமும் கடலைப் போல ஆழ்ந்த உணர்ச்சியும் அவர் கொண்டிருந்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வாழ்க்கையினின்றும் ஆசிரியர் தொழிலை மேற்கொண்டவர் கற்றுக்கொள்ள வேண்டிய நீதிகள் பலவாகும். முதன் முதலாக ஆசிரியர் மாணவரைப் பேரன்புடன் நேசிக்கவேண்டும். அன்பு எனும் திறவு கோலால் திறக்கப்பட முடியாத பூட்டு ஏதுமில்லை. இரண்டாவதாக, மாணவருடைய முன்னேற்றத்தில் ஆசிரியருக்குப் பூரண நம்பிக்கை வேண்டும். மனிதனிடத்து எல்லாச்சக்திகளும் அடங்கி யிருக்கின்றன. அவற்றைத் தக்க முறையில் தொட்டு வெளியெழுப்புவதே ஆசிரியனது தொழிலாகும். மாணவனொருவன் சீர்திருந்தாவிடில் அது ஆசிரியனது திறமைக் குறைவையே குறிக்கும். மூன்றாவதாக, மாணவனது உள்ள இயல்பை உற்றுநோக்கி மாணவனது இயல்புக்கு மிகவும் குறைவான கஷ்டத்தைத் தருகின்ற வழியில் அவனை இட்டுச் செல்லுதல் வேண்டும்.

"ஆசிரியர் தொழிலுக்கும் ஸ்ரீராமகிருஷ்ணர் வாழ்வுக்கும் தொடர்பு இருக்கக் காரணமில்லை. மேலே கூறியன யாவும் மிகைப்படுத்திக் கூறுதலேயாம்" எனச் சிலர் எண்ணலாம். உண்மை அவ்வாறு இல்லை. ஸ்ரீ ராமகிருஷ்ணர் எண்ணிறந்த அம்சங்களையும் பலவேறு கலைகளையும் கொண்டதொரு ஜோதி யாவர். சிந்தனை செய்வதற்கேற்ப, அவரது வாழ்வினின்றும் நம்மனைவருக்கும் புதிய புதிய ஒளி பிறக்கும்.

அதனாலேயே அம் மகானது பெயரால் இன்று நம் நாட்டில் மடங்கள் ஏற்பட்டிருப்பதுடன் நில்லாமல், கலாசாலைகளும், தொழிற்சாலைகளும், சேவாசிரமங்களும், கலைக் கூடங்களும், வைத்திய சாலைகளும், புத்தகாலயங்களும், வாசகசாலைகளும், தொண்டர் சங்கங்களும், பஜனை மடங்

களும், அத்வைத ஆசிரமங்களும், பத்திரிகைகளும் ஏற்பட்டுள்ளன.

நோயுற்ற மனிதன் புத்துயிர் பெறுங் காலையில் அவன் பல துறைகளிலும் ஊக்கம் நிறம்பியவனாகிறான். அவன் உள்ளம் தெளிவுறுகிறது. முகம் களை பெறுகிறது. கண் ஒளியடைகிறது. இருதயம் பல முறுகிறது. அதைப்போல நம் நாட்டின் நோய் தீர்க்கவந்த பரமஹம்ஸரின் தோன்றல் காரணமாகத் தேசிய வாழ்வின் பல வேறு துறைகள் ஊக்கம் பெற்று வருவதில் வியப்பேதுமில்லை. இப் பல துறைகளுள் கல்வித் துறையும் ஒன்றல்லவா? அதனாலேயே ஸ்ரீவிவேகாநந்த சுவாமிகள் தேசீயக் கல்வியைப்பற்றி ஆராய்ச்சி செய்து நல்வழிகள் பலவற்றை நமக்குக் காட்டினார். அவரைப் பின்பற்றிய முயற்சிகள் நாடெங்கும் நடைபெற்று வருகின்றன. எல்லா இடங்களிலும் ஸ்ரீராமகிருஷ்ணரது பெயராலேயே அக் காரியங்கள் நடைபெறுதிருக்கலாம். ஆயின் என்? ஸ்ரீராமகிருஷ்ணர் தம் பெயரை உலகெங்கும் பரவச் செய்ய வந்தாரில்லை. அவரது வாழ்வின் போதனைகள் விரிந்த அளவில் கைப்பற்றப்பட வேண்டுமென்ப தொன்றையே அவரது பெருமையை யுணர்ந்த பெரியார் பலர் வேண்டுகின்றனர்.

---

# நன்மை தீமைகளும் அவைகளைக் கடந்து செல்லுதலும்

(ஸ்ரீ எதீஸ்வராநந்த சுவாமிகள்)

**பக்தர்:** ஏன் மனத்தில் பல தீய எண்ணங்கள் எழுகின்றன?

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்:** இறைவனுடைய உலகத்தில் வேறுபாடுகள் இருக்கக் காண்கிறோம். நல்லவர்களை உண்டாக்கியவன் அவனே; தீயோர்களையும்கூட **அவனே**தான் சிருஷ்டித்தான். சிலருக்கு அவன் நல்ல சுபாவத்தைத் தருகிறான். இன்னும் சிலருக்கு அவன் தீய இயல்பினைத் தந்துளான்.

**பக்தர்:** அப்படியானால் நாம் நம் பாவங்களுக்குப் பொறுப்பாளிகளல்லவே?

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்:** நீ பாவம் புரிந்தால் அதன் பயனை நீயேதான் அனுபவிக்கவேண்டுமென்பது இறைவனது விதியென்பதனையும் நீ மறத்தலாகாது. நீ மிளகாய் சாப்பிட்டால் உன் வாய் எரிகிறதல்லவா? மதுரபாபு, தம் இளமையில் பல பாப காரியங்களைச் செய்தார். அதனால்தான் அவர் தமது அந்திய காலத்தில் பல நோய்களுக்கு ஆளாகி அவஸ்தைப்பட்டார். தனது வாலிப வயதில், ஒருவன் தனது பாப காரியங்களின் பலன்களை எல்லாம் அனுபவித்து ஒழித்துவிட முடிகிறதில்லை.

**பக்தர்:** சுவாமிகாள்! ஏன் பகவான் தீயோரை சிருஷ்டிக்க வேண்டும்?

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்:** அது அவனுடைய இஷ்டம்; அவனது விளையாட்டு. அவனுடைய மாயையில் நன்மை தீமைகள் இரண்டினையும் காண்கின்றோம். வெளிச்சத்தின் மகிமைக்காக இருட்டு இருக்க வேண்டுவது அவசியமாகின்றது. எவ்வளவுக்கு இருட்டு அதிகமாக இருக்கிறதோ அவ்வளவுக்கு வெளிச்சம் பிரகாசிக்கும். காமக் குரோத லோபங்கள் போன்று தீய குணங்களை அவனே நமக்கு அளித்திருக்கிறான். ஏன் தெரியுமா? துர்க்குணங்கள் நிறைந்த நம்மிடமிருந்து மெய்ஞ்ஞானிகளை உண்டாக்குவதன் பொருட்டே. இந்திரியங்களை அடக்கியவன் உயர்ந்தவனாகிறான். ஜிதேந்திரியனால் ஆகாத காரியம் ஏதும் உளதோ? இறைவனது திருக்

கருணையால் அவன் மெய்ஞ்ஞானமும் அடையப் பெறுகின்றான். கடவுளே நன்மையையும் தீமையையும் உண்டாக்கியவராவார்; சகல சிருஷ்டிக்கும் அவரே காரண பூதராவார். இனிய கனிகள் கொடுக்கக்கூடிய மரங்கள் இருக்கின்றன; நச்சு மரங்களும் இருக்கின்றன. காடுமுரடுகளும், களைகளும்கூட இருக்கின்றன. மிருகங்களிலும்கூட சில சாதுப் பிராணிகளாகவும் சில புலி, கரடி, சிங்கம், நாகம் போன்று கொடிய பிராணிகளாகவும் இருக்கின்றன!

—வசனாமிருதம்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர், மேற்கண்ட கேள்விகளுக்கு விடை கூறும்போது, ஸ்தூல சூக்ஷ்ம அவஸ்தைகளான வியவகாரிக நிலையைக் கடந்து அப்பாற் சென்றாலல்லாமல் வேறு வகையிலே, நன்மை தீமைகள் உலகில் இருப்பதற்கு முடிவான காரணங்களை எடுத்துரைக்க இயலாது என்னும் உண்மையைச் சுட்டிக் காட்டுகின்றார். நன்மை தீமைகள் ஆகிய துவந்தங்களையும் கடந்து அப்பாற் செல்ல முடியும்; தோற்றமாகிய வியவகாரிக நிலையினையும் கடந்து சத்தியப் பொருளை சத்தியப் பொருளாகவே காண முடியும். மனோ வாக்கு காயம் இம்மூன்றினும் பரிசுத்தம் அடைந்த ஒருவனாலேயே நன்மை தீமைகளைக் கடந்து அப்பாற் செல்லமுடியும். உயர்ந்த ஒழுக்க வாழ்வும், பூரண புலனடக்கமும் வேண்டப்படுவது அவசியம். இவையன்றி நன்மை தீமைகளின் காரண காரியங்களையும் அவற்றின் உற்பத்தி நாசத்தினையும் அறிந்துகொள்வதென்பது இயலாது. நன்மை தீமைகளின் காரண காரியங்களை அறிந்து கொள்ளாத வரையில் காரிருளில், கண்ணற்று, துணையற்று, மேலும் மேலும் மருள்கொண் டுழலும் வாழ்க்கையினையுடையவர்களாகவே இருப்போம். அதனாலேயே ஸ்ரீ புத்தபகவான் தமது சிஷ்யர்களுக்கு கடவுளின் இருப்பை தத்துவ ரீதியாக நிலைநாட்ட விரும்பினாரில்லை. மாசு நிறைந்த உள்ளம் உண்மையினை யோராது; எனவே அத்தகைய அசுத்த மனத்தினர்க்கு மாண்புமிக்க தெய்விக சம்பந்தப்பட்ட உயர்தனி விஷயங்களைப் பற்றி எடுத்துரைப்பது வீணாகும். மனம் பரிசுத்தப்பட்டிருந்தாலல்லாமல் தெய்விக வாதங்கள் எந்த பலனையும் கொடுக்கா; அவ்வாதங்கள் பாழ்பட்டுப் போவதோடு கிடைத்தற்கரிய காலமும் வீணில் கடந்து போகிறது. "வீடு பற்றி எரியும்போது, 'நெருப்பு எங்ஙனம் பிடித்தது' என்று கேட்டுக் கொண்டிருப்பீரா? அல்லது பற்றிக்கோண்ட நெருப்பை அணைக்க எந்த கேள்வியும் கேட்காது விரைந்தோடுவீரா?" என்றார் புத்தபிரான். நம்முடைய கடமை, நம்முடைய வேலை எவ்விதமேனும் இந்த சம்சார சுழலிலிருந்து விடு படுவதே. அதனை விடுத்து, உண்மை, உண்மைக்குக்காரணம், நன்மை தீமைகளின் உற்பத்தி நாசம் இவைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருப்போமா? நன்மை தீமைகள் நம் கண் முன்னே பிரத்யக்ஷமாக இருக்கக் காண்பதனை மறுப்பது கிடையாது. அவைகள் இருக்கின்றன. உண்மையாக தோற்றமளிக்கும் அவற்றினை அகற்ற வேண்டுவதவசியம். அவைகள் தோற்றமா உண்மையா, அல்லது அவைகள் எங்ஙனம் உண்டாயிற்று என்று ஆராய்ந்து கொண்டிருப்பதனைப் பார்க்கிலும் அவற்றினை அகல வோட்டுவதே அவசியம் வேண்டற்பாலது. அகல வோட்டுவது என்றால் என்ன? அவற்றினைக் கடந்து அவைகளில்லா மேனிலைக்குச் செல்வது தான். இதனை விடுத்து நன்மை தீமைகள் என்பன யாவை? ஏன் இறைவன் அவைகளை சிருஷ்டித்தான் என்று வாதப் பிரதிவாதங்கள் செய்துகொண்டிருப்போமானால்,

இவ்வாதப் பிரதிவாதங்கள் நம்மை நாம் இருக்கும் இடத்திலேயே இருக்கச் செய்யும்; ஓரடியும் நம்மை மேலுக்கு உயர்த்தா. இதனையே பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பலமுறை வற்புறுத்திக் கூறியுள்ளார். நாம் சத்தியப் பொருளை சாக்ஷாத்கரிக்க வேண்டும். நம்மை எந்த அளவும் ஆத்ம ஞான உலகத்துக்கு உயர்த்தாத, பிரபஞ்சத்தினைப் பற்றிய வாதங்களிலும், அவைகளைப் பற்றி ஏற்படுத்தும் தத்துவ ஆராய்ச்சிகளிலும் காலத்தைக் கழித்தல் மதியீனமாகும்.

உ

சாதகனுக்கு, நன்மை தீமைகளை இருக்கக் காணும் காலம் ஒன்றுண்டு. அவைகளை எந்தவகையிலும் காணாத காலமும் ஒன்றுண்டு. தீமையே யின்றி எப்போதும் நன்மையாகவே தோன்றும் காலம் எப்போதுமே ஏற்படாது. நன்மை யென்ற எண்ணம் எழும்போதே உடன் தீமையைப் பற்றிய எண்ணமும் எழும். தீமை யென்று ஒன்றிருந்தால்தான் மற்றொன்று நம் திருஷ்டிக்கு நன்மையாகத் தோன்றும். நாணயம் ஒன்றுக்கு ஒரே பக்கம் இருக்கிறது என்று சொல்ல முடியுமா? இரு பக்கங்களும் கொண்டதே நாணயம். ஒரு பக்கம் அதற்கு இருக்கிறதென்று சொல்வீரானால் மற்றொரு பக்கமும் இருக்கத்தான் செய்யும். தீமையில்லை, எல்லாம் நன்மைதான் என்பீரானால் உமது வாழ்க்கையின் பிரச்னையை அறிந்து கொள்ள உம்மால் இயலாது போவது நிச்சயம்.

எவ்வளவுக்கு நாம் பரிசுத்தமா யிருக்கிறோமே அவ்வளவுக்கு நம்மிடம் சாந்தம் குடிகொள்ளும். சாந்தமும் பரிசுத்தமும் இணைபிரியாதன. தன்னயம் அறுந்த அளவுக்கு ஆத்ம விசாலம் அதிகரிக்கக் காண்போம். விவேக வைராக்கியங்கள் கொள்ளும் அளவுக்கு விடுதலையும் வந்தெய்தும். இன்று நாம் நம் மனதுக்குள்ளே நல்லெண்ணங்களாகிய வர்ணத்தைச் செலுத்தும் செயலில் ஈடுபடுவோம். இம்முயற்சியால் நம்மனம் முழுதும் பரிசுத்தம் என்ற வர்ணமடைந்து விடும். ஆரம்ப நிலையிலிருக்கும் சாதகன் தன் மனத்தை தெய்விக வர்ணங்களால் பூச வேண்டிய சிரமத்தை எடுத்துக் கொள்ள வேண்டுவது அவசியமாகும்.

நம்முள்ளிருக்கும் தெய்விக சக்திதான் நம்மை இறைவனைக் குறித்துப் பிரார்த்திக்கும்படிச் செய்கின்றது. இது முற்றிலும் உண்மையாகும். இறைவனிடம் நம் மனம் திரும்புவதற்கும் அவனைப் பிரார்த்திப்பதற்கும் மூல காரணமாயிருப்பது அத் தெய்விக சக்தியேயாகும். நமது உண்மை சொரூபம் தெய்விகமானது. இத் தெய்விகம் என்றும் நம்முள் இருக்கின்றது. இறைவன் மாட்டு நாம் செய்யும் பிரார்த்தனை தீவிரமும் ஆழ்ந்தும் இருப்பதற்கு அது தூண்டுகோலாக விருந்து உதவுகின்றது. நாம் எவரைப் பிரார்த்திக்கின்றோமோ அவர் சொரூபமாகவே இருக்கின்றோம். அதாவது நாம் ஆத்மன். சரீர சம்பந்தப்பட்ட எந்த உபாதிகளும் நாமாகோம்.

ஜடம் வளர்கிறது, தேய்கிறது; விரிகின்றது, சுருங்குகின்றது. ஆத்மன் அங்ஙனம் மாறுபடுகின்றதில்லை. "பிறவாத ஆத்மனுக்குப் பிறப்பை கற்பிதப் படுத்தினர் சிலர். பிறவாத இறவாத நித்திய ஆத்மன் பிறந்திறப்பவற்றோடு சம்பந்தங் கொள்வதென்பது இயலாத காரியம். நித்தியம் அநித்தியமாகாது; அநித்தியம் நித்தியமாகாது; சித்து சடமாகாது, சடம் சித்தாகாது. ஒன்று எதிரிடையான தன்மையைப் பெறுவதென்பது முடியாது." (கௌடபாத.) ஆத்மன் சம்பந்தப்பட்ட நோக்கு கொள்ளும்போது விரிதல், தேய்தல் என்பன கிடையா. விரிதல், தேய்

தல், மாறுபடுதல் என்பன எல்லாம் மாயையின் எல்லைக்குள் நடைபெறுவனவாகும். ஆத்மன் என்றும் மாறுபடாதது; நித்யமுக்தசுத்தம்பொருந்தியது. ஆத்ம ரூபமாகிய நீர் ஏனைய எல்லா சரீர மனக்காரியங்கட்கும் சாக்ஷி மாத்திரமாகவே இருக்கின்றீர்.

சரீரத்தைப் புனிதப்படுத்துவீர்; மனமும் பரிசுத்த மடையட்டும். ஹிருதயமும் பற்றுதலற்று பரிசுத்தம் பெறட்டும். பிரம்மசர்யம் அவசியம். மனோவாக்கு காயங்கள் இம்மூன்றிலும் சிறிதும் வழுவாத பூரண பிரம்மசர்யம் அனுஷ்டிக்கப்படவேண்டும். உலகப்பற்றுள்ள மக்களிடமிருந்து விலகி வாழ்வீராக. ஆத்ம சாதன வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் மேற்கொள்ளும் போராட்டத்துக்கு இது பெரிதும் உமக்கு உதவும். சங்கம், சகவாசம் வாழ்க்கையில் மிக முக்கியம் பொருந்தியவைகளுள் ஒன்று. மற்றையபாலார் எவ்வளவு பரிசுத்தம் பொருந்தியவரா யிருப்பினும் அவர்களுடன் அதிகம் பழகாதீர். நெருக்கிப்பழகுவீரானல் ஆத்மீய வாழ்க்கையில் முன்னேறுவதென்பது முடியாது; அப்பழக்கத்தால் மனத்தகத்து ஏற்படும் மலினங்கள் சீக்கிரமாகவும் சுலபமாகவும் அகற்றக் கூடுவன வல்ல. எல்லாம் தலைகீழாகிவிடும். எனவே எப்போதும் மிக மிக சாக்கிரதையுடன் வாழ்வீராக.

௬

சரீரம் ஒழுங்கு படல் வேண்டும்; மனம் ஒழுங்கு படல் வேண்டும். ஆத்மஞான வாழ்க்கைக்குப் பரிசுத்த மனமே பிரதானம். அதுவே சகல முன்னேற்றத்துக்கும் அடிப்படையாக அமைகின்றது. எனவே பிரம்மசர்ய வாழ்க்கையின் அவசியத்தைக் கனவிலும் மறக்காதீர். பரிபூரண பரிசுத்த வாழ்க்கையை மேற்கொள்வீர். மற்றைய பாலாரோடு (ஆண்சாதகர்கள் பெண்சாதகர்களோடும், பெண் சாதகர்கள் ஆண் சாதகர்களோடும் பழகுதல் கூடாது. கனவிலும் அவர்களைப் பற்றிக் கருதுதல் கூடாது. நீர் பழகுவதற்கு நாடும் நண்பர்கள் விஷயத்திலும் நீர் கவனம் செலுத்த வேண்டுவ தவசியம். உம்முடன் பழகுபவர் மாறுபட்ட பாலாராய் இருந்தால் தான் தீங்கு என்று மாத்திரம் கூறுவதற்கில்லை. ஒத்த பாலாரிடையேயும் தீயகுணம் வாய்ந்தவரா யிருந்தால் அவரை முற்றிலும் அகற்ற வேண்டுவது அவசியம். அத்தீயவர்களுடன் பழகுவதால், நமக்குப் புலனாகாதவாறே தீய எண்ணங்கள் சூக்ஷ்மமாக நம்முள் புகுந்து விடும். அவர்களுடன் பழகும் ஆரம்ப காலத்தில் நீவிர் அதனை அறியாதிருக்கலாம். ஆனால் இறுதியில் அதன் பலனை அனுபவித்தே ஆகவேண்டும். இவ்விஷயத்தில் நீர் ஜாக்கிரதையாக வில்லாது போனால் நீர் ஆத்மஞான வாழ்க்கையில் முன்னேற்றம் அடைவீர் என்று எதிர் பாராதீர். மனம், வாக்கு, காயம் இம்மூன்றிலும் வழுவாத பிரம்மசர்யம் அநுசரிக்க வேண்டும். ஆத்மன் தனது முழு கிரணத்துடன் பிரகாசிக்கத் தக்க அதியுயர்ந்த பரிசுத்தமான சூக்ஷ்ம நிலையை உமது மனமும் சரீரமும் எய்த வேண்டும். எவ்வளவுக்கு இவ்விரண்டும் பரிசுத்தப்படுத்தப் படுகின்றனவோ அவ்வளவுக்கு ஆத்மன் இவைகளின் மூலம் பிரதி பிம்பிக்கும். உமது இரத்த ஓட்டமும், நுண்ணிய நரம்பின் கதியும் மாற்றப்படல்வேண்டும். அவைகள் மேல்நோக்கியே ஓடுமாறுசெய்வீர். உமது சரீரம் மாறுபடவேண்டும்; உமது மனது மாறுபாடடைய வேண்டும். இவையனைத்தும் சுலபமாக ஆகின்ற காரியங்களன்று.

பிரம்மசர்ய வாழ்க்கையால் சரீரத்துக்குக் கெடுதி சம்பவிக்கும் என்று சிலர் கூறக் கேட்பீர். இவ்விதம் கூறும் மாந்தரது வார்த்தைகள் பொய் வார்த்தைகளே

யாம். பிரம்மசர்ய வாழ்க்கை யிழந்த மேனாடு இப்போது எந்நிலையில் இருந்து வருகின்றது என்பதனை நீவிர் பிரத்யக்ஷமாக அறிய வருவீர். பிரம்மசர்ய வாழ்க்கையை யுடையவரது சரீரமும் நரம்பும் உறுதி படுகின்றன. மாசற்ற பிரம்மசர்ய வாழ்க்கையால் சரீரக்கட்டு அதிக திடம் பெறுகின்றது. மனம் பரிசுத்த மாவதற்கேற்ப சரீரமும் பரிசுத்த மடைகின்றது. மனப்பரிசுத்தம் முகத்தின்மூலம் வெளித்தோன்றும். சிறிது காலம் பழகிவிடுவீரானால், ஒருவன் எத்தகைய வாழ்க்கையுடையவனாக விருக்கின்றான் என்பதனை அவன் முகத்தின் மூலம் அறிந்து கொள்வீர். ஆத்ம ஞான வாழ்க்கைக்கு பிரம்மசர்யம் அவசியம் என்பது பலமுறை வற்புறுத்தப்பட வேண்டும்! பிரம்மசர்ய வாழ்க்கை யுடையவர், சாந்தமும் அமைதியுடனும் இருப்பர்; அவர் என்றும் வாலிப உணர்ச்சி பெற்றிருக்கக் காண்பீர். சிலரது முகம் விகாரத்தின் சொரூபமாக விளங்கக் காண்பீர். சில காலம் வீதியில் அவ்விடபுருஷர்களைச் சந்திக்கும்போது அவர்கள் என் மனத்தினைப் புண் படுத்தியே செல்லுகிறதைக் காண்கின்றேன். அவர்கள் முகங்கள் அவர்கள் உள்ளத்தினுள் இருக்கும் காம விஷத்தைக் கக்கிய வண்ணமாகவே இருக்கின்றன. பரிசுத்த வாழ்க்கை உடையவர்கள் நமக்கு சற்று எட்ட வரும்போதே அவர்களைப் பற்றி எளிதில் தெரிந்துகொள்ளலாம். பரிசுத்தர்கள் நேர்மையாகவும், ஒழுங்குபடவும், பவ்யத்துடனும் நடந்து கொள்வர். அவர்கள் தம்மைச் சுற்றிலும் வசீகர சக்தியை வீசிய வண்ணமாகவே விளங்குவர். அவர்களைச் சந்திக்கநேரும் ஒவ்வொருவரும் அவ்வசீகர சக்திக்கு வசப்படாது போகார். ஆத்மீய வாழ்க்கைக்குப் பரிசுத்தம் அடிப்படையாக விளங்குகின்றது. மேல் நோக்கிச் செலச் செல்ல பரிசுத்த வாழ்வு எளிதாக ஏற்படுகின்றது.

மனம் காம எண்ணங்களை எழுப்பும் நாபிக்குக்கீழான நிலைகளையே எப்போதும் நாடிக்கொண்டிருக்கும்வரை, இறைவனை எளிதில் தியானம்செய்ய இயலாது. அது நாபிக்குமேலே உயர்த்தப்படல் வேண்டும். இன்றேல் ஆத்மஞான வாழ்க்கை இல்லாததாய் முடியும். அதனாலேயே நீங்கள் கொள்ளும் சிநேகிதர் விஷயத்தில் வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று பலமுறை எச்சரித்து வருகிறேன். நீர் நன்மக்கள் உறவுகொள்ளாது, சிறிது அசாக்கிரதையால் தீயோர் சகவாசம் கொள்வீரானால் அதனால் ஏற்படும் குறைபாட்டினை அகற்றுவதற்கு வெகு வெகுகாலம் முயன்றாலும்கூட அக்குறைபாடு மனத் தகத்தினின்று சீக்கிரம் செல்லாது. அக்குறை பாட்டினை முற்றிலும் இல்லாது செய்யமுடியுமோ என்பதும் கூட சிலபோது சந்தேகமாகத் தோன்றலாம். அத்தகைய வலிமைபொருந்தியது தீயோர் சகவாசம்! தீயோர் சகவாசம் நம்முள்ளத்திலிருக்கும் கெட்ட நினைவுகளுக்கு ஜீவநீராக இருந்து உதவும். காம விகாரங்கள் மனத்தில் எழுகின்றன என்பதனை நீர் உணரப் பெறும்போது, உமக்கு எதிரான பாலார் உம்மெதிரில் காணப்பட்டால், அவர் எவ்வளவு பரிசுத்தம் படைத்தவரா யிருப்பினும் அக்கணமே அவரைவிட்டு அகலுவீராக. சாதன வாழ்க்கையில் சிலகாலம் வரையில் இங்ஙனம் அநுஷ்டிப்பதில் கவனம் செலுத்துவீராக. கவனக் குறைவால் உள்ளத்தில் அழுக்குப் படிந்துவிடுமானால் எவ்வளவு சிரமமான காரியமாகத் தோன்றினும் அதனை அகற்றியே ஆக வேண்டும்.

பெண்களை என்றும் வெறுக்க வேண்டாம். வெறுப்பதால் அவர்களது மையலி

விருந்து விடுபடவே முடியாது. சாதாரண பெண் மக்களெனக் கருதாது, அவர்கள் ஒவ்வொருவரையும் சாக்ஷாத் ஜகதம்பி கையே பெண் வடிவெடுத்து வந்துளதா கக் கருதுவீராக. அப்போதே காம எண் ணங்கள் மனத்தகத்தைவிட்டு அகலும். ஜகதம்பிகையை பெண் ஒருத்தியினிடம் காண்பாய் என்றாலும், கிட்ட நெருங்காது எட்டியிருந்தே வணக்கம் புரிவாய். உமது சொந்த பலத்தையே முழுதும் நம்பி யிராதீர். அப்படியிருந்தால் நீர் படுகுழி யில் விழத்தான் வேண்டும். பழைய துர் வாசனைகளைக் கிளப்பக்கூடிய மக்களது சகவாசத்தினை அறவே அகற்றுவீர். உண் மையில் நீர் உயர்வடைய விரும்பினால் இவைகள் சகல விஷயத்திலும் கவனமா யிருக்க வேண்டுவது அவசியம். ஆணோ, பெண்ணோ எவருடன் பழகும்போதும் கம்பீரமாகவும் பெருந் தன்மையுடனும் நடந்துகொள்வீர். எந்த பெண்மணியும் உம்மை ஆண் என்ற அபிப்ராயத்தோடு நெருங்க இடங் கொடாதீர். ஆண் பெண் என்ற திருஷ்டி இழந்த ஆத்மீய நிலையில் உம்மைக் காணும்படி இடம் கொடுப்பீர். எந்த பெண்மணியேனும் உம்மோடு நெருங்கிப் பழகி உறவாட இடங்கொடுப்பீ ரானால் என்றேனும் ஒருநாள் நீர் இடறி விழுவது திண்ணம். உமதுள்ளத்திலுள் ளிருக்கும் பழைய எண்ணங்களை சுவ டின்றி அறவே அகற்றுந் துணையும் நீர் இத்தகைய ஆபத்துக்களுக்கு இடங் கொடுத்தல் நலமன்று. இவ்விஷயத்தில் அசிரத்தையாயிருந்த சாதகர்கள் பலர் துன்பப்பட்டதை நான் நேரே கண்டிருக் கிறேன். இவ்வித பத்தியங்கள் பலருக் குப் பிடிக்காதென்பது எனக்குத் தெரி யும். பலர் இம்முறைகளை விரும்பார். ஆனால் இவ்வித கடின மார்க்கமின்றி ஆத்மஞான வாழ்க்கை கைகூடாது என்ப தனை நான் உறுதியாகக் கூறுகிறேன். என் வார்த்தைகளில் நம்பிக்கை கொள் வீர். என் வாழ்நாட்களில் பலரைச் சந் தித்திருக்கிறேன். பலருடைய வாழ்க் கையை நன்கு கவனித்திருக்கிறேன் ; பல ருடைய வாழ்க்கையை சிலவேளை நுணு கிப் பார்க்கவேண்டிய அவசியம் இருந்து வந்தது. அவரவர்க்கேற்ற வகையில் நான் அவர்களுக்கு ஆத்மஞான உபதேசம் அளித்து வந்துளேன்.

ஆத்மஞான வாழ்க்கைக்கு அவசிய மான பிரம்மசர்ய வாழ்க்கையின் அவசி யத்தினைப் பலர் அறிந்துகொள்கின்ற தில்லை. ஆனால் மனம் வாக்கு காயம் இம் மூன்றிலும் பரிபூரண பிரம்மசர்யமில்லா மல் ஆத்மீய வாழ்க்கை இல்லவே இல்லை யென்பதற் கையமில்லை. ஆத்மஞான வாழ்க்கையில் ஈடுபட்டு அநுபூதிபெற்ற எல்லா பெரியோர்களும் இவ்வுண்மை யினை ஓர்வர். நான் இப்படிக் கூறுவது வெறும் வார்த்தைகள் மாத்திரம் என்று கருதவேண்டாம். சாதன வாழ்க்கையில் பலகாலம் வரைக்கும் மற்ற பாலாரிட மிருந்து விலகி வாழ்வீராக. உம் மனத்தி லிருந்து நீக்குவதற்குப் பல பழைய கல் மஷங்கள் நிறைந்து கிடக்கின்றன.

நான் கூறும் வார்த்தைகளை அலக்ஷி யம் செய்யாதீர். ஆரம்ப சாதகன், விரோ திக்கு எதிரில் நின்று போர்புரிய வேண் டாம். எதிர்த் தாக்கலுக்கு இடங்கொடா தீர். சாதன காலங்களில் இப் பழைய வாசனைகள் எத்தகைய அபார கஷ்டங் களைக் கொடுக்கும் தன்மையன என்ப தைப் பின்னர் அறிய வருவீர். ஆகவே பழைய வாசனை உமது உள்ளத்திலிருந்து முற்றும் அறவே அகற்றப்படும் வரையில் உமது சுய பலத்தை நம்பி மற்ற பாலா ரோடு பழக முற்பட வேண்டாம்.

ச

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** சாதகன் (ஒரு பெண் மணியைக் கண்டதும்) தன்னைப் பச்சிளங்

குழந்தையாகப் பாவித்துக் கொள்ளும்போது, தெய்விக மாயையானவள் நாணமடைந்து, சாதகன் வழியில் குறுக்கே நில்லாது ஒளிந்து கொள்ளுகிறாள்.

**பக்தர் :** சுவாமிகாள்! தாங்கள் ஏன் கிரகஸ்த வாழ்க்கையை கைவிட்டீர்கள்? சாஸ்திரங்கள் கிரகஸ்த வாழ்க்கையே சிறந்ததெனக் கூறுகின்றனவே? *

**ஸ்ரீ ராமகிருஷ்ணர் :** எது நல்லது, எது கெட்டது என்பது எனக்கு ஒன்றும் தெரியாது. இறைவன் என்னை எப்படி ஆட்டுவிக்கிறானோ அப்படியே செய்கிறேன். அவன் சொல்லிக்கிறபடி நான் சொல்கிறேன்.

**பக்தர் :** எல்லாருமே உலகத்தைத் துறந்து விட்டால் அது பகவானுடைய விருப்பத்துக்கு விரோதமாகாதா?

**ஸ்ரீ ராமகிருஷ்ணர் :** ஏன் எல்லாரும் உலகத்தைத் துறந்துவிட வேண்டும்? பெண் பொன் போகங்களில் ஆழ்ந்து மூழ்கி நாய் பூனைகள்போல் எல்லாரும் வாழவேண்டும் என்பதும் பகவானது விருப்பமா? அவர் எதனை விரும்புகிறார், எதனை விரும்பவில்லை என்பதனை நீர் அறிந்துவிட்டீரோ? நீர் சொல்லுகிறீர், கிருகஸ்த வாழ்க்கையையே ஒவ்வொருவரும் வாழவேண்டும் என்று பகவான் விரும்புவதாக. உம் மனைவி இறந்துபடும் போது ஏன் நீர் அப்போது அதுவும் இறைவனது திருவுள்ளம் என்று காண்கிறதில்லை. நீர் நோய்வாய்ப்படும்போதும், பட்டினி கிடந்து வாடும்போதும் நீர் ஏன் அவையும் தெய்வ சித்தம் என்று வாளாவிருக்கிறதில்லை?

மாயையால் மூடுண்டிருப்பதாலேயே நீர் பகவானது விருப்பத்தினை அறிந்துகொள்ள முடிகிறதில்லை. அவருடைய மாயையினாலேயே அநித்தியம் நித்தியமாகவும், நித்தியம் அநித்தியமாகவும் தோன்றுகின்றன. உலகம் சதா மாறுபட்டுக்கொண்டே இருக்கின்றது. இப்போது இருக்கிறது, இன்னும் சற்று நேரத்துக்குப் பிறகு அது இல்லாதுபோகின்றது. ஆனால் மாயையின் காரணத்தால் அது நித்தியமாகத் தோன்றுகின்றது. மாயையின் காரியத்தாலேயே நாம் கர்த்தாவென்று கர்வம் கொள்கின்றோம்; அதனாலேயே நாம் மனைவி மக்கள், தாய்தந்தையர், வீடு மாடு, சொத்துசுதந்திரம் இவைகளைப் பெற்றிருக்கிறோம் என்று கருதுகிறோம். இந்த மாயையிலேயே வித்தை அவித்தை ஆகிய இரண்டும் இருக்கின்றன. மண், பெண், பொன் முதலியவற்றில் பற்றுண்டு உலகத்தில் அமிழச் செய்கிறது அவித்யா; அது கடவுளை மறக்கச் செய்கின்றது. பக்தியும் சாது சங்கமுமாகிய வித்யை கடவுளிடம் அழைத்துச் செல்லுகின்றது.

இறைவன் கிருபையால் ஒருவன் மாயையைக் கடந்து அப்பாற் செல்வானானால் அவன் வித்யை அவித்யை இரண்டினையும் கண்கொண்டு பாரான்.

—வசனாமிருதம்.

வயதுவந்த பலர் புத்தியில் குழந்தைகளாகவே இருக்கக் காணவில்லையா? அவர்கள் எப்போதும் மனித பொம்மைகளோடு விளையாடும் விளையாட்டை விடுகிறதில்லை. எவ்வளவுக்கு அதிகமாக விளையாடுகின்றோமோ அவ்வளவுக்கு பொம்மைகளை அதிகமாக வேண்டுகிறோம். என்றென்றுமே விளையாடி காலங்கழிக்க விருப்பங் கொள்கின்றோம். ஏதோ சில குழந்தைகள்தான் விளையாட்டில் களைப்புண்டவைகளாய், அவற்றினை விடுத்து, முக்கிய விஷயங்களிற் கருத்துச் செலுத்தத் தொடங்குகின்றன. இன்னும் சில துஷ்ட குழந்தைகள் திடீரென விளையாட்டினை நிறுத்திவிட்டு ஓலமிட்டு அழ ஆரம்பிக்கின்றன. இக்குழந்தைகள் கடவுளுக்கு ஒய்வு சிறிதும் கொடுக்காது அவரை அப்போதே அடையப் பெறுவர். இதனை விளக்க வெகு அழகாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு கதை சொல்வதுண்டு.

---

* இங்கே பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தகுந்த மறுமொழி தராது விடுகின்றார். உலகப் பற்று மிகுந்த இந்நண்பருக்கு உண்மையான உபதேசம் செய்யப்படுமானால் அது அவருக்குப் பிரயோசனமற்றதாகும் என்பதனாலேயே.

ஸ்ரீ லக்ஷ்மீ சமேதராய், ஒருக்கால் ஸ்ரீ விஷ்ணு பகவான் வைகுண்டத்தில் வீற்றிருந்தார். திடீரென விஷ்ணுபகவான் எழுந்து போவதைக் கண்ட லக்ஷ்மி தேவி, ஆச்சர்யப்பட்டு "அவசரமாக எங்கே செல்கின்றீர்கள்?" என்று கேட்டாள். "கொஞ்சம் பொறுத்திரு லக்ஷ்மி! என் அன்பன் ஒருவன் ஆபத்தில் சிக்குண்டிருக்கிறான். நான் அவனைக் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லிப் புறப்பட்டார். உண்மையில், விஷ்ணு பக்தன் ஒருவனை எவரோ நையப் புடைத்துக் கொண்டிருந்தனர். என்றாலும் சிறிது நேரத்துக்கெல்லாம் விஷ்ணு வானவர் திரும்பிவருவதைக்கண்ட லக்ஷ்மி "என்ன சமாசாரம்? ஏன் இவ்வளவு சீக்கிரமாகத் திரும்பி வந்துவிட்டீர்கள்?" என்று கேட்டார். அதற்கு விஷ்ணு மறுமொழி பகர்ந்ததாவது: "ஓ! நான் போகவேண்டிய அவசியமே ஏற்படாது போய்விட்டது. பக்தன் தற்காப்பிலேயே நம்பிக்கை கொண்டு சத்துருவைத் திரும்பி நன்றாக அடிக்க ஆரம்பித்து விட்டான். ஆகவே அவனைக் காப்பாற்றவேண்டும் என்ற எண்ணத்துடன் நான் ஏன் செல்ல வேண்டும்?"

இறைவனை நாம் முழுதும் நம்பினால் தான் அவன் நம்மைக் காப்பாற்றுவான்; அப்படியின்றி நம்மிஷ்டப்படி நாம் நடப்போமானால் நாம் துன்பத்துக்குள்ளாவது நிச்சயம். ஒரு காலை ஒரு படகிலும், மற்றொரு காலை இன்னொரு தனித்த படகிலும் வைத்துப் போக இயலாது. இறைவன் பாட்டு தஞ்சம் புகுந்து விட்டோம் என்று கூறிக்கொண்டே சுயப் பிரயத்தனம் செய்யும் மக்கள் பலருண்டு. அது பிரயோசனமில்லை. உள்ளப்பரித்யாகம்-உண்மை சரணாகதி வெகு வெகு கஷ்டசாத்யமான காரியமாகும்; பல பிரயாசைகளும், விடாமுயற்சியும் செய்த பிறகே அதனை அடைய முடியும்.

தம் உள்ளொளி உபதேசித்த வண்ணம் நடக்கிறோம் என்று சிலர் கூறக் கேட்கிறோம். இவ்வுள் ஒலி அதி சூக்ஷ்மமான பரிசுத்த சரீரத்தின் குரலே யன்றி வேறன்று; அவ்வொலிக்குச் செவி சாய்க்காது விடுவீர்களானால் அவ்வுள்ளொலி கேட்பது நின்றுவிடும். பலர் இவ்வுள்ளொலியை இறைவனின் தெய்வீக ஒலி என எண்ணங் கொண்டு விடுகின்றனர். ஆனால் இறைவன் ஒலி இவ்வளவு சீக்கிரம் கேட்டுவிடும் என்று எண்ணிவிட வேண்டாம்.

எடுத்த அளவிலேயே நாம் திறம்பட முழுக முடியாது. நாம் ஆழ மூழ்க வேண்டுவது அவசியம்தான். என்றாலும் பல நாள் பழக்கத்துக்குப் பின்தான் ஆழ மூழ்க முடியும். சிப்பிகள் கிடக்கும் அடிவாரம் வரை முழுகினால் அல்லாமல் முத்துக்களைப் பெறுவதென்பது இயலாது.

முதலில் மனமந்தத்தை அகலவோட்டுவோம். தெய்வீக எண்ணங்களை அடிக்கடி பெறுவதற்கேற்றபடி மனத்தைப் பழக்குவோம். மனத்தின் ஒரு பாகத்தில் நுரைகளும் குமிழ்களும் ஏற்பட்டு கொந்தளித்துக் கொண்டிருக்கலாம்; அதே சமயத்தில் அதன் மற்றொருபாகம் இடைவிடாது அமைதியாக இறைவனை சிந்தித்தவண்ணமாக இருத்தல்வேண்டும். எப்போதும் இறைவன் விஷயத்தில் ஈடுபட்டிருக்கும்படி மனத்தின் ஒருபாகம் இருக்கவேண்டும்.

கண்டிப்பாக, தீயோர்கள், பெண்மக்கள் இவர்களது சகவாசத்தை முற்றும் அகற்ற வேண்டும். துறவும், தூய்மையும் படைத்த நல்லோரிணக்கத்தையே என்றும் நாடவேண்டும்.

திரும்பவும் உமக்கு ஞாபகப்படுத்துகிறேன். மனம் ஒருமுறை மலினமடைந்து விடுமானால், அதனைப் பரிசுத்தப்படுத்த பலகாலம் வருந்தி உழைக்க

வேண்டும். தீக்குச்சி யொன்று என் கை தவறி சேற்றில் விழுந்து நனைந்து விடுமானால், அதனை உலர்த்தி தீயுண்டாக்க பலவித சிரமங்கள் கொள்ள வேண்டும். ஈரம் முற்றிலும் அகன்றாலல்லாமல் அது நெருப்பு தராது. முதற்காரியம் ஈரத்தை நீக்குவதே யாகும். எனவே தான் மனத்தை மலினப்படுத்தும் தீயோர் உறவை அறவே அகற்றும்படி வற்புறுத்திக் கூறுகிறேன். ஒருக்கால் நமது அசாக்கிரதையினால் மனம் மலினப்பட்டு விடுமானால் அவ்வழுக்கை எங்ஙனம் அகற்றுவது? மனம்அழுக்கடைந்துவிட்டது; நாம் பாபிகளாகி விட்டோமே என்று வீணே வருத்தப்பட்டுக் கொண்டிருப்பதில் பிரயோசனமில்லை. அதனை சுத்தப்படுத்த முயலுவோம். அதனைப் பரிசுத்தப்படுத்த நாம் எல்லா முயற்சிகளும் செய்வோமாக. மேலும் மேலும் அதனைப் பரிசுத்தப் படுத்தி ஆத்மன் ஜோதியுடன் பிரகாசிக்கத் தக்கதாக்குவோம். ஒருவன் சென்றதை நினைந்து வருந்திக்கொண்டிருப்பானானால் அவன் ஒருக்காலும் முன்னேறவே மாட்டான்.

மனம் மலினப்பட்டு விட்டது; கெட்டு விட்டது. அதிற் சந்தேகமில்லை. நம்முடைய கவனக்குறைவாலேயே இவ்விதம் ஏற்பட்டது என்பதற்கும் சந்தேகமில்லை. இந்த நிலையில், அது பரிசுத்தமாக்கப்பட்டாலல்லாமல் தெய்விகத்தை அதனால் சிந்திக்க முடியாது. தெய்விக வர்ணம் அதில் ஒட்டாது. அழுக்குள்ள ஆடையில் வர்ணம் ஏறுமா? முதலில் துணியைச் சுத்தப்படுத்துவீர். பின்னர் வர்ணம் எளிதாக ஏறும். உலக ஆசைகளை நெருப்பிட்டுக்கொளுத்துவீர்; நெருப்பினால் ஏற்பட்ட சாம்பரை அதன்பின் அகற்றுவீர். ரசாயனத்தால் மன வழுக்கை முற்றிலும் அகற்றுவீர். மனம் எப்படியோ அசுத்தமாகி விட்டது. அது நம்முடைய குறை பாட்டாலேயே. ஆகவே அசுத்தம் அகல நாமே பாடுபட்டுழைக்க வேண்டும்.

“ஏ பகவன்! எம்முடைய ஹ்ருதயங்கள் உலக மையல்களாகிய மாசினால் எரிபட்டு விட்டன. ஏ கருணாநிதி! உமது புனித நாமமாகிய மந்திரத்தினால் இவைகட்குப் புத்துயிரளித்து எம்மை இரக்ஷிப்பீராக.”

உலக சிக்கல்களில் சிக்குண்டு அழுக்கடைந்த மனது பகவானது புனித நாம மந்திரத்தினாலேயே பரிசுத்தமடையும். புண் பட்ட மனம் இப் புனித மந்திரத்தால் புண் நீங்கி சுகப்படுகின்றது. இம் மந்திரம் மனத்திற்கு ஆறுதலும், ஆதரவும் அளிப்பதோடு புதிய பலமும் உற்சாகமும் ஊட்டுகின்றது. அழுக்குகளை சாம்பாராக்கி அழுக்கிருந்தவிடத்தே தெய்விக அன்பை எழுப்புகிறது. நம்மை ஏய்த்துக்கொண்டே சென்ற மாயையாகிய கானல் நீர் தோற்றத்தை அகற்றி ஜீவாதாரமாகிய சாந்த நீரைத் தருகின்றது. பொய்யை அகற்றி மெய்யை அளிக்கின்றது. காம வெகுளியை அகற்றி விவேக வைராக்யத்தைத் தருகின்றது. சகல ரோக சஞ்சீவினி மாத்திரையாக இருப்பது பகவானது புனித நாம மந்திரமாகும்.

இரவும் பகலும் இடைவிடாது போராடுவோம். ஏற்கெனவே இருக்கும் அழுக்கினை அகற்றுவோம்; மேற்கொண்டு அழுக்கு சேராவண்ணம் மனத்தினைப் பாதுகாப்போம். நீங்கள் கேட்ட அனைத்தினையும் தீவிர அனுஷ்டான மாக்குவீர். அப்போதே ஆத்ம சாக்ஷாத்காரம் எய்தப் பெறுவீர்.

---

# அருளும் பொருளும்—ஒரு கதை

(ரா. ராமகிருஷ்ணன், எம். ஏ., எல். டி.)

அமிருத வாஹினி என்னும் புண்ணிய நதியின் கரையில் திருப்பிறையூர் என்னும் சிவஸ்தலம் ஒன்று இருந்தது. அவ்வூரின்கண் இயற்கை யன்னை எழில் மிகக் கொண்டவளாய்க் கொலுவீற்றிருந்தாள். நதியின் தெள்ளிய நீர் பரிசுத்தாத்மாக்களுடைய மனம் போன்று களங்கமற்றிருந்தது. ஊரைச் சுற்றி யிருந்த பசுஞ்சோலைகள் மகான்களது கருணையை யொத்துக் குளிமை நிறைந்திருந்தன. எக்காலத்திலும் மெல்லென வீசிய தென்றற் காற்று மாந்தரது களைப்பைப் போக்கியதுடன் மன ஆயாசங்களையும் அகற்ற வல்லதா யிருந்தது.

ஒரு நாள் திருப்பிறையூருக்கு முனிவரொருவர் வந்து சேர்ந்தார். அவ்வூரின் அழகைக் கண்டு அங்கேயே தங்கிவிட நிச்சயித்தார். ஆற்றங்கரையில் மடமொன்றிருந்தது. (பண்டைக் காலங்களில் நமது கிராமங்கள் உயிரும் உற்சாகமும் நிறைந்திருந்தபொழுது கிராமத்தார் பொது சமூக வேலைகளைச் செய்வதில் ஆர்வம் கொண்டிருந்தனர். ஊரின் கோடியில் சிவாலயமும் விஷ்ணுகோயிலும், கோயில்களுக்கான தேரும் வாஹனங்களும், உற்சவ நிலையங்களும், நதிக் கரையில் ஸ்நான கட்டடங்களும், பஜனை மடங்களும் பரோபகார சிந்தையுடைய தனவந்தர்களால் ஆக்கப்பட்டிருந்தன. யாத்திரை செய்யும் சந்நியாசிகள் தங்கியிருப்பதற்கான விடுதியும் ஒவ்வொரு கிராமத்திலும் இருந்தது.) மடத்தில் முனிவரொருவர் வந்துள்ளார் என்பதை யறிந்த கிராமத்து மக்கள் அவரைக் காண வந்தனர். திருப்பிறையூர் வாசிகளுக்கு யதிகளிடத்தில் இயல்பான பக்தி இருந்து வந்தது.

முனிவரைச் சிலர் "தாங்கள் எந்த ஊரோ? எங்கிருந்து வருகிறீர்களோ?" என்று வினவினர். முனிவரோ புன்னகை புரிந்தவராய், "உள்ள பொருள் ஒன்றே. அதற்கு ஊர் ஏது? போகுமிடம் ஏது? உடலோ காற்றிலகப்பட்ட சருகுபோல, பராசக்தியின் இச்சைப்படி ஊசலாடுகிறது" என்று கூறினர். "தங்களது திருநாமம் யாதோ?" என்று ஒருவர் வினவ, "நாமரூபமற்ற அகண்டப் பொருளை எச்சொல்லால் குறிப்பிட முடியும்?" பஞ்சபூதங்களாலான பூத உடலை எக்குறிப்பிட்ட பொருளெனக் கூறுவது?" என்று விடைவந்தது. "தங்களுடைய உணவு முறை என்னவோ?" என்று ஒருவர் கேட்க, "இவ்வுடல் கிடைத்ததை உட்கொண்டு உயிர்வாழும் தன்மையது" என்று முனிவர் பதில் கூறினர்.

ஊரிலுள்ள மக்கள் இம்முனிவருக்குக் குணஜோதி என்று பெயரளித்தனர். அவருடைய வாசத்திற்கான வசதிகளைச் செய்து தந்தனர். ஆனல் முனிவரோ முற்றும் பற்றற்றவராய், தினத்தில் பெரும் பகுதியைத் தியானத்தில் கழித்து வந்தார். அவர் சொற்பமாகத்தான் பேசினர்; ஆனல் அவரது பேச்சு ஒவ்வொன்றும் ஞானத்தீயைக் கொளுத்தவல்லதா யிருந்தது. அவர் பிரசங்கங்கள் புரியவில்லை. ஞானநூல்களைக் கொண்டு பாடங் கற்பிக்கவில்லை. சிஷ்யர்கள் வேண்டு

மென்று கோரவில்லை. ஆனாலும் அவர் வாழ்வே பெரியதொரு படிப்பினையாக இருந்தது. மலரை நாடும் வண்டுகளைப் போல, தாகத்தை நீக்க நீரை நாடிச்செல் லும் பிராணிகளைப் போல, சாதகர்கள் பலர் குணஜோதியை நாடிவந்தனர். நெருப் பினருகிற் செல்லுவோர் தம் முயற்சி யின்றியே அனலின் வெப்பத்தை உணரு வதைப்போல குணஜோதியை யண்டிய வர்கள் தெய்விகத்தை உணர்ந்தனர். நாளடைவில் அவர் வசித்து வந்த மடத் தைச் சுற்றிலும் சத்திரங்களும், கோயில் களும், பஜனை விடுதிகளும் எழுந்தன. திருவிழாக்களும் ஆராதனைகளும் ஏராள மாக நடைபெற்றன. ஆனால் இவ்வெவற் றாலும் பாதிக்கப்படாதவராய்த் தாமரை இலைத் தண்ணீரைப் போல வசித்து வந் தார் குணஜோதி. அவருடைய நடை முறை குழந்தையினுடையதா யிருந்தது. அவர் விருப்பு வெறுப்பற்றவர். புகழ்ச்சி இகழ்ச்சிகளைச் சமமாகக் கருதியவர். தமக்கு ஒருவர் மாலையிட்டு வேறொருவர் தடியடி கொடுத்தாலும் இருவரையும் ஒரே தன்மையுடன் நோக்கி வந்தார். அவர் வசித்த இடத்தில் கட்டிடங்கள் பல இருப்பினும் அவர் பசும்புற்றரையில் தான் படுப்பார். இடையில் சில தினங் கள் எவரும் காணமுடியாதபடி வனமொன் றிற்குள் சென்று சமாதியில் மூழ்கி யிருந்து விட்டுத் திரும்புவார்.

குணஜோதியிடம் தாமே வந்து சரண் புகுந்து உலகைத் துறந்தவர் பலருள் முக்கியமானவர் மோக்ஷகாமன் என்பவர். இவர் குருவுடன் நெருங்கிப் பழகிவந்த வர்.

குணஜோதியின் சேவையில் ஈடுபட்ட இல்லறவாசிகள் பலருள் முக்கியமானவர் நாராயணன் என்ற ஜமீந்தார் ஒருவர். இவரிடம் இருந்த சொத்துக்கு அளவே இல்லை. அவருடைய அரண்மனையில் நூற் றுக் கணக்கான உறவினரும் சிப்பந்திக ளும் உண்டுகளித்திருந்தனர். அவர் செய்து வந்த, தானதருமங்களுக்கு எல்லையே இல்லை. அவர் புகழை நாடாத பெருமான்; ஆஸ்திக்ய புத்தியும், அற நெறிப் பற்றும், அண்டையான் பசித் திருக்கக் காணாத காருண்ணிய இயல்பும், பணிவும், அகங்காரமின்மையும் அவரிடம் திகழ்ந்தன. ஆத்ம சாந்திக்காக அவர் குணஜோதியிடம் சரண் புகுந்திருந்தார். தமது பொருளில் பெரும் பாகத்தைக் குணஜோதியின் சீடர் குழாத்தின் சேவைக்காகச் செலவிட்டு வந்தார்.

* * *

நாட்கள் பல சென்றன. உலகின் கண் மாறுதல்கள் பல ஏற்பட்டன. மாறுவதே உலகின் இயற்கையல்லவா? இளைஞர் முதியோராயினர். முதியோர் பலர் மறைந் தனர். செல்வம் இடம் விட்டு இடம் பெயர்ந்தது. பண்டைக் குடும்பங்கள் இல் லாதொழிந்தன. புதிய தனவந்தர்கள் தலையெடுத்தனர். காலம் தன் கோலத் தைச் செய்தது.

நாராயணன் என்ற ஜமீந்தாருக்குக் கஷ் டங்கள் பல சம்பவித்தன. அவரது செல்வ நிலை கேடுற்றது. அடுத்தடுத்துப் பல நிதிகள் குலைந்ததனாலும் சில வயல் கள் வெள்ளத்தால் பாழடைந்ததாலும் ஆறு மாத காலத்திற்குள் அவர் வறிஞ ரானார். அவரது கடனாளிகள் பலர் அவ ருடைய பழைய பெருமையையும் மேன் மையையும் கருதாமல் அவரை அல்லற் படுத்தினர். அச்சமயத்தில் புதிய நோய் ஒன்று தோன்றி ஜமீந்தாருடைய ஒரே மகனைக் கொள்ளை கொண்டது. துயர் வருங்காலையில் தனித்து வருவதில்லை; கூட்டமாகவே வருகின்றது. ஊரில் எங் கும் ஜமீந்தாருடைய நிலையைப்பற்றிய பேச்சாகவே இருந்தது. பலர் அவருக்கு அனுதாபம் காட்டினர். பலர் அவரை

எண்ணி அழுதனர். பலர் ஈசனையே நொந்து கொண்டனர். ஆனால் மாந்தரிடையே ஒருவர் துயரை மற்றவர் ஏற்றுக்கொண்டு முன்னவரது துயரை அகற்றவோ குறைக்கவோவான வன்மை இருக்கிறதா? இல்லை. ஜீவனுக்கு உற்றாரும் உறவினரும் பலர் இருக்கலாம். ஆனால் உலகவாழ்வென்பது கூட்டுக்காரியமல்ல; தனிக்காரியமேயாகும். ஒவ்வொரு ஜீவனும் தன் பிரயாணத்தைத் தானே முடித்தாக வேண்டும். தன் சுமையைத் தானே தூக்கியாக வேண்டும். பிறக்கும்பொழுது மனிதன் தனியாகப் பிறக்கிறான். இறக்கும்பொழுது தனியாக இறக்கிறான். ஈசன் ஒருவனே நமது உண்மைத் தோழன். ஈசனைத் தவிர்த்த அளவிற்கு நாம் இப்பேருலகினிடையில் தனித்தே நிற்கிறோம். வாழ்க்கை விதி கடுமையானது. நமது கர்மம் நம்மை விடாது. நாம் செய்து முடிக்கின்ற அற்ப காரியமும் கூட, நாம் பேசுகின்ற ஒரு சிறு சொல்லும் கூட, நம்மை விடாது தொடரும். ஆதலால் நாராயணனுடைய கஷ்டத்தை நாராயணனே அனுபவித்தார்.

ஒரு நாள் மோக்ஷகாமன், குருவான குணஜோதியை நாடி, "ஐயனே! நமது சிட்டர் குழாத்தினிடையே மிகுந்த பரபரப்பு ஏற்பட்டுள்ளது. என்மனமும் கூடக் குழம்பிக் கிடக்கிறது. என் ஐயங்களை நீங்கள் தீர்த்துவைக்க வேண்டும்" என்று வேண்டினார்.

குணஜோதி புன்னகை புரிந்தவராய், "மோக்ஷகாமா! ஞான யோகத்தில் நிலைத்திருத்தல் என்பது அரியதொரு சாதனையாகும். அதை நீ அப்பியசித்து வா. ஈசனுடைய ஆக்ஞைக்குட்பட்டு இயங்கிவரும் உலகில் பரபரப்புக் கென்ன இடமிருக்கிறது? மனக்குழப்பம் என்பது அறிவின்மையின் அறிகுறியன்றோ? உன் ஐயமென்ன வென்று கூறு" என்றார்.

"குருநாதரே! சத்தியத்தினால் புவனம் நிலைத்திருக்கிறது என்று மறைகள் கூறுகின்றன. தர்மமே வாழ்வின் தத்துவம் என்று நாங்கள் கேட்டுள்ளோம். அவனன்றி ஓரணுவும் அசையாது எனவும் பரம சைதன்னிய சொரூபியான ஆண்டவனது ஆட்சியில் தவறு எற்படுவது அசாத்தியமெனவும் நீங்கள் கூறுகிறீர்கள். பகவத்கீதையில் கண்ணன் 'நன்மை செய்கின்றவன் ஒரு நாளும் கேடடையான்' என்று உறுதி கூறியிருக்கிறார். ஆனால் இக்கலியுகத்தில் மறைகளும் பொய்யாகும் நிலை ஏற்பட்டுவிட்டது. வேதங்கள் என்பவை நூல்கள் அல்ல என்றும், என்றென்றும் மாறாத புவன விதிகளையே அவை குறிக்கின்றன என்றும் நீங்கள் கூறியிருக்கிறீர்கள். ஆனால் நடை பெறும் விஷயங்களோ வேதப் பிரமாணத்திற்கு மாறாக இருக்கின்றன. நாராயணன் எனும் ஜமீந்தார் நமது பேரன்பர். அவருடைய பொன்னான குணமும், தாராள சிந்தையும், ஈசுவர நம்பிக்கையும், அடக்கமும், தர்ம கைங்கரியமும் தாங்கள் அறிந்தவையாம். அவருக்கு வந்த துயரைப் பாருங்கள்! அவரது நிலையைக் கண்ட பலர் நாஸ்திகர்களாகவும் அவைதிகர்களாகவும் ஆய்விடுவார்கள் என்று நான் அஞ்சுகிறேன். 'பகவானைச் சேவித்து நாராயணன் அடைந்த சுகம் போதும். நாம் நம்முடைய சொத்தையும் தருமத்தில் செலவழித்துக் குசேலர்களாக வேண்டாம். கடவுள் ஒருவர் உண்டானால் அவர் தமது பக்தர்களைக் காப்பாற்றமாட்டாரா? இரவு இரவாத, இரகுபதிராகவ ராஜாராம் என்று தொண்டை கிழியப் பாடியவனுக்கு சொத்துக்கூட இல்லாது போவதென்றால் பஜனையும் பூஜையும் வீணேயல்லவா?' என்று பலர் பலவாறு பேசுகின்றனர். அவர்கள் கூறுவதில் உண்மை

இருக்கிறதென்றே நானும் கருதுகிறேன். தங்களுடைய அபிப்பிராயம் என்னவோ?" என்று வினவினர் மோக்ஷகாமன்.

குணஜோதி கலகலவென்று நகைத்தார். "மோக்ஷகாமா! நீயும் மற்றவர்களைப்போலப் பேசுவது எனக்கு வியப்பைத் தருகிறது. புவனத்தில் நடைபெறும் காரியங்களை நாம் மேல் நோக்காகக் கவனித்தால் அவை பித்தனொருவனது செய்கைகளைப்போலவே தோன்றும். ஆனால் ஆழ்ந்து ஆராய்ந்தால் அவை யாவும் காரிய காரண விதிக்குட்பட்டிருப்பது தெரியவரும். நாராயணனது நிலையை உள்ளவாறு அறிவது பலரால் கூடாத காரியமாகையால் பலர் பலவாறு பிதற்றுகின்றனர். ஆனால் நான் உனக்கு விஷயத்தை விளக்க வைக்கிறேன். ஒவ்வொரு ஜீவனுடைய முன்னேற்றத்தையும் ஈசன் கண்ணுங் கருத்துமாகக் கவனித்து வருகிறார். அந்தந்த ஜீவனுடைய க்ஷேமத்திற்கான அனுபவங்களை அவ்வப்பொழுது அவர் அளித்து வருகிறார். கடவுள் வேலைசெய்யும் சூக்ஷ்ம முறையைப் பிறர் அறியார். அன்னையொருத்தி குழந்தைக்குக் கசப்பான மருந்தைப் புகட்டும்பொழுது அன்னையைக் கொடியவளெனவே குழந்தை எண்ணுகிறது. ஆனால் அன்னையின் அன்பின் மிகுதியினாலேயே அம்மருந்து தரப்படுகிறது என்பதைப் பெரியோராகிய நாம் அறிகிறோம். அதைப் போலவே தான் ஈசன் தம் குழந்தைகளாகிற ஜீவன்களுக்குச் சிற்சில சமயம் கசப்பான அனுபவங்களைத் தருகிறார். அவற்றின் மூலம் ஜீவனது ஆத்மீய நலன் அதிகரிக்கும் என்பதை ஈசன் நன்கு அறிவார். ஆனால் குழந்தைகளைப்போன்ற குறுகிய அறிவுடைய மாந்தர் கசப்பான அனுபவங்களைக் கண்டு அச்சுறுகின்றனர். அது மதியீனமேயாகும். பகவான், கீதையில், முதலில் விஷம்போல இருந்து பிறகு அமுதத்திற் கொப்பாக இருக்கும் சுகமே உயர்ந்ததென்று கூறவில்லையா? பூவுலக வாழ்க்கை ஜீவனது பயிற்சிஸ்தலம். இங்கு போகத்தைக் காட்டிலும் துயரினாலேயே அறிவு விளக்கம் அதிகமாக ஏற்படுகிறது. துயர்வந்த காலையிலேயே நாம் ஈசனை நினைக்கிறோம். இதை எண்ணித் தான் குந்திதேவி எப்பொழுதும் தன்னைத் துயரிலேயே நிறுத்தி வைக்கும்படி பகவானை வேண்டிக்கொண்டாள். நாராயணனது நிலைமையைப்பற்றி நீ கவலை கொண்டாய். நமது புராணங்களைப் படித்துப் பார். சத்திய நெறி தவறாத இராமனும் அரிச்சந்திரனும் பட்ட துயர்களுக் கெல்லையுண்டா? கண்ணனை உத்தம நண்பனாகக் கொண்டிருந்த பாண்டவருக்கன்றோ கஷ்டங்கள் பல சம்பவித்தன! அதனால் கடவுளுக்கு அவர்கள் மீது தயையில்லையென்று கூறுவாயா? நாராயணன் உத்தம பக்தன்தான். கடவுள் அருள் அவன்மீது சுரந்துள்ளது. அதன் அறிகுறிதான் அவனது பொருள் நாசம். தனவந்தனொருவன் மோக்ஷத்தை எய்துவதைக் காட்டிலும் ஒட்டக வரிசையொன்று ஊசிக்காதின் வழியாகச் செல்லுவது சுலபமாகும் என்று பெரியாரொருவர் கூறினர். நாராயணன் தர்மசிந்தை மிகுந்தவனாயிருந்தாலும் அவனது பொருள் அவனது ஆத்மீய முன்னேற்றத்திற்குத் தடையாயிருந்தது. அத்தடையை ஆண்டவன் இப்பொழுது நீக்கி விட்டார். இகலோகபோகங்கள் ஏராளமாகப் பெற்றிருந்த காரணத்தால் நாராயணனுக்கு இவ்வுலகம் அநித்தியமானது, சுகமற்றது என்ற உண்மை வேண்டிய அளவிற்குத் தெரியாதிருந்தது. இப்பொழுது அவ்வுண்மையை அவன் நன்றாக அறிந்து

கொண்டிருக்கிறான். நாராயணனுக்கு இப்பொழுது ஏற்பட்டிருப்பதெல்லாம் கேடல்ல; பெரும் நலனேயாகும். அரைகுறையாகவிருந்த அவனது ஆத்மீயப் பற்று இனி ஓங்கி வளரும். பொருள் அவனை விட்டகன்றதென்றாலும் அருள் அவன்மீது பொழிந்துள்ளது. அவனது நிலையைக் கண்டு அனுதாபம் கொள்ள வேண்டிய காரணம் இல்லை" என்று கூறி முடித்தார்.

மோக்ஷகாமனின் அகத்தில் மண்டியிருந்த இருள் நீங்கிற்று. மனத்தில் சாந்தி நிறைந்தவராய் அவர் ஈசனது விசித்திர லீலையை நினைந்து நினைந்து வியப்புற்றார்.

* * *

அமெரிக்காவில் இருந்த கிறிஸ்துவப் பெரியார் ஒருவர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்து சுவாமி அதுலாநந்தர் என்று பெயர் பெற்றுத் தொண்டாற்றி வருகிறார். அவர் 1925-ல் பங்களூரில் செய்த பிரசங்கமொன்றில் பின்வருமாறு கூறியிருக்கிறார்:

எனது மேனாட்டு அன்பர் கேட்கின்றனர், "இதோ பாரும், கிறிஸ்துவ மதம் நமக்கு எவ்வளவு நன்மையைச் செய்துள்ளது! கிறிஸ்துவ நாடுகளின் சமூக, பொருளாதார நிலையையும், வேதாந்தம் தோன்றி இன்றும் தழைத்துவரும் நாட்டின் நிலையையும் ஒப்பிட்டுப் பாரும். இந்தியாவின் ஏழ்மையையும் மேனாட்டின் செல்வத்தையும் கவனித்தால் கிறிஸ்துவமதமே மனித ஜாதிக்குப் பெரும் நலனென்றும் மேனாட்டார் தமது நிலைமையைச் சீர்திருத்திக்கொள்ள வேறு நாடுகளையோ மதங்களையோ நாடவேண்டாமென்றும் திண்ணமாக எண்ணவேண்டியிருக்கிறது."

இதற்கு என் விடை யாது? மேனாட்டின் செல்வ நிலைக்கும் அதன் மதத்திற்கும் தொடர்பு ஒன்றுமில்லை என்று நான் கூறுவேன். ஏசுநாதர் பூலோகத்திற்கு வந்தது செல்வமும் நலமும் நிறைந்த சமூகமொன்றை ஆக்கும் வழியைக் கற்பிப்பதற்காக வல்ல. பாபம், பேராசை, காமம், வெறுப்பு, பிறரை வாட்டுதல் முதலானவற்றை ஒழிப்பது எவ்வாறு என்றும், உலகில் வாழ்ந்துகொண்டே உலகத்தில் ஒட்டாமல் வாழ்வது எவ்வாறு என்றும் காட்டுவதே மதத்தின் முக்கிய போதனை. அதே போதனையைத்தான் ஏசுநாதரும் செய்தார். மக்களைப் பரிசுத்தர்களாகவும், புண்ணியவான்களாகவும் ஆக்குவதற்கே ஏசுநாதர் தோன்றினார். அவர் தியாகத்தையும் போதித்தார்.

ஏசுநாதர் கூறினார்: "எனது சுமையை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள். என்னிடமிருந்து கற்றுக் கொள்ளுங்கள். என் உள்ளத்தில் பணிவும் தாழ்வும் உள்ளன. உங்களுக்கு அவற்றின் மூலம் ஆத்ம சாந்தி கிட்டும்."

மேனாட்டுச் சமூகத்தைப் பாருங்கள். ஏசுநாதர் கூறிய பணிவும் உள்ளத் தாழ்வும் அங்கு உள்ளனவா? அவர் குறிப்பிட்ட ஆத்ம சாந்தி அங்குள்ளதா?

ஏசுநாதர் கூறினார்: "நான் உங்களுக்குச் சொல்லுவதெல்லாம் உங்கள் உயிரைப் பற்றியோ உணவைப்பற்றியோ பானத்தைப்பற்றியோ உடையைப் பற்றியோ கவலை கொள்ளாதீர்கள் என்பதுதான். வானத்திலுள்ள பறவைகளைப் பாருங்கள். அவை விதைப்பதுமில்லை, அறுப்பதுமில்லை, சேர்ப்பதுமில்லை. ஆயினும் நமது பரமபிதா அவர்களை உண்பிக்கவில்லையா? அப்பறவைகளைக் காட்டிலும் நீங்கள் மேலானவர்கள் அல்லவா?"

பணக்கார இளைஞனைப் பார்த்து ஏசுநாதர், "போ, உன் யாவையும் விற்று அப்பொருளை ஏழைகளுக்குக் கொடுத்து என்னைப் பின் தொடர்ந்துவா" என்றார்.

இவ்வுபதேசம் பொருளையும் சமூக க்ஷேமத்தையும் ஆரோக்கியத்தையுமா மேன்மைப் படுத்துகிறது? இல்லை. மேனாட்டின் செல்வ நிலை கிறிஸ்து வின்மீதுள்ள பக்தி, அவருபதேசங்களைப் பின்பற்றுதல் இவை காரணமாக ஏற்பட்டதல்ல. மக்களின் பேராசை, சொத்துக்கும் சுகத்திற்குமான போராட்டம்—இவையே அச்செல்வ நிலைக்குக் காரணமாகும். மனிதனது உயர்ந்த, சிறந்த அம்சங்களை யெல்லாம் அழியச் செய்ததன் மூலமே அந்நிலை கிட்டியுள்ளது.

மேனாட்டின் சிறந்த செல்வ நிலையைக் கிறிஸ்துவ மதத்தைச் சிலாகித்துக் கூறுவதற்கொரு காரணமாகக் கூறுவது ஹிந்துக்களுக்குப் பிடிப்பதில்லை. அதைக் கண்டு நாம் இன்புறுவோமாக. கிருஷ்ணர், புத்தர், சங்கரர், இராமாநுஜர், இராமகிருஷ்ணர், விவேகாநந்தர் இவர்களது வம்சத்தில் தோன்றிய மக்களைச் சுலபமாக ஏமாற்றிவிட முடியாது. கிறிஸ்துவின் உண்மைக் குழந்தைகளும் இவ்வாதந்தினால் ஏமாறமாட்டார்கள். நாம் மதத்தை நாடுவது இகலோக க்ஷேமாபி விருத்தியின் பொருட்டல்ல. ஆத்மீய பரிபூர்ண நிலையை அடையும் மார்க்கத்தில் முன்னேற்றத்திற்கான உதவியைப் பெறவே மதத்தை நாடுகிறோம்.

* * *

மக்களைக் கடவுளராக்குவது மதத்தின் குறிக்கோளாகும். மதத்தின் பெயரால் இன்றைக்கிருந்து நாளைக்கழியும் பொருள்களை ஈட்ட முயலுவது நம்மையே நாம் வஞ்சித்துக் கொள்ளுவதே யாகும். அவ்வாறு செய்வது குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிவந்தவன் கதைபோலாகும்.

மதத்தின் குறிக்கோளை அடைந்தவனே வேறொன்றை அதைக் காட்டிலும் உயர்ந்த லாபமாகக் கருதான்; பெரியதொரு துயரமும் அவனைப் பாதிக்காது.

மதமே பரவித்தை எனப்படும். பரவித்தையை யடைந்தவன் இனி அடைய விரும்புவது வேறொன்றுமில்லை.

---

# சந்தேகம் தெளிதல்

வினா:—(1) நம் நாட்டில் கணக்கில் அடங்காத கோவில்களும் வெவ்வேறு நாமம் படைத்த தெய்வங்களும் இருக்கின்றன. அநேக பக்தர்கள் அநேக கோயில்களிலுள்ள வெவ்வேறு நாமமுள்ள தெய்வங்களையும் தொழப்போகின்றார்கள். இதன் கருத்து என்ன? அவ்விதம் செய்வது சரியா? —சு

விடை:—கடவுள் எங்கும் உள்ளார் என்பது நமது இந்துமதக் கருத்து; ஆதலின், எத்தனை இடங்களில் அவர்க்குக் கோயில்கட்டி வழிபட்டாலும் தகும்; அவர் இருக்கும் இடங்களிலெல்லாம் கோயில் கட்ட நினைத்தால், அது எல்லையற்ற செயலாக முடியும். அவரைக் காற்றிலும் மண்ணிலும் வானிலும் சூரியனிடத்தும் தண்ணீரிலும் மனிதரிடத்தும் மிருகத்தினிடத்தும் வழிபட்டாலும், அதுவும் பொருத்தமேயாம். "அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது" ஆதலின், பார்க்கும் பொருள் ஒவ்வொன்றையும் அவரது கோயிலாகக் கருதி வழிபடலாம். ஒரே கடவுள் பல இடங்களிலும் இருத்தல் போல அவர்க்கு வடிவங்களும் நாமங்களும் எண்ணிறந்தன உள. அனைத்தும் கடவுளது வடிவங்களாதலின், எவ்வடி

வத்தை வழிபடினும், அவ்வழிபாடு கடவுளையே சாரும். "ஆகாசத்தில் எவ்விடத்திலிருந்தும் விழுமழைநீர் எவ்வழியாகச் சென்றாலும், கடைசியில் சமுத்திரத்தைச் சார்வதுபோல, சகல தெய்வங்களை நமஸ்கரித்தாலும் ஒரே பரம்பொருளாகிய கேசவனைக் குறித்துச் செல்கின்றது" என்பது மெய்ஞ்ஞான மடைந்த இருடியரது வாக்கு. நாமமும் வடிவமும் வெவ்வேறாயினும் பொருள் ஒன்றேதான். "ஒருவனே தேவனும்" என்றார் திருமூல நாயனார். ஆதலின், பக்தர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்கு இஷ்டமான ஒரு வடிவத்தையும் நாமத்தையும் வணங்குவதில் கேடு இல்லை; அதனால் பெருத்த நன்மையும் உண்டாகும். ஓர் அரசன் பற்பல உடைகளை அணிந்து வெவ்வேறு பல அவசரங்களில் வெளியில் வந்தாலும், எந்த உடையில் எந்த அவசரத்தில் அவனை ஒருவன் கண்டாலும், அவன் அரசனைப் பார்த்தவனே யன்றோ? இன்னும் பற்பல அவசரங்களிலும் பற்பல உடைகளிலும் கண்டு, ஒவ்வொரு வேடத்திலும் அவனுக்கு ஒரு வேலைக்காரன் பணிவிடை செய்துவரலாம். அரசன் ஒருவனே பல உடைகளில் வெளிவருகிறான் என்பதை அறிந்த வேலைக்காரன் எந்த சமயத்தும் அவனுக்குப் பணிவிடை செய்யலாம். அதுபோல் ஒரே பக்தன் பற்பல வடிவங்களும் நாமங்களும் பெற்ற பல தெய்வங்களையும் வழிபடும் போதும், ஒரே தெய்வத்தின் பல வடிவங்களே என்ற உணர்ச்சியோடு வழிபடுதலும் பொருத்தமாகும்; அது குற்றமுமாகாது.

வினா:—(2) சத்சங்க அங்கத்தினர் ஒருவர் "ஒருபெண்ணுக்கு எவ்விதம் ஒரு கணவன்மீது ஆசையும் பக்தியும் இருக்குமோ அதேமாதிரி மனம் என்று சொல்லக்கூடிய இப்பெண்ணிற்கு ஏதேனும் ஒரு கடவுளைத்தான் நினைக்க வேண்டும்" என்று சொல்லுகிறார். இதன் கருத்தென்ன? இவ்விதம் செய்வது சரியா? முற்கேள்வியில் கூறியது சரியா? இது சரியா? இரண்டும் சரிதான் என்றால் எது மேலானது? —சு

விடை:—ஒரு பக்தன் வழிபடுகிற கடவுளுக்குத் தன்னை நாயகியாகவும், அக்கடவுளை நாயகனாகவும் கருதி வழிபடும் போது, அவனுக்குத் தான் கைக்கொண்ட முயற்சியில் (வழிபாட்டில்) மனம் ஒருமித்து உறைத்து நிற்கிறது. எவன் எத்தெய்வத்தை எந்த முறையில் வழிபட்டாலும் அத்தெய்வத்தின்மீது 'பிரேமை' உண்டாவதற்கு அதன்மீது நிஷ்டை ஏற்படவேண்டும்; மற்ற தெய்வங்களைக் கருதாது, ஒரு தெய்வத்தினிடத்திலேயே தனது நினைவையும் அன்பையும் செயலையும் சதா செலுத்திக்கொண்டு வந்தாலன்றி, அத்தெய்வத்தினிடத்து ஆழ்ந்து முதிர்ந்த பிரேமபக்தி யென்பது ஏற்படுவதில்லை. பிரேமை உண்டாகி வளர்ந்து முற்றினாலன்றி, பக்தியின் உயர்ந்த நிலையை அடைய முடியாது. அத்தெய்வத்தின் காட்சி ஏற்பட்டு அதனோடு இணைபிரியாது எப்போதும் உறையும் நிலைமை வரும்வரையில், ஒரே தெய்வத்தைப் பற்றிய சிந்தனைவேண்டும். மனம் ஏகாக்ர நிலையில் (ஒரு முனைப்பட்ட நிலையில்) இருத்தல் வேண்டும்; ஒரே சிந்தனையும் ஒரே தியான முறையும் ஒரே தியான வடிவமும் அவசியம். பிரேமையினால் உயர்ந்த நிலையை அடைய விருப்பம் உள்ளவர்க்கு இது இன்றியமையாதது. வழிபாட்டு முறையில் வெற்றி பெறுவதற்கு, பேராசைபிடித்த லோபிக்குப் பணத்தின்மீதுள்ள ஆசையும் ஒரு தாய்க்குத் தன் முதற் குழந்தையின்மீதுள்ள வாஞ்சையும், கற்புடைய நங்கைக்குக் கணவன்மீதுள்ள பக்தி விசுவாசங்களும் ஆகிய இம்மூன்றும் ஒன்றுகூடிய

பேரன்பு வேண்டும் என்பர் ஸ்ரீ ராம கிருஷ்ணர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தாம் யாதாவும் ஒரு தெய்வத்தை வழிபடும் போது, அவருடைய உள்ளத்தினின்றும் அத்தெய்வ மொழிந்த வேறு தெய்வ நினைவுகள் சிறிதும் எழா. அந்த ஒரு நினைவே உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து மனத்தைப் பற்றியிருக்கும். உடலையும் உள்ளத்தையும் தன்னையும் மறந்துநிற்கும் நிலை வரும் வரை, அத்தெய்வத்தின் காட்சியை முற்றும் தெள்ளத் தெளியப் பெறும் வரை, அவர் ஒரு நினைவிலேயே ஊன்றி யிருப்பார். எத்தெய்வமாயினும் மூன்றுநாளில் அதை ஐயம் திரிபறக் கண்டு, உயர்ந்த நிலையை அடைந்து விடுவார். இதுவே 'இஷ்ட நிஷ்டை'க்குச் சிறந்த இலக்ஷியம்; இந்த இஷ்ட நிஷ்டையின்றி எவ்வித ஞான அனுபவத்தையும் பெற இயலாது. கிணறு தோண்டி நீர் பெறும் ஆசையுள்ளவன் ஓரிடத்திலேயே நீர் காணும்வரை தோண்டிக்கொண்டே செல்லல் வேண்டும்; பல இடங்களில் சிறிது சிறிது தோண்டி, முயற்சியை இடையில் கைவிட்டு விடுவார், ஒருநாளும் நீர் காண மாட்டார்; அவர்களது முயற்சி வீணாவதன்றி முற்றுப்பெறாது. அதுபோல் எல்லாத் தெய்வங்களும் ஒன்றே என்னும் எண்ணத்தினால் மனம் ஒரு தெய்வத்தினிடத்தும் ஊன்றி ஈடுபடாமல், நுனிப் புல்லை மட்டும் மேய்ந்துவருமாயின், அம் மனம் இஷ்டநிஷ்டை யெனும் நிலையை அடைய மாட்டாது; அதனால் அது மெய்ஞ்ஞானத்தை எய்த முடியாது பரிதபிக்கும். ஆதலின் ஒவ்வொருவரும் ஞான இச்சை யுடையராயின், ஒரு ஞான குருவினது இன்னருளால், தமக்கு இயல்பாலும் பூர்வ ஜென்மப் பழக்கத்தாலும் ருசியாலும் ஏற்றதாயுள்ள ஒரு நெறியைக் கண்டு, அதில் முழுதும் ஈடுபட்டு நிற்றல் வேண்டும். இவ்வாறு ஈடுபடும் போது, பிற தெய்வங்களைப்பற்றிய ஆசையையும் ஈடுபாட்டையும் ஒழித்துவிடுதல் அவசியமாகும். கற்புடைய நங்கை கணவரல்லாத பிறரது நலனைச் சிந்தித்து, அவர் மீது ஈடுபட்டால், அது கற்புக்குக் குறைவாகுமன்றோ? இதைப் போன்ற மன உறுதியோடும், மாறாத நெகிழாத பிறழாத அன்போடும் ஒவ்வொருவரும் தமது இஷ்ட தெய்வத்தையே சிந்தித்தல் வேண்டும். இதுவே ஸத்ஸங்க அங்கத்தினரது கருத்தாகும் என்று தோன்றுகிறது; இதுவே வேதாந்தத்தின் விழுமிய கருத்துமாகும்.

ஒருவன் முத்தியை மட்டும் அடைய வேண்டுமாயின், இத்தகைய இஷ்ட நிஷ்டையொன்றே போதும். ஆனால் தற்காலத்தில் பலவகைப்பட்ட மக்கள் ஒன்று வாழவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ள போது, வெவ்வேறு தெய்வங்களை வழிபடும் மனிதரும் ஐக்கியத் தன்மையுடன் ஒரேமனதாக ஒத்துழைப்போடு வாழ வேண்டி யிருக்கிறது. இந்திய மக்கட்குள் வெவ்வேறு தெய்வங்களை வழிபடுவோரும் ஒன்றுபட்டு வாழ்தல் வேண்டும் என்பது மட்டுமல்ல; இந்து மதத்தினரும் கிறிஸ்து மதத்தினரும் புத்த மதத்தினரும் மகம்மதிய மதத்தினரும் நமது பாரத மா நாட்டில் ஒன்றுபட்டு வாழவேண்டியிருக்கின்றது. வெவ்வேறு இயல்புகளும் பழக்க வழக்கங்களும் ஞான சாதனங்களும் உடைய பல மனிதரை ஒன்றாகப் பிணைத்து, ஒரு தாய் நாட்டின் சோதர மக்கள் என்று உணரும்படிச் செய்வதற்கு ஒரு பெருஞ் சத்தி வேண்டும்; இது இல்லாதபோது நாட்டு மக்கள் துண்டுபட்டு வெவ்வேறாகப் பிரிந்து ஒற்றுமையின்றிப் பற்பல சண்டை சச்சரவுகட்கு ஆளாகி, ஸமூகத்தின் உட் புறத்திலும் வெளிப் புறத்திலும் எழும் பல துயரங்கட்கு உட்பட்டு வருந்துவார். ஆதலின் அத்தகைய

ஒன்றுபடுத்தும் சக்தியை ஒவ்வொரு நாட்டாரும் தமது தமது இயல்பிற்கு ஏற்றவாறு நாடிப் பெற்று நன்மை யடைவார். ஒரு தேசத்தாரை இவ்வாறு ஒன்றுபடுத்தக்கூடிய சக்தியே அந்த நாட்டு ஜனஸமூகத்திற்கு உயிராகும். இந்தச் சக்தியே ஜன ஸமூகத்தின் வளர்ச்சிக்கும் பலத்திற்கும் காரணமாகும். நமது பரதமா நாட்டு ஜன ஸமூகத்திற்கு அத்தகைய உயிர்ச் சக்தியால் அமைந்தது ஞான சக்தியே. இந்த ஞானமெனும் சக்திக்குக் குறைவு வருங் காலத்து ஜன ஸமூகமும் வளர்ச்சி யின்றித் தேய்ந்து வரும். தொன்று தொட்டு பரதமா நாட்டை ஒன்றுபடுத்தி வந்த இந்த ஞான சக்தியைக்கொண்டே, பிரிந்துபட்டுக் கிடக்கும் எல்லா மக்களை யும் மீண்டும் ஒன்றுபடுத்தல் வேண்டியதாயிற்று. இதற்காகவே, நமது நாட்டின் ஞான சக்தி தனது பலவகையான பண்டைய வடிவங்களெல்லாம் ஒன்றுசேர்ந்து, காலத்திற் கேற்றவாறு கோலம் தாங்கி, நமது நாட்டைப் புதிதாக உயிர்ப்பித்து வலுப்படுத்துதற்காக ஸ்ரீ ராமகிருஷ்ண ரெனும் திருவடிவத்தோடு அவதரித்தது. இப் பெரியார் பற்பல ஞான நெறிகளிலும் ஒவ்வொன்றாகச் சென்று, ஒவ்வொன்றின் வழியாகவும் உயர்ந்த நிலையை அடைந்தார். பற்பல தெய்வங்களையும் வழிபட்டு, எல்லாருடைய காட்சியையும் அருளையும் பெற்றார். முடிவில், ஒரு பரம் பொருளே பற்பல நாமங்களோடும் பற்பல உருவங்களோடும் முன் தோன்றிப் பற்பல அடியார்கட்கும் அவரவர்கட்கு வேண்டியவாறு அருள்புரிகின்றது என்பதை அநுபூதியால் உணர்ந்தார். "ஒன்றே மெய்ப்பொருள்; அதை ஆன்றோர் பலவாறாகப் பேசுவர்" என்ற வேத வாக்கியத்திற்கு ஓர் உயிருள்ள வியாக்கியானமாயிற்று அவரது வாழ்க்கை. இவரது அருளால் இந்தியாவிலும் பிற நாடுகளிலும் மதத் துவேஷமும் மதச் சண்டையும் மறைந்து வருகின்றன. எவ்வித உலகக் காரணங்களாலும் அழிக்க முடியாத ஒருவித ஒற்றுமை மக்கட்குள் கிளர்ந்து வருகிறது. இந்த ஒற்றுமை யென்னும் அமுதத்தின் சுவையை உணர்ந்தவர் ஸ்ரீ ராமகிருஷ்ணப்பெருமானது திருவடிகளைத் துணைக்கொண்டு மதத் துவேஷமின்றியும், அம்மட்டோ, எம்மதத்தின் மீதும் தெய்வத்தின் மீதும் பக்தியோடும் பணிவோடும் ஒழுகி வருகின்றனர். இவர்கள் பற்பல தெய்வங்களைப்பணியும் போது, ஒரு பகவானே பற்பல நாம ரூபங்களோடு தோன்றி அருள் புரிகிறார் என்பதை அறிந்து, எல்லா வடிவங்களிலும் தமது இஷ்ட தெய்வத்தையே காண்கின்றனர். இவர்கள் இந்தப் பரந்த விரிந்த நோக்கினால் தமது இஷ்ட தெய்வ நிஷ்டையைக் குலைத்து விடுவதில்லை; அதற்குச் சிறிதும் குறைவு வாராமலும், பல தெய்வங்களையும் வழிபட்டும் வருகின்றனர். இவர்கள் ஞான நெறியில் ஆழத்தை நாடுவதோடு விரிவையும் கைவிட்டு விடுவதில்லை. இந்த இலக்ஷியத்தை முழுதும் பின் பற்றினவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரே! பிறர்க்கு அந்நிலையை அநுபூதியிலும் எய்துவது மிக மிக அரிதாகும். ஆயினும்இயன்றவரை அதனை அநுபவத்தில் மெய்ப்பிக்க முயன்றாலும், அறிவினாலாவது பரந்த விரிந்த பாவனையை மேற் கொள்கின்றனர். ஆனால் இந்த மனோ பாவனை இஷ்ட நிஷ்டையைக் குலைத்தல் கூடாது. இத்தகைய புதிய ஒரு பாவனையில், முற்காலத்திலுள்ள கற்புடைய நங்கையின் பாவனைக்கு (அதாவது, இஷ்ட தெய்வத்தை நாயகனாகவும் தன்னை அத் தெய்வத்தின் கற்புடைய மனைவியாகவும் கருதி வழிபடுதல் என்னும் நிஷ்டைக்கு ஒரு சிறிதும் குறைவு ஏற்படாதபடிக்கும், ஆயினும் பறந்த மனோபாவனை

ஏற்படும்படிக்கும் (எல்லா தெய்வங்களிடத்தும் மரியாதையோடும் மேன்மையோடும், அவைகளை தன் இஷ்ட தெய்வத்திற்கு இழிவாகக் கருதாமலும், நடக்கும் படிக்கும்) இரண்டும் ஒன்றுக்கொன்று முரணாதபடி ஒருங்கே ஒன்றாகக் காணப் படுவதற்கும் சௌகரியம் வாய்ந்துள்ளது. பண்டைய காலத்தார் மனத்தைப் பெண்ணாகவும் இஷ்ட தெய்வத்தை அதன் நாயகனாகவும் உருவகப்படுத்தி இஷ்ட தெய்வ நிஷ்டையை வற்புறுத்தியருளினர். ஸ்ரீராமகிருஷ்ணரும், அக் கருத்துக்கு யாதொரு குறைவும் இழுக்கும் வராமலே, புதியதொரு கருத்தையும் சேர்த்து, அதை வேறொரு உவமையால் விளக்கினார். இது உலகத்திற்கே ஒரு புதுக்கருத்து; அதை அறிந்து பின்பற்றும் பேறுடையார் அவ்வாறு 'செய்க. அக்கருத்தாவது, மனம் எனும் பெண் தனது நாயகனாகிய இஷ்ட தெய்வத்துடன் தனிக்குடித்தனம் பண்ணாது, நாயகனுடைய குடும்பத்தாருடன் சேர்ந்து வாழ்கிறது. ஒரு பெண் நாயகனது குடும்பத்தில் வாழும்போது, நாயகனுக்கு மட்டும் அவள் பணிவிடை செய்வதில்லை; மாமனார் மாமியார் மைத்துனர் முதலிய உறவினரையும் இகழ்வாக நினைப்பதில்லை. தனது நாயகன்மீதுள்ள பேரன்பினால் அவனுக்கு உறவினராகிய எல்லார் மீதும் பேரன்பும் பெரும் பணிவும் செலுத்துகிறாள்; அனைவர்க்கும் மகிழ்ந்து பணிவிடை இயற்றுகின்றாள். இதனால் அவளுடைய கற்பிற்கு யாதொரு இழுக்கும் உண்டாவதில்லை. மற்ற உறவினரிடத்தும் பணிவோடும் சிரத்தையோடும் பழகிவந்தாலும், தன் நாயகனையே உயிர்த்துணைவனாகவும் தன்னுடன் ஏகாந்தமாக தனியறையில் துயிலுதற்குத் தனியுரிமை யுடையவனாகவும் கருதுகிறாள். அதுபோல் மனமும், பற்பல தெய்வங்களையும் ஞான சாதனங்களையும் காணும்போதும், அவைகளில் வெறுப்புக் கொள்ளாமலும், மதிப்பை ஓரளவுக்குக் காட்டியும், ஆயினும் தனது இஷ்ட தெய்வம் ஒன்றினிடத்தேயுள்ள நிஷ்டையை உறுதிப்படுத்தியும் வருதல் வேண்டும். இதனால் ஞானவாழ்க்கையின் முத்தியின்பமும் ஸமூக வாழ்க்கையின் ஒற்றுமை யின்பமும் ஒருங்கே கைகூடும். இதையே ஸ்ரீராமகிருஷ்ணர் தற்கால மக்கட்கு இலக்ஷியமாக எடுத்துக் காட்டியுள்ளார். இதனைப் பின்பற்றுவதனால் ஞான நிஷ்டைக்குக் கேடு வாராதிருப்பதோடு, உலக வாழ்க்கையிலும் ஒற்றுமை நயமும் வளர்ச்சியும் மேன்மையும் சாந்தியும் சமரசமும் தலை யெடுக்கும். பின்னதினால் முன்னதிற்குப் பெருத்த நன்மையுண்டு என்பதையும், அகவாழ்க்கையில் உள்ள சாந்தி புறவாழ்க்கையிலும் சாந்தியாகவும் சமரசமாகவும் அரும்பவேண்டும் என்பதும் வெளிப்படையல்லவா?

---

# இந்து மதத்தின் சிறப்பியல்புகள்

(ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள்)

## கர்மயோகம்

**கர்மத்தால்** கடவுளை அடைதல் என்னும் கர்மயோக மார்க்கத்தை இனி எடுத்துக் கொள்வோம். சமூகத்தில் வாழும் பல மக்களை நோக்குமிடத்து, ஏதோ ஒரு கர்மத்தில் ஈடுபட்டு உழைப்பதற்காகவே பிறந்திருக்கின்றனர் என்பதற்குச் சற்றேனும் ஐயமில்லை. அவர்கள் மனதானது சிந்தனை உலகத்தில் மட்டும் குவிந்து நிற்பதில்லை. அவர்களுடைய ஒரேயொரு சிந்தனையானது தூல உருக்கொண்டு, பார்த்துப் பரிசிக்கக் கூடியதாகக் கர்மத்தில் காணப்படுகின்றது. இதைச் சீர்ப்படுத்தும் ஒரு மார்க்கம் வேண்டப்படுகின்றது. நாம் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு கர்மத்தில் ஈடுபட்டிருக்கின்றோம். ஆனால், கர்மத்தின் இரகசியத்தை அறியாது பலர் தங்கள் ஆற்றல்களின் பெரும் பகுதியை வீணே செலவழிக்கின்றனர். கர்மயோகம் இதை விளக்கிக்காட்டி விடுவதுடன், கர்மத்தை எங்கு எப்படிச்செய்ய வேண்டும், கைக்கொள்ளும் கருமத்தில் நமது பெரும் பகுதியான ஆற்றலை எவ்வகையில் உபயோகப்படுத்தி அதிக பலனைத் தேடலாம் என்பதையும் அது கூறுகின்றது. இந்த இரகசியத்தோடு கருமத்துக்குப் பெரிதும் மாறாக இருக்கும் மற்றொன்றையும் நாம் கவனிக்க வேண்டும். அதாவது கருமம் மனவருத்தத்தையும் உண்டு பண்ணுகின்றது. சகல விதமான துயரமும் மனவருத்தமும் பற்றுக்கோட்டினால் உண்டாகின்றன. நான் கருமம் செய்ய விரும்புகிறேன்; மக்களுக்கு நன்மையைச்செய்ய விரும்புகின்றேன். நான் யார் யாருக்கு உதவி செய்தேனோ அவர்கள் சிறிதேனும் கடமைப்பாடுடையவர்களாக இராது எனக்கு மாறாகவும் வருகின்றனர்; இதன் பயன் மனவருத்தமே. இவைபோன்ற விஷயங்கள் ஜனங்களைக் கருமஞ்செய்ய விடாது தடுக்கின்றன. இவ்விதமான மனவருத்தமும் துயரும் பயத்தை யுண்டு பண்ணி, மக்களின் பெரும்பாலான முயற்சியையும் ஆற்றலையும் கெடுத்து விடுகின்றன. கர்மயோகம், கருமத்தின் பொருட்டு எப்படிப் பற்றுதல் இல்லாமலும், அதனால் யார் உதவி பெறுகின்றார் என்பதையும், எதற்காக என்பதையும் கருதாது கருமத்தின் பொருட்டுக் கருமம் எவ்வண்ணம் செய்ய வேண்டும் என்பதைப் புகட்டுகின்றது. தனது சுபாவமாதலால் கர்மயோகி கருமம் புரிகின்றான். தான் அங்ஙனம் புரிவது நல்லது என்று உணருவதால் அவன் அவ்வண்ணம் செய்கின்றான். இதைவிட வேறு குறிக்கோள் அவனுக்கு இல்லை. இவ்வுலகத்தில் கொடுக்கும் ஒருவனாக அவன் நிலை யுளது. எதையும் பெற்றுக்கொள்வதற்கு அவன் விரும்புவதில்லை. தான் கொடுக்கின்றான் என்பதை அவன் அறிவான்; அதற்குப் பிரதி உபகாரமாக எவற்றையும் நாடான். ஆகவே, துயரின் வலையினின்று தப்பித்துக்கொள்ளுகிறான். மனவருத்தம் தோன்றும்போதெல்லாம் பற்றுக்கோட்டின் தொடர்பாட்டால் என்று அறியவேண்டும்.

## பக்தியோகம்

அடுத்தாற்போல், ரசித்து உணரும் சுபாவமுடைய பக்தன் ஒழுக வேண்டிய

பக்தியோகம் இருக்கின்றது. அவன் கடவுளை நேசிக்க விரும்புகின்றான். அவன், பூஜா கிரியைகளிடத்து விசுவாசம் வைத்து, மலர், தூபம், தீபம், அழகான மண்டபங்கள், உருவங்கள் முதலியவற்றை உபயோகப் படுத்துகின்றான். அவையெல்லாம் தப்பானது என்று நீங்கள் கூறக்கூடுமா? நான் சொல்லவேண்டியது ஒன்று உண்டு. அதாவது, உலகத்தில் காணப்படும் அபாரமான ஆத்மஞான சித்தர்கள் யாவரும், ஐதீகமாய் வந்த பூஜாகிரியைகளால் மிகவும் வளம்படச் செய்யும் சமயவாதிகள் தங்களை அநுசரிக்கும் மக்கள் இடையே யிருந்து தோன்றுகின்றார்கள் என்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்திருப்பது நன்று. விக்கிரகமோ அல்லது கிரியைகளோ இல்லாது வேறு மார்க்கத்தில் நின்று கடவுளை வழிபடும் மதத்தார், சமயத்தில் காணப்படும் அழகான மகத்துவமுடையவற்றை எத்துணை இரக்கமு மின்றி நசுக்கி விட்டார்கள். அவர்கள் மதம், சமயாபிமானம் பொருந்திய வெறும் சாரமில்லா மார்க்கமாகும்.

உலக சரித்திரமே இதற்கு ஓர் நிலையான எடுத்துக் காட்டாகும். ஆகவே இக்கிரியைகளையும் ஐதீக வழக்கங்களையும் கண்டிக்காதீர்கள். ஜனங்கள் அவற்றை அநுசரிக்கட்டும்; விருப்பமுள்ளவர்கள் அவற்றை அநுசரிக்கட்டும். விரும்பத்தகாத இகழ்ச்சிச் சிரிப்புடன் "அவர்கள் மூடர்கள்; அவர்கள் அநுசரிக்கட்டும்" என்று பறை சாற்றுதீர்கள். அப்படியல்ல; ஆத்ம ஞானத்தில் மிகவும் ஆச்சரியப்படும்படியாக உயர்ந்து விளங்கும் பெரிய மகான்களை எனது ஜீவியத்துள் கண்டுள்ளேன். அவர்கள் யாவரும் இக்கிரியைகளைத் திறமையுடன் அநுஷ்டித்தே அங்ஙனம் தேர்ச்சி யடைந்தார்கள். அவர்கள் திருப்பாதங்களில் வணங்கி நிற்பதற்கு நான் அருக னல்லன்; அப்படியான யானோ அவர்களைக் கண்டிப்பது! இக்கருத்துக்கள் மக்கள் மனதில் எப்படி இயங்குகின்றன என்பது எனக்கு எவ்விதம் தெரியும்? எவற்றை நான் கொள்வது. எவற்றை விலக்குவது? போதிய சான்றுகள் இன்றி உலகத்திலுள்ள எல்லாவற்றையும் கண்டிக்க முயலுகின்றோம். உள்ளத்தை உயர்த்தும் மேன்மையான ஆவேசங்கள் கொண்ட எல்லா ஐதீக வழக்கங்களையும் மக்கள் வைத்திருக்கட்டும். ஏனெனின், மன வெழுச்சியோடு கூடிய சுபாவமுள்ளவர்கள் உண்மைப் பொருளின் நுணுகிய இலக்கண உரைகளை நோக்கமாட்டார்கள். அவர்களுக்குக் கடவுளென்றால் உண்மையாகக் காணப்படுபவர்; யதார்த்தமான வஸ்து அவர் ஒருவரே; அவரை அவர்கள் உணர்ந்து, கேட்டுக்கொண்டு நேசிக்கின்றனர். தங்கள் தெய்வத்தை அவர்கள் வைத்திருக்கட்டும். ஒரு மூடன் அழகிய சிலை யொன்றைக் கண்டவுடன் அது என்னத்தினால் செய்யப்பெற்றது என்பதை அறிவதற்காக அதை உடைக்கப் போனானாம். அதுபோல் உங்கள் தர்க்க வாதிகள் அவர்களுக்குப் பெரும் முட்கள்போன்று காணப்படுவார்கள். எவ்விதப் பிரதி கூலமுமின்றி எப்படி நேசிப்பது, அன்பின்பொருட்டு அன்பை எப்படி வளர்ப்பது, அன்பால் கடவுளை எப்படி வணங்குவது என்பதைப் பக்தி யோகம் கூறுமே யன்றி, சுவர்க்கலோகம், புத்திரர், செல்வம் முதலியவற்றை எவ்வாறு பெறலாம் என்பதைக் கூறாது. அன்பிற்கு அன்பே பிரதி கூலம் என்பதை அது புகட்டுகின்றது. அண்ணல் தாமே அவ்வன்பாக உளர்.

பக்தியோகம் கடவுளை சிருஷ்டிகர்த்தா வென்றும், எல்லாம் அறிபவரென்றும், ஈசனென்றும், அம்மை அப்பனென்

றும் கூறி பலவிதமான புகழ் மாலைகளைப் பாடும்படியாகச் சொல்லுகின்றது. அவரை உணர்த்தக்கூடிய உயரிய தொடர் மொழியோ, அல்லது அவரை மனதால் கருதக்கூடிய உயரிய கருத்தோ எது வெனின், அவன் அன்பின் உருவினன் என்பதே. அன்பு எங்கெல்லாம் காணப் படுகின்றதோ அங்கெல்லாம் அவன் காணப்படுகின்றான். "அன்பின் விதை எங்கெல்லாம் உண்டோ அங்கெல்லாம் ஈசன் உளன்." பாரியைப் பதி முத்தமிடு மிடத்தும், அம் முத்தத்தில் அவன் உளன்; மகனைத் தாய் கொஞ்சுமிடத்து அங்கும் அவன் உளன்; நண்பர் இருவர் கை பிடித்து அணைக்கு மிடத்தும் ஈசனே அன்புருவில் காணப்படுகின்றான். பெரி யான் ஒருவன் ஜீவகாருணிய மிகுதி யால் ஜனங்களுக்கு உதவ விரும்பு மிடத்து, ஈசன் அங்கும் தமது அளவிலா அன்பால் அவனிடத்திலிருந்து வள்ளற் றன்மையைக் காட்டுகின்றான். இருதயம் மலர்ச்சி யடையு மிடமெல்லாம் கடவுள் காணப் படுகின்றார். பக்தியோகம் இதையே புகட்டுகின்றது.

## ஞானயோகம்

கடைசியாக ஞான யோகியைப்பற்றி அறிவோமாக. அவன் ஒரு தத்துவ சாஸ் திரி, புத்திசாலி; பார்க்கப்படும் வஸ்து வுக்கு அப்பால் நிற்க அவன் விரும்பு கின்றான். இவ்வுலகத்தின் அற்பக் காரி யங்கள் அவனுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கா. தினசரி சம்விபக்கும் உண் டல் பருகல் முதலியவற்றிற்கப்பால் போகவேண்டுமென்பது அவன் கருத்து; ஆயிரக்கணக்கான சாஸ்திரங்களின் உப தேசங்களாயினும் அவனுக்கு மகிழ்ச்சி யைக் கொடுக்கா. விஞ்ஞான சாஸ்திரங் களும் கூட அவனைச் சந்தோஷப்படுத்த மாட்டா. இவை யனைத்தும் இச்சிறிய உலகத்தைமட்டும் முன்னுக்குக் கொண்டு வருகின்றனவே யன்றி வேறொன்று மில்லை. வேறென்ன தான் அவனுக்குத் திருப்தியைக் கொடுக்கக் கூடும். கோடிக் கணக்கான உலகத் திட்டங்களும் கூட அவனுக்கு மனச்சாந்தியைக் கொடுக்கா. அவை யனைத்தும் சம்சார சாகரத்தின் ஒரு திவலைபோன்று அவனுக்குத் தோன் றும்; இவை யனைத்தையும் விட்டு, எல் லாவற்றிற்கும் மேலான யதார்த்த வஸ் துவை அப்படியே உள்ளபடி கண்டு விபு வாயுள்ள வஸ்துவுடன் ஏகமாக இருக்க அவன் விழைகின்றான். கடவுளை அம்மை அப்பனாகவோ அல்லது சிருஷ்டிகர்த்தா வாகவோ, ரக்ஷிப்பவராகவோ அல்லது தோன்றாத் துணையாகவோ மட்டும் சொல்லுவது அவனுக்குப் போதுமான தல்ல. அவனுக்குக் கடவுள் உயிருக்கு உயிராகவும், ஆன்மாவுக்கு ஆன்மாவாக வும் காணப்படுகின்றார். அவன் ஆன் மாவே கடவுள். கடவுளை விடப் பிறி தொன்று இல்லை. அழியக் கூடியனவெல் லாம், தனது அங்கங்கள் ஆயினும், எல் லாம் தத்துவ சாஸ்திர நிர்ணயத்தால் பொடிகளாகிப் புறக்கணிக்கப்பட்டு நிற் கக் காண்கின்றான். கடைசியாக எஞ்சி நிற்பது கடவுள் ஒன்றுமட்டுமே.

ஒரு மரத்தில் இரு பட்சிகள், ஒன்று மேலும் மற்றது கீழுமாக இருந்தன. மேலுள்ளது அடக்கம், அமைதி, அழ குடன் தனது நிஜஸ்வரூபத்தில் ஆழ்ந்து இருந்தது. கீழுள்ளது முறையே இனிய பழங்களையும் கசப்புள்ள பழங்களையும் தின்று, தெற்றித் தெற்றி, ஒருகால் சந் தோஷித்தும் மறுநேரம் துக்கித்தும் ஒரு கிளையி னின்று மற்றக் கிளைக்குப் போய்க் கொண்டும் இருந்தது. சில நேரங் கழித்து அதிகம் கசப்பான கனி யைக் கொத்தித் தின்னும்போது வெறுப் படைந்து மேல் நோக்கிப் பார்த்தது.

அழகான சிறகுள்ள மேற் கிளையிலிருக்கும் பட்சி எவ்வகையான கனியையும் தின்னுது, எவ்வித சுக துக்கமோ இன்றி, அமைதியுடன் தன் நிஜஸ்வரூபத்தைப் பெற்றிருந்தது. கீழுள்ளபட்சி மேலுள்ள பட்சியைப்போல் இருக்க விரும்பியது. மறு நேரம் இதை மறந்து கனிகளைத் தின்றது. சில நேரங்கழித்துக் கசப்புப் பழமொன்றைத் தின்றது. பின் வெறுத்து, மறுபடியும் மேல்நோக்கிப் பார்த்தது. அதற்கு அருகிற் செல்ல முயன்று பின்னரும் மறக்கின்றது. மறுபடி மேல் நோக்கிப் பார்க்கின்றது. இப்படிப் பலதடைவைகளில் புசித்துக் கடைசியில் மேலுள்ள பட்சிக் கருகில் வந்தது. அதன் அழகான சிறகுகளினின்று வெளித் தோன்றும் ஒளி நாலு பக்கமும் வீசுவதைப் பார்க்கின்றது. உடனே மாற்ற மடைகின்றது. தன்னை மறந்து இருந்தது. அதற் கருகில் வருகின்றது. தன்னைப்பற்றிய நினைவுகள் எல்லாம் அப்பட்சி தன்னை யறியாமல் நீங்குவதைக் காண்கின்றது. கடைசியில் இரகசியத்தை அறிகின்றது. கீழிருந்த பட்சி அதன் சாயாரூபம். யதார்த்தத்தில், அது மேலுள்ள பட்சியைப்போன்றதே. கசப்புத் தித்திப்புள்ள கனிகளைத் தின்பதும், சுக துக்கங்களை அநுபவிப்பதும் எல்லாம் மாயா தோற்றம்; வெறும் கனவு. உண்மையான நிலையிலுள்ள பட்சி, அமைதி, அடக்கம் வெகு சோபை உள்ளதாகவும், துக்கம் சோகம் தீண்டப் பெருமலும் என்றும் ஒரே படித்தாக இருக்கின்றது. மேலுள்ள பட்சி கடவுள், ஈஸ்வரன்; கீழுள்ளது ஜீவன்; சம்சாரத்தில் இறங்கி நல்லது கெட்டதை அநுபவிக்கும். சில சமயங்களில் ஜீவாத்மாவிற்கு எல்லைக் கடங்காத வருத்தம் உண்டாகின்றது. ஒரு நேரம், சம்சாரத் தொல்லையில் ஈடுபடாமல் கடவுளைக் கிட்ட முயலுகின்றது. சில அநுபவங்கள் உண்டாகின்றன. இவ்வுலகம் வெறும் வெளி மயக்க மென அறிகின்றது. வாசனை புலன்களைப் பற்றிக் கவருகின்றது. சுகதுக்க சம்சாரத்தில் ஈடுபடுகின்றது. பிறகும் கவலை யேற்படுகின்றது. உள்ளம் திறந்து தெய்வ ஜோதியைக் கண்டு கடவுளைக் கிட்டுகின்றது. கிட்டி அணுக அணுகத் தனது சுபாவம் விட்டு நீங்குவதை அறிகின்றது. தானும் கடவுளும் ஒன்று என்று அறிந்தபின், "இப்பிரபஞ்சத்தின் பிராணன் என்றும், அணுவில் உளனென்றும், சந்திர சூரியரிலு முள னென்றும் நான் முன்னர்க் கூறியதை இப்போது நமது உயிரிலுயிராயும் அந்தர்யாமியாயும் இருக்கின்றுன். அல்ல! 'அதுவாகவே நீயிருக்கின்ருய்'" என்று சப்திக்கின்ருன். இதைத் தான் ஞான யோகம் புகட்டுகின்றது. வாஸ்தவத்தில் மனிதன் தெய்வ சம்பத்துள்ளவன் என்பதை அது கூறுகின்றது. சகல பிராணிகளின் ஏகத்துவத்தையும், இவ்வுலகத்துள்ள நாம் எல்லோரும் அப்பரம் பொருளில் கலந்துள்ளோம் என்பதையும் அது கூறுகின்றது. நிலத்தில் ஊரும் சிறு பிராணி முதல் நாம் பயபக்தி செலுத்தி வணங்கும் தெய்வ மீருக எல்லாம் அப்பரம் பொருளின் தோற்றங் களே யாம்.

## முடிவு

பலவித யோகங்கள் எல்லாம் சாதனையில் கொண்டுவர வேண்டியனவே யாம். அநுஷ்டானத்தி லில்லாதன வெல்லாம் நன்மையைப் பயக்கா. முதலில், அவற்றைக் கேட்டுப் பின் அவற்றைப்பற்றிச் சிந்திக்கவேண்டும். எண்ணங்களை யுக்தி கொண்டு ஆராய்ந்து மனதில் படும்படியாகச் செய்ய வேண்டும். அதன்பின் தெளிந்த புத்தியுடன் தியானிக்க வேண்டும்; கடைசியாக அதன் பாவனை பெற்று

அதுவாக அவை வருகின்றன. அதற்குப் பின் சமயம் வெறும் கொள்கை, கோட்பாடு, தர்க்க நிர்ணயம் போன்று இராது. அவையனைத்தும் நமது உள்ளத்தில் ஊடுருவிச் செல்கின்றன. தர்க்க நிர்ணயத்தால் தப்பான கொள்கைக்கு நாம் ஆளாகின்றோம். ஆனால், சநாதன தர்மம் என்றும் ஒரே படித்தாய் இருக்கும். அநுபவத்தில் கண்டு அறிவதே சமயம்; வெறும் பேச்சு, கொள்கை, கோட்பாடு எவ்வளவு அழகாயிருப்பினும் அதற்கு ஈடான தல்ல. அதுவாக இருப்பதே. சும்மா கேட்டு உடன்படுவதல்ல. சித்தம் எதைப்பற்றி நிற்கின்றதோ அதுவாக மாறி அதுவாவதேயாம். இதுதான் இந்து மதம்.

---

# நமது சிகர ஜோதி

இப்பகுதியில்:—'ஞானத்திற்குத் தயாராக்கிக் கொள்ளல்'—பல கோடி மக்கள் உய்யும்படிக்குப் பல அரிய சமய புத்தகங்கள் எழுதியவரும், சுமார் முப்பத்தாறு ஆண்டுகள் அமெரிக்காவிலிருந்து கொண்டு ஆத்ம தாகங்கொண்ட ஆயிரக்கணக்கான ஆண் பெண்பாலருக்கு ஞானமூட்டியவரும், ஜூன்மீ 21வயன்று இப்பூவுலகைவிட்டுப்பலபேர் மனம் வருந்த விண்ணுடு சென்றவருமான ஸ்ரீ பரமாநந்த சுவாமிகள் இக் கட்டுரையில் ஞான வாழ்க்கைக்கு நம்மைத் தயாராக்கிக்கொள்ளும் அவசியத்தை எடுத்துக் காட்டுகின்றார்கள். 'ஸ்ரீ ராமகிருஷ்ண லீலே'—வேறுபட்ட நிலையே உலக இயல்பு. மக்கள் சிலர் அதிகீழ் நிலையிலும் இன்னும் சிலர் அதிவுயர் நிலையிலும், மற்றுஞ் சிலர் இடை வழியிலும் உளர். அனைவர்க்கும் ஒரே வழி ஒத்ததாகாது. அவரவர்க்கேற்ற வழிகளைக் காட்டி உய்விப்பது அனைவராலும் இயலாது. அவதார புருஷராலேயே தான் இயலும். அத்தகைய மாகுரவர் ஸ்ரீராமகிருஷ்ணர் என்பதனை இக்கட்டுரையில் பல உதாரணங்களுடன் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. 'நன்மை தீமைகளும் அவைகளைக் கடந்து செல்லலும்.'—தீமையே இன்றி நன்மை மாத்திரம் இருக்கிறதென்பதும், நன்மையே இல்லாமல் வெறும் தீமை மாத்திரம் இருக்கிறதென்பதும் இயலாது. ஒன்றிருந்தால் மற்றொன்றும் இருக்கத் தான் செய்யும். இவையிரண்டும் இணைபிரியாதன. ஆனால் அவைகளைக் கடந்து அப்பால் செல்லமுடியும். அப்படிச் சென்ற பிறகு தான் ஆத்மஞான வாழ்க்கையில் முன்னேறுவதற்கு ஒப்பாகும். ஸ்ரீ எதீஸ்வராநந்த சுவாமிகள் இக் கட்டுரையில் இந்நன்மை தீமைகளைக் கடந்துசெல்லும் மார்க்கத்தினைத் தெளிவுபடக் கூறியுள்ளார்கள். 'அருளும் பொருளும்-ஒரு கதை.'—சில பக்தர்கள் வாழ்க்கையில் காணப்படும் சகிக்கவொண்ணுத கஷ்டங்கள், அவர்களிடமுள்ள கரடுமுரடான சுபாவத்தை அகற்றி அவர்களை ஆட்கொள்வதற்காகவே இறைவனல் கொடுக்கப்பட்டனவென்னும் உண்மையை ஸ்ரீமான் ரா. ராமகிருஷ்ணன் M.A.L.T, அவர்கள் இக்கதையின் மூலமாக அழகுபட சித்திரித்துக் காண்பித்துள்ளார்.

## ஜூலை மாதம் 4 ம் நாள்

அரசியலுலகத்தில் ஜூலை மாதம் 4-ம் நாள் அமெரிக்க நாட்டினர் சுதந்திரம் பெற்ற நன்னாளாதலின், அது இன்றும் அங்கு திருநாளாகக் கொண்டாடப்படுகிறது. ஞான உலகத்தில் ஜூலை மாதம் 4-ம்

நாள், ஸ்ரீ சுவாமி விவேகாநந்தர் உலகத் தளைகளை முற்றும் நொறுக்கி யெறிந்து விட்டு மஹா ஸமாதி யெய்தி, முற்றிய ஆன்ம சுதந்திரம் பெற்று, மொய்ம்புடன் விளங்கிய நன்னாளாகும். உலகத்தை உய் விப்பதற்கெனக் கருணையினால் உடலெ டுத்து வந்து, தாம் கருதிய பணிவிடை யைச் செவ்வனே செய்துமுடித்த பின், அவர் உடலை உதறியெறிய உன்னுதற்கா கத் தாமாகத் தெரிந்தெடுத்த நன்னாளா கும் அது. அவர்போன்ற உத்தம குரு வர் உலகிற் பிறப்பதும், சொற்ப கால வாழ்க்கையில் உலக முழுவதும் ஆன்ம சக்தியை நிரப்புவதும், தாம் குறித்து வந்த காரியம் முடிந்ததாக உணர்ந்த வுடனே தாமாக உடற் சட்டையைக் கழற்றி யெறிதலும்—இவை யெல்லாம் சிந்தித்துப் பார்ப்பவர்க்கு மிக அற்புத மாகவே காணப்படும். நன்கு பழுத்த அமிர்தக்கனி யொன்று மரத்தில் முற் றியவுடன், தாயாகிய பூமியின் கவர்ச் சிக்கு உட்பட்டுப் பூமியில் வீழ்ந்து மறை வதுபோல, இப்பெரியாரும் உலக வாழ்க் கையில் தோன்றி வளர்ந்து முற்றியபின் உரிய காலத்தில் அனைவர்க்கும் தாயாகிய இறைவரது மடியில் அமரும் ஆசையால் அவனை நோக்கி விரைந்துசென்று ஊனக் கண்ணிற்கு மறைந்து விடுகின்றனர். பூமியின்மீது விழும் பழம் வெளிப் பார் வைக்குச் சிதைந்து பூமிக்குள் மறைந்தா லும், நாளடைவில் பற்பல விதைகளைப் பூமியில் வேரூன்றச் செய்து, உலகிற்குப் பின்னாளில் தன் போன்ற பல மரங்களை நிலைநாட்ட ஏதுவாகின்றது. அதுபோல் பெரியார்களும் தாம் தூலக் கண்ணிற்கு மறைந்துபோனாலும், இறைவனோடு ஐக் கியமடைந்து, தம்மைப்போன்ற பிற மக் களை உலகத்தில் தோன்றச் செய்யும் ஏது வாகிறார்கள். அவதார புருடர்களது மஹா சமாதி சமயத்திற்கு முன் நிகழும் செயல் கள் மிக விசித்திரமாயிருப்பதன்றி, அன் பும் அருளும் ஞானமும் துறவும் சக்தி யும் இனிமையும் உச்ச நிலையிலிருப்பதை யும் விளக்குகின்றன. சமாதி யெனும் சூரியன் அவர்களது வாழ்க்கையில் பிற வியிலேயே உதயமாகி, வரவர உயர்ந்து மஹா சமாதி யெய்தும் காலம் வரும் போது உச்சநிலையினை அடைந்து, அதன் பின் திடீரென மறைந்து விடுகின்றது போலத் தோன்றுகிறது. ஸ்ரீ சுவாமி விவேகானந்தரின் மஹா சமாதியை ஒட் டிய சில அற்புத நிகழ்ச்சிகளை அது நிகழ்ந்த மாதமாகிய இதில், சற்று சிந்திப் பாம்.

ஸ்ரீ சுவாமி விவேகாநந்தரது அந்திம காலத்தில்—கடைசி இரண்டு மாதங்களி லும், சிறப்பாகக் கடைசி இரண்டு நாட் களிலும் நிகழ்ந்த பல செயல்கள் அவரது வரப்போகும் மஹா சமாதியை முன் னுணர்த்தும் தன்மை வாய்ந்தனவாயிருந் தன; ஆயினும் அவரைச் சூழ்ந்திருந்த அன்பர்கள் ஒரு சிறிதேனும் அதைப்பற் றிச் சந்தேகமும் கொள்ளாமலே அச் செயல்கள் நடந்தன. (1) சுவாமிஜீ தமது சன்னியாசிச் சீடர்களைக் காண ஆசை கொண்டு, தம்மைச் சிறிது காலமாவது காண வரும்படி அவர்கட்குத் தாமே அழைப்புக் கடிதங்களை எழுதினர். கட லைத் தாண்டிச் சென்றவர்கட்கும் கடிதங் கள் சென்றன. (2) அந்திம காலம் அணுக அணுகத் தாம் அதுவரை சுமந்து வந்த மடத்துக் காரிய நிர்வாகப் பொறுப் பைச் சிறிது சிறிதாகப் பிறர்க்கு ஒப் பித்துவிட்டுத் தாம் விலகியிருக்க முயன் றார். "குரு எப்போதும் தமது சீட ருடன் இருப்பதால் அவர்களைப் பல முறையும் கெடுத்துவிடுகிறார். ஒருதரம் மனிதர்கட்குப் பயிற்சி அளித்துவிட் டால், அதன்பின் அவர்களது தலைவர் அவர்களைத் தனியே விட்டுவிட வேண்

டும்; ஏனெனில், அவ்வாறு தனிமையா யிருந்தாலொழிய, அவர்கள் தாமாக வளர்ச்சி யடையமாட்டார்கள்" என்று அப்போது கூறினர். (3) மனதை உண் முகப்படுத்தித் தியானத்தில் ஆழ்ந்திருத் தலே சுவாமிஜீயின் முக்கிய தொழிலா யிற்று. ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருமுறை ஸ்ரீ சுவாமி விவேகாநந்தரைப் பற்றிக் கூறும்போது, "இவன் தனது வேலையை முடித்ததும் தான் இன்னான் என்பதை உணர்ந்து, உடற் சிறையிலிருக்கச் சம்மதி யான்" என்றார். சுவாமிஜீயின் மஹா சமாதிக்குச் சிறிதுகாலத்திற்கு முன்பு, அவரது துணைச் சீடர்களில் ஒரு முனி வர் அவரை நோக்கி, "சுவாமிஜீ, நீர் உம்மை இன்னாரென்று அறிந்து கொண்டீரா?" என்று கேட்டதும், "ஆம், நான் இப்போது அறிந்து கொண்டேன்" என்றனர். (4) விண் ணகம் செல்வதற்கு ஒரு வாரத்திற்கு முன் அவர் தமது சீடராகிய சுவாமி சுத் தாநந்தரைத் தமக்கு ஒரு வங்காளப் பஞ் சாங்கம் தரும்படிக் கூறினர். அதைப் பெற்றதும், அதன் பக்கங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தார்; பலமுறை ஏதோ ஒரு காரியத்திற்காக ஒரு நன்னாளைத் தெரிந் தெடுப்பதற்காக ஆராய்பவர் போலச் சிந்தித்து வந்தார். தாமாக நாலாவது ஜூலையைக் குறித்துக்கொண்டு அன்று தமது இச்சைப்படியே உடலைக் கழற்றி யெறிந்த விசித்திரம் சீடர்கட்குப் பின்னரே விளங்கிற்று. (5) இறுதிக்கு மூன்று நாட்கு முன்பு, அவர் திருமடத் தின் விசாலமான புல்வெளிக்கு அருகே மாலைவேளையில் மடத்தைச் சேர்ந்த ஒருவ ரோடு அங்குமிங்கும் உலாவிக் கொண் டிருந்தார். திடீரெனக் கங்கைக்குப் பக் கத்திலுள்ள ஓரிடத்தைச் சுட்டிக்காட்டிக் கருத்த முகத்தோடு "நான் இவ்வுடலை விடும்போது அதை அங்கே தகனம் செய்யுங்கள்" என்றார். (6) 1899-ம் ஆண்டு ஆகஸ்டு 10-ம் தேதி யன்று பாரிஸ் என்னும் ஊரில் சுவாமி அச்சுதா நந்தரிடம் தாம் ஐந்தாறு ஆண்டுகட்கு மேல் வாழமாட்டார் என்று கூறினர். டாக்காவில் 1991ம் ஆண்டில் தமது சீடர்கள் சூழ்ந்திருக்கும்போது ஒரு முறை அவர் கூர்ந்த நோக்கோடு "மிஞ்சி னால் இன்னும் ஓர் ஆண்டு உயிர் வாழ் வேன்" என்றும், அதற்குள் தாய அம்மையாரைப் பற்பல திவ்ய ஸ்தலங் கட்கும் அழைத்துச் செல்லவேண்டும் என்றும் திடீரெனக் கூறினர்.

ஜூன்மாதம் முடிந்தபோது, சுவாமிஜீ தமது இறுதிக் காலம் குறுகியதை நன் குணர்ந்தவராய் ஒழுகினர். அவருடன் கூடஇருந்த ஒருவரிடம், உடலை நீத்த நாளைக்கு முந்திய புதன் கிழமையன்று, 'நான் மரணத்திற்குத் தயாராக்கிக்கொள் கிறேன்' என்றார். "பெருந் தவமியற்றும் விழைவும் தியானத்தில் ஈடுபாடும் என் னிடம் குடிகொண்டுள்ளன" என்று மீண் டும் கூறினர். உலக நிகழ்ச்சிகளைப்பற்றி அவரது அபிப்பிராயத்தை அறிய விரும் பினும் அவர் "நான் இனி அக்காரியங் களில் தலையிடமுடியாது; நான் மர ணத்தை நோக்கிச் செல்கிறேன்" என்று உரைப்பார். 1898ம் ஆண்டில் அவர் அமரநாத்திற்குச் சென்றபோது இச்சைப் படி மரிக்கும் வரம் பெற்றதைக் கேட்ட வர்கள், அவரது மரண காலம் சமீபித்த போதும், அதைப்பற்றிய கவலையற்றிருந் தனர். அவர் உயிர் வாழ்ந்த கடைசி வாரத்துப் புதன்கிழமை யன்று ஏகாதசி யாயிருந்தமையின் அன்று தாம் உபவாச மிருந்து விட்டு, ஒரு சிஷ்யருக்கு உண வளித்துப் பின் கைகழுவ நீரும் வார்த் தார். அதைக் கண்ட சிஷ்யர் "சுவா மிஜீ! நாங்களன்றோ தங்கட்கு இத் தொண்டு செய்தல் வேண்டும்! தாங்கள்

எங்கட்கு இதுசெய்வது தகுதியல்லவே?" என்றனர்; அதற்கு சுவாமிஜீ "இயேசு நாதர் தமது சீடர்களின் கால்களைக் கழுவி னாரன்றோ?" என்று பதில் அளித்தனர். 'அத்தொண்டு செய்தது அவரது மரணத்திற்கு முன்புதானே' என்ற மொழிகள் சிஷ்யரது வாயில் எழுந்தன. ஆயினும் அவை வெளிவருமுன் அடங்கி விட்டன. இவ்வண்ணம் பலவாறாக அவர் பல ஜாடைகளை வெளியிட்டனரேனும், அவைகளை அறிய அவரைச் சூழ்ந்திருந்தவர்க்கு இயலாது போயிற்று. அவரிடத்துப் பெரியதொரு தெய்வஜோதி வீசியதுபோலிருந்தது. ஆயினும் அவர்க்கு மரணம் சமீபித்ததாக ஒருவரும் உணரவில்லை. அதிலும், அவர் உடலை நீத்த ஜுலைமாதம் 4 ந் தேதி யன்று, அதற்கு முன் பல ஆண்டுகளாக அவரிடத்துக் காண்பதற்கு அரியதாயிருந்த உடல் நலமும் வலிமையும் உடையராய் அவர் தோன்றியபோது, அவரது மஹா சமாதியைப் பற்றிய நினைவு சற்றும் எழ வழியில்லாதிருந்தது.

கடைசி நாளன்று அவர் இயற்றிய செயல்கள் ஒவ்வொன்றும் பொருள் நிரம்பியதாயும், அவர் வேண்டு மென்றே செய்தது போலும் இருந்தது. வழக்கத்திற்கு மாறான செயல்கள் பல அவரிடத்துக் காணப்பட்டன. அன்று காலை அவர் 8 மணி முதல் 11 மணி வரை தனியாக தியான அறைக்குட் சென்று, ஜன்னற் கதவுகளையும் மற்ற எல்லாக் கதவுகளையும் மூடி உள்ளே தாழிட்டுக்கொண்டு தியானத்தில் ஆழ்ந்திருந்தது அன்றுதான்; அதற்கு முன் ஒரு நாளும் அவர் மூடிய கதவுகளையுடைய அறைக்குள் தியானம் பண்ணியதே யில்லை. அன்று அவரது தியானத்தில் தேவியும் அவரது குரு தேவரும் ஆகிய இருவரது சந்நிதியில் அமர்ந்திருத்தல் வேண்டும் என்பது புலனாகின்றது. ஏனெனில் அது முடிந்து அவர் வெளிவந்ததும், உயர்ந்த ஞானமும் உயர்ந்த பக்தியும் ஒன்றாகக் கலந்த நிலையை வெளியிடும் பாடலொன்றைப் பாடினர். அப்போதும், பின்னர் முற்றிய தியான நிலையினின்றும் மனம் கீழிறங்கிய பின்னரும், தெய்வ ஜோதி திகழ, மனம் பெரிதும் உண்முகப்பட்ட நிலையில் நின்ற வண்ணமே திரு மடத்தின் முற்றத்தில் உலாவிக் கொண்டிருந்தனர். அவரது ஆழ்ந்த சிந்தனை அவரறியாமலே வாக்கின் மூலமாக வெளிப்படலாயிற்று. மெல்லிய குரலாயினும், அருகே யிருந்த சுவாமி பிரேமானந்தர்க்கு அது எளிதே கேட்கக் கூடியதாயிற்று. அவ்வமயம் அவரிடமிருந்து எழுந்த மொழிகளாவன:—"இன்னொரு விவேகாநந்தர் இருந்தாலன்றோ, விவேகாநந்தர் இயற்றியுள்ளதை அறிவார்; ஆயினும், பின்காலத்தில் எத்தனை விவேகாநந்தர் தோன்றுவார்!" சுவாமிஜீ தம்மை மறந்து உயர்வற உயர்ந்த ஞான பக்தி நிலையிலிருந்தாலன்றித் தம்மைப் பற்றிய பேச்சே எழுவதில்லை யாதலின், இதைக் கேட்ட சுவாமி பிரேமாநந்தர் திடுக்கிட்டார். தமது சகோதர சன்னியாசிகளோடும் சீடர்களோடும் ஒன்றாக உட்கார்ந்து உண்ணும் வழக்கம் அவர்க்குக்கிடையாது. எனினும், அன்று அனைவரோடும் உடனமர்ந்து உண்டனர். அன்றுதான் அவர் காளி பூஜையை மடத்தில் இயற்றும் ஆசையுள்ளவராயிருப்பதாகக் கூறினர். அன்று அவர் ஷட்சக்ர சாதனத்தைப் பற்றியும் குண்டலினியைப் பற்றியும் சுழிமுனையைப் பற்றியும் பேசி வந்தது அவர்க்கு அப்போது உண்டாயிருந்த அனுபவத்தைக் குறிப்பாகக் காட்டுவன போலிருந்தது. அன்று மாலை உலாவிய பின் சுவாமிஜீ தமது அறைக்கு மீண்டு கீழே உட்கார்ந்து கங்கையை நோக்கி அமர்ந்தார். தாம் குறித்துவைத்திருந்த

காலம் வந்தது போலும்! தியானம் எனும் சிறகுகளைக் கொண்டு அவரது ஆன்மா உயரப்பறந்து, நினைப்புக்கும் அதீதமாக, சென்று மீளவொண்ணாத அழியா உலகினைச் சார்ந்தது.

அவரது குருநாதர் அவரது தூக்கத்தையே பகவத்தியானமெனக் கூறுவார். அன்று கடைசியாக உறங்கிய உறக்கம் உயர்வற உயர்ந்த ஞான நிலைக்கு விழித்தெழுந்து செல்வதாக முடிந்தது. சுவாமிஜியின் உள்ளத்துச் சிறிது (மெல்லிய ஏடுபோன்று) மாயை மூடியிருந்தாலன்றி உலகப் பணி நடவாது என்பதை உணர்ந்திருந்த அவரது குருநாதர், அப்பணி முடியுமட்டும் அது இருக்கட்டும் என்று தேவியிடம் பிரார்த்தித்தார். அது நிறைவேறியதாக, பணி முடிந்ததும் மாயை மறைந்தது; ஆன்மா தன்னை உணர்ந்து விடுதலையடைந்தது. அவரது ஆன்மா ஞானத்தீயால் விழுங்கப் பட்டு உண்மைப் பொருளோடு ஒன்றுபட்டதற்கு அறிகுறியாக, அவரது உடலமும் தீயால் விழுங்கப்பட்டது. அப்பெரியாரது உடலைச் சூழ்ந்த தூய அக்னி கொழுந்து விட்டெரிந்து மறைந்ததும், அவரது அடியார்களது உள்ளத்தே ஞானப் பெருந்தீயும் வைராக்கியப் பெருந்தீயும் பற்றி எறியத் தொடங்கின. அன்பும் மெய்ஞ்ஞானமும் மரணத்தையும் வெல்லும் திறமை வாய்ந்த அழியாத சக்திகளாகுமன்றோ? மெய்ஞ்ஞானத்தின் எல்லையற்ற சோதி மரணமெனும் திரையையும் ஊடுருவிப்பாயும் இயல்புடையதென்பதைச் சீடர்கள் மெல்ல மெல்ல உணரலானார்.

சுவாமிஜீ உலக வாழ்க்கையை நீத்த பின் பல மாதங்கள்வரை, மடத்தைச் சார்ந்த துறவிகள் அனைவரது உள்ளத்தும், தவத்திலும் தியானத்திலும் ஆழமூழ்கும் அவா கொழுந்து விட்டெரிவதாயிற்று. தமது தலைவணங்கிய சுவாமிஜீயின் உபதேசத்தை உலக மக்கட்கு எடுத்தூட்டும் தகுதி தமக்கு வாய்ப்பதற்காகவும், அவரது கருத்துக்களையும் இலக்ஷியங்களையும் அனுபவத்தில் உண்மையாக்குவதற்காகவும், அவர்கள் பெரும்பாடுபட்டனர். ஸ்ரீ ராமகிருஷ்ணரது மற்ற துறவிச் சீடர்களும் நாளடைவில், தாமும் சுவாமி விவேகாநந்தரைப் போலத் தமது குருதேவரது ஞானலீலையில் தம்மால் இயன்ற அளவு கலந்து தொண்டு செய்தபின், தமது குருதேவரும் சுவாமிஜீயும் எப்போதும் வாழும் ஞான உலகிற்குச் செல்லுதல் வேண்டும் என்றும் உறுதி பூண்டனர்.

சுவாமிஜீ மஹா சமாதியடைந்த சமயத்து, அவரது ஆன்மசக்தி அவரது சகோதரத்துறவிகளது உள்ளத்தும் சீடர்களது உள்ளத்தும் புகுந்து, அவரவரது இயல்பிற்கேற்ப உள்ளத்தை நிலையாகப் பண்படுத்துவதாயிற்று. ஒரு சீடர் அவ்வமயத்து சுவாமிஜீயின் திருமுகத்தின் தரிசனம் பெற்றனர். மற்றொரு சீடர், ஸ்ரீ ராமகிருஷ்ணரே மீண்டும் உயிர் நீத்ததாகக் கனவுகண்டனர். வெகுதொலையிலிருந்த சில சீடர்கள், தாம் தியானத்தில் அமர்ந்திருந்தபோது, காரணமின்றித் தம்முள்ளத்தைப் பலமாகப் பிடித்தசைத்த ஓர் உணர்ச்சியைப் பெற்றனர். சிலர் தமது உள்ளத்தே ஒரு பெரும் பாழ் குடிகொண்டதாக உணர்ந்தனர். மற்றொருவர் காரணமின்றிக் கண்ணீர் பொழியலாயினர். மற்றொருவர் அவ்வமயம் தாம் ஞான சோதிக்கடலில் மூழ்குவதாக உணர்ந்து, அதைப் பொறுக்க முடியாத நிலையில் சாஷ்டாங்கமாகக் கை கூப்பி, "சிவ சிவ" என்னும் சொல்லோடு கீழே பணிந்தார். மயிலை மடத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ சுவாமி இராமகிருஷ்ணாநந்தர், சுவாமிஜீயே தம்முன் தோன்றி "சொஷி,

சொஷி! நான் உடலைக்காரியுமிழ்ந்து விட்டேன்" என்று அன்பார்ந்த வெற்றி நிறைந்த இனிய தெய்வீகக் குரலில் கூறி யதை உணர்ந்தார்.

அவர் உடலையுமிழ்ந்தது உண்மையெனி னும் அவர் அழியாத மெய்ப்பொருளோடு ஒன்றுபட்ட பெரியாரன்றோ? அவரது மரண காலத்துக்கு வெகு நாட்கு முன்னமே "எனது உடலைவிட்டு வெளி யேறுவதும், கிழிந்த சட்டையை எறிவது போல அதைக் கழற்றி யெறிவதும், எனக்கு நன்மையாகத் தோன்றலாம். ஆனால் நான் ஒருக்காலும் வேலை செய் வதை நிறுத்தமாட்டேன்? உலகமுழுதும் பரம்பொருளோடு தான் ஒன்று என் பதை உணரும்வரை, நான் மக்கட்கு ஞான ஆவேசத்தை ஊட்டிவருவேன்" என்று அவர் மொழிந்தார். அம்மெய் மொழிக்கு ஏற்பஞான ஆவேசம் உலகெங் கும்புகுந்து நிற்கிறது. "விடுமின்! விடு மின்! தெய்வீக இயல்பினை உணருமின்! எழுமின்! விழிமின்! குறிசாரும் வரை நில்லாது முன் செல்மின்!" என்ற ஞானப் பேரரவம் எங்கும் கேட்கின்றது. "போதுவீர் போதுமினோ!" மன முடையீர்! இவ்வொலியைக் கேட்டு, ஞான ஆவேசத்திற்கு ஆட்பட்டு உய் வடைமின்!

---

# மதிப்புரை

யோகம் செய்ய வேண்டுமா? (ரூ. 1-0-0)

இந்நூல் ஸ்ரீ அரவிந்த ஆஸ்ரமத்து அன்னை யின் சம்பாஷணைகளின் மொழி பெயர்ப்பு ஆகும். தமிழில் மொழி பெயர்த்தவர் திரு. பி. கோதண்டராமன் (M.A., B.L.) ஆவார். எளிய தமிழ் நடையில் எவர்க்கும் புரியும் வகையில் அமைந்துள்ள இந்நூல், பார்வைக்கு அழகாக, யோகசாதனம் செய்ய விரும்பு வோர்க்கு வேண்டிய செய்திகளோடு பி. ஜி. பால் கம்பெனியாரால் வெளியிடப்பட்டிருக் கின்றது.

ஒவ்வோர் அதிகாரத்திலும் பற்பல பகுதி கட்கும் தகுந்த தலைப்புக்கள் கொடுத்து அழ கிய முறையில் வரையப்பட்டுள்ளது. யோகம் எதற்கு, யோகப்பயிற்சியினிடையே ஏற்படும் தீங்குகளும் அவற்றைப் போக்கும் முறையும், மானிட அன்பும் தெய்வ அன்பும், கலைக்கும் யோகத்திற்கும் தொடர்புண்டா என்பன போன்ற முக்கியமான விஷயங்கள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. இத்துடன் ஸ்ரீ அன்னை யின் சில உயரிய மொழிகளும், நல்ல சில பிரார்த்தனைகளும் காணப்படுகின்றன.

யோகசாதனம் பயில்வோர்க்கு வேண்டிய செய்திகள் நிறைந்துள்ள நூலாகும் இது.

—(மா. ரா. மோ.)

# சமாசாரங்கள்

## ஸ்ரீ பரமாநந்த சுவாமிகளின் மஹாசமாதி

**ஸ்ரீ பரமாநந்த** சுவாமிகள் அமெரிக்காவில் போஸ்டன் என்னும் நகரத்தில் இருக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் ஜூன் மாதம் 21ட வெள்ளியன்று மஹா சமாதியடைந்த சங்கதி கேட்டுப் பலர் பெரிதும் வருந்துவர். அவர் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளது அருமைச் சீடராவர். 1906-ம் ஆண்டிலிருந்து அவர் அமெரிக்காவிலிருந்துகொண்டு அந்நாட்டு மக்கட்குப் பல வழிகளில் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரது அமுத மொழிகளை வாரி இறைத்து வந்தார். பலகோடி மக்கள் உய்யும் பொருட்டு அவர் சமய சம்பந்தமுள்ள பல புத்தகங்களுக்கு ஆசிரியராவர். ஆங்கிலக் கல்வி வாய்ந்து சமயப்பற்றுதலுள்ள பலர் அவர் புத்தகங்கள் மூலமாக அவரை அறிவர். அவர் கோலிச் சென்ற இறைவனை யடையும் மார்க்கம், அவர் தூல தேகம் இன்று இல்லாமற் போனபோதிலும் இனி வரப்போகும் பல் கோடி மக்களுக்கு உறு துணையாயிருந்து வாழ்க்கையின் இறுதி லக்ஷியத்தை அடையச் செய்யும் என்பது உண்மை.

## ஸ்ரீ மாதவாநந்த சுவாமிகள்

இந்தியாவிலும் வெளி நாட்டிலுமுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்கள் சங்கங்களுக்குக் காரியதரிசியான ஸ்ரீ மாதவாநந்த சுவாமிகள் சென்னையிலிருந்து புறப்பட்டு மேமாதம் 19-ம் தேதி ஞாயிறன்று இலங்கையிலுள்ள கொழும்புப் பட்டணத்துக்குப் போனார்கள். கொழும்பு ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துப் பக்தர்கள், நண்பர்கள், மெம்பர்கள் சார்பாக சுகாதார மந்திரி சர் பாரன் ஜெயதிலகர் தலைமையின் கீழ் சுவாமிகளுக்கு வரவேற்புப் பத்திரமொன்று அளிக்கப்பட்டது. கொழும்பிலும் அருகாமையிலும் உள்ள பல பழைய புத்தமடங்களை சுவாமிகள் பார்வையிட்டனர். மே திங்கள் 23-ம் தேதி சுவாமிகள் பாட்டிகோலா சென்றார்கள். பல பிரமுகர்கள் சுவாமிகளை புகைரத நிலையம் சென்று வரவேற்றனர். சுவாமிகளை ஊர்வலமாக அழைத்துச் சென்று அவ்வூர் பொது மக்கள் வரவேற்புப் பத்திரம் ஒன்று வாசித்துத் தந்தனர். மறுநாள் சுவாமிகள் அங்குள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்து அனாதை சிறுவர் விடுதி, சிவாநந்த வித்யாலயம் இவைகளைப் பார்வையிட்டனர். பிறகு சுவாமிகள் திருக்கோண மலை சென்று ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் காலேஜினைப் பார்வையிட்டார்கள். யாழ்ப்பாணம், அநுராதபுரம் முதலிய சில முக்கிய விடங்களுக்குச் சென்று பார்த்து வந்தார்கள். யாழ்ப்பாணத்திலும் சுவாமிகளுக்கு வரவேற்புப் பத்திரம் ஒன்று வாசித்துக் கொடுக்கப்பட்டது. ஜூன் 26-ம் தேதி சுவாமிகள் இந்தியாவுக்குப் புறப்பட்டு வந்துவிட்டனர். இலங்கையில் இருந்தபோது அவர் புனித தரிசனமும், ஆறுதல் வார்த்தைகளும் பலபேருக்கு பெரு நன்மை தந்தன.

---

## கடிதங்கள்

(முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசியக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணா 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப் பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணா 3

---

## ஜகஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணா 12. சந்தாதாரருக்கு அணா 10.

---

# ப ஜ ளு வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவதவசியம்.

விலை அணா 12.




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உ0 | விக்கிரமஹு ஆவணிமீ | பகுதி-அ


## பிரார்த்தனை

பேருல கீந்தவன் பெரியோன் பிரமன்
முற்பட முளைத்தவன் முற்பெரு கருவினன்
அறிவெலா முகிழ்த்த அறிவன் வேதன் ;

எங்குந் தங்கியோன் இறைவன் விண்ணு
ஒளித்தான் ஒளியான் வாசு தேவன்
புகுவன யாவும் புகலிடம் நாரணன் ;

மின்னொளி உயிரின் இருள்தீர் உருத்திரன்
மன்னொளி மல்கிய மகா தேவன்
உள்ளொளி உருவாய் உகைக்கும் புருடன் ;

எண்ணிய மூன்று கவடாய் முளைத்த
கண்ணிய பொருள்தான் ஒன்றே என்று
அறிதும் ஆய்தும் ஆய்து மறிதும் ;

நாளு மதுவேமை நல்லா றுய்த்து
எங்கு மதுவேமக் குறுதுணை வந்து
யாண்டு மதுவேமை உள்ளிருந் தூக்கவே.

—தைத்திரீய ஆரண்யகம்.
(x—1—24, :29, 30)

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

## அறத்தின் பயன்

அன்னத்தைப் பிறர்க்கு அளிப்பதனால், அதிகமான பலத்தை நாம் பெறுகிறோம் என்பதையும், பிறர்க்கு உடைகளை வழங்குவதினால் நமக்கு அழகு வளர்கிறது என்பதையும், தூய்மைக்கும் மெய்ம் மைக்கும் நிலையங்களை நிறுவுவதனால் நாம் பெருஞ் செல்வங்களைப் பெறு கிறோம் என்பதையும் அறிதல் அருமையேயாம்.

அறஞ் செய்வதற்குத் தக்க காலமும் தக்க முறையும் உண்டு. அறச் செயல் செய்யும் திறமையுடையவன் திறனமைந்த போர் வீரனைப் போலும், தெரிந்து வினை செய்யும் தீரனைப்போலும் உள்ளவன். அன் பும் அருளும் பொங்க, அவன் மிக்க பயபக்தியோடும் பணிவோடும் பிறர்க்கு ஒன்றை வழங்குவான்; அப்போது பகைமையையும், பொறாமையை யும், கோபத்தையும் முற்றிலும் ஒழித்து விடுவான்.

அறங்கிடந்த நெஞ்சுடையவன் முக்தி நெறியைக் கண்டறிந்தவ னாவான். அவன் ஒரு சின்னஞ் சிறு செடியை நடுபவனைப் போலா கிறான்; சிறு செடியை நடுபவன் பிற்காலத்தில் அதன் மூலமாகத் தனக்கு நிழலும் மலர்களும் கனியும் உறுதியாகக் கிடைப்பதற்குரிய வழியை நாடுகிறான். அதுபோல, அறத்தின் பயனும்; உற்றுழி உதவு வோனது ஆனந்தமும் அத்தன்மையதாம்.

தொடர்ந்து நிகழும் அன்பார்ந்த செயல்களால் மட்டும் மரண மின்மையை அடையக் கூடும். அருள், ஞானம், உண்மையான அறம் இம்மூன்றினாலுமே பூரணத்துவம் அடையப்படுகின்றது; உண்மையான அறமாவது, நம்மிடம் கொடுத்து வைக்கப்பட்டுள்ளதைப் பிறர்க்கு வழங்கி விடுதலல்ல. அதை நாம் பிறரோடு கூடிக் கலந்து அனுபவிப்பதேயாம்.

—பகவான் புத்தர்

# ஸ்ரீமத் பரமாநந்த சுவாமிகள்

(ஸ்ரீ விபுலாநந்த சுவாமிகள்)

சித்திரை வைகாசி மாதங்களிலே, பூஞ்சோலை நடுவிலே, குயிலானது தன்னை மறந்து பாடுகிறது. அப்பாடல் நமது செவியிற்பட நாமும் ஒரு கணப்பொழுது நம்மை மறந்து மகிழ்ச்சியிலே ஆழ்ந்து விடுகிறோம். பாடல் மனச் சஞ்சலத்திற்கு மருந்துபோன்றது. சஞ்சலம் மனத்தினை அலைத்துவிடும்; பாடலானது சிதறுண்ட மனத்தினை ஒன்று கூட்டும். ஆண்டவன் மீது பக்தி செலுத்திய பெரியோர்கள் திருவாய் மலர்ந்தருளிய பாடல்கள் தேவாமிர்தம் போன்றன. அவை மனத்துக்கு ஆறுதலைத் தருவதோடுகூட, உயிருக்குப் புதிய வல்லமையைத் தருகின்றன. சோர்ந்து கிடந்த பூஞ்செடியானது தண்ணீரைக் கண்டவுடனே சோர்வு நீங்கி மலர்ச்சியடைவது போல, அல்லலுற்ற உயிரானது பக்திரசமான பாடல்களைக் கேட்டவுடனே புதியதொரு மலர்ச்சியை அடைகின்றது. பக்திரசப் பாடல்களைப் பக்திமான்கள் பாடக்கேட்க வேண்டும். நமக்குப் பொருள் விளங்காத பாஷையிலே அவர்கள் பாடினாலும், அவர்களுடைய உள்ளன்பு நம்மை உருக்கிவிடுகின்றது.

பரமானந்த சுவாமிகள் சில வருடங்களுக்கு முன்பு கொழும்புக்கு வந்திருந்தார்கள். காலையிலே ஆண்டவனைத் தியானித்தபின்பு மதுரமான கீதங்களை இனிய குரலிலே பாடுவார்கள். அந்நாட்களிலே அவர்கள் பாடக் கேட்டிருந்தோராகிய நாங்களெல்லாம் ஒரு பொழுதும் மறக்கமுடியாத ஒரு பெரிய அநுபவத்தை யடைந்தோம். சமீபத்திலே சுவாமிகள் பரமபத நாதனுடைய திருவடி நீழலை அடைந்து விட்டார்கள் என்னுஞ் செய்தி செவிப்பட்டது. அது கேட்ட நாள் முதலாக அவர்களுடைய தண்ணொளி விளங்கும் திருமுகமும், இனிய குரலும், மெல்லென்ற நீர்மையும் கொழும்பிலே அவர்களைக் கண்ட நாளில் எவ்வண்ணம் மனத்தினைப்பற்றி நின்றனவோ, அதனிலும் பன்மடங்கு அதிகமாக மனத்தினைப் பற்றி நிற்கின்றன.

இந்த மாய வாழ்க்கையிலே கூடுதலும் பிரிதலும் ஒன்றின் பின் னொன்று மாறி மாறி வருகின்றன. உடலோடு தொடர்புடையவர்களைப் பிரிந்த துன்பத்தினும் பார்க்க உள்ளத்தோடு தொடர்புடையவர்களைப் பிரிகிற துன்பம் பெரிது. "நற்றமிழ் நூல்கற்றோர் பிரிவும், கல்லாதாரிணக்கமும், கைப்பொருளொன்றற்றோரிளமையும் போலக் கொதிக்கும் அருஞ்சுரம்" என்று ஔவைப்பிராட்டி கூறுகின்றாள். இங்குத் "தமிழ்" என்றது மதுரம் பொருந்திய பாடலை எனப் பொதுவாகக் கொள்ளலாம். பரமானந்த சுவாமிகள் பக்திமான் மாத்திரம் அல்ல; சுவாமிகள் ஓர் உத்தமக் கவி. ஆங்கிலத்திலே அழகிய கவிதைகள் பல அமைத்திருக்கிறார்கள். "உயிரின் இரகசியக் கதவு" (Soul's secret door), "உறக்கமின்றி (ஆன்ம நாயகனை)க் காதலித்திருத்தல்" (The Vigil), "வாழ்க்கையின் இசைமை" (The Rhythm of Life), "எனது (உள்ளத்திபைந்த) கொள்கைகள்" (My Creed) என்னும் பெயர்களோடு அவர்கள் இயற்றி வெளியிட்ட பாடற் றொகுதிகள் பல அழகிய செய்யுட்களால் அமைந்தன. அவர்களது கவிதை

கள் மாத்திரமல்ல வசன நூல்களும் கவிநயம் நிறைந்திருப்பன. ஏனெனில் அவர்களுடைய உள்ளமானது உண்மைக் கவி யூற்று என்று சொல்லத்தகுவது.

சுவாமிகளுடைய பிரிவாற்றுமையை ஒருவாறு ஆற்றுவது கருதி அவர்களுடைய நூல்களையும், சிஷ்ய சரித்திரத்தையும் சிலநாட் படித்தேன். அங்ஙனம் படித்தபின்பு, மனத்தினுதித்த சில எண்ணங்களை "விஜய" வாசகர்பொருட்டு இங்கு எழுதுகிறேன். இளமையில் இல்லாதது முதுமையிலே தோன்றுவதில்லை. "வளரும் காயைப் பிஞ்சிலே தெரியும்" என்றபடி, பின்னாளிலே விருத்தியடைகிற உயர் குணங்கள் இளமையிலே தோற்றத் தொடங்குகின்றன. சுவாமிகளுக்குப் பிள்ளைத்திருநாமம் "சுரேசர்" என்பது. சுரேசர் பாலப்பருவத்திலேயே பெற்றோரும் சுற்றத்தாரும் கேட்டு மனக்களிப்படைய இனிமையாகப் பாடுவார். பத்துக் குழந்தைகளுள்ள ஒரு பெரிய குடும்பத்திலே இவர் கடைசிக் குழந்தை. லாவண்யா (அழகி), ஹேமநளினி (பொற்றாமரை) என்னும் பெயர்வாய்ந்த சகோதரிமாரும் தாய் தந்தையரும் சுற்றத்தாரும் இவரை நிறைந்த அன்பினோடு பாராட்டி வளர்த்தார்கள். தந்தையார் தமது வயோதிகப் பருவத்திலே இவர் வாசிக்கக் கேட்டுக்கொண்டிருப்பது வழக்கம். அப்படி வாசித்த புத்தகங்களுள் ஒன்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவரின் உபதேசமொழிகள். அப்புத்தகத்திலே, "காலைப்பொழுதிலே தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்போர் புத்திமான்கள்; அப்பொழுதுதான் வெண்ணெய் நன்றாகத்திரளும். அதுபோல இளமையிலே ஆண்டவனிடத்து மனத்தினைச் செலுத்தினோர் அவனது திருவருளை எளிதாக அடைவார்கள்" என்னும் வாக்கியம் காணப்பட்டது. இதைக் கண்ட சுரேசருக்குத் துறவு வாழ்க்கையிலே மனஞ் செல்லத் தொடங்கிவிட்டது. பரமஹம்ச தேவரின் பிரதம சிஷ்யராகிய ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளைக்காண வேண்டுமென்னும் அவா உண்டாகியது. இவர் ஒன்பது வயதுச் சிறுவனாக விருக்கும்பொழுதே தாயை இழந்துவிட்டார். தந்தையாரிடத்து ஒருவாறு உத்தரவு பெற்றுக்கொண்டு விவேகாநந்தசுவாமிகளை வந்து கண்டார். அப்போது அவருக்கு வயது பதினாறு. இவருடைய இளமையை நோக்கித் திரு மடத்திலேயுள்ள பல சாதுக்கள் இவரைத் திருக்கூட்டத்திலே சேர்த்துக்கொள்ள மனம் ஒவ்வாதிருந்தார்களாயினும், ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் இவருக்கு நன்மொழி கூறிச் சுற்றத்தாருடைய தொடர்பை நீக்குவது கருதிச் சென்னப்பட்டணத்துத் திருமடத்திற்கு அனுப்பி வைத்தார்கள். அப்பொழுது திருமடம் "பனிக்கட்டி வீடு" என்னும் கட்டிடத்திலே யிருந்தது. இராமகிருஷ்ணாநந்த சுவாமிகள் மடத்துத் தலைவராக இருந்தார்கள். அப்பெரியார் சுரேசரை மாணவராக ஏற்று, ஆறு வருடம் தம்முடன் வைத்துக் கல்வியூட்டியும், சாதனை, தவம் என்னும் இவற்றைப் பயிற்றியும் இவரைத் தகுதியுடையவராக்கினர். 1902-ம் ஆண்டு ஜனவரி மாதத்திலே ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளிடத்துச் சன்னியாச தீக்ஷை பெற்றுச் சுரேசர் பரமானந்தர் என்னும் நாமத்தைத் தாங்கினர்.

இவர் திருமடத்தைச் சேர்ந்த நாட்களிலே இனிமையாகப் பாடுதலைக் கேட்டுப் பிரமாநந்த சுவாமிகள் இவரை "வசந்த கோகிலம்" அதாவது "இளவேனிற்காலத்துக்குயில்" என்று பாராட்டினர். அந்தப்பெயர் இவருக்கு நிலைபெற்றிருந்தது. பெரியோர்கள் இவரை "வசந்தா என்று"

அன்பினோடு அழைப்பது வழக்கம். அப் பெயருக் கியைய இவரும் எப்பொழுதும் முக மலர்ச்சியோடு காணப்படுவார். சந்நியாசம் பெற்ற பின்பும் சென்னைத் திரு மடத்திற்குத் திரும்பிவந்து, சில ஆண்டு இருந்து, பல கல்வித் துறைகளினுந் தேர்ச்சியடைந்து, 1906-ம் ஆண்டு டிசம்பர் மாதம் அமெரிக்காக் கண்டத்திலுள்ள "நியுயார்க்" நகரை யடைந்து, அங்குள்ள பக்தர்களுக்குப் போதனையினாலும் சாதனையினாலும் மேலான ஞான உண்மைகளை உணர்த்தத் தொடங்கினர். முப்பத்து நான்கு வருடம் ஓயாமல் உழைத்துக் குருதேவருடைய அமுத வாக்கியங்களை மேனாட்டாருக்கு விளக்கி, பல ஆச்சிரமங்களை நிறுவிப் பலநூல்களை யெழுதி, பல துறையிலும் நமது தாய் நாட்டிற்கு விளக்க முண்டாக்கித் தமது அறுபதாவது வயதிலே கடந்த ஜூன் மாதம் 21ந் தேதியன்று இகவாழ்வினை நீத்தார்.

வட அமெரிக்க ஐக்கிய நாட்டிலே "பாஸ்டன்" (Boston), "கோஹசெட்" (Cohasset) என்னும் இடங்களிலேயுள்ள ஆச்சிரமங்களும், கலிபார்ணியா (California) விலுள்ள ஆநந்தாச்சிரமும் இவரால் ஸ்தாபிக்கப்பட்டன. நாம் முன்பு கூறிய செய்யுட்டொகுதிகளும் "பக்திமார்க்கம்" (The Path of Devotion) முதலாகிய வசன நூல்களும் இவராலே ஆக்கப்பட்டன. "பக்தி மார்க்கம்" என்னும் சிறந்த நூலே இவர் முதன் முதல் ஆக்கிய நூல். இந் நூலின் முதலதிகாரத்தின் மொழி பெயர்ப்பு "விஜயத்தில்" வெளிவரும். இவருடைய நூல்களெல்லாம் பக்திரசந் ததும்புவன. "உயிரின் இரகசியக் கதவு" என்னும் பாடற்றொகுதியின் முதலிலே இவர் சொல்லுவன:

நிவேதனம்

'அன்புச் சுடரை என்னுடைய இருதயத்திலே உமது திருக்கரங்களினாலே கொளுத்தி வைத்தீர்.

எனது உயிரிலிருந்து பெருக்கெடுக்கின்ற வார்த்தைகளை உமக்கு நிவேதிக்கின்றேன்.

உமது திருவடிகளின் பரிசத்தினாலே எனது ஆகம் பரவசம் நிறைந்து நின்றது; அந்த மெல்லிய திருவடிகளுக்கு என் உள்ளத்தின் அந்தரங்கமான இரகசியத்தைஅர்ப்பணஞ் செய்கின்றேன்.

பாடலிசைக்கின்ற பரிசுத்தமான வரத்தைத் தேவரீர் எனக்கு அருளினீர்;

எனது உள்ளமாகிய வயலிலே என்றும் கெடாத அமிர்த விதை யொன்றினைத் தேவரீர் நாட்டினீர்;

அது பூத்தது; பூ உமக்கே உரியது; விளைவும் உம்முடையதே;

ஆம், வாழ்க்கையின் கனிவு அனைத்தும் என்றென்றைக்கும் உமக்கே யுரியன.'

* * *

அன்பர்கள் பொருட்டாக இன்னும் சில பாடல்களின் மொழிபெயர்ப்பினைத் தருகின்றேன்.

* * *

வரையாது கொடுக்கும் வள்ளல்

'இரவாதவர்களுக்கும் வரையாது கொடுக்கின்ற வள்ளலே,

அந்தமில்லாத ஆனந்தத்தை எனக்கு அருளினீர்;

தேவரீரது திருவுள்ளத்துக்குச் சமீபமாக என்னை இழுத்துக் கொண்டீர்;

ஆம், கருணாகரனே, தேவரீரது மந்திரத்தினாலே என்னைப் பீடித்த கவலைகளெல்லாம் அகன்று போயின.

தேவரீரது திருநோக்கத்திற்குத் தகுதியான பொருளை நிவேதிப்பதற்கு என்ன வலிமை எங்களிடம் உண்டு?

தேவரீருடைய அன்பின் ஒளியானது இடைவிடாது பிரகாசிக்கும் வண்ணம் எங்களது இருதயத்தைப் பரிசுத்த மாக்க எங்களால் முடியுமா ?
தாழ்ந்தவரிடத்திலே தேவரீரது கருணை என்றும் பரவி நிற்கும் அன்றோ ?
தாழ்மையான எங்கள் இருதயத்தைத் தேவரீர் முன்னிலையில் வைக்கின் றோம் ;
தேவரீரது அளவிறந்த கருணையிலே எங் களுக்கு நம்பிக்கையுண்டு ; வேறு என்ன தகுதி எங்களிடமிருக்கிறது ?
வேலையிலும் விளையாட்டிலும் எப்பொழு தும் தேவரீரது கருவிகளாக எங்களைச் செய்வீராக.
தேவரீரது பாதுகாப்பிலே நாங்கள் இயங் குவோமாக.'

நித்தியானந்தத் தீவு

'நண்பரே நீர் என் அருகிலே இருக்கும் பொழுது அடங்கா மகிழ்ச்சி யடை கிறேன்.
உமது எழுதவொண்ணுத அழகினை நோக் கிப் பேச்சிழந்து மௌனமா யிருக் கிறேன்.
நீர் எப்பொழுதும் மௌனமா யிருக்கி றீர் ; ஆனல் உமது குரல் பிரபஞ்சத் தின் இனிய இசையாகத் தொனித்துக் கொண்டே யிருக்கிறது.
பாதுகாக்கின்ற அன்பானது தேவரீரிடத் திலே உண்டு என்னும் நம்பிக்கையி னுலே எனது இருதயம் துணிவுபெறு கின்றது.
நீர் மாத்திரம் என் அருகிலே இருந்தால் நான் கவலையினல் ஒருபொழுதும் அழ மாட்டேன்.
தேவரீருடைய திவ்விய சந்நிதானமே பூரணமான வாழ்க்கையென்றும், இடை யருத சாந்தமென்றும், (கவலைக்கட லின் மத்தியிலே) நித்தியானந்தமய மான தீவு என்றும் நான் அறிவேன்.'

என் உயிர்க்குயிர்

'ஆ என் இன்னுயிர்க்கு உயிரே, உம் மைக்காண வொண்ணுத பொரு ளென்று ஏன் கூறுகின்றூர்கள் ?
ஆ என் ஆவியின் ஆவியே, உம்மை அறிய முடியாத பொருளென்று ஏன் கூறு கின்றூர்கள் ?
ஆ என் இருதயத்தின் இருதயமே, உம்மை நினைவுக் கெட்டாத பொரு ளென்று ஏன் கூறுகின்றூர்கள் ?
நான் அறிவில்லாப் பேதை யென்பது கருதியோ ஏழையேன் முன்னிலையிலே இந்த எளிமைக் கோலத்தோடு வந்து நிற்கின்றீர் ?
திக்கற்றவனுக்குத் துணைபுரிவது கரு தியோ, இந்தத் தாழ்மையான இரு தயம் தேவரீரை அறிந்து கொள்ளும் படி செய்தீர் ?
உம்மை, அறிய முடியாத பொருள், அகன்ற பொருள் என்று நான் ஒரு பொழுதும் எண்ணமாட்டேன் ; நீர் எனது சொந்தப் பொருள், நிறைந்த அன்புடைய பொருள், அச்சமின்றி நான் அணுகுதற்குரிய பொருள்.'

என் இருதயம் திறக்கப்பட்டிருக்கிறது

'உமது முன்னிலையிலே என் முழுக்குர லோடும் பாடுவேன், என்னை முற்றி லும் இழந்து நிற்பேன்.
முன்பு தேவரீர் என்னைக் கேட்ட பொழுது, "நான்" என்ற முனைப்பி னுலே நாணம் என்நெஞ்சிற் புகுந்தது ;
ஆனல் இப்பொழுது தேவரீரது மாருத அன்பினலே எனது இருதயம் திறக் கப்பட்டிருக்கிறது.
வீணிலே கழிந்துபோன காலங்களை நினைத்து நான் கவலையுறுகின்றேன்.
தெய்வீக மன்னிப்புக்கு இடமான தயா பரனே, தேவரீரது முன்னிலையிலே பாடும்படி தேவரீர் என்னை மீட்டும்

அழைத்திருக்கிறீர்.
எனது இருதயம் மகிழ்ச்சியினாலே நிறைந் திருக்கிறது.
தேவரீரது குரலின் இசையே என் பாடலுக்கு இசையைத் தருகிறது; தேவரீரது வார்த்தையே என்வாயினின்றும் வெளிவருகிறது; இதனை யான் இவ்வளவு காலமும் அறியாதிருந்தது எத்துணை ஆச்சரியம்.
"நான்", "எனது" என்னும் எண்ணமானது மனிதவாழ்க்கை யென்னும் சிறையிலே என்னை இதுவரையும் பந்தித்து வைத்தது.
தேவரீரது மெல்லிய பரிசத்தினாலே என்னைக் கட்டியிருந்த சங்கிலித்தளையெல்லாம் உடைந்துபோயின.
எனது ஆவி நிறையும் வரையும் தேவரீருக்கு அருகிலே நான் இருப்பேனாக.
இனிமேல் என்றென்றும் தேவரீருடைய திருவடியிலே நான் கட்டுண்டு கிடப்பேனாக.'

## என் ஏழ்மையான குடிசை

'ஆ என் ஆன்மநாயகரே, என்னை நாடி நீர் வந்தீர்; ஆதலினாலே என் நெஞ்சம் நிறைவா யிருக்கிறது.
நான் தனியே யிருந்தேன், துணையற்றிருந்தேன்; இந்த ஏழைமையான குடிசைக்குத் தேவரீரை அழைக்க மனந் துணியாதிருந்தேன்.
ஆனால், அற்புதமான காதலரே, நீர் எனக்குத் தைரியத்தைத் தந்தீர்.
என் வீட்டுக்கு வருவதாகத் தேவரீர் சொன்னது முதல், நான் அதைப் பெருக்கித் துடைத்துக் காட்டுப் பூக்களினால் அலங்கரித்து வைத்தேன்.
என்வீடு வெறுமையாயிருந்தது; இப்பொழுது அது நிறைவுற்றிருக்கிறது.
என் பூக்கள் வாசனையற்றிருந்தன; இப்பொழுது அவை வாசங்கமழுகின்றன.
உலகத்திலுள்ள மாளிகைகளையெல்லாம் விலையாகத் தந்தாலும், நான் என் குடிசையை மாற்றிக்கொடுக்க மாட்டேன்.'

## அகங்காரன்

'அகங்காரனே, நீயும் உன் தோழர்களும் இனிமேல் என் வீட்டினுள்ளே நுழையாதீர்கள்;
இது இப்பொழுது எனது அரசருடைய வீடு.
அவருடைய சேவகர்கள் இதனைக் காப்பாற்றுகிறார்கள்; இனிமேல் நீங்களெல்லாம் இந்த நாட்டிற்கு வெளியே நிற்க வேண்டும்.
நீ முதலிலே என் வீட்டிற்கு வந்தபொழுது நண்பனென்றெண்ணி நான் உன்னை நம்பினேன்; உன்தோழர்களையும் நம்பினேன்.
ஆனால் நீ எனக்கு நண்பனல்ல.
உன்னுடைய முரட்டுக்குரல் எனக்குத் துன்பத்தை விளைக்கின்றது.
சுயநல நினைவு, வீண்பெருமை, பொருட்பற்று என்னும் இவற்றை யெல்லாம் நீ கொண்டு வந்தாய். இனிமேல் என் வீட்டுக்குள் வராதே; இது ஆண்டவனுடைய வீடு; இது பரிசுத்த தேவாலயம்.'

## பாவத்துக்கும் துன்பத்துக்கும் நன்றி கூறுதல்

'பாவம் உன் நெஞ்சைப் பணிவிக்குமானால், அது உன்னை ஆண்டவனுக்குச் சமீபமாகக் கொண்டு போகுமானால் நீ பாவத்திற்கு நன்றி கூறு.
துன்பம் உன் இதயத்தைப் பரிசுத்தப் படுத்துமானால் நீ அதற்கு நன்றி கூறு.
அதன் வரவை ஏற்றுக்கொள். நீ துணையின்றித் தனித்து நின்றால் மனச்சந்தோஷமா யிரு.

ஏனெனில் அப்பொழுது ஆண்டவன் உன்னிடம் வருவான்.

யார் தனித்திருக்கிறார்களோ அவர்களை ஆண்டவன் நேசிக்கிறான்.'

அன்பு வெற்றிதரும்

'அன்பு உன்னுடைய துன்பங்களை யெல்லாம் வெல்லும்;

அன்பு உன்னுடைய காரியங்களைக் குணப்படுத்தும்;

அன்பு உனது கறைகளை நீக்கிச் சுத்தமாக்கும்;

அன்பு உனக்குச் சமாதானத்தைக் கொண்டுவரும்.

அன்பு உனக்கு ஒளியைத் தரும்;

அன்பு உனக்கு விசுவாசத்தையும் நம்பிக்கையையும்தரும்.

அன்பு உனக்கு ஆனந்தத்தைத்தரும்;

அன்பு உன்னை நல்வழியில் நடத்தும்;

அன்பு உன்னைப் பாதுகாக்கும்;

அன்பு உன் ஆன்மாவில் உறைவதாக.

அன்பையீனே, அன்பைப்பற்றிப் பேசு;

அன்பைக் கனவுகாண், அன்பைப் பாடு.

அன்பு உன் வாழ்க்கையிலே அரசு புரிவதாக.'

---

# எப்பொழுதும் இளமையோடு இருக்கலாம்

(சுவாமி சித்பவானந்தர்)

மாந்தரது விருப்பம்

உலகுக்குப் பணியாற்றுவதில் கிழவனார் ஒருவர் பரமபிரியம் உடையவராயிருந்தார். சுயநலம் கருதாது தொண்டு புரிதற்கு ஒப்பாகச் சுவர்க்க பதவியையும் சீர்தூக்க முடியாது என்பது அவருடைய கருத்து. சேவையின் மூலம் மனிதன் அடையக் கூடிய சீர்மையை அவர் விரித்துரைக்கலானார். பல பேச்சுகளுக்கிடையில், "நான் இன்னும் நாற்பது வயது இளையவனா யிருப்பேனாகில் எனது வாழ்க்கையையே அடியோடு மாற்றியமைத்து விடுவேன்," என்று அவர் இயம்பினார். அவருடைய சொல்லுக்குச் செவிகொடுத்துக்கொண்டிருந்த மற்றொரு பெரியார், "மன அமைப்பிலும் நாற்பது வருஷம் பின்நோக்கிச் செல்ல விரும்புகின்றீரா?" என்று வினவினார். இக்கேள்வியைக் கிளரியாராய்ந்த கிழவனாரது ஆர்வம் கொஞ்சம் தடைப்பட்டது. அத்தனை வருஷங்களுக்கு முன்பு தாம் கொண்டிருந்த மனப்பான்மையை அலசிப்பார்த்த பின்பு அவருக்கு அதில் கொஞ்சமேனும் விருப்பமுண்டாகவில்லை. ஆயினும் மனதில் குறையொன்றுமில்லாத இளமை வேண்டுமென்பதே அவருக்கிருந்த அவா.

மானிடர் அனைவர்க்கும் இத்தகைய ஆசையுண்டாவது இயல்பு. ஒரு நிபந்தனைக்கு உட்பட்ட இளமையை அவர்கள் வேண்டுகின்றனர். தாங்கள் பெற்ற அறிவை அவர்கள் இழந்துவிடலாகாது. அது வளர்ந்து கொண்டே போகவேண்டும். அறிவில் பெரியோர்களாகவும் உடல் அமைப்பில் யாண்டும் யௌவன தசையையுடையவர்களாகவும் இருக்க அவர்கள் விரும்புகின்றனர். இளமையானது எழில், உற்சாகம், ஆற்றல் ஆகியவைகளோடு கூடியது. அதன் மேன்மையை எண்ணிப் பார்க்கின்ற யார்தான் அதனிடத்துகாமுறாதிருப்பர்? அத்தகைய திட்டம் திரும்பவும் தங்களுக்கு வருமாவென்று முதியோர் மயங்குவதில் வியப்பொன்றுமில்லை.

இளமை தெய்வத்தன்மையோடு கூடியது. அதன் மகிமையை உள்ளபடி உணர்பவர் உண்மையில் தெய்வத்தன்மையை உணர்கின்றனர். வானவருலகம் எல்லாராலும் வேண்டப்படுகிறது. ஏனென்றால் அதுவே சுகங்களுக்கெல்லாம் இருப்பிடம். அங்கு வசிப்பவர் யாண்டும் யௌவனத்துடன் மிளிர்கின்றனர். மூப்புக்கு ஆங்கு இடமில்லை. சந்ததமும் இளமையோடிருப்பவரே சுவர்க்க வாசிகளாகிய தேவர்போன்று ஆகின்றனர். இளமையே சுவர்க்க பதவிக்கு ஒப்பாகிறது. ஆதலால் அது எல்லாராலும் பெரிதும் வேண்டப்படுகிறது.

## உடலுக்கும் உள்ளத்துக்கும் உள்ள இணக்கம்

உள்ளம் அல்லது மனதை உடையவன் மனிதன். உடல் அமைப்பை முன்னிட்டு ஒருவனைப் பெரியவன் அல்லது சிறுவன் எனலாகாது. பெருமைக்கும் சிறுமைக்கும் இருப்பிடம் மனது. அது அடையும் பரிபாகமே மேலோன் ஆவதற்கு இன்றியமையாதது. ஆனால் உடலும் உள்ளமும் வேறானவைகளல்ல. அவை யிரண்டுக்கும் நெருங்கிய இணக்கமுண்டு. ஒன்றில் உண்டாகும் மாறுபாடு மற்றொன்றையும் தாக்குகிறது. தேகம் திட்பத்தையிழந்தால் மனதும் தளர்வுறுகிறது. அது திரும்பவும் வலிவடையும்பொழுது மனதும் உறுதி பெறுகிறது. உடலுக்குக் கொடுக்கும் கள், கஞ்சா, அபினி முதலிய இலாகிரிப் பொருள்கள் மனதுக்கு மயக்கத்தை உண்டுபண்ணுகின்றன. ஸ்தூல சரீரத்தில் விளையும் வேறுபாடுகள் மனதைப் பாதிப்பதுபோன்று மனவேறுபாடுகளும் தேகத்தின் வாயிலாகப் பிரதிபலிக்கின்றன. கட்டுடைய உடலையும் கோழை நெஞ்சமானது கலைத்து விடுகிறது. துன்பம் தேகத்தை விரைவில் தின்றுவிடுகிறது. சகிக்க முடியாத சஞ்சலத்தால் ஒரே இரவில் உடலுக்கு மூப்பும் நரையும் திரையும் நேர்வதுண்டு. இதற்கு மாறாகத் தளரா நெஞ்சம் தேகத்துக்கு யாண்டும் திட்பத்தைத் தருகிறது. விஷ ஜந்துக்களால் தாக்கப்படும்பொழுது, ஓடிப் பிழைத்தாலொழிய உயிருக்கு ஆபத்து நேரிடுமென்று அறிகிற மனது தள்ளாடுகின்ற தேகத்துக்கும் நெடுந்தூரம் ஓட வலிவு கொடுக்கிறது. உற்றார் உறவினரைக் காணுதற்பொருட்டு உடலுக்கு உற்ற மரணத்தையும் கொஞ்சம் ஒதுக்கி வைக்கும் வல்லமை மனதுக்குண்டு. ஆக, உடல் உள்ளம் ஆகிய இரண்டும் ஒன்றன்மீது ஒன்று ஆதிக்கம் செலுத்த வல்லவைகளாம்.

உடல் நோய்வாய்ப் படுமிடத்துத் தன் நிலையைத் தானே விளக்கிவிடுகிறது. நிலைகுலைவு, தளர்வு, நடுக்கம் ஆகியவைகள் அதன்கண் தோன்றுகின்றன. அப்பொழுது வாழ்வு பெருஞ் சுமையாய் விடுகிறது. பிணியோடும் மூப்போடும் கூடிய உடல் அருவருப்பை உண்டுபண்ணுகிறது. நோயுற்ற நெடு வாழ்வு எனனத் துக்கும் உரியதாகின்றது. ஈண்டு மற்றொரு முக்கியமான கருத்து கவனிக்கத்தக்கது. கண்கூடாகப் புலப்படுவதாதலால் பிணி உடலுக்குரியதென்று பலர் கருதுகின்றனர். ஆனால் உண்மையில் அது உடலைவிட உள்ளத்துக்கே அதிகமாக உரியது. உடலில் தோன்றும் சில நோய்கள் மனதைத் தாக்காது மறையக்கூடும். ஆனால் மனதில் தோன்றும் வியாதிகள் மனதோடு நின்றுவிடாது, சரீரத்தையும் சேர்த்துச் சிதைக்கின்றன. தேகத்தில் தோன்றும் ரோகங்களைக் கண்டுபிடிப்பது எளிது; ஆகையால் அவைகளைச் சிகிச்சை செய்யவும் முடியும். மனமோ சூக்குமமானது. ஆதலால் அதன்கண் உள்ள நோய் சுலபத்தில்

தென்படாது. சரீரம் ஜன்மந்தோறும் தோன்றித் தோன்றி மறைவது. ஒரு ஸ்தூல சரீரத்திற்கு உற்ற நோய் மற்றொன்றுக்கு வாராது ஒழியலாம்; ஆனால் மனநோ எல்லாப் பிறவிகளையும் தொடர்ந்து வருவதாம். ஆதலால் அதிலுள்ள பிணியும் தொடர்ந்து வருகிறது. மனதைப் பிடித்து உடற்றும் பிணியே பிறப்புக்கு மூலகாரணம். அப்பிணியோடு நெடுநாள் பழகிப்போன பெரும்பாலாருக்கு அது பிணியென்று தோன்றுவதில்லை. மனதில் பிணியில்லாதவர்களே சித்தர் என்றும் யோகியர் என்றும் ஜீவன் முக்தர் என்றும் அழைக்கப்படுகின்றனர். அவர்களுக்கே மற்றவரது மனதில் உள்ள நோயைக் கண்டுபிடிக்க இயலும். முடிவாகப் பார்க்குமிடத்து ஆத்ம சாதனங்களெல்லாம் மனதின்கண் உள்ள நோய்களைப் போக்குதற் பொருட்டு ஏற்பட்டவைகளாம். நோய் வாய்ப்பட்ட உள்ளமும் உடலும் விரைவில் விருத்தாப்பிய தசையை யடைகின்றன. நோய் இல்லாவிட்டால் மூப்பு இல்லை. மூப்பு இல்லாத நிலையே மாறாத இளமை எனப்படும். ஆக, இளமைக்கு முதன்மையாகிய நோயற்ற நிலையை நாடுதல் அவசியமாகின்றது.

### உடலையும் உள்ளத்தையும் புதுப்பித்தல்

உடலில் உள்ள விஷயங்களையெல்லாம் வெளிப்படுத்துதற் கென்றே நோய் வருகிறது. உலோகத்தை உலையிலிட்டு உருக்குவதால் அதன் மாசு அகலுகிறது. அவ்வாறே நோயின் வாயிலாக உடலில் உள்ள அழுக்குகள் அப்புறப்படுத்தப் படுகின்றன. அழுக்கில்லாத உடல் நோயுறாது. உடலைப் புதுப்பிப்பதற்கான உபாயங்கள் இயற்கையால் அளிக்கப்பட்டவைகள் சில உள. அயர்ந்து உறங்கி யெழுந்திருப்பதையும், நல்லுணவு அருந்துவதையும், நாள்தோறும் நீராடித் தூய உடை தரிப்பதையும் அவைகளுள் முக்கியமானவைகளாகச் சொல்லலாம். இவைகளின் வாயிலாக உடல் புதுப்பிக்கப்படுகிறது; அல்லது அப்போதைக்கப்போது வேண்டிய இளமையைப் பெறுகிறது எனலாம்.

உள்ளத்தைப் புதுப்பிப்பது இதைவிட மேலானது. நித்தமும் நீராடுவது நம் தேசாசாரத்தில் சிறந்ததொன்றாயிருக்கிறது. அவ்வாறே உள்ளத்தை ஒழுங்குபடுத்துதலும் மேலானதோர் அனுஷ்டானமாகும். உறங்கும்போது உடல் உள்ளம் ஆகிய இரண்டும் ஓய்வு பெறுகின்றன. இது இயற்கையின் செயல். ஆனால் நீராடுவது முதலியன நாமாகத் தேடிக் கொள்ளும் செயல்களாகின்றன. குளிப்பாட்டித் தேகத்தைத் தூயதாக்குவது போன்று உள்ளத்தைத் தூயதாக்குவது எங்ஙனம்? மனதைப் பண்படுத்துதற்கு மனதே உபாயமாகின்றது. அது தன்னைத்தானே உயர்த்தவும் தாழ்த்தவும் செய்கிறது. எண்ணம் எப்படியோ மனதும் அப்படியே. ஆதலால்தான் அதற்கு உள்ளம் என்றும் சிந்தை என்றும் பெயர் வந்தது. கடவுளைப்பற்றி எண்ணுங்கால் மனது கடவுள் முன்னிலையைச் சார்கிறது; பயனற்றவைகளை எண்ணுமிடத்து அதற்குப் பேய்மனம் என்ற பழியேற்படுகிறது. சிந்தையைப் புதுப்பித்தல் என்பது நல்ல எண்ணங்களைக்கொண்டு நாள்தோறும் அதைத் தூய தாக்குதலாம். காலையிலும் மாலையிலும் இயற்கையின்கண் அமைதி குடிகொள்கிறது. அப்பொழுது உள்ளத்தை அடக்கி ஒருமுகப்படுத்துதல் எளிது. தன்னோடு அமைந்துள்ள தெய்வத் தன்மையில் திளைத்திருக்கவும் அப்பொழுது இயலுகிறது. அதனால் உண்டாகும் ஆனந்தம், ஆற்றல், சாந்தி முதலியவைகளை உலகில் எதனோடும் ஒப்பிட முடியாது. தூக்கத்தில்

அறிவு ஒடுங்கியவிடத்து உள்ளம் ஓய்வை மட்டும் பெறுகிறது. தியானத்திலோ மனதுக்கு ஓய்வு, ஒளி, வலிவு ஆகிய எல்லா மேன்மைகளும் சேர்ந்து உண்டாகின்றன. மனிதனுக்கு இயல்பாயுள்ள திட்பத்தைத் தூக்கம் பாதுகாக்கிறது; தியானமோ புதிய திட்பத்தை மேலும் மேலும் வருவிக்கிறது. ஞான ஒளியைப் பெருக்குபவன் துவிஜன் அல்லது இருபிறப்பாளன் என்று சொல்லப்படுகிறான். நன்கு தியானம் செய்பவனே நாள்தோறும் புதிய உயர்ந்த பிறப்பை மனதின்கண் எடுத்துக்கொண்டு வருகிறான். உள்ளத்தைப் புதுப்பிப்பவன் மட்டும் உண்மையில் வளர்கின்றான். மேலோன் ஆகின்றவனும் அவனே.

### காயசித்தி : காயகற்பம்

உடலைப்பற்றிய உணர்ச்சி சிறிதேனும் இல்லாதிருப்பது இளமையின் போக்காகும். குளிர் வெப்பம் முதலியவைகளைக் குழந்தைகள் அறியா. ஆயாசத்துக்கும் பிள்ளைப்பருவத்துக்கும் வெகுதூரம். சரீரத்தைப் பற்றிய சிந்தனையின்மையே அதற்கு மூலகாரணமாகும். பிறகு நாள் ஏறஏற, வயது வரவர தேகாபிமானம் அதிகரித்துக்கொண்டே போகிறது. தேகத்துக்குத் தேய்வு உண்டு. ஆனால் அறிவிலிகளின் தேக அபிமானத்துக்கோ தேய்வே கிடையாது. விருத்தாப்பிய திசையில் உடற்பற்று பன்மடங்கு அதிகரிக்கிறது. தேகாத்ம புத்தி அல்லது தேகத்தைத் தானாகக் கருதுவதே கேடுகளனைத்துக்கும் காரணமென்கிறது வேதாந்தம். இவ்வுண்மையை மானுடர் பிறந்தது முதல் சிறிது சிறிதாக வளர்க்கும் தேகவாஞ்சையின் வாயிலாக நன்கு விளக்கிக் காட்டுகின்றனர். உடலைப்பற்றிய எண்ணமில்லாத குழந்தைகள் இன்ப துன்பமின்றி, தேகவாஞ்சையால் விளையும் கேடுகளின்றி ஞானியரைப்போன்று பேரானந்த முற்றிருக்கின்றனர். மற்றவர் ஆழித் துரும்பு போல் அலைவது ஆக்கையின்மீது வைத்த அபிமானத்தாலேயாம்.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்று சொல்லப்படுகிறது. நோய் என்பது எது என்று தெரிந்துகொள்ள வேண்டும். உடல் உணர்ச்சியும் நோயும் இணைபிரியாதவைகள். தேகவுணர்ச்சியுடையவர்களுக்கு நோய் எளிதில் வருகிறது. அவ்வாறே நோய் உடையார்க்கு உடல் உணர்ச்சி தானே வருகிறது. தங்களைப் பீடிக்கும் சில பிணிகளைக் குழந்தைகள் கருத்தில் வைப்பதில்லை. முதலில் உடலைப்பற்றி எண்ணினாலல்லவோ பிறகு அது உறும் கேடுகளைப்பற்றிய எண்ணம் வரும்? குழந்தைகள் மட்டுமல்ல, கூலியாட்கள் போன்ற பாமரரும் உடலுக்கு உற்ற காயம், வெட்டு, பிணி முதலியவைகளை அப்போதைக்கப்போது மறந்துவிடுகின்றனர். வருத்தப்பட்டுக் கொண்டிருக்க அவர்களுக்கு அவகாசமில்லை. அதாவது, அவர்களுக்கு தேகாபிமானம் மிகக் குறைவு. ஆதலால் நோய் விரைவில் அகன்றுவிடுகிறது. வேறு சிலர் கருத்தனைத்தையும் உடலிலேயே செலுத்துகின்றனர். எதை உண்பது, எத்தனை வேளைகளில் எவ்வாறு உண்பது, காற்று வெயில் முதலியன படாது உடலைக் காப்பது எங்ஙனம்—இவைபோன்ற பிரச்னைகளே சதா உள்ளத்தில் எழுந்து கொண்டிருக்கின்றன. இவ்வாறு மட்டுக்கு மிஞ்சி உடலில் பற்றுவைத்து, அதைப் பாதுகாக்க முயலுபவர்தான் ஓயாது நோய்க்கு ஆளாகின்றனர். உடலை அறவே மறந்திருப்பதே உயர்ந்த ஆரோக்கியம். தனக்குக் கால்விரல்கள் எத்தனையிருக்கின்றன, அவைகள் என்ன நிலையில் இருக்கின்றனவென்று மனிதன் நாளைக்கு ஒரு தடவையாவது எண்ணுகின்றானா?

கால் விரல்களைப்பற்றிய சிந்தனையில்லா மையே அவைகள் ஆரோக்கியமா யிருக் கின்றன என்பதற்கு அறிகுறியாகும். ஆனால் ஒரு விரலில் ஏதாவது அடிபட்டு நைந்து போமானால் அதைப்பற்றிய எண்ணமே திரும்பத்திரும்ப வந்து கொண்டிருக்கும். உடலில் உள்ள உறுப் புகளில் நோயில்லாததைப் பற்றி மனிதன் எண்ணுவதில்லை. உறுப்புத் திரளாகிய உடலும் நோயற்றிருக்கும் போது அது எண்ணத்துக்கு இலக்காவதில்லை. உடலை மறந்திருப்பதே நோயற்ற நிலையாகும்.

தேகத்தைக்கொண்டு அடைய வேண் டியவைகளை யெல்லாம் அடைதற்குக்காய சித்தி யென்று பெயர். சித்தியடைதற் பொருட்டுக் காயத்தை நெடுங்காலம்வைத் திருப்பதைக் காயகற்பம் என்பர். இச் சொற்கள் அநேகருக்கு ஆசையூட்டுகின் றன. எல்லார்க்கும் எளிதில் அகப்படாத இரகசியமான உபாயம் ஏதோ ஒன்று இருக்கிறதென்றும், அதை எப்படியாவது கண்டுபிடித்துவிட்டால் நீடூழி நிலவுலகில் வாழ்ந்திருக்கலா மென்றும் அன்னவர் எண்ணுகின்றனர். இக்கூட்டத்தார் இக் காலத்தில் மட்டுமல்ல எக்காலத்திலும் இருக்கக் கூடியவரே யாவர். ஆதலால் தான் தாயுமானரும் காயகற்பம் தேடி நெஞ்சு புண்ணுகுபவரைப் பற்றிப் பரிந் துரைக்கிறார். உடலைப்பற்றி எண்ணு மளவு ஒருவன் கீழ்மை யெய்துவான். உடலைக் கருவியாகக் கொண்டுள்ள ஆத்ம சொரூபத்தில் திளைத்திருக்கு மளவு ஒரு வன் மேன்மை யெய்துவான்.

## இளமைக்கு இருப்பிடம்

பிறந்த உயிர் ஒன்று இளமையோ டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. பிறகு அது அந்நிலையைவிட்டு எட்டப் போகப் போகக் கிழமையும் கேடும் சேர்ந்தே வருகின்றன. உயிர் இறைவனிடத் திருந்து தோன்றியது. தோன்றிய விடத்தை நோக்கிச் செல்லுங்கால் அதற்கு இளமை தானே வந்தெய்து கிறது. புறத்திருக்கும் பொருள்களைவிட மேலானது நம் உடல்; உடலைவிட மேலா னவை புலன்கள்; அவைகளிலும் மேலா னது உள்ளம்; உள்ளத்திலும் மேலா னது உயிர் அல்லது ஜீவாத்மன்; ஜீவனை விட மேலானது பரமாத்மன். பரமாத் மனைவிட மேலானதொன்றுமில்லை. அத் தகைய பரமாத்மன் நம் உள்ளத்துக் குடி கொண்டிருக்கிறது. பரமாத்மனைத்தான் கடவுள் என்கிறோம். அது எப்பொழு தும் மாறுது தன்மயமாயிருக்கிறது. உண்மையான எழிலும் இளமையும் அத னிடத்தே இருக்கின்றன. ஆதலால்தான் கடவுளுக்குக் குமரன் என்ற பெயர் வந் தது. நோயற்ற மனது உள்முக நோக்க மாகப் பரமாத்மனிடத்துப் போகப்போக அதற்குப் பேரறிவோடு கூடிய இளமை வந்துவிடுகிறது. முக்தியென்பது உடல் உணர்ச்சியை அறவே மறப்பதாம். பொது வாக மக்களுக்கு உடலில் உள்ள உரோ மங்களைப் பற்றிய நினைவு வருவதில்லை. ஏதேனும் ஒரு ரோமம் வீழ்வதும் அவர் களுக்குத் தெரியாது. அது வீழ்வதால் அவர்களுக்கு ஒரு குறையும் நேர்வ தில்லை. ஆத்மஞானிக்கு உடலைப்பற்றிய நினைவும் அத்தகையதேயாம். சாயை போன்று தன்னைச் சார்ந்துள்ள உடலைப் பற்றிய ஞாபகம் அவனுக்கில்லை. உடல் தன்னைச் சார்ந்திருப்பதும் சாய்வதும் அவனுக்குத் தெரியாது. ஞானியின் உட லுக்கு வயது யாதாயிருப்பினும் அவன் ஞானத்தைப் பெறுவதும் இளமை யெய் துவதும் ஒன்றே. ஞானத்தோடு கூடிய இளமையே ஞானிக்குரியது. இறைவனை நோக்கி நமது மனம் செல்லுமளவு நமக்கு இளமை திரும்புகிறது. இறைவனை அணு கியவர் எப்பொழுதும் இளமையோடு இருப்பர்.

# மனமெனும் நிலத்தைப் பண்படுத்தல்

(ஸ்ரீ பரமானந்த சுவாமிகள்)

எவராவது ஒருவர் உங்களிடம் வெகு தொலையிலுள்ள அன்னிய நாட்டிலிருந்து வந்துள்ள மிக அருமையான விதைகளடங்கிய ஒரு பையைக் கொடுப்பாரானால், நீங்கள் உடனே அவைகளைத் தோட்டத்திற்கு எடுத்துச் சென்று, அஜாக்கிரதையாக அவைகளை அங்கே விதைத்துவிட மாட்டீர்கள் என்பது உறுதி. முதலில் நீங்கள் நிலத்தைச் செவ்வையாக்கிக் கொள்வீர்கள். பாறைகளைப் பெயர்த்தெறிந்து, தரையைச் செழிப்புடையதாக்கிவிட்டுப் பின் அவ்விதைகட்கு வளர்வதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பத்தை அளிப்பீர்கள். இவ்வாறு மிக ஜாக்கிரதையாக எல்லாவற்றையும் தயார் செய்து கொண்ட பின்புதான் விதைகள் ஏராளமாகப் பூக்கும் என்று நியாயமாக எதிர்பார்க்கலாம்.

இச்சமயம் உலகத்து நடைபெறும் போர் சம்பந்தப்பட்டமட்டில் இக்கொள்கையை ஆராய்வோம். நாம் போருக்காக நிலத்தைத் தயாராக்கிக் கொண்டிருக்கிறோம். வழியிலுள்ள ஒவ்வொரு படியையும் நாம் மிகவும் ஜாக்கிரதையாகக் காத்துக்கொண்டிருக்கிறோம். பத்திரமாயும் ஆபத்தில்லாமலும் வாழ்தற்குரிய யுக்திகளும் தந்திரங்களும் எவை யென்பதை ஆராய்ந்து, அவைகளை நாடுகிறோம்; சொல்லற்கரிய கடுந்துயரத்தை வரவொட்டாது தடுக்க முயற்சி செய்து வருகிறோம். ஆனால் இக்கோரிக்கைகளை நிறைவேற்ற நாம் கையாளும் சாதனங்கள் எவை? என்றென்றும் உலகில் நிலைத்திருக்க வேண்டும் என்று நாம் பெரிதும் ஆசைப்படும் சமாதானத்தை அவை கொண்டு வருமா? கொண்டுவரும் என்று நாம் எதிர்பார்ப்பது தவறல்லவா? பகைமையும், அச்சமும், ஆழ்ந்த பரபரப்பும், நமக்குப் பக்கத்திலுள்ளவரது செயலில் நம்பிக்கையின்மையும் நிறைந்த ஒரு தோட்டத்தில் ஸமரஸமும் சாந்தமும் எப்படி விளையும்? உண்மை யாதெனில், நிலையான சமாதானம் உண்டாக அதுவழியன்று. நான் முன்பு கூறியுள்ளபடியே, அதற்கு ஆரம்பம் தனித்தனியாக ஒவ்வொரு மனிதரும் தம்மைச் சீர்திருத்திக் கொள்ளுதலே; ஒவ்வொருவரும் சமாதானமான எண்ணங்களோடிருத்தல் வேண்டும்; பிறரிடத்து நம்பிக்கை வைத்தல்வேண்டும்; தம்மினும் மேலான இறைவனது சக்தி தம்மைக் காப்பதாக நம்பிக்கைவேண்டும். தம்மைத் தவறான வழிகளிற் செலுத்தும் சமாதானங்களைப் பற்றுவதை முழுதும் விட்டுவிடவேண்டும். நமது மனதிற்குள் நிகழ்வது எவ்வாறிருந்தாலென்ன, வெளியில் உறுதிமொழிகளைக் கூறுவது போதாதா என்று நாம் பலமுறையும் கருதுகிறோம். மூர்க்கமுள்ள விலங்குகளும் விடப்பாம்புகளும், நமது பாஷையை அறியாத போதும், சிறு குழந்தைகளையும் உண்மை யாகவே பரிசுத்தமான மனிதர்களையும் கடிப்பதில்லை யென்பதை அனைவரும் கவனித்துள்ளோ மல்லவா? இயல்பாகவே கொடிய விலங்குகளும், சுத்தம் எளிமை தெய்வத்தன்மை என்னும் சக்திகட்குக் கட்டுப்பட்டுத் தாமறியாமலே நடக்கின்றனவல்லவா? பாவனையாலும்

சாமர்த்தியத்தாலும் தந்திரத்தாலும் நடக்கக்கூடிய காரிய மல்ல இது. நமது அகவாழ்க்கை நமது செயல்களினுலாய புறவாழ்க்கையாகிய இரண்டும் ஒன்றுக்கொன்று வேறுபடாது ஒத்து இசைந்து நடக்கும்போதுமட்டும் இது நிகழும். ஒரு சீனதேசத்துப் பெரியார் கூறுகிறார்:—"வாழ்க்கையின் இரகசியத்தை உணர்ந்தவன், உலகில் சஞ்சரிக்கும்போது, காண்டாமிருகத்தையும் புலியையும் கண்டு அஞ்சி ஓடமாட்டான் என்றும், எதிரியின் இருப்பிடத்திற்குள் புகும்போது, அவன் ஒரு வாளையும் கேடயத்தையும் ஏந்திச் செல்லமாட்டான் என்றும் கேள்விப்பட்டுள்ளேன். காண்டாமிருகம் தனது கொம்பை நுழைத்தற்கு ஓரிடமும் அவனிடத்துக் காணுது. புலி தனது நகத்தை வைத்துப் பற்றுதற்கு ஓரிடமும் அவனிடத்துக் காணுது. ஏன் எனில் மரணம் புகுதற்கு அவனிடத்து ஓரிடமும் இல்லாமையால்."

மனதைப் பண்படுத்துவது எப்படி? நல்ல உயர்ந்த எண்ணங்களே அதில் வளர்ந்து பூக்குமாறு, நிலத்தைத் தயாராக்குவதினுல்தான். உலக மெங்கும் உள்ள மாணவ ரியக்கங்களிலெல்லாம் தம்மை ஐம்பது வருஷகாலமாக ஒன்றுபடுத்திக்கொண்டு வந்த ஜாண்மாட் என்பார் இந்தியாவில் மகாத்மா காந்தியை ஒரு காலத்தில் போய்ப் பார்த்து "தமது திய குணங்களோடு ஓயாது போர் புரிந்து தோல்வி யடைந்துவரும் இளஞர்கட்கு நீங்கள் என்ன புத்திமதி யளிக்கின்றீர்கள்?" என்று கேட்டபோது, மகாத்மாஜீ அதற்கு மறுமொழியாக, "பிரார்த்தனை ஒன்றுதான். ஒருவன் தன்னை முற்றிலும் தாழ்த்திக்கொள்ளல் வேண்டும். தனக்கு அப்பாலுள்ள ஓரிடத்திலிருந்து உதவியை எதிர்பார்த்தல் வேண்டும்" என்று கூறினுர்.

நமது தற்கால முறைகட்கு இது முற்றிலும் முரண்பாடா யிருப்பதோடு நம்மை இது பிரமிக்கச் செய்கிறதல்லவா? நாம் நமது குழந்தைகட்குச் சில கொள்கைகளைப் போதிக்கிறோம். நம்மிட மிருந்து கற்றுக்கொண்ட அவைகளை அவர்கள் பின்னுளிற் பிறர்க்குப் போதிக்கின்றனர். வாழ்க்கையில் ஏற்படும் பற்பல வகைப்பட்ட சங்கடங்கட்கும் ஏற்றவாறு நடந்துகொள்ளும் பொருட்டு நாம் அவர்களை ஒழுங்காகத் தயார் பண்ணுகிறோமா? அவர்கள் சாமர்த்திய முடையவர்களாக வேண்டும்; விழிப்பா யிருக்க வேண்டும் என்று வற்புறுத்தி வருகிறோமல்லவா? ஒரு சிறிது உண்மை இருக்குமாறுல், அதை மிகப் பெரிதாக்குவதன் மூலமாக நாம் தப்பித்துக்கொள்ள முடியுமாயின், அது முழுதும் நியாயமானதுதான் என்று நாம் நமது செயல் மூலமாகப் போதிப்பதுண்டல்லவா! தந்திரத்தாலும் சாமர்த்தியத்தாலும் தமது காரியங்களைச் சாதித்துக்கொள்ளக் கூடியவர்களை நாம் புகழ்கிறோமல்லவா? அவர்களை வெடிப்பான மனிதர்கள் என்கிறோமல்லவா? நமது குழந்தைகட்கு ஞானக் கொள்கைகளைப் போதிக்கக்கூடாதா? அவைகளை ஒருவராலும் எதிர்க்க முடியாதென்றும், எதிர்க்காமலிருப்பதனுலும், யோக்கியதையாலும், அயலாரிடத்து நம்பிக்கை வைப்பதனுலும், ஒருவர் வெற்றி யடையலாம் என்றும், ஞானசக்தியினுல் எல்லா இடையூறுகளையும் வெல்லலாம் என்றும், நாம் தெளிவாகக் காட்டக் கூடாதா? இத்தகைய கொள்கைகளினுல் நடக்கும் ஓர் உலகத்தை நமது மனக்கண் நேரே பார்க்கலாகாதா? அவ்வாறு செய்யின், போர்கள் நின்றுவிடும், சத்திய யுகம் அப்பொழுதே தொடங்கிவிடும்.

நான் உங்கட்கு முன்பு எடுத்துரைத்துள்ள கொள்கைகளின்படி வாழும் மக்க

ளில் எத்தனை பேர்களை நீங்கள் காண்கி றீர்கள்? அவர்களில் ஒருவர் இருவரைக் காணும் நல்ல பாக்கியம் இருந்ததாக வைத்துக்கொண்டாலும், அவர்களை நீங் கள் ஒருக்கால் பண்டைக்காலத்து மனி தர்கள் என்றும், தற்கால நாகரிகம் அற் றவர்கள் என்றும், அல்லது தெளிவற்ற வர்கள் என்றும் கனவுகாண்பவர் என் றும் கூறியிருப்பீர் அல்லவா? அவர்கள் அத்தன்மையாயிருப்பின், ஸ்ரீ விவேகா நந்த சுவாமிகளது வார்த்தையைக் கொண்டே, "அம்மாதிரியான மக்களை நாம் அதிகமாகப் பெறுவோம்" என்று நான் கூறுவேன். பழைய அல்லது புதிய ராஜ் யங்களைப் பறிப்பதிலும், உலகநாடுகளில் எதையேனும் பெறுவதிலும் அவர்கட் குக் கருத்து செல்லாது; அவர்கள் தமது மனத்தில் சாந்தியுடன் வாழ்வதனாலும், புறத்தே மற்ற மக்களுடன் சமாதான மாக நடப்பதனாலும், ஓயாது சமாதா னத்திற்காகத் தயாராக்கி வருகின்றனர்.

நான் ஊரூராகத் திரியும்போது, காணும் மக்களிற் பலர், தாம் ஓர் உயர்ந்த இமயமலைச் சிகரத்திற்குப் போக முடியு மானால், தம்மீது சமாதானத்தையும் தெய்வீகக் காட்சியையும், திடீரென அளிக்கும் திறமைவாய்ந்த குரவர்களை அங்கே காணக்கூடும் என்று கருதுகிறார் கள். மனிதர்களால் அடைய முடியாத படி உயர்ந்த மலைப்பிரதேசங்கட்கு ஏறிச் செல்வதினால், நீங்கள் தேடும் பொருளைக் காண மாட்டீர்கள்; ஏனெனில், ஒருவன் தனக்குள்ளேயே சாந்தியைக் காணும் வரை அதை வேறிடத்தில் தேடுவது பயன்படாது. "பரலோக ராஜ்யம் உனக் குள்ளேயே இருக்கின்றது." இதுவே உனக்குவேண்டிய குறிப்பு. ஒவ்வொரு மனித ஆன்மாவிடத்தும் ஓர் ஒளி யுள்ளது; ஒரு தெய்வீக ஒளியுள்ளது. தற்சமயம் மனிதன் அந்த ஒளியின் இருப்பை ஒப்புக்கொள்ளப் பிரியப்படுவ தில்லை. தனது சொந்தப் பெருமையைப் பற்றியும் போராடும் முறைகளைப் பற்றி யும் அவன் இன்னமும் மயங்கியிருப்பதி னால், இறவாத அழிவடையாத ஞானமய மான ஒரு பொருளுக்காக முயற்சிசெய் வது சிறிதும் பயன் படாது என்ற நினை வோடிருக்கிறான். இக்காரணத்தினாலேயே உலகம் தற்காலம் தத்தளித்துக்கொண் டிருக்கிறது. நாம் ஒன்றை (சமாதா னத்தை) நினைத்துக்கொண்டு, வேறொன் றுக்காக (போருக்காக)த் தயார் செய்தல் முடியாது. அது பயன் தராது; பயன் தர முடியாது! நமது உலக சரித்திரத் தில், சமாதானத்தைப்பற்றி இவ்வளவு பேச்சு எழுந்தாலும், சமாதானத்திற் காக இத்தனை நிலையங்கள் அமைக்கப் பட்ட நாளும் இதுவரை இருந்ததே யில்லை; ஆனால் உலக மக்களிற் பெரும் பாலார் போரிலே கண்ணும் கருத்துமா யுள்ளார்; போர்க்கு உதவும் ஆயுதங்களை யும் கருவிகளையும் புதிதுபுதிதாகக் கண்டு பிடிப்பதிலேயே ஈடுபட்டுள்ளனர். உல கத்தை நிலையான சாந்தியை நோக் கிச் செலுத்துவதற்காக மனப்பூர்வமாக முயன்று வருபவர்கட்கு இத்தகைய காரிய நிலைமைகள் மனத்தளர்ச்சியை இயல்பாகவே ஊட்டத்தான் செய்யு மல் லவா?

அனுபூதி ஞானத்திலே மிகப் பெரியவ ரும் மிகத் தெளிவான கருத்துக்களை யுடையவருமான ஸ்ரீ ராமகிருஷ்ணர் சுருக்கமாக மக்கட்குக் கூறியதாவது:— "உனது மனதையும் வாயையும் ஒன்றாக் குக; (நினைவையும் பேச்சையும் ஒன்றாக் குக); இதனால் மனித வாழ்க்கையி லுள்ள சங்கடங்களை யெல்லாம் ஒழித்துவிடுக." இப்பெரியார் கூறிய உபதேச மொழி எவ் வளவு எளிதாயும் ஆயினும் எவ்வளவு மிக்க வலிமையை உடையதாயும் அமைந்

திருக்கின்றது? நீங்கள் ஒருவரையும் ஏமாற்ற முடியாது. உங்கள் மனது ஒன்றை எண்ணிக் கொண்டிருக்கும் போது, நீங்கள் அதற்கு முற்றிலும் வேறுபாடான வேறொன்றைப் பேசிக் கொண்டிருப்பீராயின், உமது வார்த்தைகள் யாதொரு பயனையும் விளையா. உங்களது நினைவுகள் வெறுப்போடு கூடியுள்ள போது நீங்கள் புன்சிரிப்பை வெளிக்காட்டுவீர்களாயின், அப்புன்சிரிப்பு உங்களைக் காட்டிக்கொடுத்துவிடும். மனிதன் சாமர்த்தியம் என்னும் உடையையும் புத்திக் கூர்மையென்னும் உடையையும் அணிந்து கொண்டு, அப் பொய் வேடத்தோடே வெகுகாலம் வாழமுடியாது. இம்மாதிரியான உலக சம்பந்தமான ஆயுதங்களை வைக்கத் தீர்மானிக்கும்போது, எவ்வளவு வேறுபாடு உண்டாகிறது! நமது நினைவுகளும் செயல்களும் எவ்வளவு மாறுபடுகின்றன!

பகவானது நாமத்தை முதலில் உச்சரியாமல் வீட்டு வாசற்படியைத் தாண்டி ஒருபோதும் செல்லக்கூடாதென்றும், பகவானது நாமத்தை முதலில் உச்சரியாமல் எக்காரியத்தையும் தொடங்கக் கூடாது என்றும் தாய்மார்கள் நமது நாட்டில் குழந்தைகட்குக் கற்பிப்பதுண்டு. இந்த வழக்கத்தை மூடபக்தியில் ஒரு வகையென்று எண்ணுகிறீர்களா? அது அவ்வாறன்று. நாம் எதையேனும் செய்யுமுன் பகவானை நினைப்பது என்பது, எப்போதும் அவருடைய திவ்விய அனுமதியைப் பெறுவதாகும். மனப்பூர்வமாகவோ சிரத்தையோடோ நிர்க்கதியாயிருப்பதை உணர்ந்தோ ஓர் உயிர் கூப்பிடும் போது, அவர் எப்பொழுதும் உதவிக்கு வருகிறார். துயரமான நிகழ்ச்சிகளையும் எதிர்பாராத ஆபத்துக்களையும் ஒழிக்க வேண்டும் என்னும் எண்ணம் உங்கட்குண்டா? உண்டாயின், எப்போதும் பகவானது உதவியைப் பிரார்த்தித்த வண்ணமாயிருக்கக் கற்றுக்கொள்ளுங்கள். மனப் பூர்வமான பிரார்த்தனைக்கு அவர் ஒருக்காலும் செவிகொடாதிருக்க மாட்டார். உலக வாழ்க்கை சம்பந்தமான நெறிகளில் மட்டும் எச்சரிக்கையாயிருத்தல் போதாது; ஞான வாழ்க்கை சம்பந்தமாகவும் எச்சரிக்கையாயிருத்தல் வேண்டும். நாம் சேகரிக்கக்கூடிய எல்லா ஆயுதங்களிலும் மேலானது ஒன்று யாதெனில், நம்மைப் பின்வருமாறு பகவானிடம் சமர்ப்பித்து விடுதலேயாம்:—"பகவானே! உம்முடைய பாதுகாப்பிற்கே முழுவதும் என்னை ஒப்பித்துவிடுகிறேன். எனது ஞானம் குற்றமுடையதாகின்றது. எல்லைக் குட்பட்டதே யாகின்றது. எனக்கெனச் சொந்தமான பலம் ஒன்றுமில்லை. உமது பலமே எனது பலம். நீர் என்னைப் பாதுகாக்கும்போது மட்டுமே நான் பத்திரமாக வாழ்கிறேன்." இத்தகைய எண்ணங்கள் தாமாக மௌனமாக உள்ளேயிருந்து (ஆழ்ந்த தலங்களிலிருந்து) எழுமாயின் பலமும் ஒளியும் முழுதும் உங்கட்கு உண்டாகும். நாம் பிரார்த்திக்கும்போது, சுயநலம் முழுவதையும், அகங்காரத்தையும், எள்ளளவும் இல்லாமல் ஒழித்துவிடுவோம். "பகவானே, நானாக ஒன்றும் செய்ய இயலாது. எனது பலம் தடுமாறக்கூடியது. உனது ஒளி எனது ஆன்மாவினிடத்து வீழ்ந்தாலன்றி எனக்கு ஞானமேது? உனது ஒளியின் துணையினால் மட்டுமே எனது பாதையைத் தெளிவாக உணர்வேன்." இவ்வாறு பிரார்த்திக்கும்போது, ஆணவம் முழுதும் ஒழியவேண்டும். நாம் உண்மையாகவே தாழ்வும் பணிவும் பெறுவிடில் நாம் சரியான முறைப்படிப் பிரார்த்திக்க முடியாது என்பதையும், ஒரு பெருங்காரியத்திற்கு நம்மைத் தயாராக்கிக்கொள்ள முடியாது என்பதையும் நீங்

கள் அறியவில்லையா? அகங்காரம் நிறைந்தவன் உலகத்திற்குத் தொந்தரவைத் தவிர வேறு எதையும் அளிக்க முடியாது. அவன் யானையைப் போன்றவன். நீ அதை முழுக்காட்டிச் சுத்தமாக்குகிறாய்; ஆனால் அது என்ன செய்கிறது? அது தன் இச்சைப்படியே திரியும் இயல்புடையதாதலின், அது புழுதிக்குச் சென்று புரளுகிறது. சுத்தமாயிருத்தல் அதன் இயல்பல்ல. அதுபோலவே மனிதனது மனதும். அது அடங்காதது; வீண் பெருமையைத் தேடுவது; அகங்காரம் உடையது; போர்க்கெழும் தன்மையது; ஞானசாதனமொன்றினால் அதைக் கழுவித் தூயதாக்கிப் பகவானை நோக்கிச் செலுத்தும்வரை, அவ்வாறே இருக்கும். அதன் பின்தான் அது தனது பழைய வழக்கங்களை மறந்து, புதிய பழக்கங்களை உண்டாக்கிக் கொள்ளும்.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

பரமஹம்ச தேவருடைய சரித்திரத்தை ஆராய்ச்சி செய்வோருக்கு அவரது வாழ்வு இரு பிரிவுகளாக அமைந்திருப்பது விளங்கும். அவர் 1836 முதல் 1886 வரையில்—அரை நூற்றாண்டுக் காலம்—உலகில் வாழ்ந்தார். அந்த ஐம்பது வருஷகாலத்தில் அவர் பாரத நாட்டின் ஐயாயிரம் வருஷத்திய பெரு வாழ்வு முழுவதையும் வாழ வேண்டியவரானார். அது மட்டுமல்ல. பாரத நாட்டின் வருங்கால வாழ்வின் அஸ்திவாரமாகவும் அவர் இருக்க வேண்டியவரானார். அவரது பூவுலக வாழ்வு இருமுகப்பட்டதென உரைக்கலாம். முதலில் அவர் புராதன பாரதத்தை நோக்கி நின்று அதன் பெருமை முழுவதையும் சுவீகரித்துத் தமதாக்கிக் கொண்டார். பின்னர் எதிர்ப்புறமாகத் திரும்பி நின்று தமது ஆத்ம சக்தியை வருங்கால பாரதத்தினுள் புகுத்தினார். பண்டை இந்தியாவிற்கும் நவீன இந்தியாவிற்கும் அவர் இணைப்பானார். பாரத நாட்டின் பண்டை நாகரிகம் தவறானதென்றும் அதை அறவே ஒழித்துவிட வேண்டுமென்றும் பலர் எண்ணியிருந்த காலையில் தோன்றிய இம்மகான் பண்டை பாரதத்தினை அடிப்படையாகக்கொண்டே வருங்கால இந்தியா ஒளிபெற்று வாழ முடியும் என்பதை உள்ளங்கை நெல்லிக்கனியென எடுத்துக் காட்டினார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சரித்திரத்தையே பண்டைப் பிரிவு, நவீனப் பிரிவு என இருபாகங்களாக வகுக்கலாம். காமார்ப்புகூரில் அவர் இயற்றிய நெஞ்சையள்ளும் லீலைகள், இளைஞராகக் கோயிற் பூசாரி வேலையை ஏற்று அவர் இயற்றிய கடுஞ் சாதனைகள், அவர் பெற்ற பேரனுபவங்கள்—இவை யாவும் பண்டைப் பகுதியைச் சேர்ந்தவை. இவற்றைப்பற்றிப் படிக்கும்பொழுது நாம் இவ்வுலகை விட்டு இதிகாச உலகிற்குள் நுழைந்துள்ளதாக உணருகின்றோம். அவரது வாழ்வின் பிற்பகுதியில் இளஞ்சீடர் குழாத்துடன் அவர் இன்புற்று வாழ்ந்த நாட்கள் யாவும் நவீன காண்டத்தைக் குறிப்பனவாகும். வரகவி யொருவன் இயற்றிய நாடகமொன்றைப்போலுள்ளது அப்பகுதி.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் தாய் தந்தையர், சகோதரர், அவருடைய பால்ய நண்பரான கயாவிஷ்ணு, அவரை இளமையிலேயே பூசித்த ஸ்ரீனிவாசன், அவர்மீது

பேரன்பு பூண்ட தனம் என்ற மாது, தக்ஷிணேசுவர ஆலயத்தின் சொந்தக்காரரான இராணி இராசமணியார், மதுரநாதர், பைரவீ பிராம்மணியார், தோதாபுரி, ஜடாதாரி, ஹிருதயர்—இவர்கள் யாவரும் முதற் காண்டத்தின் நாடக பாத்திரர்கள் ஆவர்.

அவரது வாழ்வின் கடைசிப் பத்து ஆண்டுகளே இரண்டாவது காண்டமாகும். கேசவசந்திரசேனரும் நரேந்திரரைத் தலைமையாகக் கொண்ட இளஞ்சீடரும், கிரீஷ் சந்திரகோஷ் முதலான அன்பரும், சாரதாதேவியும் பிற்பகுதியின் நாடகபாத்திரராவர்.

பாகவத கோஷ்டியினர் சிலர் பஜனை செய்துகொண்டு வருகின்றனர். வீட்டின் முன் நின்று பாடிச் செல்லுகின்றனர். அவர்கள் எங்கிருந்து வருகின்றனர், எங்குச் செல்லுகின்றனர் என்பதை யாரும் அறியமாட்டார். இம்மாதிரி ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதுண்டு. இக்கூற்று அவரையும் அவருடைய சீடரையுமே குறிப்பதாகும்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் அற்புத வாழ்க்கையையும் அவரது நேர்ச்சீடரின் வாழ்க்கையையும் ஆழ்ந்து நோக்கும்பொழுது 19 வது நூற்றாண்டின் பிற்பகுதியில் நம் நாட்டில் தெய்விக நாடகம் ஒன்று நடைபெற்றதெனவே தோன்றுகிறது. அந்நாடகத்தின் உட்கருத்து முழுவதையும் உலகம் அறிந்துகொள்ள இன்னமும் நீண்டகாலம் ஆகும்.

இத்தெய்விக நாடகத்தின் ஒரு காட்சி நவீன இந்தியாவிற்கான பெரும் படிப்பினையைக் கொண்டுள்ளது.

ஸ்ரீவிவேகாநந்த சுவாமிகள் ஒரு மகா புருஷர் ஆவார். அவர் ஸ்ரீராமகிருஷ்ணதேவருடைய சீடரேயாயினும் பரமஹம்ஸர் அவரை ஏனைய சீடரைப்போலப் பாவித்தாரில்லை. உதாரணமாக அவரைத் தமக்குப்பணி ஏதும்செய்ய ஸ்ரீராமகிருஷ்ணர் அனுமதிக்கமாட்டார். அவரைக் கண்டதுமே பரமஹம்ஸருக்குப் பரவசம் தோன்றிவிடும். அவரைப் பற்றிய அநேக அற்புதக் காட்சிகளைப் பரமஹம்ஸர் கண்டிருந்தார். ஓயாது தவமியற்றும் ஸப்த ரிஷிகளுள் ஒருவரே ஸ்ரீவிவேகாநந்தராக ஜனித்தார் என்பது பரமஹம்ஸரது துணிபாயிருந்தது. பரமஹம்ஸர் எண்ணியதற் கேற்றவாறே ஸ்ரீவிவேகாநந்தர் சித்த புருஷராக விளங்கி உலகிற்கும் சிறப்பாகப் பாரதத்திற்கும் அருந்தொண்டாற்றினர்.

ஆனால் ஸ்ரீவிவேகாநந்தர், நரேந்திரன் என்ற இளைஞனாகவிருந்த காலையில் அவரது மனப்போக்கு அசாதாரணமாகவிருந்தது. மேனாட்டுத் தத்துவ நூல்கள் பலவற்றை அவர் பயின்றிருந்தார். கடவுளின் இருப்பைப் பற்றிய ஐயம் அவரிடம் ஆழ்ந்திருந்தது. பெரியோர் பலரிடம் சென்று 'நீர் கடவுளைக் கண்டதுண்டா?' என்று கேட்டார். ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்ததும் முதலிலேயே அவரை ஏற்றாரில்லை. அவரை எதிர்த்தார். வாதாடினர். விக்கிரகத்தை வழிபடத் தயங்கினர். அத்வைதக் கொள்கையான யாவும் பிரம்மமயம் என்ற தத்துவத்தை நிந்தித்தார். பரமஹம்ஸரது பெருமையைப் பல வழிகளில் சோதனை செய்தார்.

பிற்காலத்தில் பக்தியின் சொரூபமாக விளங்கிய மகரிஷி ஸ்ரீவிவேகாநந்தருக்கு இளமையில் இத்தகைய ஐயங்களும் மனப் போராட்டங்களும் ஏற்படுவானேன்? பரமஹம்ஸரது வாழ்க்கையில் ஈசனைப்பற்றிய இத்தகைய ஐயங்கள் காணப்படவில்லையே?

ஆம்; இது பராசக்தியின் லீலை. ஸ்ரீவிவேகாநந்தரின் அவதாரம் குறிப்பிட்ட நோக்கத்தைக் கொண்டதா யிருந்தது.

அதாவது அவர் நவீன இந்தியாவின், இளைஞர் குழாத்தின், பிரதிநிதியாக விளங்கினர். முடிவில் அவர், புராதன இந்தியாவின் இலக்ஷியத்தை வாழ்க்கையில் அனுஷ்டித்து வந்த பரமஹம்ஸ தேவரிடம் தம் எல்லா ஐயங்களும் நீங்கப் பெற்ருர்.

நம் நாட்டில் உள்ள வாலிபருக்குக் கடவுளைப்பற்றிய ஐயம், மத விஷயங்களின் உண்மையைப் பற்றிய சந்தேகம் ஏற்பட்டால், அவர்கள் அல்லற்படவேண்டிய அவகாசமில்லை. ஸ்ரீவிவேகாநந்தரின் அற்புத சரித்தைப் படித்தால் அவர்கள் ஐயம் நீங்கப்பெறுவர். அவரது நன்மையின் பொருட்டே போலும் நரேந்திர நாதர் நவீன இளைஞரின் மனப்போக்குகளையெல்லாம் தம் வாழ்வில் ஏற்றுக்கொண்டு பரமஹம்ஸரிடம் நிரந்தரமான மன வமைதியைப் பெற்ருர்.

நமக்கு முன்னல் ஒருவர் வனத்தின் மூலம் சென்று அங்குள்ள தடைகளையகற்றி வழி செய்துவைத்தால் நாம் சுலபமாக அவ்வழியே செல்லலாமல்லவா? முன்னவர் முள்ளின்மீது சென்று பட்ட கஷ்டங்களை யெல்லாம் நாம் மீண்டும் அனுபவிக்க வேண்டா மல்லவா?

நவீன இளைஞருக்கு ஸ்ரீவிவேகாநந்தர் அத்தகைய வழிகாட்டியாவார். அவரது அடிச்சுவடுகளைப் பின்பற்றுவது இளைஞரின் நலனுக்கான வழியாகும்.

---

# பக்தி

[ஸ்ரீ விபுலாநந்த சுவாமிகள்]

[ஸ்ரீமத் பரமாநந்த சுவாமிகள் அருளிய "பக்தி மார்க்கம்" என்னும் நூலின் முதலதிகாரம்]

நெஞ்சிலே பக்தி நிறைந்தவர்கள் பாக்கியவான்கள்; உலகத்திலே, அது ஒன்று மாத்திரமே மெய்ப்பொருள் ஆகும்; மற்றவையெல்லாம் பொய்ப் பொருள்கள். தூய பரிசுத்தமான வாழ்க்கையை நடத்து; துணிவுடையவனாக இரு; பயப்படாதே. உனக்கு முன்னே சென்ருேர் ஆயிரம்பேர் விழுந்து மடிந்தாலும் பொருட்படுத்தாதே. திடமாக நில்லு; மனந்தளராதே. அன்பும் பக்தியுமுடையவனாக இருத்தல் உண்மையிலே எவ்வளவு பெரியது. பக்தி ஒன்றுமே ஒருவனுக்கு நிறைந்த மனச் சந்தோஷத்தைத் தருவது.

உண்மைப் பக்தி அற்புதமான சக்தியுடையது. அதன் மூலமாகப் பக்திமான் கல்லிலிருந்தும் கடவுளைத் தோற்றுவித்து விடுகிருன். பக்தி உயிருள்ள சக்தியாகும், அது இறந்து போன உடலுக்கும் உயிர் கொடுக்கக் கூடியது. இயல்பாகவே ஆண்டவன்மீது இத்தகைய பக்தியுடையவர்கள் நிறைந்த மனப்பாக்கியம் படைத்தவர்கள். "வாழ்க்கையின் நோக்கமானது நம்பிக்கையின் வலிமையினுலும் பக்தியினுலும் மிக இலகுவாகப் பெறுதற்குரியது; தர்க்க சாதுர்யத்தினலே அதனை ஒருபோதும் அடைய முடியாது." இது ஸ்ரீராமகிருஷ்ண தேவரது திருவாக்கு.

* * *

உண்மைப் பக்தியே கடவுளுடைய திவ்விய தரிசனத்தை நமக்குத் தருவது. வெறும் புத்தியை மாத்திரம் கொண்டு ஆண்டவனை அடைய முடியாது; யோக

சாதனைகளினாலோ, பலவேறுவகைப்பட்ட கஷ்டங்களைச் சாதிப்பதினாலோ அவனை அடைய முடியாது. இது ஆண்டவனுடைய திருமொழி. ஒருவழிப் பட்ட அன்பு, தன்னலமற்ற அன்பு, உண்மையும் பரிசுத்தமுமாகிய அன்பினைக்கொண்டே அவனை அடையலாம். ஆண்டவன் சுதந்திர முடையவன். அவன் ஒருவகைச் சட்டத்தினாலும் கட்டுப்படாதவன். அப்படி யிருந்தும் "நான் பக்தர்களுடைய அன்பாகிய நாரினாலே கட்டப்படுகிறேன்" என்று ஆண்டவன் கூறியிருக்கின்றான். 'கடவுளே அன்பு; அன்பே கடவுள்" என்பது பெரியோர் வாக்கு. ஆனால் இந்த உண்மையைச் சாதித்துத் தெளிவது மிகக் கஷ்டம். உண்மையும் பரிசுத்தமுமான இருதயமுடையவனே இதனை உணர்ந்து தெளிவான். சிறிதேனும் தன்னலமாகிய இச்சை நிலை பெற்றிருக்கும் வரையும் ஒருவன் இந்த உண்மையை அடைய மாட்டான். இது மிகப் பரிசுத்தமானது, தெய்வீகமானது.

இத்தன்மையாகிய அன்பு மனத்திலே உதிக்குமாயின், உலகக் கட்டுகளினின்றும் மனிதன் விடுபடுவான். இது கடினம் என எண்ணி நாம் மனந் தளர்தல் கூடாது. உலக நிலையிலே அது எவ்வளவு கடினமாகக் காணப்பட்டாலும், அதனைத் தெளிந்தே தீர வேண்டும். அன்பில்லாத நெஞ்சம் செழிப்பில்லாத நிலமாகும். அன்பே நமது வாழ்க்கை; உலகில் அது ஒன்று மாத்திரமே உண்மைப்பொருள். உண்மையான பக்திமானுக்கு அன்பு மார்க்கம் அவ்வளவு கடினமானதல்ல. ஏனெனில் அவனுடைய இருதயம் அன்பினாலே ஆக்கப்பட்டது. இயல்பாகவே அது ஆண்டவனை நோக்கிச் செல்லுகிறது.

ஆண்டவனிடத்திலே ஆழ்ந்த நம்பிக்கை யுடையவனாயிரு. அவன் உன்னை ஆசிர்வதித்து எல்லாத் தீங்குகளிலிருந்தும் விடுவித்துக் காப்பாற்றுவான். எப்பொழுதும் உனது நோக்கத்தை அவனுடைய திருவடியிலே வைத்துச் சிறு குழந்தையைப்போன்ற மாசற்ற உள்ளத்தோடு அவனை வழிபடுவாயாக. ஒன்றையும் பற்றிச் சிந்தியாதே; தைரிய வீனப்படாதே; மனச்சோர் வடையாதே; எப்பொழுதும் சந்தோஷமாக யிரு. இப்படி நடந்தால் ஆண்டவனுடைய ஆசீர்வாதத்தினாலே, சாந்தத்திலும் ஆனந்தத்திலும் நிலைத்திருப்பாய்.

* * *

உண்மைப் பக்திமானாக இருப்பதற்கு நீ விரும்பினால், உலக எண்ணங்களையும் செயல்களையும் நீ கடந்து நிற்கவேண்டும். உலக வியாபாரங்கள் உன்னுடைய மனச் சாந்தத்தைக் கலக்காத வண்ணம் பார்த்துக்கொள். பரிசுத்தமாயிரு; மாசற்றிரு; தன்னலமற்றிரு; அனைத்தின்பாலும் அன்பு செலுத்துகின்ற அகன்ற சிந்தையுடையவனாயிரு. உன்னைப் பெரியவனென்று நினையாதே. ஆண்டவனுடைய திருவடிக்கு அடிமையாக உன்னை மதித்து நட. தீங்கு வருமென்ற எண்ணமின்றி எப்பொழுதும் தொண்டு செய்ய ஆயத்தமாயிரு. ஆண்டவனை நினைத்து உண்மையான சீவியம் நடத்திக் கொண்டிருக்கிற நிலையிலே கொடுமையான அகால மரணம் நேரிட்டாலும் அதுவும் நல்லதே என்பதை நினைவில் வைப்பாயாக. அவனை மறந்து சுகசெல்வத்தோடு வாழ்ந்தாலும் அந்த வாழ்வு மேலான நோக்கத்திலிருந்து உன்னை விலக்கிவிடும். ஆதலினாலே, அத்தகைய வாழ்வு கொடிய சாபம் என்பதை அறிந்துகொள். எப்பொழுதும் விழிப்பாயிரு; கணப்பொழுதிலே தோன்றி மடிகின்ற பெலவீனம் உன்னைக் கீழே இழுத்துக்கொண்டு போக விட்டுவிடாதே. அச்சமின்றித் துணிவாகக் காரியங்களை நடத்து; ஒரு

பொழுதும் பொறுமையை யிழந்து விடாதே.

இருதயத்தின் உண்மையான உணர்ச்சிகளை வெளித் தோற்றங்கள் காட்ட மாட்டா என்பதை அறிந்து வெளிப் பொருள்களைச் சார்ந்து நிற்பதைக் குறைத்துக்கொள். பேச்சைக் குறைத்துக்கொள். அழகிய மொழிகள் அல்லக் குணநலமே ஞான ஒளியைத் தருவது. பெரிய ஞானவான்கள் மிக இலகுவான மொழிகளிலே பேசினார்கள்; ஆனால் அவர்களுடைய மொழிகள் அறிவாற்றலும் நம்பிக்கையும் தைரியமுமுடையன. இருதயத்தின் மௌன நிலையிலே பக்தியென்னும் பூண்டு வளர்வதாக. உண்மையன்பிலிருந்து வழிந்த கண்ணீரை அந்தப் பூண்டுக்குப் பாய்ச்சு. பயனைக் கருதாதே; முழு மனத்தோடும் தொண்டு செய்.

உண்மைத் தொண்டன் தனது இஷ்ட தேவதைக்காகத் தொண்டு புரிகிறான்; பிறருக்காக அல்ல. அவன் உண்பதும், குடிப்பதும், துயிலுவதும், இயங்குவதும் அவனது பிறசெயல்களும் தேவ ஆராதனை ஆகின்றன. அனைத்தும் இஷ்ட தேவதைக்கு உரியவென அவன் உணருகிறான். தன்னுடைய உடம்பைத்தானும் தனக்கு உரியதென்று நினையாது, தனது இஷ்டதேவதைக்கு உரியது எனக் கொண்டு அவ்வுடம்பிற்கு உணவு ஊட்டிப் பாதுகாக்கிறான். உடலானது காயப் பட்டோ பசிதாகத்தின் வாய்ப்பட்டோ வருந்துமாயின், அத்தகைய துன்பம் தனக்கல்லத் தெய்வத்துக்கு வந்ததாக நினைத்து அன்புக்குரிய இஷ்டதேவதையின் பொருட்டாக அவன் உடலைப் பேணுகிறான். உடலைத் தெய்வம் உறைகின்ற கோயிலாக மதிக்கிறான். அந்த நிலையிலே அவன் உடலுக்குச் செய்வன இஷ்டதேவதைக்குப் பூசனை ஆகின்றன. இருதயமாகிய பீடத்திலே நிவேதிப்பதற்கு ஏற்ற பரிசுத்தமானவற்றை மாத்திரமே அவன் உடலுக்குக் கொடுக்கிறான். இஷ்ட தேவதை உள்ளமாகிய கோயிலினுள்ளே அமர்ந்திருக்கிறதென இடைவிடாது சிந்திக்கும் சிந்தனையினாலே அவன் பலவாகிய உடற் பற்றுகளினின்றும் விடுபடுகிறான்.

தெய்வத்தோடு ஒவ்வொரு கணமும் வாழுகின்ற நிலைக்கு உண்மைப் பக்தியானது வழி நடத்துகின்றது. தெய்வம் நிலைத்திருக்க மற்றவை யெல்லாம் மறைந்து விடுகின்றன வாதலின், ஆண்டவனோடு தனித்து வாழும் நிலையிலே, மனக்கவலைகள் அற்றுப் போகின்றன. இந்த நிலை சிறப்புடையது. ஏனெனில் இது தெய்வதரிசனமாகிய முடிந்த நிலைக்கு வழியாகின்றது.

* * *

தெய்வத்தின் சமுகத்திலே சமீபமாக இருக்கிறோம் என்னும் எண்ணம் அன்பினாலே அடையப்படுகின்றது. அன்பானது தெய்வத்தையும் மனிதனையும் ஒன்று படுத்துகின்றது. இஷ்டதேவதையினிடத்திலே முழு மனதோடு கூடிய ஒரு வழிப்பட்ட அன்பு உதிக்குமாயின் அது வெள்ளம்போலக் கரை புரண்டோடி அறியாமை, ஒடுங்கிய சிந்தை, ஐயப்பாடு, தன்னல எண்ணம் என்னும் இவற்றை யெல்லாம் அடித்துக் கொண்டு போய் விடுகிறது. அப்பொழுது இஷ்ட தேவதை இருதயமாகிய பீடத்திலே பிரகாசிக்கும். காதலிக்கப் படும் கடவுள் ஒருவரைவிட ஏனைய பொருட்கள் எல்லாம் மதிப்பற்றுப்போய் விடுகின்ற படியால், உலகப் பொருட்கள் அனைத்தினையுந் துறத்தல் எளிதாய் விடுகின்றது. கடவுளே நித்தியப்பொருள், நிலையானபொருள், வேறுபாடற்றபொருள்; மற்றவையனைத்தும் தோன்றி மறை

வன. ஆண்டவன் சுயஞ்சோதியாகிய சித்துப்பொருள்; மற்றவை யனைத்தும் அழிந்துபோவன.

ஆண்டவனிடத்து வைக்கும் அன்பானது முயற்சியின்றி உலகப்பொருட்களைத் துறந்துவிடுவதற்கு வழியாகிறது. கிறிஸ்து நாதர் தமது பரலோகத் தந்தையாரிடத்து ஆழ்ந்த அன்பு செலுத்தினமையினாலே, பிசாசினுடைய சோதனைகளையெல்லாம் எதிர்த்து நிற்கக் கூடியவராயிருந்தார். தெய்வத்தினிடத்தில் முழுமனதோடு கூடிய அன்பு நிலைத்திருந்தால் உலகப் பொருட்கள் ஒன்றும் நம்மனத்தைக் கவரமாட்டா; அவற்றைத் துறப்பது எளிதாகும். "சுமையைத் தாங்குதல்" எனக் கிறிஸ்து நாதர் குறிப்பிட்டது இதனையேயாம். நாம் ஆண்டவனிடத்துப் பக்தி செலுத்தவேண்டும்; இடைவிடாது அவனைத் தியானிக்க வேண்டும். இதனால் நாம் பரிசுத்தமடைவோம்; பரிசுத்தமான பொருளைச் சிந்திப்பதினாலே, நம்மிடத்துள்ள அசுத்தங்கள் இயல்பாகவே கழுவப்படுகின்றன. ஆண்டவனுடைய திருவடிகளிலே அடைக்கலம் புகுந்து, நமது சுமையை அவனிடம் ஒப்படைத்து, அவனை நேசிப்போமாயின், நமது இருதயம் அவன்பாற் செல்லும்; நாம் இவ்வுலகத்தைப் பொருட்படுத்த மாட்டோம். அப்பொழுது நமது சுமை நம்மைவிட்டு நீங்கிவிடுகின்றது. இதுவே உண்மைத் துறவு; இதுவே விடுதலை.

* * *

உண்மைப் பக்தி உதிக்கும்போது பக்தனானவன் பணிவும் எங்கும் பரந்த அன்பும் உடையவனாகின்றான். காதலிக்கப்படும் தெய்வமே அனைத்தும் எனவும், தான் ஒரு பொருள் அல்ல எனவும் அவன் அறிகிறான். எங்கும் அன்புக்குரிய தெய்வத்தைக் காண்கிறான், அனைவர்க்கும் தொண்டனாகிறான், எல்லாப் பிராணிகள் வாயிலாகவும் கடவுளுக்குப் பணி செய்கிறான். "புல்லினும் பார்க்கப் பதிந்து, மரத்தினும் பார்க்க அசைவற்று நின்று, தனக்கென ஒரு மதிப்பைத் தேடாது, அனைவரையும் மதித்து நடக்கின்ற உயிரே ஆண்டவனுடைய திருநாமத்தை உச்சரிக்கும் தகுதி வாய்ந்தது. மரத்தினை நாம் வெட்டிவிட்டபோதிலுங்கூட அது வளர்ந்து நிழலளிக்கின்றது; நிழல் தருவது மரத்திற்கியல்பு. அதுபோல உண்மைப் பக்தனானவன் பிரதியுபகாரங் கருதாது ஆண்டவனிடத்து அன்பு செலுத்துகிறான். ஆண்டவனே அவனுக்கு உகந்த காதலிக்கப்படும் பொருள். பிரதி உபகாரம் கருதுகிற அன்பு உண்மையன்பல்ல; நாம் பிரதியுபகாரம் கருதுவோமாயின், ஆண்டவன் அகல நிற்பான். அன்பின் பொருட்டு அன்பு பாராட்டும் பொழுதுதான் உண்மைப் பக்தி உதிக்கின்றது. அப்பொழுது நாம் மவுனமாகவும் அமைதியாகவும் தொண்டு செய்கின்றோம். தன்னைப் பற்றிப் பேசுகிறவன் உண்மைத் தொண்டன் அல்ல. இதனைக் குறித்து ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் கூறும் உறுதி மொழிகள் சில வருமாறு:—

"உண்மைத் தொண்டர்கள் மவுனமாகத் தங்கள் தொண்டினை முடித்துக்கொண்டு மவுனமாகப் போய்விடுகின்றார்கள். மானிட சாதியின் பொருட்டாகத் தமது உயிரைத் தியாகஞ் செய்தோர் அநேகரை மானிட சாதி அறியாது.

"எவ்விடத்திலே உனது வேலையை வியந்து கூறவோ, உன்னைத் தைரியப் படுத்தவோ யாரும் இல்லையோ, எவ்விடத்திலே உன்னை எல்லோரும் வெறுக்கிறார்களோ, அவ்விடத்திலே செய்யும் தொண்டிலே அளவிறந்த பொறுமையும்,

நித்தியமான மனச்சாந்தியும் நீங்காத அச்சமின்மையும் பொருந்தி யிருக்கின்றன.

"ஆயிரம்பேர் பார்த்துஅதிசயப்படுகிற ஒருபெரிய வேலை எதிர்ப்படும் பொழுது, தன்னலமே குடிகொண்ட ஒரு கோழை நெஞ்சன்தானும், தன்னை ஒரு பெரிய வீரன் என்று காட்டுவதற்காகத் தன்னுயிரைத் தியாகஞ் செய்யச் சித்தமாய் நிற்பான்.

"யாரும் அறியாதபடி சிறியதொரு நன்மையைத்தானும் செய்பவன் எவனோ அவனே உண்மை வீரன். அவனே சுய நல எண்ணமின்றி மானுட சாதியின்பால் அன்பு செலுத்துபவன். அவனே உண்மையில் மனப் பாக்கியவான்."

* * *

எந்த முறையானது (தாசமார்க்கம் புத்திரமார்க்கம் முதலியன) உன்னை இஷ்டதேவதைக்கு மிகச் சமீபமாகக் கொண்டு செல்லுகிறதோ அந்த முறையைத் தெளிவு செய்துகொள். உன்னுடைய மனப்பாங்கிற்கு வேருகிய முறையிலே, அவனுக்குப் பணிசெய்ய முயல்வதினாலே, பக்தி மார்க்கம் தடைப்பட்டுப் போகும். உனது மனத்திற்கு ஆண்டவன் அன்பு நிறைந்த தந்தையாகக் காணப்படுகின்ருனா? அப்படியாயின் ஈன்றெடுத்த தந்தையினும் பார்க்க ஆண்டவனை மிக நெருங்கிய தந்தையாகக் கொண்டு, உன்னை ஆதரிக்கும்படியும், நல்லவழியிலே நடத்தும் படியும் அவனைக்கேள். உனது மனத்திற்கு ஆண்டவன் தாயாகக் காணப்பட்டால் நீ அவனுக்கு இன்னும் அண்மையாகப் போகலாம்; மற்றெல்லாரினும் பார்க்கத் தாயே ஒருவனுக்கு மிக நெருங்கிய பந்து. தந்தையைக் கண்டு சிற்சில வேளை அச்சமடைய நேரிடலாம்; தாயைக் கண்டு பிள்ளை அஞ்சுவதில்லை. குற்றஞ் செய்தாலும் தாய் பொறுத்து அன்பினோடு ஆதரிப்பாள்.

பாலகிருஷ்ணன், பாலியக் கிறிஸ்து என்றித்தகைய குழந்தை வடிவாக இஷ்டதேவதையைப் பாவனை செய்யலாம். இப்படி இந்தியாவிலே பலர் செய்வதுண்டு. தாய்போன்று தன்னலமின்றி நேசிக்கிற அன்பு மிக ஆழ்ந்தது; பரிசுத்தமானது. உயர்வைத் தருவது. இத்தகைய அன்புக் கடலிலே எவ்வளவு ஆழ்ந்து செல்லுகிருயோ அவ்வளவு ஞானத்தைப் பெறுவாய்; தெய்வத்தைக் குழந்தையாகப் பாவித்து அன்பு செலுத்து; அப்பொழுது ஒரு தீமையும் உன்னை அணுகாது. தேவகி தேவி கண்ணபிரானுடைய மகத்துவத்தையோ வல்லமையையோ கருதவில்லை; தனது தெய்வப் புதல்வனைச் சிறு குழந்தையாக மதித்துக் காப்பாற்றினாள்.

இத்தகைய பக்தி உள்ளத்தில் எழும் பொழுது, இருதயத்திலிருந்து அன்பும் வழிபாடும் இயல்பாகவே இஷ்ட தேவதையை நோக்கிச் செல்கின்றன. உருவத்தோடு கூடிய தெய்வவழிபாடு இன்றியும் உண்மைப் பக்தி அமையலாம். உண்மையோடும் ஊக்கத்தோடும் உனக்குள்ளே யிருக்கிற மெய்ப்பொருளைத் தேடுவாயாயின், அவ்வழியாகவும் நீ பக்திமான் ஆவாய். இஷ்டதேவதையிடத்தில் அன்பு செலுத்துவாயாக. தன்னலங் கருதாது பரிசுத்தத்தோடு உண்மையான தொண்டு புரிவாயாயின், நீ உண்மைப் பக்தியை அடைவாய்.

# ஆலய வழிபாடு முறை

(திரு. P. முத்தையா பிள்ளை)

ஆலயவழிபாடு என்பது ஆலயத்தில் வழிபடுதல் எனப் பொருள்படும். படு என்பது பாடு என்று நீண்டது. முறை என்றால் ஒழுங்கு என்பதாகும்.

ஆலயம் என்றால் என்ன? 'ஆ' என்றால் பசு என்று பொருள்படும்; பசுவாவது ஆன்மாவாகும். 'லயம்' என்பது ஒடுங்குதல் அல்லது தங்குகிற இடத்திற்கும் ஆகு பெயராய் வரும். ஆகவே ஆலம் எனும் பதம் ஜீவர்களின் மனம் ஒடுங்குகிற இடம் என்னும் பொருளைக் கொடுக்கிறது. இன்னும் ஆலயம் என்பதற்கு வீடு, தங்குமிடம் என்று பொருள் கூட்டிப் பொதுவாக வீட்டைக் குறிக்கும் சொல், சிறப்பாக இறைவன் வீட்டை, கோயிலை (கோ + இல்)க் குறிக்குஞ் சொல்லாகக் கொள்கிறோம். விடுதலை யளிக்கக் கூடிய வீடு என்ற சொல் இறைவனது வீட்டிற்குத்தான் முழுவதும் பொருந்துமே யல்லாது நம் வீட்டிற்கு எவ்வளவு தூரம் பொருந்தும்?

இன்னும் ஆன்மா தங்குகிற இடமாகிய நம் உடலே ஓர் ஆலயமாம். இந்த ஆலயமே வெளியில் காணும் கோயில்களை விடச் சிறந்த தென்றும், தன்னுள்ளே ஆன்ம தெரிசனங் காணமுடியாத நிலையில் அதற்கு உதவி யளிப்பதற்காகவே கோயில்கள் பலவும் கட்டப்பட்டன என்றும் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். நாம் வெளியில் பார்க்கும் கற்கோயில்களை விட மனிதர்களே சிறந்த கோயிலாவர்; உடற்கோயிலே சிறந்தது. ஆகவே மனிதர்களிடையே அன்பையும் பக்தியையும், கோயிலிற் செலுத்துவதைவிடப் பன்மடங்கு அதிகம்செலுத்தவேண்டும் என்பது தென்படவன்றோ மனிதர்களை "நடமாடும்கோயில்" என்றார் பெரியார்.

நடமாடும் கோயிலுக்குள்ள சிறப்பெல்லாம் அது நடமாடும் வரைதான்! ஆன்மா தங்கியிருக்கிறவரைதான். அன்றி இந்த வெறும் உடலுக்கா, இந்த நாற்ற நர உடம்புக்கா மதிப்பும் சிறப்பும்! இருதய கமலத்தில் இறைவன் தங்கியிருக்கிறார். அவர் அங்கு தங்கியிருக்கும் வரைதான் நம் உடல் 'நடமாடும் கோயிலாகும்.' இறைவன் நடமாடாவிட்டால் நாம் எங்கிருந்து நடமாட! அவன் ஆட்டுவிக்க நாம் ஆடுகிறோம். அந்த நிலையிற்றான் நம் உடலாகிய ஆலயத்திற்கு உள்ள சிறப்பெல்லாம். வினையின் பயனாய் வந்த இந்த உடல் முன் வினையை அனுபவிப்பதற்கும், பின் வினையைப் பண்படுத்திக் கொள்வதற்கும் ஏற்பட் டிருக்கிறது.

"வினைப்போதளவே தேகம் கண்டாய்,
வினைநீங்கில் தினைப்பொழுதும் நில்லாத்
[தேகம்"

அன்றோ நம் தேகம்.

முன் வினையின் பயனாய்ப் பெற்ற இவ்வுடலைக் கொண்டு பின் வினையை நாம் பண்படுத்திக்கொள்ள முடியும். அதற்காகவே நமக்கு உடலைக் கொடுத்த 'கோயிலுள்ளான்' அறிவையும் கொடுத்தான். நம் அறிவு அற்ப அறிவுதான்; அதை விசாலப்படுத்தவேண்டும். அதற்கென நமக்கு மனமொன்றையும் ஈந்தான். மனத்தையுடையவனுதலாலேயே மனி

தன் எனப் பெயர் பெற்ருன் மனிதன். இந்த மனம் ஒன்ருலேயே மனித வாழ்க்கை மேன்மையுற்றது மனம், வாக்கு காயம், என்ற திரிகரணங்களுள் நாம் சொல்லும் வரிசைப்படியே அதனதன் முக்கியம் இருக்கிறது. மனம் ஒன்றிருப்பதாற்ருன் நாம் தக்க செயல்களை நினைக்கவும் செய்யவும் கூடுகிறது. மனத்தால் நாம் நினைக்கிருேம். வடமொழியில் மனம் என்ற சொல்லின் மூலச்சொல் மன்-(To think) நினைப்பது என்பதாகும். மக்களுக்கும் மாக்களுக்குமுள்ள வித்தியாசம் யாதெனில் மக்களுக்கு மனமாகிய நினைக்கும் கருவியொன்றுண்டு; மாக்களுக்கு அவ்வொன்றில்லை. மக்கட்குப் பகுத்தறிவு உண்டு; மாக்கட்கு அந்த அறிவுதானில்லை. மனிதனுக்கு இந்த மனமும் இந்த அறிவும் இருப்பதாலேயே அவனுடைய பொறுப்பும் அதிகமாய்விட்டது. மனிதனுக்கு இவ்வுலகில் சுய ஆட்சியும், போதாதென்று உலக ஆட்சியும் கொடுத்த மனமும் அறிவும் மனிதனுடைய பொறுப்பையும் அதிகப்படுத்திவிட்டன. சுதந்திரத்துடன் பொறுப்பும் அதிகமாவதைத் தான் நாம் கண்கூடாகக் காண்கின்ருேமே! மனிதன் மனிதனய் வாழ வேண்டுமானல் அவன் தனக்குள்ள மனத்தினல் சிந்தித்து, அறிவினல் ஆராய்ந்து நல்லன தீயன அறிந்து, தன் வாழ்க்கையை நடாத்தவேண்டும். அவற்றை உபயோகப்படுத்தாத மனிதன் மனித உடலெடுத்த மிருகமேயாவான். தன் மனத்தால் மனிதன் முதலில் தன்னைத்தான் நினைத்துப் பின் தன் வாக்கை நினைத்து அதற்குப்பின் தன் சரீரத்தை நினைக்கவேண்டும். இதனல் தன்னையும் தெரியலாம், பிறவற்றையும் தெரிந்து கொள்ளலாம். இதுவே நம் சிற்றறிவைப் பேரறிவாக வளர்த்துக்கொள்வதற்கு வழியாகும்.

மனம், வாய், உடல் இம்மூன்றும் அழுக்குடையனவென்று நாம் அறிகிருேம்.

மனத்தின் அழுக்காவன: பொருமை, ஆசை, கோபம் முதலியன. இவ்வித அழுக்குகளை தியானம் என்ற நீரால் போக்கவேண்டும். கெட்டதை நினைக்கும் மனத்திற்கு நல்ல வேலை யொன்றைக் கொடுக்க வேண்டும். பொய்புரைத்தல், கோள்சொல்லுதல், பயனற்றன பேசுதல்முதலியன வாக்கின் அழுக்குகள். கெட்டதைப் பேசும் நாக்கிற்கு நல்ல வேலை யொன்றைக் கொடுக்க வேண்டும். பகவானைத் தோத்திரம் செய்வதைவிட மேலான வேலை நாக்கிற்கு ஏது?

உடலைப்பற்றிய அழுக்குகளாவன: துர்ச்செய்கைகள், அன்னியருக்கு உபத்திரவம் செய்தல் முதலியன. பூசை, வணக்கத்தால் சரீரத்தின் மூலம் வரும் அழுக்குகள் நீங்கும். இது சம்பந்தமாக அப்பர் சுவாமிகளது "தலையே நீ வணங்காய்" என்று துவங்கும் தேவாரம் ஞாபக மூட்டப்படலாம். அதில் திருநாவுக்கரசர் உடல், வாக்கு, உளம் இம்மூன்றிற்கும் தனித்தனியே ஒவ்வொன்றிற்கும் சிறப்பான வேலை யொன்றை யிடுகிருர். அது தான் நம்மிலுள்ள மலத்தை நீக்கிக் கொள்ளும் மார்க்கம்.

ஆலயம் செல்லும் ஒவ்வொரு ஜீவனும் திரிகரணமும் சுத்தமடையுமாறு தியானம், தோத்திரம், வணக்கம் இவற்றை முறையே பழகுதல் அவசியமாகும். வேண்டுதல் வேண்டாமையிலானடியை எங்ஙனம் எய்துவது? நமக்குள்ள விருப்பு வெறுப்பு இவைகள் நீங்க வேண்டும். இவை நீங்குவதற்கு நமக்குள்ள கண்மூடித்தனமான அஞ்ஞானம் நீங்கவேண்டும்; ஞானக்கண் திறக்க வேண்டும். ஞான ஒளி பரவ, வேண்டுதல் வேண்டாதன நம்மைவிட்டகலும்.

வந்தனை செய்வது பாலைக்காய்ச்சுவது போலாம். தோத்திரம் செய்வது காய்ச்சிய பால் தயிராவதற்காகப் புரையிடுவதை ஒக்கும். தியானம் செய்வதோ தோய்ந்த தயிரைக் கடைதலை யொக்கும். பாலைக் காய்ச்சிப் புரையூற்றி, தயிரைக் கடைந்தாற்றான் (வெண்ணெய்) நெய்வருவது போல வணக்கம், தியானம், தோத்திரம் (உடற்பணி) இம்மூன்றினுலும் கடவுள்-கோயிலுள்ளான் (கடம்-உடல், உள் - உள்ளான்) வெளிப்படுவான்.

மக்களுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவு "அவன் ஆண்டான் நான் அடிமை" என்ற உறவாகும். பாலில் நெய்யும், விறகில் தீயும், வித்தில் மரமும் மறைந்து கிடப்பதுபோல் நம் அஞ்ஞானத்தால் கடவுள் மறைந்துள்ளார். (அஞ்ஞானம் என்பது குறைவுபட்ட, முதிர்ச்சிபெறுத ஞானமேயொழிய ஞானமே யில்லாதது வல்ல.) பசு புல்லையும் தண்ணீரையும் உட்கொள்கிறது. அவையே பாலாக மாறி, பசுவின் உடல் முழுவதும் பரவியிருப்பதுபோல் கடவுள் 'அங்கிங்கெனுதபடி எங்கும்' நீக்கமற நிறைந்துள்ளான். ஆயினும் பால் பசுவின் மடியிலிருந்து வெளிப்படுவதுபோல, கடவுள் சிறப்பாக ஆலயத்தில் வெளிப்படுகிறுர்.

'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்னும் முதுமொழி தமிழ் நாட்டில் சர்வ சாதாரணமானதாகும். கோயிலில்லா ஊர் மனிதர் வாழ் ஊரே யில்லை யென்றும் அது விலங்குகள்வாழும் அருங் காடே யென்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் சொல்லிப் போந்தனர். மக்கள் வசிக்கும் ஊரில் ஆலயம் அவசியம் இருக்க வேண்டுமென்பதே கருத்து.

மக்களுக்குள்ள உடல், உளம், உயிர் இம் மூன்றினுக்கும் நோயுண்டு. மனதுக்குக் கவலையே நோயாகும். காயத்துக்குப் பல வியாதிகளும் நோயாகும். அஞ்ஞானமே உயிருக்குற்ற நோய். உடல், உளம், உயிர் இவைகட்கு நேரிடும் நோயைத் தீர்க்கவே கருணை கூர்ந்து ஏற்படுத்திய கடவுள் கோயில் கொண்டுள்ளான். கோயில் ஒரு (ஆஸ்பத்திரி) வைத்தியசாலையாகும்; ஆங்குள்ள வைத்தியர், அந்த வைத்திய நாதேஸ்வரன் தான்.

பெரிய கோயில்களை ஆலயங்களென்றும் சிறிய கோயில்களைத் தளிகளென்றும் சொல்வது வழக்கம்.

கோயிலுக்குள் நுழைந்ததும் முதலில் கொடிமரத்தையும் (துவஜஸ்தம்பம்) அடுத்தாற்போல் பலிபீடத்தையும் அதற்கும் அடுத்தாற்போல் நந்தியையும், இன்னும் உள்ளே மூலஸ்தானத்தில் இலிங்கத்தையும் வரிசைக் கிரமத்திற் காண்கிறோம். கொடிமரம் உறுதியாக நேராக உயர்ந்து நிமிர்ந்து நிற்கிறது. பலிபீடம் பாசத்தை அகற்ற வேண்டிய இடம். நம் பாசங்களை பலிபீடத்தில் நாம் பலியிட்டு விடவேண்டும். ரிஷபமாவது பசு; அதாவது உயிர். இலிங்கம் பதியாகும். ஆக மொத்தக் கருத்து என்னவெனில், மனதை ஒருமுகப்படுத்தி (உயர்ந்த நோக்கத்தில் திருப்பி), பாசத்தை அகற்றி பசுவாகிய நாம் பதியாகிய கடவுளைத் தரிசிக்கவேண்டும்.

திருமந்திரத்தில் திருமூலர் பின்வருமாறு தெரிவிக்கிறுர்:

" ஆய பசுபதிதான் அருள் சிவலிங்கமாம்
............பாசம் ஆகபலி பீடமாகும்
ஹரன்நிலை ஆயங்கொள் வார்க்கே."

விஷ்ணு ஆலயங்களிலும் மேற்சொன்ன வரிசைப்படியே கொடி மாம், பலிபீடம், கருடாழ்வார் மூலவர் ஆக அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கது.

பாசம் என்பது கயிறு. ஜீவர்களாகிய நமக்கு மண், பெண், பொன் இவைகள்

மேல் ஆசை யுண்டாக அவையே நம்மை இறுக்கிக் கட்டும் கயிறுக-பாசமாக - ஆய் விடுகின்றன. இந்தக் கயிறுகிய பாசத் தால் பசுவாகிய நாம் கட்டப்பட்டுள் ளோம். கட்டுண்ட பசுவை அக்கட்டி னின்றும் விடுவிக்கிறவன் பதியாவான். பசுவாகிய ஜீவர்கள் கடவுளைக் காணப் பாசத்தை முதலில் நீக்கவேண்டும் என்ப தைக் குறிக்கவும், ஞாபகப்படுத்தவுமே கோயிலில் பலிபீடத்துக்குப் பிறகு பசு இருக்கிறது. 'ஆசைக்கு அடியான் அகில போகத்துக்கும் அடியான்' என்பது பழ மொழி. தாயுமானுரும்,

'பொன்னை மாதரை பூமியை நாடிடேன்
என்னை நாடிய என் உயிர் நாதனே
உன்னை நாடுவன் உன்னருள் தூ வெளி
தன்னை நாடுவன் தன்னந்தனியனே.'

என்று கூறினர். பாசம் என்பது உலகம். உலகமாவது உலகப்பற்று. பாசத்தை ஒழிக்கவேண்டுமாயின் அதற்கு முதற்படி அதிகம் பேசாதிருத்தல்; பின்பு மோனம் சாதித்தல். அதிகம் பேசாதிருந்தால் மன அடக்கத்திற்கும் ஒடுக்கத்திற்கும் அது உதவும். சாந்த நிலை அதிகரிக்க அதிகரிக்க அறிவு விசாலமடையும். அறிவு விசாலிக்க விசாலிக்கப் பாசம் படிப்படியாக நீங்கிவரும். ஆகவே பலி பீடத்திற்கு வந்ததும் பாசம் என்ற ஆசையை ஒழித்தற்பொருட்டுப் பேசாது மௌனமா யிருக்கவேண்டும். இந்த மௌனம் வெறும் நாவடக்கத்தோடு மட்டும் நின்று விடக்கூடாது. உண் மையான மோன நிலைக்குக் காரணமா யிருப்பது "ஆசாநிகளம் துகளா" வதேயாம்.

பலிபீடத்திற் கடுத்தாற்போல் வீற் றிருப்பது நந்தி தேவராவர். நந்தி என் பது ஆநந்தி என்று பொருள் படும். சிவபெருமானின் சந்நிதியின் முன் எப் பொழுதும் இருந்துகொண்டு ஓய்வில் லாப் பேரானந்தத்தில் திளைத்துக் கொண்டே யிருக்கிறார் நந்திதேவர். சாதா ரணமாக இரு நெருங்கிய நண்பர்கள் கூடிப் பேசிக்கொண்டிருக்கும் போது அவர்கட்கு இடையே ஒருவரும் போய்க் குறுக்கிடல் பெருந்தவறல்லவா? அஃதே போல்தான் நந்தி தேவருக்கும் இலிங் கத்திற்கும் மத்தியில் போகக்கூடாதென் பதும்.

ஆலயத்துக்குள் ஐந்து மண்டபங்கள் உள. ஐந்தாவது மண்டபந்தான் 'கர்ப் பக் கிரஹம்' என்பது. தன்னை மறந்து நிற்கும் இடமே கர்ப்பக் கிரஹமாம். இந்நிலையைக் கர்ப்பக் கிரஹத்தில் அடை யுமுன் ஆலயத்துள் பிரவேசிக்கும் ஜீவர் களாகிய நாம் நால்வகை மாறுதல்களை யடையவேண்டும். அவற்றில் முதலா வது உலக வியவகாரத்தை மறத்தலாம். இதற்கு நிவிர்த்தி என்று பெயர். அடுத் ததாக பிரதிஷ்டா எனப்படும். செவ்வை யாக நிற்பதாகும். (திஷ்டா = சரீரத்தை ஆடாது நேர்ப்படுத்திக் கொள்ளுதல்) மூன்றாவது அறிவோடிருத்தல் (வித கமா). சாந்தி என்பது நாலாவது நிலை. கடைசியாகக் கர்ப்பக் கிரஹத்தில் அனுப விக்கவேண்டிய நிலை சாந்தி கடந்த நிலை யாகும். இந்நிலை அடங்கின நினைவை விடாது தன்னை மறந்த நிலையாகும்.

கர்ப்பக் கிரஹத்திற் கப்பாலிருப்பது மூலஸ்தானம். அதில் அருவுருவாகிய இலிங்கம் அல்லது உருவுள்ள விக்கிரஹம் இருக்கிறது. இலிங்கம் என்பது ஒடுங்கி வருவது என்று பொருள் படும். ('லிங்' = ஒடுங்குதல் 'கம்' = வருவது) ஆகவே இலிங்கமுள்ள ஆலயம் என்ற சொல்லுக்கு ஒடுங்கி வருகிற இடம் என்று பொருள் கொள்ளுதல் மிகவும் பொருத்தமாகும். இவ்வுலகம் அவனிட மிருந்து தோன்றி, அவனால் நின்று அவனிடம் போய் ஒடுங்குகிறது. இதை

ஓர் உதாரணம் மூலமாக விளக்குவோம். ஓர் ஏரிக்குள் ஒரு மண் ஜாடியை வைத்தால் மண் ஜாடி நீரால் நிரப்பப்பெற்று, நீரில் மூழ்கி, ஏரியின் அடியிற் சென்று நிற்கும். பிறகு அந்த ஜாடி எதனுற் செய்யப்பட்டதோ அந்த மண்ணும் நீரில் கறைந்து, ஜாடியின் உருவம் மறைய, நீர் நீரோடும், மண் மண்ணோடும் கலந்துவிடுவதுபோல நம் கண்முன் தோன்றும் உலகு (இதில் நாமும் சேர்ந்தவர்களென்று சொல்லவும் வேண்டுமா!) அவனுள்ளே தோன்றி, நின்று மறைகிறது.

இதுகாறும் போந்தவற்றுல் ஆலயம் என்றால் என்ன என்பதையும், ஆலயத்தின் முக்கிய பகுதிகளின் உண்மைப் பொருள்களையும் விளக்கினேம். இனி வழிபாடு, வழிபடுதல், வழிபடு முறை என்பனவற்றை விவரிப்போம்.

---

# பொன்செய்யும் மருந்து - கற்பனைக்கதை

(ரா. ராமகிருஷ்ணன், எம். ஏ., எல். டி)

**நாங்கள்** ஏறியிருந்த இரயில் வண்டியில் துறவி யொருவர் வீற்றிருந்தார். அவரது கண்கள் கருணைக் குளங்கள் போல ஆழ்ந்திருந்தன. அவரது முகம் பிரகாசமாயிருந்தது. அவர் உள்ளம் இன்பத்தில் தோய்ந்திருந்தது. இளைஞர்களாகிய எங்களுடன் அவர் தாமே வலுவில் பேசத் தொடங்கினர். எங்களுடன் சிரித்து உல்லாசமாகப் பொழுது போக்கலானர். துறவியென்றால் மௌனமாயிருப்பார், பிறர் தம்மை அணுகவும் விடமாட்டார், சிரிக்கமாட்டார் என்றெல்லாம் எண்ணியிருந்த எங்களுக்கு இத்துறவி வியப்பையளித்தார். நகைச்சுவை அவரிடம் ததும்பி வெளிவந்தது.

எங்கள் கூட்டத்தைச் சேர்ந்த இரவிசங்கர் ஒருவர் மட்டும் துறவியுடன் வார்த்தையாடவில்லை. ஆனல் துறவி அவரைச் சும்மா விட்டுவிட எண்ணவில்லை. இரவிசங்கரை நோக்கி, "தம்பீ! நீமட்டும் ஏன் எங்கள் குதூகலப் பேச்சில் கலந்துகொள்ளவில்லை?" என்று வினவினர்.

"ஐயா! உண்மையை உரைப்பதற்காக என்னை மன்னியுங்கள். நீங்கள் சமய வாழ்க்கையை மேற்கொண்டவர்கள். நான் உலக வாழ்வில் ஈடுபட்டுள்ளவன். எனக்குச் சமயத்தில் பற்றில்லை. ஆதலால் நம்மிருவருக்கு மிடையே தொடர்பு ஏது மேற்பட வழி இல்லையல்லவா?" என்றார் இரவிசங்கர்.

"அது சரி! சமய வாழ்வில் உனக்குப் பற்றில்லை யென்று கூறுகிறாய்? உலக வாழ்வில் உனக்குப் பற்று இருக்கிறதா, இல்லையா? தற்கொலை செய்துகொண்டு உலக வாழ்வை நீ முடித்துக் கொள்ளப் போவதில்லையே?" என்றார் துறவி.

"உலக வாழ்வில் நான் பெரும் பற்றுடையவன். என் குடும்பம் பெரியது. குடும்பப் போஷணையிலும் உத்தியோகக் கடமைகளைச் செய்வதிலுமே என் முழுக் காலமும் செலவழிந்து போகிறது. இவற்றையெல்லாம் விட்டு சமய வாழ்வில் ஈடுபட எனக்கு அவகாசமில்லை. சமயப் பற்றுள்ளவனக வெளி வேஷம் போடுவதில் எனக்கு இஷ்டமில்லை" என்றார் இரவிசங்கர்.

துறவி கல கல வென்று நகைத்தார். "தம்பீ! வாழ்வில் பற்றுள்ளவன் சமயத்திலும் பற்றுள்ளவன்தான். சமயத்தைப்

பற்றி நீ தவருன எண்ணம் கொண்டிருக்கிருய். சமய வாழ்வை மேற்கொள்பவன் உலகக் கடமைகளை விட்டுவிட வேண்டுமென்று உன்னிடம் யார் கூறினர்? உன் கடமை யொன்றையும் நீ கைவிட வேண்டாம். உன் குடும்பத்தைத் தள்ளிவைக்க வேண்டாம். சமய வாழ்வை மேற்கொண்டவனே உலகக் கடமையை நன்ருகச் செய்யக்கூடியவனுகிருன். வேலையின் தத்துவத்தை அவன் அறிந்து கொள்கிருன். சமயம் என்பது பித்தளையைப் பொன்னுக்கும் மருந்து. சமய வாழ்வை மேற்கொள்ளும் இல்லறவாசி முன்போலவே தன் கடமைகளைச் செய்கிருன். ஏன், முன்னைவிட இன்னமும் நன்ருகச் செய்கிருன். ஆனுல் அவன் மனப்போக்கு மட்டும் மாறுகின்றது. சுயநலம், பரபரப்பு, மோகம் இவற்றுடன் செய்துவந்த வேலையை இப்பொழுது அவன் அமைதியுடனும் ஆழ்ந்த சிரத்தையுடனும் இனிது நிறைவேற்றுகின்ருன். சமய வாழ்வை மேற் கொண்டவனே உலகக் கடமைகளைச் செவ்வனே செய்து முடிப்பான்" என்ருர்.

"உலக வாழ்வுக்கு முரணுனதே சமய வாழ்வு என்றல்லவோ இதுவரையில் எண்ணியிருந்தேன். உலக வாழ்வைப் பரிபூரண அளவிற்குச் சாத்திய மாக்குவதே சமய வாழ்வென்று ஒருவரும் எனக்குப் புகட்ட வில்லையே?" என்ருர் இரவிசங்கர்.

"மனித வாழ்வை இரண்டாகப் பிரித்து, ஒன்றை உலக வாழ்வென்றும் மற்றதைச் சமய வாழ்வென்றும் தனித்து வைப்பது சரியாகாது. நம் வாழ்வை இயக்கிவரும் பரம்பொருள் காலையிலும் மாலையிலும் (அதாவது மக்கள் பொதுவாக ஈசனைச் சிந்திக்கும் சந்திவேளைகளில்) மட்டுந்தானு நம்மிடம் இருக்கிருர்? மற்றவேளைகளில் நம்மிடமிருந்து தூரப்போகிருரா? கோயிலிலும் பூஜை அறையிலும் மட்டுந்தானு அவர் இருக்கிருர்? வீட்டிலும் உத்தியோக சாலையிலும் அவர் இல்லையா? நமது மதத்தின் ஆதார நூலாகிற பகவத் கீதையைப் பகவான் அமைதி நிறைந்த ஆசிரமத்தின் தனிமையிலா போதித்தார்? இல்லையே! போர்க்களத்திலன்ருே போதித்தார்! அதன் தத்துவத்தை அறிந்து கொள். உலகக் கடமைகளையெல்லாம் முடித்த பிறகு, அறுபது வயதான பிறகு, மதவாழ்வை ஏற்கலாம் என எண்ணுவோர் மதியீனராவர். மனிதன் பிறக்கும் பொழுதே கடவுளுடன் தொடர்பு கொண்டே பிறக்கிருன். தாய் குழந்தையைப் பேணுமிடத்தில், சிறுவன் கல்விகற்கும் பாடசாலையில், இளைஞர் இல்லறத்தை ஏற்கும் விவாக மண்டபத்தில், மாந்தர் உழைக்கும் தொழிற் சாலையில்—எல்லா விடங்களிலும் மதத்திற்கு இடமுண்டு. வாழ்வு எவ்வளவு விரிந்ததோ அவ்வளவிற்கு விரிந்ததுதான் மதமும். சமய நோக்குடனேயே எச்சிறு காரியத்தையும் செய்யவேண்டும். செய்வன திருந்தச் செய்வதுதான் மதத்தின் தத்துவம். சமயமென்பது மனப்போக்கைக் குறிப்பதே யொழிய உடையையும் சின்னத்தையும் குறிப்பதாகாது. வாழ்வு நீண்டதொரு யக்ஞம். பகவானுக்கு அர்ப்பணமாக அந்த யக்ஞத்தை நிறைவேற்ற வேண்டும். வாழ்வின் ஒவ்வொரு செய்கையும், மெய், வாக்கு, மனம் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு முயற்சியும், அந்த யக்ஞத்தில் செய்யப்படும் ஆஹுதியேயாகும்" என்ருர் துறவி.

* * *

நாட்கள் பல சென்றன. நாங்கள் துறவியரை மறந்தோம்.

இரவிசங்கருக்கு மேலும் மேலும் உயர்ந்த உத்தியோகங்கள் கிடைத்து வந்தன. அரசாங்கக் காரியதரிசி யெனும்

கிடைத்தற்கரிய பதவி அவருக்குக் கிடைத்தது.

சென்ற வருஷம் அரசாங்கத்தில் முக்கிய உத்தியோகம் ஒன்று காலியாயிற்று. அந்த உத்தியோகத்திற்குத் தக்க மனிதரை நியமிப்பது இரவிசங்கரின் உரிமையாயிருந்தது. அவ்வுத்தியோகத்திற்கு ஏற்ற மனிதர் சியாமசுந்தர் என்பவர் ஒருவர்தான்.

ஆனால் சியாமசுந்தரின் குடும்பத்திற்கும் இரவிசங்கரின் குடும்பத்திற்கும் வெகு நாளைய பகை இருந்து வந்தது. ஆதலால் சியாமசுந்தருக்கு அப்பதவி கிடைக்காது என்று அவரும் மற்ற அனைவரும் எண்ணியிருந்தனர். சியாமசுந்தர் அவ்வேலைக்காக விண்ணப்பமும் கூடப் போடவில்லை.

விந்தையினும் விந்தை! ஒருநாள் காலையில் சியாமசுந்தருக்கு இரவிசங்கரிடமிருந்து அவ்வுத்தியோக நியமன உத்திரவு வந்து சேர்ந்தது! சியாமசுந்தரே தம் கண்களை நம்பக்கூடவில்லை.

இச்செய்தி பத்திரிகைகளிலும் பிரசுரமாயிருந்தது. அதைப் படித்த நான் உடனே இரவிசங்கரிடம் சென்றேன்.

"என்ன காரியம் செய்தாய், இரவி! உன் புத்தி கலங்கிவிட்டதா? உன் குடும்பத்திற்கு அவமானத்தை யன்றோ தேடினாய்? உன் முன்னோர்களின் ஆன்மாக்களும் கூட இன்று சஞ்சலமடையுமே! உன் குடும்ப விரோதிக்கா இப்பெரும் பதவியைத் தருவது! உன் பந்துக்களனைவரும் உன்னை ஏசுவார்களே!" என்று கூறினேன்.

"நண்பா! ஏன் பதறுகிறாய்? இதில் பதட்டத்திற்கு என்ன இடமிருக்கிறது? வேலைக்குச் சிறந்தவர் சியாமசுந்தரே என்பதை யாவரும் அறிவர். அவருக்கு அவ்வேலையைக் கொடுப்பதால் நாடு நலமுறுமெனில் அதை அவருக்குக் கொடுப்பதில் தடை என்னவுண்டு? குடும்பப் பகை இதில் குறுக்கிடுவானேன்?" என்றார் இரவிசங்கர்.

"நல்ல பேச்சு! உன் முட்டாள்தனத்தை மறைக்கவா பார்க்கிறாய், இரவி! மூன்று வருஷங்களுக்கு முன் இதே மாதிரியான வேலையொன்று காலியான பொழுது அவ்வேலை சியாமசுந்தருக்குக் கிடைக்காமற் செய்ய நீயே முயற்சி செய்யவில்லையா? இந்த உன் மாறுதலுக்குக் காரணம் யாதோ?" என்று வினவினேன்.

---

# அஸ்ஸிஸியைச் சார்ந்த பிரான்ஸிஸ் ஞானியார்

(தொடர்ச்சி)

**பிரான்ஸிஸ்ஸைப்** பின்பற்றி யொழுகிய சங்கத்தார் கிராமம் கிராமமாகத் திரிந்து வரும்போதே, "நீங்கள் அப்பலாரும் யாத்திரீகர்களும்" என்று ஆனந்தமாகக் கூறிக்கொண்டே சென்றனர். முடிந்தவரையில் தங்களது வயிற்றுப் பிழைப்புக்கு வேண்டியவற்றைத் தங்களது கையுழைப்பினாலேயே சம்பாதித்து வந்தனர். முடியாதபோது, சொத்துடையவர்களிடமிருந்து பிச்சை பெற்று வாழ்ந்தனர். அவர்க்குப் பிறர் பிச்சையிட்டாலும் பிச்சையிட மறுத்தாலும், அவர்கள் முகமலர்ந்தவரா யிருப்பார்; அவர்கள் எங்கே சென்றாலும், பகவானது ஆசீர்

வாதத்தை அளியாது ஒருக்காலும் சென்றதில்லை.

பிரான்ஸிஸ் ஞானியார் தமது சகோதரர்களை, ஒரு கூரைக்குக்கீழ் சில விதிகட்கு அடங்கிவாழும் துறவியாது சங்கத்தாரைப்போல் நினைத்ததில்லை: இயேசு கிறிஸ்து நாதர் தமது சிஷ்யர்களோடு காலிலீக்கு அருகே சென்றதுபோல, ஒரு யாத்ரிகர்களது கூட்டம் அம்பிரியன் மலைக்கு அருகே செல்வதாகவே நினைத்தார். "ஒவ்வொருவரும் தமது தமது மனசாக்ஷியின் ஆணைப்படியே தமது வாழ்க்கையை நடத்தும் சுதந்திரம் பெற வேண்டும்" என்று அவர் கூறுவார். மடங்களிலுள்ள முனிவர்கட்கு அதுவரை வழக்கமாக ஏற்பட்டு வந்த விதிகட்கு விலகி அவர் நடந்தமையினால்தான் பிரான்ஸிஸ் என்பார்க்கு "புது நெறிகண்டார்" என்னும் பட்டம் கிடைப்பதாயிற்று.

பிரான்ஸிஸ் மஹானையும் அவரைப்பின்பற்றி வாழ்ந்தோரையும் எல்லோரும் நேசித்ததின் காரணம் யாதெனில், அவர்கள் அசாதாரண முறையில் ஆனந்தமாக வாழ்ந்தனர். அவர்கட்குச் சிஷ்யர்களாகவோ பின்பற்றுவாராகவோ அமைந்தவர்கட்கு அவர்கள் முதல் முதலாக அளித்த நன்கொடையாவது இந்த ஆனந்தமே, வாழ்க்கையில் ஓர் ஊக்கமே. அவர்களுடைய ஆனந்தம் அலையலையாகப் பரவி, இளம் முனிவர்களது உள்ளத்தும் மகிழ்ச்சி வடிவமாகக் கிளர்ந்தது. அவர்கள் வழிபடும்போது அது ஆனந்த வடிவமாகப் பூத்தது. பிரான்ஸிஸ் மஹான் தம்மைச் சேர்ந்தவர்களிடம் "சகோதரர்கள் தமது மனத்தில் ஊறும் ஆனந்தத்தால் தோன்றும் முக ஒளியைத் துயரம் எனும் மேகம் மறைத்துவிட்டது போல வெளிக்குக் காட்டாதபடிப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்; பகவானை நினைப்பதினால் எழும் ஆனந்தமும் களிப்பும், தகுதியால் வரும் மரியாதையும் குடிகொண்டவரா யிருக்கட்டும்" என்று கூறிக் குதூகலத்தை மூட்டுவார். மீண்டும் அவர் கூறுவார்:—"உங்களது துய்ரத்தை உங்கட்கும் உங்களது பகவானுக்கும் இடையே வைத்துக் கொள்ளுங்கள்; ஆனால் என் முன்னும் உலகத்தார் முன்னும் பகவத் ஆனந்தத்தையே காட்டுங்கள். பகவானது அருமைக் குமாரனை ஒருவன் சஞ்சலமடைந்த, துயரமடைந்த முகத்தோடு சஞ்சரிப்பது அவனது தகுதிக்கு ஏற்றதாகாது; ஏனெனில் பகவானுக்கு அவனைத் தாங்கவும், அவனை நல்ல நிலையில் வைக்கவும், அவனுக்கு அவசியமான அடைக்கலம் அளிக்கவும் சக்தியில்லாததுபோலத் தோன்றும்படி அது செய்கிறது. முகவாட்டத்தோடு திரிதல் பகவானிடத்து நம்பிக்கை யின்மையைப் புலப்படுத்துகிறது."

சகோதரர்கள் இக்கட்டளைகட்கு இணங்கி நடக்க ஆசைகொண்டார்கள்; பகவானைப்பற்றிப் பாடுகின்றவர்களைப் போல, அவர்கள் புன்சிரிப்போடும் பாட்டோடும் ஐரோப்பா முழுதும் திரிந்தார்கள்! இடையிடையே அவர்களது உள்ளத்தின் தன்மையைச் சாதாரண மக்கள் அறியாது போனது முண்டு.

"உண்மை யாதெனில், நாமாக மனப்பூர்வமாகத் துறந்து விட்டோமானால், முழு சுதந்திர உணர்ச்சியின் பயனாக, நிகரற்ற ஒரு மனமகிழ்ச்சியும் உல்லாசமும் தோன்றுகின்றன என்பதே." இத்தகைய அனுபவத்தைச் சுவைத்தபின் அவன் அதை ஒருக்காலும் மறக்க முடியாது. பிரான்ஸிஸ் சங்கத்தாரது மகிழ்ச்சியிலும் களிப்பிலும் ஒரு பகுதியே அவர்களது மனப்பூர்வமான தியாகத்திலிருந்து ஏற்படுகின்றது. தமது மாளிகையையும் தமது நகைகளையும் தமது விலையுயர்ந்த ஆடைகளையும் மற்றும் தம்

மைப் பிறர் பகைக்கும்படிக்கும் தம்மீது பொறாமை கொள்ளும்படிக்கும் செய்த ஆடம்பரங்களையும் துறந்த ஒரு பிரபு "இப்போது கவலைக்கிடமான எதுவும் எனக்கில்லை. உண்மையான சந்தோஷ மடைந்தது இப்போதுதான். எனது பூர்வாசிரம அயலார்கள் முன்பு என்னைத் தங்கட்கு சமமாக நினைத்து, என்னைக் கண்டு அஞ்சி, என்னைவிட்டு விலக நினைத்தவர்கள் என்னை இத்துறவி நிலையில் வரவேற்கிறார்கள்" என்று கூறினர்.

ஒரு பெரியார் கூறியபடி, "இந்த எளிமை நெஞ்சுடைய துறவியரைச் சுற்றி வீசிய மெல்லிய ஞானப் பூங்காற்று, சாதாரண மக்கள் கண்டறியாத ஒரு தேசத்தினின்றும் வீசுவதாயிற்று." பின்னும் அவர் கூறியதாவது:—"பல பிரபுக்களும் உயர்குடிப் பிறந்தோரும் உலகத்தை விட்டோடி, பிரான்ஸிஸ்ஸையே புகலாகப் பற்றியுள்ளனர். அவர்கள் உலக விவகாரங்களைப்பற்றி ஒரு சிறிதும் கவலை கொள்வதில்லை. அவர்களது ஒரே நோக்கமும் வாழ்க்கைக் குறிக்கோளுமாவது, தங்களது ஆன்மாக்களையும் பிறரது ஆன்மாக்களையும் உலகத் தளைகளினின்றும் உலக டம்பங்களினின்றும் விடுவித்தலேயாம். அவர்கள் ஒருக்காலும் சண்டை போடுவதில்லை; ஒரே நெஞ்சும் ஒரே மனதும் உடையவராகின்றனர். கிறிஸ்துநாதர் செய்ததுபோல, அவர்கள் பகலில் கிராமங்களில் பிரசங்கம் செய்கின்றனர். இரவில் மலைகட்கும் தனியிடங்கட்கும் தியானம் பண்ணச் செல்கின்றனர்." இன்னொரு மதபோதகர் அவர்களைப் பற்றிக் கூறியதாவது:— "இச் சிறிய சகோதரர்கள் தங்களது ஆனந்தமான மனப்பான்மையை உலக முழுவதும் நிரப்பிவிடுகின்றனர். அவர்களிடம் உடைமை இல்லை. சுருக்கமாக ஆடையுள்ளது; வெறுங்காலோடு சஞ்சரிக்கின்றனர்; இவர்களே உண்மையான தாழ்வுக்கு (பணிவுக்கு) மிக வுயர்ந்த மாதிரியாகின்றனர். தமது மெய்வருந்த உழைப்பில் சம்பாதிப்பதையோ அல்லது பிறர் அவர்க்குக் கொடுப்பதையோ மட்டும் உண்கின்றனர்; குடிக்கின்றனர். மறுநாளைக்கென்று உணவு சேர்த்துக்கொள்வதில்லை; ஏனெனில் "அவ்வாறு சேமித்து வைத்தல் பகவானிடத்து நம்பிக்கையின்மையை வெளிக்காட்டுவதுபோலத் தோன்றுகிறது. மேலும், நாங்கள் எடுத்துக்கொண்ட விரதத்திற்கிணங்க, எங்களுக்கு உண்மையில் அவசியமல்லாத எல்லா உணவையும் உடையையும் எங்களிலும் மிக்க அவசியமுடையவர்க்குக் கொடுத்து விடல் வேண்டும்.

பிரான்ஸிஸ் ஒருக்காலும் தத்துவம் பேசிக்கொண் டிருக்கமாட்டார். வாழ்க்கையை நடத்திக்கொண்டிருப்பார். அவர் தமது நடத்தையைப் பிரித்துப் பிரித்துப் பார்த்து ஆராயமாட்டார். அவர் தமது நெஞ்சு ஆணையிடுமாறே ஒழுகுவார். கூட்டங் கூட்டமாக மக்கள் அவரைக் காணுவதற்கு விரைகுவர்; ஏனெனில் அத் துறவிகளின் களிப்பும் நல்லெண்ணமும், அவர்கள் பிரசங்கம் செய்யும் இடங்களிலெல்லாம் உண்மையான ஞான தாகத்தை அலையெனப்பரந்து செல்லும்படிச் செய்தன. பிரான்ஸிஸிக்கு அன்பு என்பதே தவறாது வழிகாட்டும் சோதியாயிற்று; சந்தேகம் மிகுந்த கொடிய உலகத்தின் வழியாகச் செல்லும்போது, அவரது வாழ்க்கையை அடக்கியாண்டது அந்த அன்பின் சக்தியொன்றே யாயிற்று.

பிரான்ஸிஸ் மஹான் ஒருமுறை கூறினதாவது:—"உதாரகுண முடைமையென்பது ஒரு டம்பமான வார்த்தையாகும்; ஆனால், உதாரமான செயலொன்றைச் செய்யும் போது, செய்பவர்கள் தங்களி

டத்துப் பகவான் தமது உதார குணத்தால் கொழுத்து வைத்திருக்கும் பொருளையே பிறர்க்கு (பகவானது மற்ற மக்கட்கு)ப் பங்கிட்டுக் கொடுக்கும் போதும், அதைப் பெறுபவர்களை விடத் தாங்கள் மேலாவார் என்ற உணர்ச்சியை அச்செயல் அவர்களிடத்து உண்டாக்குகின்றதன்றோ?" பின்னும் அவர் கூறுகிறார்:— "பகவான் உனக்கு மூச்சைக் கொடுத்து மூச்சை இழுத்து விடும்படி இடங்கொடுத்தாலன்றி உயிர் வாழவும் முடியாத நீ 'நான் கொடுத்து விட்டேன்' என்று ஒருக்காலும் சொல்லாதே. உனக்கு வேண்டிய அளவிற்கு அதிகமாக உன்னிடமுள்ள ஏராளமான பொருளிலிருந்து கொடுப்பது தகுமா? பைபிளில் 'ஜோப்' கதையில், அவர் 'கஷ்டப்பட்டவனுக்காகக் கண்ணீர் சிந்தி, ஏழைகட்கு எனது பொருளை வழங்கவில்லையா?' என்னும் போது, தமது (ஏறக்குறைய) அளவற்ற செல்வத்திலிருந்து ஒரு பிச்சைக்காரனுக்குத் தருமஞ் செய்ததைத் தாமே குறிப்பிடுகிறானன்றோ? இவ்வாறு பகவானிடம் அப்பெரியார் முறையிடுவதன் காரணம், அவர்க்குப் பலவித துயரங்கள் நேர்ந்ததும், தாம் ஏழைகட்கு இரங்கித் தருமஞ் செய்ததற்காக அத்துயரங்களைத் தமக்குப் பகவான் போக்கியிருக்கவேண்டும் என்று நினைப்பதும் அல்லவா? தமக்குச் சொந்தமில்லாததும் பகவானுக்குச் சொந்தமுள்ளதும் ஆன உடைமைகளைக் கொண்டு தாம் இயற்றிய செயலைப் பகவான் அங்கீகரிக்க வேண்டு மென்று விரும்பிய போது, அவர் தமது செயலில் திருப்தியடைவதினாலும் தாமே நல்ல தருமச் செயலைச் செய்ததாகக் கருதுவதினாலும், ஆணவத்தின் வசப்பட்டார் என்பது விளங்கவில்லையா?"

ஒருகாலத்தில் மஹான் பிரான்ஸிஸ் தாம் அணிந்திருந்த மேலங்கியை ஏறக்குறையக் குருடாயிருந்த ஓர் ஏழை மாதிற்குக் கொடுக்கப்போனார். அவ்வமயம் அவரைப் பின்பற்றிய அன்பர்களில் ஒருவர் அவரது உதாரகுணத்தைக் குறை கூறிப் பேசினார்; அதற்காக பிரான்ஸிஸ் அவரையே அந்த அங்கியை எடுத்துக்கொண்டு அவ் வேழை மாதினிடம் சென்று, "நல்ல நங்கையீர்! இந்த அங்கியை நீர் யாரிடம் பத்திரமாக வைத்திருக்கும்படி ஒப்பித்திருந்தீரோ, அந்த ஏழை மனிதன் இவ்வளவுகாலம் தன்னிடம் கடனாகக் கொடுத்து வைத்திருந்ததற்காக உமக்கு நன்றி செலுத்துகிறான். மறுபடியும் உம்முடைய சொந்தப் பொருளை நீர் மகிழ்ந்து பெற்றுக்கொள்ளுமாறு உம்மைப் பெரிதும் வேண்டுகிறார்" என்று சொல்லிக் கொடுத்துவிட்டு வரும்படி செய்தார்.

மீண்டும் பிரான்ஸிஸ் கூறுவார்:— "ஏழைகட்கு அன்னமிடுவோரும், செயல்களைச் செய்வோரும் தண்டிக்கப்படுவது, பிறருடைய பகைமையினாலும் கெட்ட எண்ணத்தாலும் இவைகளை யொட்டிய வேறு காரணங்களாலும் அல்ல; தாம் ஒழுங்கான நிலைமையிலிருப்பதாக ஓர் உணர்ச்சி மறைவாக வஞ்சமாக இவர்களது உள்ளத்து எழுந்து, ஒரு போர்வை மாதிரி அவர்கட்குச் சூட்டைக் கொடுப்பதினால், அவர்கள் 'நான் செய்த செயல்களைப் பாருங்கள்! அவைகள் நல்லவனல்லவா?' என்று சொல்லும் ஆணவத் தடிப்புக்கு உள்ளாகிறார்கள்; இதுவே அவர்களைப் பன்முறையும் தண்டிக்கிறது."

ஸமூகத்தாரின் உயிரை உறிஞ்சியே இத்துறவிகள் வாழக்கூடாது என்பது பிரான்ஸிஸ் மஹானின் நோக்கம் என்பதையும் மறந்துவிடக்கூடாது. அவர்கள் பிச்சை பெறுவதற்குப் பதிலாகத் தங்களது ஞானத்தையும், அகமகிழ்ச்சியையும் நோயாளர்க்கு வேண்டிய சிகிச்சையையும்,

இன்னும் பலவகைகளில் அவர்க்குத் தொண்டு செய்யும்படிக்கும், மேலும், சமயம் கிடைக்குமானல் தாம் இச்சங்கத்தைச் சேருமுன்பு பழகியிருந்த தொழில்களை இயற்றி ஒருநாளைக்குப் போதுமான உணவையும் உடையையும் பெறும்படிக்கும் கட்டளையிட் டிருந்தார். வருங்காலத்தில் ஏற்படக்கூடிய ஓர் அவசியத்திற்காக முன்னரே தொகுத்து வைத்துக்கொள்ளும் எண்ணத்துடன் பணத்தையோ அதற்குச் சம விலையுள்ள வேறொரு பொருளையோ அவர்கள் ஒருக்காலும் பெறக்கூடாது என்றும் விதித்திருந்தார்.

இன்னும் இச்சங்கத்தார்க்கு ஏற்பட்ட பலவிதச் சோதனைகளையும் பற்றிக் கூறுவதெனில் கதை பெருகும். பின்காலத்தில் பிரான்ஸிஸ் மஹான் கண்ட ஒரு ஞானக் காட்சியில், அவரது திவ்விய உள்ளம் இயேசுநாதரது திவ்விய ஆன்மாவோடு ஒன்றித்து விட்டமையால், அன்று அவருடைய உடலில் இயேசுநாதரது திருமேனியில் ஏற்பட்ட சிலுவையிலறைந்ததினுல் ஏற்பட்ட புண்களே தோன்றி, அவரது ஆயுள் முடியும்வரையும் அழியாது நின்றன.

இதுவரை கூறியது பிரான்ஸிஸ் மஹானது திவ்விய சரித்திரத்தின் விளிம்பேயாகும். வறுமை நங்கையின் உண்மையான பணியாளராயும் இயேசுவின் மெய்த்தொண்டராயும் வாழ்ந்த இப்பெரியாரது வாழ்க்கை இன்றும் பல்லாயிர மக்கட்கு ஞானப் பெருக்கத்தையும் ஆசீர்வாதத்தையும் பெறுவதற்குத் துணையாயிருக்கின்றது என்பதே போதும்.

---

# ஸ்ரீ துரியாநந்த சுவாமிகளது கடிதம்

ஸ்ரீ ஹரி : சரணம்

கன்கல்

14-5-13

அன்புகந்த ஸ்ர —

உன்னுடைய அருந்தேதிக் கடிதங் கிடைக்கப் பெற்று மிகுந்த ஆனந்தமடைந்தேன். * * *

'उद्धरेदात्मनात्मानं' 'தன் கையே தனக்குதவி'. தன்னைத்தானே தான் உயர்த்திக் கொள்ள வேண்டும். சோம்பலுக்கு ஒரு நாளும் இடங்கொடாதே. ஏனென்றால் தனக்குத்தானே எவ்வாறு துணையோ, அதுபோல் தனக்குச் சத்ருவும் தான். மேலும்',

नामुत्र हि सहायार्थं पिता माता च तिष्ठतः ।
न पुत्रो दारं न ज्ञातिः धर्मस्तिष्ठति केवलः ॥

'பிதா, மாதா, புத்ரர், பரிவாரம், சுற்றம் முதலான ஒருவரும் நமக்குப் பரலோகத்திற்கு ஸஹாயம் செய்யமாட்டார்கள். தர்மம் ஒன்று தான் நமக்கு உற்ற துணை'

இதை யதார்த்தமாக வாழ்விற் கண்டறிய வேண்டும். ஈச்வரன் உங்களுக்கு சகாயமா யிருப்பார். ஒரு பயமுமில்லை.
* * *

இங்ஙனம்,

துரியானந்தர்.

---

# நமது சிகர ஜோதி

இப்பகுதியில்:—ஸ்ரீ பரமானந்த சுவாமிகள்—சமீபத்தில் மஹாசமாதி யடைந்த ஸ்ரீ பரமானந்த சுவாமிகளின் சரித்திரச் சுருக்கமும், அவரது கவிதை களில் சில வற்றின் மொழி பெயர்ப்பும் இக் கட்டுரையில் வெளிவந்துளது. ஸ்ரீ விபுலானந்த சுவாமிகளால் எழுதப்பட்ட இக்கட்டுரை நேயர்களுக்கு மகிழ்வூட்டும் என்பது திண்ணம். எப்பொழுதும் இளமையோடு இருக்கலாம்—இக்கட்டு ரையில் ஸ்ரீ சித்பவானந்த சுவாமிகள் இளமைக்கு உற்பத்தி யிடம் எது என்பதனையும் அங்கிருந்து இளமையைப் பெறும் வழி இன்னதென்பதனையும் தர்க்க ரீதியாகக் கூறியிருக்கின்றார்கள். மன மெனும் நிலத்தைப் பண்படுத்தல்—மனத்தைப் பண்படுத்தும் முறையினையும், உள்ளும் புறமும் ஒன்றாக வாழ்தலின் அவசியத்தையும், உலக வாழ்க்கையில் பத்திரமாகவும் ஆபத்தின்றியும் வாழ் தற்குறிய கைகண்ட சிறந்த முறையினை யும் ஸ்ரீ பரமானந்த சுவாமிகள் இக்கட்டு ரையில் தெளிவாக எடுத்துக் காட்டுகின் றார்கள். ஆலய வழிபாடு முறை—ஆலயம் என்றால் என்ன என்பதும், ஆலயத்தின் சில முக்கிய அம்ஸங்களின் உட்பொருள் களையும் திரு. P. முத்தையா பிள்ளை அவர்கள் இக்கட்டுரையில் விளக்கிக்காட்டி யுள்ளார்கள். பொன்செய்யும் மருந்து—ஸ்ரீ ரா. ராமகிருஷ்ணன் அவர்கள், உண்மை யான சமய வாழ்க்கையினைப் பற்றித் தமது இக்கதையின் மூலம் தெளிவுபட விளக்கியுள்ளார்.

## அனுபூதி ஏணியிற் பல படிகள்

உலக வாழ்க்கையிலே (அதாவது ஐம் பொறி இன்ப வாழ்க்கையிலே) அறி யாமைச் சேற்றிலே அழுந்தி, அதனையே பரமசுகமாகக் கடைப் பிடித்துத் தமது வாழ்நாளைக் 'குறியும் நெறியும் குணமும்' இலாது கழிக்கும் மக்கள் அதனினும் மேலானதொன்று இருப்பதாக அறியார் கள். அறியினும் கற்பனை யுலகத்தில் இருப்பதாகக் கருதுவார்கள். அதனை யடைய ஒரு நெறி உண்டு என்று பிறர் கூறினும், அதனைக் காணவும் மாட்டார், பின்பற்றவும் மாட்டார். ஆனால் ஊன் கண்ணுக்குப் புலனாகாத மேலுலக மெனும் பேரின்ப உலகம் அறிவுக் கண் ணுக்குச் சற்றே ஆராய்ச்சியின் பயனாகப் பிம்பம் போன்று தோன்றும்; ஞானக் கண்ணுக்கோ அப்பேரின்ப உலகம் மட்டு மல்ல, இவ்வுலகவாழ்க்கையினின்றும் அவ் வுலகத்திற்கு நம்மை ஏற்றுவிக்க உதவும் ஓர் ஏணியும் அதிற் பல படிகளும் புலப் படும். அந்த ஏணியே அனுபூதியேணி எனப்படும். அந்த ஏணியைக்காண்பார்க்கு அதன் உச்சியிலுள்ள பேரின்ப உலகின் பெருமையும் நன்கு விளங்கும். இன்ப உலகின் எழிலும் சோதியும், ஒருமுறை அவைகளைக் கண்டாரையும் பிச்சேற்றும்; அப்பைத்தியத்தால் தள்ளப்படுவார் அனு பூதியேணியை அணுகிப் படிப்படியாகப் பாடுபட்டு மேலேறுவார்; ஆனால் மேலே நோக்க நோக்கப் பாடு பாடாகத் தோன் றாது, இன்ப வெறியினால் விளையும் பேருக் கமாக விளங்கும். பேரின்ப உலகையும் அனுபூதியேணியையும் மறைக்கும் திரை ஒரு சிறிதாயினும் இறைவனது அருளி னாலோ குருவினது அருளினாலோ விலகும் போதுதான், அவ்வுலகமும் ஏணியும் புலப்படும்; உண்மையான மோக்ஷ இச்சை யென்பது அதன் பின்னரே உண்டாகின்றது. இறைவன்

மீது கொள்ளும் மெய்யன்பின் துணையால் அனுபூதி யேணியின் காட்சியை ஒருவன் பெறுவதையும், பின்னர் அவன் படிப்படியாக அதன்மீது ஏறி, உயர்ந்த பேரின்ப உலகம் புகுவதையும், மெய்யன்பர்க்குள் தலையானுரில் ஒருவராகிய மணிவாசகப் பெருமானது வாழ்க்கையை எடுத்துக் காட்டாகக் கொண்டு காண்பாம். இம்மெய்யடியாரது துன்பம் பொறுக்க மாட்டாது இரங்கிய பரமன் 'மதுரைப் பெருநன்மா நகர் இருந்து, குதிரைச் சேவகனாகிய' திருவிளையாடலை நிகழ்த்தியது, 'இந்த ஆவணி மாதத்தில் மூல நாளில் அன்றோ? ஆதலின் இம்மாதம் அத்தூய அரும்பெரும் வாழ்க்கையினைச் சிந்திப்பாம்.

அறவாழ்க்கையை முறையாக நடாத்தி வந்த மாணிக்க வாசகப் பெருமான் திருவருள் பெற விரும்பிக் குருவருளை நாடித் திரிந்தார். அந்நாளில் அவரை ஆட்கொள்ள நினைந்த பரமன் திருப்பெருந்துறையில் தாமும் அடியார்களுமாகக் காட்சி யளித்து, அவர்க்கு ஞானோபதேசமும் செய்தனர். உடனே அவரது உள்ளம் அனுபூதியேணியின் காட்சியையும் பேரின்ப உலகின் காட்சியையும் பெற்றது. அது அவரது வாழ்க்கையில் புதியதொரு பெரும் மாறுதலை அளித்தது. தம்மை ஆட்கொண்ட அப்பெருமான் தமது அடியாரது திருக்கூட்டத்தோடு பின்னர் மறைதலும், தாய்ப்பசுவைப் பிரிந்த கன்றைப்போலக் கதறி ஒருவாறு தெளிந்தார். இறைவனது அருட்செயலை நினைந்த அடிகள் அவர்பாற் பெருநன்றி கூர்ந்தார்; "அக்கருணையின் திறத்தை வியந்தார். "நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத் தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" என்றார்; "அப்பன் ஆண்டு தன்னடியாரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே" என்றும், "குணக் கடல்... அணைந்து வந்து எனை யாண்டு கொண்டருளிய அற்புதம் அறியேனே" என்றும் பாடினர்.

அமுதின் சுவை யறிந்தவர்க்குச் சாதாரண உணவு விடமெனத் தோன்றுமன்றோ? அதுபோல் அனுபூதி வாழ்க்கையின் பெருமையினைக் கண்ட உள்ளத்துக்கு, ஊன் கண்ணாற் காணப்படும் உலக வாழ்க்கை அருவருப்பையே உண்டு பண்ணும். அவ்வாழ்க்கை ஐயறிவுள்ள ஒரு விலங்கினது வாழ்க்கையாகத் தோன்றும்; ஆறறிவுள்ள மக்களின் வாழ்க்கைக்குச் சிறிதும் பொருந்தாததாகத் தோன்றும். ஆயினும், பழவினையின் வலியால் விலங்கின் வாழ்க்கையே ஆதியில் முத்திக்காக முயல்பவனிடத்தும் காணப்படும். தேமாங்கனியின் சுவை யறிந்தும் வேம்பின் கனியே உவக்கும் நெஞ்சத்தின் இயல்பினை நன்கறியும் மனிதன் எவன்தான் தன்னை வெறுக்காம லிருப்பான்? ஆதலின் உலக வாழ்க்கையின் மீது பொதுவான வெறுப்பும், தனது வாழ்க்கையின் மீது சிறப்பான அருவருப்பும், தன்னை நிந்தித்தலும் இந்த ஆரம்பப்படியின் இயல்புகளாம். நெஞ்சை அள்ளிக் கொள்ளும் உயர்ந்த தூய பேராசை ஒரு பக்கம் உள்ளத்தை இழுக்க, மறு கணம் தனது தகுதியின்மையை நேரில் அறிந்த உணர்ச்சி மற்றொரு பக்கம் இழுக்க, இரண்டிற்கும் இடையே முயல்வோனது உள்ளம் ஊசலாடிக் கொண்டிருக்கும். இலக்ஷிய வாழ்க்கைக்கும் அனுபவத்திற்கும் உள்ள வேறுபாடு தெற்றென விளங்கும். இதனால் ஏற்படும் அருவருப்பே உயர்ந்த ஞான முயற்சிக்கு வித்தாகும். மாணிக்கவாசகப் பெருமான் இந்நிலையில் இருந்தபோது, "புகவேதகேன் உனக்கு அன்பருள்" என்றும் "நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து நான்

நடுவே, வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்" என்றும், "ஆமாறு உன் திருவடிக்கே அகங்குழை யேன், அன்புருகேன், பூமாலே புனைந்து ஏத்தேன் புகழ்ந்துரையேன்..." என் றும், "சூழ்கின்றாய் கேடு உனக்குச் சொல்லுகின்றேன் பல்காலும், வீழ்கின் றாய் நீ அவலக்கடலாய வெள்ளத்தே" என்றும், "விச்சுக்கேடு பொய்க்காகாது என்று இங்கு எனை வைத்தாய்" என் றும், "யானே பொய், என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்; ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெற லாமே" என்றும் தம்மையே நிந்தித்துக் கொண்டார்.

முதற்படியில் விளையும் அருவருப்பு முயல்வோனது உள்ளத்தில் வரவர மிகுந்து, உள்ளத்திற் கொட்டிக்கொண் டே யிருக்கும்; ஆதலால் அவன் சுறு சுறுப்படைந்து, ஞான முயற்சியில் மென்மேலும் தீவிரமாக ஈடுபடத் தொடங்குவான். ஆயினும், பழைய வாசனையின் வலிமை இவனது முயற்சி யின் வலிமையினும் மிகப் பெரிதானமை யின், எண்ணிறந்த முறைகள் தோல்வி எய்துவான். தோல்வி யெய்திய உணர்ச்சி மீண்டும் உள்ளத்தைக் குடைய, முன் னினும் தீவிரமாக முயலுவான். இவ் வாறு அவனிடத்து, அவனது இலக்ஷிய ஆசைக்கும் பண்டைய வினையின் தொகு திக்கும் பெரும் போராட்டம் ஓயாது நடந்துகொண்டேயிருக்கும். சொற்ப காலத்துக்குமுன் பெற்ற சிறிய ஞான ஒளி அனாதிகாலமாகத் தொகுத்து வைத்தி ருந்த அறியாமையிருளின் முன்பு மறைந் ததுபோல ஆகிவிடும். வாழ்க்கை வீணு வது நன்கு புலனாகும்; அதனால் மனத் துயரம் பெருகும். ஐம்புலன்களின் வேகத்தை அடக்க ஆற்றாது மனம் பரித பிக்கும் மீண்டும் மீண்டும் சலிப்படை யாது எதிர்த்துப் போர்புரியினும், உள் ளம் வென்றியைக் காணாது திகைக்கும். இறைவன் தனக்கு ஞான ஒளியைத் தந்து உயர்ந்த காட்சியை முன்பு அரு ளினனாயினும், இப்போது தன்னந் தனிய னாய்ப் போராடும்போது வரும் தோல்வி யின் கூரிய உணர்ச்சி அதை முற்றிலும் மறக்கச் செய்யும். இறைவன் தன்னைக் கைவிட்டனன் என்றே மனக் கலக்க மிகுதியால் எண்ணுவான். எங்கும் அந்த காரமே தோன்றும், ஞான ஒளி ஓரணு வளவும் தென்படாது போகும். அச்ச மும் தளர்ச்சியும் கூரிய துன்பமும் உள் ளத்துக் குடிகொள்ளும். மதம்பிடித்த யானைகளை அடக்கும் பெருவீரமும் அற்ப மாகும்படி, அவ்வளவு பெரிய வீரமே ஐம்பொறிகளை அடக்கி யாள்வதற்கு வேண்டியதாகும். அத்தகைய வீரமின் மையால் நெஞ்சு தளரும், தன்னம்பிக்கை குறையும். இறைவனது அருளே தார கம் என்று மீண்டும் நினைந்து, அவனையே பற்றுக்கோடாக எண்ணி, மனங்கசிந்து அகங்குழைந்து அழுதாயினும் அவனது அருளைப்பெறக் கருதும். இத்தகைய கடும்போர் நிகழும் பருவம் பொறுத்தற் கரிய துன்பத்தை விளைக்கும். ஆயி னும், இத்துன்பநிலை அனைவர்க்கும் (அனு பூதியேணியில் ஏறுவார்க்கெல்லாம்) இன் றியமையாததாகும். இக்காலம் சாதக னுக்குப் பெருஞ்சோதனையான கால மாகும். இந்நிலையை மணிவாசகப்பிரான் வருணித்துள்ள பாக்கள் வாசிப்போரது உள்ளத்தைப் பெரிதும் உருக்கும் தன்மை யனவாம். "தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக்கொள்ளே"—"தீர்க் கின்றவாறு என் பிழையை, நின் சீர் அருள் என் கொல் என்று வேர்க்கின்ற என்னை விடுதி கண்டாய்"—"மாறு பட்டு அஞ்சு என்னை, வஞ்சிப்ப, யான் உன் மணிமலர்த்தாள் வேறுபட்டேனை"—

"என்னை அப்பா அஞ்சல் என்பவரின்றி நின்று எய்த்து அலைந்தேன்"—"பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்கு மன்பின் வெற்றடியேனை...மற்றடியேன் தன்னைத் தாங்கு நர் இல்லை" என்று போரில் எய்த்து மனந்தளர்ந்த நிலைமையும் தமக்குத் தேறுதல் அளிப்பார் இல்லாமையையும் குறிக்கிறார். தாம் ஐம்புலன்களோடு போராடும் போராட்டத்தின் தீவிரத்தினால் தம்முள்ளத்து எவ்வளவு துயரம் உண்டாயிற்று என்பதைத் தக்க உவமைகளால் விளக்கியருளுகிறார். சாதகர்கள் இவ்வுவமைகளைச் சற்று சிந்தித்தால், அனுபூதியேணிப் படியில் ஏறுவார்க்கு வரும் துன்பமும், அவர்களைச் சூழும் இருளும் இவ்வாறிருக்கும் என்பதை ஒருவாறு அறியலாகும். இருள் கூர்ந்து நிறையாதபோது விடிவும் தொடங்காது; ஆதலின் நல்லிருளும் அவசியமேயாம். அவர் கூறும் உவமைகளாவன.—"இருதலைக் கொள்ளியினுள் எறும்பு ஒத்து," "காருறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங்கரை மாமாய் வேருறு வேனை", "செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழியாரிற் பன்னாள் விழுகின்ற என்னை," "கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன்", "ஆனை வெம்போரிற் குறுந்தூறெனப் புலனால் அலைப்புண்டேனை", "எறும்பிடை நாங்கூழ் எனப் புலனால் அரிப்புண்டு அலந்த வெறும் தமியேனை", 'பெருநீர் அறச் சிறுமீன் துவண்டாங்கு, நினைப்பிரிந்த வெரு நீர்மையேனை", "மத்துறு தண் தயிரிற் புலன் தீக் கதுவக் கலங்கி பித்துறவேனை", "வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கின் வலையிற் பட்டு மிலைத்து அலைந்தேனை", "வேற் கண்ணியரென்னும் சூறித் தழல் முழுகும் விழுது அனையேனை."

இவ்வாறு பொறுத்தற்கரிய துயரத்திற்கு உள்ளாயினும் சாதகன் தனது முயற்சியை விடான். உலகவாழ்க்கைக்கு அதீதமாக விளங்கும் அன்புருவாய பரமனிடத்துக் குதித்தெழும் மெய்யன்புச் சுடர் முற்கூறிய துன்பத்தை நெய்யாகக் கொண்டு கொழுந்து விட்டெரிகின்றது. அப்பரமனைக் காணும் ஆசை, எய்த்தபோதும் உள்ளத்தை உயர்த்துகின்றது, தரிக்கச் செய்கின்றது. "எப்பாலவர்க்கும் அப்பாலாம் என் ஆரமுதேயோ, அப்பா காண ஆசைப்பட்டேன்"—"எய்த்தேன் நாயேன், இனி இங்கிருக்க கில்லேன், இவ்வாழ்க்கை வைத்தாய் வாங்காய்......முத்தா, உன் முகவொளி நோக்கி முறுவல் நகை காண அத்தா சால ஆசைப் பட்டேன்" "வெஞ்சேல் அனைய கண்ணார்தம் வெகுளிவலையில் அகப்பட்டு நைஞ்சேன் நாயேன், ஞானச்சுடரே நானோர் துணை காணேன்...பவளத் திருவாயால் அஞ்சேலென்ன ஆசைப்பட்டேன்" என்றார் மாணிக்க வாசகர். இவை கூறியபோது, அவர் தமது செயலால் ஆவதொன்று இல்லையென்பதை, முற்றும் உணர்ந்தார்; இறைவனது அருளையே துணையாகப் பற்றி, வேறு துணையில்லாராய், "பெருந்தாகத்தோடு அருளை நாடினர். நெக்கு நெக்கு, உள்ளுருகி உருகி, நின்றும், இருந்தும் கிடந்தும் எழுந்தும், நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி, நானாவிதத்தாற் கூத்து நவிற்றிச் செக்கர் போலும் திருமேனி திகழ நோக்கிச் சிலிர் சிலிர்த்துப் புக்கு நிற்பது என்று கொல்லோ என் பொல்லா மணியைப் புணர்ந்தே" என்று உள்ளூர ஏங்கி நின்றார். "அழுக்கு மனத்து அடியேன் உடையாய் உன் அடைக்கலமே" என்றார். ஆன்மா இறைவனது சொத்து அல்லவா? இறைவன் அதனால் அதற்கு உடைய

வன்; ஆதலால் சாதகன் இறைவனையே அடைக்கலமாக அடைகின்றான், தனக்கென ஒரு செயலுமின்றி வேறுகதியின்றி அவனையே சரணடைகிறான்.

இறைவனிடத்துச் சரண் புகுந்தாலும் அவன்பாலுள்ள அன்பு வர வரக் கொழுந்துவிட்டுப் பெரிதாய் எரிவதனால், அவனைப் பெறாத துயரம் முன்னினும் பன்மடங்கு பெருகுகின்றது; பண்டு இறைவன் தானாக அருள் செய்த கருணையை நினைக்கும்போது, இறைவனைக் குறைகூறவும் மனம் துணிவதில்லை; ஆதலின் தன்னையே நொந்துகொள்ளுதலே சாதகனுக்கு இயல்பாகிறது. "பொய்யனேன் அகநெகப் புகுந்து அமுதூறும் புதுமலர்க் கழலிணையடி பிரிந்தும் கையனேன் இன்னும் செத்திலேன் அந்தோ" என்று தமது இழிவான தன்மையை எடுத்துரைக்கின்றார் அடிகள். இறைவன் இனி அருளானோ என்று ஏங்கி, அவ்வாறு அருளாவிடில் மண்ணிடை வாழ்ந்தென் என்று இறக்கவும் துணிகின்றார். "எம்பரனே, பற்று நான் மற்றிலேன் கண்டாய்...சிவனே, யாரொடு போகேன், யார்க்கு எடுத்துரைக்கேன், ஆண்ட நீ அருளிலையானால் பார்க்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்", "பாதமே யல்லால் பற்று நான் மற்றிலேன் கண்டாய்...ஊடுவது உன்னோடு உவப்பதும் உன்னை உணர்த்துவதும் உனக்கு எனக்கு உறுதி, வாடினேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்" என்று தமது செயலற்ற நிலையையும் அதனால் விளையப் போகும் கேட்டையும் குறிப்பிடுகிறார்.

தமது அன்புப் பயிர் தண்ணீர் விட்டு வளர்த்த தொன்றன்று, அகங்குழைந்து அழுது கண்ணீர் விட்டு வளர்த்த பயிரேயாம். துயரத்தின் கடுமையால் "இனி ஒரு கணமும் பொறுக்கவொண்ணாது" என்ற கையறுநிலை கடுகி வருகின்றது. "உயிர்பிரியில் பின் அருள் செய்து பயன் என்!" என்ற நினைப்பால், இறைவனும் தனது அருளமுதைப் பொழிந்து, பேரின்ப நீரால் அடியாரது உள்ளத்தை ஆட்டிக் குளிர்விக்கின்றான். அக்கணம் உள்ளத்துப் பேரானந்தம் மேலிடுகின்றது. அமைதி குடிகொள்கின்றது. உள்ளக் கலக்கம் ஒழிகின்றது. பேரானந்தம் உயிரையும் உண்ணுகின்றது. தன்னையும் மறந்து தலைவனைப் பற்றிய நினைவே நிறைகின்றது. இதை மணிவாசகப் பிரான் பின்வரும் பாடல்களிற் குறிப்பிடுகிறார். "ஊனார் உடல் புகுந்தான் உயிர்கலந்தான் உளம் பிரியான்", "எனை நான் என்பதறியேன் பகலிரவு ஆவது அறியேன்", "கடலின் திரையதுபோல் வரும் கலக்க மலம் அறுத்து என் உடலும் எனது உயிரும் புகுந்து ஒழியாவண்ணம் நிறைந்தான்", "கோல் தேன் எனக்கு என்கோ குறை கடல்வாய் அமுதென்கோ." இவ்வாறு பேரின்பத்தில் வெறிபெற்ற அமயத்தும், ஆணவமலம் இல்லாமையால், தம்மை இழிவாகக் கருதி, இறைவனது அருளே தம்மை உயர்த்தியதாகக் கொள்கிறார். "நான் ஆர் அடியணைவான், ஒரு நாய்க்குத் தவிசு இட்டு இங்கு ஊனார் உடல் புகுந்தான்" என்று கூறித் தம்மிடத்து எழுந்த மிகப்பெரும் பணியைச் சாற்றியருளினார்.

(தொடரும்)

# சமாசாரம்

## ஸ்ரீ மாதவாநந்த சுவாமிகள்

ஸ்ரீ மாதவா நந்த சுவாமிகள் சேலத்திலிருந்து ஜூலை மாதம் 20-ம் தேதி சென்னை வந்தார்கள். சென்னையில் சுவாமிகள் ஒன்பது நாட்கள் தங்கியிருந்தார்கள். 21-ம் தேதி மாலையில் சௌந்தரமஹால் ஹாலில் 'செல்ப் சல்சரல் அசோசியேஷன்', ஸ்ரீ ராமகிருஷ்ண நேஷனல் பெண் பாடசாலை இவைகள் சார்பாக இரண்டு பத்திரங்கள் வாசித்தளிக்கப் பட்டன. சென்னை பொதுஜன வாசிகளின் சார்பாக, மேயர் ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்கள் தலைமையின் கீழ் கோகலே ஹாலில் 22வ. திங்கள் மாலை ஓர் அழகான பத்திரம் வாசித்து வெள்ளிப் பேழையில் வைத்துத் தரப்பட்டது. இரண்டு தினங்களும் சுவாமிகள் பத்திரங்களுக்குப் பதிலிறுக்கும் முகமாக சமய வாழ்க்கையின் அவசியத்தினைப் பற்றி வற்புறுத்திப் பேசினார்கள். 23-ம் தேதி செவ்வாயன்று ஸ்ரீ மாதவாநந்த சுவாமிகள், ஸ்ரீ சாசுவதா நந்த சுவாமிகள், ஸ்ரீ ராமானுஜாசாரியார் இவர்களுடனும், இன்னும் மடத்து சுவாமிகள் மூவருடனும் அதிகாலை 5-மணிக்குப் புறப்பட்டு முதலில் செங்கல்பட்டிலுள்ள ஸ்ரீ ராம கிருஷ்ண ஹிந்துஸ்கூலைப் பார்வையிட்டுப் பிறகு செங்கற்பட்டுக்கு அடுத்துள்ள திருமணி குஷ்டரோக நிவாரண சாலைக்குச் சென்றார்கள். இந் நிவாரண சாலையிலுள்ள சுமார் 600 ஹிந்துக்களுக்கு வாரம் ஒரு முறை வெள்ளிதோறும் பிள்ளைகட்கும் பெரியவர்கட்குமென இரண்டு வகுப்புகள் சென்னையிலிருந்து ஒரு சுவாமிகள் சென்று நடத்திவருகின்றார்கள். ஸ்ரீ மாதவாநந்த சுவாமிகள் அங்கு சென்ற போது அங்குள்ள ஹிந்துக்கள் குதூகலமாக அவரை வரவேற்று ஆங்கிலத்தில் இரண்டும் தமிழில் ஒன்றுமாக மூன்று பத்திரங்கள் வாசித்துக் கொடுத்தனர். சுவாமிகளும் அப்பத்திரங்களுக்குப் பதிலளித்து அவர்களுக்கு ஆறுதல் வார்த்தைகள் புகன்றார்கள். மயிலை மாணவரில்லத்துக்குச் சொந்தமான, உத்தர மேரூருக் கடுத்துள்ள மல்லிரங்கனை என்னும் கிராமத்தைப் பார்வையிட்டு அன்று பகல் காஞ்சிமா நகரம் சேர்ந்தார்கள். அங்கும் பொது மக்கள் சார்பாக உபசாரப் பத்திரம் ஒன்று வாசித்தளிக்கப்பட்டது. அன்று மாலை சுவாமிகள் ஸ்ரீ வரதராஜப் பெருமான், ஸ்ரீ காமாக்ஷி ஆலயங்கள் சென்று மூர்த்திகளை வழி பட்டனர். காஞ்சி கனக சபாபதி நகர் ஹரிஜனக் கைத்தொழிற் சாலைக்கும் சென்றிருந்தார்கள். மறுநாட்காலை ஸ்ரீ ஏகாம்பர நாதனையும் வழியில் ஸ்ரீபெரும்பதூரில் ஸ்ரீ ராமானுஜரையும் தரிசித்து விட்டுச் சென்னை திரும்பினார்கள். அன்று பிற்பகல் அதாவது 24-ம் தேதி புதன் மாலையில் தியாகராய நகரில் புதிதாக அமைக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ ராம கிருஷ்ண மிஷன் ஹைஸ்கூல் கட்டிட ஹாலில் ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகாநந்த சுவாமிகள் படங்களைத் திறந்து வைத்து அரிய பிரசங்கமொன்று நிகழ்த்தினார்கள். அன்று ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் பள்ளிக்கூடங்களின் ஆசிரியர்கள் அனைவர் சார்பாகவும் சுவாமிகளுக்கு வரவேற்புப் பத்திரம் ஒன்று வாசித்தளிக்கப்பட்டது. 25-ம் தேதி வியாழன் மாலையில் பச்சையப்ப கலாசாலையில் ஓர் பிரசங்கமும் தாம்பரம் கிருஸ்துவ கலாசாலையின் மாணவர் சங்கத்தில் ஓர் பிரசங்கமும், ஞாயிறன்று மயிலை மடத்தில் ஒரு பிரசங்கமும் நடத்திவிட்டு, ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மிஷன் ஸ்தாபனங்களைப் பார்வையிட்டுவிட்டு 29-ம் தேதி திங்களன்று தம் தென்னிந்திய பிரயாணத்தை முடித்துக்கொண்டு பேலூர் மடத்துக்குப் பிரயாணப்பட்டார்கள். சுவாமிகள் தமது இருப்பினாலும், பிரசங்கங்கள் மூலமாகவும் இப்பிரயாணத்தின்போது பலரது உள்ளத்தில் ஞானக்கொழுந்தினை எழுப்பிச் சமய வாழ்க்கையில் உற்சாகமூட்டிச் சென்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உ०] விக்கிரமஞு புரட்டாசிமீ [பகுதி—கூ

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானல் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானல் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் " விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தரால் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணு 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அநுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப்பட்டுள்ளது. வெகு எளிய நடை. விலை அணு 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணு 8



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உ௦ } விக்கிரமஹு புரட்டாசிமீ { பகுதி-கூ

# பிரார்த்தனை

## (ஸ்ரீ காளிதேவிக்கு)

தாயா யனைத்துயிருந் தாங்கி யருள்பொழியு
மாயாப் புகழுடைய மாமுகிலே—தேயாக்
கமலமணி மார்பிற் கதிருமிழ வேன்றுந்
தமனியப்போற் கும்பத்தைச் சார—விமலையேனும்
பேரான் மகிழும் பிறைநுதலே கோடடர்ந்த
காரா னவுணக்களை தடிந்தே—நேராத
தாருக ஞதித் தருக்குற்ற வன்கணரைப்
போரி லடர்த்த புகழ்பரவச்—சீரமைந்த
பச்சைமயில் போலப் பயிலு;மடநல்லாய்
நச்சரவு கோண்டாரின் நாயகியே—வச்சுதனுர்:
விண்மணியே ஞான விளக்கே யடியேனுன்
கண்மணியே யேன்ற கருத்தினு—லோண்மையரி
யேறூர்ந்தா யேன்ற னிடர்களைய வன்புநிலை
மாறுமற் றேழுதேனம் மா.

—வித்வான் கோழமம் எஸ். இராமசந்திர ராவ்

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

துக்கம் அனைத்திற்கும் பெரிய அன்னையாயிருப்பது அறியாமையே; வரையறையற்ற பரம்பொருள் அழுகின்றது புலம்புகின்றது என்றும், வரையறைக்கு உட்பட்டது என்றும், நினைப்பது அனைத்திற்கும் அடிப்படையான அறியாமையாகும். அழிவற்றவரும் எப்போதும் தூய்மையுடையோரும், பூரணமான பிரம்மமும் ஆகிய நாம் அற்ப மனதுகள் என்றும், அற்ப உடல்கள் என்றும் நினைக்கின்றோம். இதுவே எல்லாவித அறியாமைக்கும் ஆதாரமாவது; இதுவே எல்லாவிதத் தன்னயத்திற்கும் தாயாகும். நான் ஒரு சிறு தேகம் என்று நினைத்ததும், அதைப் பாதுகாப்பதிலும், பேணுவதிலும் மற்ற உடல்களுக்குக் கேட்டை உண்டாக்கியாவது அதை நேர்த்தியாக வைத்திருப்பதிலும் எனக்குப் பிரியம் ஏற்படுகிறது; அப்போது நீயும் நானும் வெவ்வேறாகிறோம்; வெவ்வேறு என்ற எண்ணம் உண்டானதும், துக்கமும் சேட்டையும் நுழைதற்கு வேண்டிய கதவை அது திறந்துவிடும். ஆன்ம ஞானம் இல்லாதபோது, உலகியலறிவின் பயனுவதெல்லாம், தன்னயஞ் செறிந்த மனிதனது கையில் இன்னொரு கருவியை அளிப்பதேயாகும்; அக்கருவியைக் கொண்டு அவன் பிறர்க்குரியதைக் கைப்பற்றவும், பிறரது உயிரைத் தின்று வாழவும் செய்வானேயன்றித் தன்னுயிரை அவர்கட்காகத் தியாகம் செய்ய மாட்டான்.

நீங்கள் சிம்மங்கள், நீங்கள் ஆன்மாக்கள், நீங்கள் சுத்தர்கள், வரையறைக்கப்பாற்பட்டவர்கள், பூரணமானவர்கள். இதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் இந்த அண்டத்தின் பலம் உனக்குள் இருக்கிறது. அவ்வாறு இருப்பவும், நண்பனே! நீ ஏன் அழுகின்றனை? உனக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை. "நான் அவனே, நான் அவனே (அப்பரம் பொருளே), ஸோஹம், ஸோஹம்" என்று உங்கள் மனதிற்குள் சொல்லுங்கள். உங்களுடைய செவிகளில் ஒரு பாட்டைப்போல அது இரவும் பகலும் ஒலித்துக்கொண்டிருக்கட்டும். அதுவே மெய்; இவ்வுலகத்தின் வரம்பிலா ஆற்றல் நின்னதேயாகும். விழியுங்கள், எழுந்திருங்கள். கோரிய முடிவிடத்தைச் சேரும் வரை நில்லாதீர்கள்.

—ஸ்ரீ விவேகாநந்தசுவாமிகள்

# ஆ தி ச க் தி

(சுவாமி சித்பவானந்தர்)

## இறங்கி ஏறுகிறுள்

அசுவத்தம் அல்லது ஆலமரத்தில் வேர் (விழுது) மேலிருந்து கீழிறங்குகிறது. அதற்கு உணவுப் பொருளும் கீழே வருகிறது. அவ்வாறே பரம் பொருளிடத்திருந்து மூலப் பிரகிருதியும் அதன் காரியமாகிய உலகும் வந்துள்ளன என்பது வேதவாக்கியம். தன்னைத் தோற்றத்துக்கு உட்படுத்தும் பொழுது பரம்பொருளுக்கு மாயா சக்தி யென்று பெயர். அப்பொழுது அது பெண்பாலாகக் கருதப்படுகிறது. அவளுடைய மகிமையே உலக நடைமுறையாகும். வெளியாகி, காற்றுகி, தீயாகி, நீர் ஆகிப் பிறகு நிலமாகிறுள். ஐம்பூதங்களுள் மிகப் பருத்திருப்பது மண். கீழ் நிலைக்கு வருகையில் மண்ணுதற்குக் கடையாயது இல்லை. அத்துடன் இறங்கும் தொழில் முற்றுப் பெறுகிறது. பிறகு புறப்பட்ட இடமாகிய பரமபதத்தை நோக்கி மேலேறும் முயற்சி ஆரம்பிக்கிறது.

பல்லாயிரம் ஆண்டுகளாக மண் இறுகிக் கல்லாகிறது. இடையில் அது நொறுங்கி மண்ணுவதும் உண்டு. கல்லுக்குக் காலக் கிரமத்தில் உயிர் வருகிறது. ஆனல் அது உயிர் படைத்திருப்பது எல்லார்க்கும் எளிதில் விளங்குவதன்று. மலை உயிர் உடையது என்பது ஆன்றோர் துணிபு. உயிரற்றவைகள் சக்தியின் கீழ்த்தரத்தைச் சேர்ந்தவைகள்; உயிருடையன மேல் தரத்தைச் சார்வனவாகின்றன. அவைகளை முறையே அபர பிரகிருதி யென்றும் பரபிரகிருதியென்றும் நூலோர் இயம்புவர். உயிரற்றது ஆவது உறங்குபவன் எழுந்திருப்பதற்கு ஒப்பாகும். அது சக்தியின் விளையாட்டு. கல்லுக்கு அங்ஙனம் உயிர் வருவதால்தான் பர்வத ராஜன் புதல்வி, பார்வதி என்றும் மலைமகள் என்றும் அவளுக்குப் பெயர்கள் வந்தன. கல்லிலும் மண்ணிலும் தோன்றிய உயிர் பின்பு நிலத்தினை அல்லது ஸ்தாவரங்களாகிய மரம் செடி கொடிகளாகின்றது. மேலும் அதினின்று வருபவைகள் ஊர்வன, பறப்பன, நடப்பனவாகிய மற்ற எல்லாவுயிர்களுமாம். கணக்கற்ற பிறவிகளைக் கடந்தபின் மானுடப் பிறவி வருகிறது. இது அஃறிணைக்கும் உயர் திணைக்கும் இடையில் வாயிலாயிருக்கிறது. ஏனென்றல் மக்கள் என்னும் ஜீவர்களுக்கிடையில் விளங்குந்தன்மையிலிருப்பவைகளையும் வானவர்களுக்கு ஒப்பானவர்களையும் காணலாம். பிறகு விண்ணவர்களுடைய விழுமிய நிலையையுங்கடந்து பரம்பொருளினூடு இரண்டறக் கலக்கும் மேன்மை வாய்க்கப்பெறுபவர்களும் மக்களே. போக்கும் வரவும் புணர்வுமில்லாப் புண்ணியனயிருக்கும் பொழுது அப்பொருளுக்கு சிவம் என்றும், அதே பொருள் போக்கும் வரவும் புணர்வுமாகிய இயக்கத்தைச் செய்யும் புண்ணியவதியா யிருக்கும்பொழுது அதற்குச் சக்தி யென்றும், மஹாமாயை யென்றும் பெயர். இங்ஙனம் கீழிறங்கிவந்து உலகனைத்துமாய், பிறகு மேலேறி, உயர்நிலையெய்தி, அண்டங்களுக்கு அப்பாலுள்ள பரமபதத்தில் வீற்றிருப்பது ஈறுக எல்லா நிலைகளும் சக்தியின் விளையாட்டேயாம்.

## திரிபுர சுந்தரி

வெளிச்சத்துக்கு நிறமில்லை. ஆனல் அதை முப்பட்டைக் கண்ணுடியின் வாயிலாகச் செலுத்தினுல் ஏழு நிறங்களாக

அது திரிவுபடுகிறது. ஆகாயத்தில் வானவில் ஏற்படுவதும் அவ்வாறேயாம். இந்த ஏழு வருணங்களும் அழகு வாய்ந்தவைகள். பிறகு அவைகளை முறையாக ஒன்றித்தால் ஏழும் சேர்ந்து வருணமற்ற வெளிச்சமாய்விடும். இதே மாதிரி நிற்குண பிரம்மமும் சகுண பிரம்மமும் ஒரே பொருளின் இருவகைக் காட்சிகளாம். முக்குணங்களோடு கூடியதற்கு சகுண பிரம்மம் என்று பெயர். அதைப் பெண்பாலாகக் கருதும் பொழுது திரிபுரசுந்தரி யென்று அவள் அழைக்கப்படுகிறாள். அகிலாண்டங்களும் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஆகிய மூன்று லோகங்களில் வந்து அடங்குகின்றன. சிலந்திப்பூச்சி தன் உடலிலிருந்தே நூலை உண்டுபண்ணி அதன்மீது அமர்ந்திருப்பது போன்று ஆதி சக்தி தன்னிடத்திருந்தே முப்புரங்களையும் தோற்றுவித்து அவைகளில் அவள் வீற்றிருக்கிறாள். சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களுள் பிரபஞ்சம் அனைத்தும் அடங்கிவிடுகிறது. இம்மூன்று குணங்களுக்கும் அவளே நாயகி. அத்யாத்மிகமாகப் பார்க்குமிடத்து ஜாக்கிரதம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்று அவஸ்தைகளுள் மானுட வாழ்க்கை அடங்கிவிடுகிறது. இம்மூன்று அவஸ்தைகளுக்கு ஏற்ப ஸ்தூலம், சூக்குமம், காரணம் ஆகிய மூன்று சரீரங்களில் மனிதன் வாசம் பண்ணுகிறான். இவைகளுள் ஒவ்வொன்றுக்கும் புரம் அல்லது இருப்பிடம் என்று பெயர். திரிபுரங்களிலும் தேவி வியாபித்திருக்கிறாள். அத்துடன் அவைகளுக்கெல்லாம் அழகு தருபவளும் அவளே. சௌந்தரம் தெய்வ சம்பத்துக்களுள் ஒன்று. அழகை ஒழுங்காக ரசிப்பவர் தெய்வ சந்நிதியில் இருப்பவர் ஆவர். உடல் நல்ல உருவம் உடைத்திருப்பதுதான் அழகு என்று எண்ணலாகாது. தேக சௌந்தரம் அழகில் கடைத்தரமானது எனலாம். மலைமகளாகப் பிறந்த உமாதேவி கட்டழகே வடிவெடுத்து வந்தாள். கண்ணைக் கவரவல்ல அத்தகைய அழகைக் கடவுள் கருத்தினில் வைத்தாரில்லை. ஆதலால் பார்வதி தேவி நெடுநாள் தவம் புரிந்தாள். தவம் அவளுடைய உள்ளத்தை ஒழுங்குபடுத்தியது. அங்ஙனம் மனதின்கண் அமைந்த அழகையே சிவனார் அங்கீகரித்தார். கடவுளுக்கு உவந்த அழகு எது என்பது ஈண்டுப் புலப்படுகிறது. சௌந்தரிய நாயகி கட்டழகாக உலகெங்கும் வியாபித்திருக்கிறாள். நல்ல மனமுடையாரிடத்து அழகு இன்னும் சிறப்பாகத் தாண்டவமாடுகிறது. எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் உள்ள அழகுக்கு ஒழுக்கம் என்று பெயர். அவைகளைக் கேட்பதிலும் காண்பதிலும் ஆனந்தம் பிறக்கிறது. வலிவை முறையுடன் கையாளுவதே வீர சௌந்தரியமாம். வீரச்செயலைப் போற்றாதார் யார் உளர்? கீதத்திலும், நாட்டியத்திலும், ஓவியத்திலும் பொழியும் அழகை அனுபவிக்கவல்லவர் அண்ட நாயகியின் அழகைப் போற்றுபவர் ஆவர். தனது பேரழகைப் புலப்படுத்துதற்கே இயற்கைத்தாய் ஓயாது இயங்கிக்கொண்டிருக்கிறாள். ஆதலால் தமது வாழ்க்கையை யாண்டும் அழகுபடுத்துபவரே அண்ட நாயகியின் செல்வர் ஆகின்றனர்.

## துர்க்கா தேவி

ஒரு நாட்டை உள்ளபடி விளக்கிக் காட்டுவது அந்நாட்டுக்குரிய தேசபடம். நாடெங்கும் சுற்றிப்பார்க்க இயலா விட்டாலும் தேசபடத்தைக்கொண்டு அதன் அமைப்பை ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். சராசரங்கள் அனைத்தும் ஆதி சக்தியின் வடிவம். நிகழ்வன யாவும் அவ

ளுடைய விளையாட்டே. இக்கோட்பாடு கள் துர்க்கையின் பிரதிமையில் நன்கு அமைந்துள்ளன. அவள் பத்துக்கை களை யுடையவள். கரங்கள் பத்து இருப் பதன் கருத்து என்ன என்னும் கேள்வி பிறப்பதுண்டு. நாம் வசிக்கும் பூமியில் உள்ள திசைகள் எட்டு. இதனின்று மேல் நோக்கியும் போகலாம்; கீழ்நோக் கியும் போகலாம். மேலும் கீழும் போகின்ற மார்க்கங்கள் இரண்டு. ஆக மொத்தம் பத்துத்திசைகள். இவைகளுள் எத்திசையில் எவ்வளவு தூரம் சென்ருலும் அங்கு வியாபித்திருப்பவள் அன்னை பராசக்தியே. அவள் பார்க்கும் இட மெங்கும் நீக்கமற நிறைந்திருக்கிருள். தேவியின் சர்வ வியாபகத்தை விளக்கு கின்றன அவளுடைய பத்துக் கைகளும்.

துர்க்கை தாங்கியிருக்கும் ஆயுதங்கள் பலப்பல. மும்மூர்த்திகளும் மற்ற தேவர் களும் தமக்குரிய ஆயுதங்களை ஆதிசக்தி யினிடத்திருந்தே பெற்றுள்ளனர். சக்தி யின் துணையின்றி அவர்களின் தொழில் கள் நடைபெரு. தொழிலுக்கும் ஆற்ற லுக்கும் அறிகுறியா யிருப்பவைகள் அன்னையின் ஆயுதங்கள். சக்திமான் ஆவதே வாழ்க்கையின் லட்சியம். சக்தி யுடையவன் எதையும் சாதிக்க முடியும். இக்கருத்தை உலகில் நடைபெறும் எல்லாச் செயல்களின் வாயிலாகவும் அன்னை புகட்டிக் கொண்டிருக்கிருள்.

அம்பிகை ஊர்ந்து செல்லும் வாகனம் சிங்கம். ஆதலால் அவளுக்கு சிம்ம வாஹினி என்ற பெயர் வந்தது. மிருகங் களுக்கு வேந்தனுயிருப்பது சிங்கம். பராக்கிரமும் பெருந்தன்மையும் அத னிடத்துக் காணலாம். சிங்கத்தின் பாங் குடையவரே சக்தியின் விளையாட்டுக்குத் தகுந்தவர் என்பது கருத்து. கோனழ யனுக்கு எதுவும் வாய்ப்பதில்லை. இவ் வுலகிலோ அல்லது வேறு எவ்வுலகிலோ அவனுக்கு மேன்மை கிட்டாது. சக்தி யைப் பெறுதற்குச் சிங்கத்தின் உறுதி வேண்டும்.

மகிஷாசுர மர்த்தினி என்பது துர்க் கையின் மற்ருெரு பெயர். எருமை போன்ற இயல்புடைய அரக்கனை வதைத் தல் அவளுடைய தொழில். மகிஷம் அல்லது எருமை கருப்பு நிறமுடையது. மந்த புத்தியுடையது; தமோகுணமே வடிவெடுத்தது. மனிதனைக் கீழ் நிலைக்கு இழுக்கும் இயல்பு தமோ குணத்துக்கு உண்டு. அதை ஒழிக்க ஒழிக்க அது வெவ்வேறு வடிவெடுத்து வருகிறது. இருள் சூழ்ந்த அக்குணத்தின் ஆதிக்கத் துக்கு ஓரளவில்லை. பிறவிதோறும் அது தொடர்ந்துவருகிறது. ஓயாது அதனுடன் போராடினுலொழிய வாழ்க்கையில் முன் னேற்ற மடைய முடியாது. மானுடப் பிறவி யெடுத்தவர்களுள்ளும் பெரும்பா லார் தமோகுணத்தில் மூழ்கிக்கிடக்கின்ற னர். விலங்குக்கும் அவர்களுக்கும் வெகு தூரமில்லை. ஆகையால் மகிஷாசுரன் பாதி மனிதன் பாதி எருமையாக வர்ணிக் கப்படுகிருன். இந்நிலையில் இருப்பவர்களை மாக்கள் என்றும் சொல்லலாம். விலங்குத் தன்மையை வென்று நல்ல மனிதத் தன்மை யெய்துவது மிகக் கடினமானது. தெய்வ சக்தியனைத்தையும் அதற்காகக் கையாளுதல் அவசியம். இக்கருத்தைத் தான் மகிஷாசுர மர்த்தனம் விளக்கு கிறது.

துர்க்கையின் இயக்கங்களெல்லாம் இரண்டு பாங்குடையவைகளாகப் பிரிகின் றன. ஒன்று உடன்பாடானது; மற் ருென்று எதிர்மறையானது. அவை களுக்கு முறையே பாவ சக்தி அபாவ சக்தி என்ற பெயர்கள் உண்டு. நன்மை தீமையென்றும், நீதி அநீதி யென்றும், வேண்டப்படுபவை விலக்கப் படுபவை

யென்றும் சொல்லப்படுபவைகள் இந்த இரண்டு பிரிவினைகளேயாம். ஒன்று முன்னேற்ற மடைவதற்கு உதவியாயும் மற்றொன்று தடையாயும் இருக்கின்றன. அமைதி, ஒற்றுமை, தியாகம், தூய்மை முதலியவைகள் உடன் பாட்டுச் சக்தியி னின்று பிறப்பவைகள். நிலைகுலைவு, வேற்றுமை, சுயநலம், புன்மை முதலி யன எதிர்மறைச் சக்தியினின்று பிறக் கின்றன. பாவ சக்தியை விசேஷமாக வுடையவர் சுரர் என்றும் தேவர்கள் என்றும் சொல்லப்படுகின்றனர். அபாவ சக்தியை அதிகமாக வுடையவர்களுக்கு அசுரர் என்றும் ராக்ஷசர் என்றும் பெயர். தேவர்களுக்கும் அசுரர்களுக்குமிடையில் ஓயாது நடைபெறும் யுத்தம் இந்த இரண்டு இயல்புகளுக்கிடையில் உண்டா கும் போராட்டமேயாம். உலக முன் னேற்றத்துக்கு இப்போராட்டம் இன்றி யமையாதது. நன்மையால் எவ்வளவுபயன் உண்டோ அவ்வளவு பயன் தீமை யிடத் தும் உண்டு. கொடுமையும், இடைஞ்சலும், முட்டுக்கட்டையும் நமது உள் வலிவை ஓங்குவித்தற் பொருட்டே வருகின்றன. மீளுதற்குத் தடையொன்று மில்லாவிட் டால் விருத்தியடைதலும் சாத்தியப் படாது. உயரத்தூக்கப்பட்ட கல்லைத் திரும்பவும் பூமி தன்னிடத்து இழுக் கிறது. இத்தகைய கீழே இழுக்கும் ஆகர் ஷண சக்தி யில்லாவிட்டால் வீடுகட்ட இயலாது. இராவணன் என்னும் ராக்ஷச சக்தி யிருந்தபடியால்தான் சீதையும் ராமனும் தங்கள் தெய்வ சம்பத்தை ஓங்குவிக்க இயன்றது. ஆகவே பிரபஞ்ச விளையாட்டில் பாவ சக்தியும் அபாவ சக்தியும் சமமான அந்தஸ்துப் பெறு கின்றன.

சில காலங்களில் அசுரருடைய ஆதிக் கியம் தலையெடுக்கிறது. அப்பொழுது தன் நலமும், தற்பெருமையும், போட்டியும், பொறாமையும், வஞ்சகமும் உலகில் மிஞ்சி நிற்கும். அதற்கு ஏற்றாற்போல நிலவுல கில் பஞ்சமும், கொள்ளைநோயும், சண் டையும் மலிந்துவிடும். பின்பு நல்லியல்பு தலையெடுக்கும்பொழுது சத்தியமும், சௌந்தரியமும், நீதியும், ஒழுங்கும் அன்பும் ஓங்குகின்றன. அப்பொழுது இயற்கைத்தாய் புன்னகை பூத்துப் பொலி வதுமன்றித் தன் செல்வத்தையும் மக்க ளிடை வாரிக்கொட்டுகிறாள். இங்ஙனம் அசுர இயல்பும் தேவ இயல்பும் மாறி மாறி மிளிர்வதும் அவைகள் ஒன்றோ டொன்று போராடுவதும் இயற்கைத் தாயின் திட்டமாகும். தீயதைத்தாக்கி யகற்றவும், தூயதைத் தூக்கிப் போற்ற வும் கற்றுக்கொள்பவன் தர்மத்தைத் தெரிந்துகொண்டவன் ஆகிறான். அவ னுக்கு இந்தப் பெரிய பாடத்தைப் புகட் டுதற்கே அன்னை நன்மை தீமை வடி வெடுத்து விளையாடுகிறாள்.

துர்க்கை என்னும் சொல்லுக்குக் கடக்க முடியாதவள் என்று பொருள். அவ்வாறே துர்க்கம் என்பதற்கு மலைக் கோட்டை என்று அருத்தம். கோட் டைக்குள் வைக்கப்பட்டவர்கள் போன்று மூல பிரகிருதிக்குள் நாம் வைக்கப் பட்டிருக்கிறோம். முக்குணமயமான அவளை நிராகரிப்பது எளிதன்று. அவளுடைய ஆதரவின்றி நமக்கு ஒன்றும் நடைபெறாது. நாம் உண்பதற் கும் உயிர்வாழ்ந்திருப்பதற்கும் அவளே மூலகாரணம். அப்படியாயின் மனிதர் எதைக்குறித்தும் முயற்சி செய்யவேண் டிய அவசியமில்லை என்று யூகிக்க இட முண்டாகிறது. அப்படிச் சோம்பலுற் றுச் சும்மா விருக்கவும் அன்னை விடமாட் டாள். அவள் அமைத்திருக்கிற வேலைத் திட்டத்தில் நாம் மனப்பூர்வமாகக் கலந்துகொள்ள வேண்டும். பாடுபட்டா லன்றி முன்னேற்றமடைய முடியாது.

'முயற்சி திருவினையாக்கும்' என்னும் மறைமொழி பராசக்தியின் திட்டத்தினின்று தோன்றியதாகும்.

தன் திட்டத்தைத் துர்க்கை தானே விளக்கிக் கொண்டிருக்கிறாள். அவளுடைய சொரூபமாகிய முக்குணங்களுள் ஒவ்வொன்றுக்கும் அதனதன் நிறம் உண்டு. சுத்தசத்வகுணம் வெண்மை நிறமானது. சிவப்பாயிருப்பது ரஜோ குணம். காரிருள் மயமாயிருப்பது தமோ குணம். துர்க்காதேவி பொன் ஆர் மேனியள். உருக்கியெடுத்த தங்கம்போன்று அவள் திருமேனி திகழ்கின்றது. அவள் ஊர்ந்து செல்லும் சிங்கமும் அத்தகையதே. சிறிது ரஜோகுணத்தோடு கூடிய சத்துவத்துக்கே பொன்னிறம் வருகிறது. அவள் அணிந்திருக்கும் துகில் சிவப்பானது. கொல்லப்படும் எருமை வடிவினனாகிய அரக்கனோ கருப்பன். இருள் சூழ்ந்த தமோ குணத்தை ரஜோ குணத்தால் வெல்லவேண்டும். பிறகு ரஜோ குணம் சத்துவத்துக்கு உட்படுகிறது. இறுதியில் முக்குணங்களையும் கடந்து சதாசிவத்துடன் இரண்டறக் கலத்தல் ஜீவர்களின் முடிவான நிலை. இவையனைத்துக்கும் உறுதுணையாயிருப்பவள் சக்தி. அவளுடைய விளையாட்டில் உறுதியாகக் கலந்து கொள்பவர்க்கு அவள் அருள் சுரக்கிறது. கீழ் நிலையில் ஒரே போராட்டம். அதை ஒழுங்காகச் செய்பவர்க்குச் சிறிது சிறிதாக மேல்நிலை வருகிறது. நன்றாகப் போராடாதவர்கள் அவளுடைய அருளைப் பெறமாட்டார்கள்; மேல் நிலை யெய்துதலும் சாத்தியமன்று. பின்பு சதாசிவத்தை அடைவது எங்ஙனம்? ஆதலால்தான் அவள் துர்க்கை அல்லது கடப்பதற்கு அரியவளா யிருக்கிறாள்; உலக வாழ்க்கை என்னும் போராட்டத்தை முறையுடனும் முயற்சியுடனும் செய்து வந்தால் எல்லாப் படித்தரங்களையும் கடந்து மேலே செல்ல அவளே கடாட்சித்தருள்கின்றாள்.

பிரபஞ்ச வாழ்க்கையில் மேன்மைகளனைத்தையும் ஒருங்கே வாய்க்கப் பெறுபவர் மிகச் சிலரே யாவர். சிலருக்குச் செல்வ மிருக்கும்; ஆனால் கலைஞானத்தின் வாசனை இலவலேசமு மிராது. கலைஞானத்தையுடைய வேறு சிலர்க்கு நன்மை தீமைகளைப் பகுத்துணரும் விவேகம் வாய்க்காது; அறிவு அனைத்தும் பொருந்தியுள்ள இன்னும் சிலர் பாங்குடன் வினையாற்ற வல்லவராகார். துர்க்காதேவியின் விபூதிகளுக்கு லக்ஷ்மி, சரஸ்வதி, கணேசன், சுப்ரமண்யன் என்று பெயர். ஆதிசக்தியின் அருளுக்கு முற்றும் பாத்திரமாகின்றவர்களுக்கு இந்த பாக்கியங்களெல்லாம் தாமே வந்தமைகின்றன. செல்வமும் இன்பமும் திருமகளின் அம்சங்களாகின்றன. கலைஞானங்களும் நுண்ணறிவும் சரஸ்வதியின் அருளால் வருபவைகள். பகுத்தறிவும் அமைதியும் ஒழுக்கமும் பிள்ளையாரிடத்துப் பிறப்பவைகள். எவ்வினையையும் அச்சமின்றி முழுவலிவுடன் முறையே யாற்றி வெற்றி பெறுபவன் முருகக்கடவுள். இந்த நான்கு தேவதைகளுள் யாரேனும் ஒருவர் இல்லாவிட்டாலும் அதற்கேற்ற குறைபாடு வாழ்க்கையில் வந்துவிடும். இவர்களுடைய சம்பத்து நிறைந்த வாழ்க்கையே பரிபூரண வாழ்க்கையாகும். இந்த நால்வருக்கு மூலகாரணமாயிருப்பவள் அம்பிகை. மலர் இருக்குமிடத்தில் மணம் இருப்பதுபோன்று துர்க்காதேவி பிரசன்னமாயிருக்குமிடத்தில் செல்வமும் கல்வியும், ஞானமும், வீரமும் செறிந்து கிடக்கும். அவளுடைய திட்டத்தின் படி ஓயாது வினையாற்றுவதற் கிடையில் அவளையே தஞ்சமென்று நம்பியிருப்பவர்க்கு இந்த ஐசுவரியங்களெல்லாம் வந்து வாய்க்கும்.

## மனம் திருந்துதலே வழிபாடு

அகிலாண்டேசுவரி கோல்வளையாள் எனப்படுகிருள். ஆட்சிமுறையினின்று அணுவளவும் பிசகாதவள் என்பது அதன்பொருள். அவளுடைய வேலைத் திட்டத்தில்குறையொன்றுமில்லை. அதை உள்ளபடி காண்பவர் அவளுடைய அடியிணையில் அடைக்கலம் புக ஆரம்பித்து விடுவர். வரையறுத்து வைக்கப்பட்டிருக்கும் அறத்தின் உட்பொருளும் அப்பொழுதே அவர்களுக்கு விளங்கும். அறம் வளர்க்கும் நாயகியன்றே அன்னை! அவள் நாட்டியிருக்கும் தர்மத்தைப் பண்புடன் பின்பற்றும் பாங்கு பக்தர்களுக்கு இயல்பாக வந்துவிடுகிறது. பின்பு எல்லாச் செயல்களின் வாயிலாகவும் ஆதி சக்தியையே அவர்கள் போற்றுகின்றனர். அண்டங்கள் தோன்றுவதும், நிலைத்திருப்பதும், மறைவதும் அவளிடத்தே. உயிர்கள் இலங்கும் சக்தியையும் அங்கிருந்தே பெறுகின்றன, உறக்கமாக எழுந்தருளி உயிர்களைப் புதுப்பிப்பவளும் அவளே. உணவாகவடிவெடுத்து அன்னை உயிர்களை ஓம்புகிருள். செல்வம் பெருகுவதும் ஆக்கம் மேலிடுவதும் அவளது ஆணையினுலேயே. ஞானம் பிறப்பதும் வீரம் ததும்புவதும்தாயின் திருவருளினின்றே. பக்தி பெருகுவதும் யோகம் சித்தியாவதும் சக்தியின் கடாட்சத்தாலேயே. அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு உறுதிப்பொருளுக்கு மூல காரணம் அவளே. இந்த எண்ணத்தில் நிலைபெற்றவர்களுடைய செயல்களெல்லாம் அன்னையின் வழிபாடு ஆகின்றன. குறிப்பிட்ட ஏதோ சில வேளைகளிலல்லாது சதா கால பூஜையாய் அவர்களுடைய வாழ்க்கை வடிவெடுக்கிறது. மூச்சு விடுவது உள்படத் தாங்கள் செய்யும் அனைத்தையும் தேவி பூஜையாகக் கருதுபவர்களால் பின்பு தீங்கு ஒன்றும் செய்யப்படுவதில்லை. இங்ஙனம் ஆதிசக்தியின் வேலைத்திட்டத்தில் முழுமனதுடன் கலந்து கொள்பவர்க்குப் பிறகு அவளே மனமுவந்து ஓய்வு கொடுக்கிருள். அத்தகைய ஓய்வு முக்குணத்துக்கு உட்பட்டிருக்கும் பரியங்தம் நிலைத்தது ஆகாது. முக்குணங்களையும் கடந்து முழுமுதற் பொருளில் இரண்டறக் கலத்தலே, மீண்டும் பிறவா நிலையாகும். முக்தியென்பதும் பரமபதம் என்பதும், கைவல்யம் என்பதும், அத்வைத சித்தியென்பதும், பிரம்ம நிர்வாணம் என்பதும் இந்நிலைக்கு ஏற்பட்ட பல பெயர்களாம். ஜீவர்களை இந்த முடிவுக்குக் கொண்டு சேர்ப்பதற்கே ஆதி சக்தியின் விளையாட்டு நடைபெறுகிறது.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

**பரமஹம்ஸ** தேவருடைய சரித்திரத்தில் வியப்பைத்தரும் பல விஷயங்களுள் அவருடைய "எழுத்தறிவின்மை" யும் ஒன்றாகும். ஸ்ரீராமகிருஷ்ணர், கதாதரர் எனும் பிள்ளைத் திருநாமம் படைத்திருந்த பொழுது, அவர் பாடசாலையொன்றிற்கு அனுப்பப்பட்டார். வங்காள பாஷையையும் அவர் கற்றுக்கொண்டார். அவர் கையால் எழுதப்பட்ட எழுத்துப் பிரதிகள் சில ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் தலைமைஸ்தானமாகிற பேலூரில் இன்னமும் போற்றப்பட்டு வருகின்றன. ஆதலின் ஸ்ரீராமகிருஷ்ணரை எழுத்தறிவில்லாதவர் என்று கூறுவது ஒரு விதத்தில் உண்மையாகாது. அவ்வாறு அவரைக் கூறுவதன் பொருள், அவர் ஏட்டுக்கல்வியை அதிகமாகக் கற்காதவர் என்பதுதான். சிறுவயதிலேயே அவர் பாடசாலையைக் காட்டிலும் இயற்கையழகு மிகுந்த தோட்ட வெளிகளை அதிகமாக விரும்பினர். பாடசாலையில் பாடம் கற்பதைக் காட்டிலும் தோழருடன் கூடி, இராமர், கிருஷ்ணர் ஆகிய புராதன மகான்களுடைய வாழ்க்கையை நாடக ரூபமாக வாழ்வதில் ஆவல் அதிகம் கொண்டார். பாடசாலையை அனாதரவு செய்ததற்காக அவரைக் கடிய நினைந்த ஆசிரியரும் கூட அவருடைய விளையாட்டின் தன்மையைக் கண்டு மனம் இளகிப் போவராம். மேலும் சிறு வயதிலேயே தியான நிலை கைகூடிய காரணத்தால், அந்நிலை ஏன் ஏற்பட்டதோ வெனக் கலக்கமுற்ற அவரது தாய் தந்தையர் இடையிடையே அவரைப் பாடசாலை செல்லுவதினின்றும் ஓய் வெடுத்துக் கொள்ளுமாறும் செய்தனர். ஆதலால் காமார்ப்புகூரில் ஸ்ரீராமகிருஷ்ணர் பெற்ற ஏட்டுக்கல்வி அதிகமாகாது. இளைஞர் பருவத்தை அடைந்தபிறகு அவரது அண்ணனான இராம்குமார் அவரைக் கல்கத்தாவிற்கு இட்டுச்சென்று அவரைக் கல்விகற்பதில் ஈடுபடும்படி வற்புறுத்தினர். அவருக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் விடுத்த விடையாவது: 'வயிற்றுப் பிழைப்புக்கான இக்கல்வியால் யாது பயன் உண்டு?' என்பதாம். ஆம், பரவித்தையில் பற்றுக் கொண்டவனுக்கு அபர வித்தை சுவைக்காதல்லவா?

எனவே ஸ்ரீராமகிருஷ்ணரின் படிப்பு ஆரம்ப நிலையுடன் நின்றுபோயிற்று. வங்காள பாஷையில் பரிச்சயம் உடையவரேனும் அரசாங்க, நாகரிக, வியாபார, உலகப் பொதுப் பாஷையான ஆங்கில பாஷையில் அவருக்கு Thank you, (தாங்க்யு) போன்ற ஐந்தாறு வார்த்தைகளே தெரிந்திருந்தன. இவ் வாங்கில வார்த்தைகளை அவர்சிற்சில சமயங்களில் உபயோகிப்பது சீடருக்குப் பெரும் களிப்பைத்தரும்.

நூல்கள் மட்டுமே கல்விக்கான முக்கிய வழியென்று கொள்ளுதல் தகாது. கடவுளின் சிருஷ்டியே ஒரு பெரும் நூல் தான். அப்பெரு நூலைப்பற்றிய விவரண நூல்களேயாம் ஆசிரியர் பலருடைய புத்தகங்களெல்லாம். அப்பெரும் நூலில் பரமஹம்ஸர் கரைகண்ட பாண்டித்தியம் அடைந்திருந்தார். இயற்கையை அவர் கூர்ந்து கவனித்தவர். அவருடைய உபதேச மொழிகளைப் படிப்பவருக்கு இவ் விஷயம் நன்கு புரியும். ஞான உண்மைகளை விளக்குவதற்கு அவர் கையாளும் உதாரணங்கள் யாவும் சாதாரண வாழ்வில் நாமனைவரும் காணும் விஷயங்களை

யாம். அவருடைய கிரகிக்கும் சக்தியும் ஞாபகசக்தியும் கூர்மையானவை. இராமாயணம், மகாபாரதம் போன்ற நூல்களை ஒருதடவை கேட்டால் அவற்றின் கதை அவரது மனத்தே நன்கு பதிந்துவிடும். பெரியோர் பலர் விவாதித்துவந்த சிக்கலான விஷயமொன்றைத் தெளிவாக விளக்கிக் கூறும் சக்தி அவர்பால் இளமையிலேயே தென்பட்டது.

ஆயினும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் படிப்பற்றவர்தான். அவருடைய முக்கிய சீடரான விவேகானந்தசுவாமிகளும் ஏனையோரும் பெரும் படிப்புடையவர்கள். விவேகானந்த சுவாமிகள் கல்வி தேவியின் வரப்பிரசாதம் பெற்றவர். கலைப்பகுதி, விஞ்ஞானப் பகுதி என்று கல்வியை இரு பிரிவுகளாகப் பிரித்து வைப்பது வழக்கம். இருபகுதிகளிலும் அவர் பாண்டித்தியம் பெற்றவர். உலக சரித்திரத்தை ஆழ்ந்து கற்றவர். இந்திய சரித்திரத்தின் பகுதியொன்றை அவர் விவரிக்கப் புகுந்தால் அப்பகுதியுடன் தொடர்பு பெற்ற அரசர் முதலியோர் கேட்பவர் முன் பிரத்தியக்ஷமாகத் தோன்றுமாறு விவரிப்பார். அவரது வாக்குவன்மையும் விவரண சக்தியும் அபாரமானவை. அவர் கவிகள் இயற்றுவார். சங்கீதம் பாடுவார். கலைகள் பல வற்றிலும் ஆர்வம் கொண்டவர். ஆங்கில பாஷையில் அவருக்கிருந்த சொல் வன்மை உலகப் பிரசித்தமானது. தெய்விக உரிமையுடன் வந்த சொற்பொழிவாளர் என்று அவரைப் போற்றினர் பலர். சாதாரண மக்கள் ஒரு வாக்கியத்தைப் படித்து முடிக்கும் நேரத்தில் அவர் ஒரு பக்கத்தைப் படித்து முடிப்பார். அவரது ஏகாக்கிரதைச் சக்தி அவ்வளவு பக்குவமானது.

ஏனைய சீடருள் லாட்டு (சுவாமி அத்புதாநந்தர்) என்பவரைத் தவிர மற்றவரில் பெரும்பாலோர் உயர்ந்த படிப்பாளிகளே யாவர். சசி என்ற சுவாமி இராமகிருஷ்ணாநந்தர் கணிதசாஸ்திரத்தில் பற்று மிகக் கொண்டவர். ஆனால் குருதேவருக்கோ கணிதசாஸ்திரத்தின் மீது வெறுப்பு அதிகமாம்.

தெய்விக அருள் பெற்ற ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்வாறு ஏட்டுக் கல்வியை ஏற்காமல் போனதின் உட்கருத்துத் தான் என்ன? படித்துக் கற்கும் திறனற்றவர் என்று அவரைக் கூறுதல் தகாது. அவர் ஈசனைக் காண இயற்றிய கடுஞ்சாதனைக்குச் செலுத்திய சக்தியில் ஆயிரத்தில் ஒரு பங்கை ஏட்டுக் கல்வியின் மீது செலுத்தி யிருந்தாராகில் அவர் அபார பாண்டித்தியம் பெற்றிருப்பார். ஏன் அவர் அவ்வாறு செய்யவில்லை? வேண்டுமென்றே அவர் கல்வியை அனாதரவு செய்தார் என்றல்லவோ தோன்றுகிறது! அங்ஙன மிருந்தும் இந்தப் படியாத, நாட்டுப்புறத்துப் பூசாரியைச் சுற்றிப் பண்டிதரும், நவீனப் பல்கலைக் கழகங்களில் பயிற்சிபெற்ற பேராசிரியரும் குழுமி யிருந்ததேன்?

ஸ்ரீ ராமகிருஷ்ணரை நேரிற் கண்டவருள் பலர் அவருக்கும் வங்காளத்தின் பக்த சிகாமணியான சைதன்ய தேவருக்கும் இடையே பல ஒற்றுமைகளைக் கண்டனர். ஸ்ரீ சைதன்ய தேவர் இளமையில் புகழ்மிகுந்ததொரு பண்டிதராய் இருந்தார். அவரை வித்தையில் வெல்லக் கூடியவர் யாருமில்லை. ஆனால் பகவத் பக்தி எனும் புயல் அவர் மீது வீசியபொழுது அவர் கற்ற கல்வி முழுவதையும் புறக்கணித்து விட்டு, பகவந் நாம உச்சாரணத்தில் ஈடுபட்டுவிட்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணர், பின்னால் புறக்கணிக்கப்பட வேண்டிய கல்வியை ஏற்கவே இல்லை. உபநிஷத்துக்களின் கர்த்தாக்களான மகரிஷிகள் தாம் பெற்ற அநுபவத்தின் பயனைக் கூறியிருப்பதென்ன?

"வேதங்களைக் கற்பதாலோ, புத்தியினாலோ, வேதநூல்களை அதிகமாகக் கேட்பதாலோ இந்த ஆத்மா அடையக் கூடியதன்று."

ஸ்ரீ ராமகிருஷ்ணர் உலகில் வாழ்ந்த காலத்தில் மேனாட்டுக் கல்விக்கு அளவுக்கு மீறிய முக்கியஸ்தானம் அளிக்கப்பட்டு வந்தது. ஆங்கிலம் கற்காதவர் நாகரிகமற்றவர் என்ற எண்ணமும், மேனாட்டுக் கல்வியை ஏற்றாலன்றிப் பரிபூரண வாழ்வை எய்துவது துர்லபமாகும் என்ற நம்பிக்கையும் நாட்டில் பரவி வந்தன. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வாழ்வு அந்த எண்ணத்திற்கும் நம்பிக்கைக்கும் நீண்டதொரு எதிர்ப்பாக வாழப்பட்டது. மேனாட்டுக் கல்வியெனும் அருவிகளில் நீர்பருகி ஆன்மதாகம் நீங்காத பலர் ஞான ஊற்றாகிற ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்து நீர்பருகித் திருப்தியுற்றனர்.

இந்திய நாட்டுப் பொது மக்களில் பலருக்கு ஏட்டுக்கல்வி இல்லாதிருந்தும் அவர்களை முட்டாள்கள் என்று கருதுவது தவறாகும். உலகானுபவம் எனும் வாயிலாலும் செவி வாயிலாலும் அவர்கள் பெறும் கல்வியை அனுதரவு செய்வது கூடாது. இந்தியநாட்டு மக்கள் இவ்வாறு ஓதாது அறிவு பெறுவதை எடுத்துக்காட்டவே போலும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஏட்டுக் கல்வி கற்காது போனார்.

சாதாரண மக்கள் தம் பசியைத் தீர்த்துக்கொள்ளப் பணியாரங்கள் பலவற்றைப் புசிப்பது அவசியம்தான். ஆனால் அமுதத்தைச் சுவைத்தவனும் அப்பணியாரங்களில் பற்றுக்கொள்ள வேண்டுமென எதிர் பார்ப்பது மதியீனமல்லவா? சித் சொரூபியுடன் தொடர்பு பெற்றவனுக்கு உலக நூல்கள் அறிவிக்கக்கூடிய விஷயமும் உண்டோ?

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் எழுத்தறி வின்மையைப் பற்றி விவேகாநந்தசுவாமிகள் இவ்வாறு கூறுகிறார்:

"படைத்தல், காத்தல், அழித்தல் தொழில்களைச் செய்வதற்கு வேண்டிய கருவியாக வேத உண்மைகள் எப்பொழுதும் சிருஷ்டிகர்த்தாவினிடம் இருந்து வருகின்றன. இவ்வுண்மைகள், உலகப் பற்றெனும் மாசு அறவே அற்றுப்போன ரிஷிகளினுடைய அகத்தின்கண் தாமே தோன்றுகின்றன. இதை நன்றாக எடுத்துக் காட்டவே போலும், வேதசொரூபியான பகவான் அவரது புதிய அவதாரமான வித்தை யாவையும் அறவே புறக்கணித்து விட்டார்."

கிரந்தங்கள்யாவும் கிரந்திகள், அதாவது புத்தகங்கள் பந்தப்படுத்தும் முடிச்சுகளேயாம் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதுண்டு.

* * *

மேலே கூறியதினின்றும் பகவத் சாதனை யொன்றே வாழ்வின் நோக்கமென்றும் புத்தி பூர்வமான கல்வியால் ஏதும் பயனில்லை யென்றும் ஸ்ரீராமகிருஷ்ணர் அபிப்பிராயம் கொண்டதாகக் கொள்ளலாம். அங்ஙனமாயின் ஸ்ரீராமகிருஷ்ணர் கல்வியின் விரோதியா? அவர் பெயரால் நாட்டில் நடைபெறும் கல்விச் சாலைகள் அவரது கொள்கைக்கு மாறான ஸ்தாபனங்களா? தேசியக் கல்வித்திட்டமொன்றை வகுக்கப் பெரும்பாடுபட்ட விவேகாநந்த சுவாமிகள் குரு தேவருடைய போக்கிற்கு மாறாகச் சென்றாரா? இவ் வினக்களைப் பரிசீலனை செய்வோம்.

வேதாந்த கேசரியெனும் ஆங்கிலப் பத்திரிகையில் 1938-39 ல் ஸ்ரீராமகிருஷ்ணருடைய போதனைகளின் பல அம்சங்களைப்பற்றிச் சில அழகான கட்டுரைகளை தபஸ்யாநந்த சுவாமிகள் (இப்பொழுது திருவனந்தபுரம் ஸ்ரீராமகிருஷ்ணமடத்துத் தலைவராயுள்ளவர்) தொடர்ந்து எழுதினார். ஓரிடத்தில் மேலே கூறிய

பிரச்னையை அவர் நன்றாக விளக்கியிருக்கிறார் :—

புத்தக அறிவைப்பற்றிப் பெருமை கொள்ளுவோரிடம் குருதேவர் வெகு கடுமையாக இருப்பார். தனது கல்வி அல்லது சொத்தைப்பற்றிக் கர்வப்படுவோனிடம் ஈசுவர ஞானம் அணுகாது என்று அவர் கூறுவார். அத்தகைய கர்விஷ்டனொருவனிடம் சென்று 'அங்கோரிடத்தில் முனிவர் ஒருவர் உளார். அவரைச் சென்று காண விரும்புகிறாயா ?' என்று வினவினால் அவன் ஏதாவதொரு சாக்குச்சொல்லி வரமுடியாது என்று கூறிவிடுவான் என்று குருதேவர் சுட்டிக் காட்டுவார். இந்தக் கர்வம் அஞ்ஞானத்தால் ஏற்படுவது. அது பந்தத்தின் அறிகுறியாகும். குருதேவர் ஒரு மனிதனிடம் கடவுளைப்பற்றிப் பேசியபொழுது அவன், 'ஓ! இதையெல்லாம் நானறிவேனே !' என்று கூறினான். குருதேவர் அவனிடம் 'டில்லிக்குச் சென்றவன் அதைப்பற்றிப் பெருமையாகப் பேசிக் கொள்ளுகிறானா ? கனவானொருவன் தன்னைக் கனவான் என்று கூறிக்கொள்ளுவானா ?' என்று சொன்னார். நூல்கள் யாவும் கட்டுகளேயாம் என்று குருதேவர் கூறுவதன் கருத்து மேலே கூறிய கர்வம் தகாததொன்று என்பதைக் காட்டுவதேயாம். வீண் பெருமையை யகற்றிச் சத்தியத்தில் நாட்டத்துடன் ஒருவன் மத நூல்களைப் படியாது போனால் மத நூல்களில் அவனுக்குள்ள பாண்டித்தியம் அகங்காரத்தையே உண்டுபண்ணும். கர்வம் நிறைந்த இருதயத்தின்கண் தியானமும் பிரார்த்தனையும் எவ்வித நற்பயனையும் தராதுபோகும்.

குருதேவர் இவ்வாறு கூறுவதால் அவர் புத்திபூர்வமான கல்விப் பயிற்சிக்கு விரோதப் பான்மை கொண்டவர் என்று என்னும் சிலர் தமது மௌட்யத்தையும் சோம்பலையும் மறைப்பதற்காக ஸ்ரீராமகிருஷ்ணருடைய உபதேச மொழிகளைத் தமக்குச் சாதகமாக எடுத்துக் கூறுகின்றனர் ! இவ்வாறு செய்வது அம்மகானுடைய அருஞ்சொற்களைத் திரித்துக் கூறுவதேயாகும். புத்திபூர்வமான ஆராய்ச்சியைக் காட்டிலும் இருதய பூர்வமான ஆத்மீய சாதனையே சிறந்தது என்று குருதேவர் கூறுவது உண்மைதான். ஆனால் சோம்பலைக் காட்டிலும் புத்தி பூர்வமான ஆராய்ச்சியே சிறந்ததென்றே அவர் கூறியிருப்பார் என்பது திண்ணம். ஈசுவர இச்சை தோன்றிய மனிதன் புத்திபூர்வமான கல்வியைப்பற்றிக் கவலை கொள்ளமாட்டான். ஆனால் ஈசுவர இச்சையற்றவனும் சரீரப்பற்றும் உலகப்பற்றும் உடையவனுமான மனிதன் ஒருவன் புத்திபூர்வமான கல்வியை இகழ்வது மதியீனமேயாகும். கல்விக் கர்வம் அஞ்ஞானத்தின் அறிகுறியானால் புத்தியைச் சோம்பல் நிலையில் வைப்பதைப்பற்றிக் கர்வம் கொள்ளுவது பெருங் குறையொன்றைப் போற்றிப் புகழ்வதேயாகும். குருதேவர் வேண்டுவது யாதெனில் நூலறிவைப்பற்றிய சரியான எண்ணத்தை நாம் பெற வேண்டுமென்பதேயாம். வேத நூல்கள் ஈசுவர வழியைச் சுட்டிக் காட்டுகின்றன. ஏதோ சில சாமான்கள் வேண்டுமென்று எழுதிய கடிதமொன்றிற்கு அச்சாமான்களை வாங்கும் வரையில்தான் மதிப்பும் உபயோகமும் உண்டு. நூல்களைப் படித்து அவற்றினின்று ஊக்கம் பெற்று அவ்வூக்கம் அனுபவமாகுமாறு செய்தல் அவசியமாகும். அவ்வாறின்றி நூலறிவையே வாழ்வின் முடிவெனக் கொண்டு அதற்கே அடிமைசெய்து வருகின்றவன், மாந்தோட்டத்திற்குச் சென்று கனியுண்ணாமல் இலை எண்ணுகின்றவனே யாவான். ஸ்ரீராமகிருஷ்ணர் கண்டிப்பது நூலறிவ

யல்ல. நூலறிவைச் சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ளாததையே யாம்.

மெத்தப் படித்தவர் சிலர் உயர்ந்த வேதாந்த விஷயங்களைப் பற்றித் தர்க்கம் செய்த இடத்திற்குச் சென்ற ஸ்ரீராம கிருஷ்ணர் (சிறுவராயிருந்த பொழுது) அவர்களது நோக்கமெல்லாம் சிறு வெகுமதி யொன்றைப் பெறுவதேயாம் என்று கண்டார். உயரப்பறக்கும் கழுகு தரை மீது கிடக்கும் பிணத்தின் மீதன்றோ நாட்டம் கொள்கிறது!

வாசாஞானம் முதற்படியே யாகும். அது அனுபவ ஞானமாக மாறுவதாலேயே பூரண நிலையை யடைய முடியும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் பெயரால் நடைபெறும் கல்விச் சாலைகள் இக்கொள்கையையே பின்பற்றுகின்றன. அங்கு மாணவருக்குப் புத்தி சம்பந்தமான கல்வியை மட்டும் புகட்டுவதுடன் நிற்காமல் மாணவரது உடலும் உள்ளமும் பக்குவப்படும் முறையில், மூளைமட்டுமன்றி வாழ்வே மேன்மையுறும் முறையில், கல்வி புகட்டுகின்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கல்வியைப்பற்றிக் கொண்டுள்ள கருத்தையே ஸ்ரீவிவேகானந்த சுவாமிகள் 'மனிதனிடத்தே புதைந்து கிடக்கும் பரிபூரண நிலையை வெளிப்படுத்தலே கல்வியாகும்' என்று எடுத்துரைத்தார்.

---

# சந்தேகம் தெளிதல்

வினு:—சிவஸ்தலங்கட்கோ விஷ்ணு ஸ்தலங்கட்கோ சென்றால் சிலர் மொட்டையடித்துக்கொள்கின்றனர். தங்கட்கு ஏதேனும் குறை நேர்ந்தால் ஸ்தலத்துக்குப் போய் மொட்டையடித்துக் கொள்வதாகப் பிரார்த்தனை செய்து கொள்ளுதல் கூடாதா? இதன் உட்கருத்து என்ன?

—வ. ந.

விடை:—புண்ய ஸ்தலங்கட்குச் செல்லும் காலத்து அங்கே சென்றதும் நமது பாவங்களையெல்லாம் போக்கிக் கொள்ள வேண்டும் என்ற அவா எழுதல் இயல்பு. பல பாவங்களை நாம் மனமாரச் செய்துள்ளோம் என்ற நினைவு வரும்போது, நம்மையே தண்டித்துக் கொள்ளவேண்டும், அவைகட்காக நாம் பிராயச்சித்தம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று தோன்றுதலும் இயல்பு. மொட்டை யடித்தலைப் பொதுவாக ஒருவரும் விரும்பார்; அது விகாரத்தை உண்டு பண்ணுதல் வெளிப்படையாதலின், அது தமக்குத் தக்க தண்டனையும் பிராயச்சித்தமும் ஆகும் என்றெண்ணியே, புண்ணிய ஸ்தலங்கட்குச் செல்வோர் அவ்வாறு செய்கின்றனர். இக்கருத்து அறியப்பட்டாலும் அறியப்படாவிட்டாலும், ஒருவாறு பாவங்கட்குப் பரிகார முண்டாகின்றது; மனத்தூய்மையைப் பெற எண்ணிப் புண்ய ஸ்தலங்கட்குச் செல்வார், மொட்டையடித்ததும், தமது பண்டைய பாவங்கள் இறைவனது அருளால் போய்விட்டதாக நினைக்கின்றனர்; அம்மாதிரியான பாவங்களைப் பிற்காலத்திற் செய்யக்கூடாது என்றும் தீர்மானித்துக் கொள்கிறார்கள்; அதற்காகப் பிரார்த்தித்துக்கொள்கிறார்கள். ஆக மொட்டை யடித்துக் கொள்ளுதல் பாவங்கட்குப் போக்கு ஒன்றைத் தேடிக்கொண்டதற்கும், மனது மாறிப் புதிய நெறியொன்றைப் பின்பற்றும் தீர்மானம் செய்ததற்கும் அறிகுறியாகின்றது.

நமக்கு யாதேனும் ஒரு குறையோ நோய்களோ நேருங்கால், அது தீர்ந்தபின் பகவானது சந்நிதியில் மொட்டையடித்துக் கொள்வதாகப் பிரார்த்தித்துக்கொள்கிறோம். குறையும் நீங்கும், நமது பண்டைய கெட்டவினையின் பயனாகத் தோன்றுபவை என்ற நினைவும், அவை இறைவனது கருணையால் உண்டாகின்றன என்ற ஞானமும் உடையவர்கள், அக்குறையும் நீங்கும் இனி நேராதிருக்கும் பொருட்டுத் தமக்குத் தாமே தண்டனையை விதித்துக்கொள்ள விரும்பலாமன்றோ? இவ்வாறு விரும்புபவர்கள் தாமாகவே இறைவனுடைய சந்நிதியில் அப்படிப் பிரார்த்தித்துக் கொள்கிறார்கள். இவர்களை அவ்வாறு தண்டனைக்குச் சமானமான பிரார்த்தனைகளைச் சொல்லும்படியாகப் பகவான் வற்புறுத்துவதில்லை. தாங்கள் மனப்பூர்வமாகப் பிழையை உணர்ந்து, அதற்காகத் தம்மைக் கண்டிக்க விரும்பும் மனிதர்களைப் பகவான் தடுப்பதுமில்லை. ஆனால் ஒரு தவறு செய்ததற்குப் பிராயச்சித்தமாக ஒருவன் தன்னைத்தானே தண்டித்துக் கொள்ளவேண்டும் என்ற நியதி இல்லை. பின் அத்தவற்றிற்கு ஆளாகாதிருக்குமாறு மனப்பூர்வமாக (மனமுருகிப்) பிரார்த்தித்துக் கொண்டால், அதுவே தக்க பிராயச்சித்தமாகும். தீராத வயிற்று வலியால் வருந்தும் ஒருவன் தான் வயிற்றுவலி நீங்கப்பெற்றதும், பகவானுக்காக அங்கப் பிரதக்ஷணம் பண்ணுவதாக வேண்டிக்கொள்ளுகிறான். வயிற்றுவலி பண்டைய கருமத்தின் பயனாதலின் அக்கருமவினையை விரைவில் ஒழிப்பதற்காக, வேறொரு தண்டனையை அவன் தனக்கே விரும்பி விதித்துக்கொண்டால், அது பழைய வினைத் துன்பத்திற்கு ஈடாகிவிடும்; ஆகவே நோய் நீங்கும். இதுவே இவர்களது செயலில் அடங்கிய தத்துவமாகும். ஆனால், அப்பழைய கருமத்திற்குப் பகவானைப் பிரார்த்திப்பதே பிராயச்சித்தமாகலாம்; ஜெபமும், அன்போடு செய்யும் பூஜையும், மனமுருகிப் பிரார்த்தித்தலும், தியானமும் பழைய தீயவினைக்கு நல்ல மாற்றாகும். ஆதலின் நமக்கு இன்பத்தைத்தரும் செயல்களினும் ஒருவாறு உயர்ந்தவையுமாகும். இம்மாதிரியான செயல்களில் ஒவ்வொருவரது மனஇயல்பும் ஒவ்வொரு விதமாயிருக்கலாம். அவரவரது இஷ்டம் போல் பிரார்த்தனை செய்துகொண்டு அதை நிறைவேற்றலாம்; நிறைவேற்றத் தவறினால் பாவமாகும். நம்மீது கொள்ளும் வெறுப்பினால் ஏற்படுத்திக் கொள்ளும் தண்டனையைக் காட்டிலும் (பிரார்த்தித்துக் கொள்ளும் ஒரு துன்பத்தைக் காட்டிலும்) அன்பினால் இறைவனுக்காக ஒரு காரியம் செய்தல் மேலாகும். உடலைத் துன்பத்திற்கு உள்ளாக்குவதினும், மனதைப் பயிற்றுதல் மேலன்றோ? நோயை நீக்குவதற்கு, ஒரு கசப்பான மருந்தைக் குடிப்பதைப் பார்க்கிலும் தித்திப்பான இன்பந்தரும் மருந்தைக் குடித்தல் நன்றன்றோ? நம்மீதுள்ள வெறுப்பினால் நம்மையே நாம் கண்டிக்க எத்தனித்தாலும், "இத்தனை மணிநேரம் ஜெபம் செய்வேன்" என்று சொல்லிக் கொண்டு, இறைவனிடம் அதில் வெற்றி தரும்படி வேண்டல் மிக்க பயனைத் தருவது உறுதி. ஜெபமும் தியானமும் எவ்வகையான பாவங்கட்கும் பிராயச்சித்தமாகும்.

வினா:—(1) துறவு பூண்டவர்க்குள் சந்நியாசியானாலும் கிரஹஸ்தருள்ளேயும் சிலர் மொட்டையடித்துக் கொண்டும் இருக்கின்றனர். துறவு பூண்டவர் மொட்டையடித்துக் கொள்வதும் சடைமுடி தாங்குதலும் கையிற் கமண்டலம் முதலியன கொள்ளுதலும் எதற்காக?

இதன் குறிக்கோள் என்ன? (2) உலகப் பற்று யாவையும் நீத்து விட்டதற்கு அறி குறியாகக் காவியாடை தரித்துக்கொள் வதன் உட்கருத்து என்ன? —ப. ந.

விடை:—தலையில் முடி இருந்தால் அதைப் பற்றிக் கவனிக்கவேண்டிய அவ சியம் ஏற்படும். உடலைப்பற்றிய நினைவை ஒழித்தலையே குறிக்கோளாக உடையார் துறவிகள்; அதற்கு தலைமுடி இடை யூறுகுமாதலின், அதை நீக்கி விடுகின் றனர். மொட்டையடித்துக் கொள்வதன் உட்கருத்து, உடலைப் பற்றிய கவலையை ஒழித்தலே. மேலும், சிகை இல்லறத் தார்க்கு அவசியமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன; ஆதலின் சிகையை நீக்கு தல் இல்லறப் பற்றினை ஒழித்ததற்கு அறிகுறி யாகின்றது. உடலைப்பற்றிய நினைவில் அருவருப்பு இருப்பதை மற் றொரு வழியாகவும் வெளிக் காட்டலாம். உடல் எப்படியிருந்தாலென்ன என்னும் மனநிலையை உடலைப் பேணுமையினுலும் வெளிக்காட்டலாம். உடலைப்பேணுமைக்கு அறிகுறியாகச் சிகையை வளர்க்கவும், அதில் அழுக்கு ஏறிச் சடையுண்டாகும் படி விட்டுவிடவும் செய்யலாம். மழித் தலும் நீட்டலும் முன்னோர்களாற் கையாளப்பட்ட முறைகளாதலின் அவை கட்குச் சாஸ்திரங்களில் ஆதாரம் இருத்த லின் அவைகள் வழங்கி வருகின்றன. தண்டமும் கமண்டலமும், ஊரூராக நடந்து செல்லும் பிரயாணிகட்கு இன்றி யமையாதன; ஆதலின் அவை வழி நடப் போர்க்கு அறிகுறியாயின. துறவிகள் ஓரூரிலேயே நிலையாகத் தங்காமல் ஓரிடத் தும் பற்று ஏற்பட இடங்கொடாமல் ஊரூ ராகத் திரிபவர்களாதலின், அவர்கட்கு அவை அறிகுறிகளாகின்றன.

வினா:—யாகசாலையில் ஆடு பசு முதலி யவைகளைக் கொன்று, மாமிசத்தைப் பிராமணர்களும் உண்டதாகவும், அவ் வாறு இறந்த மிருகங்கள் உயர்ந்த பதவியை அடைந்ததாகவும் சாஸ்திரங் களிலிருந்து அறிகிறோம். மிருகங்களைக் கொல்லுதலும் மாமிசம் புசித்தலும் பாபமல்லவா? —வ. ந.

விடை:—உயிர்ப் பிராணிகளைக் கொல் லுதல் நல்லதல்ல என்பதை நமது மஹ ரிஷிகள் உணர்ந்தவர்களே; பச்சைக் காய்கறிகளையும் இலைகளையும் உயிருள்ள பொருள்களாகக் கருதி, அவைகளையும் உண்ணுமல், எவ்வுயிர்க்கும் இம்சையற்ற உணவாகிய காற்றையே உண்டும் வாழ்ந்து வந்தனர். அஹிம்சையின் மகிமையை நன்றாக உணர்ந்தவர்களாத லின், அஹிம்சாப் பரமோ தர்மா என்ற கொள்கையைப் பின்பற்றியவர்களானர். ஆனல் அக்காலத்தில் பெரும்பாலரான மக்கள் புலாலுண்ணும் வழக்கத்தையுடை யவராயிருந்தனர். இவ்வழக்கத்தைஒழிக்க நினைத்த பெரியார்கள், மனித சுபாவத்தை நன்கறிந்தவர்களாதலின், திடீரென்று அதை நிறுத்த முடியாதவர்கட்கு ஒரு சிறந்த முறையை எடுத்துக்கூறினர். அந்த முறையே யாகம் என்பது. யாகம், எக்ஞம், வேள்வி, ஆராதனம் முதலியன ஒருபொருட் சொற்கள் என்னலாம். ஊனை உண்ணும் விருப்பமுள்ளவர்க்கு, யாகஞ் செய்து தேவதைகளுக்கு ஊனை நிவேதனஞ் செய்து, பின்பு பிரசாதமாக அதை உண்ணவேண்டும் என்று கட்டளை யிட்டார். இதனுல் ஊன் எனும் உணவு தூயதாயிற்று; அத்தூய உணவை உண் பதால் ஸத்வகுணம் தலையெடுக்கலாயிற்று. ஊனிலுள்ள அடங்காத விருப்பு வரவரக் குறைவதாயிற்று; எவ்வாறெனில் யாகஞ் செய்வதற்கு மிக்க பொருட் செலவும் நியம நிஷ்டைகளும் வேண்டுவன வாதலின், ஊனை உண்ணும் அவாவும் சந்தர்ப்பமும் குறையலாயின. இவ்வாறு நாளடைவில் ஊனுண்ணும் வழக்கமே

பெரும்பாலும் குறைந்துவரலாயிற்று. இவ்வாறு ஊனுண்ணும் வழக்கத்தை ஒழிப்பதையே உட்கருத்தாகக் கொண்டு வேதம் யாகங்களை விதித்தது. மிருகங்களைக் கொல்லுதல் சரியென்பது அதன் கருத்தன்று. வேதம் மனிதர்களின் பக்குவங்களுக்குத் தக்கபடி பற்பல ஒழுக்கங்களை விதித்துள்ளது; என்றாலும், மிக உயர்ந்த ஒழுக்கம் இன்னதென்பதையும் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. யாகங்களில் சொல்லப்படும் பிராணிகள் மந்திரங்களின் சத்தியாலும் தெய்வங்களின் அனுக்கிரகங்களாலும் உயர்ந்த பிறப்புகளைப் பின்னர் எய்துகின்றன என்று வேதம் கூறுகின்றது.

வினா:—சுவாமி விவேகானந்தர் சிறு வயதில் மேல்மாடியில் விளையாடிக்கொண்டிருக்கையில் படிக்கட்டினின்றும் தவறிக் கீழே விழுந்த காரணமாய், அவரது வலது புருவத்தில் பெரிய தழும்பு ஒன்று காணப்பட்டு வந்தது. இந்த ஆபத்தின் வாயிலாக இவரது சக்தியிற் பெரும் பகுதிக்குப் பங்கம் வராதிருக்குமாயின், இவர் உலகத்தைத் தமது சக்தியால் கலக்கி யிருப்பார் என்று இவரை ஆட்கொண்ட பெரியார் பகர்ந்தருளினர். சுவாமிஜிக்கு இந்த ஆபத்தின் வாயிலாகச் சக்தி குறைவானேன்? —ப. ந.

விடை:—மிக்க சக்தி ஒருவனிடமிருப்பினும், அவனது காலிலொன்று சக்தியற்றதாயும் குட்டையாயும் இருந்தால், அவனால் மிக விரைவாக ஓடமுடியாது. ஏன்? சக்தியை உடல்வாயிலாகத்தான் வெளிப்படுத்த வேண்டியிருக்கிறது; உடல் சரியான நிலையில் இல்லாதபோது, சக்தி இடையூறின்றி முழுவதும் வெளிப்படாது. இதுபோல், மூளையெனும் கருவி சரியான நிலையில் யாதொரு குறையும் அற்று இருந்தாலன்றி, அறிவின் சக்தியை அதன்வாயிலாக முழுவதும் வெளிப்படுத்த முடியாது. ஸ்ரீ சுவாமிஜீ முழுச்சக்தியோடும் அவதரித்திருந்தார். அவரது உடலும் அவரிடத்து அடங்கிக்கிடந்த முழுச் சக்தியையும் வெளிப்படுத்துதற்கு ஏற்ற நல்ல நிலையில் அமைந்திருந்தது. சிறுவயதில் மாடியிலிருந்து கீழே விழுந்தமையால் மூளைக்கு ஓர் அதிர்ச்சி உண்டாகி, ஒருவாறு மூளை சிறிது வலிகுன்றியதாயிற்று. இதனால் அவரிடத்து இயல்பாக உள்ளிருந்த வலிமை முழுவதும் வெளிவர சக்தியில்லாமற் போயிற்று; சிறிது குறைவாகவே அவரது சக்தி வெளிப்பட்டது. ஆயினும் அந்த திவ்விய ஞான சக்தி உலக மக்களிற் பலரை ஆட்கொண்டது. அவர் சென்ற விடமெல்லாம் ஞானவெடிகுண்டு ஒன்றை எறிந்தவர் போலப் பொழிந்தார்; அதாவது, அவர் சென்ற விடமெல்லாம் மிகப் பெரிய ஞான சக்தியை விரைவில் எங்கும் பரப்பி வந்தார். இவ்வளவு சக்தியே உலகத்தை உயர்த்தவும் உலகமக்களை உய்விக்கவும் போதுமானதாயிற்று. முழுச்சக்தியும் அவர் வாயிலாக வெளிவந்திருந்தால், அதை உலகம் தாங்க முடியாது நிலைகுலைந்து போய்விடும். இறைவனது அருளால் அவ்வாறு நிகழவில்லை. இதன் காரணம் அவரது மூளைக்கு ஏற்பட்ட ஒருவித அதிர்ச்சியே. சுவாமிஜீயின் வாழ்க்கையில் நிகழ்ந்த அந்த ஆபத்தும் உலகத்தார்க்கு நன்மையளிப்பதற்காகவே இறைவனதுஅருளால்நிகழ்ந்தது என்பது அவரை யாட்கொண்ட குருநாதரது கருத்து. அவரொருவரே சுவாமிஜீயின் முழு ஆற்றலையும் ஞானக்கண்ணால் நன்கு உணர்ந்திருந்தார்.

---

# கோயில் சுடுகாடு

(பூ. ஸ்ரீநிவாசன் தமிழாசிரியன், சித்தூர்)

சகல அண்ட சராசரங்களையும் படைத்தளித்துத் துடைக்கும் பரம் பொருளின் இயல்பினை யாராய்ந்து முடிவு காண விழைந்து முயன்ற முன்னோர், தாம் கண்ட உண்மையினை நம்மனோர்க் குணர்த்திப் போந்த முறை சாலவும் வியக்கத் தக்கதாகும். அப்பொருளை "உளதென வுரைக்கினு முரைக்க; இலதென வெண்ணினு மெண்ணுக. ஒன்றெனக் கொள்ளினும் கொள்க; பல வெனப் பகரினும் பகர்க. ஆணென வழைக்கினுமழைக்க; பெண்ணெனப் பேசினும் பேசுக; மற்றெவ்வாறேனு மியம்புக."

"ஒன்றே யென்னி னொன்றேயாம்,
பல வென்றுரைக்கிற் பலவேயாம்.
அன்றேயென்னி னன்றேயாம்,
ஆமே யென்னி னாமேயாம்.
இன்றே யென்னி னின்றேயாம்,
இலதென்றுரைக்கி னிலதேயாம்."

"ஆண்பாலோ! பெண்பாலோ! அப்
[பாலோ! எப்பாலோ!" (கம்பர்)

"ஆணல்லன், பெண்ணல்லன், அல்லா
[அலியுமல்லன்,
காணலுமாகான், உளனல்லன், இல்லையல்
[லன்,
பேணுங்கால் பேணு முருவாகும், அல்
[லனுமாம்,
கோணை பெரிதுடைத் தெம்பெம்மானைக்
[கூறுதலே." (சடகோபர்)

"உண்டெனினுளதாம்; இன்றெனினில தாம். எவ்வாறு பாவிக்கினும் அவ்வாறு நின்று காட்சியளிக்கும் ஆற்றலும் அருளும் உடையதந்தப் பொருள்" என் றெல்லாம் காட்டிப் போந்தனர். ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லா வொன்றைப் பல நாமம் பல வுருவம் பகர்ந்து பாடிப் பரவி னர். அருவுமன்று, உருவுமன்று, அரு வுருவுமன்று; இத்தகைத்தெனக் கூறொ ணாதது; இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதது; எல்லாமாய் அல்லதுமாய் ஒளிர் வது; எனினும், படைத்தல் முதலாம் முத்தொழிலி னிமித்தம் மூவுருவாயு மிளிர்வது என்பன போன்ற உண்மை களைச் செவ்வனே விளக்கியருளினர்.

இவ்வாறு அப்பரம்பொருளி னியல்பு களைக் கண்ட வான்றோர், அதனை அடைய வேண்டி அதின் அவசியத்தையும் நன்குணர்ந்து, அடையும் நெறிகளையும் பலவாறாக வகுத்துக் காட்டினர். அந்நெறி கள் பலவற்றுள் மூர்த்திவழிபாடு மொன் றாகும். அம்மூர்த்தி வழிபாட்டின் மாண் புதா னென்னே! உன்னுந்தோறும், உன்னுந்தோறும் எடுக்கவெடுக்கக் குறை படா தொளிரும் புதைபொருள்போல, எத்துணையோ உண்மைப் பொருள்களைத் தந்து நிற்குந் தகைமைதா னென்னே! உதாரணமாகச் சிவமூர்த்தத்தி னமைப்பு களுள் ஒன்றினை ஈண்டுச் சிறிது காண் பாம்.

சிவபெருமான் உருவவமைப்பினை யுற்று நோக்கின் அது நல்குங் காட்சி யாது? இல்லறக்காட்சியா? துறவறக்காட்சியா? பெண்ணொருபாகம் இல்லறக்காட்சியை யொருபால் நல்க, சடைமுடியும் புலித் தோலாடையும் கரியுரி போர்வையும்

அரவாபரணமும் வெண்ணீறுங் கண்டிகையும் துறவுக்காட்சியை மற்றொருபால் விளக்க, இவ்விரண்டினும் வேறாக இல்லறத்துறவு நிலைக்காட்சியினையும் ஒருபால் விளக்கி நிற்கின்றதன்றோ! பிரமன் சிரம் பறித்ததும் காலனைக் காய்ந்ததும் காமனை யெரித்ததும் பிறப்பிறப்புக் காமங்களற்றது அத்தனிப் பரம்பொருளென்பதனை அறிவுறுத்துவன வல்லவோ! உள்ளங் கவர்கள்வன் உருவச்சிறப்பினை எவ்வாறு களிப்பது? எவ்வாறு எண்ணுவது? "மாற்ற மனங்கழிய நின்ற மறை" யோனது உருவத்தின் துறவுநிலை, சுவாமி விவேகாநந்தரின் உள்ளத்தை இளமையிலேதானே கொள்ளைகொண்டதாக அவரது சரிதம் கூறுகின்றதே.

'அவனருளாலே அவன்தாள் வணங்கி' அவனியல்புகளைப் பாடித் துதித்துள்ள பெரியார்களில் ஒருவராகிய மணிவாசகனார்,

"கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ"

என்னும் வாசகத்தால், சிவனுறைகோயில் சுடுகாடு எனச் சுட்டியருளினர். இதன் கருத்தென்ன? சுடுகாடு கோயிலாவ தெப்படி? சுடுகாடு கோயிலெனச் சுட்டிய பெரியார் சுடுகாட்டில் அப்பெருமானை யாண்டும் வழிபட்டிலரே. தில்லை மூதூர் திருப்பெருந்துறை யாகிய தலங்களிலன்றோ வழிபட்டுள்ளார்! அங்ஙனமாகக் கோயில் சுடுகாடு எனக்குறித்ததேன்?

கண்ணுதலானைக் கைலாசவாசன் எனப் புராணங்கள் புகலாநிற்கும்.

"கைலாச மெனப்படுவதெது? அஃது யாண்டுளது?" என்பனபோன்றவை ஆன்றோரின் ஆராய்ச்சிக்குரிய விஷயங்களாம். வெள்ளிமலை யெனப்படும் கைலாசம் யாண்டேனு முளதாயினு மாகுக சத்துவ குணப்பெருக்கமே வெள்ளியங்கிரியென உருவகப்படுத்தப்பட்டிருக்கின்றதெனக் கொள்வது குற்றமாகாது. சத்துவ ரஜோ தமோ குணங்களை முறையே வெண்மை செம்மை கருமை நிறங்களாக ஆன்றோர் அறைகுவர். எனவே வெண்மைமிக்கக் கருமை செம்மைகளின் கலப்பு, சிறிது மின்றிய - இராசத தாமத குணங்களற்ற - சுத்த சத்துவ குணப் பெருக்கமே (மலையே) சிவபரஞ்சுடரின் உறைவிடமா மென்பதே அப்புராணங்களின் கருத்தாகும்.

நாராயண னிருக்கை திருப்பாற் கடல் எனக் கூறப்பட்டிருப்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கதாம்.

நித்திய நிர்மல நிஷ்கள நிராமய சொரூப பரம்பொருளை வழிபடுதற்கு ஏற்ற விடங்களாகக் கோயில்க ளமைக்கப் பட்டிருக்கின்றன. அக்கோயில்களின் அமைப்பு உடலினமைப்பினையேகொண்டு ஆக்கப்பட்டிருக்கின்றதென்பது ஆன்றோரபிப்பிராயம். ஆகவே, ஆக்கையே ஆலயமென்பதும், அவ்வாலயமே ஈஸ்வர வழிபாட்டிற் கேற்றதென்பதும், தேகாலயத்தே சிதாகாச தேவனைத் தெரிசிக்கும் நெறியறியார்க்கு அந்நெறியை யுணர்த்துவான் ஆக்கப்பட்டவைகளே ஆலயங்களென்பதும் பெறப்படுதலின், ஆக்கையை அகக்கோயிலென்றும் ஏனையவற்றைப் புறக்கோயிலென்றும் கொள்ளுதல் ஏற்புடைத்தாம். எனவே, உடலையே கோயிலெனக் கொண்டு அதனுள் எழுந்தருளியிருக்கும் பரமனைப் பூசித்தலே செந்நெறிப் பூசனையா மென்பதே வேதாகமங்களின் துணிபாமெனக் கொள்க.

"வள்ளல் பிரானார்க்கு
உள்ளம் பெருங்கோயில்
ஊனுடம்பே ஆலயமாம்,"

" உடம்பினுள் உத்தமன்
கோயில் கொண்டா னென்று,"

" மார்வ மென்பதோர் கோயிலமைத்து
மாதவ னென்னுந் தெய்வத்தை நாட்டி,"

என்பன போன்ற இன்மொழிகள் இவ் வுண்மையை வலியுறுத்தும். புறநோக் கொன்றினையே கொண்டோர் புறக்கோயில்களிலும், அகநோக் கொன்றினையே யடைந்தோர் அகக்கோயிலிலும், இரு நோக்குக்களையு மெய்தினோர் இரண்டிடங் களிலும் ஈசனைக் கண்டு வணங்கி வழிபடுவர். சடகோபராதிய மகான்களின் சரிதைகளே இதற்குச் சான்றும்.

" தேடிக் கண்டுகொண்டேன்—திரு
மாலொடு நான்முகனும்
தேடிக் காணொணா தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டுகொண்டேன் "

என்ற ஆன்றோர் வாக்கையும் நோக்குக.

இறைவனை வழிபடு மிடங்களாகிய கோயில்கள் தூயனவாக விருத்தல் வேண்டுமென்பதைச் சொல்லத் தேவையில்லை. அபரிசுத்தமான விடங்களில் ஆண்டவன் சாந்நித்தியம் நிகழாது. புறத்திலமைக்கப்பட்டுள்ள கோயில்கள் அசுத்தம் நிறைந்தவைகளாக விருப்பின், அவை எத்துணைப் பெரியனவாக விருப்பினும், சிவலிங்கமாதி விக்கிரகங்கள் பொருந்தப் பெற்றனவாயினும் அங்குச் சென்று வழிபாடாற்றுவா ரெவருமிலர் என்பது வெள்ளிடைமலை. அங்கு ஆண்டவன் சாந்நித்தியங்கொண்டிரா னென்பதே அதற்குக் காரணமாகும். வேதாகம மந்திரங்களாலும் புண்ணிய தீர்த்தங்களாலும் சுத்தப்படுத்தப்பட்டு நித்திய நைமித்திகங்கள்செவ்வனே நடைபெறும்கோயில்களே பகவான் எழுந்தருளி யிருக்கும் திருக்கோயில்களெனச் சிறப்பிக்கப்படுகின்றன. ஆண்டவன் ஆண்டெழுந்தருளி அடியார்க் கருள்புரிவன் என்பதும் திண்ணமேயாம். புறக்கோயில் போலவே அகக்கோயிலும் பரிசுத்தமாக இருந்தாலன்றி அங்கும் அப்பெருமானது சாந்நித்தியம் நிகழாதென்பது சொல்லாதே யமையும். சச்சிதானந்தத் தனிப் பரம் பொருளைத் தன்னுள்ளே கண்டு அவனோடு இரண்டறக் கலந்து பேரின்பப் பெருவாழ் வெய்தவேண்டின், உள்ளமாகிய கோயிலை அவன் எழுந்தருளுதற் குகந்த பரிசுத்த தலமாகச் செய்தல் வேண்டும். மாசகன்ற மனத்தையே அப்பெருமான் கோயிலாகக் கொள்வான்.

மனமாசுகள் இராசத தாமத குண காரியங்கள். பொய் கொலை களவு காம மாதி துர்க்குணங்களே உள்ளத்தை யபரிசுத்தமாக்கும் ஆபாசக் குவியல்கள். இவை நிறைந்திருக்கு மிடம் பேய்களுறைவிடம்; நல்லோ ரணுகவும் விரும்பாத் புலைநரகம். அத்தகைய அசுத்தங்கள் நிறைந்த விடத்தையா பரிசுத்த மூர்த்தியாகிய பகவான் கோயிலாக் கொள்வான்? கொள்ளான், கொள்ளான்.

" பொய்வளரு நெஞ்சினர்கள்
காணாத காட்சியே
பொய்யிலா மெய்ய ரறிவில்
போதபரிபூரண அகண்டிதாகாரமாய்
போக்குவர வற்ற பொருளே!"

" புலையும் கொலையுங் களவுமிலாப்
புனிதத் தலத்தோர் தொழுதேத்தும்"

என்றின்றோரன்ன ஆப்தர் மொழிகளைக் காண்க. ஆகவே, அகத்திலுள்ள எல்லா விதத் துர்க்குணங்களையும் அவை மீண்டும் வந்துறா வண்ணம் அறவே நீக்க அவற்றைச் சுட்டெரிக்கவேண்டும். அவ்வாறு சுட்டெரிக்கப்பட்ட விடமே சுடுகாடு. அதுவே அய்யனுவந்துறையுங் கோயில். ஆணவமாதி மும்மலங்களும் சுட்டெரிக்கப்பட்ட விடமே சுடுகாடு. அந்தவுள்ளமே ஆண்டவனுக்குக் கோயிலாகத் தக்கது.

சுடுகாடெனப்படுவது சாதாரணமாகப் பிணங்களைச் சுட்டெரிக்கு மிடமாம். உயிரற்ற உடலாகிய சடப்பொருளே சவமெனப்படுவது. அவித்தையும் அதன் காரியங்களும் ஈண்டு முமுக்ஷுக்களால் சுட்டெரிக்கத்தக்க சடப்பொருள்களாகிய பிணங்களாம். அவை சுட்டெரிக்கப்பட்டவிடமே சுடுகாடு. அதுவே சிவனுறை கோயில் என்பதே மணிவாசகப் பெருந்தகையின் "கோயில் சுடுகாடு" என்னும் மணிவாசகத்தின் உட்கிடைப் பொருளாமென்க.

"ஆங்கார முள்ளடக்கி ஐம்புலனைச்
சுட்டறுத்து
தூங்காமல் தூங்கி சுகம் பெறுவ தெக்
காலம்."

---

# எவரையும் தெய்விக நோக்கோடு காணுதல்

(ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள்)

க

எல்லையற்ற அகண்டப்பொருளின் அங்கமெனவே நம்மை நாம் கருதிக் கொள்ளவேண்டும். இம்முறை கடினமாகத் தோன்றினல் நிராகார உபாசனையை நிறுத்தி விடுவீர். இறைவனுக்குள்ள ஏதேனுமொரு திவ்விய ரூபத்தை ஏற்று அதன் மூலம் அவனை வழிபடுவது நலம். மக்கள் பலபேருக்கு நிராகார உபாசனை சாத்தியமற்றதாகவிருக்கின்றது. மனேகற்பித உலகில் அதி உயரப் பறப்பதில் எந்த பலனுமில்லை. அநுபவ வாழ்க்கையில் சிறிதும் காட்ட முடியாமல் எண்ண உலகின் உச்சிக்குச் செல்வது மாத்திரம் போதாது. இத்தகைய அத்வைதியினைக் காட்டிலும் சிறிது அனுபவம் பெற்ற தீவிர துவைதவாதி எத்தனையோ மடங்கு உயர்ந்தவனுவான். அத்வைதிகள் என்று சொல்லுபவர்களில் பலரது அத்வைதம் அவர்கள் அறிவோடு நின்றுவிடுகின்றது. அநுஷ்டானம் மூலம் அது வெளித் தோன்றுகிறதில்லை.

நம்முடைய இம்மக்களுலகில் நாம் ஏனையோரோடு நேரடியாக உறவு கொள்ள விரும்பும் பெரிய குற்றத்தினை இழைத்து வருகின்றோம். நாம் இவ்வுலகில் யார்? நீர்க்குமிழியன்ன நிலையற்ற வாழ்க்கையினை யுடையவர். இந்த நிலையற்ற தன்மை யோடேயே ஏனையோருடன் நாம் நட்புக்கொள்ள விழைகின்றோம். அலைகளின் ஆட்டத்தினல் சமுத்திரத்தின் மீது மிதக்கும் சிறு குமிழிகள் இரண்டு, ஒன்றை யொன்று நெருங்கிச் செல்லும்படி தள்ளப்படுகின்றன. இரண்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தம் வைத்துக்கொள்ள முயலும் தவறிழைக்கின்றன. இவ்வாறே மக்கள் வாழ்க்கையிலும். இருவரையும் ஒருங்கு சேர்த்த அதே சக்தி, நாளை அவர்களை வேறு பிரித்து என்றும் ஒன்று சேராமல் விலகச் செய்யவல்லதும் இயல்பேயன்றே? இது நமக்கு சகிக்கவொண்ணத் துன்பந்தரும். இருந்தாலும் மூட மக்கள் சமூகம் இதனை உணர்ந்துகொள்ளுகிறதில்லை. நீர்க்குமிழி சமுத்திரத்தோடேயே சம்பந்தப்பட்டதாகும். சமுத்திரத்தினின்றும் அதனை வேறு படுத்த முடியாது. சமுத்திரமே அதற்கு ஜீவாதாரம். ஆனல் அது அவ்வுண்மையை மறந்து மற்றொரு நீர்க்குமிழியுடன் தனிப்பட்ட ஹோதாவில் சம்பந்தங்கொள்ள முயல்வது எவ்

வளவு பேதைமைத்தனம். எல்லாக் குமிழி களும் யாதாம் ஒருநாள் உடைந்து நாச முறுவது நிச்சயம். எனவே உடைந்து நாசமுறும் தன்மையோடு உறவு கொண் டாடுவது மதியீனமாகும். மக்களுள் ஒருவரை ஒருவர் சம்பந்தங்கொள்ளச் செய்வது ஆத்மீய உறவின் மூலமாகவே இயலும். அதனை விட்டு சடவுலகின் மூலம் உறவு கொள்ள விழைவது புத்தி யற்ற செயலாகும். உண்மையினை ஒளிக்க முயலவேண்டாம். குழந்தை விளையாட்டினை உதறித் தள்ளுவீர். நமது கோழைத்தனத்தை அகற்றுவோம். அழு கித் துர்நாற்றம் வீசும் உடல் மீதுள்ள பற்றினை யகற்றுவோம். அறியாமை யால் நம்மையே நாம் நம்பச்செய்த அசம் பாவிதத்தினை அகற்றுவோம்.

உ

உலகப்பற்று மிகுந்த வாழ்வினை யுடை யவர்க்கு நிராகார உபாசனை ஏற்றதன்று. தன்னயமும், தற்பெருமையும் மிகுதியும் உடைய நாம் நிராகார வஸ்துவை தூரத் தள்ளி, அழிந்து படும் நீர்க்குமிழி உறவை நாடிப் போகின்றோம். இந்நாட் டத்தில் பிடிவாதம் நிறைந்த மூர்க்கர் களாகித் தலைகால் தெரியாது விரைந்தும் ஓடுகின்றோம். எவ்வித உபாசனைக்கும் அதிமுக்கியமாக வேண்டப்படுவது நம தும் ஏனையோரதுமான உண்மை சுவபா வத்தை உணர்வதும், பார பக்ஷமற்ற அபிப்பிராயங் கொள்வதுமே யாம். அப் போதே நம்மால் சரீர உணர்ச்சி, இந்தி ரிய வேகங்களாகின்ற அலைகளால் தாக் குண்டு அங்குமிங்கும் அலைக்கடிக்கப்படா மல் புத்திபூர்வமாக குறிப்பிட்ட இலக்ஷி யத்தினை அடைய ஸ்திரமாக ஈடுபட இயலும்.

சரீரங்கள் என்ற ஹோதாவில் நம்மை நாம் நோக்கும்போது நாம் ஒன்று மற்ற வர்களாகிவிடுகின்றோம். நாம் சரீர மாத் திரமே என்று எண்ணுகிறவரையில், நம் மைச் சரீரமாக உணருகிற வரையில் ஆத்மஞான வாழ்க்கைக்கு இடமே இல்லை. உண்டு களித்து உறங்குவதே வாழ்க்கை யின் இலக்ஷியமாக விருக்கும். ஆனால் உண்மை அதுவாகுமா? நம்முடைய இருப்பிற்கு இவ்வுலகம் ஒன்று மாத் திரமே போதாது. எனவே நம்முடைய வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு சரீர சம்பந்தமாக நம்மைப் பற்றியும் பிறரைப் பற்றியும் நாம் கொண்டுள்ள அபிப்பிரா யத்தை மாற்றி யமைக்க வேண்டுவது அவசியமாகின்றது. இப்போதுள்ள நமது கொள்கை குறையுடையதாயின் அதனை மாற்றி யமைக்க வேண்டுவது அவசியம்.

௩

நம்முடைய சமயத்திலுள்ள ஒவ் வொரு கொள்கையும், முக்கியமாக அத் வைதம், ஆத்மன் எதனாலும் சிருஷ்டிக் கப் படாததும், எதனையும் சிருஷ்டிக்கா ததும், எதனையும் சார்ந்து வாழ்தலு மில்லாத தனிப்பட்ட தெய்வீகம் பொருந் தியது என்னும் உண்மையை ஒருமுக மாக ஏற்றுக்கொள்ளுகின்றது.... மனம் வெறும் சடமே; ஆத்மன் அதனுடன் எவ்விதத்திலும் சார்ந்திருப் பதில்லை; மனம் தன் இருப்பிற்கு ஆத்மனைச் சார்ந்து நிற்கின்றது.

நம் எதிரில் ஏணி இருக்கிறது. நாம் எங்கே நிற்கின்றோம் என்பதை அறிந்து அந்த ஸ்தானத்திலிருந்து ஏறுவதற்கு முயலுவோமாக. நாம் இருப்பது கீழே என்றால் படிப்படியாக மேலே செல்ல முயலுவோம். ஒரே தாவுதலில் மேலே பறந்துவிட முயல்வது கூடாது. சற்று உயரத்திலிருப்பவர் அங்கிருந்து ஏறட் டும். அவர்கள் கீழே வந்துதான் திரும் பவும் மேல் நோக்கிச் செல்லவேண்டு மென்பது அவசியமில்லை. சில சமயம்

மனம் மாத்திரம் உயரப்பறந்து போகும். அதுதான் நம்முடைய உண்மை நிலை யென்று நினைந்து விடல் கூடாது. ஆகவே எங்கே நிற்கின்றோம், எங் கிருந்து நாம் புறப்படவேண்டும் என் பதனை ஏற முயலுவதன் முன்னம் அறிந்து கொள்ள வேண்டுவது அவசிய மாகிறது.

அத்வைதம் சகலத்துக்கும் அடிப் படையாக இருக்கக்கூடும் என்பதில் சந் தேகம் ஒன்றுமில்லை. ஆனால் இடையி லுள்ள பல துறைகளை அணுகாமலே அத்வைத நிலையை அடைந்துவிட முடி யாது. கோடி மக்களுள் ஏதோ ஓரிரு வரே ஆரம்ப முதற் கொண்டே அத்வை தத்தினை அனுசரிக்கக் கூடியவராக இருக் கின்றார்களேயன்றி எல்லோராலும் இய லாது.

“ காரணம் இறந்தொற்றிற்கும் காட்சியிற்
படாததொன்றைச்
சேர்பவர் வருத்தம் வேறு செப்பிடலாவ
தன்றால்
ஓர்வரிது இதுதான் வாழும் உயிர்களால்
ஆவதொன்றோ
ஆரவர் பெருமைதன்னை அளவறுப்பவர்
கள் ஐயா ” என்றார்

கீதையிலே ஸ்ரீ கண்ணபிரான். அத்வை தத்தின் உயர்வையும் சிறப்பினையும் பற்றி வெறும் வாய்விட்டு மாத்திரம் பேசக் கூடியவர்கள் சிலர் உண்டு. ஆனால் அநுஷ் டானத்தில் அவ்வறிவை எள்ளளவும் எடுத்துக் காட்ட அவர்களால் இயலாது. அவர்கள் தங்களை அத்வைதிகள் என்று கூறிக் கொள்வது நகைக்கத்தக்க காரிய மாகும். இவ்விஷயத்தில் நாம் நம்மையே ஏமாற்றிக்கொள்ளாது காத்துக்கொள் வோம். கேட்பதற்கும், எடுத்தோதுவதற் கும் புத்தி பூர்வமாகத் தென்படுவதெனி னும் அநுஷ்டானத்தில் காண்பிக்க இயலாது என்றால் அந்த வழியை நம்மிட மிருந்து சிறிது நீக்கிவைத்து ஆரம்பத் திலிருந்தே படிப்படியாக ஏறமுயலுவோ மாக. அதனாலேயே கண்ணபிரான்,

“ யாவர்கள் சிலவர் எல்லாம் வினையும்
என் கண்ணே விட்டிட்டு
யாவர்தம் அறிவென்பாலே யாக்குவார்
அவர்கள் தம்மைச்
சாவது முதலாயுள்ள துயர்கடன் நின்றும்
தாங்கி
யாவர்களேனும் காலம் சிறிதிலே எடுக்
கின்றேன் நான் ”

என்று துவைத மார்க்கத்தின் சுலபத்தை எடுத்துக் கூறுகின்றார்.

மேனாட்டிலே மக்கள் சிருஷ்டியையும் சம்ஹாரத்தையும் வேறு வேறாகப் பிரித்து வைக்க முயல்கின்றனர். சிருஷ் டிக் கடவுள் வேறு, சம்ஹாரம் செய்பவர் வேறு என்கின்றனர். சிருஷ்டித்து ரக்ஷிக் கும் இறைவனை மாத்திரம் வழிபட அவர் கள் விரும்புகின்றனர். ஒன்றை யொன்று சார்ந்திருக்கும் இம் முத்தொழிலும் வேறுபடுத்த முடியாதவை. அப்படி வேறுபடுத்த முயல்வது புத்தியற்ற செய லாகும். உம்முடைய கடவுள் சிருஷ்டிக்கக் கூடியவர் என்றால் அவரேதான் ரக்ஷிக்கக் கூடியவராகவும், சம்ஹரிக்கக் கூடியவராக வும் இருக்கின்றார் என்பதில் எள்ளளவும் சந்தேகமே இல்லை. பக்தன் ஒருவன் ஆத்மீய வாழ்க்கையில் முன்னேற விரும் பினால் உள்ளதை உள்ளவாறே ஏற்றுக் கொள்ள வேண்டிய அருங்குணம் அவ னிடம் அமைந்திருத்தல் வேண்டும். சிருஷ்டித்து இரக்ஷிக்கக்கூடிய கடவுளை மாத்திரம் ஒருவன் ஏற்றுக் கொள்வா னானால் அவன் பக்தனல்ல; சுகப்பிரியனே யாவான். அவன் வேண்டுவது துன்ப

மில்லாத, தங்குதடையற்ற நீண்ட கால உலக இன்பத்தையே யாம்.

வாழ்க்கையிலும் அதனைச் சுற்றிலு முள்ள அநித்யப் பொருள்களிலும் பற்று மிகக் கொண்ட நாம் கடவுளின் சம்ஹார த்தொழிலினைக் கண்டு உடல் நடுங்கு கின்றோம். நாம் உண்மையில் சாந்தம் வேண்டுவோமாயின், உண்மையில் நாம் ஒளிபெற வேண்டுவோமாயின் சிருஷ்டி ஸ்திதிகளைக் கடந்து போவதோடு சம் ஹார நிலைமையினையும் கடந்து செல்ல வேண்டுவது அவசியமாகின்றது.

௪

ஒருமுறை சுவாமி ஒருவர் தமது சிஷ்யர்களுக்கு இந்திரிய நிக்கிரகத்தின் அவசியத்தினைப்பற்றி உபதேசம் செய்து கொண்டிருந்தார். அங்கிருந்த தமது மாணவர்களுள் ஒருவர் சட்டென்று "சுவாமி! நீங்கள் இந்திரியங்களை அடக்க வேண்டும் என்று சொல்வதின் பொருள் எனக்குக் கொஞ்சமும் விளங்க வில்லை. பூரண புலனடக்கத்துக்குப்பின் வாழ்க்கையில் எஞ்சி இருக்கப்போவது தான் என்ன?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார். அம்மாணவர் இந்திரிய வாழ்க் கையையே வாழ்க்கையாகக் கருதினர் போலும். அதனை விட்டு வேறு வாழ்க் கையே இல்லை யென்பது அவரது கருத்து. ஆம், அதுதான் வாழ்வெனக் கருதுவோர்க்கு புலனடக்கத்துக்குப்பின் மிகுந்திருக்கப் போவது ஒன்றுமே இல்லை யென்பது வாஸ்தவந்தானே!

"எதனிடமிருந்து இவையெல்லாம் உண்டாயினவோ, எதனிடம் இவையெல் லாம் வாழ்ந்து வருகின்றனவோ, எத னிடம் இவையெல்லாம் பிரளயத்துக்குப் பின் இறுதியாக ஒடுங்கப் போகின்ற னவோ அதுவே பிரம்மன்."

வாழ்வு எவ்வளவு உண்மையோ அவ் வளவு சாவும் உண்மையாகும். ஆக்கல் எப்படி உண்மையோ அதேபோல் அழித் தலும் உண்மை. ஏன் இரண்டினையும் ஒருமுகமாக நோக்குதல் கூடாது. சிருஷ்டியை மாத்திரம் ஏற்றுக் கொள்ளு கிறது, மற்றதனைத் தூரத் தள்ளிவிடு கிறதா? சாவை நீ விரும்பவில்லையானல் வாழ்வைமாத்திரம் ஏன் பற்றிக்கொண் டிருக்க வேண்டும்? ஒன்று, இரண்டினை யும் சந்தோஷமாக ஏற்றுக் கொள்வீர்! அல்லது வியவகாரிக சம்பவங்களாகிய இரண்டினையும் ஒதுக்கித் தள்ளுவீர்! இதுவே ஆண்மைத் தனத்துக்கு அறி குறி.

"நீர் தற்கொலை செய்துகொள்ள வேண்டாம் என்றால், வாழ்வை விரும்பிப் பற்றிக்கொள்ள வேண்டும் என்பது பொருளல்ல. சாவையும் பொருட்படுத் தாதீர், வாழ்வினையும் பொருட்படுத்தா தீர். இதுவே உண்மை சாதகனுக்கு உற்ற மார்க்கமாகும். இதுவே பிறவியினை தெய்விகமாக மாற்றும் வழி. தற்கொலை செய்துகொண்டு மடிவதால் நாம் அடை யப்போகும் பெரு நன்மை ஏதும் கிடை யாது. வாழ்வினைப் பற்றிக்கொண்டிருப்ப தாலும் எந்த நன்மையும் ஏற்படப்போவ தில்லை; பதிலாக மேலும் மேலும் வாழ் வினுக்கு அடிமைகளாக இருந்து மாய் வோம். எனவே இரண்டுவித மனோ பாவனைகளும் குற்ற முள்ளனவாகவே இருக்கின்றமையால் அப் பாவனைகளை அகலவோட்டுவோம். அதாவது வாழ்வை யும் சாவையும் சம நோக்குடன் காண் போமாக.

நாம் உண்மையில் சாகவேண்டுமானல், செத்துத்தான் போவோமே! ஆனல் 'பெண் பொன்' னுக்கு அடிமை பூண்ட துர்ப்பாக்கிய சாலிகள் துன்பத்துடன் இறப்பதுபோன்ற நிலைமையினை எய்தா திருப்போமாக. சுதந்தர புருஷர்களாக,

அடிமை குணமில்லா வீர புருஷராக நாம் சாவோம். பயங்காளித்தனமாக, கோழைகளாக பிறப்புடன் பிணிப் புண்டிருக்கும் இந்த வியவாகார நிலை களைக்கண்டு அஞ்சாது சந்தோஷத்துடன் தீரர்களாகச் சாவோம். 'நாம் சாவதற்கு முன் வாழ்வின் எந்த அம்சத்தினையும் கண்டு அஞ்சாத நிலையை யெய்துவோம்; மனிதர்களாக நம்மை ஆக்கிக் கொள் வோம். புன் முறுவலுடன் சாவினை வர வேற்போம். இந்த எல்லா பூச்சாண் டிப் பற்றுதல்களையும் அகல வோட்டி, நம் உண்மைச் சுபாவத்தை உணர்ந்து, தீரர்க ளாக வீரர்களாக சுதந்தர புருஷர்களாகச் சாவோம்.

"சுகமும் துக்கமும் ஒன்றின் பின் ஒன்றாக மாறி மாறி வருகின்றன" என்று கூறுகின்றன சாஸ்திரங்கள். சிருஷ்டியும் சம்ஹாரமும் மாறி மாறி வருகின்றன. துவந்த பாவமுடைய ஒன்றின் இரண்டு நிலைகளையும் ஒருபோதும் வேறு படுத் தவே முடியாது. நாணயத்திற்கு ஒருபக் கம்தான் உண்டு என்று ஒருவன் சாதிப்ப தாலேயே அது ஒரு பக்க முடையதாகி விடாது. ஒருபக்கத்தினை ஏற்றுக்கொண் டால் மற்றய பக்கத்தினையும் ஏற்றுக் கொள்ளா திருக்க முடியாது. ஒன்று மற்றதனைப் பின்பற்றியே வருகின்றது. சுகத்துக்குப் பின் துக்கம் உண்டாகின் றது. அவை ஒன்றன்பின் னொன்றாகத் திரும்பத் திரும்ப வந்து சக்கரம்போல் ஓயாது சுழன்று வருகின்றது. ஒன்று போனால் மற்றது வரும்; மற்றது மறைந்ததும் முன்னது வரும். இவ் விரண்டு நிலையினையும் கடந்து, இவை யிரண்டினையும் பொருட்படுத்தாத வரை யில் இவை யிரண்டும் சுற்றிச் சுற்றி வந்து கொண்டே இருக்கும்.

இவ்வுறவு முறைகள் எல்லாம் கானல் நீர்போல் நம்மை ஏமாற்றி உண்மை இல க்ஷியத்தினின்றும் நம்மை அப்புறப படுத்துகின்றன. இத்துஷ்டப் பேய்கள் தம்மிஷ்டம் போல் நம்மை ஈர்த்துச் சென்று படுகுழியில் அமிழ்த்தி நாச மாக்குகின்றன. அவைகள் வசப்பட்ட நாம் நாச முறும் வரையில் அவைகள் நம்மை விடுகின்றதில்லை. நீர்க்குமிழியும் நீர்க்குமிழியும் நேசங் கொள்ள இடமே யில்லை யென்பதனை மறவாதிருப் போமாக.

ரு

நம் உண்மைச் சொரூபத்தினை நாம் ஓராதிருப்பதனாலும், சரீரத்தையும் சுக போகங்களையும் பற்றிக்கொண்டிருப்பதனா லும், சாயையை நாடிச் செல்வதனாலு மேயே நாம் துன்பப்படுகின்றோம். சில நேரங்களில் சாயை சாயையாகவே தோன்றுகின்றது; நம்மை நாம் உணர்ந்து கொள்ளாததாலும், மற்றவர்களிடம் கொள்ளும் பொய்யுறவாலுமே துன்பம் வந்துறுகின்றது என்பது அக்காலங்களில் நமக்கு நன்கு புலனாகின்றது. மற்ற நேரங்களிலும் சிறிது ஆராய்ந்து பார்ப் போமானால் உண்மை விளங்கும். நம்மை நாம் ஆண்கள் என்றும் பெண்கள் என் றும் கருதிக்கொண்டிருக்கும் வரையில் நமக்கு உண்மை புலப்படாது.

"உயர்ந்த இலக்ஷியத்துக்காக வாழும் மக்களுக்குத் துன்பம் பெருந் துணையாக அமையும்" என்றார் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள்.

நமது உண்மை இயல்பினை மறந்து பொய்க்கனவு காண்கின்றோம்; கனவு கனவாகத் தென்பட்டதும் மனமுடைந்து வருந்துகின்றோம்; என்றாலும் பொய்க் கனவை நாம் விடுகின்றதில்லை. கனவு கனவாகத் தோன்றும் போது மின் னொளிபோல் உண்மை சிற்சில சமயம் தோற்றமளிக்கின்றது. அப்போது நமக் குண்டாகும் தயாக்துக் களவே இல்லை.

முன் பிறப்புக்களில் எத்தனையோ கனவுகள் கண்டீர்; கனவுவாழ்வு வாழ்ந்தீர். இதுவரை கானல் நீரை உண்மை யென மருண்டீர். உண்மை சிறிது புலப்பட்டதும் இத்தனை காலமாக நாம் வாழ்ந்த வாழ்வு வெறும் சூனியமாகத் தென்படுகின்றது. இந்த ஒன்று மற்ற சூன்யத் தன்மையை அகற்ற வேண்டும்..."

௬

கனவு வாழ்க்கையினைக் களைந்தெறிந்து விட்டு நம் உண்மைச் சுபாவத்தை எய்த வேண்டுவது நமது இலக்ஷியமாக இருத்தல் வேண்டும். நமக்குச் சொந்தமான மக்கள் இப்பிரபஞ்சத்தில் எவரும் கிடையாது. தாய் தகப்பன், சகோதரர் சகோதரிகள், மனைவி மக்கள் இவர் எவரும் நமக்குச் சொந்தமல்ல; என்றும் நமக்கு இவர் சொந்தமாகார். இவ்வுண்மையை உணரப்பெறுவதற்கு நாம் பல ஜன்மங்களில் உதைகளும், அறைகளும் வாங்க வேண்டும். அதன் பின்னரே இவ்வுண்மை நமக்குப் புலனாகும். அப்பொழுதுதான் கடவுள் ஒருவரே நமக்குப் புகலிடம் என்பதும், வேறு எவரும் இல்லை யென்பதும், அவனே நாம் என்பதும் நமக்குத் தெரியவரும்.

நம் உண்மைச் சொரூபத்தை உணரப் பெறுவது சமய வாழ்க்கையில் நமது முதற் கடமையாகும். உண்மை இயல்பினை உணர்ந்த பின்னரே சமய வாழ்க்கை ஆரம்பிக்கும்.

நாம் ஏனையவரோடு நேரடியாக உறவுமுறை கொள்ள விரும்புகின்றோம். அதனாலேயே நாம் துன்பப்பட ஏதுவாகின்றது. அதனை விடுத்து இறைவன் மூலம் அவர்களிடம் உறவு கொள்ள முயல்வோம்; அவர்களை தெய்விக நோக்கோடு காண்போம்.

கடவுள் மூலமன்றி எந்த முறையினும் மற்றவரோடு உறவு கொள்ளாத வகையில் நம் வாழ்க்கையினை அமைத்துக்கொள்வோமாக. ஆனையோரும் இறைவன் மூலமாக நம்மிடம் உறவு கொள்ள இடம் கொடுப்போம். இன்றேல் நாம் என்றுமே வளருவதற்கு இடமற்று மேலும் மேலும் துன்ப சாகரத்தில் தள்ளப்படுவோம். ஏன் எனில் பொய்த்தன்மை நம்மை ஸ்திரமாக நிற்கச் செய்யாது. எந்த மனிதரிடமும் பற்றுக்கொள்ளாதீர். நீரும் ஒருவர்க்கு அடிமையாகி விடவேண்டாம்; ஏனையோரும் உமக்கு அடிமையாக இல்லாதிருக்கட்டும். நீர் உம் நித்திய முக்தியை அடைய முயலவேண்டுவதோடு ஏனையோரும் அடைவதற்கான உதவி செய்வீர். இதுவே சமய வாழ்க்கைக்கு ஏற்ற மனோ பாவம். இதனையன்றி வேறு மார்க்கமில்லை. பக்ஷணத்தை சாப்பிட்டு விடவேண்டும்; அதே சமயத்தில் அதனை பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ள முயல்வதும் இயலுமோ!

---

# ஒரு திருத்தம்

**விஜயம்** ஆவணி சஞ்சிகையில் ஸ்ரீமான் R. ராமகிருஷ்ணன் அவர்களால் எழுதப்பட்ட 'பொன்செய்யும் மருந்து' எனும் கற்பனைக்கதையின் கடைசிப்பகுதி தவறுதலாக அச்சிடப்படாமல் விடப்பட்டுப் போயிற்று. விடப்பட்ட பகுதி இங்கு பிரசுரிக்கப்பட்டுள்ளது—ஆசிரியர்.

இரவி சங்கர் சிறிதுநேரம் மௌனமாயிருந்தார். அவரது உள்ளத்தில் உணர்ச்சி ததும்பி யிருந்ததென்பதை அவரது முகம் காட்டிற்று. "கொஞ்சகாலத்திற்கு முன்பு இரயிலில் சந்தித்த துறவியை மறந்தனையோ?" என்றார்.

அவர் கூறிய வார்த்தைகள் சிலவே யாயினும் அவரது தொனியினின்றும், அவ்வார்த்தைகளில் அடங்கியிருந்த பொருள் முழுவதும் எனக்கு உடனே விளங்கிற்று.

என் உள்ளத்தில் எண்ணங்கள் பல தோன்றி மறைந்தன. இரவிசங்கருடைய வாழ்வில் கொஞ்சகாலமாக ஏற்பட்டுவந்த மாறுதலுக்கு விளக்கம் இப்பொழுது எனக்குப் புலப்பட்டது. முன்பெல்லாம் இரவிசங்கரிடம் பதட்டமும், சஞ்சலமும், வேகத்தினால் ஏற்படும் குழப்பமும் அதிகமாயிருக்கும். ஆனால் இப்பொழுதோ அவரிடம் அமைதியும் மாறாத இன்பநிலையும் திருப்தியுற்ற தன்மையும் தோன்றியிருந்தன. இரயிலில் சந்தித்த துறவியரை நினைத்தேன். அவர்யாரோ, எந்தஊரோ நாங்கள் அறியோம். அவருடன் நாங்கள் இருந்தது சிறிது நேரமே யாகும். அதற்குள் அவர் ஒரு ஜீவனைப் புதியதொரு பாதையில் நாட்டிவிட்டுச் சென்றார். யாத்திரை செய்யும் துறவிகள் சமயத்தை வீடுதோறும் எடுத்துச்செல்லுகின்றனர் என்ற உண்மை எனக்கு நன்கு புலப்பட்டது.

வனத்திலே ஒரு செடி நீரின்றி வாடும் தருணத்தில் உள்ளது. அச்சமயம் வானத்திலே செல்லும் மேகமொன்று அதன்மீது நீரைச்சொரிந்து செல்லுகிறது. செடி பிழைத்துக்கொள்ளுகிறது. துறவியர் அருள்நீர்கொண்ட மேகமன்றோ?

“இரவி! நீ பொற் குளிகையால் தொடப்பட்டுள்ளாய். பித்தளையாயிருந்த நீ பொன்னாய் விட்டாய்” என்றேன் நான்.

---

# ஆலயம் வழிபடு முறை

(ஸ்ரீ P. முத்தையா பிள்ளை)

ஆலயம் என்பதை முன்பு சற்று விவரித்தோமாகையால் இனி அவ்வாலயத்தில் வழிபடு முறையைச் சற்று விவரிப்போம். வழிபடுதல் எங்ஙனமென்பதை ‘அன்போடு’ என்று ஒரு வார்த்தையிற் சொல்லிவிடலாம். இறைவனைத் தோத்திரம் செய்வதிலும் சரி, அவனைத் தியானித்தலிலும் சரி, அன்பு அல்லது பக்தி உயிர் நாடியாக இருக்கிறது. அன்பை வேண்டி, அன்பை வளர்த்து, அன்பைச் செலுத்துவதே வழிபடுதலின் சாரமான அம்சமாகும்.

இறைவனை வழிபடும் முறைகள் மூன்று. 1. குரு; 2. இலிங்கம் அல்லது மூர்த்தி; 3. சங்கமம். இம் மூன்றையும் தனித்தனியே கடவுளாகப் பாவித்து வணங்குதலாம். இவற்றுள் குரு வழிபாடாவது தீட்சையும் உபதேசமும் செய்துவைத்த ஆசாரியனைத் தெய்வமாக மதித்து வழிபடல். சங்கம வழிபாடு சமய நெறிபற்றி ஆன்ம நேய ஒருமைப்பாட்டில் திளைக்கும் பெரியோர்களையும், சமயச் சின்னங்களையும், இறைவனாகவே மதித்துப் போற்றி வழிபடுதலாம். ஆலயத்திலுள்ள லிங்கத்தையோ அல்லது மூர்த்தியையோ கடவுளாகவே பாவித்து வழிபடுதலே மூன்றாவது முறையாகும். அங்கெழுந்தருளியுள்ளவர் இறைவனே என்று மதித்து அதற்கேற்ப வழிபடுதலே முறையாகும். விக்கிரகங்களைக் கல்லாகவோ, செம்பாகவோ வேறு எந்த உலோகமாகவோ பார்க்காமல் கடவு

ளாகவே பார்த்து மதித்து ஒழுகல்வேண்டும். தெருவில் கிடக்கும் கல்லும், நாம் மிதித்து நடக்கும் கற்படியும் சிவலிங்கமும் ஒன்றுதானா? இந்தக் கல்லையும் கல்லாற் செய்த அந்த விக்கிரகத்தையும் நாம் ஒன்றாகவா மதிக்கிறோம்? விக்கிரகத்தை மூர்த்தியாக வல்லவோ மதித்து வழிபடுகிறோம். மூர்த்திக்கு நாம் செய்யும் மரியாதைகளென்ன, பூசைகளென்ன, உத்சவங்களென்ன! இவற்றையெல்லாம் பார்த்தும் நாம் கல்லைக் கும்பிடுகிறோம், செம்பாற் செய்த பொம்மையைக் கும்பிடுகிறோம் என்று சொல்லுபவர்களின் கண்மூடித் தனத்தை என்னென்பது? நாம் சிலையை எக் கண் கொண்டு பார்க்கிறோம்; அவர்கள் எக் கண்ணுடன் பார்க்கிறார்கள்! எவ்வளவுக் கெவ்வளவு நாம் உருக்கொண்டெழுந் தருளியிருக்கும் ஈசனிடம் அன்பு செலுத்துகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு உண்மையான சாந்நித்யம் அங்கே ஏற்படுகிறது. நம் அன்பு மலர மலர அவனுடைய கருணையாகிற தேனும் சொரிகிறது. கண்ணப்பர் இலிங்கத்தைக் கல்லாகவா மதித்தார்? பிரகலா தாழ்வாருக்குத் தூணிலிருந்து வெளிவர வில்லையா நரசிம்ம மூர்த்தி? இங்ஙனமே உதாரணங்களை அடுக்கிக்கொண்டே போகலாம். மேற் சொன்னவாறு அளவிலா அன்பைச் செலுத்திய பெரியார்களுக்கு அளவேயில்லை.

கோயில் வழிபாட்டின் சாரம் என்னவென்றால் சீவர்களாகிய நாம் சிவனாக மாறுவதே; சீவத்துவம் சிவத்துவமாக ஆவதே. சீவனுக்கும் சிவனுக்கும் இடையேயுள்ள கடலைக் கடக்க உதவும் தோணி, அன்பே. அஷ்ட மூர்த்திகளுள் பஞ்ச பூதங்களும், சூரிய சந்திரர்களும் ஆக ஏழும் கழித்து எட்டாவதாகச் சொல்லப்படும் மூர்த்தி சீவனே. இதைச் சிவமாகப் பாவித்துவணங்குதல்வேண்டும். இதுவே மிக உயர்ந்த நிலையாகும். இவ்வுயர் நிலையெய்த நாம் நம் அன்பை அவ்வுயர்நிலைக்குத்தக வளர்த்துக்கொள்ள வேண்டும்.

இந்த அன்பை வளர்த்துக்கொள்ளும் பல வழிகளில் சிறந்தவழி ஆலயம் செல்லுதலாகும். கோயிலுக்குச் சும்மா போய் வருவதால் மட்டும் அப்பேர்ப்பட்ட நிலை வந்தெய்தும் என்றால், இப்பொழுது நம்மில் பலரும் அந்நிலையெய்தப் பெற்றவராயிருப்போம். ஆனால் கோயிலுக்குச் செல்வதற்கு முன்னும் கோயிலிலிருக்கும் போதும் அனுஷ்டிக்க வேண்டிய விதிகள் சிலஉள. அவற்றுள் முக்கியமானவை நமது திரிகரண சுத்தியும், திருக்கோயிலின் பலபாகங்களின் தத்துவங்களை யறிந்து அவற்றிற்குத்தக நாம் ஒழுகுதலும், சிறப்பாகக் கோயிலிலுள்ள மூர்த்தியிடம் பூரண அன்பைச் செலுத்தி வழிபடுதலுமாம்.

திரிகரண சுத்தி என்றால் என்னவென்பது எல்லோருக்கும் தெரியும். நம்முடைய மனம், வாக்கு, உடல் இம்மூன்றும் சுத்தமாக இருக்கவேண்டும். இம்மூன்றும் எவ்வெவ்விதங்களிற் சுத்தமடைகின்றன வென்று விரிவாகச் சொல்லாமற் சுருங்கச் சொல்வோம். உடற் சுத்தம் நீராலும், வாய்ச் சுத்தம் வாய்மையாலும், மனச் சுத்தம் தூய எண்ணங்களாலும் அமையும். இம்மூன்றின் சுத்தமும் எப்பொழுதும் நம்மிடம் இருத்தல் வேண்டும். எப்பொழுதும் நாம் சுத்தமாயிருக்க வேண்டு மென்பது பொருளேயன்றி கோயிலுக்குப் போகும்போது மட்டும் சுத்தமாயிருத்தல்வேண்டும் என்பதன்று. அம்மாதிரி உடற் சுத்தத்தை மட்டுமே நாம்ஏற்படுத்திக்கொள்ள முடியுமேயன்றி உளச்சுத்தத்தையும், வாய்ச்சுத்தத்தையும், கோயிலுக்குச் செல்ல வேண்டும் என்று

விரும்பியவுடனே, ஏற்படுத்திக்கொள்வது முடியவே முடியாது. அதற்காகத்தான் நம்முன்னோர் நாடோறும் திருக்கோயில் செல்லவேண்டும் என்று கட்டளையிட்டுச் சென்றனர். மனம் பண்படவேண்டுமாயின் நல்ல பழக்கங்களையும் நினைவுகளையும் ஏற் படுத்திக் கொள்ளவேண்டும். அங்ஙனம் நம் ஒழுக்கம் அமைந்து விட்டால் நம் திரிகரணங்களும் எப்பொழுதும் சுத்தமாயிருக்க ஏது உண்டாகும்.

திரிகரண சுத்திபெற்ற பின் நாம் கோயிலுக்குள் செல்ல அருகதையுடையவராகிறோம். மனத்தைப் புற உலகிற் செல்லவிடாமல் மெதுவாக நடந்து பிரதட்சிணம் செய்யவேண்டும். பிரதட்சிணம் செய்யும்போது கையைக் கூப்பியும், பகவன் நாமத்தை உச்சரித்துக்கொண்டும் செல்லவேண்டும்.

பிரதட்சிணம் முடிந்து சந்நிதியின் முன் வந்ததும் புருஷர்களாயின் எட்டு உறுப்புக்கள் பூமியிற் படவும், தாய்மார்களாயின் ஐந்துறுப்புக்கள் படவும் நமஸ்காரம் செய்தல்வேண்டும். எட்டுறுப்புக்களாவன: கால்கள்—2, தொடைகள்—2 கைகள்—2, மார்பு—1, தலை—1. தாய்மார்கள் நமஸ்காரம் செய்யும்போது தரையிற் படவேண்டிய ஐந்துறுப்புக்களாவன: முழங்கால்கள்—2, கைகள்—2, தலை—1.

நமஸ்காரம் செய்தபின் யாதொரு ஆரவாரமுமின்றித் தனியே நின்று மெல்லெனத் துதிசெய்தல் வேண்டும். நாம் நம்போன்ற பிறருக்கு யாவும் இடைஞ்சலையும் கொடுக்கலாகாது. இங்ஙிலையி லிருந்துகொண்டு தோத்திரங்கள் பல செய்தல் வேண்டும். நாம் செய்யும் தோத்திரங்களின் பொருளை அறிந்து உணர்ந்து துதிக்கவேண்டும். "தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித்தொழுது, வாயினாற் பாடி, மனத்தினாற் சிந்திக்கப் போயபிழையும், புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்." நாம் துதி செய்யும்போது இறைவனுக்கும் நமக்குமுள்ள ஆண்டானடிமை உறவை நன்கு உணர உணர நம்முள் உணர்ச்சி பொங்கியெழும். நாம் அவ்வுணர்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து நிற்றல் வேண்டும். புதையலை நோக்கிச் செல்லும் வறியனைப்போல நாம் ஆண்டவனிடம் செல்லவேண்டும். அவன் நமக்குப் பேரறிவாகிய ஞானத்தையும், பேரின்பத்தையும் தந்து பிறப்பெனும் நோயையும் நீக்கி விடுவான்.

அப்பேர்ப்பட்டவனை நாம் தோத்தரிக்கக் கடமைப்பட்டவர்களாவோம். நம் கடன் அவனை வாயார, மனமார, வாழ்த்திப் போற்றுவதே. அவனிடம் ஏதாவது வேண்டுமென்று கேட்டால் அவனுடைய பேரறிவிற்கு இழுக்கைத்தரும். 'வேண்டத்தக்கது அறிவோனுபும், வேண்ட முழுதும் தருவோ'னுபும் அவன் இருக்கிறான். அவனிடம் நாம் வேண்டிப் பெறுவது ஒன்றுண்டாயின் அது அவனருளே. நம் அன்பு முதிர முதிர அவன் அருள் நமக்கு மேலும் மேலும் வருகிறது. நம் பக்தி எவ்வளவுக் கெவ்வளவு அதிகரிக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு அவனது அருளும் அதிகரிக்கிறது. நமது அன்பே அவனது அருளாக மாறுகிற தென்று கூடச் சொல்லலாம். அவன் ஆண்டானாகவும் நாம் அடிமையாகவு மிருந்தாலும் அவன் நம் அன்புக்கு அடிமைப் பட்டவன் என்ற பெரிய உண்மையை விளக்கவந்த ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள்

"அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன்பெனும் பிடிக்குட்படு பரம்பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே

அன்பெனும் கடத்துள் அடங்கிடுங்கடலே
அன்பெனும் உயிர் ஒளிர் அளவே
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொ
அன்புருவாம் பரசிவமே" [ளியே

என்று பாடி விளக்கியுள்ளார்கள். ஆகவே நாம் ஆண்டவனிடம் வேண்டுவது எதுவாயிருத்தல் வேண்டும்? அவனிடம் நாம் வேண்ட வேண்டுவதைக் காரைக்காலம்மையார் வேண்டியிருக்கிறார். அவ்வேண்டுகையே நம் வேண்டுகை யாகவும் அமைதல் வேண்டும்.

"இறவாத இன்ப அன்புவேண்டிப் பின்
வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும், மீண்டும் பிறப்
புண்டேல் உன்னை என்றும்
மறவாமை, வேண்டும் இன்னும் வேண்டும்,
நான் மகிழ்ந்து பாடி
அறவா, நீ ஆடும்போதுன் அடியின்கீழ்
இருக்க என்றார்."

இறைவனிடம் அருட் செல்வத்தைத் தவிரப் பொருட் செல்வத்தையோ அல்லது இதுபோன்ற வேறெதுவையோ கேட்டல் எதுபோலிருக்குமெனின், அரசனிடம் பிச்சை கேட்கப் பாக்கியம் பெற்ற பிச்சைக்காரனொருவன் அரசனிடம் ஒரு காசு கேட்பதுபோ லிருக்கும். ஆறறிவு படைத்த நாம் எல்லாம் வல்ல இறைவனிடம் வேண்டத்தக்கது எது வேண்டத்தகாதது எது என்று பாகுபடுத்தி யறிந்து வேண்டாவிட்டால், நமக்குப் பகுத்தறிவு இருந்தும் என்ன பயனைப் பெற்றவர்களாவோம்?

ஆகவே அவனிடம் வேண்டத் தக்கதை வேண்டிப் பின் வெளிவருதல் வேண்டும். கோயிலில் வெகுநேரம் இருந்து காலத்தைக் கழிக்கக்கூடாது என்பதும் ஈண்டு குறிப்பிடத் தக்கது. நம் மனம் ஈசன் பால் செல்லும்வரை—அது எவ்வளவு நீண்டகால மானாலும்—கோயிலி லிருக்கலாம்.

கோயிலைவிட்டு வெளியே வந்துவிடு முன் வெளிப் பிரகாரம் ஒன்றிலோ, அல்லது கோபுர வாசலிலோ வடக்கு முகமாக உட்கார்ந்து சற்றுத் தியானிக்கவேண்டும். இது மிக மிக அவசியம். சந்நிதிமுன் நிற்கும்போது தோத்திரங்கள் செய்தோம்; இப்போது நாம் அவனைத் தியானிக்க வேண்டும். இந்த தியானம் முடிந்த பின்பு தான் கோயிலைவிட்டு வெளிவரவேண்டும். தோத்திரம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவிற்குத் தியானமும் அவசியம். தோத்திரம் ஒரு கண்ணென்றால் தியானம் மற்றொரு கண் போன்றது. இன்னும்சொல்லப்போனால் கோயில் வலம் வந்தது. சுவாமி சேவை செய்தது, தோத்தரித்தது இவையெல்லாம் தியானத்திற்கு அடிகோலியதே யாகும். தியானத்திற்றான் நம் மனம் தோத்திரம் செய்த போதைவிட இன்னும் அதிகமாக உள் நோக்கிச் செல்லுகிறது. ஆகவே தியானத்தின் அவசியம் நன்கு விளங்குகிறது.

ஆலயத்துள் திரிகரண சுத்தியுடன் சென்ற நாம் பகவத் தெரிசனம், தோத்திரம், தியானம் இவற்றால் பலவாறும் இன்னும் அதிகமாகச் சுத்தியடைந்து, மனச்சாந்தியுடனும், சஞ்சலமற்ற புத்தியுடனும், கண்ணினின்றும் வீசும் ஒரு தெய்விக ஒளியுடனும், முகமலர்ச்சியுடனும் வெளிவருகிறோம். அன்புருவாம் அண்ணலை அன்பெனும் பார்வையாற் பார்த்த நமக்கு இன்னும் அன்பு வளருகிறது. இவ்வாறு வளர்ந்த அன்புடன் வெளிவருகிற நாம் கோயில் வாயிலில் வீற்றிருக்கும் ஏழைகள்மீது அன்பு கொண்டு ஏதோ நம்மாலியன்ற உதவியை யளிக்கின்றோம். உதவி யளிக்க முடியாத நிலையிலும் அவர்கட்காக நாம் பெரிதும் இரங்கிப் பிரார்த்திக்கின்றோம். இது

நாம் ஆலயத்திற்குச் சென்று பெற்ற அன்பு வளர்ச்சிக்கு ஓர் அறிகுறி. உண்மையாகக் கோயிலுக்குச் சென்றுவந்த அன்பர் யாராவது சீறிவிழப் பார்த்திருக்கிறோமா?

அன்புடன் அவன் கோயில் சென்று அவனை வணங்கினோம், வழுத்தினோம், நினைத்தோம், அன்புவேண்டினோம், அதனால் அன்பு வளரப்பெற்றோம். இங்ஙனமே அடிக்கடி முறைதவறாமல் ஆலயம் சென்று வருவோமானால் அட்ட மூர்த்திகளில் எட்டாவதாகச் சொல்லப்படும் மிகச் சிறந்த மூர்த்தியாகிய சீவனிடம் சிவத்தைக் காணுவோம் என்பதற்கையமில்லை.

---

# காமினி காஞ்சனம்

(ஸ்ரீ விபுலாநந்த சுவாமிகள்)

க

இருளடர்ந்த ஒரு சிறிய அறை; ஒரு மூலையிலே ஒற்றைத்திரி விளக்கு ஒன்று மின்னிக் கொண்டிருக்கிறது. கயிற்றுக் கட்டில் ஒன்றின்மீது ஒரு மனிதன் உட்கார்ந்திருக்கிறான். கட்டிலின் கீழே பலமான இருப்புப் பெட்டிகள் இரண்டு. வெளியே "சோ" என்று மழை பெய்கிறது. அண்டை அயலிலுள்ள மக்களெல்லாம் அயர்ந்து நித்திரை செய்கிறார்கள். "சோரன் உறங்கிவிழும் நள்ளிரவு." களவுத்தொழில் புரிவோர் தாமும் ஒய்வெடுத்துக்கொண்டு மனைவி மக்களோடு சுகமாகத் தூங்குகிறார்கள். இந்த நடுராத்திரி வேளையிலே தூக்கமின்றி இந்த மனிதன் என்ன செய்கிறான்? கட்டிலிலிருந்து கீழே இறங்கிக் கதவு பல கணிகள் எல்லாம் நன்றாக தாழிட்டுப் பூட்டப் பட் டிருக்கின்றனவா என்று பார்க்கிறான். பின்பு தரையிலே உட்கார்ந்து பூணூலிற் கட்டியிருந்த ஒரு சாவியினாலே இரும்புப் பெட்டி ஒன்றைத் திறந்து, சத்தம் சந்தடியில்லாமல், முரட்டுத் துணியினாலே தைத்த ஒரு பையைக் கையிலெடுக்கிறான். பையை நிலத்தில் வைத்து அவிழ்த்துக் கையை உள்ளேவிட்டுச் சில பொற்காசுகளை எடுக்கிறான். கையிலே பொன்பட்ட மாத்திரத்திலே, அவனுடைய உடல் புளகாங்கிதங் கொள்ளுகிறது. ஒரு பொற்காசுக்கு முத்தமிட்டுக் கண்ணில் ஒற்றிக் கொள்ளுகிறான். இடது உள்ளங்கையின் மேலே பத்துப் பன்னிரண்டு சவரன்களை (ஆங்கில நாட்டுத் தங்க நாணயம்) ஒன்றின்மேலொன்றாக அடுக்கி அவற்றினது அழகை உற்றுப் பார்க்கிறான்.

இந்தத் தருணத்திலே அவனுடைய மனத்திலேஎன்ன எண்ணங்கள் தோன்றுகின்றனவென்று பார்ப்போம். "நடராஜா! சிவபரஞ்சோதி! உன்னுடைய திருவுருவம் மாற்றுயர்ந்த பசும் பொன்னினாலே செய்யப்பட்டிருக்கிறது. நீ நடனஞ் செய்கின்ற சபை பொற்சபை; அது பொன்னினாலே வேயப்பட்டிருக்கின்றது. அந்தத் திருவுருவத்தையும், அந்தச் சபையையுங் காணக் கண் ஆயிரம் வேண்டும். இறைவன் கையில் ஏந்திய வில் மேருமலை; அது பொன்மலை. அவன் இங்கிலவுலகத்திலே வாழுகின்ற வீடு திருக்கயிலாயகிரி; அது வெள்ளிமலை. பார்வதி தேவியார் பொன்னிறம். தேவியாரது தகப்பனார் இமாசலராஜன்; அந்த இமயமலை செம்பொன்னாலாகிய சிகரங்களையுடையது. என்ன அழகு! எவ்வளவு கௌரவம்! ஆண்டவனுக்கு நண்பன்

குபேரன்; அவனுடைய அளகாபுரியி லுள்ள களஞ்சியத்திலே பொன் குவியல் குவியலாக இருக்கும். செல்வமெல்லாந் தருபவள் இலட்சுமித்தாய். அந்த மகா லட்சுமி நாராயணனுடைய மார்பிலே யிருக்கிறாள். ஆதலினாலேதான் ஸ்ரீமந் நாராயணனைப் புருஷோத்தமனென்று வேதங்கள் புகழுகின்றன. பொன்னைத் திரட்டுவதே வாழ்க்கையின் நோக்கம். முனிவரும் மன்னரும் முன்னுவ பொன் னால் முடியும். எந்தப் பெரிய சாமியாராக விருந்தாலும் மகாத்மாவாக விருந்தாலும் பணக்காரனுடைய தயவில்லாமல் அவர் களால் ஒன்றும் முடியாது. 'அரும் பொனே மணியே என்னன்பே" என்று சொல்லிப் பொன்னை இருகையினாலும் தூக்கி நெற்றியில் வைத்துப் பின்பு பைக்குள்ளே சேமமாக வைத்துப் பெட் டியைப் பூட்டி விளக்கை அணைத்துவிட்டுக் கட்டிலிற் படுத்துக் கொள்ளுகிறான்.

தூக்கம் வரவில்லை. தன்னுடைய வாழ்க்கையின் சிறப்புக்களை யெல்லாம் ஒவ்வொன்றாக நினைக்கிறான்: அதனோடு மற்றவர்களுடைய வாழ்க்கையை ஒப்பிட் டுப் பார்க்கிறான். "நாடகமாம், சினிமா வாம்! நான் ஒரு நாளாவது ஒரு நாடகக் கொட்டகைக்குப் போனது கிடையாது. என்னப்பன் என்னைச் செம்மையாக வளர்த்தான். கோமுட்டிச் செட்டி வம் சத்தாரெல்லாம் மிகவும் மதித்த பெரிய மனிதன் என்னப்பன். சிறுபிராயத்திலே என்னைக் கடையிலிருத்திய காலந்தொட்டு ஒரு வேடிக்கையையும் நான் பார்த்தறி யேன். பெண்களை ஏறெடுத்துப் பார்த் தும் அறியேன். மனிதனுக்கு ஒழுக்கம் பெரியது; தன் பெண்டாட்டி தவிர்ந்த மற்றப் பெண்களையெல்லாம் தாய் சகோ தரி போலப் பாவிக்கவேண்டும். அது தான் மனிதனுக்கு அழகு. 'பெண் ணாகி வந்தொரு மாயப்பிசாசம் பிடித்திட் டென்னை' என்று பெரிய ஞானவானுந் துறவியுமாகிய பட்டினத்தார் சொல்லு கிறார். அந்த மாயாப்பிசாசம் என்னை மாத்திரம் ஒரு பொழுதும் பிடித்தது கிடையாது. நீதியான வியாபாரம்; ஒரு வனிடத்திலே கைநீட்டி ஒன்று வாங்கி னதுமில்லை; ஏமாந்துபோய் ஒருவனுக் கொன்று கொடுத்ததுமில்லை; 'திரை கடலோடியுந் திரவியந்தேடு' என்று ஔவையார் சொல்லுகிறாள். 'பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும் பொரு ளல்லதில்லை பொருள்' என்று திருவள்ளு வர் சொல்லுகிறார்" என்றிவ்வாறு நினைத் துக்கொண்டே நித்திரை செய்து விடுகி றான்.

உ

நல்ல நிலவு; கொழும்புமா நகரிலே காலிமுகக் கடற்கரையோரம் (Galle Face); நீலத்திரைக் கடலிலே, சந்திர னுடைய முத்துப்போன்ற கிரணங்கள் விழுந்து அழகைத்தருகின்றன. நேரம் அதிகம் கழிந்து விட்டபடியினாலே கடற் கரை யோரத்திற்கு வந்த மக்கள் அநேக மாகப் போய்விட்டார்கள். இளம் வாலி பன் ஒருவன்; கவித்துவ சக்தி சிறிது பொருந்தியவன்; தனியாக ஓர் ஆசனத் தின்மீது இருந்துகொண்டு கடலையும் வானையும் நோக்கிய வண்ணமாக நேரங் கழிந்ததையும் பொருட்படுத்தாது இருக் கிறான். மோட்டோர் வண்டி ஒன்று வந்து நிற்கிறது. அதனுள்ளிருந்து இறங் கிய ஓர் அழகிய இளம்பெண், விரைந்து வந்து ஆடவனுடைய கண்களைத் தன் இரண்டு கைகளினாலும் பொத்துகிறாள். கையைத் தீண்டி இன்னாரென்று அறிந்து கொண்ட அவ்வாலிபன், தீண்டிய கையைப்பற்றி அப்பெண்ணை நோக்கி, "இப்படி வந்து இரு; சிறிது நேரங்கழித் துப் போகலாம்" என்றான். அந்நங்கை அவனைப் பார்த்து, "நேரமாய்விட்டது

நீங்கள் வரத் தாமதித்தபடியினால் நான் புறப்பட்டு வந்தேன்; கடலிலே எழும்பு கிற நுரையையும் குமிழியையும் வானத்தையும் பார்த்துக் கொண்டிருக் கிறீர்களே, என்ன கண்டீர்கள்'' என்றாள். அதற்கவன்,

"நெரித்த திரைக்கடலில் நின்முகங்
[கண்டேன்;
நீல விசும்பினிடை நின்முகங்
[கண்டேன்;
திரித்த நுரையினிடை நின்முகங்
[கண்டேன்;
சின்னக் குமிழிகளில் நின்முகங்
[கண்டேன்;
பிரித்துப் பிரித்து நிதமேக மளந்தே
பெற்றதுன் முகமன்றிப் பிறி
[தொன்றில்லை;
சிரித்த ஒலியினிலுன் கைவிலக்கியே
திருமித் தழுவியதில் நின்முகங்
[கண்டேன்,"

என்றான். "என்னையே நினைத்துக்கொண் டிருந்தால், நீங்கள் அன்று சீவகசிந்தா மணிக் கதை படித்துச் சொன்னீர்களே, அதிலே விஜயமாதேவியை நினைத்துக் கொண்டிருந்த சச்சந்த ராஜாவுக்கு நடந் ததுபோலத்தான் நடக்கும். பெரியோர் கள் தேடிவைத்த பொருள் எத்தனை நாளைக் கிருக்கப் போகிறது; தோட்டம் துறவு முதலியவற்றைப் போய்ப்பார்த்தா லல்லவோ, பொருள் பத்திரமாயிருக் கும்'' என்று அப்பெண் ஞானோபதேசஞ் செய்யத்தொடங்கினாள். அதற்கவ்வாலி பன், "நீ பெரிதா? பொருள்பெரிதா? 'கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியு மைம் புலனும் ஒண்டொடிகண்ணேயுள' என் பது பெரியோர் வாக்கு. பொன்னைப் பொருளென்று நினைப்போர் முழுமூடர். நான் அப்படி நினைப்பவனல்ல. ஏதோ அதிர்ஷ்ட வசத்தினாலே பொருள் வரு கிறது; பொருள் போகிறது. அன்பு தான் பெரிது. 'அன்பகத்தில்லா வுயிர் வாழ்க்கை வன்பாற்கண், வற்றன் மரந் தளிர்த்தற்று.' இம்மையிலும் மறுமை யிலும் உன்னைப் பிரியேன்; நீயே என் னுயிர். ஜானகியை ஒருகணம் பிரிந்து பொன்மான் பின்சென்ற ஸ்ரீராமபிரான் என்ன துன்பப்பட்டான் தெரியுமா? அந் தக்கதை யொரு ராமாயணம். அதனு டைய உட்பொருளை நான் அறிந்த வரை யிற் சொல்லுகிறேன் கேள்: உண்மை யன்புடைய ஆடவன், பொன் என்று சொல்லப்படுகிற பொன் மானைத் தன் மனைவியானவள் கையினாற் சுட்டிக் காட்டி, 'இந்தப் பொன்மானைப் பிடித் துத்தாருங்கள்', என்று கேட்டாலும், 'இது மாயமான் இதன்பின் நான் போக மாட்டேன்', என்று சொல்லவேண்டும்; பொன்னாகிய மாயமான் பின் போனானோ, தன் அன்புள்ள மனைவியை இழந்துவிடு வான்'' என்று இராமாயணப் பிரசங்கஞ் செய்தான். பெண் அதிகம் தமிழ்க்கல்வி யில்லாதவளாதலினாலே, அதற்குமேல் என்ன சொல்லலா மென்று அவளுக்குப் புலப்படவில்லை. "சரி, வாருங்கள் போகலாம்'' என்று கையைப் பற்றி அழைத்துக்கொண்டு மோட்டோர் வண்டி யிலேறி இருவரும் வீடுபோய்ச் சேர்ந் தார்கள்.

௫

இமயமலைச் சாரலிலே ஒருதவப்பள்ளி; சுற்றிலும் அடர்ந்த ஆரணியம்; மக்கட் சஞ்சார மில்லாத இடம். தவப்பள்ளி யைப்பரிபாலிப் போர் வேண்டிய உணவுப் பொருட்களை வாங்கி வந்து பண்டசாலை யிலே சேமித்து வைத்திருக்கிறார்களாத லினாலே, தவப் பள்ளியில் உறைகின்ற துறவிகளுக்கு உணவைப்பற்றிய சிந்த னையே கிடையாது. காசைக் கையினாலே தொடவேண்டிய அவசியமில்லை; தொட்

டாலும் செலவு செய்வதற்குச் சமீபத்திலே கடைகளில்லை. உண்பது, உறங்குவது, ஆண்டவனைத்தியானிப்பது, சாஸ்திர ஆராய்ச்சி செய்வது தவிர வேறுதொழில் இல்லை. சிறிது நேரம் ஐரோப்பிய மகா யுத்தத்தைப் பற்றிப் பேசுவதும் அதைப் பீடிகையாகக்கொண்டு ஞானம் பேசுவதும்; இது ஓய்வு வேளையில் நிகழ்வது. இந்தச் சமயங்களிலே, பூர்வ வாசனைவரத் துறவிகளுக்கு இயல்பாகவுள்ள தண்ணளியையும் மறந்து, "பிரான்சு தேசத்தை பிடித்துக் கொண்டானமே. பாரிஸ் நகரத்துக்களியாட்டும், செல்வச் செருக்கும், பிரான்சுக்காரர் தங்கள் கீழுள்ள பிரஜைகளை அடிமைப்படுத்தியதும் வீண் போகுமா? இப்படி வந்தே தீர வேண்டும்" என்றிப்படியெல்லாம் காலத்தின் கொடுமையைப் பற்றிப் பேசுவது. இத்தகைய பேச்சொன்றிலே, ஒரு நாள் மேனாட்டு நாகரிகத்தைப்பற்றி அதிகம் வாசித்தறியாத ஒரு வைதிகத்துறவி, அந்த நாட்டு மொழிகளிலே நன்கு பயின்ற ஒரு சகோதரத் துறவியைப் பார்த்து, "நம்முடைய வேத உபநிடதங்களிலே யுள்ள உண்மைகளை யெல்லாம் நன்றாகப் படித்த மாக்ஸ் முல்லர், ஷோப்பென்ஹோர் முதலிய அறிவாளிகளெல்லாம் அந்த ஜெர்மன் நாட்டிலே பிறந்தவர்களாமே, அப்படிப்பட்ட நாட்டிலேபிறந்த மனிதர் ஏன் இப்படி அநீதியாகப் பிறருடைய நாடுகளாகிய போலந்து, டென்மார்க்கு, நார்வே, ஹாலாந்து, பெல்ஜியம் முதலிய நாடுகளைப் பிடித்தார்கள்; இந்த நாடுகள் 'ஐயோ, சிவனே!' என்று சும்மா இருந்தனவே யல்லாமல், ஜெர்மன்காரருக்கு ஒரு அநியாயமுஞ் செய்யவில்லையே," என்றார். இரண்டாம் துறவி அதிகம் பேசாமல் ஒரு வார்த்தையிலே "மண்ணாசை," என்று மறுமொழி கூறினார். அதற்கு வைதிகத்துறவி, "'பொன்னில மாதராசை,' என்றும், 'மனைவிம் மனைவிமக்கள் அர்த்த ஈடணைகள்' என்றும் பெரியோர்கள் கூறியிருக்கிறார்களாதலினாலே, மண்ணாசையென்பது மக்கள்மேல் வைத்த ஆசை யென்பதாகும்; குழந்தையில்லாவிட்டால் மனிதன் மனைவியை வெறுக்கிறான்; பொன்னையும் சுழற்றி யெறிந்துவிட்டுத் துறவுபூண்டு விடுகிறான். மேலேசொன்ன வாக்கியங்களிலே 'பொன்,' 'மாதர்' என்னும் வார்த்தைகளுக் கிடையிலே 'நிலம்' என்னும் வார்த்தையும், 'மனைவி,' 'அர்த்தம்' என்னும் வார்த்தைகளுக்கிடையிலே 'மக்கள்' என்னும் வார்த்தையும் இருப்பதை உற்று நோக்கவேண்டும்; 'நிலம்' என்றால் 'நிலையுடையது' என்று அர்த்தம்; நிலையில்லாத உலகத்திலே புத்திரராலே ஒரு வகையான நிலைபேறுண்டு; இடையில் நின்ற மக்களே மனிதனுக்குப் பொன்னினிடத்தும் மாதரிடத்தும் பற்று வைப்பதற்குக் காரணமானவர்கள்; இந்த ஜெர்மன்காரருக்குப் புத்திரர்மேல் அன்பிருந்தால் கொடிய யுத்தத்திலே இறந்துபோகும்படி அருமைமக்களை அனுப்புவார்களா?" என்று இப்படியெல்லாம் வேதாந்த யுக்தமான சமூக ஞானம் பேசி மக்கள் மேலுள்ள பற்றினைத்தாமின்னும் முற்றாக ஒழித்துவிடவில்லை என்பதை அனைவர்க்கும் வெளிப்படுத்தினார். மற்றுமொரு துறவி முற்பட்டு, "அழியாத வாழ்வாகிய அமிர்தத்துவத்தைக் கருமத்தினாலோ, மக்களாலோ, பொன்னாலே அடைய முடியாது. துறவு மார்க்கத்திநின்று பூரண தியாகஞ் செய்வதனாலேதான் அடைய முடியும்" என்று முடிவு செய்தார். அது வரையும் மௌனமாகவே எல்லோரும் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்த ஒரு துறவி பின் வருமாறு பேசலானார்: "மனிதனுடைய மனமோ ஒரு பற்றுக் கோடில்லால் ஒரு கணப்பொழுதும் தரித்

திருக்கமாட்டாது. எதனை மனம் பற்று கிறதோ அதனைப்பற்று என்று சொல்லு கிறோம். பொன்னிடத்திலே பற்றுவைத் தவன் இரவுபகல் பொன்னைத்தேடி அலை கிறான். பெண்ணிடத்திலே தனக்குப் பற்றில்லையென்று பெருமை பேசிக் கொள்ளுகிறான். பெண்ணிடத்திலே பற்று வைத்தவன், பொன்னை அற்பமாக நினைத்து அருணகிரி நாதர் பூர்வத்திலே நடந்து கொண்டதுபோல விலைமாதருக் குக் கனகாபிஷேகஞ் செய்கிறான். சச்சந்த மன்னன், எட்டாம் எட்வர்ட் சக்கரவர்த்தி யென்றின்னோர் காதலின் பொருட்டு அர சுரிமையைத் தியாகஞ் செய்தார்களல் லவா? இது சாதாரண தியாகமா? கல்வி யிலே பற்றுடையோர் அதன் பொருட்டுப் பொன்னையும் மாதரின்பத்தையும் துறந்து ஊணுறக்கத்தைத்தானும் பொருட்படுத் தாது, "தொலைவில் பன்னூல் ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சம்" என்றபடி நெஞ்சு சிவக்க உழைத்துக் கலைக்கடலைக் கடக்க முயலுகிறார்கள். உணவுச் சுகத்தை விரும்பியவன் சாம்பார் சரியில்லா விட் டால் மனைவி தலையிலே சாம்பார் சட் டியை உடைத்து மனைவியைப் பிறந்த வீட்டிற்கு அனுப்பி விடுகிறான்; அவனும் ஒருவகைத் துறவிதான். கட்குடியன் மற்றொருவகைத் துறவி. சாராயப் புட்டியி லுள்ள பற்றினாலே மனைவியுடைய நகை களை அடகு வைத்து விடுகிறான். போர் முனைக்குச் செல்லும் வீரன் புகழைப் பற்றுக் கோடாகக்கொண்டு மனைவி மக் கள், பொன் இவற்றோடு அமையாது உயிரையும் தியாகஞ் செய்து விடுகிறான். மேலே நாம் கூறிய எல்லோரும் ஒவ் வொரு வழியிலே தியாகிகள். ஆதலி னாலே தனித்த தியாகத்தினால் மாத்திரம் நித்திய வாழ்வு வந்துவிடுமென்று நான் நினைக்கவில்லை. 'பற்றிலனீசனும்—முற்ற வும் நின்றனன், பற்றிலையாயவன்—முற்றி லடங்கே' என்ற ஆழ்வார் திருவாக்கின் படியும், 'பற்றுக பற்றற்றான் பற்றினை யப் பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு' என்னும் நாயனார் திருவாக்கின்படியும் இறைவனுடைய திருவடியைப்பற்றி நிற்க வேண்டும். அங்ஙனம் பற்றிய பற்றுச் செவ்வியுறுமாயின், பொன்னாசையும் பெண்ணாசையும் பிறவாசைகளுந் தாமா கவே விட்டகல்வன. 'நான் துறந்தேன்' என்ற விடத்திலே 'நான்' என்றொன்று நிலவுதலாலே பற்று நீங்கியபாடில்லை. ஆனால் ஆண்டவனைப்பற்றி நிற்கும் நிலை யிலே, தலைவனை மறவாத தியானத்தின் வழிப்பட்டுச் சாதகன் தன்னைமறக்கிறான்.

'வான்கெட்டு மாருத மாய்ந்து அழல்நீர்
மண் கெடினும்
தான்கெட லின்றிச் சலிப்பறியாத்
தன்மையனுக்கு
ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு
என் உள்ளமும் போய்
நான்கெட்டவாபாடித் தெள்ளேணங்
கொட்டாமோ'

என மாணிக்க வாசக சுவாமிகள் கூறிய துறவு இதுவாகும். பச்சைப் புழுவானது மற்றோரிலையை நன்கு பற்றிக்கொண்டு தான் இருந்த இலையை விட்டுப்பிரிவது போல, இல்வாழ்க்கையிலிருக்கும் பொழுதே ஆண்டவனுடைய திருவடி யிணையைப் பற்றவேண்டும். 'அடங் கெழில் சம்பத் - தடங்கக்கண்டீசன், அடங்கெழிலென்ன - அடங்குகஉள்ளே;' 'உள்ளம் உரைசெயல் - உள்ள இம் மூன்றையும், உள்ளிக் கெடுத்திறை - உள்ளிலொடுங்கே,' என்னும் திருவாய் மொழிப் பொருளிளைச் சதா சிந்திக்க வேண்டும் இதுவே வழி."

---

# நமது சிகர ஜோதி

இப்பகுதியில் :—ஆதிசக்தி — இதில் ஸ்ரீ சித்பவானந்த சுவாமிகள் சக்தியின் உற்பத்தியையும் காரியத்தையும், திரிபுர சுந்தரி, துர்க்கா தேவி எனும் நாமங்களில் புதைந்து கிடக்கும் உட்பொருள்களையும், உண்மையான சக்தி வழிபாடு இன்னது என்பதையும் அழகாகவும் நுட்பமாகவும் விளக்குகிறார். ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை—பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கல்வியினைப் பற்றிக் கொண்ட கருத்து இக்கட்டுரையில் காட்டப்பட்டுள்ளது. கோயில் சுடுகாடு—பண்டித பூ. ஸ்ரீனிவாசன் அவர்கள் இக்கட்டுரையில் மும்மலங்களும் சுட்டெரிக்கப் பட்ட சுடுகாடான உள்ளக்கோயிலினையே உறைவிடமாகக் கொண்டுள்ளான் சிவபிரான் என்பதனை வெகு அழகுபட எடுத்துக்காட்டி யிருக்கின்றார்கள். எவரையும் தெய்விக நோக்கோடு காணுதல் — மக்கள் ஒருவர்க்கொருவர் சரீர சம்பந்தத்தின் மூலமாக உறவு கொள்வதாலேயே துக்கப் படுவதற்காளாகின்றன ரென்றும் அதனை விடுத்து உண்மையில் உறவுக்குக் காரணமான தெய்வத்தினை அடிப்படையாகக் கொண்டு ஒருவர்க்கொருவர் உறவு கொள்ள முயல்வதே சாலச் சிறந்தது என்றும் அதனால் துக்க நிவர்த்தியை அடையப்பெறுவர் என்றும் ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றார்கள். காமினி காஞ்சனம்— ஸ்ரீ விபுலாநந்த சுவாமிகள், இக் கட்டுரையில் 'நான்' எனும் அகம் அகன்று இறைவன் திருவடியிணைகளில் பற்றுகொண்ட போது தான் ஒருவன் பூரணத்தியாகி யாவான் என்பதை அழகுபட எடுத்துக் காட்டுகிறார்கள்.

## அனுபூதி ஏணியிற் பல படிகள்

(முன் மாதப் பகுதியின் தொடர்ச்சி)

முத்திக்காக முயல்வோனது ஞான வாழ்க்கை உண்மையாகத் தொடங்குவது, இறைவனருளாலோ குருவின் அருளாலோ முதன் முதலாக ஒரு கணமேனும் மெய்ப்பொருட் காட்சியைப் பெற்ற பின்தான். அக்காட்சியின் மாட்சியை உணர்ந்து, அதைத் தன் முயற்சியினால் அடைய முயலுவதே சாதகனுக்குரிய முயற்சியாகும். அஞ்சுவதற்குரிய அஞ்சின் (ஐம்புலன்களின்) வேகத்தை அடக்கியும் ஒடுக்கியும், மனதை ஒருவாறு தூய்மைப் படுத்தியும், பெருமுயற்சியின் பயனாய்ப் பேரின்ப அனுபவத்தை அவன் அடைகிறான். பக்தி நெறியிற் செல்வோன் இறைவனது திவ்விய காட்சியை உள்ளத்தே பெற்றுப் பேரானந்தத்து மூழ்குகிறான். நாளடைவில் இக் காட்சி உள்ளத்து மட்டும் புலனாவதுமன்றி, புற உலகிலும் தோற்றுகின்றது. இக்காலத்துச் சாந்தியென்பது உள்ளத்துக் குடி கொள்கிறது. அப்பொழுது பேச்சு சுருங்கி மௌனம் தலையெடுக்கின்றது. அம் மோன வேளையில், உள்ளத்தினின்றும் தெய்வ சக்தி ஊற்றெடுத்துப் பெருகுகிறது. உள்ளத்தின் மலம் ஒழிகின்றது; தன்னடக்கம் தானே வருகின்றது. உலகப் பற்று வேரோடும் மாய்கின்றது. மாணிக்க வாசகரும் உள்ளத்தினுள்ளே கண்ட தெய்வக் காட்சியைப் புறத்தே பெற முயன்று, திருக்கழுக் குன்றத்திலே புறத்தும் அப் பேரின்பக் காட்சியைப் பெற்றனர். அடிகள் கூறுவதாவது :—"நாயினும் கடையாய (வெம்) கட்டனேனையும் ஆட்கொள்வான் வந்து, காட்டினாய் கழுக் குன்றிலே." அவாவின்மை யென்பது பூரணமாகிறது இந்நிலையில்; இறைவனை இடையறாது பற்றும் அவாவும் உதிக்கின்றது. இதைப் பின்வரும் பாடலில் குறிப்பிடுகிறார் :—"வேண்டேன் புகழ், வேண்டேன் செல்வம், வேண்டேன் மண்ணும்

விண்ணும், வேண்டேன் பிறப் பிறப்புச் சிவம் வேண்டார்தமை நாளும் தீண்டேன், சென்று சேர்ந்தேன், மன்னு திருப்பெருந்துறை இறைதாள் பூண்டேன், புறம்போகேன், இனிப் புறம் போக லொட்டேனே." தாமும் இறைவனைவிட்டு விலகாமலும், இறைவன் தம்மைவிட்டு விலக விடாமலும் இருந்து, இடையறாக் காட்சியைப் பெற மணிவாசகப் பெருமான் விரும்புகின்றார்; ஆனால் இறைவன் நழுவிக்கொண்டு போய்விடுகிறார். 'எல்லாம் அவன் செயல்' என்று பொறுத்துக்கொண்டு, இறைவனிடத்துத் தம்மை முழுவதும் ஒப்புவித்து விடுகிறார்; தமக்கு ஒன்று வேண்டும் என்னும் அவாவையும், அதனால் இறைவனிடம் பிரார்த்திப்பதையும் அடியோடு நிறுத்தி விடுகிறார். "வேண்டி நீ யாது அருள் செய்தாய் அதுவே யானும் வேண்டினல்லால், வேண்டும் பரிசொன்று உண்டென்னில் அதுவும் உன்றன் விருப்பன்றே" யென்றும், "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ அதற்கு நாயகமே" என்றும் முழுதும் சரண்புகுந்து விடுகின்றனர்.

தமது ஆன்மாவை இறைவனுக்கே ஸமர்ப்பித்துவிடும் மெய்யடியார், தம் உள்ளத்தே இறைவன் பேரானந்த வடிவோடு எழுந்தருளி யிருத்தலையும், அங்கிருந்தவாறே தம் உள்ளத்தைப் பண்படுத்தலையும் உணர்வார். இறைவன் எப்போதும் சிந்தையுட் குடிகொண்டிருப்பினும், ஆணவம் தலை யெடுக்கும்போது இறைவனது ஞான ஒளி மறைந்துவிடும். சூரியனுக்கு ஆதாரமாயும் தாயாயும் இருப்பது நக்ஷத்திரம் என்பது வான நூலார் கண்டுபிடித்துள்ள ஓர் உண்மை. சூரியனது ஒளியினும் பன்மடங்கு மிக்க ஒளியுடையது நக்ஷத்திரம் என்பதும் அறியப்படுகின்றது. ஆயினும் சூரியனது ஒளி வீசும் பகற்காலத்தில் நக்ஷத்திர ஒளி புலப்படுவதில்லை. அதுபோல் ஆணவம் ஒளி வீசிக் கொண்டிருக்கும்போது இறைவனது 'உலவா இன்பச் சுடர்' எனும் ஒளி புலப்படுவதில்லை. ஆணவம் ஒழியும் அக்கணமே, இறைவன் நெஞ்சத்தைக் கோயிலாகக் கொண்டுள்ளது புலனாகின்றது. அப்பொழுது அடியார்கள் தமது நெஞ்சில் இறைவன் புகுவதாக நினைத்துக் கொள்கின்றனர். இறைவன் உண்மையாக எப்போதும் நெஞ்சத்திருந்து ஆனந்தத்தைப் பொழிந்துகொண் டிருக்கிறான். இந்த ஆனந்தப்பால் தாய்ப் பாலைப்போல ஊனை வளர்க்காது உருக்குகின்றது; தாய்ப் பாலைப்போல உள்ளொளியைச் சுருக்காது பெருக்குகின்றது. இந்நிலையில் மெய்யடியாரது உணர்ச்சியினின்றும் இறைவன் நழுவுவதில்லை; அடியார் இறைவனைச் சிக்கெனப் பிடித்து உள்ளத்து இடைவிடாது இருத்திக் கொள்வதாகக் கூறுகின்றனர். மணிவாசகப் பெருமான் இந்நிலையினைத் திருத்தோணி புரத்திலே பெற்றார். அதைப் பின்வருமாறு கூறுகிறார்:—"பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து, நீ பாவியேனுடைய ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி, உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த செல்வமே சிவபெருமானே, யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன், எங்கு எழுந்தருளுவது இனியே."

இறைவன் சதா மெய்யடியாரது உள்ளத்திலே எழுந்தருளியிருக்கும் நிலையில், ஞான விழிப்பு நிலையொன்று உதிக்கின்றது; உதித்த ஞான ஒளி முன்னர் இடையிடையே மறைந்து போய்க்கொண்டிருந்ததாயினும், இப்போது மறையாது எப்போதும் திகழ்ந்துகொண்டே யிருக்கின்றது. உள்ளத்தினின்று வீசும் இந்த ஞான ஒளி உள்ளத்திலுள்ள இருளை

நீக்குகிறது; புறத்திலுள்ள உலகப் பொருள்களின்மீது அவ்வொளி வீசும் போது, அவை ஒரு புதிய அழகோடு ஒளிர்கின்றன. உலக வாழ்க்கையிற் காணப்படும் நிகழ்ச்சிகள் ஞானப் பொருளோடு விளங்குகின்றன; உலகப் பொருள்கள் யாவும் தெய்வீக அழகுடையனவாகக் காணப்படுகின்றன. உலகம் ஆனந்தமயமாகத் தோன்றுகின்றது; உலக நிகழ்ச்சி ஒவ்வொன்றும் உள்ளுறைப் பொருளுடையதாகத் தோன்றுகின்றது. இந்த ஞானக்கண் திறக்கு முன்பு உலகம் ஐம்பொறிகளின் துணையால் உள்ளத்தைக் கலக்க ஏதுவாயிருந்தது; இப்போது ஐம்பொறிகள் வாயிலாக ஞான ஒளி உலகப் பொருள்களினிடத்துப் பாய்தலின், அவை ஆனந்தத்தையே ஊட்டுகின்றன. இறைவனையும் இறைவனது அன்பையுமே நினைப்பூட்டுகின்றன. இந்நிலையில் ஐம்புலன்களைக் காவலில் வைக்க வேண்டிய அவசியமில்லை; காவல் இல் புலன்களை (காவல் இல்லாத புலன்களை) வைத்தே அடியார்கள் 'கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து நாவலிட்டு உழிதருகின்றார்.' அப்போது காணப்படும் உலகம் இறைவனது ஆனந்தத்தை வெளிப்படுத்த முயலும் கருவியாகக் காணப்படுகின்றது. இந்நிலையை மணிவாசகப்பிரான் வெளிப்படுத்தியருளுவதைக் காண்பாம். குளத்தில் மாதர் நீராடுதலைக் கண்ணுற்றதும், அக்குளம் சிவபெருமானையும் உமாதேவியையும் நினைப்பூட்டுகின்றது. "பைங்குவளைக் கார்மலரால், செங்கமலப் பைம்போதால், அங்கங் குருகினத்தால், பின்னும் அரவத்தால், தங்கள் மலம் கழுவுவார் வந்து சார்தலினால், எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்று இசைந்த பொங்கு மடு" என்கிறார். சுண்ணம் இடிக்கின்ற மாதரை வீதியிற் கண்டதும், "பூவியல் வார்சடை எம்பிராற்குப் பொற்றிருச் சுண்ணம் இடிக்கவேண்டும், மாவின் வடுவகிரன்ன கண்ணீர்" என்கின்றார். (மாதரைக் கண்டு இப்போது ஓடுவதில்லை.) "வம்மின்கள் வந்து உடன்பாடுமின்கள்" என்கிறார். "வையமெல்லாம் விலகாத மாமேரு என்னும் உலக்கை நாட்டி, மெய் எனும் மஞ்சள் நிறைய அட்டி, மேதகு தென்னன் பெருந்துறையான் செய்ய திருவடி பாடிப்பாடி......பொற் சுண்ணம் இடித்தும் நாமே" என்கிறார். மலர் தொறும் சென்று ஊதித் தேனுறிஞ்சும் வண்டினைக் கண்ட மாணிக்கவாசகர் வண்டுகட்குப் போதிக்கின்றார் :—"தினைத்தினை உள்ளதோர் பூவினில் தேன் உண்ணாதே. நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும், அனைத்து எலும்பும் உள் நெக ஆனந்தத் தேன் சொரியும், குனிப்பு உடையானுக்கே சென்று ஊதாய் கோத்தும்பீ."

ஞான விழிப்பு நிலையில் சதா நிற்கும் சாதகன், இறைவனது அருளே தன்னை ஆட்டிவைப்பதை உணர்கின்றான். அந்த அருளை உணரும் உணர்வுமயமாகத் தான் இருப்பதன்றி வேறு விதமாகத் தன்னை அறியான். தான் ஒரு கருவிபோல் ஆடினும், கருவி ஆட்டு விப்பானை உணராதது போலத் தானும் இருப்பதில்லை; ஆட்டுவிப்பானையும், தான் அவனால் ஆட்டுவிக்கப் படுதலையும் உணர்கின்றான். தனக்கென ஒரு சங்கற்பமும் தனக்கென ஒரு சாதனமும் தனக்கென ஒரு பேறும் இருப்பதாக எண்ணும் எண்ணமும் சாதகனிடத்துத் தேய்ந்து தேய்ந்து, இறுதியில் அழிந்துவிடும். சுருங்கச் சொல்லில் தற்போதம் என்பது முழுதும் ஒழிந்துவிடும். சிவபோதமே தலையெடுத்து நிற்கும். அந்நிலையில், சாதகன் மொழிவதெல்லாம் ஜெபமாகும்; உடலின் முயற்சிகளெல்லாம் ஞான முத்திரைகளின் வகைகளாகும்; நடத்தல் எல்லாம் பிரதக்ஷிண

மாகும்; உண்பது ஆகுதியாகும்; படுத் துறங்குவது சாஷ்டாங்கமாக நமஸ்கரித்த லாகும்;—அதாவது முயற்சிகளெல்லாம் பூஜையின் பல்வேறு முறைகளாகும். இதுவே ஆன்மா இறைவனோடு இரண் டறக் கலந்து நிற்கும் நிலையாகும். இந் நிலையில் பிறவிப்பிணி முற்றும் நீங்கிவிடு கிறது. மணிவாசகப்பிரான் தில்லையிலே வாழுங்கால் இந்நிலையில் நின்றார். "சிந்தை தனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனை யாண்ட அந்தமிலா ஆனந்தம் அணி தில்லை கண்டேனே" என்று அடிகள் இதைப் பற்றிப் பாடுகிறார். "எனைப் பெரிதும் ஆண்டுகொண்டு என் பிறப் பறுத்த இணையிலியை" என்று கூறு கிறார். "என்பு உள்ளுருக்கி இருவினையை ஈடழித்து, துன்பம் களைந்து துவந்துவங் கள் தூய்மை செய்து, முன்புள்ளவற்றை முழுதழிய உள்புகுந்த அன்பின் குலாத் தில்லை யாண்டானைக் கொண்டன்றே" என்று பாராட்டுகிறார். "நவமாய செஞ் சுடர் நல்குதலும் நாம் ஒழிந்து, சிவ மானவா பாடித் தெள்ளேணம் கொட் டாமோ" என்றும், "கயல் மாண்ட கண்ணி தன் பங்கன் எனைக் கலந்து ஆண்டலுமே, அயல் மாண்டு, அருவினைச் சுற்றமும் மாண்டு, அவனியின்மேல் மயல் மாண்டு, மற்றும் உள்ள வாசகம் மாண்டு, என்னுடைய செயல் மாண்டவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ" என்றும், "ஊன் கெட்டு உயிர் கெட்டு உணர்வு கெட்டு என் உள்ளமும் போய், நான் கெட்டவா பாடித் தெள்ளேணம் கொட் டாமோ" என்றும், "சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும், அத்தன் கருணையினால், தோள் நோக்கம் ஆடாமோ" என்றும், தமது நிலையைப் பற்றி அடிகள் வருணிப்பதிலிருந்து அடி கள் எய்திய உயர்ந்த நிலை விளங்குகின்ற தன்றோ?

தற்போதம் ஒழியப் பெற்ற மெய்யடி யார்க்கு உலக வாழ்க்கை துயர வாழ்க்கை யாகாது, பேரின்ப வாழ்க்கையாகவே மாறிவிடும். ஐயந்தீர்ந்த தெளிந்த காட்சி யுடையராயினும், இவர்கள் இவ்வுலகத்து (அழியும் உலகத்து) வாழும் வரைக்கும், இறைவனோடு இரண்டறக் கலந்த பேரி ன்ப நிலையில் ஆழ்ந்து சதா அந்நிலையி லேயே இருத்தல் இயலாது போகும். மெய்ப்புணர்வு (மெய்ஞ்ஞானம்) நிலைத்திருப் பினும், உள்ளத்து ஊறும் ஆசைக்கு இயைந்தவாறு இவ்வுலகத்து இறைவனை அனுபவித்தல் முடியாது என்பது தோன் றும். இங்கே இறைவனைக் கலந்து பெறும் இன்பம் இடைவிடாது தொடர்ச்சியாக எய்தப்படுவதில்லை; கலந்த இன்பத்திற் குப் பின், அதைப் பிரிந்து மெய்ஞ்ஞான நிலையில் சாந்தியோ டிருத்தல் வேண்டும்; அல்லது ஆற்றமுடியாத பெருந்துயரத் தில் (இறைவனைப் பிரிந்த காரணத்தால்) மூழ்கவேண்டும். இவ்வுலகம் இறைவனது அருளை ஒருவாறு வெளிப்படுத்தினும், அந்த அருளையும் பேரன்பையும் பேரின் பத்தையும் முழுதும் வெளிப்படுத்த இவ் வுலகப் பொருட்கு இயலாது. உடலும் உலகப் பொருளும் அவைகளை ஒருவாறு தடை செய்யும். இதனால் மெய்யடியார்க்கு உலக வாழ்க்கையில் ஓர் அருவருப்பு எழும். உலகில் வாழும்வரை மெய்யடி யார் தமது ஆன்ம நாயகனைக் கூடிப் பெறும் ஆனந்தம், அகப்பொருள் நூலார் கூறும் களவியல் முறையையே சேர்ந்த தாகும்; கற்பியலில் ஆசை பெறுவது இயல்பேயாகும். தலைமகளைத் தலைமகன் அவளிருக்கும் இடம் நாடிவந்து கூடி யிருந்து இன்ப மளிப்பினும், அது கள வொழுக்கமேயாம். காதலியைக் காதலன் மணந்து, பலரறியக் கைப்பிடித்துத் தனது இருப்பிடத்திற்கு அவளை அழைத் தேகிய பின்புதான், ஒழியாத இன்பம்

(இடையறாத இன்பம்) கைகூடும்; அதன் பின்னரே பிரிவு என்பதில்லை. ஆதலால் மெய்யடியார், அழியா உலகத்து, இறைவ னோடும் பிரியாத மெய்த் தொண்டரோடும் கூடி வாழ ஆசைப்படுவார். இந்த ஆசை வரவர வளர்ந்து, நிறைவேறும் தருணத் தையும் அருளால் பெறும். மணிவாசகப் பெருமானார் இந்த ஆசையை, "அடியவர் தொகை நடுவே ஒருருவாய திருவருள் காட்டி என்னையும் உய்யக் கொண்டருளே" என்றும், "உன்னைப் பிரிந்து இங்கு ஒரு பொழுதும் தரியேன் நாயேன்" என்றும், "பத்திலனேனும் பணிந்திலனேனும், உன் உயர்ந்த பைங்கழல் காணப் பித்தில னேனும், பிதற்றிலனேனும், பிறப்பறுப் பாய் எம்பெருமானே..............எத்தனை யானும் யான் தொடர்ந்து உன்னை இனிப் பிரிந்து ஆற்றேனே" என்றும் இறைவ னிடம் வெளிப்படுத்துகிறார்.

மெய்யடியாரை இறைவன் தனது அழி யாப் பேரின்ப உலகத்திற்கு அழைத்துச் செல்வதிலேயே விருப்ப முடையவன்; ஆயினும் அடியார்களிடத்து அதற்குரிய அவா தலையெடுக்கும்வரை அவ்வாறு செய்வதும் இல்லை. சிற்சில மெய்யடியார் களைக்கொண்டு உலகத்தைத் திருத்த நினைக்கும் போதுதான், அவர்கட்கு நித் திய உலக வாழ்க்கையில் பேரவா இருப் பினும் இறைவன் அதை நிறைவேற்றுவ தில்லை. அவா நிறைவேறாதபோது தாங் கள் படும் துயரத்தை (ஊனை யுருக்கி உள் ளொளி பெருக்கும்) பாடல்கள் மூலமாக மெய்யடியார்கள் வெளிப்படுத்தி உலகத் தார்க்குப் பெருந் தொண்டு புரிவார்கள். ஆனால், என்று ஒரு மெய்யடியார் இவ் வுலக வாழ்க்கையை வெறுத்து அவ்வுலக வாழ்க்கைக்கு ஆசைப் படுகின்றாரோ, அன்று இறைவன் அதை நிறைவேற்றி யருள விரும்புவான். மெய்யடியார், தமது அவாவை இறைவன் நிறைவேற்றி யரு ளும் காலம் வந்ததை உணர்தலும், ஊரும் நாடும் உலகமும் பேரின்பப் பேற்றை இழந்து அல்லலுழப்பதைக் கண்டு ஆற் றாதவராகி, உலக மக்கட்கு உபதேசம் செய்வார். அழியா உலகத்து ஒழியா இன் பப் பேற்றைத் தமக்கு அருளுவான் என் பதை உணர்ந்த மணிவாசகப் பெரு மானும் உலக மக்கட்கு ஆருயிர் மருந் தென அமையும் அரிய உபதேச மொழி களை அருளுகின்றார். அவைகளை அவரது திவ்விய மொழிகளாலே கூறுவோம்:—

"பொய்விட்டு உடையான் கழல் புகவே காலம் வந்ததுகாண்; ஆட்பட்டீர், வந்து ஒருப்படுமின், புகவே வேண்டா புலன் களில் நீர்; புயங்கப் பெருமான் பூங்கழல் கள் மிகவே நினைமின், மிக்க வெல்லாம் வேண்டா, போக விடுமின்கள். தாமே தமக்குச் சுற்றமும், தாமே தமக்கு விதி வகையும். விடுமின் வெகுளி வேட்கை நோய், மிக ஓர் காலம் இனியில்லை, உடை யான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோடு உடன் போவதற்கே ஒருப்படுமின். புகழ் மின் தொழுமின் பூப்புனைமின், புயங்கன் தாளே புந்தி வைத்திட்டு, இகழ்மின் எல்லா அல்லலையும், இனி ஓர் இடையூறு அடையாமே." இவ்வாறு போதித்தும் திருந்தாதவரைக் கண்டு, "இன்றே வந்து ஆளாகாதீர். மருள்வீர், பின்னை மதிப்பார் ஆர், மதியுட் கலங்கி மயங்குவீர்........ திருப்புயங்கன் அருள் ஆர் பெறுவார் அகலிடத்தே, அந்தோ அந்தோ அந் தோவே" என்று அடிகள் பேரிரக்கத் தாற் பரிதபிக்கின்றார்.

உலக மக்களை நினைந்து இரங்கிய மெய் யடியாரது உள்ளம் மீண்டும் இறைவனை நினைக்கவே, அவன் காலந்தாழ்ப்பதனால், பெருவிடாய்க்கு ஆளாகும். பொறுத்தற் கரிய பேரவா அளவு கடந்த நிலையில் எழும்; அதை இறைவன் ஆற்றான்; உட லும் ஆற்றாது. ஆதலின் இறைவன் அடி

யாரை உடற் சிறையினின்றும் விடுவித்துத் தனது நித்திய உலகிற்கு அழைத்துக் கொள்கிறான். அதைக் காணும் அடியாரது உள்ளம் இறைவனது எல்லையற்ற கருணையின் பெருமையினையும் தனது எல்லையற்ற (பண்டைய) சிறுமையினையும் சிந்தித்து, இறைவன்மீது பெருநன்றி கூர்ந்த வண்ணமாகவே அவனது நந்தா உலகில் திருவடியைச் சேர்ந்து இன்புற்று வாழும். "உடையான் கழல் புகவே காலம் வந்ததுகாண்" என்பதை உணர்ந்த மாணிக்கவாசகர் உலகத்தாரையும் அழைத்துச் செல்ல விரும்பி அவர்களைக் கூவியும், அவர்கள் வாராதது கண்டு, இறைவனை மறுகணம் நினைந்தார்; ஆராத பெரு வேட்கை மேலிட்டது. உடனே சிவபெருமானை நோக்கி, "அமரரெல்லாம் உன் திருவடிகளைப் போற்றுகின்றார்; யான் அவலக் கடலில் வீழ்ந்துள்ளேன். உன்னைக் கூடும் வழியைக் கூறுக" என்று மன முருகிப் பிரார்த்திக்கின்றார். "பன்னாள் உன்னைப் பணிந்து ஏத்தும் பழைய அடியாரொடுங் கூடாது பிறப்பட்டு இங்கு இருந்தேன், நோய்க்கு விருந்தாயே" என்றும், "கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்" என்றும், "தாயே என்று உன் தாள் அடைந்தேன், தயா நீ என்பால் இல்லையே, நாயேன் அடிமையுடனாக ஆண்டாய், நான்தான் வேண்டாவோ" என்றும் "கோனே, அருள வேண்டாவோ, கொடியேன் கெடவே அமையுமே, ஆவா என்னுவிடில் என்னை அஞ்சேல் என்பார் ஆரோ தான்.........திகைத்தேன், இனித் தான் தேற்றாயே" என்றும், "தெரிய அரிய பரஞ்ஜோதி, செய்வதொன்றும் அறியேனே" என்றும் மனங்கசிந்து பாடுகின்றனர். அன்பர்களது உள்ளம் வெதும்புதலைச் சகியாத பரமனும் மனமிரங்கி, அடிகளைத் தமது அழியா உலகிற்கு அழைத்தருளுகின்றார். அடிகள் அங்ஙனம் செல்லும்போது, "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தனது கருணையின் பெருக்கையும் தமது சிறுமையையும் ஒருங்கே சிந்தித்துப் பெருநன்றி கூர்கின்றார். "செம்மை நலம் அறியாத சிதடரொடும் திரிவேனை, மும்மை மலம் அறிவித்து..................நம்மையும் ஓர் பொருளாக்கி நாய் சிவிகை ஏற்றுவித்த அம்மை எனக்கு அருளியவாறு ஆர் பெறுவார்" என்று இறைவனது கடலன்ன கருணையை வியக்கின்றார்; வியந்த வண்ணமே இறைவனது திருவடி நீழலை அடைகின்றனர்.

ஆக, சிற்றின்பமாகிய துன்ப வாழ்க்கையினின்றும் பேரின்ப வாழ்க்கையெனும் பேறு பெறுவார்க்கு ஏறவேண்டிய அனுபூதி யேணிப்படிகள் இதுவரை கூறப்பட்டன.

---

## சமாசாரம்

### சுவாமி சித்பவானந்தர்

**உதகமண்டலம்** ஸ்ரீ ராமகிருஷ்ண ஆஸ்ரமத்துக்குத் தலைவராகவும், முன்பு ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயத்துக்கு ஆசிரியராகவும் இருந்த சுவாமி சித்பவானந்தர் இப்பொழுது திருச்சிராப்பள்ளிக்குப் பக்கத்தில் திருப்பராய்த் துறையில் (Elamanur or Thiruppalathurai Railway Stations) காவிரிக் கரைவாசம் பண்ணி வருகிறார். திங்கட்கிழமைதோறும் மாலை $3\frac{1}{2}$ மணிமுதல் $4\frac{1}{2}$ மணி வரையில் அவர் அங்கே பகவத்கீதை உபன்யாசம் செய்துவருகிறார். வெளியூர்களுக்கு சுற்றுப் பிரயாணம் போகும் சில வேளைகள் நீங்கலாக மற்ற காலங்களில் கோயிலில் நூற்றுக்கால் மண்டபத்தில் கீதா உபன்யாசங்கள் ஒழுங்காக நடைபெறும். அப்பக்கங்களில் உள்ள அன்பர்கள் அவைகளைப் பயன்படுத்திக் கொள்வார்களாக.

---

## கடிதங்கள்

(முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசியக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றூர்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணு 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணு 3

---

## ஜகஜ்ஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணு 12. சந்தாதாரருக்கு அணு 10.

---

# ப ஜ னு வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவது அவசியம்.

விலை அணு 12.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—௨௦] விக்கிரமஹூ ஐப்பசிமீ [பகுதி—௧௦

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானல் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானல் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தரால் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அநுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப் பட்டுள்ளது. வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உ௦ } விக்கிரமஹு ஐப்பசிமீ { பகுதி-க௦


## பிரார்த்தனை

समानो मन्त्रः समितिः समानी ।
समानं मनः सह चित्तमेषाम् ॥
समानी व आकूतिः समाना हृदयानि वः ।
समानमस्तु वो मनो यथा वः सुसहासति ॥

ஒன்றாய் வணங்குவோம் ஒற்றை நோக்கினோம்
ஒன்றை நோக்கினோம் ஒன்றாய் எண்ணுவோம்
வேண்டுவ ஒன்றினோம் வேட்கை ஒன்றினோம்
வேட்கை ஒன்றிட எங்கணும் ஒன்றினோம்.

—ரிக்வேதம். x. 191—3, 4.

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

---

உண்மையாகவே பெரியாராயிருப்பார் ஒருபொழுதும் வலியப் போராடமாட்டார்; அஹங்கார மற்றவராகவே இருப்பார். ஒரு குறிப்புடையாராயிருப்பார்; அமைதி, தாழ்மை, மன உறுதி பெற்றவராயிருப்பார். அவர்கள் இருவெவ்வேறு எஜமானர்க்கு—அதாவது, தமக்கும் பகவானுக்கும்—சேவகம் செய்ய முயலமாட்டார்.

உண்மையின் ஒளி பெற்றவர்கள் 'தான்' என்னும் நினைவை விடுவார்கள்; அக்காரணத்தால், பரம்பொருள் அவர்களது உள்ளத்தை நிரப்புவதற்கு அதிக இடம் ஏற்படுகிறது. நாமாக வலிய "நாம்" என்னும் நினைவை இம்மாதிரி ஒழித்து விடுதல் என்பது, சாதாரண மனிதனது அறிவிற்கு எட்டாததாகும்; ஏனெனில் அதை நினைத்தும், மனம் நடுங்குவான். 'தான்' எனும் நினைவு ஒழிதலே உண்மையாக ஞான மடைந்தவர்கட்கு மெய்யான வலிமையை அளிக்கிறது என்பதையும், அவர்கள் தமது இயல்பில் அன்பு புகாத காலி இடம் ஒன்றையும் விட்டு வைத்திருக்கமாட்டார்கள் என்பதையும், அவன் அறிவதில்லை. நாம் இதைச் செய்யும் (அகங்காரத்தை ஒழிக்கும்) திறமை பெற்றவர்களாகும்போது, நமக்கு ஓர் உறுதியுணர்வு உண்டாகும்! அதுயாதெனில், நமக்கு வாழ்க்கையில் அபாயமின்மையும் நிலையான வாழ்வும் வேண்டுமாயின், அவை உலகப் பொருள்களைத் தொகுப்பதனால் வரக்கூடியனவல்ல; எப்போதும் தவறாது ஆண்டுவரும் தெய்வீக சக்தியொன்று உள்ளது என்பதையும், அச்சக்தி தனது ஆளுகைக்குட்பட்ட உயிர்களின் நன்மையிலேயே கண்ணும் கருத்துமாயுள்ளது என்பதையும், உணர்வதினாலேயே அவை வரக்கூடியனவாம். நமது பயங்களையும் எதிர்பாராத நிகழ்ச்சிகளையும் முழுதும் போக்க இதுவேஒரு குறிப்பிட்ட அனுபவமார்க்கமாகும்.

—ஒரு பெரியார்

---

# பிரார்த்தனையின் அவசியமும் பயனும்

[ஸ்ரீ பரமானந்த சுவாமிகள்]

உலகத்தே நாம் காணும் பெருஞ் சக்திகளிடமிருந்து நாம் கற்றுக்கொள்ளும் படிப்பினை யாது? சூரியனும் சந்திரனும் நக்ஷத்திரங்களும் ஐம்பெரும் பூதங்களும் ஆகிய செதிகள் சில சமயங்களில் நமது உலகத்தைப் பாழ் படுத்துவதைப் பார்க்கவில்லையா? இதிலிருந்து நாம் அறிந்துகொள்ளக்கூடியது யாது? ஒரு பெருஞ் சக்திமானாகிய ஈசனால் தாங்கப் பட்டாலன்றி இவை மிகமிக அற்பமானவை என்பதன்றோ?' அவ்வாறாயின், மனிதன் தனது அற்ப பலத்தை நம்பி "நான் உலகத்தை வெல்ல விரும்புகிறேன். எல்லாருடைய பெயர்களைக் காட்டிலும் எனது பெயரே அதிகமாக ஜொலிக்க வேண்டும் என்பது எனது விருப்பம்" என்று கூறிக்கொண்டு வாழ முயல்வதைப் பார்க்கிலும் தனது வாழ்க்கைக்கு மூலமான ஈசனது சக்தியோடு தன்னை இணைத்துக் கொள்ளுதல் மிக மேலானதன்றோ? இத்தகைய ஆசைகள் யாவும் நிறைவேறிவிட்டாலும், அவன் அப்போதும் தன்னை மனிதர்க்குள் மிக்க துயரமுற்றவனாகக் காண்பான்; ஏனெனில், தனது ஆன்மாவாகிய வீட்டிலே குடியிருக்கக் கற்றுக்கொள்ளாத எவனும் உண்மையாக ஆனந்தமா யிருக்கமுடியாது.

"முதன்முதலாகப் பரலோகத்தைத் தேடுக" என்றார் இயேசுநாதர். இதுவே முதற்படியாகும்; அதாவது, நமது கடமைகள் சிறியவையாயினும் பெரியவையாயினும் அவைகட்காக நம்மைத் தயாராக்கிக்கொள்ளுதலும், பகவானது சக்தியும் வலிமையும் பெருகுவதற்கு ஏற்ற ஒரு மடையாக நம்மை ஆக்கிக்கொள்ளுதலும்- இது முதற்படியே. நாம் நம்மைத் தயாராக்கிக் கொள்ளும்வரை, நமது கருவி உலகனைத்தையும் ஆட்டுவிக்கும் மாபெருஞ் சக்தியோடு முற்றிலும் இசைந்து ஒழுகும்வரை, அது மிக்க அசுத்தமான கருவியேயாகின்றது. அவநம்பிக்கையும், கெட்ட நினைவுகளும் பயங்களும் இடையூறாக நிற்க இடங்கொடுக்கக்கூடாது. மிக மேன்மையானதொரு முடிவைப் பெறுவதற்காக நாமே நம்மைத் தயார் பண்ணிக் கொள்வோம். இது ஒரு நாளில் செய்ய முடியாதது என்பது உண்மையே. நம்மிற் சிலர்க்கு நெடுவழி நடக்கவேண்டியிருக்கும்; ஆயினும் ஆரம்பிப்பது நன்று; தாழ்மையோடிருக்க வேண்டும் என்பதை மறந்துவிடக்கூடாது. "பணிவோடு வாழ்பவர் பாக்கியவான்கள்; ஏனெனில் அவர்கள் பூமியை ஆளுவர்" என்று கிறிஸ்துநாதர் கூறியதன் காரணம் உனக்கு விளங்கவில்லையா? தாம் பணக்காரராவதற்காகப் பிறருடைய பொருள்களைப் பறிக்க விரும்பாதவர்களும் பாக்கியவான்களே. நமது ஞான வாழ்க்கையை அமைப்பதற்கு ஒரு வலிமையுள்ள ஏதுவாவது தியாகமே. "எனக்காகத் தமது வாழ்க்கைகளை இழப்பார் பாக்கியவான்களே" என்பதும் உண்மையே. மனிதயோசனையோடு நாம் செய்வது எதுவாயினும், அது வருத்தத்தையும் அபாயத்தையும் எப்பொழுதும் உண்டாக்கியே தீரும்.

நமது இளைஞர்கட்குப் பிரார்த்திக்கும் வழியை எப்படிக் கற்பிப்பது? முதல்

முதலில் சரியான எல்லைகளை உண்டாக்குங்கள். பிரார்த்தனை எப்படி மனதைத் தெளிவாக்கி, அச்சமும் கவலையும் அதனுள் நுழைய முடியாதபடித் தடுக்கிறது என்பதையும், வாழ்க்கையில் ஏற்படும் சங்கடங்களைத் தைரியத்தோடும் உண்மையான ஞானத்தோடும் எதிர்த்து நிற்க எப்படித் துணை செய்கிறது என்பதையும் அவர்கள் பார்த்துக் கொள்ளட்டும். பிரார்த்தனையினால் பிரத்தியக்ஷ பலன்கள் உண்டாகுமாதலின், பிரார்த்தனையிற் கழிக்கப்படுங் காலம் வீணாவதன்று என்பதை, ஒழுங்காகப் பொழுது தவறாது பிரார்த்தனையும் தியானமும் செய்யும் வழக்க முடையார் உங்கட்கு எடுத்துரைப்பார். பிரார்த்தனை விரைவாகவோ தாமத மாகவோ பலித்தல், அதைச் செய்யும் மனிதரது உள்ளத்தில் நம்பிக்கை எவ்வளவு தீவிரமாயிருக்கின்றது என்பதைப் பொறுத்துள்ளது. நம்பிக்கையினால் உயிர்ப்பிக்கப்படும் பிரார்த்தனையைப் பற்றிக் காந்திஜீ பின் வருமாறு வருணிக்கிறார்:—"வாழ்க்கைப் போரில் ஓர் எல்லைவரைதான் அறிவு நம்மைக் கொண்டு செலுத்தும்; ஆனால் முட்டுப்பாடான சமயத்தில் அது நம்மைக் கைவிட்டுவிடும். நம்பிக்கை அறிவுக்கும் அப்பாற்பட்டது. அடிவானத்தே கள்ளிருள் சூழ்ந்திருக்கும் போதும், மனிதனது அறிவு தரையில் வீழ்த்தப்படும் போதும் தான் நம்பிக்கை நன்றாக ஒளிர்ந்து நமக்குத் துணை செய்ய முன்வரும். நமது இளைஞர்கட்கு வேண்டியது இத்தகைய நம்பிக்கையே; ஒருவன் அறிவின் கர்வத்தையெல்லாம் உதிர்த்து விட்டு, பகவானது திருவுள்ளப்படியே ஆகுக என்று முற்றும் சரண்புகும் போது மட்டும் அத்தகைய நம்பிக்கை உண்டாகின்றது."

அவ்வாறாயின், அரசியல் சம்பந்தமாகவும் ஸமூக வாழ்க்கை சம்பந்தமாகவும் எழும் உலகக் குழப்பங்களை யெல்லாம் தீர்க்க முயலும் மனிதர்களைப் பற்றி என்ன சொல்வது? ஞான வாழ்க்கைக் குறிய அடிப்படைக் கொள்கைகளைப் பயன் படுத்தாமல் அவர்கள் அக்குழப்பங்களைச் சரியாகத் தீர்க்க முடியாது; 'சரியாக' என்று சொல்வதைக் கவனிக்க வேண்டும். மனிதனுடைய வழிகள் பிழை நிறைந்தவை; நிலையாக நிற்பதில்லை; பன்முறையும் மனிதனது விதி சம்பந்தமாகச் சில சோதனைகள் செய்வதாகவே முடியும். பகவானது புத்திமதியைக் கேளாமல், கோடிக் கணக்கான மக்களின் விதியை நாம் எப்படி ஒழுங்கு படுத்த முயலுவதற்குத் துணியலாம்? பிளேட்டோ என்னும் பெரியார் "மெய்ஞ்ஞானியொருவர்தான் உண்மையான அரசராக இருக்கும் தகுதியுடையவராவார்" என்று கூறிய தன் காரணம் இப்போது முழுதும் உங்கட்கு விளங்குகின்றதா? 'திருவுடை மன்னரைக் காணில் தெய்வத்தைக் கண்டேனே யென்றும்' என்பர் ஆன்றோர். பொன்னுடையுடுத்து, மணிகள் மின்னும் ஆபரணங்களைப் பூண்டு சிம்மாசனம் ஏறுபவர் மன்னரல்லர்; இறைவனால் அப்பதவிக்கு நியமிக்கப்பட்டவரே மன்னர்; பகவானது சங்கற்பத்திற்கும் கொள்கைகட்கும் இணங்காத எக்காரியத்தையும் அரசன் செய்யக்கூடாதவன். நமது பாரத நாட்டு அரசர்க்குள் முதன்மையானவர் முதலில் ரிஷிகளது புத்திமதியை நாடாமல் ஒன்றையும் செய்தவரல்லர்.

இன்று நமக்குள்ள பெரிய சங்கடமெல்லாம் இது ஒன்றுதான்:— சந்தேகமும் குழப்பமும் ஒழியும்படி நமது வாழ்க்கைக்குள் ஞானக்கொள்கைகளைப் புகுத்தும் வழி யாது? நீங்கள் இதைக் கேட்டதும், "நான் உலகத்தில் வாழ்கிறேன், நான் என்ன செய்ய முடியும்? நான் ஒரு துறவியா?" என்று சொல்லலாம். ஆனால்

நமது அற்பமான வழிகளையெல்லாம் விட்டுவிட்டுப் பகவானைப் பின்பற்றும் வழியிற் செல்ல நமக்கு இயலும். ஞான வாழ்க்கையின் அடிப்படைக் கொள்கைகள் நமது வாழ்க்கையிலும் புகுந்து வேலை செய்யும்படி நாம் முயற்சிக்கலாம். அக் கொள்கைகள் எவை? முதலாவது, காலையில் உடலை நீராட்டிப் புதுப்பிப்பதுபோல நீங்கள் உங்கள் மனதையும் பிரார்த்தனையாலும் வலிமை மிக்க ஞானக் கருத்துக்களாலும் நீராட்டிப் புதுப்பித்துக் கொள்ளல் வேண்டும். நாள் முழுவதையும் பகவானுக்கே சமர்ப்பியுங்கள். பகவானது திருவுள்ளத்துக்கு ஒத்து உங்களது அன்றாட வாழ்க்கையை இவ்வாறு தொடங்கலாம். அப்போது சண்டை சச்சரவு குறையும்; நமது உடலில் அடக்கமின்மையால் ஏற்படும் அசைவுகளினால் விளையும் ஆபத்துக்களும் உடைதலும் குறையும்; உங்களது வாழ்க்கை முழுவதும் ஒழுங்காய் அமைதலினால் ஒழுங்கற்ற ஒரு செயலையும் நீங்கள் செய்ய மாட்டீர்கள்.

மீண்டும் உங்கட்கு ஒன்று கூறுகிறேன். ஒருமுறை முயன்றதும் வெற்றி பெற முடியாது. நாம் நம்மைத் தயாராக்கிக் கொள்ளல் வேண்டும். தோல்வியடைய மாட்டீர்கள் என்றும் எண்ணாதீர்கள். இக் கொள்கைகள் உங்களது வாழ்க்கையில் நன்கு பதிந்து வழக்கங்களாக மாறிச் சக்திபெறும் வரைக்கும் தோல்வி வந்தே தீரும். பலவீனமும் சந்தேகமும் சோர்வும் வந்தடையும் வேளைகளில் அவைகட்குத் தாழாது நிற்கும் பலம் வேண்டும் என்று சிறப்பாகப் பிரார்த்தனை செய்க. தப்பான வழிகளில் நினைக்கும் பழக்கங்களை ஏற்படுத்தப் பல ஆண்டுகள் உங்கட்கு வேண்டியிருந்தது; அவைகளைப் போக்குதற்கும் காலம் வேண்டுமன்றோ? ஆனால் முயன்று கொண்டே இருங்கள்! பிரார்த்தனையை மேலும் மேலும் செய்துகொண்டே போவதனால் உங்களைத் தயாராக்கிக்கொள்ள ஒரு நாளும் தவறாதீர்கள்.

உங்களது பிழைகளும் தோல்விகளும் உங்களது முயற்சிகளைத் தடுத்துவிடுதற்கு இடங்கொடாதீர்கள். பணிவு என்னும் பாடத்தை அவை உங்கட்கு மிக ஆச்சரியமாகப் போதிக்கும். நமது சக்தி நமக்குப் போதாது என்பதையும், நமக்குத் துணை செய்யத் தெய்வீக சக்தி நமக்கு அவசியம் என்பதையும் அவை எடுத்துக் காட்டுகின்றன. நமது முயற்சி குன்றாதிருக்குமாயின், நமது பிரார்த்தனைகள் வர வர அதிக சக்திவாய்ந்தவைகளாயும், அதிக ஆழமுடையனவாயும், நம்மைச் சுற்றி ஒரு பாதுகாப்புக் கவசம் போன்று மென்மேலும் காப்பனவாயும் அமையும். ஆதலின் ஞானவாழ்க்கை நம்மிடம் புதிதாகத் தொடங்கட்டும். "என்னைச் சுற்றியுள்ளவர் யாது நினைக்கினும் செய்யினும், அதைப் பொருட்படுத்தாது நான் ஞானவழ்வு வாழப்போகிறேன்" என்று உங்கட்குள்ளே சொல்லிக் கொள்ளுங்கள். உங்களது துணைவர்கள் தவறான வழியில் செல்வார்களாயின், அவர்கட்காகப் பிரார்த்தியுங்கள்.

இது வழி; இது ஒன்றே வழியாகும்; வேறு வழி இல்லை. இதைச் சோதித்துப் பார்க்கும்படி உங்களை வேண்டுகிறேன். உங்களது சோதனையை ஆரம்பிக்கும் போது, நான் சொல்லப்போவதை மட்டும் ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் —அதாவது, கடுமை பயனளியாது, குறை கூறுதல் பயனளியாது, பகைமை பயனளியாது, கோபம் பயனளியாது, அச்சம் பயனளியாது, சந்தேகமும் கவலையும் பயனளியா. இவைகள் ஒவ்வொன்றும் நமது நெறியில் தடையாகி நிற்பனவாகும். கேட்டின் சக்திகள் எவ்வளவோ மிகுந்திருப்ப

தாயும் வெற்றி பெறுவனவாயும் தோன்றினும், அவை உண்மையுமல்ல நிலையானவையுமல்ல என்பதை உள்ளூர அறிந்துகொள்ளுங்கள். ஞான வாழ்க்கை நெறியொன்றே நிலையாயிருப்பதாகும். அந்த நெறியில் நடக்கும்போது, ஒருவரேனும் "புத்தி சாதுர்யம் என்னிடத்து இல்லையே; நான் அறிவு மிருந்தவன் அல்லேனே, என்னிடம் உலகத்தாரது மதிப்பிற்குரிய குணங்கள் ஒன்றும் இல்லையே" என்று மனவருத்தப்பட வேண்டாம்; ஏனெனில், இந்நெறியில் ஒருவனுக்கு வேண்டுவன வெல்லாம், எளிமையும், சிரத்தையும், தாழ்மையும், முக்தியிற் பேரவாவுமே. ஒருக்கால், உலகத்தாரால் எதிர்க்க முடியாத படைத்துணையெனக் கருதப்படுவது யாதொன்றும் உன்னிடம் இல்லாமையே, உனது ஞான வாழ்க்கைக்கு ஏற்ற வசதியை அளிக்கலாம். நீ பெரிதும் தனியா யிருப்பதாகவே உனக்குத் தோன்றும்; ஏனெனில் இம்மாதிரியான நெறிகளிற் செல்லுவார் பலரல்லர். ஆனால், ஒன்றை மட்டும் எப்போதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் அதிகத் தனிமையாக இருக்கும் போதுதான், நீங்கள் பகவானோடு நெருங்கி இருப்பீர்கள். அப்போதுதான் பரம்பொருளின் விசாலமான அன்பிற்கு அருகே வாழ்வீர்கள்.

உயர்ந்த மலையிலேறித் தூய காற்றை உறிஞ்சியதும் நாம் புதுப்பிக்கப் படுதல் போல, உலக நினைவுகளை விட்டு ஞான உலகிற்கு நம்மை உயர்த்தும் போதும், நாம் புத்துயிரையும் புதிய வலிமையையும் பெறுகிறோம்; வாழ்க்கையைப் பூரணமாகவும் ஒழுங்காகவும் நடத்தும் தகுதியைப் பெறுகிறோம். அன்பு ஒன்றே பரபரப்பிலும் பயத்திலும் துயரத்திலும் மூழ்கியுள்ள உலகத்தாரைக் குணமடையச் செய்யும். அன்பும் சாந்தியும் அனைத்துயிர்க்கும் பரவுக!

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

மகான்களது வாழ்க்கைக்கும் மற்றவரது வாழ்க்கைக்கும் பெரும் வித்தியாசம் உண்டு. மகான்களது வாழ்க்கையில் ஒரு சிறு செய்கையும் கூட ஆழ்ந்த கருத்தைக்கொண்டதாயுள்ளது. இத்தகைய சிறு செய்கைகளின் மூலமே அவர்களுடைய உண்மைப் பெருமையைப் பிறர் அறிந்துகொள்ள வழி ஏற்படுகிறது. மகான்களது உள்ளத்தை அறிவதற்குப் பிறருக்கு வேறு வழி எதுமே இல்லை என்று கூறலாம். மன்னனொருவன் தன்னைத் தானே வெளிக்காட்டினாலன்றி மக்கள் அவனைக் காண்பது துர்லபமாகுமல்லவா? அதைப்போலவே பெரியாருடைய பெருமை அவரது பேச்சின் மூலமும் செய்கைகளின் மூலமும் வெளியாகிறது. ஏசுகிறிஸ்துவை அவர் நாட்டு மக்கள் சொல்லொணாத் துயருக் குட்படுத்தி அவரைச் சிலுவையில் அறைந்த பொழுது அவர் வாயினின்றும் புறப்பட்ட சிறு வாக்கியம் இப்பொழுது உலகப் பிரசித்தமாய் விட்டது. "ஐயனே! இவர்களை மன்னியுங்கள். தாம் செய்வது என்ன வென்பதை இவர்கள் அறிகின்றனரில்லை!" என்று ஏசுநாதர் ஈசனைப் பிரார்த்தித்தார். என்ன தன்னலமறுப்பு! என்ன தியாகபுத்தி! என்ன உண்மையான அன்பு! இச்சிறு வாக்கியத்தில் அவரது பெருமை முழுவதும் அடங்கிக் கிடக்கிறது. மரத்தின் பெருமை முழுவதும்

சிறு கனியில் அடங்கிக் கிடப்பதைப் போலாகும் இது.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வாழ்வில் இம்மாதிரியான சிறு சம்பவம் ஒன்று மகத்தான உட்கருத்தைக் கொண்டதாய் விளங்குகிறது.

தக்ஷிணேசுவரத்தில் காளி கோயிலைக் கட்டிய இராணி ராசமணியாரும் அவரது மருமகரான மதுர நாதரும் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் விசேஷப் பற்றுடையவர்கள். மதுர நாதர் பரமஹம்ஸரிட மிருந்து பெற்ற பேறு விவரிக்க முடியாத மகிமை வாய்ந்தது. இருவருக்குமிடையே இருந்த தொடர்பும் ஆழ்ந்த தன்மையதாயிருந்தது. ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பரவச நிலையை யடைந்தவராய் மதுரரை நோக்கி, "நீர் உயிருடனிருக்கும் வரையில் நான் இவ்விடம் இருப்பேன்" என்றார். ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணரது பேரருள் தனக்குக் கிடைத்ததைப்போலவே தனது மகனை துவாரகா நாதனுக்கும் கிடைக்க விரும்பிய மதுர நாதர் "ஐயனே! ஏன் அவ்வாறு கூறுகிறீர்? துவாரகனும் உம்மைப் போற்றுகிறானே!" என்று சொன்னார். "ஆனால் சரி! துவாரகன் உயிருடனிருக்கும் வரையில் நான் தக்ஷிணேசுவரத்தில் வசிப்பேனாக" என்று கூறினார் பரமஹம்ஸர். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய எந்தச் சொல்லும் பொய்த்தது கிடையாது. துவாரக நாதர் இறந்தபிறகே அவர் தக்ஷிணேசுவரத்தை விட்டகன்றார்.

ஆனால் அவர் தக்ஷிணேசுவரத்தை விட்டகலுவதற்கு முன் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. ஸ்ரீராமகிருஷ்ணருடைய உறவினரான ஹிருதயர் என்பவர் அவருக்குப் பேருதவி செய்தவர். ஆனாலும் ஸ்ரீராமகிருஷ்ணரது உண்மைப் பெருமையைப் பல சமயங்களில் ஹிருதயர் அறியாது நடந்து கொண்டார். ஆனாலும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவர்மீது வைத்த பேரன்பை மாற்றினாரில்லை.

ஒருநாள் மதுரநாதருடைய புத்திரருள் ஒருவரான திரைலோக்ய நாதர் என்பவருக்குத் தீவிரமான அச்சத்தைத் தரும் முறையில் ஹிருதயர் நடந்து கொண்டார். அவருடைய இளம் புத்திரியைத் தாந்திரிக முறைப்படி ஹிருதயர் பூசை செய்துவிட்டார். இதனால் பெண்ணுக்குத் தீங்குநேரிடும் என்று பயந்த திரைலோக்யநாதர், ஹிருதயர் உடனே கோயிலைவிட்டு நீங்கவேண்டுமென்று உத்திரவிட்டார். ஹிருதயர் பரமஹம்ஸதேவரிடம் நடந்ததைக் கூறவும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் "நீ ஏன் அவ்வாறு செய்தாய்? இப்பொழுது என்ன செய்வது?" என்று வினவினர். ஹிருதயரோ, "அதைப் பற்றி உமக்கென்ன கவலை? நீரும் என்னுடன் வந்துவிடும். இனி நீரும் இங்கு தங்குதல் கூடாது. என்றாவது ஒருநாள் உம்மையும் இப்படியே அவமானப்படுத்துவர்" என்றார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் "நான் ஏன் இவ்விடத்தை விட்டகல வேண்டும்? நான் வரவில்லை" என்று கூறிவிட்டார்.

ஹிருதயர், மட்டும் வெளியேறினர். கொஞ்சநேரத்திற்குப் பிறகு வேறு ஒருவர் அங்குவந்து ஸ்ரீராமகிருஷ்ணரும் அவ்விடத்தை விட்டுச்செல்ல வேண்டும் என்று தெரிவித்தார். பதிலேதும் கூறாமல் ஸ்ரீராமகிருஷ்ணர் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டு விட்டார். இவர் புறப்படுவதைத் தூரத்திலிருந்து கண்ட திரைலோக்யர் விரைந்தோடி வந்து "ஐயனே! நீங்கள் எங்கு செல்லுகின்றீர்கள்?" எனக் கேட்டார். "தோட்டத்தைவிட்டுச் செல்லுமாறு நீர் ஆக்ஞையிட வில்லையோ"? என்று வினவினர் ஸ்ரீராமகிருஷ்ணர். திரைலோக்யர் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பெரிதும் வேண்டி அவரைத் திரும்பி வருமாறு செய்தார். ஸ்ரீராம

கிருஷ்ணர் வெகு அமைதியாகத் திரும்பித் தம் அறைக்கு வந்து சேர்ந்தார்.

ஏதோ ஒரு காளி கோயிலில் 19-ம் நூற்றாண்டில் ஏதோ ஒரு நாள் நடந்த சிறு சம்பவம்தான் இது. ஆனால் இது எவ்வளவு பெரும் படிப்பினையைக் கொண்டுள்ளது!

பகவத்கீதையில் முற்றுணர்ந்த முனிவரது குணங்களைக் கூறுமிடத்து சமத்துவ புத்தி அக்குணங்களில் முக்கியமானதாகக் கூறப்படுகிறது. அதாவது, சுபம், அசுபம், சுகம், துக்கம் இவை ஏற்படுமிடத்து முனிவன் தன் அமைதியை இழப்பதில்லை. விருப்பு வெறுப்பின்றி அவன் எதுவரினும் அதை ஏற்கிறான். அவனுக்குப் பற்றென்பது கிடையாது. இந்த இலக்ஷியத்தையே மேற்கூறியசம்பவம்நிரூபிக்கிறது.

சாதாரண மனிதனொருவனுக்கு இதே நிலைமை ஏற்பட்டிருந்தால் திரைலோக்யநாதருடைய பாடு எவ்வளவு திண்டாட்டமாகப் போயிருக்கும்! "உன் தந்தை என்னை எவ்வளவு மரியாதையாக வைத்திருந்தார்! நீ இவ்வாறு செய்வது நியாயமா, தர்மமா?" என்றெல்லாம் பேச்சுக் கிளம்பியிருக்கும்! திரைலோக்யநாதர் திரும்பி வருமாறு அழைத்தபொழுது சுலபத்தில் திரும்பி வந்திருப்பானா அவன்!

தாம் நீண்டகாலம் வசித்து வந்த இடத்தை க்ஷணநேரத்தில் விட்டுச்செல்ல இணங்கிய ஸ்ரீராமகிருஷ்ணரது பற்றின்மை வியத்தற்பாலதே யாகும்.

தம் உபதேசங்களுக்குச் சிறந்த நிதரிசனமாகத் தாமே விளங்குகின்றனர் அவதார புருஷர்கள். மனமும் வாக்கும் அவர்களிடத்தில் வேற்றுமைப்படா. அவர்களது சொல்லும் செயலும் ஒன்றித்து நிற்கும்.

---

# ஆரம்ப சாதகனது ஒழுக்க வாழ்வு

(ஸ்ரீ எதிஸ்வரானந்த சுவாமிகள்)

க

**மக்கள்**மீது கொள்ளும் அளவு கடந்த இரக்ககுணம், சில நேரங்களில் ஆத்மீய வாழ்க்கையின் வளர்ச்சி மேலோங்கவொட்டாமல் தடுக்கும் முட்டுக்கட்டைபோல் அமைகின்றது. இரக்கமற்ற வன்னெஞ்சம் வேண்டும் என்பது பொருளல்ல. மனம் பரிசுத்தப்பட்டு பரிசுத்தமான வகையில் மனமிளக வேண்டும் என்பதே பொருளாகும். 'இறைவனை நீர் வணங்க வேண்டுமானால் முதலில் நீர் இறைவனாக உம்மை அமைத்துக் கொள்வீர்.' அதாவது சுத்த சொரூபனை வணங்கவேண்டுமெனில் முதலில் மனிதன் தன்னைச் சுத்தப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதே யாகும்.

தியானம் செய்ய ஆரம்பிப்பதற்குமுன் சில குறிப்பிட்ட கருத்துக்களை வரையறுத்துக் கொள்ளவேண்டும். அதன் பின்னரே அக்கருத்துக்களைச் சிந்தித்து தியானத்தில் அமருவதற்குப் பலருக்கு ஏற்ற மார்க்கமாகும். இன்றேல் இடையில் மனக் குழப்பம் ஏற்பட்டு சுவையற்ற பலனற்ற தியானமாக முடிவுறும்.

ஸ்தூல சரீரம், சூக்கும சரீரம், காரண சரீரம் இவைகளுக்கு முற்றும் புறம்பானவன் என்று தன்னைப் பாவித்துக் கொள்வதும் அப்பாவனை மயமாகத் தன்னை ஆக்கிக் கொள்வதுமே சாதன வாழ்க்கையாகும்.

'இந்த என் சரீரம் பரிசுத்தமாவதாக; என் மனம் தூய்மையுறுவதாக; என்

உயிர் பவித்திரப் படுவதாக. அழுக்கு ஆபாசங்கள் அகலப்பெற்ற ஆத்மா நானுவேன்' என்பது ஆதிகால முனி புங்கவரது ஓர் அழகிய பிரார்த்தனை யாகும்.

இயல்பில் நாம் பரிசுத்தர்கள் என்று எண்ணுவதும், பாபம், அழுக்கு, குறைவு, மெலிவு இவ்வித எண்ணங்கள் நம்மை அண்டாது இருக்கும்படிச் செய்வதுமே நாம் தூய்மை யடைவதற்குச் சிறந்த மார்க்கங்களாகும். அல்ல, எண்ணுவது மாத்திரமல்ல; உண்மையில் நாம் தூய்மை யாளரே. ஆனால் நாம் நம் களங்கமற்ற உண்மை இயல்பினை மறந்துவிட்டோம். அதனால்தான் முடிவில்லாத அல்லல்கள் பட்டு அவஸ்தைப்படுகின்றோம்.

நாம் நம் உண்மைத் தூய்மை இயல் பினை அறியப்பெற்ற அந்த நேரமே, பாபம், அசுத்தம், குறை இவை யனைத்தும் ஓடி மறையும் கனவுகளாக நமக்குத் தோன் றும்.

உண்மையில் இப்பரிசுத்தத் தன்மை அநாதிகாலமாக நமதாகவும், நாமே அது வாகவுமிருப்பதனால் அது நம்முள் ளிருந்தே பொங்கி யெழுந்து வெளிவரு கின்றது. பரிசுத்தம் நமக்கு வெளியி லிருந்து வருவது கிடையாது. அது நம் மிடம் சேர்க்கப்படுவதும் அல்ல; நம்மிடம் புதிதாக சிருஷ்டிக்கப்படுவது மன்று. பரி சுத்தம் நம்முள்ளிருந்து வளருவதே ஆத் மீய வாழ்க்கையின் வளர்ச்சி என்னலாம். வளருவது என்னும் பதமும் அவ்வளவு பொருத்தமான தன்று; மூடப்பட்டுள்ள பரிசுத்தத் தன்மையின் போர்வையை அகற்றி வெளித்தோன்றச் செய்வது என்று கூறுவது பொருத்தமானதாகும். ஏன் எனில் நாம் பரிசுத்த இயல்பினர்க ளல்ல வென்றால் நம்மால் ஒருக்காலும் பரிசுத்தமாக முடியாது; என்றும் நாம் கதிமோக்ஷமின்றிக் கஷ்டப்பட நேரிடும்.

உமது உள்ளத்தினுள்ளே மாறுதலை ஏற்படுத்திக் கொள்ள முயல்வீர்; உள்ளத் தின் மாறுதல் சரீர மூலமாக வெளித் தோன்றும். நமது முழு இயல்பும் தூய்மையுறல் வேண்டும். வெளியே மாத் திரம் வெள்ளை பூசிவிடவேண்டாம். அடிப்படையான உள்ளச் சுவரும் வெள் ளைக்கற்களால் அமைக்கப்பட வேண் டும். இடைவிடாது தினமும் தீவிர மாகத் தியானம் புரிவீர்; ஒருநாளும் தவறுதீர். இவ்வித அநுஷ்டானம், குறைவுபட்ட, அசுத்த, பொய்த் தன் மையி லிருந்து உம்மை மேலே உயர்த் தும். பொய்த் தன்மையால்தான் அற்ப ஆபாச அழுக்கு எண்ணங்கள் உம்மிடம் எழுகின்றன. உண்மையில் உமது இயல்பு களங்க முற்றது எனின் உம்மால் என்றும் களங்கமற்ற தன்மையினை எய்த இயலாதுபோம். உங்கள் எவருக்கும் இறைவனை அடைய இயலாது போய் விடும். நல்லெண்ணங்கள், நல்வார்த்தை கள், நற்காரியங்களாகிய இவைகள் நம் பரிசுத்தத் தன்மையை எய்த மிகவும் பயன்படும். இவைமாத்திரம் உம்மை உயர்த்திவிடா; பொய்த்தன்மையை அகற் றிய உண்மைத் தன்மைகளுடன், இடை விடாத அநுஷ்டானமும் அவசியம் வேண் டும். அப்போதே ஆத்மீய வாழ்க்கை கைகூடப் பெறுவோம்.

உ

மந்திரங்கள் பகவானது சரீரங்கள் போல் உள்ளன. அவைகள் நம்மை இறைவனது அருகில் கொண்டு சேர்க்கின் றன. குறிபார்த்து அம்பை எய்வீர். குறி யின் இலக்கில் அம்பு தைத்துக்கொள்ளட் டும். உறுதியான, சாந்தமான அம்பு எய் வீர். முள்ளம்புபோல் இம்மன அன்பு இலக்கினுடன் சேர்ந்து ஒன்றுபட்டுவிடட் டும். பொதுப்பட நமக்கு எந்த இலக்

கும் கிடையாது. எனவே நமது முயற்சி யனைத்தும் பயனற்றுப் பாழ்பட்டுப் போகின்றன. நாம் நம் உண்மை இலக்கை அன்பெனும் அம்புகொண்டு தாக்குகிற வரையில் நாம் திருப்தி அடைதல் கூடாது.

உமது சாதன அநுஷ்டானங்களைப் பற்றியும், நீர் ஜபிக்கும் மந்திரத்தையும் எப்போதும் எவருக்கும் இயம்பவேண்டாம். உம்மை அநுஷ்டிக்கும்படி உபதேசிக்கப்பட்ட அநுஷ்டானங்களைப் பற்றிப் பிறர்க்கு ஒருபோதும் வெளியாக்கித் திரியவேண்டாம்.

அளவுக்கு மிஞ்சிய இளகிய தன்மை, அளவுக்கு மிஞ்சி இரக்கம் காட்டல், அளவுக்கு மிஞ்சிய சாமர்த்தியம் இவையனைத்தும் பெரும் ஆபத்து விளைவிப்பன. முக்கியமாக களங்கமற்ற வழுவாத பிரம்மசர்ய வாழ்க்கையை விரும்பும் சாதகர்கள் இவ்விஷயங்களில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். சரீரத்தை இளைக்கச்செய்வது நல்லதே என்றாலும் அது வாழ்க்கையின் அடிவாரத்துக்குச் சென்று நம்மியல்பினை மாற்ற உதவாது. மனத்தில் காம எண்ணங்கள் எழும்போது வெகு சாக்கிரதையாக உம்மைக் காத்துக் கொள்வீர். அக்காலங்களில் சிறிது குறைவாகவே உணவருந்துவீர். இவ்வித விதிகள் முழு கவனத்துடன் அநுஷ்டிக்கப் படல் வேண்டும். வெளித் தோற்றத்துக்குச் சிறிது கடின சுபாவ முடையவராகக் காண்பித்துக்கொள்வது நலமாகும். உள்ளத்தின் எழுச்சிக்கு ஆளாகிவிடாமல் கம்பீரமும் அடக்கமும் உடையவராக இருப்பது உத்தமம். சாதகர் ஒவ்வொருவரும் பிற பாலருடன் பழகும்போது சிறிது விலகியும் கம்பீரமான தன்மையுடனுமே இருத்தல் வேண்டும். எள்ளி நகைத்து விளையாடுவது ஒருபோதும் கூடாது. அப்போதுதான் மற்ற பாலார் எந்த தீய குணத்துடனும், தீய எண்ணத்துடனும் சாதகனை அணுகமாட்டார். சாதகர் மற்ற பாலார் முன்பு தமது வீரப் பிரதாபங்களையும் பெருமையினையும் காட்டுதல் கூடாது. சற்று விலகி, அடக்கமும் மரியாதையுடனும் அவர்களுடன் நடந்து கொள்ள வேண்டும். யோக்கியமும் பெருந்தன்மையும் பொருந்திய ஆண்களாகவும் பெண்களாகவும் நடந்துகொள்வோம். ஆத்மீய வாழ்க்கையில் வீரப் பிரதாபங்களுக்குச் சிறிதும் இடமே இல்லை. அமைதியும் சாந்தமும் சாதகனிடம் காணப்பட வேண்டிய அருங்குணங்களாவன. வீரப் பிரதாபங்கள் பொதுவாக காம எண்ணங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கக் காண்போம். இவ்வீரப் பிரதாபங்கள், பெண்ணாசையை உள்ளத்தில் கொண்டிருப்பவனுக்குப் போர்வையாக இருப்பதைப் பல சந்தர்ப்பங்களில் நாம் கண்டிருக்கிறோம். இவ்வித காம எண்ணத்தை அடிப்படையாக வைத்துப் பெறும் வெறும் புகழினைக் காட்டிலும் 'இவன் என்ன! கன்னெஞ்சம் படைத்தவன்! என்ன முரட்டுத் தன்மை வாய்ந்தவன்!' என்று மற்றய பாலார் ஏளனம் செய்யும்படி நடப்பது எத்தனையோ மடங்கு மேலானதாகும். இது விஷயமாக எவர் என்ன சொல்லுகிறார்கள் என்பதனை சிறிதும் செவி கொடுத்துக் கேட்காதீர்! முதலில் காம இச்சைகளிலிருந்து உம்மைப் பூரணமாக விடுவித்துக் கொள்வீராக. அதன் பிறகு வேண்டும் எனின் ஏனையோருக்கு நீர் அதன் பலனை எடுத்துச் சொல்லலாம். காம எண்ணங்களும் ஆசைகளும் உள்ளத்திலிருந்து அறவே அகலும் பரியந்தம் ஒருவன் பிறபாலாரை எட்டியிருந்து நமஸ்கரித்துச் செல்லுதலே சாலச் சிறந்தது.

௩

உமது உள்ளம் என்றும் உமது இலக்ஷியத்திலிருந்து விலகாமலிருக்கின்றதா

என்பதனைக் கவனித்துக் கொள்வீர். உமது எண்ணத்தின் போக்கையும் சிறிது கவனத்துடன் காவல் புரிந்து வருவீர். வழக்கத்துக்கு அதிகமான தியானத்தின் மூலமும், மன ஒருமைப் பாட்டாலும் தீய எண்ணங்கள் உமது உள்ளத்தில் உருக்கொள்ளாதபடி தடுத்து விடுவீராக. இம்முறைகள், நீர் நல்வழியில் நடப்பதற் குப் பெரிதும் பயன்படும். உமது உணவு விஷயத்திலும் சிறிது கவனம் செலுத் துவீராக.

மனைவியுடன் வாழுபவர் உள்ளத்தில் காம எண்ணங்கள் எழுமாயின் அவை திருப்தி செய்விக்கப் படுகின்றன; ஆனால் பிரம்மசர்ய விரத மிருப்பவனுக்கு அவ் வித எண்ணம் எழுமானால் அவன் மனத் துடன் பெரிதும் போராட வேண்டியிருக் கிறது. சாதன காலங்களின் சிற்சில நேரங் களில் அத்தகைய சாதகன் பெரிய ஆபத் தான எண்ணங்களை எதிர்த்து நிற்கவேண் டிய நிலையிலிருக்கின்றான். முதலில் பிரம்ம சர்ய விரதம் பூண்டவன் காம எண்ணங் களை அடக்கி, அதன் பிறகு தெய்விகமாக அதனை உருமாற்ற வேண்டும். ஆகவே சாதகர் இவ்விஷயத்தில் என்றும் விழித் திருக்க வேண்டுவது அவசிய மாகின் றது. சரீரம் மனம் ஆகிய இரண்டு விஷ யத்திலும் பரிபூரண பிரம்மசரியம் வேண் டுவதவசியம். பிரம்மசர்ய வாழ்க்கையி லிருந்து சிறிது வழுவினாலும் சமய வாழ்க்கைக்கும் நமக்கும் தொடர்பில்லா மல் வெகு தூரத்தில் நம்மை வைத்து விடும்.

உடலுக்கு சுகந்தரும் பயிற்சிகள் பல செய்வது உசிதமாகும். சிலர் கருதுகிற படி உடலை வதைப்பதும் சில நேரங்களில் நன்மை பயக்குகின்றது. என்றாலும் இம்முறைகள் சரீரத்தை ஓரளவு உரு மாற்றப் பயன்படுவனவே யல்லாது தீய எண்ணங்கள் எழுவதற்கு அஸ்திவாரமா யிருக்கும் உள்ளத்தை மாற்றி யமைக்க உதவாது.

ஒருவனுக்கு தேக அபிமானம் இருக் கும் வரையில் காம எண்ணங்களும் உடன் இருந்தே தீரும். எவ்வளவு நாம் தேகத்தை மறக்கிறோமோ, எவ்வளவு நாம் தேகம், ஆண் பெண் என்ற பேத புத்தியைக் கடந்து செல்லுகின்றோமோ அவ்வளவுக்கு காம எண்ணங்களும் நம்மைவிட்டு அகலும். எனவே உமது உள்ளம் தேக புத்தியைக் கடந்து செல் லும்படி அதனை மேலே உயர்த்துவீர். நீர் உண்மையில் தேகமல்ல என்னும் தீர்மான எண்ணம் சதா உமது உள்ளத்தில் தங்கு தடையின்றி ஓடிக்கொண் டிருக்கட்டும். இதுவே காம எண்ணங்களை அகற்று வதற்கு ஏற்ற மார்க்கமாகும்.

௪

சிலர் சாதன காலங்களில் வெகு தீவிர மாக எதிர்த்துப் போராடுகின்றார்கள். எவ்வளவுக்கு அவர்கள் இந்த ஆபாச எண்ணங்களை அகற்ற முயற்சிக்கிறார் களோ அவ்வளவுக்கு வெளி விஷயங்கள் யாதானும் ஒன்று அவ்வெண்ணங்களைக் கிளப்பிப் பலங்கொண்டெழச் செய்கின் றது. எனவே அவர்கள்போராட்டம் தீவிர மாகி விடுகின்றது. ஆகையினால்தான் நீர் நெருங்கிப் பழகும் உமது சிநேகிதர் விஷ யத்தில் கருத்தோடிருக்கும்படி நான் உமக்கு வற்புறுத்திக் கூறுவதன் காரண மாகும். ஒழுக்கயீனமுள்ள எவருடனும் நீர் உறவாடவேண்டாம்; இந்திரிய நிக் கிரகம் எய்தாதவருடன் என்றும் சகவாசம் கொள்ளாதீர். உண்மையில் நீர் சாதன வாழ்க்கையில் முன்னேற விரும்பினால், இத்தகையோர் மிக மிக ஆபத்தான வர்கள் என்பதனை மறவாதீர்.

“ தைரியம் மிகுத்த செயிராறு துறவி !
காமம் புகழ் பொருள் தாழுள இடத்து
வாய்மை எந்நாளும் வரமாட்டாது.

**மாதரை மனைவியாய் மதிப்பவன் எவனும்**
**பூரணத்துவம் உறக் காரணமே இலை.**
**தினை அளவேனும் தனதெனக் கோள்வோன்,**
**சினமேனும் வாயிலிற் சிக்குவோன், இவர்கள்**
**மாயை என்னும் வாயில் கடவார்.**
**ஆதலின் இவற்றை அற வொழிந்திடுக.**
**ஒதுக நீ " ஓம் தத்ஸத் ஓம் ! " என "**

என்று ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் கூறியருளிய வீரமொழிகளைச் சாதகர்கள் ஊன்றிக் கவனிப்பாராக.

சுதந்தரம், தைரியம் என்னும் பெயரால் தங்கள் இச்சைகளுக்குப் பூரண அநுமதியளிக்கும் மக்கள் நாளடைவில் அல்லல்பட்டுழல்வர் என்பது நிச்சயம். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு சஹதர்மிணியான ஸ்ரீ சாரதாமணி தேவியார் ஒருமுறை வழிதடுமாறிய உயர்ந்த சாதகர் ஒருவரைப் பார்த்து, "என் குழந்தாய், முதலில் பெண்ணைத் தவிர்த்து ஏனைய எல்லா ஆசைகளையும் ஒருவன் அநுபவித்து வருவானானால் பெண்ணாசையையும் அவனால் வெகுகாலம் எதிர்த்து நிற்கமுடியாது. மாயையின் இந்த விளையாட்டில் அவன் சிக்குறுவது நிச்சயம்" என்று கூறியருளினார்.

ரு

யாவற்றையும் இறைவனது தோற்றமாகக் காணாமல், தோற்ற உலகத்தை உண்மையெனக் கருதுபவன், இத்தோற்ற உலகில் காணப்படும் வேறுபாடுகளையும் வேறுபாடாகவே, கருதி புத்திசாலித்தனமாக நடந்துகொள்ள வேண்டும். அதாவது யாவும் பிரம்மமயம் என்ற ஞானமுடையவனுக்கு ஆண்பெண் என்ற பேத புத்தியே இல்லை. சகலரும், சகலமும் அவனுக்கு இறைவனே. இவ்வறிவில்லாதவர்க்கு உலகம் உண்மையாகத் தோன்றுகின்றது. உண்மையாகத் தோற்றமளிக்கும் உலகத்தில் காணப்படும் ஆண்பெண் என்ற வேறுபாடு இருப்பதும் வாஸ்தவமே. ஆகையால் இப் பேத புத்தியுடையவர்கள் பெரிய ஞானிகள்போல் பாகுபாடு பார்க்காமல் நடப்பது கூடாது. ஞானியின் உலகில் யாவும் ஒன்றே. ஆனால் வியாவகார உலகில் மூடனுக்கும் புத்திமானுக்கும் வித்தியாசம் இருக்கிறது; நல்லவனுக்கும் தீயவனுக்கும் வித்தியாசம் உளது; ஞான சாதகனுக்கும் உலக இச்சையுடையவனுக்கும் வேறுபாடு இருக்கின்றது.

ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் கூறுவது போன்று யாவும் ஒரே பொருளினால் ஆக்கப்பட்டவை யெனினும் மண்ணெலி மண் யானைக்குச் சரிசமானமாகி விடாது. வியாவகார உலகில் சமத்துவத்துக்கு இடமேயில்லை. அதனால்தான் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் " எங்கு மரியாதை காண்பிக்க வேண்டுமோ அவ்விடத்திலே மரியாதை காண்பிப்பாயாக" என்று விளம்பி யருளினார். வியாவகார உலகத்தில் தாரதம்யம் காணாதவர்கள் கடவுளைக் கடிதினில் எய்த முடியாது. சர்வமும் பிரம்மமயமாகக் காணும் உயர்ந்த ஞானிக்கே பயமில்லை. ஏனைய எல்லோரும் கோழைகளேயாவர்; சுதந்தரம், வீரம், தைரியம் என்ற போர்வைகளால் தங்கள் கோழைத்தனத்தை மறைக்க முயல்பவராவர். தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்ளும் மார்க்கமாகும் இது.

மேனாட்டு நாகரிக மோகவலையிலே கட்டுண்டு, புலன்களைப் பொறிவழியிலே ஓடவிட்டுத்திரியும் இலௌகிகமே வடிவெடுத்து வந்துள்ளது போன்ற மக்களைக் காணுந்தோறும், உண்மைச் சாதகனது போராட்டம் உச்சநிலையை யடைகின்றது. அத்தகைய 'சுதந்தர' மக்களிடமிருந்து விலகி வாழ்வது ஞானசாதகனுக்கு நன்

மையைத்தரும்; இவ்விதம் சுதந்தரம்பேசு பவர்கள் உண்மையில் சுதந்தர புருஷர்க ளன்று; தம் புலன்களுக்கு அடிமைப் பட்ட பேதைகளே! புலன்களுக் கடிமை யான பேதைமைத் தனத்தால் அவர்கள் கண்கால் தெரியாது ஓடிமடிகின்றார்கள். எனவே எப்போதும் சத்சங்கத்தையே நாடுவீராக. ஒத்த பாலாரிடத்துச் சன் மார்க்கத்தைப் பின்பற்றும் நன்மக்கள் இல்லையெனின், ஒருவருறவையும் வேண் டாது, இறைவனது உறவினிலேயே ஒன் றித்து வாழ்வீர். காம எண்ணங்களை யும், காம சம்பந்தப்பட்ட பேச்சுக்களை யும், காம உணர்ச்சிகளை எழுப்பக் கூடிய பிறபாலாரையும் அறவே அகற்றி வாழ் வீர். அத்தகைய எண்ணங்களை எழச் செய்யும் படங்களையும் உருவச்சிலைகளை யும் கண்ணெடுத்தும் பார்க்காதீர். அவ் வித விஷயங்களை எடுத்துக்கூறும் நாவல் களைக் கையினால் தொடவேண்டாம். காம எண்ணங்களை எழச்செய்யத்தக்க விளை யாட்டுகளைக் காணச் செல்லாதீர். காம எண்ணங்களுடன் போராடும் காலம் பரி யந்தம் இத்தகைய வெளித் தூண்டுதல் களை அறவே ஒழித்திடுவீர். ஏதாவது ஒருவகையில் காம எண்ணங்கள் நம்முள் எழக் கருவியாக அமையும் எல்லா காரியங் களையும் அப்புறப்படுத்த வேண்டுவது சாதகனது கடமையாகும். இம் முறை களை நாம் பின் பற்றாது போனால் உயர்ந்த ஞான வாழ்க்கைக்கு அவசியமான பரி சுத்தத்தைப் பெறாமல் அல்லற்பட ஏது வாகும். நாம் அஞ்சா நிலையினை யெய்த மாட்டோம்; முக்தி நமக்குக் கிட்டவே கிட்டாது. ஆகவே மனிதர்களாகப் பிறந்த நாம் மனிதர் அடையவேண்டிய உயர்ந்த நிலையை யெய்தாது, பெறுதற்கரிய வாழ் வினைப் பாழ் படுத்தியவர்களாவோம். மிருகங்களாகவே வாழ்ந்து மிருகங்கள் போன்றே இறந்து படநேரிடும்.

---

# நாராயண பிராந்தன்

(ஸ்ரீ சித்பவானந்த சுவாமிகள்)

கொஞ்ச காலத்துக்கு முன்பு கேர ளத்தில் நாராயண பிராந்தன் என்று அழைக்கப்பட்ட ஒருவன் வாழ்ந்திருந் தான். அவனுடைய பிறப்பைப் பற்றிப் பலர் பலவிதம் புகல்கின்றனர். அவன் எக்குலத்தைச் சேர்ந்தவன் என்பதும், எக்குடியில் பிறந்தவன் என்பதும் நமக்கு முக்கியமானவைகளாகா. பிராந்தன் என் னும் வடமொழிக்குப் பைத்தியக்காரன் என்பது பொருள். பைத்தியக் காரர்க ளுள் பலவகைப் பட்டவர்கள் உளர். பொருளைநாடி ஓய்வின்றி அலைபவர் ஒரு விதப் பைத்தியக்காரர். மண்ணாசையால் மலைவு கொள்பவர் மற்றொருவித மூடர். அற்ப சுகம் வேண்டி அலக்கழிபவர் இன்னொருவிதப் பித்தர் ஆவர். புகழுக் காக உழலும் உன்மத்தர் உண்டு. பேரில் மோகம் கொண்டு படாதபாடுபடும் வெறி யர் வேறு சிலர் உளர். சுருங்கச்சொல்லின் உலக முழுதுமே பைத்தியக்கார மயம். ஒவ்வொருவனும் ஏதேனும் ஒன்றை முன்னிட்டுப் பித்துப்பிடித்துப் பேய் போல் அலைகின்றான். நாராயண பிராந்த னுடைய பித்தம் எத்தகையது என்பதை அவன் செயலே விளக்கிவிடும்.

காற்று அடித்தபக்கம் சருகு உருண் டோடுவது போன்று மனம்போனபோக் கில் நாராயண பிராந்தன் அலைந்து திரி

வான். மரத்தடியில் மரக்கட்டைபோன்று அசையாது உட்கார்ந்திருப்பதும், குப்பை மேட்டில் கிடக்கும் சாம்பல்மீது விருப்புடன் படுத்துப் புரளுவதும், மேகம் உலாவும் ஆகாயத்தைப் பார்த்துக் கைகொட்டி நகைத்துக் கூத்தாடுவதும் அவன் அடிக்கடி செய்யும் செயல்களாகும். நாகரிகமாக வாழும் சில மேன்மக்களுக்குப் பசி வந்துவிட்டால் அது பைத்தியத்துக்கு ஒப்பாய்விடும். அப்பொழுது அவர்கள் விலங்கினும் கீழ்ப்பட்டவர்களாய்விடுவர். ஆனால் நாராயண உன்மத்தனை உதராக்கினி அசைக்கமுடியாது. பசித்திருப்பதும் புசித்திருப்பதும் ஆகிய இரண்டும் அவனுக்கு ஒன்றே. இரண்டு அல்லது மூன்றுநாள் உண்ணாதிருப்பதால் அவனுடைய உறுதியும் ஊக்கமும் குறைந்துவிடா. தற்செயலாய்க் கிடைக்கும் உணவை அவன் மட்டுடன் அருந்துவான். உடலில் ஒரு கோவணத்தைத் தவிர அவனுக்கு உடையொன்றும் கிடையாது. விசும்பே கூரை, பசும்புல்லே இப்பித்தன் படுத்துறங்கும் மஞ்சம். ஆக மக்களை சதா பயமுறுத்திக் கொண்டிருக்கின்ற உண்டி, உடை, இருப்பிடம் ஆகியவைகளைப்பற்றிய பிராந்திகள் நாராயணனை அணுகவில்லை.

சிறுவர்களுடன் குலாவி விளையாடுவதில் நாராயணனுக்கு மட்டில்லா மகிழ்ச்சியிருந்தது. அதுபோது அவனும் ஒரு விளையாட்டுப் பிள்ளைபோன்று விளங்குவான். வயதில் முதிர்ந்தவன் எனினும் மன அமைப்பில் அவனும் ஒரு பாலனாகத் தென்பட்டான். பிராந்தன் என்று அழைக்கப்பட்ட அவனிடத்துக் களங்கமின்மையே அதற்குக் காரணமா யிருந்திருக்கலாம். பிள்ளைகளுடன் ஓடுவான், ஆடுவான், துள்ளிக்குதிப்பான். மண்ணில் விழுந்து புரளுவான், கலகலவென்று சிரிப்பான். அவர்கள் இளங்கையில் மொத்துண்டு, அமிழ்து உண்டவன் போன்று அவன் ஆனந்தக் கூத்தாடுவான். சில வேளைகளில் நாராயணனும் இளைஞர்களைத் திருப்பி யடிப்பான்; ஆனால் தாய்ப் பூனையின் பல் தன் குட்டிகளுக்குத் தீங்கிழையாதது போன்று அவனுடையதாக்குதலில் தீஞ்சுவை பொலியும். அப்பித்தன் கையில் அகப்பட்ட தின்பண்டங்களெல்லாம் பிள்ளைகளுக்குப் பொதுவுடைமையாயின. மாசில்லா மனதையுடைய சிறார்களுக்குப் பொருளை யெடுத்து வழங்க வழங்க அவன் கைக்கு அது மேலும் மேலும் அகப்பட்டுக் கொண்டே யிருந்தது. சிறுவர்கள் உண்டுகளித்துக் கூத்தாடிக்கொண்டிருக்கையில் உன்மத்தன் திடீரென்று அவர்களிடமிருந்து விலகியோடிவிடுவான். பிறகு அவன் விருப்பத்துக்கு விரோதமாக இளைஞர்கள் அவனை அணுகமுடியாது. நினைத்தமாத்திரத்தில் தன் போக்கை அறவே மாற்றிக் கொண்டபடியால் அவன் பிராந்தன் என்று அழைக்கப்பட்டான் போலும்.

ஓர் இடத்தில் நிலைத்துத் தங்கியிருப்பது நாராயண பிராந்தனுடைய வழக்கமன்று. பல ஊர்களில் பல காலங்களில் அவன் தென்படுவான். மலைகளுக்கும் குன்றுகளுக்கும் காடுகளுக்கும் பேர் பெற்ற நாடு மலையாளம். ஆதலால் அவன் எங்குச் சென்றாலும் காடுகளைக் காண்பான். அவைகளிடத்திருந்து ஏதோ அருளைப் பெறுபவன் போன்று அவன் அவைகளை உற்றுநோக்கி உலப்பில்லா ஆனந்தம் எய்தியிருப்பான். ஆங்காங்குள்ள குன்றுகளின் மீதேறுவது அவனுக்கேற்பட்ட பொழுதுபோக்குகளில் ஒன்றாயிருந்தது. அப்படிச் செய்வதிலும் அவனிடத்துத் தனி விசேஷம் ஒன்று இருந்தது. மற்றவர்களைப் போன்று வெறுங் கையுடன் அவன் மலையேறான். சுமப்பதற்குச் சிறிது சிரம சாத்தியமா யிருக்கும்

கல் ஒன்றைத் தூக்கித் தலையில் அல்லது தோளில் வைத்துக்கொண்டு திண்டாடித் தொத்தியேறுவான். திணறிக்கொண்டு உச்சியை அடைந்தபின் கல்லைக் கீழே உருட்டிவிடுவான். அது புரண்டும், உராய்ந்தும், நகர்ந்தும், சிதறிக் குதித்தும் வீழ்வதைப் பார்த்துக் கைகொட்டிச் சிரிப்பான். வேறு சில வேளைகளில் அவனது விருப்பத்துக்கு மாறாகக் கல் கை நழுவி விட்டதாகப் பாசாங்கு செய்து கொண்டு விம்மி விம்மி அழுவான். வருந்தி மேலே கொண்டுவந்த கல் விரைந்து கீழே போகிறதேயென்று புலம்புவான். துயரப்பட்டவன்போன்று தென்பட்டவன் உண்மையில் தத்துவ விசாரம் செய்துகொண்டிருந்தான் என்று அறிஞர் சிலருக்கே விளங்கிற்று. பாரமார்த்திக வாழ்க்கைக்குப் புறம்பாயுள்ள பூதவுலக முன்னேற்றங்களெல்லாம் மலையின்மீது கொண்டு சேர்க்கப்பட்ட கல்லுக்கு ஒப்பானவைகளேயாம். மக்கள் படாத பாடு பட்டுப் பட்டணங்களைக் கட்டுகின்றனர். பூகம்பமோ ஒரு நொடிப்பொழுதில் அவைகளை அழித்துவிடுகின்றது. ஓய்வு ஒழிவு இன்றிச் செல்வம் சேகரிக்கின்றனர். அது கை வழுவுவதோ கணப்பொழுதில். ஆதிக்கத்தோடு கூடிய அரசாங்கம் ஒன்று நிறுவுதற்கு நெடுநாளாகிறது. ஆனால் கனவிலிருந்து நனவுக்கு வருவது போன்று அது அழிகிறது. இன்று இந்திரனுக்கு ஒப்பாயிருப்பவன் நாளைக்கு இருக்க இடமின்றி இன்னற்படுகின்றான். பெருகிக்கொண்டேபோகும் மானுடத்திரளைக் கொள்ளைநோயும், பஞ்சமும், யுத்தமும்வந்து கூட்டித் துடைத்துக்கொண்டு போய்விடுகின்றன. இவைகள் உலகவாழ்க்கையைப்பற்றி மறுக்க முடியாத உண்மைகளாம். மலையுச்சியில் நின்றுகொண்டு நாராயண பிராந்தன் இவ்வுண்மைகளை நினைந்து மகிழ்வுற்றிருந்தான். ஆக்கத்துக்கு ஆசைப்படுவது போன்று அழிவுக்கும் ஆயத்தமாயிருப்பது மக்களது கடமையாகும்.

தூயனவும் தீயனவும் ஆகிய இயல்புகள் பகல் வேளைகளில் மனதின்கண் புதைந்து கிடப்பினும், இராக்காலங்களில் அவைகள் தோன்றித் தாண்டவமாட ஆரம்பிக்கும். இரவில் உதிக்கும் எண்ணங்களே மக்களை மேலோராகவும் கீழோராகவும் பாகுபடுத்த வல்லவைகளாகும். அதுபோழ்து போகி ஒருவனுக்குச் சிற்றின்ப நுகர்ச்சிக்கு ஏதுவான உணர்ச்சிகளும் கருத்துக்களும் உள்ளத்தில் எழாநிற்கும். யோகியொருவனுக்கோ ஆத்மசாதனங்களைப் பற்றியனவும் பரம்பொருளைப் பற்றியனவும் ஆகிய நினைவுகள் தாமாகத் தோன்றும். தம் தம் கருத்துக்களுக்கு ஏற்றவாறு மக்கள் காலத்தைக் கழிப்பர். நாராயண பிராந்தனுக்கு இரவில் ஏற்பட்ட அலுவல் என்ன என்று ஆராய்வாம். பொழுது படியுங்கால் அவன் ஊரைவிட்டு எட்டப்போய்விடுவான். ஜனசஞ்சாரமில்லாத ஜாகையையே அவன் நாடினன் எனினும் தன்னந்தனியனாய் இருந்தான் என்று சொல்ல முடியாது. அக்கினி தேவதையைத் தன்னிடத்து அல்லில் அழைத்துக்கொள்வது அவனுடைய வழக்கம். எங்கேயாவது தேடி சில விறகுக் கட்டைகளை எடுத்துத் தீ மூட்டி அதனருகில் அமர்ந்து கொள்வான். நள்ளிரவில் தீயினருகில் அமர்ந்து தியானம் பண்ணினால் மனது விரைந்து இறைவனிடத்துச் செல்லும். ஒருவேளை நாராயணன் என்ற பித்தனுடைய மனது இரவெல்லாம் இறைவனுடைய சந்நிதி சார்ந்திருந்தது போலும்.

ஒரு நாள் மாலைவேளையில் நாராயண பிராந்தன் ஓர் ஊருக்கு அருகாமையில் உலாவிக் கொண்டிருந்தான். இயற்கையெங்கும் அமைதி குடிகொண்டிருந்தது.

அதைவிடப் பன்மடங்கு அதிகமான அமைதி உன்மத்தனது உள்ளத்தில் நிலவிற்று. இருளும் படலம் படலமாக விரைவில் வந்து சூழ்ந்து கொண்டிருக்கிறது. இனி ஓரிடத்தில் நெருப்பைக் கிளப்பி உட்கார வேண்டுமென்று அவன் எண்ணி முடிப்பதற்குள் கண்ணெதிரே நீ வெளிச்சம் ஒன்று தென்பட்டது. தான் நின்றுகொண்டிருந்த இடம் சுடுகாடு என்று அப்பொழுது அவனுக்கு விளங்கிற்று. ஆனால் சுடலைத்தீ, வேள்வித்தீ ஆகிய இவ்விரண்டுக்குமிடையில் வித்தியாசம் பாராட்டுபவன் அல்லன் அப்பித்தன். அன்றைக்கு நெருப்பு மூட்டவேண்டிய வேலை தனக்கு ஏற்படவில்லை யென்று எண்ணிக்கொண்டு அதனருகில்போய் அவன் அமர்ந்துகொண்டான்.

நெடுநேரத்துக்குப்பிறகு அவனுடைய நிஷ்டை கலைந்தது. அப்பொழுது நடுநிசி. பிரளயகாலம் போன்று ஒரே காரிருள். சுடலைத்தீயின் வேகமும் குறைந்துவிட்டது. பிணத்தின் பெரும் பகுதியை விழுங்கியபின் பாக்கியிருக்கும் சிறு பகுதியை அது சப்பிக்கொண்டிருப்பது போன்று தோன்றுகிறது. கருகிய பிணத்துண்டினின்று உருகிவரும் நீரையும் நெய்யையும் கனல் "சொய்...சொய்..." என்று ருசிபார்க்கிறது. இடையிடையே கனல் சரிந்துவிழும் சத்தம் கேட்கிறது. அவ்விடத்தின் அமைதியைக் கலைக்கும் அரவம் வேறொன்று மில்லை. இப்பொழுது திடீரென்று கணக்கற்ற நரிகள் ஒன்று சேர்ந்து ஊளையிடுகின்றன. ஊழிக்காலத்தை அறிவுறுத்துவது போன்று அவ்வொலி காதைத்துளைக்கிறது; குலை நடுக்கும்படி செய்கிறது. ஆனால் நாராயண பிராந்தன் அதை யொன்றையும் கவனியாது ஆனந்தமாய் வீற்றிருக்கிறான்.

அனல் வெளிச்சத்தை முன்விட்டு அகலாத அந்த இருளில் இப்பொழுது உருவம் ஒன்று தென்படுகிறது. பித்தன் அதைப் பொருட் படுத்துகிறானில்லை.

"யாரடா, இங்கு இவ்வேளையில் துணிவுடன் உட்கார்ந்திருப்பது?" என்று அதட்டுகிறது தோன்றிய வடிவம்!

"பிறரைப்பற்றிய கவலை யுனக்கென்ன? நீ யாராயிருந்தாலும் உன் வேலையைப் பார்த்துக்கொண்டுபோ" என்று அசட்டையாக நாராயணன் நவிலுகிறான்.

"நான் ஸ்மசான காளியின் பூதகணங்களில் ஒன்று. அதோ அவள் எழுந்தருள்கின்றாள்! தப்பிப் பிழைக்க விரும்பினால் ஓடிப்போ இப்பொழுதே," என்று எச்சரிக்கை செய்கிறது அவ்வுருவம்.

சிலம்பொலி கேட்கிறது. சூரியோதயம் போன்று ஒளிப் பிழம்பு உருவெடுக்கிறது. பயங்கரமே வடிவெடுத்துள்ள சம்ஹார சொரூபிணி பிரசன்னமாகிறாள்..."எமக்குரிய இடத்தைவிட்டு அகன்றோடு. அல்லாவிடின் அண்டங்கள் அடிபடும் அடியின்கீழ் நீமட்டும் மிஞ்சுவது எங்ஙனம்?" என்று ஆக்ஞாபிக்கின்றாள் அவள்.

அது தன்பால் விடுத்துள்ள ஆணை என்பதை உன்மத்தன் உணர்கின்றான். அவனும் பித்தம் தலைக்கேறியவன் போன்று பகர்வானாயினன்: "இப்பரந்த உலகில் உனக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமை எனக்குமுண்டு. உட்கார்ந்த இடத்தைவிட்டு ஒருவர்க்கு அஞ்சி நான் அகலுதல் கிடையாது. அதோ ஆங்குச் சென்று நீ விரும்பியவாறு ஆடுக."

இத்தகைய வீர மொழியைக் காளிகா தேவி, முன்பு எங்கும் கேட்டது கிடையாது. தன் தாண்டவங்களில் மிகக் கொடியதும் பயங்கரமானதுமான சம்ஹாரத் தாண்டவத்தைத் துவக்குகிறாள்.

அதன் உக்கிரந்தான் என்னே! அவள் மூச்சு விடுவதால் மூவுலகங்களும் நடுங்குகின்றன; அடி எடுத்து வைக்குங்கால் அண்டங்கள் அழிந்து மறைகின்றன. நாவை நீட்டி உதட்டைத் துடைக்குங்கால் கோடானுகோடி உயிர்கள் மடிகின்றன. தேவகணங்கள் நடுங்கி நின்றுகொண்டு, "தாயே, நின் திருவுளப் பாங்கின்படி ஆகுக" என்று போற்றுகின்றனர். அவள் வீசுகின்ற வாளிலிருந்து நாராயண பிராந்தன் மட்டும் தப்பிப்பது எங்ஙனம்? ஆனால் அவனுடைய மனத்தகத்தில் மரணதத்துவத்துக்கு இடமில்லை. பயம் இன்னதென்று அவனறியான். அபயம் அவனுக்கு அணிகலம். உயிர்களை வாட்டுகிற சம்ஹாரதாண்டவம் அவனுக்குச் சப்பையாகத் தோன்றுகிறது. "இவ்வளவுதானா இவளுடைய ஆர்ப்பாட்டம்," என்று எண்ணுகிறான். "உம், உன்னுடைய பொம்மலாட்டம் முழுவதையும் காட்டு. வேண்டுமானால் இந்த உடலத்தையும் எடுத்துக்கொள்," என்று தன் தேகத்தையும் அவளுக்குப் படைக்க முன் வருகிறான்.

பயங்கரி தேவிக்கு வெட்கம் வந்துவிடுகிறது. அவளுடைய கொடூரச் செயல் பிராந்தன் மாட்டுப் பலிக்கவில்லை. "மகனே, உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்," என்கிறாள் அவள்.

பிராந்தன்: நான் யாரிடத்திலும் எதையும் கெஞ்சிக் கேட்பதில்லை.

தேவி: என் தரிசனம் கிடைக்கப் பெற்றவர்க்கு ஏதாவது வரம் கொடுக்க நான் கடமைப் பட்டிருக்கிறேன்; ஆதலால் என் பொருட்டு நீ ஏதாவது ஒன்றைக் கேட்பாயாக.

பிராந்தன் சற்றுச் சிந்தித்துப் பார்த்துவிட்டு அப்படியானால் எனது இடது காலில் இருக்கும் இந்த வீக்கத்தை வலது காலுக்கு மாற்றுவாயாக.

தேவி: பிராரப்த கருமத்தை மாற்றியமைக்கும் சுதந்திரம் எனக்கில்லை.

பிராந்தன்: அங்ஙனமாயின் உன்னிடமிருந்து பெறும் வரமும் எனக்கொன்றுமில்லை.

மாயாதேவி வேறு ஒன்றும் செய்ய முடியாதவளாய் மறைகிறாள். உலகத்தவரால் நாராயண பிராந்தன் என்று அழைக்கப்பட்டவர் உண்மையில் ஒரு கடந்த ஞானியாவார். சித்தன் போக்கு சிவத்தின் போக்குக்கு ஒப்பு என்னும் கோட்பாட்டுக்கு ஏற்ப அவர் சிவ சொரூபமாகவே இலங்கினர். ஞானியர் எதற்கும் அஞ்சுவதும் இல்லை, எதையும் கெஞ்சிக் கேட்பதும் இல்லை. அஞ்சுபவர் ஓயாது செத்துக்கொண்டிருக்கின்றனர். அஞ்சாதவர் சாகாத நிலை யெய்துகின்றனர். யாசகம் கேட்கவந்த வாமனர் வடிவத்தில் சிறியவர் ஆனது போன்று கெஞ்சிக் கேட்பவர் தன்மையில் சிறியவர் ஆகின்றனர். அஞ்சாமையும் கெஞ்சாமையுமே பாரமார்த்திகப் பெருவாழ்வு என்பதாம்.

---

# சந்தேகம் தெளிதல்

வினா:—ஜீவ கோடிகளின் கர்மாதுசாரப்படி பிறவித்துன்பம் வருவது நியதியே. ஆதியில் சிருஷ்டிக்குமுன் எவ்வித கர்மங்களும் ஜீவர்களுக்கு இல்லையே. அப்படியாயின் கொடூர ஜனனங்களும், இகலோக சௌகர்யங்கள் அடைய ஹேதுவான ஜனனங்களும் வரக் காரணம் யாதோ?

K. R. அ......

விடை:—ஈசுவரன், ஜீவன்—இவை அநாதியாயிருப்பது போல, கர்மமும் அநாதி. ஜீவனுக்கு ஒரு குறிப்பிட்ட காலத்தில் கருமத்தின் சம்பந்தம் ஏற்பட்டது என்று கூறமுடியாது. அதற்கு ஆதி இந்தக் காலம் என்று சொல்ல முடியாது. ஆதலின் அநாதி யெனப்படுகின்றது. சிருஷ்டியென்பதும் அநாதியே; அது இன்னபோது தொடங்கிற்று, இன்ன காலத்தில் முடியும் என்று கூறமுடியாது. சிருஷ்டிக்குமுன் உலகம் இல்லாதிருந்த ஒரு காலம் இல்லை; சிருஷ்டிக்கு முன் உலகம் லயமான நிலையில் இருந்தது. சிருஷ்டி என்பது உலகத்தின் தூல நிலையைக் குறிக்கின்றது; லயம் என்பது உலகத்தின் சூக்கும நிலையைக் குறிக்கின்றது. உலகம் மாறிமாறித் தோன்றியும் ஒடுங்கியும் வருகிறது; தோற்றம் சிருஷ்டியாகும், ஒடுக்கம் லயமாகும். இரு நிலையிலும் உலகம் அழிவதில்லை. அதைப் போல் ஆன்மாக்களுக்குப் பிறப்பாவது, தூல உடலோடு சம்பந்தப் படுதல்; இறப்பாவது, தூலதேகத்தை விட்டு நீங்குதலாகும்; ஆனால் சூக்கும தேகத்தை விட்டு நீங்குவதில்லை. இந்தச் சூக்கும தேகமே மறுபடியும் அதற்கேற்ற தூல சரீரத்தைப் பெற்றுக்கொள்ளுகிறது. கருமங்களில்லாத போது தேக சம்பந்தமே யற்றுப் போய்விடுகிறது; அப்போது ஜீவன் முத்தியடைகிறது. ஆனால் அதுவரை ஜீவன் கருமத்திற்கு வசப்பட்டு, பிறப்பும் இறப்பும் மாறி மாறிப் பெற்று உழல வேண்டியது அவசியம். உலக சிருஷ்டிக்குமுன், ஆன்மாக்கள் விடுபட்ட நிலையிலிருந்தன என்பதில்லை; விடுபட்ட நிலையிலிருந்தவை (அதாவது தேக சம்பந்தமற்றிருந்தவை) தேக சம்பந்தம் பெற்று, அதன்பின் கருமங்களைச் செய்து, மறுபடியும் பெற்றன என்பதும் இல்லை. ஆன்மாக்கட்குக் கருமங்களில்லாதபோது தேகம் உண்டாக வழியில்லை. ஆதலின் தேகத்தை எப்போதாயினும் ஆன்மா பெற்றதெனின், அது முந்திய கருமத்தின் விளைவு என்றே அறியப்படவேண்டும். கொடூர ஜனனத்திற்கும் சுக வாழ்க்கையோடு கூடிய ஜனனத்திற்கும் அவரவரது பண்டைய வினையே காரணமாம். ஈசனுடைய இச்சையாலேயே ஆன்மாக்கள் தேகம் பெறுகின்றன என்று சாஸ்திரம் கூறுவது உண்மையே; ஆனால் ஈசன் பக்ஷபாத மற்றவனாதலின், சிருஷ்டிக்கும் போதே அவரவரது பழய வினைகட்குத் தக்கவாறு தேகங்களைப் படைக்கிறான் என்பதும் உண்மை. உலக சிருஷ்டி ஏதோ ஒரு யுகத்திலோ, ஒரு பிரளயத்திற்குப் பின்னோ, புதிதாகத் திடீரெனத் தோன்றிற்று என்பது யுக்திக்கு முரண்பாடானது; சுருதிக்கும் ஒவ்வாதது. உள்ளது அழியாது, இல்லாதது தோன்றாது. ஆதலின் தூல வடிவமும் சூக்கும வடிவமும் மாறி மாறி வருகின்றன என்பதே மெய்யாம்.

வினா:—வினையை வெல்ல முடியுமா? எவராலும் முடியாது என்பர் பெரியார்; ஆயினும் சில பெரியார் முடியும் என்கின்றனர். எது உண்மை?

B. K. சு........

விடை:—ஊழின் வலிமையைப் பற்றிக் கூறும்போதெல்லாம், பெரியார் அதனினும் மிக்க வலிமையுடையது ஒன்றில்லை என்றே கூறுவர்; அவ்வாறு கூறும் காரணம், அதை வெல்லுதல் பெரும்பாலார்க்கு மிகமிக அரிதாதலே! எங்கேயோ ஓரிருவர் அதை வென்றிருக்கலாம் எனினும், விதி வெல்லற்கரிது என்பதே பொதுவான விதி. ஆனாலும், விதியை வெல்லுதல் எவர்க்கேனும் இயலுமா என்று வினவினால், இயலும் என்றே பதிலுரைக்க வேண்டிய தாகின்

ற்று; ஏனெனில் விதியை வென்றவர் சிலரேனும் உளர். மார்க்கண்டன் தெய்வத்தின் மீதுள்ள மெய்யான பக்தியினால் மாறா இளமைபெற்று, விதியை வென்றான். சாவித்திரி தனது கணவனையேதெய்வமாகத் தொழுது தொழுது அந்த மெய்யன்பின் வலிமையால் கணவனது மரணத்தையும் வென்று மீண்டாள். [சிலர் விதி யென்பது உண்மையாக இறைவனது சங்கற்பமே என்பர். இதுவும் உண்மையே. அவ்வாறு கொண்டாலும், ஈசனதுசங்கற்பமும் மாறக்கூடியது என்பது உண்மை. பீஷ்மரது பிரதிக்ஞை கண்ணபிரானாகிய கடவுளது பிரதிக்ஞையும் ஆயுதம் எடேன் என்ற சங்கற்பத்தையும் மாறச் செய்ததன்றோ? பாண்டவர்கள் ஐவரையும் கொல்ல நினைந்த கண்ணபிரான் சகாதேவனது அன்பினாற் கட்டுண்டு, ஐவரையும் காத்தருள்வதாக வாக்களித்தான் அன்றோ? ஆதலின் இறைவனது சங்கற்பத்தையும் சில மெய்யடியார் மாற்றிவிடுகின்றனர். என்பது உண்மையேயாகும்.] விதிக்கும் மதிக்கும் உள்ள சம்பந்தத்தை விளக்க வந்த திருவள்ளுவ நாயனார் முதலில் "ஊழிற் பெருவலியாஉள ; யாதொன்று சூழினும், தான் முந்துறும்" என்று ஊழின் வலிமையைச் சிறப்பித்துக் கூறினார்; மேலும் எவ்வளவு நூலறிவு இருப்பினும் ஊழால் விளையும் அறிவே வெல்லும் என்று கூறினார். இவ்வாறு ஊழின் வலிமையை அடக்குதலில் உள்ள அருமையை எடுத்துக் காட்டிய அப்பெரியார் முயற்சியின் பெருமையைக் கூறும்போது, ஊழினால் காரியம் முற்றுப் பெறாது போயினும், முயற்சிக்குத் தக்கவாறு பலன் விளைவது உறுதி என்கிறார்; இன்னும், வெல்லற்கரிய ஊழையும் புறங்காட்டி ஓடும்படிச் செய்யக்கூடும் என்றும், சிறிதும் சலிப்பின்றிப் பின் வாங்காது முயற்சி செய்தல் அதற்கு இன்றியமையாதது என்றும் கூறினார். "ஊழையும் உப்பக்கம் காண்பர், உலைவின்றித் தாழாது உஞற்றுபவர்" என்பது அவரது மெய் வாக்கு.

இத்தகைய அரும்பெரும் முயற்சியால் விதியை வெல்லுதல் இயலும் என்பது நியாயமே; எவ்வாறெனில், கூறுவோம். விதியின் உற்பத்தியை ஆராய்வார், அதன் வலிமையை மெச்சுவதோடு, முயற்சியின் மேம்பட்ட திறமையையும் உணர்வார். விதியென்னும் பெரிய ஆலமரத்துக்கு வித்து நினைவே. நினைவு எனும் வித்து, செயலாக முளைத்து, பழக்கமெனும் மரமாகி, ஒழுக்கமெனும் மலராகி, முடிவில் விதியெனும் கனியாகிறது. விதைக்குத் தக்க கனியுண்டு; நல்ல விதைக்கு நற்கனியும், தீய விதைக்குத் தீய கனியும் உண்டு; விதைத்தவன் அக்கனியைப் புசித்தாகவேண்டும். இவ்வாறு இருத்தலின், தீவினைப் பயனை அழித்தற்கு நல்வினையைத் தொடங்கல் வேண்டும். நெல் செய்யப் புல் தேயுமாறு போல, நல் நினைவு எனும் விதையை ஊன்றி, அதை நாடோறும் பேணி வளர்த்து வருவார். தீய வினைப்பயனைச் சிறிது சிறிதாக அழித்தே வருவராவார். ஆதலின் விதியை வெல்ல, நல்ல நினைவு எனும் விதையை ஊன்றி, அது மரமாகி அரும்பிக் கனியைத் தரும் வரை போற்றி இடைவிடாது வளர்த்து வரவேண்டும். இதுவே வினைப்பயனை நாளடைவில் வெல்லும் முறையாகும்.

விதி யென்பது, நம்மிடத்து விதிக்கப் பட்டுள்ளது, அல்லது நாமே முதலில் விதித்துக் கொண்டது எனில் மிகவும் பொருத்தமாகும். இவ்விதி தவறாது நடப்பது; எதிர்த்தற்கு அரியது. இவ் விதி நமது செயலால் விளையும் விதியாகும். இதனினும் வலிமை மிக்க வேறொரு விதி உள்ளது. அது நமது

செயலைப் பொறுத்தன்று; நமது உண்மையியல்பைப் பொறுத்துள்ளது. இதை ஒருவராலும் (தேவராலும் மூவராலும் பிறராலும்) வெல்லமுடியாது. அது யாதெனில், ஆன்மா கட்டு நீங்கி விடுதலையடைந்தே தீரவேண்டும்! ஜீவன் பாசங்களினின்று விடு பட்டு முத்தியடைந்தே யாகவேண்டும். நமது இயல்பைப் பற்றி யெழுகின்றது இவ்விதி; இறைவனது உயர்ந்த ஆணையின் வழிபட்டு நிகழ்வது. இது கருமங்கட்குத் தக்க பயன் விளைய வேண்டும் என்பதும் இறைவனது ஆணையெனினும், அது சாமான்னியம்; இது விசேஷம். விசேஷ விதியே சாமானிய விதியை மீறி நிற்கும். ஆதலால் முத்திக்காக முயலுவோன் ஒவ்வொருவனும் வெல்லற்கரிய ஒரு பெரும் விதிக்கி இணங்கி நடப்பவன், அவன் சாமானிய விதியை வென்று விடுவான் என்பது திண்ணம். முத்திக்காக முயல்வோனைத் தடுக்கக் கூடியது உண்மையாகவே ஒன்றும் இல்லை. இதுவே மனிதனது பரம விதியாகும். இதை உணர்வார் விதியைக் கண்டு மருளார்.

விதியை ஆன்றோர் மூன்றுவகையாகப் பகுத்துள்ளார்; சஞ்சிதம் ஆகாமியம் பிராரப்தம் என்பன அவை. தோளில் ஓர் அம்புப் புட்டிலும் கையில் வில்லும் கொண்ட ஒரு வேடன் ஒரு பாணத்தை எறிந்துவிட்டு, இன்னொரு பாணத்தைக் கையில் கொண்டு, வில்லில் தொடுக்க ஆரம்பிக்கின்றான். எறிந்த பாணம் அதற்குரிய வழியிலே செல்லும். அதை மாற்றவோ தடுக்கவோ எறிந்தவனது கைக்குள் வழி இல்லை. இது பிராரப்த கருமம் போன்றது. செய்த கருமம் பயன்தரத் தொடங்கிவிட்டது; தொடங்கிய பின் அதன் பயன் வந்தேதீரும். கையிலுள்ள பாணத்தைத் தொடுக்காமல் நிறுத்திவிடலாம், தொடுக்கவும் செய்யலாம்; அதன் பயன் இனி வரக்கூடியது. இது ஆகாமியத்தைப் போன்றது; ஆகாமியம் இனிப் பயன் தரலாம், அன்றிப் பயன் தராது போகலாம்; இதைத் தடுப்பது நமது சுவாதீனத்திற்குள் அடங்கியதாகும். பல அம்புகள் புட்டிலில் உள்ளன. அவைகளை இன்னும் பயன்படுத்தவில்லை. இது போன்றது சஞ்சிதம்; சஞ்சிதம் சேகரித்து வைக்கப்பட்டுள்ள வினைப் பயன். இதனை இப்போது பயன்படுத்தவே இல்லை, இனிப் பிற்காலத்துப் பயன்படுத்தப்படற் குரியது. இம் மூவகையான கர்மங்கட்குள்ளும், சஞ்சிதமும் ஆகாமியமும் ஜீவன் முக்தனுக்கும் நிலைமையிலே அழிந்துவிடும்; பிராரப்தம் மட்டும் முன்னமே பயன்தரத் தொடங்கி விட்டமையின், ஜீவன் முக்தனும் அதை அனுபவித்தே ஒழிக்கவேண்டும். ஒரு பெரிய சக்கரமும் சிறிய சக்கரமும் ஒரு வாரினால் இணைக்கப்பட்டுள்ளன; பெரிய சக்கரம் சுழலும்போது, சிறிய சக்கரமும் சுழன்று வருகிறது. திடீரென்று, இணைக்கும் வார் அறுந்து போகின்றது என்போம். வார் அறுந்தபின், பெரிய சக்கரம் நிறுத்தப்பட்டாலும், சிறிய சக்கரம் உடனே நின்று விடாது. பண்டு சுழன்ற வேகத்தின் பயனாகச் சிறிது நேரம் சுழன்று, வரவர வேகம் குறையப் பெற்றுப் பின்னர் முற்றும் நின்றுவிடும். அதுபோல் பிராரப்த கர்மத்தின் பயனாகிய சரீரம் பழைய வாசனைகளின்படியே ஓடிச் சிறிது காலம் சென்றபின், கீழே விழுந்துவிடும்; இந்த ஓட்டத்தைத் தடுத்தல் அரிதாகும். சஞ்சிதம் ஞானத்தீயால் சுடப்பட்டுச் சாம்பலாகும் என்றும், ஆகாமியம் கிட்டாமலே விட்டுப்போகும் என்றும், பிராரப்தத்தின் வினை அனுபவித்தே ஒழியும் என்றும் சீவன் முத்தர்களைப் பற்றிக் கைவல்ய நவநீத நூலாசிரியர் கூறுகின்றனர். இன்னும் பிராரத்த கருமத்தை அனுபவிக்கும்

போது செய்யப்படும் கருமம் மறுமையில் தொடராதோ என்னில், தொடராது மாண்டுபோம் என்கிறார். எப்படியெனில், ஜீவன் முத்தர்களை இகழ்வார் அவர்களது பாவ கருமங்களின் பயனையும், அவர்களைப் புகழ்வார் புண்ய கருமங்களின் பயனையும் பெறுவர். ஆதலால் மிஞ்சும் கருமம் ஒன்றும் இல்லை. அவர்கள் விதேக முக்தி அடைகின்றனர். "வினைப் பயனை வெல்வதற்கு வேத முதலாம் எனைத்தாய நூலகத்தும் இல்லை" என்று ஔவைப் பிராட்டியார் கூறுவது, பிராரப்த கருமத்தைக் குறித்ததேயாம்; அவர் "விண்ணுறுவார்க் கில்லை விதி" என்றபோது, விதிப் பயனாகிய பிராரப்த கருமம் ஜீவன் முத்தர்களைப் பந்தத்திற்கு உள்ளாக்காது என்பது பொருள்.

பிராரப்த கருமமும் முயற்சியால் வெல்லப்படக் கூடியதோ என்னில், ஆம் என்றே துணிந்து கூறலாம். அக் கருமத்தின் பயனை வெல்லவேண்டும் என்னும் இச்சை ஜீவன் முத்தரது உள்ளத்து எழுவதில்லை. ஏனெனில் அக்கருமத்தின் பயன் நல்லதேயாயினும், தீயதேயாயினும், இரண்டும் உள்ளத்தைக் கலக்காதொழியும். "எத்தொழிலைச் செய்தாலும், ஏது அவத்தைப் பட்டாலும், முத்தர் மனமிருக்கும் மோனத்தே"—ஆதலின், ஞானத்தின் பயனாகிய மோன நிலையைவிட்டு மனம் விலகாது; ஆதலின் அவர்கட்கு இன்பமும் துன்பமும் இல்லை. விதியின் பயனாகிய இன்ப துன்பக் காரணங்கள் வரினும், அவைகளால் இன்பமும் துன்பமும் எய்தாவிடில், அத்தகைய மனிதன் விதியை வென்றவனன்றோ? மேலும், அவ்வினைப் பயனையும் வெல்லுமாறு முயற்சி செய்யும் சங்கற்பம் ஞானியின் உள்ளத்தில் உதியாது; முயற்சி செய்ய ஒரு குறிப்பு இல்லை. சாதாரண மக்கள் முயற்சி செய்யும் குறிப்புடையராயிருப்பின், உலையாத முயற்சியினால், பிராரப்தத்தையும் விலக்கிவிடக் கூடும்; ஆனால் இம் முயற்சியாகிய கருமத்தின் பயன் அவர்களை வந்தடைய வேண்டுமன்றோ? ஜீவன் முத்தர் நினைப்பராயின், பிராரப்த கருமத்தின் பயனையும் விலக்கிவிடலாம்; ஆனால் அவ்வாறு செய்யார். கரும நாசத்திலே கண் வைத்தவர் கருமத்தைப் பயன் விழைந்து செய்யாரன்றோ? ஜீவன் முத்த நிலையை அடையாத யோகி ஒருவன் தனது மனச் சங்கற்பத்தின் வலிமையால் பிராரப்தத்தையும் விலக்கிவிடக் கூடும்; ஆனால் அம்முயற்சியின் பயன் விளைந்தேதீரும். ஞானியர், ஜீவன் முத்தர், பிராரப்தத்தை வெல்ல நினையார். அனுபவித்துக் கழியும்படி விட்டுவிடுவார். இதுவே யாம் அறிந்தவரை, ஆன்றோரது முடிபாகும்.

---

# மறுபிறப்புண்மை

(ஸ்ரீ விபுலாநந்த சுவாமிகள்)

க

மேலைத் திசையிலுள்ள ஐரோப்பா அமெரிக்காக் கண்டங்களிலே விஞ்ஞான சாஸ்திர அறிவு அதிகமாகப் பரவி வருகிறது. பிரபஞ்சத்திலுள்ள உயிர்ப்பொருள் உயிரில் பொருள் ஆகிய எல்லாவற்றையும் ஆராய்ந்து அவை தமது காரண காரியத் தொடர்புகளை அறிவது விஞ்ஞானக் கலையின் நோக்கம். இந்தப் பூவுலகமும், இதனைப்

போன்ற வேறு உலகங்களும் சூரிய சந்திர நக்ஷத்திரங்களும் வான வெளியிலே பரந்து கிடந்த சடப்பொருளானது காலத்திலே திரண்டு உண்டாகிய கோளங்களென்பது அவர்களது கருத்து. இவற்றை ஆக்கிய ஆண்டவனொருவன் இருக்கிறானோ இல்லையோ என்பதைப் பற்றி அவர்கள் விசாரிப்பதில்லை. மூன்னூற்று நாற்பது கோடி வருடங்களுக்கு முன்பு இந்தப் பூவுலகமானது சூரிய கோளத்திலிருந்து பிரிந்து உற்பத்தியாயின தென்பர். இப்படி உற்பத்தியான பூவுலகம் முந்நூறு கோடி வருடங்களுக்குப் புல் பூண்டு உயிர்ப்பிராணிகள் ஒன்றும் இல்லாததாக விருந்த தெனவும், அதன் பின்னர் ஓரறிவுயிராகிய புல் பூண்டு, ஈரறிவுயிராகிய நத்தை கிளிஞ்சில் போன்ற நீர்வாழ் செந்துக்கள், மூவறிவு நாலறிவுயிராகிய நண்டு, தும்பி, எறும்பு என்றின்னவை, ஐயறிவுயிராகிய விலங்கு, பறவை என்றிவை ஒன்றின்பின் னொன்றாக உரு வேறுபட்டுத் தோன்றின வெனவும், இறுதியிலே மனிதன் தோன்றினானெனவுங் கூறுவர். டார்வின் எனப் பெயரிய விஞ்ஞான சாஸ்திரியார் இந்தக் கொள்கையை வெளிப்படுத்த, முன்பு மேலை நாட்டிலே யுள்ளவர்கள் பெரும்பாலார் கிறிஸ்தவ சமயக் கொள்கையின் படி இவ்வுலகமானது இற்றைக்கு ஐயாயிரத்து நாற்பத்து நான்கு ஆண்டுகளின் முன்னே ஆண்டவனால் ஆறுநாட்களிலே படைக்கப்பட்ட தெனவும் அத்தன் (Adam), அவ்வை (Eve) என்னும் இருவரும் ஆண்டவனால் ஆக்கப்பட்டு மனித சாதியாருக்குத் தந்தையும் தாயும் ஆயினரெனவும் எண்ணியிருந்தார்கள். விஞ்ஞான சாஸ்திரிகளும் கிறிஸ்து மத போதகர்களும் ஒரு விஷயத்தில் ஒத்த கருத்துடையவர்கள்; அது என்னவெனில் இவ்வுலகிற் பிறந்து வாழ்ந்து மடிந்தவர்கள் மீட்டும் இவ்வுலகிற்கு வருவதில்லையென்பது. இஃதிவ்வாறாக, மனத்தைப் பற்றிய விசாரணையைச் செய்யும் மனநூல் வல்லார் அறிவு, இச்சை, செயல் என்னும் இவை மிருகங்களிலே ஓரளவாகத் தோன்றி மனிதனிலே விருத்தியடைகின்றன என்றும் சித்துப்பொருள் ஒன்று வேறாக வேண்டியதில்லை யென்றும் முடிவு செய்தார்கள். இதற் கிடையிலே மற்றொரு சாரார் இறந்து போனவர்களுடைய ஆவியை அழைத்துப் பேசலாமென்றும், மரணத்தின் பின்னும் மனிதர் பழைய ஞாபகம் உடையவர்களாக விருக்கிறார்களென்றும், அவர்கள் இங்கிருப்பதுபோலவே பல தொழில்களையும் செய்துகொண்டு உடைதரித்து வீடுகளிலே வாழ்கிறார்களென்றும் வெளியிட்டார்கள். இவர்களும் மனிதர் இவ்வுலகத்திலே மீட்டும் வந்து பிறப்பார்களென்பதை வெளியிட வில்லை.

உ

நம்முடைய உபநிடதங்களிலே மரணத்தின் பின் மனிதர் செல்லும் மார்க்கம் தேவயானம், பிதிர்யானம் என இரண்டு என்பதாகக் கூறப்பட்டது. இங்கிருந்து உயிர்கள் சூரிய சந்திர மண்டலங்களை அடைந்து, மழையோடு மீட்டும் உலகத்திற்குவந்து உணவுப் பொருட்களிலே கலந்து தந்தையினுடைய உடலிலே சேர்ந்து, தாய் வயிற்றிலே உதிக்கின்றன என உபநிடத தாரர்கள் வெளியிட்டார்கள். இப்படி யிருக்கச் சென்றுபோன மகா யுத்தத்தின் பின்னே சில வருடங்களாகப் பெண் குழந்தைகளிலும் பார்க்க அதிகமான ஆண் குழந்தைகள் ஐரோப்பாக் கண்டத்திலே பிறந்ததை விஞ்ஞான சாஸ்திரிகள் கண்டு அதற்குக் காரணமென்ன வென்று விசாரித்து ஒரு முடிவுங் காணாது இருக்கிறார்கள். இந்த மகா

யுத்தத்தின் பின்னும் அப்படி நடக்குமோ என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்து மதமும் அதனோடு சார்புடைய பௌத்த மதமும் இந்த விஷயத்தை அநுபவத்தினாலும் ஞானக்காட்சியினாலும் தீர விசாரித்துப் பிறந்தன இறத்தல் போலவே, இறந்தன பிறத்தலும் இயல்பென்று கண்டன. பொது மறையாகிய திருக்குறளிலே முட்டையினுள்ளிருந்து பறவை வெளிப்படுவது போல உடம்புக்கும் உயிருக்கும் இடையே யுள்ள நட்பு அமைந்த தென்பதனாலே உடம்பின் வேறாக உயிர் ஒன்று உண்டு என்பதும், மனிதன் நித்திரை செய்வதும் விழித்திருப்பதும் மாறி மாறி வருவதுபோல இறப்பும் பிறப்பும் மாறி மாறி வருவனவென்பதும், உடம்பானது வாதபித்த சிலேட்டுமங்களுக்குச் சொந்தமான தெனவும், அதனுள்ளே ஒதுக்குக் குடியாக இருந்த உயிரானது வீட்டுக்குச் சொந்தக்காரரான வாத பித்த சிலேட்டுமங்களாலே தள்ளப்பட்டால் வேறொரு ஒதுக்குக்குடியைத் தேடிச் செல்லுமென்றுந் தெளிவாகக் கூறப்பட்டது. நல்வினை செய்த உயிர்கள் தேவர்களாகித் தேவலோகத்திலே வாழுமென்றும், காம வெகுளி மயக்கங்களாலே பிணிக்கப்பட்ட உயிர்கள் இருளுலகத்திலே வாழ்வன வென்றும், உண்மை ஞானத்தை யடைந்தோர் மீட்டும் வந்து பிறப்பதில்லை யென்றும்திருவள்ளுவர் தெளிவாகக் கூறியிருக்கின்றார்.

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம் போடுயிரிடை நட்பு"(௩௩௮)

"உறங்குவது போலுஞ் சாக்காடுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு" (௩௩௯)

"புக்கிலமைந்தின்று கொல்லோ உடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு" (௩௪௦)

"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்துவிடும்" (௧௨௧)

"ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக்கழுந்தும் அளறு (அ௩௫)

"வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு (௯௧௯)

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவார்
மற்றீண்டு வாரா நெறி (௩௫௬)

என்னும் திருக்குறட் பாக்களை ஆராய்ந்தறிக.

௩

தேவர்கள்தாமும் எக்காலத்தும் நிலை பெற்றிருப்பதில்லை யென்பது பெரியோர் கண்ட முடிபு. நல்வினையின் எல்லையிலே உயிர்போகத் தேவர்கள் மீட்டும் மனிதராக வந்து பிறப்பர். தேவர்களுக்குக் கண்கள் இமைப்பதில்லை; மாலை வாடுவதில்லை. ஆனால் உயிர் போவதற்குப் பதினைந்து நாள்கள் உள எனக் கண் இமைக்கும்; மாலைவாடும். பல நாளாகத் தாம் அநுபவித்த இன்பத்தை விட வேண்டியிருப்பதைக்கண்டு அவர்கள் வருந்துவார்கள். "நோவத் பெரிதுந்துன்பம் நோயினுட் பிறத்தல் துன்பம், யாவதுந் துன்பம் அன்னாய் யாக்கை கொண்டவர் கட்கு என்றான்" எனச் சிந்தாமணி ஆசிரியர் கூறுகின்றார். "பிறந்தோருறுவது பெருகிய துன்பம், பிறவார் உறுவது பெரும் பேரின்பம், பற்றின் வருவது முன்னது பின்னது அற்றோருறுவது" என்று மணிமேகலை கூறும்.

பிறப்பு ஆசையினால் ஏற்படுகிறது. உயிர் உடலை விட்டுப் பிரியும்போது எதனை ஆசைப்படுகிறதோ அதுவே மறு பிறப்புக்கு வித்து ஆகும். இதற்கு ஓர்

உதாரணம் பின்பு தருவோம். மறு பிறப்பு உண்டென்பதற்குச் சில அத்தாட்சிகள் நடந்திருப்பதாகப் பத்திரிகையிலே படித்திருக்கிறோம். பழைய தமிழ் நூல்களிலே பெரியோர்கள் இதற்கு அத்தாட்சியான கதைகள் எழுதியிருக்கிறார்கள். அவை நாம் நம்பத்தக்கனவாக இருக்கின்றன. கோவலன் கண்ணகியுடைய கதையைத் தமிழ் நாட்டிலே எல்லாரும் அறிவார்கள். இந்தக் கதை கட்டுக்கதை அல்ல, கேட்டெழுதிய கதையுமல்ல; நேரிலே கண்டறிந்து எழுதிய கதை. இந்தக் கதை நடந்த காலத்திலே யிருந்த செங்குட்டுவன் என்னும் சேரராஜன் பத்தினித் தெய்வமாகிய கண்ணகிக்குக் கோயில் அமைத்தான். கண்ணகியுடைய கோபத்தினாலே மதுரை எரியும்போது, மதுரைமாநகர்த் தெய்வம் வந்து தோன்றிக் கண்ணகியை நோக்கிப் பின் வருமாறு கூறியது: "அம்மே! கோபந்தணிவாயாக! முற்பிறப்பிலே உன்னுடைய நாயகனாகிய கோவலன் பரதன் என்னும் பெயரோடு சிங்கபுரத்து ராஜாவுக்குப் பணிவிடை செய்துகொண் டிருந்தான். ஒருநாள் அவ்வூர்க் கடைத் தெருவிலே நகை விற்றுக்கொண்டிருந்த சங்கமன் என்னும் வாணிகனைப் பகை யரசனுடைய ஒற்றன் என்று நினைத்துப் பரதன் தனது அரசன் முன்னே இழுத்துக் கொண்டு வந்துவிட்டான். ராஜாவும் ஆராயாது சங்கமனை வெட்டிவிடும்படி கட்டளையிட்டான். கொலையுண்டிறந்த சங்கமனது மனைவி அழுது புலம்பி ஒரு மலையினுச்சியிலே போய் நின்று தன்னுயிரை விட்டாள். தனக்குத் துன்பஞ் செய்தவர்கள் தான் அனுபவித்த துன்பத்தை அடைய வேண்டும் என்று சாபம் இட்டாள். அந்தச் சாபம் இன்று பலித்தது." மதுரை வெள்ளியம்பலத்திலே, இருளிலே, கூலவாணிகன் சாத்தனார் என்னும் புலவர் மதுரைத் தெய்வம் சொன்ன வார்த்தையைக் கேட்டுக்கொண் டிருந்தார். பின்பு அவர் இந்தச் செய்தியைச் செங்குட்டுவனது தம்பியும் தவமுனிவரும் ஆகிய இளங்கோவடிகளுக்குச் சொன்னார். இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்திலே நாம் எல்லாம் உணர்ந்து கொள்ளும்படியாக இந்த விஷயத்தை எழுதிவைத்தார்.

௪

அசோதரம் என்று ஒரு நாடு உண்டு. அந்நாட்டுக்கு அரசன் இரவி வர்மன்; அவன் மனைவி அமுதபதி. இவர்கள் வயிற்றிலே தாரை, வீரை, இலக்குமி என்னும் மூன்று பெண்கள் பிறந்தார்கள். தாரையையும் வீரையையும் துச்சயன் என்னும் அரசன் மணந்துகொண்டான். கங்கைக் கரையிலே அறவண வடிகள் என்னும் பௌத்த முனிவர் இருந்த பொழுது துச்சயனும் தேவிமாரும் வந்து பணிந்தார்கள். பின்பு ஒருநாள் வீரை கள்ளைக் குடித்துவிட்டு மயக்கத்தோடு தெருவிலே சென்றாள். புதிதாகப் பிடித்துக் கொண்டுவரப்பட்ட யானை ஒன்று தெருவிலே அவளைக் கொன்றுவிட்டது. தாரை இச் செய்தியைக் கேட்டு மனக் கவலையடைந்து மேல் மாடியிலே ஏறிக் கீழே குதித்து இறந்து போனாள். இலக்குமி அத்திபதியென்னும் அரசன் மகனாகிய இராகுலனை மணந்தாள். ஒருநாள் ஒரு சோலையினிடத்தே இராகுலனும் இலக்குமியும் இருக்கும்போது சாது சக்கரன் என்னும் பௌத்த முனிவன் ஆகாய மார்க்கமாக வந்தான். இலக்குமி அவனை வழிபட்டனள். இராகுலன் கோபித்து, முனிவனை நோக்கி "நீ யார், இங்கு என்ன பணிவிடை" என்றான். இலக்குமி கையமர்த்தி, முனிவனுக்கு உணவும் நீரும் கொண்டுவந்து கொடுத்தாள். பின்னர்ச் சிறிது காலத்திலே

திட்டி விடம் என்னும் பாம்பின் முன் எதிர்ப்பட்டு இராகுலன் இறந்தான். இலக்குமியும் அவனோடு உடன் கட்டை யேறினாள். மறுபிறப்பிலே தாரை காவிரிப்பூம் பட்டினத்திலே நாடக மகளாகிய சித்திராபதி வயிற்றிலே மாதவி என்னும் பெயரோடு வந்து பிறந்தாள். வீரை கங்கைக் கரையிலுள்ள சம்பை நகரிலே கௌசிகன் என்னும் பிராம்மணனுக்கு மகளாகப் பிறந்து சுதமதி யென்னும் பெயரோடு வளர்ந்தாள். ஒருநாள் இவள் சோலையிலே பூக்கொய்யும்போது காவிரிப்பூம் பட்டினத்திலே இந்திர விழாவைக் காண்பதற்கு ஆகாயமார்க்கமாக வந்த மாருதவேகன் என்னும் வித்தியாதரன் சுதமதியை எடுத்துச் சென்று பின்பு காவிரிப்பூம் பட்டினத்தில் விட்டுவிட்டான். சுதமதி மாதவிக்குச் சிநேகிதி ஆனாள். இலக்குமி மாதவிக்கும் கோவலனுக்கும் மகளாகப்பிறந்து மணிமேகலை என்னும் பெயரோடு வளர்ந்தாள். இராகுலன் சோழ குமாரன் மகனாக வந்து பிறந்து உதய குமாரன் என்னும் பெயரோடு வளர்ந்தான். கோவலன் இறந்தபின் மாதவியும் மணிமேகலையும் உலகைத்துறந்து பௌத்த பிக்ஷுணிகளாகி காவிரிப்பூம் பட்டினத்திலே பௌத்தப் பள்ளியிலிருந்த தவமுதியோராகிய அறவணவடிகளை அடைந்தார்கள். உதய குமாரன் மணிமேகலைமேல் மனம்வைத்திருப்பதை அறிந்து மணிமேகலா தெய்வம் அவளை எடுத்துச்சென்று மணிபல்லவம் என்னும் தீவில் விட்டது. இத்தீவு இலங்கைத் தீவின் வட பாகத்திலுள்ளது. இங்கே புத்த பகவான் இருந்து தருமங்கூறிய ஆசனம் ஒன்று இருக்கிறது. மணிமேகலை இவ்வாசனத்தை மூன்று முறை வலம் வந்து பணிந்த விசேஷத்தினாலே, தனது பழம்பிறப்பை அறிந்துகொண்டாள். முற்பிறப்பிலே தனக்குத் தமக்கையராயிருந்த தாரையும் வீரையும் மாதவியாகவும் சுதமதியாகவும் பிறந்திருக்கிறார்களென்றும் முற்பிறப்பிலே தனக்கு நாயகனாயிருந்த இராகுலனே உதயகுமாரன் என்பதையும் அறிந்துகொண்டாள். இச்செய்தி அறவணவடிகள் கேள்வியுற்று, தாரையையும் வீரையையும் முன்பு கங்கைக் கரையிலே கண்டவராதலின், அவர்களை நோக்கி "கூத்தாடுவார் போல வேறு வடிவம் புனைந்துகொண்டு இங்கு வந்திருக்கிறீர்களோ?" என்றார்.

௫

காசியிலே அபஞ்சிகன் என்றொரு பிராமணனிருந்தான். அவன் மனைவி சாலி வியபிசாரமாகிய குற்றத்தைச் செய்துவிட்டுத் தண்டனைக்குப் பயந்து தெற்கே கன்னியாகுமரியிலே தீர்த்தமாடவந்தாள். வழியிலே இருளிலே குழந்தையைப் பெற்றுவிட்டுத் தன்பாட்டிலே போய்விட்டாள். ஒரு பசு அக்குழந்தையை நாவினால் நக்கிப் பாலூட்டிக் காப்பாற்றியது. ஆபுத்திரனாகிய அக்குழந்தையை வயணங்கோடு என்னும் ஊரிலுள்ள இளம்பூதி என்னும் பிராமணன் எடுத்துத் தன் குழந்தைபோல வளர்த்துவந்தான். அவ்வூர் பிராமணர்கள் யாகத்திற்காக ஒரு பசுவைக் கொண்டுவந்து கட்டிவைக்க, யாதொரு குற்றமுமில்லாத பசுவைப் பிராமணர்கள் கொல்லப் போகிறார்கள் என அறிந்து ஆபுத்திரன் பசுவை அவிழ்த்து ஓட்டிவிட்டான். பின்பு பிராமணர்கள் அவனை ஊரில்நின்று துரத்திவிட்டார்கள். அவன் மதுரைக்குப் போய்ப் பிச்சையெடுத்துச் சாப்பிட்டுக் காலங்கழித்து வந்தான். மாரிகாலத்திலே நடுயாமத்திலே அவன் படுத்திருந்த அம்பலத்திலே சில பிரயாணிகள் வந்து "ஐயா வயிறு பசிக்குது" என்றார்கள். ஆபுத்திரன் அவர்களுடைய துன்பத்தை

நீக்க வழியறியாது மனக்கவலை அடையும் பொழுது செழுங்கலை நியமத்திலே வசிக்கும் தெய்வமாகிய சிந்தாதேவி தோற்றி அவன்கையிலே ஓர் பாத்திரத்தினைக் கொடுத்து "ஏடா துன்பப் படாதே. நாடு பஞ்சமுற்ற காலத்தும் இவ்வோடு பஞ்சம் உறாது. வருந்தி வந்தவர்களது பசிப்பிணியை ஆற்றுவாயாக" என்றாள். அவனும் மகிழ்ச்சியோடு பாத்திரத்தை வாங்கி மக்களுடைய பசிப்பிணியைஆற்றி வருகின்ற காலத்திலே, அவனுடைய நற்செயலை யறிந்த இந்திரன் அவன் முன்னே தோன்றி "உன்னுடைய தானத்தின் மகிமையை நான் அறிந்தேன்; உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்பாயாக;" என்றான். அம்மொழியைக் கேட்ட ஆபுத்திரன் சிரித்து, "இவ்வுலகத்திலே செய்த நன்மையின் பயனை அனுபவித்துக்கொண்டு வாழ்பவர்கள் உனது நாட்டிலுள்ளோர். அதுவன்றித் தருமஞ்செய்வோர், பிறரைக் காப்பாற்றுவோர், தவஞ்செய்வோர், 'நான், எனது' என்னும் பற்று நீங்க முயல்வோர் யாவரும் உன் நாட்டில் இல்லை. அத்தகைய தேவலோகத்தை ஆளுகின்ற இந்திரனே! உன்னிடத்திலே நான் பெறவேண்டிய பொருள் ஒன்றுமில்லை" என்றான். இதைக்கேட்ட இந்திரன் நாடெங்கும் நன்றாக மழை பெய்யும்படி செய்தான். உணவுப்பொருள்கள் நிறைய இருந்தமையினாலே, மக்கள் சூதாட்டத்திலும் களியாட்டத்திலும் பொழுது போக்குபவர்களாகி ஆபுத்திரனை இழித்தார்கள். அவனும் மனம் வருந்திச் சாவக நாட்டிலே பஞ்சம் நடப்பதாகக் கேள்விப்பட்டு அவ்விடம் போவதற்குக் கப்பலேறிச் சென்றான். கப்பல் வழியிலே உடைந்துபோக ஆபுத்திரன் தனித்து மணிபல்லவத்தை அடைந்தான். அத்தீவு மனிதசஞ்சாரம் இல்லாதவிடம். அநேகருக்கு உணவளிக்கும் தெய்வப் பாத்திரத்தை வைத்துக் கொண்டு அங்கிருக்க மனம் பொறாதவனாகப் பாத்திரத்தை ஒரு தடாகத்தினுள்ளே விட்டு "வருடத்திலே ஒரு நாளைக்குத் தோற்றுவாயாக" என்று சொல்லிவிட்டு உண்ணாமலிருந்து உயிர் துறந்தான். இறந்த ஆபுத்திரன் சாவக நாட்டரசன்பூமிசந்திரனது அரண்மனையிலுள்ள ஒரு பசுவுக்கு மகனாகப் பிறந்தான். அவன் பிறந்தநாட்டொட்டு நாட்டிலே மழைபெய்து வளஞ்சிறந்தது. அரசனும் அவனைத் தன் மகனாக வளர்த்துப் பட்டங்கட்டி வைத்தான். அவன் புண்ணிய ராசன் என்னும் பெயரோடு அரசாட்சி புரிந்துவருகிற காலத்திலே, மணிபல்லவத்திலே அவனுடைய பாத்திரத்தைப் பெற்ற மணிமேகலை அவனைக்காண விரும்பிச் சாவகநாட்டுக்குச் சென்று அவனுடைய பழம்பிறப்புச் செய்திகளை யெல்லாம் அவனுக்குத் தெரிவித்தாள். புண்ணியராசனும் கப்பலேறி மணி பல்லவத்துக்கு வந்து அங்குக் கடலோரத்திலே மணலினாலே மறைப்புண்டு கிடந்த தன்னுடைய பழைய உடலைக்கண்டு சிறிது மயங்கிப் பின்பு மணிமேகலையினாலே தேற்றப் பெற்றான். சாவக நாட்டுக்குப் போக விரும்பிய எண்ணத்தோடு உயிர் விட்ட ஆபுத்திரன் அந்நாட்டிலே பிறந்தமை நோக்கத்தக்கது. அஃதன்றியும் தாரையும் வீரையும் பழம் பிறப்பிலே தரிசித்த அறவணவடிகளைப் பிந்திய பிறப்பிலும் தரிசிக்கிறார்கள். முற்பிறப்பிலே உடன்பிறந்தாராயிந்த மூவரும் இப்பிறப்பிலும் ஒன்றுகூடி வாழுகின்றார்கள். தேவராகவோ நரகராகவோ பிறவாமல் உடனே மானிடராகப் பிறக்கும் விதியுள்ளவர்கள் தாமதமின்றி மீட்டும் இவ்வுலகத்திலே தோற்றுகிறார்கள். பற்று எவ்விடத்திலிருக்கிறதோ அவ்விடத்துக்கு வினைப்பயன் கொண்டு செல்லுகிறது.

இலக்குமியிடத்திலே பற்று நீங்காத இராகுலன், உதயகுமாரனாகப் பிறந்து இலக்குமியாகிய மணிமேகலையிடத்திலே மனம் வைக்கிறான்.

௬

கோவலனும் கண்ணகியும் மதுரையிலே மாண்டுபோனசெய்தியைக் கேள்வியுற்றுக் காவிரிப்பூம் பட்டினத்திலே கோவலனுடைய தாயும் கண்ணகியுடைய தாயும் உயிர்விடுகிறார்கள். மதுரையிலே கோவலனையும் கண்ணகியையும் ஆதரித்த மாதரி என்னும் இடைச்சியும் உயிர் விடுகிறாள். இவர்கள் மூவருக்கும் தேவர்களாகிக் கோவலன் கண்ணகியோடு தேவலோகத்துக்குச் செல்லும் விதியில்லை. மீட்டும் மனிதராகப் பிறக்கவேண்டிய இவர்களைக் கண்ணகிக்கு முதலிலே கோயிலமையப் போகின்ற இடமாகிய வஞ்சிமா நகரத்திலே பிறக்கும்படி இவர்களுடைய கடைசி நேரத்து அவாவானது தூண்டுகிறது. கோவலன் தாயும் கண்ணகி தாயும் ஒருவர்மேலொருவர் நிறைந்த பற்றுள்ளவர்களாதலினாலே அரட்டன் செட்டியினது மனைவியுடைய வயிற்றிலே இரட்டைப்பிள்ளைகளாகப் பிறக்கிறார்கள். மாதரி என்னும் இடைக்குலப் பெண் கண்ணபிரானையும் பலராமனையும் பின்னைப் பிராட்டியையும் நினைத்துக் குரவைக் கூத்து ஆடிய நாளிலே, கண்ணகி இறந்துபோன செய்தி கேட்டு உயிர்விட்டாளாதலினாலே, வஞ்சிமா நகரிலே திருமாலுக்கு அடிமை செய்து திருவடிபிடிப்போனாகிய சேடக்குடும்பியின் மகளாக வந்து பிறந்தாள்.

கண்ணகியாருக்குக் கோயிலமைத்துக் கடவுண் மங்கலஞ் செய்கின்ற நாளிலே அரட்டன் செட்டியினது மனைவி பெற்ற இரட்டைப் பெண்களும் சேடக்குடும்பியின் சிறு மகளும் அங்கு வந்திருந்தார்கள். அத்தருணத்திலே அங்கு வந்திருந்த பிராமணப் பெண்ணாகிய தேவந்திகை தெய்வமுற்று ஆடி "மங்கலாதேவி கோயிலுக்கு அப்புறத்தேயுள்ள மலையிலே ஒரு சுனையிருக்கிறது; அந்தச் சுனையின் நீரைக்கொண்டுவந்து இந்த மூன்று குழந்தைகளையும் முழுக்காட்டினால், அவர்கள் பழம்பிறப்பு நினைவு வந்து சில செய்தி சொல்லுவார்கள்" என்று தெரிவித்தாள். சேரன் செங்குட்டுவனும் சபையிலிருந்தோரும் வியப்பெய்தித் தேவந்திகையின்மீது ஆவேசமுற்ற பாசாண்டச் சாத்தான் என்னுந் தெய்வஞ் சொன்ன குறிப்பின்படி அந்தச் சுனை நீரைக் கொண்டுவந்து குழந்தைகள் மூவரையும் முழுக்காட்டும்படி செய்தார்கள். அப்பொழுது அரட்டன் செட்டி குழந்தைகளுள் ஒன்று "என் அருமை மகளே, உன் காதலனாகிய கோவலன் ஒழுங்குதவறி நடப்பதைக்கண்டு நான் பலநாள் இகழ்ந்து கூறினேன்; உனக்கு இரக்கமான வார்த்தைகளைச் சொன்னேன்; தாயாகிய என்னையும் நோக்காது சுற்றத்தார் ஒருவருமில்லாத அயல் நாட்டுக்கு உன்கணவன் பின்னாகச் சென்று கொடிய துன்பமெய்தினையே! என் மகளே! எனக்குத் துணையான மாதே! நீ வாராயோ?", என்று கூறியது. மற்றக் குழந்தை "ஆ! என்மகனே! என்னுடைய ருந்த கற்பிற் சிறந்த நங்கையாகிய கண்ணகியையும் அழைத்துக்கொண்டு, இருளிலே வழி நடந்த கொடுமையான துன்பத்தை யடைந்த என் மகனே வாராயோ?" என்றது. சேடக்குடும்பியின் குழந்தை "வையை ஆற்றிலே தண்ணீர் எடுத்துவரச் சென்றேன்; திரும்பி வரும்பொழுது தெருவில் நின்ற சிறுவர்கள் உனக்கு நேர்ந்த கதியைச் சொன்னார்கள், இளையோய், என்னப்பா! நீ எங்கொளித்தாய்?" என்றது. மழலைச் சொற்

பேசும் மூன்று வயதுக் குழந்தைகள் இவ்வாறு முதியோரைப் போன்று சொன்ன வாசகங்களைக் கேட்டு எல்லாரும் அதிசயித்தார்கள். அப்பொழுது அங்கிருந்த மாடலன் என்னும் பிராமணன் சேர மன்னனை நோக்கி, "அரசே! கோவலனும் கண்ணகியும் தெய்வ உரு வெய்தினர்; அவர்களோடு உடன் செல்வதற்கு வேண்டிய தவத்தைக் கோவலன் தாயும் கண்ணகி தாயும் மாதரி என்னும் இடைக் குலப் பெண்ணும் செய்திலாதலின், கண்ணகி மேற்கொண்ட அன்பின் வயப்பட்டு இவ்வஞ்சிமா நகரத்திலே வந்து பிறந்தனர். இறந்தோர் பூமியிலே பற்றுள்ள விடத்திலே மீட்டும் வந்து பிறக்கின்றனர்" என்று கூறி இவ்வுண்மைகளை அரசனுக்குத் தெளிவு படுத்தினன்.

(தொடரும்)

---

# மன்னிக்கும் இயல்பு

(சு. வி.)

தவறுதல் மனித இயல்பு. குறையினைச் செய்பவன் மனிதன். அதே குற்றத்தினை மன்னிப்பவனும் மனிதன் தானே. மனிதன் மனிதனாகவும் தெய்வமாகவும் இருப்பவன் என்பது இதிலிருந்து புலப்படுகின்றது. இயல்பினில் மனிதன் தெய்விகம் பொருந்தியவன் என்று ஆன்றோர்களது அனுபவங்களும் சமய நூல்களும் எடுத்துக்கூறுகின்றன வெனினும், அவனது வாழ்க்கை, கரடுமுரடான, குற்றம் தவறுதல் முதலிய கூரிய கற்கள் பொதிந்த வழிகளினூடே செல்லும்படி அமைந்துள்ளது. குற்றமேயற்ற மனிதன் எவரையும் நம்மால் சுட்டிக் காட்டமுடியாது. குறைவே இல்லையெனில் அவன் ஏன் உலகில் வாழுதல் வேண்டும்? குறைபாடு இருப்பதனல் தான் மக்கள் உலகில் இருந்து வாழ நேரிடுகிறது.

பெரியவர்கள் என்றும், உலக மதிப்பினுக்குரியவர்கள் என்றும் கூறப்படுபவர்களிடத்தும் கூட யாதாமும் ஒருவகையில் ஒரு குறைபாடு இருக்கக் காண்கிறோம். 'யானைக்கும் அடிசறுக்கும்" என்னும், பழமொழி இதனை நன்கு விளக்கும் பொன்மொழியல்லவோ?

எல்லோருமே தவறுதல் செய்கின்றோம்; எல்லோருமே குற்றங்கள் புரிகின்றோம். என்றாலும் எவன் ஒருவன், தன் குற்றங்கள் எடுத்துக்காட்டப் பெற்ற போது அவற்றினைக் ஏற்றுக்கொள்ளுகின்றானோ, எவன் ஒருவன் தன்னைப் போல் ஏனையோரும் குற்றம் புரியும் சுபாவம் உள்ளவர் என்று உணர்ந்து அவர்களைக் குற்றம் செய்ததற்காகக் கோபிக்காது கருணைக் கண்கொண்டு காண்கிறானோ அவனே சாலச் சிறந்தவனாவானன். ஆனல் மக்கள் மதியிழந்தவராகி, தாங்களும் ஏனையோர் போன்று குற்றம் புரிபவரே என்பதனைமறந்து, செறுக்குற்று, மன்னிக்கும் இயல்பினைக் கைவிட்டுத் தடுமாறுகின்றதைப் பலமுறை நாம் காண்கின்றோம். இது வேண்டப்படுவதன்று.

* * *

இங்கு ஒரு கேள்வி எழுகின்றது. உண்மையில் மனிதன் தெய்விகம் பொருந்தியவன் என்றால் ஏன் அவன் குற்றங்கள்

புரிகின்றான்? தவறும் இயல்புடைய மனிதனை எப்படித் தெய்விகத்தோடு ஒப்பிட்டு நோக்குதல் முடியும்? இக்கேள்வி அறிவுடைய மக்கள் பலருடைய மனத்தை வாட்டி வருகின்றது என்பது உண்மையே. இதற்குச் சமயம் கூறுவது யாதெனில் "வெளித் தோற்றத்துக்குக் காணப்படும் மனிதனே குற்றம் புரிபவன், பாபம் இயற்றுபவன் ஆவான்; ஆனால், உண்மையில் மனிதனது உள்ளியல்பு பாபரகிதமானது. குறைவற்ற பூரணத்தன்மை வாய்ந்தது" என்பதாகும்.

தன்னுடைய உள்ளியல்பினை ஓராத இடைவெளியிலுள்ள மனிதனே குற்றங்களும், குறைபாடுகளும் உடையவனாக இருக்க நேரிடுகின்றது. ஞானம் உதிக்கும் அளவுக்கு—மெய்யறிவு தோன்றும் அளவுக்கு வெளிமனிதன் மறைந்துவிடுகின்றான்; அவனது உள்ளியல்பு எல்லாக் குற்றங்குறைகளையும் கடந்து களங்கமற்றுத் தனது பூரண ஜோதியுடன் பிரகாசிக்கின்றது. ஆகையாலேயே 'உன்னை நீ அறிவாயாக' என்று நம் சாஸ்திரங்கள் சதா சாற்றிக்கொண்டிருக்கின்றன.

* * *

ஏன் மக்கள் குற்றம் புரிகின்றார்கள்? பொதுவாகத் தெரியாத்தனத்தினாலேயே. அவர்கள் அறிவு, அறியாமையென்கின்ற மேகத்தினாலே மூடப்பட்டுள்ளது; அஞ்ஞானத்தால் குழப்பம் அடைந்துள்ளது. ஆகையினால்தான் நன்னெறி யெதுவென்பதனை அறிந்து அதன்படி நடவாது குற்றம் பொருந்திய மார்க்கத்தினைப் பின்பற்றுகின்றனர். பொதுப்பட இத்தகைய மக்கள் பலரது செயல்களைச் சிறிது ஆராய்ந்து பார்க்கும்போது, அவைகள் ஒழுங்கற்றவைகளாக இருக்கக் காண்போமேயல்லாமல், ஒழுக்கயீனமான காரியங்களாக இருக்கக் காணமாட்டோம். அவைகள் பித்து அல்லது பேதையின் செயல்களாக இருக்கக் காண்போம். பகுத்தறிவும் புத்தியும் உள்ள சாதாரண மனிதன், கெட்ட பழக்கமற்றவனாயிருந்தால், அவன், நன்மை இது தீமை இது என்பதனை அறிந்து, நல்வழியில் நடக்கக்காண்போம். அவனுள்ளிருக்கும் தெய்விகம் தீய வழியைப் பின்பற்றுதல் தவறு என்று எடுத்துக் காட்டிக் கொண்டிருப்பதால் சாதாரணமாக அவன் தீயதைத் தேர்ந்தெடுக்காது நல்லதை நாடுகிறான்.

ஆனால் சிலரிடம், ஆழ்ந்து பதிந்து அவரது இரண்டாவது இயல்பாக அமைந்துள்ள தீய சுபாவம், சில நேரங்களில் அவர்களை ஈர்த்துச் சென்று தவறுதல் செய்விக்கின்றது. அவரது ஹிருதயம் தவற்றினை எடுத்துக் காட்டுகின்றது; எனினும் தீய காரியங்கட்கு அடிமைப்பட்ட சரீரம் அவ்வார்த்தைக்குச் செவி சாய்க்க முடியாமல் தவிக்கின்றது. எவ்வளவு முயன்றாலும், எவ்வளவுதான் உண்மையில் வருத்தப்பட்டாலும் அவை யனைத்தும் பயனற்றுப் போகின்றன. புயல் காற்றில் அகப்பட்ட சிறு துரும்பு போல், அத்தகைய மனிதர் தம் முயற்சியின் வலியிழந்தவராய்த் தீய காரியங்களில் சிக்குண்டு அல்லற்படுகின்றார்.

இவைகளை யெல்லாம் காணும் நாம் கண்டித்தல், குரூரமாய் நடத்தல் ஆகியகுணங்களை அகற்றிப் பொறுமையும் அநுதாபமும் உடையவர்களாவோம். கண்டித்தல் வெகு சுலபம்; ஆனால் மன்னித்தல் வெகு சிரமம். நம் வாழ்க்கை விதி மன்னித்தலை அடிப்படையாகக் கொண்டிருத்தல்வேண்டும். ஏன் எனில் தவறுதல் மனித சுபாவம்; மன்னித்தல் தெய்வ சுபாவமாகும். மன்னித்தல் உலகினைப் புனிதப்படுத்தும்; மேன்மையையும் சந்தோஷத்தையும் பெருகச் செய்யும்.

கிருஸ்துவ நூலிலே இதனை விளக்கும் அழகிய கதையொன்றுளது. கிருஸ்து

நாதர் முன்னிலையில் ஒரு ஸ்திரீ, அவளி ழைத்த வியபசாரமாகிய குற்றத்திற்காகக் கொண்டுவந்து நிறுத்தப்படுகின்றாள். கிருஸ்துநாதர் பரிசுத்தமே வடிவெடுத்து வந்த உத்தம முனிவர். அம்முனிவர் அப் பெண் பிள்ளையின் செயலுக்காக அவளை முனிந்தாரில்லை. பின் என்ன செய்தார்! அன்பே வடிவினராகிய அவர், அவ்விதக் குற்றத்துக்காக அவள்மேல் கல் லெறிந்து அவளைக் கொல்லக் காத்துக் கொண்டிருந்த ஊர் மக்களைப் பார்த்து "உங்களில் எவனொருவன் தனது வாழ்க் கையில் எந்தக்குற்றமும் செய்யவில்லையோ அவன் அவள் மீது முதன் முதலாகக் கல் லெறியட்டும்" என்று கூறினர். உடனே ஒவ்வொருவராகப் பின் வாங்கத் தொடங்கி னர். மானிடராகப் பிறந்த எவர்தான் குற்றமற்ற வாழ்க்கையை வாழமுடியும்?

எனவே எப்போதுமே குறைகூறுதல், கண்டித்தல் நன்மையைத் தருகிறதில்லை. அப்படிச் செய்தல் எரிகிற வீட்டின்மேல் எண்ணெயை ஊற்றுவதற் கொப்பாகும். கண்டிப்பவனும் கண்டிக்கப்படுபவனும் ஆகிய இருவரும் கீழ்மையுறுகின்றனர். குற்றமோ பாவமோ புரியும் மக்களைக் காண நேர்ந்தபோது அவர்களைக்கண்டிப் பதைக் காட்டிலும் அவர்கள் செயலுக்கு வருத்தமும் அநுதாபமும் காட்டி அவர்கள் நல்வழியில் செல்லுமாறு உதவுதலே வேண்டப்படுவதாகும். கூரிய வாளினைப் பார்க்கிலும் கூர்ந்த அன்புப் பார்வை யொன்றேபோதும். அநுதாபம், தண் டனையினும் பார்க்க மனிதனைத் திருத்தச் சிறந்த மார்க்கமாகும்.

க்ஷமித்தல் அல்லது பொறையுடைமை என்னும் இவ்வருங்குணம் பிறமக்களோடு பழகும் ஒவ்வொருவரிடத்தும் இருக்க வேண்டுவது மிக அவசியம். நாம் ஏனை யோரை, அவர்களது குற்றத்திற்காக மன்னிக்க வில்லையென்றால், பிறரும் நம் குற்றத்தினை மன்னிக்க வேண்டும் என்று நாம் எதிர்பார்ப்பதற்கில்லை. ஆனால் அதுதான் பொதுப்படக் கிடை யாது. பொதுப்பட நம் குற்றத்தினைப் பிறர் காணாது மறைக்கவும், காண நேர்ந்தால் அவர்கள் அதனை க்ஷமிக்கவும் வேண்டும் என்று நாம்விரும்புகின்றோம்.

* * *

மன்னிக்கும் குணம் உலக வாழ்க்கை யில் பெரிதும் பிரயோசன மாவதுபோல, ஆத்மீய வாழ்க்கைக்கும் அது அவசியம் வேண்டப்படுகிறது. ஆத்மீய வாழ்க் கைக்கு மன்னிக்கும் இயல்பு ஏன் வேண் டும் என்ற சந்தேகம் எழலாம். மன்னிக் கும் இயல்பில்லாதவன் ஏன் ஆத்மீய வாழ்க்கையில் உயர்ந்தவனாக இருக்க முடியாது? "...ஆகையால் நான் கூறுவது என்னவென்றால் நிவேதனப் பொருள் களோடு ஆலயத்துக்குவரும்போது, உன் சகோதரன் ஒருவன் உனக்கு மாறாக இருக்கின்றான் என்று ஞாபகம் வந்தால், நிவேதனப் பொருளை அவ்விடமே வைத்துவிட்டு, நேராக அந்நண்பனிடம் செல், அவனைத் திரும்பவும் சிநேகிதப் படுத்திக்கொள். அதன் பிறகே வந்து நீ தேவனுக்கு ஆராதனை செய்யவேண்டும்" என்று ஏசுநாதர் வெகு அழகுபட எடுத் துக் கூறுகின்றார்.

துவேஷமுள்ள விடத்தேதான் க்ஷமிக் கும் குணம் காணப்படமாட்டாது. துவே ஷம், துவேஷிக்கப் படுபவனைப் பார்க்கி லும் துவேஷிப்பவனையே பாதிக்கின்றது. அன்போ அல்லது வெறுப்போ எங் கிருந்து உதிக்கின்றதோ அவ்விடத்துக்கே அது திரும்பவும் வந்து சேர்கின்றது. இது மேலெழுந்த தோற்றத்துக்குக் காணப்படாதுபோயினும் இயற்கையின் விதியே யாகும்.

நாம் பிறரை நேசித்தால் அனைவரும் நம்மை நேசிப்பார். நாம் பிறரை வெறுத்

தால் பிறரும் நம்மை வெறுப்பார். "அஹிம்ச அப்ரதிஷ்டாயாம் தத்ஸந்நிதௌ வைரத்யாக:" என்கின்றார் யோக சூத்திரத்திலே பதஞ்சலி முனிவர். அதாவது அஹிம்சை நிலைபெற்றால் அவனுடைய முன்னிலையிலே பிறருடைய விரோதமானது நின்றுவிடும் என்பது அச்சூத்திரத்தின் பொருளாகும். இது வெறும் சூத்திரம் மாத்திரமல்ல; வேண்டும் எனில் இதன் உண்மையை வாழ்க்கையில் எவரும் அநுசரித்து பிரத்யக்ஷமாக அறிந்துகொள்ளலாம். எவ்வளவுக்கு நாம் பிறரை மன்னிக்கின்றோமோ, எவ்வளவுக்கு அதிகமாக பிறரிடம் அன்பு செலுத்துகின்றோமோ அவ்வளவுக்கு நம்மிடம் தெய்வீகம் பிரதிபலிக்கும்.

*　　*　　*

பிறர் நம்மாட்டு மாச்சர்யம் கொண்டிருக்கிறார்கள் என்றால் நாமும் ஏனோ அவர்கள் மீது பொறாமை கொள்ளவேண்டும்? பழிவாங்குவது காட்டுமிராண்டிகள் குணம்; அது நாகரிகமக்கள் என்று சொல்லிக் கொள்பவரிடத்து இருப்பது ஏற்றதன்று. நாகரிகம் வாய்ந்தவன் என்னும் போதே அவன் உயர்ந்த ஆத்மிய நியதிகளுக் குட்பட்டவன் என்பதாகிறது. அதனால்தான் "பிழை பொறுத்தல், அன்பு என்பவற்றின் மூலம் பகைமையினை வெல்லு; தீமையை நன்மையால் வெல்லு" என்று போதிக்கப் படுகின்றது.

நதியோரம் தியானம் செய்துகொண்டிருந்த துறவியர் ஒருவர் ஒரு நாள் தண்ணீரின் சுழலில் சிக்குண்டு திணறிக் கொண்டிருந்த தேளொன்றினைக் கண்டார். அன்புருவாய அத்துறவியார் தேளினைக் காப்பாற்றப் பெரிதும் முயன்றார். முயன்ற ஒவ்வொரு முறையும் அத்தேள் அவரைக் கொட்டிவிட்டது. மும்முறை முயன்று பார்த்த அவர் கடைசியில் வெறுப்புக்கொண்டு அதனைத் தண்ணீரில் சாவ விட்டுவிடுவதே நலம் என்று எண்ணினார். அந்த நேரத்தில் "தேள் கொட்டத்தான் செய்யும். அது அதன் இயல்பு. நீரோ க்ஷமித்து அதனிடம் அன்புகாட்ட வேண்டும்" என்றொரு வாக்கு அவர் செவியில்பட்டது. இவ்வனுபவம் அத்துறவியருக் கொரு பெரும்படிப்பினையைத் தந்தது. அவர் இவ்வுயர்ந்த கருத்தைத் தம் வாழ்க்கையில் என்றும் மறந்தாரில்லை.

நமது இலக்ஷியத்திற்காகச் சில நேரங்களில் நாம் துன்பமுற நேரிடுகிறது. அவ்விதம் வந்துறும் துன்பத்தினிலே ஓர் தனிப்பட்ட இன்பம் இருக்கக் காண்போம். அவ்வின்பத்தின் உயர்வு அளவிடற்கரியது; எடுத்துரைக்க இயலாதது. மகான்கள் பலர் அறிவில்லாத மூடமூர்க்க மக்களால் துன்புறுத்தப் பட்டபோது அவர்களைத் தம் இலக்ஷியத்தினின்றும் அணுவளவும் விலகச் செய்யாதிருந்தது இவ்வின்பமேயாம்.

பிரஹ்லாதாழ்வாரது சரிதம் இதற்கோர் எடுத்துக் காட்டாக விளங்குகின்றது. எவ்வளவு இன்னல்கள், எவ்வளவு துன்பங்கள் அப்பால பக்தர் பட்டார்! என்றாலும் தம்மைத் துன்புறுத்தியவர் மாட்டு எத்தகைய வெறுப்பும் அவருக்குத் தோன்றவில்லை; எவ்வித சலிப்பும் அவர் காட்டவில்லை. அக்கஷ்டங்களெல்லாம் அவருக்கு அளவில்லாத இன்பந் தரவேதான் அக்கஷ்டங்களை அவர் கஷ்டங்களாகப் பொருட்படுத்தாது தமது இலக்ஷியத்தில் சிறிதும் பிறழாது நிலைத்து நின்றார்! நெருப்பிட்டுக் காய்ச்சும் அளவுக்குப் பொன் மேனிதருகிறது. அதேபோல, இச்சிறுபால பக்தரது ஆத்மீய சக்தி, கஷ்டங்கள் அதிகம் ஆகும் அளவுக்கு அதிகமாக வெளித்தோன்றிக் கொண்டு வருகின்றது.

கடைசியில் என்ன காண்கின்றோம்! அவரது இலக்ஷியத்திற்கு எதிராக நின்ற தம் தகப்பனார் கொல்லப்படுகிறார். இறைவன் பிரத்யக்ஷமாகிறார். பிரகலாதர் இறைவனைப் போற்றுகின்றார்! அவர் இறைவனை வேண்டுவது என்ன! குற்றம் புரிந்த தம் தகப்பனை ரக்ஷித்து அவரது ஆத்மன் சாந்த மடையும்படி பிரார்த்திக்கின்றார். உயர்ந்த உத்தம பக்தரிடமிருந்தல்லாமல் வேறு எவரிடமிருந்து இவ்வித பிரார்த்தனை வரக்கூடும்?

* * *

அன்பு, பிழை பொறுத்தல் ஆகிய இவ்விரு குணங்களும் உலகில் பிறந்த சகல ஞானியரிடத்தும் இருக்கக் காண்கின்றோம். புத்தர் ஒருவர் அன்பு காரணமாகத் தமது சரீரத்தினையே பசிகொண்ட புலி யொன்றினுக்குக் கொடுக்கின்றார்! உலகினை உய்விக்க சிவபிரானார் ஆலகால விஷத்தை யுண்டு நீலகண்டன் என்னும் பெயர் பெற்று விளங்கவில்லையா? தம்மைச் சிலுவையி லறைந்த மக்களைப் பார்த்து ஏசுநாதர் என்ன சொல்லுகிறார்! "எந்தாய்! இவர்கள் அறியாது இழைக்கும் குற்றத்தைப் பொறுத்தருள்வாய்! இவர்களை ரக்ஷிப்பாய்" என்றல்லவோ பிரார்த்திக்கின்றார்! என்னே இம்மகான்களது க்ஷமிக்கும் இயல்பு!

"அடக்கத்தில் அருகம்புல் போலவும், பொறுமையில் மரத்துக் கொப்பாகவும் இருப்பாய். அன்பு காட்டவேண்டிய இடத்தும், மரியாதை காண்பிக்க வேண்டிய விடத்தும், எந்தப் படாடோபமும் இன்றி அவற்றினைச் செலுத்துவாய். இதுவே இறைவனை எய்துவதற்குச் சிறந்த வழியாகும்." இவ்வுயர்ந்த உபதேசத்தை மாத்திரம் நமது வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகுவோமானால் உண்மையில் மக்களாக விருக்கும் நாம் தெய்வமாக மாறிவிடுவோம்.

ஆத்மாவே சகல உயிர்களாகவும் விகசித்துள்ளது. ஒரே உயிரே எல்லா உயிர்களாகவும் விரிந்துள்ளது. ஒரே சரீரத்திலுள்ள அங்கங்கள் ஒன்றுக்கொன்று பொறாமை, கோபம், வெறுப்புக்கொள்ளக் காண்கின்றோமா? ஒருபோதும் இல்லை. அதேபோலப் பிரபஞ்சத்திலுள்ள யாவுமாகத் தோற்றமளிக்கும் இந்த ஒரே ஆத்மனிடம் பகைமைக்கும் பொறாமைக்கும் இட மெங்ஙன மிருக்கக்கூடும்? தன்னைத்தான் வெறுத்த மனிதன் இல்லை. தன்னை நேசிப்பதால் மனிதன் சகலத்தையும் நேசிக்கிறான். சகலத்தினிடத்தும் அன்பு காட்டுவதால் மனிதன் தன்னிடமே அன்பு காட்டுகிறவனாகிறான். எனவே இவ்வுண்மையை மறவா திருப்போமாக. ஞானியர் ஒருவரை சில முரடர்கள் நையப்புடைத்துவிட்டுப் போய்விட்டனர். உலக நினைவற்று விழுந்துகிடக்கும் குருநாதனைக் கண்ட அவரது சிஷ்யர்கள் அவருக்கேற்ற சிகிச்சைகள் செய்து தமது குருநாதனுக்கு உலக உணர்வு கொண்டு வருகின்றார்கள். தமது குருநாதனுக்கு உலக உணர்வு பூரணமாக வந்திருக்கிறதா என்பதனைப் பரிசோதிப்பதன் நிமித்தம் சிஷ்யர்கள் அவரைப் பார்த்து, சிகிச்சை செய்யும் தாங்கள் யார் என்று தெரிகிறதா என்று கேட்டார்கள். உடனே ஞானியார், 'ஏன், என்னை எந்த ஆத்ம சொரூபிகள் அடித்தனவோ, அதே ஆத்ம சொரூபிகளே இப்போது எனக்குச் சிகிச்சை செய்து வருகின்றன" என்றார்.

# ஸ்ரீ துரியாநந்த சுவாமிகளது கடிதம்

ஸ்ரீ ஹரி : சரணம்

கன்கல்.

ஸ்ரீமான்—,

...சென்ற துவாதசியுடன் நம்முடைய பகவத் கீதை அத்யயனம் பூர்த்தியாயிற்று. இப்பொழுது நான் சங்கரபாஷ்யத்துடன் வேதாந்தத்தையும் படிக்க ஆரம்பித்திருக்கிறேன். பகவத்கீதையின் ஸாரமென்ன என்று என்னை நீ கேட்டிருக்கிறாய். ஸ்ரீராமகிருஷ்ண தேவர் அதைப்பற்றி என்ன சொல்லியிருக்கிறார் என்பதை நீ அறிந்திருப்பாய் என்று நினைக்கிறேன். "கீதா கீ - தா - கீ - தா என்று நாலைந்துதரம் உச்சரித்தால் த்யாகீ, த்யாகீ என்று பிரதிபலிக்கும். ஆகையால் பகவத்கீதையின் ஸாரம் எல்லாம் 'த்யாகம்' என்ற ஒரே கருத்தைக் கொண்டதே யாகும்" என்று அவர் சொல்வதுண்டு. அது முற்றிலும் உண்மையே. பகவத்கீதையை எவ்வளவு படித்தபோதிலும், அதிலிருந்து நாம் கற்றுக் கொள்வது என்னவென்றால், எல்லாவற்றையும் ஈசனிடம் அர்ப்பணம் செய்ய வேண்டும் என்பதே யாகும். வேறு சிலர், 'நிஷ்காம பாவனையுடன் எல்லா கர்மங்களின் பலனையும் ஈசனிடம் ஸமர்ப்பித்துவிட வேண்டுமென்பதே கீதையின் உபதேசம்' என்று சொல்லுகிறார்கள். இதைவிட நாம் வேறு என்ன செய்ய வேண்டியிருக்கிறது? பகவானே இவ்விதம் சொல்லவில்லையா.

'குந்தி புத்ர! நீ செய்யும் ஒவ்வொரு கார்யத்தையும் என்னிடமே அர்ப்பித்துவிடு' என்று? இதைமட்டும் செவ்வனே செய்து முடிக்கத் திறமையிருந்தாலே போதுமானது. ரொம்பப் பிரயாசைப் பட்டாலொழிய இந்நிலையை எய்த வியலாது முடியவில்லையே என்று ஊக்கத்தைக் கைவிட்டுவிடக் கூடாது. பகவானே சொல்லியிருக்கிறார் :

"இந்த ஸித்தியை அடைவதற்குப் பல ஜன்மங்கள் பிடிக்கும். அதன் பிறகே பரமபதத்தை யடையக்கூடும்." இந்த ஜன்மத்தில் கைகூடாவிட்டால் இன்னொரு பிறப்பில் ஸித்தியடையக் கூடும். அதற்காக முயற்சியை இழக்கக் கூடாது. இலக்ஷியத்தை மறக்காமல் விடாப்பிடியாக அப்பியாசம் செய்து வரவேண்டும். எப்பொழுதாவது ஒரு சமயம் காரியம் கைகூடவே செய்யும். கடைசி ஜன்மத்தில் மனிதன் தெய்வீக ஸம்பத்துடன் பிறப்பான். அவனுடைய ஸம்ஸ்காரங்களெல்லாம் மிகத் தூய்மையாயிருக்கும். அந்த ஜன்மத்திலே அவனுக்கு ஈச்வர தர்சனம் கிடைக்கும். பகவானிடம் ஆத்ம ஸமர்ப்பணம் செய்து கொள்வதும், தன்னுடைய அஹங்கார அபிமானங்களைத் தியாகம் செய்வதுமே கீதையின் ஸார மர்மங்கள். இதுவே என்னுடைய நிச்சயமான அபிப்பிராயம். ஸம்பூர்ணமாகத் தன்னை ஈசனிடம் ஒப்படைத்து விட்டு, வேறு ஒரு பொருளின் மீதும் பற்று வைக்காமல் இருக்க வேண்டு மென்பதே கீதையின் உபதேசம். இவ்வாறு செய்தாலொழிய மனிதப் பிறவி எடுத்தது பூர்த்தியாகாது. கடவுள் மெத்த தயாளகுண முடையவர். அவரை நம்பியிருப்போர்க்கு வேண்டியதெல்லாம் அவரே செய்து தருகிறார். கீதையில் இத்தகைய ப்ரதிக்ஞையையும் அவர் செய்துள்ளார். அவரை நம்பி கிடப்போர்க்கு ஒரு குறையு மில்லை. 'न मे भक्तः प्रणश्यति' 'எனது பக்தனுக்கு ஒருநாளும் அழிவில்லை', 'न हि कल्याणकृत् कश्चित् दुर्गतिं तात गच्छति' 'ஸத் கர்மம் செய்வோர் ஒரு நாளும் துர்க்கதிக்கு உள்ளாகார்' என்பது போன்ற பிரதிக்ஞைகளைப் பல விடத்தில் அவர் செய்துள்ளார். இதுவும் கீதையிலுள்ள ஒரு ரகஸ்யம் என்று சொல்ல வேண்டும். என் அன்பும் ஆசீர்வாதமும் உனக்குண்டாகுக!

இங்ஙனம்,

துரியானந்தா.

# நமது சிகர ஜோதி

இப்பகுதியில் :—'பிரார்த்தனையின் அவசியமும் பயனும்' பிரார்த்தனை அவசியமும், அதனாலேற்படும் பயனும் இக் கட்டுரையில் வெகு அழகுபட எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை—இக்கட்டுரையின் மூலமாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரது உயர்ந்த துறவு வாழ்க்கை ஒருவாறு வெளியாவது காண்போம். 'ஆரம்ப சாதகனது ஒழுக்க வாழ்க்கை'—ஆத்மீய வாழ்க்கைக்கான தூய்மையின் அவசியத்தினையும் அதனை அடையும் வழியையும், அவ்வழியில் ஏற்படும் நுண்ணிதான இடுக்கண்களையும் ஸ்ரீ யதீஸ்வரானந்த சுவாமிகள் இக்கட்டுரையில் வெகு தெளிவுபட எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். 'நாராயண பிரானந்தன்'—இவ்விடத்தே, ஸ்ரீ சித்பவானந்த சுவாமிகள் எதற்கும் அஞ்சா நெஞ்சம் படைத்த ஓர் அற்புத ஞானியரது சரிதத்தை வெகு அழகுபட எடுத்துக் காட்டுகின்றார்கள். 'மறுபிறப் புண்மை'—ஸ்ரீ விபுலானந்த சுவாமிகள் இக்கட்டுரையில் சென்ற மகா யுத்தத்திற்குப்பின் மேனாட்டில் ஏற்பட்ட சில அநுபவங்கள், சில பிறவிகளில் தோன்றும் விபரீத நிகழ்ச்சிகள், சரித்திர புராண சம்பந்தப்பட்ட கதைகள் போன்ற பலவற்றின் மூலமாக மறுபிறப்பின் உண்மையினை எடுத்து விளக்குகின்றார்கள்.

## மிகப் பெரியார் விழையும் பேறு

சோகமுற்ற பார்த்தனது துயரொழிக்கும் வகையானே, அனைத்துலகிற்கும் மோகத்தைத் தவிர்த்தருளும் ஞான மொழி பேசிய கண்ணபிரான் ஏழாம் அத்யாயத்தில் 'புண்ணியோராய நால்வகை மக்கள் என்னைப் போற்றுவர்; அவர்களாவார், துன்ப முற்றவரும் பேறினை இச்சிப்போரும், செல்வத்தை விழைவோரும், ஞானியரும் ஆவர்' என்றுரைத்தார். பின், "இந் நால்வகை அடியார்களுள்ளும், ஒரு நிலையுற்றவனும் என்னிடத்தே பக்தியுற்றவனுமான ஞானி மேலோன்" என்றார்; ஏனெனில், ஞானியொழிந்த மற்றவர் தாம் தாம் கருதும் பயன் பெறுமளவும் இறைவனை நாடுவார்; பயன் பெற்றபின் அவனைக் கருதா ராதலான். "ஞானிக்கு என்மேல் மிக்க பிரியம் உண்டு; எனக்கும் அவன்மீது பிரியம் உண்டு" என்றும் அவனது தனிச் சிறப்பைக் கூறியபின், அந்நால்வகை மக்களும் உதார குணமுடையவர்களே என்று, வள்ளல்கட் கெல்லாம் மாவள்ளலாகிய இறைவன் அவர்களை வள்ளல்கள் என்று கூறுகிறார். கொடுப்பாரே உலகில் வள்ளல் தன்மையுடையராவார்; ஆனால் கொள்வார் இல்லாதபோது கொடுப்பாரது ஈகைக் குணமும் பயனின்றி ஒழியுமன்றோ? கொடுப்பாரது குணத்திற்கு இருப்பையும் பயனையும் அளிப்பவர், அவரை விரும்பியடைந்து தாம் விரும்பியதைப் பெற்றுப் போவாரன்றோ? ஆதலின் பகவான் தம்மை நாடிவந்து, ஓர் அற்பமான பொருளையேனும் பெற்றுப் போவாரைத் தமது வண்மை யியல்பை உள்ளதாக்கும்படிச் செய்த பேருபகாரிகள் என்றும், தம்மிடம் அவ்வாறு அற்பத்தையும் பெற்றுப் போவார் தமக்கு எல்லாச் செல்வத்தையும் நல்கிய பெருங் கொடையாளிக ளாவார் என்றும் அவர்களைக் கொண்டாடுகிறார்; ஏனெனில் பெருங் கொடையாளி யிடத்துள்ள மிக்க வறுமையாவது, ஒருவரும் தம்மிடம் நாடி ஒன்றையும் பெறாது போவதேயன்றோ? ஞானி யென்பவனோ பகவானை யல்லாது வேறொன்றையும் விரும்பான் ஆதலின்

அவன் பகவானைத் தன்னுயிராகக் (ஆத்மாவாகக்) கருதுபவன்; அக்காரணத்தினுலேயே பகவானும் ஞானியைத் தனது உயிராகவே கருதுகின்றான். ஞானி பகவானைப் பிரிந்தால் தனியே தரிக்க மாட்டாதது போல, பகவானும் அத்தகைய உத்தம அடியாரைப் பிரிந்து, உயிரைப் பிரியும் உடலைப்போலத் துடிப்பான். (இதனை இராமனைப் பிரிந்து துடித்த சீதாபிராட்டியிடத்தும், 'உம்மைப் பிரியில் நானும் சீதையும் நீரைப் பிரிந்த மீன்போலத் துடிப்போம்' என்று கூறிய இலக்குமணரது உரையிலும், ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளாகிய நரேந்திரரைப் பிரிந்து துடித்த ஸ்ரீ ராமகிருஷ்ணரிடத்தும் அறிஞர் காண்பார்.) இத்தகைய ஞானி பல பிறவிகளெடுத்தபின் என்னையே சரணமடைந்து, 'வாசுதேவனே யாவும்' என்று வாழ்பவன் மிகமிக அரியவனுவான் என்று அருளுகிறார். இத்தன்மையதான மிக அரிய மிகப் பெரிய அடியாரது இயல்பையும், அவர் விழையும் பேற்றையும் சற்று ஆராய்வோம்.

ஒரு மனிதனது வாழ்க்கையையும் அவனது குணத்தையும் உருவாக்குவது, அவனது மனதில் நிலையாக உள்ள விருப்பமேயாம்; ஒருவனது விருப்பத்தை நாம் அறிவோமாயின், அவனது வாழ்க்கையினையும் குணத்தையும் நன்கு உய்த்துணரலாகும். ஆதலின் விருப்பத்தைக் கொண்டே மக்களின் தாரதரங்களை அறிய முயலுதல் மிகவும் பொருத்தமானதாகும். உலக மக்களிற் பெரும்பாலார் தமக்கு உறுதிபயக்கும் பொருள்களாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினுள்ளும், இருதலையிலும் உள்ள இரண்டையும் விட்டு, பொருள் இன்பம் என்னும் இரண்டையுமே குறிக்கோளாகக் கொண்டு வாழ்வார்; இன்பத்திற்குப் பொருளே சாதனம் என்று கண்டு, பொருளைத் தேடி இன்பம் பெற முயல்வார். உலக வாழ்க்கையின் பேறு சிற்றின்பம், அதற்கு உபாயம் பொருள் என்று இவர்கள் வாழ்வார்கள். வேறு சிலர், பொருளும் இன்பமும் நிலைத்தற்கு அறம் வேண்டும் என்றறிந்து, அறத்தையே விரும்புவார்; இவர்கட்கு அறம் சாதனம், பொருளும் இன்பமும் பெறுதற்குரிய பேறுகளாகும். அறத்தால் இம்மை மறுமைகட்குரிய செல்வத்தையும் இன்பத்தையும் பெறும் ஆசையுடையராவார். வேறு சிலர், இம்மையிற் செய்த கருமங்களின் பயன் மறுமையில் வந்தடைய வேண்டின், பகவான் ஒருவன் என்றும் அழியாதிருந்து, மக்களில் ஒவ்வொருவரும் செய்யும் கருமங்களுக்கு ஏற்ற பலன்களைத் தக்க காலத்து உதவவேண்டும் என்பதைச் சிந்தித்தறிந்தும், பிற ஏதுக்களைக் கொண்டும், இறைவன் ஒருவன் உளன் என்று தெளிந்து கொள்வார். அவனது எல்லாம் வல்ல சக்தியையும் எல்லாம் அறியும் ஞானத்தையும் உணர்ந்தவர், இறைவனது துணையின்றித் தமது கருமம் பாழாகும் என்னும் உறுதியால், அவனை வழிபடத் தொடங்குவர். இந்நிலை வந்தவரே பக்தர்கள் எனப்படுவார். இவர்கள் தமது முயற்சியைச் சாதனமாகக் கொண்டும், இறைவனது துணையையும் இன்றியமையாததாகக் கொண்டும் தாம்தாம் விரும்பும் இம்மை மறுமை இன்பங்களையும் அவைகட்குரிய காரணங்களையும் பெற விரும்புவார். இன்னோர்க்கு முயற்சி சாதனம், முயற்சிக்குத்தக்க பயனளிப்பவன் ஈசன், இம்மை மறுமையின்பங்களே வாழ்க்கைப் பேறுகள். வேறு சிலர் இம்மை மறுமைகட்குரிய பேறுகளும் நிலையற்றன என்பதையும், சாந்தியே விரும்பத்தக்கது என்பதையும், எல்லாப் பொருள்களினுடைய நிலையற்ற தன்மையை அறியும் பேரறிவே பெறத் தகுந்

த்து என்பதையும் தெரிந்து, ஞானத்தையே (எவ்வகைத் துன்பங்கட்கும் வித்தான அறியாமையை ஒழிக்கும் ஞானத்தையே, பேரறிவையே) குறிக்கோளாகக் கொள்வர். ஞானமே மெய்ப்பொருள், அதுவே பெறற்குரிய பேறு, அதைப் பெற மனித முயற்சி இன்றியமையாத சாதனம் என்பர். மனித முயற்சியாவது, பற்றறுத்தற்கும், சித்தத்தை அடக்கி யாளுவதற்கும், மெய்ப்பொருளின்கட் சித்தத்தை நிலைநிறுத்தற்கும் செய்யப்படும் முயற்சியாம்; இதன் பயன் சமாதியெனப்படும். தூய சிந்தையினால் தியானித்தல் சாதனம், அதன் பயனாய சமாதி நிலையிற் பெறும் ஞானமே வாழ்க்கைப் பேறு. வேறு சிலர், ஆயிரக்கணக்கான ஜென்மங்களில் தவம் ஞானம் சமாதி முதலிய சாதனங்களைப் பயின்று, மனத்தகத்துள்ள மலத்தை முற்றும் கழுவித் தூயதாக்கிய பின், ஆன்மாவுக்கும் ஆன்மாவாய், எல்லா அழியாத மெய்ப்பொருள்களாகிய ஆன்மாக்கட்குள்ளும் ஒரே ஆன்மாவாய், ஞானத்திற்கும் காரணமான ஞானத்தையே இயல்பாகக் கொண்ட இறைவன் ஒருவன் உளன் என்றும், அவனது இருப்பைக்கொண்டே மற்ற ஆன்மாக்கள் இருப்பையும் முயற்சியையும் பெறுகிறார்கள்என்றும் உணர்ந்துகொள்கிறார்கள். இவர்கள் இறைவனை அன்புவடிவினனாக அறிந்து இறைவனுக்கு ஆன்மாக்கள் உடைமைகள் என்றுதெரிந்து, 'எல்லாம் உன் உடைமையே, எல்லாம் உன்னுடையசெயலே, எங்கும் வியாபி நீ' என்னும் ஞானமுடையராய், இறைவனையே சரணமடைவார்கள். இவர்கட்குப் பகவானே உபாயமும் உபேயமும் (உபாயத்தால் அடையப்படும் பொருளாயும்) ஆகிறார்; பகவானே இத்தகைய அடியார்கட்குத் தாரக போஷண போக்ய பதார்த்தங்களாக ஆகிறார்; இந்நிலையை நம்மாழ்வார் தாய்கூறும் பாசுரமாகக் கூறுமிடத்து, "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம், கண்ணன் எம்பெருமானென்றே கண்கள் நீர் மல்கும்" என்று தமது நிலையை உலகத்தார்க்கு அறிவிக்கிறார். "வாசுதேவ: ஸர்வமிதி ஸமஹாத்மா ஸுதுர்லப:" என்று கண்ணபிரான் குறிப்பிட்டருளிய மிக அரிய உத்தம அடியார் இவரைப் போன்றவரே யாவர்.

அடியார்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். இறைவனது அருளைத் துணைக்கொண்டு ஒருவகையினர் இறைவனல்லாத பிற பொருள்களை வேண்டுவார். இரண்டாம் வகையினர் இவரினும் உத்தமர்; இவ்வினத்தார் பகவானை யொழிந்த பிற பொருள்களை விரும்பார், பகவானையே அடைய விரும்புவார்; ஆனால் அவனை யடைவதற்கு வழியாகத் தமது முயற்சியினால் இயற்றுதற்குரிய கருமயோகம் பக்தியோகம் ஞானயோகம் ராஜயோகம் முதலிய பலவான யோகநெறிகளை சாதனமாக கொண்டு பகவானைப் பெற முயலுவார். மூன்றும் வகையினர் இவரினும் உத்தமராவர்; இன்னார் பகவானையே தமக்கு சாதனமாகக் கொள்வார்; இறைவனது அருளாலன்றி ஓரணுவும் அசையாது என்னும் உண்மையை நன்கறிந்தவர்கள்; மேலும் ஆன்மாவும் இறைவனது உடைமையென்பதையும், இறைவனைப்பற்றியே (இறைவனைச் சார்ந்தே) ஆன்மா வாழ்கின்றது, இயங்குகின்றது, இருப்பையும் பெறுகின்றது என்பதையும் அறிந்தவர்களாதலின் தமது உடல் பொருள் ஆவியனைத்தையும் இறைவனுக்கே ஒப்புவித்து விடுவார். அவ்வாறு ஒப்புவிக்கும்போதும், அதுகாறும் தாம் அவைகளைத் தம்மதாக நினைத்திருந்த பேதமையை உணர்ந்து, உள்ளங்கூசி, உடைமைகளை அவைகட்கு

உரியவர்களிடம் (உடையவர்களிடம்) ஒப்புவிப்பது போல சமர்ப்பித்துவிடுவார். இறைவனுக்கன்றி வேறொருவர்க்கும்தாம் ஆட்படார் (அடிமையாக மாட்டார்), இறைவனையன்றி வேறொருவரையும் வேறெதையும் நமக்குப் பற்றுக் கோடாகக் கருதிச் சரணமடைய மாட்டார், இறைவனைத் தவிர்ந்தவேறு எந்த உயிரிலும் பொருளிலும் இன்பம் பெற நினைக்கமாட்டார். இத்தகைய மெய்யடியார் அவனருளாலே அவன்தாளை வணங்குவதாகக் கருதி வாழ்வார் தமக்கென ஒருபேறும் வேண்டாம், எம்பெருமானுக்கு இன்பம் எதுவோ அதையேதமக்கும் இன்பமாகக் கொள்வார். நாளும்தமது அன்பு பெருகுதலாற்கும் பிடுதலின்றி வீடும் வேண்டாத விழுமியோராவார். இறைவன் தமக்கு இன்பத்தை ஊட்டும்போதும் இறைவனும் அனுபவித்தான் தாமும் அனுபவித்தார் என்று, இறைவனுடைய இன்ப அனுபவத்தில் தாமும் பங்குகொள்ளாராய், இறைவனே அனுபவித்து மகிழ்ந்தான் என்றும், அதைக் காணுதலே தாம் அடைந்தபேறு என்றும் அடங்கியிருப்பார். இவ்வாறு தாம் கருத்தா என்னும் எண்ணத்தையும், தாம் போக்தா (அனுபவிப்பவர்) என்னும் எண்ணத்தையும் முற்றிலும் ஒழித்து, தம்மைப் பகவானுடைய கருவியாகக் கருதியும் உணர்ந்தும், தம்மை ஆட்டுவிக்கும் இறைவனை உணரும் அறிவுடைய கருவியாகமட்டும் நிற்பார். இத்தகையாரே மெய்யடியார்கட்குள் எல்லாம் தலைசிறந்தவராவார்.

இத்தகைய உத்தம பக்தியை இலக்குமணரிடத்திலும் பரதாழ்வானிடத்திலும் காணலாம். ஸ்ரீராமர் கானகம்போன பின்பு, தசரதரும் வானகம்போன பின்பு, பரதாழ்வான் அயோத்திக்கு வந்ததும், கைகேயி தான் பெற்றுவைத்திருந்த முடியை அவனுக்குச் சூட்டக் கருதி, அவனைப்பார்த்து, "அரசனே! எழுந்திரு" என்றதும், அச்சொல்லைப் பொறுக்கமாட்டாத பரதாழ்வான் சபையிலே வந்து அலற்றினனன்றோ? 'விலலாப ஸபா மத்யே,' "ஐயோ! இவ்வாறு இவர்கள் அனைவரும் கூடியிருந்து ராமனுக்கு அடிமையாகும் என்செல்வத்தைப் பறிக்கப் பார்க்கின்றார்களே?" என்று கருதினன். தன்னை முடிசூட்டிக் கொள்ளும்படிவேண்டிய வசிஷ்டரைப் பார்த்து, சபைநடுவிலே "ராஜ்யம்ச அஹம்ச ராமஸ்ய" (இராஜ்யமும் நானும் இராமனுக்கு உடைமைகள்) என்று உரைத்து, "இரண்டு பொருள்கள் ஒருவனுக்கு உடைமைகளானல், ஒன்றை மற்றொன்று ஆளுமோ? அவ்வாறாயின், ராஜ்யமே என்னை ஆளட்டுமே. ஸ்ரீராமன் வனம்புக, தசரத மன்னனும் உயிர்துறக்க, நாட்டிற்கு ஓர் அரசர் வேண்டுமென்ற அரச நீதியையே நோக்கினாய்; எனது இயல்பை நீ பார்த்தாயில்லை. 'கதம் தசரதாத் ஜாதோபவேத் ராஜ்ய அபஹாரக:' ராமனைப் பிரிந்தவுடனே இறந்தவனது வயிற்றிற் பிறந்த நான் அம்மன்னனால் துறக்கப்பட்ட நாட்டை ஆள்வேனோ?" என்றான். இலக்குமணனும், ராமருடன் வனஞ்செல்லப் புறப்படலும், அவர் 'இலக்குமணா, நீ நில்' என்றலும், அவன் "உமைப்பிரிந்தால் நீரையிழந்த மீனென நான் துடிப்பேனன்றோ? இதை யறிந்தும், நீர் என்னை நிற்கச்சொல்வது என்னை அழிக்கையாகுமன்றோ? உமது சாயையைப்போலப் பின்பற்றி வருபவனாக வேண்டும், சாயையை நீர் நில்லென்று கூறமாட்டீரன்றோ?" என்று கூறினன். பின்னும் வனத்தில் ஒருநாள் இலக்குமணனைப் பார்த்து இராமர் "உனக்கு சௌகரியமாயும் நீரும் நிழலும் வாய்த்திருப்பதாயும் உள்ள ஓரிடத்தில் பர்ணசாலையை அமை' என்னலும், இலக்குமணன், 'பரவான் அஸ்மிகாகுஸ்த

த்வயி வர்ஷசதம் ஸ்திதே' ஸ்வியாது ருசிரோ தேசேசிரியதாம் இதி மாம்வத'- அதாவது, 'நூறு ஆண்டுகள் உம்மிடம் இருந்தாலும், உமக்குப் பாரதந்திரனாயிருப்பதை யன்றோ யான் ஆசைப்படுவது; ஆதலின், எனக்கும் உமக்கும் ஆன ஒன்றையான் நாடுமாறு விடாது உமக்கு மகிழ்ச்சியை உண்டு பண்ணும் ஓரிடத்தைக் குறிப்பிட்டு, இதில் நீ பர்ணசாலையைஅமை என்று கட்டளையிடவேண்டும். என் தலையிலே சுவா தந்தர்யத்தைச் சுமத்திய போதே என்னை நீர் கைவிட்டதாகும்' என்று தனது நிலையை வெருத்தருளினன்.

இவ்வாறு இவர்களிடம் கண்ட தன்னயமற்ற தானொழிந்த நிலையே நம்மாழ்வாரிடமும் காணப்படுகின்றது. இறைவன் ஆழ்வாரை நோக்கி, நீர் 'நல மந்த மில்லதோர் நாடு' என்று சிறப்பித்துக் கூறிய மோக்ஷ உலகைப் பெற்றுக்கொள்ளும்" என்ன, 'ஆழ்வார்' எனக்காக, எனது பிரீதிக்காக நீர் மோக்ஷ உலகைத் தருவீராயின், அதனை நீர் சொல்வதும் தகுதியன்று, நான் அதைப் பெறுதலும் தகுதியன்று, எனக்காக மோக்ஷ உலகைத் தருவீராயின், அது எனக்கு வேண்டாம். [எம்மா வீட்டுத் திறமும் செப்பம்.] நினது செம்மையான மேன்மையார்ந்த திருவடித் தாமரைகளை விரைவில் எனது தலை மீது (சொக்கியும் கண்ணியும் போலச்) சேர்த்தருள வேண்டும். (செம்மா பாத பற்புத் தலை சேர்த்து ஒல்லை.) கஜேந்திரனுக்கு ஆபத்து வந்தகாலத்து, முதலையினின்றும் அதனைக் காக்குமாறு, நீ கடுகியே பரமபதத்தினின்றும் ஓடி வந்தாயன்றோ? அதற்குத் துதிக்கை வரை முழுகின ஆபத்துமட்டுமே; எனக்கோ, அதனினும் பெரிய ஆபத்து. அதற்கு முதலையொன்றேதான்; எனக்கோ அஞ்சு இந்திரியங்களாகிய முதலைகள்! அங்கே ஆயிரம் ஆண்டுகள் ஆபத்தில் மூழ்கியது என்பர், நானோ அநாதிகாலமாக ஆபத்தில் விழுந்திருப்பவன்! அங்கே ஒரு மடுவில் வீழ்ந்தது யானை; இங்கே பிறவியென்னும் பெருங்கடலில் யான் ஆழ்ந்தேன். அதற்கு உடலே நாசம், எனக்கு ஆன்ம நாசம். ஆனையின் காலையே முதலை பற்றிற்று; என்னுடைய நெஞ்சையே அராவித்தின்கின்றது; ஆதலின் அதற்கு உதவினதுபோல எனக்கும் நீர் உதவ வேண்டும். அடியேனாகிய யான் பிரியத்தால் வேண்டுவது, உமது திருவடியை என் தலை மீது சேர்ப்பதொன்றே" என்கிறார். [கைம்மா துன்பம் கடிந்தபிரானே, அம்மா அடியேன் வேண்டுவது ஈதே.]

இப்பிரார்த்தனையை மீண்டும் இன்னொரு பாசுரத்தில் விளங்கக் கூறுகிறார். ஆத்மாவின் இயல்பிற்கு ஏற்றதான, (அது இறைவனையே சார்ந்து நிற்கின்றது என்னும் தன்மைக்கு ஏற்றதான, இறைவனையே உபாயமும் முடிவுமாகக் கொள்ளும் தானற்ற நிலையை இறைவனிடத்து வேண்டுகிறார். "நீர் என்னை 'அடிமை செய்யவேண்டும். 'எனக்கு ஆட் செய்' என்று கூறி, வேறு விஷயங்களில் என் மனம் திரியாது, உமக்கு அடிமை செய்யும் நிலையை அருளவேண்டும். உமக்கும் எனக்கும் பொதுவான நிலையை ஒழித்து 'எனக்கே ஆட்செய்' என்று அருளவேண்டும், 'இன்னத்தைச் செய்' என்று ஏவியருளவேண்டும் எக்காலத்தும் எவ்விடத்தும் எந் நிலையிலும் ஏவிக் காரியம் கொள்ளவேண்டும். என்னுடைய உள்ளத்திலே வந்து புகுந்து நிலையாக எழுந்தருளியிருக்க வேண்டும். [எனக்கே ஆட்செய் எக்காலத்தும், என்று என், மனக்கேவந்து இடைவிடின்றி மன்னி]. சந்தனம் மலர் போன்ற பொருள்கள் தம்மைப் பூசமட்டும் இருப்பதன்றித் தமக்கென வாழ்வதுண்டோ? மிகுதியைக் கழித்துப்

போட்டுவிடும் போதும் அவை பிறர்க்காகவே இருப்பவை யல்லவா? இருவர் கூடியிருக்குங்கால், இருவர்க்கும் அதன் இனிமை உண்டு என்பது வெளிப்படையன்றோ? அவ்வாறில்லாமல், என்னுடைய இன்பம் நான் அனுபவித்த இன்பம் என்னும் உணர்ச்சி ஒரு சிறிதும் இல்லாது, முற்கூறிய சந்தனத்தையும் மலர்களையும் போல, உமக்கே இன்பத்தைத் தரும் பொருளாக என்னைக் கொள்ளவேண்டும். (தனக்கே யாக எனைக் கொள்ளும் ஈதே). ஆத்மாவின் உண்மையியல்பினை அறிந்த யான் உம்மிடம் விரும்பிப் பெறும் சிறப்பான காரியம் இதுவேயாம். இதை ஒருமுறை சிறப்பாகச் செய்யினும் போதும்; பிறரறியாதபடி சிறப்பாய்ச் செய்யினும் போதும்; இதுவே யான் நின்னிடமிருந்து பெறும் சிறப்பாகிய முத்தியாகும். நான் உன்னிடம் கொள்ளும் மோக்ஷம் உனக்கேயாக எனைக் கொள்ளுவதேயாகும்." [எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே.]

இறைவன் சுதந்திர முடையனுய். ஆன்மாக்கள் அவனைச் சார்ந்தே இருப்பையும் உபாயத்தையும் குறிப்பையும் பெறுபவையாய் இயல்பாக இருப்பதன்றோ பேருண்மை. இதுவன்றோ மிகப் பெரிய அடியார் கண்ட பேருண்மை. ஆதலின் இறைவன் ஓர் ஆன்மாவைத் தான் நினைத்தபோது தான் நினைத்தபடி கொள்வான் என்பதாயிற்று. அவ்வாறு கொள்ளும்போது ஆன்மா ஒழுகவேண்டிய சிறப்பான முறையே நம்மாழ்வாரது பாக்கள் இரண்டிலும் குறிப்பிடப் பட்டுள்ளது. வேண்டுவார் வேண்டியபடி ஈதலே இறைவனது இயல்பன்றோ? அவனிடம் சரணம் புகுவார் அனைவர்க்கும் அவரவர் வேண்டும் பிரார்த்தனைகளை நிறைவேற்றுவான் அவன்; அர்த்தனும் ஜிஞ்ஞாசுவும் அர்த்தார்த்தியும் பகவானைச் சரணமடைந்து, தமக்குவேண்டிய பேறுகளைப் பெற்றுப் போகிறார்கள். அவ்வாறு கொடுக்கும்போதும் பகவான் அதனைத் தன் பேறாகவும் கருதலாம். ஞானியும் தான் பெறும் பேற்றினை (மோக்ஷத்தை)த் தனக்காகப் பெற்றுப் போகலாம். இறைவற்கெனவே வாழும் மிகப் பெரிய மெய்யடியார்கள்—தற்காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் போன்றவர்கள்—பிரார்த்திக்கும் போது, "முக்தியளிப்பினும் சரி, அளியாது போயினும் சரி, ஆத்மஞானம் பெறினும் சரி, பெறாது போயினும் சரி, ஆன்மநாசமே வரினும் நரகானுபவமே வரினும் சரி, இவற்றால் எனக்கு ஒரு தொந்தரவும் இல்லை. உனக்குப் பிரீதியாக இவை இத்தனையும் அமையின், அவை வருக. எனக்காக (எனது பிரீதிக்காக) இவை வருமாயின், இவை யித்தனையும் வேண்டா. ஆதலின், உமக்கு உவந்தபடி இசைந்து ஒழுகுதலே எனது வடிவாகும்படிச் செய்தருள வேண்டும்" என்றே வேண்டி நிற்பார். இதுவே 'உயர்வற உயர் நலம் உடையா'னிடம் உயர்வற உயர்ந்த மெய்யடியார் விழையும் உயர்வற உயர்ந்த பேறாகும்.

# சமாசாரம்

## பேலூர் மடத்தில் ஸ்ரீராமகிருஷ்ண வித்யா மந்திரம்

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சங்கம் இவைகளின் பொதுக் காரியதரிசியான ஸ்ரீ மாதவாநந்த சுவாமிகள் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்கள்.—

இக்காலத்திலே நம் இந்தியாவில் கொடுக்கப்படும் கல்வி தேசிய முறையிலே நம் சிறுவர்களைத் பயிற்சிவிக்க இயலாது நிற்பதுடன், தற்காலத்தில் உறுதிப்பாடோடுடன் கூடிய வாழ்க்கையை நிறுவுவதற்கும் அவர்களுள் பெரும்பாலர்க்குப் பயன்படாது நிற்கின்றது வாசித்து விட்டு வேலையில்லாத் திண்டாட்டத்தால் மக்களில் பலருடைய மனம் குழம்பி யிருப்பதோடு, நமது சமூகக் கட்டுப்பாடும் இக் கல்வியின் காரணமாக பல வயைின் மூலம் கலைந்து வருவதைக் காண்கின்றோம். இக் காலப் படிப்பு நம் இளைஞர்களை வாழ்க்கையின் கடினபோராட்டங்களை எதிர்த்து நிற்கச் சக்தியற்றதாகச் செய்துவிட்டது; மேலும் வலிமை, தியாகம், தலைமை வகித்தல் முதலிய வெற்றிக்குவேண்டிய அருங் குணங்களை அடையச் செய்ய உதவாது போயிற்று. ஊரார்க்கு வேலைகளிலே இப்போது தேக்கமேற்பட்டுவிட்டது. படித்த பல இளைஞர்களுக்கு இவ்வழி மூடப்பட்டுவிட்டதால் எதிர்கால வாழ்க்கையை எவ்வாறு நடத்துவது என்பதுணராது ஏங்கி நிற்கின்றார்கள் நடுத்தெருவிலே. இவ்வித குறைபாடுகளை கூடியவரை அகற்றமுயல வேண்டுவது நமது முக்கிய கடமைகளுள் ஒன்றாகும்.

தீர்க்கதரிசியாக விளங்கிய ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், இக்காலத்துப் படிப்பின் குறைபாட்டினை முன் கூட்டியே உணர்ந்தவராகி, நமது பண்டைய முறைப்படி குருகுல வாசத்தின் மூலமாய் நம் நாட்டுக்குகந்த தேசியக் கல்விமுறையை வகுத்திருக்கிறார்கள். ஸ்ரீராமகிருஷ்ண மடங்களுக்குத் தலைமை மடமாகிய பேலூர் மடத்தினை ஸ்தாபனம் செய்ததும், அவ்விடத்தே, ஆத்மீய கொள்கைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு, தற்கால பௌதிக சாஸ்திரங்கள் துணையினையும் ஏற்று, தேசிய கல்வி ஸ்தாபனமொன்றைத் துவக்க ஸ்ரீ சுவாமிகள் பெரிதும் விரும்பினார்கள். ஆனால் ஸ்ரீ சுவாமிகள், தம் பூதவுடல் மூலம் தம் கருத்து நிறைவேறப் பார்க்கவில்லை. எனினும் ஸ்ரீராமகிருஷ்ண மடங்களின் அதிகாரிகள் ஸ்ரீ சுவாமிகளின் கருத்தை ஒருவாறு நிறைவேற்றி வைப்பதற்காக பெரிதும் முயன்று, ஓர் தீர்மானத்துக்கு வந்திருக்கிறார்கள் என்பதறிய நேயர்கள் மிகவும் சந்தோஷப்படுவார்கள். இலக்கிய இலக்கணம், பௌதிக சாஸ்திரம், கைத்தொழில் இம் மூன்று பிரிவினைகளை யுடையதாக விளங்கும் இக்கல்வித் திட்டம் 1941ஆல் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

இதற்காக பேலூர் மடத்துக் கருகில் 17 ஏகர் நிலம் பார்க்கப்பட்டுள்ளது. அதில் ஒருபாகம் வாங்கப்பட்டுவிட்டது. மற்ற பாகம் சீக்கிரமே வாங்கப்படும். நூறு மாணவர்கள் தங்குவதற்கும், வாசிப்பதற்குமான இரண்டு கட்டடங்கள் கட்டப்பட்டு வருகின்றன. நம் நாட்டு தர்ம குணமுள்ள கனதனவான்களின் பேருதவியை எதிர்பார்த்தே ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளது இக்கல்வித் திட்டம் ஆரம்பிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றது. பணமாகவும் சாமான்களாகவும் சிலநண்பர்கள் 28,000 ரூபாய் கொடுத்துதவியிருக்கிறார்கள்; 12,000 ரூபாய் மேற் கொண்டு கொடுப்பதாகவும் சில நண்பர்கள் வாக்களித்திருக்கிறார்கள். இவைபோக நிலத்திற்கும் இதர ஏனையவற்றிற்கும் குறைந்தது இன்னும் 30,000 வேண்டியிருக்கிறது.

இவ்வித கல்வித்திட்டதின் அவசியத்தினை நன்கு உணர்ந்த நம் நம்நாட்டுக் கனதனவான்கள் முன் வந்து, வேண்டிய பொருளுதவி செய்து ஸ்ரீவிவேகாந்த சுவாமிகளின் கருத்தினை நிறைவேற்றி வைப்பதற்கான பாக்கியத்தைப் பெறுமாறு வேண்டப்படுகின்றார்கள்.

சுவாமி மாதவாநந்தா, காரியதரிசி.

ஸ்ரீராமகிருஷ்ண மிஷன்,

---

## கடிதங்கள்

### (முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசீயக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய் கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணா 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணா 3

---

## ஜகஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணா 12. சந்தாதாரருக்கு அணா 10.

---

# ப ஜ ஞ வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவதவசியம்.

விலை அணா 12.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உ௦] விக்கிரம௵ கார்த்திகைமீ [பகுதி—கக

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தராற் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது.

விலை அணா 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அனுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப் பட்டுள்ளது; வெகு எளிய நடை.

விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உ௦ } விக்கிரமவூ கார்த்திகைமீ { பகுதி-கக

## பிரார்த்தனை

---

ஆற்றல் அறிவு தூய்மையென் றிவற்றின்
ஊற்றாய் விளங்கும் ஒருபெருந் தலைவன்
மனமொழி மெய்களால் யான்செய் பிழைக்கெலாம்
எனைமன் னித்துத் தூய்மைசெய் திடுக.

—தைத்திரீய ஆரண்யகம் x, 1. 48.

தீச்செயல் நீக்கித்
  தீய்த்தென் பற்றினை
மயர்வற மனதின்
  மாசினைப் போக்கி
உயர்வற உயர்ந்த
  உன்னுல கேற்றுக.

—தை. ஆ. x, 1. 52.

---

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

இந்தியாவின் தியாக குணம் ஓங்கும் என்றும், அதோடு துன் புறுதற்கு இசையும் குணமும் வளரும் என்றும், நான் நம்புகிறேன்........ இதுவே உண்மையான சுதந்திரம்; இதனினும் உயர்ந்தது வேறொன் றில்லை. தேச சுதந்திரமும் இதைக்காட்டிலும் மேலானதன்று. பலத்தி லும் உலகச் செல்வத்திலும் மேனாட்டாருக்கு அசைக்க முடியாத நம் பிக்கை உண்டு; ஆதலால், சாந்தமும் ஆயுதங்களை ஒழித்தலும் நலம் என்று அது எவ்வளவு கூக்குரல் போட்டாலும், அதன் மூர்க்கத்தனம் அதனினும் உரக்கக் கத்தும்,.........ஆயுத ஒழிப்பை நடக்கக்கூடிய காரிய மாக்குவதுமன்றி, செயலற்ற நிலைமையையே பலமுடைமையாகவும் மாற்ற வல்ல உண்மையாவது என்பதை இந்தியாவிலுள்ள நாம் உலகத்தார்க்கு எடுத்துக் காட்டவேண்டும். ஒழுக்கம் விலங்கின் வலிமையினும் மிக்க வலிமையுடையது என்னும் உண்மை, ஆயுதமற்ற ஒரு ஜன ஸமூகத்தில் நிரூபிக்கப்படும். ஓர் உயிர் வளர்ச்சியடைந்து வரும் முறையில், (உயிர் நூலார் கூறுகின்றபடி) செதிள்களாலும் கனத்த ஓடுகளாலும் அமைந்த தனது அழித்தற்கரிய மேற் போர்வையையும் பருத்த மாமிசத் தொகுதி யையும் மெல்ல மெல்லக் கழித்து வருவதையும், கடைசியாக மிக உயர்ந்த மனித உடலெடுக்கும்போது, மிருக வலிமையையும் வெல்லும் சக்தியோடு விளங்குவதையும் நாம் காண்கின்றோமன்றோ? பலமற்ற ஆனால் விழுமிய குணமுள்ள ஒரு மனிதன் முற்றிலும் நிராயுதபாணியாய் முன்வந்து "சாந்த முடையோர் பூலோகத்திற்கு உரிமை பூணுவார்" என்ற வேத வாக்கியத்தின் உண்மையை நிலை நாட்டும் நாள் இனி வரும். உடல் மெலிந்து, உலகச் செல்வமின்றி வாழும் மகாத்மா காந்தி யென்பார் இந்தியாவிலே அக்கிரமத்திற்குள்ளாக்கப்பட்டும் கதியற்றும் கிடக்கும் இந்திய மக்களின் நெஞ்சத்துள் மறைந்து ஒளிரும் சாந்தம் தாழ்மை யென்னும் இரு குணங்களின் வெல்லற்கரிய பலத்தை உலகிற்கு முன் எடுத்துக் காட்டுவார். இந்தியாவின் விதிப்படி, அதற்கு உய்யும்வழி நாராயணியின் மூலமாகவேயாகும். நாராயணியின் சேனை மூலமாக அன்று. (அதாவது, ஆன்ம சக்தியாலேயாகும்; தசையின் பலத்தினு லன்று.)

—இரவீந்திரநாத் தாக்கூர்.

# ஸ்ரீ சுவாமி பரமாநந்தர்

(அமெரிக்காவிலுள்ள காயத்திரீதேவி யம்மையார் எழுதியதன் மொழிபெயர்ப்பு)

**இம்மொழிகள்** அச்சுவாகனம் ஏறி வெளிவருவதற்கு வெகுகாலத்திற்கு முன்னமே, ஸ்ரீமத் சுவாமி பரமாநந்தரைப் பற்றிய துயரச் செய்தி இந்தியாவிற்கு எட்டியிருக்கும். ஸ்ரீராமகிருஷ்ணராகிய குருதேவர் தமது ஞானக்குமாரர்களில் ஒருவரும், சுவாமி விவேகாநந்தரின் சீடர்கட்குள் மிக்க இளமை வாய்ந்தவரும் ஆன சுவாமி பரமாநந்தரைத் தமது திருவடிக்கே அழைத்துக் கொண்டருளினர்.

சுவாமி, சென்ற முப்பத்து நான்கு ஆண்டு காலமாக அனைவர்க்கும் பொதுவான ஸநாதன தர்மத்தினை மேற்கத்திய உலகமுழுவதும், சிறப்பாக அமெரிக்காவில் ஐக்கியமாகாணங்களிலும், பரப்புவதற்காக ஓயாமல் பாடுபட்டுக் கொண்டே வந்தார். அவர் உபதேசங்களை அருளியது, தமது திருவாயினின்றெழுந்த மொழிகளாலும், ஞான ஆவேச நிலையில் நின்று எழுதிய செய்யுள்களாலும் வசனங்களாலும், இவையிரண்டுக்கும் மேலாகத் தமது சோதியார்ந்த வாழ்க்கையாலுமே. அவரைப்பற்றிய காட்சிகளைப் போற்றிவருவார் இன்றளவும் பலர், சிறப்பாகத் தென்னிந்தியாவில் உளர். முற்காலத்தில் சென்னை இராஜதானிக்கு ஒரே இராமகிருஷ்ண சங்க நிலையமா யிருந்த "ஐஸ்ஹௌஸ்" என்னும் மாளிகையில், பெருமை வாய்ந்த ஸ்ரீ சுவாமி இராமகிருஷ்ணாநந்தர் என்னும் முனிவரோடு வாழ்ந்து வந்த ஓர் இளைஞராய் இருந்த காலத்து சுவாமி பரமாநந்தரைப் பலர் முதன் முதலிற் பார்த்தனர். பின் புதிதாகத் துறவுபெற்று சுவாமியாகி யிருந்த போது, இனிய கீதம் உலவும் அவரது வாயையும், இளநகையரும்பிய வசந்தகால மனைய தன்மையையும் கண்ட இராமகிருஷ்ணமடத்து முதல் தலைவர், சுவாமி பிரமாநந்தர் அவர்க்கு, (வசந்தன்) என்றும் 'வசந்தகோகிலம் (குயில்)' என்றும் நாமம் சூட்டினர்; இது இரண்டாவது காட்சி. அதன்பின், கடைசியாகப் பலப்பல ஆண்டுகள் கழிந்தபின் மூன்றுவது காட்சி சென்னைவாசிகட்குக் கிடைத்தது. அவர் வயதும் அனுபவமும் முதிர்ந்தவராய்த் தாம் அமெரிக்க நாட்டிலிருந்து இந்தியாவிற்கு வந்தபின் மீண்டும் அங்குச் சென்று தமது பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளுமுன் சென்னைக்கு விஜயஞ் செய்திருந்தபோதாகும். அந்நாளில் அவரைக் கண்டவர் அவரது களிரொளி இளமையையும் சாந்தியையும் கண்டு ஆச்சரியமடைந்தனர்; அந்நாளில் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்ட பேச்சாவது:—"நீர் வசந்தமஹாராஜரைப் பார்த்தீரோ? அவர் முன்பு பார்த்தபடியே இருப்பதைத் தவிரச் சிறிதும் மாறியிருக்கவில்லையே! இது ஏன்?"

இவர்கள் அப்போது கூறிய பேச்சு அவரது அந்திம காலம்வரை உண்மையாயிருந்தது. இறைவனது திருவடியை நோக்கி அவர் இறுதியாகப் பறந்து சென்ற சமயத்தும், சுவாமி பிரம்மாநந்தரது 'வசந்தகோகிலம்' ஆகிய அவர், தமது ஆழ்ந்த ஞானத்தை ஒரு சிறு குழந்தையின் இயல்பினால் மூடிவைக்கவும் பதன்படுத்தவும் செய்த, களிரொளி இளமையையும் ஆனந்தத்தையும் ஒரு

நாளும் விட்டுப் பிரிந்ததில்லை. தற்கால உலகத்தின் துயர்ப் பாரமும், அவரது உள்ளத்தை அழுத்தியும், ஒவ்வோரிரவும் தூங்கவொட்டாமல் பண்ணியும் வந்த போதிலும், அவரது இயல்பில் உள்ளடங்கி யிருந்த பேரானந்த ஊற்றை அடைக்க முடியவில்லை. ஆனால் அவரது தூல உலகம் அந்த வருத்தத்தை தாங்கமுடியாது போயிற்று. அவர்க்கு நேர்ந்த சலிப்பு பரிதாபகரமா யிருந்தது; மேலும், மறைவாக இருந்து வந்த இருதய நோய் ஒன்றும் அவரது உடல் நலத்தைக் குலைத்து வரலாயிற்று. இறுதியில் அதுவே, அவரது ஆவி வெளிச் செல்லுதற்கேற்ற ஒரு வழியை உண்டாக்கிவிட்டது. அவரைச் சூழ்ந்திருந்தவர்கள்மீது எழும் பரிவாலும் அவர்களது நலத்தைப் பற்றிய கவலையாலும் அவர் தமது வருத்தத்தைப் பெரிதும் மறைத்து வைத்துக் கொண்டார்; களைப்பைப் பொருட்படுத்தாமல் தமது குருதேவர்க்குத் தொண்டு செய்வதிலேயே முன்னினும் முனைந்து ஈடுபடத் தொடங்கினர். தமது நலிந்த ஆக்கையின் மீது இன்னும் மிக்க பாரத்தைச் சுமத்தத் தலைப்பட்டவராய், தமக்கு சம்பந்தப்பட்ட இருபெரும் சங்க நிலையங்களுக்கு இடையே உள்ள மூவாயிரத் தைந்நூறு மைல் தொலையையும் சிறிது காலத்துக்குள் அடிக்கடி கடந்து சென்று வந்தார். அவரைப் பின்பற்றி நின்றவர்க்கு அவர் ஞானத்தை அருவியெனப் பொழிந்த ஒரு யந்திரம் போன்றிருந்தார். ஆயினும் சமீப காலத்துக்குமுன் ஒருமுறை, தமக்கு ஓர் எச்சரிக்கை கிடைத்திருப்பதாயும், ஆயினும் தமது உலையாத முயற்சியைக் கைவிடப் போவதில்லை யென்றும் அவர் பிறரிடம் கூறியிருந்தார். அந்த அடியார்கள் அவரைக் கண்டித்தபோது, அவர் "செய்தற்குரியது எவ்வளவு பெரிது, அதற்குரிய காலமோ எவ்வளவு சுருங்கியது" என்று கூறிவிடுவார்; அல்லது, சில சமயம், "தேவியம்மையே என் பின்னிருந்து என்னை ஆட்டுவிப்பதை நீங்கள் அறியீரோ?" என்று உரைத்து, அவர்கள் கவலைப்படுவதைக் குறித்து மெல்லக் கண்டிப்பார். அவரும் அவ்வளவு இளமை வளரப் பெற்றவராயும், தெய்வ உணர்ச்சி எப்போதும் ததும்பிப் பொங்கி வழிபவராயும் இருந்தமையால், அவர் இறந்து விடுவார் என்ற எண்ணம் எப்படியோ அடியார்கட்கு எழாது போயிற்று.

இக்காரணத்தினாலேயே, ஜூன் 21-ம் தேதி மாலையில் சுமார் ஐந்து மணிக்குத் தமது மனதிற் கினிய தபோவனமாகிய 'கோஹாசட்' (ஓரூர்) ஆச்சிரமத்திலே மரங்கட்கு இடையே அவர் நிலத்திலே திடீரெனக் குப்புற விழுந்தபோதும், சிறிது நேரத்திற்குள் உயிர் நீத்த போதும், அவரைச் சூழ்ந்திருந்தவர்கள் தாம் கண்ணாரக் கண்டதையும் நம்ப முடியாதவர்களானார். சுவாமியின் எண்ணிறந்த அன்பர்கட்காக ஒரு கடிதத்தினின்றும் பின்வரும் பகுதி எடுத்தளிக்கப்படுகிறது. அது சுவாமியின் கடைசி வாழ்நாளைப் பற்றியது. அன்று காலையில் அவர் களைத்துப்போன உணர்ச்சி யுடையராய்த் தோன்றினர்; அதனால் அவரை இளைப்பாறுமாறு வேண்டினர். ஆனால் எல்லோரும் மறுநாளைக்கு நிகழ்வதான, ஆசிரமத்தின் பதினோராவது ஆண்டு நிறைவு விழாவிற்காகச் சுறுசுறுப்பாக முயன்று வந்தனராதலின், தமது தொண்டர்கட்கு மிக்க வேலையை அளித்து வருத்த மனமில்லாதவராகி, தமது வேலையை முறைப்படித் தாமே செய்தாகவேண்டும் என்று வற்புறுத்தினர். சில மணி நேரங்களாக அவர் 'கிழக்கத்திய செய்தி' என்னும் ஆசிரமப் பத்திரிகையிலேயே மன மொருமித்து வேலை செய்வாராய், அச்சுக் கூடத்திற்கு

அது செல்லுமுன் அதை வேண்டியவாறு சரிப்படுத்தினர். பின்பு, முன்னலேயே கொஹாசட் ஊர்க்குச் சென்றிருந்தவரை அழைத்துவருவதற்காகத் தாமே தமது மோட்டார் வண்டியை ஓட்டிச் சென்றனர். கடிதம் கூறுவது பின்வருவது :—"நாலு மணி அடிக்கப் பதினைந்து நிமிஷங்கள் இருக்கும்போதே நாங்கள் பாஸ்டன் நகரைவிட்டுக் கிளம்பினேம். நாங்கள் வரும் வழியில் ஏறக்குறையப் பேசவேயில்லை; ஏனெனில், எமது சுவாமிக்கு அமைதியா யிருப்பதிலேயே விருப்பம் இருப்பதுபோலத் தோன்றிற்று. நாங்கள் ஆசிரமத்திற்கு அருகே சென்றபோது, ஐரோப்பாவிலிருந்து வானெலிச் செய்தி ஏதேனும் உண்டோ என்று அறியுமாறு என்னிடம் சொன்னர். நான்கு சேனைத் தலைவர்கள் கூடி, ஓர் இருப்புப் பாதை வண்டியில் பிரான்ஸ் நகரை எதிரி காலடியில் சரண மடையும்படிச் செய்த கதையை நான் கேட்கலானேன். இதைக் கேட்டவர் மனமிளகித் துக்க மயமான குரலில், "ஜெர்மனியின் நிபந்தனைகட்குச் செவிசாய்த்துக் கொண்டிருந்த போதே அந்தச் சேனைத் தலைவர்கள் தமக்குள், 'இந்தப் பாதகத்திற்கு ஒருநாள் நாம் பழிக்குப்பழி வாங்காம விரோம்' என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டே, இன்னும் ஒரு புது யுத்தத்திற்கு விதையை ஊன்றினர் போலும்" என்று கூறினர். பின்னும் அவர் "ஒருவரை யொருவர் அறியும் அவசியம் இவர்கட்கு உண்டு அன்றோ; பின் ஒருநாள் இவர்கட்கு இவ் அறிவைப் போதிப்பார் யாரேனும் வருவார்" என்று உரைத்தார். நாங்கள் ஆசிரமம் போய்ச் சேரும்வரை மௌனமாகவே இருந்தார். நாங்கள் வண்டியினின்றும் கீழிறங்கியதும், அவர் "இப் பறவைகள் பாடுவதைக் கேளுங்கள்!" என்றார். சில நிமிஷங்கள் அவர் உலாவினர். மீண்டும் "இப் பறவைகள் எவ்வாறு பாடுகின்றன!" என்று வியந்தார். சிறிது நேரத்திற்குள், அவர் பாதை வழியாக வருவதைக் கண்டேன். அவர் என்னை அணுகியதும், 'நான் வேறோர் உலகத்தில் இருந்துளேன்' என்றார். அவரது மனதுக்கு மிகவும் உவப்பான வனக் கோயிலிலேயே தியானம் பண்ணி வந்ததைக் குறித்துப் பேசியதாக நான் உணர்ந்தேன். அங்கேயுள்ள புல்லை அறுப்பதைப் பற்றிச் சகோதரர் பிலிப் என்பவரிடம் பேசினர். திடீரென அவர் பூமியை நோக்கித் தமது கையை நீட்டுவதற்கு முயல்வதை யான் நோக்கினேன்; நான் அவரிடம் செல்லுமுன் அவர் கீழே வீழ்ந்து விட்டனர். பிலிப் என்பார் வீட்டைச் சுற்றிச் செல்லப் புறப்பட்டு விட்டார். அவ்விடம் உடனே வருமாறு அவரைக் கைகாட்டி அழைத்தேன்; நாங்கள் இருவரும் சுவாமிஜீயை மிக மெதுவாகப் புரட்ட ஆரம்பித்தோம்............அவர் கடைசியாகக் கூறிய மொழிகளாவன: "என்னை இன்னும் நகர்த்தாதேயுங்கள்" என்பவையே. நெடும் மூச்சுகள் சிறிது நேரம் அவரிடம் உண்டாயின. அவரது ஆவி உடலைவிட்டு வெளியேகிற்று."

இந்தப் பயங்கரமான செய்தியை பாஸ்டன் நகர்க்குத் தந்தி வாயிலாகப் பேசுவதே எமக்கு அடுத்த கடுமையான தொழிலாயிற்று. இயல்பாகவே, எங்களையும் இரண்டு மருத்துவர்கள் கூறிய சாக்ஷியத்தையும், எங்களது செய்தியைக் காதாரக் கேட்டவர்கள் நம்ப மறுத்தனர்; நாங்களும், எங்களது கண்ணாரக் கண்ட காட்சியை நம்ப விரும்பாது, மீண்டும் செய்வது இன்னதென்றறியாது, பிரார்த்திக்கத் தொடங்கினேம். சடை சடையானது போன்ற வெண்மை மேகங்கள் தவழப் பெற்று நீலவானம் பொலியலாயிற்று; அருகாமையிலே அப்போ தலர்ந்த மலர்கள் மணம் வீசின; பறவைக் கணங்கள்

பித்துக் கொண்டன போலப் பாடின. அவர் கிடந்த கோலத்தைக் கண்டவனக்கு 'வானமே கூரையாக, புல்லே அணையாக' என்னும் (சுவாமி விவேகானந்தரது சந்நியாஸகீதத்திலுள்ள) வாக்கு நினைவில் எழுந்தது.

கீழை நாட்டிலும் மேலை நாட்டிலும் உள்ள எண்ணிறந்த உயிர்கட்கெல்லாம் எத்துணைய அதிர்ச்சியை இச்செய்தி உண்டாக்கிற்று என்பதை உரைக்கவோ அளக்கவோ ஒருவர்க்கு ஒண்ணாது. அவரை நன்றாக அறிந்தவரது உள்ளத்தில் அவர், கோபமோ பகையோ வேறு அற்ப உணர்ச்சிகளோ ஒரு சிறிதும் இல்லாத இயல்பிற்குரிய சாந்தியோடும் அழகோடும் ஒளிர்கிறார். அவரது அக ஒளியினின்றே எழுந்தது பாஸ்டன் வேதாந்த நிலயம்; அதன் மேன்மையும் அழகும், அதற்கருகிலுள்ள கொஹாஸட் ஆசிரமும், காலிபோர்னியா மலையிலுள்ள ஆனந்த ஆசிரமும், பல்லோரது நன்மைக்கென்றும் ஆனந்தத்திற்கென்றும் சமர்ப்பிக்கப்பட்டதும், 'கரந்தெங்கும் பரந்துள்ள பரம்பொருளின் கோயிலைச் சிகரமாக உடையதும் ஆன அந்நிலயத்தின் அமைப்பும் சுவாமியின் ஞான ஒளிக்குச் சான்றுகளாக விளங்குகின்றன. இந்நிலயங்கள் யாவும் யாதொரு கட்டுப்பாடின்றியும், குறிக்கோளின் மீதுள்ள அன்பையே அங்கத்தினரை ஒன்றாகப் பிணைக்கும் ஏதுவாகப் பெற்றும் தாமாகவளர்ந்து வந்துள்ளன. 'தேனீயும் தாமரையும்' என்னும் ஸ்ரீராமகிருஷ்ணரது உவமைக் கதையே சுவாமி பரமானந்தரது உணர்ச்சியில் ஓவாது உறைந்து வரலாயிற்று; அவரது தொண்டு முழுவதும் அக்கதையில் அடங்கின படிப்பினையின் அனுபவ விரிவுரையாயிற்று.

துக்க சமாசாரம் பொதுமக்களது காதிற்கு எட்டிய கணமுதலே, மலர்கள் பாஸ்டன் வேதாந்த நிலயத்திற்கு ஏராளமாகக் குவிந்து வரலாயின. மறுநாள் சனிக்கிழமை மாலை 4-30 மணிக்கு முதலாவது ஞாபகச் சின்னப் பிரார்த்தனை நிகழ்ந்தது. சுவாமியுடைய திருமேனியின் அளவுக்குச் சமஅளவுள்ள படமொன்று, அச்சிறிய கோயிலின் இரண்டு உயர்ந்த ஜன்னல்கட்கிடையே பீடத்திற்கு மேலே தொங்கவிடப்பட்டது. அது நூற்றுக் கணக்கான மலர்களுக்கு இடையே உயிருள்ள வடிவம்போல அழகாக ஒளிர்ந்தது. பல நண்பர்கள் கோயிலுக்குள்ளும் அதை அடுத்துள்ள மண்டபத்திலும் குழுமினவராய் தமது வணக்கத்தைச் செலுத்துமாறு வந்தனர். சுவாமி யதீஸ்வரானந்தரும் நிகிலானந்தரும் நியூயார்க் நகரினின்றும் பறந்து வந்தனர்; சுவாமி அகிலானந்தர் செய்தியைக் கேட்டதும், வேறு அலுவல்களை ரத்துபண்ணிவிட்டு பிலடல்பியா என்னும் நகரினின்றும் வந்தனர். சுவாமி பரமானந்தர்க்குப் பதினான்கு ஆண்டுகளாகப் பிரசங்க மேடைத் துணைவராய் அமர்ந்திருந்த காயத்திரீ தேவி யம்மையார் பிரார்த்தனையை நடத்திவைத்தனர்; சுவாமிகள் அப்பெரியாரைப் புகழ்ந்து அன்புரைகள் வழங்கினர். ஒரு சைனதேசத்து நண்பரும், ஒரு கல்லூரிப் பேராசிரியரும் பிறரும் சுவாமிக்குத் தமது வணக்கமொழிகளை சமர்ப்பித்தனர்.

ஞாயிற்றுக்கிழமை காலை இரண்டாவது ஞாபகச் சின்னப் பிரார்த்தனை நடைபெற்றது; அதற்குள் செய்தி வெகுதூரம் பரவிவிட்டமையால் முன்னினும் பெரிய கூட்டம் கூடியிருந்தது. எல்லாத் திசைகளிலுமுள்ள பற்பல நகரங்களிலிருந்தும் நண்பர்கள் விரைந்துவந்தனர். சங்கீதம் வல்லாராயிருந்த ஓர் அம்மையார் தமது இசைச் செல்வத்தை அவர்க்காக சமர்ப்பிக்கும் பேற்றைப் பெறும்பொருட்டு

ஒரு நாடு முழுவதையும் கடந்து வந்தனேந்தனர். காயத்ரீ தேவியம்மையாரே, அன்று சுவாமி பரமாநந்தர் பேச நினைந்திருந்த விஷயமாகிய "நின் திருவுள்ளம்படியே ஆகுக" என்னும் பொருளைப் பற்றிப் பேசி ஞாபகச் சின்னப் பிரார்த்தனையை முடித்தார். அம்மையார் தமது பக்தியையும் நம்பிக்கையையும் வெளிப்படுத்திய மொழிகள் துயரத்தில் மூழ்கிய நெஞ்சங்களில் ஆழ்ந்த சாந்தியுணர்ச்சியை உண்டாக்கி, அனைவர்க்கும் ஆறுதலையளித்தன. அவ்வமயம் பலர் சுவாமியின் விஜயத்தையும் ஸாந்நித்யத்தையும் உணரலானார். அன்று மாலை சுமார் மூன்று மணிக்கு சுவாமி பரமாநந்தரை இரு சகோதரிகளோடு கூட காலிபோர்னியா ஆசிரமத்துக்கு அழைத்துச் சென்றனர். அங்கே கோயிலைச் சார்ந்த ஒரு பெரிய மரத்தடியில் கடைசிப் பிரார்த்தனை நிகழ்ந்தது. அவ்விடத்தில்தான் சுவாமிகள் பல முறை தியான வகுப்பை நடத்தியும் நிலாப் பிரசங்கங்களைச்செய்தும் வந்தனர். ஜூன் 27-ல் காலை எட்டரை மணிவந்தது. அது அதிகாலையா யிருந்தும், இடம் வெகு தொலைவிலிருந்தும், ஜனங்கள் நூற்றுக்கணக்காகத் திரண்டு, அவ்விசாலமான இடமுழுவதும் நிரம்பி வழிந்தனர். சிலர் இரவெல்லாம் மோட்டாரில் பிரயாணம் செய்து அங்கு வந்தனர்; சிலர் புகைவண்டியிலும் ஆகாய விமானத்திலும் வந்து இறங்கினர்; ஓர் இருவர் எண்ணூறு மைல்தூரம் பிரயாணம் செய்து வந்தனர். சுவாமி பரமாநந்தரே தூய தாக்கிப் பிரதிஷ்டை செய்துவைத்திருந்த கல்லினாலாய புதிய ஓமகுண்டத்தில் சுவாமி அசோகாநந்தரும் சுவாமி பிரபவாநந்தரும் ஓமம் செய்தனர்; அனைவரும் தூய சிந்தையோடும் பயபக்தியோடும் அமர்ந்து கவனித்து வந்தனர். தூயவடமொழி மந்திரங்களையும் ஆங்கில கீதங்களையும் மெல்ல ஓதியும் பாடியும் வந்தது, சுவாமியின் வாழ்க்கையில் இருமொழிப் பயிற்சியும் ஒருங்கே இயைந்து நின்றமைக்கு அறிகுறியாயிற்று. மீண்டும் சுவாமியின் துறவிச் சகோதரர்கள் அவரைப்பற்றிப் புகழுரை கூறினர்; காயத்திரி தேவி யம்மையார் மலையில் அலர்ந்த மலர்களாற் சூழப்பட்டுக் கிடந்த பெரியாரைப் பற்றி அழகிய புகழுரை கூறினர். சகோதரி தேவமாதா அம்மையார் ஆசிரம சகோதரி சகோதரர்களின் சார்பாக எழுதியனுப்பித்த, ஆழ்ந்த பக்தி ததும்பிய வாசகத்தை, சகோதரி தயா என்பவர் வாசித்தார்.

சுவாமி விவேகாநந்தப் பெரியாரது நினைவைப் போற்றுவதற்காகச் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டிருந்த ஜூலை 4-ம் தேதியன்று அந்நாளை இதுவரையில் அதன் பொருள் சிறக்க அனைவரும் கொண்டாடினர். பல ஆண்டுகளாக சுவாமி பரமாநந்தர் அந்நாளில் தமது ஞான குரவராகிய சுவாமி விவேகாநந்தரின் மஹாசமாதியைக் கொண்டாடும் பொருட்டு, கொஹாஸெட்டிலுள்ள ஆனந்தாசிரமத்தில் உள்ள சோலைக் கோயிலிலே அடியார்களைக் கூட்டுவிப்பது வழக்கம். இந்த ஆண்டில் சுவாமியின் நண்பர்களும் அடியார்களும் மாகுரவராகிய சுவாமி விவேகாநந்தர்க்கும் அவரது பக்தியார்ந்த ஞான குமாரரும் சீடருமாய சுவாமி பரமாநந்தர்க்கும் தமது வணக்கத்தைச் செலுத்துமாறு கூடியிருந்தனர். புதிதாகச் சமைக்கப்பட்ட கற்பீடத்தின் மீது சுவாமி விவேகாநந்தரது திருவுருவப்படத்தை மேலும், சுவாமி பரமாநந்தரது திருவுருவப்படத்தைக் கீழுமாக அமைத்து, ஒவ்வொன்றையும் செம்மலர்களாற் சூழ அலங்கரித்தனர். காயத்திரி தேவி அம்மையார் இருமணிநேர மௌனத்தை நடத்திவந்தனர்; அனைவரும்

மோனமாயிருந்தபோது, இடையிடையே சந்தர்ப்பத்திற் கேற்ப மிகச் சுருங்கிய செவ்விய மொழிகளை எடுத்தோதினர். மழையும், அது காரணமாக எங்கும் ஈரமும் இருந்தும், பலர் மந்திரத்தாற் கட்டுப்பட்டவர் போன்று அவ்விடத்துக் கூடியிருந்து, அங்கே நிரம்பின சாந்தியமுதையும் பருகினர். இப்பிரார்த்தனையும் பிரசங்கமும் முடிந்ததும் மரத்தடியிலுள்ள ஒரு மாளிகையில் ஒரு விருந்து இந்திய ரது முறைப்படி அளிக்கப்பட்டது. பின்னர், விருந்துண்டார் பலர் மன உருக்கத்தோடு தமது அன்பார்ந்த தலைவராகிய நண்பர்க்கு நன்றியுரை வழங்கினர். முதலிற் பேசிய சுவாமி அகிலாநந்தர்க்குப் பின் சீனு, தென் அமெரிக்கா, இந்தியா, ஒஹியோ, பாஸ்டன் முதலிய நாடுகளைச் சார்ந்த பலர் பேசினர். ஒருவர் அப்போது கான மழை சொரிந்தனர். பல ஆண்டுகளாக எல்லாரது நெஞ்சங்களிலும் அன்பையும் புகழையும் பரப்பி வந்த ஒருவர்க்குத் தகுந்தவாறு பலரது உள்ளத்தும் எழுந்த ஆழ்ந்த உணர்ச்சியும் பெருமதிப்பும் ஆகாய மெங்கணும் குடிகொண்டிருந்தன.

போரும் பகையும் கொடுமையும் நிறையும் இவ்வுலகத்தை சுவாமி பரமாநந்தர் நீத்துவிட்டு, "பிறரது இன்பத்திலேயே மக்கள் மகிழும்'' (என்று அவர் கூறிய) உலகமாகிய பேரின்ப உலகிற்கு எழுந்தருளி விட்டனர். அவரது விடுதலையைக் கண்டு யாம் மகிழ் கூறுகிறோம். அவர் வாழ்ந்த வாழ்க்கையும், அவரிடமிருந்து பெருகிய தூய்மையும், இழத்தற்கும் மறத்தற்கும் அரியன. அவர் பிறர்க்கு உபதேசித்தபடியே தாமும் ஒழுகிக் காட்டினர்; அத்தகையாரது உபதேச மொழிகளே, அவரது பிரிவைப் பற்றிய துயர நெருப்பு காலத்தின் சக்தியால் அணைந்து நெடுநாட்குப் பின், இனிப் பிறக்கப் போவார் பலரது வாழ்க்கைகளையும் புனிதப்படுத்தி யருளும் என்பது திண்ணம்.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

பரமஹம்ஸ தேவருடைய காலத்திற்கு அரைநூற்றாண்டுக்குப் பின் வாழ்கின்ற இக்காலத்தவராகிய நாம் அவரைப் போற்றுவதில் வியப்பேதுமில்லை என்று கூறலாம். அவரது பெருமையை ஓரளவு அறிந்து கொள்ளுவதற்கு நமக்குப் பல வசதிகள் உள்ளன. அவரது வாழ்க்கைச் சரிதம் கோர்வையாக எழுதப்பட்டு வெளிவந்துள்ளது. அச்சரிதத்தில் அவரது வாழ்க்கை நிகழ்ச்சிகளின் பெருமை நன்கு விளக்கப்பட்டுள்ளது. அவரது உபதேச மொழிகள் பிரசுரிக்கப்பட்டுள்ளன. சுவாமி விவேகாநந்தரும் ஏனைய சீடரும் தமது குருநாதரைப்பற்றிக் கூறியுள்ள புகழுரைகளை நாம் படிப்பது இப்பொழுது சாத்தியமாகிறது. ஸ்ரீராமகிருஷ்ணரது சரிதத்திற்குக் கருத்துக்கள் நிறைந்ததொரு முன்னுரைவரைந்துள்ள காந்தியடிகள், ஸ்ரீராமகிருஷ்ண விவேகாநந்த சரிதத்தை மேனாட்டு மொழியில் எழுதியுள்ள பேரறிஞரான ரோமன் ரோலண்டு-இத்தகைய பெரியார் பரமஹம்ஸ தேவரைப்பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயத்தை நாம் தெரிந்துகொள்ளுவது சாத்தியமாகிறது. ஸ்ரீராமகிருஷ்ணரது திருப்பெயர் தாங்கி நம் நாட்டிலும் பிற நாட்டிலும் நடைபெற்றுவரும் மடங்கள், மடங்களின் ஆதரவுபெற்றுள்ள கல்விச் சாலை

கள், வைத்தியசாலைகள் - இவைகளைக் காணும்பொழுது, பரமஹம்ஸரது சக்திப் பிரபாவத்தை நாம் அறிவது சுலபமாகிறது. சில ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற ஸ்ரீராமகிருஷ்ண நூற்றாண்டு விழாவின் காரணமாகப் பலர் பரமஹம்ஸரது பெருமையை அறிய இடமேற்பட்டுள்ளது. இவ்வளவு வழிகளின் மூலமும் நாம் குருதேவருடைய மகிமையை ஒருவாறு ஊகிக்கலாம். சூத்திரங்களை அறிந்து கொள்ள பாஷியம் என்ற உரைகள் உதவுவதைப்போல, மேலே விவரித்த பல வசதிகள் குருதேவர் பெருமையை நமக்கு அறிவுறுத்துகின்றன. இக்காலத்திலும் கூட ஒருவன் அவரது மகிமையை உணராது போவானாகில் அவனைக் கண்டு நாம் பரிதவிப்பதைத் தவிர வேறு மார்க்கமில்லை. அவன் கண் திறக்கப்படட்டும் என்று நாம் பிரார்த்திப்போமாக!

ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் வாழ்ந்துவந்த நாளில் மேலே கூறிய வசதிகளில் எதுவும் இல்லாதிருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணரது வாழ்வு ஆத்மீயத்துறையில் நிகழ்ச்சிகள் மிகுந்ததாயினும் அவரது வாழ்வு இராஜீய சம்பவங்களுடனோ சமூக நிகழ்ச்சிகளுடனோ தொடர்பு கொண்டதாயில்லை. அவர் பிரசங்கங்கள் புரிந்தாரில்லை; நூல்கள் இயற்றினாரில்லை; பத்திரிகைகள் பிரசுரித்தாரில்லை; யாத்திரைகள் கூட அதிகமாகச் செய்தாரில்லை. கிராமமொன்றினில் கோயிலின்கண் அவரது வாழ்வின் பெரும்பகுதியும் கழிந்தது. அடிக்கடி அவர் கல்கத்தா நகரம் செல்லுவார். ஆனால் நவீன நாகரிகத்தினர் போற்றுகின்ற எந்த அம்சமும் அவரிடம் காணப்படவில்லை. அவரது சரீரத்தோற்றம் நாட்டுப்புறத்தாருடையதாகவே இருந்தது. ஆதலால் அவருடைய பெருமையை அறிந்து கொள்ளுவதற்கான வெளிப்படையான வசதிகள் அக்காலத்தவருக்கு இல்லை என்றே கூறலாம். ஆனாலும் அக்காலத்தவர் அவருடைய பெருமையை அறியாது போகவில்லை. திருடனுக்குத் திருடனைத் தெரியும்—என்ற பழமொழியுண்டல்லவா? அம்மாதிரியே ஞானியர் ஞானியைச் சுலபமாக அறிந்துகொள்ளுகின்றனர். பைரவீ பிராம்மணியும் தோதாபுரியும் கண்டமாத்திரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரது பெருமையை அறிந்தனர். கேசவ சந்திரசேனர் என்ற பெரியார் அவருடைய மகிமையை உணர்ந்தார். கேசவர் மூலம் இளைஞர் பலர் பரமஹம்ஸரைப் பற்றி அறிவதற்கு இடமேற்பட்டது. ஆனால் நுட்பசக்தி அற்றவர் பலர் குருதேவரைப்பற்றித் தவறான அபிப்பிராயமும் கொண்டிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஸ்ரீராமகிருஷ்ணரை நாடிய அனைவரும் அவரைத் தமது குருவாக ஏற்று உடல் பொருள் ஆவி முழுவதையும் அவருக்கு அர்ப்பணம் செய்துவிடவில்லை. அம்மாதிரிச் செய்தவர்கள் நரேந்திரரைப் போன்றவரேயாவர். வேறு சிலர் பரமஹம்ஸருடைய கொள்கைகளில் சில குறைகள் இருப்பதாகக் கூடக் கருதினர். ஆனாலும் அவர்களும் பரமஹம்ஸரைப் பேரன்புடன் நேசித்தனர். அவரவர் சக்திக்கேற்ப மக்கள் ஸ்ரீராமகிருஷ்ணரை அறிந்து பயன்படுத்திக் கொண்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணரை நேரிற்கண்ட சிலர் அம்மகானைப்பற்றி என்ன நினைத்தார்கள் என்பதை அறிந்து கொள்ளுவது பெரும் பயன்தரும். அத்தகைய நினைவுகளிற் சிலவற்றை ஈண்டு பிரசுரிப்போம்.

பவானிசரண பானர்ஜி அல்லது உபாத்தியாய பிரம்மபாந்தவர் என்ற பெரியார் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்து கேசவசந்திர சேனருடைய சீடராயிருந்தார். அவர் சிறந்த சொற்பொழிவாளர். தினசரி வங்காளிப் பத்திரிகை யொன்றின் ஆசிரியர்.

பிற்காலத்தில் அவர் ரோமன் கத்தோலிக் மதத்தைப் பின்பற்றினர். இவர் பரமஹம்ஸரைப்பற்றிக் கூறுவதாவது :—

'ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்பவர் யார்? அதை யான் அறியேன். ஆனல் நான் கூறக் கூடியது இதுதான். வங்காள வானத்தில் பகவான் கௌரங்கர் காலத்திற்குப் பின்னர் இவ்வளவு இனிமை வாய்ந்த சந்திரன் தோன்றியதில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்திரனுக்கன்றோ ஒப்பிட்டேன். சந்திரனும்கூடக் களங்கமற்று இல்லை. ஆனல் ஸ்ரீராமகிருஷ்ணர் எனும் சந்திரன் களங்கமென்பதே இல்லாதவொன்று. ஆ! அவரது தெய்விக சரீரம் அனலைப்போலத் தூய்மையும் ஒளியும் நிறைந்திருந்தது. காமத்தின் அற்ப ஸ்பரிசத்தாலும் கூட அது மாசுறவில்லை. அவருக்கு விவாகமானபொழுது அவர் மனைவிக்கு வயது ஆறுதான். விவாகமான பத்தாண்டுகட்குப் பின்னர் அவர் இவ்வம்மையை இரண்டாவது தடவையாகச் சந்தித்தார். அவ்வம்மை தூய்மையின் திருவுருவா யிருந்தார். இவ்வம்மையின் மூலம் ஸ்ரீராமகிருஷ்ணர் பெண்மையை ஆராதித்தார். அவ்வம்மை அப்பொழுது இளமைப் பருவத்தினரா யிருந்தார். ஆம், அப்பெண்ணை அவர் உண்மையிலேயே ஆராதித்தார். ஹிந்துக்களுடைய தெய்வவிக்கிரக ஆராதனையின் எல்லா அம்சங்களுடனும் அவ்வாராதனை நடைபெற்றது. தம் ஜபமாலையை அவர் அவ்வம்மையின் பாதங்களில் நிவேதனமாகச் சமர்ப்பித்தார். இந்த அர்ப்பணத்திற்குப் பின்னர் ஒளியாக நிறைந்த முழுமதியென ஸ்ரீராமகிருஷ்ணர் உயர்ந்த தேஜஸ் நிரம்பப்பெற்றவராய்ப் பிரகாசித்தார். அவரது செய்கை நிகரற்ற அழகுடையது. உலக சரிதத்தில் அதற்கொப்பானதே இல்லை. பல முனிவரும் ஆசாரியரும் கடவுளை நாடும்பொருட்டு மனைவியரைத் தியாகம் செய்துள்ளனர். ஆனல் ஸ்ரீராமகிருஷ்ணருடைய இந்தத் தியாகம் சாதாரண வகையான தியாகமாகாது. அது அங்கீகாரத்தின் உயர்நிலையென்றே கூற வேண்டும். மதியின் நிலாமதியைவிட்டு இருக்க முடியாது. தூய்மையின் உருவான இவ்வம்மையும் ஸ்ரீ ராமகிருஷ்ணரினின்றும் தனித்துவாழவில்லை. பதினறு வயது மங்கையை ஆராதிப்பதான அந்த ஷோடசி பூஜை என்ற விசேஷ ஆராதனை நடைபெற்றது முதற்கொண்டு, ஸ்ரீராமகிருஷ்ணரது மனைவி அவரிடமே இருந்தனர். ஸ்ரீராமகிருஷ்ணரது ஒளிவட்டம் போன்று இருந்தனர் அவ்வம்மை. தமது தெய்விகக் கணவராலேயே பக்தியுடன் ஆராதிக்கப்பட்ட இவ்வம்மையின் புண்ணிய பாதங்களில் கொஞ்சநேரம் அமர்ந்திருப்பதற்கு முயலுங்கள். அவ்வம்மையின் ஆசிகளையும் அருளையும் நீவிர் பெற்றீர்களானல் அப்பொழுது புனிதமாக்கப்பட்ட உமது உள்ளங்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரை உள்ளபடி அறிந்து கொள்ளுவது சாத்தியமாகும். நீவிர் அப்பொழுது பாக்கிய சாலிகள் ஆவீர்கள்.' (இவ்வுரை எழுதப்பட்ட காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் தர்மபத்தினியான சாரதா தேவியார் உயிருடனிருந்தனர்.)

இந்த ஸ்ரீராமகிருஷ்ணர் யார்? அறியும் பொருளும் அறியப்படும்பொருளும் ஒன்றுகின்ற நிலையான பிரம்மசாக்ஷாத்காரம் என்ற உயர்நிலையை அடைந்தவர் அவர். இந்த பிரம்மத்தைப்பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணர் பின்வருமாறு பேசுவார்: 'உலகில் உள்ள வேதநூல்களின் உண்மைகள் யாவும் பகரப்பட்டுள்ளன; அதாவது வாயின் மூலம் பல வார்த்தைகளால் வெளியிடப்பட்டுள்ளன. ஆனல் இந்த பிரம்மமோ, பிரம்மஞானமோ விவரிக்கப் பட்டதில்லை; அது விவரிக்க முடியாத தொன்று. அது ஊமையின் கனவுபோ

லாகும். ஊமை கனவின் விஷயத்தை ஆழ்ந்து உணருகிறான். அதை விவரிக்க எவ்வளவோ முயலுகிறான். ஆனால் அதை விவரிக்க அவனால் கூடுவதில்லை.'

இந்த ஸ்ரீராமகிருஷ்ணர் யார்? அவர் சாதகர்களுக்கெல்லாம் மன்னன் போன்றவர். உணர்ச்சியும் ஆர்வமும் நிறைந்த தம்முடைய சாதனையின்மூலம் அவர் உலகின்கண்ணுள்ள பலவேறு சமயங்கள், மதப் பிரிவுகளுடைய தனித்தனியான ஆத்மீய பாவனைகளை யெல்லாம் தம்மிடம் பெற்றுத் தமது பிரம்மஞானம் எல்லா மார்க்கங்களையும், முறைகளையும் உட்கொள்ளக் கூடிய அளவு விரிவுடையது என்பதை எடுத்துக் காட்டினார். யோகிகளுடைய துரியாதீத நிலையும், பிருந்தாவனத்துக் கோபிகளுடைய பக்தியின் இனிமையும், வியப்பையும் அச்சத்தையும் தருகின்ற சக்தி உபாசகனது பாவனையும் ஸ்ரீராமகிருஷ்ணரது உள்ளத்தே ஒன்றுசேர்ந்து ஐக்கியமடைந்துள்ளன. அவர் இஸ்லாமிய மதத்தை அனுஷ்டித்து அதன் உயர் நிலையைக் கண்டறிந்தார். அவர் ஏசுநாதரின் கிறிஸ்து எனும் உயர் நிலையையும் அறிந்தார். மாறுதல் அற்ற பிரம்மசாக்ஷாத்காரத்தில் நிலைத்து நின்று, சநாதன தர்மத்தின் தொடர்பைக் காப்பாற்றிய ஸ்ரீராமகிருஷ்ணர் ஆத்மீய வாழ்வின் பலவேறு முறைகளைப் பேரன்புடன் வரவேற்று, புதிய ஆத்மீய சக்திகள் யாவையும் ஏற்று, அவற்றை அத்வைதமுறையுடன் இணைத்துப் பாரதநாட்டை வளமுறச் செய்தார்.

காமம், ஆசை இவற்றை வென்ற மகா வீரர் ஆவர் ஸ்ரீராமகிருஷ்ணர். மூச்சு விடுதல் எவ்வளவு சுலபமானதோ அதைப்போல பிரம்ம சாக்ஷாத்காரம் அவருக்கு இயல்பானதொன்றா யிருந்தது. அவர் பக்தர்களின் சூடாமணி. மானுடவர்க்கத்தைக் காக்கவந்த அவதார புருடர். உயர்ந்த ஆத்மீய ஐக்யபாவனை எனும் ஆழ்ந்த கடல் ஆனவர்.

இந்த ஸ்ரீராமகிருஷ்ணரைப் பணிவோம்!

---

# இன்ப வாழ்க்கை

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழாசிரியர், சித்தூர்)

**இன்பம்!** இன்பம்!! ஆ ஆ! என்ன இனிமையான வார்த்தை. இஃதொன்றே இவ்வுலக வாழ்க்கையின் - ஏன்? - மறுவுலக வாழ்க்கைக்கும் - மேல்வரிச்சட்டமாக விளங்குகின்ற தென்பது குற்றமாகாது. காலை முதல் மாலைவரை - விழிப்பு முதல் உறக்கம்வரை - பிறப்பு முதல் இறப்பு வரை - எல்லாரும் எல்லாமும் - ஒரு நொடியும் ஓயாது ஒழியாது எத்துணை யெத்துணையோ துறைகளில் ஓடியோடி பறந்து பறந்து மூச்சுவிடவும் நேரமின்றி உழன்று கொண்டிருக்கக் காண்கின்றோம். ஏன்? இதற்குக் காரணம் யாது? இவ்வினுக்களுக்கு விடையிறுப்பது அரிதன்று. என்னை? இன்பம்! இன்பம்! சுகம் சுகம்!! இதற்காகவே வெளிநோக்கில் உணவு உடை மனைவி மக்கள் வீடு நிலம் தோட்டம் துரவு இவைகளுக்கெனத் தோன்றினும், அடிப்படை நோக்கம் இன்பவடைவே. உணவின்மை, உடையின்மை, மனைவி மக்களின்மை - பொதுவாக செல்வமின்மை - பெருங்

குறை - துன்பம். இக்குறைவினை நிறைவுறுத்தலே - நீக்குதலே - இன்பம், சுகம் எனக் கருதப்படுகின்றது. இதற்காகவே உலகம் அல்லும் பகலும் அலைந்துகொண்டிருக்கின்றது. ஓட்டம் ஓட்டமாக அவ்வின்பத்தைப் பற்றத் தாவித் தாவிப் பாய்ந்துகொண்டிருக்கின்றது.

உணவிலே இன்பம், மணத்திலே இன்பம், உடையிலே இன்பம், மனைவியிலே இன்பம், மக்களிலே இன்பம்; இதில் இன்பம், அதில் இன்பம் என்று எத்தனையெல்லாமோ தன் மனம்போன போக்கில் பற்றிப் பார்க்கிறது. இல்லை. இன்பமில்லை. எதிலுமின்பமில்லை. ஏமாற்ற மடைகிறது. பணத்தில் துன்பம், உணவில் துன்பம், உடையில் துன்பம், மனைவிமக்களிலும் துன்பம். எதனில் எதனில் இன்பமிருப்பதாக வெண்ணியதோ அதனிலதனில் அது கண்டது துன்பமே. "செல்வனே! இன்பம் கிடைத்ததோ? மனைவியையடைந்தோனே! இன்பம் எய்தினையோ? உண்டியுடையோனே! இன்பம் பெற்றனையோ?" "இல்லை இல்லை. ஏதோ சிறிது இன்பம் - இன்பத்தின் சாயை - தோன்றி - மின்னல் போல் - மறைந்தது. இச்சாயையினிமித்தம் படும் பாடோ மலைத்துணையாம்; பயனோ அணுத்துணையாம்." இவ்வாறு கூறிக் கொண்டே மேலும் மேலும் அந்நிழலுக்காகவே அலைந்து திரிகின்றது. வறிஞனும் இன்பத்திற்காகவே பாடுபடுவதாகப் பகர்கின்றான்; செல்வனும் இன்பத்திற்காகவே உழைப்பதாக உரைக்கின்றான். எனவே, இவனுக்கும் இன்பமில்லை, அவனுக்கு மின்பமில்லை. அவ்வாறாயின் அவ்வின்பம் - உண்மையின்பம் - மாறாத இன்பம் - எங்குளது?

ஊர்ப்புறத்தில் ஓர் ஒதுக்கிடம். அங்கே ஓர் மரம். ஒருவன் அம்மரத்தின் மேல் சாய்ந்தவண்ணம் உட்கார்ந்திருக்கிறான். அழுக்கேறப்பெற்ற ஓர் கந்தை அவனிடையைச் சுற்றிக்கொண்டிருக்கிறது. வழிப்போக்கனொருவன் அவனருகேகி, அழகான புதிய ஆடையொன்றைத் தருகிறான். மரத்தடி மனிதன் அதனையேற்க மறுக்கிறான். பின்னர் சிறிது பணம் கொடுக்கிறான் வழிச்செல்வோன். அவன் அதனைக் கண்டு முகஞ் சுளிக்கிறான். தன் வீட்டிலேனும் வந்திருக்குமாறு வருந்தியழைத்தும் அவன் இசைந்திலன். அவன் மனம் எதையும் விரும்பவில்லை. அவனுக்கு எதுவும் தேவையில்லை. இவ்வுலகத்தில் அவனுக்கு வேண்டியதெல்லாம் பசிவேளைக்குச் சிறிதளவு உணவே. அதுவும் அவன்பாலில்லை. ஒன்று மில்லாமலிருந்தும் அவன் முகம் சிறிதும் வாட்டமுற்றிலது. துன்பக்குறி துளியும் அதில் காணப்படவில்லை. அதற்கு மாறாக ஒளி பெற்றெழிலுற்று இன்பவுருவாய்க் காட்சி நல்கிநிற்கின்றது. வழிப்போக்கன் அவனை நோக்கி "ஐய! வீடுவாயில் மனைவிமக்கள் தன தானியாதி சகல சௌகரியங்களுமிருந்தும் நாங்கள் துன்பமடைகின்றோமே; இவ்வாறு தனித்திருப்பதால் உளவாகும் துன்பங்களை நீ எவ்வாறு பொறுத்துக் கொண்டிருக்கிறாய்?" என்று வினவ, அவன் நகைத்து, "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என நவின்றான். இஃதென்ன வியல்பு! அவ்வாறாயின் அவ்வின்பம் - உண்மையின்பம் - மாறாத இன்பம் - எங்குளது?

இன்பம் இன்பம் என்று அங்குமிங்குமோடி அதனை இதனைச் செய்து தேடுவோர்க்குக் கிடைக்காமல், சும்மா விருப்போனுக்கு மாத்திரம் அது கிடைப்பதேன்? இதன் இரகசியம் என்ன? இன்பமென்பது வெளியிலெங்கும் இருப்பதன்று; தேடுவோனது உள்ளத்தே மாத்திரமே யிருப்பது என்பதாம்.

'உணவு உடை மனையாதிய பொருள்களால் இன்பத்தின் சாயைமாத்திரமே தோன்றும்' என்று மேலே கூறப்பட்டது. பொருளின்றிச் சாயை எங்ஙனம் தோன்றும்? பொருளுள்ள விடத்தன்றோ அதன் சாயையு முளதாம்? எனின்; யாதாமொரு பொருளின்மேல் ஆசை கொண்டு அதனைப்பெற அலைந்துழலும் மனமானது அப்பொருள் கிடைக்கப் பெற்றவுடன் அலைவொழிந்து அடங்குகின்றபோது இன்பந்தோன்றுகின்றது. உடனே அதனைவிட்டு மற்றொன்றின்மேல் தாவி மனமானது அலையத் தொடங்கிவிடுவதால் அந்த இன்பம் மறைந்து விடுகின்றது. ஆகவே, இன்பத்தின் சாயையும் உள்ளே யிருந்தே தோன்றுவதேயாமென்க. விரும்பப்படும் மனைவியாதியாவை அவ்வின்ப வெழுச்சிக்குத் துணைக்காரணமாவதன்றி இன்பமுடைய பொருள்களாகா.

வெளியில் காணப்படும் பொருள்களனைத்தும் அநித்தியமாயும் ஜடமாயுமிருப்பனவேயாம். அநித்திய ஜடப்பொருள்கள் இன்பமுடையனவாகா வென்பது நியதி. தன்னினும் வேறாயவோர் பொருளினின்று இன்பத்தை யபேக்ஷியாது இன்பவடிவாகவே யிருக்கும்—வேறொன்றினிடத்தினின்று இனிப்பை யபேக்ஷியாது, இனிப்பின் வடிவாகவே யுள்ள கற்கண்டு போல—பொருளினிடத்தினின்றே இன்பம் பெறப்படுமன்றி அங்ஙன மில்லாத பொருளினின்று பெறப்படுவதில்லை. இன்பமற்ற பொருளினின்று இன்பம் பெறப்படுமோ? வெளியில் தேடியலைவார்க்குக் கிட்டாத இன்பம் சும்மா ஓர் மரத்தடியிலிருந்த கிழவனுக்கு கிட்டினதற்குக் காரணம் இப்போது நன்கு புலப்படுகின்றது. ஒரு பொருளை அஃது இருக்கு மிடத்தன்றி வேறிடங்களில் தேடின் கிடைக்குமோ!

உலகத்தில் நாமரூபங்களை யுடையனவாகக் காணப்படுபவையனைத்தும் அநிருதசட துக்கப் பொருள்கள்; அவற்றினின்றும் இன்பத்தை யடையமுடியாதெனில், இன்பப் பொருள் எது? எதினின்றும் இன்பத்தைப் பெறலாம்? அத்தகைய பொருள் இறைவனொருவனே. அவனே நித்தியன், அறிவுசொரூபன், ஆனந்தமயன். அவனையடைந்தாலன்றி இன்பத்தை—சுகத்தை—ஆனந்தத்தை—வேறெவ்வாற்றானும் அடைய முடியாது. இவ்வுண்மையை யுணர்ந்து, அவனையடையு நெறியறிந் தடைந்து இன்பமெய்துவோரே—எய்தமுயல்வோரே—அறிவுடையோர்—ஞானிகள். இவ்வாறன்றி துக்கப்பொருள்களில் இன்பந் தேடியலைவோர் அறிவிலார்—அஞ்ஞானிகள். ஆகவே, அவ்விறைவனை யடைந்து வாழும் வாழ்க்கையே இன்ப வாழ்க்கை—பேரின்பவாழ்க்கை. நமதுறைவிடம் நரகமே யாயினும் அது இன்ப வாழ்க்கையேயாம். "நரகமே சொர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி!" (தொண்டரடிப்பொடி யாழ்வார்.) நெருப்பு எங்குமிருப்பினும் விறகினின்றும் பெறப்படுதல் போல, இறைவன் மயிர்முனைக்குமிடனின்றி நீக்கமற எங்கும் நிறைந்திருப்போனாயினும் நம்முள்ளத்தே உயிரினுக்குயிராகி - அறிவினுக்கறிவாகி - மனத்திற்குச் சாட்சியாகி - உள்ளொளியாகி - ஆன்ம சொரூபனாகி - ஒளிர்கின்றமையின், அங்கே அவனைத் தேடிக் கண்டு சேர்ந்து அவ்வின்பத்தை யடைகின்றனர் அறிஞர்.

அலையுமனத்தை யகத்தே அடக்காத வரையில் இது சாத்தியமாகாது. மனத்தின் விரிவு துன்பத்திற்கும், அதன் குவிவு - ஒடுக்கம் - இன்பத்திற்கும் காரணமாம். விரும்பப்பட்ட பொருள் கிடைத்த வளவில், மனம் அலைவொழிந்து ஒடுங்கிநின்ற காலத்தில் பெற்ற இன்பம் - சிறு இன்பம் - இன்பச் சாயை - நெடிது

நேரம் அவ்வாறே அலைச்சலற்று காற்று லைக்கப்படாத விளக்குப்போல் மனம் நிற்பின் - இறைவனுண்மையை யுணர்ந்து அவனோடு ஒன்றித்து நிற்பின் கடவு ளின்பமாக - பேரின்பமாக - மாறும். இந் நிலையில் மாறாது நிற்கப் பழகிப்பழகி வெற்றிபெற்றோருடைய வாழ்க்கை என் றும் மாறா இன்பவாழ்க்கையாகவே யிலகும். "இன்பமே எந்நாளும் துன்ப மில்லை" என்பது அவ்வாழ்க்கையிற்றான். ஆனால், அந்த மனத்தை யடக்குவது எவ்வளவு அரியசெயலென்பது சிறிதளவே னும் அதில் முயன்றவர்களே அறிவர். அதினும் அரியது பிறிதின்றெனச் சுருங் கக் கூறலே சாலும்.

மனமானது இவ்வாறு ஓடியுழன்று கொண்டிருப்பதேன்? மனையாதிய பொருள்களை இன்பசாதனமெனக் கருதி அவற்றினிடத்துப் பற்றுக்கொண்டிருத் தலேயாம். பற்று - ஆசை - என்னும் காற்றே மனமாகிய பஞ்சினலைவிற்குக் காரணமாம். ஆசை! ஆசை!! அளவுக் குட்படாத ஆசை. வரம்பு கோலற்கரிய ஆசை. மண்ணில் பெண்ணில் பொருளில் வீட்டில் மாட்டில் ஊணில் உடையில் பிறவற்றில் பிறவற்றில் பிறவற்றில் ஆசை! ஆசை! ஆசை! எவ்வளவு பெறினும் திருப்தியடையாத ஆசை! சகல அனர்த் தங்களையும் வலிந்து ஈர்த்துவந்து சேர்ப் பது இவ்வாசையே. இவ்வுண்மையினை ஆராய்ந்தறிந்து அவ்வாசையை யகற்று தல் வாயிலாக மனத்தினலைவை யொழித் துப் பூமாந்தும் வண்டென இறைவன் திருவடியிலசையாது நிற்பச் செய்யின், அம்மம்ம! அதினும் பெறற்குரிய பேறு வேறு யாதுளது! பழக்க மிகுதியால் மனவடக்கம் கைவரப்பெறின் பின்னர் அஃது இதமேபுரியும் ஊழியனாக - நண்பனாக - நிற்கும். போவெனிற் போகவும் இருவெனிலிருக்கவும் நில்லெனினிற்கவு மாக மனதைத் தம்வசப்படுத்திக் கொள் வோரது வாழ்க்கையே இன்பவாழ்க்கை யாகும். அத்தகைய உயர்ந்த வாழ்க் கையை - இன்பவாழ்க்கையை அளித் தருளுமாறு இறைவனை இறைஞ்சுவோமாக.

---

# ஆத்மீய சாதனையில் உண்டாகும் ஆபத்துக்கள்

(ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள்)

௧

"எங்கும் உயிர் இலங்குவதைக் காண்கின்றோம். மக்கள் போன்று மாக் கள் வாழ்கின்றன, பறவைகள் வாழ்கின் றன, தாவரங்களும் வாழ்கின்றன. ஆனால் எவன் ஒருவன் உயர்ந்த வாழ்க்கையை - உயர்ந்த இலக்ஷியத்துக்கான வாழ்க் கையை வாழ்கின்றானோ அவனே உண் மையில் வாழ்பவனாவான்."

"மனிதர் மிருகங்கள் இருவருமே உண்ணுகின்றனர், உறங்குகின்றனர், சந் ததி விருத்தி செய்கின்றனர். இந்திரி யங்களின் ஆவலைப் பூர்த்தி செய்கின்ற னர். ஆனால் தர்மம் என்னும் உயர்ந்த வாழ்க்கையே மக்களை மிருகங்களினின் றும் வேறு பிரிக்கின்றது. தர்மம் என் னும் உயர் வாழ்வினைப் பின்பற்றா மக்கள் மிருகங்களின் நிலைக்குத் தள்ளப்படுகின்

றனர்; அல்லது மிருகங்களினும் கீழ்த் தரப்பட்டவர்களாகக் கருதப்படுகின்றனர்" என்கின்றார் பகவான் ஸ்ரீ சங்கரர்.

உ

நமது இலக்கு, வெளிப்பட்ட ஏகாந்தத்தை மாத்திரம் அடிப்படையாகக் கொண்டிருத்தல் கூடாது. நாம் எத் தொழில் செய்து கொண்டிருந்த போதிலும், நம் சரீரம் எந்தவித அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தபோதிலும் நம் மனம் தனக்கென தனிமையை-ஏகாந்தத்தைச் சிருஷ்டித்துக்கொள்ளும் முறைமையினைப் பழகவேண்டும். ஆத்மீய வாழ்க்கைக்கு இத்தகைய உள் ஏகாந்தம் மிகவும் அவசியம் வேண்டப்படுவதாகும். மேலும் மேலும் மனம் உள்நோக்கம் கொள்ளுமாறு முயல்வீர்; உண்மை ஏகாந்தம் எது வென அதற்கு அறிவுறுத்துவீர். எப்போதும் இடைவிடாது இதனை அநுஷ்டிப்பீர். எண்ணங்கள், வார்த்தைகள், செயல்கள் இவைகளைப் பரிசுத்தப்படுத்தும் முறையால் மனத்தைப் பண்படுத்தி அதன் பிறகு அதனை ஆத்மீய சாதனத் துறையில் செலுத்துவீராக. ஏகாந்தமென்பது வாழ்க்கைக்கு மாறானதல்ல; அதேபோல விவேகமும் வைராக்யமும் ஆகும். அதாவது நாம் ஏகாந்தமாக இறைவனிடத்தில் விடப்பட வேண்டும். நாம் கடவுளுடன் இருக்குங்கால் உலக சம்பந்தப்பட்ட, சரீர சம்பந்தப்பட்ட எவரும் எவையும் நம்முடன் இருத்தல் கூடாது. நம் மனத்தில் எந்த இலௌகிகமும் இல்லாது மனம் முழுதும் இறைவனிடம் ஈடுபட்டிருத்தல் வேண்டும். முழுதும் தெய்விகத்திலே மூழ்கி விடுவீர். அப்போது யாவும், இரண்டற்று ஒன்றாகிவிடும்.

"கடவுள் சாக்ஷாத்காரத்துக்குப் பிறகு அன்பன் ஆனந்தமயமாகி விடுகின்றான். அழியாத்தன்மையின் அமிர்தத்தை ருசி பார்க்கின்றான். அவன் பிறவிப்பயனை எய்துகின்றான். பிறவிப்பிணியினின்றும் தான் விடுபட்டதோடல்லாது, ஏனையோரையும் விடுவிக்க வல்லவனாகின்றான்" என்று கூறுகின்றார் நாரத முனிவர்.

ஒருவகையில் நாம் நம் மனத்தை ஒருமைப்படுத்தினாலும் அதனை நேரிய வழியில் செலுத்த வழி தெரியாது விழிக்கின்றோம். ஒருமைப்பட்ட மனம், ஒருமைப்பட்டிருப்பதால் முன்னினும் பார்க்க அதி உக்ரமாக லௌகிக விஷயங்களில் ஈடுபடுகின்றது; உலக இச்சைகளை அனுபவிக்க ஆசைப்படுகின்றது; வெளியே போக இச்சை கொள்ளுகின்றது. எனவே நன்னெறியிற் செலுத்தும் முறையினைக் கையாளாதபோது அது பெரும் ஆபத்தாக முடிகின்றது. மனத்தை ஒருமைப் படுத்துவதுடன் பரிசுத்தமும் தெய்விகமுமான வழியில் செலுத்தும் முறையைப் பின்பற்றாது போனால் அது ஆபத்து விளைவிக்கும். அவ்வித மன ஒருமைப்பாட்டினைப் பழகுவதினும் பார்க்கச் சும்மா இருப்பதே சாலச்சிறந்ததென்னலாம். எனவே பரிசுத்தம், பிரம்மசர்யம், பற்றின்மை ஆகியவற்றை மனம் வாக்கு காயம் மூன்றிலும் அனுஷ்டிக்க வேண்டுவது அவசியமாகின்றது. இவ்வுண்மை உங்கள் மனத்தில் ஆழ்ந்து பதிய வேண்டும் என்ற கருத்தோடேயே திரும்பத் திரும்ப நான் உங்களுக்கு வற்புறுத்திக் கூறுகிறேன். நம்முடைய உணர்ச்சிகள், எண்ணங்கள், ஆசைகள் இவையனைத்தும் புடமிட்டுச் சுத்தமுறவேண்டும்; இன்றேல் ஆத்மீய வாழ்க்கையில் முன்னேற முடியாது. நீதியும் ஒழுக்கமும் நம் வாழ்க்கையில் பின்பற்றப்படவில்லையென்றால் மனத்தை ஒருமுகப் படுத்த முயலாதிருப்பது சாலச் சிறந்ததாகும். தூய்மை யற்ற ஏகாக்கிர சித்

தம் கொடிய அரக்கனுக்கீடாக அமைந்து விடும். எனவே நீதி நெறி ஒழுக்கங்கள் அவசியம் அநுஷ்டிக்கப்பட வேண்டுவன வாகின்றன. இன்றேல் எத்தகைய ஆத்மீய சாதனையும் பெரும் ஆபத்தாக முடியும்; முடிவில் மூளைக் கோளாற்றினையும், நரம்பு மெலிவினையும் உண்டாக்கி, நம்மை எதற்கும் அருகாற்றவராக்கி நாசமாக்கி விடும். ஒழுக்கவாழ்வினில் கருத்துச் செலுத்தாது ஆத்மீய சாதனங்களை அநுஷ்டிக்க முயல்வீர்களானால் பயித்தியக் காரர்களாகித் திரியவேண்டியது தான்! அவ்வளவுதான்! இவ்வித ஆபத்துக்களை அலக்ஷியமாகக் கருதிவிடாதீர். சில பற்றுதல்களையும், சில சகவாசங்களையும், முற்றும் கண்டிப்பாக முழு ஆற்றலுடன் அறவே அகற்றப்படவில்லையானால் எந்த ஆத்மீய அநுஷ்டானங்களைக் கையாண்டாலும் அவை சாதகனுக்கு எந்த நன்மையும் தராது.

௩

இது பொதுப்பட கவனிக்கவேண்டிய விஷயமாகும்: உமக்கு ஏதேனும் உலக விஷயத்தில் ஆசையும் பற்றுதலும் இருக்குமேயானால், தியானமும் ஆத்மீய சாதனைகளையும் அநுஷ்டிக்க ஆரம்பித்த பிறகு, அவ்வாசாபூர்த்தியின் பொருட்டு ஒருபோதும் பகவானைப் பிரார்த்தித்துக் கேட்கவேண்டாம். முதலில் அவ்வாசை அறவே அகற்றப்பட வேண்டும், அல்லது அநுபவித்து ஒழிக்கப்பட வேண்டும். அதன் பிறகே ஆத்மீய சாதனைகளை அநுஷ்டிக்க முற்படலாம். நல்ல நெறியிலே திருப்ப இயலாத ஒருமுகப்பட்ட மனதைப் பெறுவதென்பது என்றும் பேராபத்தாக முடியும். பிசாசின் பலமும் மனவுறுதியும் வேண்டுவது அவசியமானாலும் அவற்றினை உபயோகிப்பதில் பிசாசு போன்றவர்களாக இல்லாதிருப்போமாக. உறுதியான ஒருமைப்பாடெய்திய மனத்தை எப்படிச் செலுத்துவது என்பது நமக்குத் தெரிந்திருக்க வேண்டுவதோடு செலுத்தக் கூடிய சக்தியும் நம்மிடம் இருத்தல் அவசியம். இச்சக்தி ஒழுக்க வாழ்வின் மூலமாகவே வந்தமையும். ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மனமும், காயமும் பரிசுத்த மடையாதவர்கள் மனத்தை ஒருமுகப்படுத்த முயல்வதை நான் சிறிதும் விரும்புகிறதில்லை. அது எவ்வளவு ஆபத்தாக முடியும் என்பதனை மக்கள் உணருகிறதில்லை. அவர்கள் நெருப்போடு விளையாடுகின்றார்கள் என்பதனை மறந்து விடுகின்றார்கள். இவ்விஷயங்களுக்கு அவர்கள் செவிசாய்க்கிறதில்லை. அதனால் விளைவது என்ன? பயித்தியக்காரர்களாகித் தெருவில் திரிவது தான்!

௪

பரிபூரண பிரம்மசர்ய வாழ்க்கையை அநுஷ்டிப்போமானால் நம்முள் அதி அற்புதமான அபாரசக்தி சேகரிக்கப்படும். அச்சக்தி சரீரமூலம் வெளித்தோன்ற இடங்கொடுக்கப்படாதபோது வேறு வழிமூலம் வெளித்தோன்ற முயல்கின்றது. அப்போது அது சித்திகளாக மாறி பல அற்புதச் செயல்களைச் செய்யவல்லதாகின்றது. ஒரு போதும் உமது மூலதனத்தைச் செலவழித்து விடாதீர். ஸ்திரமாக அதனை அதிகப்படுத்திக் கொண்டே வருவீர். வரும்படிக்கு அதிகமாக செலவழிக்காதிருப்பீராக. உமது சக்தி சிறிதும் சிதறுவண்ணம் பாதுகாத்துக் கொள்வீர். சிதறுண்டு போகும் அத்தனையும் பாழ்பட்டதாகும். வழுவாத பிரம்மசர்ய வாழ்க்கையின்றி எதுவும் சித்திபுறாது என்பதனை மனத்தில் வைப்பீர்.

டு

உலக மேத்தும் கவிச்சக்ரவர்த்தியான இரவீந்திரநாத் தாகூர் இங்ஙனம் வெகு அழகாகப் பாடுகின்றார் :

"இறைவ! அன்புடன் நீ எனக்களித்த உனது உயர்நிலையைத் தாங்குதற்கேற்ற திறன் தந்தருள்வாய். உமது சேவையில் தவிர்க்கமுடியாதுண்டாகும் துன்பத்தைப் பொறுப்பதற்கான பக்தியினைத் தந்தருள்வாய். என் உள்ளத்தை துன்பத்தினால் நிறைத்து வைப்பாய்.

"உமது திருக்கரங்களால் எனக்களிக்கப்படுகின்ற துன்பமெனும் பாக்கியத்தை நான் துடைத்தொழிக்க விரும்புகிறேனில்லை. துன்பத்தினை எனக்களிக்கும் போது, உடன் உன்னிடம் பக்தியை அளிப்பீரானால் அப்போது அத்துன்பம் என் சிகரத்தின் ஒளி விளக்காய் விளங்காநிற்கும். உம் விருப்பப்படி எவ்வளவு வேண்டுமாயினும் என்னை வேலை வாங்குவீர். ஆனால் உம்மை மறவாதிருக்கும் வரமருள்வீர்; உலகமையலில் என்மனம் சிக்காதிருக்க அருள்புரிவீர்.

"உமக்கு எவ்வளவு விருப்பமோ அவ்வளவுக்கு என்னைக் கட்டிப் போடுவீராக; பந்தப்படுத்துவீராக. ஆனால் உம்முன் என் ஹிருதயம் எப்போதும் திறந்து கிடக்கட்டும். எக்காரணத்தை முன்னிட்டும் நான் உம்மை மறவா திருப்பேனாக."

சு

இத்தகைய பயங்கரமான கஷ்டங்களெல்லாம் நம்முடைய பயிற்சிக்கேயாம். சித்தம் சீர்படவேண்டும்; அகம் அறுபடவேண்டும்; மனம் உலகளத்திலிட்டுக் காய்ச்சி சம்மட்டிகொண்டு நையப் புடைக்கப்படவேண்டும். இங்ஙனம்செய்ய விரும்புவீரானால், இயலுமாயின் இவ்வாத்மீயத் துறையில் இறங்குவீர். உமக்கு விருப்பமில்லையானால், உம்மிடம் கொடுக்கல் வாங்கல் எனும் வியாபார குணம் அறவே நீக்கப்படவில்லையானால், அனைத்தையும் அளித்துவிட விரும்பவில்லையானால் இத்துறையின் அருகிலுங் கூட செல்லவேண்டாம்; உம்மிஷ்டப்படி நீர் செய்து உமது இஷ்டப்படி நீர் வாழ்ந்து கொள்ளலாம். ஆத்மீய வாழ்க்கையில் குறுக்குவழி யென்பதொன்றும் கிடையாது. சில சமயம் நீர் சம்மட்டிக்கும் பட்டடைக்கும் இடையில் அகப்பட்டுத் தத்தளிக்கலாம். இரும்பு வளைந்துபோய் இருக்குமானால் அது நேராக்கப்பட வேண்டுவது அவசிய மல்லவா? எனவே அது உலைகளத்தில் காய்ச்சப்பட்டு சம்மட்டி கொண்டு தாக்கப்படுகின்றது. அப்போதே அது நேராகிக் கூர்மை பெறுகின்றது. இது ஒரு பொது விதியாகும்: எப்போதும் கோழைத்தனம் கொள்ளாதீர்; ஒருபோதும் அச்சம் கொள்ளாதீர்; ஆண்மை யிழக்காதீர்; அலியெனப் பெயர் வாங்காதீர். துன்பங்கள்தான் தொடர்ந்து வரட்டுமே! அளவுகடந்த அல்லல்கள் தான் அடுக்கடுக்காக வரட்டுமே! இடிமுழக்கம்போல் இன்னல்தான் வரட்டுமே! ஒருபோதும் நெஞ்சுதளராதீர்! அஞ்சா நெஞ்சுடன் அவற்றினை எதிர்த்து நிற்போம். எல்லாவற்றிற்கும் சாக்ஷிமாத்திரமாக வீற்றிருப்போம்.

எ

"இறைவ! எனது ஹிருதயக் கதவு உமக்காகத் திறந்து வைக்கப்படவில்லையானால், அதனை உடைத்துத்தள்ளி நீர் என் உள்ளே புகுவீராக. நீர் என்னை விட்டுப் போகவேண்டாம் என்று பணிந்து பிரார்த்திக்கின்றேன்."

"என் ஹிருதயமாகிய வீணை, உன் திவ்விய திருநாமத்தைப்பாடி அழைக்கவில்லையானால் நீர் என்னை விட்டுப் போய்விடாதீர். கொஞ்சம் பொறுத்

இருக்குமாறு பிரார்த்தித்துக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

"எனது ஹிருதயத்தினிடத்தே உள்ள உனது ஆசனத்தில், என்றாவது ஒருநாள், வேறு எவரையேனும் நான் அமர்த்தி விட்டிருந்தால் என்மீது வெகுண்டு வெளியே சென்றுவிடாதீர். இறைவ! நீரே எனது நாதன். என்னைவிட்டு ஏகி விடவேண்டாம்."

"நீர் அழைத்து நான் தூக்கத்தி லிருந்து விழித்துக் கொள்ளாத நாள் ஒன்று நிகழுமானால், இடிபோன்ற இன்னலைக்கொடுத்து, மலைபோன்ற துன்பத்தை ஏவி என்னை எழுப்புவீராக. ஆனால் என்னை விட்டு மாத்திரம் நீர் போய்விட வேண்டாம்."

அ

எப்பொழுதும் பக்தர்கள் ஒருவர்க் கொருவர் தங்கள் அநுபவங்களைப்பற்றிக் கலந்து பேசிக்கொள்ளவேண்டும். இது மிக மிக வேண்டப்படுவது. அதனுடன் ஒருவர்க்கொருவர் உதவவேண்டும் என்னும் அவா இருக்கவேண்டும். ஒருவர்க் கொருவர் உண்மையாக அநுதாபங்கள் கொள்ளவேண்டும் சிறிதும் பாரபக்ஷ மின்றி உம்மையே நீர் அலசிப் பார்ப்பீராக. உம்மிடம் தீது, கெடுதி இருக்குமானால் அதற்கு சாக்குப் போக்குச் சொல்லிவிடவேண்டாம். தப்பு என்றால் கண்டிக்கப்பட வேண்டியதுதான்; கெடுதி என்றால் அகற்றப்பட வேண்டியது தான். இப்படிச் செய்வதால் உம்மையே நீர் சீரழித்துக்கொள்வதற்கான சந்தர்ப்பம் எழாது காத்துக்கொள்வீர். உம்மிடம் இருக்கும் சகலத்துக்கும் நீர் காரண பூதரென்று கருதாது, சாக்ஷியாக இருந்து காண்பவர் என்பதாக நினைத்துக்கொள் வீர். அப்போதே உம்மிடம் இருக்கும் குறைகள் உமக்குத் தோன்றும். நாம்தான் சகலகாரியங்கட்கும் காரணம் என்னும் கர்த்திருத்துவம் நம்மிடம் சிறிதும் இருத்தல் கூடாது.

நம்மிடம் இருக்கும் நற்சுபாவங்களையும், நல்லுணர்ச்சிகளையும் அடக்க இயலாதவர்கள், தங்களது கெட்ட சுபாவங்களையும் அடக்குந் திறனற்றவர்களாகித் தவிப்பர் என்பது உண்மை. நல்லுணர்ச்சி, கெட்ட உணர்ச்சி இரண்டினையும் அடக்க வல்லதிறன் நமக்கு வேண்டுவது அவசியம். நல்லுணர்ச்சி, நல்லெண்ணம், நற் செயல் இவைகள் நம் வசப்பட்டு, நாமறிய தொழிற்படவேண்டும். அவை நல்லனவே எனினும் அவை நம்மை அடிமைப்படுத்தி ஈர்த்துச் செல்ல இடந்தருதல் கூடாது.

நல்லுணர்ச்சி கொள்ளுவதால் நம் சுபாவம் மாறுபட்ட வர்ணம் பெற ஆரம்பிக்கிறது. ஆனால் ஆரம்பத்திலேயே வெளித்தோன்ற அதற்கு இடங்கொடுத்தால் எல்லாம் பாழ்பட்டுப்போம். கட்டுக் கடங்காத அளவு நீராவி உண்டானபிறகே என்ஜினை ஓட்டும் சக்தியுண்டாகிறது. ஆனால், நீராவி சேர்கிற அளவுக்கு விநியோகப்படுத்தப்பட்டேவந்தால் என்ஜினை ஓட்டும் சக்தி உண்டாகிறதில்லை. எனவே என்ஜின் நகர மாட்டேன் என்று மறுத்து விடுகின்றது. நீராவி கட்டுப்படுத்தப்பட வேண்டும்; அபரிமிதமாகச் சேர்க்கப்பட வேண்டும். இன்றேல் அதற்கு ஒன்றினை இயக்கும் சக்தி உண்டாகிறதில்லை. அதே போல நல்லுணர்ச்சிகள் சேர்க்கப்பட்டுப் பலம் பெற்றாலன்றி வாழ்க்கை உரு மாறாது. உருமாறாத வாழ்க்கைக்கு எவ்வளவுதான் எடுத்தோதினும் எள்ளத்தனையும் அதற்குப் பலன் தராது. இப் படிப் பலன் தராததற்குப் பாடுபடுவதினும் பார்க்க வேறு எக்காரியத்தையேனும் செய்துகொண்டிருத்தல் உசிதம். பொதுப்பட மக்கள் நல்லுபதேசங்கள் பல கேட்கின்றனர். அதன் பயனைப் அவர்

மனிடம் சிறிது நல்லுணர்ச்சி உண்டாகிறது. ஆனால் இது ஒருவிதமான இன்ப சுகமே யன்றி வேறல்ல; இது ஆத்மீய வாழ்க்கையாகிவிடமாட்டாது.

உமது உள்ளத்தில் திடீரென எழும் நல்லுணர்ச்சிகளை அடக்க உமக்குச்சக்தியில்லை யென்றால், தீய உணர்ச்சிகள் எழும் அந்த நேரமே நீர் அவைகட்கு அடிமையாகி விடுவீர் என்பது நிச்சயமாகும். விடாப் பிடிவாதமாக விருந்து முதலில் கொஞ்சம் மூலதனம் சேர்த்துக்கொள்வீர். பிறகு அதிலிருந்து உண்டாகும் வட்டியினை நீர் செலவு செய்து கொள்ளலாம். முதன் முதல் மூலதனம் அதிகரிக்கப்பட வேண்டும். இன்றேல் நாளடைவில் தரித்திராகி நடுத்தெருவில் அலைய நேரிடும்.

அளவுகடந்த உணர்ச்சிகள் உம்மிடமிருக்கட்டும். எனினும் அவ்வுணர்ச்சிகள் உன் வயப்பட்டிருக்கக் காத்துக் கொள்வீர். யாதாமொரு உணர்ச்சி பலவீனத்தையோ நரம்புத் தளர்ச்சியையோ எய்துவிக்குமானல், அவ்வுணர்ச்சி அல்லது அவ்வுணர்ச்சி சம்பந்தப்பட்ட வஸ்து ஏதேனும் ஒன்றில் பெருங்கெடுதல் இருக்கக் காண்பீர். ஸ்ரீ பிரம்மாநந்த சுவாமிகள் உணர்ச்சி மிகுந்தவர்; எனினும் அவர் அவ்வுணர்ச்சிகளைத் தம் வயப்படுத்தியிருந்தார். ஆகவேதான் அவர் உணர்ச்சி மிகுந்தவராயிருந்தும் சாந்த சீலராக விளங்கினர்.

௯

கொண்டதை விடா குணம் கொள்ள வேண்டும்; அதனுடன் சமத்துவமான மனமும் வேண்டும். எப்போதோ ஒரு நேரத்தில் மாத்திரமல்ல. சதா இவை இருத்தல் வேண்டும். அதி உக்கிரமான முயற்சியோடு, மனம் ஸ்திரமும் சாந்தமுமாக இருந்தல் வேண்டும். எடுத்ததைச் சாதிக்க மட்டில்லா சக்தி, துணிவு இவைகளுடன் சாந்தமும் தளராத நன்னம்பிக்கையும் கலந்திருக்கவேண்டும்.

அவசரம், அஜாக்கிரதை ஆகிய குணமுள்ளவர்கள் ஆத்மீய வாழ்க்கைக்கு அருகராகார். அளவு கடந்த பிடிவாத குணம் வேண்டும். 'இறைவன் என்னைத் துண்டம் துண்டமாகக் கிழித்தெறியினும் அவனையே தான் நான் பற்றி நிற்பேன். அவனை விட்டு அணுவளவும் விலகேன். எனக்கு எது வரினும் வரட்டும்; எது வரும் என்பது எனக்குக் கவலையில்லை. அவனை மாத்திரம் நான் விடேன்.' இவ்வித உறுதிப்பாடு சாதகனுக்கு வேண்டும்.

"அவன் என்னைக் கட்டி ஆலிங்கனம் செய்யினும், அல்லது என்னை அடிமைப் படுத்தினும், அல்லது என்னைத் துண்டம் துண்டமாக வெட்டி யெறியினும், அல்லது என்னை விடுத்து வேறு எவரையேனும் தன்னுடன் வைத்துக்கொள்ள விரும்பினும்—அவனேதான் என் ஹிருதயத்திலுறையும் நாதன்; வேறெவருமன்று.

"இறைவ! மக்கள், பொருள், அழகுள்ள மனைவி, கீர்த்தி இவை யொன்றும் நான் வேண்டிலேன். பிறவிதோறும் உன்னிடம் பிரதிபலன் எதிர் பாராத அன்பு மாத்திரம் இருக்க எனக்கு அருள் புரிவீர்."

௧௦

குண்டலினி ஓரளவு மாத்திரம் உயர்த்தப்படுமானல் அது சாதகனை ஆபத்துக்குள் சிக்கவைக்கும்; பொதுப்பட, அப்படி அரைகுறையாக உயர்த்தப்படும் போது மனிதனது உள்ளத்தில் காம எண்ணங்கள் மிகுந்து அவனை தலைகீழாக விழச்செய்யும். எனவே ஒழுக்க நெறிகளைச் சிறிதும் வழுவாது அநுஷ்டித்து வருவீராக.

"குண்டலினி சிறிது மாத்திரம் எழுப்பப்படுமானல் அது மிகுந்த ஆபத்

தாய் முடியும்" என்று ஸ்ரீ சுவாமிஜி (ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள்) கூறுவதுண்டு. குண்டலினி அதிஷ்யமாக எழுப்பப்பட்டாலன்றி காமம், கோபம் முதலிய கீழ்த்தர குணங்களின் சேஷ்டையினின்றும் சாதகன் விடுதலை பெறமாட்டான். வைஷ்ணவர்களிற் சிலர் அநுஷ்டிக்கும் மதுரபாவம் அல்லது சக்தி பாவம் என்று சொல்லக் கூடிய சாதனை மிகமிக ஆபத்தானது. ஸ்ரீ கிருஷ்ணன், ராதையுடன் புரிந்த தெய்விக லீலைகளை சதா சிந்திக்க விரும்பும் வைஷ்ணவர்கள் காம ஆசைகட்கு வசப்பட்டவராகி தகாத செயல்கள் பல புரிகின்றனர். எனவே நான் ஆரம்ப சாதகர்கள், ஸ்ரீ கிருஷ்ணபிரான் கோபிகா ஸ்திரிகளோடு புரிந்த தெய்விக லீலைகளை வாசிப்பதினின்றும் தடுக்கப்படுகின்றனர். "தியானம் என்பது சுலப சாத்தியமான காரியமன்று. ஒரு நாள் கொஞ்சம் அதிகமாகச் சாப்பிட்டுப் பாருங்கள்—அன்று மனம் ஒருமுகப்படாது நிற்பதைக் காண்பீர்கள். காமக்குரோத லோபங்கள் காவலில் வைக்கப்படும்போதுதான் தியானம் கைகூடும். இவைகளில் ஏதேனும் ஒன்று தலை நிமிர்ந்தாலும் தியானம் கைகூடாது பாழ்பட்டுப்போம்" என்று ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் கூறுகின்றார்.

சுபாவமும் எண்ணங்களும் எதிராகப் போகும்போது தியானம் செய்ய இயலாது. எனவே அவைகள் அடக்கப்பட வேண்டும்; சிறிது சிறிதாகக் குறைக்கப் படவேண்டும். இறுதியாக முற்றும் அகற்றப்படவேண்டும்.

கக

வாழ்க்கையைக் கசக்கிப்பிழிந்து உலக இன்பம் எய்திவிட்டு, இறுதியாக, வயது தளர்ந்த காலத்துக்கென ஆத்மீய வாழ்க்கையினைச் சிலர் ஒதுக்கிவைக்கின்றனர். ஆனால் அன்னவர்களுக்கு ஆத்மீய வாழ்க்கைக்கான காலமே கிட்டாது போய்விடுகின்றது. ஒன்று அகாலமரண மேற்படுகிறது, அல்லது சரீர சுக போகங்களில் பெரிதும் ஈடுபட்டு ஆத்மீய வாழ்க்கை வாழ சக்தி சிறிதும் அற்றவர்களாகி புலன்கள் வயப்பட்டுத் தவிக்கின்றனர். என்ன பேதைமைத்தனம்!

'கிலேசம் மிகுந்த, சஞ்சலம் மிகுந்த மனத்தனாகிய என்னால் எங்ஙனம் தியானம் செய்ய இயலும்.' என்று ஒரு போதும் பகரவேண்டாம். உம்மனம் சஞ்சலப்படுவதாலேயே நீர் தியானம் செய்ய வேண்டுவது அவசியமாகின்றது. எவ்வளவு சஞ்சலப்படுகிறதோ அவ்வளவுக்கு அதிகமாக தியானம் புரிய வேண்டுவது அவசியமாகும். சாந்தமுள்ள மனதுக்கு அவ்வளவு தியானம் வேண்டுவது அவசியமில்லை.

உண்மையில் தாகம் கொண்டவன் அவசியம் தண்ணீரைத் தேடி அலைகின்றான். தாகமில்லாதவன் தண்ணீரின்றி வெகு நேரம் இருக்கக் காண்கிறோமல்லவா? அதேபோல உண்மைச் சாதகன், சொல்லப்பட்ட அனைத்தையும் கேட்டு அதன்படி ஒழுகுகின்றான். ஆனால் அவ்வளவு கருத்தில்லாத நாம், அவ்வளவு நம்பிக்கையில்லாத நாம் ஆத்மீய வாழ்க்கையை துரிதமாக நடத்த விரும்புவதில்லை. அதனால் எவ்வளவு நமக்கு எடுத்தோதப்படினும் பயனற்றுப் போகின்றது.

நமக்குப் பருக நீர் வேண்டும். அது பரிசுத்தமானதாக இருக்கவேண்டும். கல்மஷமற்றதாக இருக்க வேண்டும். சேறும், அழுக்கும் நிறைந்த நீராக இருக்கக் கூடாது. தாகமிருந்தால் தாகம் இன்னும் அதிகமாக ஏற்படட்டும் என்று காத்திருப்போமே யன்றி இத்தகைய சாக்கடை நீரை ஒருபோதும் அருந்துகிறதில்லை.

"எந்தாய்! நீ என்னைக் காலின் கீழ் போட்டு மிதித்தாலும் மிதி. அல்லது எனது உள்ளத்தை உடைத் தெறிந்தாலும் எறி. நான் மாத்திரம் உன்னை விடமாட்டேன். நீ தான் என் அன்பிற்கு உரியவன். உன்னைத் தவிர்த்து வேறு எவரும் எனக்குக் கிடையாது" என்று அழகுபட ஸ்ரீ சைதன்யர் கூறுகின்றார்.

மேலும் அவர் கூறுவதாவது: "ஏ பகவன்! நானாவித ஜன்மம் எடுக்க நேர்ந்தாலும், அளவு கடந்த அல்லற்பட நேர்ந்தாலும் என் உள்ளம் உன்னையே நாடி இருக்க வரந்தருவாய். உன்னை ஒருவனையன்றி வேறு எவரையும் என் உள்ளம் சிந்திக்கக்கூடாது."

குந்திதேவியின் இந்த அழகான பிரார்த்தனையைப் பாருங்கள்: "கிருஷ்ணா! ஆபத் ரக்ஷகா! தீனதயாளா! எனக்குத் துன்பமே தருவாய்; அதிகமான, சகிக்க முடியாத துன்பமும் தருவாய்; ஏன் எனில் துன்பப்படும்போதுதான் நான் உன்னை நினைக்கிறேன். துன்பம் அதிகப்படும் அளவுக்கு உன்னை நான் அதிகமாக நினைக்கிறேன்."

௧௨

உலக சம்பத்துக்களின் இலாப நஷ்டங்களைக் கொண்டு தெய்விக அன்பை, பக்தியை ஒருபோதும் அளவிடமுடியாது. எங்கே பகவானே சாரதியாக விளங்குகிறானோ, அவ்விடம் வெற்றி யென்பது நிச்சயம். எங்கே பக்தன் பகவானால் நடத்தப்படத் தன்னை முழுதும் ஒப்படைக்கிறானோ அங்கே வெற்றி யென்பது நிச்சயம். இதுவே பகவத்கீதையின் உண்மைக் கருத்து; மூலக் கருத்து. இதனைத் தவிர்த்து வேறு குறுக்குவழி கிடையாது. ஆனால் இத்தகைய தியாகமும், சரணாகதியும் சீக்கிரத்தில் வந்துறுவனவல்ல.

வாழ்க்கையின் இறுதிப் பயனை யடைந்தாலல்லாமல் அதாவது ஆத்ம சாக்ஷாத்காரம் எய்தினாலல்லாமல் நமக்கு விமோசனமில்லை. வாழ்க்கையின் முடிவை யெய்துவதன் முன் எப்பக்தனும் எந்நேரமும் இடறி விழுந்துவிட நேரலாம். எனவே நமக்குச் சொன்னபடி நடப்பதில் நாம் சிரத்தை கொள்வோமாக. லௌகிகமும், பிரயோசனமற்றனவுமான வாதங்களில் ஈடுபட்டுக் காலத்தைப் பாழ்படுத்தாதீர். "எவை நம்மை இறைவனை எய்துவிக்க உதவுமோ அவ்வித பேச்சுக்களையே பேசுவோம். வேறெதுவும் பேசவேண்டாம்" என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுகின்றார். வீண் வாதங்களை அவர் எப்போதும் விரும்புகிறதில்லை. அத்தகைய வாதங்களால் ஏற்படும் ஆபத்துக்களை எடுத்துக் காட்டி அவற்றினில் ஈடுபடவேண்டாம் என்று தமது சீடர்கட்கு அவர் எச்சரிப்பார்.

# மறுபிறப்புண்மை

(ஸ்ரீ விபுலாநந்த சுவாமிகள்)

(௱௮௮-ம் பக்கத் தொடர்ச்சி)

௭

இவ்வுண்மையைக் கருவியாகக் கொண்டு நாம் நோக்குவோமாயின், ஐரோப்பாக் கண்டத்திலே மகாயுத்தத்தின்பின் பெண்குழந்தைகளிலும் பார்க்க ஆண்குழந்தைகள் அதிகமாகப்பிறந்த காரணத்தை உணர்ந்து கொள்வோம். யுத்தத்திலே இறந்த ஆடவர்கள் தம்முரிலும், தமது சுற்றத்தார்மேலும் நிறைந்த பற்றுள்ளவர்களாதலினாலே மீட்டும் சுற்றத்தாரது மத்தியிலே வந்து பிறந்திருக்கிறார்கள். முன்பு எதிரியாக விருந்தவர்கள் மீதுள்ள கோபம் அவர்களுக்கு இன்னுந் தணியவில்லை. ஆதலினாலேதான் ஜெர்மன் நாட்டிலும் ஆங்கில நாட்டிலுமுள்ள இளஞ் சிறுவர்கள் அந்நாட்டு முதியோரினும் பார்க்கப் பகை நெஞ்சு படைத்தவர்களாயிருக்கின்றார்கள். பிராஞ்சு தேசத்திலே ஏன் குழந்தைகள் அதிகம் பிறக்கவில்லை என்று கேட்டால், அந்நாட்டு ஆடவரும் மகளிரும் சிற்றின்ப சுகத்திலே பெரிதும் ஈடுபட்டுக் கர்ப்பத்தடை முதலிய வழிகளினாலே பிராஞ்சுக்காரர் மீட்டும் தம் நாட்டிலே பிறப்பதைத் தடுத்து விட்டார்கள். இப்பொழுது இந்நிலவுலகத்திலே மானிடசாதியிலே ஏறக்குறைய இருநூறு கோடி உயிர்கள் வாழுகின்றன. இவற்றுள்ளே பிறவா நெறி அடையும் உயிர்கள் மிகமிகச்சில. மற்றவை யெல்லாம் மீட்டும் மீட்டும் உலகிலே வந்து பிறந்து இன்பத் துன்பங்களினாலே மேலும் மேலும் அறிவினை அடைவன. பூரணஞானம் அடைந்த பெரியோர்கள் புத்த பகவானைப் போலத் தமது பழம்பிறப்பு முழுவதையும் அறிந்து கொள்வார்கள். மனமானது உடலின் எல்லையினுள்ளே அடங்கியிருக்கும் பொருள் அல்ல. மூளை, கை, கால், கண், காது என்னு மிவற்றை யெல்லாம் மனம் கருவியாகக் கொண்டு இயக்குகிறது. இந்தக் கருவிகள் காலத்திலே தேய்ந்து நோயுற்று அழிந்து போனால் மனமானது தனக்கு வேண்டிய கருவிகளை மீட்டும் அமைத்துக் கொள்ளுகிறது. நான் இந்த வார்த்தைகளை எனது பேனாவினாலே எழுதுகிறேன். பேனா ஒடிந்து போனால் எனது எண்ணமோ நானோ அதன் கூட ஒழிந்து போவதில்லை. மற்றொரு பேனாவை எடுத்து முன்னையிலும் நன்றாக எழுதுவேன். இப்பொழுது மானிட உருத்தரித்திருக்கும் உயிரானது இதற்கு முன் மீனாகவும், ஆமையாகவும், விலங்காகவும், பறவையாகவும் வாழ்ந்த தென்பதற்குச் சமயசாஸ்திரங்களும் விஞ்ஞான சாஸ்திரங்களும் சாட்சி கூறுகின்றன. மாதாவினுடைய கருப்பத்திலே இருக்கும் முந்நூறு நாளிலே உயிரானது நாற்பதுகோடி வருடங்களிலே தான் எடுத்த பல்லாயிரம் பிறவிகளின் அனுபவத்தை யெல்லாம் வெகுவிரைவாகப் பழம்பாடம் படித்து விடுகிறது. தாயினுடைய கருப்பையிலுள்ள ஆலம் வித்துப்போன்ற சிறிய முட்டையினுள்ளே, தந்தையிடத்திருந்து வந்து சீவ அணுவானது நுழைந்தவுடனே புதிய உயிரானது தனது சொந்த வாழ்க்கையை ஆரம்பிக்கிறது. பூ மண்டலத்திலே முதலிலே உண்டாகிய உயிர்கள் கடலிலுள்ள கடற்பாசிபோன்ற சிற்

றுயிர்கள் என்று ஐரோப்பிய பண்டிதர்கள் கூறுவார்கள். இக்கடற்பாசி தாவரமென்றும் சங்கமமென்றும் வேறுபாடு காண முடியாத நிலைமையினது. பன்னூறுயிரம் வருடங்களுக்குப் பின்பு மிகத் தாழ்வான மச்ச இனங்கள் தோன்றின. இவற்றிற்குக் கண் வாய் முதலிய அவயவங்கள் அமைந்திராவிடினும் இருள் ஒளி என்னும் வேறு பாட்டினை யறிந்து கொள்ளவும் உணவுகொள்ளவும் கூடிய சக்திகள் இச்சிற்றுயிர்களுக்கு அமைந்திருந்தன. பின்னும் பன்னூறுயிரம் வருடங்கள் கழிந்து மச்சங்கள் தோன்றின. அக்காலத்திலே இப்பூமண்டலத்திலே மச்சத்தினுஞ் சிறந்த உயிர் வேறென்று மிருக்கவில்லை. அதற்கு மேற் பன்னூறுயிர வருடங்கள் கழிந்து ஆமைபோன்று முதுகில் ஓடும், கானுமுள்ள செந்துக்கள் நீரினும் நிலத்தினும் வாழ்வன தோன்றின. இதற்கு மேற் பறவைகள் விலங்குகள் தோன்றி மனிதன் தோன்றினன். பலகோடி வருடங்களாக உயிர் அடைந்த அனுபவம் இதுவாகும். மாதா உதரத்தினுள்ளே புகுந்து சில நாளிலே உயிரானது மச்சவடிவாகிக் கருப்பையாகிய சிறுகடலினுள்ளே நீந்தித்திரியும். பின்பு ஆமைபோன்ற வடிவத்தைக் கொள்ளும். ஓரெல்லையிலே கருவானது சிறுரோமங்களாலே மூடப்பட்டு நாயினுடைய கருவைப்போன்றிருக்கும். பல கோடி வருடங்களிலே பெற்ற அநுபவத்தையெல்லாம் முந்நூறு நாளிலே அநுபவித்து முடிந்தபின்பு, புதிய அநுபவங்களை அடையும் வண்ணம் கருப்பையில் நின்று நீங்கி நிலத்தையடையும்.

அ

உயிரினது போக்கும் வரவும் இந்தன்மையவென்றால், சாஸ்திரங்களிலே சொல்லப்படுகிற சுவர்க்கமும் நரகமும் எப்படிப்பட்டன என்னும் கேள்வி எழுகிறது. "மக்கள், தேவர், நாகர் உயர்திணை" என்றபடி தேவரும் நரகரும் மக்களைப் போலவே உயிர்கள் என அறிகின்றோம். உடலை நீங்கிய உயிரானது கணப்பொழுதிலே அப்பிறப்பிலே நடந்த செய்திகளையெல்லாம் கண்டு மேல்வரும் பிறப்பினை நிச்சயித்துக் கொள்ளுகிறது. மேலாகிய நல்வினையினாலே தேவ உடலைப்பெற்ற உயிரானது தேவர்கள் வாழும் ஒளியுலகத்திலே சென்று வாழ்ந்து கற்பகக்கா நீழலில் வைகியும், இனியசங்கீதத்தைக் கேட்டும், தெவிட்டாத அமிர்தத்தை நுகர்ந்தும், வைரம் மாணிக்கம் நீலம் முதலிய ஒளி வீசுகின்ற இரத்தினங்கள் வைத்திழைத்த ஆபரணங்களை யணிந்தும், நல்ல வாசனை வீசுகின்ற வாடாத மலர் மாலைகளை யணிந்தும், அழகு நிறைந்த தேவமகளிரோடு கூடிக்களித்தும் இன்பமுற்றிருக்கும். இன்பத்தில் மூழ்கி அலுப்புற்ற உயிர் ஞானத்தை விரும்பி தெய்வப் பிறவியை வெறுத்து மீட்டும் பூமியிலே அறிவு நிறைதற் கேதுவாகிய இடத்திலே வந்து பிறக்கும். தீய இச்சைகளோடு உடலைப் பிரிந்த உயிரானது அந்த இச்சைகளைத் தீர்த்துக் கொள்ளுதற் கேற்ற உடலினோடு நரகலோகமாகிய இருளுலகத்தை நாடும். அங்கு மதுக்குடங்களும் இறைச்சிக் கண்டங்களும் பொதுமகளிரும் சூதாட்டிடங்களும் சண்டை சச்சரவுகளும் இந் நிலவுலகத்திலும் பல மடங்கு அதிகமாகக் காணப்படுவன. அடங்கா இச்சைகளை ஒருவாறு அடக்கிக் கொண்ட உயிரானது புதிய அனுபவத்தினை நாடி, நீதியின் உருவாகிய தர்மராஜனைப்பணிந்து "இனித் தீய இச்சைகளை நாடேன், புதிய வழியில் நடப்பேன்" என்று முறையிட்டு நிற்கும். அவனும் உயிரின் தகுதியை நோக்கி மீட்டும் உலகத்திற் பிறக்கக் கட்டளையிடுவான். இவ்

வாறு நோக்குமிடத்துச் சுவர்க்கம், மத்தியம், பாதலம் என்னும் மூன்றிடத்திலுமுள்ள உயிர்கள் ஞானத்தையே நாடுகின்றனவென்பது பெறப்படும். ஞானவான்கள் இவ்வுலகத்தில் வாழும் பொழுதே தேவலோகத்தினது இயல்பு இதுவென அறிந்து, அதனை வெறுத்து, இப்பூமியிலிருந்தே பேரின்ப முத்தியைக் காண வேண்டுமென விரும்புவர். பின்வரும் பாடலிலே தாயுமான சுவாமிகள் சுவர்க்க இன்பமும் சிற்றின்பமேயாம் என்பதைத் தெளிவாகச் சொல்லுகிறார்.

"முத்தனைய மூரலும் பவளவாயின்
 முகத்திலகு பசு மஞ்சளும் [சொலும்
 மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற இரு
 முலேயின்மணி மாலேநால [கும்ப
வைத்தமை மயக்கியிரு கண்வலேயை
 மாயா விலாச மோக [வீசியே
 வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
 மடந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்தபோகம் புசித்துவிழியிமையாத
 பொன்னாட்டும் வந்த தென்றாற்
 போராட்ட மல்லவோ பேரின்ப முத்தி
 இப் பூமியிலிருந்து காண
எத்தனை விகாதம்வரும் என்று சுகர்
 இவ்வுலகம் அறியாததோ [சென்றநெறி
 இகபர மிரண்டினிலும் உயிரினுக் [குயிராகி
 எங்குநிறை கின்ற பொருளே."

௯

மாறி மாறி வருகிற பிறவிக்கு எப்பொழுது முடிவு உண்டாகும் என்றுகேட்டால்,

"அவாவென்ப எல்லா உயிர்க்கும்
 எஞ்ஞான்றும்
 தவாஅப் பிறப்பீனும் வித்து"

என்றபடி எப்பொழுது அவா ஒழிகிறதோ அப்பொழுது பிறப்பு நீங்கும் என்று சொல்லலாம். வேறு வேறு பிறவிகளிலே வேறு வேறு கோலங்களோடு நடிப்பதெல்லாம் நம்முடைய விருப்பத்தாலன்றிப் பிறிதொன்றினுல் அல்ல. இந்த நாடகம் போதும் என்று எப்பொழுது நாம் திடமாக நம்புகிறேமோ, அப்பொழுதே நாம் விடுதலேயடைவோம். அப்பொழுது நாமும் மாணிக்கவாசக சுவாமிகள் கூறுவது போல,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
 பல்விருகமாகிப் பறவையாய்ப் [பாம்பாகிக்
 கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் [கணங்களாய்
 வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
 செல்லாஅ நின்றவித் தாவர [சங்கமத்துள்
 எல்லாப் பிறப்பும் பிறந்திளேத்தே [னெம்பெருமான்
 மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று [வீடுற்றேன்"

என்று கூறுவோம். இவ்வாசகம் ஞானத்தின் உச்சநிலேயினை யடைந்த மாணிக்கவாசக சுவாமிகள் தமது சொந்த அநுபவத்தை ஆதாரமாகக் கொண்டு கூறியது. உயிர்ப்பொருள் என்று நாம் கூறுகின்ற புல் பூண்டு விலங்கு மச்சம் என்னும் இவை தோன்றுதற்கு முன்னுள்ள முந்நூறுகோடி வருடங்களிலும் உயிரானது கல்லினுள்ளே யிருந்தது. வைரம், வைடூரியம், நீலம், கோமேதகம், மாணிக்கம் என்னு மிவையெல்லாம் கோடிக்கணக்கான வருடங்கள் நிலேத்திருக்கும் உயிரல்லவா? பொன்னிலு முயிருண்டு, இரும்பிலு முயிருண்டு. ஜகதீச சந்திர வசு என்னும் வங்கநாட்டு விஞ்ஞான பண்டிதர் இவ்வுண்மையினைத் தெளிவுபடுத்தியிருக்கின்றார். கல் மண் உலோகங்களிலிருக்கின்ற உயிர் உறக்க நிலேயில் இருக்கின்

றது. புல், பூண்டு, மரம், செடி, கொடி களிலே உயிர் கனவு காண்கின்றது. பல வர்ணப் பூக்களைத் தருகின்ற ரோஜாச் செடிக்குக் கண்ணிந்திரியம் இல்லாம லில்லை. நல்ல வாசனையை வீசுகின்ற முல்லையும், மல்லிகையும் மூக்கிந்திரியம் உடையனவே. பூக்களும் மனிதரைப் போல மணம் முடிக்கின்றன, குழந்தை பெறுகின்றன வென்று தாவர சாஸ்திரி கள் கூறுகின்றார்கள். விலங்குகளிலும், மீன், புழு, பறவை யென்றின்னவற்றிலும் அறிவில்லாத மக்களிடத்தும் உயிர் அரை விழிப்பாக இருக்கின்றது. உண்மை ஞானம் அடைந்தவர்களிடத்திற்றான் உயிர் முற்றிலும் விழித்துக்கொள்ளு கிறது. அவர்கள் தான் உயிர்க்குயிராகிய ஆண்டவனைக் காணவல்லவர்கள். பௌத்த மத நூல்களிலே புத்தராவதற்கு முன் னுள்ள நிலையைப் போதிசத்துவரென்று கூறப்படுகிறது. போதிசத்துவர்கள் அன்பே வடிவமானவர்கள். பௌத்த ஜாத கக் கதைகளிலே புத்தபகவான் அன்பு செய்வதையே நோக்கமாகக் கொண்டு பல வேறு பிறவியெடுத்த வரலாறுகள் சொல் லப்பட்டிருக்கின்றன. திபெத்து நாட்டி லுள்ள மக்கள் மறுபிறப்பிலே பூரண நம் பிக்கையுடையவர்கள். பீடாதிபதி யிறந்து போனால் சில அடையாளங்களைக்கொண்டு அவர் இன்ன இடத்திலே பிறந்திருக் கிறார் என்பதையறிந்து அந்தக் குழந்தை யைக் கொண்டுவந்து பீடாதிபதியாக்கு வார்கள். மஹாயான பௌத்தர்கள் நம் முடைய தெய்வங்களையெல்லாம் ஏற்றுக் கொள்பவர்கள். சிவபெருமானிடத்திலே அவர்களுக்கு நிரம்பிய பக்தி யுண்டு. அவரை அவலோகிதேசுவர போதிசத்து வர் என்பார்கள். மறுபிறப்பு விஷயமா கப் பௌத்த, ஜைனமதக்கொள்கைகளுக் கும் இந்துமதக் கொள்கைகளுக்கும் சில வேறுபாடுகளுண்டு. அவற்றை இங்கு விரிப்பில் விஷயம் பெருகும். கருட புரா ணம் முதலிய புராணங்களிலே கூறப்படு கிற செய்திகள் பௌத்தமதத்தைச் சார்ந் தன. இந்துமதக் கொள்கைகள் வேதத் தின் முடிபாகிய உபநிடதங்களிலே கூறப் படுவன.

---

# வர்ணாஸ்ரம தர்மம்

(ஸ்ரீசுவாமி சித்பவாநந்தர்)

## வைதிகமும் இலௌகிகமும்

**அறிவிலும்** ஆற்றலிலும் இனிமை யிலும் மேல் நோக்கிச் செல்லுதல் வாழ்க் கையின் நோக்கமாகும். முன்னேற்ற மடைதற்கு முகாமையாகச் சில கோட் பாடுகள் உள. அவை யென்றும் மாறாத் தன்மை யுடையவைகள். கணித சாஸ்திரம் காலத்துக்கு ஏற்றவாறோ அல்லது இடத் துக்கு ஏற்றவாறோ மாற முடியாது. எல்லா நிலைமைகளிலும், மக்கள் எல்லார்க் கும் கணிதத்தின் வகை ஒன்றே. அவ் வாறே வாழ்க்கை சம்பந்தமான உண்மை கள் எக்காலத்தும் எல்லார்க்கும் ஒரே பாங்குடன் மிளிர்கின்றன. ஆதலால் அவைகளுக்கு சனாதன தர்மம் என்னும் பெயர் ஏற்பட்டது. அக்கோட்பாடுகளையே பாரமார்த்திகப் பேருண்மைக ளென்றும் வைதிகம் என்றும் சொல்லலாம். பின்பு இலௌகிகம் என்பது சமூக நடைமுறை. பாரமார்த்திக உண்மைகளை ஆதாரமாக

வைத்துக்கொண்டு சமுதாயம் வாழ்க்கையைப் பண்படுத்த முயலுகிறது. அவ்வுண்மைகளை அனுஷ்டிக்குமளவு மக்கள் மேலோர் ஆகின்றனர். நல்ல நாகரீகமுடைய சமூகம் என்பது, மேலாம் உண்மைகளுக்கு ஒப்ப வாழும் இயல்புடையோரது கூட்டம் என்று பொருள்படும். வைதிகத்தைக் கடைப்பிடிக்குமளவு இலௌகிகம் சீர்படும். ஆனால் உலகத்தவர் அவ்வுண்மைகளினின்று புரண்டு விட்டால் அதனால் விளையும் கேடு வைதிகத்தை வந்து சாராது; உண்மை என்றும் உயர்நிலையில் நின்று தன்னைத்தான் காத்து வருகிறது. உண்மையும் இறைவனும் ஒன்றன்றோ? வைதிகத்தினின்று வழுவுகின்ற அளவு மக்கள் கீழ்நிலைக்கு வீழ்கின்றனர். அங்ஙனம் வீழாது மேல்நிலைக்குப் போக முயலுபவர் அதன் கோட்பாட்டை உள்ளபடி அறிதல் அவசியமாகின்றது.

வருணாஸ்ரம தர்மம் என்பது வைதிக உண்மைகளுக்கு ஒப்ப வாழ முயலுதல் என்பதாகும். வருணங்கள் நான்கு உள. அவையாவன: சூத்திர, வைசிய, க்ஷத்திரிய பிராம்மண என்பனவாம். அவ்வாறே ஆஸ்ரமங்களும், பிரம்மசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்று நான்கு இருக்கின்றன. நான்கு ஆஸ்ரமங்களில் உயர்வு தாழ்வு கிடையாது. பிறந்த சிசு ஒன்றின் வாழ்க்கையானது குழந்தைப் பருவம், பிள்ளைப் பருவம், காளைப்பருவம், முதிர்பருவம் ஆகியவைகளில் பூர்த்தியாவது போன்று நான்குவித ஆஸ்ரமங்களில் மேலாம் வாழ்க்கை முடிவு பெறுகிறது. ஆஸ்ரமம் என்பதற்கு வாழ்க்கையின் புனிதம் வாய்ந்த படித்தரம் என்று பொருள். ஆஸ்ரமத்தில் போன்று வருணத்திலும் சுபமை தூய்மை என்னும் வேறுபாடு கிடையாது. ஒரு வருணம் மற்றொரு வருணமாகப் பரிணமிக்கிறது. ஆத்மீக வாழ்க்கையில் படித்தரத்துக்கு ஏற்றவாறு தர்மம் அல்லது கடமையும் அதிகரிக்கிறது. வர்ணாஸ்ரம தர்மம் என்பது நான்கு வருணங்களுக்குரிய தருமங்கள், நான்கு ஆஸ்ரமங்களுக்குரிய தருமங்கள் எனப் பிரிகின்றது. இக்காலத்து இலௌகிகம் இக்கோட்பாட்டை எவ்வளவு தூரம் பழக்கத்தில் கொண்டுவரவல்லதாயிருக்கிறது என்பதை முக்கியமாகக் கணக்கில் எடுத்துக்கொள்ளாது, இந்த வைதிகக் கோட்பாடு எவ்வளவு மேன்மை வாய்ந்ததாயிருக்கிறது என்பதையே நாம் ஈண்டு ஆராயப்புகுவோம்.

## நிறமும் தொகையும்

வருணம் என்பது நிறம் என்று பொருள் படுகிறது. வருணத்துக்குப் பிறப்பிடம் குணம். அவை சத்வம், ரஜஸ், தமஸ் என்று மூவகைப்படுகின்றன. இம்முக்குணங்களுள் பிரபஞ்சத்துள்ள அனைத்தும் அடங்கிவிடுகின்றன. ஜீவர்களுள் புல் முதல் பிரம்மதேவன் பரியந்தம் எல்லாரும் முக்குணங்களுக்கு உட்பட்டவர்களே. சத்வ குணத்தின் நிறம் வெண்மை; ரஜோகுணம் சிவப்பானது; தமோ குணமோ கறுத்திருப்பது. முக்குண வேறுபாட்டைக் கொண்டு நான்கு வகை ஜீவர்கள் சிருஷ்டிக்கப்படுகின்றனர். चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः—குண கரும வேறுபாடுகளை முன்னிட்டு நான்கு வர்ணங்கள் என்னால் சிருஷ்டிக்கப்பட்டன என்பது ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய வாக்கு (கீதை-4·13). சத்துவகுணம் மேலோங்கியிருப்பவன் பிராம்மணன். சத்வ குணத்தைத் துணையாகக்கொண்ட ரஜோகுணம் ஓங்கப் பெற்றவன் க்ஷத்திரியன். தமோ குணத்தைத் துணையாகக்கொண்ட ரஜோகுணம் தலையெடுக்கப் பெற்றவன் வைசியன். தமோ குணத்தைச் சிறப்பாகவும் ரஜோ

குணத்தைச் சாமான்யமாகவும் உடையவன் சூத்திரன் ஆகிறான். இங்ஙனம் குணமேலீட்டுக்கு ஏற்ப நால்வர்க்கு நான்கு வர்ணங்கள் அமைகின்றன. பிராம்மணனது நிறம் வெண்மை; க்ஷத்திரியன் செந்தாமரை போன்றவன்; வைசியனுக்கு வருணம் மஞ்சள்; சூத்திரனுடைய நிறம் கருமை. நிறத்தின் பாகுபாடு ஸ்தூல சரீரத்தை ஒட்டியதன்று. தோலின் சாயலைச் சார்ந்ததன்று ஜாதி. உடல் வெளுத்திருக்கும் ஐரோப்பியர் எல்லாரையும் பிராம்மண இயல்புடையார் என்பது ஒவ்வாது. அமெரிக்காவில் இருக்கும் செம் மனிதர்களை (Red Indians) க்ஷத்திரியர்கள் என்று தொகுப்பது எங்ஙனம்? மங்கோலியர்களாகிய சீனர்களும் ஜப்பானியர்களும் மஞ்சள் நிறமுடையவர் ஆவர். ஆயினும் அவர்கள் அனைவரும் வைசியர் ஆகார். கருத்த திருமேனியை உடையராயிருந்த இராமனையும் கிருஷ்ணனையும் சூத்திர வருணத்தில் சேர்ப்பது ஒவ்வாது. வர்ண விமரிசனத்துக்கு ஸ்தூல சரீரத்தின் வருணம் உதவாது. அது எந்த நிறத்தை வேண்டுமானாலும் உடையதாயிருக்கலாம். குணத்தை முற்றிலும் தழுவியது மன அமைப்பு. குண வேறுபாட்டுக்கு ஏற்ப மனதின் நிறம் மாறுகிறது. ஒருவனுடைய மனது எத்தகைய நிறமுடையது என்பதை ஞானியர் காண்கின்றனர். ஆத்ம சாதனத்தில் சிறிது மேல் நோக்கிச் செல்லுபவர், தியான வேளையில் உள்முகமாகக் காணும் நிறமே தங்கள் மனத்தின் நிறமாகும். மனது பண்படுகிற அளவு ஒருவன் வர்ணத்தில் மேலோன் ஆகிறான். "அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்," என்னும் பொய்யாமொழி இக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது.

குண வேறுபாட்டுக்கு ஏற்ப மரம் செடி கொடிகளையும், பறவைகளையும், விலங்குகளையும் நான்கு வருணங்களாகப் பிரிக்கலாம். மக்களுள் நான்கு வருணங்கள் அமைந்திருப்பது இந்தியாவின் தனியியல்பென்று சிலர் கருதுகின்றனர். அது உண்மையன்று. உலகனைத்தும் ஒரே பொருளிடத்திருந்து உண்டானவை. உலகத்தவர்களது மன பரிபாகத்துக்கு ஏற்ப அவர்கள் நான்கு வருணத்தவர்களாகப் பிரிகின்றனர். எல்லா நாடுகளிலும் சமுதாயங்களிலும் இயல்பாக ஏற்பட்டுள்ள இப்பிரிவினைகளைக் காணலாம். இந்த நான்கு பிரிவுகளுக்கு வேறாக பஞ்சமன் அல்லது ஐந்தாமவன் ஒருவன் இருக்கிறான் என்பதும், அவன் தீண்டத் தகாதவன் என்பதும், மனிதன் செயற்கையாகச் செய்துகொண்ட வேறுபாடேயாகும். இயற்கையமைப்பில் ஐந்தாவது வருணத்துக்கு இடமில்லை. அது எப்படியென்று சுருங்க ஆராய்வோம். ஆத்ம போதம் அல்லது அறிவின் விழிப்பு நான்கு படித்தரங்களில் இருக்கிறது. அயர்ந்து உறங்கும் நிலை சுழுத்தி என்று சொல்லப்படுகிறது. மரம் செடி கொடிகள் இந்நிலையில் இருக்கின்றன. இதற்கு ஒரு படி மேல் இருப்பது கனவு. விலங்குகளும் பறவைகளும் கனவு போன்ற ஆத்ம போதத்தைப் பெற்றிருக்கின்றன. அதைவிட மேலானது நனவு அல்லது ஜாக்கிரதாவஸ்தை. மக்கள் பெற்றுள்ள ஆத்ம போதம் இந்த மூன்றும் படித்தரத்துக்கு வந்துள்ளது. துரியம் என்பது தெளிந்த அறிவுத்திரள் அல்லது சித்கணம் எனப் பொருள்படுகிறது. ஞானிகளும் தேவர்களும் அடைந்துள்ள நிலை இது. ஆக இந்நான்கு நிலைகளுள் அதாவது உறக்கம் கனவு, நனவு, துரியம் ஆகியவைகளுள்—உயிர் வகைகளையெல்லாம் அடக்கி விடலாம். மக்களுள் உறங்கும் நிலையில்

இருப்பவர் சூத்திரர். தமோகுணத்தின் தலையெடுப்பு அதற்கு மூலகாரணம். கனவு காணும் பக்குவத்தில் இருப்பவர் வைசியர். அவர்களிடத்துத் தமோ குணத்தோடு கலந்த ரஜோகுணம் மிளிர்வதாகும் என்பது முன்னமே சொல்லப்பட்டது. கனவு அல்லது ஜாக்கிரதாவஸ்தையில் நிலை பெற்றவன் க்ஷத்திரியன். அவனிடம் இருப்பது ரஜஸோடு கலந்த சத்துவகுணம். துரியத்தில் நிலைத்திருப்பவன் பிராம்மணன். அதற்கேற்ற குண விசேஷமும் அவனுக் குண்டு. முக்குணங்களின் பாகுபாட்டை உருவகப் படுத்தி, சூத்திரனை ஸ்தாவரம் என்றும் வைசியனைப் பசு என்றும், க்ஷத்திரியனை மனிதன் என்றும், பிராம்மணனை தேவன் என்றும் நாலோர் இயம்புவர். பள்ளிக்கூடத்தில் பாலர் வகுப்பில் துவக்கி மேல் வகுப்புகளுக்குப் பிள்ளை ஒருவன் போவது போன்று மக்கள் எல்லாரும் சூத்திரர்களாய்ப் பிறந்து, பிறகு மனபரிபாகத்துக்கு ஏற்றவாறு மேல் வருணங்களுக்குப் போகின்றனர். பழைய பயிற்சிக்கும் புதிய முயற்சிக்கும் ஒப்ப ஒரே ஜன்மத்தில் நான்கு வருணங்களையும் கடந்து செல்லுபவர் உளர்; சிறிது சிறிதாக மேல் நோக்கிச் செல்லுபவரும் உண்டு. நெறி வழுவிக் கீழ் நிலைக்கு வருவாரும் உளர். எந்நிலையில் இருப்பினும் மக்கள் எல்லாரையும் தொகையில் நான்கினுள் அடக்கிவிடலாம்.

## பண்பும் தொழிலும்

மக்களாக வடி வெடுத்தவர்களுள் தன்மை வேறுபாட்டை யாண்டும் காணலாம். சூத்திரன் என்பவன் எப்பொழுதும் உடல் உணர்ச்சியிலேயே நிலை பெற்றவன். சிந்திக்கும் தன்மை அவனிடத்துக் கிடையாது. உடலை ஒட்டிய இன்பங்களை மட்டும் அவன் அறிவான். தானாக முயன்று எதையும் சாதிக்கும் வல்லமை சூத்திரனுக்குக் கிடையாது. ஏவப்பட்டாலொழிய அவனால் காரியம் ஒன்றும் நடைபெறுவது. ஏவலாள் என்றே அவனைச் சொல்லவேண்டும். உடல் உழைப்பைக் கொண்டு ஆகிற வேலைகளுக்கெல்லாம் அவன் பெரிதும் தகுந்தவன். வாழ்க்கைக்கு முதல் படியாயிருப்பது உடல் உழைப்பு. அது இல்லாவிட்டால் வாழ்வு என்னும் பயணம் நடைபெறுவது. உடலில் உள்ள உறுப்புகளுள் இரண்டு காலுக்கு ஒப்பாவான் சூத்திரன். தன் சுபாவத்துக்கு ஏற்றவாறு குற்றேவல் புரிவதே அவனுடைய தொழிலாகும்.

அறிவு மேலிட்டால் இன்பங்களை நன்கு ரசிக்கும் தன்மை வைசியனுக்கு வருகிறது. அவன் செல்வத்தைப் பெருக்குவதில் கருத்துடையவன். ஆக்கத்துக்கு ஏதுவான திட்டங்கள் அவனுடைய உள்ளத்தில் எழுந்துகொண்டிருக்கும். தனமும் தானியமும் அதிகரிப்பது வைசியனுடைய முயற்சியாலேயே நடைபெறுகிறது. உடல் வளர்ச்சிக்கு இன்றியமையாத உணவுப் பொருள்களெல்லாம் அவனாலேயே உண்டு பண்ணப் படுகின்றன. कृषिगौरक्ष्यवाणिज्यं वैश्यकर्म स्वभावजम्—கிருஷியும் கால்நடை வளர்ப்பதும் வாணிபம் பண்ணுவதும் வைசிய சுபாவத்துக்கு ஏற்ற தொழில்களாகும். கைத்தொழில் அபிவிருத்தியும் பல நாடுகளுக்கிடையில் பண்டங்களை மாற்றித்தருதலும் அவனுடைய பிரவிருத்திகளாம். சரீரத்தில் உள்ள அவயவங்களுள் வயிற்றுக்குச் சமானமாகின்றான் வைசியன்.

நன்று இது, தீது இது என்று அறிந்து நன்மையைக் கடைப்பிடிக்க வல்லவன் க்ஷத்திரியன். ஆளும் தன்மை இயல்பாகவே அவனுக்கு அமைகிறது. உயிர்களை அன்புடன் ஓம்புதலும், நெறியி

னின்று வழுவுபவரை நெறிக்குத் திருப்புதலும் அவனுடைய செயல். பராக்கிரமம் அவனை விட்டுப் பிரிவதில்லை. துணிவுக்கு அவன் பேர்பெற்றவன். போர் புரிந்தும் அவன் நீதியை நிலைநிறுத்துவான். அறப்போரை வலிய மேற்கொள்ளாளும், தொடுத்த போரினின்று புறங்காட்டி யோடாமையும் அவன் படைத்துள்ள பண்புகளில் முக்கியமானவைகளாம். வேண்டியவர்க்கு வேண்டியதை வழங்கவல்ல வள்ளல் என்பான் க்ஷத்திரியன். சமூக நடைமுறையில் குறையொன்றும் நேராவண்ணம் அதைத் திறமையுடன் காப்பவனும் அவனே. நெஞ்சத்தினின்று உடலெங்கும் இரத்தம் வியாபிக்கின்றது. அதே ரத்தம் சுத்தி யடைதற்கு மறுபடியும் நெஞ்சத்துக்கு வருகிறது. தோள்கள் தேகத்துக்குத் தகைமையைத் தருகின்றன. க்ஷத்திரியனைத் தோளுக்கும் நெஞ்சுக்கும் சமனிடலாம்.

அறம் வளர்ப்பவன் பிராம்மணன். தபசு ஒன்றே அவன் படைத்துள்ள தனம். ஆதலால் அவன் தபோதனன் என்று அழைக்கப்படுகிறான். அழியும் உலகப் பொருள்களில் அவனுக்கு ஆசையில்லை. மனதை ஆத்ம நிஷ்டையில் உள்முகமாகத் திருப்பியவன்; இந்திரியங்களை அறவே வென்றவன். பிறரால் தனக்குத் தீங்கு விளைந்தவிடத்தும் தான் பிறருக்குத் தீங்குசெய்யாது நன்மையே செய்பவன் அந்தணன் ஆவான். அவனுடைய மனம்மொழிமெய் ஆகிய முக்கரணங்களும் தூய பிரவிருத்திகளில் போய்க்கொண்டிருக்கும். இனிமைக்கு அவன் உறைவிடம். எக்காரணத்தை முன்னிட்டும் பிராம்மணன் பணத்தில் பற்று வைக்கமாட்டான். தனத்தை விரும்புகிற அளவு தவம் குறைந்துவிடும். எளிய வாழ்க்கையும் உயர்ந்த எண்ணமுமே ஜீவியத்தில் அவன் கொண்டுள்ள நோக்கமாகும். அவன் உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசான். அதாவது அவனுடைய சொல்லும் சிந்தையும் ஒருமைப்பட்டிருக்கும். பூவுலகில் தனது என்று சொல்லுதற்கு அந்தணனுக்கு ஒன்றுமில்லை. பாரமார்த்திகப் பெருவாழ்வே அவன் படைத்துள்ள பேறு. கல்விக்கும் ஞானத்துக்கும் நிலைக்களம் பிராம்மணனே. தான்பெற்றுள்ள அறத்தையும் சீலத்தையும் ஞானத்தையும் ஓயாது உலகுக்கு வழங்குதலே அவன் செய்யும் தொழிலாகும். சரீரத்தில் சிரசு வகிக்கின்ற ஸ்தானத்தை சமூகத்தில் பிராம்மணன் வகிக்கின்றான்.

## சில கோட்பாடுகள்

வருணம் பிறப்பை அடிப்படையாகக் கொண்டதன்று. குலம் ஒருவாறு பயன்படுகிறது. நல்லார் ஆவதற்கு நற்குடியில் பிறப்பது பெரிதும் பயன்படுகிறது. ஆனால் ஒரு குலத்தில் பிறந்ததன் காரணமாக ஒருவன் மேலோன் அல்லது கீழோன் ஆகவேண்டும் என்பது இயற்கையின் நடைமுறையன்று. வல்லமை வாய்ந்த வக்கீல் ஒருவனுக்குப் பிள்ளைகளாகத் தோன்றுபவர்களெல்லாம் நல்ல வக்கீல்கள் ஆவார்கள் என்பது நிச்சயமல்ல. தக்க அறிவை உடையராகி அவர்கள் வக்கீல் ஆக முயன்றால் தகப்பனது தகைமை அவர்களுக்குப் பயன்படும். குலத்தினின்று கிடைக்கும் உதவியும் அத்தகையதே. குணத்தையும் கருமத்தையும் முன்னிட்டு மானுடர் நான்கு வர்ணங்களாகப் பிரிகின்றார்கள்என்று பகவான் கீதையில் பகர்கின்றாரே யொழிய, குலத்தை முன்னிட்டுப் பிரிகின்றார்கள் என்று இயம்பவில்லை. ஒரே குடும்பத்தில் பிறக்கும் சோதரர் நால்வர் குணவிசேடத்தை முகாமையாகக் கொண்டு நான்கு வருணங்களாகப் பிரிவது முறைமை. ஒரே

பிராம்மணனுக்குப் பிள்ளைகளாகப் பிறக்கும் இருவருள், கோயிலில் பூஜை பண்ணுபவனை அர்ச்சகன் என்றும், மடைப்பள்ளியில் சமைப்பவனை மடையன் அல்லது சமையற்காரன் என்றும் சொல்லவேண்டும் என்கின்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். வர்ண பேதம் இயற்கையின் அமைப்பு. அதை முன்னிட்டு யாரையும் அலட்சியப் படுத்துவது அறிவுடையோர் செயலன்று. அவ்வாறே தொழில்களுள் உயர்வு தாழ்வு கிடையாது. நான்கு வருணத்தார்களது தொழிலும் புனிதம் வாய்ந்தவைகளே. பள்ளிக் கூடத்தில் மேல் வகுப்பில் படிக்கிற மாணக்கனுக்குக் கீழ் வகுப்புப் பாடமும் தெரியும். வருணத்தில் மேல் படிக்குப் போகின்றவர்களுக்கு ஆரம்ப தசையில் இருப்பவர்களது தொழில் நன்றாய்த் தெரியும். வேலைக்காரனா யிருந்து பழகுபவனே பிறகு நல்ல தலைவன் ஆகிறான். பயிற்சியும் பரிபாகமும் அடைந்தவர்க்குப் பொறுப்பு வாய்ந்த பெரிய வேலைகள் தரப்படுகின்றன. சிக்கனமாகத் தொழில் புரிவதற்கு (Economy of labour) இதுவே சிறந்த உபாயம். மனிதனது செயலினின்று அவனது வருணத்தை யூகித்தறியலாம்.

### நான்கு ஆஸ்ரமங்கள்

கல்வி கற்கும் இளமைப் பருவமே பிரம்மசரிய ஆஸ்ரமம் என்பது. ஆனால் வெறும் ஏட்டுக் கல்வியில் கருத்து வைப்பதோடு அது நின்று விடுவதில்லை. புலனடக்கமும் ஒழுக்கமும் அவ்வாஸ்ரமத்துக்கு இன்றியமையாத பயிற்சிகளாகும். வாழ்க்கை என்னும் கட்டிடத்துக்கு அஸ்திவாரம் போன்றது அது. உறுதியும் உழைப்பும் அதனிடத்திருந்தே உதிக்கின்றன. உடல் வளர்ச்சிக்கு ஒவ்வொரு உறுப்பும் உறுதுணையாவது போன்று, உலக நன்மைக்கு உகந்ததா யிருக்கவேண்டும் ஒவ்வொருவனுடைய வாழ்க்கையும். இத்தகைய பான்மையைப் புகட்டுவதே பிரம்மசரிய ஆஸ்ரமம்.

நல்ல பயிற்சியைப் பெற்றபின் யுவன் ஒருவன் இல்லறத்தை ஏற்றுக் கொள்ளுகிறான். ஈண்டு ஆண்பாலுக்குச் சொல்லப் படுகின்ற கோட்பாடுகளெல்லாம் பெண்பாலுக்கும் பொருந்துகின்றன. மரம் ஒன்று, நிலம் நீர் நெருப்பு காற்று முதலியவைகளினின்று சக்தியைப் பெற்று, அதைப் பூவாகவும் பழமாகவும் மாற்றி உலகுக்கு வழங்குவது போன்று, கிரகஸ்தன் சமூகத்துக்கு யாண்டும் ஆதரவளிக்கிறான், அவனன்றி நிலவுலக வாழ்க்கை நிலைபெறாது.

இம்மைக்கு இன்றியமையாத கடமைகளையெல்லாம் ஆற்றியபின் குடும்பஸ்தன் ஒருவன் உலகப் பொறுப்புகளினின்று விலகிக்கொள்ள எத்தனிக்கிறான். அத்தருணத்தில் அவனுக்கு வானப்பிரஸ்தன் என்று பெயர். பின்பு தன்னை முற்றிலும் பாரமார்த்திகத்துக்கென்றே ஒப்படைப்பவன் சன்னியாசி. அப்படி அவன் ஆத்மீகத் துறையில் இறங்கியபின் உலகுக்கு வேறு ஒரு விதத்தில் உதவுகிறான். இல்லறத்தான் உடலை ஒட்டிய அனைத்தையும் ஆக்கி அளிப்பது போன்று, ஆத்மீக வாழ்க்கைக்கு வேண்டிய அனைத்தையும் துறவறத்தான் தந்தருள்கிறான். சூத்திரத் தன்மையில் இருப்பவன் சன்னியாச ஆஸ்ரமத்துக்குத் தகுதியுடையவன் அல்லன். ஏனென்றால் வருணப் பாகுபாடும் ஆஸ்ரமப் பாகுபாடும் மனதின் பரிபாகத்தைச் சார்ந்தவைகளாம்.

### சமூக அமைப்பு

உலக வாழ்க்கையில் நலனும் பொலலும் யாண்டும் கலந்து உள. தீமை கல

வாத நன்மை கிடையவே கிடையாது. கூடிய வரையில் கேட்டைக் களைந்து நலனைக் கோலுதல் அறிவுடையோரது இயல்பு. பல நாடுகளில் பலவிதமான முறைகளில் சமூகம் சீராக அமைக்கப்பட்டுள்ளது. துறைகளையும் அப்போதைக்கப்போது கையாண்டு பார்த்து வருகின்றனர். இவைகள் யாவற்றிலும் சாலச் சிறந்தது வருணாஸ்ரம தர்மம் என்று இயம்பவேண்டும். இந்த ஏற்பாடு பாரமார்த்திக உண்மையை ஆதாரமாகக் கொண்டது. இதை நன்கு கடைப்பிடித்த காலங்களிலெல்லாம் நம் நாடு மேன்மைகள் அனைத்துக்கும் உறைவிடமாக மிளிர்கிறது. மனிதனுடைய முன்னேற்றத்துக்கும் சமூகச் சீர்மைக்கும் உறுதுணையாவது வருணாஸ்ரம தர்மம். ஒருவனுடைய இயல்புக்கு ஏற்றவாறு உடல் வளர்ச்சிக்கும் ஆத்மீக வளர்ச்சிக்கும் இது பெரிதும் துணைபுரிகிறது. பிள்ளைப் பருவத்தில் இருப்பவன் பாதுகாக்கப் படுகிறான். பெரியவன் ஆனபிறகு அவனுக்குப் பொறுப்பு அதிகரிக்கிறது. சிறுவனுக்கு சுகபோகத்துக்கு உரிமையுண்டு; பொறுப்பான கடமையைச் செய்ய இன்னும் அவன் தகுந்தவன் ஆகவில்லை. வயது முதிர்ந்த பிறகு சுகஜீவனத்துக்கு ஏற்ற உரிமைகள் குறையவும் பொறுப்பான கடமைகள் அதிகரிக்கவும் செய்கின்றன. வருணதர்மம் இத்தகையது. கீழான வருணத்தில் இருப்பவன் நன்கு காக்கப்படுகிறான். மேல் வருணத்துக்குப் போகின்ற அளவு கடமைகள் அதிகரிக்கவும் உரிமைகள் குறையவும் செய்கின்றன. தன்னலத் தியாகமும் சமூகத் தொண்டும் மேலோனது கடமை. ஒரு குடும்பத்தில் எப்படியோ சமூகத்திலும் அப்படியே; தனக்கு சுகபோகம் ஒன்றும் வேண்டாம் என்று நீத்துவிட்டு, உலகுக்கு ஆக்கத்தையும் அறிவையும் வழங்குபவனை உலகம் தானாகவே போற்ற முற்படும். இக்காலத்து மக்கள் இந்த ஏற்பாட்டுக்கு நேர்மாறாகப் பொறுப்பு ஒன்றையும் ஏற்றுக்கொள்ளாது போகத்தையும் சுய நலத்தையுமே கருதுகின்றனர். ஆதலாலேதான் நாடு நலிவுறலாயிற்று. இப்பொழுது நாட்டுமக்கள் அனைவரும் பெரிதும் சூத்திர நிலைமையில் இருக்கின்றனர். வைசியரா யிருப்பவர் சிலர்; பிராம்மண க்ஷத்திரிய நிலைமைகளுக்குத் தகுதியுடையாரைக் காண்பது அரிது. அந்நிலைமைகளுக்கு ஏற்ற தியாகத்தைச் செய்பவரும் மனபரிபாகத்தை அடைய விரும்புபவரும் மிகச் சிலரே. மேலோராலன்றி மேலான சமுதாயம் அமையாது. வேத நெறியில் விளக்கியிருப்பதற்கு ஒப்பான அந்தணரும், அரசரும், வைசியரும் தோன்றுவார்களாயின் சமூகம் திரும்பவும் பண்டைச் சிறப்பைப் பெற்றுப் பொலியும். வருணாஸ்ரம தர்மத்துக்கு ஒப்பான சமதர்மம் கிடையாது. எளியாரைப் பேணவும் வலியாரைப் பயன்படுத்திக் கொள்ளவும், சட்டதிட்டமின்றி, பலாத்காரமின்றி, அன்பு ததும்பிய நேர்முறையில் உதவுவது வர்ணாஸ்ரம தர்மம் ஒன்றே. இது நம் நாட்டுப் பாரமார்த்திகச் செல்வங்களுள் ஒன்று. நம் நன்மையின் பொருட்டும் உலக நன்மையின் பொருட்டும் இந்த மேலான சமூக அமைப்பை நம் வாழ்க்கையின் வாயிலாக விளக்கிக்காட்ட இந்தியர்களாகிய நாம் அனைவரும் கடமைப்பட்டிருக்கிறோம்.

---

# முடிவான உண்மை

(ஸ்ரீ துரியானந்த சுவாமிகள்)

ஒரு சமயம் ஸ்ரீ ராமசந்திரர், முனிவர்களும் ரிஷிகளும் புடைசூழக் கொலுவிற்றிருந்தபோது, அவர் அனுமாரைத் தம் முன்பே கண்டார்; அப்போது, தமது அடியார்கள் பல வகையாரையும் திருப்திப் படுத்தும் பொருட்டு, மெய்யடியார்களுள் தலைவரான அனுமாரை நோக்கி, "அனுமானே, என்னை எவ்வாறு கருதுகின்றனை?" என்று வினவினர். அறிஞர்களுள்ளும் தலைவரான அனுமார் அப்போது பின்வருமாறு தமக்குள் சிந்திப்பாராயினர்:—"எல்லா உயிர்களது நெஞ்சத்திலுள்ளும் வீற்றிருந்து, அனைத்தையும் அறியும் பிரானுன ஸ்ரீ ராமர் இவ்வாறு கேட்பதில், ஓர் ஆழ்ந்த கருத்து அமைந்திருத்தல் வேண்டும். அது யாதாயிருக்கல் கூடும்?" இவ்வாறு சற்று சிந்தனையி லாழ்ந்தபின், ஸ்ரீ ராமபிரானை நோக்கி, "என் உடலோடு நான் ஒன்றுக நிற்கும் நிலையில், நான் உமது அடிமை; என்னை ஜீவனுகக் கருதும்போது, நான் உமது அம்சமாவேன்; என்னை ஆன்மாவாகக் கருதும்போது, நான் நீரேயாவேன்; இதுவே எனது உறுதியான கொள்கை" (தேக புத்யா தாஸோஸ்மி இதி, ஜீவ புத்யாத் த்வத் அம்சக, ஆத்ம புத்யா த்வமேவ அஹம், இதிமே நிஸ்சிதாமதி:" என்று மறுமொழி கூறினர்.

எல்லா பக்தர்களுடைய மன நிலைகளையும் இதில் அனுமான் வெளியிட்டுள்ளார். வேதாந்த மதங்கள் எல்லா வற்றினுடைய முடிவான கருத்தும் இதுவே. இதனுல் ஒருவரும் நம்பிக்கை யற்றுப் போகக் காரணமில்லை; அதற்கு மாறுக, ஒவ்வொருவர்க்கும் அவரவர்க்குரிய தகுதியான பதவியை அளிக்கிறது. "நீர் பகவான், நான் உமது அடிமை" என்று கருதும் ஆண்டான்-அடிமைபாவனை, தம்மை உடலாக நினைக்கும் கருத்தைத் தாண்டி அப்பாற் செல்ல முடியாதவர்க்காகும். தம்மை ஜீவர்களாக நினைத்து, தம்மை உடல் என்று கருதும் நினைப்பைத் தாண்டினவரும், ஆனுல் அதை முற்றும் உணராதவரும் ஆகிய அடியார்கட்கு, "நீர் முழுப் பொருள், நான் உமது பகுதி" என்னும் அம்ச—அம்சிபாவனை பொருந்தியதாகும்.

ஆனுல் தம்மை ஆன்மாவாக உணர்ந்தவரோ "நானே நீர்" என்னும் ஐக்கிய பாவனையைக் கைக் கொள்பவராவார். நீரும் நானும் ஒன்றே—என்னும் நிலையில் வேறுபாடே இல்லை. துவைத விசிஷ்டாத்வைத அத்வைதங்களாகிய மூன்று நிலைகள் இவைகளே. அடியார்கட்குள் தலையணியாக விளங்கும் அனுமாரைக் கொண்டு இம்மூன்று நிலைகளையும் பற்றிய முடிவான உண்மையை வெளியிடும்படி ஸ்ரீ ராமபிரான் செய்ததன் கருத்து யாதெனில், சபையில் வீற்றிருந்த எல்லா அடியார்கட்கும் மகிழ்ச்சியை உண்டு பண்ணுவதேயாம். வேதாந்தத்தின் முடிவான உண்மைக்கு முடிவான வியாக்யானம் இதுவே.

ஒருவரும் நம்பிக்கையற்றுப் போக வேண்டாம்; ஏனெனில் ஒவ்வொருவரும் ஒரே பரம்பொருளை வழிபட்டுக் கொண்டிருக்கிறுர்; அவரவரது நிலை எதுவாயினும், அவரோடு அனைவரும் இறைவனேடு உறவுடையவராகின்றனர்.

"எல்லாருடைய நெஞ்சங்களுள்ளும் நான் இருக்கிறேன். ஞாபகமும் அறிவும் அவற்றின் இன்மையும் என்னிடமிருந்தே யாம். எல்லா வேதங்களாலும் அறியப் படவேண்டிய பொருள் நானே. நானே வேதாந்தத்தை இயற்றியவன். வேதத்தை அறிந்தவனும் நானே." கீதை 15—15.

சைதன்யமயமாயும் மெய்ப் பொருளாயும், எல்லாவற்றுள்ளும் எல்லாமாயும் உள்ள ஒரே பரமபுருடன் ஒவ்வொன்றையும் ஊடுருவி வியாபித்துள்ளான். எல்லா வேதங்களாலும் உண்மையாக அறியப்படவேண்டியவன் அவனே; வேதாந்தத்தை இயற்றியவன் அவனே; வேதத்தை அறிந்தவனும் அவனே. இதை அறிதலே வேதாந்தத்தை அறிதலாகும். மேலும், இந்த அனுபூதி யில்லாமல், வேதாந்த நூல்களை யெல்லாம் ஒருவன் முழுதும் கற்றாலும், வேதாந்தத்தின் உண்மையான கருத்தை ஒருவனாலும் அறிய முடியாது. நான் அவ்வாறே என்று தீர்மானம் பண்ணிவிட்டேன். இன்னும் குருதேவர், "எனது தேவியம்மையும் நானும்..." என்று சொல்லும் வாக்கியத்திற்குப் பொருள் கொள்ளும் போது, அறிவுடையது, அறிவில்லாதது இரண்டில் ஒன்றைக் குறிப்பாக நான் கருதவில்லை. எல்லாம் சைதன்யம் என்றே அவர் பொருள் கொண்டார். வணங்கப் படும் பொருள் அறிவுடையது (சித்தாயிருப்பது), வணங்குபவனும் அறிவுடையவனே. அது குழந்தையின் மன நிலை. தாயைத்தவிர வேறொன்றையும் குழந்தை பொருட்படுத்துவதில்லை. அதன் அன்பு பங்கிடப்படுவதில்லை. பகவானே எல்லாவற்றுள்ளும் எல்லாமாயிருக்கிறார்.

"அர்ஜுன, இந்தப் பலவகையான வேறுபாடுகளை யெல்லாம் அறிவதனால் உனக்கு யாது பயன்? (இது வொன்றையே அறிந்து கொள்.) இப்பிரபஞ்சம் முழுவதையும் எனது ஓர் அம்சத்தாலேயே தாங்கிக் கொண்டு நான் உள்ளேன்."—கீதை-10-42.

அவர் தமது ஓர் அம்சத்தைக் கொண்டே உலக முழுவதும் வியாபிக்கிறார், மிச்சம் எப்போதும் சுவாதீனமாயும் எல்லாவற்றுக்கும் அதீதமாகும். வேதங்களும் பின்வருமாறு பாடியுள்ளன:—"படைக்கப்பட்டுள்ள உலக முழுவதும் பகவானுடைய கால்பாகம் மட்டுமே; மிச்சம் முக்கால் பாகமாவது அழியாத நித்ய பரலோகமேயாம்."

இவ்வளவும் பிரம்மனைப்பற்றி. ஆன்மாவைப்பற்றிக் கவனிப்போம். ஒருவன் தன்னை உடலென்று கருதுவானாயின், பகவான் பிரபுவாகிறார்; அவன் அடிமையாகிறான். அவன் தன்னை ஜீவனாகக் கருதுவானாயின், பகவான் முழுமையாகிறார், ஆன்மா அதன் அம்சமாகிறது. அவன் தன்னை ஆன்மாவாகக் கருதுவானாயின் அப்போது யாதொரு வேறுபாடும் இல்லாது மறைந்து போய்விடுகிறது. அப்போது அவன் பரம் பொருளாகிய பிரம்மத்தோடு ஒன்றாகிறான்; 'நான் நீயே' என்கிறான். இதுவே ஒருவனது முயற்சிக்கு முடிவான பயனாகும். அனைவரும் ஒப்புக்கொள்ளும் வேதாந்த ஞானம் இதுவே. பகவானே எல்லாவற்றுள்ளும் எல்லாமாகிறார். அவரை (பரம் பொருளை)த் தவிர வேறு அறிவும் வேறு அறியப்படும் பொருளும் அறிபவனும் இல்லை. பிரம்மமும் ஜீவனும் உலகமும் அவரே. அவரைத் தவிர வேறொன்றும் இல்லை. வேறொன்று இருப்பதாகக் கூறுபவனும் இன்னும் மயக்கத்தினின்றும் நீங்கியவனல்லன். "தூங்குபவனைப்போலப் பொருத்தமில்லாதவைகளைப் பேசுகிறான்." தூக்க மயக்கத்திலே தான்

பேசுவதை இன்னதென் றறியாதவனைப் போல அவன் உள்ளனன்.

"அவ்வியக்தமான பரம்பொருள் அத்யா சத்தின் மூலமாயும் விபரீத அறிவாலும் தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொண் டிருக்கின்றது." இந்தப் பொருளில்தான் சுருதி, "இந்த ஆத்மனிடமிருந்து ஆகா சம் உற்பத்தியாயுள்ளது......" என்பது முதலானவைகளைக் கூறிற்று; உண்மை யான சிருஷ்டியைக் கூறவில்லை.

"உற்பத்தியும் இல்லை, நாசமும் இல்லை; பந்தத்திற்குட்பட்டவர் ஒருவரும் இல்லை. பந்த நீக்கத்திற்காகப் பாடுபடுவர் ஒரு வரும் இல்லை; மோக்ஷத்தை இச்சிக்கிற வரும் ஒருவரும் இல்லை; முக்தி அடைந் தவரும் ஒருவரும் இல்லை. — இதுவே அறுதியான முடிவாகும்." (கௌடபாத காயத்திரி.)

முடிவான உண்மை இதுவே. பகவா னோடு ஸாலோக முக்தி, ஸாமீப முக்தி, என்பவைகளைப்பற்றி ஸ்ரீசங்கராசாரியார் சுவாமிகள் இன்னும் அதிகமாக என்ன சொல்ல முடியும்? "ஒரு பக்தன், கொடுத் தாலும், முக்தியைப் பெற்றுக்கொள்ள மாட்டான்" என்று பகவானே தமது பக்தனுடைய பற்றற்ற தன்மையைக் கூறியிருப்பதை நாம் அறிவோம். படிப்போ, நாமத்தை உச்சரித்தலோ, தவமோ, தியானமோ, ஏகாக்ரசித்தமோ, சமாதியோ முடிவானதென்று ஒருவரும் சொல்வதில்லை. "அவரை அறிவதனால் மட்டுமே அமிருதத்வம் (சாவாமை) அடையப்படுகிறது; இதைத் தவிர வேறு வழியில்லை."

இதுவே வேதாந்த வாக்கியம். பகவா னும் பின்வருமாறு கூறியுள்ளார் :—

"பிரம்மலோகம் உள்பட எல்லா உலகங் களும், அர்ச்சுனா, அடைந்தவரை மீளச் செய்யும் இயல்புடையன; ஆனால், என்னை அடைந்தவனுக்கோ, குந்தி புத்திரா, மறு பிறப்பில்லை." கீதை-8-16. "குடாகேச, எல்லா உயிர்களுடைய நெஞ்சங்களிலும் இருக்கும் ஆன்மா யானே; எல்லா உயிர் கட்கும் ஆதியும், நடுவும் முடிவும் யானே." கீதை-10-20. "நானே முடி வாய் அடைய வேண்டிய பொருள், பாது காப்பவன், சாக்ஷி, உறைவிடம், அடைக் கலமாகின்றவன், தோழன், உற்பத்தி, லயம், ஆதாரம், களஞ்சியம், அழியாத வித்தும்." கீதை-9-18.

ஆதலின் ஜீவனுக்கு எல்லாவற்றுள் ளும் எல்லாமாகின்றவர் பகவான் என் பதை வற்புறுத்துவது அவசியமில்லை. நீ அதற்காகவே வந்துள்ள போது, மாங் கனிகளை உண்பது சரியே. வேறு சமா சாரத்தை அறிய வேண்டியதும் அவசிய மில்லையே? பகவான்தாமே யாரை உல கிற்கு மதப்பிரசாரஞ் செய்பவர்களாக ஆக்குகிறாரோ, அவர்களே பிறரைப் பற் றிக் கவலையெடுத்துக் கொண்டு, எந்த நெறிகள் மனிதர்க்கு நன்மையாகும், அன்றிக் கெடுதலாகும் என்பதைத் தீர் மானிப்பார்கள். நாம் மாங்கனிகளை மட் டும் உண்ணக் கூடுமானல் உண்மையிலே யே பாக்கியசாலிகளாவோம்...பகவான் உங்களைத் தோட்டத்தின் சொந்தக்காரனி டம் அறிமுகம் பண்ணிவைக்க வேண்டும் என்பதேயே, நான் அவரிடம் பிரார்த்திக் கிறேன்.

# நமது சிகர ஜோதி

இப்பகுதியில் :—'ஸ்ரீ சுவாமி பரமானந்தர்'—சுவாமிகள் சமீபத்தில் மஹா சமாதி யடைந்த விஷயம் நண்பர்கள் அறிந்ததே. இக்கட்டுரையில் சுவாமிகள் உடலை நீத்த வரலாறும், அதன் பின்னும் நடந்த நிகழ்ச்சிகளும் முக்கியமாக வருணிக்கப் பட்டுள்ளன. 'ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை'—இக் கட்டுரையில் அவர் பெருமையும், அவர் அடைந்த உயர் நிலைமையும் சிறிது விளக்கப்பட்டுள்ளன. 'இன்ப வாழ்க்கை'—இனிய எளிய தமிழில் பண்டித ஸ்ரீ பூ. ஸ்ரீனிவாசன் அவர்கள், உண்மை யின்பம் எதுவென்றும், அதனை யடையும் மார்க்கம் சாயையைத் தொடர்ந்து மனம் வெளியே செல்வதாலல்ல என்றும், உள்முக நாட்டத்தாலேயே உண்மை யின்பம்—மாறாத இன்பம் கைகூடும் என்றும் அழகுபட எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். 'ஆத்மீய சாதனையில் உண்டாகும் ஆபத்துக்கள்'—இக் கட்டுரையில் ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள் சாதகர்கட்கு அவசியமும் முக்கியமும் வாய்ந்த பல கருத்துக்களை வெளியிட் டிருக்கின்றார்கள். ஆத்மீய வாழ்க்கைக்கு தியானத்தின் அவசியத்தினையும், தியானத்துக்கு முன் சாதகன் ஒழுக்க வாழ்வில் கருத்து மிகச் செலுத்தவேண்டும் என்பதனையும் ஸ்ரீ சுவாமிகள் வற்புறுத்திக் கூறுகின்றார்கள். 'மறுபிறப் புண்மை'—ஸ்ரீ விபுலாநந்த சுவாமிகள் இக் கட்டுரையில் உயிரின் வளர்ச்சியைப் படிப்படியாக விளங்க உரைக்கின்றார்கள். 'வர்ணாஸ்ரம தர்மம்'—நான்கு வருணங்களும், நான்கு ஆஸ்ரமங்களும் ஏற்பட்ட வகையும், அவைகளின் பலனும்பற்றி ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் பல காரணங்களுடன் விளங்கக் கூறுகின்றார்கள். குணத்தாலேயே வருண பேதங்கள் ஏற்பட்டனவென்று பல உதாரணங்களுடனும் தர்க்க ரீதிலாகவும் விவரித்துக் கூறுகிறார்கள்.

## ஆன்ம நாயகி

ஆன்மா என்னும் உண்மைப் பொருள் அழியும் உடலிற்கு அதீதமான அழியாத ஒரு மெய்ப்பொருள் என்பது அனைவரும் அறிந்ததேயாம்; ஆயினும் வைணவர்கள் நம்மாழ்வாரைப் பராங்குச நாயகியென்றும் கூறுவதுண்டு. ஆண் பெண் என்னும் பால்வேற்றுமை உடல் பற்றி எழுவதொன்றே யாதலின், ஆன்மாவைப் பெண்ணாகக் கூறுவது பொருந்தாததாகத்தோன்றும். ஆயினும் ஆழ்வாரது ஆன்மாவைப் பெண்ணாகக் கூறுவதில் அடங்கிய ஆழ்ந்த கருத்து ஒன்று உள்ளது. ஆன்மாவை நாயகியாகக் கூறும் போது, நாயகன் யார் என்ற கேள்வி பிறக்கும். ஆன்மாவிற்கு நாயகன் இறைவனே யாவான். அவ்வாறாயின், இறைவனும் ஆணோ என்ற ஐயம் உண்டாகும். அதைப் போக்குதற்காக ஆழ்வார் தாம் கூறியருளிய பாசுரம் ஒன்றில் "ஆணல்லன் பெண்ணல்லன், அல்லா அலியுமல்லன்" என்று உபதேசிக்கிறார். இறைவன் ஆணாகவும் பெண்ணாகவும் அலியாகவும் இல்லையாயின், அவனை 'அல்லன்' என்னும் ஆண்பால் விகுதியமையச் சொல்லுவானேன் என்று, பின்னும் ஓர் கேள்வி பிறக்கும். அதற்குப் பதிலாக, ஆன்றோர் "இறைவன் சாதாரண புருஷர்களைப்போலல்லன்; அவன் புருடோத்தமன்" என்று கூறுவார். இறைவனைப் புருடோத்தமனாகக் கூறும்போதுதான், ஆன்மாவை நாயகி என்று அழைப்பது

பொருத்த முடையதாகும். ஆணும் பெண்ணும் அல்லாத இறைவனையும் ஆன்மாவையும் இவ்வாறு கூறுவதின் உட்கருத்தைச் சற்று ஆராய்வாம்.

பரந்த உலகத்து நம் கண்முன் தோன்றும் பொருள்களனைத்தையும் இருவகையாகப் பிரிக்க நினைந்தோமாயின், உயிருடையவை உயிரற்றவை யென்னும் இரு பிரிவுகள் நமக்குப் புலப்படும். உயிருள்ள பொருள்களைச் சித்துப் பொருள்கள் (அல்லது அறிவுடைய பொருள்கள்) என்றும், உயிரற்ற பொருள்களை அறிவிலாப் பொருள்கள் (அல்லது அசித்துப் பொருள்கள், சடப்பொருள்கள்) என்றும் அழைப்பதும் வழக்கம். உயிரற்ற சடப் பொருள்கள் தமது இருப்பைத் தாமே உணர்வதில்லை. அவைகளின் இருப்பு உயிருடைய சித்துப்பொருள்களாலேயே உணரப்படுகின்றன. சித்துப் பொருள்கள் பிற பொருள்களை உணரும் திறமை பெற்றிருப்பதோடு, தாம் இருப்பதையும் உணர்கின்றன. இன்னும், அறிவுடைய பொருள்கள் இன்பதுன்பங்களை அனுபவிக்கின்றன ; சடப்பொருள்கள் அவ்வனுபவம் பெற முடியாதவைகளாகின்றன. அன்றியும், அறிவுடைய பொருள்கள் மற்றொரு வகைப் பொருள்களை அடக்கியாள்கின்றன, தமக்குப் பயன் படுத்திக் கொள்கின்றன. ஆக, சித்துப் பொருள் அறியும் பொருளாயும், அனுபவிக்கும் பொருளாயும், ஆளும் பொருளாயும் இருக்கின்றது ; சடப்பொருளோ அறியப்படும் பொருளாயும், அனுபவிக்கப்படும் பொருளாயும், ஆளப்படும் பொருளாயும் இருக்கின்றது. சுருங்கச் சொல்லில், முன்னது சுதந்திரப் பொருளாயும் பின்னது பரதந்திரப் பொருளாயும் உள்ளதாகிறது. அறியும் பொருளை ஆன்மா என்றும், அறியப்படும் பொருளைச் சடம் என்றும் கூறுவார் ; முன்னதைப் புருஷன் என்னும் பெயராலும், பின்னதைப் பிரகிருதி என்னும் பெயராலும் அழைப்பர் சாங்கிய நூலோர். 'புருஷன்' எனும் பெயரிட்டதற்கு முக்கிய காரணம், அதன் சுதந்திரத் தன்மையே யாம். பிரகிருதி தானாக இயங்கும் வல்லமை யற்றது. புருஷனோடு சேர்ந்தபோதுதான் இயங்கும் வல்லமையைப் பெறுகின்றது. புருஷனும் பிரகிருதியும் உயிரும் உடலும் போல உறவு கொண்டுள்ளன. சுதந்திரமுடைமையை நோக்கிப் புருஷனை ஆணாகவும், புருஷனைச் சார்ந்து பரதந்திரமாக வாழும் இயல்பை நோக்கிப் பிரகிருதியைப் பெண்ணாகவும் கருதுதல் மரபாகும். உடலை உதாரணமாகக் கொள்வோமாயின், கர்மேந்திரியங்களும் ஞானேந்திரியங்களும், தூல பஞ்ச பூதங்களும், சூக்கும பஞ்ச பூதங்களும், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் ஆகிய இருபத்து நான்கு தத்துவங்களாலாகிய உடல் பிரகிருதியின் விகாரமாகும் ; இவைகளுக்கு அப்பால், இவைகளோடு ஒட்டாது இவைகளை அறிந்தும் அடக்கியும் வரும் ஆன்மா புருஷனாகும்.

பகவான் கீதையில் ஏழாம் அத்தியாயத்தில் நாலாம் பாட்டில் "பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், மனம், புத்தி, அஹங்காரம் என்னும் எட்டும் எனது பிரகிருதியின் பிரிவுகளாகும்" என்று கூறுகிறார் ; அதன்பின் அடுத்த பாட்டில், "இது அபரப்பிரகிருதி யாகும் ; அதற்கு அன்னியமான எனது பரப்கிருதி ஒன்று உண்டு; இது ஆன்மாக்களாலாயது; இதுவே சடஉலகத்தைத் தரிக்கச் செய்கிறது" என்றார். சடப் பிரகிருதிக்கு மேல் ஜீவப் பிரகிருதி உள்ள தென்பதாயிற்று. அதற்குமேல் ஒரு தத்துவமும் உண்டு; அதைப் பின், "நானே இவ்விரண்டுக்கும் உற்பத்தியும் லயமும் ஆவேன்" என்றும், "எனக்கும் மேலானதொன்று

வேறொன்றில்லை; வடத்தில் மணிகள் கோக்கப்படுவது போலே, என்னிடத்தே அனைத்தும் கோக்கப்பட்டுள்ளன" என்றும் விளக்குகிறார். ஆதலின் சித்துப் பிரகிருதியையும் தரிக்கச் செய்வது பகவானே என்பது பெறப்படுகிறது. அனைத்துயிர்களுக்கும் ஆதாரமாய் அவைகளை நிலையாக நிற்கச் செய்யும் தத்துவம் பரமாத்மா என்பது அறியப் படுகின்றது. எனவே பிரகிருதிக்கும் புருஷனுக்கும் உள்ள சம்பந்தம் எப்படியோ, அப்படியே புருஷனுக்கும் இறைவனுக்கும் என்பதாகிறது. சித்துப் பிரகிருதியாகிய ஆன்மாக்கள் இறைவனையே தாரகமாக உடையன; அவனையே சார்ந்து தமது இருப்பையும் வாழ்வையும் பெறுகின்றன என்பதாகிறது. சுருங்கச் சொல்லில், புருஷர்களாகிய ஆன்மாக்களும் இறைவனுக்குப் பரதந்திரமாகவே உள்ளன; ஆன்மாக்கள் தமக்கு சுவாதந்திரியம் உண்டெனக் கருதுதல் மயக்கத்தின் காரணமாகும். இதனாலேயே இறைவனைப் புருடோத்தமனென்று மெய்யுணர்ந்தோர் கூறுவர். கீதையில் 13-ம் அத்தியாயம் 11-ம் பாட்டில், "பிரகிருதியாகிய உடலில் வாழும் புருடனாகிய ஆன்மா சுகதுக்கங்களை அனுபவிக்கிறான்" என்று கூறி, 12-ம் பாட்டில், "இவ்வுடலில் உள்ள புருடோத்தமனாகிய பகவான் உடலில் வாழும் ஜீவனது செயல்களைப் பார்த்து வருபவன், அனுமதி பண்ணுபவன், பர்த்தா (காப்பாற்றுபவன்), போக்தா (அனுபவிப்பவன்)" என்றும் கூறப்பட்டுள்ளது. பின்னும் 18-ம் அத்தியாயம் 61-ம் பாட்டில், "ஈசுவரன் ஆன்மாக்களுடைய இருதயத்திலிருந்து கொண்டு தனது ஆச்சரிய சக்தியால் ஆட்டிவைக்கிறான்" என்பது கூறப்பட்டுள்ளது. ஆக, இறைவனே ஆன்மாக்கட்கு பர்த்தா, அவைகளை அடக்கி யாள்பவன், போக்தா என்பது தெளிவாகின்றது. உயிருள்ள பொருள் ஒரு கருவியை ஆட்டிவைப்பது போல, இறைவனும் ஆன்மாக்களை ஆட்டிவைக்கிறான் என்பதாயிற்று. ஓர் ஆன்மா உடலை ஆட்டிவைப்பதுபோல, ஆன்மாவை இறைவன் ஆட்டிவைக்கிறான்; ஆன்மா உடலிற்குச் சரீரி; இறைவன் ஆன்மாக்கட்குச் சரீரி, உயிர்கட்குள்ளும் உயிராயிருப்பவன். இறைவனைச் சார்ந்து வாழ்வதாலும், இறைவனால் அடக்கியாளப் படுவதாலும், அனுபவிக்கப்படுவதாலும் ஆன்மா, இறைவனை நோக்குமிடத்து, இறைவற்குப் பரதந்திரமாக இருப்பதாகும். ஆதலின், ஆன்மாவை நங்கையாகவும் இறைவனைப் புருடோத்தமனாகவும் கருதுதல் பொருத்தமேயாகும்.

மெய்ஞ்ஞானமாவது, ஆன்மாவுக்கும் உடலுக்கும் உள்ள சம்பந்தத்தையும், இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தையும் உணர்தலும், அதற்கிசைய ஒழுகுதலுமேயாம். சாதாரண மக்களிடத்து இருவகையான மயக்க உணர்வுகள் காணப்படுகின்றன: ஒன்று, தேகமே ஆத்மா என்று மயங்கும் உணர்ச்சியாகும்; இரண்டாவது, நமது ஆன்மா சுதந்திர முடையது என்று மயங்கும் உணர்ச்சியாகும். ஆன்ம தரிசனம் பெறுவதற்காக முதலில் முயலுதல் வேண்டும். நாம் உண்மையில் ஆன்மாவே, பிரகிருதியல்ல; நாம் பிரகிருதியை அடக்கியாளும் வல்லமையை இயல்பினாலே உடையோம்; பிரகிருதி நமக்குப் பரதந்திரமாய்க் கருவிபோன்று நம்மால் ஆட்டிவைக்கப்படுவதாகின்றது—என்றவாறெல்லாம் அடிக்கடி ஆன்ம இயல்பினைச் சிந்தித்து வந்தால், அதன் பயனாக ஆன்ம இயல்பினை மேலும் மேலும் தெளிவாக உணரப் பெறுவோம்; முடிவில் ஆன்ம தரிசனத்தையே பெறக்கூடும். பின்னர், ஆத்மாவின் உண்மையான அந்தரங்க

இயல்பினை அறிவோமாயின், ஆன்மா இறைவனை நோக்குமிடத்து, முற்றிலும் அவனுக்குப் பரதந்திரமா யிருந்தல் அறியப்படும். இவ்வுண்மையை நன்கறிந்தவர் தம்மை இறைவனது உடைமையாகவே கருதத் தொடங்குவார்; இறைவனது இச்சைப்படியே தாம் ஒழுகுவதன்றித் தமக்கென ஒரு சங்கற்பமும் கொள்ளார். தம்மைச் சரீரமாகவும் இறைவனைச் சரீரியாகவும் தியானித்து, 'நான்' 'எனது' என்னும் அஹங்கார மமகாரங்களை ஒழிக்க முயலுவார்; இதற்கு எளிதான வழியாக அவர், தம்மை நங்கைமாராகவும், இறைவனை நாயகராகவும் கருதி அன்பு செய்வார்; அதன் பயனாக, இறைவனது காட்சியையும், அவனது அருளால் ஆன்மாவின் இயல்பையும், இறைவனது இயல்பையும் உள்ளவாறு உணர்வார்.

உலக வாழ்க்கையில் மெய்யடியாரது வாழ்வு எவ்வாறு நடைபெறவேண்டும் என்பதை, சீதா தேவி அசோக வனத்தில் வாழ்ந்ததைக் கொண்டு அறியவேண்டும் என்பர் பெரியார். சீதாதேவி தமது நாயகராகிய இராம பிரானது பக்கத்தில் இருக்கும் பேற்றை இழந்து, இராவணனது அசோக வனத்தில் தனியே வாழ நேர்ந்தமையைக் குறித்துத் துயரக் கடலில் மூழ்கியிருந்தார்; அதுபோல மெய்யடியாரும் உலகத்தில் இறைவனைப் பிரிந்து வாழ நேர்ந்ததைக் குறித்துப் பெருந்துயரம் கொள்ளல் வேண்டும். சீதாதேவி ஸ்ரீ ராமரைக் கூடி வாழத் துடித்ததுபோல, அடியாரும் இறைவனோடு எப்போதும் கூடிவாழும் பேற்றிற்குத் துடிக்கவேண்டும். சீதாதேவி சதா ஸ்ரீராமனையே நினைந்து, இப்பிரான் எப்போது தம்மை மீட்டுவாரோ என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்து, தமது சுய முயற்சியைவிட்டு அவரது சங்கற்பப்படியே நடக்கட்டும் என்று நம்பியிருந்ததுபோல, அடியாரும் தம்மை இறைவனுக்கு நாயகிகளாகப் பாவித்து, அவ்வாறே அவனுக்குப் பரதந்திரமாக இருந்து, சதா அவனது அருளையே இரந்தும், அவனை யன்றி வேறொன்றையும் தாரகமாகப் பற்றுமலும், வாழவேண்டும். நாயகனை உயிராகவும் தன்னை உடலாகவும் கருதி, அவனுக்கு எல்லாவிதத்தாலும் தான் பரதந்திரமா யிருப்பதை உணர்ந்து, அவ்வாறு ஒழுகுபவளே கற்புடைய நங்கையெனப்படுவா ளன்றோ? ஆக, ஆன்மாவுக்கும் இறைவனுக்கும் உள்ள உறவு நாயகிக்கும் நாயகனுக்கும் உள்ள உறவையே போன்றதாகின்றது.

அக்பர் என்னும் மொகலாயப் பேரரசர் டில்லியிலே அரசாண்டுவரும் காலத்து, மீராபாய் என்னும் இரஜபுத்திர ராணியார் கண்ணபிரான்மீது மெய்யான அன்பு வைத்து, அவனையே நாயகனாக உணர்ந்து, கோபியரைப்போன்று மெய்யடியாராக விளங்கினர். இந்த அரசியார் ஒருசமயம் கண்ணனது திருவடிகளால் தீண்டப் பெற்ற புண்ணியதலமாகிய பிருந்தாவனத்திற்குச் சென்றார்; அங்கே ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் என்னும் அவதார புருடரது உத்தம சீடருள் ஒருவரான ரூப்கோசாயி என்ற ஒரு முனிவர் உத்தம பக்தராயும், கண்ணபிரான்மீது கருத்தைப் பதித்தவராயும் வாழ்ந்து, பக்தியைப் பரப்பி வந்தார். அவரது ஆசிரமவாயிலை அடைந்த மீராபாய் தமது வரவை அம்முனிவர்க்கு அறிவித்து, அந்த அடியார்க்குத் தாம் தெண்டனிட வேண்டும் என்னும் ஆசையையும் தெரிவித்தார். அதற்கு அம்முனிவர், தம்மைக் காணவந்தவர் ஒரு நங்கையார் என்பதை அறிந்து, "நான் மாதரையும் பொன்னையும் கண்ணெடுத்தும் பாரேன்" என்று செய்தி யனுப்பித்தார். அதற்கு மீராபாய் அரசியார் "கண்ணனது இருப்பிடமாகிய இவ்வூரில் கண்

ணனே ஆண், மற்றவரெல்லாம் அவனது அந்தப்புரத்து வாழும் நங்கைமாரே யாவார். ஆதலின் எமது அந்தப்புரத்தில் கண்ணனைத் தவிர வேறொரு ஆடவர் நுழைந்து தங்கியிருப்பதாகக் கேள்வியுற்றேனாயின், அந்த ஆடவனை இப்பொழுதே எம் கண்ணனது துணைகொண்டு வெளியேற்றிவிட வேண்டும்; இதை அவரிடம் சொல்க" என்று மறுமொழியை அனுப்பித்தார். இதைக் கேட்டதும், அம் முனிவர் தம்மை நாடிவந்த நங்கையரை உத்தம அடியாராக அறிந்து, உடனே வரவழைத்தார் என்றும், ஒருவரை மற்றொருவர் சந்தித்ததும், ஒவ்வொருவரும் தம்மை மற்றவர்க்கு அடியார் என்றுக் கூறிக்கொண்டு பணிந்தார் என்றும், ஒரு நிகழ்ச்சி உண்டு. ஆக, ஆன்மாவை இறைவற்கு நாயகியாக அடியார்கள் கொள்வார் என்பது பெறப்படுகின்றது.

---

# சமாசாரங்கள்

## மோரிஷஸ் தீவில் ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ விவேகாநந்தர் இவர்களது பிறந்த தினக் கோண்டாட்டங்கள்

முதல் முதலாக இவ்வாண்டு மொரிஷஸ் தீவில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் ஆகிய இரு மகான்களது பிறந்த தினங்கள் வெகு விமரிசையாகக் கொண்டாடப் பட்டன. ஸ்ரீ கனானந்த சுவாமிகள் வதிந்துவரும் ஜாகையில் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளது பிறந்த தினம் கொண்டாடப்பட்டது. சுமார் 500-பேருக்குமேல் அன்றைய விழாவில் கலந்து கொண்டனர். இரண்டாவதாக, ஹிந்து மஹாசபையின் பெரிய ஹாலில் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரது 105-வது பிறந்த தினம் கொண்டாடப்பட்டது. அத்தீவின் நானு பக்கங்களிலிருந்தும் வந்து குழுமியிருந்த சுமார் 800-பக்தர்கள் முன் தமிழ், ஹிந்தி, ஆங்கிலம் முதலிய பாஷைகளில் 'எனது குருநாதர்' என்னும் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளின் சொற்பொழிவி லிருந்து சில பாகங்கள் வாசிக்கப்பட்டன. சுமார் மூவாயிர தரித்திர நாராயணர்களுக்கு அன்று திருப்திகரமாக உணவளிக்கப்கட்டது. தீவின் முக்கியஸ்தர்கள் பலர் உள்பட சுமார் ஆயிரம் பேர் கொண்ட ஊர்வலம் ஒன்றும் ஏற்பாடு செய்யப்பட்டது. மாலையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்துக்கு மொரிஷஸ் தீவின் அப்போதைய ஆக்டிங் கவர்னர் அவர்கள் தலைமை வகித்தார்.

பொதுக்கூட்டம் பிரார்த்தனையுடன் ஆரம்பிக்கப்பட்டது. பிறகு சிறுவர் சிறுமிகள் ஹிந்தி பேண்டின் துணைக்கொண்டு ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் இவர்கள்மீது அழகாகப் பாடினர். ஸ்ரீ சுவாமி கனாநந்தர் கவர்னர் அவர்களை வரவேற்று சிறு சொற்பொழி வொன்று ஆற்றினார்கள். கவர்னர் அவர்களும் மிக உருக்கமாக அழகிய தொரு சொற்பொழி வாற்றினர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஸ்ரீ விவேகாநந்த் சுவாமிகள் ஆகிய இவ்விரு பெரியார்களுடைய உயரிய வாழ்க்கையின் அம்சங்கள் பலவற்றையும் எடுத்துக் கூறினர். அவ்விரு பெரியார்களது வாழ்க்கையின் உயர்ந்த கருத்துக்கள் மொரிஷஸ் தீவு முழுதும் பரவி மக்களை உய்விக்க வேண்டும் என்று விரும்பினர். பிறகு ஸ்ரீ P. ஸ்ரீனிவாசன் அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணன் மிஷன் செய்து வரும் பல அலுவல்களைப்பற்றி அழகியதொரு

கட்டுரை வாசித்தார். ஸ்ரீ கருணாநந்த சுவாமிகள் ஆங்கிலத்திலும், ஸ்ரீ H. ஜூங்கி அவர்கள் ஹிந்தியிலும், ஸ்ரீ S. முதலியார் அவர்கள் தமிழிலும் சொற்பொழிவாற்றினர். டாக்டர் ஜெ. பிகோபின் அவர்கள், மொன் ராபர்ட் எட்வார்ட் 'அவர்களால் பிரெஞ்சு பாஷையில் எழுதப்பட்ட கட்டுரையை வாசித்தார் இறுதியில் கவர்னர் அவர்களது அழகான முடிவுரைக்குப்பின் கூட்டம் கலைந்தது.

## சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடம் வைத்தியசாலை

மயிலை ஸ்ரீராமகிருஷ்ண மடத்து எல்லையில் பதினொந்து வருடங்களுக்கு முன் சிறு ஓலைக் கொட்டகை ஒன்றில் ஆரம்பிக்கப்பட்ட இந்த வைத்திய சாலையைப்பற்றி விஜய வாசகர்கள் நன்கு அறிவர். பல உதாரகுணமுள்ள நண்பர்களும், டாக்டர்களும் இயற்றிய அரிய தொண்டின் காரணமாக, பகவான் அருளால் இப்போது இவ் வைத்தியசாலை தனக்கென சொந்தமாகக் கொண்ட கட்டடத்திலிருந்து பல ஆயிர ஏழைமக்களது உடல் நோயை அகற்றிவருகின்றது. இவ்வைத்தியசாலையிலிருந்து மருந்து பெறுவதற்கு மயிலைக்குத் தெற்கே ஐந்தாறுமைல் தூரங்களிலுள்ள கிராமத்து ஜனங்கள் வருவதோடும் இராயபுரம், பெரம்பூர் முதலிய இடங்களிலிருந்தும் ஏழை மக்கள் வருகின்றது குறிப்பிடத்தக்கது. சமீபத்தில் ஆரம்பிக்கப்பட்ட ஹோமியோபதிக் என்ற மருந்து மூலம் தினம் நூறுக்குமேற் கொண்ட பிணியாளர்கள் சொஸ்தப்படுத்தப் படுகின்றனர். பொதுப்பட, இம்முறை சிறு குழந்தைகட்குப் பெரிதும் பயன்படுகின்றது. 1939-ம் ஆண்டில் வைத்தியசாலையின் மூலம் 64685 பேர் சிகிச்சை பெற்றனர். ஆரம்பத்தின் முதலிரண்டு ஆண்டுகளில் 14523 பேர்களும், கடைசி இரண்டு வருஷங்களில் 168335 பேர்களும் சிகிச்சை பெற்றார்கள் என்றால் இவ் வைத்தியசாலை எவ்வளவு முன்னுக்கு வந்திருக்கிறது என்பது நன்கு விளங்கும். வைத்தியசாலை திறம்படவும் தங்கு தடையின்றியும் நடப்பதற்கு மாதம் குறைந்தது 350 ரூபாய் வருமானம் தரக்கூடிய மூலதனம் மிக அவசியம் வேண்டியதாக இருக்கின்றது. இவ்வைத்தியசாலை செய்துவரும் அரிய தொண்டினிடம் அபிமானம் காட்டும் மெய்யன்பர்கள் முன்வந்து பொருளுதவி செய்வார்கள் என்று நம்புகிறோம். ஸ்ரீ சாஸ்வதாநந்த சுவாமிகள், தலைவர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலை என்ற விலாசத்துக்கு, அளிக்க விரும்பும் தொகையை அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகின்றது.

---

## கடிதங்கள்

### (முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசியக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணா 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணா 3

---

## ஜகஜ்ஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணா 12. சந்தாதாரருக்கு அணா 10.

---

# ப ஜ ன ா வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவெதவசியம்.

விலை அணா 12.

ஸ்ரீ

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

"உள்ளதோன் மரபோர் விள்ளுவ பலவா"

தொகுதி—உ௦

பிரமாதி௵ தை—விக்கிரம௵ மார்கழி




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர், சென்னை

பத்திராசிரியர்கள் :— { சுவாமி சர்வக்ஞாநந்தர்.
அ. ஸ்ரீநிவாஸாசாரியார், B. A., L. T.

பதிப்பாளர் :—சுவாமி அத்வையாநந்தர்.

# பொருளடக்கம்

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—௨௦] விக்கிரமஹு மார்கழி௴ [பகுதி—௧௨

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானல் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானல் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தராற் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

நமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அனுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப் பட்டுள்ளது. வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-௨௦ | விக்கிரமஹு மார்கழிமீ | பகுதி-௬௨

## பிரார்த்தனை

---

चरणं पवित्रं विततं पुराणं
येन पूतस्तरति दुष्कृतानि ।
तेन पवित्रेण शुद्धेन पूताः
अतिपाप्मानमरातिं तरेम ॥

ब्रह्ममेतुमामं । मधुमेतुमामं ।
ब्रह्ममेव मधुमेतु माम् ॥

நித்தியமாகி எங்கும் நிறைந்த ஜோதிவடிவான தூயப் பொருளால் பரிசுத்தப்பட்டவனுகி மனிதன் தீமையைக்களைந் தேறிகின்றுன். சகலரையும் தூய்மைப்படுத்தும் நித்திய சுத்தப் பரம்பொருளின் சாந்நித்யத்தால் மல மறுப்புண்டவராகி நமது சத்துருவான பாவத்தால் அண்ட முடியாத நிலையினை நாம் எய்துவோமாக.

பிரம்ம சாக்ஷாத்காரம் எய்துவோமாக! பேரானந்தம் நுகர்வோமாக! பேரானந்தமயமான பிரம்மனை நாம் சாக்ஷாத் கரிப்போமாக!

—தைத்திரீய உபநிஷதம்.

---

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

---

இறைவனே! என் நெஞ்சம் பழாகக்கிடப்பதனால் அது கைப்புடையதாகிறது; உனது ஆறுதல் மொழிகளால் அதை மதுரமாக்குமாறு உன்னிடம் மன்றாடுகிறேன். பசியினால் உன்னைத் தேடத் தொடங்கினேன்; உன்னை நாடும் பசி ஓயாதிருக்குமாறு மன்றாடுகிறேன். பசியொடு நின்னையான் சார்ந்தேன்; உண்ணாதே என்னைப் போகவிடாதே. வறிஞனாய் அடைந்தேன் மாநிதியாகிய உன்னை; துயரொடும் அடைந்தேன் கருணைக்கடலாகிய உன்னை; வெறுங்கையனாய் இகழப்பட்டவனாய் மீளாதிருக்க அருளுக.

உன்னை நாட எனக்குக் கற்பி; உன்னை நாடும்போது நின்னை எனக்குக் காட்டியருள்க; ஏனெனில் நீ கற்பித்தாலன்றி உன்னை யான் எவ்வாறு நாடுவேன்? நீ உன்னைக் காட்டினாலன்றி உன்னை எங்ஙனம் காண்பேன்? ஆசையினால் உன்னை யான் நாடுவேனாக. உன்னை நாடும்போதும் உன் மீது ஆசைப்படுவேனாக. அன்பினில் உன்னைக் காண்பேனாக; காண்பதில் உன்பால் அன்பு மிகுவேனாக.

பரம் பொருளே! அணுகுதற்குரிய சோதியே! மங்களமான முழு முதற்பொருளே! உனக்கு மிக்க வருகிலுள்ள என்னிடமிருந்து நீ எவ்வளவு தூரத்தில் இருக்கின்றனை! உன் காட்சிக்கு நான் எதிரில் இருப்பினும், நீ என் காட்சிக்கு எவ்வளவு தொலையில் உள்ளனை! எவ்விடத்தும் முழுதும் நீ உள்ளனை எனினும் உன்னை யான் காணேனே! உன்னாலேயே அசைகிறேன், உன்னாலேயே என் இருப்பு உள்ளது; எனினும் உன்னையான் காணமாட்டேன். நீ என் உள்ளும் புறமும் உள்ளனை; ஆயினும் உன்னையான் உணரேனே!

—ஆன்ஸ்லெம் என்னும் ஞானியார்.

---

# ஏசு கிறிஸ்துவின் போதனை

(ஸ்ரீ சுவாமி சித்பவானந்தர்)

ஒவ்வொருவனும் தன் அறிவுக்கு எட்டியவாறு தான் காணும் பொருள்களை மதிப்பிடுவான். கத்திரிக்காய் வியாபாரியிடம் வைரம் ஒன்றின் விலை யென்னவாயிருக்கக் கூடும் என்று கேட்டால், சுமார் இரண்டு மூட்டை கத்திரிக்காய் பெறும் என்று தனக்குத்தெரிந்துள்ள பொருளைக் கொண்டு வரை யறுத்துச் சொல்லுவான். தன் கருத்தே தனக்கு அளவுகோலாகிறது. பொருளை உள்ளவாறு பொருட்படுத்துவதினின்று மனிதனது மன பரிபாகம் விளங்கும்.

ஏசு கிறிஸ்துவின் மகிமையை முறையுடன் விளக்க வல்லவர்கள் மேல் நாட்டு மதப்பிரசாரர்களென்றே நெடிது கருதப் பட்டு வந்தது. அவர்களில் பெரும்பாலர் அந்த அவதார புருஷரைப்பற்றிக்கொண்டிருந்த கருத்தை ஒரே வாக்கியத்தில் கூறி முடித்து விடலாம். இப்பூவுலகில், போகத்துக்கும் பெருமித வாழ்க்கைக்கும் ஆக்கத்துக்கும் சீருக்கும் சிறப்புக்கும் கிறிஸ்துவைப் பின்பற்றுவது ஒன்றே உபாயம் என்பது அக்கருத்தாகும். அக் கொள்கைக்குச் சான்றாக அவர்கள் மேல் நாட்டவர்களது நாகரீகத்தையும் ஆதிக்கத்தையும் எடுத்துக் காட்டினர். ஆனால் இப்பொழுது நடைபெறும் யுத்தம் ஏசு கிறிஸ்துவின் சிறப்பை விளக்குதற்குச் சிறிதும் பயன்படாது. இக் கொடும் போரை முன்னிட்டுக் கிறிஸ்துவைக் கீழ்மைப் படுத்துவதும் தகாது. அப்பெரியாருடைய போதனையை மேல் நாட்டவர்கள் சிறிதேனும் கற்றுக் கொள்ளவில்லை யென்பதே இப்பொழுது நிரூபிக்கப்படுகிறது.

சிலுவையில் அறையுண்டு உடலை உகுத்த உத்தமனை உள்ளபடி அறிந்து கொள்ளுதல் இந்தியர்க்கே இயலும். வேதாந்தம் என்னும் உரைகல்லை அவர்கள் உடையரன்றோ? தங்கம் வெள்ளி போன்ற உலோகத்தின் தரத்தை உரை கல் விளக்குவது போன்று, பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்ந்த பெரியாரது பாங்கைத் தெரிந்து கொள்வதற்கு வேதாந்தம் பயன்படுகிறது. வேதாந்தம் என்பது வாழ்க்கையை ஒட்டிய உண்மைகளின் தொகுதியே. ஏசுநாதர் அவ்வுண்மைகளைத் தமது வாழ்க்கையில் உயிரினும் உயரியதாக ஓம்பியுள்ளார்; தாம் கடைப்பிடித்த உண்மைகளையே பிறகு உலகுக்கும் எடுத்தோதினர். அவர் தோன்றி இப்பொழுது இருபது நூற்றாண்டுகளாகின்றன. ஆயினும் அவரது போதனை இன்றைக்கும் புத்தம் புதியதா யிருக்கிறது. கிறிஸ்துவின் வாழ்க்கையும் போதனையும் பிரித்து வைக்க முடியாதபடி ஒன்றோடொன்று பொருந்தியிருந்தன. ஆதலால் அதன்கண் இப்பொழுதும் புதுமை காண்கிறோம். மேலான வாழ்க்கை வாழ்வதே மேன்மையைப் புகட்டுதற்கு உற்ற உபாயம் என்பதற்கு ஏசுகிறிஸ்துவின் வாழ்க்கை பிரமாணமாகிறது. தெளிவும் வலிவும் அழகும் அவரது போதனையில் திகழ்வன வாயின. அவர் நவின்ற நிறைமொழியை முன்னிட்டு ஒருவேளை எலியாசு என்னும் பெரியாரோ, அல்லது ஜெரமையாசு என்னும் சீரியரோ திரும்பவும் உருவெடுத்து ஏசு கிறிஸ்துவாக வந்துள்ளாரோ வென்று அறிஞர் பலர் ஐயப்பட்டனர்.

வேதாந்தம் என்பதற்கு மரண வித்தை என்னும் மற்றொரு பெயர் உண்டு. இரவு பகலோடு இணைபிரியா திருப்பதுபோன்று சாவும் பிழைப்பும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட் டிருக்கின்றன. சாகத் தெரிந்து கொண்டவனே மெய்யான வாழ்க்கை வாழவும் தெரிந்து கொண்டவனாகின்றான். மரணத்தின் தத்துவத்தைத் தமது ஜீவியத்தில் விளக்கிக் காட்டியவர் ஏசுகிறிஸ்து. அழிவு ஆக்கைக்கே யொழிய ஆத்மாவுக் கல்ல. இக்கோட்பாட்டுக்கு அவர் குறிக் கோளா யிருந்தார். சிலுவையில் அறை யப்பட்டபொழுது அவர் உடலை நீத்தார் என்றும், அப்படி உடலைத் துறந்ததன் மூலம் அவர் உலகத்தின் பாபத்தை ஏற்றுக் கொண்டார் என்றும் பாமரர் பகர்வர். அவர் மரணத்தின் மூலம் உலகத்தின் பாவம் ஒழிந்தது உண்மையானால், அதன் பிறகு உலகில் கேடு ஒன்றும் இல்லா திருக்கவேண்டும். ஆனால் உலக நடை முறை அக்கோட்பாட்டை நிரூபிப்பதில்லை. நன்மை யிருக்கிற அளவு தீமையும் தென்படுவது திண்ணம். வாழ்க்கைக்குத் துணையாகத் தேகத்தையே நம்பியிருக்கும் பரியந்தம் துயரத்துக்கு முடிவு கிடையாது. உடற் கூற்றைக் கடந்து மேலே செல்லுபவர்க்கே உலப்பில்லா ஆனந்தம் லபிக்கும். சரீரத்தில் இருக்கும்போதே செத்தாரைப்போன்று ஆய்விடுகின்றனர் சான்றோர். கிறிஸ்து நாதரும் அதைத்தான் செய்தார். சரீர சம்பந்தமான சுகங்களை யெல்லாம் அவர் அறவே துறந்தார். போகமும் பொருளும் பேரும் பதவியும் உடற்பற்றினின்று உதிப்பவைகள். எதை உண்பது, எப்படி உடுப்பது, எங்குத்தங்குவது இதுபோன்ற கேள்விகளெல்லாம் யாக்கையின்மீது பற்றுடையார்க்கே வருகின்றன. அல்லிப் புஷ்பம் நெய்வதில்லை. ஆயினும் அது தன்னை நன்கு அலங்கரித்துக்கொள்கிறது. காக்கை குருவி முதலியன உழுது விதைப்பதில்லை. எனினும் அவை நன்கு உண்டு உயிர் வாழ்கின்றன. விசுவாசமற்ற மனிதனோ இவைகளைக் குறித்து ஓயாத்துயரத்தில் அழுந்துகின்றனன். உண்பதையும் உடுப்பதையும்விட உயர்ந்த கருத்து வாழ்க்கைக்கு உண்டு என்பது ஏசுவின் போதனையாகும். உடலைப்பற்றிய இன்பங்களை மறப்பதே அதற்கு முதற்படியாகும். உடலைப்பற்றி வரும் இன்பங்களை மறுப்பது சாகத் துணிதற்குச் சமனாகின்றது. ஏசுகிறிஸ்து அங்ஙனம் செத்தாரைப் போன்று ஆய் விட்டார். பிறகு சரீரம் சிலுவையில் சிதைபுண்டபோது அவருக்குக் கேடு ஒன்றும் வந்துவிடவில்லை. உடல் இன்பங்களை நீக்குதலே உலகத் துன்பங்களைப் போக்குதலாகும் என்று அவர் நமக்கு விளக்கிக் காட்டியுள்ளார்.

புஸ்தகங்கள் பல படித்த பண்டிதர் ஒருவர் செய்யும் போதனைக்கும் அருட்குரவர் ஒருவர் செய்யும் போதனைக்கும் இடையில் பெரும் வித்தியாசம் உண்டு. வாசா ஞானியின் விளக்கம் மண்ணால் விக்கிரகம் செய்வதற்கு ஒப்பாகும். மண் பதுமை செய்பவன் ஒவ்வொரு சிறு செயலிலும் கருத்தைச் செலுத்தவேண்டும். திறமையுடன் ஒவ்வொரு அவயவமும் அமைக்கப்படுதற்கு ஏற்ப உருவம் பொலிவு பெறுகிறது. உயிர் உடையது போன்றும் அது தென்படலாம். ஆனால் உண்மையில் அதன்கண் உயிர் இல்லை. கர்ப்பத்தில் வைக்கப்பட்டுள்ள விந்து உருவம் எடுக்கிற போக்கு வேறு ஒரு விதமானது. அவயவங்களெல்லாம் தாமாகவே அதன்கண் அமைகின்றன. அந்த விந்துவை உயிருடையதாகச் செய்வதோடு பெற்றோருடைய கடமை முடிந்து விடுகிறது. பிறகு அமைப்பும் வளர்ச்சியும் இயல்பாகவே அதனிடத்து உண்டாகின்றன. ஏசுகிறிஸ்துவினுடைய போதனை

கர்ப்பப் பையில் உயிருடைய விந்துவை வைப்பதற்கு ஒப்பாகும். மனிதனுடைய ஒவ்வொரு சிறு செயலேயும் பற்றி அவர் போதிப்பதில்லே. நல்வாழ்வு வாழ விரும்பும் மக்களுக்குப் பேருயிரை அவர் வழங்குகின்றூர். உறுதியான உயிரைப் பெறுபவர்களது செயல்களெல்லாம் சீரியவைகளாவது திண்ணம். மூன்று விதங்களிலே ஏசுநாதர் உலகுக்கு உயிர் ஊட்டினூர் என்று சொல்லலாம்.

அவர் அளித்தவைகளில் முதலாயது அன்பு. உயிரற்றுப் பிணம் போன்று கிடப்பவைகளே உயிருடையவைகளாகச் செய்வது அன்பு. இம்மையிலும் மறுமையிலும் வாழ்க்கை என்னும் கோட்டைக்கு அது திறவுகோலாகத் திகழ்கிறது. இறைவனேயும் இறைவனிடத்திருந்து உண்டாய உயிர்களேயும் நேசிக்கக் கற்றுக்கொண்டால் போதுமானது. பின்பு உயிர்களிடத்து எத்தகைய இணக்கம் வைத்துக்கொள்வது என்பதை அன்பு புகட்டுகிறது. கேடுகளே யெல்லாம் அகற்றுதற்கேற்ற மருந்தாக அது மிளிர்கிறது. காழ்நரகத்தை அது சொர்க்கமாக மாற்றுகிறது. அது இல்லாதவிடத்து சொர்க்கமும் நரகமாகப் பரிணமிக்கிறது. சூரிய வெளிச்சம் நல்லது கெட்டது ஆகிய அனேத்தின்மீதும் சமமாகப் படிவது போன்று ஏசுநாதருடைய அன்பு எல்லார்க்கும் பொதுவானது. தம்மைப் பின்பற்றுபவரிடத்து ஒருவிதமாகவும் எதிர்ப்பவரிடத்து மற்றொரு விதமாகவும் அவர் நடந்துகொள்ளவில்லே. இறைவனேயும் உயிர்களேயும் அவர் முழுமனதோடு நேசித்தார். சிலுவையில் வைத்துக் கசக்கியபொழுது அன்பே அவரிடத்திருந்து சொட்டிக்கொண் டிருந்தது. ரோஜாப் பூவை எவ்வளவு கசக்கினூலும் அதனிடத்திருந்து நறுமணம் ஒன்றே வருவதுபோன்று, சகிக்கமுடியாத இன்னல்களெல்லாம் அவரிடத்திருந்து அன்பு என்னும் அமிர்தத்தையே பிழிந்தெடுத்தன. அன்புடையாரது என்பும் (எலும்பும்) பிறர்க்குரியது என்னும் பேருண்மையைத் தமது வாழ்க்கையில் வைத்து விளக்கியவர் ஏசுகிறிஸ்து.

அவர் புகட்டிய போதனைகளுள் சிரத்தையை இரண்டாவதாக இயம்பலாம். சிரத்தையினின்றே ஊக்கம் ஊற்றெடுக்கிறது. முழு நம்பிக்கைக்கு மூலகாரணமும் சிரத்தையே. சிரத்தை யில்லாத ஜீவாத்மா குருடனுக்கு ஒப்பாகிறூன். ஆதலால் இதை உயிருக்குக் கண் என்று சொல்வது பொருந்தும். கண்ணும் ஒளியும் சேர்ந்து பொருள்களே உள்ளவாறு விளக்குகின்றன. சிரத்தை யென்னும் கண்ணொளி இறைவனுக்கும் உயிருக்கும் இடையில் உள்ள தொடர்பை உள்ளபடி விரித்துக் காட்டுகிறது. அஃதிலார் இருள் மயமான உலகை மிகைப்படுத்தவும் ஒளி மயமான இறைவனேக் குறைபடுத்தவும் செய்கின்றனர். ஏசு கிறிஸ்து ஒரு குழந்தையைப் போன்று முற்றிலும் இறைவனேயே நம்பியிருந்தார். அவர் வைத்திருந்த விசுவாசத்தின் வலிவால் ஒரு பொழுதும் அவருக்கு ஏமாற்றம் உண்டாகவில்லே. துவக்கத்தில் தோல்வி போன்று தென்பட்ட அவருடைய ஒவ்வொரு செயலும் சிரத்தையின் வலிவால் வெற்றியாகமாறிற்று. கடவுளிடத்து நம்பிக்கை யுடையவர் எளியராகத் தோன்றினும் உண்மையில் அவர்களே வலியாராவர் என்பதையும் தமது வாழ்க்கையின் வாயிலாக அவர் விளக்கினூர். உலகப் பகட்டுகளேயெல்லாம் விடப் பேராற்றல் வாய்த்தது ஈசுவரவிசுவாசம் என்பதற்கு ஏசுவின் ஜீவியமே சான்றாகும். முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார் என்னும் கூற்று இறைவனுடைய வழி பாட்டுக்கே முற்றும் பொருந்தும் என்பதையும், முயற்சி

முழு முதற் பொருளின் முன்னிலைக்கு மக்களை அழைத்துச் செல்ல வல்லது என்பதையும் ஏசுகிறிஸ்துவின் வாழ்க்கை தெற்றெனத் தெரிவிக்கிறது.

மூன்றாவதாக, மனத்தூய்மையின் மகிமையை அப் பெரியாருடைய வாழ்க்கை வெளிப்படுத்துகிறது. உடலையும் தூயதாக வைத்துக் கொள்ளவேண்டும். ஏனென்றால் மானிட சரீரமே இறைவனுக்குகந்த ஆலயமாகிறது. சித்தம் சுத்தி யடைந்து கொண்டு வருவதை நாம் எவ்வாறு தெரிந்துகொள்ளக்கூடும்? மனம் சுத்தமடைகின்ற அளவு அதனிடத்திருந்து காமம் குரோதம் லோபம் முதலிய கேடுடைய செயல்கள் அற்றுப்போம். நலம் தரும் செயல்களை அது இயல்பாகவே மேற்கொள்ளும். தனக்கு வந்து வாய்க்கும் கேடுகளையெல்லாம் அது மகிழ்வுடன் பொறுத்துக் கொள்ளும். தாரணியில் உள்ள தனங்களுக்கு நிலையில்லை. அவைகளுக்கு ஆக்கமும் அழிவும் மாறி மாறி வருகின்றன. அழியாததும் துருப்பிடியாததுமான செல்வம் இறைவனை அடைதல் ஒன்றே. அத்தகைய செல்வத்தைச் சேகரிக்க வேண்டுமென்று ஏசுகிறிஸ்து வற்புறுத்துகிறார். உள்ளப் பரிபாகம் அடைந்தவர்களே பாக்கிய வான்கள்; ஏனென்றால் அவர்களே கடவுளைக் காண வல்லவர்கள் என்கின்றார் அவர். அவருடைய போதனை முழுதும் இக் கூற்றில் அடக்கி விடுகிறது எனலாம். மனதைத் தூய்மைப் படுத்துதலே வாழ்வின் முடிவான நோக்கம். அதன்பின் இறைவனைக் காணுதல் எளிது. அவன் நமக்கு அன்னியமாக வேறு எங்கேயோ ஓர் உலகத்தில் இருப்பவன் அன்று. உள்ளத்துள் ஒளிரும் சுடர் விளக்கு என்று அவனைச் சொல்லுதல் வேண்டும்.

நல்ல மனிதத்தன்மையே தெய்வத் தன்மை யென்று சொல்லப்படுகிறது. இவ் இரண்டையும் இணைபிரியாது வைத்துப் போதிக்கிறார் கிறிஸ்துநாதர். தமது வாழ்நாள் முழுதும் இவ்வுண்மையை அவர் உலகுக்கு அறிவுறுத்தி வந்தார். கடவுள் மனிதனது உள்ளத்தினுள் குடிகொண்டுள்ளார் என்னும் உண்மையைத் தமது அந்திமக்காலம் வரையில் அவர் புகட்டிக் கொண்டிருந்தார். அவருடைய மரணமும் அதே உண்மையை நிரூபித்தது. அவர் இறுதியாகச் சிஷ்யர்களுக்குத் தந்தருளியதும் அந்த அருட் செல்வம் என்னும் நிறை செல்வம் ஒன்றே. இரத்தமும் மாமிசமும் நிறைந்த ஸ்தூல சரீரம் ஆத்மனை அறிவதில்லை. உடலைப் பற்றிய உணர்ச்சியுடையவர் உடலையே அறியவும் ஆராதிக்கவும் செய்கின்றனர். அருள் நிலையில் இருப்பவரே அருளைப் போற்றுகின்றனர். உடற் கூற்றை வென்று ஆத்ம சொரூபத்தில் இருப்பவர் ஆத்மனைப் போற்றுகின்றனர். தமது வாழ்க்கையின் வாயிலாக ஏசுகிறிஸ்து இக் கோட்பாட்டைப் புகட்டியுள்ளார்.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

மகான் ஒருவனுடைய பெருமையை உள்ளது உள்ளபடி அறிந்து கொள்வது மிகவும் கடினமான காரியமாகும். கவி யொருவனின் இலக்கிலயச் சுவையை உணரவேண்டுமாயின் நாமும் கவியின் உள்ள நிலைக்கு நம்மை உயர்த்திக் கொள்ளுவது அவசியமாகிறது. சங்கீதம் அறிந்தவனே சங்கீத இன்பத்தைச் சுவைக்க வல்லவனாகிறான். மேலும், மகான் தன்னுடைய பெருமை முழுவதை

யும் தன்னைச் சுற்றியுள்ளவர்களுக்குக் காட்டிக் கொள்வது அரிதான விஷயமாகும். ஆதலால்தான் மகான் ஒருவரை அவரது சமகாலத்தவர் பெருமைப்படுத்துவது கிடையாது என்ற பழமொழி ஒன்று இருந்து வருகிறது. இதற்குச் சிறந்த உதாரணமாக ஏசுநாதரைக் கூறலாம். உலகெங்கும் போற்றப்படும் இம் மகானுக்கு அவரது சம காலத்தவர் செய்த மரியாதை என்ன? சிலுவையிலறைந்தது தான்!

இங்கொரு வினா எழுகிறது? சமகாலத்தவர் ஒரு மகானைக் கண்ணுற் கண்டு, அவரது சொற்களைக் கேட்டு, அவரது பெருஞ் செயல்களை நேரிற் பார்த்தும் அவரது பெருமையை அறியாமற் போனால், பிற்காலத்தவர் அப்பெருமையைத் தெரிந்து கொள்வது எவ்வாறு சாத்தியமாகும்? சம காலத்தவருக்குக் கிட்டாத வசதி யொன்று பிற்காலத்தவருக்குக் கிட்டுகிறது. மகான் ஒருவர் மற்ற மனிதர்களினின்றும் ஸ்தூல உலகில் எவ்விதத்திலும் தனித்து நிற்பதில்லை. அவருக்கு இரு கொம்புகளா முளைத்திருக்கின்றன? மற்ற மனிதரைப் போலவே அவரும் உண்கிறார், உடுக்கிறார், நோய்வாய்ப்படுகிறார், மரிக்கிறார். அவருடைய பெருமை யெல்லாம் சிந்தனையுலகிலும் இலக்ஷிய உலகிலுமே அடங்கிக் கிடக்கிறது. அவருடைய உயர்ந்த எண்ணங்கள் எவரும் காணாத முறையில் உலகெங்கும் வியாபித்து ஆங்காங்கு பல மக்களை ஊக்கப்படுத்தி நல் வழியிலும் நற்றொண்டிலும் ஈடுபடச் செய்கின்றன. இவ்வற்புதத்தைச் சமகாலத்தவரைக்காட்டிலும் பிற்காலத்தவரே நன்றாகக் காண்கின்றனர். ஆதலால் தான் மகான் ஒருவர் ஸ்தூல உடலை உகுத்து விடுவதைக் கண்டு நாம் வருந்துவதற்கு அவசியமே இல்லாது போகிறது. அவரது சிந்தனைகள் அழிவதில்லை; பயனற்றும் போவதில்லை. அம்மகானது அருட்சக்தி எங்கெங்கோ பூத்துப் பழுப்பதை நாம் காண்கிறோம்.

ஒருமகானுடையபெருமையை அறிந்து கொள்வதற்கு அவரைப்பற்றிய நூல்கள் எவ்வளவு தூரம் பயன்படுகின்றன? சொற்கள், உள்ளப் பெருமையை விவரிக்க வல்லனவா? இவ்வினாவிற்கு ஆம் என்றும் இல்லை என்றும் விடை கூறலாம். நூலின் மூலம் ஒரு ஜீவனின் பெருமை முழுவதையும் அறிவது முடியாத காரியம்தான். ஆனாலும் நூல் ஒரு வழி காட்டியாகும். நூலைக்கொண்டு மகானது பெருமையை ஒருவாறு ஊகித்தறியலாம். ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரின் பெருமையை முற்றிலும் அறிவது முடியாத காரியம். 'இதுதான் ஸ்ரீராமகிருஷ்ணர்' என்று அவரை எவரும் வருணித்து முடித்து விடுவது சாத்தியமில்லை அவ்வாறு அவரது முழுப் பெருமையையும் தெரிந்து கொள்ளுவதும் அவசியமில்லை. அவருடைய பெருமையில் நமக்கு உயர்வு தரக்கூடிய அம்சத்தை மட்டும் நாம் கிரகித்துக் கொண்டுவிட்டால் நாம் உய்வது திண்ணம். மற்ற அம்சங்களைப்பற்றி நாம் ஏன் கவலை கொள்ளவேண்டும்? நம்மைப் போதை பெறச் செய்வது ஒரு கோப்பைச் சாராயமே. சாராயக் கடையில் உள்ள பீப்பாய்களை நாம் கணக்கிடுவானேன்? ஆனால் நாம் கடையில்உள்ள சாராயம் முழுவதையும் பருகி விட்டோமென்று நாம் எண்ணிக் கொள்ளக் கூடாது.

ஸ்ரீ ராமகிருஷ்ண வசனாமிருதம் என்ற நூலில், ம— என்ற சீடர் ஒருவர், அவரது சம்பாஷணைகளை வெகு அழகாக எழுதி வைத்துள்ளார். இந்நூலைப் படித்து ஸ்ரீராமகிருஷ்ணரைத் தெரிந்து கொண்டவர்கள் அநேகர் ஆவர். ஆனால் வசனாமிருதம் என்ற அந்நூல் ஸ்ரீராமகிருஷ்ண

தேவரின் ஒரு சிறு அம்சத்தையே விவரித்துரைக்கிறது என்பதை நாம் மறக்கக் கூடாது. ஸ்ரீராமகிருஷ்ணரின் சொல் வேறும் வேறுவேறு முடியா தாகையால் அவரிடம் சொல் என்பது செய்கையையும் செய்கை யென்பது சாக்ஷாத் காரத்தையும் குறிக்கும். ஆகவே அவர் இல்லறவாசி, துறவி, பக்தன், ஞானி, ஆண், பெண்— இவர்களுக்கு ஒரே பொதுவான உபதேசத்தைச் செய்யாமல் அவரவர் நிலைக் கேற்ப, சக்திக் கேற்ப உபதேசம் செய்வார். சிறந்த தோட்டக்காரரான பரமஹம்ஸர் செடிக்கு ஏற்றபடி எருப்போடுவார், நீர் ஊற்றுவார்.

ஸ்ரீ ராமகிஷ்ணரை நேரிற் காணாத ஐரோப்பியப் பேராசிரியரான ரோமன் ரோலண்டு என்பவர் பரமஹம்ஸரது தீவிய சரிதத்தை வரைந்துள்ளார். அவர் தம்முடைய நோக்கத்திற் கேற்ப குருதேவரது பெருமையை விவரிக்கிறார். குருதேவரது வாழ்க்கை அஹிம்ஸைத் தத்துவம் நிறைந்தது என்று மகாத்மா காந்தி கருதுகிறார். குருதேவரைப் பக்தர் என்பாருண்டு, ஞானி யென்பாருண்டு, துறவி யென்பாருண்டு, இல்லறவாசி யென்பாருண்டு. ஆம் அவர் இவை எல்லாவுமாவார், இன்னும் பலவும் ஆவார். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய முக்கியமான திருப்பணி விவேகாநந்தரை உலகிற் களித்ததுதான் என்று கூறுவது முண்டு.

ஸ்ரீ ராமகிருஷ்ணரது வாழ்க்கைத் துணைவியான சாரதா தேவியை உலகிற் களித்ததே அவர் செய்த முக்கிய திருப்பணியாகும் என்று கூறுவாறு முண்டு. ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பற்றியும் அவரது முக்கிய சீடரைப் பற்றியும், ஸ்ரீராமகிருஷ்ணமடம், சங்கம் இவை செய்துவரும் பணியைப் பற்றியும் தமிழ்நாட்டினர் ஒருவாறு அறிந்துள்ளனர். ஆனால் சாரதா தேவியைப்பற்றித் தமிழ்நாட்டினர் இனி அறியக்கிடக்கும் விஷயங்கள் பலபல உள்ளன. அவ்வம்மையின் சரிதத்தை ஊன்றிப் படித்தால் பெண்மையின் பெருமையை நாம் தெரிந்துகொள்ளலாம். தமிழில் விரிவாக வெளிவந்துள்ள ஸ்ரீராமகிருஷ்ண சரிதத்தில் சாரதாதேவியைப் பற்றிய குறிப்புகள் வெகு சொற்பமேயாகும். ஸ்ரீராமகிருஷ்ணர் எனும் பெரும் விருக்ஷத்தில் இரு பெருங் கிளைகள் உண்டு. ஒன்று விவேகாநந்தர், மற்றொன்று சாரதாதேவி.

சாரதாதேவியின் சரிதம் சிறு நூலாகத் தமிழில் சமீபத்தில் வெளிவந்துள்ளது. அதே சரிதம் பெரிய நூலாக ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ளது. ஆங்கில நூலில் சாரதாதேவியின் சம்பாஷணைகளும் சேர்க்கப்பட்டுள்ளன.

சாரதாதேவியின் சரிதத்தைப் படிப்பதால் புதிய அறிவும் புதிய உற்சாகமும் தோன்றும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் எவ்வளவு சிறந்த கணவர் என்பதும் அவர் இல்லறவாசிகளுக்கு அளித்துள்ள படிப்பினையும் அந்நூலினின்றும் அறியக்கிடக்கின்றன.

ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் சாரதாதேவிக்கும் இருந்த தொடர்பின் சரிதை ஒரு மகாகாவியமாகும். இப்பொழுது வெளிவந்துள்ள நூல்களின்மூலம் பெண்மையின் உயர்நிலை என்னவென்பதை நாம் அறிகிறோம்.

நவீன பாரதத்தை ஆக்கவந்த பரமஹம்ஸர் தம் பணியை அரைகுறையாகச் செய்து விட்டுப் போனாரில்லை. ஆண்களுக்கான படிப்பினைகள் பலவற்றை அவர் எடுத்துக் காட்டியதைப்போலவே, நாட்டின் இரு உயிர்நாடிகளுள் ஒன்றான பெண்களுக்கு ஒளியாகச் சரதாதேவியை அளித்துச் சென்றுள்ளார்.

பெண்மையை அடிமைபடுத்தி வைப்பது பாரதத்தின் நோக்கமல்ல. நாம் பிறந்த நாடே பாரததேவி. நமது கல்

வித்தெய்வம் ஸரஸ்வதி தேவி. நமது செல்வத்தின் அதிபதி இலக்ஷ்மிதேவி. நமது நாட்டை இமயமலையுச்சியினின்றும் காத்து வருபவர் அர்த்த நாரீசுவரர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்சக்தி அர்த்த நாரீசுவரரின் தன்மை வாய்ந்தது. அச்சக்தியின் பெருமையை மேலே கூறிய நூல்களினின்றும் நாம் ஊகித்துக்கொள்ள இப்பொழுது இடமேற்பட்டுள்ளது.

---

# ஆத்மீய சாதனைக் கவசியமான தியாகம்

(ஸ்ரீ. எதீஸ்வரானந்த சுவாமிகள்)

க

உமது பிரார்த்தனை இலக்கற்றதாக இருத்தல் கூடாது. எந்தக் குறியினையும் கொள்ளாது ஆகாயத்தில் வீசப்படும் பந்தினைப்போல் பயனற்றதாக விருக்கப் படாது நீர் செய்யும் பிரார்த்தனை. குறிப்பிட்ட இலக்கு ஒன்று கொண்டு அதற்கென உமது பிரார்த்தனையைச் செலுத்துவீராக. ரவைகள் இல்லாமல் வெறும் மருந்து மாத்திரம் போட்டத் துப்பாக்கியின் மூலம் நீர் சுடப் பழகுவீரானால் அது பாழ்பட்ட செயலாவதோடு நீர் குறி பார்த்துச் சுடும் திறனையும் இழப்பீர். நாம் பிரார்த்தனை புரியலாம், அல்லது பிரார்த்திப்பதாகப் பாவனை செய்யலாம். ஆனால் பலபோது பிரார்த்தனைகளைப் பார்த்து, 'எவரைப் பிரார்த்தித்தாய்? நிச்சயமாக என்னைக் குறித்து அல்லவே!' என்று பகவான் நம்மைக் கேட்கக் கூடும். உறுதியோடு கூடிய சாந்தமான மனத்தினால் இறைவனுகிய இலக்கினை எய்துவீர்.

உ

சில நேரங்களில் நமது உள்ளத்தில் தியாகக் கனல் எரியக் காண்கின்றோம்; ஆனால் நாமோ அதனைக் கொழுந்துவிட்டு எரிய விடுகிறதில்லை. அதன்மேல் உலகப் பற்றுதலாகிய தண்ணீரை ஊற்றுகின்றோம்; எவ்வளவு தண்ணீர்? அது முற்றும் அணைந்துபோகும் வரை ஊற்றுகிறோம்! உலகத்தின்மீது நமக்குள்ள பற்றுதலும், உலகப் பொருள்மீது நமக்கிருக்கும் கவர்ச்சியும் நம்மிடமுள்ள சிறிதளவான பகவத் பக்தியை முற்றும் அழித்து நாசப்படுத்தி விடுகின்றன. தியாகம், விசாரம் என்னும் இந் நெருப்புக்களால் மேலும் மேலும் வளரவிட வேண்டும்; தொடர்ந்து கொழுந்து விட்டெரியப் பார்க்கவேண்டும்; இன்றேல், தீய உறவாலும், காடும் கரையும் கால்விட்டோடும் மனக் குரங்கின் சேஷ்டையாலும் அக்கனல் அதிசீக்கிரம் அணைந்துவிடுவதற்குப் பல ஏதுக்கள் இருக்கின்றன. ஆரம்பத்தில்தியாகம் சிறு செடியின் குறுத்துக் கொப்பாக இருக்கின்றது. (அதாவது அவ்வளவு அற்பமாகவும் சுபலமாக அழியக் கூடியதாகவும் இருக்கிறது.) கடுங்காற்று, பனி, ஆடுமாடுகள் என்னும் எதிரிகளினின்று அச்செடியைக் காப்பாற்ற அதனைச் சுற்றிப் பலமான முள்வேலி ஒன்றினை அமைக்க வேண்டுவது அவசியமாகின்றது. இல்லாவிட்டால் எவ்வகையான புயற்காற்றையும் தாங்கக் கூடிய பெரியமரமாக வளருவதற்கு வேறுவழியில்லை. அற்பமாக நம் முள்ளத்தில் எழும் தியாகக் கனல் அழிந்துவிடக் கூடிய ஈரவிறகை அதன்மீது போடாதிருப்போமாக. எண்ணெய்யும், நெய்யும் வார்த்து

மேலும் எரியவிடுவோம். எவ்வளவுக்கு நாம் ஏனையோரைப் பந்தப் படுத்தாதும், ஏனையோரால் பந்தப் படாமலும் பற்றற்று வாழ்க்கை நடத்துகிறோமோ அவ்வளவுக்கு நம்முள் தியாகபுத்தி வளரும்.

ஆத்மீய வாழ்க்கைக்கு மிக அவசியமாக வேண்டப்படுவன இவை இரண்டும்: விவேகமும், வைராக்கியமும். இவையின்றி ஆத்மீய வாழ்க்கையில் எதனையும் எய்துதல் என்பது இயலாது. பகவத் பக்தி எல்லாவற்றையும் பூர்த்தியாக நிறைத்துவிடுகின்றது. ஆகவே, ஆராய்ந்து பார்க்கப்போனால் உண்மையில் நாம் எதனையும் தியஜிக்தவர்களாகோம். அது அழிக்கும் தன்மையதல்ல, ஆக்கும் தன்மையதே. பகவானிடம் நாம் கொள்ளும் உள்ளன்பு பிற மனிதரை நேசிக்கும் வகையிலே அது வெளித்தோன்றுகின்றது. அதனால் அது நம்மைப் பந்தப்படுத்துகிறதில்லை. அதாவது உண்மைப் பகவத் பக்தனுக்கு, எல்லாம் பகவான்மயமாகவோ அல்லது எல்லாம் பகவத் சம்பந்தங்கொண்டதாகவோ தென்படுகின்றன. அதனால் அவன் அவைகளை நேசிக்கும்போது, அவைகளிடம் அன்புகாட்டும்போது, அவைகள் பொருட்டாக அல்லாமல் பகவான் பொருட்டாக அன்பு செலுத்துபவனாகிறான். எனவே பக்தனை இவ்வன்பு பந்தப் படுத்துகிறதில்லை. இவ்வித மனோபாவனை கொள்வோமானால் நமது வாழ்வு உருமாறி விடுகிறது; ஏன் எனில் இப் புது முறையான நோக்கு எல்லா பந்த பாசங்களையும் அறுத்தொழிக்கின்றது; எல்லாக் கட்டுக் காவல்களையும் கடந்து சென்று விடுகின்றது. கர்மத்தின் கதி மனிதனைப் பந்தப்படுத்துதலேயாம். கர்மம் ஆத்மனை விகசிக்கவொட்டாது மூடிவிடுகின்றது. ஆனால் கர்மபலன் அனைத்தையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்து விடுவோமாகில், அதே கர்மம், முன்பு பந்தத்திற்கு ஏதுவாயிருந்தது, இப்போது பந்தங்களனைத்தையும் தகர்த்தெறிகின்றது. ஏன் எனில் நாம் கர்ம பலனைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்யும்போது, நாம் அவனது கருவியாக விருந்து கர்மம் புரிகின்றோமே அல்லாது நாம் அக்கர்மங்களுக்குக் கர்த்தாவாகிறதில்லை. தெய்வத்தை நாம் எங்கும் காணுதல் வேண்டும். கோவிலிலும் திருக்குளத்திலும் காணவேண்டும்; வீட்டிலும் கடைத் தெருவிலும் காணவேண்டும்; எல்லாவற்றிற்கும் மேலாக அவனை நாம் நமது இருதயக் குகையில் சதா சாக்ஷி யளிக்கக் காண்போமாக.

௩

காமம் ஆசைகள் என்பவற்றின் கனத்தால் மனம் அழுத்தப்படுகிறதை பொதுப்பட நாம் காண்கின்றோம். எவ்வளவுக்கு இச்சுமையின் எடை குறைக்கப்படுகின்றதோ அவ்வளவுக்கு மனம் இலேசாகின்றது. இதன் உண்மை நமது சாதாரண வாழ்க்கையில் நன்கு புலப்படுகின்றதைக் காண்போம். நமது உள் முக நோக்கத்தை இறைவனையே ஆதாரமாகக் கொள்ளும்படிச் செய்வோம். அப்படிச் செய்வதால் யாவும் இறைவனிடம் இடம் பெற்றனவாகின்றன.

௪

நீர் ஒன்று மற்றவர், சூன்யத்துக் கொப்பானவர், அல்லது சந்தேகத்துக்கிடமானவர் என்னும் பாவனைகட்கு என்றும் இடம் கொடாதீர். எல்லாம் தெளிவாக விளங்க வேண்டும். ஆத்மீயத் துறையில் நீர் செல்லும் ஒவ்வொரு நிலையும் உன்மன மறிந்ததாக இருக்கவேண்டும். அதாவது நீர் இருக்கும் நிலை இது, நீர் செல்லும் மார்க்கம் இது என்பதனை நீர் எப்போதும் தெளிவாக அறிந்தவராக இருக்கவேண்டும். பொதுப்பட நாம்

வாழ்க்கையினைப் பற்றிக் கொள்ளும் மாமுன கருத்தினுல் பல நேரங்களில் நேரிய வழியை விட்டுத் துன்பத்துக் குள்ளாகிறேம்.

ரு

மாமிசம் சாப்பிடுவதால் நமக்குக் கேடுண்டவதினும் பார்க்க அது பிறர்க்கு அதிகமான கெடுதியை விளைவிக்கின்றது. நாம் புலால் உண்ண ஆசைப்படுவதாலே யே ஒரு குறிப்பிட்ட மக்கட் குலத்தைக் கருணையற்றவர்களாக ஆக்கிவிடுகின் றேம். ஆடுமாடுகளைக் கொலைபுரியும் கசாப் புக்காரன் அவ்வளவு பாவியல்ல; உண் ணும் நாமே பெரிய பாவிகளாவோம். ஏமாற்றுபவர்கள் குற்றவாளிகளல்ல, இங்கு ஏமாற்றப் படுவதற்கு இடந்தரும் நாமே குற்றவாளிகளாவோம். நமக்காகப் பிறரைக் கருணையற்றவர்களாக, இரக்க மற்றவர்களாகச் செய்து வரும் கர்மத் தின் பயனை ஒரு நாள் நாம் அநுபவித் தே ஆக வேண்டும்.

சு

'குருவைப்போல சிஷ்யன்' என்னும் பழமொழி ஒன்றுண்டு.

எ

ஸ்ரீ கிருஷ்ணனும் உத்தவனும் என் னும் நூலிலுள்ள புருக் கதையை நீங்கள் ஒவ்வொருவரும் வாசிக்கவேண்டும். வெகு உயர்ந்த படிப்பினையைக் காட்டும் கதை யாகும் அது. நாம் ஏனையோரது அநு பவங்களைப் பல சமயங்களில் பயன் படுத் திக் கொள்ள வேண்டும். அவர்கள் அனுபவித்த அனைத்தையும் நாமும் அனுபவித்தறிந்து கொள்ள வேண்டும் என்னும் அவசியம் ஒன்றுமில்லை. நெருப்புச் சுடுகின்றதா என்பதனை அறிய நாம் நெருப்பில் கைவைக்க வேண்டிய தில்லை. அப்படிச் செய்வோமானுல் நோய் நீங்கினலும் திரும்பவும் அதில் நாம் கைவைப்போம்.

அ

'தியான காலங்களில் ஆசாபாசங்களுக்கு உம்மிடம் இடமே இல்லை; அவைகள் இல்லாத, பொய்யான அநித்யங்கள் என்று தீவிரமாகச் சிந்தியுங்கள். இச் சிந்தனை நாளடைவில் உமது உள்ளத்தில் ஊன்றிப் பதிந்து விடும்' என்று ஸ்ரீ பிரம்மாநந்த சுவாமிகள் கூறுவது வழக் கம்.

நாம் புது உலகம் ஒன்றைச் சிருஷ்டித் துக்கொள்ள வேண்டுவது அவசியம். இப் புதுவுலகில் நாம் யாவற்றினையும் மேலா கக் கருதவும் காணவும் கற்றுக்கொள்ள வேண்டுவ தவசியம். இம் மாறுபாட்டுக்கு, நாம் மனமறியப் பாடுபடுவோமானுல், நாம், விடாது கெட்ட நினைவுகளை அகற்றி நல்ல நினைவுகளைக் கொள்வோமானுல் அது நிச்சயம் வந்து அமையும்.

நீர் ஒரு குறித்த உருவத்தினைத் தியா னிக்கும்போது அது பிரகாசம் பொருந் தியதாகவும், உயிர்பெற்றிலங்குவதாகவும் உன்னுவீராக. திவ்விய தெய்விக உருவத் தினைப்பற்றித் தீவிரமாக தியானம் செய்வீ ரானுல் நீரும் தெய்விகம் எய்தப் பெறு வீர். பரிசுத்த ரூபத்தினைத் தியானிப்பீ ராகில் நீரும் புனிதப்படுவீர். ஸ்ரீ புத்த பகவான் இங்ஙனம் புகல்கின்றூர்: "உல கினை நீர்க்குமிழியெனக் காண்பீர். எது உற்பத்தியாயிற்றே அது நாச முற்றே தீரும். இது மறுக்க முடியாத உண்மை; இயற்கையின் விதி."

மாறுபடாததும், நன்மை தீமை களால் அலைபுருததுமான நித்தியப் பொரு ளான தெய்வத்தை வேண்டி ஞானி முயற்சி செய்கின்றூன். இறைவனிடம் இவ் உலக ஆட்டங்களெல்லாம் நடைபெறுகின் றன. ஆனுல் அவன் அவைகளால் சிறி

தும் பாதிக்கப்படாது நித்தியமாய் நிச்சல மாய் விளங்கா நிற்கின்றான்.

ஆகாசத்தில் மேகங்கள் இருப்பது காண்கின்றோம். எவ்வளவு மேகங்கள் தான் அவ் வாகாசத்தில் ஓடினாலும் அத னால் ஆகாசம் சிறிதும் பாதமுறு கின்றதில்லை. மேகமோடு ஒன்றித்து விடு கிறதுமில்லை, மேகங்களின் தன்மையினை அது பெறுவதுமில்லை. என்றும்போல் களங்கமற்று, நித்தியமாய் நிச்சலமாய் அது விளங்கக் காண்கின்றோம்.

௯

ஆத்மீய சம்பந்தப்பட்ட அனைத்தும் அநுபவ பூர்வமானதாக இருக்கவேண் டும். கடவுள் ஒருவர் இருப்பது வாஸ் தவந்தான் எனின் அவன் காணக் கூடிய வனாக இருக்கவேண்டும்; அவன் உணரப் படுபவனாக இருக்கவேண்டும். வெறும் கொள்கை மூலமாக மாத்திரம் அவன் இருப்பை ஸ்தாபிப்பதென்பது கூடாது. அவனைக் கண்டவர்களது வார்த்தைகளில் நாம் நம்பிக்கை வைத்தல்வேண்டும்; அவர்களது அடிச்சுவடுகளைப் பின் பற்றி, அவர்கள் கூறும் அநுபவங்கள் உண்மை யா என்பனவற்றை நாம் அநுபவித்தறிய வேண்டும். நம்பிக்கை ஆரம்பத்தில் அவ சியமே எனினும், வெறும் நம்பிக்கை மாத் திரம் போதாது. எவரேனும் ஒருவர் 'நான் கடவுளைக் கண்டேன்; ஆனால் உன் னால் காணமுடியாது' என்று கூறுவராகில் அத்தகையவர் வார்த்தைகளை எள்ளள வும் நம்பாதீர். எல்லோருமே இறைவனைப் பார்க்க இயலும்; சிலர் சீக்கிரமாக அவன் காக்ஷியைப் பெறுவர்; இன்னும் சிலர் பல பிறவிகளுக் கப்புறம் பெறலாம்.

௧௦

'ஏ!-கருணாநிதி! உன் திவ்விய நாமத் தைக் கேட்டவுடன், என்று என் கண் களினின்று கண்ணீர் ஆறாகப் பெருகும்! குரல் தழுதழுத்திடும்! உடற்புளகாங்கி தங் கொள்ளும்.'

௧௧

'இறைவனின் பிரிவினையால் ஒவ்வொரு கணமும் எனக்கு யுகமாகத் தோன்று கிறது. கண்களில் ஆற்றுப் பெருக்கென்ன நீர் கொட்டுகின்றது. உலகமே ஒன்றுமில் லாத சூன்யம்போல் தோன்றுகின்றது.'

௧௨

'ஆத்மன் ஏகமான நித்யப்பொருள்; அது அசைவற்றது, என்றாலும் மனத் தினும் பன்மடங்கு வேகத்தோடு செல் லும் ஆற்றல் பொருந்தியது. அது எல்லா வற்றையும் கடந்து செல்கின்றது, எனி னும் இந்திரியங்களுக்கு எட்டாததாக இலங்குகின்றது. இருந்த இடத்தில் ஸ்திர மாக இருப்ப தோன்றுனாலும் அது ஓடு வன எல்லாவற்றிற்கும் முன்னேஓடி நிற் பது. எல்லா உயிர்கட்கும் ஆதாரமாவது. போகாமற் போவது; தூரம் சமீபமானது. எல்லாவற்றிற்கும் உள்ளும் புறம்புமாக விளங்குவது. எல்லாவற்றையும் தன்னி டத்திலே, தன் ஆத்மனிடத்திலே நிலை பெற்றிருக்கவும், எல்லாவற்றிலும் தான் இருப்பவும் எவன் காண்கின்றானோ அவனே ஞானி. இதனால் தான் ஞானி எவரையும் வெறுப்பதுகிடையாது. ஆத்ம ஞானிக்குத் தோன்றுவன அனைத்தும் ஆத்மனாகத் தோன்றுகின்றன. எனவே அவனுக்குத் துக்கமேது? அஞ்ஞான இருளேது?'

௧௩

'ஆத்மன் சகலலோக வியாபி, சுயஞ் சோதி, அரூபி, பழுதற்ற பரிசுத்த மானது. அறியாமையால் பாதிக்கப்படா தது, அது அறிவுக்கறிவானது, எல்லாம் அறிந்தது, எல்லாவற்றிற்கும் அதீத மானது, சிருஷ்டிக்கப்படாதது.'

கச

'ஜகத்தை நடத்தும் சக்திகளுக்குச் சக்தியளித்தவன் அப்பரம் பொருளே.'

கரு

'தங்க மயமான ஒளி வட்டத்தால் மெய்ப் பொருளின் முகம் மறைக்கப்பட்டுள்ளது. ஜகத் ரக்ஷகா! மெய்ப்பொருள் ஒன்றிலேயே ஈடுபட்டுள்ள யான் அதனைக் காணும்பொருட்டு அம்மறைப்பினை நீக்கிவிடுக.'

கசு

இறைவன் கிடைக்கவில்லையென்ற பெரும் அதிருப்தி கொள்வோமாக. பல பக்தர்களும் கொண்டதொரு அதிருப்தி நம்மிடம் எழுவதாக இதனையே ஸ்ரீ பிரம்மாநந்த சுவாமிகள் பன்முறை வற்புறுத்திக் கூறியிருக்கிறார்கள். இவ்வித அதிருப்தி நம்மை தெய்வத்தினிடம் நெருங்கத் தள்ளுகின்றது. இன்றேல் ஆத்மீய வாழ்க்கையென்பது இலகுவில் வந்துறுது. இவ்வதிருப்தி எல்லா ஆசாபாசங்களையும் தகர்த் தெரிகின்றது; உலகப் பற்றுதல்களை எரித்து மாய்க்கிறது.

கஎ

உலகினேடு நாம் சமாதானம் கொள்வோமானல் அது உண்மையான சமாதானமாகாது. உலக சம்பந்தம் எப்போதுமே நிலையற்றது. நம்முடைய முயற்சியில் தளர்ச்சியேற்பட இடந்தருதலும் கூடாது; முயற்சியோடு உள்ளங்களித்தலும்கூடாது. இருப்பதோடு சந்தோஷப்படும் குணம் சாதகனுக்குப் பாதகமாய் முடியும். முடிவை எய்தவில்லையே என்ற அளவுகடந்த அதிருப்தியும், சஞ்சலமும் கொள்ளவேண்டுவது அவசியம். ஆத்மஞானமார்க்கத்தில் அதிகமாக முன்னேறவில்லையே என்று துடிதுடிக்க வேண்டும். மேலான வாழ்க்கைக்கவசியமான அதிருப்தி எனும் அனல் கொழுந்துவிட்டெரியத் தூண்டுவோம். அற்பத்திற்காக அணுவளவு சக்தியையும் விரயப்படுத்தாதீர். சோம்பேறித்தனத்தால் வந்தெய்தும் அற்பசாந்தத்துக்குச் சிறிதும் இடங்கொடாது மேலான வாழ்க்கைக்கான முயற்சியில் மும்மரமாக ஈடுபடுவோம்.

இலக்ஷியத்துக்கு வெகு அருகில் வந்தாலல்லாமல் நாம் ஆபத்திலிருந்து தப்பித்துக் கொண்டோம் என்று எண்ணுவதற்கில்லை. எல்லையை அடைவதன்முன்னம் எந்த நேரத்திலும் எந்த நிலையிலும் பக்தன் ஒருவன் இடறிவிழுந்து வதமுற இடமிருக்கிறது. எனவே நம் சொந்த பலத்தை நம்பி திருப்திகொள்ளாமல் மேலும் மேலும் முன்னேற முயல்வோம்.

கஅ

ஆத்ம சாதனமும் பகவத் பிரார்த்தனையுமே மனிதராய நமக்கு வேண்டுவன. இடைவிடாத பிரார்த்தனை—அல்லும் பகலும் பிரார்த்தனை—ஊணுறக்கத்திலும் தியானம்—இடைவிடாத சிந்தனை—இவை நம்மால் கூடுமானல் மிகமிக நல்லதே. ஆரம்ப சாதகனுடைய மனது தெய்வீக எண்ணங்களால் எப்போதும் நிரப்பப்பட வேண்டும்; அப்போதுதான் அது வாழ்க்கையோடு ஒன்றித்த இயல்பாக அமையும். இவ்விதம் நேரிய இயல்பு ஏற்பட்டவுடன் சாதனமார்க்கம் எளிதாக அமைந்துவிடுகின்றது. எனவே சாதகனுக்குக் களைப் பேற்படுகிறதில்லை.

தினசரி சாதனம் தடைபெறுமல் ஒழுங்குபட நடந்து வரட்டும். அதற்குத் தங்கு தடை ஏற்பட வேண்டாம். குறிப்பிட்ட காலத்தில் அனுஷ்டிக்கப்பட்டே தீர வேண்டும். எத்தகைய இடையூறு வந்தாலும் அதனை நிறுத்துதல்கூடாது

அதற்கான அசைக்க முடியாத உறுதி வேண்டுவது அவசியம். இறுதியில் யாவும் சுலபமாகவும் சந்தோஷமாகவும் அமையும்.

௧௯

'ஓ இறைவர்க் கிறைவா! கடைக்கண் பாராய்! எளியேன் மீது கருணை மழை பொழிவாய்! தண்ணருள் தரும் உனதின் புருவைக் காட்டி என்னை ஈடேற்றும்படி பணிந்து பிரார்த்திக்கிறேன். உலக பாசம் என்கின்ற நெருப்பினால் தகிக்கப் பட்ட எனது ஹிருதயத்தை உனக்கு அர்ப்பணம் செய்கிறேன். எனது உள்ளத் தில் அழுக்கும் ஆபாசமும் நிறைந்துள் ளன. அறியாமை என்னும் ஜாலத்தால் அடியேன் அநேகமாக இறந்தே யொழிந் தேன். அன்புருவாய அண்ணலே! உனது அன்பைச் சொரிந்து, எனது அழுக்கை அகற்றி, என்னை உயிர்ப்பித்தருள்வாய்!'

௨௰

'என் அத்தனே! எளியவர் நாயகா! எனது உள்ளத்தில் உனது அன்பமிர்தம் பொழிவாய். அப்போதே தகிப்புண்டு வாடும் என் இதயம் சாந்தமுறும்; உனை யன்றி வேறு எவராலும் இது இயலாது. உனது அன்புக்கிரணங்கள் பட்ட அந்நே ரமே, பட்டழிந்த மரம் உயிர் பெற்றுப் பசுமை யாகின்றது; நீரொழிந்த பாலை வனத்தில் நீரூற்றுப் பொங்கி யெழுந்து வழிந்தோடுகின்றது. அமிர்தத்வம் தரு கின்ற உமது அழியா அன்பின் துளி யொன்றினை என்மீது சொறிவாய். அத னால் வாடி வதங்கிய என் இதயம் சாந்த முறும். உனது அன்பு கிடைக்கப் பெற்று கிருதார்த்தனானேன். எனது ஆத்ம நாய கனே! இருண்ட உலகினின்றும் வெளிவந் தேன், வாழ்க்கைத் துன்பங்களை விட் டொழித்தேன், நொந்துபட்ட உள்ளம் சாந்தமடையப் பெற்றேன்!'

௨௧

படிப்படியாகவும், தொடர்ந்தும், விடா முயற்சியுடனும், முழு ஆற்றலுடனும் சரீ ரத்தைப் பழக்குவீர். அவ்விதமே மனத் தையும் பழக்குவீர். இரண்டினையும் ஏற்ற கருவி யாக்குவீர். 'படிப்படியாகவும், தொடர்ந்தும்' என்றதனால் கால தாமதம் செய்யவேண்டும் என்பது பொருளல்ல. சரீரத்தையோ மனத்தையோ வலியக் கட்டுப்படுத்துவது என்பதும் அல்ல. ஆனால் ஊக்கக் குறைவு ஏற்படாது பார்த்துக் கொள்வோம்.

இது புதுவாழ்வும் புதுவழியுமா யிருப் பதால் பொதுப்பட எல்லார்க்கும் ஏற்ற விதி இதுவாகும்:—உமது நரம்புகள், உணர்ச்சிகள் இடம் பெறட்டும். ஆத்மீய வாழ்க்கை, ஆரம்பகாலத்தில் உக்கிரம மான எதிர்ப்பைப் பெறுகின்றது. அவ் வெதிர்ப்பினைத் தாக்கிப் பிடிப்பதற்கு நரம்பு உறுதியோ டிருக்கவேண்டு மென் கின்றேன். சில சமயம் மனம் சாந்தப் படுத்தப்படவேண்டும்; அது இளைப்பாறு தலும் அவசியம்.

௨௨

உணவினைக் கவனித்தல் மாத்திரமே ஆத்மீய வாழ்க்கைக்கு அதி அவசியம் என்பதில்லை. அதாவது, நான் குறிப்பிடு வது சரீரத்துக் களிக்கப்படும் சட வுணவை. அதனால் ஸ்ரீ ராமகிருஷ்ணர், 'மாமிசம் தின்கிறாயோ அல்லவோ, அன்றி மீன் உண்ணுகிறாயோ இல்லையோ, எனக்கு வேண்டுவது பரிபூர்ண பரிசுத்த மனது' என்கிறார். எவை யெவை உமது ஆத்மீய வாழ்க்கைக்கு உகந்ததாக இல்லையோ அவை யனைத்தையும் அகற்று வீர். அவற்றினை ஏலாது ஒழிப்பீர். இதுவே உணவினைப்பற்றி நான் கூறும் உபதேசம். உணவு பரிசுத்த மானதாக இருத்தல்வேண்டும். கண்களின் உணவு,

காதுகளின் உணவு, சகல இந்திரியங்களின் உணவு ஆகிய அனைத்தும் பரிசுத்தம் பொருந்தியனவாக இருத்தல் வேண்டும். கடவுணவை மாத்திரம் கவனித்தல் போதாது. மற்ற உணவும் பரிசுத்தமாயிருக்கவேண்டுவது மிகமிக அவசியம்.

---

# சந்தேகம் தெளிதல்

வினு :—யோகிகள் மான் தோல்மீதும் புலித் தோல்மீதும் உட்கார்ந்து நிஷ்டை செய்கிறுர்கள். இவ்வாசனங்கள் அவசியமா? இல்லற வாசிகள் இந்த ஆசனங்களில் உட்காராமல் தரையில் உட்கார்ந்து நிஷ்டை செய்யலாமா?

—சாந்தி சாதன் ஆச்ரம வாசிகள்.

விடை :—ஆசனங்கள் அவசியம் என்று யோக நூலார் கூறுகின்றனர். மான்தோல், புலித்தோல், தர்ப்பாசனம், துணி (பஞ்சு அல்லது பட்டு)—இவைகளை ஆசனங்களாக உபயோகிக்கலாம். ஞான சாதனம் பழகுகின்ற இல்லறத்தாரும் தியானம் பழகும்போது முற்கூறியவைகளில் ஓர் ஆசனத்தை உபயோகிக்கலாம். வெறுந் தரையில் உட்கார்ந்து நிஷ்டை செய்தல் கூடாது; துணியையாவது மரப் பலகையையாவது ஆசனமாகக் கொண்டு, அதன்மேல் அமர்ந்து நிஷ்டை பழகுதலே முறையாகும்.

வினு :—விபூதி பூசவேண்டியதன் அவசிய மென்ன?

விடை :—விபூதி யென்பது, பசுவின் மலத்தை நீருக்குவதனல் உண்டாவது. பசுவாவது ஜீவனைக் குறிக்கு மாதலின், விபூதி ஜீவனது ஆணவம் முதலாய மலங்களை நீருக்குதல் வேண்டும் என்பதை நினைவூட்டும் அறிகுறியாகின்றது. சிவபெருமானது திருமேனியின் மீது நீறு பூசப்பட்டிருப்பதால், சிவபெருமானை நினைவூட்ட ஏதுவாகின்றது; சில சின்னங்களில் ஒன்று விபூதியாகும். 'முடிசார்ந்த மன்னரும் மற்று முள்ளோரும் முடிவில் ஒரு பிடி சாம்பராவர்' என்ற உண்மையை நினைவூட்டி, உலக வாழ்க்கையில் வெறுப்பை உண்டு பண்ணக் காரணமாகும். அன்றியும் விபூதியைப் பூசுவதே நீராடியதற்கு ஒப்பாகும். இக் காரணங்களால் சிவனடியார்கட்கு விபூதி பூசுதல் அவசியமாகின்றது. (விபூதியின் வெண்மை நிறம் தூய்மைக்கும் அறிகுறியாகிறது.)

வினு :—ஜெபம் செய்யத்தக்க இடங்கள் எவை?

விடை :—சமதளமாயும் சுத்தமாயும் தனிமையாயும் உள்ள இடமே, ஜெபம் செய்யத் தகுந்ததாகும். அப்பேர்ப்பட்ட இடத்தில்தான் மனம் எளிதில் குவியும். பூமி சமதள மில்லாதபோதும், சுத்தமாயில்லாதபோதும், மனம் வெகுநேரம் சிரமமின்றி ஜெபம் செய்ய முடியாது. மனத்தை உண்முகமாக்கி ஒழுங்காகத் தியானம் செய்ய ஏகாந்தமான இடம் இருத்தல் மிகவும் நலம்; இம்மாதிரியான இடத்தில்தான் மனத்தைப் புறத்தே இழுக்கக் கூடிய ஏதுக்கள் குறைவாயிருக்கும். இயற்கை அழகோடு கூடிய இடங்கள் தியானஞ் செய்தற்கு மிக்க அநுகூலமுள்ளனவாகும்; நதிக் கரைகளும், மலையடி வாரங்களும், தோப்புக்களும் தியானஞ்செய்யப் புகுவோனது மனத்தை அவனறியாமலே உயர்த்தும்; இவைகளைப் போன்றே, திறந்த மைதானமும் நீல வானமும் மனதை விரிவாக்கும் தன்மை வாய்ந்தன. ஆனல், தியானத்திற்கு இடையூறுகும் எறும்புகளும், மேடு பள்ளங்

களும், பூச்சிகளும், விஷ ஜெந்துக்களும் பிறவும் இல்லாத இடங்களா யிருத்தல் வேண்டும்.

முற்கூறிய காரணங்களினால், காடுகளே ஜெபம் செய்தற்கு மிகவும் ஏற்றனவாம். பிரம்மசாரிகட்கும், முனிவர்கட்கும் இவை மிகவும் வாய்ப்புடையனவாகும். இல்லறத்தே வாழ்கின்றவர்களும், அதைத் துறந்து வெளியே கானஞ் செல்ல மாட்டாதவர்களும் தமது குடியிருக்கும் வீட்டிலேயே ஒரு தனிமையான அறையை ஜெபமும் தியானமும் செய்தற்கென அமைத்துக் கொள்ளல் நன்றாகும். இந்த அறையில் பூஜையையும் ஜெபத்தையும் தியானத்தையும் தவிர, வேறு லௌகிகக் காரியங்களைச் செய்யாதிருத்தல் நன்று. அந்த அறையைச் சுத்தமாகப் பெருக்கியும் மெழுகியும், தூபதீபங்களாலும் மலர்களாலும் அலங்கரித்தும், அதிலுள்ள காற்றில் நல்லெண்ணங்களையே நிரப்பியும், அதைத் தூய்மையாக வைத்திருத்தல் வேண்டும். இம்மாதிரியான தனிமையான அறை இல்லறத்தார்க்கு மிகவும் அவசியமாம். வீட்டில் ஒரு தனிமையான அறையையும் பெற வழி இல்லாதவர்கள் தமது நெஞ்சத்தையே ஏகாந்தமான இடமாகக் கருதி, அதில் ஜெபத்தையும் தியானத்தையும் செய்துவரல் வேண்டும். தூய நெஞ்சம் இறைவன் வாழும் இடமாதலின், அதுவும் ஜெபத்திற்கு ஏற்ற இடமாகும்.

வினா.—பொதுவாக ஆகாரங்கள் எப்படிச் சாப்பிடவேண்டும்?

சா, ஆ.

விடை:—உடலுக்குப் பலத்தைத் தரக் கூடியவையும், எளிதில் ஜீரணிக்கக் கூடியவையும் ஆன உணவுப் பொருள்களே உண்ணத் தகுந்தன. அதிகமாக அளவிற்கு மிஞ்சி உண்பவனும் பட்டினி கிடப்பவனும் யோகியாக முடியாது என்கிறார் ஸ்ரீ கிருஷ்ண பகவான்; ஆதலின் அரை வயிற்றுக்குக் கட்டியான உணவும், கால் வயிற்றுக்குத் திரவரூபமான உணவும், மீதிப்பாகம் காலியாகவும் இருக்கும்படிப் பார்த்துக் கொள்ள வேண்டும்; இவ்விதக் கிரமங்க உண்பவன் உபவாசமிருப்பதன் பலனையும் பெறுகிறான் என்பர் ஆன்றோர். பசித்தா லொழிய உண்ணாமையும், உண்ணும்போதும் பசியின் அளவறிந்து உண்ணலும் அவசியம். மனம் சுறு சுறுப்பாக வேலை செய்வது, வயிற்றின்நிலைமையைப்பொறுத்ததாகும். ஞான வாழ்க்கையில் இச்சையுடையோன் சத்வ குணத்தைத் தரக்கூடிய பொருள்களையே உண்ண வேண்டும்; மேலும், உணவு எதுவாயினும்,இறைவனுக்கு நிவேதனம் செய்யப்பட்டு, அக் காரணத்தால் தூயதாக்கப்பட்டபின், உண்ணப் படல் வேண்டும்: நிவேதனமாகாத உணவை உண்பவன் பாவத்தையே புசிக்கிறான் என்று எச்சரிக்கை செய்கிறது கீதை. சிரத்தையோடும் பக்தியோடும் பக்குவம் பண்ணப்பட்டு, இறைவனுக்கு சமர்ப்பிக்கப்படும் உணவே சத்வ குணத்தை விருத்தி செய்யும். உணவைப் பக்குவம் பண்ணுவோரும் உணவை அளிப்போரும் தூய மனமுடைய ராயின், அவர்களிடமிருந்து பெறப்படும் உணவு உண்போர்க்கும் சத்வகுணத்தையூட்டும்; ருசியாயிருப்பதோடு ஆகாரம் சுசியாயிருத்தல் வேண்டும். அன்னம் பிரம்மம் என்று சுருதி கூறுதலின், பக்தி சிரத்தையோடு, ஞானத்திற்குத் துணைக் கருவியாக உடம்பைப் போற்றுவதற்காகவே உண்ணல் வேண்டும். ஞான சாதனம் பழக விரும்புவோர்க்கு முற்கூறிய விதிகள் மெத்தவும் பயனைத் தரும்.

வினா:—விக்ரகங்கட்குத் தேங்காய், பழம், சூடதீபாராதனை செய்வதன் நோக்கம் என்ன?

விடை:— தேங்காயில் உண்ணற்குரிய மதுரமான உட்பாகத்தை வெளியிலுள்ள கனத்த ஓடு மூடியிருப்பதுபோல இறைவனுக்கு அன்னமாகின்ற (இறைவனால் அநுபவித்தற்குரிய) ஆன்மாவை ஆணவம் என்ற கனத்த ஓடு மூடிக்கொண்டிருக்கிறது. தேங்காயின் ஓட்டை உடைத்து உள்ளிருப்பதை உண்கிறோம். அதுபோல், தடித்த அஹங்காரத்தை நாம் உடைத்தெறிந்து, ஆன்மாவை இறைவனிடம் சமர்ப்பித்தல் வேண்டும் என்பதற்கு இச்செயல் அறிகுறியாகின்றது. பழத்தை இறைவர்க்குச் சமர்ப்பித்தல் அன்பாற் கனிந்துள்ள நெஞ்சை அவர்பால் அளித்தல் வேண்டும் என்பதைக் குறிப்பதற்காக. சூடனைக் கொளுத்தி ஆராதனை செய்தல், ஞானக்கினி நமது மனத்தைப் பற்றி எரிவதற்கு அறிகுறி. எரியும்போது சூடன் அக்கினியோடு ஒன்றுதல் போல, நமது மனமும் ஞானத்தீயோடு சேர்ந்து ஞானமயமாகி லயமடைந்து விடல் வேண்டும்; ஒன்றும் மிஞ்சாமல், முழுவதும் ஞானமயமாய் விடவேண்டும்; இரண்டறக் கலத்தல் வேண்டும்,—இவைகளைக் கருத்தில் பதிப்பதற்காகவே கற்பூர ஆராதனை ஏற்பட்டுள்ளது.

வினா:—இந்த மானிட ஜென்மம் எப்படி வந்தது? இம்மானிட ஜென்மம் எடுத்ததின் பயன் என்ன? மானிட ஜென்மம் கிடைத்தவர்கள் என்ன செய்யவேண்டும்? மானிட ஜென்மம் அழிந்துபோன பிறகு நாம் என்ன ஆகிறோம்?

விடை:—முற்பிறவிகளில் நாம் செய்த புண்ணிய கருமங்களின் பயனாக, பெறற்கரிய இம்மனிதப் பிறவியை நாம் பெற்றுள்ளோம். "அரிது அரிது மானிடராதல் அரிது" என்றார் ஔவையார். "துர்லபம் த்ரயமே வைதத் தேவானுக்ரஹ ஹேதுகம், மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷ ஸம்ச்ரய:" என்றார், சிவபெருமானின் அவதாரமாய ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள்; ஆதலின் மனிதப் பிறவி இறைவனது அருளாற் பெறப்படுவதொன்றாகும். ஐயறிவுயிர்களாகிய விலங்குகளினும் மேலாக ஆறாவது அறிவாகிய பகுத்தறிவையும் பெற்று ஆறறிவுயிராய் விளங்குபவன் மனிதன். நல்லது தீயது என்னும் பாகுபாட்டையும், செய்யத் தக்கது யாது தகாதது யாது என்பதையும் சிந்தித் தறியும் இயல்பை யுடையவனாகி இருந்தும், ஒருவன் அந்த அறிவைப் பயன் படுத்தித் தான் முன்னேற்றமடைய முயற்சி செய்யாவிடின், அவன் மனிதனல்லன், விலங்கேயாவான், மனித உருக் கொண்ட விலங்கேயாவான். "தக்க இன்ன தகாதன இன்ன என்று, ஒக்க உன்னலராயின் உயர்ந்த மக்களும் விலங்கே" என்றும், "மனுவின் நெறிபுக்க லேல், அவ் விலங்கும் புத்தேளிரே" என்றும் ஸ்ரீ ராமபிரான் வாலிக்குக் கூறினானன்றோ? ஆதலின், மனிதப் பிறவி யெடுத்த பின்தான் ஒருவன் தனது முயற்சியால் முத்தியை அடையக்கூடும். மனிதப் பிறவி மற்ற தேவலோகப் பிறவியினும் (தேவர்களாகப் பிறப்பதிலும்) மிக்க மேன்மையானது. மற்ற உலகங்களெல்லாம், மனிதன் இவ்வுலகத்திற் செய்த கருமங்கட்குத் தக்கவாறு அவைகளின் பயன்களை அநுபவித்தற் கெனப் படைக்கப்பட்ட உலகங்களேயாம்; அவைகளிற் பிறப்பதனால் மனிதன் நேரே முத்தியை அடையும் வசதியைப் பெறமாட்டான்; அநுபவம் முடிந்ததும், பூமியிலேயே வந்து பிறந்து, இங்கே முயற்சி செய்து முத்தியடைதல் வேண்டும். ஆகையால் இவ்வுலகில் மனிதப் பிறவியைப் பெறுவது, நமது பண்டைய நல்வினையாலும், இறைவனது இன்னருளாலும் என்பது பெறப்படுகின்றது.

இம்மானிடப் பிறவியின் பயனாவது, பிறப்பிறப் பென்னும் சுழலில் அகப் படாது பிறவாமை யென்னும் முக்தி நிலையை அடைதலே. இப்பேறு, மெய்ப் பொருளை உணர்வதனால் அடையலாகும். அம் மெய்ப்பொருள் மனிதனது உள்ள கத்தும் புறத்தும் அமர்ந்துள்ளது. இதைக் காண்பதே எல்லா மனித முயற்சிகளுக் கும் முடிவான பயனாகும். "உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம், உடம்பினில் உத்தமனைக் காண்"டலே என்றார் ஆன் றோர். ஒவ்வொரு மனிதனிடத்தும் உண்மையாகவே தெய்வத்தன்மை குடி கொண்டு உறைகின்றது; ஆனால் இது கண்ணிற்குப் புலப்படாது, மறைவாக அவனுள்ளத்துக் கிடக்கின்றது. இதைக் காணலும், இதை வாழ்க்கையில் வெளிப் படுத்துதலுமே, மனிதப் பிறவியின் நோக்கமாகும். "மனிதனிடத்து அடங் கிக் கிடக்கும் தெய்வத் தன்மையை வெளிப்படுத்துதலே" ஞான வாழ்க்கை யாம். ஓர் ஆலம்வித்தில் ஆலமரம் முழு வதும் ஒடுங்கியிருந்து, பின்னர் அது முளைத்து வளர்ந்து முழுமரமாக ஆவது போல, மனிதனிடத்துள்ள தெய்வத் தன்மையாகிய வித்து தக்க முயற்சிகளி னாலே முழுமரமாக வெளித் தோன்று கிறது. அப்போது மனிதத் தன்மை அடி யோடே மறைந்துபோய், தெய்வத் தன் மையே குடிகொண்டு உறைவதாகும். அந் நிலையில் வாழ்க்கைத் துன்பங்களில் எது வும் ஒரு மனிதன் பெறும் தெய்விக இன் பத்தைக் குலைக்க மாட்டாது. ஆனந்தமும் தூய்மையும் அன்பும் சாந்தியும் அவனுள் ளத்தின் வழியாக ஆறெனப் பெருகும். அப்போது அவன் மட்டுமல்ல, அவனைச் சாரும் பலரும் சாந்தியும் மகிழ்ச்சியும் பெறுகிறார்கள். இவ்வாறு நாம் உலகத் துயரங்களினின்றும் உய்ந்து, பிறரையும் நமது வாழ்க்கையாலும் இன் சொல்லா லும் உய்வடையச் செய்தலே நமது வாழ்க்கையின் இலக்ஷியம் ஆகும். இந்த இலக்ஷியத்தை அடைய, எந்த மனித னுக்கும் இயலும். முற்கூறிய இந்தத் தெய்வத் தன்மை எந்த மனிதனிடத்தும் எந்தக் கெட்ட நிலையிலும் எக்காலத்தும் புதைந்து கிடக்கும் ஒரு மாநிதி. பணத் தைப் பூமியில் புதைந்து வைத்துக் கொண்டு, அதன் மேலும் உட்கார்ந்து கொண்டு பிச்சையெடுக்கப் போவாரைப் போன்று வாழ்கின்றனர் மனிதர்; நிதிக் குவியலை மறந்தும் அதைப் பயன்படுத்தா தும் போவது பரிதாப மன்றோ? நாம் வெள்ளம் பெருகும் தண்ணீர் ஆற்றின் கரையி லிருந்துகொண்டே தாகத்தால் தவிக்கிறோம்! அன்னக் குவியலின் மீதி ருந்தே பட்டினியால் மெலிந்து வாடு கிறோம்! இந்த நிலையில் மக்கள் இருப் பதை உணரும் மஹான்கள் அம்மக்களின் மீது பேரிரக்கம் கொண்டு, அவர்களிடம், "நீங்கள் பேரின்பப் பேற்றிற்கு உரிமை பெற்றிருந்தும், அதை இழந்து தவிக்கின் றீர்களே! வாருங்கள், மக்காள்! பேரின்ப வெள்ளம் பாய்ந்து கொண்டிருக்கின்றதே! தேகம் விழுமுன் அதில் மூழ்கி மகிழுங் கள்" என்று ஆர்வத்தோடு அறிவுறுத்தி அழைக்கின்றனர். தனியே அந்த ஆனந் தத்தைப் புசிக்க அவர்கட்கு மனம் வர வில்லை; அதன் சுவையை உணர்ந்ததும் நம்மை யெல்லாம் அதே இன்பத்தை அனுபவிக்க வருமாறு அழைக்கின்றனர். இவர்களது அன்பார்ந்த அழைப்புக் காவது இணங்கி நாம் பேரின்பத்தை நாடுவோமாயின், நாம் உய்வடைவோம். மெய்யுணர்ந்தோராகிய பெரியார் எய்தும் இன்பத்தை நாம் கனவென்று கருதுவோ மாயின், நமது வாழ்க்கையும் சிற்றின்ப மும் மட்டும் நனவோ? தோன்றி மறை யும் இவ்வின்பத்தைக் கனவென்னக் கருதாவிடில், நிலைத்த இன்பத்தையும்

சாந்தியையும் விழுமிய ஒழுக்கத்தையும் ஊட்டும் அப்பேரின்ப அனுபூதியைக் கனவென்று கூற ஒண்ணுமா? இரண்டும் கனவாயின், நீடித்த கனவே விரும்பப்படத் தக்கதன்றோ? பேரின்பம் பொய் யெனில், சிற்றின்பம் மெய்யாமோ? இப் பேரின்ப நிலையும் இறைவனும் இல்லையாயின், வாழ்க்கை இருந்தாலென், ஒழிந்தாலென்? உண்மை அதுவாயின், அதைப்பெறாது வாழ்ந்தென்? அதைப் பெறுவதற்காக உயிரை இழக்கவேண்டியிருப்பினும், அது ஒரு பொருட்டாகாது.

உயர்ந்த முத்தி நிலையாகிய பேரின்ப நிலையை அடைவதற்கெனவே நமக்கு உடலும் மனமும் அறிவும் கொடுக்கப்பட்டுள்ளன. வாழ்க்கையெனும் பேராறு முடிவில் பேரானந்தப் பெருங்கடலில் புகுந்தாதல் வேண்டும். அந்த இலக்ஷியத்தை நாம் அடையும்வரை நாம் மாண்டபின் மீண்டும் பிறக்கவேண்டும். பிறவிதோறும் சிறிது சிறிதாகப் பிறவித் துயரத்தை உணர்வோம். அதைவிட்டு விலகும் எண்ணம் உறுதிபட்டு வரும். நாளடைவில் அநேக பிறப்புக்களிடை போகங்களை அனுபவித்தபின், அவைகள் துன்ப மயங்களா யிருப்பதை நன்கறிந்தபின், அவைகளை வெறுக்கும் ஆசை முளைக்கும். இவ்வாசை பெரிதாகிக் கொழுந்து விட்டெரியும்போது மெய்ப்பொருளை நாடும் பேரவாமுறுகும்; அதன் பயனாகப் பேரின்ப நிலை எய்தப்படும். அதுவரை மீண்டும் மீண்டும் நமது கருமங்கட்குத் தக்க பிறவிகளை யெடுத்து உழல வேண்டியதுதான். அப்போது மானிட ஜென்மத்துக்கு மட்டுமல்ல, எவ்வித ஜென்மத்திற்கும் அழிவு உண்டாகின்றது. அதன்பின் பிறவி நீங்கி, அழியாத ஆனந்தக் கடலில் ஆழ்ந்து, மெய்ப்பொருளோடு இரண்டறக் கலந்து என்றென்றும் நிற்பவராவோம்.

வினா:—"ஓம் சுக்லாம் பரதரம்...... சாந்தயே"—இதன் அர்த்தமும், உற்பத்தியின் விளக்கமும், இதை உபயோகிக்கும் முறையும், இதன் பலாபலனும் என்னென்ன?

T. P. லே.

விடை:—இதை விக்னேஸ்வர வணக்கம் என்பர் சிலர்; ஆனால் இது விஷ்ணுவின் வணக்கம் என்பதும், தொன்று தொட்டுவரும் கருத்தாகும். "வெள்ளை வஸ்திரம் தரித்திருப்பவரும், வெண்மை நிறமுடையவரும், நான்கு திருக்கைகளை உடையவரும், அருள் விலாசமுடைய திருமுகத்தை யுடையவரும் ஆன (ஸர்வ வியாபக முடைய) விஷ்ணுவை எல்லா இடையூறுகளும் நீங்கும்பொருட்டு நான் தியானிக்கிறேன்" என்பது விஷ்ணு பரமான பொருளாகும். இப் பொருள் கொள்ளுவதற்கு ஆக்ஷேபனை கூறுவோர் "விஷ்ணுவுக்கு வெள்ளை வஸ்திரமும் வெள்ளை வர்ணமும் உண்டோ?" என்று சந்தேகிப்பர். விஷ்ணுவுக்கு யுகத்துக்குத் தக்கவாறு பல நிறங்கள் உள என்பதும், ஆதி யுகத்தில் விஷ்ணுவுக்கு வெண்மை நிறம் உண்டு என்பதும் பிரமாணங்களால் நிலை நாட்டப்படும் உண்மைகளாகும். ஆதலின் இந்தச் செய்யுள் விஷ்ணுவைக் குறிப்பதாகாது என்பது மறுக்கப்பட்டது. 'பிரசன்ன வதனம்' என்பதற்குத் 'தொங்குகின்ற வதனம்' என்று பொருள் கொண்டு, 'விஷ்ணும்' என்பதற்கு 'ஸர்வ வியாபகமானவரும்' என்று பொருள் கொண்டு விக்கினேசுர பரமாகப் பொருள் கொள்வதும் உண்டு. 'விஷ்ணு' என்பது காரண இடுகுறிப் பெயராதலின், திருமாலுக்கே அமையும். காத்தற் கடவுளுக்கு விக்கினங்களை உண்டு பண்ணுவதும் அவைகளை நீக்குவதும் அவசியமான தொழில்களாகும்; நல்லாரைக் காத்தற்கும் பொல்லாரைத் தண்டித்தற்

கும் இவ்விரு தொழில்களும் அவசியமாகும்; ஆதலின் இவை விண்டுவின் தொழில்களாகுமோ என்னும் ஐயம் எற்பட வழியில்லை. மேலும் வைணவர்கள் இச் சுலோகத்தை யொட்டி. 'விஷ்வக்ஸேனர்' என்பவரது தோத்திரத்தையும் கூறுவது வழக்கம். இக் காரணங்களால் விஷ்ணு பரமாகக் கூறுவது பொருத்தமேயாம் என்பது கூறப்பட்டதாகும்.

ஆனால் ஒன்றே யாகும் முழுமுதற் கடவுளை 'விக்னேஸ்வரர்' (கணபதி) என்னும் பெயரால் அழைக்கினும் 'விஷ்ணு' என்னும் பெயரால் அழைக்கினும் என்? பெயர்கள் பல, கடவுள் ஒருவரே ஆதலின், எப் பெயரைக் கொண்டாயினும் உள்ளன்போடு இறைவனை வழிபடுதல் ஒன்றே வேண்டுவதாகும். இறைவனைக் கணபதி வடிவோடு வேண்டினும், விஷ்ணு வடிவோடு வேண்டினும் இழுக்கில்லை. எல்லாப் பெயரும் உடைய இறைவன் எப்பெயரைக் கொண்டழைக்கினும் 'என்?' என்று பதிலருளுவான்; வேண்டுவார் வேண்டுவன ஈவான் ஆதலின் எவ்வாறு பொருள் கொண்டு இச் செய்யுளைக் கூறினும் ஒரே பலன் விளையும். இச் செய்யுள் தொன்று தொட்டு வழங்கி வருவதொன்றே யாகும். இதை யாதாயினும் ஒரு நற் காரியத்தைத் தொடங்கும் போது உச்சரித்து இறைவனை வழிபட்டு அவனது அருளால் அதற்கு நேரக்கூடிய இடையூறுகளி னின்றும் தப்பித்துக் கொள்வர். பிரார்த்தனையில் நம்பிக்கை உள்ளவர்க் கெல்லாம் இச் செய்யுளும் பயன்படும்.

வினா:—ஒருவன் தன்னைப் பிறர் புகழ்வதைக் கேட்டுக் கொண்டிருக்கும்போதும், அதனால் மன நிலை திரியாமலும் கேடடையாமலும் இருப்பது எப்படி?

(பின் வரும் விடை ஸ்ரீ சுவாமி பரமானந்தரால் அருளப்பட்டது.)

விடை:—உண்மையான ஞானத்தைக் கவசமாக அணிந்து கொள்வதினால் அது இயலும். உலகத்து வாழும் சில மஹான்கள் தாம் கருவிகளேயன்றி வேறல்லர் என்பதை உறுதியாக நன்கு உணர்ந்துள்ளனர். அவர்கட்குப் புகழ் வரும்போது அப்புகழ் எல்லாப் பொருள்களையும் கொடுக்கும் பகவானுக்கே உரியது என்பதையும் பகவான் தமது காரியத்தை நிறைவேற்றுவதாகத் தங்களை ஆட்டி வைத்துத் தங்கள் மூலமாகச் சில செயல்களை இயற்றுகிறார் என்பதையும் தாங்கள் மிகத் தாழ்மையான கருவிகளாக மட்டும் ஆகிறார்கள் என்பதையும், அவர்கள் ஒருக்காலும் மறப்பதில்லை. இதற்கு உதாரணமாக, இயேசு கிறிஸ்து நோயாளிகளை நோய் நீங்கி எழுந்திருக்கும்படிக் கூறிய செயலை எடுத்துக் கொள்வோம். குருடர் கண் பெற்றதும், முடவர் நடந்ததும், அவர்கள் எல்லோரும் தங்கள் தங்களது உள்ளங்களில் உண்டாய எண்ணங்களை இயல்பாகவே வெளியிடலானார். "இம் மனிதன் கடவுளே!" என்றனர்; ஆனால் இயேசுவோ "நீ போ, ஒருவரிடமும் இதைச் சொல்லாதே" என்று சொன்னார். சாதாரண மனிதன் ஒருவன் ஏதேனும் ஒரு பெருமையான காரியத்தைச் செய்வானாயின், அதைப்பற்றி ஒவ்வொருவரும் அறியவேண்டும் என்று அவன் ஆசைப்படுகிறான். அவன் வெளிப்பார்வைக்குத் தாழ்மை சொல்லிக் கொண்டிருந்தாலும், தான் செய்த செய்கையின் அருமையைப் பிறரும் உணர்வார்கள் என்று இரகசியமாக நம்பிவருகிறான். ஆனால், ஒரு மனிதன் தன்னைப்பற்றி நினைக்க ஆரம்பித்ததும், உடனே உயர்ந்த சக்தி அவனைவிட்டு ஓடிவிடும். இக்காரணத்தினால் ஸ்ரீ ராமகிருஷ்ணர், "இலக்ஷக் கணக்காக நமக்கு ஆசிரியர்கள் கிடைக்கிறார்கள்; உண்மையான சிஷ்யனாக

விரும்புகிறவன் மிகவும் அருமைதான்" என்றார். தனக்கென ஒன்றும் வைத்துக் கொள்ளாமல், எல்லாப் புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் இறைவனது திருவடிகளில் சமர்ப்பிப்பவன் எவனோ, அவனுக்கு எல்லாச் சக்தியும் கொடுக்கப்படும். "தான் என்னும் உணர்ச்சியை முழுவதும் ஒருவன் ஒழித்தாலன்றி அவன் ஒரு பூரணமான கருவியாக மாட்டான்" என்றார் மஹாத்மா காந்தி. "எனது சங்கற்பம் நிறைவேற வேண்டாம், உமது சங்கற்பமே நிறைவேறட்டும்" என்று கிறிஸ்து நாதர் அருளினார்; ஸ்ரீ ராமகிருஷ்ணரும் "நானல்ல, நீயே" என்று தேவியிடம் கூறுவார்.

"சில சமயம் தவஞ் செய்யும் மனிதர் கர்வ முள்ளவராகின்றனர்" என்று நமது நாட்டு சுவாமிகளில் ஒரு பெரியார் கூறினார். அம்மாதிரி மனிதர்கள் தமது தபசையும் தூய்மையையும் பிறர் அறிய வேண்டுமென்று ஆசைப்படுகின்றனர். தங்களைப்போல் அம்மாதிரியான பழக்கங்களைப் பழகாத மற்ற மனிதர்களினும் தாம் மேம்பட்டவர் என்று நினைக்கத் தொடங்குகிறார்கள்; தான தருமங்களைச் செய்யும் மனிதர்கள், தாம் தம்மைக் காட்டிலும் குறைந்த அதிர்ஷ்ட முள்ளவரிடத்து ஒரு சிறிது உதாரமாக நடந்து கொண்டதற்காகப் பகவான் தமக்கு முன் கைகட்டிக் காத்துக்கொண்டிருக்க வேண்டும் என்று பன்முறையும் உணரத் தொடங்குகின்றனர். பகவானது அருளால் கொடுக்கப்பட்டாலன்றி ஒன்றையும் பெற ஒண்ணாது என்பதை முற்றும் உணரா விட்டால், எளிதாக, விழிப்பில்லாதவர்கள் இந்தப் பொறியில் வீழ்ந்து விடுவார். மனிதனது உயர்வுக்குத் தகுந்தபடி, அவனது பணிவும் பெருகும்; அவனது உணர்வு நன்கு பழுத்திருக்கும்; அவனுடைய வார்த்தைகளும் செயல்களும் சாந்தமாகவும் தாழ்மையாகவும் அருள் நிரம்பியவாகவும் அமையும். யாரேனும் ஒருவன் கடுமொழியிற் பேசினால், அவனும் கோபத்தோடு எழுந்து எதிர்ப்பதில்லை. அந்த அகங்காரத்தை அவன் துறந்திருப்பான். இத்தகைய மனிதனே ஞானத்தில் நிலைத்திருப்பவனாவான். அவனிடம் தற்பெருமை யிராது. சிறுமையுடையவனே கர்வமும் அகங்காரமும் உடையவனாகி, தன்னை நோக்கிப் பிறரது கவனத்தை இழுத்துக்கொண்டே போவான். மிக உயர்ந்த உண்மைப்பொருளிடத்தே மனம் நிலைத்து வேரூன்றி நிற்கத் தொடங்கியதும், புகழ் என்பது ஒருவர்க்கு அற்பமாகத் தோன்றி விடும்.

---

## ஜன்மதினங்கள்

| | |
|---|---|
| ஸ்ரீ சாரதாமணி தேவியார் | — 1940ஆம் டிசம்பர்மீ 21உ |
| ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் | — 1941ஆம் ஜனவரிமீ 19உ |
| பகவான் ஸ்ரீராமகிருஷ்ண தேவர் | — 1941ஆம் பிப்ரவரிமீ 28உ |

# மூர்த்தி தலந் தீர்த்தம்

(ஸ்ரீ. கா. இராமநாதன் செட்டியாரவர்கள், B. A., B. L.)

(திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் சுவாமிகளது சொற்பொழிவைத் தழுவி யெழுதியது.)

மக்கள் யார்? தொல்காப்பியனார் பொருளதிகாரம் மரபியலில் மக்கள் யாரென்று விளக்குகிறார். "மக்கள் தாமே ஆறறிவுயிரே." கண், காது, மூக்கு, நாக்கு, தோலறிவு என்ற ஐயறிவுகளைப்பற்றி முன்னர் பேசினோம். நாம் ஐந்தறிவுடைய உயிர்களைவிட உயர்ந்தவர்கள். மக்களின் ஆறாவது அறிவு மனம். சுமார் இரண்டாயிர வருஷங்களுக்கு முன்னர், பிறநாட்டார் நாகரிக மடையாத காலத்தில் இந்த அருமையான விஷயம் முடிவுகட்டப்பட்டது. "முப்பத்திரண்டு அவயவத்தால் அறிவோடு சேர்ந்த ஆடூஉ மகடூஉ மக்கள்", "மக்கள் மானுடர் என்று மனத்தினால் மிக்க மேன்மை" யின் விளங்கினார் என்றார் சிவப்பிரகாசர்.

மனவுணர்வுடையார் யார்? மனவுணர்வு யாது?

"மாண்டுகழிந்தோர்" "திரைபடும் மணலினும் பெரிதே;" என்பிறந்தோ மெனத்தெரியாத வினைகள் பலர். பிறப்பை அறுக்க நினையாத பிறவியை "பாழ்த்த பிறவி" என்கிறார் மாணிக்கவாசகர். பிறப்பறுக்க முயலாதார் மனவுணர்வு உடையாரன்று.

பிறவிப் பெருங்கடலைக் கடத்தலரிது. பிறப்பறுக்க வல்லான் ஈசனே. "எந்தை பெருமான் என்பிறவி நாசன்." (திருச்சதகம் நக.) பிறப்பறுக்க வழிகாட்டுகிறவனும் அவனே. "பிறவி யறுக்க நெறி தந்த பித்தன்." (பல்லாண்டு-க.)

யானை காட்டில் திரிகிறது. கட்டுப்பாடற்று மும்மதம் பிடித்து அலைகிறது. பாகன் அந்த யானையைக் குழி தோண்டியோ வேறு யானைகளை விட்டோ பிடிக்துக்கொண்டுவந்து இலை, வெல்லம், அரிசி இவற்றினை ஊட்டுகிறான். உலகமென்னும் காட்டில், ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மதம் பிடித்த ஆன்மா வென்னும் யானை தேடுவாரின்றித் திரிகிறது. அதனைக் குருவென்னும் பாகன் தேடிப் பிடித்து சத் சித் இன்பமாகிய இலை அரிசி வெல்லத்தைத் தருகிறான். இவ்வாறு வலிந்து பற்றி உறவுகொள்ளும் தன்மையை நினைந்து நினைந்து புகழ்கிறார் மாணிக்கவாசகர்.

"அருணனி சுரக்கு மமுதே காண்க;
கருணையின் பெருமை கண்டேன் காண்க;
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க."

(திருவண்டப் பகுதி.)

இறைவனே கருணை மிகுதியால் குருவாக வருகிறார். கடவுளும் குருவும் ஒன்றே; தோசையும் மாவும் ஒன்றே. குருவைத் தியானம் செய்வதாலேயே எல்லா இஷ்டமும் நிறைவேறும். தேவனை எப்படி வழி படுகிறோமோ அம்மாதிரியே குருவையும் வழிபடல் வேண்டும்; உபநிஷத் அவ்வாறு கூறுகிறது. கண்ணாடியில் படிந்த தூசியைத் துடைப்பதுபோல மனத்தில் பொதிந்த உலக விஷய வாசனையைத் துடைக்க வல்லவர் குரு.

குருவின் அருளுக்கு நாமும் தக்கவராதல் வேண்டும். நற்கல்வி வேண்டும். குணம் வேண்டும். படித்தான் படிந்தான். வைராக்யம் என்பது ஆசையறல்; பிடிவாதமன்று. 'நானார்? வந்தவா றெங்ஙனம்? போமாறேதோ?' என்று விசாரிக்கவேண்டும். பசித்தவனுக்கே உண்டி "அறிதோறறியாமை கண்டு—"(குறள்)

“ நால்களாலும் நுண்ணுணர்வாலும் பொருள்களை அறிய அறிய, முன்னை யறியாமை ” காண்கிறோம்.

சற்குரு பல மொழி பேசார்; அருமையாகப் பேசுவார்; அவர் சொல்லும் ஒரு மொழி பல நன்மை தரும்.

“ ஒரு மொழியே பலமொழிக்கும் இடங்கொடுக்கும்; அந்த ஒரு மொழியே மலம் ஒழிக்கும்; ஒழிக்குமென மொழிந்த குருமொழியே மலையிலக்கு; மற்றைமொழி யெல்லாங் கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய் ” என்று தாயுமானவரே இவ்வாறு தெளிவாக அருளியிருக்கிறார்.

“ மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் வணங்கினர்க்கோர் வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்க்கும். ” மூர்த்தி என்றால் வடிவம் என்று பொருள். மூர்த்திமான் வடிவத்தை உடையவன். சிறப்பாகக் கடவுள் வடிவத்தையே மூர்த்தி என்று கூறுகிறோம்.

கடவுளுக்குமா வடிவம்? அறிவற்று, மாறி அழியும் வஸ்த்துக்களையே நாம் பார்க்கிறோம். இக் கண் அழிவுடையதையே பார்க்கும். ஜடத்தைப் பார்க்கும். அழியாததை, நிறைந்த அறிவை அகக்கண் கொண்டு நணுக வேண்டும். ஊனக்கண் கொண்டு பார்க்க முடியாது. ஞான சம்பந்தம் வந்தால் ஊனக்கண் ஞானக்கண்ணாகும். திருஞானசம்பந்தப் பெருமானின் ஆள்காட்டி விரல் ஆண்டவனைக்காட்டும் விரலாயிற்று. “ அம்மானிவனன்றே ” என்று தகப்பனாரிடம் காட்டினர் கழுமலவேந்தர். “ உணர்பவசத்தாதல் ” என்னும் சிவஞான போத வெண்பாவை நோக்குக. நம் மறிவுக் கெட்டுவதற்காகவே, “ உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய வொருவன் ” நம்மேல் கருணைகாட்டி பெண்ணானன்.” அவனே ஆணானன்; ஒன்றானன்.

சூரிய கிரணத்தை நேரே பார்க்கமுடியவில்லை; அதேபோல் இறைவன் அருளைப் பார்க்கும் சக்தி நமக்கில்லை. இரக்கமே உருவமான அவன் நமக்காக வடிவம் கொண்டு அருள் புரிகிறான். இந்திரியம் மனம் வாக்குக் கெட்டாதவன், தயை ததும்பி, நம் அன்புக்குக் கட்டுப்படுகிறான்; ஜாதி, மதம், தேசம், காலம் பாராமல் “ ஏறு சேவகனு”மாய், “ பின்னும் கருதுவார் கருதும் உருவ”மும் ஆவான்.

நம் வடிவு காமத்தால் வந்தது; அவன் வடிவு கருணையால் வந்தது.

தலம் என்பது இடம். இறைவன் கோயில் கொண்டு உறையும் இடத்தையே தல மென்கிறோம்.

நம்மைச் சுத்தப் படுத்திக்கொள்ள உதவுவது தீர்த்தம். அன்பினால் பாசித் தீர்த்தத்திலும் ஆடுகிறார் பக்தர். சுந்தரர் திருத்துருத்தியில் விமலர் கழல் பணிந்து “ அடியேன்மேல் உற்றபிணி வருத்தமெனை ஒழித்தருள வேண்டும் ” என்று வணங்கினார். “ வடகுளத்தில் குளி; உன் பிணி தீரும் ” என்று இறைவன் அருள்புரிந்தார். வேதவடிவாம் துருத்தியார் தமைத் தொழுது குளத்தில் மூழ்கினார் சுந்தரர். அக்கணமே அப்பிணி நீங்கிற்று; மணியொளி சேர் திருமேனியாயினார். சங்கல்பத்தோடு, இறைவன்பால் அன்புடையவராய், அவனை வணங்கி நீராடுவோர்க்கே அதன் பலன் கிடைக்கும்.

குருவையடைய மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் வணங்கல் வேண்டும். குருவின் அருளாலும் அவர் உபதேசத்தாலும் மக்கள் அடைய வேண்டிய பயனை அடையலாம்.

‘மூர்த்தி தலந் தீர்த்தம் முறையாய்
வணங்கினர்க்கோர்
வார்த்தை சொல்ல சற்குருவும்
வாய்க்கும் பராபரமே.’

# அஹிம்ஸை

[ஸ்ரீ பரமானந்த சுவாமிகள்]

அஹிம்ஸைக் கொள்கைகளை ஒழுங்காகப் பின்பற்ற விரும்பும் மனிதர் உடல் சம்பந்தமான ஹிம்ஸையை மட்டும் ஒழித்தல் வேண்டும் என்பதல்ல; மனதிற்கு இம்சையை உண்டு பண்ணக் கூடிய பலவகையான கொடுமைகளையும் ஒழித்தல் வேண்டும். ஒருவார்த்தைபேசாமல்மௌனமாய் அமர்ந்திருக்கும்போதே, நாம் பிறர்க்குத் துன்பத்தை இழைக்கலாம்; யாரைப் பற்றி நாம் நினைக்கிறோமோ அவர்கள் மீது நமது எண்ணங்களாகிய பாணங்களை வீசிப் புண் படுத்தலாம்; நம்முடன் வாழும் மக்களிடம் இயல்பாகவே அமைந்துள்ள குற்றங் குறைகளையும் தோல்விகளையும் பற்றிச் சிந்தித்து சிந்தித்து, அவர்களைத் தடுத்து முன்னேற ஒட்டாமற் செய்யலாம். அவர்களது பிழைகளை அடிக்கடி அறிவதினால், பிழை இயற்றுதற்குரிய மனச்சார்புகளை அவர்களிடத்து அதிகப்படுத்தக் கூடும். கொடுமையான கண்டிக்கும் மொழிகளாலும் பெருந்திங்கை விளைவிக்கக் கூடும். நமது பொறுப்பு, நாம் உணரும் அளவிற்கு மேல் மிகவும் அதிகமாக நம்மிடத்துக் கிடக்கின்றது. நாம் ஒவ்வொருவரும், ஓர் அரசராகிறோம், நமது மனமென்னும் இராஜ்யத்திற்கு மன்னராகிறோம். நாம் புத்திசாலித் தனமான அன்பார்ந்த அரசர்களாயிருப்பதா, அல்லது புத்திகெட்ட கொடூரமான அரசர்களாயிருப்பதா என்பது நம்மையே பொறுத்துள்ளது. நாம் நினைக்கும் ஒவ்வொரு நினைவிற்கும் இடையூறு செய்யவோ துணை செய்யவோ, வாழ்த்தவோ அழிக்கவோ, இன்னும் உலக உணர்ச்சியை உயர்த்தவோ தணிக்கவோ சக்தியுண்டு என்பதை உணர முயலுங்கள். மனிதனிடத்துள்ள தெய்வத் தன்மையை மௌனமாக உணர்வதினால், அவனிடத்து அத்தன்மையை வெளிப்படுத்துவதற்கு உதவியுண்டாகும்; கஷ்டங்களை வெல்லவும், சாமர்த்தியமாக வேலைகளை இயற்றவும் திறமை உள்ளது என்ற நம்பிக்கை ஒருவனிடத்து உண்டாயின், அது அவனுடைய ஒழுக்கத்தை வளர்க்கவும் உறுதிப்படுத்தவும் பேருதவி புரியும்.

அஹிம்சையே மனிதனது உத்தமமான இயற்கைச் சார்புகளுள் மிகச் சிறந்ததாகும்; அதுவே உண்மையான பாரமார்த்திக தத்துவத்திற்கும் ஞானத்தை வெளிப்படுத்தும் முயற்சிக்கும் அடிப்படையாகும். ஆயினும் சிலர், இத்தகைய கொள்கை தற்கால வாழ்க்கையில் நமக்கு ஏற்படும் கஷ்டங்களை நீக்குதற்குக் கொஞ்சமாவது பயன்படுமா என்று கேட்கலாம். இன்னும் சிலர், "ஞானிகளும் ரிஷிகளும் மன்னர்களாயிருந்த காலத்திற்கும், பூமியிலே சாந்தமூர்த்தியான கிறிஸ்து நாதர் அவதரித்து வாழ்ந்து வந்த காலத்திற்கும் பயன் படக்கூடிய கொள்கையன்றோ இது!" என்று கூறுவர்; பின்னும் "கிறிஸ்து நாதர், புத்த தேவர், பிரான்ஸிஸ் மஹான் என்பவர்கள் வாழ்ந்த காலத்துக்குப்பின் உலகம் எவ்வளவு மாறிவிட்டது!" என்றும் வழக்குரைப்பார்கள். ஆனால் யான் ஒன்று கேட்கிறேன்:— அந்த மஹான்களுடைய போதனை பயனற்றதே என்று கருதும்படி அவ்வளவு உலகம் மாறிவிட வேண்

டுமா? மேலும் அம்மஹான்கள் இப்போது நாம் இருக்கும் இடத்திற்கு வருவார்களேயானால் "உங்கட்கு எங்கள் மத்தியில் இடமில்லை; உங்களது போதனைகள் பண்டைக் காலத்தைச் சேர்ந்தனவாதலால், நாங்கள் மனச்சாக்ஷிக்கு விரோதமின்றி அவைகளை எப்படிப் பின்பற்றுவது?" என்று நாம் கேட்கவேண்டுமா?

இக்கேள்விகட்கெல்லாம் நான் 'வேண்டாம்' என்ற ஒரு பதிலே உரைப்பேன். ஏனெனில் இன்றைக்கும் நமது கண்ணெதிரே அம்மாதிரியான ஒரு மஹான் வாழ்கின்றார். நாகரிகமுற்ற ஜாதியார் எனக் கருதப்படுபவர்களிற் பெரும்பாலார் யுத்தம் புரிவதற்காகவோ (யுத்தத்தைத் தடுப்பதற்காகவோ) (இரண்டும் ஒன்றேதான்) ஆயுதங்களைத் தயார்பண்ணிக் குவித்துக்கொண்டிருக்கும் இக்காலத்தில் ஓர் ஏழைமனிதர் ஒரு கிராமத்தில் வாழ்ந்தும் பட்டினிகிடந்தும் பிரார்த்தித்துக் கொண்டும் வருகிறார்; அவர் அஹிம்சைக் கொள்கைகளைத் தாம் உறுதியாகப் பழகிவருவதுமட்டு மல்லாமல், நமது நாட்டு இந்தியமக்களிற் பலர்க்கும் அம்மாதிரிச் செய்யும் ஊக்கத்தை ஊட்டி வருகிறார். இப்பெரியார் மகாத்மாகாந்தி என்பவரே என்பது வெளிப்படை. இவரைப்பற்றி ரொமெயின் ரொலண்டு என்னும் அறிஞர் பின்வருமாறு எழுதுகிறார்:—"காந்தியைப்பற்றியும் அவரது முயற்சிகளைப்பற்றியும் அறிய வேண்டுவார், ஒரு விஷயத்தை உணரவேண்டும். அவரது கொள்கை ஒரு பெரிய மாளிகைபோன்றது; அதில் இரண்டு வெவ்வேறு கட்டடங்கள் ஒன்றுக்குமேல் ஒன்றாக அமைந்துள்ளன; கீழேயுள்ள கட்டடம் உறுதியான அஸ்திவாரம் போன்று, ஞானவாழ்க்கைக்கு மூலமான ஆதாரமாக அமைந்துள்ளது. இந்த உறுதியான அசைக்கமுடியாத அஸ்திவாரத்தின்மேல்தான் அவரது அரசியல் சம்பந்தமான இயக்கமும் சமூகசம்பந்தமான இயக்கமும் நாட்டப்பட்டுள்ளன. கண்ணிற்கு மறைவாயுள்ள அஸ்திவாரத்தின் தொடர்ச்சி எந்த இலக்ஷியப்படி அமையவேண்டுமோ அப்படி அதிலே அமையவில்லை; ஆனாலும், தற்கால நிலைமைகட்குத் தக்கபடி எப்படி அவை சிறந்த முறையில் அமையக்கூடுமோ, அப்படி அமைந்துள்ளன. அவர் வாழும் இக்காலத்திற்குப் பொருத்தமாக, அவை அமைக்கப்பட்டுள்ளன."

காந்தியடிகளே யாது கூறுகின்றனர் என்பதைக் கவனிப்போம்:—"அன்பு, முழு அன்பு—இதுவே எனது வாழ்க்கையை ஆளும்விதி; ஆயினும் நான் ஆதரித்து வரும் அரசியலேற்பாட்டின் மூலமாக இந்த முடிவான விதியைப் பின்பற்றுமாறு போதித்து நான் முயன்றுவரவில்லை. அம்மாதிரியான முயற்சி தோல்வியில்தான் முடியவேண்டும் என்பது எனக்குத் தெரியும். திடீரென்று தொடக்கத்திலேயே இப்போதே ஆடவர்களும் மாதர்களும் அந்த அன்புவிதிக்கு அடங்கியொழுகுவார்கள் என்று எதிர்பார்ப்பது, அன்பின் நடைமுறையை அறியாமையின்பாற்படும். நான் கனவு காண்பவனல்லேன்; நான் ஓர் உயர்ந்த இலக்ஷியத்தை அனுபவத்திற்குக் கொண்டுவரும் முயற்சியில் ஈடுபட்டவன்......இந்தியா ஹிம்சையைத் தனது கொள்கையாக ஆக்கிக்கொள்ளுமாயின், நான் இந்தியாவில் வாழ்வதை ஒரு பொருளாகக் கருதுவதை விட்டொழிக்கவேண்டும். எனது தேசாபிமானம் எனது ஞான வாழ்க்கைக்கு உள்ளடங்கியதேயாகும். ஒரு குழந்தை தனது தாயின் மார்போடு ஒட்டிக்கொண்டிருப்பதுபோல நானும் இந்தியாவின் மீது ஒட்டிக்கொண் டிருக்கிறேன்; ஏனெனில், எனக்கு அவசியமான ஞான

உணவை அவளே எனக்கு ஊட்டுவதாக நான் உணர்கிறேன், அவள் என்னைக் கைவிடுவாளாயின், என்னைப் பாதுகாக்கும் வேறொருவரைக் கண்டுபிடிக்கும் நம்பிக்கையின்றித் தாய் தந்தையரை இறந்த அனாதையைப்போல் இருக்க வேண்டியதுதான். அங்கிலையில் நான் இமயமலையின் பனிமூடிய சிகரங்கட்குச் சென்று, (புண்பட்டு) இரத்தம் பெருக்கிக் கொண்டிருக்கும் எனது ஆன்மாவிற்கு இயன்ற அளவு ஓய்வை அளிக்குமாறு அவைகளை யான் வேண்டிக்கொள்வேன்." இங்கு கூறப்பட்ட இவ்வார்த்தைகள் காந்தியடிகளின் உள்ளத்தில் தமது இலக்ஷியத்திற்காகப் பாடுபடும் ஆசையும் தாம் தொடங்கியுள்ள பணியை இயற்றுவதிலுள்ள ஆசையும் எவ்வளவு ஊறி முதிர்ந்துள்ளன என்பதைத் தெளிவாகப் படம் வரைந்து காட்டுகின்றன. அஹிம்சையைப் பழகுதல் என்பது அவர்பால் ஒரு வேஷமாக நிற்பதில்லை. அரசியல் துறையில் இந்தியாவின் கோரிக்கைக்குப் பொது ஜன சம்மதம் பெறுவதற்காக ராஜீய தந்திரத்தினால் எழும் ஒரு துணிவான முயற்சியுமல்ல. உண்மையோடு ராஜீ பேசிக்கொள்ளும் நினைவு அவரிடத்துச் சிறிதும் இருக்க முடியாது என்பதும், உயர்வான ஞான விதிகட்கு ஒத்திராத எதுவும் ஒருகண நேரமேனும் கவனித்தற்குரியதன்று என்பதும் தெளிவாக விளங்குகின்றனவன்றோ?

பண்டைய உபநிடதங்களில் கூறப்படும் பின்வரும் மொழிகள் காந்தியடிகளைக் குறித்தவை யாகலாம் என்று நமது கவி இரவீந்திரநாத் தாகூர் கூறுகிறார்:—" மக்கள்து நெஞ்சங்களில் எப்போதும் கோயில்கொண்டு எழுந்தருளி யிருப்பவரும், அன்பிற்கும் அகமுகமான காட்சிக்கும் தியானத்திற்கும் தம்மை இலக்காக்கிக் கொண்டிருப்பவரும் ஆன மஹாத்மா அவரே; அவரை அறிபவன் எவனோ, அவன் அழிவற்ற நிலையை அடைகிறான்." உண்மையாகவே, மகாத்மா காந்தி ஒரு துறவியே; அவர் தம்மை இறைவனுக்கே ஒப்படைத்து விட்டவர்; மக்களுக்குள்ளே ஐக்கிய உணர்ச்சியை உண்டு பண்ணும் பொருட்டுத் தமது சுயநல வாழ்வைத் தியாகம் பண்ணியுள்ளவர் அவர்.

மஹாத்மா காந்தி சமண மதத்திற் பிறந்தவர். புத்த மதத்தினரது கொள்கையைப்போல் சமண மதத்தினரது கொள்கை ஒன்று உள்ளது; அதாவது, எந்த உயிர்ப் பிராணிக்கும் தீங்கு செய்யக் கூடாது; ஓர் எறும்பு சதைக்குள் துளைத்துக்கொண்டு போயினும் அதற்கு இம்சை செய்யக் கூடாது என்பதாகும். பலர் இம் மாதிரியாக உயிரைக் கொல்ல விரும்பாமையை ஒரு வெறும் மூடத்தனமான கொள்கையென்று உரைப்பார்; சமணர்களுடைய வாழ்க்கை தமது மத நம்பிக்கைகளால் உறுதியாகப் பிணைக்கப்பட்டிருப்பதுபோல, நமது வாழ்க்கையும், சடப்பொருள்களைச் சதமெனக் கருதும் கொள்கையாகிய விலங்குகளை நாமாகப் பூட்டிக் கொண்டிருக்கும் காரணத்தால், கட்டுப்பட்டதாக வில்லையோ? வெற்றிக் கடவுளின் ஆதிக்யத்திற்கு நாம் உட்பட்டிருக்க வில்லையோ? பணத்தால் உலகத்தார்க்கு நன்மை செய்யக்கூடும் என்னும் எண்ணத்தாலன்றி, நாம் நமக்கு அக்கம் பக்கத்திலுள்ளவரைக் காட்டிலும் பணக்காரராயும் சக்தி யுடையவராயும் இருக்கிறோம் என்ற உணர்ச்சியினால் ஏற்படும் ஒரு திருப்திக்காகத், தமது வாழ்நாள் முழுவதையும் பணத்தைச் சேர்த்து வைப்பதற்காகவே செலவிடுவார் நம்மிற் பலர் இல்லையோ?

காந்தி யடிகளின் முக்கிய சிடராகிய ஸ்ரீமதி ஸ்லேடு என்பார் காந்திஜீயின் அஹிம்சைக் கொள்கைக்கு இலக்கணம்

வரையறுக்கும்போது, அமெரிக்க நாட்டில் பின்வருமாறு கூறினர் :—“ அஹிம்சை பலாத்கார மின்மையையும் இம்சை யின்மையையும் கொல்லாமையையும் குறிப்பதோடு நின்றுவிடவில்லை ; ஒருவனுக்கு உண்மையாக உபயோகத்திற்கு வேண்டும் அளவிற்கு மிஞ்சிய சொத்தையும் பணத்தையும் உணவையும் உடையையும் வைத்துக் கொள்ளாமையையும் அது அடக்கிக் கொண்டுள்ளது.” மிச்சம் சேர்த்து வைப்பவன் எவனும் மற்ற மனிதர்களிடமிருந்து அவர்கட்கு உயிர் வாழ்தற்கு அவசியமான பொருள்களைப் பறிக்கும் குற்ற முடையவனுவான் என்பதே காந்திஜீயின் நம்பிக்கை யென்றும், அந்த அம்மையார் கூறினர். இவ்வுலகத்தில் சேர்த்து வைப்பதென்பதும் கொடையின்மை யென்பதும் இல்லாது போமாயின், வறுமையும் அழுக்கும் நெருக்கமும் மிகுந்த இடங்கள் இல்லாது போம் ; வறுமையே ஒழிந்துவிடும் ; ஏனெனில், ஒவ்வோர் உயிர்க்கும் எல்லாம் ஏராளமாக அப்போது கிடைக்கும். பசியைத் தீர்க்கப் போதுமான ஆகாரமும், மானத்தைக் காப்பாற்றப் போதுமான உடையும், சரியான இருப்பிட வசதியும், இன்பம் தரும் சூழ் பொருள்களும் மனிதர்க்குக் கிடைக்குமாயின், அவர்கள் திருப்தியோடிருப்பார்கள்; சாந்தமாயிருப்பார்கள். தம் உடலைக் காப்பாற்றுவதற்காகப் பரிதாபமான நிலையில் பாடுபட்டுக் கொண்டிருந்தபோதிலும் மிகமேலான ஒன்றில் ஈடுபடப் பிரியப்படுவார்கள் ; மேலும் பேராசை யென்பது அவர்களை விட்டு நீங்கிவிடும். தமது பாதுகாப்புக்கும் சுகத்திற்கும், மனத்திருப்திக்கும் அவசியம் என்று நம்பிவந்தவற்றைப் பிறரிடமிருந்து பிடுங்கிக்கொள்ளும் பொருட்டுப் பிறரைக் கொள்ளையடிக்கவும் கொல்லவும் மக்கள் ஆசைப்படுவதற்குப் பேராசையன்றோ காரணமாகின்றது?” இவ்வாறு அஹிம்சைக் கொள்கையின் பொருளை அந்த அம்மையார் விரித்துரைத்தார். ஓர் உயர்ந்த கொள்கையைத் தவறான சமயம் உபயோகிக்கிறவனிடத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு ; உதாரணமாக சதையைத் துளைக்கும் எறும்பைச் சும்மா விட்டுவிட்டுத் தனக்கு அக்கணம் உண்டாகும் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளும் சமணனை உலகம் முட்டாளென்றும் மூடனென்றும் திட்டினாலும், நான் அவனை நம்புவேன் ; ஆனால் உயர்ந்த சில இலக்ஷியங்களைத் தலைகீழாகும்படி மாற்றியுரைத்து. மனிதனது மேன்மையான சுபாவங்கட்கும் ஞானபோதனைகட்கும் மாறாக உள்ள செயல்களைக் கூசாது செய்பவனை நான் நம்புவதில்லை. “உன்னைப்போலவே பிறரையும் நேசி” யென்றார் இயேசுநாதர். அஹிம்சையின் கொள்கை முழுவதும் இதில் அடங்கியுள்ளதன்றோ?

---

# அவன் எங்குள்ளான் ?

(பி. பா)

க

‘மின் அனைய பொய்யுடலை நிலையென்றும்,...வளர் மாடமேல் வீடு சொர்க்கம் என்றும், பொன்னை அழியாது வளர் பொருள் என்றும் போற்றி,’ இந்திரிய வாழ்க்கையே இறுதியான வாழ்க்கை யெனக் கருதும் மக்களிடம் கடவுளைப் பற்றிப் பேசினல் ‘அவன் யார்? எங்குள்ளான்?’ என்றுதர்க்கிப்பர். அவர்களுக்குக் கடவுள் ஏன்? அவரைப்பற்றி அறிந்து

கொள்ள வேண்டிய அவசியம் அவர்களுக்குச் சிறிதுமில்லை. கண்டதே காக்ஷி கொண்டதே கோலம் என்ற இம் மிருக மனிதனுக்கு வேண்டுவன தன் உழைப்பினாலோ அல்லது வேறு எந்த வகையிலோ கிடைத்து விடுகின்றன. 'சோற்றுத் துருத்தியைச் சுகமெனவும் உண்டுண்டு தூங்க வைத்ததலே' அவனது தொழிலாயமைந்து விடுகின்றது. வேறு எந்த சிந்தனை செய்யவும் அவனுக்கு நேரமில்லை; செய்யவேண்டிய அவசியமும் அவனுக்கில்லை.

இன்னமொரு மக்கள் வகுப்பினர் உளர். அவர்கள் பிறவி தொட்டே எதனையும் ஆராய்ந்தறிய விரும்புகின்றனர். அதன் பொருட்டுப் பல விசாரணைகள் செய்கின்றார்கள். மற்றவர் எவ்வளவு கூறுவரேனினும் அவர்கள் செவிக்கு ஏறுகிறதில்லை. எதனையும் காரண காரிய விசாரணைமூலமாக அறியுந் தன்மை வாய்ந்தவர்கள். அவர்கள் கண்முன் இப் பரந்த பிரபஞ்சமுளது. அதில் தமது அறிவுக்கெட்டாத பல விசித்திரங்கள் உள. அவைகளின் காரண காரியங்களைச் சிறிது சிந்திக்கும் சில நேரங்களில் அவர்கள் மூளை குழம்பி விடுகின்றது. என்றாலும், 'தச்சில்லாது வீடுமில்லை, வித்தில்லாத மரமுமில்லை' என்ற கொள்கைப்படி தாம்காணும் இந்த அண்டாண்ட சராசரங்கள் அனைத்தும் தாமே உண்டாக வழியில்லை யென்றும், அவைகளை யுண்டுபண்ணிய ஒருவன் இருக்கத்தான் வேண்டும் என்றும் தமது காரண காரிய விசாரணைகள் மூலம் கடவுளின் இருப்பை நிலை நிறுத்துகின்றனர். அக் கடவுள் எத்தகையன், எவ்வண்ணத்தன், எங்குளான் என்பன அறியாதவர்களாகி இப்பிரச்னைகளில் மூழ்கிவிடுகின்றனர்.

மூன்றாவதாக பிறிதொரு சாரார் உளர். அவர்கள் வாழ்க்கைத் தொடங்கிய காலத்திலிருந்தே துன்பம் அநுபவிப்பவர்கள். அவர்கள் தொட்டதெல்லாம் துன்பமாக மாறிவிடுகின்றன. இரவு பகலாக உழைக்கின்றார்கள்; தாம்மாத்திரமல்ல, தமது குடும்பத்து அங்கத்தினர்கள் அனைவருமே சேர்ந்து உழைக்கின்றார்கள். என்றாலும் என்றாகிலும் ஒருநாள் வயிறார உண்டறியார், துயின்றறியார், உடுத்தறியார். செக்குமாடுபோல் உழைப்பதே அவர்கள் தொழில். அல்லது அவர்கள் எடுத்த காரியங்கள் எல்லாம் ஏமாற்றந் தருவனவாகின்றன. அவர்கள் துன்பப் படுவதற்கே உலகத்தில் உதித்தவர்கள் போன்ற வாழ்க்கையை யுடையவர்களாக வுளர். சில நேரங்களில் அவர்களுக்கேற்படும் அல்லல்கள் எல்லையைக்கடந்தன வாகின்றன. பெருந்துணை என்ற நண்பர் பிரிந்து போகின்றனர்; பிரிவதோடு நின்றுவிடாது பகைவர்களாகவும் அவர்கள் மாறி விடுகின்றனர்! உறவினர் வெறுக்கவும், உலகினர் புறக்கணிக்கவுமான துன்பம் செறிந்த வாழ்க்கையாக வுளது அவர்களது வாழ்க்கை அன்பும் ஆதரவுமற்றுக் கண்களைக் கட்டி நடுக் காட்டில் விடப்பட்டவர்கள்போல் உணர்கின்றனர் அவர்கள். இவ்விதமாக உலைக் கடத்திவிட்டுத் தகித்து சம்மட்டிகொண்டு தாக்கப்படுகிற காலத்தில், தம்மைக் காக்க ஒருவன் இருக்கின்றான், அவன் தான் கடவுள் என்ற உணர்ச்சி அவர்களையுமறியாது அவர்கள் உள்ளத்தில் எழுகின்றது. அவர்களுக்குக் கடவுள் இருக்கின்றாரா இல்லையா என்று விசாரணைமூலமாக கடவுள் இருப்பினை நிலை நாட்டப் போதிய நேரமில்லை; அவசியமும் இல்லை. தங்கள் துன்ப நிவர்த்திக்காக இறைவனை யடைவதற்கே காலத்தைச் சிறிதும் வீண்படுத்தாது ஓடிச் செல்கின்றனர். எத்தகையவன், எவ்வண்ணத்தன் என்பனபோன்ற பிரச்னைகள் அவர்கள் உள்ளத்தில் எழு

கின்றதில்லை. கருணாநிதி, ஆபத்பாந்த வன், அனுகாக்ஷகன், கருணைக்கடல், கற்பக விருக்ஷம் என்றிவ்வளவுமாத் திரம் அவனைப்பற்றி அறிந்தவர்களாகித் தங்கள் துயர் நீக்க அவன்மாட்டு ஓடு கின்றன.

ஆக, கடவுள் எண்ணம் எழப்பெறாத வர், கடவுளை புத்திமூலமாகச் செய்யும் விசாரணையின் வாயிலாக அறிந்து கொள்வதோடு நின்றுவிடுபவர், கடவுள் பிரத்யக்ஷமாக அனுபவத்தில் காணக் கூடியவர், அவர் வேண்டுவார் வேண்டும் வரங்களைத் தரக் கூடியவர் என்று அவரை யடைய முயல்பவர் என்று மக்கட் கூட்டத்தை மூவகையாகப் பிரிக்க லாம்.

உ

உலகில் பலர் தாங்கள் நிரீஸ்வரவாதிகள் என்று கூறுவதை நாம் காண்கின்றோம். ஆனால் எவரும் எப்போதுமே நிரீஸ் வரவாதியென்று சொல்லிக்கொள்ள முடி யாது. ஏன் ஒருவன் கடவுளை மறுக் கிறான் ? போதிய அனுபவம் இல்லாத காரணத்தாலேயே என்னலாம். வயது முதிர்ந்த தொண்டு கிழவனாகவும் இருக்க லாம் ; தாடிநிறைத்த தள்ளாத கிழவ னாகவு மிருக்கலாம். இருந்தென்ன ? அவன் கடவுள் விஷயத்தில் அநுபவம் சிறிதுமற்ற பச்சைக் குழவியே. போதிய அநுபவம் வந்ததும் யாதாம் ஒருநாள் அவன் மனம் கடவுள் நாட்டத்தைக் கொள்ளாமல் நில்லாது. ஆகவேதான் நமது சாஸ்திரங்களில் பொதுப்பட துன் பம்தான் மக்கட்கு உயர்ந்த நண்பன் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. துன்ப துயரங்களே நம்மைப் பலசமயம் உள்முக நாட்டம் கொள்ளச்செய்கின்றது. இத் துன்பந்தான் வாழ்க்கையின் இறுதிப் பயனா ? இதனிலிருந்து விடுபட வழி யில்லையா? விடுவிக்கின்றவர் எங்குளார் ? என்றெல்லாம் மனம் சென்று இறுதியில் தான் தேடியலையும் பொருளை யறியவரு கிறான். அறிந்தவன் சும்மாயிருப்ப தில்லை ; அவனையடைந்து துன்பங்களைய முயற்சித்து, தன் முயற்சியில் வெற்றி யும் பெறுகின்றான்.

பகவான் புத்தரது வாழ்க்கையில் இவ் வற்புதங் காண்கிறோம். போக போக்கி யங்களிலே ஈடுபட்டிருந்த காலத்தில் இறைவனைப்பற்றிச் சிறிதும் சிந்தித்தா ரில்லை. பிறவிப்பிணி அவருக்குப் பிணி யாகத் தோன்றாது போயிற்று. கட வுள் என்ற கருத்தே யில்லாது இந்திரிய போகங்களிலே மூழ்கிக் கிடந்தார். பிறகு என்ன காண்கின்றோம் அவரது வாழ்க்கை யில் ! புத்த பகவான் ஒருநாள் உலகத் தினது துன்ப துயரங்களைக் காண்கின் றார். தாமும் அவ்வித துன்பங்களுக்கு யாதாம் ஒருநாள் ஆளாக வேண்டும் என் பதறிய வருகின்றார். துன்பக் காக்ஷி யும், அவ்வித துன்பங்கள் தம்மை யும் தாக்கும் என்ற எண்ணமும் அவர் வாழ்க்கையைத் தலைகீழாக்கி விட்டது ! அழகிய மனைவியைத் துறந்தார் ! பே ரரசினைத் துறந்தார் ! தம் அருமை மத லையையும் விட்டேகத் துணிவு கொண் டார் ! வானக மேவுகின்றார். கடுந்தபசு புரிகின்றார் ! இவையெல்லாம் ஏன் செய் தார் ! துன்ப நிவர்த்திக்காகவே ! துன் பத்திலிருந்து விடுபட்டதோடு ஏனையோ ரும் விடுபட வழிகாட்டியருளினார். நம் ஒவ்வொருவரது உள்ளத்திலும் அப் புத் தர் இருக்கின்றார். நாம் ஒவ்வொருவரும் அத்தகைய புத்தரே. நம் புத்தத்தன்மை தற்சமயம் ஆசாபாசங்களாகிய உலகப் பற்றுக்களால் மூடப்பட்டுள்ளது; சிற் றின்பத்தில் சிக்குண்டு இருக்கின்றது. இவ்வுலகபோகம் பிறவிப் பிணியை அகற் றாது ; நிலைத்தும் நிற்காது என்பது திரி கரண மூலமாக அறியவரும்போது நம்

முள்ளிருக்கும் இப்புக்தக் தன்மைபெற்று கட்டுக் காவல்களை உடைத்தெறிந்துவிட்டுக் கூட்டைத் தகர்த்தெறிந்த சிங்கம் போல் கர்ஜித்து வெளிவருவோம்.

அவனை யறிய விரும்புவோரிடத்து அவசியம் காணப்படவேண்டிய சில இலக்கணங்கள் இருத்தல் வேண்டும். இன்றேல் கடவுள் அவர்கள் வெறும் வாய்ப் பேச்சளவிலேயே இருப்பன். 'சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை' என்பது பெரியோர் வாக்கு. எனவே இறைவனை எய்த சில உபாயங்கள் அவசியமாகின்றன.

'நித்தியா நித்தியங்கள் திண்ணயம் [தெரிவிவேகம்
மத்திய இகபரங்கள் வருபோகங்களி [னிராசை
சத்திய முறைக்கவேண்டும் சமாதி [யென்று ஆறுகூட்டம்
முத்தியை விரும்பும் இச்சை மொழிவர் [சாதனம் இந்நான்கே'

என்று கூறுகின்றது கைவல்ய நவநீதம். அதாவது: அவனை உண்மையில் அடைய விரும்புபவர், பந்தபாசக் கடலினின்று விடுபட ஆசைப்படுபவர், இது நித்தியம் இது அநித்தியம் என்று பாகுபடுத்தி யறியக்கூடிய விவேக புத்தி யுடையவரா யிருத்தல் வேண்டும். இகபோக பரலோகங்களில் உள்ள ஆசையை விட்டவர்களாகவும், பந்தத்திலிருந்து விடுபடவேண்டும் என்னும் விருப்பம் உடையவர்களாவும் இருத்தல் வேண்டும். அதனோடு மனம் இந்திரியாதிகளை அடக்கியும், சத்தியமாகிய சமய வாழ்க்கையில் அசைக்க முடியாத நம்பிக்கைகொண்டும், உலக நன்மை தீமைகளால் பாதிக்கப்படாதும், மனத்தை ஒருமுகப்படுத்தும் திறன் பெற்றவர்களாகவும் இருத்தல்வேண்டும் என்பதாகும். ஆனல் நாம் உலகில் பெரிதும் காண்பது யாது? இச்சாதனங்கள் சிறிதும் இல்லாது, தம் வாழ்க்கைக்கும் கடவுளுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை யென்ற கருத்துடையவர்களாகி மக்கள் அவனைப் பற்றிப் பேசும்போது, அவர்கள் பேச்சுக்கள் எப்போதும் முரண்பட்டனவாகின்றன. இதில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. இங்கே, எத்தனைபேர் எம்முறையில் கடவுளை வர்ணிக்கின்றனர் என்ற தொகையினைக்கொண்டு நாம் கடவுளின் இருப்பை நிர்ணயித்தல் பேதைமையாகும். இந்த உலக முழுதுமே கடவுளை மறந்த வாழ்க்கையை வாழலாம். அதனல் கடவுள் இல்லாமற் போய்விடுவதுமில்லை; அவனை நாம் தேடவேண்டியதில்லை என்று எண்ணவேண்டியதும் இல்லை. உலகில் பொதுப்பட மக்கள் கடவுளை மறந்த வாழ்க்கையினையே வாழ்கின்றனர் என்னலாம். கடவுளை எய்தவேண்டும் என்று வேட்கை கொண்டழுபவரது வாழ்க்கை அரிதாகவே இருக்கிறது. காரணம் மனிதனது மனதைப்பற்றி யிழுக்கும் இயல்பினதாக வுள்ளது இவ்வுலகம்.

ரு

என்றாலும் மனிதன் மனத்தைக் கடவுள் பால் திருப்பவல்லது வாழ்க்கையில் ஏற்படும் துன்ப துயரங்கள் என்றேம். துன்பம் அதி உச்ச நிலையினை அடையும்போது கடவுள் இருப்பது வெறும் கொள்கை மாத்திரத்தோடு நின்றுவிடுகின்றதில்லை. நமது புத்தியினைக் காட்டிலும் ஹிருதயம் கடவுள் இருப்பை அதிகமாக உணர்கின்றது. அவனையடைய பேரவாக் கொள்கின்றது. அவனுடைய உதவியையும் கருணையையும் பெற்றுக் கஷ்டத்திலிருந்து நிவிர்த்தி பெற விழைகின்றது. ஆனல் நம்முடைய கஷ்டங்களும் பயமும் நம் சரீர சம்பந்தப்பட்டனவாகவே உள்ளன. சரீரமோ தேய்ந்து நாசமுறும் தன்

மையது அதுவே சாவினைக் குறித்து அஞ்சும் சுபாவமுடையது. பொதுப்பட நம் வாழ்க்கை சரீரத்தை ஆதாரமாக உடையதாக இருக்கிறது. ஆகையால் நான் இந்த சட உலக சம்பந்தமில்லாத உயர்ந்த ஒருவரது உதவியைப் பெறுவதற்கு நாம் விழைகின்றோம். ஆகவே நாம் வேண்டும் கடவுள் நமக்கு அந்நியமாக இருப்பதாகக் கருதுகின்றோம். நம்மினும் புறம்பானவர் என்று எண்ணுகிறோம். கடவுள் வைகுண்டத்தில், கைலாசத்தில் இருக்கின்றார்; குற்றம் செய்த விடத்து நம்மை இந்திந்த வகையில் நம்மை அவர் தண்டிப்பார்; அல்லது நன்மை செய்தவிடத்து சொர்க்கபதவி கொடுப்பார். அவர் சிருஷ்டிக்கிறார், காப்பாற்றுகின்றார், அழிக்கின்றார் என்றிவ்வண்ணம் அவரைப்பற்றிக் கூறுகின்றோம். நம்மைப் போன்ற ஓர் உயிர்ப் பிராணி—சக்திமிக வாய்ந்தவர், அவர் இட்டது சட்டம்; பிரபஞ்சம் அவருக்குக் கடமைப்பட்டுள்ளது; அல்லது கடமைப் பட்டவை யாகின்றன; எல்லாம் வல்லவன், எங்கும் நிறைந்தவன், யாவுமறிந்தவன். நம் புத்திக் கெட்டக்கூடிய எல்லாவிதமான இவ்வித உயர்ந்த குணங்களும் கடவுளுக் குண்டென்கிறோம். சிறிது ஆராய்ந்து பார்ப்போமானல் நாம் வணங்கும் இத்தகைய கடவுள் நமது புத்தியினால் சிருஷ்டிக்கப்பட்டவராகவே, நம் புத்தி உருவகப்படுத்திய கடவுளாகவே இருக்கக் காண்போம். கடவுள் தம்மைப்போல் மனிதனை சிருஷ்டித்தார் என்று கிறிஸ்து வேதம் கூறுகின்றது. ஆனால் சில தத்துவ சாஸ்திரிகள் 'கடவுள் தம்மைப்போல் மனிதனை சிருஷ்டிக்கவில்லை; மனிதனே தன்னைப்போல் கடவுளை சிருஷ்டித்துக் கொண்டான்' என்று கூறுகின்றனர். மனிதனைப் பார்க்கிலும் கீழ்த்தரமான பிராணிகள் கடவுளைப் பற்றி எங்ஙனம் கருதுகின்றன என்று யாரே சொல்லமுடியும்? அவைகள் தம் தம் எண்ண உயர்ச்சிக்கேற்ற வகையிலேயே, தமது சுகதுக்கங்களுக் கேற்ற வகையிலேயே அவைகளும் தம் கடவுளை சிருஷ்டித்துக் கொள்ளலாம். மக்களினும் சிலர் மிருகமாக வுள்ளனர். அவர்கள் வணங்கும் கடவுள் நாகரீக மக்களது கடவுளினும் பார்க்க பல விதத்தில் மாறுப்பட்டதாக இருப்பதைக் காணவில்லையா? மக்களது புத்தி வளர்ச்சிக்கேற்ப கடவுளும் உயர்வும் தாழ்வும் பெறுகின்றார். எனவே கடவுளைப் பற்றிக் கருதும் வகையில் அனைவரும் ஒரே நிலையில் உள்ளவராகஉள்ளனர். அதாவது எவரும் தாம்கொள்ளும் கடவுளே உத்தமமானது என்று சொல்வதற்கில்லாத நிலையிலிருக்கின்றனர் என்னலாம். நாகரிகமும் ஒழுக்கமும் மிகுந்த ஒருவன் தன்னினும் கீழ்ப்பட்ட மூடமக்கள் வணங்கும் கடவுளைப்பற்றி எண்ணி நகையாடுகிறான்; தான் கருதும் வகையே உயர்ந்தது, உத்தமமானது என்கிறான். ஆனால் இவனுக்கு இப்போதிருக்கும் பஞ்சேந்திரியங்களோடு ஆறாவதாக ஒன்றும் சேர்க்கப்பட்டால் அப்போது அவன் கடவுள் இப்போதிருப்பதினைப் பார்க்கிலும் மாறுபட்டதாக அல்லவோ காக்ஷியளிக்கும்? முன் வணங்கிய அற்ப கடவுளைப்பற்றி அவன் என்ன எண்ணங்கொள்வான்! இவைகளை எல்லாம் ஆலோசனை செய்யும்போது பிரபஞ்சத்திலிருக்கும் ஒவ்வொருவரும்—புல் பூண்டு முதல் பிரம்மாபரியந்தம், சகல உயிர்களும் கடவுளைத் தத்தமக்குரிய வழியிலே வணங்குகின்றனர். இதனால் கடவுள் இருப்பது வாஸ்தவத்திலும் வாஸ்தவம் என்றதாகின்றது.

இவ்விதக் கடவுள்கொள்கைகள் எல்லாம் தத்வ ரீதியாகப் பார்க்குங்கால் கால் விட்டு ஓடிவிடும் தன்மை வாய்ந்தனவாக இருக்கின்றன. உதாரணமாக கடவுள்

சொர்க்கத்திலிருக்கிறார் என்றால் சொர்க்கம் எங்குளது என்ற கேள்வி எழுகின்றது. கடவுள் எல்லாம் அறிந்தவர் என்றால் அவர் உலகத்தில் ஏன் மேடு பள்ளங்கள், உயர்வு தாழ்ச்சிகள், நன்மை தீமைகள், பாரபக்ஷங்கள் இருக்கக் காண்கின்றோம். தீமை செய்பவர்களை அவர் தண்டிக்கிறார் என்றால் ஏன் அவர்கள் தீமை செய்யும்படிக் காண்கின்றார். அவன் அன்பு மயன் என்றால் உலகில் ஏன் துன்பங் காணப்படுகின்றது. ஆகவே தான் மேனாட்டில் ஆதிகாலத்தில் சமயத்துக்கும் தத்துவ விசாரணைக்கும் ஏதும் சம்பந்தம் இல்லையென்று கூறப்பட்டது.

முன்கூறிய சாதன சதுஷ்டயங்களை யனுஷ்டிக்கும் போது மனிதன் கடவுளை சற்று வேறுவிதமாகக் காண்கின்றான். தான் சரீரம் மாத்திரம் என்று நினைக்கும் வரையில் மனிதன் கடவுளைத் தன்னைப் போன்றவராகவே, ஆனால் தன்னினும் பார்க்க எல்லா விஷயத்திலும் மிகப் பெரியவராக நினைக்கிறான். ஆனால் சாதன சதுஷ்டயங்களால் மனவடக்கம் சிறிது பெற்றவர்கள், தாங்கள் சரீரத்தினும் அப்பாற்பட்டவர்களாகத் தங்களைக் காண்கின்றனர். இச்சரீர சுகதுக்கங்களை அவர்கள் நாடி அலைவதில்லை. அவர்கள், 'சரீரம் அழியும் தன்மையது; தாம் அச்சரீரங்கள் அல்ல; உலக முழுதுமே அழிய நேரினும் தாம் மாத்திரம் அழியாத தன்மைவாய்ந்தவர்கள், தாங்கள் ஜீவாத்மாக்கள், கடவுளின் அம்சங்கள், இந்த நிலையை அடைந்து உலகக் கஷ்டங்கள் எல்லாவற்றினும் விடுபடுவதே சமயம்' என்று கருதுகின்றனர். ஆனால் இங்கும் பல கேள்விகள் எழுகின்றன. மனிதன் ஜீவாத்மன் என்றால் அவன் எப்படி சிருஷ்டிக்கப்பட்டான்? ஏன் சிருஷ்டிக்கப்பட்டான்? தன் துயரங்களும், பலவீனமும் அவனுக்கு எப்படி உண்டாயின? உலகம், கடவுள், மனிதன் இவர்கட்கு என்ன சம்பந்தம்? இவைகள் சிறிது சிரமசாத்தியமான கேள்விகளாக இருக்கின்றன. நமது ஹிருதயம் நாம் இறைவனின், சந்ததியார் என்று கூறுகின்றது; நாம் அவனது அம்சம் என்று கருதுகின்றது. இவ்வித எண்ணங்கள் மூலமாக நன்மையையடைந்து வாழ்க்கை முன்னேற்றம் அடைகிறவரையில் சரியானவைகளாகவே தோன்றுகின்றன. ஆனால் வாழ்க்கையில் ஏற்படும் பல அநுபவங்களால் இம் முன்னேற்றம் தடைபடுகின்றன. தடங்கலே ஏற்படாத வாழ்க்கையுடைய மக்கள் சிலர் உளர். ஆனால் அவர்கள் மிகமிகச் சிலரே யாவர். இவ்வித சந்தேகத்தினால் பாதிக்கப்படும் மக்களே உலகில் பெரும்பகுதியினர். மற்ற அதிர்ஷ்டசாலிகள் ஒன்றிருவரே என்னலாம். ஆகையால் இம்முறைபாடு மனிதனை முற்றும் காப்பாற்றுவதாக இல்லை. இங்கு ஹிருதயமும் புத்தியும் முரண்படுகின்றன. ஹிருதயம் நாம் கடவுளது அம்சம் என்கிறது; புத்தி அதனை ஏற்கிறதுஇல்லை.

ஆத்மீய வாழ்க்கையில் முன்னேற்றம் அதிகமாக அடையும் போது மனிதன் தான் கடவுளின் மயம் என அறியவருகிறான்; 'இருப்பது ஒன்றே; அது தன்மயமே; தான் அதன்மயமே' என்று கூறுகின்றான். மற்றவை யனைத்தும் கற்பனை, பொய்த் தோற்றம் என்கின்றான். 'நான்' என்னும் ஆத்மன் ஒன்றே இருப்பது, மற்றவை அனைத்தும் உண்மையில் இல்லாதன; வெறும் தோற்றங்களே யாகும். நமது சாதாரண வாழ்க்கையில் தோற்றத்தை உண்மையெனக் கொள்ளுகிறோம். நமது நம்பிக்கையும் உற்சாகமும், சுகமும் துக்கமும் அதனையே ஆதாரமாகக் கொண்டு நிகழ்கின்றன. நாம் அந்த உயர்ந்த ஒன்றுந்தன்மையை எய்தும் வரையில், நம் வாழ்க்கையில் ஏற்படும்

துன்பதுயரங்களிலிருந்து நாம் தப்ப வழி யில்லை. இரண்டு என்று எண்ணும்போதே பயத்துக்கு இடமிருக்கிறது; இரண்டற்று ஒன்றாகும்போது பயத்துக்கு இடமேது? யாருக்கு யார் பயப்படுவது? இந்நிலையை யெய்தும் வரையில் மனிதன் மிருகத்தி னின்றும் அவ்வளவாக வேறு பட்டவ னாக மாட்டான். மிருகம் கொம்பு, உணவு இவைகளைக் காணும்போது துக்க மும் சந்தோஷமும் படுகின்றது; மனித னும் அங்ஙனமே இலாப நஷ்டங்களால் பாதிக்கப்படுகின்றான். மனிதன் உயர்ந்த ஆத்மீய நிலையை அடையும்வரையில், அவ னிடமுள்ள இந்த மிருக இச்சையினால் அது எவ்வளவு உயர்ந்ததும் நுண்ணியது மாகவிருப்பினும்--பாதிக்கப்படாமலிருக்க மாட்டான். ஆத்மீய வாழ்க்கையின் எந்த படியிலிருந்தும் மனிதன் இடறிவிழ ஏது உளது. ஆனால் இந்நிலையை அடைந்த பிறகு அவனுக்காபத்தொன்றும் இல்லா தொழிகின்றது. இந்த நிலையன்றி ஏனைய எல்லா நிலையும் மாயைக் குட்பட்டனவே யாம். வேதமும் மாயைக்குட்பட்டதே. சாஸ்திரங்கள் மாயையிலிருந்து வெளிவர வழிகாட்டுகின்றன. ஆனால் அவை மாயை யின் எல்லைக்குட்பட்டனவே.

(தொடரும்)

---

# 'விஜய' நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்

பொதுமக்கட்கு ஞான வாசனையையும் ஞானத்தில் ஊக்கத்தையும் பேரின்பப் பேற்றில் விழைவையும் ஊட்டும் நோக் கத்தோடு இப்பத்திரிகை தொண்டாற்றி வருவதை நேயர்கள் உணர்வார்கள். இத் தகைய தொண்டாற்றும் பத்திரிகைகள் மிகச் சிலவே யாதலின், ஞானக் கட்டுரை களை மட்டுமே வழங்கி வருகின்றது இப் பத்திரிகை. விரிந்த பரந்த நோக்கத்துட னும், மதவெறுப்பு சிறிதும் இல்லாமலும், ஞானக் கட்டுரைகளை இப்பத்திரிகைக்கு வழங்க விரும்பும் அறிஞர்களை எமக்கு அறிவிப்பின், அவ்வாறு செய்யும் அன்பர் களுக்கு யாம் என்றும் நன்றி பாராட்டு வோம். இன்னும், 'விஜய' அன்பர்கள் இன்னின்ன துறைகளில் (மத உண்மை கள், பெரியார் சரித்திரம், பெரியார் சம் பாஷணை முதலிய துறைகளுள்) கட்டுரை களை வெளியிடுதல் நன்று என்பதையும், இன்னின்னவாறு இப்பத்திரிகை புரியும் தொண்டை விசாலப்படுத்தலாம் என்பதை யும் எமக்கு அறிவிப்பார்களாயின், அவர் களது யோசனைகளை இயன்றவாறு தழுவி நடைமுறைக்குக் கொண்டுவர முயல்வதோடு, அவர்கட்கு யாம் கடப்பா டுடையோமாவோம் என்பதையும் வணக் கத்தோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

(ப-ர்)

# நமது சிகர ஜோதி

இப்பகுதியில்:—'ஏசு கிறிஸ்துவின் போதனை'—இம்மாதம் ஏசு நாதரின் ஜன்மதினம் உலகமெங்கணும் கொண்டாடப்படும். அவரது வாழ்வும், போதனையும் மக்களது வாழ்க்கையை உள்ளபடிப் பரிசுத்தப்படுத்த வேண்டுமாயின் அவற்றின் உட்பொருளைக் கண்டு அறிதல் வேண்டும். ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இக் கட்டுரையில் மாகுருவாகிய ஏசு நாதரின் வாழ்க்கை, போதனை இவைகளின் உட்கருத்தைத் தெளிவாக விளக்கியுள்ளார்கள். ஏசுநாதரது வாழ்க்கையே, போதனையாக விளங்கியது என்றும், அன்பு சிரத்தை, மனத்தூய்மை ஆகிய இம்மூன்றும் அவர் போதனையின் முக்கிய அம்சங்கள் என்றும் விளக்கிக் காட்டுகின்றார்கள். 'ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை'—பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் மக்கள் உலகத்தை உய்விக்க பொதுவாக ஸ்ரீவிவேகாநந்த சுவாமிகளையும் மகளிரின் முன்னேற்றத்துக்குச் சிறப்பாக ஸ்ரீ சாரதாமணி தேவியாரையும் யின்றெடுத்தார் என்பது இக் கட்டுரை மூலம் விளக்கப்பட்டுள்ளது. 'ஆத்மீய சாதனைக் கவசியம் தியாகம்'—இக் கட்டுரையில் ஸ்ரீ எதீஸ்வராநந்த சுவாமிகள் சாதகனுக்கவசியமான நானுவித உபதேசங்களை உபதேசிப்பதோடு' முக்கியமாக வேண்டுவதாகிய அகத் துறவினைப்பற்றி வற்புறுத்திக் கூறியுள்ளார். 'மூர்த்தி தலம் தீர்த்தம்'—பிறவிப் பிணியை அகற்ற விரும்பும் மனிதனே மிருகத்திலிருந்து வேறு படுகின்றான் என்றும், அப்பிணியை அகற்ற மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய மூன்றும் வழிகளாக உதவுகின்றன வென்றும் இக் கட்டுரையில் ஸ்ரீகா. இராமநாதன் செட்டியார் அவர்கள் விளக்கிக் கூறுகின்றார். 'அஹிம்ஸை' பிறரது தீய குணத்தை நாம் எண்ணுவதும் ஹிம்சையின்பாற்படும் எனவும், அஹிம்ஸை பழைய காலத்துக்கு ஏற்றது மாத்திரமல்லாது இக்காலத்துக்கும் ஏற்றதாகும் என்றும் இன்று உலகம் போற்றும்படி அஹிம்சையைத் தமது வாழ்க்கையின் தத்துவமாக அமைத்துக் கொண்டுள்ளவரது அஹிம்சை சம்பந்தப்பட்ட கருத்துக்களையும் ஸ்ரீ பரமாநந்த சுவாமிகள் இங்கு தெளிவாக உரைக்கின்றார். 'அவன் எங்குள்ளான்?' 'அவன்' இருக்கும் இடத்தை மக்கள் படிப்படியாக அறிய வந்து இறுதியில் தாமே அவனாக இலங்கும் உயர்தனிக் கொள்கை இக்கட்டுரையில் விளங்க வுரைக்கப்பட்டுள்ளது. 'சந்தேகம் தெளிதல்'—இக்கட்டுரையில் பல கேள்விகளுக்கு விடையளிக்கப் பட்டுள்ளன, ஆரம்ப சாதகர்களுக்கு ஆசன சம்பந்தமாக எழும் சில சந்தேகங்கள் முதற் கேள்வி மூலம் நிவர்த்திக்கப்படுகின்றன. பலர் தினம் விபூதி தரிப்பாராயினும் அதன் உட்கருத்தினை அறிந்து செய்பவர் சிலரேயாகும். ஆணவமலம் நீக்கல், பரிசுத்தம், தியாகம் இவைகளைக் குறிப்பது விபூதி என்று இங்கு விளக்கிக் கூறப்படுகிறது. ஜபம் செய்வதற்கு ஏகாந்தம் அவசியமே என்றாலும் அது வாய்க்காத போது மனத்தினையே ஏகாந்த இடமாகக் கொள்ளல் வேண்டும் என்பதும், உணவு ருசியுடன் சுசியாக இருக்கவேண்டுவதோடு பக்தி சிரத்தையோடு ஞானத்துக்குத் துணைக் கருவியாக உடலைப் போற்றுவதற்காகவே உண வருந்தவேண்டும் என்றும், எது மனப் பரிசுத்தத்துக்கு ஏற்றதோ அத்தகைய உணவினையே ஏற்க வேண்டும் என்பதும், தடித்த ஆணவமலத்தை நீக்கி, மனத்தைக் கனியச் செய்து இறைவனுடன் ஒன்றாகக் கலத்தலையேதேங்காய் பழம் சூடம் இவைகள் குறிக்கின்றன என்பதும். பேரின்பப் பேறாகிய இறைவனை எய்துதலே மானிடப் பிறவியின் இலக்ஷியம் என்பதும் இங்கு விளங்க பிறவும் இங்கு தெளிவுபட விளக்கப்பட்டுள்ளன.

## ஞான மகளிரின் ஏழு பருவங்கள்

**இறைவனுக்கும்** ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பு நாயக-நாயகி உறவினுற் குறிக்கப் படலாம் என்றும், அன்பு நெறியில் நிற்பாரில் ஒரு பகுதியார் இவ்வுறவு முறையினைப் பின்பற்றி இறைவனை அடைவார் என்றும், முன் ஒரு கட்டுரையிற் கூறப்பட்டது. இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள இவ்வுறவு உடலைப் பற்றியதாகாது ஆன்மாவின் உண்மையான இயல்பைப் பற்றிய தாதலின், இது அழியாத உறவாகும்; என்றைக்கும், கட்டுகட்கு உட்பட்டிருக்கும் போதும் முத்தி பெற்ற பின்னும், நிலைத்துள்ள ஓர் உறவாகும். இவ்வுறவினை அழிக்க இறைவனுலும் ஆன்மாவாலும், தனித்து முயன்ருலும் சேர்ந்து முயன்ருலும் ஒண்ணுது. "உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" என்ருள் ஆண்டாள். இறைவன் இதன்படி ஆன்மாவிற்கு மணவாளனுவான்— "ஆடையிலே எனை மணந்த மணவாளா" என்பர் ராமலிங்க சுவாமிகளும். இத் திருமணம் எப்போது நிகழ்ந்தது என்பதை ஒருவரும் அறியார்; 'என்று நீ அன்று நான்' என்ருர் ஒரு மெய்யன்பர். ஆதலின் நாம் பிறக்கும்பொழுதே (நாம் பிறவியெடுக்கும்பொழுதே) நாயகியராய்ப் பிறந்துள்ளோம் என்பதை உணரல் வேண்டும். இறைவன் தனது அருமை நாயகியாகிய ஆன்ம நங்கைக்குப் பரிவோடு பூட்டி யருளிய மங்கல நாணுடனே ஒவ்வொரு ஆன்மாவும் பிறக்கின்றது, பிறவி யெடுக்கின்றது. ஆனுல் அந்த நாண் கழுத்தில் விளங்குவதைக் கண்ணுல் ஆன்மா காண்பதில்லை. (அறிவுக் கண்ணுல் அறிவதில்லை.) ஆயினும் இறைவன் அதை உணர்வான். சந்திரமதி பிறக்கும்பொழுதே கழுத்தில் மங்கல நாணெடு பிறந்தாள் என்றும், அந்த நாண் அவட்கு நாயகனதற்குரியவனுக் கல்லாது பிற ஆடவர்க்கு விளங்காது என்றவரம் உண்டென்றும், அதைக் காண்பவனே அவளது நாயகன் என்று அவள் அறிந்துகொள்ள வேண்டும் என்றும் சிவபெருமானது அருளால் நிகழ்ந்தது என்று நாம் புராணத்தில் கற்றுள்ளோம் அன்ருே? அதுபோல், ஒவ்வொரு ஆன்மாவும் இறைவனுக்கு நாயகி யாதலைக் குறிக்கும் மங்கல நாணெடு பிறந்துள்ளது எனினும், அது இறைவனது கண்ணிற்கு மட்டும் புலப்படுகின்றது; அறியாமையில் மூழ்கியுள்ள ஆன்மாவிற்குப் புலப்படுவதில்லை; அது என்று ஆன்மாவிற்குப் புலப்படுமோ அன்றுதான் அதன் மணவாழ்வு தொடங்குகிறது; அன்பின் மணம் வீசும் வாழ்வு அதுமுதல் தான் ஆரம்பிக்கின்றது. மங்கல நாணைக் காணும்போது, அதைக் கழுத்தில் பூட்டிய கணவனையும் அறியும்; அதன்பின் அவனைச் சார முயலும். இம் மங்கல நாண் வைணவர்கட்குள் எட்டிழையாய் மூன்று சரடா யிருப்பதாகும். சைவர்கட்குள் ஐந்திழையாய் இரண்டு சரடா யிருப்பதாகும். இம் மங்கல நாண் ஒவ்வொருவரது கழுத்தி லிருப்பினும், அதை அறியார்; ஆனுல் இறைவனது தொண்டர்கள் அதை நமக்குக் காட்டல் இயலும். வைணவர்கள் இம் மங்கல நாணைத் திருமந்திரம் என்பர்; சைவப் பெரியார் அதனை ஐந்தெழுத்து என்பர். இதனை ஓர் ஆன்மாவுக்கு அறிவுறுத்துபவர் ஞான குரவரே; அவரே ஆன்மாவுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பைக் காட்டி, இருவரையும் ஒன்று சேர்த்து வைப்பார். அதன் பின்னரே, நாயகனை உணர்ந்த ஆன்ம நாயகி அவனைக் காணவும் உடனிருக்கவும் அளவளாவவும் மெல்ல மெல்ல ஆசைப்படுகிறுள். அதுவரை குழந்தைப் பருவத்தினளாய் இருந்த ஆன்ம நங்கை வரிசையாக ஞான மகளிர்க்குரிய ஏழு பருவங்களையும் முறை

யாகக் காண்டு, முதலில் களவு நெறியில் நின்று இறைவனைக் கூடி மகிழ்ந்து, பின் கற்புநெறி நிற்க விழைந்து, இறைவனது மாவீடாகிய அழியா உலகில் அவனைச் சிறிதும் பிரியாது உடனுறையும் பேற்றைப் பெற்றுக் கற்பு நெறியில் வாழ்கின்றது. இதுவே ஆன்மாவுக்கு "மற்றீண்டு வாரா" மாண் நெறியாகும்.

ஒரு சாதாரணப் பெண்ணிற்கு எழு பருவங்கள் உண்டெனெ நூல்கள் கூறும். அவையாவன:— பேதை, பெதும்பை மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண். இப் பருவங்கட்குரிய வயதுகள் முறையே ஐந்து முதல் ஏழு வரையும், எட்டு முதல் பதினொன்று வரையும், பன்னிரண்டும் பதின்மூன்றும், பதினான்கு முதல் பத்தொன்பது வரை யும், இருபது முதல் இருபத்தைந்து வரையும், இருபத்தாறு முதல் முப்பத்தொன்று வரையும், முப்பத்திரண்டு முதல் நாற்பது வரையும். (வயதெல்லைகளை ஒவ்வொரு பருவத்திற்கும் வேறு வகையாகக் கூறுவாரும் உளர்.) இப்பருவங்கட்குரிய இயல்புகளும் செயல்களும் உலா என்னும் ஒருவகைத் தமிழ்ப் பிரபந்தத்துள் விரிவாகக் கூறப்படும். அம் மரபைப் பின்பற்றியே ஒவ்வொரு பருவத்துக்கும் உரிய இயல்புகளையும் செயல்களையும் காண்பாம். இறைவன், தேவர்கள் முதலியோரோடும் அன்பர் குழாங்களோடும் திருச்சின்னங்கள் ஒலிக்க வீதிக்கு எழுந்தருளிப் பின்னர்த் திருத்தேரில் ஏறி வீற்றிருந்து உலாப் போகின்றான். அப்போது அக் காட்சியைக் காணும் எழுவகைப் பருவ மாதர்களும் தத்தம் பருவங்கட்குத் தக்கவாறு இறைவன்மீது காதல் கொள்கிறார்கள். (வயதுக்குத் தக்கபடி காதலின் வளர்ச்சி காணப்படுவதைத் 'தஞ்சைப் பெருவுடை யாருலா' என்னும் நூலிற் கூறப்படுவதைத் தழுவிப் பின் எழுதப் படுகின்றது.) இறைவனைக் கண்ட பேதை முதல் முதல் அவனைத் தரிசித்ததும், தனது தாயார் முதலியோர் அவனை அஞ்சலி செய்தலைக் கண்டு தானும் அஞ்சலி செய்கிறாள். கள்ளங் கபடமற்ற தன்மையும், நெஞ்சத் தூய்மையும், பிறர் செய்யும் செயல்களைப் பார்த்துத் தானும் செய்தலும் இப்பருவத்திற்கு இயல்பாகின்றன. இறைவனைக் காணும்பொழுதே பேதையின் மனம் சற்றே கவரப்படுவதாயினும், இறைவனது கையிலுள்ள மானைத் தனக்கு வேண்டுமென்று தாயிடம் கேட்கிறாள். பாவையோடு விளையாடுதலும், அதற்குப் பாலூட்டலும் சொறபயிற்றலும், இப்பருவத்திற்கு ஏற்பட்ட விளையாட்டுப் பிரியத்தால் விளைவனவாம். இவ் விளையாட்டிலேயே அன்பிற்கு விதை ஊன்றப்படுகிறது. இறைவன்மீது எழும் பிரியம் விளையாட்டின் மீதுள்ள விருப்பின் மிகுதியால் தனக்கு விளையாடுதற்குப் பயன்படக் கூடிய (அவனது) கைப்பொருள்களின் மீது திரும்புகிறது. பெதும்பைப் பருவத்தில், பாவைமீது முன்பு செலுத்தப்பட்ட அன்பு இறைவன்மீது திரும்பலும், இறைவனைப் பற்றியே சிந்திக்க அவள் விரும்புகிறாள். சிந்தனைக்குப் பேருதவி யாகுமென்று நினைந்து, சித்திரம் எழுத வல்லான் ஒருவனை, இறைவனது சித்திரத்தை வரையும்படி வேண்டுகிறாள். இறைவனை வீதியில் கண்டதும், அவனது பக்கத்திலே உமா தேவியாரைப் போன்று, தானும் அமர ஆசைப்படுகிறாள். இவளது உன்னதமான ஆசையைக் கண்ட தோழியர்கள் "நீ உலக ஆசைகளைவிட்டு அவர்மீது ஆசை வைத்தாயோ?" என்று ஏசலும், நாணத்தால் அவளுடைய விருப்பம் அடங்குகிறது; ஆக அது முற்றுதிருத்தல் பெறப்படுகிறது. அடுத்த மங்கைப் பருவத்தில், இறைவனைப் பற்றிய சிந்தனை, இடைவிடாத சிந்தனையாக வளர்கின்றது.

உலக மக்களோடும் உறவாடுவதில் ஓர் அருவருப்பு உண்டாகின்றது; தனித்திருத்தலும் தனியே உறங்கலும் இவளுக்கு இயல்பாகின்றன; சில வார்த்தைகளையே இவள் பிறரோடு பேசுகின்றனள். இடையறாச் சிந்தனையின் பயனாய் மங்கை கனவில் இறைவனைத் தரிசித்து இன்புறுகிறாள். இவள் இறைவன்மீதுள்ள விருப்பினைத் தெரிவிக்க, இறைவனும் தனக்கு இவள்மீதுள்ள விருப்பைத் தெரிவிக்கிறான்; நனவில் தோன்றுவதாக வாக்களித்துச் செல்கிறான். அவள் உறக்கம் தவிர்ந்திருக்கிறாள். பின் தனது நாணத்தையும் இழந்து தோழியிடம் தன் கனவைக் கூறுகிறாள். பின் நனவில் அவனைக் காணலும், பெருவிடாய் கொண்டு, தன்னைக் காக்கும்படி வேண்டலும், அவனும் 'நல்லது அப்படியே' என்று சொல்லி மறைகிறான். மங்கையும், செவிலித் தாயர் இறைவனை ஏசும்படித் துயரமடைகிறாள்: அடுத்த மடந்தைப் பருவத்தில், ஆசை முற்றி, இறைவனை அநுபவித்தல் இன்றியமையாதது என்னும் நிலையினை அடைகிறது. இறைவனைத் தான் கூடி வாழ்வாள் என்னும் குறிப்பு தோன்றுகிறது. இறைவனைத் தரிசித்ததும், இவள் காம மயக்கங்கொண்டு, தன் நிலைக்குத் தானே இரங்கி, அறிவு நீங்கி அவசமாகிறாள். தோழியர்கள் அவளை வீட்டுக்குக்கொண்டு சென்று சிகிச்சை செய்தலும், அவள் அகங்கரைந்து அழுதலும், இறைவனது நாமஞ் சொல்லிப் புலம்புதலும், பெருமூச்சு விடுதலும் செய்கிறாள்; தன்னையும் தன் மனதையும் பறிகொடுத்ததை உணர்கிறாள். அடுத்த பருவமாகிய அரிவைப் பருவத்திலுள்ள பெண் இறைவனைப் பிரிந்து, தான் ஆறியிருக்க மாட்டாதவளாகி, கிளியைத் தூது விடுகிறாள்; கிளி நாயகனது வரவை உணர்த்தலும், அவனை வீதியிலே கண்டு, பெரும் மயக்கத்துடன் முன்னின்று தனது பிரிவாற்றாமையை முறையிடுகிறாள். தனது நோயை, அவனல்லது வேறொன்றும் ஆற்றாத நிலையை அடைகிறாள். அடுத்த பருவத்துள்ள தெரிவை, இறைவனை வீதியிற் கண்டதும் அவனிடத்து ஈடுபட்டுத் துதிக்கிறாள்; அவனைக் காணும்பொழுது பெருமகிழ்ச்சி கொண்டு பிரியும்பொழுது பெருந்துயர்க்கு ஆளாகிறாள்; 'பிரிவுத் துன்பம் நேரா வண்ணம் அருளுமாறு வேண்டுகிறாள்; 'என்னுடைய நெஞ்சில் எப்போதும் எழுந்தருளியிருத்தல் வேண்டும்' என்று மன்றாடுகிறாள். அடுத்த பருவத்துள்ள பேரிளம் பெண் இறைவன்மீதுள்ள ஆசைக்கு இடையூறாகும் உலக வாஞ்சைகளை முழுதும் துறந்தவளாய், இறைவனையொழிந்த வேறொன்றும் உலகத்தில் இன்பந் தாராது என்னும் ஞான முடையவளாய், பொறாமை முற்றும் ஒழிந்தவளாய், இறைவனுக்கு உவப்பான அன்பு மலிந்த பாடல்களைப் பாடிக் கேட்டும் தானும் பாடியும் மகிழ்ந்து தரிக்கிறாள்: இறைவனைக் கண்டதும், அவனை வணங்கித் தோத்தரித்து, இறைவனுக்குரிய சின்னங்களிடத்தும் திருமந்திரத்தினிடத்தும் மனமுருகி அவைகளைப் பற்றுக்கோடாகக் கருதும் வரத்தைப் பிரார்த்தித்து, தேர் செல்லும் அளவும் பின் செல்கிறாள். பின் தானும் கோயிற்குள் செல்லும் பேற்றைப் பெறாமையால் உயிர் தரியா நிலையினை அடைய, இறைவன் மனமிரங்கித் தன் இன்னுயிர்க் காதலிக்குத் திவ்விய உடலைக் கொடுத்து, தன்னோடும் பக்கத்தில் வீற்றிருக்க அருளி, அவளொடும் கோயிற்கு மீள்கிறான். சுருங்கச் சொல்லில், பேதைப் பருவத்துப் பாவை (பொம்மை)யின்மீது தோன்றும் அன்பே இறைவனாகிய நாயகன்மீது எழும் அன்பிற்கு விதையாகின்றது. பெதும்பைப் பருவத்து இந்த அன்புவித்து முளை

கிளம்பி, மங்கைப் பருவத்துச் செடியாகி, மடந்தைப் பருவத்துப் பூத்து, அரிவைப் பருவத்து மகரந்தஸ் பரிசத்தைப் பெற்று, தெரிவைப் பருவத்துக் காய்த்து, பேரிளம் பெண் பருவத்துப் பழுக்கின்றது. அந்த அன்புக் கனி முற்றிச் செடியில் நிற்கமுடியாத பருவ மெய்தும்போதே, அக்கனியை விளைவித்த இறைவனே அதைப் பறித்துத் தன் இருப்பிடம் கொண்டு சென்று, சுவைத்து இன்புறுகிறான்.

இனி ஞான மகளிரின் ஏழு பருவங்களையும் ஆராய்வாம்; அதற்கு எடுத்துக் காட்டாக நம்மாழ்வாரது மெய்யன்பினைக் கொள்வாம். நம்மாழ்வார் பராங்குச நாயகி எனப்படுவர். நம்மாழ்வாராகிய ஆன்மா இறைவனைக் கண்டதும், அவனது இன்னருளால் அவனை அடையும் ஆசையெழப் பெற்றது. இவ்வாசையின் நிலையே ஆன்ம நங்கையின் பருவத்திற்கு அறிகுறியாக விளங்குகின்றது. இறைவனை முன்னரே மணந்திருந்த ஆன்ம நாயகி அவனை முதன் முதலிற் கண்டதும் ஒருவாறு விருப்பம் எழப் பெறுகிறாள்; அப்போது அபிலாஷை யென்னும் பேதைப் பருவத்தை அடைகிறாள். பின் அவ்விருப்பம் முளைத்து, அடிக்கடி இறைவனைச் சிந்திக்கும் நிலை வருகிறது; அப்போது ஸ்மரணம் என்னும் பெதும்பைப் பருவம் அடைகிறாள். பின் அந்தச் சிந்தனை அடிக்கடி நிகழ்வதாய், நாளடைவில் இடையறாத சிந்தனையாகின்றது; அப்போது ஆன்ம நாயகி அநுஸ்மிருதி யெனும் மங்கைப் பருவத்தை அடைகிறாள். பின் அந்த இடையறாச் சிந்தனையின் பயனாக, இறைவனைப் பற்றிய கனவும் நனவிற் காட்சிகளும் உண்டாக, இறைவனை அனுபவித்தே தீரவேண்டும் என்னும் ஆசை உண்டாகிறது; அப்போது, ஆன்ம நாயகி இச்சையெனும் மடந்தைப் பருவத்தை அடைகிறாள். பின் நாளடைவில் அந்த ஆசை வேறு எவ்வித இன்பத்தாலும் மாற்ற முடியாதபடி முதிர்கின்றது; அப்போது ஆன்ம நாயகி அரிவைப் பருவத்தை அடைகிறாள். பின், உள்ளூறிய ருசியின் பயனாக, இறைவனோடு கூடுதலால் வரும் இன்பத்தையும், அவனைப் பிரிதலினால் வரும் துன்பத்தையும் தவிர வேறு இன்ப துன்பங்கள் இல்லாமற் போகும் நிலை வருகின்றது; அப்போது ஆன்ம நாயகி பரபக்தி யெனும் தெரிவைப் பருவத்தை அடைகிறாள். பின் இம்மாதிரியான உயர்ந்த அன்பினால் இறைவனை உள்ளவாறு உணரப் பெறுதலாலும், இடையிடையே காட்சி பெறுதலாலும், பிரியாது உடன்வாழும் ஆசை கொழுந்துவிட்டெரிய, "அவனைப் பிரிந்து இனி ஒரு கணமும் வாழகில்லேன்" என்னும் நிலை வருகிறது; இப்போது ஆன்ம நங்கை பரம பக்தியெனும் பேரிளம் பெண்ணின் பருவத்தை அடைகிறாள். அப்பருவத்தில் ஆன்ம நாயகியின் விருப்பத்தை நிறைவேற்றுதிருக்க இறைவன் மனஞ் சகியானாய், உடற் சிறையினின்றும் ஆன்ம நங்கையை விடுவித்துத் தன்னொடும் உடனுறையும் பேற்றை அளித்து மகிழ்கிறான். பராங்குச நாயகியாகிய நம்மாழ்வார் இவ்வேழு பருவங்களையும் கடந்து, முடிவில் இறைவனோடு "அந்தமில் இன்பத்து அழிவில் வீடா"கிய உலகில் வாழும் பேற்றைப் பெற்றனர்.

இவ்வுலகில் (அழியும்) உடலோடு வாழும்வரை ஓர் ஆன்மாவுக்குத் துன்பங் கலவாத இடையறாத பேரின்பப் பேறு என்பது வாய்க்க வொண்ணாதது என்பது வைணவரது கொள்கை. இங்கு உள்ளவர்க்குக் கிடைத்தற்குரிய பேறெலாம், இடையிடையே இறைவனை மனக் கண்ணாற் கண்டு மகிழ்தலும், அவனைக் காணாதபோது பெருந் துயரடைதலும் ஆகிய

இவ் வின்பமும் மாறிமாறித் தொடர்ந்து வருதலேயாம். இறைவனை யுகநேரம் கூடினும் அது ஒரு கணப்பொழுதாகத் தோன்றும்படி மகிழ்தலும், இறைவனைக் கணநேரம் பிரியினும் யுகப்பொழுது பிரிந்தாலன்ன துயருழத்தலும் — இவ் விரண்டையும் மெய்யடியார் விரும்புவார். இறைவனைப்பற்றி எழும் துன்பமாதலின், அது உலகத் துன்பத்தைப் போலன்றிப் பேரானந்தப் பேற்றிற்குரிய தாகத்தை வளர்க்கும்; இத்துன்பம் உலகத் தளைகளினின்றும் ஆன்மாவை விடுவிக்கும்; இத் துன்பச் சுடர் 'நான்' 'எனது' என்னும் ஆசைகளை வேரற எரித்துச் சாம்பலாக்கும். இவ்வுலகில் இறைவனை அனுபவிப்ப தெல்லாம்பிரத்யக்ஷமாகக்கண்ணாரக்கண்டு அனுபவிக்கும் அனுபவ மாகாது; பிரத்தியக்ஷம் போன்ற மானஸிக அனுபவமே யாம் என்பர் ஆன்றோர். ஆதலின் இறை யுணர்ந்த மெய்யடியார் நேராகக் காணும் பேற்றுக்காகப் பெருவிடாய் கொள்வர். இவ்விடாய் எழுதற்கு இறைவனைப் பிரியும் துன்பம் ஓர் அருமையான மருந்தாகும். தலைமகன் தனது இருப்பிடத்தை விட்டுப் புறப்பட்டுத் தலைமகளைத் தனியிடத்துக் கண்டு, பிறரறியாத வண்ணம் கூடியிருந்து பின் பிரிதலைப் போன்றது இவ்வுலகில் இறைவனை அனுபவிக்கும் அனுபவம். இந்நெறியைக் களவு நெறியென்பர் அகப் பொருள் நூலோர். தலைமகளைத் தலைமகன் ஊரறிய நாடறியத் தன்னூர்க்கு அழைத்தேகலும், பின் அங்கே அவனைப் பிரியாது ஒன்றாக வாழும் வாழ்க்கை கற்பு நெறி யெனப்படும். இந்நெறியில் பிரிவுத் துயரம் ஒழியும், பேரானந்தமே எஞ்சி நிற்கும். இளம் பெண்ணைச் சின்னஞ் சிறு வயதிலேயே மணந்த காளையன் ஒருவன், அவள் பருவம் நிரம்பி அன்பு முற்றி, 'இனி இங்குப் பிரிந்து வாழின் உயிர் தரியேன்' என்னும் நிலை வந்ததும், அவளைத் தன் இல்லத்திற்கே அழைத்துக் கொண்டு போதலை யொக்கும் இறைவனது செயல். ஆக, இறைவனைக் காதலிக்கும் ஆன்ம நங்கையும் முற்கூறிய ஞான பருவங்கள் ஏழையும் முறையே தாண்டிச் செல்கிறாள்.

---

# மதிப்புரை

ஸ்ரீ துளஸீ ராமாயணம் (பாலகாண்டம் - தமிழ்மொழி பெயர்ப்பு)

**மொழிபெயர்த்தவர் ஸ்ரீ எஸ். அம்புஜம்மாள் அவர்கள்**

விலை 1—4—0.

இந்தியாவின் கலைச்செல்வ நவநிதியங்களில் இராமாயணம் ஒன்று. இந்த ஆதிகாவியம் அமைந்திருக்கும் சமஸ்கிருதம் தேவபாஷை என்று புகழப்படினும் பேச்சு வழக்கிலில்லாது போயிற்று. பெரிய கதையை எல்லாரும் அநுபவிக்க வேண்டுமானால் அது பேசும் பாஷையிலேயே இருக்க வேண்டுமல்லவா ? இந்தக் குறையை தமிழ் நாட்டிற்குத் தீர்த்தவர் பக்த கவியாகிய கம்பநாட்டாள்வார் ; வடநாட்டுக்குத் தீர்த்தவர் துளஸீதாஸர். இந்த ஹிந்தி இராமாயணம் வடநாட்டார் மனதை அள்ளிக்கொண்டிருக்கும் ஒரு பெரிய காவியமாகச் சொல்லப்படுகிறது. காந்தியடிகள், கவி ரவீந்திரர் போன்றவர்களின் அன்பையும் அறிவையும்கவர்ந்துள்ளது. வடநாட்டுக்கம்பரோடு தமிழ் நாட்டார் ஒரு பரிச்சயங்கொள்ள இந்த மொழிபெயர்ப்பு ஒரு வாய்ப்பாக இருக்கிறது. சிவஞானச் செல்வரும் செந்தமிழ்க் கவிஞருமாகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் காசியம்பதியில் கம்பராமாயணப் பிரசங்கங்கள் இந்தி பாஷையில் செய்து வந்தபோது, துளஸீதாஸர் அப்பிரசங்கங்களில் ஈடுபட்டிருந்தார் என்ற செய்தி நூலின் முகவுரையில் குறிக்கப்பட்டுள்ளது. இந்தச் செய்தியை மகாமகோபாத்யாய டாக்டர் சாமிநாத ஐயரவர்களும் தமது கட்டுரை ஒன்றில் எழுதியிருக்கிறார்கள்.

மேற்குறித்தபடி இந்த மொழிபெயர்ப்புப் பிரசாரம் தமிழருக்கு ஒரு நல்ல வாய்ப்பு. நடை தெளிவாக அமைந்திருக்கிறது. புத்தகமும் பார்வைக்கு அழகாக இருக்கிறது.

**குடி நூல் :—(ஆண்டு மலர்)—விலை 4-அணா.**

நாட்டு விருத்திக்கு அறிகுறி நாட்டுத் தொழில் விரிவதாகும். நாட்டுத்தொழில் விருத்தியை நோக்கமாகக் கொண்டு நான்காம் ஆண்டிற் புகுகின்ற ‘குடிநூல்’ ஆண்டு மலர் சிறந்த கட்டுரைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது. புலவர்மணி நாட்டாரையா அவர்களின் ‘உழுதொழில்’ மலரைச் சிறப்பிக்கின்றது. காந்தி யடிகளின் கட்டுரைகள் சில மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அகில இந்தியக் கதரியக்க முன்னேற்றத்தைக் காட்டச் சில புள்ளி விவரங்கள் தரப்பட்டிருப்பது உபயோகமானதாகும். இதில் காணும் பாடல்கள் நன்றாக இருக்கின்றன. சில எழுத்துப் பிழைகள் காணப்படினும் அழகிய தோற்றமளிக்கும் இம் மலர் பயன்தருவதே யாகும்.

**தீனபந்து ஆண்ட்ரூஸ்:—ஆசிரியர்-தி. ஜ. ர.**
பதிப்பாளர் : அல்லயன்ஸ் கம்பெனி.
விலை. 10 அணா.

தீனபந்து ஆண்ட்ரூஸ் இந்தியத்தாயின் பணியிலீடுபட்ட பெரியார்களில் ஒருவர். ‘ஆளும் ஜாதியில் பிறந்தவர்’ ஆயினும் இந்தியரிடம் அவர் கொண்ட பேரன்பும் பெரும் பணியும் மறத்தற்குரியனவாகா. அவரை இழந்ததனால் முதலில் இந்தியருக்குத்தான் பெரிய நஷ்டம். காந்தியடிகள் போன்றோர் புகழும் ஸ்ரீ ஆண்ட்ரூஸின் வரலாற்றை இனிய எளிய தமிழில் எழுதி வெளியிட்டுள்ளவர்களைப் பாராட்ட வேண்டும். புத்தகம் கையடக்க மாகவும் பார்வைக்கும் நன்றாக இருக்கின்றது. தமிழர் போற்ற வேண்டிய புத்தகம்.

—ம. ரா. போ.

## கடிதங்கள்

### (முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முருகன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசீயக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணா 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகானந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப் பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணா 3

---

## ஜகஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணா 12. சந்தாதாரருக்கு அணா 10.

---

# ப ஜ ன ா வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவ தவசியம்.

விலை அணா 12.

## சிகாகோ பிரசங்கம்

இது ஸ்ரீமத் சுவாமி விவேகாநந்தர் அமெரிக்கா தேசத்தில் திருவாய் மலர்ந்தருளிய முதற் பிரசங்கமாகும். நமது இந்து மதத்தின் உயர்வையும் நம்முடைய நாகரிகத்தையும் அமெரிக்கர்களுக்கு எடுத்துக்காட்டி, நமது இந்திய நாட்டைப் பற்றி ஐரோப்பிய மக்களுக்கு இருந்த தப்பெண்ணங்களை மாற்றிய அரும்பெரும் பிரசங்கம் இதுவே யாகும்.

விலை அணா 5, சந்தாதாரருக்கு அணா 4.

---

## முக்தி நெறி

ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தர் இயற்றிய 'Path to Perfection' என்னும் ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு. இனிய செந்தமிழ் நடையில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. முக்தியானது ஒவ்வொரு மனிதனுக்கும் உரிமையான தென்பதைத் தெளிவாய் உணர்த்துவது. விலை அணா 2.

---

## ஈசோபநிடதம்

இப்போதே வெளி வந்திருக்கும் ஈசாவாஸ்யோப நிடதம் என்னும் இப் புத்தகம் தமிழ் மக்களுக்கு மிகவும் பயன்படும். இந்து மதத்திற்கு அடிப்படையா யிருக்கும் பத்து உபநிஷதங்களில் முதலாவதும் முக்கியமானவைகளில் ஒன்றுமான இது தகுந்த முறையில் இப்போதே முதல் முதலாக வெளிவந்துளது. சமஸ்கிருத ஸ்லோகங்களும், பதவுரை பொழிப்புரைகளுடன் அங்கங்கே ஸ்ரீ சங்கராசு குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஹிந்துவின் கையிலும் இப்புத்தகம் இருக்கவேண்டியது அவசியம்.

விலை அணா 6.] [சந்தாதாரருக்கு அணா 4.

தபால் செலவுக்காக பிரத்யேகமாக ஓரணா அனுப்பப்படவேண்டும்.

---





# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உக]  விக்கிரமஹு தைமீ  [பகுதி—க

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின் றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தராற் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அனுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப் பட்டுள்ளது. வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உக | விக்கிரமஹூ தைமீ | பகுதி-க


## பிரார்த்தனை

---

ஐய! நீதரும் அல்லும், மகிழ்தரு
காலை ஒளியும், களைப்பை நீக்கும்
ஓய்வும், உணவும், ஓயாக் காவலும்,
பின்னும் உலகில் பிறங்கு நலங்களும்
பெற்ற நாங்கள் உற்றனம் அடியிணை.
செயத்தகு கடமைகள் செய்யவும் பிறரிடம்
அன்பும் அறனும் அமைந்து நடக்கவும்
செய்வன வாயால் செப்புன எல்லாம்
நாளும் நல்ல அருள்வழி
வளர உந்தன் துணைவேண் டும்மே.

—(இயற்றியவர் தெரியாத '**A CHILD'S PRAYER**'
என்னும் ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப்பட்டது.)

---

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

விஷயவாசனையாகிய காட்டுத்தீயினால் சூழப்பட்டு இறக்குந்தருவாயில் இருக்கும் மமமாகிய மத்யானை 'ராமசரித மானஸம்' என்னும் மடுவிலே வந்து விழுமாயின், அது உய்வடைந்து இன்பமுறும்.

துஷ்டஜன ஸஹவாசமே இப்பொய்கைக்குச் செல்லும் வழியிலுள்ள ஒரு கொடிய மார்க்கம்; அவர்களது சல்லாபமே அங்கே சஞ்சரிக்கும் சர்ப்பம் புலி சிங்கங்கள்; இல்லறத் தொல்லைகளே அங்கு வழியிலுள்ள கடப்பதற்கரிய பெரும் மலைகள்; மோகம் மதம் மாத்ஸர்யம் இறுமாப்பு இவைகளே அங்குள்ள இருண்ட வனங்கள்; குதர்க்கமே அங்கே ஓடும் பயங்கர நதி.

எவர்க்குச் சான்றோர் ஸஹவாசமாகிற வழித்துணை இல்லையோ, கையில் சுரத்தையாகிற கட்டுச்சோறு இல்லையோ, ஸ்ரீராமபிரானிடம் மிகுந்த பிரேமையில்லையோ, அவர்க்கு இந்த 'ராமசரித மானஸம்' என்னும் பொய்கை அடைதற்கு அரிதாகும்.

ஸகுண நிர்க்குணப் பிரம்மங்கட்கு இடையே யாதொரு பேதமும் கிடையாது என்று முனிவர்களாலும் பண்டிதர்களாலும் வேதபுராணங்களாலும் தெரிகிறது. பிறப்பற்றுக் குணரூபங்களற்றுக் கண்ணுக்குப் புலனாகாத அந்த பிரம்மமே பக்தர்களது பிரீதிக்கு வசப்பட்டு ஸகுண பிரம்மமாக மாறுகிறது.

—துளஸீ தாஸர்

---

# தேவியின் திருவாக்கு

( ரா. ராமகிருஷ்ணன் M.A. L.T., மொழி பெயர்த்தது)

[ஸ்ரீ ராமகிருஷ்ணரின் தர்ம பத்தினியாகவும், ஆயிரக் கணக்கான தவப் புதல்வருக்கும் புதல்விகட்கும் அன்னையாகவும் வாழ்ந்த ஸ்ரீ சாரதா தேவியின் சம்பாஷணைகள் ஆங்கிலத்தில் சமீபத்தில் வெளிவந்துள்ளன. அவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடச் சந்தர்ப்பம் வாய்த்துள்ளது. வங்காளி பாஷையில் ஸ்ரீ அரூபாநந்த சுவாமிகள் என்பவர் வெளியிட்ட நூலையே ஆதாரமாகக் கொண்டு இச் சம்பாஷணைகள் வெளியிடப்பட்டுள்ளன. அந்த சுவாமி வெகுகாலம் சாரதா தேவியின் அருகில் இருந்து அவ் வம்மையின் திருப்பணியில் ஈடுபட்டிருந்தவர். சிஷ்யர்கள், சிஷ்யைகளுடைய தினசரிக் குறிப்புகளினின்றும் இச் சம்பாஷணைகள் தொகுக்கப்பட்டன.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த துறவியர் பலர்மீது தமது அருளைப் பொழிந்த தூய அன்னையான சாரதா தேவியின் தினசரி வாழ்வு எத்தகையது என்பதை அறிய விரும்பிய அமெரிக்க பக்தர் ஒருவரின் வேண்டுகோளுக்கிணங்கி நியூயார்க்கின் இராம கிருஷ்ண—விவேகாநந்த ஸ்தாபனத்தின் தலைவராக விளங்கும் சுவாமி நிகிலாநந்தர் இச் சம்பாஷணைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பித்தார். நாளடைவில் வேறு பல அன்பர்களும் இச் சம்பாஷணைகளை எழுத்துப் பிரதியில் படித்து இன்புறவே இவற்றை அச்சிடும் நோக்கம் எழுந்தது.

சாரதா தேவியின் வாழ்வு களங்கமற்ற குழந்தைத் தன்மையது. வாழ்வின் தினசரிக் கடமைகளையே அவ்வம்மை பகவத் பூஜையாகச் செய்து வந்தார். எச் சிறு செய்கையும் அவ்வம்மைக்குத் தெய்வீகத் தொடர்பு உடையதாயிற்று. உலகிற்கே அன்னையான உத்தமி அவர். கைம்மாறு கருதாத அன்பினாலும் மாசற்ற தூய்மையினாலும் பலரைத் தம்மிடம் வசீகரித்து உய்யச் செய்தவர்.

பெண்மையின் உயர்நிலையை எடுத்துக் காட்டுவதற்காகவே ஸ்ரீ ராமகிருஷ்ணர் சாரதா தேவியை ஆக்கினார் என்று கூறலாம். வங்காள நாட்டில் அமைதி நிறைந்த குக்கிராம மொன்றில் ஜனித்து, நவீன நாகரிகத்தையே அறியாத மக்களிடையே வாழ்ந்து, 'பைத்தியக்காரர்' ஒருவரை மணாளனாக அடைந்த சாரதா தேவியார் பாரதநாட்டின் தலைவியாகப் போற்றப் படுகின்றார். பல திறப்பட்ட மக்கள் அவரைக் கண்டு உள்ள நிறைவு பெற்றனர். அவ்வம்மை பல விடங்களுக்கு யாத்திரை சென்று தாமறியாத வேறு பாஷைகள் பேசிய பல ஸ்திரீ புருஷர்களைச் சந்தித்தார். அவ் வனைவரும் அவ் வம்மையைக் குருவாக ஏற்றனர். ஆத்மீயத் துறையில் சொற்களுக்கு அதிக இடமில்லையல்லவா?

தேவியாரின் வாழ்க்கை விசேஷமானதொன்று. தமது சிஷ்யர்கள், உறவினர்களின் நன்மைக்கான தினசரிக் கடமைகளை அவர் ஓயாது புரிவார். அவரது உறவினர்கள் அவருக்கு அளித்த தொல்லைகளுக்கு எல்லையே இல்லை. உதாரணமாக, அன்னையாரின் தம்பி மகளான இராதாராணி அல்லது ராது என்ற பெண் அன்னைக்குக் கொடுத்த சிரமத்திற்கு அளவே

இல்லை. ராதுவின் தாயார் புத்தி நிலை தடுமாறி யிருந்ததால் அப் பெண்ணைப் போஷிக்கும் கடமை அன்னையையே சார்ந்தது. ஆனால் இப் பெண்ணின்மீது அன்னை கொண்ட பாசமானது தாமாக வலியக் கொண்டதேயாம். தமது கடைசிக் காலத்தில் அப்பாசத்தை அன்னையார் அறுத்தெறிந்தார். ராதுவினிடமிருந்து விவரிக்க வொண்ணுத தொந்திரவு ஏற்பட்டாலும் அன்னையார் குன்றாத பொறுமையுடன் இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. கடைசிக் காலத்தில் உடல் நலம் குன்றி யிருந்தபொழுதும் அன்னையார் ஆத்மானந்தத்தில் லயித்திருந்தார். இவை சம்பந்தமான விவரங்கள் பலவற்றை இச் சம்பாஷணைகளில் காணலாம்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் உயிர் வாழ்ந்த பொழுதும் அதன் பின்னரும் அன்னையார் இயற்றிய கடுஞ் சாதனைகளின் காரணமாகவே பிற்காலத்தில் அவர் ஆயிரக் கணக்கானவருக்கு ஞான உணவு அளிப்பது சாத்தியமாயிற்று. அன்னையாருக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் பிரத்தியட்ச தெய்வம் என்பது இச் சம்பாஷணைகளினின்று தெரியவரும்.

தேவியின் திருவாக்கினின்றும் இந்திய மாதரும், உலக மாதரும் அறியக் கிடக்கும் உண்மைகள் பல உள்ளன. பெண்மைக் குணத்தைப் பக்குவப் படுத்தும் வழி யாதென்பதை தேவியார் நமக்குக் காட்டியுள்ளார். பெண்மை எனும் தன்மை அழியாமல் பிரகிருதியில் இருந்து வருகிறது. அத்தன்மையே உருக்கொண்டு சாரதா தேவியாக உலகில் தோன்றி யிருந்தது.]

## முதற் பகுதி

[சிஷ்யை ஒருவரது தினசரிக் குறிப்பினின்றெடுத்தது.]

உத்போதன் காரியாலயம், கல்கத்தா,
1911, ஜனவரி.

வெள்ளியன்று காலை நேரத்தில் ஸ்ரீமான்—கல்கத்தாவில் படல்தங்கா எனுமிடத்தில் இருந்த எங்கள் வீட்டிற்கு வந்து, "நாளைபதினம் (சனியன்று) தூய அன்னையாரை (சாரதா தேவியாரை)ச் சேவிப்பதற்காக பாக்பஜார் செல்லுவோம். புறப்படத் தயாராக இருக்கவும்" என்று கூறினர். ஆகா! தூய அன்னையாரின் பாதங்களில் வணங்கும் பாக்கியம் கடைசியில் எனக்குக் கிட்ட விருந்தது! என் ஆநந்தம் அளவுமீறி யிருந்ததால் இரவில் எனக்குத் தூக்கமே வரவில்லை. சென்ற 14 அல்லது 15 வருஷங்களாக நான் கல்கத்தாவில் வசித்து வந்திருந்தேன். நீண்ட காலத்திற்குப் பிறகு தூய அன்னையாரைச் சேவிக்கும் சந்தர்ப்பம் ஒன்றை எனக்கு அளிக்க அவ்வன்னை திருவுளம் பற்றினர்.

மறுநாள் பிற்பகலில் நாங்கள் ஒரு வண்டியை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு பிரம்மசமாஜப் பெண்பாடசாலையினின்றும் சுமதியை அழைத்து வந்து, பாக்பஜாரில் இருந்த தூய அன்னையாரின் வீட்டை நோக்கிப் புறப்பட்டோம். இந்தத் திவ்விய யாத்திரையின்பொழுது நான் அனுபவித்த ஆவலும் உள்ள எழுச்சியும் விவரிக்க முடியாதவை. பாக்பஜாரில் அன்னையின் வீட்டை அடைந்து, பூஜை அறையின் வாயிலில் அன்னை நின்றுகொண்டிருப்பதைக் கண்டேன். ஒரு காலை வாயிற் படியின்மீதும் மற்றொரு காலை மிதியடியின்மீதும் வைத்துக்கொண்டு அன்னை நின்றுகொண் டிருந்தார். அவர் தலையில் முகமூடி தரித்திருக்கவில்லை. வலது கையைத் தொங்க விட்டுக்கொண்டும் இடது கையை உயர்த்திக் கதவின்மீது வைத்துக்கொண்டு மிருந்தார்.

யாரையோ எதிர்பார்ப்பவர் போல ஆவல் நிறைந்த பார்வையுடன் இருந்தார். நான் அவர் பாதங்களில் வணங்கியவுடன் என்னைப்பற்றி சுமதியை வினவினர். சுமதி என்னைத் தன்னுடைய அக்கா என்று கூறி அறிமுகப் படுத்தினள். சுமதி கொஞ்ச காலமாகத் தூய அன்னையாரிடம் போய் வந்துகொண் டிருந்தாள். அன்னை என்னை நோக்கி, "குழந்தாய்! இதோ பார். இவர்கள் எனக்கு எவ்வளவு தொந்தரவு அளிக்கின்றனர்! என் தம்பி மனைவியும் அவள் பெண்ணுன ராதுவும் காய்ச்சலால் துன்புறுகின்றனர். அவர்களைக் கவனித்துப் போஷிப்பது யாரால் ஆகும் என்று எனக்குப் புரியவில்லை. ஒரு நிமிஷம் நீ காத்திருப்பாயா? என் துணியைத் துவைத்துவிட்டு வருகிறேன்" என்று கூறினர். நாங்கள் அவ்வாறே காத்திருந்தோம். அன்னை சில நிமிஷங்களுக்குள் திரும்பி வந்தார். இரு கைத் தின்பண்டத்தை அளித்து என் தங்கையுடன் பகிர்ந்து கொள்ளும்படி கூறினர். சுமதி பாடசாலைக்குத் திரும்பிப்போக நேரமாய் விட்டது. அதிக நேரம் எங்களால் தங்கியிருக்கக் கூடவில்லை. அன்னையை வணங்கி விடைபெற்றுக் கொண்டோம். "மீண்டும் வாருங்கள்" என்று அன்னை கூறினர். இவ்வாறு ஐந்து நிமிஷ நேரம் அன்னையைத் தரிசித்ததால் என் உள்ளத்தில் இருந்த பேரவா திருப்தி யுறவில்லை. அன்னையைத் தரிசிக்கும் தாகம் அதிகரித்தவளாய் வீடு திரும்பினேன்.

---

# ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளின் அனுபவ அத்வைதம்

(பேராசிரியர், P. N. ஸ்ரீநிவாஸாசாரியார்)

ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளின் சுத்தாத்வைதம் (கலப்பற்ற அத்வைதம்) என்பது அத்வைதத்தைத் தத்துவ விசாரணைக் கண்கொண்டு நோக்குவார்க்கு அத்வைதம் அளிக்கும் காட்சியாகும்; அப்போது அது தன்னைத்தானே விளக்கி நிற்கும்; அது காரண காரிய முறைமையைக் கொண்டோ, சிந்தனைக்கு இலக்காகும் வேருெரு கருத்தினுலோ விளக்கப் படாததாகும். தத்துவமாவது இரண்டற்ற ஒன்றேயாகும்; ஆனல் அது உண்மையில் அளவு வேறுபாடுகட்கும், அறிவில் பல வகைப் படிகட்கும் இடந்தரக் கூடியதாகும். உண்மை யென்பது தன்னையே மேலும் மேலும் அதிகமாகக் காட்டிக் கொடுத்தற்கு வழியாகின்றது; பரம்பொருள் அடையப்படும் வரை, உண்மையைக் காணும் அறிவு வளர்ந்துகொண்டே போகும்; ஆனல் அந்நிலையினை அடைந்ததும், உண்மை தானுக விளங்குவது என்பதும், அதில் படியோ அளவோ இல்லையென்பதும் அறியப்படும். புற உலக சம்பந்தங்களினின்றும் அகவுலக சம்பந்தங்கட்கும், அகவுலக சம்பந்தங்களினின்றும் புற உலக சம்பந்தத்திற்கு அதீதமான நிர்க்குணநிலைக்கும் செல்லும் வழியே அறிவெனப்படும். அறிவின் சஞ்சாரக் கிரமத்தில் முற்கூறிய மூன்று நிலைகளும் அடையப் படுதலை, உலகத்தை ஆளும் மதங்கள் ஒவ்வொன்றின் ஸோபான முறையினும் காணலாகும்; இதுவே துவைதத்தினின்று விசிஷ்டாத் வைதத்திற்கும்.

விசிஷ்டாத்வைதத்திலிருந்து அத்வைதத்திற்கும் ஏறிச் செல்லுதலாம். பௌத்த மதம் கடவுளின் உண்மையைக் கண்டித்து, அதனால் அத்வைதத்திற்குச் செல்லும் வழியைக் காட்டுகிறது. கிறிஸ்தவ மதம், பரமண்டலத்தில் வாழும் பரம பிதாவை, இவ்வுலகிற்கு வெளியே இவ்வுலகிற்கு அப்பாலுள்ள கடவுளாகக் கருதிச் செய்யப்படும் பிரார்த்தனையிலிருந்து தொடங்குகிறது; பகவான் வாழும் உலகம் நமக்குள் இருக்கின்றது என்ற உண்மையைக் கூறும்போது, அவ்வாறு வியாபகத் தன்மை யென்னும் கருத்துவரை அது வளர்கின்றது; "நானும் என் பரம பிதாவும் ஒன்றே" என்னும் கருத்தில் அதன் வளர்ச்சி முடிந்து விடுகிறது. ஆக, வேதாந்த ஞானத்தின் அறுதி நிலையாவது அத்வைதமேயாகும்; அது ஒன்றே முடிவில் தானாக விளங்குவதாகின்றது. ஞான சாதனங்களைப்பற்றிக்கூறும் அனுபவ அத்வைதத்தில் சுவாமிகள், கர்மம் சித்த சுத்தியை உண்டுபண்ணும் என்றும், அதனால் உபாசனைக்கு ஏது உண்டாகும் என்றும், உபாசனையால் ஞானத்திற்கு வழி உண்டாகும் என்றும் பிறர் கூறும் வழக்கத்தைப் பின்பற்றுகின்றன ரல்லர். நான்கு யோக நெறிகளையும் பற்றி விளங்கக் கூறுமிடத்து, அப்பெரியார் 'இஷ்ட' வாதத்தினால் (இஷ்ட நிஷ்டையென்னும் கொள்கையினால்) புதிய கருத்து ஒன்றை உலகிற்கு எடுத்தோதுகின்றார்; அந்நான்கு யோக நெறிகளும் ஒன்றை யொன்று சார்ந்திராது தனித்து நிற்கும் தன்மையையும், சமமாகப் பயனளிக்கும் திறமை அவைகட்கு இருப்பதையும் உணர்கிறார்; யோக நெறியைப் பின்பற்றுபவனது மனப்பான்மைக்குத் தக்கவாறு யாதானும் ஒரு நெறியிற் பற்று உண்டாகின்றது என்று கூறித் தமது கருத்திற்கு, உள்ள நூலின் (உள்ளத்தின் இயல்பைக் கூறும் நூலின்) முறைப்படி நியாயங் காட்டுகிறார். ஒரு மனிதனது மதத்தைத் தீர்மானிப்பது, அவனது மதியேயாகும்; அம் மதியோ உள்ளத்திலே அமையும் ஆற்றலாலும் புறத்தே அமையும் சூழ்நிலையாலும் பாதிக்கப் படுவதாகிறது; ஆதலின் ஒவ்வொருவனுக்கும், தனக்குரிய மதத்தைத் தன் இஷ்டத்திற்கு ஏற்றவாறு தெரிந்தெடுத்துக் கொள்ளும் சுய அதிகாரமுள்ளது. இதனால் ஒவ்வொரு யோகத்திற்கும் இருக்க இடம் அளிக்கப் படுவது மட்டுமல்ல; ஒவ்வொன்றும் அங்கீகரிக்கப்படுகிறது, உள்ளத்தோடு ஒன்றாக்கிக் கொள்ளப்படுகிறது; அன்றியும், ஒவ்வொன்றும், அததற்குரிய முழு எல்லை வரையிலும் பழகப் பட்டுவரின், தனித் தனியே, மற்றொன்றைச் சாராமலே, முக்தியைத் தரவல்லதாகின்றது. உலகம் பொதுவெனப்படும் பாத்யதையை அவாவும் ஒவ்வோர் உண்மை மதமும், கருமத்தில் ஈடுபடுதல், தியானத்தில் ஈடுபடுதல், தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுதல், பக்தியில் ஈடுபடுதல் என்னும் நால்வகை இயல்புகளையும் தனித்தனியே உடையோர்க்கும், சமமாக நன்மை யளிக்கத் தக்கதாகவேண்டும். அம்மதம் மன்னுயிர்க்குத் தொண்டு செய்யும் நோக்கத்தைப் பலப்படுத்த வேண்டும்; இறைவன் மீது பிரேமையால் வெறிகொள்ளும் அளவிற்கு அன்பை ஊட்டவேண்டும்; தியான விருப்ப முடையவனுக்கு உள்ளத்தைப் பிரித்துப் பிரித்துப் பார்க்கவும், உள்ளத்தினுள்ளும் உள்ளத்திற்கு வெளியிலேயும் உள்ள பிரகிருதியை வெல்வதற்கும், வேண்டிய உதவிகளைப் பண்ணவேண்டும்; பௌதிக நூல் ஆராய்ச்சிக்கும் தத்துவ நூல் ஆராய்ச்சிக்கும் ஒளி வீசி நிற்க வேண்டும். யோகம் என்பது புருஷனைப் பிரகிருதியினின்றும் பிரிப்பதல்ல; கரும யோகம், இராஜயோகம், ஞானயோகம்,

பக்தியோகம் என்னும் முறைகள் வழியாக ஆத்மனோடு ஐக்கிய மெய்துவதற்காகச் செய்யப்படும் சாதனமேயாகும். இந்நெறிகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையல்ல, ஒன்றுக்கொன்று துணையாயிருப்பவை; ஒவ்வொன்றும் அதிகாரியின் மனநிலைக் கேற்ப வெவ்வேறு இடங்களிலிருந்து புறப்படுமாயினும், ஒவ்வொன்றுக்கும் முடிவிடமா யிருப்பன, முத்தியெனப்படும் விடுதலையும், அழியாத பேரின்பப் பேறுமே. கர்மயோகமாவது, பிரகிருதியி னிடத்தினின்றும் அதன் குணங்களி னிடத்தினின்றும் பிரிந்து நின்று, கருமங்களனைத்தையும் இறைவனுக்கே சமர்ப்பிக்கும் சாதனமாகும். இராஜ யோகத்தின் நோக்கமாவது, அறிவிற்கு அப்பால் விளங்கும் அனுபூதி ஞானக் காட்சியை விழித்தெழச் செய்தலேயாம். பக்தியோகமாவது, இறைவனும் மனிதனும் ஒருவர்மீதொருவர் அன்பு பூண்டு, முடிவில் இரண்டறக் கலக்கும் ஆனந்த நிலையை எய்துதலாகும். ஞானயோகமாவது, அவித்தையை இல்லையென மறுத்து ஒழித்து, ஜீவ ஈசுவர ஐக்கியத்தை உணரும் ஆன்ம விழிப்பு நிலையாகும்.

கரும நியதி (விதிமுறை) யென்பது, நல்லொழுக்க வாழ்விற்கும் பயன்படுத்தப்படும் காரண காரிய முறைமையேயாகும். வாழ்க்கைக்கு வேராயிருப்பது கருமமே; ஒவ்வொரு நினைவும் சொல்லும் செயலும், சென்ற செயலின் விளைவாயும் வர நிற்பதன் மூலமாகியும் உள்ள கருமத்தின் அதீனமாக எழும் முயற்சிகளாம்; ஆனால் மனிதன் உண்மை யியல்பை நோக்கும் போது சுயேச்சை யுடையவனாகின்றான். பந்தத்திற்கு உட்படும் நெறியையோ பந்தத்தினின்று விடுபடும் நெறியையோ தன் இச்சைப்படித் தெரிந்தெடுத்துக் கொள்ள அவனுக்கு இயலும். கரும யோகம் என்பது ஞான நெறிக்குரிய பயிற்சியாகும். யோகியை அடிமை நிலையினின்றும் அரச நிலைக்கு உய்க்கும் நோக்கத்தோடு அமைக்கப்பட்டுள்ளதாகும். சுறுசுறுப்பு வாதத்தில் அடங்கியுள்ள அறம் அதுவாகும்; அந்த அறத்தின் நோக்கமாவது, பயனை விழையாது கடமையை இயற்றுவதனாலும், ஸ்வ தர்மத்தை அநுஷ்டிப்பதனாலும், ஆராதன ரூபமான ஸேவை செய்வதனாலும் தனக்கெனச் செய்யும் ஆணவ நோக்கைத் துறத்தலாம். நிஷ்காம கர்மமாவது, மிருக சுபாவத்திற்கும் உலக உபகாரமெனும் கருத்துகட்கும் வசப்படாது, கடமைக்காகவே கடமையை இயற்றுதலே. கரும யோகமாவது, கருமஞ் செய்யும்போதே விடுதலை யடைதலாகும்; கருமஞ் செய்விலிருந்து விடுதலை யடைதலன்று. கரும யோகி ஓய்விலாத முயற்சியின் தகைவிற்கும் சுழலுக்கும் நடுவேயும் அமைதியாயிருப்பான். அவன் தோல்வியால் மனத்தளர்ச்சியும் வெற்றியால் மன மகிழ்ச்சியும் எய்தான். கருமத் தளைகட்கு உட்பட்ட ஓர் அடிமையைப்போல் வேலை செய்யாது, எஜமானனைப்போன்று அவன் தொழில் புரிவான். நிஷ்காம கருமநெறி, இவ்வண்ணம் தமோகுணத்தால் எழும் மந்த நிலையும் ரஜோகுணத்தால் எழும் அமைதியின்மையுமாகிய இருபெரும் படுகுழிகட்குள்ளும் வீழ்த்தாமற் பாதுகாக்கிறது; கடமை யென்ப தொன்றையே கருதிக் கடமை அப்போது இயற்றப்படுகிறது. ஆனால் இதுவும் முறைக்காக நடப்பதொன்றுகிறது. ஒரு மறுப்பை உள்ளடக்கிக் கொண்டதாகிறது, நாட்டப்படும் உண்மை யொன்றைப் பெறாததாகின்றது; இக்குறை ஸ்வதர்மம் என்னும் கருத்தால் நீக்கப்படுகிறது. ஸ்வதர்மமாவது :—ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கையில் அவன் அவனுக்குரிய ஒரு நிலை உண்டு;

அவ் வாழ்க்கையில் அவனுக்கு ஏற்படும் சிரத்தையும் அந்தஸ்தும் அவனது மனநிலையையும் ஒழுக்க நிலையையும் நிர்மாணித்துவிடும். அவனுக்கு வந்து சேரும் தொழிலை அன்போடும் முறுமுறுக்காமலும் அவன் செய்வானாகில், அவன் அவனுக்குரிய இடத்தில் நல்லவனாகிறான். கருமத்திற்கு ஒழுக்க சம்பந்தமான மதிப்பை இவ்வளவென்று நிர்மாணிப்பது, கருமஞ்செய்வோனது மனநிலையே யன்றி, அக்கருமத்தின் குறிப்பிட்டதொரு தன்மையன்று; மிதிலை நகரத்து வாழ்ந்த ஊன் வியாபாரியால் அந்தண முனிவனுக்குப் போதிக்கப்பட்ட உண்மை இதுவேயாகும். தெருவைச் சுத்தஞ் செய்வோன் சிங்காதனத் தமரும் மன்னனைப்போன்று பெருமை வாய்ந்தவனாகிறான்; மிதிலையரசராகிய ஜனகர் கருமயோகிக்கு ஒரு லக்ஷியம் போன்றவர் எனப் புகழப்பட்டார். வேடனது பசியை ஆற்றுவதற்காகத் தமது உயிரை ஈந்த பறவைகளைப் போல (கபோத உபாக்கியானத்தில்) பிறர்க்காக வாழும் இல்லறத்தான், அழகிய அரசியையும் அவளது நாட்டையும் உதறித் தள்ளிய அழகு மிக்க இளைய துறவிக்குப் பெருமையில் இளையாவான். புத்தரது துறவு ஒரு பிச்சைக்காரனது துறவைக் காட்டிலும் மேம்பட்டதாகும்; புத்தரது வாழ்க்கை உலக மக்களனைவரிடத்தும் ஒரே மாதிரியாகச் செல்லும் கருணைக்கு ஓர் உதாரணமாகிறது. கருமயோகத்திற்கு ஒழுக்கத்தை உயர்த்தும் மதிப்பு உண்டாவது, கருத்தாவாகும் உணர்ச்சியையோ அஹங்காரத்தையோ இழப்பதிலும், ஜீவபாவனையை மிக நுண்ணிய தாகுமாறு தேய்ப்பதிலும், உலகிற்கு நன்மை பயக்கும் செயல்களை செய்தலாகிய பேற்றை அளிப்பதிலும் அடங்கியுள்ளது.

கருமயோகத்தால் விளையும் ஞான பலனாவது, கருமத்தைக் கடவுளின் வழிபாடாக மாற்றுதலே. கருமயோகம் ஆன்ம உணர்ச்சியை எழுப்புகிறது, இறைவனை நோக்கிச் செல்லும்படி ஆன்மாவைத் தூண்டுகிறது. எல்லாக் கருமங்கட்கும் உண்மையான கருத்தா இறைவனே தான்; ஆதலின் ஒவ்வொரு செயலும் இறைவனிடத்து 'பிரம்மார்ப்பண'மாக சமர்ப்பிக்கப்பட வேண்டியதாகிறது. இறைவனோடு ஒத்துழைத்து, அவரது சங்கற்பத்தை நிறைவேற்றுவதற்காக அவர்க்குத் துணைபுரிவது என்பது, வேதாந்த ஒழுக்க முறைக்கு அன்னியமானதாகும்; அதைச்சுவாமிகள் பெரும் பாதகமான அபசாரமான செயலாகக் கருதித் தள்ளிவிடுகிறார். அது பரோபகாரம் என்னும் பொய் வேடம் புனைந்து வந்து ஏமாற்றும் சுயநயமேயாகும். மேலும், பலர் ஒன்றுகூடி ஒத்துழைத்துப் பணிசெய்தல் என்னும் கருத்தில், பூலோகத்தை வைகுண்டமாக்கி விடலாம் என்னும் மனப்பான்மை உள்ளடங்கியிருக்கின்றது. அதனால் மதத்துவேஷம் வளர்ந்து, பல மதத்தினர்க்குள்ளும் இருக்கவேண்டிய பரஸ்பர பரிச்சயத்தைக் கெடுத்து விடுகிறது. உலகம் நல்லதுமன்று, கெட்டதுமன்று; நாய் வாலைப் போன்ற அதை நிமிர்த்தி நோக்கல் இயலாத காரியமாகும். கருமயோகம், தீமையை எதிர்த்தற்கு உண்மையான நோக்கமாவது தீரகுணத்தை வளர்த்தலே என்பதை எடுத்துக் காட்டி, அக்குணத்தை வற்புறுத்துகிறது. தீமையே அழிக்கப்பட வேண்டும், தீமையுடையோனுக்கு ஹிம்சை செய்யக் கூடாது என்ற அஹிம்சைக் கொள்கை (அல்லது எதிர்த்தலை விடுத்தல் எனும் கொள்கை) இல்லறத்தானுக்கு (மனுநூலின் முறைப்படி) செய்ய ஒண்ணாத காரியமாகும். அஹிம்சையை அனைவர்க்கும் பொதுவானதாக்கக் கூடாது; அதை ஒரு பெரும் அறமாகக் கருதுவதன் காரணம், அது சிறப்பாக ஏதோ

ஒரு சிலரிடத்து அமைவதுதான்; மேலும் நீரனு யிருப்பவன்தான் அஹிம்சையை அனுஷ்டிக்கத் தகுதி யுள்ளவனுவான். கருமயோகத்தின் ஆரம்ப நிலைகளில் தீமையை எதிர்த்தலும், அதற்கு மாருகத் தீமை செய்தலும் அவசிமாகும்; உண்மை யான கருமயோகி உலகத்தில் இருப்பினும் உலகச் சேற்றினுல் மாசடையாதவனு கிருன். தெய்வீகமான மனிதனே தீமை செய்பவனே மன்னித்து, அவனே ஸாத்விக குணமுடையவனுக ஆக்கக்கூடும். அவன் உலக நன்மைக்காகப்பாடு படுபவனுகிருன். ஆயினும் வாழ்க்கையாகிய நாடகத்தில் ஒரு சாக்ஷியாக இருக்கிருன். சுகப் பிரம்ம ரிஷி தமது மனத்தை இறைவனிடம் ஒப்புவித்திருந்தார்; ஆயினும் எண்ணெய் நிறைந்த ஒரு கிண்ணத்தை ஏந்திக் கொண்டு, மனதை மயக்கி இழுக்கும் பல வகையான சோதனைக் குட்பட்டும் ஒரு சொட்டு எண்ணெயையும் கீழே சிந்தாமல் மிதிலை நகரைச் சுற்றி வந்தார்; முற்கூறிய சாக்ஷி நிலையிலிருக்கும் கருமயோகி சுகப் பிரம்மத்தைப் போலுள்ளான். கரும யோகத்திற்கு இலக்ஷிய புருஷனு யிருப் பவன் ஜன ஸமூகத்திற்கு ஊன்று கோலாக விளங்குகிருன்; சமாதி நிலையில் ஏற்படும் அதீத அனுபூதி நிலையிலும் பிரேமை பக்தியால் விளையும் பேரின்ப வெள்ளத்து மூழ்கியிருக்கும் நிலையிலும் கருமயோகம் புரிதல் இயலாத காரியமாயி னும், உயர்ந்த கருமயோகி துறவியினும் மேலான நிலைமையி லுள்ளவனுகிருன்.

(தொடரும்)

---

# அஹிம்சா சக்தி

[சுவாமி பரமானந்தர்]

உனக்கு அண்டையி லிருப்பவனே, உன்னை நேசிப்பது போலவே நேசி" என்று பணித்தார் கிறிஸ்து நாதர்; மஹாத்மா காந்தி, "ஒவ்வோர் உயிரும் உனக்கு அண்டையி லிருப்பதுவே" என்று கூடச் சேர்க்கின்றனர். பின்னும் காந்தியடிகள் கூறியருளுவதாவது:— "அஹிம்சை இம்சைக்கு எல்லையற்று மேலாகிறது; மன்னித்தல் தண்டனையை விட மிக்க ஆண்மையைக் காட்டுகிறது. தீங்கிழைப்பான் ஒருவனது சங்கற்பத் திற்குச் சாந்தமாகப் பணிந்து ஒழுகுதலை அஹிம்சை உள்ளடக்கிக் கொண்டிருக்க வில்லை; கொடுங்கோன் மன்னனை எதிர் த்து ஒருவனது ஆன்மசக்தி முழுமையை யும் செலுத்துதலை அது உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றது. வாழ்க்கையிற் காணும் விதிக்கு அடங்கி வேலை செய் யின், ஒரு தனி மனிதனுக்கே ஓர் அநீதி வாய்ந்த பேரரசின் வல்லமை முழுவதை யும் எதிர்த்து நிற்றல் இயல்வதாகும். அந்த ஒருவனே அப்பேரரசின் வீழ்ச் சிக்கோ அதன் மறுமலர்ச்சிக்கோ அடி கோலுவதும் இயல்பதாகும். அஹிம் சையை இயக்க நிலையில் காணும்போது, அது தெரிந்து வருந்துதலாகப் பொருள் படுவது அறியப்படும். தன்னையே பலி கொடுத்தல் என்னும் பண்டைய கருத்தை அதாவது வருந்துதல் என்னும் விதியை- இந்தியர்க்கு முன்பு எடுத்தோத யான் துணிந்துள்ளேன். ஹிம்சைக்கு நடுவே அஹிம்சை யெனும் ஒழுங்கொன்று வாழ்வதைக் கண்டுபிடித்த இருடியர் நியூ டனைக் காட்டிலும் பெரிய மேதாவிகளும்,

வெல்லிங்டனைக் காட்டிலும் பெரிய வீரர்களும் ஆவார். ஆயுதங்களின் பயனைத் தாங்களே நன்கு அறிந்தும் அவைகளின் பயனற்ற தன்மையைம் "உணர்ந்து உய்யும் வழி அஹிம்சையே என்று போரில் அலுப்படைந்த உலகத்தார்க்குப் போதித்துள்ளனர். அஹிம்சை யெனும் மதநெறி இருடியர்க்கு மட்டுமல்ல உலகமெங்கும் உள்ள எல்லாத் தேசங்களையும் சார்ந்த சாதாரண மக்கட்குமே என்பது எனது முடிவாகும்."

இது நமக்கு புத்தபகவானை நினைவூட்டுகிறது; அப்பெரியார் தம்மைப் பின்பற்றியவர்க்குக் கூறியதாவது:—"சாந்தம் கோபத்தையும் வெல்லும்; பகைமையைத் தன் போன்ற ஒரு துணைவனாகத் தன்றுடன் அழைத்து வராத அன்பு எதுவோ, அந்த அன்பே பகைமையையும் பொறுமையையும் இவை போன்ற பிறவற்றையும் கரைத்து அழித்துவிடும்." இத்தகைய போதனை பயன்படாதுபோனமை தற்கால வாழ்க்கையில் அடங்கியுள்ள மிகப் பெருந்துயரமாகின்றது. நமக்கு அப்போதனையில் நம்பிக்கை யில்லாமற் போனால், நாம் அதைப் பழகிப்பார்த்து, நமக்குள்ளே அது அற்புதங்களை விளைக்க இடம் கொடுக்காமற் போனால், அக்கொள்கை எப்படி வெற்றியடைய முடியும்? இத்தகைய கொள்கைகள் பலமற்ற, கோழைத்தனமுள்ள, முதுகெலும்பற்ற மக்கட்கே தகுதியானவை யென நினையாதேயுங்கள். மிகமிக உயர்ந்த நல்லொழுக்க முடையராய், ஒழுக்கத்தால் விளையும் போராண்மையும் சலியாத வீரமும் உடையராய் இருப்பவர்களே இக்கொள்கைகளை வெற்றிகரமாகப் பின்பற்றக் கூடும். மதமும் ஞானமும் பலவீனர்க்கே என்றும், பலாத்காரமும் வலிமையும் ஜனஸமூகத்தில் வாழும் பலமுடையார்க்கே என்றும், பலமுறை நாம் கூறக்கேட்டுள்ளோமன்றோ? உலகத்தார் கைக்கொண்டுள்ள மதிப்புத் திட்டங்களின்படி காந்தியடிகள் பலமற்ற அற்பமான மனிதரே யாவர்; ஆயினும், தமது உள்ளங்கையில் அவர் கோடிக்கணக்கான மக்களின் விதியை அடக்கி வைத்துள்ளனர்; காரணம் யாது? அவரை ஒரு சக்திமானாகவும் பிரார்த்தனையில் ஈடுபட்டவராகவும், நம்பிக்கைக்கும் விசுவாசத்திற்கும் உரிய பாத்திர மாகவும் அம் மக்கள் அவரைக் கருதுகின்றனர்.

பகைமை யென்பது ஒரு கெட்ட நோய். அது நம்மைப் பற்றிக் கொண்டதும் உள்ளத்தில் விரைவாகப் பரவி, நமது ஒழுக்க வேர்களையே அழித்து விடுகிறது. அது எப்போது நமது உயர்வான கொள்கைகளையும் இலக்ஷியங்களையும் சிதைத்தழிக்கும் என்பதை நாம் ஒரு போதும் அறிய மாட்டோம்; அக்காரணத்தால் அந்நோய்க்கு மதத்திலும் மனிதருள்ளத்திலும் இடங் கொடுக்கக் கூடாது. நாம் உண்மையை உள்ளவாறு ஒப்புக்கொள்ளுதலே யோக்யதையாகும்; நாம் மிகவும் பெருமை பாராட்டிக்கொள்ளும் நாகரிகத்தில் அதன் உயிருக்கே ஆபத்தான யாதோ ஒன்று உள்ளது என்பதை நாம் உணரவேண்டும். அவ்வாறு இல்லாவிடில், மெலிந்த ஜாதியாரைப் பிறஜாதியார் தம்மைப் பெருமைப் படுத்திக் கொள்ளவும் தமது நாடுகளை பெருக்கிக் கொள்ளவும் முயலமாட்டார். நமது ஆட்சி முறைகள் சரியான ஞானக் கொள்கைகளை ஆதாரமாகக் கொண்டு நிலை நாட்டப்பட்டிருக்கு மாயின் பண ஆசையும் உடைமைகளின்மீதும் பெருக்கத்தின் மீதும் உள்ள பேராசையும் அரசாங்கங்களைக் குடைந்து அவைகளின் உயிரை உண்டிருக்கமாட்டா. உலக முழுவதும் ஆசையோடு நாடிக் கொண்டு வரும் சமாதானத்தையும், ஆபத்தில்லா நிலைமையையும், அறி

வோடு கூடிய வாழ்க்கையையும் அளிக்க அரசாங்கங்கள் ஏற்பாடு செய்திருக்கும்.

அஹிம்சை பழக வேண்டியது மனிதர்களுடன் உறவாடும் போது மட்டுமல்ல; தாவர உலகத்திலும் விலங்குலகத்திலும் கூட நாம் அஹிம்சையோடு உறவாட வேண்டும். நமது உடலுக்கும் ஒழுக்கத்திற்கும் ஊறு விளைவித்துக் கொள்ளாமல் நாம் மிக அற்பமான உயிர்ப்பிராணிக்கும் மனப்பூர்வமாக இம்சை உண்டு பண்ண முடியாது. பகவானுக்கு அருகே இருப்பவர் பிறரது வருத்தத்தையும் துயரத்தையும் கூர்மையாக உணர்பவராவர். முன் ஒருக்கால் ஒரு கொடூர நெஞ்சுடைய மனிதன் தனது மாட்டைத் தடியால் அடித்த போது ஸ்ரீ ராமகிருஷ்ணரது முதுகின் மேல் அடியின் தடங்கள் பதிந்தன. இன்னொரு சமயம் ஒரு செடியினின்றும் ஒருவர் சில பூக்களை முரட்டுத்தனமாகப் பறித்துக்கொண்டிருப்பதைக் கண்டதும், வருத்தத்தால் அலறிக் கடுமையான கண்டிப்பு மொழிகளைக் கூறினர். அவர் கூறிய மொழிகளாவது:— "நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? குழந்தாய், நீ செடிகளுக்கு ஹிம்சை செய்யும்போது, எனக்கு ஹிம்சை உண்டாகிறது என்பதை நீ அறியாயோ?" இம்மொழிகளைக் கேட்ட சிறுவர் பேராச்சரியங் கொண்டார். குருதேவர் அவரிடம் அவ்வாறு கூறும்வரை, ஒரே தெய்வம் அனைத்துயிர்ப்பொருள்கள் வழியாகவும் உயிருடன் உலவிக் கொண்டிருப்பதையும், அக்காரணத்தால் மிக உயர்ந்த பக்குவமடைந்த ஆன்மாக்கள் எல்லாச் சித்துப் பொருள்களின் துன்பத்தையும் கூர்மையாக உணரக்கூடும் என்பதையும், அதுவரை அவர் அறிந்ததில்லை. நமது ஞான வாழ்க்கை மேலும் மேலும் ஆழ்ந்து செல்லும் போது நமக்கும் அவ்வாறு நிகழும். உலகத்திலுள்ள மக்களது துன்பமெல்லாம் நமது துன்பமாகும்படி நாமும் அவ்வளவு நுட்பமான உணர்ச்சியுடையவராவோம். இயேசு கிறிஸ்து ஜெருசலத்தைக் குறித்துக் கண்ணீர் சிந்தி, "ஜெருசலமே, ஜெருசலமே, ஒரு தாய்க்கோழி தன் குஞ்சுகளை ஒன்று சேர்த்துக் காப்பதுபோல, எத்தனை முறை நான் உன்னைக் கூட்டிப் பக்கத்துவைத்துக்கொள்ள விரும்பினேன்! ஆனால் நீ அதற்கு இணங்கவில்லையே!" என்று உரக்கக் கூவினார். தற்கால உலக நிலைமையைக் குறித்துக் கிறிஸ்துவும் புத்தரும் ஸ்ரீராமகிருஷ்ணரும் எவ்வளவு மனமுருகியிருப்பர்! நமது சகோதர மக்களைக் கொல்லுவதற்காகவும் அங்கஹீனராக்குவதற்காகவும் மக்கள் கொலைக் கருவிகளை இயற்றிக் கொண்டு வருவதைக் கண்டால் அவரது மனம் எவ்வளவு பதைபதைக்கும்? ஆயினும், போரின் கர்த்தாக்கள் அத்தகைய பெரியார்களைச் சரியான நிலைமையிலிருப்பவர்களல்லர் என்றும், கோணிய வழியைப் பின்பற்றுபவர்கள் என்றும் உணர்வார்களன்றோ? ஆனால் உண்மை யாது? போர் நினைவிலேயே மூழ்கியிருக்கும் இக் கர்த்தாக்களே முறைக்கு மாறாக இருப்பவர்கள்; இவர்களே மயக்கத்திற்கு உள்ளாகி, வல்லான் வகுத்ததே நீதி யென்றும், ஆயுதபலத்தைக் காட்டிலும் வேறொரு பாதுகாப்பு இல்லையென்றும் நம்பிவருகிறார்களன்றோ? ஒன்றுக்கும் உதவாத இந்த மயக்க எண்ணத்தை ஒழிக்க ஏதாவது நாம் செய்வோம். நாம் விழிப்படைந்து உண்மையைக் காணுதற்கும், நமது தவறான கருத்துக்களைப் போக்கிக்கொள்ளுதற்கும், நமக்கு ஞானியரது பெருந்துணை வேண்டும். இன்று நாம் அனுபவ வாழ்க்கைக்கு உதவாதது என்றும் அலித்தனம்என்றும் கருதுவதை ஒரு நாள் அறிவு உதயமாகும்போது, மிக மதிப்புடையதாகக் கருதுவோம்.

காந்தியடிகள் கூறுவதைச் சற்றே கவனிப்போம். அவர் ஒரு பெருஞ் சக்தியைப் படைத்திருக்கிறார். அனைவர்க்கும் கலமளிக்கக் கூடிய ஒரு சக்தியை அவர் உண்டாக்கி யிருக்கிறார். அவர் கூறுவதாவது:—“மனித வர்க்கத்தினர்க்கு அறிகுறி துயரமே. இது அழியாத ஓர் சட்டம். தாய் தனது குழந்தை உயிர்வாழுமாறு வருந்துகிறாள். உயிர் வாழ்க்கை மரணத்தினின்றும் வருகின்றது. கோதுமை வளர்வதற்காக அதன் விதை அழுகத்தான் வேண்டும். துயரம் என்னும் நெருப்புக்குள் புகுந்து தூய்மையடையாதபடி எந்த நாடும் மேன்மை எய்தியதில்லை. உண்மையை உரைப்போமாயின், துயரம் என்பதே நமது வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒரு நிலைமையாகின்றது. நாம் அனுபவித்துள்ள துன்பத்தின் அளவைக் கொண்டே நமது முன்னேற்றம் அளிக்கப்படல் வேண்டும்.” இக் கொள்கையை மேற்றிசை நாகரிகத்தைப் பருகியுள்ள சிலர் சரியான கொள்கையன்று என்று கூறலாம்; ஏனெனில், துயரத்தை இது இவ்வளவு வற்புறுத்துகிறதாதலின். ஆயினும் தன்னலத் தியாகம் தன்னைத் துயருறுத்தல் என்னும் செயல்களில் அடங்கியுள்ள கொள்கையை நாம் ஓரமற்ற நெஞ்சத்தில் வைத்து நிறுத்துப் பார்த்து மதிப்பிடுவோமாயின், இன்னிய ஒழுக்கத்திற்கு அடிகோலுவது அதுவே என்பதை நாம் ஒப்புக்கொண்டாக வேண்டும். தன்னலத்தைத் தியாகம் பண்ண அஞ்சுபவன் எவனும் நமது மேன்மையான விதிக்கு இணங்க ஒழுகும் பேற்றைப் பெறமுடியாது.

ரோமெயின் ரோலண்டு என்னும் பிரெஞ்சுக்கார அறிஞர், “இந்தியாவிற்கு மேன்மைக்குரிய பாத்யதையை அளிப்பது அதன் அஹிம்சா தர்மமே. அதை இந்தியா கைவிட்டுவிடுமாயின், அது தோல்வியே யடையும்” என்று கூறுகிறார். பலர் என்னிடம் “நான் யாருடன் பழகுகிறேனே அவர்கள் எனக்குத் தீங்கு செய்வாராயின், நான் எவ்வாறு அவர்களை நேசிப்பது?” என்று கேட்கின்றனர். உங்களால் முடியும் என்றே யான் பதிலளிக்கிறேன். “எவ்வளவுக்கு எனக்குத் தீங்கு செய்கிறார்களோ, அவ்வளவுக்கு நான் அதிக அன்பை அவர்கள் மீது பதிலாகச் செலுத்துவேன்” என்று புத்தபகவான் அருளிச்செய்தனர். யாரோ ஒருவர் உம் மீது கெட்ட எண்ணங்களையே செலுத்திக் கொண்டு வருவதாக நீர் அறிவீராயின், அவர்மீது நல்லெண்ணங்களையும் ஆக்கந்தரும் எண்ணங்களையும் அனுப்பி அக்கேட்டுக்கு ஈடுசெய்துவிடும். யாரேனும் ஒருவர் உம்மீது பகைகொண்டிருந்தால் பலமான அன்பு எண்ணங்களை அவர் மீது செலுத்திக்கொண்டிரும். அந்தப்பகை அதனால் ஈடுசெய்யப்படுவதுமன்றி, முழுதும் அவரோடு சமாதானம் ஏற்பட்டு விடுவதற்கேற்றபடி ஆச்சரியமான பலன்கள் உண்டாவதையும் நீர் காண்பீர். “ஒரு மிருதுவான பதில் மொழி கோபத்தையும் மாற்றிவிடுகிறது” என்று கிறிஸ்துவ வேதம் கூறவில்லையா?

ஒரு மஹானைப்பற்றிக் கூறும்போது, “அவரது முகத்தினின்றும் ஒளி வீசுவது போலத் தோன்றுகிறது; அதனிடத்து நல்லொழுக்கத்தின் முத்திரை காணப்படுகின்றது” என்று சொல்வதைப் பன்முறை கேட்டுளோம். ஓர் உயர்ந்த இலக்ஷியத்தைப்பற்றித் தியானிப்பதினாலும், அதன்மீது பக்தி கொள்வதினாலும், நன்மையை உண்டுபண்ணக் கூடிய சக்தியொன்று திட்டமாக உண்டாகிறது. அத்தகைய மனிதரிடத்து ‘நான்’ இறந்துவிடுகிறது; உலக முயற்சிகளனைத்தையும் அவர்கள் கைவிட்டு, முழுதும் தம்மைப் பகவானிடமே ஒப்புவித்துவிட்டு, பிறமனி

தர்கட்குத் தொண்டு புரிவதிலேயே தமது வாழ்க்கையைச் செலவிடுகின்றனர். இவ்வாறு 'நான்' இறத்தல் சாவாமைக்கு வழியாகின்றது. அஹிம்சை சரணாகதியென்னும் கொள்கைகளை ஆதாரமாக வைத்துத் தமது வாழ்க்கைகளைக் கட்டுபவர் அழிவற்ற ஆனந்தத்திற்கு நெறிகாட்டுபவராவார். எதனாலும் அழிக்க வொண்ணாத ஞானத்தையும் பலத்தையும் மனதைரியத்தையும் அவர்கள் பெறுகிறார்கள். நாம் பல உண்மைகளைப்பற்றிக் கேள்விப்படுகிறோம், வாசிக்கிறோம்; இவைகளின் தன்மையைச் சோதனை வாயிலாக அறிவதற்கு ஒருசிலரும் முயற்சி எடுத்துக் கொள்ளாததும், சோதனை செய்வதற்கு வேண்டிய நம்பிக்கை இல்லாமற் போவதும் என்ன காரணத்தாலோ என்பது தெரியவில்லை. "ஒருமனிதன் அஹங்கார பலத்தால் வற்புறுத்தாது போவானாயின், அவனது நன்மைகளை வேறு யார் கவனிக்கப் போகின்றனர்" என்று சாதாரண மக்கள் உலகியல் ஞான உபதேசம் செய்வார் என்பதை நான் நன்கு அறிவேன். ஞானக் கொள்கைகள் உண்மையாகவே வேலைசெய்து பயனளிக்கும் என்பதைக் கண்டால் நீங்கள் எவ்வளவு ஆச்சரியப்படுவீர்கள்! ஞானசாதனங்கள் அனுபவ வாழ்க்கையில் பயனளிக்குமோ என்ற சந்தேகமே நமக்கு ஞானமார்க்கத்தில் மிகப் பெரியதோர் இடையூறாக நிற்கின்றது; இதை வென்று அப்பாற் செல்லுதலே முதலில் நமக்கு வேண்டியதாகும்.

---

# இராமாயண சார விளக்கம்

(P. முத்தையா பிள்ளை)

இராமாயணம் என்ற சொல் இராம + அயனம் எனப் பிரிக்கப்பட்டு இராமனைப் பற்றிய சரிதம் எனப் பொருள்படும். இராமாயணம் இதிகாச புராணங்களிலொன்று. இதிகாச புராணங்கள் வேதங்களில் மறை பொருளாய்விளங்கும் தத்துவங்களைச் சாதாரண மக்கள் எளிதில் தெரிந்து கொள்ளுவதற்காக அறிவிற் சிறந்த பெரியோர்களால் எழுதப்பட்ட கதைகளாம்.

இராமாயணம் இயற்றிய பெரியார் வால்மீகி ரிஷியாவர். நெடுநாள் தவம் புரிந்து கொண்டிருந்த இவர், தாம் கண்ட காட்சியைக் குறித்துப் பாடிய பாட்டுக்களே இராமாயணமாகியது. இவர் பாடியது 24,000 சுலோகங்கள் (வட மொழியில் இருவரிப் பாட்டுக்கள்) ஆகும். இவர் சொன்ன கதையையே முதல் நூலாக வைத்துக்கொண்டு தமிழில் கம்பர் 4-வரிப் பாட்டுக்களாக 12,000 பாட்டுக்கள் பாடியிருக்கிறார். இப்போது இவ்விரு ஆசிரியர்களின் பெயராலும் தனித்தனியே "வால்மீகி இராமாயணம்" என்றும் "கம்பராமாயண" மென்றும் இப் பெருங் காவியம் வழங்கப்படுகிறது.

காயத்ரி மந்திரத்தில் 24 வார்த்தைகள் வால்மீகி இராமயணத்தின் 24,000 சுலோகங்களினின்றும் எடுக்கப்பட்டன. இதனால் காயத்ரி மந்திரம் இராமாயணக் கருத்தை யுடையது; அம் மந்திரம் இராமாயணத்தின் சாரம் என்பது மிகையாகாது.

பாட்டு என்றால் என்ன? செய்யுள் பாட்டல்ல. செய்யுள் என்றால் 'செய்யப்பட்டது' என்ற பொருளைத் தருவது. யாப்பிலக்கணத்தை வைத்துக் கொண்டு

பல செய்யுட்கள் எழுதி விடலாம். ஆனால் அந்தச் செய்யுட்களில் உணர்ச்சியோ உயர்நோக்கத்தை எழுப்பும் சக்தியோ, மனத்தை வசீகரிக்கும் வன்மையோ இருக்கு மென்பதற்கில்லை. ஆனால் ஒரு விஷயத்தை நேரில் பார்த்து, (அல்லது பார்த்தது போல் பாவித்து) அதிலேயே மனம் ஊன்றிப்போய், பார்ப்பது சுகமோ துக்கமோ அதைத் தனக்கே நேர்ந்தது போல் அனுபவித்து, அவ்வனுபவத்தின் மீது வரும் உணர்ச்சி பொங்கி வழியும் சொற்களே பாட்டாகும். மனம் படும் பாடு சொற்களாக வெளி வரும்போது பாட்டாகும்.

இவ்விதமான நிலையில் வெளிப்பட்ட சுலோகங்களே இராமாயண மாயிற்று. மாலை வேளை; வால்மீகி ரிஷி நிஷ்டை கலைந்து உட்கார்ந்திருந்தார். அவருக் கெதிரிலிருந்த ஒரு மரத்தின் கிளையில் இரு கிரௌஞ்சப் பக்ஷிகள் இருந்தன. அவைகள் ஒன்றோடொன்று குதூகல மாகப் பேசி விளையாடிக் கொண்டிருந்தன. திடீரென ஒரு வேடன் தோன்றி வில்லை வளைத்துப் பறவைகளை நோக்கி அம்பெய் தான். அவ்வம்புக்கு ஆண்பறவை இரை யாகிக் கீழே விழுந்திறந்தது. அதைக் கண்ட பெண் பறவை பிரிவு பொறுக்க முடியாது கதறிக்கதறிச் சிறிது நேரத் திற்குள் உயிர் நீத்தது. இக் காட்சி யைக்கண்ட வால்மீகி முனிவர் பறவை களின் துயரத்தில் மூழ்கி, மனம் நொந்து புண்ணாயினர். அவ்வேதனையி லுழன்றிய அவருடைய வாக்கினின்றும் வெளிப் பட்ட பாக்களே இராமாயணமாக நமக்குக் கிடைத்திருக்கிறது.

அவ்விரு பறவைகளையும் கொன்ற வேடன் பின் பிறப்பில் இராவணனாகப் பிறந்து, சீதையை இராமனிடமிருந்து பிரிக்கும் குற்றத்திற்காக இராமபாணத் தால் மரண மடைய, இராவணனின் மனைவி மண்டோதரி தன் கணவன் பிரி வாற்றாமையால் உயிர் நீப்பாள் என்று வால்மீகி ரிஷி சொல்லிப் போந்தார்.

கம்பரும் இராம சரிதையைச் சித்த ரித்து உண்மை விளங்க உணர்ச்சி பொங் கப் பாடியிருக்கிறார். கம்ப இராமாயணம் படிக்கக்கேட்ட குலசேகர மன்னன் (பின் னர் குலசேகராழ்வாரானவர்) 'இராமர் சுக்கிரீவனுடைய சேனைகளுடன் கடற் கரைக்குப் பக்கம் சேர்ந்தார்; இராவண னோடு போர் புரிந்து சீதையை மீட்பதற் காக' என்று சொல்லக்கேட்டதும் உடனே மந்திரிகளை அழைத்து சேனையைத் திரட்டி இராமருக்கு உதவி புரிய வேண் டும் என்றும் விரைந்து ஓடினர் என்று நாம் கேட்கிறோம். இது உண்மையே என்று நாம் நிரூபிக்க வேண்டிய அவசிய மில்லை; எனினும் இதில் அறிவது என்ன? இதில்கம்ப இராமாயணத்தின் இயல்பை அறிகிறோம். அனுபவித்துப் பாடிய பாட் டைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் அவ்வனுபவத்தைத் தாமும் அனுபவிப் பார். இவ்வித அனுபவத்தைக் கொடுக்க வல்லது இராமாயணம்.

இராமாயணம் வெறுங் கட்டுக்கதை யில்லை என்று இங்கு சொல்வது அவசிய மில்லை. இராமாயணத்திற் சொல்லப் படும் இடங்கள் இன்னும் இருக்கின்றன. உதாரணத்துக்கு அயோத்தி, கங்கை, பஞ் சவடி, கிஷ்கிந்தை (Ruins of Humpy) சேதுக்கரை, இலங்கை முதலியன இருக் கக் காண்பனவேயாகும்.

கந்த புராணத்திற்கும் இராமாயணத் திற்கும் நிரம்பிய ஒற்றுமைகள் இருக்கின் றன. கந்த புராணத்தில் இந்திரன் முத லான தேவர்கட்கும் அசுரர்கட்கும் போர் நடந்தது. இந்திரன் மகன் ஜெயந்திரன் சிறையிடப் பட்டான். தூது சென்றது வீரபாகு. சண்டை நடந்த இடம் தென் சமுத்திர மத்தியில் இருந்த சூரபத்மனின்

நகரமாகிய மகேந்திரப் பட்டணம். சூர பத்மனைக் கொன்றவர் சிவ அம்சமாகிய முருகக் கடவுள். இதே போல இராமா யணத்தில், இந்திரன் முதலான தேவர் கட்கும் அரக்கர்கட்கும் போர். சீதாதேவி சிறையிடப் பட்டாள். தூது சென்றவர் ஆஞ்சநேயர். தென் கடலினுள்ள இலங் கையில் சண்டை நடந்தது. இராவணனை வென்று கொன்றவர் விஷ்ணுவின் அவ தாரமாகிய இராமர். இவ்வாறு கந்த புரா ணத்திற்கும் இராமாயணத்திற்கும் பெரி தும் ஒற்றுமை யிருக்கக் காண்போம்.

ஆங்கிலத்தில் மில்டன் செய்துள்ள (Paradise Lost) 'சுவர்க்க நீக்கம்' செக சிற்பியாரின் துன்பியற் கதைகள் (Tragedies) இவைகட்கு மேலாகவோ சம மாகவோ இராமாயணத்தை ஒத்திட்டுச் சொல்லலாம்.

'சுவர்க நீக்கம்' என்பதில், ஆதி மனி தர்களான ஆதாம் ஏவாள் ஒரு செழிப் பான தோட்டத்திலிருந்துகொண்டிருந் தார்கள்; அத்தோட்டத்திலுள்ள மரங் களுள் ஒரு மரம் தவிர மற்ற மரங்களி லுள்ள கனிகளைப் புசிக்கலாம் என்று கடவுள் அவர்கட்கு ஒரு கட்டளை யிட் டிருந்தார். ஆனல் சாத்தான் தோன்றி அவர்களை அவ் விலக்கப்பட்ட மரக் கனி களை அருந்தும்படி தூண்ட, அவர்களும் தூண்டுதற்காளாகி அக் கனிகளை யுண் டார்கள்; உடனே அவர்களும் அவர்களின் சந்ததியார்களான மனித சமூகமும் சுவர்க் கத்தை விட்டு நரகத்தில் வசிக்கும்படி நேர்ந்தது என்ற குறிப்பை அடிப்படை யாகக் கொண்டு மில்டன் பாடியிருக்கிறார்.

இம் மாதிரியாக இராமாயணத்தில் காணக் கிடக்கின்ற அடிப்படையான விஷ யம் யாது? இராவணன் ஒரு மகான்; தவத்தில்மிக்கோன்;பக்தியிற் சிறந்தவன்; சிவபெருமானின் அருளைப் பெற்றவன். கலப்பற்ற இன்ப வாழ்க்கை வாழ்ந்து வந்தவன்; யமனும் கிட்ட முடியாத நிலையி லிருந்தவன். அந்நிலையிலிருக்க அவனுக்கு அவனது தங்கை சூர்ப்பனகை சாத்தான் போல் அவனிடம் போய் சீதையின் அழ கைப் பற்றிச் சொல்லி அவளை அடையும் படி ஏவ, அவனும் அந்த ஆசை வலையில் வீழ்ந்து இராமனில்லாத சமயத்தில் சீதையை அபகரித்துக் கொண்டுவர, அக் காரணத்தால் இராம இராவண யுத்தம் ஏற்பட, இராவணனும் அவனைச் சார்ந்த வர்களும் மாண்டு போயினர்.

இது வரையில் இராமாயணம் என்பதை விளக்கினோம். இனி இராமாயணத்தில் விளக்கப்படுவதைக் கூறுவோம்.

இராமாயணத்தில் கூறப்படுவதை எல் லாம் சுருங்கக் கூறவேண்டுமானல் அது 'இல்லறத்தைச் செவ்வனே நடத்துவது எவ்விதம்?' என்ற கேள்விக்குரிய விடை யாக அமையும். இல்லறத்தை நல்ல முறையில் நடத்திக் காட்டியவர் திரு மாலின் அவதாரமாகத் தோன்றியருளிய ஸ்ரீ இராமர் ஆவார். அவர் வரலாறுகிய இராமாயணத்தில் விளக்கப் படுவன பின் வருமாறு:

### க. குலப் பெருமை

இப் பகுதியில் இராமர் பிறந்தருளிய சூரியவமிச இக்குவாகு குலத்தின் பெரு மையினையும், அந்த அண்ணல் மணந்து கொண்ட சீதாபிராட்டியார் வளர்ந்த சனக மன்னர் குலப்பெருமையினையும் பரக்கக் காணலாம்.

### உ. கல்வி முறை

பழைய காலத்தில் கல்வி முறையே வேறாக இருந்தது. 'குருகுல வாசம்' என்ற அம்முறையில் மாணவன் ஆசிரிய ருடனேயே நெடுங்காலம் இருந்து அவர் ஏவும் பணிகளை முடித்துப் பலகலையும் பயின்ற பேரறிவாளனாக வெளிப்படு

வான். இந்நமுறை அக்காலத்திலிருந்தமையினால்தான் அறிவாளிகள் நிறைந்திருந்தனர். இராமபிரானும் இம்முறையிலேயே பயின்றனர். அக்காலத்தில் 'இன்ன ஆசிரியரின் மாணவன்' என்று கூறிக் கொள்வது பெருமையாக விருந்தது. அதனை

"உறையோடு நெடுவேலா யுபநயன விதி
[முடித்து
மறையோடு வித்திவரை வளர்த்தானும்
[வசிட்டன்காண்"

என இராமரைச் சனகருக்கு அறிமுகப் படுத்தி வைக்கும் அடிகளாற் காண்க.

### ௩. தந்தை சொல் போற்றல்

இராமருக்கு முடிசூட்டு விழாவென நகர் முழுதும் அணி செய்யப் பட்டிருக்கின்றது. தந்தையின் ஆசியைப் பெற வேண்டி இராமர் தம் தந்தை இருந்த கைகேயி வீட்டிற்குச் சென்றார். இவர் வருதலைக் கண்ட கைகேயி வருகையைத் 'தாயென நினைவான் முன்னே கூற்றெனத் தமியள்வந்தாள்' எனக் கம்பர் கூறுவார். வந்தவள் தான் பெற்றுள வரத்தைத் தசரதர் கூறார் என்றெண்ணித் தானே கூறிவிடுகின்றாள். இராமர் பதினான்காண்டுகள் காட்டிற்குச் சென்று வாழ வேண்டுமென்றும் பரதன் முடிசூட வேண்டு மென்றும் தந்தை கட்டளையிட்டிருப்பதாக அவள் கூறினாள். தந்தை சொல்லை மாற்றாது போற்றும் தனயன்; 'மெய்த்திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத்துறவோன்' என அறிஞர் போற்றும் இராமர் நிலை இம்மொழி கேட்டதும் எவ்வாறிருந்தது. அதனைக் கம்பர்,

"இப்பொழு தெம்மனோரால் இயம்புதற்
கெளிதோ யாரும்
செப்பருங் குணத்து இராமன் திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசக
முணரக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தா
மரையினை வென்ற தம்மா"

என்று கூறுகின்றார். முன்னர் தாமரை மலரை ஒத்திருந்ததாம் அவர் திருமுகம்; இப்பொழுது மலர்ந்த தாமரையினை வென்று விட்டதாம்! இதுபோலத் தந்தை சொல் போற்றும் தகைமை யாருக்கு வரும்? அதோடு மட்டுமல்ல; இராமர்,

"மன்னவன் பணியன் றாகில் நும்பணி
மறுப்பனோ என்
பின்னவன் பெற்ற செல்வம் அடிய
னேன் பெற்ற தன்றோ..."

என்று கூறுகின்றமையைப் பார்த்தால் மாற்றாந்தாய் என்ற எண்ணங்கூட இல்லாமல் தந்தையிடம் போலவே தாயினிடமும் கொண்டிருந்த பணிவும், சகோதர அன்பும் வெளிப்படுகின்றன அல்லவா? இராமாயணமே 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்னும் மொழிக்கு ஒரு விரிவுரை எனக் கூறினும் பொருந்துமல்லவா?

### ௪. சகோதரப் பற்று

சகோதர அன்பின் உச்ச நிலையைக் காணவேண்டுமானால் இராமாயணத்தில் காணலாம். இராமர் காட்டுக்குப் போக வேண்டிப் புறப்பட்டுவிட்டார். இலக்குமணன் என்றும் அவரைப் பிரியாதவன், இப்பொழுது நினைத்தால் இராமரைவிட்டு அரண்மனையில் உயர்ந்த செல்வ வாழ்க்கையில் இருக்கலாம்; ஆனால் அவன் இராமருடன் செல்லப் புறப்பட்டு விட்டான். அது மட்டுமல்ல, இராமருக்கும் சீதைக்கும் அவனே பணியாள்; அவனே எல்லாம். அவன் இராமரையும் சீதையையும் காத்த தன்மை குகன் பரதனுக்குக் கூறுமிடத்து மிக நன்றாகக் காணப்

படுகின்றது. இராமர் நிலை எவ்வாறிருந்தது எனக் காணவேண்டுமானால் இந்திரசித்தின் பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்ட இலக்குமணனைக் கண்டபோது அவர் கூறுவதைக் காணவேண்டும்.

"இளையவன் இறந்தபின் எவரும் என்?
எனக் கீர்த்தி என்? அறிவென்?
ஆண்மை என்?
கிளையுள சுற்றமென்? அரசென்?
கேண்மை என்?
விளைவுதா னென்? மறை விதி என்?
மெய்ம்மை என்?"

என்பது இராமர் கூற்று. இலக்குவன் இன்றெனின் மற்றொன்றும் வேண்டியதில்லை என்ற அவர் கொள்கையைப் பார்க்கப் பார்க்க அவருடைய அன்பின் திறம் வெளிப்படுகின்றதல்லவா? இவ்வாறாகக் காடுசென்ற சகோதரர் அன்பினைக் கண்டோம். நாட்டிலிருந்த சகோதரர் அன்பினைக் காணவேண்டாமா? இராமருக்குக் காட்டு வாழ்வும் தனக்கு நாட்டு ஆள்கையும் கிடைத்ததை உணர்ந்த பரதன் நிலையைக் கண்டால் அவனுடைய சகோதர அன்பு வெளிப்படும். தனக்குச் செல்வம் தேடி வைத்தவளைத் தாயெனக் கூறக் கூட அவன் நாக்குக் கூசியது. சகோதரனைக் காட்டுக்கனுப்பிய வாழ்வைத்துறந்து தானும் இராமரைக் காணச் சென்றான். இராமர் நல்லுரையால் மீண்டும் வந்தான். ஆயினும் அரசவாழ்வு கொள்ளாது துறவி போன்று இராமர் பாதுகைகளை அரியாசனத்திருத்தித் தான் கீழமர்ந்து ஆண்டான். பதினான்காண்டுகள் முடிந்தவுடன் முன் கூறியவாறே தீக்குளிக்கவும் புறப்பட்டான். என்ன அன்பு பாருங்கள்! சத்துருக்கனனும் இவர்களைப் போலவே தான். பரதன் தீயினுள் குதிக்குமுன் 'நீ நாட்டை ஆண்டுவருக. யான் நெருப்பினுள் குதிக்கின்றேன்' என்று சத்துருக்கனனிடம் கூறினான். அவன் 'நீ குதிக்கு முன் நான் நெருப்பில் விழுந்து உயிர் துறப்பேன்' என்று கூறுகின்றான். இவ்வாறாக நான்கு சகோதரர்களும் கொண்டிருந்த பற்று போற்றத்தகுந்தது. இன்று ஒரு தாய் வயிற்றுப் பிறந்தவர்களே சண்டையிடுகின்றார்கள். இந்நால்வரும் ஒருதாய் வயிற்றுப் பிள்ளைகள் கூட இல்லை. இலக்குவனும் சத்துருக்கனனும் தான் ஒருதாய்வயிற்றுப்பிள்ளைகள். அவர்களும் தனித்தனியாக இராமரிடமும், பரதனிடமும் சேர்ந்து கொண்டார்கள். ஒருதாய்ப் பிள்ளைகளின்றியும் இவர் தம் ஒற்றுமை எண்ணமும் பற்றும் இக்காலத்துக் காண்பது அருமையினும்அருமை.

## ரு. அன்பின் ஆற்றல்

அன்பு உலகத்தில் எத்தனையோ வியப்புக்கள் உண்டாவதைக் காணலாம். அன்புடையோர் பிரிந்து விட்டால் உயிர் போதலும், அன்புடையாரைக் காணும் வரையில் உயிர்தாங்கிப் பின் விடலும் இன்றும் உலகத்தியற்கை. இவ்விரண்டு தன்மையினையும் இராமாயணத்தில் காணலாம். 'இராமன் காடு சென்றான்' என்ற சொல்லே தசரதனுக்குக் கூற்றாக அமைந்தமையால் முதலது உணரப்படும். சடாயு என்ற பறவை சீதையைத் தூக்கிப் போகும் இராவணனுடன் போரிட்டு மாளும் பருவமடைந்தது. இராவணன் சீதையைத் தூக்கிப்போன செய்தியை இராமனுக்கு அறிவித்தே இறக்கவேண்டுமென்பது சடாயு எண்ணம். அவ்வாறே இராமனைக் கண்டு கூறும் வரையினும் உயிர் தாங்கிப் பின் விட்டமையால் இரண்டாவது தெளியப்படும்.

## சு. ஏகபத்தினி விரதம்

பண்டைய மன்னர்கள், பலரை மனைவியராகக் கொண்டு வாழ்ந்தனர். அந்தக் காலத்தில் இராமர் ஒரு மனைவியையே

கொண்டு வாழ்ந்தமை அவருடைய தாய்மையைக் காட்டும். சூர்ப்பனகை பல வகையாகச் சூழ்ச்சி செய்தும் இராமரைத் தன் வலையில் போட்டுக்கொள்ள இயலவில்லை யன்றோ? ஸ்ரீ ராமரைப் போன்று நம் மக்கள் யாவரும் ஏக பத்தினி விரதம் மேற்கொள்வாராயின் நாடு மிகவும் முன்னேற்றமடையும்.

எ. பெண்கள் பிடிவாதம்

ஆண்களைவிடப் பெண்கள் பிடிவாதமுடையவர்கள். அவர்களுடைய அந்தக் குணத்தினால் பல சமயங்களில் தீமைகளும் நேர்வதுண்டு. அம்மாதிரியான பிடிவாதத்தால் நேர்ந்தவற்றை இராமாயணத்துள்ளும் காணலாம். கைகேயி கொண்ட பிடிவாதத்தினாலன்றோ இராமர் காடு செல்ல வேண்டி வந்தது. அதுவுமன்றி அவளே தன்னுடைய அருமந்த மங்கலியம் இழந்தாளல்லவா? பிறிதோரிடம், சீதை காட்டகத்தே கண்டதோர் மானை வேண்டுமென்று கேட்ட இடமாகும். அவள் செய்த பிடிவாதத்தால் மாயமான் என்றறிந்தும் இராமர் அதனைப் பிடிக்கச் சென்றார். சிறிது கழித்து இராமருக்கு என்ன நேர்ந்ததென்று பார்க்க இலக்குவன் சென்றான்; சீதை தனித்திருந்தாள். இந்த நிலைமை வேண்டுமென்றுதானே மாரீசனை மானாக இராவணன் அனுப்பினான். தனித்திருந்த சீதையை இராவணன் தூக்கிச் சென்றான். இதுவும் பெண்கள் பிடிவாதத்திற்கொரு தருக்க எடுத்துக் காட்டாகும்.

அ. நட்பு

நட்பின் பெருமையைக் காண இராமாயணம் ஒன்றே போதும். இராமாயணத்துள்ளும் குக இராமர் சந்திக்கின்ற இடமே நட்பின் திறத்தினை திரட்டிக் காட்ட வல்லது. குகன் இராமர்பால் கொண்ட பேரன்பு போற்றற்பாலது. 'சக்ரவர்த்தித் திருமகனார் காட்டகத்தே இருப்பதைப் பார்த்தும் என் கண்களைப் பிடுங்கி எறியாதிருக்கின்றேனே' என்று தன்னைக் குறை கூறுகின்றான். இராமர் அவனுடைய காடுவிட்டுச் சென்றபின் பரதன் சேனையோடு வருவதை நோக்கித் தானும் எதிர்க்கப் படைதிரட்டி நிற்கின்றான். ஏன் என்றால் தன்னை நண்பனாக இராமர் ஏற்றுக் கொண்டனராம். 'அந்த நண்பரை எதிர்க்கப் படை கொண்டு செல்லுமுன் நானே படையை அழித்து விடுவேன்' என்று கூறுகின்றான். ஆனால் பின் உண்மை உணர்ந்து பரதனுக்கும் உதவுகின்றான். குகனை இராமன் தம் சகோதரனாய் ஏற்றுக் கொண்டாரென்றால் அவர்களுடைய நட்பு எவ்வளவு அரிது! இன்னும் சுக்கிரீவன், விபீஷணன், சடாயு, சவரி முதலியோரும் இராமருக்கு நெருங்கிய நண்பர்கள். இவருள் சுக்கிரீவனையும் விபீஷணனையும் தம்முடைய உடன் பிறந்தாரென இராமர் ஏற்றுக்கொள்ளுகின்றார். சடாயுவைத் தம் தந்தையெனக் கொண்டு அவருக்கு ஈமக் கடன்களும் புரிகின்றார்.

௯. பிறன்மனை நினைத்தல்

காமத்தினால் கேடுகள் மல்கும். திருவள்ளுவர்,

"பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்"

எனப் பிறன் மனைவியை விரும்புவதால் பகை, பாவம், அச்சம், பழி என்ற நான்கும் ஏற்படும் என்று கூறுவர். இராமாயணத்தே பிறனில் விழைந்து கெட்டார் இருவர். அவர்கள் இராவணனும், வாலியுமாவர். இராவணன் எவ்வளவோ தவங்களியற்றி வரங்கள் பல பெற்றவன், நல்ல பக்தன்; உயர்ந்த குணத்தன். ஆனால் பிறன் மனைவிபால் விருப்பங் கொள்ளலாகிய கூரியவாள் அவனைக் குலத்தோடு

வீழ்த்திவிட்டதல்லவா? அவனைப் போலவே அவனுக்கு முன்னரே வாலி சுக்கிரீவனுடைய மனைவிபால் கொண்ட விருப்பத்தால் இராமரால் கொல்லப்பட்டான்.

## கO. கற்பு

நம் நாடு கற்புக்குப் பெயர்போனது. கற்பரசிகளாய சீதை, திரௌபதி, கண்ணகி போன்றோர் வாழ்ந்த இந்நாடு இன்று மற்றை நாடுகளைக் கண்டு சீர்கேடுறுமோ என்று அஞ்சவேண்டி யிருக்கின்றது. கற்பரசியாகிய சீதையின் வரலாறு கூறும் இராமாயணத்தில் கற்பினைப்பற்றி விரிவாகக் காணலாம்.

இராவணன் எவ்வளவோ ஆற்றல் வாய்ந்தவன். சீதையோ அவனிடம் சிறையிருந்த தனிமையான பெண். இந்த நிலையில் இராவணன் என்ன வேண்டுமானாலும் செய்ய முடியும். ஆனால் அதுதான் முடியவில்லை. ஏன்? உண்மையாக ஒரு பெண் தூய மனதும் உயர்ந்த கற்பும் உடையவளாக இருப்பாளானால் எத்தகைய ஆற்றலுடையவனும் அவளிடம் நெருங்க முடியாது. இது கற்பின் ஆற்றல்.

பெண்கள் போன்றே ஆண்களுக்கும் கற்புவேண்டும். அதனை முன் கூறினோம்.

## கக. வீரம்

உண்மையான வீரத்தைக் காண்பது இக்காலத்தில் அரிதாகிவிட்டது. யார் சளைத்தவர், எவர் ஏமாந்தவர் என்று நோக்குகின்ற காலம் இது. உண்மையான வீரன் தன்னினும் வலிமை குன்றியவனை எதிர்க்க மாட்டான். இன்று அப்படியில்லையல்லவா?

இராமரும் இராவணனும் போர்புரிந்தனர். இராவணனுடைய படை மாய்ந்து, ஆயுதங்களுமின்றித் தனித்து நிற்கின்றான். ஒரே அம்பு; இராவணனைக் கொன்றுவிடலாம். ஆனால் இராமர் உண்மைவீரர். அவருடைய வீரத்தன்மை 'இன்றுபோய் நாளை வா. பெரும்படை திரட்டி வா' என்று கூறச் செய்கிறது.

துரோகம் செய்துபோனவர்களை நம் நாட்டினர் மதிப்பதில்லை. இந்த உண்மையினை வீடணன் கும்பகர்ணனைப் போர்க்களத்தே காணுங்கால் கும்பகர்ணன் கூற்றுக்களாகவுள்ள பாடல்களால் உணரலாம். நன்மையோ தீமையோ வருவது கருதாது, தம் தலைவனுக்குப் போர்புரிவதே வீரர்க்கழகு என்று பழையவர் கருதினர்.

## கஉ. அறிவு, சொல்வன்மை, சமயத்திற்கேற்ற சிந்தனை

இம் மூன்றிற்கும் உறைவிடமாகக் காணப்படுவார் அநுமார். அவருடைய அறிவின் திறமையினை இராமாயணத்தின் பல இடங்களிலும்காணலாம். அவருடைய சொல்லாற்றல் கருதியே கம்பர் அவரைச் 'சொல்லின் செல்வர்' எனக் கூறினர். சமயோசித புத்தியினும் அனுமார் சிறந்தவர். இலக்குவன் சத்தி வேலால் புண்ணுற்றுக் கிடந்தபோது மற்றையோரைப் போல இவரும் இருந்து அழுதுகொண்டிராமல் நொடியில் சஞ்சீவி மலையையே பெயர்த்துக் கொண்டு வந்தாரல்லவா? இதற்கு முன்னரும் ஓரிடத்தில் அனுமாருடைய அறிவின் திறமை காணப்படும். இராமர் சீதை இருக்குமிடத்தையறிய எவ்வளவு ஆவலா யிருக்கின்றாரென்பது அவருக்குத் தெரியும். ஆதலால் தான் அவர் இலங்கையிலிருந்து மீண்டதும் 'சீதையைக் கண்டேன்' என்று கூறாது 'கண்டேன் சீதையை' என்று கூறுகின்றார். 'சீதையை' என்று முதலிற் சொன்னால் 'கண்டேன்' என்று சொல்லு முன் இராமருடைய மனம் என்னென்ன எண்ணுமோ! அதனால் தான் அனுமார்

முதலிலேயே 'கண்டேன்' என்று கூறினார். இது போலப் பல இடங்களில் அனுமாரின் சிறந்த பண்புகளைக் காணலாம்.

௧௩. சரணடைந்தவரைப் போற்றுதல்

பெரும்பகைவனாயினும் சரணமடைவானாயின் அவனைக் காக்க வேண்டுவது வீரர் கடமை என முன்னோர் எண்ணி அதன்படி நடந்து வந்தனர்.

விபீஷணன் இராவணனுடைய தம்பி. இராவணனோ இராமருக்குப் பெரும் பகைவன். விபீஷணன் இராமரைச் சரணடைந்தான். எல்லோரும் ஒரு தலையாக அவனை ஏற்றுக் கொள்ள வேண்டாமெனத் தடுக்கின்றனர். ஆனால் அனுமார் சொற்படி அவனை ஏற்றுக் கொள்கின்றார் இராமர். இராவணனுடைய தம்பியென்பது தெரிந்தும் ஒரு வேளை துப்பறிவதற்காகக் கூட அவன் வந்திருக்கலாம் என்று கூட நினையாது 'சரணடைந்தவரைப் போற்றுதல் வீரர் கடன்' என்பதொன்றையே கருதி இராமர் வீடணனை அடைக்கலமாக ஏற்றுக்கொண்டமை போற்றத் தகுந்ததல்லவா?

காகாசுரன் என்ற ஓர் அரக்கன் சீதை மேனியில் புண்படுத்தினான். இது கண்டு சினமுற்ற இராமர் ஓர் அஸ்திரத்தை அவன்மேல் ஏவினார். அவன் எங்கெல்லாமோ ஓடிக் கடைசியில் இராமரையே சரணடைந்தான். சரணடைந்தவரைக் காக்க வேண்டுமல்லவா? ஆகையால் அவ்வரக்கன் உயிரைக் கவர ஏவிய ஆயுதத்தை அவனுடைய ஒரு கண்ணை மட்டும் குத்திச் செல்லச் செய்தார்.

இதுவரை கூறிய தலைப்புகளின் கீழ் இராமாயாணம் விளக்குகின்ற சிறந்த பொருள்களைக் குறிப்பாகக் காட்டினோம்.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

பரமஹம்ஸ தேவரது சரிதம் உண்மையில் ஒரு திவ்விய நாடகமாக அமைந்திருப்பதை அச்சரிதத்தை ஊன்றிப் படிப்பவர்கள் அறிந்து கொள்ளுவது சுலபமாகும். இந் நாடகத்தில் அங்கங்கள் பல உண்டு. ஒவ்வோர் அங்கமும் ஒரு தனி அழகும் தனி ரஸமும் வாய்ந்துள்ளது. அந் நாடகத்தின் முதல் அங்கம் காமார்புகூர் எனும் கிராமத்தில் நடைபெற்றது. கதாதரர் எனும் திருநாமம் படைத்த குருதேவர் அங்கு பாலியத்திலும் இளமையிலும் செய்த லீலைகள் யாவும் முதல் அங்கத்தைச் சேர்ந்தவையாகும். கிராமத்து மக்களின் வாழ்க்கையைத் தூய்மையான முறையில் இன்புறச் செய்வதற்குப் பெரிதும் உதவின அந்த லீலைகள். சிறு பாலனாக விருக்கையில் மும்முறை அவர் பூதவுலகின் நினைவு நீங்கி ஆனந்த நிலையில் லயித்து நின்றது, உபநயன காலத்தில் 'தாழ்ந்த' ஜாதியைச் சேர்ந்த மாது ஒருத்தியிடம் முதல் பிக்ஷை வாங்கினது, பாடசாலை செல்லுவதை விடுத்துப் பகவத் பஜனையிலும் ஆடல் பாடல்களிலும் தோழர்களை ஈடுபடச் செய்தது, பெண் வேடம் பூண்டு பிரபு ஒருவரின் வீட்டு அந்தப் புரத்தினுட்சென்று அவருக்குப் படிப்பினை யொன்றை அறிவித்தது— இவை போன்ற லீலைகள் முதல் அங்கத்தைச் சேர்ந்தனவாகும். இரண்டாவது அங்கம் தக்ஷிணேசுவரத்தில் நிகழ்ந்தது. இவ்வங்கத்தில் எண்ணிறந்த நாடக பாத்திரர்கள் நாடக மேடையின்மீது தோன்றி

னர். ஸ்ரீ ராமகிருஷ்ணரது நாடகத்தின் சூத்ர தாரியாக விருந்து நாடகத்தின் ஒவ்வோர் அம்சத்தையும் பழுது இன்றித் தயாரித்து வந்த ஜகன்மாதா, ஸ்ரீ ராமகிருஷ்ணர் தக்ஷிணேசுவரமென்னும் அரங்கத்தின்மீது தோன்றுவதற்கு முன்னமேயே அவருக்குத் தேவையான வசதிகளைச் சேகரித்து வைத்தாள். இராணி இராச மணியார் திருக்கோயில் கட்டியதும், அதன் பூசை வேலை எதிர்பாராத விதமாக பரமஹம்ஸரது அண்ணனுக்குக் கிடைத்ததும் ஜகன் மாதாவின் செய்கையேயாகும். காளியின் திருமுன்னர் வந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் அன்னைப் பித்துப் பிடித்தவராய், பக்திப் பேயின் வயப் பட்டு, வேறு உதவியின்றித் தமது தீவிர வேட்கையின் வேகத்தால் மட்டுமே அன்னையின் சாக்ஷாத்காரம் பெற்றதும், ஊண் இன்றி உறக்கமின்றி உடல் உணர்ச்சியின்றி அவர் கடுந்தவம் இயற்றிப் பெறு தற்கரிய அனுபூதிகளை யடைந்ததும், பைரவி பிராம்மணியார் தாமே அவரை நாடிவந்து அவருக்குத் தாந்திரிக சாதனைகள் பயிலுவித்ததும், வேதாந்த கேசரியான தோதாபுரியார் தம் யாத்திரையில் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கண்டு அவருக்கு அத்துவித நிலை உபதேசித்து அவரிடம் பலநாள் தங்கி மாயையின் சக்தியை அறிந் துணர்ந்ததும், ஜடாதாரி கொணர்ந்த இராமலாலாவின் விக்கிரகம் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் உயிருள்ள பால ராமனாக விளையாடியதும், மதுரபாவனை செய்து ஸ்ரீ ராமகிருஷ்ணர் இன்ப நிலையில் லயித்து நின்றதும், கிறிஸ்துவ, இஸ்லாமிய மதங்களை அனுஷ்டித்து அவர் பரமோத்கிருஷ்ட நிலையை அடைந்ததும், மதுரரும் இராசமணியாரும் அவர்மாட்டுச் சொல்லொணா அன்பு காட்டியதும், பண்டிதர் பலர் அவரை அவதார புருஷரெனப் போற்றியதும், இடையில் அவர் காமர்ப் புகூர் சென்று திருமணம் இயற்றி வந்ததும் இவை போன்ற இன்னும் பல நிகழ்ச்சிகளும் இரண்டாவது அங்கத்தின் காட்சிகளாகும். மூன்றாவது அங்கம் குருதேவருடைய கடைசி ஏழெட்டு ஆண்டுகளின் வாழ்க்கையை உட்கொண்டது. இப்பகுதியில் பல இளைஞர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரது அருள் வெள்ளத்தில் அகப் பட்டுக் கொண்டனர். நவீன பாரதம் பரமஹம்ஸரிடம் சேர்ந்தது. பிரம்ம சமாஜத் தலைவரான கேசவ சந்திரசேனர் குருதேவரிடம் நெருங்கிப் பழகினர். அன்னை சாரதா தேவியார் குருதேவருடைய தர்மபத்தினியாக அவருடனேயே வாழ்ந்து வந்தார். ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் முதலான பாரத நாட்டுச் செல்வங்கள் அவருடைய 'மோக வலை'யில் சிக்கினர். இவ்வங்கத்தின் சிறப்பை விவரிப்பதற்குக் கம்பனோ, காளிதாசனோதான் முயற்சி செய்ய முடியும். குருதேவர் தமது முக்கிய சீடர்களுள் ஒவ்வொருவருடனும் கொண்டிருந்த பாவனையும் ஒவ்வொருவரையும் பயிலுவித்த முறையும் ஒரு தனி சரித்திரமாகும். சாரதா தேவிக்கும் அவருக்குமிடையே இருந்த தொடர்பு ஒரு தனி அத்தியாயமாகும். நரேந்திரர் அவரைச் சரணடைந்த வரலாறு ஒரு தனிக் கதையாகும். இவ்வாறே குருதேவருடைய சீடர்கள் ஒவ்வொருவர் வரலாற்றிலும் ஒரு தனிச் சுவை இருக்கிறது. குருதேவரைப் போலவே கல்வி ஏதுமற்ற லட்டு என்ற வேலைக்காரச் சிறுவன் அவருடைய அருளுக்குப் பாத்திரமாகிப் பிற்காலத்தில் சுவாமி அத்புதாநந்தர் என்ற பெரியார் ஆனது, சசி, சரத் என்ற இரு உறவினரான இளைஞர்கள் தக்ஷிணேசுவரத்தின் திருக்கூட்டத்தில் சேர்ந்து பிற்காலத்தில் ஒருவர் குருதேவர் பெயரையும் மற்றவர் அவரது தர்ம பத்தினியின் பெயரையும் ஏற்று, குருபக்தியின் இலக்ஷியங்களாய்

வாழ்ந்தது (சுவாமி இராமகிருஷ்ணானந்தர், சுவாமி சாரதானந்தர்), இராக்கால் என்ற உயர்குல விளைஞர் குருதேவரின் தலைப்புதல்வர் ஆக ஆனது, அறநெறி என்பதைக் கனவிலும் எண்ணாத கிரிஷ் சந்திரகோஷ் குருதேவரின் அரும்பக்தர் ஆனது, மகேந்திரநாத குப்தர் என்ற ஆசிரியர் குருதேவருடைய அருள் நிழலையடைந்து பிற்காலத்தவருக்கு அவருடைய மொழிகளைக் குறித்து வைத்ததும், நாக மகாசயர் என்ற இல்லறவாசி அவரைத் தம் குறிக்கோளாகக் கொண்டது, இவ்வாறே கோடானு கோடி மக்கள், பல மதங்களைச் சேர்ந்தவர்கள், ஆண், பெண் பலர் அவரை அடைந்து தம் வேட்கையைத் தணிந்துக் கொண்டது—இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்தால் மூன்றாவது அங்கத்தின் காட்சிகள் களைக்கற்றன, சுவை மிகுந்தன என்பது விளங்கும்.

காமர்ப்புகூரில் உதித்த கதிரவன் தக்ஷிணேசுவரத்தின் காளி கோயிலில் உச்சி நிலையை யடைந்து காஸிப்பூர்த் தோட்டத்தில் மறைந்தான். அப்பொழுது நாடகம் முடிந்துவிடவில்லை. நாடகத்தின் நான்காவது அங்கமே ஆரம்பித்தது. அந்த அங்கம் இன்னமும் நடைபெற்று வருகிறது. அது முடிவற்ற அங்கமாகும். இந்த அங்கத்தில் குருதேவர் தாமே நேரில் அரங்கத்தில் தோன்றுவது சாத்தியமில்லைதான். ஆனால் திரைக்குப்பின் அவர் இருக்கிறார். அவரது இன்ப சங்கீதம் நம் மனத்தைக் கொள்ளை கொள்ளுகிறது. அச் சங்கீதத்தின் ஒலி உலகெங்கும் பரவுகிறது.

இந்த நான்காவது அங்கத்தின் முக்கிய கதாபாத்திரர்கள் இருவர். அவ் விருவரும் இப்பொழுது ஸ்தூல உலகில் இல்லை. ஆனால் இந்தத் திவ்விய நாடகத்தின் கதாபாத்திரர்கள் பூத உடலை நீத்துவிட்ட பொழுதிலும் நாடகத்தினின்றும் நீங்கிக் கொள்ளுகின்றனரில்லை. அவ்விருவர் ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளும் அன்னை சாரதா தேவியுமே யாவர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் உலகிற்றோன்றிய திருநோக்கம் நிறைவேறும் பொருட்டு மேற்கூறிய இருவரும் இரு துறைகளில் பணியாற்றினர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் இலக்ஷியங்களை உலகில் பரப்புவதற்கு முயன்றார் ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள். அவர் மேனாடு சென்று, கடுமையான உழைப்பில் ஈடுபட்டு, உலகில் புதியதொரு சகாப்தத்தைத் துவக்கினார். ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள் இல்லாது போயிருப்பின் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பெருமையை உள்ளது உள்ளவாறு உலகம் அறிந்திருக்காது. இப்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணர் திருப்பெயர்தாங்கிநடைபெறும் இயக்கத்திற்குக் காரண பூதர் விவேகானந்த சுவாமிகளேயாவர். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சரிதத்தை மேல்வாரியாகப் படிக்கும் ஒருவன் அப்பெரியாருக்கும் அவர் பெயரால் நடைபெறும் பல ஸ்தாபனங்களுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று வியப்புறுவான். உதாரணமாகக் கல்கத்தாவில் இப்பொழுது ஸ்ரீராமகிருஷ்ண சங்கத்தின் ஆதரவில் சிசுமங்களப் பிரதிஷ்டானம் என்ற ஒரு ஸ்தாபனம் கண்டோர் வியப்புறும் முறையில் நடைபெற்று வருகிறது. உலகம் மாயை என்பதை அறிவுறுத்தி, மணம் செய்துகொண்டும் சந்நியாசியாக வாழ்ந்த ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கும், கர்ப்பிணிகளைப் போஷித்துச் சிசுக்களை இரக்ஷித்துவரும் ஒரு ஸ்தாபனத்திற்கும் என்ன சம்பந்தம் உண்டு? வயிற்றுப் பிழைப்புக்கான இக் கல்வியால் யாது பயன் உண்டு என்று கூறிய பரமஹம்ஸருக்கும் அவர் பெயரால் நடந்துவரும் கல்விச்சாலை, தொழிற் சாலைகளுக்கும் யாது தொடர்பு உண்டு? இத்தகைய ஐயம் நம் அகத்தே எழாமலிருக்கும்.

பொருட்டுத்தான் ஸ்ரீ விவேகாநந்த சுவாமி கள் தோன்றினர். ஸ்ரீ ராமகிருஷ்ணரது பெருமை வானத்தைப்போல் விரிவுடை யது என்பதைக் கண்டவர் அவர் ஒருவரே யாம். ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் குறுகிய நோக்குடன் ஆராய்வோருக்கு அவர் எழுத்தறிவற்ற காளிகோயிற் பக்தர் என்றே தோன்றும். ஆனால் உண்மையில் இந்திய வாழ்வின் எல்லாப் பகுதிகளுக் கும் ஸ்ரீராமகிருஷ்ணர் உய்யும் வழி காட்ட வந்த உத்தமர். இதை நன்கு அறிந்தவர் விவேகாநந்த சுவாமிகள். ஈசுவர பக்தி மனித சேவையாகப் பழுக்க வேண்டுமென் னும் பேருண்மையை அவர் உலகிற்கு எடுத்தோதினர். வாழ்வில் சமயப் பகுதி என்றும் இலௌகிகப் பகுதி யென்றும் இரு பரஸ்பரத் தொடர்பு அற்ற, தனிப் பிரிவுகள் இல்லையென்றும் எச் செய்கையும் ஈசுவர ஆராதனையாகவே ஆகவேண்டும் என்றும் விவேகாநந்த சுவாமிகள் விளக் கினர். ஜீவ சேவைக்காக அவர் ஸ்ரீ ராம கிருஷ்ண சங்கத்தை நிறுவியபொழுது அவருடைய சகோதர சிஷ்யர்களே இவ்வா றெல்லாம் உலக சேவையில் ஈடுபடும் பக் தர்களை ஏற்றுக்கொள்ளுவது ஸ்ரீ ராம கிருஷ்ணருடைய நோக்கத்திற்குமாறாக இருக்குமே என்று ஐயமுற்றனர். விவே காநந்த சுவாமிகளே அந்த ஐயத்தைப் போக்கினர். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ் வெனும் சூத்திரத்தின் உட்பொருள் முழு வதையும் விளக்கிய பாஷ்ய கர்த்தாவே விவேகாநந்த சுவாமிகள்.

ஆனால் மேனாடு சென்று பல அருமை யான பிரசங்கங்கள் நிகழ்த்திய விவேகா நந்த சுவாமிகள் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பற்றி அதிகமாகப் பிரஸ்தாபிக்கவே இல்லை என்பது பலருக்கு வியப்பைத் தரும். குருதேவரின் முக்கிய சீட ரான விவேகாநந்த சுவாமிகள் தமது குருநாதரின் வாழ்க்கைச் சரிதத்தை வரையவில்லை. மேனாட்டில் 'எனது குரு நாதர்' என்ற ஒரு சொற்பொழிவே நிகழ்த் தினர். அவர் எழுதிய கடிதங்களிலும் இந்தியாவில் அவர் செய்த பிரசங்கங்களி லும் அங்கு மிங்கும் அவர் தாம் ஸ்ரீ ராம கிருஷ்ணருக்கு அடிமையான விஷயத் தைப்பற்றி உள்ளம் உருகும் முறையில் சுருக்கமாகக் குறித்திருக்கிறார். ஸ்ரீ ராம கிருஷ்ணரைப் போன்ற மகான் ஒருவ ருடைய முக்கிய சீடர் சிகாகோ சர்வ மத மகாசபைக்குச் சென்றால் தமது குருநாத ரின் அவதார மகிமையைப்பற்றி நீண்ட தொரு சொற்பொழி வாற்றுவார் என்றல் லவோ நாம் எதிர்பார்ப்போம். அதைத் தான் விவேகாநந்த சுவாமிகள் செய்ய வில்லை. ஆனால் சிகாகோ மகாசபையில் விவேகாநந்த சுவாமிகள் ஆற்றிய சொற் பொழிவு முழுவதும் பரமஹம்ஸருடைய வாக்குத்தான். குருதேவரின் கருத்துக் களை மக்கள் ஏற்றுக் கொள்ளவேண்டு மென்பதே விவேகாநந்த சுவாமிகளின் நோக்கம். அந் நோக்கத்தில் அவர் எவ் வளவு வெற்றியடைந்தார் என்பது உலக மறிந்த விஷயம்.

அவதார புருஷருடைய மகிமை இரு பிரிவுடையது. ஒரு பிரிவு அவருடைய உபதேச மொழிகளின் மூலம் வெளிப்படு கிறது. மற்றொன்று தம்மைச் சரணடை வோரை, தம் பெயரை ஏற்றுத் தம்மை வழிபடும் மக்களை, உய்விக்கும் சக்தியின் மூலம் வெளியாகிறது. உதாரணமாக, ஏசு கிறிஸ்துவைப் பரம பிதாவின் மகனாக வழிபட்டு அவர் மூலம் மோக்ஷ நிலை எய்துவதற்கு முயற்சி செய்யும் மக்களும் உண்டு. ஏசுகிறிஸ்துவின் வழிபாட்டில் ஊக்கம் கொள்ளாது, அவருடைய உப தேச மொழிகளை ஏற்று அம்மொழிகளை நடைமுறையில் பின்பற்றுவதற்கு முய லும் மக்களும் உண்டு. ஸ்ரீ ராமகிருஷ்ண ருடைய அவதார நோக்கம் மேலே கூறிய

இரு வழிகளிலும் வேலை செய்து வருகிறது. உலகில் பலர் அவரையே தமது வாழ்வின் இஷ்ட தெய்வமாக ஏற்று அவருடைய பக்தர்களாக இருந்து வருகின்றனர். வேறு பலர் ஸ்ரீ ராமகிருஷ்ணரை அவதார புருஷராகவோ தெய்வீக சக்தியுடையவராகவோ வழிபடாமல் அவருடைய உபதேச மொழிகள் உலகின் நன்மைக்குக் காரணமா யிருப்பதால் அம் மொழிகளில் ஊக்கம் கொள்ளுகின்றனர்.

விவேகாநந்த சுவாமிகளின் திருப்பணியில் பெரும் பகுதி ஸ்ரீ ராமகிருஷ்ணரின் மொழிகளை உலகம் ஏற்கும்படி செய்யும் முயற்சியில் சம்பந்தப்பட்டது. ஸ்ரீ ராமகிருஷ்ணரைத் தமது இஷ்டமாக ஏற்கும் மக்களுக்கு உதவியாக அன்னை சாரதா தேவியார் திருப்பணியாற்றினர். விவேகாநந்த சுவாமிகள், சாரதா தேவி—இருவருள் ஒவ்வொருவரும் மேற் கூறிய இரு துறையிலும் பணியாற்றினரேனும் விவேகாநந்த சுவாமிகளின் முக்கிய வேலை பரமஹம்ஸரது கருத்துக்களை உலகில் பரப்புவது; சாரதா தேவியின் முக்கிய வேலை பரமஹம்ஸரைத் தமது இஷ்டமாக ஏற்போருக்கு உதவுவது என்று கூறலாம்.

சாரதா தேவியின் உடல் பொருள் ஆவி முழுவதும் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அர்ப்பணமா யிருந்தது. குருதேவரை யன்றி வேறு சிந்தனை அவ்வன்னைக்கு இருந்ததில்லை.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பூத உடல் மறைந்த பிறகு தொடங்கிய நான்காவது அங்கத்தின் காட்சிகள் இன்னமும் முடியவில்லை என்று கூறினோம். அவ்வங்கத்திற்கு முடிவென்பதும் இல்லை. அவ்வங்கம் நடைபெறும் அரங்க மேடையும் நாளுக்கு நாள் விரிவடைந்து வருகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணரைத் தமது இஷ்டமாக ஏற்று அவர் திருக்குழாத்தில் சேரும் தொகையினர் நாளுக்கு நாள் அதிகரிக்கின்றனர். அவருடைய கருத்துக்களோ உலகெங்கும் பரவி வருகின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது புகழை நாடியோ, தமது பெயரை உலகில் பரப்புவதற்கோ தோன்றினாரில்லை. அவரை அறிந்தோ அறியாமலோ, அவர் பெயராலேயோ அல்லது வேறுவிதமாகவோ, அவருடைய கருத்துக்களைப் பின்பற்றுவோ ரனைவரும் நவயுகத்தின் அழைப்பிற்குச் செவி சாய்த்தவரேயாவர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் நறுமணம் நிறைந்ததொரு மலர் போன்றவர். அவர் எங்கோ ஓரிடத்தில் தமது இதழ்களை விரித்துப் புஷ்பித்தார். அம்மலரைக் கண்ணுற்றுக்கண்டு அதன் மணத்தை அனுபவிப்போரும் உண்டு. அம்மலர் இருக்குமிடம் அறியாமல் அதன் வாசனையை மட்டும் சுவைப்போரும் உண்டு. இரு வகையினரும் பாக்கிய சாலிகளே யாவர்.

---

# அருச்சனை மலர்

தென்றல் உலாவுஞ் செழிப்பான பூஞ்சோலை,
பூஞ்சோலை யுள்ளே பொலிந்ததொரு மல்லிகையில்,
மாலைப் பொழுதில் மலர்ந்த மலரொன்று
காலைப் பொழுதிற் கதிரவனைக் காண்பதற்காய்ப்,
5. பனிநீர் குளித்துப் பலர்தன் னுடன்பிறந்தார்
இனியா ரொடொன்றி இருக்கின்ற வேளையிலே,
நந்தா வனத்தின் நடுவேயோர் ஆண்டிவந்தே,
இந்தமலர் ஈசற்கு இயைந்தமலர் என்றுசொல்லி,
அந்தமலரை அழகான மென்மலரை
10. மெல்ல எடுத்து, விரைந்துசென்று கோயிலிலே,
பூசை புரியும் புரோகிதர்கை யிற்கொடுத்தான்;
ஆசையுடன் வேதியர்தான் அருச்சனைசெய் யும்பொழுதில்,
ஈசன் அடிக்கீழ் இயைந்தவொரு பீடத்தில்,
வெள்ளை மலரதுதான் விழுந்து கிடந்ததுவே;
15. வள்ளல் அடியிணையை வாழ்த்தி வணங்குமொரு
செஞ்சொற் புலவனங்குச் சேர்ந்தானப் போழ்தினிலே,
நெஞ்சமுருகி நிதமும் வழிபடுவோன்,
ஆடகச்செம் பொன்னல் அமைத்து மணிபதித்த
பீடத்தின் மேலே, பிரிந்து கிடந்தமலர்
20. வாடத் தொடங்கும் வகையை அவன்கண்டு,
'மென்மலரே! மென்மலரே! வெள்ளை நிறமலரே!
வாசமலரே! மதுத்துளித்த நன்மலரே!
நேச மலரேயுன் நிலையை நினைந்தக்கால்,
உள்ளம் உருகுதையோ! ஒருநாள் கழியுமுன்னே
25. வாடி வதங்கி, வனப்பனைத்தும் போயொழிய,
மாண்டு மடிவாயோ? மண்ணிற் புழுதியாய்த்
தீண்டுவா ரின்றித் தெருவிற் கிடப்பாயோ?
நந்தா வனத்தின் நடுவே இருந்தனையே,
சொந்தமனை சுற்றம் துறந்து சிவனடியைச்
30. சிந்தித் திருந்தனையே, செல்வ நறுமலரே!'
என்றினைய சொல்லி, இரங்குவான் கண்முன்னே,
மென்மலரின் ஆவி விழுந்தவுட லைப்பிரிந்து,
மேலெழுந்து சென்று, விரையார் திருவடியின்
வாசத்தொ டொன்றியென்றும் வாடா மலரடியில்,

35. அத்துவிதம் ஆகி, அமைந்திங் கிருந்ததுவே—
அப்பரிசு கண்ட அணிசொற் றமிழ்ப் புலவன்
வாச மலரின் வரன்முறையைச் சிந்திப்பான்;
நாவுக் கரசர் நவின்ற திருப்பதிகம்
பேசப் பெரிதும் இனிய பிரான்றன்னை

40. 'வாச மலரெலாம் ஆனாய்நீ யே'யென்னும்,
பார்க்கும் மலரூடு பரமன் இருத்தலினால்,
சேர்த்த மலரெடுக்கச் சிந்தைசெலா தென்றுமுனம்
தாயுமா னஅடிகள் சாற்றும் மொழியுமுண்டு,
மல்லரும் பாகி விரிந்த மலரீசன்

45. நல்லுருவ மாதலினால் நாதனடி நாடியது;
மாசற்ற உள்ளம் மலருடலம் மன்னுமுயிர்;
ஈசற் கிவையனைத்தும் என்னக் கொடுத்ததுவே;
உள்ளம் உடலமுயிர் உள்ள அனைத்தினையும்
வள்ளல் அடியிணையில் வைத்தார் பிறப்பறுப்பார்

50. என்னும் அழியா இயல்புறுவார் இவ்வுண்மை
நன்றிம் மலரெனக்கு நல்கிய தென்றுள்ளுருகி
வாடா மலரடியை வாழ்த்திப் பணிந்தனனே.

—விபுலாநந்தர்

"ஏடா மலர்சூடேன் எம்பெருமான் பொன்னடியாம்
வாடா மலர்முடிக்கு வாய்க்குமோ பைங்கிளியே."

—தாயுமானவர்

"ஓசை யொலியெலாம் ஆனாய் நீயே உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலாம் ஆனாய் நீயே மலையான் மருகனாய் நின்றாய் நீயே [நீயே
பேசப் பெரிதும் இனியாய் நீயே பிரானாய் அடியென்மேல் வைத்தாய்
தேச விளக்கெலாம் ஆனாய் நீயே திருவையா றகலாத செம்பொற்சோதி."

—அப்பர்

"பண்ணேன் உனக்கான பூசையொருவடிவிலே பாவித்திறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே இருத்திஅப் பனிமலர் எடுக்க மனமும்
நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்கஎனில்நாணும்என் உளம்நிற்றிநீ
நான்கும் பிடும்போ தரைக்கும்பி டாதலால் நான்பூசை செய்யன்முறையோ
விண்ணேவிண் ஆதியாம் பூதமே நாதமே வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள் வித்தே அவ்வித்தின் முளையே
கண்ணே கருத்தேஎன் எண்ணே எழுத்தே கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு கருணாகரக் கடவுளே."

—தாயுமானவர்

# ஆத்ம சாதன முன்னேற்றத்துக்கான நன்மைகள்

( ஸ்ரீ யதீஸ்வரானந்த சுவாமிகள்)

க

நாம் கேட்கும் உபதேசங்களைக் கூடியவரை வாழ்க்கையில் அநுபவமாக்க வேண்டும். தத்துவ ஞானம் அவசியமே யென்றாலும் அது வாழ்க்கையில் அநுபவ பூர்வமானதாக ஆக்கப்பட வேண்டும் என்பதனை நாம் மறத்தல் கூடாது.

ஆகார சுத்தத்தால் இந்திரியங்கள் பரிசுத்த மடைகின்றன; பரிசுத்தத்தின் மூலம் உண்மையை ஓர்ந்துணரும் ஆற்றலுண்டாகின்றது. இந்த ஞானம் உண்டானதும் ஒருவன் பந்தத்திலிருந்து விடுபடுகின்றான். அப்போது மனம் தைலதாரை போன்று இடைவிடாது இறைவனைச் சிந்தித்த வண்ணமாக விருக்கும். பலமுறை நான் எடுத்துக் கூறியதுபோல் இந்திரியங்களோடு சம்பந்தப் படுவன அனைத்தும் 'ஆகாரங்கள்' எனப்படுகின்றன. ஸ்பரிச, ரூப, ரச, கந்தங்களாகிய உணவுகள் பரிசுத்தம் வாய்ந்தனவாக இருத்தல் வேண்டும். அதாவது கண்ணால் காணப்படுவன, காதால் கேட்கப்படுவன, உணரப்படுவன, ருசிக்கப் படுவன, நுகரப்படுவன ஆகிய எல்லாம் தூயனவாயிருத்தல் வேண்டும். இந்திரியங்களின் உணவு பற்றிச் சிறிதும் கருத்து செலுத்தாமல் தூல வயிற்றிற்குமட்டும் தூய உணவை அளிப்பதால் எந்த பலனும் ஏற்படாது. 'சாத்விகமான மகாபரிசுத்த உணவை மாத்திரம் ஏற்றுக் கொண்டு மனத்தைக் கடவுள் பால் திருப்பாதவனை நான் காரித் துப்புகிறேன். உண்பது ஆபாச உணவே எனினும் அவன் தன் மனத்தை இறைவன் மாட்டுச் செலுத்துவானாகில் அவனே பாக்கிய வந்தன்' என்று கூறுவதுண்டு பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர்.

உ

மாடிக்கு இட்டுச் செல்லும் படிகள் போன்றுள்ளன குணங்கள். மந்த குண முள்ளவன்சுறுசுறுப்புப் பெறவேண்டும்; சுறுசுறுப்பானவன் பரிசுத்தம்பெறவேண்டும். சத்வம் மாடிக்கு அடுத்துள்ளபடியே அல்லாது உண்மையாகிய மாடியேயன்று.

நமது பரிசுத்த வாழ்க்கை நாம் இறைவனை அடைய நமக்கு உதவி புரியவேண்டும். தெய்வத்தை அடைவதென்றால் குணங்கள் எல்லாவற்றையும் கடந்து செல்லுதல் என்பது பொருளாகும். இக் குணங்கள் எல்லாம் நகரத்துக்குள் நுழைய அஞ்சும் கள்வர்களுக்கொப்பானவைகள். நமது இலக்ஷியம் இறைவனை எய்துதலே, ஆத்ம சாக்ஷாத்காரமே. நம்மிலும் அவனைக் காண வேண்டும், ஏனைய எல்லோரிடத்தும் அவனைக் காணுதல் வேண்டும். இதற்குக் குறைந்தது வேண்டாம். குணங்களுக்குக் கட்டுப் படாமல், குணகர்மங்களால் பாதிக்கப் படாமல் இறைவனை சாக்ஷாத் கரித்தவனே இலக்ஷிய புருஷனாவான். பரிசுத்த எண்ணங்களால் தீய சுபாவங்கள் அகன்றொழிகின்றன. படிப்படியாக மனம் உண்மையினை ஓர்ந்து இறுதியில் அதனுடன் ஒன்றித்து விடுகின்றது.அப்போது அதியுயர்ந்த சாத்விக நிலையினையும் கடந்து சாதகன் உச்ச நிலையை அடைந்து விடுகின்றான்.

ங

ஒழுக்க வாழ்வு மாத்திரமே ஒரு மனிதனை ஆத்ம ஞானியாக்கி விடாது. ஒழுக்க

வாழ்வின் துணைகொண்டு ஒருவரது ஆத்ம ஞானத்தை அளவிட்டறிய முயலுதல் கூடாது. ஒழுக்க வாழ்வுமிக அவசியமே; முதலில் ஒழுக்க வாழ்வினை அனுசரிக்காமல் ஆத்ம ஞானியாக முடியாது என்பது உண்மையே யெனினும் ஒழுக்க வாழ்வு மாத்திரமே ஆத்மீய வாழ்க்கைக்கு அறிகுறியாக மாட்டாது எல்லா நீதி நெறிகளையும் ஆசாரங்களையும் கடந்து செல்கின்றது ஆத்மீய வாழ்க்கை.

'எல்லா சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து, பிறகு கற்றவற்றை எல்லாம் மறந்து குழந்தை போலாவாய். பின்னர் ஆத்மீய குழந்தை யாகி தியானத்தில் காலத்தைக் கழிப்பாயாக.'

எளிமையைப் பயில்வோம். சகல சங்கடங்கட்கும் அழுக்குக்கும் காரணமாகிய ஆபாசங்களை அகற்ற முயல்வோம்.

சரீர சம்பந்தமாகக்கொள்ளும் உறவின் முறையைக் கொஞ்சம் கொஞ்சமாக அகற்றிவந்து தெய்வீக நோக்கோடு உறவுகொள்ள முயல்வோம். தனிப்பட்ட காரணத்தால் எந்த மனிதனிடத்தும் பிரத்தியேகமான முறையில் அன்பு கொள்ளும் குற்றத்தை அகற்ற மறவாதிருப்போமாக. அன்பு கொள்வது நல்லதே; எனினும் அன்பின் உண்மைக் கருத்து மறந்து பட்டதும் அது மனிதனை இடைவழிகளுக்கு இழுத்துச் சென்று இடம்ப வொண்ணுக் கஷ்டங்களையும் திகைப்பையும் உண்டுபண்ணி விடுகின்றது. இப் பிழைபட்ட வழியில் உண்டாகும் சிறிது கால அநுகூலத்தைச் சுகமெனக் கருதுகின்றனர் சில அறிவிலிகள்

ச

தாமசிக நிலையை உண்டாக்கும் எல்லா விதமான கடின தபசுகளையும் நாம் விட்டொழிக்க வேண்டும். 'உடம்பை அழுக்குப் படுத்திக் கொள்வதாலேயே நாம் குழந்தைகளாகி விடமாட்டோம்' என்கிறார் பகவத் பாத ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள். உண்மையில் அங்ஙனம் ஆகாது. களங்கமற்ற மனப் பரிசுத்தம், புலனடக்கம், எந்தவித காம எண்ணங்களாலும் பாதிக்கப்படுவதிலிருந்து விடுபட்டிருத்தல் ஆகிய அறிகுறிகளே ஞானக் குழந்தையின் இலக்ஷணங்களாகும். முக்குணங்களையும் கடந்த ஒருவனுக்கு மன வேறுபாடு உண்டாகிறதில்லை.

ரு

ஆத்ம ஞானசாதகன் தன்னை பராசக்தியின் கையிலுள்ள கருவி யென்பதாகக் கருதிக் கொள்ள வேண்டும். தன்னைக் கருவி என்று கருதும் பாவனையே சாலச் சிறந்தது. தான் செய்யும் கர்த்தா அல்ல, தான் செய்பவனல்ல என்று எண்ண வேண்டும்.

உதாரணத் தோடு பார்ப்போம். ஒரு மின்சார சக்தியினால் இயங்குவிக்கப்படும் பல கடியாரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு கடியாரமும் தன் சக்தியாலேயே தான் ஓடுகின்றது என்று கருதுமானால் அது பெருந் தவற்றினைச் செய்ததாகு மன்றோ? நாம் அனைவரும் எல்லாவற்றையும் ஆட்டுவிக்கும் பராசக்தியின் அம்சம் மாத்திரமே. அப் பராசக்தியே நம் ஒவ்வொருவர் உள்ளிருந்தும் நம்மை ஆட்டுவிக்கின்றது. நாம் நமது வாழ்க்கையை அப்பராசக்தியோடு ஒன்றிக்கச் செய்ய முயல்வோம்; நாம் அதினின்றும் பிரிந்து தனிப்பட்டவர் என்று கருதாதிருப்போமாக. இம்மனமும் சரீரமும் அவ்வபராசக்தியின் கருவிகள் மாத்திரமே. எவ்வளவுக்கு நாம் பராசக்தியோடு ஒன்றுபட முயல்கின்றோமோ அவ்வளவுக்கு நாம் கர்த்தா என்னும் அபிமானம் அகலும்; அதனால் அவ்வளவுக்கு நாம் சாந்த மடைவோம். எவ்வளவுக்கு தெய்

விக சக்தியினின்று விலகுகின்றேமோ அவ்வளவுக்கு அதிகமாக நாம் துன்பம் எய்துவோம்.

'அம்பிகே! இப்பரந்த பிரபஞ்சத்தினை சிருஷ்டித்தவள் நீயே; சகல ஜீவராசிக ளாகத் தோன்றி வெளியுலகினேடு சம்பந் தங் கொள்பவளும் நீயே யாவாய். நீ ஒருத்தியே சகலத்துக்கும் கர்த்தா; நீயே சகலத்துக்கும் போக்தா.'

'தாயே! நான் யந்திரம், நீ அதை ஓட்டுபவள். நான் வீடு, நீ அதில் குடி யிருக்கும். வீட்டுக்குச் சொந்தக்காரியா வாய். நான்ரதம், நீ அதை ஓட்டும் சாரதி. நீ செய்விக்கிறபடி நான் செய்கிறேன்; நீ பேசுவிக்கிறபடி நான் பேசுகிறேன்' என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் கூறுவது வழக்கம்.

சு

சிற்சில நேரங்களில் மனச் சோர்வு ஏற்படுவதாயினும் நீர் உம் சாதனையைக் கைவிடாதீர். இடையூறுகள் ஏற்படின் உமதுமுயற்சி இரட்டிக்கப்பட வேண்டும். முயற்சியை இடையில் கைவிடுவதினும் பார்க்க சாதலே மேல். கஷ்டங்கள் அதிகமாகும் அளவுக்கு நமது தீர்மான மும் உறுதியும் அதிகப்பட வேண்டும். கோழைத்தனத்துக்கு எப்போதும் நாம் இடந்தருதல் கூடாது.

'சாவதன் முன்னம் கடவுளை சாக்ஷாத் கரிப்போமானல் பிறவிப் பயனை எய்திய வர்களாவோம். இல்லையேல் இவ்வாழ்க் கைப் பாழ்பட்ட தொன்ருக முடியும். நம் வாழ்க்கையின் இலக்ஷியத்தைஇழந்தவர்க ளாவோம்;

'ஸ்திரபுத்தியுடையவன் எல்லாவற்றி லும் ஒரே இறைவனைக் கண்டு அமிர்தத் துவத்தை அடையப் பெறுகின்றான்.'

'இறைவனை மாத்திரம் நாம் எய்தப் பெற்றுவிட்டால் மற்றவற்றைப் பற்றி நமக்கென்ன கவலை; இறைவன் இல்லை யென்ருல் மற்றவை நமக்கிருந்து என்ன பயன்?' என்று ஸ்ரீ விவேகாநந்தசுவாமி கள் கூறுகின்றார்.

முதன் முதல் முடிவாக வாழ்க்கையின் இலக்ஷியத்தை முடிவு செய்து கொள்ள வேண்டும். இதுவா அதுவா என்ற சஞ் சலம் ஏற்படலாகாது. இரண்டு வேண் டாம்-வேண்டுவது ஒன்று மாத்திரமே. இடையில் நாம் இடறிப் போவோமாஞல் திரும்பவும் இலக்ஷியத்தினை உறுதிப் படுத்துவோம். 'இது என்னல் ஆகலாம், ஆகாது' என்று ஒருபோதும் இயம்ப வேண்டாம். 'இதனைத் தவிர்த்து நான் வேறொன்றும் செய்யேன்' என்று தீர் மானமாகச் சொல்வீர். இதுவே உண்மை சாதகனது சுபாவமாக இருத்தல் வேண் டும்.

'இறைவ! எனது வாழ்க்கையின் துருவ நக்ஷத்திரம் நீயே யாவாய்; என் மனத்தை உன்மீது நிலைக்கவைத்தால் இந் தப் பிறவிக்கடலில் நான் வழிதப்பிப் போகமாட்டேன்.'

வடதுருவத்தையே காட்டும் சிறந்த காம்பாஸ் என்ற கருவியும்கூட சில நேரங்களில் கெட்டுவிடலாம். ஆனல் துருவ நக்ஷத்திரம் என்றும் நிலைபெய ராது.

எ

இந்தியா சைந்நியத்திலும் பீரங்கிகளி லும் நம்பிக்கை கொள்வதில்லை. அது அறிவிலும் ஞானத்திலும் நம்பிக்கை யுடையது. இந்தியத் தாய்க்கு அறிவே பலம். அன்பே அனைத்தினையும், உலகத் தினையும், மக்கட் கூட்டத்தையும் வெல் லும் ஆயுதமாகும். இந்தியா ஞானவெற் றியை மேற்கொள்ளுகின்றதே யல்லாது தேச அரசாக்ஷி வெற்றியை யன்று. மனிதராக விருக்கக் கற்றுக்கொள்வீர். மனிதர்களா யிருப்பீர்; உண்மையான வீர

மனிதர்களாக விருப்பீர். இந்திரியபோகத்திலும் ஆசைகளிலும் உழன்று கிடக்கும் மிருகம்போன்றிருக்காமல் வீரம், ஞானம், பக்தி, அன்பு, பரிசுத்தம் பற்றற்ற தன்மை பொருந்திய மனிதர்களா யிருப்பீர்.

வாழ்க்கையின் குறிக்கோள் விடுதலை—பயமின்மையாக விருக்கவேண்டும். எதிலிருந்து விடுபடுதல்? பிறப்பிறப்பு என்னும் தளைகளிலிருந்து விடுபடுதலே; ஆசாபாசங்களிலிருந்து விடுதலை பெறுதலே; ஒப்புயர்வற்ற ஆத்ம சாந்தி எய்துதலே; ஆன்மஞானமே உண்மையினை ஒரும் தன்மை வாய்ந்தது. அது இறுதியில், எல்லாவற்றினையும் கடந்தது என்று ஸ்ரீ ஏசுநாதன் கூறிய நிலையான சாந்திக்கு இட்டுச் செல்லும்.

---

# சந்தேகம் தெளிதல்

வினா:—சில மனுஷ்யர்கள் ஆன்மீய மார்க்கத்தில் முதிர்ச்சி யடைந்திருந்து, தியானம் முதலியவைகள் மிகவும் பழகியும், சாதாரண உலக வாழ்க்கையிலிருக்கும் மனிதர்களைப் போலவே, கோபம் பொறாமை பழிக்குப் பழி வாங்குதல் சிறிய குற்றங்களையும் மன்னிக்காமை பிடிவாதம் முதலிய குணங்களை உடையவர்களா யிருக்கிறார்களே, இதன் காரணம் யாது?

ர. தி. ஆ.

விடை:—ஞான வாழ்க்கையிலும் (ஆன்மீய மார்க்கத்திலும்) சரியான தியானம் பழகுதலிலும் உண்மையாகவே ஒருவன் ஈடுபட்டிருப்பானாயின் துர்க்குணங்களெல்லாம் வரவர மெல்ல மெல்லக் குறைந்து கொண்டே வருதல் வேண்டும். ஒருக்கால், சாதகன் அடையும் முன்னேற்றத்தைப் பிறர் அறிய முடியாவிட்டாலும் அவனாவது உணராமற் போகமாட்டான். பிறர் கண்ணிற்குக் குணந்திருந்தி யிருத்தல் புலப்படவேண்டுமாயின் அது மிகவும் திருந்தியிருத்தல் வேண்டும்; பெரும் மாற்றமும் உண்டாயிருந்தாலன்றி, வெளிப்பார்வைக்கும் அது புலப்படாது போகும். கோபம் பொறாமை முதலிய (கூறப்பட்ட) குணங்கள் ஒருவனது உள்ளத்து வேரூன்றியிருக்கும்போது, அவைகளை மிக எளிதாகக் கிள்ளி எறிந்து விடுதல் இயலாத காரியமாகும். மெல்ல மெல்ல நாளடைவில் அவைச் சிறிது சிறிதாகக் குறைந்து அநேக ஆண்டுகள் கழிந்த பின்னரே மறைந்து போகும். ஞான நூல்களைக் கற்க ஆரம்பித்து விட்டதாலும், சிறிது நேரம் கண்மூடிக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருப்பதனாலும், குணம் விரைவில் திருந்தி விடாது. "நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன் உண்மையறிவே மிகும்" என்றார் நாயனார். (உண்மை யறிவு—பழைய வாசனைகளின் பயனாக எழும் அறிவு. பழைய வினைகளின் பயன்களை எதிர்த்து முற்றும் அழித்தற்குத் தீவிரமான முயற்சி வேண்டும். ஞான நூல்களைக் கற்பதோடு நில்லாது ஒருவன் தனது குற்றங் குறைகளை நன்கு தவனித்து உணர்ந்து, அவைகளின் கேடுகளையும் இழிவையும் அடிக்கடி சிந்தித்துச் சிந்தித்து, அவைகள் முளைக்கும் போதே மனதை வேறு வழிகளில் திருப்பி அவைகட்கு ஆளாகாது விழிப்பாக இருந்து வருதல் வேண்டும். மேலும் மனம் ஒருவாறாவது அடங்கினாலல்லது, தியானம்பண்ணுதலும் இயலாது போகும். கண்ணை மூடிக் கொண்டு தியானிக்க உட்கார்வதினால் மட்டும் உண்

மையான தியானம் வந்து விடாது. மனம் ஒருவாறுவது தூய்மையடைந்தாலன்றித் தியானமும் கைகூடாது. உண்மையான தியானத்தில் சிறிது நேரம் ஆழ்ந்திருந்தாலும், அதன் பயன் வெகு நேரம் நீடித்து நிற்கும். ஆக, கோபம் பிடிவாதம் முதலிய துர்க்குணங்கள் மும்முரமாக இருக்குமானால், அங்கே ஆன்மீய மார்க்கத்தில் உண்மையான முதிர்ச்சி இல்லை என்பதையும், சரியான தியானமும் இல்லை என்பதையும் ஊகித்துக் கொள்ளலாம்.

சிலர் ஞானப் பிரசங்கங்களைக் கேட்டும் ஞான நூல்களைக் கற்றும், தியானம் பழகியும் உண்மையான பயனை அடையாமற் போகும் காரணமும் ஒன்று உண்டு. அது யாதெனின், அவர்கள் உண்மையாகவே, மனத்தூய்மையையும் உயர்ந்த ஒழுக்கத்தையும் தமது முயற்சிகளின் நோக்கங்களாகக் கருதுவதில்லை. ஜெபம் தியானம் பண்ணுவது நமது மனதைச் சுத்தப்படுத்துவதற்காகவே என்பதை நினைவில் நன்றாகப் பதித்துக் கொண்டு, உண்மையான ஞான இச்சையோடு தியானத்தில் இறங்க வேண்டும்; ஆனால் பலர் இதை அறிவதில்லை. தியானம் ஜெபம் முதலியவைகளால் உலககாரியங்களில் எளிதாகச் சித்தி பெறலாம் என்ற எண்ணத்தோடு பழகுபவர்கள், ஆழ்ந்து தியானம் பண்ணினும், ஒழுக்கம் சிறிதும் திருந்தப்பெறார்கள். இராவணனும் அவனைப்போன்ற அரக்கர்களும் பெருந்தவம் செய்தவர்களே; ஆயினும் ஒழுக்கத்தைத் திருத்தித் தூய்மையை அளிக்கும் தவத்தில் ஈடுபடாமல் ஆசையின் மிகுதியால் குறிப்பிட்டதொரு வரம் பெறுதற்கான தவத்திலேயே கண் வைத்தனர்; அவர்கள் தாம் விரும்பிய வரங்களைப் பெற்றனரேனும், நல்லொழுக்கமும் தூய்மையும் பெறாது பெருந்துயரத்திற்கு ஆட்பட்டனர். முறைக்காகத் தியானம் பழகுவோரும், இறைவனைக் காணவேண்டும் என்னும் ஆசையைப் பெறாதவரும், உயர்ந்த ஒழுக்கத்தை இலக்ஷியமாகக் கொள்ளாதவரும் எவ்வளவு முதிர்ச்சி யடைந்தாலும், தியானம் பழகினாலும், குணம் திருந்தப்பெற மாட்டாதவராவார்.

உயர்ந்த ஒழுக்கத்தையும் முத்தியையும் குறிப்பாகக் கொண்டு, உலக இச்சைகளை ஒழித்தல் வேண்டும் என்னும் தீவிர ஆசையையும் பெற்று உண்மையாக ஆன்மானுபவம் பெற்ற ஒரு சத்குருவின் உபதேசப்படி தியானம் பழகுகிறவர்களே குணந்திருந்தப் பெறுவார். பிறர்அவ்வளவு உயர்ந்த பலனை எளிதில் அடையார் உண்மையான சாதகர்கள் துர்க்குணம் நீங்கப் பெறாத காரணம், பொதுவாக, அவர்களுடைய பழைய வாசனைகளின் தடிப்பேயாகும்; இத்தடிப்பும் வரவரக் குறைந்து வருவதை அவர்கள் உணர்வார்கள். உண்மையாக முயற்சிப்போர் அதன் பயனைத் தாமாவது உணராது போகார்; அவரும் உணரவில்லை, பிறரும் உணரவில்லையெனில், அவர்களது முயற்சி தவறான நெறிப்பட்டது என்பதே முடிவாகும்.

வினா :—(1)ஆண்டவன் அனைவருள்ளத்திலும் உறைகின்றான் என்றும், ஆகையால் அனைவரையும் அவனது நடமாடும் கோயிலாகக் கருதவேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறதே. பிறகு சகுனம் பார்ப்பது ஏன்? (2) உயர்ந்த வகுப்பினராய பிராம்மணர் எதிரில் வந்தால் சகுனத்திற்கு ஆகாது என்பது என்ன காரணம்?

—கோ.

விடை :—அவ்வாறு அனைவருள்ளத்திலும் இறைவன் வாழ்வதாகக் கருதுவார்க்கு சகுனம் அவசியமில்லை. அவர்கள் சகுனத்தைக் கவனிக்கவும் மாட்டார்கள் சகுனத்தைப் பிரமாணமாகக் கொள்வோர்

சிலரோ. ஒரு ரிஷி சகுனத்தைப் பார்க்கச் சொன்னார்; இன்னொருவர் மனோ நிச்சயத்தையே பற்றிச் செல்லுதல்வேண்டும் என்று கூறினார். பெரியார்களது வாக்கையே பின்பற்றி நடக்கவேண்டும் என்று இன்னொருவர் கூறினார். ஆதலின் ரிஷிகட்கும் இதுபற்றி அபிப்பிராயபேதம் உண்டு. சகுனத்தை நம்பவேண்டும் என்ற விதி எங்கும் இல்லை. நல்ல சகுனம் உண்டானாலும் கெட்ட சகுனம் உண்டானாலும், மன உறுதியுடையோர் பலனைச்சிறிதும் பொருட்படுத்தாது, தாம் செய்ய வேண்டியவற்றை ஒழுங்காகச் செய்வார். சகுனம் பெரும்பாலும் நம்பிக்கையளவாய் நிற்கின்றது; பழக்கத்தையும் வழக்கத்தையும்பொறுத்ததாகின்றது. அதைப் பற்றி ஆராய்ச்சி செய்வதில் பயனில்லை என்பதே எமது கருத்தாகும்.

பிராம்மணர்கள் முற்காலத்து ஏழையர்களாயும், உலகச்செல்வத்தையும் உலக ஆசைகளையும் துறந்தவர்களாயும் இருந்ததனால், அவர்களை சுபகாரியங்களைச் செய்யப்போகும் சமயத்தில் காணுதலை மக்கள் விரும்பாதொழிந்தனர். அவர்களது நினைவும் வரவும் வைராக்கியத்தையும் ஞானத்தையும் மனதில் எழச் செய்துவந்தமையால், உலக இன்பசம்பந்தமானகாரியங்களைச் செய்யத்தொடங்கும் போது, அவர்களது நினைவும் வரவும் விரும்பத்தகாதவைகளாயின. மேலும், மரணம் சம்பந்தமான அசுப கிரியைகட்கெல்லாம் பிராம்மணர்கள் அவசியமாயிருந்த காரணத்தால் அவர்களை அசுபகாரியங்களோடு சம்பந்தப்படுத்தும் வழக்கம் ஏற்பட்டுவிட்டது. அவர்களது உயர்வே பிறர் அவர்களை விட்டு விலகுதற்கு ஏதுவாயிற்று.

வினா:—பூஜை முதலிய ஆராதனைகள் நடக்கும் பொழுது சிலர் தம்மேல் ஆவேசம் வந்துவிட்டதாகக் கூறி ஆடுகிறார்கள். சிலர் ஆவேசமொழிகளும் கூறுகின்றனர். அது உண்மையா?

விடை:—தெய்வ பூஜை நடக்கும்போது அந்தத் தெய்வத்தினிடத்து ஈடுபடுபவர்களிடத்துச் சில சமயங்களில் உண்மையான ஆவேசம் ஓரளவிற்கு வருவதுண்டு. சுத்தமான நெஞ்சமும் தெய்வத்தினிடத்து ஈடுபாடும் உள்ளவரிடத்துத் திடீரென்று தெய்வ ஆவேசம் உண்டாகிச் சில விஷயங்களைக் கூறுதலோ எச்சரிக்கைகளைச் செய்தலோ தொன்றுதொட்டு எங்நாட்டிலும் நிகழ்ந்து வந்துள்ள தொன்றாகும். ஆனால் இந்த ஆவேசம் தெய்வத்தின் இச்சையால், பெரும்பாலும் ஆவேசத்திற்கு உட்படுவோரது முயற்சியின்றி நிகழ்ந்துவரும். நாளடைவில் ஒருவரிடத்து இவ்வாறு ஆவேசம் உண்டாவதை அறிந்த மக்கள் அவரை வற்புறுத்தி ஆவேச நிலைக்கு உட்படுத்த முயன்று வரலானார். அது முதல் ஆவேச நிலை மதிப்பை இழக்கத் தலைப்பட்டுவிட்டது. ஆவேச நிலை உண்மையாக நேராதபோதும், ஆவேச நிலையிலுள்ளவர் போல நடிக்கத் தொடங்கின காலம் முதலே ஆவேசம் மதிப்பை இழக்க ஆரம்பித்துவிட்டது. கூக்குரலினாலும், இரைச்சலினாலும், இசைக் கருவிகள் மூலமாகவும் இந்த ஆவேசத்தை மக்கள் தமக்கு வேண்டியபோது, ஒருவரிடத்துப் பலாத்காரமாக உண்டாக்க முயலும்போது நடிப்பும் பொய்யும் மலிவாயின. உண்மையாக பக்தி பண்ணுபவர்கள் சிற்சில சமயம் தாமறியாதே தம்வசமிழந்து ஆவேச முற்றுச் சிற்சில மொழிகள் கூறினால், அம்மொழிகள் அப்படியே உண்மையாகும். நாமாகச் சிற்சில உலக நோக்கங்களைக் கொண்டு, இந்த ஆவேச நிலையைப் பெறுவதற்காகப் பழகி வருவோமாயின், அப்போது போலி ஆவேசமும் மயக்கமும் நரம்புக்கோளாறுகளுமே மிஞ்சும்;

'சந்தம்' தமக்கு வரவேண்டுமென்று தாமாகப் பாடுபடுபவர்களிற் பலர் தாமும் ஏமாற்றமடைந்து, பிறரையும் ஏமாற்று கின்றனர். உயர்ந்த இயல்பும் நல்லொழுக்க மும் இல்லாதார் பலர் ஒருவகையான பழக்கத்தாலும் வெறியாலும் ஆவேச முற்றவர்போல் ஒழுகிவருகிறார்கள். இவர் கள் மெய்ம்மறந்த நிலையிலிருந்தாலும், ஆவேசமுற்றவராகார். சிவாஜி தமது தாயாரிடம் ஒரு விஷயத்தைக் குறித்து ஆலோசித்தபோது, தேவியின் உண்மைப் பக்தரான அந்த அம்மையார் தேவி சந் நதிக்குச் சென்று பிரார்த்தித்தார்; பிற் பாடு திரும்பும்போது ஆவேசம் கொண்டு சிவாஜியை அழைத்து, அவரைச் சிற்சில விஷயங்களில் எச்சரிக்கை செய்தார். இவ் வாறு எச்சரித்த மொழிகள் ஆவேச நிலை யில் எழுந்தன என்பதை சிவாஜியும் அவ ரது தாயாரும் அறிவார். அம்மொழி கட்கு இணங்கி நடத்தற்கு சிவாஜி முத லில் சம்மதிக்க வில்லையென்றாலும், தேவி யின் ஆவேச வாக்காக எண்ணி அப்படி நடந்தார். பின் நடந்த எதிர்பாராத நிகழ்ச்சிகளிலிருந்து சிவாஜி தேவியின் வாக்கின் உண்மையை அறிந்துகொண் டார். ஆதலால் ஆவேசம் உண்மையாக நிகழ்வதுண்டு. அன்பர்களது சரித்திரத் தில் ஆவேசம் உண்மையாவதற்குப் பல உதாரணங்கள் காணப்படும். ஆனால் எதற்கும் போலியுண்டு; அப்போலியே உண்மையை நிலைநாட்டும் சான்றாகின்றது.

வினா:—விஷ ஜந்துக்களைக் காணும் பொழுது அவைகளைக் கொல்ல வேண்டும் என்று எழும் உணர்ச்சி சரியா, தவறா?

P. கோ.

விடை:—விஷ ஜந்துக்கள் பிறரது உயிரைக் கொன்றுவிடக் கூடிய சந்தர்ப்பங் களில், பிறருடைய நலங்கருதி அவைகளைக் கொல்லக் கருதுதல் சரியான நினைவே யாகும். விஷஜந்துக்கள் நாட்டில் இல்லா மல் காட்டில் வாழும்போது, நாம் அவைக ளிருக்கும் இடம் சென்று கொல்ல நினைத் தல் அவ்வளவு சரியல்ல; அவைகள் மீது கோபங்கொண்டோ, ஹிம்சை செய்யும் இயல்பாலோ அவைகளைக் கொல்லுதல், அதாவது தக்க காரணமின்றிக் கொல்லு தல் முறையாகாது. உலகில் அவைகட் கும் வாழ இடமும் உரிமையும் உண்டு. தமக்குரிய இயற்கையான இடங்களில் அவைகள் வாழும்போது, பிறர்க்கு ஹிம்சை செய்யாதபோது, அவைகளைக் கொல்லல் தவறு. ஒரு விஷ ஜந்து தனது இரைக்காக ஓர் உயிர்ப் பிராணி யைப் பிடிக்கும்போதும், அதைத் தடுத் தல் பாவமாகும். அஹிம்சையே உரு வெடுத்து வந்தாற்போல் உள்ள மஹான் கள் எக்காரணத்தாலும் கொல்லார்; இது மற்ற சாதாரண மக்கட்குப் பொருந்தாத ஒழுக்கமாம்.

---

# அவன் எங்குள்ளான்?

(பி. பா)

மனிதன் ஆத்மன் என்று சொல்லப் படுகிறது. ஆயின் ஆத்மன் அல்லாதவற் றோடு அவன் எப்பொழுது எப்படிச் சம்பந் தங் கொண்டான்? அவன் பிரம்மனைக் காட்டிலும் அன்னியன் அல்ல என்றும் கூறப்படுகிறது. அப்படியானால் அவன் இவ்வுண்மையை மறந்து அற்ப புழுவைப் போன்று பயந்து வாழ்வது ஏனோ? ஆம், இக்கேள்விகள் உண்மைகளெனவே தோன்றுகின்றன. எதுவரைக்கும்?

பிரம்ம சாக்ஷாத்காரம் எய்திய பிறகு இவ் வுண்மைகள் யாவும் இல்லாது கனவுபோல் மறைந்தொழிகின்றன. கனவு காணும் போது கனவு எப்படி ஏற்படுகின்றது என்பதைப் பற்றி நாம் ஆராய்கிறதில்லை. அறியாமையாலேயே மனிதன் தன்னை மறந்தான் என்று வேதங்கள் கூறுகின்றன. மற்றபடி நாம் இப்போதிருக்கும் நிலைமை எப்படி வந்தது என்பது நமக்குத் தெரியாது என்று தான் சொல்ல வேண்டி இருக்கின்றது.

அப்படியானால் நாம் ஆத்மன் தான் என்ற உண்மையை எப்படி ஏற்றுக் கொள்ள இயலும்? இங்கே மாயையைக் கடந்துசென்று விடுதலைபெற்ற ஆத்ம ஞானிகளே நமக்கு வழிகாட்டிகளாகவுள் ளனர். ஆத்மனை நேருக்குநேர் கண் டறிந்த பின்னரே, மனிதன் மாயை எத் தகையது, அதனை எங்ஙனம் கடந்துசெல்ல முடியும் என்பதனைக் கண்டறிகின்றான். அதற்கு முன் இல்லை. அதுவரையும் அனைத்தும் வெறும் கொள்கை மாத்திர மாகவே இருக்கும். இது பெரும் ஆபத் தாகத் தோன்றலாம்; என்றாலும் சமய வாழ்க்கையில் முன்னுணர்ந்தாரது வார்த் தைகளையும் வாழ்க்கையையுமே ஆதார மாக வைத்துக்கொண்டு நடக்க வேண்டி யதே யல்லாது பிறிதொரு வழியில்லை. ஒருவன் உண்மையை அறிந்தானா இல்லை யா என்பதை நம்மால் இயன்றவளவு நனுகிப் பரிசீலித்துப் பார்க்கலாம். ஆனால் உண்மையை அறிந்தவனே அதனைப்பற்றி எடுத்துரைக்க வல்லவன் என்பதனை எவரும் மறுக்க இயலுமோ? அதனால்தான் 'சாக்ஷாத்காரம் எய்திய உயர்ந்த குருவின் வார்த்தைகளைக் கேட்க வேண்டும்; அவற்றைப் புத்திகொண்டு பரிசிலனை செய்யவேண்டும்; பிறகு அவ் வார்த்தைகள் நம்மோடு ஒன்றுகும்படி இடைவிடாது சிந்தனை செய்யவேண்டும்' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அப் போதே மாயை நம்மைவிட்டகலும்.

இதற்காக உள்ளும் புறமும், ஏற்ற தான வாழ்க்கையை மேற்கொள்ளவேண் டும். இவ்வுண்மையை மறந்த போதே யாவும் சங்கடமாய் முடிகின்றன; சமய வாழ்க்கையில் மாறுபட்ட அபிப்பிராயங் களும் சண்டைகளும் உண்டாகின்றன. சமயம் அனுபவ பூர்வமானது. பலர் செய்ய வேண்டிய சாதனைகளை மறந்து வெறும் கொள்கைகளை மாத்திரம் பேசித் திரிகின்றனர்; அனுபவமில்லாத பேச்சு பேச்சல்ல, பிதற்றலேயாகும். நம்முடைய சமய நூல்கள் ஒவ்வொன்றும் சமய வாழ்க்கைக்கு அவசியமான ஒழுக்க வாழ்க்கையையும் சாதனைகளையும் தெளி வாகக் கூறுகின்றது. உள்ளும் புறமு மான ஒழுக்க வாழ்க்கை யின்றி உயர்ந்த உண்மையை ஓர்தல் என்பது இயலாது. இதனை விளக்க சந்தோக்யோபநிஷதத் தில் அழகிய கதையொன்றுளது. தேவர் கோனுகிய இந்திரனும், அசுரர்க்கரசனுகிய விரோசனனும் பிரஜாபதியிடம் உபதே சம் கேட்கப் போகின்றனர். பிரஜாபதி யின் உபதேசத்தை இருவரும் முதலில் மாறுபடக் கொள்கின்றனர். விரோசனன் அவ்வுபதேசத்துக்கிணங்க தன் சரீரமே ஆத்மன் என்று மருண்டு அதனைப் பேணி வளர்த்தலிலேயே கருத்துச் செலுத்து கிறான். ஆனால் இந்திரனுக்கு அழியும் தன்மையதாகிய ஆத்மன் தான் அல்ல வென்று ஐயம் உண்டாகின்றது. திரும்ப பிரஜாபதியிடம் வருகிறான். பிரஜாபதி அவனை ஒருகுறித்தகாலம்வரை பிரம்மசர் யம் அநுஷ்டிக்கக் கட்டளை யிடுகிறார். திரும்பவும் உபதேசிக்கிறார். இப்போதும் இந்திரன் பிரஜாபதியின் உபதேசத்தைக் கிரகிக்க முடியவில்லை. மறுபடியும் பிரம்ம சர்ய விரதம்அநுஷ்டிக்கக் கட்டளை இடப் படுகின்றான். இவ்விதம் மும்முறை பிரம்ம

சர்ய வாழ்க்கையைத் தொடர்ந்து அநுஷ்டித்த பிறகே அவன் உண்மையை உள்ளபடி அறிந்துகொள்ள இயலுகின்றது. "தீய காரியங்களிலிருந்து விடுபடாமலும், புலனடக்க மில்லாமலும், சுகதுக்கங்களை சமநோக்குடன் காணுமலும், ஏகாக்கிரக சித்த மில்லாமலும் இருக்கும் எவராலும் புத்திபூர்வமாக மாத்திரம் பிரம்மனை அறிந்து கொள்ள இயலாது" என்று கடோப நிஷதம் கூறுகின்றது.

'அடுத்தல் ஐம்புலன் செயாதார்க்கு அறிவில்லை, அறிவின்ருக விடுத்த மெய் யுணர் வின்ருமால் மெய்யுணர் வில்லையாகில், தொடுத்தபின் சித்தசாந்தி தோன்றிடாதது தோன்ருதேல்,எடுத்த நல் இன்பந்தானும் இல்லையே இசைக்க வேண்டா' என்று கீதையும் எடுத்துரைக்கின்றது.

இவ்விதம் சாதன சதுஷ்டயங்களை முறைப்படி அநுஷ்டித்தவர்கள், ஆத்மன் தன்னிலேதானுக இருக்கக் காண்பர். அங்ஙனம் செய்யாதார் அசுரர்க்கரசன் விலோசனனைப் போன்று பொய்யினை மெய்யெனக் கொண்டு, மயக்கத்திலாழ்ந்து, மேலும் மேலும் பிறவிப் பிணியை எய்தாநிற்பர். உலகப்பற்று ஒழிந்த அளவுக்கு, விவேகமும் வைராக்யமும் அதிகமாகும் அளவுக்கு, சாதகன் முன்பு வெளியே தேடியலைந்த கடவுளை இப்போது தன் உள்ளே இருக்கக் காண்கிறுன். மேலும், சாதனையின் முதிர்ச்சியால் தான் அக்கடவுளின் அம்சம் என்று நினைத்ததைவிடுத்து, தான் அக்கடவுள் சொரூபமே என்றறிய வருகின்ருன். தான் அவரை அடையவேண்டியதில்லை; ஆனல் தான் அவரே என்பதனை நிலைநாட்ட வேண்டுவதே தன் கடமை என்றுணரப் பெறுகின்ருன். எதற்கும் அவன் அழுது புலம்பவேண்டியதில்லை; எதனையும் கண்டு அவன் அஞ்சி நடுங்கவேண்டியதில்லை; அளவே யற்ற சக்தி-வல்லமை-ஆற்றல் அவனிடத்தே உள்ளது. அவனிட மில்லாததுதான் என்ன? கஸ்தூரி தன்னிடமிருப்பதறியாது அதனைத் தேடியலையும் மான்போல், இதுகாறும் அவன் சாவோட்டம் ஓடினன். இதுவே சமயத்தின் முடிவான கருத்து: இருப்பது ஒன்றே; அதுவே தான் என்னும் அறிவினை எய்தப் பெறுவதோடு ஞானம் லயமாகிவிடுகின்றது; பக்தன் தன் பகவானேடு ஒன்று பட்டவுடன் பக்தி முடிவடைகின்றது; பலனை எதிர்பாராது பற்றற்று கர்மம் புரிவோனுக்குக் கர்மம் கர்மமாகிறதில்லை; அது அகந்தையை அறுத்தெறிகின்றது; யோகம் பேதபுத்தியைக் கற்பிக்கும் மனத்தினை யடக்கி ஒன்றில் யோகியைச் சேர்க்கிறது. இந்த ஞானம், பக்தி, கர்ம யோகங்கள் மூலமாக ஒருவன் சச்சிதாநந்த மயமாகின்ருன்—கடவுளாகின்ருன்.

இவ்வுயர்ந்த அத்வைத நிலையை எய்துவதற்கு சாதகன் துவைதம் விசிஷ்டாத்வைதம் ஆகியவற்றைக் கடந்து செல்ல வேண்டும். தம்மை எப்படிக் காண்கிருன் என்று ஸ்ரீ ராமபிரான் ஹனுமானைக் கேட்டபோது வாயுபுத்திரன் விடையளித்ததாவது.

"தேஹ புத்யா தாஸோஸ்மிதி, ஜீவபுத்யா த்வதம்ஸக:
ஆத்ம புத்யாத்வமே வாஹ மிதி மே நிச்சிதாமிதி:".

'சரீர எண்ணம் மிகுந்திருக்கும் போது நான் உனது சேவகனுகவும், ஜீவபுத்தி ஏற்படும்போது உனது அம்சமாகவும் ஆத்மபுத்தி உண்டாகும்போது நீயே நானுகவும் இருக்கிறேன் என்பது எனது உறுதியான நம்பிக்கை.

---

# சந்தாதார்கட்கு ஓர் அறிவிப்பு

சந்தாதார்களிற் பலர் தமக்கு ஏற்படும் சந்தேகங்களைப் பத்திராசிரியர்க்கு எழுதியனுப்பி வருகிறார்கள்; அவைகள் முறையாக 'சந்தேகம் தெளிதல்' என்னும் பகுதியில் தக்க விடைகளோடு வெளியிடப்பட்டு வருகின்றன. மாதந்தோறும் இப்பகுதியில் சிற்சில வினாக்கட்கு விடைகள் கொடுக்கப்படுகின்றன என்றாலும், அநேக வினாக்கள் இடமில்லாமையால் எஞ்சியே போகின்றன. சந்தேக வினாக்கள் பல அனுப்பப்படுவதாலும், அவைகளிற் சிற்சிலவே மாதந்தோறும் வெளிவரக் கூடியவாதலாலும், கையிருப்பிலுள்ள வினாக்கள் ஒருவாறு அதிகரித்துக் கொண்டே வருவது அவசியமாகின்றது; ஆதலின் வினாக்கட்குரிய விடைகளை வினவுவோர் எதிர்பார்க்கும் விரைவில் வெளியிடுதல் இயலாது போகின்றமைக்கு வருந்துகின்றோம். ஐந்தாறு மாசங்கட்கு முன் அனுப்பப்பட்ட கேள்விகட்குரிய விடைகளை அந்தந்த மாதங்களில் வெளி வருகின்றன. ஆதலின், வினாக்களை அனுப்பும் நேயர்களை, காலக்கிரமப்படித் தமக்குரிய விடைகள் வருமளவும் ஆறியிருக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறோம். அன்றியும், வினாக்கள் பழைய வினாக்களாகிய காலத்து, அவைகட்குரிய விடைகள் பொதுவாக வழங்கப்படுவதில்லை. குறிப்பிட்ட சில வினாக்கட்கு விடைகள் எப்போது வெளியிடப்படும் என்பதை வரையறுத்து முன்னரே கூறுதல் இயலாததாகின்றது. விடைகள் வெளியிடப்படும் காலத்தை அறிவித்தலும், தபாற்செலவையும் கடிதங்கட்குப் பதில் எழுதுவதற்கு வேண்டிய அவகாசத்தையும் அவாவி நிற்கின்றது. போதுமான தபால் முத்திரைகளை அனுப்பாதபோது, வினாக்கள் திரும்ப அனுப்பப்படமாட்டா. இப்பத்திரிகையை நடத்தும் தொண்டில் ஈடுபட்டிருப்போர் வேறு அலுவல்களையும் பார்த்து வருதலின், சந்தாதாரர்களுக்குக் காகிதம் எழுதுதல் இன்றியமையாததாகும்போதன்றி, மற்ற சமயங்களில் பொழுது பெற முடியாது இடர்ப்படுகின்றனர். தடுக்க வொண்ணாத காரணங்களால் இவ்வாறு இடையிடையே 'விஜய' அன்பர்கட்கு அதிருப்தி உண்டாகுமாயின், அதை உள்ளத்தே பொருட்படுத்தாதிருக்குமாறு அவர்களை வேண்டிக் கொள்கிறோம்.

—பத்திராசிரியர்,
'விஜயம்'

---

# நமது சிகர ஜோதி

இப்பகுதியில்: அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரின் சம்பாஷணைகள் ஆங்கிலத்தில் சமீபத்தில் வெளிவந்துள்ளன. நம் 'விஜய' நேயர்களும் அதன் பயனை முழுதும் பெறவேண்டி அன்பர் இராம கிருஷ்ணன் அவர்கள் அவற்றை மொழி பெயர்க்க முன்வந்துள்ளார். 'தேவியின் திருவாக்கு' என்னும் தலைப்பின்கீழ் இனி அரிய செய்திகளைக் காண்போம். 'ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளின் அனுபவ அத்வைதம்': பேராசிரியர் ஸ்ரீநிவாசாசாரியா ரவர்கள் இக்கட்டுரையில் ஒவ்வொரு மனிதனும் தான்தானே தனக்குரிய மதத்தை மேற்கொள்ளும் உரிமையுடையவன் என்னும் சுவாமிகள் கூறும் உண்மையை விளக்குகின்றார். நால்வகை யோகங்களில் இலக்கணங்களும் மிக நன்கு கூறப்பட்டுள்ளன. 'இராமாயணசார விளக்கம்': இத் தலைப்பின் கீழ் ஸ்ரீ முத்தையா பிள்ளையவர்கள் இராமாயணக் கதையினைக் கொண்டு சில உண்மைகளைப் புலப்படுத்துகின்றார். 'ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை': இதன் முதற் பகுதியில் சுருக்கமாகச் சரித்திரத்தையும் பிற்பகுதியில் குருதேவரின் ஆற்றல், ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளும்,

அன்னை சாரதாதேவியாரும் செய்த சேவைகள் இவற்றைக் காணலாம். இங்குக் கூறியுள்ளபடி 'குருதேவ நாடக'த்தின் நான்காம் அங்கம் நாளுக்குநாள் விரிந்து பரந்து நடக்கின்றது; என்றும் முடியாது சளைப்பு களைப்பின்றி நடக்கும் இந்த நாடகம். உலகினர் யாவரும் இந் நாடகத்தினைக் கண்டு நலனெய்துவர். 'ஆத்ம சாதன முன்னேற்றத்துக்கான நன்மைகள்' வழக்கம்போல் இக்கட்டுரையில் ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள் பிரம்மசரியத்தின் அவசியத்தினைப்பற்றி வற்புறுத்திக் கூறுகின்றார்கள்.

## நமது விஜயம்

பழைய ஆண்டு கழிந்து, புதிய ஆண்டு புகும்போது, நமது உடலையும் உள்ளத்தையும் புதுப்பித்து, அவைகட்குப் புத்துயிரையும் புதிய ஊக்கத்தையும் ஊட்டக்கூடிய ஒரு நல்ல சங்கற்பத்தோடும் தொடங்குதல் மிக நன்றாகும். மனிதன் உயிர் வாழ்வது வெறும் உணவால் மட்டுமல்ல, நீராலுமல்ல, காற்றினாலுமல்ல; அவனது உடலையும் உயிரையும் தாங்கி நிற்கும் பரம்பொருளின் அருட்சத்தியினாலேதான் மனிதன் உண்மையாக வாழ்கின்றவனாவான். நாம் அறிந்தாலும் அறியாவிடினும், உண்மை மாறுவதில்லை. பூனை கண்ணை மூடிக்கொள்வதினால், உலகம் இல்லாது போவதில்லை; பகலில் நக்ஷத்திரங்களை நாம் காண முடியாமையாலே, அவைகள் பகலிலும் இருத்தல் பொய்யாகி விடுவதில்லை. நமக்கு உண்மையாகத் தாரகமாகும் பரம்பொருளும், அதுபோல், நமது உணர்வாலும் உணர்வின்மையாலும் தன் இயல்பை இழந்து விடுவதில்லை. நாம் வாழ்வதும் இயங்குவதும் நமது இருப்பைப் பெறுவதும் பரம் பொருளின் மூலமாகவேயாதலின், எக்காரியத்தை நாம் தொடங்கு முன்னும் நமது மனதை ஒரு சில கணங்களேனும் அம்மெய்ப் பொருளினிடத்து நிலை நாட்டுவது பெரு நன்மையை நமக்கு அளிக்கக் கூடியதாகும்; இடையிடையே தொழிலின் நடுவிலேயும் அவ்வாறு செய்தலும், தொழில் முடிந்த பின்னும் பரம் பொருளின் அருளை வியத்தலும் மிகமிக நன்றாகும். ஆதலின் 'விஜய' அன்பர்களாகிய நாம் அனைவரும் இப்புது ஆண்டைப் பின் வரும் பிரார்த்தனையோடே தொடங்குவோம். "நமக்கு நிலை நின்ற புகலிடமாகிய பரம்பொருளை நோக்கி நமது அந்தரங்கமான எண்ணங்களையும் பிரார்த்தனைகளையும் உயர்த்துவோம். மாறாத அன்பும் அருளும் சேர்ந்த வடிவாய் இலங்கும் இறைவனை நாம் அணுகுவோமாக. அனைத்தையும் சூழ்ந்திருக்கும் (அவனது) அன்பினை நமது நெஞ்சத்தினுள்ளே உணர முயல்வோமாக. இவ்வாழ்க்கையின் நிலையற்ற நிலைமைகட்கு மத்தியில் நிலையுற்ற இறைவனையே பற்றிக் கிடந்து, அவனையே புகலிடமாகக் கொண்டு, எது வரினும் மனஞ்சலியாதிருப்போமாக. நாம் மட்டும் நாடும் மனமுடையோமாயின் இறைவனே நமக்குத் துணையாக நின்று வழிகாட்டி அருளுவான் ஆதலின், அத்துணையையே நாடக் கற்றுக்கொள்வோமாக. நாம் அமைதியாயிருந்து அவர் நமது உள்ளத்தே கோயில் கொண்டு எழுந்தருளி யிருப்பதை உணர்ந்து, அக்கோயிலிற் சேர்ந்து, அங்கே ஆனந்தமும் சாந்தியும் பெற்றுக் குடியாக வாழ்வோமாக. நம் அனைவர்க்கும் தந்தையாயும் தாயாயும் என்றென்றும் தோழராயும் இருக்கும் பரம்பொருள் நம்மீது தமது கருணையைப் பொழிவாராக. நமக்கும் அனைத்துயிர்கட்கும் சாந்தி, சாந்தி, சாந்தி உண்டாவதாக."

ஸ்ரீராமகிருஷ்ண தேவரது தண்ணருளால், இம்மாதம், "விஜயம்" இருபது

ஆண்டுகள் நிரம்பி, இருபத்தோராவது ஆண்டு தொடங்கப் பெறுகின்றது. இவ் வமயம், இப்பத்திரிகையை இதுவரை ஆதரித்துவந்து, இது தமிழுலகிற்குச் செய்யும் தொண்டிற்குப் பேருதவியாகும் படியாக, இதற்குக் கட்டுரைகளை வழங்கி யும், இதன் சந்தாதார்களாகியும் வந்துள்ள அன்பர்கட்கெல்லாம் 'நன்மையும் செல்வ மும் நாளும்' (உடல் நலமும் செல்வமும் ஆயுளும், பெருகும்படிக்கும், தின்மையும் பாவமும் தேய்ந்தே தேயும்படிக்கும், சென் மமும் மரணமும் இன்றித் தீரும்' படிக் கும் இறைவனை வாயார வழுத்துகின் றோம். இப்பத்திரிகையின் சந்தாதார்கள், 'தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு' ஆனந்திக்கும் இயல்பால், விழை வுள்ளவரைச் சந்தாதாராகுமாறு தூண்டி யும், வாசிக்கத் தெரிந்தவர்களை இதை வாசிக்கச் சொல்லியும், வாசிக்க இயலா தார்க்கு இதை வாசித்து எடுத்துரைத் தும், இப் பத்திரிகையின் நோக்கமாகிய தொண்டினைப்பலவழியாலும் பரப்பி வரு வார்களாக.

### நமது குறிக்கோள்

வேறுபாடு என்பதே படைப்பிற்கு வித்தாகின்றது. படைப்பில் இடம் காலம், நிகழ்ச்சி யெனும் மூன்றிலும் வேறுபாடு கள் காணப்படுகின்றன. உலகத்தும் உல கத்துள்ள பொருள்களிலும் உலகத்துள்ள உயிர்களிலும் பல வேறுபாடுகள் காணப் படுகின்றன. உடல்களிலும் ஆண்பெண் என்ற வேறுபாடும், இயங்குவன இயங்கா தன என்ற வேறுபாடும், அவைகட்குள் இனவேறுபாடும், ஒவ்வொன்றிலும் நிற வேறுபாடும், உடலிற்குள்ளே உறுப்புக ளின் வேறுபாடும், தொழில்களின் வேறு பாடும், இவ்வாறாகப் பலவகை வேறுபாடு கள் காணப்படுகின்றன. மக்களை மட் டும் கருதுவோமாயின், புறத்தே நிற வேறுபாடும் உடைமைகளின் வேறுபா டும், அகத்தே சக்திகளின் வேறுபாடும் இயல்புகளின் வேறுபாடும் காணப்படு கின்றன. இவ்வேறுபாடுகளெல்லாவற்றை யும் மனிதனது அறிவு அறிகின்றது. மேலெழுந்த வாரியாக நோக்கும் போது இவ்வேறுபாடுகள் ஒன்றுக்கொன்று மாறு பாடுகளாகத் தோன்றுகின்றன ; அம் மாறுபாடுகள் பகைமைக்குக் காரண மாகின்றன ; பகைமை போர்க்குக் காரண மாகின்றது. போர் நமது அழிவுக்குக் காரணமாகின்றது. நம்மைச் சூழும் இயற்கை முழுவதிலும் போரே தாண்டவ மாடுவதாகவும், எல்லாம் அழிவுமயமா யிருப்பதாகவும் தோன்றுகின்றது. உலக மெனும் போர்க்களத்தே வாழ்க்கையெ னும் போரே ஓயாது நடந்து வருவதா கத் தெரிகின்றது. மக்களுலகத்திலும் போர் இன்றியமையாதது எனவும், உலக சரித்திரத்தின் பற்பல அத்யாயங்களை உண்டு பண்ணுவதும் போரே எனவும் புலப்படுகின்றது. அவ்வாறாயின் போர் ஒழிய வழியில்லையோ?

வேறுபாடுகளே போர்க்குக் காரணம் எனப்பட்டதன்றோ? ஆனால் வேறு பாடுகளை மாறுபாடுகளாகக் (ஒன்றுக் கொன்று மாறாக இருப்பனவாகக்) கரு தாமல் ஒரே பொருளின் விவகாரங்களே என்று கருதுவோமாகில், அப்போது ஒன்றுக் கொன்று மாறாக இருப்பது ஒரு வாறு மறைந்து, அவைகளின் பொதுத் தன்மை நன்கு தென்படும். வேறுபாடு கட்கு அடிப்படையான ஒற்றுமை நயம் புலப்படும்போது, வேறுபாடுகள் முரண் பாடுகளாகத் தோன்றாது போகும்; ஒன்றே பல வடிவுகளானதுபோலத் தோன்றும். ஆதலின் வேறுபாடுகட்குள் ஒற்றுமைகாணலே, முரண் பாடுகளாகிய மாறுபாடுகள் ஒழியக் காரணமாகும். கூர்ந்து நோக்கும்போது, ஆழ்ந்து சிந்திக் கும்போது, வேறுபாடுகட்கு ஒற்று மையே ஆதாரமாகக் காணப்படும். எல் லாப் பொருள்களிலும், எல்லா உயிர்களி லும், உலகத்திலும், இடத்திலும், காலத்

திலும், நிகழ்ச்சியிலும் வேறுபாடுகள் தோன்றும் போதும் அடிப்படையான ஒருமை உணரப்படும். இந்த ஒருமை யுணர்ச்சி அன்பினைவளர்க்கும்; அன்பினால் சமாதானம் உண்டாகும்; சாந்தியால் எல்லாவகையிலும் ஆக்கம் உண்டாகும். இந்நிலையினின்று உலகவாழ்க்கையை நோக்கினால், வாழ்க்கையெனும் போரின் முடிவான பயன், இந்த ஒற்றுமைக் காட்சியே என்பது புலப்படும். பலவற்றையும் ஒன்றாகக் காணும் காட்சியைப் பெறுவிப்பதற்கென்றே வாழ்க்கைப் போர் நடை பெறுகின்றது; படைப்பின் நோக்கமும் பலவற்றுள் ஒருமையை காணும் காட்சியை உண்டு பண்ணுதற்கே யாம்.

மனித ஸமூகத்தினுள் காணப்படும் எவ்வகைப் போர்க்கும் அடிப்படையா யிருக்கும் காரணம், மனிதர்க்குள் காணப் படும் வேறு பாடுகளை மனிதர்கள் முரண்பாடுகளாகக் கருதிப் பகைமை கொள்ளலேயாம். மக்கட்குள் உடைமைகளின் வேறுபாடும், சக்திகளின் வேறுபாடும், நிறம் குணம்முதலிய எல்லாவற்றின் வேறுபாடுகளும், ஒருமைச் சரட்டில் கோக்கப்பட்ட பல மணிகளின் காட்சியாகத் தோன்றும் அன்றே, ஸமூக வாழ்க்கையினைப் பாழ்படுத்தும் அல்லல்கள் யாவும் தாமே நீங்கிவிடும். ஒருமை தோன்றும்போது, மக்கட்குள் அன்புணர்ச்சி மேலிடும்; அப்போது போர்க்குப் பதிலாக ஒத்துழைப்பு வளரும்; அதனால் சாந்தியும் இன்பமும் எங்கும் தலையெடுக்கும். படைப்பு முழுவதிலும் அடங்கியிருக்கும் ஒருமையை ஒருவன் அறிவுக்கண்ணால் மட்டுமன்றி ஞானக் கண்ணால் காணுவானாயின், அவன் எல்லாவிதக் கட்டுகளினின்றும் நீங்கி இன்புற்றிருப்பான். இத்தகைய ஒருமைக் காட்சியைப் பெற முயலுவதே ஞானவாழ்க்கையின் நோக்கமாகும். அந்த ஒருமை தென் படும்போது, அதுவே மெய்ப்பொருள் என்றும், பரம்பொருள் என்றும் உணரப் படும். இந்த அநுபூதியின் பயனாக ஸமரஸ உணர்ச்சியும் தானாக விளையும். எல்லாவித ஸமரச உணர்ச்சிகட்கும் மூலமாய், அனைத்தையும் அடக்கியாண்டுவரக் கூடியது, ஸர்வசமய ஸமரஸ உணர்ச்சியாகும். முற் கூறிய மெய்ஞ்ஞான அநுபூதியும் ஸர்வஸமய ஸமரஸ உணர்ச்சியுமே, துன்ப ஸாகரமாகும் இவ்வுலகத்தைப் பேரின்ப ஸாகரமாக மாற்றவல்ல பெருஞ்சக்திகளாம். இவ்விரு சக்திகளையும் தமிழகத்தார் பெறுவராயின், எளிதே தாம் உய்வடைவதோடு பிறரையும் உய்வடையச் செய்வார். உலவா இன்பச் சுடர்ச்சோதிகளாக இலங்கிய ஆழ்வார்களும் நாயன் மார்களும் முன்பு நம் தமிழ் நாட்டில் ஞான ஒளி பரப்பினர். தற்காலத்தே நம் தமிழகம் உள்பட இந்தியா முழுவதும் ஞான அநுபூதியையும் ஸமய ஸமரச உணர்ச்சியையும் பரப்பியது எதுவெனில், ஈருடலாகியும் ஒருயிராயும் அவதரித்து வாழ்ந்த ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகாநந்தர் என்னும் சிகரசோதியே; அச் சோதியின் விளக்கத்தைச் சொரிவதே நமது 'விஜயத்'தின் நோக்கமாகும்.

'அழியா உலகமாகிய பரமபதம் உனக்குள்ளே இருக்கின்றது' என்பர் மெய் யுணர்ந்தோர்; "மேலும், அந்த அழியாத உலகத்தை நாடுக; மற்றவையாவும் உன்னைவந்து சேரும்" என்றும் அவர்கள் உபதேசிக்கின்றனர். ஆனால் அறிவிலா மனிசரெல்லாம் 'நம் கண்முன் வெளியில் தோன்றும் உலகமே பரமபதமாகும்; அதிலே கண்ணும் கருத்துமாய் இருப்பவர்க்கே யாவும் (எல்லா இன்பங்களும்) வந்து சேரும்; கடவுளும் தாமாகத் துணைபுரிவார்' என்று நம்பித் தமது வாழ்க்கையை நடத்திவருகின்றனர். புறநோக்கு வேறுபாட்டுணர்ச்

சியையும் மாறுபாட்டுணர்ச்சியையும் விளைவிக்கும்; ஆனால் அகநோக்கு ஒருமையுணர்ச்சியையும் சமாதானத்தையும் வளர்த்துவரும் இயல்பினதாகின்றது. உலகத்தை முதலில் நாடுவார் கடவுளை அடியோடே மறந்துவிடுகின்றனர்; கடவுளை நாடியவர் பின் உலகத்தையும் பெறுகின்றனர். வேரிலே, நீரைப் பாய்ச்சி அதைப்போற்றுபவர் கிளைகளையும் இலைகளையும் கனிகளையும் போற்றுபவராவார்; ஆனால் இலைகளை மட்டும் போற்றுபவர் வேரைப் போற்றாது போகக்கூடும். அது போல், கடவுளைப் பேறுவோர் உலக இன்பங்களையும் பெறுவர்; ஆனால் உலக இன்பங்களை மட்டும் பேறுவோர் கடவுளைப் பெறார். கோயிலுக்குப் போகும் வழியில் உள்ள கடைகளையும் அவைகளிலுள்ள விசித்திரப் பொருள்களையும்பார்த்துக்கொண்டே பொழுது போக்குவார், கோயில் போய்ச் சேருமுன் கோயில் கதவுகள் சாத்தப்படுமாதலின், அவர்கள் இறைவனது தரிசனத்தை இழந்து விடுவார்; ஆனால் இக்கடைகளைக் கண்ணெடுத்துப் பாராது கோயிற்குச் சென்று இறைவனை வழிபடுவார் அதன்பின் கடைகட்கு மீண்டு, அங்குள்ள காட்சிகளைக் காணலாம். உலக வாழ்க்கையை வெறுத்தாலன்றி ஞான வாழ்க்கை கைகூடாது; ஆனால் ஞானம் கைகூடிய பின், உலக வாழ்க்கையும் விரும்பத் தக்க நிலையில் அமையும். நாம் இப்போது தேடாது வெறுத்து விலக்கிய உலக இன்பமே, நாம் கடவுளை அடைந்த பின் தானாக மேலான நிலையில் நம்மை நாடி வரும் 'நின்னையே தான் வேண்டி, நீள் செல்வம் வேண்டாதான் தன்னையே தான் வேண்டும் செல்வம்' என்றார் குலசேகராழ்வார். ஆதலின் துறவே ஞானவாழ்க்கையெனும் அறையினைத் திறக்கும் திறவு கோலாகின்றது; அவ்வறையினைத்திறந்து வைத்த பின், திறவு கோலையும் தூர எறிந்து விடலாம். ஆக, முதலில் உலகவாஞ்சையைத் துறக்கும் துறவும், பின்னர் அதன்பயனாக ஞானமும், அதன்பின் மறுபடியும் ஞானத்தோடு உலக வாழ்க்கையை மருவும் பேறும் பெறல் வேண்டும். ஞானம் பெற்ற பின் மருவப்படும் உலக வாழ்க்கை ஞான மணங் கமழ்ந்து தொண்டின் வடிவமாய் ஒளிரும் ஆதலின் துறவு—ஞானம்—தொண்டு என்ற சங்கிலியே நமது வாழ்க்கையின் இலக்ஷியமாகின்றது.

ஸ்ரீராமகிருஷ்ணரது வாழ்க்கையிலும் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளது வாழ்க்கையிலும் இம்மூன்றும் பின்னிக் கிடந்தன. இம்மூன்றிழைகளினலாகிய கயிற்றினைக் கொண்டு இந்திய மக்களனைவரையும் ஒன்றாக்கி இணைக்கலாம்; ஆம்மட்டோ! உலக மக்களனைவரையும் ஒன்றாக இணைக்கலாம். இவ்விரு பெருங்குரவரும் நமது நாட்டையுய்வித்தற்கு நெறிகளாகக் காட்டியவை இம்மூன்றுமே. இதைக் கருதியே நமது 'விஜயம்' (க) உலக ஆசைகளைத் துறத்தற்கு வேண்டிய உபதேச மொழிகளும் சாதன முறைகளும் (உ) மேற்றிசையிலும் கீழ்த் திசையிலும் உள்ள நாடுகளில் தோன்றி மெய்ஞ்ஞான அனுபூதியில் நிலைத்து நின்ற பெரியார்களுடைய வாழ்க்கைச் சரிதங்களும் (ந) ஞான வாழ்க்கைக்கு இன்றியமையாத அடிப்படைத் தத்துவங்களும் (ச) இவைகளை விளக்கும் கதைகளும் (ரு) முற்கூறியவை சம்பந்தமாக எழும் சந்தேகங்களைத் தீர்க்கும் விடைகளும் ஆகிய ஐந்து பகுதிகளையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றது. இனியும் அப்பகுதிகளனைத்தும் முறையாக வற்புறுத்தப்பட்டு வரும். துறவிலே வேரூன்றி ஞானமரம் வளர்ந்து, தொண்டு எனும் கனியை உலகத்திற்கு ஈதலே நம்மில் ஒவ்வொருவருடைய வாழ்க்கைக் குறிக்கோளாக ஆகவேண்டும். நமது பாரதமா நாட்டின் குறிக்கோளும் இதுவே யாகும். இக்குறிக்கோளை நாம் இன்று நமது உள்ளத்தின் கட் பதித்துக் கொள்வோமாக.

---

## கடிதங்கள்
(முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசியக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணா 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணா 3

---

## ஜகஜ்ஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணா 12. சந்தாதாரருக்கு அணா 10.

---

# பஜனாவளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவ தவசியம்.

விலை அணா 12.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உக]　　விக்கிரமஹு மாசிமீ　　[பகுதி—உ

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தராற் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அநுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப் பட்டுள்ளது. வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உக } விக்கிரம௵ மாசி௴ { பகுதி-உ

## பிரார்த்தனை

आत्मा मे शुध्यन्तां ज्योतिरहं विरजाविपाप्मा भूयासम् ।
अन्तरात्मा मे शुध्यन्तां ज्योतिरहं विरजाविपाप्मा भूयासम्
परमात्मा मे शुध्यन्तां ज्योतिरहं विरजाविपाप्मा भूयासम् ॥

नमो ब्रह्मणे नमो अस्त्वग्नये
नमः पृथिव्यै नम ओषधीभ्यः ।
नमो वाचे नमो वाचस्पतये
नमो विष्णवे भृहते करोमि ॥

எனது சரீரம் பரிசுத்தமடையட்டும்; அசுத்தமும் பாபமும் அகலப் பெறுவேனாக. என்மனம் தூயதாகட்டும். தெய்விக ஜோதியாக என்னை நான் சாக்ஷாத்கரிப்பேனாக. அசுத்தமும் பாபமும் அகலப் பெறுவேனாக. தெய்விக ஜோதிவடிவமாக என்னை நான் காண்பேனாக. எனது ஆத்மன் பரிசுத்தமடையட்டும். அழுக்கும் பாபமும் என்னை விட்டகலட்டும்.

பிரம்மத்துக்கு நமஸ்காரங்கள். அக்கினியிலுள்ள இறைவனுக்கு எனது நமஸ்காரங்கள். பூமியிலுள்ள கடவுளை நமஸ்கரிக்கிறேன். வாக்கிலுள்ள பகவானுக்கு எனது வந்தனங்கள். வாக்பதியை வணங்குகிறேன். எங்கும் நிறைந்த பரந்தாமனுக்கு எனது நமஸ்காரங்களைச் செலுத்துகிறேன்.

—வேதங்கள்

---

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

ஞானவான்கள், ஒருவன் தவறான வழியிற் செல்வதைக் காணுங் கால் 'இதைச் செய்யாதே, அதைச் செய்யாதே' என்று அவனிடம் சொல்லுவதோடு தாம் திருப்தி அடைந்துவிட மாட்டார். அவர்கள் தண்டனை கொடுப்பதுமில்லை, அடக்குமுறைக்கு அவனை உட்படுத்துவதுமில்லை. அவர்கள் அவனுக்கு ஒரு மேலான உயர்ந்த வழியை எடுத்துக் காட்டுவார்கள்; அடைதற்குரிய ஓர் உயர்ந்த நிலையையோ காட்சியையோ ஓர் உதாரணமாகக் கொடுப்பார்கள். உயர்வுற உயர்ந்த வகையைச் சார்ந்த கல்வி யாதெனில் ஒரு மனிதனுக்கு அவன் எவ்வண்ணம் ஆகக்கூடிய திறமையுடையவன் என்பதைக் காட்டுதலும், அவ்வாறு ஆகவேண்டும் என்று பிறர் அவனை எதிர்பார்க்கிறார்கள் என்பதை அவன் அறியும்படிச் செய்தலுமேயாகும். அவனிடத்து அடங்கிக் கிடக்கும் வல்லமைகளில் உமக்கு இருக்கும் நம்பிக்கையினால் அத்தகைய மனிதன் ஞான ஊக்கம் கிளரப் பெற்றால், அவனது அஞ்ஞாக்கிரதையான நினைவுகளும், அவனது பழைய தீய வழிகளும் முழுதும் மறக்கப்படுகின்றன; அவன் ஞான ஏணியில் ஏற ஏற, அவை உண்மையாகவே மறைந்து போய்விடுகின்றன.

—சுவாமி பரமாநந்தர்.

# தேவியின் திருவாக்கு

(ரா. ராமகிருஷ்ணன், M.A. L.T., மொழிபெயர்த்தது.)

**1911,** பிப்ரவரி, 12-ம் தேதி : இன்றைய தினம் நான் உத்போதன் காரியாலயம்சென்றபொழுது, அன்னையார் பலராம் போஸின் வீட்டிற்குப் போயிருப்பதாக அறிந்தேன். கொஞ்ச நேரம் நான் காத்திருந்தேன். அன்னையும் திரும்பி வந்தார். நான் அன்னையை வணங்கியவுடன் அவர் புன்னகையுடன், "உன்னுடன் இன்றைய தினம் யார் வந்துள்ளார்?" என்று வினவினர். "என் மருமகன் ஒருவன் வந்துள்ளான்" என்று விடை கூறினேன்.

அன்னையார் :—இன்று உன் உடல் நலம் எவ்வாறுள்ளது? உன் சகோதரி எவ்வாறு இருக்கிருள்? நீ நீண்ட காலமாக வரவேயில்லை. உன்னைப் பற்றிக் கவலை கொண்டேன். ஒருக்கால் நீ சுகம் குன்றி யிருக்கிருயோ என்று எண்ணினேன்.

நான் வியப்புற்றேன். அன்னையை நான் ஒரே தடவைதான் சந்தித்திருந்தேன். அதுவும் ஐந்து நிமிஷ நேரச் சந்திப்பு தான். ஆனாலும் அன்னை என்னை மறந்து விடவில்லை. என் கண்கள் இன்பக் கண்ணீரால் நிரம்பின.

அன்புணர்ச்சி நிறம்பிய சொற்களில் அன்னையார் "நீ இங்கு வந்து காத்திருந்தாயல்லவா. பலராம் போஸின் வீட்டில் எனக்கு இருப்புக் கொள்ளவில்லை" என்ருர்.

என் வியப்பு வெகு அதிகமாயிற்று. என் தங்கை சுமதி, அன்னையாரின் மருமகனை குழந்தை 'குதே' என்பவனுக்கு உபயோக மாகுமாறு இரண்டு கம்பளிக் குல்லாய்களை என் மூலம் அனுப்பி யிருந்தாள். அவற்றை அன்னையிடம் அளித்தேன். இச்சிறு காணிக்கைகளைக் கண்டு அன்னை பெருங்களிப் பெய்தினர். படுக்கையின்மீது அமர்ந்து கொண்டு, "இங்கு என்னருகில் உட்கார்ந்துகொள்" என்று கூறினர். நான் அவரருகில் அமர்ந்தேன். அன்புததும்பும் சொற்களில் அன்னையார், "குழந்தாய்! இதற்கு முன்னல் பல தடவைகளில் உன்னைச் சந்தித்திருக்கிறேன் என்று எனக்குத் தோன்றுகிறது. நீண்ட காலம் நாம் இருவரும் ஒருவரை யொருவர் அறிந்துள்ளோம். என்றும் தோன்றுகிறது" என்று கூறினர். "எனக்கு அது தெரியாது. நான் ஒரு நாள் மட்டுமே ஐந்து நிமிஷ நேரம் இங்கு வந்திருக்கிறேன்" என்று நான் விடை பகர்ந்தேன்.

அன்னையார் சிரித்தார். பிறகு என்னுடையவும் என் சகோதரியினுடையவுமான பக்தியையும் சிரத்தையையும் பெருமைப் படுத்திப் பேசினர். அன்னையார் கூறிய புகழ் மொழிகளுக்கு நான் எவ்வளவு தூரம் அருகதையுள்ளவள் என்பதை அறியேன். இதற்குள் அன்பான மகளிர் பலர், சிலர் சிலராக அங்கு கூடிவிட்டனர். புன்சிரிப்பும் தயையும் கொண்ட அன்னையின் முகத்தை அவ்வனைரும் பேரன்புடனும் ஆவலுடனும் நோக்கினர். இத்தகைய காட்சியை நான் இதற்கு முன் கண்டதில்லை. இந்த ஆத்

மியப் பேரானந்தந்தை என் மனம் சுவைத்துக் கொண்டிருக்கும் பொழுது, நான் வீடு திரும்புவதற்கு வண்டி தயாராக யிருப்பதாக யாரோ எனக்கு நினைப் பூட்டினர். உடனே அன்னையார் தம் இருக்கையை விட்டெழுந்து எனக்குச் சிறிது பிரசாதத்தைத் தந்தார். பிரசாதத்தை என் முன்னர் காட்டி "இவற்றைச் சாப்பிடு" என்று பகர்ந்தார். மற்றவர் முன்னிலையில் நான் மட்டும் தனியாக உண்பதற்கு எனக்கு லஜ்ஜையாக விருந்தது. "ஏன் தயங்குகிறாய்? இத் தின்பண்டங்களைச் சாப்பிடு" என்று அன்னை பணித்தார். பிரசாதத்தை என் கைகளில் ஏற்றுக்கொண்டேன். அன்னைக்குப் பணிந்து விட்டு விடை பெற்றேன். "மீண்டும் வா. படிகளில் மியாகவே இறங்கிச் செல்லுவாயா? நானும் உன்னுடன் வரட்டுமா?" என்றார் அன்னை. மாடிப்படி வரையில் என்னுடன் வந்தார். "நானே தனியாகச் செல்லுவேன். நீங்கள் சிரமப்பட வேண்டியதில்லை" என்று சொன்னேன். "வேறொரு தினம் காலையில் வா" என்று கூறி அன்னை என்னை அனுப்பினார். உள்ளத்தில் நிறைவு உணர்ச்சியுடன் நான் திரும்பினேன். "என்ன ஆச்சரியமான அன்பு!" என்று எண்ணினேன்.

---

# ஆத்ம சாதனைக்கான போதனைகள்

(ஸ்ரீ எதிஸ்வராநந்த சுவாமிகள்)

க

நம் வாழ்நாள் முழுதும் ஒரு குறிப்பிட்ட நிலையிலேயே இருப்பது நன்மையைத் தருவதாகாது. சாதனையின் பலனாக ஆத்மஞானம் வளரப் பெறுகின்றதா இல்லையா என்பதனை நாம் கூர்ந்து கவனிக்கவேண்டும்.

கஸ்தூரிமான் செய்வதுபோன்று செய்யாதிருப்போமாக. அதன் நாபியில் கஸ்தூரி இருக்கின்றது. அதனை அம்மான் அறிந்துகொள்ளுகின்றதில்லை. சில பருவங்களில் கஸ்தூரிவாசனை மானின் நாபியிலிருந்து வீசுகின்றது. அதனை அடைய வெறிகொண்டு ஓடியலைகின்றது; எதுவரையில்? அது காலோய்ந்து தலைசாய்ந்து விழுந்து சாகுமளவும் ஓடுகின்றது! என்னே அதன் பேதைமைத்தனம்! அதேபோல், நாம் தேடி யலையும் கடவுள் நம் உள்ளத்துள்ளே உறைகின்றார்; ஆனால் நாம் வெளியே எங்கெங்கோ தேடியலைகின்றோம்.

'இரு பிறப்பாளனுக்குக் கடவுள் நெருப்பு; பிரம்மஞானிக்குத் தன்னுள்ளத்துள்ளேயே கடவுள் உறைகின்றார். அற்ப அறிவு படைத்தவர்கள் விக்ரகங்களையே தங்கள் கடவுளாகக் கொள்கின்றனர். ஆனால் சமதிருஷ்டியின் கண்கள் காண்பதனைத்தும் கடவுளேயே.'

நம் கடவுளை எப்போதும் நாமே சிருஷ்டித்துக் கொள்கின்றோம். நாம் சிவலிங்கம் செய்ய முயல்கின்றோம்; ஆனால் அது அருவருப்பான குரங்காய் முடிகின்றது. நாம் உண்மையை நன்கு உணர்ந்து அதனை நம் வாழ்க்கையில் அநுசரிக்கவில்லையானால் நம் வாழ்க்கை காட்டுப் பிராணியான குரங்கு வாழ்க்கையாக முடியும். இது ஒரு பெரிய ஆபத்து.

'முக்த புருஷனுக்கு விக்ரக ஆராதனை ஒரு விக்கினமாக முடியும்; மறு பிறப்புக்கு ஏதுவாக அமையும். எனவே தன்

உள்ளத்தினுள்ளே உறையும் இறைவனையே துறவி உபாசிக்கவேண்டும். வெளி ஆராதனைகள் அனைத்தையும் விட்டுவிட வேண்டும்.'

மேலே குறிப்பட்ட உபாசனைகள் ஆத்மஞானத்தில் முதிர்ச்சியடைந்தவரே அநுஷ்டிக்க ஏற்றவை. இவையனைத்தும் மாடிக்குச் செல்லும் படிகள் போல்வனவாகும். படிப்படியாகவே நாம் ஏறவேண்டும். படித்துறையின் எந்த உயரத்தில் நாம் இருக்கிறோம் என்பதை நாம் நன்கு அறிந்தவர்களா யிருத்தல்வேண்டும். அப்போதே ஆத்மீய வாழ்க்கையில் முன்னேற முடியும். இதனைத் தெரிந்துகொள்ளாது போனால் நாமறியாமலே பலமுறை தீங்கினைச் செய்ய ஏதுவாகும். அதனாலேயே 'திருடக் கற்றுக் கொடுக்கவும் குரு ஒருவர் வேண்டுவது அவசியம்' என்று ஸ்ரீ சங்கராச்சாரியர் கூறுகின்றார்.

பரிபூரணமான மனப் பரிசுத்தம் வாய்க்கப்பெற்றவர்களால் மாத்திரமே, 'இறைவன்வாக்கு' என்று பலரால் பேசப்படுவது கேட்கமுடியும். மற்றவர்களால் முடியவே முடியாது. மனத்தின் அடிவாரத்தில் பதுங்கிக்கிடக்கும் பழையவாசனைகளின் பலனாக எழும் சில எழுச்சிகளைக் கொண்டு பல சமயம் மக்கள் பலர் தம்மையே தாம் ஏமாற்றிக்கொள்கின்றனர்; அதனைக் கடவுள் வாக்கு, மனச்சாக்ஷி என்று மருள்கொள்கின்றனர். உண்மையில் அது மறைந்துகிடக்கும் ஆணவத்தின் செயலே யாகும். கடவுள் வாக்கைக் கேட்க நீர் விரும்புவீரானால், சரீரம் மனம் இவைகளிலிருந்து விலகி சாக்ஷி மாத்திரமாக விருந்து, கடவுள் என்ன சொல்லுகிறார் என்று கேட்க முயல்வீர். இவ்விதம் செய்ய இயலாவிட்டால் உம்மால் கடவுள் வாக்கைக் கேட்க முடியாது.

எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு சாதகன் மனப் பரிசுத்தம், ஒழுக்கம் இவைகளில் பெரிதும் கருத்துச் செலுத்த வேண்டும்.

உ

'களங்கமற்ற கர்மங்களையே செய்ய வேண்டும். ஏனையவற்றினைச் செய்தல் கூடாது.'

'பொல்லா மக்களோடு ஒருபோதும் கூடாதே. கூடுவதால் ஆசை, கோபம், அறியாமை, அநீதி, பந்தம், மறதி, மதியின்மை, சினம், சாவு இவைகள் அனைத்தும் உன்னிடம் வந்து சேரும். சிறுதிரைகள் சீக்கிரமாக அலையாக மாறிவிடுகின்றதுபோல், இத்துர்க்குணங்கள் பொல்லா மக்களிடம் பெருகி வளரும் தன்மையன. உலக வலையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளும் மனிதன் எங்கே? மூர்க்கத்தனத்தைத்தள்ளி முத்தியினை நாடும் மக்களால்தான் பற்றற்ற நிலையினை எய்தமுடியும். ஏகாந்தத்தை விழையும் சாதகன், உலக பந்தங்களை ஒழித்து நீக்குபவன், குணங்களைக் கடந்து செல்பவன், தனது எல்லாவற்றையும் இறைவனுக் கர்ப்பணம் செய்பவன், முதலில் கர்மபலனைத் தியாகம் செய்து இறுதியில் இறைவனுக்காக அக்கர்மத்தினையும் விட்டொழிப்பவன், நன்மை தீமைகளுக் கப்பாற் செல்பவன், சாஸ்திரங்களையும் பொருட்படுத்தாது இடைவிடாது இறைவனது தெவிட்டாத அன்பிலேயே ஈடுபடுபவன்—இத்தகைய புண்ணிய புருஷன், தன்னை விடுவித்துக் கொள்வதோடு ஏனையோரையும் பிறப்பிறப்பாகிய பிறவிக் கடலினின்றும் விடுவிக்கின்றான்' என்று நாரத முனிவர் கூறுகின்றார்.

ஞான சாதனங்கள் பயிலும் நாட்களில் தீயோரிடம் நெருங்காது உம்மைக் காத்துக்கொள்வீர். ஒருபோதும் அவருடன் நெருங்கிப் பழக வேண்டாம்.

கெட்ட எண்ணங்கள், பார்த்தல், தீண்டல், பேசுதல் முதலியனபோன்று காமங்

கள் பல வகைப்பட்டனவாகும்; ஆரம்பத்திலிருந்தே உம்மிடமிருந்து அவை வேருடன் களைந்தெறியப்படவேண்டும். மக்களோடுகொள்ளும் எல்லாவித பொம்மை விளையாட்டுகளையும் களைந்தெறியவேண்டும். உள்ளத்திலுள்ள சகல ஆசைகளையும் கொளுத்தியொழிப்பீர். பழையன ஒழிந்தபிறகு புதியன உதிக்காவண்ணம் காத்துக் கொள்வீர். பெண்மக்கள் எல்லோரையும் தாயெனவோ, உடன் பிறந்தாளெனவோ காண்பீர். விவேக வைராக்கியங்கள் உம்மிடம் ஊன்றி நிலைபெறும் வரையில் சற்று எட்டி நின்றே தாயார் சகோதரி பாவனையுடன் அவர்களுடன் பேசுவீர். பெண் சாதகர்களும் ஆண்மக்களை இவ்விதம் கருதிப் பழகவேண்டும்.

கேள்வி:—ஆரம்பத்திலேயே இதனைக் கண்டிப்பாக அநுசரிக்க வேண்டுமா? ஆத்ம சாதனை விஷயத்தில் சிறிது அக்கறை காட்டும் சில நண்பர்களிடம் பிரம்மசரியம் அநுஷ்டிக்கும்படி சொல்லும் போது அவர்கள் பெரிதும் பயந்து விடுகின்றார்கள். உடனேயே இந்நிபந்தனைகள் அநுஷ்டிக்கப்பட வேண்டுமா?

பதில்:—ஆம்; ஆரம்ப முதற் கொண்டே பிரம்மசர்ய வாழ்க்கையை அநுஷ்டிக்க சிரமம் எடுக்காத எவரும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரது குழந்தைகளாகார். பிரம்ம சர்யம் ஆத்மீய வாழ்க்கைக்கு அவசியமும் அதி முக்கியமுமானவற்று ளொன்றாகும். பயந்து போகுபவர் போகட்டும். எத்தனை பேர் என்பது நமக்கு வேண்டாம். எத்தகைய சுபாவ முடையவர் என்பதுதான் நமக்கு வேண்டுவது. எந்த நிபந்தனையுமின்றி எல்லா சிரமங்களையும் ஏற்பவரே நமக்கு வேண்டும். ஏனைய எவரும் ஆத்மஞான வாழ்க்கைக்கு ஏற்றவராகார். எந்த மகான்களையும் அவர்களால் பின்பற்ற முடியாது. வேதாந்தத்தின் உட் பொருளை அவர்களால் அறிந்துகொள்ள இயலாது. இவைகள் அனைத்தையும் அனுசரிக்க இயலாதவன் எவனும் கிருஸ்துவன் ஆகான். புலனடக்கத்தினையும் பிரம்மசர்யத்தையும் விரும்பாத எவனும் ஆத்மீய வாழ்க்கைக்கு அருகனல்ல. அத்தகைய அசுத்தமானவர்களோடு சம்பந்தப்படுத்தி ஸ்ரீ ராமகிருஷ்ணர், இயேசு நாதர் இவர்களது புனித நாமங்களைக் கெடுக்க முயலவேண்டாம். கீழ்நாட்டிலுள்ளவர்களினும் பார்க்க மேனாட்டார் பிரம்மசர்ய விஷயத்தில் அதிகம் கவனம் செலுத்தவேண்டும். ஏனெனில் காம உணர்ச்சியில் அவர்கள் மிருகத்துக்கு அடுத்தபடியாக விருக்கின்றதனால்.

கேள்வி:—சுவாமி! நீங்கள் கூறும் உபதேசங்களில் சிரத்தை காட்டும் மனைவியோடு வசிக்கும் கிரகஸ்தரது நிலைமை யாதோ? கிரகஸ்தர் பிரம்மசரியம் அநுஷ்டிக்க வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்க முடியாதல்லவா?

பதில்:—மற்றவர்கள் போலவே கிரகஸ்தரும் புலனடக்கம் பெற வேண்டும். நாக மகாசயரது வாழ்க்கையைப் பாருங்கள். அவருடைய தகப்பனர், அவரது விருப்பத்துக்கு விரோதமாக இருமுறை அவர்க்கு விவாகம் செய்து வைத்தார். என்றாலும் வாழ்க்கை முழுதும் அவர் மனைவியோடு சரீர சம்பந்தப்பட்ட உறவைக் கொண்டாரில்லை. விவாக சம்பந்தமாக நீங்கள் கொள்ளும் கருத்து மிகவும் கரடுமுரடானதாகும். நாக மஹாசயரது இருமனைவிமாரும் அவரது அத்யந்த சிஷ்யைகளாகி, அதிபரிசுத்தமும் பக்தியும் பொருந்திய வாழ்க்கையை நடத்தினர்கள். ஆகையால் வெளிப்பார்வைக்கு நாக மஹாசயர் கிருகஸ்தரே எனினும் பரிசுத்தமும் பற்றற்ற தன்மையும் வாய்ந்த உண்மைத் துறவி எவர்க்கும் பின்பட்டவரல்லர்.

கேள்வி :—கிரகஸ்தாஸ்ரமத்தி லுள்ள கணவன் மனைவி இருவரில் ஒருவர் முரண்டு கொண்டால்?

பதில் :—இருவரில் ஒருவரது இருதயம் பிளக்கக் கூடியதே எனினும், கணவன் மனைவியினுடைய, அல்லது மனைவி புருஷனுடைய ஆத்மீய வாழ்க்கையைத் தடைசெய்ய அதிகாரமில்லை. அவ்விஷயத்தைப்பற்றிப் பன்முறை நாம் பேசியிருக்கிறோம். மனைவி புருஷர்களில் ஒருவர் மற்றவரது ஆத்மீய வாழ்க்கைக்கு முட்டுக்கட்டைப் போடுவாரேயானால் அவன் அல்லது அவள் கீழ்மை, போகப்பிரியம், அவிவேகமும் அகம்பாவமும் பொருந்தியவரும், மிருக இயல்பு வாய்ந்தவரும் ஆவார்; அத்தகையோரை எதுவரினும் கருதாது ஒதுக்கித்தள்ள வேண்டும். இத்தகைய மனவடக்கமில்லாது வெறும் மிருக உணர்ச்சிபொருந்திய மக்களிடமிருந்து இறைவன் என்னைக் காப்பாற்றுவானாக. நீரும் அவ்வித மக்கட் கூட்டத்தினரில் ஒருவர் எனில், கூறுவீர். இன்றே இவ்விடம் விட்டுப் போய்விடுகிறேன். உண்மையாகவே அத்தகையோர், ஸ்ரீ ராமகிருஷ்ணர் இயேசுநாதர் இவர்களது குழந்தைகள் என்றுத் தம்மைக் கூறிக்கொள்ள அருகரல்லர். ஏனெனில் இவ்விரு பெரியாரும் பரிபூரண பரிசுத்தமும் பற்றற்ற தன்மையும் உருவமாய் வாழ்ந்தவர்.

உலக வாழ்க்கையிலும் கூட நீர் ஏதேனும் பெற விரும்பினால் உறுதியான அஸ்திவாரம் உடையவராயிருத்தல் வேண்டும். உறுதியான முதுகெலும்பு வேண்டும்; ஆனால் ஆத்மீய வாழ்க்கைக்கு உலக அறிவு, ஒழுக்கம், ஞானம் இவையனைத்திலும் உறுதியான அஸ்திவாரம் அவசியமாகின்றது.

ஆரம்ப நிலையிலுள்ள ஆத்மஞான சாதகன் மனவொருமைக்காக வெளிப்படையான, அல்லது மனத்தால் சிருஷ்டிக்கப்பட்ட விக்ரக வழிபாட்டினைக் கைக்கொள்ள வேண்டுவது மிக அவசியம். இவ்விதம் செய்யவில்லையானால் உம்மனம் மனிதருள் ஒருவருடைய உருவத்தைப் பற்றிக்கொள்ளும். இதற்கு இடம்கொடுத்தால் ஒருவர் பின் ஒருவராக உம்மனத்தைப்பற்றிக் கொள்வார். அதனால் மனம் உலகமாயையில் சிக்குண்டு அல்லற்பட்டு இழிநிலையெய்த நேரிடும்; கொண்ட குறிக்கோளினின்று நம்மைப் பிரித்துவிடும்.

கேள்வி :—பழைய வாசனைகள் மனதில் எழவொட்டாது தடுப்பதெங்ஙனம்?

பதில் :—எவரெவர் உம்மனத்தை இழிநிலைக்குப் பற்றிஇழுக்க வல்லவரோ அவரது உறவை உதரித்தள்ளுவீர். வெகுநாள்வரைக்கும் அவருடன் சம்பந்தங் கொள்ள முயலாதீர். பழைய கெட்ட வாசனைகள் உமது உள்ளத்தில் உதிப்பதற்குக் காரணமாகவுள்ள அனைவரையும் நஞ்சினைக் காண்பதுபோல் அஞ்சி ஒதுக்கித் தள்ளுவீர். முன்சொன்னபடி ஆத்மீயத்துறையில் குறுக்கே நிற்கும் அனைவரையும் இரக்கம் சிறிதும் காட்டாது விரட்டியடிப்பீர். பரிசுத்தமடைந்து முன்னேற முயல விரும்பினால் இதனினும் பார்க்க வேறு வழி கிடையாது. நம்முடைய வாழ்க்கையில் நாம் அஜாக்கிரதையாகவிருந்தால் அது எவருடையகுற்றமாகும்? நாம் முழு விலைகொடுத்து வாங்க வேண்டும். அதாவது சகல சிரமங்களும் எடுக்கவேண்டும். அரைக்காசும் குறைக்காது முழுவிலையும் கொடுத்தாலல்லாமல் ஆத்மீயத்துறையில் நாம் வேண்டுவது கிட்டாது.

'எங்களைச் சுற்றி நாலுபுறமும் சூழ்ந்திருக்கும் இருளில் இறைவா! சூரியனைப்போல் உதித்து உமது தெய்விக ஜோதியால் இந்த இருட்டினைக் களைவாய்.'

'சிவனே எனது தாயார், சிவனே எனது தகப்பன், சிவனே எனது நாயகன், சிவனே எனது நண்பன், சிவனே எனது உறவினன், சிவனே எனது எல்லாமும் ஆவான். எனக்கு வேறொருவரும் தெரியாது; யான் வேறெவரையும் அறியேன். நானல்ல, நானல்ல.'

'இறைவ! நீர் பல நாமங்கள் பெற்று அவற்றிற்கு உமது சக்தியனைத்தினையும் தந்தீர். உம்மை ஒரு குறிப்பிட்ட காலத்தில்தான் நினைக்கவேண்டும் என்ற நியதியில்லை; அத்தன்மையது உமது கருணை; என்றாலும், என்னே, எனது துரதிருஷ்டம்! உன்நாமத்தில் நான் அன்புகொள்ளவில்லையே.'

புல்லினும் பல்யத்தன்மை வாய்ந்தவனும், மரத்தினும் பொறுமையுடையவனும், தன்னையேயல்லாது பிறரைப் புகழ்பவனுமே இறைவன் திருநாமத்தின் பெருமையைத் திறம்படக் கூற முடியும்.'

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

நாட்டுப் பெரியாருடைய ஜன்ம தினங்களைப் புண்ணிய தினங்களாகக் கருதுவது நம்மவரது வழக்கமாகும். பாரத நாட்டின் பண்டைப் பெருமைக்கு இரு பூஷணங்களாக விளங்குகின்றவர் ஸ்ரீராமனும் ஸ்ரீ கிருஷ்ணனும் ஆவர். ஸ்ரீராம நவமியையும் கோகுலாஷ்டமி அல்லது கிருஷ்ண ஜயந்தியையும் ஹிந்துக்கள் பண்டிகைத் தினங்களாகக் கொண்டாடி வருகின்றனர். அன்றைய தினங்களில் இவ்விரு மகான்களது சரிதங்களைப் படிக்கிறோம்; அவர்களது பெருமைகளைப் பாடுகிறோம்; குழந்தைகளுடைய மனத்தில் அவர்களது மகிமை ஊன்றுமாறு கதைகள் கூறுகிறோம். எத்தனை நூற்றாண்டுகளாக இவ்விழாக்கள் நம் நாட்டில் கொண்டாடப்பட்டு வந்துள்ளன! அதை நினைத்தாலே மயிர்க்கூச்செறிகிறதல்லவா? பாரத நாடு பழைமையினின்றும் நழுவிப் புதுமையைப் பெற்றுவிடவில்லை. பெறுவதும் முடியாது என்பதை விளக்க இதைவிடச் சிறந்த சான்று என்ன வேண்டும்? நாட்டு வாழ்வில், தேசிய இருப்பில், குடிகளின் உணர்ச்சியில், மக்களது மனத்தில், பாரதத்தின் ஜீவிதத்தில் இராமனும் கண்ணபிரானும் கலந்து போயினர். குறைந்தது வருஷத்திற்கொருமுறையேனும் இவ்விரு பெரியார்களைப் பற்றி நினையாமல் இருப்பது நம்மால் இயலாத காரியமாகும்.

பண்டை நாளில் பாரதத்தை ஆக்கத் தோன்றிய மகான்களது தொடர்பில் இக்காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தோன்றினார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் இந்திய நாட்டின் புதிய மேன்மைக்குக் கணக்கற்ற துறைகளில் பணியாற்றினார் என்பது உலகறிந்த விஷயமாய்விட்டது. அன்னாருடைய நினைவு, மாந்தரது மனத்தில் ஆழ்ந்து பதியுமாறு செய்வது தேசியத் தலைவருடைய கடமையாகும். இதன் பொருட்டே நாட்டின் பல பாகங்களிலும் அவரது ஜன்ம விழா கொண்டாடப் பெற்று வருகிறது.

ஸ்ரீராமகிருஷ்ணரைப் போற்றும் மக்கள் பல வகையினராவர். அவரைத் தமது குருநாதராக ஏற்று அவரை வழிபடுவதன் மூலம் ஆத்மீய முன்னேற்றத்தை எதிர் பார்ப்பவர் ஒரு சிலர் உண்டு. ஆனால் ஆத்மீயத் துறையில் பற்று அதிகமாக இல்லாதவரும், ஞான

வேட்கை இன்னமும் ஏற்படாதவரும் கூட ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் போற்று கின்றனர். இது ஏன்? சரித்திராசிரியன் ஒருவன் பாரத நாட்டுச் சரித்திரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. அவர் தோன்றிய நாள் முதற்கொண்டு பாரதத்தின் நவீன யுகம் ஆரம்பித்ததெனலாம். ஸ்ரீராம கிருஷ்ணரின் அடியைப் பின்பற்றிப் பணி யாற்றிய விவேகாநந்தரின் முயற்சியால் நம் நாடு மீண்டும் சுய நம்பிக்கையைப் பெற்றது. தியாகமும் திருத்தொண்டுமே வாழ்வின் உயர் இலக்ஷியங்கள் என்ற எண்ணம் இளைஞரிடையே தோன்ற லாயிற்று. சிரத்தை மக்களிடையே மீண் டும் தழைத்தது. மத வாழ்வின் உண் மையான இரகசியத்தை தேசமக்கள் உணர்ந்தனர். மற்ற நாட்டினர் இந்தியா வின் பெருமையை உள்ளவாறு கண்ட னர். புதிய முறையில் கல்விச்சாலைகள் தோன்றின. ஆண்மையும் பலமும் ஊக்க மும் தேசிய ஆகாயத்தில் திகழலாயின.

நமது புதிய வாழ்வுக்குக் காரண பூதராயிருக்கும் பரமஹம்ஸ தேவரின் ஆண்டு நிறைவு விழாவை நாம் அனை வரும் ஜயந்தியாகக் கொண்டாட வேண்டி யது நம் கடமையாகும். குழந்தைகளும் கூட அப்பெரியாருடைய பெயரைக் கேட் கட்டும்! அதனால் பெரும் நன்மை ஏற் படும். ஸ்ரீராமகிருஷ்ணர், விவேகாநந்தர் இருவருடைய பாலிய லீலைகளைக் குழந்தைகளுக்குக் கதை ரூபமாகச் சொல்லுவோமாயின் குழந்தைகள் அவற்றைக் கேட்டுப் பேரானந்தம் எய்து வதைக் கண்டுள்ளோம். அவ்வாறே குடும்பப் பெண்டிர் ஸ்ரீ சாரதாதேவியின் சரித்திரத்தின் மூலம் ஸ்ரீராமகிருஷ்ண ரின் விசேஷப் பெருமையை அறியலாம். மாணவரும் அவ்வாறே ஆசிரியரிட மிருந்து இப் பெரியார்களால் சரித்திரத் துறையில் என்ன நற்பயன் ஏற்பட்டுள் ளது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

காட்டில் வழி இழந்தவன் தூரத்தில் தெரியும் விளக்கொளி யொன்றைக் கண்டு அவ்வழியில் திரும்பிவிட்டானாகில் அவன் காட்டை விட்டு வெளியேறுவது திண் ணம். அவ்வாறே தேசியப் பெருமைக்குக் காரண பூதர்கள் யார் என்பதை உணர்ந்து அவர்களைப் போற்றுவதற்கு நாம் தொடங்கினோமாயின் நாம் உயர்நிலை உறு வது திண்ணமாகும்.

---

# மனித வாழ்க்கையின் மர்மம்

(தாமஸ் ஏ கெம்பிஸ்)

க

எக்கருமம் செய்தாலும் அதனால் உன் அந்திய காலத்துக்கு என்ன சாதகம் வருமென்று உன்னிப்பார். நடுநிலைமை தவறாத நியாயாதிபதி முன்னர் நீ நிற்கும் காலத்தில் அக்கருமம் என்ன பயன் தருவ தாகுமென நினை. அவர் எல்லாம் அறி வார். உன் கபடத்துக்குள்ளாகி மகிழார். உன் சாக்குப் போக்குகள் அவரிடம் பலியா. சமனாக சீர்தூக்கி உன்னை நியாய மாக மதிப்பார்.

ஓ அற்பனே! கடுகடுப்பவர் முன் நடு நடுங்கினவனே! உன் குற்றங்களை எல்லாம் அறிந்திருக்கிற அந்த நியாயாதிபதி முன் னர் தீர்ப்பு நாளில், நீ யென்ன சமாதா னம் சொல்லப் போகின்றாய்! அக்காலத்

தில் பிறர் வார்த்தையும் பிறர் பொர்சும் பலிக்கா. அவர் அவர் பாபத்திற்கு அவர் அவரே உத்திரவாதம் ஆவர். ஆகையினால், அக்காலத்திற்கு உற்ற துணையான இறைவனை இன்றே தேடிக்கொள்வாய்.

இப்போதே முயற்சிப்பாய். கண்ணீர் விட்டு மன முருகி இறைவனைப் போற்று வாய்; அதனால் உனக்கு இலாபமுண்டு. உன் அழுகை இறைவன் காதுக் கெட்டும். அதனால் உன் பாபம் நீங்கி நீ தூயனவாய்; அவருக்குப் பிரியனுவாய்.

பிறர் தீமை செய்திடினும் அதைக் கடிந்து அவரை நோகாது அவர் பாபம் பற்றி இரங்கி மனம் வருந்துகிறவனும், தனக்குக் கெடுதி செய்கிறவரின் க்ஷேமத் தைக் கோருகிறவனும், பிறரை சந்தோ ஷித்து வாழ்க்கை நடத்துகிறவனும், கோபம் கொள்ளாது அன்பு பற்றி நடப்ப வனும், ......... தன்னை அடக்கி தன் விருத்திகளை நிரோதம் செய்பவனும், இவர்கள் எல்லாம் ஆன்மாவை ரக்ஷிக்கத் தவறாத மருந்துடையவராவார்.

நாம் நமது குற்றங்களை இப்பொழுதே களைந்து அவைகளின் வேரறுத்து விடல் நலமாம். பின்னிட்டுச் செய்வோமென இருத்தல் தவறும். நாம் ஊனை ஓம்பி சுகம் பாராட்டினுல், பின்னர் உண்மையாய் மோசம் போவோம்.

உன்பாபங்களே, உலக ஆசை என்கின்ற அக்கினிக்குச் சரியான விரகாம். உன் சரீ ரத்தை அதிகமாக பேணப்பேண, உன் சங்கடம் பெருகுவதாகும். உன் சரீர போஷணையில் கவனம் செலுத்துவாயாகில் உன்கடை முறைகாலம் உனக்கு பெருகிய துன்பம் தருவதாகும். அவ்வக்கினியை உண்பித்துப் போற்றுவிக்கும் பாபம் அதிகரிப்பதாகும்.

எவன், எவன் என்ன என்ன பாபங் களைச் செய்கிறானே, அந்தந்தப் பாபங் களின் கொடுமையான பலன்களை பின் னிட்டு அனுபவிப்பான்.

இங்கிலவுலகிலே ஒரு வேலையினின்று இளைப்பாறுவதற்குச் சாவகாசமுண்டு. சில சமயங்களில் நம் பிரிய சிநேகிதர் களுடன் சல்லாபம் செய்ய இடமுண்டு. அங்கேயோ, பாபிக்கு ஓய்வு கிடையாது; பாபிக்கு சுகமே கிடையாது.

அதனுல் இப்போதே கவனமாக இரு. இப்போதே பாபம் ஏற்படாமல் இருக்க கவலை கொள்வாய். இவ்விதம் உலகத்தில் உள்ள நாளில் ஒழுகுவாயாகில், மரணந்த நீர்ப்புநாளில், உனக்குப் பயமில்லை. சாவ தானம் பெறுவாய். அருள்பெற்ற மஹான் களின் தொழும்பில் நிற்க பாத்திரவானு வாய். அப்போது யதார்த்தவான்களுக்கு நற்காலம். உலகத்தில் அவர்களை வருத் தின தீயோர்களின் முன்னர் அவர்கள் தைரியமாக நிற்பாராவர்; உலகில் ஏழை யரும் மெலியாராக விருந்துள்ளாரும், இப்போது பயம் நீங்கி நம்பிக்கைக் கொண்டவராக இருப்பர்; உலகில் செருக் கும் இறுமாப்பும் கொண்டவர், இப்போது எங்கே திரும்பினும், பயத்துக்குள்ளாகி திகிலடைவர்; உலகில், மூடர்போல் திரிந்து, கிறிஸ்துவின் பக்தராக நடந்து வந்ததனுல் உலகத்தவரால் நிந்தனை பெற் றுள்ளார். இப்போதோ தாம் உலகத்தில் கழித்த வாழ்நாள் வீணுள் அல்ல என் றும், நேர்மைபற்றிய தென்றும் திருப்தி யுடையாராவர்; உலகில் தம்மனசைப் புண்ணுக்கின கவலைகள், இப்போது மரணத்தின்போது நினைக்க அவைகளின் ஞாபகம் சந்தோஷகரமாக விருப்ப தாகும்; பாபிகள் வாய் அடங்கும்; அன்புடையார் எல்லாம் ஆனந்த கீதம் பாடுவார்; விஷயப்பற்றுள்ளார் எல்லாம் துக்கத்தினுல் அழுவார்; உலகில் பாரம் சுமந்து வருந்தியவர் சுகவாழ்வு கழித் ததைவிட அதிகமாக இப்போது என்னு

வார்; எளியவன் கந்தை இப்போது பீதாம்பரமாக விளங்கும்; வலியவன் பீதாம்பரம், பழங் கந்தையாகி இருட்டுப் போல் மங்குவதாகும். அன்றிப் பெரியவனைப் பொருளில் எளியவனாய் இருந்தவன் இப்போது சுவர்ணத்தால் அமையப்பெற்றுள்ள அரண்மனைவாசிபோன்று மிகப் பூஜை பெறுவான். உலகில் பொறையுடையான் இப்போது, உலகில் அதிகாரம் செல்வாக்கு உடையானைவிட அதிக மேன்மை யுடையவனாக விருப்பான்.

சூதும் வாதையும் விடப் பண்பும் பணிவும் மேலான ஸ்தானத்தை அடைவிக்கும். சாஸ்திரங்களின் ஆழ்ந்த ஞானத்தைப் பார்க்கிலும் நேர்மையுள்ள சுத்த மனசானது பரத்தில் அதிக ஆனந்தத்தை ஜனிப்பிக்கும். உலக திரவிய சம்பத்துக்களைப்பற்றிப் பரலோகத்தில் அருவெறுப்பு உண்டாகும். நல்ல உணவினால் உலகத்திலுண்டாகும் சந்தோஷத்தை விட ஈஸ்வர ஆராதனை செய்வதனால் பரலோகத்தில் அதிக சுகமும் சந்தோஷமும் கிடைப்பதாகும். அதிகப் பேச்சினால் பிரயோசனமில்லை யென்றும் மௌனம் சர்வ சாதகமென்றும் பரத்தில் தெரியவரும்; வார்த்தைகள் பிரயோசன மல்லவென்றும் கர்மங்கள் முக்கிய மென்றும் பரத்தில் அனுபவ சித்தமாகும்; உலக விஷயாதி சுகங்களைவிட தீவிரமான தபசும் நேர்மையான ஒழுக்கமும் பரலோகத்தில் ஆனந்தத்துக்குக் காரணமென்று அறியப் பெறுவதாகும்.

அதனால் சிறு விஷயங்களில் வரும் துன்பத்தைச் சகித்துக் கொள்ளப்பழகு. அப்படிச் செய்வாயாகில் வருங்காலத்தில் அதிக துன்பத்திலிருந்து விடுபடுவாய். இனிப் பரலோகத்தில் நீ அனுபவிக்கும் துக்கத்தை முதல் முதலில் இவ்வுலகத்திலேயே அனுபவிக்கப் பழகு.

இவ்வுலகத்தில் சொற்ப சங்கடத்தைப் பொறுக்க உனக்கு இயலாமற் போனால் நெடு நாள் நிற்கும் பெரும் சங்கடத்தை எப்படிப் பரலோகத்தில் சகிப்பாய்; அற்ப கஷ்டத்தை அனுபவிப்பதில் உனக்குப் பொறுமையில்லாவிடில் மரண காலத்திற்குப் பிறகு நரகவேதனையை எவ்விதம் சகிப்பாய். இகத்தில் சுகமாகக் காலம் கழிக்கிறதென்ன, பரத்தில் கிருஸ்துவுடன் அரசாளுகிற தென்ன; இவ்விரண்டும் ஒருவனுக்குச் சேர்ந்து சம்பவிக்க முடியுமா? இது சத்தியம். இன்று வரையில் உலக வாழ்வில் சம்பன்னனும், செல்வாக்கு உள்ளவனும் இருக்கிறாயென்று வைத்துக்கொள்வோம். அடுத்த நிமிஷத்தில் உனக்கு மரணம் நிகழுமாகில் உன் கதி யென்னவாகு மென்று நினைக்கிறாய்? உலக சம்பத்தும் வைபவமும் என்ன பலனைக் கொடுப்பதாகுமென அறிகிறாய்!

ஆகவே ஈசனிடம் அன்பு பற்றி அவர் கைங்கர்யம் செய்யாதார் வாழ்வு வீண். நெஞ்சார ஈசுவரனை வழிபடுகிறவன் மரணத்துக்கு அஞ்சான்; எமலோகத்துக்கும்பயப்படான்; தீர்ப்புநாளைப் பற்றி மனம் நோகான்; நரகத்தைக் கண்டு நடுங்கான்; ஏனென்றால் இறைவனிடம் மெய்யன்பு உள்ளவனாய் இருக்கின்றமையால், சுகமாயும் சமாதானமாயும் இறைவனிடம் சேருவான். ஆனால் பாபத்தில் பற்றுள்ளவன் மரணத்திற்குப் பயப்படுவதிலும், தீர்ப்பு நாளுக்கு அஞ்சுவதிலும் ஆச்சர்யம் என்ன?

நீ ஈசுவரனிடம் அன்பு பாராட்டி அதனால் தீயவழியினின்று அகலாமல் போயிடினும், நரக பயமாவது தீயவழியில் நடவாமல் தடுக்க உதவும். ஈசுவரனிடத்தில் பயபக்தி இருத்தல் முக்கியமல்லவென்று கருதுகிறவன் நன்மை புரிதலில் நெடுநாள் நிலைத்து நில்லான். விரைவில் தீயவழியான மாய வழியில் சிக்கிடுவான்.

உ

நம்முடைய வாழ்நாள் முழுமையையும் நல்ல வழியில் நடத்த தீவிரமான அவா கொள்ளுவோம்.

ஈசுவர கைங்கர்யத்தில் விழிப்புள்ளவனும் சுறுசுறுப்பு உள்ளவனும் இரு. உன் ஜனனத்தின் கருத்து என்னவென்று உன்னிப்பார். பரலோகத்தை விட்டு இகத்தில் என்ன காரணம் பற்றிப் பிறந்திருக்கிறயென்று நினை. இறைவனை வழிபட்டுக்கடைசி முறையில் ஞானி ஆக வேண்டு மென்றல்லவா? ஆகையினால் மென்மேலும் ஞான அபிவிர்த்தியடைய முயலுவாய். சீக்கிரம் அதன் பயனை அடைவாய். பயமும் வியசனமும் உன் எல்லைக்குள்வாரா. சொற்ப கைங்கர்யம் செய்தால் பெரிய லாபம் கிடைக்கும்; நீடித்த வாழ்வும் நித்திய சுகமும் பெறுவாய். ஈசுவர கைங்கர்யத்தை உண்மையாயும் சிரத்தையுடனும் நடத்துவாயாகில், ஈசன் உனக்கு அருள் புரிவார். அவர் அனுக்கிரகங்கள் உனக்கு ஏராளமாக உண்டாகும். இதுநிச்சயமென்று அறி. ஒரு காலத்தில் நீ உயர்வான ஸ்தானம் பெறுவாய் என நம்பு. ஆனல் சாவதானம் பெற்றேன் என நினைக்காதே. அப்படி எண்ணுவாயாகில் கர்வங்கொண்டு சோம்பித் திரிவாய்.

கவலை கொண்ட ஒரு மனிதன், நம்பிக்கைக்கும், ஏக்கத்திற்கும் மத்தியில் ஊசலாடிக்கொண்டிருந்தான். ஒரு நாள் கோவிலுக்குள் நுழைந்து ஒரு சந்நிதி முன்பாக ஸ்தோத்திரம் செய்து கொண்டு நமஸ்காரம் செய்தான். "கடைசி வரை முயற்சி வேண்டுமென்று நான் அறிவேனகில், " என்ற எண்ணம், அப்போது அவன் மனதில் எழுந்தது. தக்ஷணமே அசரீரி வாக்கு ஒன்று கேட்டது. அதாவது: "அப்படி அறிந்திடுவாயாகில், நீ என்ன செய்யப்போகிறாய்? அறிந்ததின்மேல் செய்யப் போகிற காரியத்தை இப்பொழுதே செய்திடு; நீ சாவதானம் பெறுவாய்." விழித்தவன் போல் திடீரென்று எழுந்து ஆறுதல் பெற்றவனாய், மனம் திடப்பட்டு அன்று முதல் இறைவனுக்குப் பிரியமான காரியத்தை அவன் செய்யத் தலைப்பட்டான். அவன் மனச் சஞ்சலம் நீங்கியது. இன்று என்னவருமோ, நாளை என்னவருமோ என்ற பயம் அவனை விட்டது. கடவுளுக்கு எது பிரியமானது, எது நேர்மையானது என்பவற்றை நாடினான். நாடியும் அறிந்தும் நற்காரியத்தைச் செய்து வந்தான்.

'ஈசனை நம்பி, நன்மை செய்யக்கடவாய்; அவ்விதம் உலகில் வாழ்க்கை நடத்துவாயாக. உனக்கு உண்மையான சம்பத்து கிடைக்கும்' என ஒரு தீர்க்கதரிசி உபதேசிக்கிறார்.

நிவர்த்தி மார்க்கத்தின் கஷ்டத்தையும் அதைக் கொண்டுசெலுத்தும் சிரமத்தையும் கருதினவராய் அம்மார்க்கத்தை அனுசரிக்க அநேகர் பயப்படுகிறார்கள்; துணிகிறார்களில்லை.

என்ன சங்கடம் வந்தாலும், என்ன கொடுமை நேரிட்டாலும், அதை ஜயிக்க வல்ல தீரரே, இந்த ஞான மார்க்கத்தில் சீக்கிரம் மேம்பாடடைவார். இந்திரிய நிக்கிரகம் செய்து, தம்மைத் தாம் அடக்குவார் ஆகில், இறைவன் அருள் பெறுவார். எல்லாரும் ஒருவிதமான பாபம் செய்துள்ளார் என்பர். ஆயினும் அதிக பாபங்கள் செய்தவர் பயந்து எச்சரிக்கையுள்ளவராய்த் தபசு செய்கிறதினால் தாம் கொண்ட முறையில் உறுதிப்பாட்டைப் பெறுவார். மற்றையர் அதாவது தம் வாழ்நாளை நல்வழியிலேயே நேர்மையாகக் கழித்து இருக்கின்றவர்கள், அவ்வளவு எச்சரிக்கையாக இருக்க வேண்டியதில்லை என்பதாகிறது.

நம்மை சீர்திருத்திக் கொள்ளுவதற்கு முக்கியமாக இரண்டு விஷயங்களைக் கவனிக்கவேண்டும். ஒன்று—நம்மைக் கீழான கதியில் கொண்டு விடும் இயற்கையான சுபாவத்தினின்று பலவந்தமாக நம்மை விலக்கிக் கொள்ளவேண்டும்; மற்றொன்று-நன்மையைக் கடைப்பிடித்து நல்வழியில் இடையறாது நடக்க வேண்டும்.

மேலும், தீயவழியைத் தவிர். பிறரிடமிருந்தால் எது குற்றமாக உனக்குத் தோன்றுவதாகுமோ அதை உன்னிடமிருந்து முற்றிலும் விலக்கு.

எங்கே போனாலும் எச் சமயத்திலும் சன்மார்க்கத்தை நாடு. அதற்கு அனுகூலமானதைத் தேடு. ஒரு நல்ல முறை, ஒரு நல்ல அனுஷ்டானம் உன் எதிர்ப்பட்டால் உடனே அதை அனுசரித்து நடக்கத் தீவிர முயற்சியுள்ளவனாகக் கடவாய். ஒரு தீய ஒழுக்கம், ஒரு தீய காரியம் பிறரிடம் நிகழக் கண்டால், அதை உன்னிடம் நிகழாமலிருக்கும்படிக் கவனிக்கக்கடவாய். அது உன்னிடம் ஏதேனும் ஒரு சமயம் இருந்திருப்பினும் அதை இனிச் செய்யாமல் நீக்கு. உன் கண்கள் பலரைப் பார்க்கின்றமைபோல, பலர் கண்கள் உன்மேல் இருக்கும்; கவனமாக இரு.

ஒரு கோஷ்டியார் பண்பும் பக்தியும் உள்ளவராக அவர் அவர் கொண்ட அனுஷ்டானங்களை விடாமல் சரியாய் நடத்துவதைப் பார்க்க எவ்வளவு திருப்திகரமாகவும் பிரியமாகவும் இருக்கிறது. அதற்கு நேர் எதிராக ஒரு சபையைச் சார்ந்தார் அச்சபையின் கொள்கை ஒழுக்கங்களினின்று வழுவி, அச்சபையின் முறை தப்பி நடந்தால் எவ்வளவு துக்ககரமாக இருக்கிறது! நாம் கொண்ட கருமத்தின் வழியை அலக்ஷியம் செய்தல், எவ்வளவு தீமைக்கும் கெடுதிக்கும் இடமாக விருக்கிறது! தமக்குரிய கருமத்தைச் செய்யாது பிறர் கருமம் செய்கின்றவர் என்ன என்ன கெடுதியை விளைவிக்கின்றார்கள்!

நீ கைகொண்ட நோன்பை மனதில் உன்னிப்பார். கிருஸ்து சிலுவையில் அறையுண்டதை விளக்கும் உருவத்தை மனதில் ஞாபகப்படுத்திக்கொள். நீ ஈசன் வழியில் நிற்பினும், ஏசுகிருஸ்து போன்று, உன் வாழ் நாளை நேர்மைப் படுத்தாது, அவர் செய்து காட்டின வழிப்படி நடவாது, அவ்வண்ணம் முயற்சியும் கூட எடுக்காது, நீ காலம் கழித்திருக்கிறதை நினைத்து நினைத்து, மனங்குன்றி, அகம் நொந்து, வெட்கப்படக்கடவாய். சமய நெறியில் நிற்பான் ஒருவன் உள்ளபடி மன்முருகி, அன்பு பாராட்டவேண்டும். கிருஸ்துவின் ஒழுக்க முறையையும் அவர் பட்ட துன்பத்தையும் சிந்தித்து வருவானாகில், அதிலேயே அவன் தனக்குவேண்டிய உபதேசங்களை யெல்லாம் பெறுவான்.

அந்தோ! சிலுவையில் அறையப் பெற்றுள்ள ஏசுவின் நிலைமையை நம்மனதுக்குள் கொண்டு வருவோமாகில், அந் நிலைமை நம் நெஞ்சில் பதியுமாகில், எவ்வளவு சீக்கிரத்தில் நாம் அறிவுள்ளவர் ஆவோம். எவ்வளவு விரைவில், மெய்யுணர்வு பெறுவோம். உண்மையான பக்தியையுடைய துறவி அவனுக்கிட்ட கருமத்தையும் கடமையையும் பொறுமையுடனே செய்வான். பிறரை நன்றாய் நடத்துவான். சிரமத்தை ஏற்க விரும்பாத துறவி ஒருவனே சோம்பற்குள்ளாகி சங்கடத்தையும் துயரத்தையும் எய்துவான். மென்மேலும் கஷ்டத்தின் மேல் கஷ்டம் சம்பவிக்கும்—திரும்பின பக்கமெல்லாம் துன்பமுண்டு. ஏனென்றால், தன்னுள்ளத்தில் சுகமில்லை, மனச் சமாதானமில்லை. வெளியேறி உலகத்தில்—சுகந் தேடலா மென்றாலோ முடியாத காரிய

மாகும். அங்கு அவனுக்கு இடமில்லை. சந்தர்ப்பமும் நேராது.

துறவி, தன் தபசின் முறையில் நில்லாதபோது நாசத்துக்குள்ளாகிறான். துறவறம் பூண்டும், தபசு வழியில் நில்லாமல், உல்லாசமாய்க் காலம் கழிக்க விரும்புபவன், எப்போதும் துன்பத்தையே அநுபவிப்பான். ஏதாவதொன்று, தனக்கு துயரத்தை உண்டு பண்ணிக்கொண்டேயிருக்கும்.

எத்தனையோ துறவிகள் துறவறத்தை நன்றாய் நடத்துகின்றார்கள். அவர் தம்தம் தபசறையைவிட்டு வெகுவாய் அகலாது இருப்பார்; தாம் உள்ளடங்கி இருப்பார்; அவர் அதிகம் உண்ணார்; அவர் அதிக ஆடை உடுத்தார்; அவர் அநுஷ்டானங்கள் அதிகம் செய்வார்; அவர் அதிகம் பேசார்; நெடுநாழிகை விழிப்பார்; அதிகம் தூங்கார்; வைகறைத் துயில் எழுவார்; தியானத்தில் அதிக காலம் கழிப்பார்; அவர் இடைவிடாது படிப்பார்; இவ்வண்ணம் பலவித கருமம் வகிப்பார்; கார்த்தூஷியர் (Carthusirs) என்ன, சிஸ்டர்சியர் (Cisterciours) என்ன, இத்தகைய சந்நியாசிகள், சந்நியாசினிகள் இவர்கள் போன்ற மற்றவர்களைப் பார்! அவர்கள் எவ்வளவு பக்தியுடனே நடு இராத்திரியில் துயில் எழுந்து, ஈசுவர ஸ்தோத்திரம், ஈசுவர கீதங்கள் செய்து வந்தார்கள் என்பதைக் கவனி. இறைவனை நோக்கி, இத்தனை பேர்கள் உற்சாகத்துடனே அன்புள்ளவராகி, கீதங்கள் பாடி, ஸ்தோத்திரங்கள் செய்கின்றபொழுது, நீ உன் மார்க்கத்திற்கு உரிய கைங்கரியம் செய்யாமல், சோம்பலாக இருத்தல் எவ்வளவு இழிவானதென்றும், வெட்கித் தலை குனியத்தக்கதென்றும் நினைத்துப்பார்.

மனக்குளிர, வாய் நிறைய, ஈஸ்வர ஸ்தோத்திரம் செய்வதைத் தவிர, அந்தோ, வேறு கர்மம் இல்லாமலிருக்கும்படி செய்ய வேண்ணுகா! பசி, தாகம், தூக்கம் இவை மறந்த காலமெல்லாம் கடவுள் ஸ்துதியிலேயே கழிக்கமாட்டாயா! உன் வாழ்நாளை ஆத்மரக்ஷணைக்காகப் பூர்த்தியாகக் கழிக்கமாட்டாயா! அவ்விதம் செய்வாயாகில், இப்போது சரீரத்தைப்பற்றிய வேண்டுதலின் கண் அழுந்தி—அடிமையாக இருக்கின்ற நீ அதிக ஆனந்தமாக இருப்பாய். சரீர சம்பந்தமான இச்சைகள் இல்லாம லிருக்கப்படாதா? ஆத்மாவின் உணவு (ஞானம்) மட்டும் இருக்கப்படாதா? ஆத்மாவை ரக்ஷிக்கவேண்டிய உணவை ஏதோ ஒரு போது தான் தேடுகின்றோம். ஈசுவர சிருஷ்டிக்குட்பட்டவைகளைப் பற்றியும் அவைகளால் உண்டாகும் சுக துக்கத்தைப் பற்றியும் உள்ள அவா நீங்குமேயாகில், அப்போதுதான் ஈசனைநோக்கி மனம் செல்ல ஆரம்பிக்கும். அப்போது, வந்தது போதுமென திருப்தியடைவான். அதிகம் என்ற சந்தோஷமும், குறைவு என்ற துக்கமும் இரா; கடவுளே அடைக்கலமென்று, அவரையே நம்பினவனுயிருப்பான். அவரே அவனுக்கு எல்லாமா யிருப்பார்! அவருக்கு ஒரு வஸ்து அழிவில்லை, ஒரு வஸ்து வாடுதல் இல்லை; எல்லாம் அவர் நோக்காலேயே நடைபெறுகின்றன. அவர் ஆக்ஞையைக் கோரி எதிர் பார்க்கின்றன.

உன் மரணாந்த காலத்தை ஞாபகத்தில் வை. சென்ற காலம் திரும்பாது. இது சத்தியம். சிரத்தையும் ஜாக்கிரதையுமின்றி நற்குணம் உண்டாகாது. கொஞ்சம் சோர்வு உண்டானால், விழுந்திடுவாய். தீவிர நோம்பு பூண்டால் சாந்தம் அடைவாய். நீ தொடங்கும் காரியமெல்லாம் இலகுவாயிருக்கும். ஏனென்றால், நன்மையை நாடி, இறைவன் அருள்பெற்றவனாக இருக்கிறாய். தீவிர விரதம் கொண்டவனுக்கு ஒன்றும் கஷ்டமல்ல.

லேர்வை சொட்ட வேலை செய்வதைப் பார்க்கினும் நம் குற்றங்களைக் களைந்து நம்மை அடக்கி ஆளுதல் அதிக வருத்த மாம். சிறு குற்றங்களைக் களையாவிடின், பெரிய பாவங்களில் அழுந்துவாய். பகலை நன்றாய்க் கழிப்பாயாகில், மாலைப்பொழுது சுகமாக இருப்பதாகும். விழிப்பாயிரு! ஜாக்கிரதை! ஜாக்கிரதை! வருவன வருக! நீ விழிப்போடு இரு! எச்சரிக்கை யாக இரு! எவ்வளவுக் கெவ்வளவு உன்னை ஆயத்தப்படுத்திக் கொள்கிறாயோ அவ்வளவுக் கவ்வளவு பலன் உண்டு.

---

# மானுடப் பிறவியும் அதன் அருமையும்

[இராயவேலூர் சாது திருவேங்கடானந்தர்]

அலைகள் மிகுந்துள்ள சமுத்திரத் தின்கண் நுகத்தடித் துவாரத்தில் ஆமையினது கழுத்துப் புகுவது எவ்வ ளவு கஷ்ட சாத்தியமோ அதுபோல் துயரந்தரும் கொடூர ஜன்மங்கள் அநேகஞ் சென்ற பின்னர் பெறற்கரிய மனிதப் பிறவியிற் பிறந்திருக்கிறோம்.

யுகாந்தகாலம் வந்து ஏழுகடலும் ஒன் றாகும்போது, தெற்கு சமுத்திரத்திலிருக் கின்ற ஒரு மரக்கழி (குச்சி) வட கடலுட் கிடக்கின்ற நுகத்தடி துவாரத்தில் தெய்வ கதியாக நுழைவதுபோல், ஆன்மா நால் வகை யோனி எழுவகைப் பிறப்பு எண் பத்து நான்கு நூறாயிரம் பேதமாயுள்ள கருப்பங்கள் தோறும் கணக்கில்லாத காலம் பிறந்து பிறந்து சுழன்று, அளவி லாத் துன்பத்தை யடைந்து, அவைகளை யெல்லாம் தப்பிக் கடந்த பின்பு இந்த மானுடப் பிறவியை அரிதாகப் பெற் றுள்ளது.

முட்டையிலே தோற்றுவனவும், வியர் வையிலே பிறப்பனவும், வித்திலே முளைப்பனவும், பையிலே ஜனிப்பனவு மாகத் தொகை எண்பத்துநான்கு நூறு யிரம் பேதமுள்ள யோனிகளுக்குள்ளே இதர யோனிகளெல்லாவற்றிலும் போகங் களை அநுபவித்துப் பின் அந்த பிறவித் துன்பங்களை நீக்குதற் கேதுவாய்ப் பெற்ற மானுட ஜன்மத்தின் அருமையை விசா ரித்துப் பார்க்கில், அகண்டமான சமுத்தி ரத்தை ஒருவன் கையினாலேயே நீந்திக் கரையேறினதை யொக்கும்.

அருமையாகவும், மூன்று காலத்திலும் துக்கத்தோடு கூடியதாகவுமுள்ள மனித சரீரம் கற்ப காலம் இங்கு இருந்த பிறகு மோக்ஷ சாதனங்களைத் தேடிக்கொள்ள லாமெனின், "பெறுவதற்கரிய பிறப்பு ஈது, இதன் போக்கு அறிதற்கரிய அவதி"; ஆகையினால் மோக்ஷமடையும் மார்க் கத்தை ஆராய்வது தவிர வேறொன்றை மனதினால் எண்ணுவதற்குக் கூட நேர மில்லை என்பது மகான்களது அபிப் பிராயம்.

இப்படி அருமையான மானுட சரீரம் கிடைத்தும் ஜனனமரண துக்கங்களை நிவர்த்தி செய்துகொள்ளாம லிருப்பது எதுபோலவெனின் :—

ஒருவன் பகவானைக் குறித்துத் தவஞ் செய்து பகைவனைக்கொல்ல மந்திரவாள் ஒன்று பெற்றும், விரோதியைக் கொன்று தான் சுகமடையாமல், அந்த மந்திர வாளைக் கொண்டு அருமையான தன் சரீரத்தையே அரிந்து கொண்டது போலும்.

எத்தனைக் காலமோ பெறுதற்கரிய மானுட தேகம் பெற்றும், குருவியின் அர்த்தங்களை அறிவதற்கேதுவான ஆண்மையை யடைந்தும், அசந்தான தேகாதிகளில் யான்யெனதென்னும் அபிமானத்தால் சாசுவதமான மோக்ஷத்தை யடைதற்கு எத்தனஞ் செய்யாதவர்கள், ஆத்மஹத்தி (தற்கொலை) செய்துகொண்டவர்களாவார்கள். தம்முடைய சொந்த இன்பத்தை நாடாத அவர்களினும் மூடாத்மாக்கள் பிறரில்லையென்பது அறிஞர்களின் அபிப்பிராயம்.

பொருள் முதலிய சகல சௌகர்யங்களும் இருந்தால்தானே மோக்ஷ மார்க்கத்தில் பிரவேசிக்கலாமெனின், மோக்ஷ மார்க்கத்தில் பிரவேசிப்பதற்கு பொருள் முதலியவற்றின் அபேக்ஷையில்லை. அவைகளின் தியாகந்தான் வேண்டும். இதற்குப் பிரமாணம் உண்டோ என்றால், பிரமகீதை எட்டாவது அத்தியாயம் நாலாவது கவி, :—

“ திரமாம் அருத்தத்தினுன் மைந்தராலுந்
 தீரதவற்றின் தியாகத்தினாலே
உரமான வேதாந்த மாவாக்கியத்தால்
 உற்பன்னமாம் விச்சையா நிச்சயத்தாற்
பரமான அஞ்ஞான அந்தத்திலே யப்படி
 ஞான உபதேச மொன்றாலுமேயிப்
புரமாமுடம்புக்குள்ளே யந்த முத்திப்
 பொருள்கண்டுவீடெய்துவார் இப்புவிக்[கே”
என்று கூறுவதே பிரமாணம் என்க.

மோக்ஷ மார்க்கத்தில் பிரவேசிக்க ஜாதி முதலியவற்றின் அபேக்ஷை உண்டோ எனின் :—

பிராமணாதி வருணம், பிரமசரியாதி ஆச்சிரமங்களுள்ளே இவ்வருணத்தன், இவ்வாச்சிரமத்தன் அதிகாரி யென்னும் நியமமின்று ; எவ்வருணத்தனுயினும், எவ்வாச்சிரமியாயினும் விவேகாதி சாதன சம்பன்னனே அதிகாரியாம் என்க.

இதற்குப் பிரமாணம் உண்டோ எனின் :-
“ இவனதிகாரியாமேனுன் ” என்றும்
“ பந்தமென்ன துறந்து சிலரதிதிகளா
 யிருந்தடைவர் பரமஞானம்
அந்தணர் மன்னவர் வணிகர் சூத்திர
 ராயிருந்து சிலரடைவர் ஞானம் ”
என்றும் கைவல்லிய நவநீதம் கூறுவதே பிரமாணமாம் என்க. இந்த மானுட தேகத்திலேதான் தன்னையும் தலைவனையும் அறிந்து அடைய வேண்டுமோ? வேறு தேகங்களில் அடைய முடியாதா எனின், அடைய முடியாது.
இதற்குப் பிரமாணம்,
 சிவஞான சித்தியார் இரண்டாவது சூத்திரம் 92-வது கவி,
“ வானிடத்த வருமண்மேல் வந்து
 அரன்றனை யர்ச்சிப்பர்” என்றும் பிரமகீதை நாலாவது அத்தியாம் 19-வது கவி.

### கேனோபநிஷத் தாத்பரியம்

“ இந்த வாக்கையில் இயம்பியபரம்
 பொருளறியின்
அந்த மானுடன் மெய்யதாய்
 அபேதமாகிய நித்
தொந்தமாம் பரமடைந்திடும்
 தோன்றிடா தாகிற்
பந்தமாம்பவக் கடற்படும்
 பரகதி யடையான் ” என்றும்,

### பாகவதம்

“ மானுடவாக்கை யென்னு
 மருவருந் தோணிபெற்றும்
ஊனமில் குரவன் சொல்லாம்
 ஓட முய்ப்பவனோடு எஞ்சி
ரானதோர் அநுகூலக்காலம்
 அனுகவும் பிறவி வேலை
தாமெனுழிதர வெண்ணுதான்
 றன்னையே கொல்கின்றானும் ” என்றும்,

" மடல்விரிந்த மரை மலர் வைகுவோன்
சடமனைத்தையுந் தந்து மூவந்திலன்
இடாறுக்கு மென்றெண்ணி நன்மாநுட
உடல் படைத்தபின் ஓகை யுற்றனரோ "

என்றும்,

சம்பந்த சுவாமிகள் தேவாரம்

" கள்ள நெஞ்ச வஞ்சக் கருத்தை
விட்டு அருத்தியோடு
உள்ள மொன்றி உள்குவர்
உளத்துளான் " என்றும்,

அப்பர் சுவாமிகள் தேவாரம்

" உடம்பெனு மனையகத்து
ளுள்ளமே தகளியாக
மடம்படுமுணர் நெய்யட்டி
யுயிரெனுந் திரிமயக்கி
யிடம்படுஞானத் தீயால்
எரிகொளவிருந்து நோக்கிற்
கடம்பமர் காளை தாதை
கழலடி காணலாமே" என்றும்,

திருவாசகம்

" மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள்
எழு பரஞ்சோதி," என்றும்,

" இரந்திரந்துருக என் மனத்துள்ளே
எழுகின்ற ஜோதியே," என்றும்,

" ஒப்புனக்கில்லா ஒருவனே அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே "
என்றும்,

சிவஞானவள்ளலார்

" மோகமெனுங் கடல் கடந்து முத்தி
யெனுங் கரைகாண்பான் முதிர்ந்தநாலாம்
பாகமெனும் மலர்கொண்டு பத்தி
யெனும் புனலாட்டிப் பரிந்து சாத்திச்
சோகமெனப் பாவித்துத் துரிய
மெனும் விளக்கேற்றிச் சோக நீங்கி
யாகமெனுங் கோயிலின்கண்ணறிவென்
னுங்கணபதிக்கே யன்பு செய்வோம் "

என்றும்,

" காயந் துவளாமற் கரண மசையாமல்
வாயும் பதையாமன் மாற்றியே-நேயத்
தறிவானந்தத்தி லழைக்கணம் நின்றாலும்
பிறவார் சிவனாணை பின் " என்றும்,

திருமந்திரம்

" சாத்திரமோதுஞ் சதிர்களை விட்டுநீர்
மாத்திரைப்போது மறித்துள்ளே
[நோக்குமின்
பார்த்தவிப் பார்வை பசுமரத்தாணி
[போல்
ஆர்த்த பிறவியகல விட்டோடுமே "
என்றும்,

" உடலாங் குகையி லுணர்வாகும் பீடத்
தடலாஞ் சமாதி யிதயத்ததாக
நடமாடிய குகை நாடிய யோகி
மிடையாகா வண்ணமே சாதிக்கு
[மெல்லவே " என்றும்,

திருக்குறள்

" ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒரு
[தலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு "
என்றும்,

பாடுதுறை

" சந்தமொன்றின்றி யிருக்கவேண்டுந்
தானே யழகியனுக வேண்டு
மிந்தவுடம்பிலே காணவேண்டும்
எங்குந்தானகி யிருக்கவேண்டும் "
என்றும்,

தாயுமானவர்

" விளங்கவெனக்குள்ளே விளங்காநின்ற
வேதகமே போதகமே விமலவாழ்வே "
என்றும்,

### பிரபுலிங்க லீலை

" குகையிதயம் அதன் கண் அமர் இறை
[யீசனென்று
பொருள் குறித்துக் கொண்மோ "
என்றும்,

" நினைவிறுலொருவன் செய்த நெஞ்சுள்
ஆலயமே யன்றி "என்றும்

" அறிந்த ஞானியக முறக்
காண்பதனுல் "என்றும்

### பட்டினத்துப் பிள்ளையார்

" இருக்கு மருதிலுக்குள்ளிமை
யோர்களு நான்மறையு
நெருக்கு நெருக்கத்து நீளகத்துச்
சென்று மீள வொட்டாத்
திருக்கு மறுத்தைவர் தீமையுந்
தீர்த்துச் செவ்வே மனத்தை
யொருக்கு மொருக்கத்திலுள்ளே
முளைக்கின்ற வொண்சுடரே" என்றும்,

### பத்திரிகிரியார் (கண்ணி)

" அமையா மனதமையும்
ஆனந்த வீடுகண்டால்
இமையாமனேக்கி
யிருப்பதினி யெக்காலம்"என்றும்,

" ஆங்காரமு மடக்கி ஐம்புலனைச்
சுட்டறுத்துத்
தூக்காமற் றூங்கிச் சுகம் பெறுவ
தெக்காலம் "என்றும்,

### தேவிகாலோத்தரம்

" மருவிய பொருண்மே லன்பாய்
வானரம் போற் சரித்துத்
திரியும்அச் சித்தந் தன்னைத்
திருத்திச் சூனியத்தே நின்றுல்
மருவினேர் பிரிதலின்றி
வானவர் அறிவுக் கெட்டாப்
பொருவிலா நித்தசுத்தப் பொருளினை
யடைவ ரன்றே, " என்றும்,

### கந்தரலங்காரம்

" ஆங்காரமு மடங்கார் ஒடுங்கார்
பரமா நந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறூர்
தினைப் போதளவு
மோங்காரத் துள்ளொளிக்குள்ளே
முருகனுருக் கண்டு " என்றும்,

### திருவாய்மொழி

" உணர்ந்துணர்ந்தி ழிந்த கன்
றுயர்ந்துரு வியந்த இந் நிலைமை
உணர்ந் துணர்ந்து ணரினு மிறை
நிலே யுணர்வரி துயிர்காள்
உணர்ந்துணர்ந் துரைத் துரைத்து
அரியயனர னென்னு மிவரை
உணர்ந்துணர்ந் துரைத் துரைத்து
இறைஞ்சு மின் மனப்
பட்டதொன்றே, " என்றும்,

### ஸ்ரீ ஞானவாசிட்டம்

" அகமகமென்று அனைத்துயிரினிடத்து
மிருந்துஅன வரத முரைப்பதாகி
நிகழொளியாய் ஆன்ம தத்துவமான
சொரூபத்தை நினைத்தல் செய்வான்
திகழிதய குகையுறையுந் தேவதையை
விட்டயலே தெய்வந்தேடல்
மிகவரிய கவுத்துவத்தை யெறிந்து
சிறுமணிதேடும் வேட்கை
போலாம், " என்றும்,

### கைவல்லியம்

" அசத்தில் எம்மட்டுண்டு அம்மட்டும்
பராமுகமாகினுய் அம்மட்டும்
நிசத்தில் உள் விழிப்பார்வையாய்
இப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தில் உன் மனநின்று சின்
மாத்திர வடிவமாகிடின் மைந்தா
சுசத்த தேகத்திருக்கினும் ஆநந்தக்
கடல் வடிவாவாயே " என்றும்,

வைராக்கிய சதகம்

"கண்டவைம் புலக் காட்சிபோய்க்
காட்சியாற் கலந்தவாதனை யாவும்
விண்டு மூடமற்றலை யிலாக் கடலென
விளங்கினை யெனில் நெஞ்சே
யுண்டு கொன்னமக் கொருதுயராங்கு
வீடுளங்கையிற் கனியே யாம்
பண்டைமேவிய பயமெலா மறுங்
குரு பதத்திலும் புகலாமே" என்றும்,

அவிரோத வுந்தியார்

"அசைவறச் சித்தமடங்குமேற் பின்ன
ரசையாமற் காத்திடெனுந்தீபற
அறிவால் வருந்தியு முந்தீபற"
என்றும்,

சசிவர்ண போதம்

"வினவிற் பரத்தை யறிவுறுதற்
கவத்தை புலன் வினைமாறியே
நனவிற் சுழுப்தி நிலைவரினப்
பொருட்டி கழுநலனுகவே" என்றும்,

குறுந்திரட்டு

"அண்டம் எண்திக்கு எங்கணும்
அடங்கச் சூனியமதாகக்
கண்டு கொண்டிருக்கக் கண்ட
கருத்தையும் அறவே விட்டால்
அண்டம் எண்டிக்கு எங்கணுமாய்
நின்ற ஆநந்தத்தைக்
கண்டு கொண்டிருக்கும் வண்ணங்
கணத்தில் வந்து உதிக்குமன்றே"
என்றும்,

அஞ்ஞவதைப் பரணி

"ஒழித்தேயுள்ள முணர்வடைய
வொழியா வொருவன் வருமளவும்
விழித்தேயுறங்கும் விளங்கிழையீர்
மேவுங் கபாடந்திறமினோ" என்றும்,

கடவுளந்தாதி

"சுழிமுனை வட்டச் சுழிமுனை
யுச்சித் துவாரத்திலே
வழிபயமென்று மலைப்பர்களோ
மடைக் கொக்கதுபோல்
தெளிவுறு பார்வை யசையாது
சிற்றடி தூக்கிநின்று
விழியிமை யாது ஒளிபார்த்தூடுருவ
[வெளிப்படுமே" என்றும்,

சௌந்தரிய அந்தாதி

"உமையே மூலத்துறைந்த
பொருளுணர்ந்தே சுழியின் முனைதிறந்து
இமையோர் அறிய அரிததாகும்
எந்தாய் உனது பதங்கருதி
நிமையா நாட்டத்துடன், காலை
நீட்டி முடக்கி நிலைபுகுந்து
தமையேயுணருந் தரமருளுந் தாயே
அமலன் றனி வாழ்வே" என்றும்,

மோகவதைப் பரணி

"ஆங்குணராமையு முணர்வு
மாகிய கோளறவிருந்து
தூங்கினர்காண் சுகமடைவார்
சும்மேலோ சும்முலக்காய்" என்றும்,

மௌன தரிசனம்

"அருமையென்ற மௌனத்தை மூட்டும்
அடங்காத காரணமடைந்து மடங்கிப்
[போகும்
இருமையென்ற விந்திரிய மாண்டு
போகும் இருள்மலம்போம் திரோதை
[யில்லை மயக்கம் நீங்கும்
வெருவு பலகோடி கன்மங்கணத்தில்
நீங்கும் வெளியிலுள்ளே யொளிதோன்
[றும் நாதங் கேட்கும்
உரிமையுடன் மௌன சித்தியாக வாக
உருவம் உனக்கு ஆனந்த வுருவமாமே"
என்றும்,

சிவஞான சித்தியார்

அறியாமை யறிவகற்றியறி வினுள்ளே
யறிவுதனை யருளினலறியாதேயறிந்து
குறியாதே குறித்தக் கரணங்களோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை
[யாகிற்

பிரியாத சிவன்றனே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாந் தானய்த்
[தோன்றி
நெறியாலேயவை யெல்லாமல்ல வாகியின்
றென்றுந் தோன்றிடுவன் நிராதார
[னயே" என்றும்,

பிரத்தியக்ஷானுபூதி விளக்கம்

" இதயம் பரமா இலங்கிடக்கண்டு
அடங்கிது வதுவென்
றெதுங் கிடக்கண்டிலன் நான்அய
லென்பது உறுவதுண்டோ
மதியாதி சிற்சடப்பேதப்
பகுதிகள் வாழ்வதுண்டோ
எதுவுந்தனையன்றிக் காணமற்
போக இருந்தனனே" என்றும்,

ஞான சூரியன்

" சாக்கிர சொப்பனங்களிரண்டையுந்
தாண்டிப் போனற்
சூக்குமமாஞ் சுழுத்திவந்து
தொல்லிருளாகி மூடும்
ஆக்கமுமழிவு மல்லா
தறிவினலதுவும் போனற்
போக்கொடுவரவு மில்லாப்
பூரணப்பொருள் வந்தெய்தும்"
என்றும்,

உபதேச வுண்மை

" எல்லாமறிந்த குருநாதா வென்னை
யிழந்து முனை விடுத்தும்
பொல்லாவுடலை நாமெனன்றும்
புகழ்ந்தே யிங்காளழுத தெல்லாம்
நல்லாயிந்த நினைவினலென்றே
ஞான சாதனத்தில்
கல்லாப் புலையேனுள்ளபடி கண்டேன்
கண்டேன் கண்டேனே" என்றும்,

திருவம்மானை

" உற்ற மறப்பு நினைப்
பற்றேன் காணம்மானை
போவாத சித்தத்தே போத்தேன்
காணம்மானை" என்றும்,

அமிர்தசாரம் (வெண்பா)

" போக்கு மனனெருக்கிப்
போத மங்கில்லாமை
நோக்கிய நோக்காலந்
நோக்கந்தை—நோக்கென்றன்
றேன்றுத வண்ணம் போய்த்
தாஞ்சிற்றிரு ளறிவாச்
சான்றாகி நின்றேனென்றான்" என்றும்,

முத்தி முடிவு

" ஒரு பொருள் நினைவு போய்ப்பின்
னெரு பொருளினையு முன்னய்
மருவிடை வெளியிலேயுன்
மனமிலை யாகையாலே
சொரூப நீதானய்த் தோன்றுந்
துலைமனங் கொண்டங் குன்னில்
ஒருதிரிபுடியு முண்டா யொழியு
மச்சொரூபமென்றும்" என்றும்,

" அலையுமனத்தை யகத்தடக்கு மவனே
சரியை கடந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே
கிரியை முடிந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே
யோக தற்பரனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே
ஞானியதி சூரன்" என்றும்,

" அடக்கிக் கருத்தின் அலைவு அறுப்
போன் அவனே சகலதியாகியாம்
அடக்கிக் கருத்தின் அலைவு அறுப்
போன் அவனே பொன்றுப் பொரு
[ளுடையோன்
அடக்கிக் கருத்தின் அலைவு அறுப்
போன் அவன் பேரின்ப அநுபவியாம்
அடக்கிக் கருத்தின் அலைவு அறுப்
போன் அவன் வீட்டின்பம் அடை
[பவனே" என்றும்,

ஔவை குறள்

'உடம்பினைப் பெற்ற பயனவ தெல்லாம்,
உடம்பினி லுத்தமனைக் காண்" என்றும்,

" உணர்வாவ தெல்லா முடம்பின் பயனே
யுணர்க வுணர் வுடையார்," என்றும்,
" மாசற்ற கொள்கை மனத்திலடைந்தக் [கால்
ஈசனைக் காட்டு முடம்பு," என்றும்,
" உயிர்க்குறுதி யெல்லா முடம்பின் [பயனே
அயிர்ப்பின்றி யாதியை நாடு" என்றும்
" உடம்பினாற் பெற்ற பயனாவ தெல்லாம்
திடம்பட வீசனைத்தேடு," என்றும்,
" யாக்கையே ஆண்டவன் உறைவிடம்,"
என்றும்,
" பக்தர் உள்ளமே பகவன் விரும்பி
வதியுந் திருக்கோயில் " என்றும்,
" உடம்பில்தான் அப்பரஞ்சோதி "
என்றும், ஆன்றோர் கூறுவர்.

பெரியோர்கள் (மஹான்கள்) ஆதி காலத்தில் ஆலயங்களை (கோவில்களை) நிர்மாணித்து மூன்று பிரகாரங்களும் (மதில்களும்) மூன்று வாசற்படிகளும், ஐந்து பிரகாரங்களும் ஐந்து வாசற்படிகளும் அமைத்திருப்பதற்கும், முதல் வாசற்கால்கள் பெரியவையாயும், உள்ளிருப்ப வெல்லாம் முதல்வாசற்கால்களுக்குச் சிறியவைகளாகவும் வைத்திருப்பதற்கும் காரணம் என்னையோவெனின் :—மூன்று பிரகாரங்களையும், ஐந்து பிரகாரங்களையுங் கடந்து சென்றால் தான் பரமசிவத்தையோ, பரம விஷ்ணுவையோ நேரில் தரிசிக்க முடியும். அதுபோலவே தூலதேகம், சூக்ஷும தேகம், காரணதேகம். அல்லது அன்ன மயகோசம், பிராணமயகோசம் மனோமய கோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்த மயகோசம் இவைகளை சுருதி, யுக்தி, அனுபவங்களால் ஆத்மா அல்ல, ஆத்மா அல்ல என்று திடமாக விசாரணை செய்தால் ஆத்மா அபரோக்ஷமாக (நேரில்) விளங்கும்.

ஈசுவரானுக்கிரக காரணமாய் அருமையான மனுஷ்யத்தன்மை, முமுக்ஷுத் தன்மை, (ஞான விருப்பம்) மகாத்மாக்களின் கிருபை (குரு சேவை) இம் மூன்றும் கிடைக்கின் மோக்ஷமடைய இவையே போதுமென்பது ஆன்றோர் துணிபு. ஆகையால் அருமையாகக் கிடைத்ததும், துக்கமே இயற்கையாயுள்ளதுமான இந்த மாநுட சரீரம் நன்றாக இருக்கிற காலத்திலேயே சாது சங்கத்தை யடைந்து, பஞ்சகோச விசாரணை (ஆன்மாவினது ஐந்து மறைப்பின் ஆராய்ச்சி) செய்து ஞானம் பெற்றுச் சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய பெருவாழ்வை யடைய முற்படுவோமாக.

ஓம் தத் ஸத்.

சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!

---

# பணிவும் சாந்தமும் அமைந்த நெறி

(சகோதரி தேவமாதா அம்மையார்)

மலைமேற் செய்த ஹிதோபதேசத்தில், "பணிவுடையார் பாக்கியவான்களாவார். ஏனெனில் அவர்கள் பூலோகத்தை உரிமையாகப் பெறுவர்" என்று சொல்லப்பட்டுள்ளது (இயேசு நாதரால்). அதற்கு ஆறு நூற்றாண்டுகட்கு முன்பே சைன தேசத்து மஹரிஷியான லேயோட்ஸி என்பார் பின்வருமாறு கூறினார். "சாந்தம் போரிலும் வெற்றி பெறுவது உறுதி; வேறொன்று எதிர்த்து நிற்கும்போதும் தன் நிலையை உறுதியோடு அது பாதுகாத்துக் கொள்ளும். இக் குணம் உள்ளவனை அக் குணமே காப்பாற்றும்படி இறைவன் அருளுவான்." தாமஸ் அ கெம்பிஸ் என்னும் மஹான், "மிகத் தாழ்ந்த இடத்தில் உன்னை வைத்துக்கொள்; மிக உயர்ந்த இடம் உனக்குக் கொடுக்கப்படும்" என்று எழுதுகிறார். காலம் தோன்றிய அன்று முதலே, பூமியை உரிமையாகப் பெறும் பொருட்டு மக்கள் பாடுபட்டுள்ளனர். ஆனாலும் சாந்தகுணமாகிய நெறியைச் சோதிக்க முயன்றவர்கள் மிகச்சிலரே. அந் நெறியைப் பின்பற்ற முயன்றுள்ளவர்கள் மக்களுலகத்தில் மிக உயர்ந்த தீபங்களாக விளங்கி வருகின்றனர். புத்தர், இயேசுநாதர், பிரான்ஸிஸ் மஹான், ஸ்ரீ ராமகிருஷ்ணர்—சக்தியிலும் அதிகாரத்திலும் ஸாம்ராஜ்யத்தை நிலை நாட்டினவனாயினும் சரி, படைகளின் வலிமையால் வெற்றி பெற்றவனாயினும் சரி, எவன்தான் இப்பெருந் தீரர்களையும் இவர்களைப் போன்ற பிறரையும் மிஞ்சக்கூடும்! இவர்களைப் பின்பற்றியவர்கள் உலகமுழுதும் வாழ்ந்து வருகின்றனர்; இவர்களது குரல்கள், அடங்கியிருப்பினும், இன்று ஒவ்வொரு நாட்டிலும் கேட்கப்படுகின்றன.

பலாத்காரம் சாந்தம் என்னும் இரு வகை முயற்சிகட்கும் உள்ள வேறுபாடுகள் அடிப்படையான வேறுபாடுகளாம். ஒன்றுக்கொன்று முற்றிலும் வேறுபட்ட நிலங்களில் வேலை செய்கின்றன. தனது காரியங்களை முடித்துக் கொள்ளும் பொருட்டு பலாத்கார முறையைப் பின்பற்றுபவன் அண்ட முழுதும் பரந்துள்ள சக்தியின் மிகக் கேவலமான பகுதியைப் பயன் படுத்திக் கொள்கிறான்; அன்றியும் அப்பகுதி மிக்க நாசத்தை உண்டு பண்ணக்கூடியதாய், பலாத்காரத்தை உபயோகிப்பவனுக்கும் அதற்கு உட்படுகிறவனுக்கும் ஒருங்கே நாசம் விளைவிப்பதாய் அமைகிறது. இயற்கை, வேறுபாடு காட்டுவதில்லை. ஒரே முழுமையாகிய அண்டத்தில் ஒரு குழப்பத்தை உண்டு பண்ணும் போது, பாதுகாத்துக் கொள்பவனுக்கு எவ்வளவு ஆபத்தோ, அவ்வளவு ஆபத்து பலாத்காரமாக எதிர்ப்பவனுக்கும் உண்டு; கடைசியாகக் கணக்கை முடித்துப் பார்க்கும் போது, தோல்வி எய்தியவனுக்கு நேரும் நஷ்டம் எவ்வளவோ, அவ்வளவும் வெற்றி பெற்றவனுக்கும் உண்டு. அண்ட முழுவதையும் பற்றிய மொத்த நிகழ்ச்சிகளைப்பற்றி மதிப்பிடும்போது, ஜெயமும் தோல்வியும் எடைப்படிகளாகக் கருதப் படமாட்டா. எது விளைந்தாலும், வாளால் உயிர் வாழ்பவர் வாளால் மரணமடைவார்; ஒழுக்கம் ஞானம் இவைகள் சம்பந்தமாக

மதிப்பிடும்போது, அவர்களுடைய லாபங்கள் நஷ்டங்களேயாம். இது போரில் மட்டும் உண்மை யென்பதல்ல, எல்லா வாக்கு வாதத்திலும் சண்டையிலும் உண்மையாகும்.

பலாத்காரச் செயல் வெற்றி பெறுவது போலத் தோன்றும்; ஆனால் அது சமயத்திற்கு மட்டும் தான். உலக சம்பந்தமான புகழ் வாடிவிடும்; உலக சம்பந்தமான லாபங்கள் குறைந்து போய்விடும். படைக்கப்பட்டுள்ள பொருள்கள் எல்லாம், ஓயாது ஆவியாகிக் கொண்டே வருகின்றன; இதை எதுவும் தடுக்க முடியாது. அவைகள் யாவும் மெதுவாகவும் ஈவு இரக்க மில்லாமலும் சுருங்கிக் கரைந்து போய்க் கொண்டே இருக்கின்றன. ஆயினும், அனுபவம் மிகுதியாக எஞ்சுகின்றது; இவ்வனுபவம் புதிதாகப் பிறந்த சாந்தமாகவும் பணிவாகவும் வெளிப்படுகிறது. "பரிசுத்தமான கீழ்ப்படிதல்" என்னும் பொருளைப் பற்றிய ஒரு மிகச் சிறந்த பிரசங்கத்தில் தமாஸ் கெல்லி என்னும் பெரியார் பின்வரும் பலந்தரும் மொழிகளைக் கூறியுள்ளார். "உலகத்தின் வலிமையால் ஏமாற்றம் அடையாதே. போர், ஸாம்ராஜ்ய வலிமை, பேராசை யென்பவைகளால் விளையும் ஏற்பாடுகள் புகழத் தக்கவையாயினும், அவை எதிர்ப்புக்கு உடையாது நிற்கும் வன்மை சிறிதும் வாய்ந்தனவல்ல; ஏனெனில் அவைகளும் நாமும், அனைத்தையும் வெற்றி கொண்டு ஆட்டுவிக்கும் இறைவனது கைப் பொருள்களே யாவோம்." இம்மொழிகள் விலைமலிந்தனவும் தீர்க்காலோசனை இல்லாது எழுந்தனவும் ஆன மொழிகள் அல்ல. நம்பிக்கையின் உதவியைக் கொண்டு இயற்றும் மேன்மை வாய்ந்த உயர்வுற்ற தீரச் செயல்களெல்லாம், உண்மை யொளி விளங்கும் சமயங்களில், தீரச்செயல்களாகவே தோன்ற மாட்டா; உறுதியான உண்மை நிகழ்ச்சிகளாகவே தோன்றும். இறைவனிடத்துப் பெறும் பணிவோடு வாழ்வோமாயின் நாம் வேலை செய்யும்போதே மிக்க பொறுமையோடும் உறுதியான நம்பிக்கையோடும் மகிழ்ச்சி கொள்ளலாம். இறைவனைச் சேர்ந்த அற்ப முட்டாளாகும்படி நீ போதிய ஞானமும் பணிவும் உடையனாவாயா? யார் இறைவனது சக்தியை எதிர்த்து நிற்கமுடியும்? அவரது அன்பின் தூண்டுதலுக்கு வசப்படாமலிருக்க யார்க்கு இயலும்? அகஸ்டைன் என்னும் மஹான் 'பணிவுடைமை யென்னும் பண்பினில் அமைந்து யாதோ ஒன்று நெஞ்சை மேல் நோக்கி உயர்த்துகின்றது, என்கிறார்;' அது உண்மையே.

ஆயினும் நமது பணிவு நம்மைத் தாழ்வாகக் கருதுவதினின்றும் எழக்கூடாது; இறைவனது மேன்மையைப் பற்றி எழும் அச்சத்தினின்றும் நமது பணிவு தோன்றவேண்டும். இறைவனது வல்லமையை அது ஆதாரமாகக் கொள்ள வேண்டும். நமது அற்பத்தனத்தை ஆதாரமாகக் கொள்ளக்கூடாது. நமது காட்சி மேல் நோக்கியதாக வேண்டும். கீழ் நோக்கியதாகக்கூடாது. பணிவுடையவன் பிறரிடமுள்ள மிக உயர்ந்த ஒன்றையே காண்கிறான். தன்னை மறக்கிறான். தற்புகழ்ச்சியில் எவ்வளவு ஆணவத்தால் எழும் பெருமை உண்டோ அவ்வளவு பெருமையும் தன்னை இகழ்ந்து கொள்ளுவதிலும் உண்டு. இகழ்தற்காகவோ புகழ்வதற்காகவோ நம்மைப்பற்றி நாம் உண்மையான பணிவோடிருத்தல் இயலாது. ஆணவமும் பணிவும் ஒரே நெஞ்சில் ஒருங்கே கூடிவாழ ஒண்ணாது; ஒன்று மற்றொன்றை வலியற்றதாக்கி அழித்துவிடும்.

மனிதனுடைய பணிவு எவ்வளவுக்கு ஆழ்ந்து எழுகிறதோ அதே அளவுக்கு அவனது ஒழுக்கமேன்மையும் உயரும்; அச்சமின்மையும் மிகும். அவனது அச்சமின்மைக்குக் காரணம் அனைத்தையும் வெல்லும் இறைவனை மிகநெருங்கி அவன் வாழ்தலேயாம். இதனால், மிக்க வலிமையுள்ள கவசத்தையும் துளைத்துக்கொண்டு போகக்கூடியதும், மிக்க கூர்மையான படைக்கலத்தையும் மழுங்கச் செய்யக் கூடியதுமான ஒரு சக்தி அவன்வசமுள்ளதாகின்றது. இந்தச் சக்தி உலகசம்பந்தமான வலிமையின் சக்தியன்று. அதனினும் நுண்ணியதும், பிறரால் பற்றற்கரியதுமான ஒரு சக்தியாகும். அடிக்க வருபவனிடம் ஒரு சாந்தத்தை உண்டு பண்ணி, அடிக்கும் திறனை ஒழித்து அடியைத் தடுத்துவிடுகிறது. ஒரு மனிதனுடைய உயர்ந்த இயல்பினை நேராக அது தூண்டுதலின், அதனினும் மிக்க பாதுகாப்பையும் நிச்சயத்தையும் அளிக்கக் கூடியது வேறில்லை. ஒரு கன்னியர் மடத்தைச் சார்ந்த துறவு பூண்ட மாதர் இலங்தன்மா என்னும் நகரத்திலுள்ள மிக இழிந்த மக்களுடைய உறைவிடங்கள் வழியாக யாதொரு அபாயமுமின்றி நடு இரவிலும் செல்கின்றனர் என்பர்; அவர்கள் செல்லும்போது மிக்க குடிவெறியில் மதி மயங்கியுள்ளவனும் அவர்களுக்கு வழிவிட்டுவிலகிச் செல்வானும். திடீரென இந்தத்தாழ்ந்த மக்களிடத்துப் பயபக்தியை எழுப்புவது, கன்னியர் மடத்தார் அணிந்துவரும் முக்காட்டிலிருந்து மடத்தைச் சார்ந்தவர் என்று அறியும் அறிவல்ல. கெட்ட சிந்தையராயுள்ள அக் கூட்டத்தார்க்கு மத்தியிலும் அவ்வளவு அமைதியாகவும் அச்சமின்றியும் உலவும் அந்த சாந்தகுண பூஷணிகளின் நெஞ்சங்களிலுள்ள அன்பே அவர்கள்மீது பயபக்தியை விளைவிக்கிறது.

தாழ்மையும் சாந்தமும் இரட்டைக் குணங்களாதலின், அவையிரண்டும் வருவதும் போவதும் ஒன்றாகத்தான். இரண்டும் ஞான வாழ்க்கைக்கும் நமது நித்திய வாழ்க்கையில் பலரோடும் பழகுதற்கும் இன்றியமையாதவையாகும். உத்தமமான முறையில் வளர்க்கப்பட்டு வந்தமைக்கு அவை அறிகுறிகளாகும். முற்காலத்தில் சீமான்களும் சீமாட்டிகளும் சாந்தமாகிய செல்வமுடையவராய் விளங்கினர். சீன தேசத்துப் பெரியார் ஒருவருடைய கருத்துப்படி, முற்கூறிய குணங்கள் இரண்டும் உண்மையான ஞானத்திற்கும் அறிகுறிகளாயிருந்தன. "ஞானியினிடத்துத்தான் ஒளி வீசவேண்டும் என்னும் ஆசையின்மையால், தன்னைச்சுற்றி எல்லாவிடத்தும் அவன் பிரகாசமான ஒளியை வீசுகிறான்; தனது மேன்மையை வற்புறுத்தும் இயல்பினின்றும் அவன் நீங்கியிருத்தலால், அவன் மேன்மையை எய்துகிறான்; அவன் தன் பெருமையைக்கூறாததினால், அவனது பெருமை அனைவராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. தனக்குத் திருப்தி என்பதை அவன் நாடாமையால், அவனது முயற்சி நிலையுள்ளதாகிறது; அவன் வழக்கிடாதவனாகையால், உலகத்தில் எவனும் அவனோடு வாதாடும் திறமையற்றவனாகின்றான்" என்று ஒரு ஞானநூல் கூறுகின்றது. தற்பெருமை பாராட்டியும் தான் எனும் நினைவைவற்புறுத்தியும் வரும் மனிதன் கூச்சலிடுபவனும் போராடுபவனும் தன்னையே நடு நாயகமாகக் கருதுபவனும் இருக்கிறான். அவன் தன்னைப் பிறர் திருத்த முயல்வதையும் தனக்குப் பிறர் புத்திமதி கூறுவதையும் பொறான்; அவன் தனது உரிமைகளைப் பாதுகாப்பதற்காகவும், தனது உடைமைகளைப் பெருக்குவதற்காகவும் சதா போராடி வருகின்றான். இதற்கு மாறாக, தாழ்மையுள்ள மனி

நமேறு, தனது உரிமைகளைப் பற்றிச் சிறிதும் பொருட்படுத்துவதில்லை; அமைதியும் மேன்மையும் வாய்ந்த ஒழுக்கத்தைப் பேறுவதற்கும், அகத்தே தன்னோடும், புறத்தே மற்றெல்லாரோடும் சமாதானமாக வாழ்வதற்கும், அவன் தனது முழு நினைவையும் செலுத்தி வருவான்.

பழங்காலத்திய பிரார்த்தனைப் புத்தகம் ஒன்றில், "நெஞ்சில் தாழ்மையும் மேன்மையும் குடிகொண்டவர்களிடத்தேதான் எனது சாந்தி காணப்படும்" என்று எழுதப்பட்டுள்ளது. மென்மையார்ந்த நெஞ்சில் உண்டாகும் இந்த சமாதானம் மேலாக எழும் நிலையற்ற ஒரு குணமன்று. தாழ்மைக் குணம் பிறக்கும் ஆழ்ந்த பிரதேசங்களிலிருந்தே சாந்தமும் பிறக்கின்றது; அதாவது, தாழ்மையும் விசுவாசமும் உண்டாகின்றன. இங்குக் காணப்படும் விசுவாசமாவது, ஒரு கொள்கையிலோ மதப் பிரிவிலோ கிரியையிலோ ஒருவர்க்கு உள்ள நம்பிக்கையன்று. "அனைத்தையும் வெல்லும் இறைவனிடத்து"க் கொள்ளும் நம்பிக்கையேயாகும். நம்மினும் பெரு வலிபடைத்த ஒரு சக்தியினிடத்து நமக்கு நம்பிக்கை இல்லையேல், நாம் சாந்தமாயிருக்க முடியாது.

எல்லாத் தாழ்மைக்கும் சாந்தத்திற்கும் அச்சமின்மைக்கும் அடிப்படையாயிருப்பது நம்பிக்கையேயாம். நமது மிக உயர்ந்த இயல்பு இதன் மீது தாங்கப்படுகின்றது; நமது மிக உயர்ந்த கிளர்ச்சிகள் அதனிடமிருந்தே பிறக்கின்றன. நம்பிக்கை இல்லாமல் நமது வாழ்க்கைக்கு ஆதாரமும் இல்லை, உறுதியான நிலையும் கிடையாது. பரம்பொருளின் வல்லமையின் மீதும் பாதுகாக்கும் திறனின் மீதும் நமக்கு நம்பிக்கை ஆழ்ந்து செல்லுமாயின், நமது நெஞ்சு மிக்க தாழ்மையை அடைகிறது; நமது இயல்பு மிக்க அமைதியை எய்துகிறது; நாம் அதன் பின் முயற்சி செய்வதுமில்லை, பிறரது மனத்தைப் புண் படுத்துவது மில்லை. அதோடு நின்றுவிடாமல், மேலும், "தீபங்கள் மங்கிய ஒளியுடையனவாயும், நக்ஷத்திரங்களும் திரிவனவாயும் உள்ள ஓர் உலகத்தில்" மெதுவாக மென்மையாக நாம் நடத்தல் வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, உலக மக்களுடைய புண்களை ஆற்றவும், அவர்கட்குள் உண்டாகும் சண்டையைக் குறைக்கவும் நாம் முயற்சித்தல் வேண்டும்.

---

## பிழை திருத்தம்

தைமாதத்தில் வெளிவந்த 'அருச்சனை மலர்' என்ற பாட்டில் இரண்டு எழுத்துப் பிழைகள் இருக்கின்றன. அப் பிழைகளும் திருத்தங்களும் பின் வருமாறு :

44-ம் வரி பிழை 'மல்லரும்பாகி' — திருத்தம் 'மெல்லரும்பாகி'

50-ம் வரி ,, 'என்னும்' — ,, 'என்றும்'

# சந்தேகம் தெளிதல்

வினா:—கிருஷ்ணன் ஆயர்பாடியில் இருக்கும் காலத்தில் வெண்ணெய் திருடியதன் மர்மம் என்ன? கோபிகைகள் ஸ்நானஞ் செய்யும்போது, அவர்களுடைய உடையை அபகரித்துக் கொண்டு மரத்தின்மேலேறிப் புல்லாங்குழல் வாசிப்பதன் மர்மம் என்ன? S. ம. ம.

விடை:—யாரேனும் ஒருவர் செய்யும் செயலின் உட்கருத்தைப் பிழையற அறிய வேண்டுமாயின், அச்செயலைச்செய்பவரது குணத்தையும் மன நிலையையும் நன்கு அறிதல் வேண்டும். ஒரே செயல் இருவரால் செய்யப்படும்போதும், ஒன்று அறச் செயலாகலாம், மற்றவரது செயல் அறமற்ற செயலாகலாம். அருச்சுனன் போர் புரியப் பின்வாங்கியது முறையற்றது என்பதைக் கண்ணபிரான் பலவாறு வற்புறுத்திக் கூறினார். அது அறச் செயலன்று என்பதையும், போர் புரிதலே அறமாகும் என்பதையும் முடிவில் அர்ச்சுனன் உணர்ந்தான். ஆனால் உலகமுயற்சிகளை விட்டொழித்து துறவறம் பூண்ட பெரியார் பலர் நம் நாட்டில் உள்ளனர். பட்டினத்தார் போன்ற பெரியார்களின் செயலை அனைவரும் புகழ்ந்து போற்றுகின்றனர். ஆதலின் ஒரு செயலின் முறைமையும் முறைமையின்மையும் அதனைச் செய்வாரது மன நிலையைப் பொருத்ததாகும் என்பது அறியப்படுகின்றது. அநீதியின் உருவாயிருந்த இராவணனை நீத்து வந்து இராமனைச் சார்ந்து, அவரோடு இணங்கி இராவணனோடும் போர் புரிந்த விபீடணனது செயலை அறிஞர் போற்றுகின்றனர். ஆனால் அநீதியின் உருவேயான துரியோதனனை வெறுத்து வாராது, அவனதுசெயல் அதர்மம் என்பதை அறிந்தும் அவனுடைய பக்கத்திலேயே நின்று பஞ்ச பாண்டவரை எதிர்த்துப்போர் புரிந்து, "செஞ்சோற்றுக் கடன்" கழித்த பீஷ்மரதுசெயலையும் அறிஞர்போற்றுகின்றனர். ஆடையின்றிப் பொய்கையிலே நீராடிய மாதர் சிலர், காளைப் பருவத்தினராய சுகர் தம்மருகே செல்லும்போது நீராடிக்கொண்டிருந்தனரேனும், நரை முதிர் கிழவராகிய வியாசர் அருகே வந்ததும், ஆடைகளைப் பரபரப்போடு அணிந்தனர் என்ப; இன்னும் வியாசர் அம்மாதர்களை அச்செயலின் காரணத்தை வினவியபோது, "ஆண் பெண் என்னும் வேறுபாடு நினக்கு உண்டு, அவனுக்கு இல்லை" யென்று விடையளித்தனர். ஆக, ஒரு செயலின் தகுதி அதைப் புரிவாரது மன நிலையால் ஆராயப்படுதல் வேண்டும் என்பதாயிற்று.

இன்னொன்று, ஒரு கவியின் உள்ளத்தை அறிய மற்றொரு கவியே வேண்டும்; பாம்பின் காலைப் பாம்பே அறியும் என்பர். பொல்லாரது செயலில் அடங்கிய உட்கருத்தைப் பொல்லாரே நன்கறிவர். அதுபோல, நல்லோரது செயலை உள்ளவாறு அறியும்திறமை நல்லோர்க்கே வாய்க்கும். ஆதலின் கண்ணபிரானது தெய்வத் தன்மையார்ந்த செயலைத் தெய்வத்தன்மை வாய்ந்த மனிதரே முற்றும் அறிய இயலும். கண்ணபிரான் இறைவனது அவதாரம் என்பது நூல்களால் தெளியப்படுகின்றது. கண்ணபிரான் அவதாரத்தின் இயல்பைப் பற்றிக் கூறுமிடத்து, "ஜென்ம கர்மசமேதிவ்யம்" என்றார். அதாவது, "என்னுடைய பிறப்பும் செயலும் (ஒவ்வொரு செயலும்) தெய்வத்தன்மை வாய்ந்தவை" என்றார்.

இன்னும், "அவை தெய்வத்தன்மை வாய்ந்தவை என்பதை உணர்பவன், இறந்தபின் மீண்டும் பிறப்படையான், என்னையே அடைவான்" என்றும் கூறியதும் சிந்திக்கத் தக்கது. கண்ணபிரானது செயல்களைக் கூறுபவர் சிற்றின்பம் என்பதை எள்ளளவும் உணராத சுகர் என்னும் இருடியர்; அவர் தாம் அச்செயல்களை நினைந்தும் உரைத்தும் பேரின்ப மெய்தியதோடு அத் திவ்வியச் செயல்களைக் கேட்டு பரீக்ஷித்து என்னும் அரசன் அந்திம காலத்தில் உய்வடையும் பொருட்டுக் கூறினர் என்பதும் கருதத் தக்கது. இன்னும், கண்ணனது செயல்களைக் கூறும் பாகவதம் என்னும் நூலே அக் கோபியரது பிறப்பைப்பற்றிய ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறது. அது யாதெனில், ஸ்ரீ ராமாவதாரத்து அவரது வடிவழகில் ஈடுபட்டுப் பெண் தன்மையை எய்திய தண்டகாரணிய முனிவர்களே மறு பிறப்பில் கோபிகைகளாகத் தோன்றினர் என்பது; அன்றியும், கண்ணபிரான் தமது உலக வாழ்க்கையை முடித்துச் செல்லும்போது, அருச்சுனனிடம் ஒப்புவிக்கப்பட்ட கோபிமார் அனைவரும் தண்டு கமண்டலங்களுடன் கூடிய (தண்டகாரணிய) முனிவர்களாக மாறி விட்டதாகவும் பாகவதம் கூறுகின்றது; இவ்வுரைகளும் ஊன்றி நினைக்கத்தக்கவையாம்.

இறைவன் மக்களது கண்ணிற்குப் புலப்படும்படியான வடிவெடுத்து வருங் காலத்து அவனது திருமேனியின் அழகு அதனைக் கண்டாரது உள்ளத்தைச் சிறைப்படுத்தும் தன்மையதாகின்றது; அதன் அழகுக்கும் கவர்ச்சிக்கும் ஆடவரும் வசப்படுவர் என்னும்போது, மாதர் அவ் வலைக்கண்படுவர் என்பது கூறாமலே விளங்கும். 'பும்ஸாம் திருஷ்டி சித்த அபஹாரிணம்' (ஆடவர்களது கண்ணையும் மனத்தையும் கொள்ளை கொள்ளும் தன்மையது) என்று வருணிக்கப்பட்டுள்ள ஸ்ரீ ராமபிரானது திவ்விய வடிவழகினில் ஈடுபட்டவர்கள், பெண்களாய் உலகிற் பிறந்துள்ளபோது, கண்ணபிரானைக் கண்டதும் அவர்கள் காதற் கடலுள் அழுந்தியது ஆச்சரியமன்று. காதலை அவர்கள் மக்கள்மீது செலுத்தியிருந்தாராயின், அது குற்றமாகும்; ஆனால் அவர்கள் தம் அகக் காதல் முழுவதையும் கண்ணபிரானிடமே செலுத்தினர்; இடையிடையே கண்ணனது அதிமானுஷ்ய (மனிதத்தன்மைக்கு மேற்பட்ட) செயல்களைக் கண்ட கோபியர்கள் அவனை இறைவனென்று ஒருவாறு உணர்ந்திருந்தனர்; ஆயினும் இறைவனது மாயையின் வலியால் அவ்வுண்மையைப் பலமுறை மறந்துவிடுவதுண்டு. எனினும், இறைவனாகிய கண்ணபிரான்மீது இயல்பாகவே அவர்கட்கு எழுந்த கடல்போன்ற ஆதாரம் ஒருபொழுதும் குறைவுபடாததாயிற்று; அது மேலும் மேலும் பெருகி முற்றிவரலாயிற்று. பகவானை நோக்கிச் செலுத்தப்பட்டதாதலின், இக் காதல் வரவரத் தூய்மை பெற்று முறுகிப் பிரேமையாக மாறுவதாயிற்று. ஆதலின் இந்த கோபியரது அன்பு உடலுணர்ச்சியைத் தாண்டி நிற்பதாக நாளடைவில் மாறிற்று; உடலையும் மனத்தையும் 'தான்' எனும் உணர்ச்சியையும் கடந்து, பேரின்பப் பரவச நிலையில் நின்ற கோபியரது அன்புணர்ச்சியை, உடலுணர்ச்சியையே ஆதாரமாகப் பற்றிஎழும் காம உணர்ச்சியாகக் கொள்ளுதல் பெருந் தவறாகும். கண்ணனது புல்லாங்குழலின் இசையைக் கேட்ட அக்கணமே கோபியர் தம் உடலையும் உள்ளத்தையும் பிறரையும் மறந்து பரவசமாயினர் என்பது கூறப்பட்டுள்ளது. இறைவன் மீது

செலுத்தப்படுவது, காமமோ குரோதமோ மோகமோ மாச்சரியமோ அல்லது வேறெந்தக் கீழான உணர்ச்சியாயினும், அது தெய்வீக உணர்ச்சியாக மாறுவது இயல்பன்றோ? பூவைச் சேர்ந்த நாரும் மணம் பெறும்; நாருக்குப் பூவின் இயல்பைப் பற்றிய உணர்ச்சியும் வேண்டா. அறியாவிடினும் தீ அனைவரையும் சுட்டே தீரும்; அதுபோல, கோபியரது அன்பையும் தூய்மையாக்கியது இறைவனது சம்பந்தம். ஆனால் இந்த அன்பு படிப்படியாகத் தூய்மை யெய்தி முற்றிய நிலையை அடைந்தது. முதலில் கண்ணன் கோவலச் சிறுவரோடு கன்று மேய்த்துத் திரும்புவதைக் கண்ட கோபியர் அவன் மீது பற்றுக்கொண்டனர்; இதனிடத்தும் பின் உண்டாகப் போகும் ஆன்ம அன்பின் (பிரேமையின்) தொனி சிறிது கேட்கப்படும்.

அடுத்தபடியில் கண்ணன் கோபியர்களது இல்லங்களிலுள்ள வெண்ணெயைத் திருடுகிறான். காரணம் யாது? கண்ணனைத் தெய்வமென இடையிடையே உணரும் அவர்களும், கண்ணன் அதை விரும்பிக் கேட்கும்போது, கொடுக்க மறுக்கிறார்கள். உலகத்துள்ள பொருள்கள் யாவும் இறைவனுக்கு உரியவாய், அவனால் மக்களிடம் ஒப்புவிக்கப்பட்டனவாய் இருப்பினும், இறைவன் கேட்கும்போது மக்கள் மனமுவந்து அவைகளைக் கொடுக்கச் சம்மதிப்பதில்லை; அப்போது பகவான் "தேன வித்தம் ஹராம்யாயும்" அவனுடைய செல்வத்தை யான் அபகரிக்கின்றேன் என்று கூறுகிறார். தம்முடைய பொருள்களைத் தமக்குக் கொடுக்க மக்களுக்கு மனம் வாராதபோது, பகவான் பலவந்தமாக அவைகளைத் தாம் பிடுங்கிக் கொள்கிறார். இவ்வாறு செய்வதினால், துன்பநிலை வருதலும், மக்கள் இறைவனைப்பற்றிச் சிந்திக்கவும், அவனைச் சார்ந்து நிற்கவும், அவனை நாடவும் முயலுகின்றனர். ஆக வெண்ணெய் திருடியதன் உட்கருத்து, கோபியர்க்கு வெண்ணெயின் மீதிருந்த பற்று குறைய வேண்டும் என்பதும், இறைவன்மீ துள்ள பற்று வளரவேண்டும் என்பதுமே. மற்றொரு வகையாகவும் இச்செயலை நாம் அறியலாகும். இல்லத்திலுள்ள பொருள்கள் யாவும் தந்தைக்கு உரியனவாயினும், குழந்தையின் கையிலுள்ள பொருளைத் தான்கேட்டுப் பெற்றதும் தந்தை மகிழ்ச்சியடைகிறான்; அதுபோல், நமக்கு அவன் தந்துள்ள பொருள்களில் யாதேனும் ஒன்றையேனும் நாம் அன்போடு அவனிடம் கொடுத்தால் அவன் அதைக்கண்டுமகிழ்ச்சியடைந்து, நமது வேண்டுகோளை நிறைவேற்றுகின்றான். நாம் பகவானிடமிருந்து ஒரு வரம் பெறவேண்டுமாயின், அது மிகப் பெரிய நன்மையளிக்கக் கூடிய பெருவரமாயினும், அதை அளிப்பதற்கு அவன் நம்மிடமிருந்து மிக அற்பமான ஒன்றையேனும் எதிர்பார்க்கிறான். ஒரு பூவோ, பச்சிலையோ, சிறிது புகையோ, நீரோ யாதோ ஒன்றையாவது அன்போடு நாம் அவனுக்கு அளித்தல் அவசியம்; அப்போது, அவன் அதற்குப் பதிலாக பல ஆயிர மடங்கு மதிப்புள்ள ஒன்றை மிக்க அன்போடு அருளுகின்றான். அவனே நமக்கு அருள் புரிவதற்காக யாதேனும் ஒன்றைப் பெறவேண்டும் என்று எதிர்பார்க்கிறபோது, நாம் கொடுக்காதொழியின், பலவந்தமாக நம்மிடமிருந்து யாதேனும் ஒன்றைப் பெற்றுக்கொள்கிறான். குசேலர்க்குக் கண்ணபிரான் பெருஞ் செல்வத்தை அளிக்கக் கருதியபோது, குசேலரிடமிருந்து (அற்பமான அவலைப் பகவானுக்குக் கொடுக்க அவருக்கு இஷ்டமில்லாதபோதும்) ஒருபிடி அவலைக் கட்டாயப்படுத்தி வாங்கி உண்டானன்றோ? கோபியர் கண்ணன்மீது அன்பு பாராட்டி-

னும், அவனுக்கு வெண்ணெயை அளிக்கப் பிரியப்படவில்லை; அதனால் பலாத்காரமாக அபஹரிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இச்செயலுக்கு உள்ளுறைப் பொருளும் கூறலாம். வெண்ணெய் என்பது நமது மனம்; நமது மனதை ஒருவாறுவது இறைவனுக்குக் கொடுக்காது போயின், (ஒரு சிறிதாவது நமக்கு மனத்தில் பக்தி எழாவிடின்), பலாத்காரமாக நமது மனத்தை அவர் பற்றிக்கொள்கிறார். அக்காரணம் பற்றி அவர் நம்மை ஆட்கொண்டு திருத்த முயலுகிறார்.

கோபியர் முன் பிறப்பில் எவ்வளவு உயர்ந்த பக்குவமடைந் திருப்பினும், இறைவனிடத்து மிக்க பிரேமை கொண்டிருப்பினும், இறைவன் மனித உருவத்தோடு வரும்போது, அவனது திவ்ய சக்தியாகிய மாயை அவனைக் காண்போரது கண்களை ஒருவாறு மறைக்கின்ற காரணத்தாலும், தமது அறியாமையாகிய காரணத்தாலும், கண்ணன் இறைவனே என்பதை மறந்து விடுகின்றனர். அப்போது கண்ணன் கோபியரது ஆடைகளைக் கவர்ந்து சென்று, மரத்தின் மேலேறியிருந்து, ஆடைகளைக் கேட்கும்போதும் இருகையாலும் தம்மை அஞ்சலி செய்ய வேண்டும் என்று வற்புறுத்துகின்றான். இச்செயல் கோபியர்க்கு, தமக்கும் கண்ணனுக்கும் உள்ள மெய்யான உறவு முறையைக் காட்டுதற்காகவும் போதித்தற்காகவும் இயற்றப்பட்டது. கண்ணனை மனிதனைக எண்ணி அவனைக் கோபியர் காதலிப்பாராயின், அது முழுப்பயனையும் பெறாது போகும். அக்காதல் தூய்மையடைதற்கு, தாம் காதலிக்கும் புருடன் புருடோத்தமனாகிய இறைவனே என்னும் உணர்ச்சி உண்டாக்கவேண்டும். கண்ணன் உண்மையில் எங்கும் நிறைந்த பரம்பொருளாகி, அவர்களுடைய உடலினுள் நின்றும் அவர்களைக் கண்டுவருகின்றனன் அன்றோ? ஆதலின் அவ்வுணர்ச்சி உள்ளபோது, அவன்முன் பேசுவது தகாதன்றோ? அக்கூச்சம் உள்ளபோது, அவன் இறைவன் என்ற எண்ணம் உண்டாகவில்லை யென்பது வெளிப்படையன்றோ? அந்த அறியாமையைப் போக்க இக்கடுஞ் செயல் வேண்டியிருந்தது. கண்ணனது பேரருளுக்குப் பாத்திரமாக விரும்புபவர் அவனைக் கைகூப்பி வேண்டுதலாயினும் செய்ய இசையவேண்டுமன்றோ; ஞானக் கருத்தை ஆராய்வோமாயின், வேறொரு கருத்து விளங்கும். உயர்ந்த பிரேமை நடையாடும் போது, உடலுணர்ச்சியும் அதனால் விளையும் நாணம் அச்சம் முதலியவையும் ஒழிதல் வேண்டும்; இவைகளைத் துறந்தாலன்றி உயர்ந்த பிரேமை உண்டாகாது என்பதைக் கண்ணன் கோபியர்க்குப் போதித்தான்.

கண்ணபிரான் படிப்படியாகக் கோபியரது அன்பைத் தூயதாக்கியும் வளர்த்தும் வந்தான். கோபியர் பலநாள் இரவுப் பொழுதைக் கண்ணனுடன் கழித்து, அவனது பேரின்ப மயமான குழலிசையைக் கேட்டு ஆனந்தத்தில் வெகு நேரம் அழுந்தியிருப்பார். பெரும் பொழுது கழிந்தபின், கண்ணன் அவர்களை நோக்கி, "நீங்கள் இனி வீடு செல்லல் நன்று; பெரும்பொழுது இரவில் கழிந்துவிட்டது" என்று கூறலும், அவர்கள் "எமது கணவர் எம்மை என் சொல்வரோ" என்று அஞ்சுவர். அப்போது கண்ணன், "நங்கைமீர், நீங்கள் இதுவரை இங்கு வந்து என்னுடன் காலங் கழித்ததை அவர்கள் உணரார்" என்று தேற்றியருளுவான். கண்ணன் தனது எல்லாம் வல்ல ஆற்றலால், கோபியர் அவரவரது கணவரோடு இருந்ததாகவே அக் கணவர்கட்குத் தோன்றுமாறு திருவுள்ளத்தில் சங்கற்பித்துவிடுவான். ஆக, நாளடைவில் கண்ணன் தன்மீது கோபியர்க்கு எழுந்த

பெண்மையைத் தூயதாக்கிக் கொழுந்துவிட் டெரியச் செய்தான். இந்தூய அன்பு முற்றி வரும்போதே, இடையிடையே யமுனையாற்றின் கரையில் கோபியர்கள் செருக்கடைவாராயின், திடீரென்று கண்ணன் தன்னை மறைத்துக்கொண்டு, அவர்களைத் துயர்க் கடலில் ஆழ்த்திச் செருக்கை ஒழித்தும், பிரிவுத் துயரத்தால் கூடும் மகிழ்ச்சியைப் பெருக்கியும் வருவான். இராஸக்கிரீடை நடக்கும் போது, கோபியர்களது அன்பு முற்றும் தூயதாயிருந்தது; அப்போது அவர்கள், கண்ணனை இறைவனாகவே உணர்ந்து ஆன்ம ஒருமையெய்தித் தானெனும் எண்ணம் ஒழிந்து, பேரின்ப வாரிதியில் ஆழ்ந்தார். உயர்வற உயர்ந்த பிரேமையைக் கோபியர் உணர்ந்தபின் கண்ணபிரானுக்கு அங்கு அவர்களோடு வேலை இல்லாது போயிற்று. அக்ரூரர் (குரூர இருதயராக கோபியர்க்கு அவர் தோன்றுகின்றனர்) கண்ணனை ஆய்ப்பாடியினின்றும் மதுரைக்கு அழைத்தேகுகின்றனர்; அதன்பின் கோபியரைப்பற்றி நாம் பொதுவாகக் கேள்விப்படுவதில்லை; ஒரு முறை உத்தவர் கோபியரிடம் தூதாகச் செல்வதாகவும், அந் நங்கையரது தூய அளவிறந்த அன்பைக் கண்டு பரவசப் பட்டதாகமட்டும் கேள்விப்படுகிறோம்.

இதுவரை கூறப்பட்டுள்ள கருத்துக்களையெல்லாம் சிந்தித்து, கண்ணபிரானது திவ்விய வாழ்க்கைச் செயல்களை உற்று நோக்கி ஆராயின், அவைகளில் ஒரு சிறிதும் இழுக்கு புலப்படாது என்று நினைக்கிறோம். அவரது செயல்களில் யாதேனும் ஒன்றை நாம் உள்ளவாறு அறியும் பேறு பெறுவோமாயினும், நாம் உய்வடைவோம் என்று கண்ணபிரானே கூறியுள்ள வார்த்தையையும் நாம் நினைவூட்டிக்கொள்வோமாக. உயர்ந்த தூய அன்புக் கண்ணால் நோக்கி அறியவேண்டிய செயல்களை அற்ப அறிவுக்கண்ணால் நோக்குவோமாயின், அவைகளை உள்ளவாறு அறிய ஒண்ணாது இடர்ப்படுவோம்.

---

# மயக்கந் தீர்க்கும் மருந்து

(சுவாமி விபுலாநந்தர்)

பண்டிதர்கள், வித்துவான்கள், சிரோமணிகள், பிரசங்கிகள், எழுத்தாளர்கள், ஆசிரியர்கள், பேராசிரியர்கள், பெரும் பேராசிரியர்கள், எம். ஏ. பி. எச். டி. என்றித்தகைய பட்டதாரிகள் எத்தனையோ பேரை அண்டை வீட்டிலும், சந்தியிலும், தெருவிலும் தினந்தோறும் காண்கின்றோம். இத்தன்மையோர் ஒருவர் இருவர் நமது சொந்தக்காரராகவும் நண்பராகவும் இருக்கலாம். உயர்ந்த பரீக்ஷைகளிலே தேறியதற்கு அறிகுறியாகக் கல்விக்கழகங்கள் பட்டங்களை வழங்குகின்றன. பரீக்ஷைகள் பொதுவாகக் கடினமானவை. 'தொலைவில் பன்னூல்ஆய்ந்து சிவந்தது பாவணர் நெஞ்சம்' என்ற புலவர் உரையின்படி பரீக்ஷைக்குப் படிக்கும் வித்தியார்த்திகள் அநேக புத்தகங்களை ஆராய்ந்து படிக்க வேண்டியவர்கள். நுண்ணுணர் வில்லாதவர்கள் நெட்டுருப் பண்ணியாவது பரீக்ஷைத் தொல்லையைத் தொலைக்கவேண்டும். பரீக்ஷையிலே தேறிப் பட்டம் பெறுவிட்டால் வேலை

கிடையாது. என்ன செய்யலாம்? இள மாணவர்கள் சுமந்து கொண்டு போகிற சுவடிகளின் எண்ணிக்கையைப் பார்த்த மாத்திரத்தே பட்டிக்காட்டான் பேராச்சரிய முற்று, இவ்விளைஞர்கள் அறிவுக் கடல்களாக இருக்க வேண்டுமென்று நினைப்பான்.

வெளித் தோற்றம் ஆடம்பரந்தான். சற்றே உள் நுழைந்து பார்ப்போம். வீட்டிலே மனைவி மக்களோடும் சுற்றத்தாரோடும் இவர்கள் நடந்து கொள்ளுகிற முறையையும், இன்பத்துன்பங்கள் வந்து எய்தும் போது இவர்களுடைய மன நிலையையும், இத்தகைய பிறவாழ்க்கை நிகழ்ச்சிகளையும் கூர்ந்து அவதானித்து நோக்குவோமாக. இவர்களும் நம்மைப்போல உடம்பு வேர்த்தாற் குளிக்கிறார்கள், பசி வந்தால் உணவு உண்ணுகிறார்கள்; உறக்கம் வந்தால் தூங்குகிறார்கள்; பெரிய ஞானவான்களும் இப்படித்தான் செய்கிறார்கள். 'வேர்த்தாற் குளித்துப் பசித்தாற் புசித்து விழிதுயின்று, பார்த்தால் உலகத்தவர்போற் றிரிவர் பற்றற்றவரே' என்று பெரியோர் கூறவில்லையா? இச் செயல்களை நோக்கி நாம் உலகத்திலுள்ள சாதாரண மனிதர்க்கும், பட்டதாரிகளுக்கும் உண்மை ஞானிகளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டினைக் காணுதல் கூடாது. படித்துப் பட்டம் பெற்றவர்களுள்ளே ஞானிகளுமுண்டு, அஞ்ஞானிகளுமுண்டு; அப்படியானால் ஞானமென்பது கல்வியின் வேறாய ஒரு பொருளாக இருக்க வேண்டுமல்லவா? வேறுபாடு எது என்பதை ஒரு வகையாக ஆராய்ந்து காண்போம். முதலிலே பட்டம் பெற்றோரது வாழ்க்கை நிகழ்ச்சியை இன்னுஞ் சற்றுக் கருதி நோக்குவோம்.

கொண்ட மனைவியிருக்க அண்டை வீட்டுப் பெண்டுகளோடு நேசம் வைத்துக் கொள்ள விரும்புவோர் படித்தவர்களுந் தான் இருக்கிறார்கள். படித்துப் பட்டம்பெற்ற பெண்பாலார்தாமும் ஒழுக்கந் தவறி நடப்பதை ஓரோவழிக் காண்கின்றோம். அயலானோடு பகைத்துக்கொண்டு அவனைக் கெடுப்பதற்கு வழிதேடி யலைகின்ற அறியாமை படித்துப் பட்டம் பெற்றவர்களிடத்திலும் காணப்படுகிறது. நற்கருமங்களுக்கு உதவிபுரியாமல், உண்ணாமல், உடுக்காமல் பணத்தினைக் கெட்டியாகப்பிடித்துவைக்கும் உலோபத்தன்மை பட்டம்பெற்றவர்களைத்தானும் விட்டபாடில்லை. இரவுபகலாக மனைவிமீதும் மக்கள்மீதும் அளவுகடந்த காதல்செலுத்திக்கொண்டு நடுவுநிலைமையையும், பிறர் நலத்தையும் ஒருசிறிதும் கருதாது வாழுகின்ற மோகவாழ்க்கை படித்தவரிடமுங் காணப்படுகிறது. செல்வக் களிப்பினாலோ, கல்விச்செருக்கினாலோ மதமுற்று 'எனக்கு யார் நிகராவார்' என இறுமாந்து திரிவது படித்தவர்க்கும் இயல்புதான். 'அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தாய்' என்றிவரது சொற்கேளாது,செய்யத்தகாத காரியங்களையும் பிடிவாதத்தினாலே செய்து முடிக்கும் மாற்சரியக்குணமும் கற்றவரிடத்தும் காணப்படுகின்றன. ஆகவே பெரியோர் கடிந்தொதுக்கிய காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் எனப்பட்ட ஆறுகுற்றங்களும் கல்லாதாரிடத்திற்போலவே கற்றவரிடத்திலும் காணப்படுகின்றன. இந்த ஆறினையும் திருவள்ளுவநாயனார் காமம், வெகுளி, மயக்கம் எனமூன்றாக்கிக் கூறுவர். நாம் இப்பொழுது விசாரிப்பது தத்துவஞானமல்ல; வாழ்க்கைஞான மாதலினாலே தத்துவ ஞானச் சொற்களைச் சாதாரண வாழ்க்கை ஞானச் சொற்களாக மொழிபெயர்த்துக் கொள்வோம். காமம் என்றால் விருப்பம்; வெகுளி என்றால் வெறுப்பு; மயக்கம் என்பது பேதைமை, அறியாமை,

எனக்கு இது வேண்டுமென்று அவாவுகின்ற விருப்பமே காமம்; அது கிடையாத பொழுது பிறனிடத்துச் செலுத்துகின்ற கோபமாகிய வெறுப்பே வெகுளி. இவையிரண்டினுக்கும் காரணமாகிய அறியாமையே மயக்கம். அனைத்துக் குற்றங்களுக்கும் காரணமாகிய மயக்கந் தீர்ந்தாலன்றி உண்மைஞானம் உதிக்க மாட்டாது. ஆதலினாலே மயக்கம் தீர்க்கும் மருந்து எதுவென்று நாம் ஆராய்ந்து காண வேண்டும்.

'நூலுரை போதகாசிரியர் மூவரும் முக்குணவசத்தான் முறைபிறழ்ந்தவரே' என்று நூலாசிரியரொருவர் மற்றொரு தொடர்பிலே கூறிய உண்மை இவ்வாராய்ச்சிக்கும் பொருந்தும். நாம் ஆரம்பத்திற் கூறிய பண்டிதர் முதலிய பட்டதாரிகள் நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர் என்னும் மூன்று வகையினராவர். ஞானாசிரியர் இவரின் வேறாவார். நூலுரைபோதகாசிரியராகிய மூவரும் உண்மைநெறி வழுவி நடப்பதுண்டு. ஏனெனில் இவருடைய மனமானது முக்குணத்தின் வழிபட்டு நிற்கும். ஞானவான்கள் முக்குணங்களுக்கும் மேற்பட்டவர்கள். முக்குணங்கள் இவர்களைப் பீடிப்பதில்லை. தத்துவஞான நூல்கள் முக்குணங்களைத் தாமதம், இராசதம், சாத்துவிகம் எனக் கூறுவன. கடவுளைக் குணாதீதராகவும், குணங்களோடு கூடியவராகவும் சமயநூல்கள் கூறுவன. குணங்களோடு கூடியவராகக் கூறுமிடத்துத் தாமதகுணம் இச்சாசக்தி யெனவும் இராசதகுணம் கிரியாசக்தி யெனவும்; சாத்துவிககுணம் ஞானசக்தி யெனவும் வழங்கப்படுவன. நாம் பேசுவது வாழ்க்கைஞானம், ஆதலினாலே இந்தத் தத்துவஞானச் சொற்களை இயன்றவரை மொழிபெயர்த்துக் கொள்வோமாக. ஞானம் — அறிவு; கிரியை — செயல், தொழில்; இச்சை— விருப்பு, காமம், அறிவு, இச்சை, செயல் என்னும் மூன்றும் நமது மனத்துக்கு உரியன. இவற்றை ஆங்கிலநூலார் Knowing, Feeling, Willing எனவும், Cognition, Affection, Conation எனவும் தமது மனநூல்களிலே வழங்குவர். அறிவு சாத்துவிககுணம்; இச்சை தாமதகுணம்; செயல் இராசதகுணம். இவைதம்மைத் தெளிவாக அறிந்துகொள்ளும் பொருட்டு இரண்டு முக்கோணங்களாக நிறுத்திக் கொள்வோம்.




ஒவ்வொரு குணமும் மற்ற இரண்டினையும் பாதிக்குமென்பதை நுணுகி நோக்கிக் கண்டுகொள்ளலாம். இராசதகுணமானது சாத்துவிககுணத்தின் வழியும் நடக்கும்; தாமத குணத்தின் வழியும் நடக்கும். சாதாரணமான சொற்களிலே கூறினால் நாம் வாழ்க்கையிலே செய்கின்ற செய்கைகளுள்ளே ஒரு சில அறிவுவழியாகச் செய்யப்படுவன; ஒரு சில இச்சை வழியாகச் செய்யப்படுவன; மற்றொருசில அறிவுஇச்சை இரண்டினாலும் நடப்பன. இச்சை தீயவிச்சையாயின் அதனோடு ஒன்றிநிற்கும் அறிவும் தீயதாகும்; இவற்றின்வழியாகப் பிறந்த செய்கையும் தீயசெய்கை யாகும். ஆதலினாலே 'ஆசையறுமின், ஆசையறுமின்' என ஞானவான்கள் கூறினார்கள். இல்லறத்திலிருந்தால் ஆசையறாதென நினைத்துத் துறவுபூண்டு ஒருசிலர் காட்டுக்குச் செல்லுகின்றனர். ஆனால் மனமும் அதன் குணங்களாகிய அறிவு, இச்சை, செயல்களும் அவர்களோடு உடன்செல்லுகின்

றன. காட்டிலிருந்தாலும், நாட்டிலிருந்தாலும், கட்டுக்கடங்காத மனம் தீயவிச்சைகளை நாடுகின்றது. 'காடுங் கரையும் மனக்குரங்கு கால்விட்டோட அதன் பிறகே ஓடுந் தொழிலாற் பயனுளதோ' என்று புலம்பவேண்டியிருக்கிறது. இச்சை தீயவிச்சையாயிருக்கும் வரையும் கற்றகல்வியும் பயன்தருவதில்லை. பண்டிதர்கள் ஆதிய பட்டதாரிகள் அல்லலுறுவதற்குக் காரணம் இதுவெனக் கண்டு கொண்டோம்.

இனி வாதத்திலும் ஆராய்ச்சியிலும் நேரம்போக்காமல் மயக்கந்தீர்க்கும் மருந்து இதுவென முன்னோர் கூறிய மொழிப்பொருளைச் சுருக்கமாகத் தருவாம். மனிதன் தனது சொந்தமுயற்சியினாலும் புத்தகக்கல்வியினாலும் பாச நீக்க மெய்தி, உண்மைஞானத்தை அடைய முடியாது. நிலத்தில் நின்று மேன்மாடிக்குக் குதித்துவிட முடியாது. பற்றுக்கோடாகிய ஏணியைப் பற்றிப் படிப்படியாக ஏறவேண்டும். 'பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' என்று பெரியோர் கூறிய உண்மையைச் சிந்திக்க வேண்டும். ஞான குருவையோ, ஞான குருவினால் உணர்த்தப்பட்ட இஷ்ட தேவதையையோ பற்றுக் கோடாகக்கொள்ள வேண்டும். சார்ந்ததன் வண்ணமாகத் தோன்றும் பளிங்கு போன்றது நமது ஆன்மா. காமமாதியவற்றைப் பற்றி நிற்கும்போது அவையாகத் தோன்றும்; சிவத்தை (அதாவது இயல்பாகவே பாசங்களினீங்கிய முற்றறிவனை)ப் பற்றினாற் சிவமாகத் தோன்றும். 'இராமன் வரக் காமன் அகல்வான்' என்ற பழமொழியும் இந்த உண்மையையே கூறுகின்றது. அன்பாது கண்களினின்றும் பொழிகின்ற கண்ணீர் உடலினாற் செய்த பாவங்களை நீக்குகின்றது; ஆண்டவனுடைய புகழ்மாலையினைப் பாடுதல் வாக்கினாற் செய்த குற்றங்களை மாற்றுகின்றது; ஆண்டவனுடைய திருநாமத்தைச் சிந்தித்தல் மனத்திலே யெய்திய மயக்கத்தை யொழிக்கும் மருந்தாகின்றது. 'சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொல் மாலை யடிசேர்த்தி, எந்தை பெம்மான் என்னெம்மான் என்பார் பாவம் நாசமே' என்பது அப்பர் சுவாமிகளது திருவாக்கு. கடவுளை ஒருபொழுதும் மறவாமல், அடைந்து, குளிரத் தொழுது, சிந்தையுள்ளே வைத்து, அன்பினால் அணைத்து, விருப்பினால் விழுங்க வேண்டும். அப்பர் சுவாமிகள் அருளிச் செய்த பாவநாசத் திருப்பதிகம் சிவனடியாராலே என்றும் ஓதுதற்கு உரியது; அது மயக்கம் தீர்க்கும் மருந்து. அத் திருப்பதிகத்தை இங்குத் தருகின்றோம்.

திருச்சிற்றம்பலம்

பற்றற் றார்சேர் பழம்பதியைப்
பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெங் திகழ்கனியைத்
தீண்டற் கரிய திருவுருவை
வெற்றி யூரில் விரிசுடரை விமலர்
கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூரெம் உத்தமனை உள்ளத்
துள்ளே வைத்தேனே.

ஆனைக் காவில் அணங்கினை ஆரூர் நிலாய
அம்மானைக்
கானப் பேரூர்க் கட்டியைக் கானூர்
முளைத்த கரும்பினை
வானப் பேரார் வந்தேத்தும் வாய்மூர்
வாழும் வலம் புரியை
மானக் கயிலை மழகளிற்றை மதியைச்
சுடரை மறவேனே.

மதியங் கண்ணி ஞாயிற்றை மயக்கந் தீர்க்
கும் மருந்தினை
அதிகை மூதூர் அரசினை ஐயா றமர்ந்த
ஐயனை

விதியைப் புகழை வானோர்கள் வேண்டித்
தேடும் விளக்கினை
நெதியை ஞானக் கொழுந்தினை நினைந்
தேற் குள்ளம் நிறைந்ததே.

புறம்பயத்தெம் முத்தினைப் புகலூர்
இலங்கு பொன்னினை
உறந்தை யோங்கு சிராப்பள்ளி உலகம்
விளக்கு ஞாயிற்றைக்
கறங்கு மருவிக் கழுக்குன்றிற் காண்பார்
காணும் கண்ணானை
அறஞ்சூழ் அதிகை வீரட்டத் தரிமா
னேற்றை யடைந்தேனே.

கோலக் காவிற் குருமணியைக் குடமூக்
குறையும் விடமுண்ணியை
ஆலங் காட்டி லந்தேனை அமரர் சென்னி
ஆய்மலரைப்
பாலிற் றிகழும் பைங்கனியைப் பராய்த்
துறைஎம் பசும்பொன்னைச்
சூலத் தானைத் துணையிலியைத் தோளைக்
குளிரத் தொழுதேனே.

மருக லுறைமா ணிக்கத்தை வலஞ்
சுழியின் மாலையைக்
கருகா வூரிற் கற்பகத்தைக் காண்டற்
கரிய கதிரொளியைப்
பெருவே ளூரெம் பிறப்பிலியைப்
பேணு வார்கள் பிரிவரிய
திருவாஞ் சியத்தெஞ் செல்வனைச் சிந்தை
யுள்ளே வைத்தேனே.

எழிலார் இராச சிங்கத்தை இராமேச்
சுரத்தெம் எழிலேற்றைக்
குழலார் கோதை வரைமார்பிற் குற்றாலத்
தெங்கூத்தனை
நிழலார் சோலை நெடுங்களத்து நிலாய
நித்த மணாளனை
அழலார் வண்ணத் தம்மானை
அன்பிலணைத்து வைத்தேனே.

மாலை தோன்றும் வளர்மதியை மறைக்
காட் டுறையும் மணாளனை
ஆலைக் கரும்பின் இன்சாற்றை அண்ணா
மலையெம் அண்ணலைச்
சோலைத் துருத்திநகர்மேய சுடரிற்
றிகழுந் துளக்கிலியை
மேலை வானோர் பெருமானை விருப்பால்
விழுங்கி யிட்டேனே.

சோற்றுத் துறைஎஞ் சோதியைத்
துருத்தி மேய தூமணியை
ஆற்றிற் பழனத் தம்மானை ஆலவாயெம்
அருமணியை
நீற்றிற் பொலிந்த நிமிர்திண்டோள்
நெய்த்தா னத்தெந் நிலாச்சுடரைத்
தோற்றக் கடலை யடலேற்றைத் தோளைக்
குளிரத் தொழுதேனே.

புத்தூ ருறையும் புனிதனைப் பூவ ணத்
தெம் போரேற்றை
வித்தாய் மிழலை முளைத்தானை வேள்விக்
குடிஎம் வேதியனைப்
பொய்த்தார் புரமூன் றெரித்தானைப்
பொதியின் மேய புராணனை
வைத்தேன் என்றன் மனத்துள்ளே
மாத்தூர் மேய மருந்தையே.

முந்தித் தானே முளைத்தானை மூரி
வெள்ளே றூர்ந்தானை
அந்திச் செவ்வான் படியானை அரக்க
னாற்றல் அழித்தானைச்
சிந்தைவெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன்
மாலை யடிசேர்த்தி
எந்தை பெம்மான் என்னெம்மான்
என்பார் பாவம் நாசமே.

திருச்சிற்றம்பலம்

---

# நமது சிகர ஜோதி

இப் பகுதியில் :—'தேவியின் திரு வாக்கு': அன்னை சாரதாதேவியாரது அன்பையும் ஞாபக சக்தியையும் இக் கட்டுரையின்மூலம் அறியலாம். 'ஆத்ம சாதனைக்கான போதனைகள்': ஆத்மஞான சாதகன் முன்னேறவேண்டியதின் முறையும் அவசியமும், விக்ரக வழிபாடு வேண்டப் படும் காலமும் வேண்டப்படாத காலமும், கிருகஸ்தர்களும் பிரம்மசர்யத்தை அநுஷ்டிக்கவேண்டிய அவசியம் இத்யாதி முக்கிய விஷயங்களைப்பற்றி இக் கட்டுரையில் ஸ்ரீ எதீஸ்வரானந்தசுவாமிகள் விளங்க உரைக்கின்றார்கள், 'மனித வாழ்க்கையின் மர்மம்': தாமஸ் ஏ கெம்பிஸ் என்பவர் உண்மை கிருஸ்தவ அடியார்களில் ஒருவர். மரணத்துக்குமுன் மனிதன் செய்யவேண்டியவற்றினையும், பகவான் பக்தியினைத் தவிர்த்து வேறு எந்த உலக படாடோபங்களையும் விரும்பலாகாது என்று வற்புறுத்திக் கூறுவதும் ஒவ்வொருவரது மனதிலும் பதியும். 'மானுடப் பிறவியும் அதன் அருமையும்': மனிதப் பிறவி கிடைத்தலின் அருமை, கிடைத்தபின் ஏற்படும் கஷ்டங்கள், இம் மனிதப் பிறவியினால் எய்தவேண்டிய இலக்ஷியம், அதற்கான முறைகள் ஆகியவற்றை சாது திருவேங்கடாநந்தர் பல மேற்கோள்கள்மூலம் விளக்குகின்றார். 'பணிவும் சாந்தமும் அமைந்த நெறி': பலாத்காரத்தினால் ஏற்படும் ஆபத்துக்களும், அஹிம்சையால் ஏற்படும் பெரு நன்மைகளும், மேனாட்டில் பிறந்து வளர்ந்த சகோதரி தேவமாதா அவர்களால் விளங்க உரைப்பது ஊன்றி வாசிக்கத்தகுந்தது. 'மயக்கந் தீர்க்கும் மருந்து': கற்றவர் கல்லாதவர் ஆகிய இருவரும் முக்குணத் தாலான மயக்கத்துக்குள்ளாவரென்றும், அம்மயக்கந் தீர இறைவனை வழிபடுதலே மருந்து என்றும் ஸ்ரீ விபுலாநந்தசுவாமிகள் இக் கட்டுரையில் வெகு அழகுபட எடுத்துரைக்கின்றார்கள்.

## ஒரு திவ்விய திரிவேணி சங்கமம்

புண்ணிய நதிகளாகிய கங்கை யமுனை சரஸ்வதி யெனும் மூன்று நதிகளும் கூடுமிடம் திரிவேணி சங்கமமெனவும், அதில் நீராடுவார் உடலும் உள்ளமும் தூயராய் மகிழ்வர் என்றும் நமது நாட்டு இருடியர் கூறுவர். பிறவித்தளையினின்றும் நீங்கிப் பேரின்ப மெய்த விரும்புவார் எல்லாம் தவஞ்செய்ததின் பயனாகப் பிறக்கும் மேன்மை வாய்ந்த இப்பாரதகண்டம், திரிவேணி சங்கமத்தைக் காட்டிலும் மிக்க மேன்மையானதும் தெய்வத் தன்மை வாய்ந்ததுமான பேரின்ப வெள்ளம் பெருகும் ஒரு திவ்விய திரிவேணி சங்கமத்தையும், நம்நாட்டினருக்குமன்றி, எந் நாட்டினருக்கும் உய்வு உண்டாகுமாறு அளித்துள்ளது. இத் திவ்வியத் திரிவேணி சங்கமத்திலே நீராடப்பெறும் உள்ளங்கள் பேரின்பப் புனலிற் படிந்தவையாய், மனிதத் தன்மை யொழிந்து தெய்வத் தன்மை பெற்று விளங்குகின்றன. இத் திரிவேணி சங்கமத்தின் மகிமையால் "திரியும் கலியுகம் நீங்கித் தேவர்கள் தாமும் புகுந்து, பெரிய கிதயுகம் பற்றிப் பேரின்பவெள்ளம் பெருக" அடியார்கள் "மண்மேல் இரியப்புகுந்து இசைபாடி எங்கும் இடங்" கொண்டனர். இத்தகைய தெய்வத் திரிவேணி சங்கமம் ஸ்ரீ ராமகிருஷ்ணரெனும் திவ்விய வடிவ

மாகும். இவரிடத்து ஆட்பட்டு மீளா அடிமைபூண்ட அடியார்கள் உலகமெங்கும் பரந்து, அவரது பொருள் சேர்ந்த எல்லாப் பெரும்புகழைப் பரப்பித் தாமும் மகிழ்ந்து, பிறரையும் மகிழ்விக்கின்றனர். "தொண்டர் எல்லோரும் வாரீர், தொழுது தொழுது நின்று ஆர்த்தும்" என்று ஆதாரம் பெருக, உலக மக்களை அழைக்கின்றனர். "கொன்று உயிருண்ணும் விசாதி பகை பசி தீயன எல்லாம், நின்று இவ்வுலகிற் கடிவான் நேமிப்பிரான் தமர் போந்தார், நன்று இசை பாடியும் துள்ளியாடியும் ஞாலம் பரந்தார், சென்று தொழுது உய்ம்மின் தொண்டீர், சிந்தையைச் செந்நிறுத்தியே" என்று நம்மாழ்வார் கண்ட காட்சியையும், அழைத்த அழைப்பையும், இக் காலத்திற்கும் பொருத்தமுற்றனவாக அறிஞர் காண்கின்றனர்.

இம் மாசிமாதம் இப் பெரியாரது பிறந்த நாள் விழா நமது நாடெங்குமும் பிற நாடுகளிலும் கொண்டாடப்படும். நமது நாட்டிலுள்ள இமயமலை, நிலத்திலே ஊன்றி வானுற ஓங்கி, அசையாது நிற்கும் காட்சி, ஒரு பெரும் ஞான குரவரது நிலையை அறிவிக்கின்றது. சிறப்பாக, ஒப்பற்ற ஞான குரவராகிய ஸ்ரீ ராமகிருஷ்ணரது "அளக்கலாகா அளவும் பொருளும், துளக்கலாகா நிலையும் தோற்றமும், வறப்பினும் வளந்தரும் வண்மையும்" இத் தன்மையன என்பதைக்குறிப்பாகக்காட்டுவதாகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணரெனும் அனுபூதிமால்வரையின் சிகரத்தினின்றும் மும்மூன்றாக ஜீவநதிகள் பல பெருகி அடியில் ஒன்று கூடுகின்றன. அத் தகைய திரிவேணிகள் சிலவற்றையும், அவைகளின் தெய்வத் தன்மையைப் பற்றியும் சிறிது இம்மாதம் சிந்திப்பாம்.

இமய மலையினின்றும் கங்கை சிந்து பிரம்மபுத்திரா என்னும் மூன்று நதிகள் பெருகுவதுபோல, அனுபூதி மலையாகிய ஸ்ரீ ராமகிருஷ்ணரிடமிருந்தும், ஞானம் பக்தி கருமம் எனும் மூன்று நதிகள் பெருகி ஒன்று கூடுகின்றன. இத் திரிவேணி சங்கமத்தே மூழ்கித் திளைத்து, ஞானியராயோ அன்பராகவோ தொண்டராகவோ மாறிச் சென்றவர் எண்ணிறந்த பலர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் உயர்வற உயர்ந்த நிர்விகற்ப சமாதி நிலையினை வெகு விரைவில் அடைந்து, பிரம்ம மயமாயிருக்கும் நிலையில் ஆறு மாசங்கள் இருந்தார். பிரேமை பக்தியின் மிக உயர்ந்த நிலையாகிய ராதை பக்தியினைப் பெற்றுக் கண்ணனைக் கண்ணாரக் கண்டு இன்புற்றார். தேவியின் அருளால் அனுபூதிக் கடலை முழுவதும் துருவித் துருவியாராய்ந்து, பலவகையான அனுபூதிச் செல்வங்களையும் பெற்றபின் உலகத்தார்க்குத் தொண்டுபுரியப் புகுந்தபோது, அவர் தொண்டின் வடிவமாய் இலங்கினார்; அனைவரையும் இறைவனது வடிவாகவே கண்டு, தமது நினைவு சொற்செயல்கள் எனும் மூவகைப்பட்ட திவ்விய மலர்களாலும் பலரையும் வழிபட்டு, அவர்களை உயர்த்திவந்தார்.

இந்திய மக்களது உள்ளங்களாகிய நிலங்களிலே மூன்று வகைப்பட்ட பக்திப் பேராறுகள் ஆங்காங்கே பெருகி, பேரின்பப் பயிரைச் செழித்தோங்கி வளரச் செய்துள்ளன. அவையாவன:— சைவம், வைணவம், சாக்தம் என்பன. இத் திரிவேணியின் சங்கமமும் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடத்தே காணப்படும். சிவ் பெருமானை வழிபட்ட அடியார்கள் அவரைச் சிவபெருமானாகவே ஞானக் கண்ணாற் கண்டார்; கண்ணனை வழிபடும் அடியார் அவன்பாற் கண்ணனையே காண்பார்; தேவியை வணங்கும் அன்பர்கள் அவரைத் தேவியின் வடிவமாக உணர்வார். தக்ஷிணேசுவரக் காளி

கோயிலை மேற்பார்த்து வந்தவரும், அதைக்கட்டிய ராணியின் மருமகரும் ஆகிய மதுரபாபு என்பார், ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் உலாவிக் கொண்டிருந்த போது, ஒருபக்கமாக வருங்கால் சிவபெருமானது வடிவாகவும், மறுபக்கமாகச் செல்லுங்கால் தேவியினது வடிவமாகவும் விளங்குவதைக் கண்ணாரக் காணும் பேறு பெற்றார். கண்ணனைக் குழந்தையாக வழிபட்ட அகோரமணி தேவியார் தூலக் கண் முன் கண்ணன் குழந்தையாக நின்றதையும் தமது கையில் அமர்ந்ததையும் நேரே காணும் அரிய பேறு பெற்றிருந்தார். அக்காட்சி இடைவிடாது தொடர்ந்து பன்னாள் நிகழ்ந்துவர, ஒருநாள் அத்தெய்வக் குழந்தையோடு ஸ்ரீராம கிருஷ்ணரைக் காணவந்த போது, அக் குழந்தை ஸ்ரீராமகிருஷ்ணரோடு ஐக்கிய மாயதை நேரில் கண்டார்.

நமது இந்தியாவில் இந்துமதம் மட்டும் எங்கும் பரவியிருந்த காலம் போக, கிறிஸ்தவமதமும் மகம்மதிய மதமும் ஒருவாறு வேரூன்றிவிட்டன. இந்த அன்னிய மதங்களைப் புறக்கணித்தல் இயலாத தாகி விட்டது. நமது நாட்டு மக்களில் பலரை இவ்விரு மதத்தினரும் நாளடைவில் கைப்பற்றியும், இன்னும் கைப்பற்ற நாளும் முயன்றும் வரும் நிலையில், இந்து மதத்தின் மேன்மையைப் போற்றும் கடமையை உணர்வார் ஒவ்வொருவரும் அவ்வியக்கங்கள் பரவிவருதலைத் தடுக்கவும், மதமாற்றத்தைப் பெரிதெனக் கருதாது, மனமாற்றத்தையே இன்றியமையாததென வற்புறுத்தவும் தலைப்படல் வேண்டும். போராடும் இயல்புடைய பிறமதங்களோடு, இந்து மதம் போர்புரிய முற்படாது, அவைகளையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் தனது மேம்பட்ட இணையற்ற பெருமையை நம்மவர்க்கும் பிறமதத்தினருக்கும் புலப்படுத்த வேண்டும். புராதன மதமாகிய இந்துமதம் உலகத்துத் தோன்றியுள்ள மக்களனைவர்க்கும் பொதுவான ஓர் உயர்மதம் என்ற உணர்ச்சியையும், ஏனைய மதங்கள் அதனிடத்து அமைந்த பலவேறு பகுதிகளாமாறு அது ஒருமுழு மதமாம் என்னும் உண்மையையும், அறிவு வாயிலாக மட்டும் நிலைநாட்டக் கருதாது, அனுபவவாயிலாகவும் நிலைநாட்ட வேண்டும். அதற்குக் கடலெனு ஆழ்ந்த அனுபவமும், விசும்பெனப் பரந்த பலவகைப்பட்ட துறைகளிற் பயிற்சியும் இன்றியமையாதன. சமய நெறி உண்மையில் ஒன்றே யென்னும் பேருண்மைக்கு இலக்கியமாகும் வாழ்க்கையை உடையார் ஒருவர் மக்களது தூலக்கண்முன் விளங்க வேண்டும். பலவகைப்பட்ட இலக்கணங்களையுடைய பல்வேறு சமயங்கட்கும் ஓரே பேரிலக்கியமாகிய இத்தகைய பெரியார் ஸ்ரீ ராமகிருஷ்ணரே. அவர் இந்து மத அனுபூதியின் வடிவமா யிருந்ததுமன்றி, பிற மதங்களாகிய கிறிஸ்தவ மதம், மகம்மதிய மதம் இவ்விரண்டிலும் உள்ள அனுபூதிச் சிகரங்களையும் அடைந்திருந்தார். இக் காரணத்தால் மெய்யான கிறிஸ்தவர் அவரை இயேசுநாதரென வழிபட, மெய்யான மகம்மதியர் அவரை நபியென வணங்கினர். ஆதலின் சமரச வாழ்க்கையை எடுத்துக் காட்டும் இவரை உணர உணர, பிற மதத்தினர் இந்து மதத்தினரோடு முரண்படாது மனமொத்து வாழத் தொடங்குவர். இந்தியரின் மூன்று பெரும் பிரிவினராய இந்து மதத்தினர், கிறிஸ்தவர் மகம்மதியர் ஆகிய மூவரும் மனமொன்றுபட்டு வாழ வேண்டிய காலம் இன்று குறுகியுள்ளது; இம் மூவரும் ஒருங்கே மனம் ஒன்று பட்டு வாழ்ந்து, இந்திய நாட்டைப் பூமாதினுக்கு ஓர் எழில் முகமாக விளங்கும் படிச் செய்யவேண்டும். இதற்கு அடிப்

படையான மன ஒருமை இம்மூவருக்குள்ளும் விளைதற்கு, ஸ்ரீ ராமகிருஷ்ணரைப்பற்றிய அறிவை அனைவர்க்குள்ளும் வளரவேண்டும். இந்து மதம் கிறிஸ்தவ மதம் மகம்மதிய மதம் எனும் மூன்று பெரு நதிகளும் ஒன்று கூடுவது இவர் பால் ஆதலின், இவர் இத்துறையிலும் ஒரு தெய்வத் திரிவேணி சங்கமமாகின்றார்.

ஞானக் காட்சியைப் பெறுதற்கு ஏற்ற பக்குவத்தை மனிதனது மனம் அடைய வேண்டுமாயின், அவனது மனமெனும் நிலம் பண்பட்டு ஞானவிதை முளைத்துத் தழைத்தோங்கவேண்டுமாயின் அந்நிலத்தில் மூன்று பெரு வெள்ளங்கள் பாய்ந்து ஊறியிருத்தல் வேண்டும். அவைகளாவன :—விவேகம், வைராக்யம், சரணாகதியென்னும் மூன்றும். இறைவனே மெய்ப்பொருள் மற்றவை யாவும் (கண்ணுக்குப் புலப்படுவனவும் புலப்படாதனவும்) அழிவடையும் பொய்ப் பொருள்களாம் என்ற உறுதி உணர்ச்சி முதலில் மனத்தெழல் வேண்டும். பின் மெய்ப் பொருளில்லாத பிறவற்றைத் துறக்கும் திறம் வேண்டும். பின்னர் மெய்ப் பொருட் காட்சியெய்தி, பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற அப்பரம் பொருளின் சங்கற்பத்திற்கே நம்மை முழுதும் ஒப்பித்துவிடும் ஞான மொய்ம்பு (வலிமை) வேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ணப் பெருமானது ஞானக் கண்ணிற்கு, ஆண்கள் பெண்கள் குழந்தைகள் அனைவரும் இறைவனது வடிவங்களாக விளங்குவார். இக் காரணத்தால் வைராக்யம் என்பது வெள்ளம்போல் அவரது உள்ளத்துப் பெருகியிருந்தது. விலைமாதரையும் தமது தாயாரையும் கோயிலிலுள்ள தேவியம்மையாரின் வடிவமாகவே அவர் காண்பார். தம்மை ஈன்ற தாய் தம்முன் தேவியாக இலங்குவதையும் அத் தேவியே தமது மனைவியாராகிய சாரதாமணி அம்மையாராய் முன் நிற்பதாயும் அவர் உணர்ந்தார். ஐம்பொறியின்பமும் அவரது மனமும் ஒன்றுக்கொன்று எதிர் கோடியில் இருந்தன. அவரது மனம், மாதராசையின் நிழல் தன்மீது விழவும் இடங்கொடாது. அவர் உலோகங்களாற் செய்த கலங்களைக் கையால் தொடுவரெனினும், அவர் கை நடுநடுங்கும், பெரு வலியை உணரும் ; இவ்வுணர்ச்சி தூக்கத்திலும் அவரை விட்டுப் பிரியாது உறையும். அவரது வைராக்கியம் பழக்க முதிர்ச்சியால் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்தது மன்றி, உடலிலும் வேரூன்றிப் பதிந்து விட்டது. தேவியே அனைத்தையும் ஆட்டிவைப்பதை உணர்ந்தவராதலின், தம்மைத் தேவியின் திருக்கரத்துள்ள ஒரு கருவியாகவே கருதி எப்பொழுதும் ஒழுகுவார். அவர் பால் 'நான்' என்ற உணர்ச்சி முழுதும் வேரற மாய்ந்தது ; தற்போதம் ஒழிந்து, மெய்ஞ்ஞான போதமே நிலைத்து நிற்பதாயிற்று. ஆக, விவேகம் வைராக்யம் ஆத்மசமர்ப்பணம் எனும்முப்பெரு வெள்ளங்களும் அவர் பாற் கூடி நிற்பனவாயின.

நமது நாட்டில் தொன்று தொட்டு மூன்று பெரும் சித்தாந்தங்கள், அறிஞர்களாற் போற்றப்பட்டும், அநுபவத்திற்கு இலக்குகளாகப்பட்டும் நிலவி வலந்துள்ளன. ஒவ்வொரு சித்தாந்தத்தைப் பற்றியும் வரையப்பட்டுள்ள நூல்கள் அனைத்தும் வெள்ளம் போலத் தொடர்ந்து வந்துள்ளன ; ஒவ்வொரு சித்தாந்தத்தில் அடங்கிய கருத்துகளும் கம்பீரமாயும் ஆழ்ந்தும் ஒரு நதிப்போல மக்களின் உள்ளங்களிற் பாய்ந்து, அவைகளை நன்னிலைக்கு வரும்படிச் செய்துள்ளன. ஆனால் இம்மூன்று நதிகளும் ஒன்றுக்கொன்று சம்பந்தமின்றி வெவ்வேறாக ஓடிக்கொண்டிருந்தன. இவைகளின் சங்கமத்தைக் காணாமல் மக்கள் தம்முள் மாறுபட்டு, வழக்குகளையும் எதிர் வழக்குகளையும் மென்மேலும் பெருக்கிக் கொண்டு வந்தனர். இந்நிலையில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அம்மூன்று நதிகளின் சங்கமமாகி நின்று, அவைகள் ஒன்றோடொன்று உண்மையில் முரண்படுவனவல்ல என்பதை விளக்குகின்றனர். துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் என்னும் மூன்று சித்தாந்தங்களும் அநுபூதியை அடிப்படையாகக் கொண்டுள்ளனவேயாம். வெறும் அறிவைமட்டும் துணையாகக் கொண்டு நிலைநாட்டப்பட்டுள்ளனவல்ல. நமது பண்டைக்கால இருடி

யர் இம்மூன்று வகை அநுபூதிகளையும் பெற்றுத் தமது ஞான அநுபவங்களை வெளியிட்டுள்ளனர்; அவைகள் மறை மொழிகளாகத் திகழ்கின்றன. மறைமுடி யென்று சிறப்பித்துக் கூறப்படும் உப நிடதங்களில் அத்வைதம் மட்டுமோ, விசிஷ்டாத்வைதம் மட்டுமோ, துவைதம் மட்டுமோ போற்றப்படுகிறது என்று வழக்கிடுதல் முறையன்று. மூன்று மதங் களையும் நிலைநாட்டிய ஆசார்யர்கள் இறை வனது ஆணையால் அவதரித்து, மெய்ப் பொருளை அனுபவித்தற்கு மூன்று நெறி களை எடுத்துக் காட்டியவர்களே யாவார். மெய்ப்பொருளை மூன்று வகையாக அநு பவிக்கக் கூடும் என்பதை அவர்கள் அறி வித்தனர். இம் மூன்று பெரும் பிரிவு கட்குள் உலகத்திலுள்ள எவ்வித மதங்க ளும் அடங்கிவிடும்; ஏனெனில் துவை தத்திலும் கீழான ஒரு நிலையிலிருந்து எம்மதமும் தொடங்க முடியாது; அத் வைதம் (உண்மை ஒன்றே) என்பதினும் மிக உயர்ந்த ஒரு நிலையை நினைத்தலும் அரிது. ஒவ்வொரு மதத்திலும் அநு பூதியடைய முயல்பவர் துவைத நிலையி லிருந்து தொடங்கி, விசிஷ்டாத்வைத நிலைவழியாகச் சென்று ஐக்கிய நிலையை அடைதல் வேண்டும். இறைவனது சங்கற்பமும் நமது சங்கற்பமும் வெவ் வேறாக இருக்கும் நிலையில் ஆரம்பிக் கும் துவைத சாதகன்; தன் மதப்படி முன்னேற்றமடையும்போது, இரண்டிற் கும் சம்பந்தத்தைப் பின்னர் உணர்ந்து, முடிவில் இரண்டும் ஒன்றாதலைஉணர்வான். இறைவனை அன்பு செய்யத் தொடங்கும் பக்தன், வரவரத் தன்னை இறைவனது அன்பிற்கு வசமாக்கி, முடிவில் இறைவ னோடு ஒன்றாகிவிடுகிறான். பிரம்மம், மாயை என்னும் இரண்டும் வெவ்வேறாக இருப்பதாக உணரும் சாதகன் பின்னர், ஒன்றுள்ள இடத்து மற்றொன்றில்லை யென்பதை உணர்ந்து, முடிவில் பிரம்மம் ஒன்றே இருப்பதைக் காண்கிறான். சங் கற்ப ஐக்கியத்தை ஒருவரும், அன்பின் ஐக்கியத்தை இன்னொருவரும், சொரூப ஐக்கியத்தை மற்றொருவரும் வற்புறுத்து கின்றனர். மூவரும், தான் எனும் நினைவை அறவே இழந்துவிடும் துணிபுடையரா கின்றனர். அக் காரணத்தால் அனை வரும் முக்திக்கு உரியராகின்றனர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருவரே, மூவகை ஆசாரி யர்களுள் ஒவ்வொருவரது கொள்கைக் கும் அடிப்படையான பிரமாணத்தை அளிப்பது அவரவரது ஞான அநுபூதி நிலையே என்பதையும், அவ்வநுபூதி நிலை உண்மையான மேம்பட்ட (முத்தி யின்ப மளிக்கவல்ல) நிலையே என்பதையும் அநு பவத்தாற் கண்டறிந்தார். மேலும் யார் யாருக்கு எம்மதம் ருசிக்கின்றதோ, அதை அவர்கள் முழுதும் கடைப்பிடித்து சாத னம் பழகி முன்னேறி உயர்ந்த அநுபவத் தைப் பெறமுயலும்படி வேண்டியும் தூண் டியும் போந்தார் இப் பெரியார் ஒருவரே. இவர் ஒரு சமயம் தம்மை இறைவனின் தாசராகக் கருதியொழுகுவார்; மற்றொரு சமயம் தம்மை இறைவனது கருவியாக எண்ணியும், "நீயே என் வாயிலாக அனைத்தையும் இயற்றுகின்றாய்" என் றும் உணர்ந்தும் ஒழுகுவார். இன்னும் ஒரு சமயம் 'தான்' எனும் உணர்ச்சியை இழந்து ஐக்கிய நிலையில் நிற்பார். இம் மூவகை அநுபவங்களும் ஒன்றுக் கொன்று முரண்படுவனவல்ல என்பதை அநுபவ வாயிலாக நிலை நாட்டினர். இக் காரணத்தால் இவர் மூன்று மத சித்தாந் தங்கள் என்னும் பேராறுகள் ஒன்று கூடும் சங்கமமாகிற முழு வேதாந்தமாக விளங்குகின்றார்.

இன்னும் பல மும்மூன்றான புண்ணிய நதிகள் ஒருங்கு கூடும் சங்கமமாகவும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அறிஞர்களது கண் ணிற்குப் புலப்படுவார். அவற்றையெல் லாம் விரிப்பிற் பெருகும் என்னும் அச் சத்தால் சிலவற்றையே கூறிவிடுப்பாம். ஒரு ஞான குரவர்க்கு இன்றியமையாது வேண்டப்படுவன :—

சீடர்கள் ஒவ்வொருவருடைய இயல்பி லுள்ள மேன்மை தாழ்மைகளையும் நிறை வுகளையும் குறைவுகளையும் நன்கறியும் ஞானமும், தாழ்மையைப் போக்கவும் மேன்மையை வலுப்படுத்தவும் அவ சியமான சக்தியும், சக்தியிருந்தும்

ஞானமும் இருந்தும் பயன்படாது போகாதவாறு, அவர்களது துன்பத்தைக் கண்டு மனம் சகியாது, அவர்கட்கு வேண்டிய உதவியை யெல்லாம் வரையாது செய்தற்குத் தூண்டுகோலாய் அமையும் தண்ணருளும் ஆகிய மூன்றும், ஸ்ரீராமகிருஷ்ணர்பால் ஞானமும் சக்தியும் கருணையும் வெள்ளமாகப் பெருகும் மூன்று நாயகநதிகளாகி ஒன்று கூடியிருந்தன என்பது, அவர் சீடர்களை ஆட்கொண்ட வரலாற்றைக் கற்பவர்க்கு எளிதே விளங்கும். இன்னும் உன்னற்கரிய தெய்வீகப் பெருமையும் (சுவாமித்வமும்) அதை மறைத்துத் தாழ்ந்தவரோடுகலந்து அளவளாவும் சீலமும் (ஸௌசில்யமும்), குற்றங்களைக் கண்டு வெறுப்படையாததுமட்டு மன்றி அவைகளையே அருளுக்கு இலக்காக்குவதற்கு ஏற்ற தகுதியாகக் கருதும் தாயன்பும் (வாத்ஸல்யமும்) மூன்றுபெரு நதிகளாயோடி அவர்பாற் சங்கமமாயின. இராமாயண சாரமும் பாரதசாரமும் பாகவதசாரமும் ஆகிய மூன்று பெருங்குணப் பேராறுகளும் இவர்பால் ஒன்று கூடின. பகவான், பக்தன், பாகவதம் மூன்றும் ஒன்றுான தன்மையை அவர் விளக்கினர். பிரம்மசரியம், இல்லறம், துறவறம் மூன்றும் அவர்பால் ஒன்று கூடின. இன்னும் பலப்பல. சுருங்கச் சொல்லில், ஸ்ரீராமகிருஷ்ணர் என்னும் தெய்வத் திரிவேணி சங்கமத்தே தொழுது மூழ்குவார்க்குக் கலியுகம் ஒன்றும் இல்லாது போகும் என்பதே முடிவாகின்றது.

---

# சமாசாரங்கள்

## ஸ்ரீ சாரதா தேவியாரின் ஜன்ம திருநாள்

1940ஞு டிசம்பர் மாதம் 21உ சனிக்கிழமையின்று சென்னை மடத்தில் தேவிக்கான விசேஷ பூஜைகள் ஆராதனைகள் நடைபெற்றன. மாலையில் நடந்த மாதர் கூட்டத்திற்கு தேவியைத் தரிசித்து பாக்கியம் பெற்ற பாலம்மாள் அவர்கள் தலைமை வகித்தார்கள். ஸ்ரீமதி சொர்ணம்மாள் அவர்கள் தேவியின் சரித்திரத்தைத் தமிழிலும், Mrs. R.விலாசினி செனாய், B.A., B.L., ஆங்கிலத்திலும் வெகு விஸ்தாரமாக தேவியின் சரித்திரத்தை விரிவாகப் பேசினார்கள். ஆண் மக்களுக்குப் பகவான் இலக்ஷிய புருஷராக விளங்குவதுபோல் பெண் மக்களுக்கு ஸ்ரீ சாரதாதேவியின் புனித வாழ்க்கை எடுத்துக்காட்டாக விளங்குகின்றது என்று தமது பிரசங்கங்களில் இருவரும் வற்புறுத்திக் கூறினர். ஸ்ரீமதிகள் K. சாவித்திரி அம்மாள், அம்புஜம்மாள் ஆகியோரும் அன்று தேவியைப் பற்றிப் பேசினார்கள்.

## ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளின் ஜன்ம திருநாள்

ஜனவரி மாதம் 19உ ஞாயிறன்று ஸ்ரீ சுவாமிஜியின் ஜன்மவிழா வழக்கம் போல் சென்னை மடத்தில் விமரிசையாகக் கொண்டாடப் பெற்றது. காலையில் பூஜை, ஆராதனை, பஜனை, ஏழைகட்கு அன்னமளித்தல் நடைபெற்றன. பிற்பகல் ஹரிகதா காலக்ஷேபத்திற்குப் பின்னர் தமிழில் மயிலை ஸ்ரீ ரத்தின சபாபதி முதலியார் அவர்கள் சுவாமிகளைப் பற்றி அழகியதொரு சொற்பொழிவாற்றினர். வாலிபர்கள் கடமை, மாதர் முன்னேற்றம், ஹரிஜனர் அபிவிருத்தி, வேண்டத்தக்கக் கல்வி, சமயப் பற்றுதல், புறமதம் புகுதல் முதலிய பிரச்னைகளைப் பற்றி ஸ்ரீ சுவாமிஜி கூறிய கருத்துக்களை தெளிவாக ஸ்ரீ முதலியாரவர்கள் ஸ்ரீ சுவாமிஜி வாக்குகளிலேயே விளங்கக் கூறினர். பிறகு ஸ்ரீமான் C. R. ரெட்டி அவர்கள் ஆங்கிலத்தில் பேசுகையில், பல விதத்திலும் தம்மை அடிமைப்படுத்திக் கொண்டிருக்கும் இந்திய மக்கள் ஒவ்வொருவரும், என் இந்திய மக்கள் மாத்திரம், உலகின்கண் உள்ள ஒவ்வொருவரும், சாந்தம், சமாதானம், உண்மை சுதந்திரம் முதலிய உயரிய குணங்கட்கு ஊற்றாக விளங்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகாநந்த சரித்திரங்களையும் அவர்களது உபதேசங்களையும் ஊன்றிப் படித்து வாழ்க்கையில் கடைப்பிடித்து உய்யவேண்டும் என்று வற்புறுத்தினார்கள்.

---

## கடிதங்கள்

(முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசீயக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணா 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணா 3

---

## ஜகஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணா 12. சந்தாதாரருக்கு அணா 10.

---

# ப ஜ ன வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்கவேண்டுவ தவசியம்.

விலை அணா 12.

## சிகாகோ பிரசங்கம்

இது ஸ்ரீமத் சுவாமி விவேகாநந்தர் அமெரிக்கா தேசத்தில் திருவாய் மலர்ந்தருளிய முதற் பிரசங்கமாகும். நமது இந்து மதத்தின் உயர்வையும் நம்முடைய நாகரிகத்தையும் அமெரிக்கர்களுக்கு எடுத்துக்காட்டி, நமது இந்திய நாட்டைப் பற்றி ஐரோப்பிய மக்களுக்கு இருந்த தப்பெண்ணங்களை மாற்றிய அரும்பெரும் பிரசங்கம் இதுவே யாகும்.

விலை அணு 5, சந்தாதாரருக்கு அணு 4.

---

## முக்தி நெறி

ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தர் இயற்றிய 'Path to Perfection' என்னும் ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு. இனிய செந்தமிழ் நடையில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. முக்தியானது ஒவ்வொரு மனிதனுக்கும் உரிமையான தென்பதைத் தெளிவாய் உணர்த்துவது.

விலை அணு 2.

---

## ஈசோபநிடதம்

இப்போதே வெளி வந்திருக்கும் ஈசாவாஸ்யோப நிடதம் என்னும் இப் புத்தகம் தமிழ் மக்களுக்கு மிகவும் பயன்படும். இந்து மதத்திற்கு அடிப்படையா யிருக்கும் பத்து உபநிஷதங்களில் முதலாவதும் முக்கியமானவைகளில் ஒன்றுமான இது தகுந்த முறையில் இப்போதே முதல் முதலாக வெளிவந்துளது. சமஸ்கிருத ஸ்லோகங்களும், பதவுரை பொழிப்புரைகளுடன் அங்கங்கே ஸ்ரீ சங்கராது குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஹிந்துவின் கையிலும் இப்புத்தகம் இருக்கவேண்டிய தவசியம்.

விலை அணு 6.] [சந்தாதாரருக்கு அணு 4.

தபால் செலவுக்காக பிரத்யேகமாக ஓரணு அனுப்பப்படவேண்டும்.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உக] விக்கிரமஹு பங்குனிமீ° [பகுதி—ந

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்யாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தராற் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அநுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப்பட்டுள்ளது; வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உக | விக்கிரமஸு பங்குனிமீ | பகுதி-ந

## பிரார்த்தனை

---

இடர்ப்படு வோர்க்கு இன்னருள் கொழிக்கும்
 இறைவ! நீ தலைவனும் நண்பனு மாவாய்;
இடர்ப்படு வோருள் எளியனேன் போல
 இடர்மிக உடையார் யாவரும் இலரே;
துடைத்தேன் பாவத் துகள்தமை யாவும்
 தூயஉன் அருளால் நற்கதி என்னை
அடையவே அருள்வாய். அமைவுறு நண்பர்க்(கு)
 ஆங்கடன் இதுவே இறைவ! நண்ப!

—(சிவானந்த லகரிப் பாடலைத் தழுவியது.)

---

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

துயரம் (நமக்கு உண்டாக்கும் துன்பத்திற்குப் பதிலாக) எவ்வாறு ஈடு செய்கிறது என்பது, நீண்ட காலம் கழித்த பின்பு தான், அறிவிற்கும் விளங்குகின்றது. ஒரு காய்ச்சல், உடலில் ஓர் உறுப்பின் முறிவு, ஒரு கொடுமையான ஏமாற்றம், செல்வத்தை இழத்தல், நண்பரை இழத்தல், முதலியவை, அவை நேரும் சமயத்தில், ஈடுபண்ண முடியாத நஷ்டமாகவும் ஈடுபண்ணப் படாத நஷ்டமாகவும் தோன்றுகிறது. ஆனால், ஆண்டுகள் கழியக் கழிய, எல்லாச் செயல்கட்கும் அடிப்படையாயுள்ள ஆழ்ந்த நிவாரண சக்தி தானே வெளிப்படுகின்றது. ஒரு பிரிய நண்பன், மனைவி தம்பி, காதலன்,—என்பவரது மரணம் முதலில் எல்லா நலன்களையும் போக்குவது போலவே தோன்றினும், சிறிது காலம் செல்லலும், ஒரு வழி காட்டியாகவோ நற்றுணையாகவோ மாறி விடுகிறதைக் காண்கிறோம்; எவ்வாறெனில், அது சாதாரணமாக, நமது வாழ்க்கை முறையில் ஒரு பெரும் மாற்றத்தை விளைக்கின்றது; முடிவடைவதற்காகக் காத்துக் கொண்டிருந்த ஒரு வாழ்க்கைப் பகுதியை,—பாலப் பருவத்தையோ, இளமைப் பருவத்தையோ—முடித்து விடுகின்றது; பழக்கமாயிருந்த ஒரு தொழிலையோ, வீட்டையோ, வாழும் வகையையோ நொறுக்கிவிட்டு, ஒழுக்கம் வளர்ச்சியடைதற்கு மிக்க அனுகூலமான புதியனவற்றை உண்டாக்கிக் கொள்ள இடம் தருகின்றது.

—எமர்சனர்

# தேவியின் திருவாக்கு

(ரா. ராமகிருஷ்ணன், M.A., L.T., மொழிபெயர்த்தது)

**1911,** மே, 14-ம் தேதி : இன்றைய தினம் நான் தூய அன்னையின் முன்னர் வணங்கினவுடனே அன்னையார், "நீ வந்துள்ளது மிகவும் நல்லதாயிற்று. இவ்வளவு காலமும் நான் உன்னைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்தேன். இத்தனை நாட்களாக நீ ஏன் வரவில்லை?" என்று கூறினர்.

சிஷ்யை : நான் கல்கத்தாவை விட்டு வெளியேகி யிருந்தேன். என் தந்தையின் வீட்டிற்குச் சென்றிருந்தேன்.

அன்னையார் : சுமதியைப்பற்றியசெய்தி என்ன? நீண்டகாலமாக அவள் இங்கு வரவேயில்லை. அவள் படிப்பில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனளோ?

சிஷ்யை : அவள் புருஷர் இங்கு இல்லை.

அன்னையார் : சரி. அவள் பாடசாலை செல்லுகிறளா? அவர்கள் எல்லோரும் உலகக் கடமைகளைப் புரிகின்றனரோ?

சிஷ்யை : தாயே! உலகம் என்பது யாது, நமது கடமையாது என்பதை நாங்கள் அறியோம். நீங்கள் ஒருவரே அறிவீர்கள்.

அன்னையார் சிரித்தார். "இன்று எவ்வளவு வெப்பமாயிருக்கிறது!" என்று கூறி என்னிடம் ஒரு விசிறியைத் தந்தார். "என் அன்பே! நீ அவசரமாகப் புசித்துவிட்டு இங்கு ஓடிவந்துள்ளாய். இப்பொழுது என்னருகில் படுத்துக் கொள்" என்று சொன்னர்.

பாய் ஒன்று தரையின்மீது விரிக்கப் பட்டது. அன்னையின் படுக்கையின்மீது சயனித்துக்கொள்ள நான் தயங்கினேன். ஆனல் அன்னையார், "நீ ஏன் தயங்குகிறய்? படுத்துக்கொள். என் சொற்கலைக் கேள்" என்றர். அதற்கு மேல் நான் இணங்காடலிருப்பது கூடவில்லை. அன்னையார் சற்றுக் கண்ணயர்ந்ததால் நான் மௌனமாகப் படுத்திருந்தேன். சில சிஷ்யைகளும் இரு சந்நியாசினிகளும் வந்தனர் சந்நியாசினிகளுள் ஒருவர் நடுத்தரவயதுடையவர். மற்றவர் வாலிபப் பருவத்தினராவர். அன்னை கண்களை மூடியபடியே "யார் அது? கௌரிதாசியா?" என்று வினவினர். வாலிபப் பருவத்தினரா யிருந்த சந்நியாசினி "அன்னையே! அதை எவ்வாறு நீங்கள் அறிந்தீர்கள்?" என்று கேட்டார். தாம் அவ்விஷயத்தை உள்ளத்தால் உணர்ந்ததாக அன்னையார் கூறினர். சில நிமிஷங்களுக்குப் பிறகு அன்னையார் எழுந்து உட்கார்ந்து கொண்டார். வாலிப சந்நியாசினி, "நாங்கள் பேலூர் மடம் சென்றிருந்தோம். சுவாமி பிரேமாநந்தர் எங்களைச் சிறப்பாக உண்பித்தார். அந்த சுவாமி அங்கிருக்கும்பொழுது சிறப்பான முறையில் விருந்துண்ணுமல் மடத்தினின்று எவரும் திரும்புவது முடியாத காரியமாகும்" என்று சொன்னர். அறையில் இருந்த பெண்டிருள் ஒருவர் நெற்றியில் குங்குமம் அணியாமல் இருந்ததற்காக அன்னையார் அவரைமெல்லக் கடிந்துகொண்டார். சுமங்கிலிப் பெண்டிர் குங்குமம் அணிவது அவசியமாகுமல்லவா?

கௌரீமா (கௌரீதாசி அல்லது கௌரீமா என்னும் மாது ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யை ஆவார்,) என்னைப்பற்றித் தூய அன்னையாரிடமிருந்து தெரிந்து கொண்டவராய்த் தமது பெண்பாடசாலைக்கு வருமாறு என்னை அழைத்தார். சுமார் அறுபது பெண்கள் அப்பாடசாலை

யில் படித்து வந்தனர். எனக்குத் தையல் வேலை தெரியுமா வென்று கௌரீமா வினவினர். அவ்வேலையில் எனக்குக் கொஞ்சம் பயிற்சியுண்டு என்று நான் கூறவும் அவர் ஆசிரமத்து மாணவிகளுக்கு எனக்குத் தெரிந்தவரையில் தையல் வேலை கற்பிக்குமாறு வேண்டிக் கொண்டார்.

தூய அன்னையாரின் அனுமதியைப் பெற்று நான் ஒருநாள் கௌரீமாவின் பாடசாலையைப் பார்க்கச் சென்றேன். கௌரீமா என்னிடம் பேரன்பு காட்டியவராய், தினந்தோறும் ஒன்று அல்லது இரண்டுமணி நேரம் அங்குவந்து பெண்களுக்குச் சில பாடங்கள் போதிக்குமாறு வேண்டினார். "சொற்பப் பயிற்சியைப் பெற்ற நான் ஆசிரியத்தொழிலில் ஈடுபடுவது அழகாக இல்லை. நீங்கள் வற்புறுத்தினால், நான் அக்ஷரங்களை வேண்டுமானால் அவர்களுக்குச் சொல்லித் தருவேன்," என்று நான் கூறினேன். ஆனால் கௌரீமா பிடிவாதமாக இருந்ததால் அவரது வேண்டுகோளுக்கு நான் இணங்க வேண்டியதாயிற்று.

ஒருநாள் கௌரீமாவின் பாடசாலையினின்றும் வெளிவந்ததும் நான் தூய அன்னையைக் காணவந்தேன். அப்பொழுது கோடைகாலம். நான் களைத்திருந்தேன். அன்னையார் தம் அறையில் இருந்தார். சிஷ்யைகள் சிலர் அவரைச் சூழ்ந்து இருந்தனர். நான் அவரை வணங்கியவுடனே, அவர் என்னை நோக்கிவிட்டுக் கொசுவலையின் மீதிருந்து சிறிய விசிறியொன்றை எடுத்தார். என் களைப்புத் தீருமாறு எனக்கு விசிறுவதற்கு ஆரம்பித்தார். ஆதரவுடன் "உன் மேலங்கியை உடனே நீக்கிவிடு. உன் உடல் குளிரட்டும்" என்று பகர்ந்தார். என்ன ஒப்பற்ற பேரன்பு ! பல சிஷ்யைகளின் முன்னர் அன்னை என்னைச் சீராட்டலானார். எனக்கு வெட்கமாயிருந்தது. அனைவரும் என்னையே உற்றுநோக்கினர். அன்னையின் ஆதரவைக் கண்டு நான் மேலங்கியை நீக்குவது அவசியமாயிற்று. விசிறியை என்னிடம் கொடுக்குமாறு நான் எவ்வளவு வேண்டியும் அன்னை ஆதரவுடன் "அது சரி, நீ சிறிது களைப்பாறு" என்று கூறிக்கொண்டிருந்தார். சில தின்பண்டங்களும் ஒரு டம்ளரில் நீரும் எனக்கு அளித்தார் அன்னை. நான் அவற்றை உட்கொண்டதைக் கண்டு அன்னையார் களிப்பெய்தினார். பாடசாலை வண்டி எனக்காகக் காத்திருந்தமையால் நான் விடைபெற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று.

---

# துவைதத்தினின்றும் அத்துவிதத்திற்கு

(ஸ்ரீ துரியாநந்த சுவாமிகள்)

"பிணியும், இழவும், துயரமும், சிறைப்படுதலும், விபத்தும் - இவை யாவும், மனிதனது வரம்புகடந்த செயல்களின் பயனாக விளையும் கனிகளேயாம்." சாஸ்திரங்கள் இவ்வாறு கூறுகின்றன. ஆனால் ஒருவன் இறைவனிடம் சரண் புகுந்துகொண்டு, "உடலும் வருத்தமும் ஒன்றையொன்று கவனித்துக்கொள்ளட்டும்; ஆனால் என் மனமே, நீ சந்தோஷமாயிரு" என்று கூறி, முன்சொன்னவைகளை எதிர்த்து நிற்பானாயின், அவன் துன்பத்தின் பெரும் பகுதியினின்றும் காப்பாற்றப்படுகிறான். காரணம் யாதெனில், அழுவதினாலும் கையை மார்பில் அடித்

துக் கொள்வதினாலும் கிடைக்கும் பயனெல்லாம் துயரத்தைத் தவிர வேறில்லை. மேலும், அது ஒரு மனிதனை உயர்ந்த இலக்ஷியத்தை மறக்கும்படி செய்கிறது. ஒருவனுக்கு சுகத்தில் இச்சை இருந்தால் மட்டுமே, உடல் நோயுறும்போது அவன் பெருந்துயரத்திற்கு உள்ளாகிறான். இல்லாவிடில், பக்திசாதனங்களைப் பழகுதற்கு நல்ல நிலையிலுள்ள மனமொன்றே அவசியமாகின்றது; நல்ல நிலையிலுள்ள உடல் அவ்வளவு அவசியமன்று. ஞானசாதனங்களைப் பழகுதல் மனிதனைப்பற்றிய ஒரு காரியமாகும். தூய கருமங்களை இயற்றுதலே, உடலின் நிலை எவ்வாறிருப்பினும், மனதை நல்ல நிலையில் வைத்திருக்கப் போதுமானதாகும். ஆதலின், செயலின் தூய்மையைப்பற்றி ஒருவன் சிறப்பாகக் கவனித்தல் வேண்டும். சிறிது சிறிதாக உடல் ஒவ்வொரு நாளும் மரணத்தை அணுகிக்கொண்டிருக்கிறது. இவை எவராலும் தடுத்தல் ஒண்ணாது. ஆனால் மனமோ நீடித்து நிலைத்திருக்கக் கூடியது; அதாவது, உடல்கள் வரும், போம்; ஆனால் மனமோ பூரணத்தையும் ஞானத்தையும் அடையும்வரை நிலைத்திருக்கும். மீண்டும் மீண்டும் பிறப்பெடுத்தற்கு ஏதுவாகும். ஆதலின் மனதை தூய்மையாக்குவதற்கு முயலுவதே நமக்கு முக்கியமான கடமையாகும்.

துவைதமோ, விசிஷ்டாத்வைதமோ, அத்வைதமோ, இன்னும் வேறு எந்தக் கொள்கையோ, எல்லாம் மனதோடு தொடர்பு கொண்டனவாம். ஆத்ம சொரூபத்தை உணர்வதினால் அதாவது, "நான் பிரம்மம்" என்ற அனுபூதியினால், அத்வைத நிலை அடையப்படுகின்றது. உடலும் மனமும் உள்ளவரையும், துவைதம் நீங்காது உறைந்து வருகின்றது. ஒருவன் தன்னை பிரம்மமென்று அறிந்ததும், துவைதம் மறைந்துவிடுகிறது; அப்போது, சைதன்யமயமான மெய்ப்பொருள் ஒன்றே எஞ்சுகின்றது. எல்லாத் துன்பங்கட்கும் காரணமாவன, நமது வரையறைகளே. "நான் இன்னின்னான்; நான் இன்னின்னானது மகன்; இன்னின்னது எனது மதம்; இவை நான் முயன்றுபெற்றவை" என்பனபோன்ற பாவனைகளே துவைத உணர்ச்சிக்கு ஏதுவாகின்றன. ஆனால், "நான் உடலுமல்ல, மனமுமல்ல, அறிவுமல்ல; பாவம் ஒட்டமுடியாத தூய பிரம்மமே நான்; நான் ஸச்சிதாநந்த சொரூபன்" என்று ஒருவனால் நினைக்க முடியுமாயின், துவைதத்திற்கு அங்கே இடம் ஏது? ஆனால் அழகான வெறும்வார்த்தைகளால்மட்டும் அப்பத்திற்கு மேல் நெய் தடவ முடியுமா? அது உண்மையாக வேண்டுமாயின், அனுபவம் இன்றியமையாததாகும். இப்போது ஒருவன் தன்னை இன்னின்னானென்றும், இன்னின்னது தனது பெயரென்றும், எவ்வளவு உறுதியாக நம்புகின்றானோ, அவ்வளவு உறுதியாகத் தன்னைப் பிரம்மமென்று கருதும் அக்கணமே, அத்வைத அனுபூதி உண்டாகும். துவைதநெறி சம்பந்தமான ஞான சாதனங்கள் அத்வைத உணர்வினை எழுப்புவதற்காகவே அமைந்துள்ளன. துவைத நிலைக்கு, நாம் நன்கு பழக்கப்பட்டுள்ளோம். இந்த பாவனையை நாளடைவில் அதிகத் தூய்மை யாக்கும் பொருட்டு, இறைவனோடு ஒரு நெருங்கிய உறவினை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். இப்போது உலகத்தோடு நாம் உறவு அமைத்துக் கொண்டுள்ளோம்; இதை நொறுக்கிவிட்டு, பகவானிடம் கொள்ளும் உறவை அதற்குப் பதிலாக நிலைநாட்டிவிடவேண்டும். இதை முழுதும் செய்து முடிப்போமாயின், துவைதம் தானாகவே பறந்துவிடும். பகவானாகிய மெய்ப்பொருளே அப்போது எஞ்சி நிற்கும்;

இச்சிறிய 'நான்' எனும் அஹங்காரம் மறைந்துவிடும். துவைதத்திலிருந்து பக்தி முறை வழியாக அத்துவித நெறிக்குச் செல்லுதலே இதுவாகும்.

இன்னொரு முறையும் உள்ளது; அது 'நேதி' மார்க்கம் எனப்படும்; இப்பொழுதே "நான் உடலல்ல, மனமல்ல, புத்தியல்ல; அதாவது, இப்பொழுதே "நான் சச்சிதானந்தப் பிரம்மமே; உடலழியினும் நான் அழியேன்; இன்பமும் துன்பமும் என்மனத்தின் இயல்புகளாகும்; அவை எனக்குரியனவாகா; நான் மனம் வாக்குகட்கு அதீதனாக பகுக்க வொண்ணாத ஆன்மா; இரண்டற்ற ஒன்றே" என்று கூறி, அனைத்தையும் மறுத்தலினாலே அத்துவித நிலையினை அடைதலாகும். இத்தகைய உறுதியான உணர்ச்சி ஒருவற்கு உண்டாகுமாயின், அத்துவித ஞானம் அடையப்படும். ஆனால் இது எளிதான காரியமா? வாயால் கூறுவதனால் மட்டும் இது அடையக் கூடியதா? அத்தன்மையதே யல்ல. குருதேவர் பின் வருமாறு கூறுவதுண்டு:— "ஒருவன் தனது கண்களை மூடிக்கொண்டு, 'முள்ளும் பொய், குத்துவதும் பொய்' என்று திரும்பத் திரும்பக் கூறுவதினால் யாது பயன்? கையைக் கீழே வைத்தலும், அதன்மீது குத்துவது உணரப்படுகிறது. வீட்டுத்தீர்வை கொடுப்பதற்காகக் கவலைப்படுதலைத் தவிர்க்க இயலாதபோது, "நான் ஆகாயமே" என்று கூறுவதனாற் பயன் யாது?" இக்காரணத்தால் அத்துவித ஞானத்தை உடனே அடைதல் என்பது எல்லார்க்கும் ஏற்றதல்ல. இக்காரணம் பற்றியே பகவானும் கீதையில் பன்னிரண்டாம் அத்யாயத்தில் "உடலுணர்ச்சியுடையோர்க்கு அவ்யக்த நிலையென்னும் குறிக்கோள் எய்துதற்கு மிக அரிதாகும்" (கீதை, 12—5) என்றும், "ஆனால், எல்லாச் செயல்களையும் எனக்கே அர்ப்பணம் செய்து, என்னையே பரமான குறிக்கோளாகக் கருதி, ஒன்றையே பற்றும் யோகநிலையில் நின்று என்னையே தியானித்து, என்னை வழிபடுபவர் எவரோ, என்பால் மனத்தை நிலை நாட்டும் அவரை நானே, ஓ! பார்த்தனே, பன்னாளாகுமுன், அழியும் பவக்கடலினின்றும் கரையேற்றுபவனாவேன்"

(கீதை 12-6, 7)

என்றும் கூறியுள்ளார்.

பகவானே ஒவ்வொன்றையும் சரிப்படுத்தி வைக்கிறார். அவரை உண்மையாகச் சார்ந்திருக்க முடியுமானால், இந்த உதவியை அவரிடமிருந்து எவனும் பெறலாம். இதுதான் எளிதா? எல்லார்க்கும் பாடுபடாமல் இதுதான் சாத்தியமாகுமா? ஆகாது. இதுவும் பகவானது அருளைப் பொறுத்ததாகிறது; அது இல்லையேல், ஒரு தூயமஹானது இணக்கத்தை (ஸத்ஸங்கத்தை)ப் பொறுத்ததாகிறது. இதுவும் இல்லையேல், பெற ஒண்ணாது. வெறுமனே அழுத்திக் கூறுவதனால் மட்டும், யாது பயன் விளையும்? ஒருவன் தனது மனத்தில் ஆழத்தே பதிந்து கிடப்பனவற்றைக் கண்டு பிடித்தல் வேண்டும்; அவைகளைத் தூயனவாக்கி, இறைவனுக்கே எப்பொழுதும் சமர்ப்பித்துக் கொண்டிருத்தல் வேண்டும். இது எளிதா? ஒருவன் தனது ஆயுள்கால முழுமையும் பாடுபட்ட பின்னாவது இத்தகைய மனநிலையை அடையக் கூடுமாயின், அவன் பாக்கியசாலியே. இது ஒரு வேடிக்கையான காரியமன்று. துவிதநிலையோ அத்துவித நிலையோ எதுவாயினும், அந்நிலையை மனதாற் பற்றி உணர்ந்து, சித்தத்தில் நிலை நாட்டுதல் என்பது மிக மிக அரிதாகும். துவிதம், அத்துவிதம் இரண்டிற்கும் பகவான் சங்கரர் பின்வரும் வேறு பாட்டை எடுத்துக் காட்டியுள்ளார்:— "சிலர் நான் உன்னைச் சேர்ந்தவன்"

என்று கூறிக்கொண்டு உன்னை [பகவானை] வணங்குகின்றனர்; வேறு சிலரோ "நான் நீயே" என்று வற்புறுத்தி வருகின்றனர். இந்த அற்ப வேறுபாடு இரண்டிற்கும் இடையே உள்ளது; எனினும், இரண்டிற்கும் முடிவு ஒன்றேயாம். எது ஒருவற்கு ருசிக்கின்றதோ, அவன் அந்த நெறியைப் பின்பற்றிக் கொள்ளலாம்."

ஆனால் அந்த மனநிலை (மனோபாவனை) தூயதா யிருக்கவேண்டும். 'பகவானது நாமத்தை வாயால் உரைத்துக்கொண்டு, அதே சமயம் ஆடைகளை (நனையாதபடி) உயரத்தூக்கிக் கொள்ளுதல்' என்பது தகாது. நாம் குறியாகக் கொள்ளும் மனநிலை அத்துவிதநிலையாயின், உடலையும் உள்ளத்தையும் அறிவையும் ஒவ்வொன்றையும் இல்லையென (பொய்ப் பொருள்களென) மறுத்து விடல்வேண்டும். "நான் பிரம்மன்" என்று ஒருவன் சொன்னதும், அக்கணமே, இன்பதுன்பத்தைப் பற்றிய உணர்ச்சி முழுவதும் அவனை விட்டு நீங்கிவிடல் வேண்டும்; உடனே அவன் அகண்டநிஷ்கிரிய நிஷ்களங்க நிராமய ஆத்மனாக ஆகிவிடுவான். 'யான் இறைவனது மகன் அல்லது தாசன்' என்று ஒருவன் கூறுவனாகில், அவன் தன்னை முழுதும் பகவானுக்கே ஒப்படைத்துவிடவேண்டும்; அவர் யாது செய்யினும், தன்னை எந்நிலையில் வைக்க நினைக்கினும், யாவும் தனது நன்மைக்கேயாம் என்று உறுதியாக நம்புதல்வேண்டும். இவ்விரண்டும் மிகக் கஷ்டமானவையேயாம். இரண்டும் பழகவேண்டியனவேயாம். ஆனால் இரண்டிற்கும் பலன் ஒன்றேதான்—அதாவது, பிறவிச் சுழலினின்று நீங்கிப் பரமானந்தத்தை அடைதலே. ஒவ்வொருவனும் தனக்கு எது ருசிக்கின்றதோ, அதைக் கடைப்பிடித்துக் கொள்வானாக; ஆனால் அதில் அவனது முழுமனதும் ஊன்றியிருத்தல் வேண்டும். இது இல்லையேல், எதுவும் பயன்தராது போகும்.

பாகவதத்தில் பதினோராவது அத்யாயத்தில் உத்தவருக்கு உபதேசம் செய்யும் இடத்தில், பற்பல வகைப்பட்ட யோகங்கட்கும் பற்பல வகைப்பட்ட மக்களில் இன்னின்னார் தகுதியுடையார் என்பதைப் பகவான் நன்குதெளிவுபடுத்தியிருக்கிறார்.

"மக்கட்கு நன்மை உண்டாக்கும் விருப்பத்தால் நான் ஞானம், கருமம், பக்தியென்னும் மூன்று யோகங்களையும் கூறியுள்ளேன். இவைகளைத் தவிர வேறு வழி இல்லை. பற்றற்றவராய்க் கருமங்களினின்றும் நீங்கியிருப்பவர்க்கு ஞானயோகம்; கருமங்களை இயற்றுவதில் பற்றுள்ளவராயும், ஆசைகள் உள்ளவராயும் இருப்பவர்க்குக் கருமயோகம்; பற்றொழிந்தவரா யிராமலும், பொருள்களில் மிதமிஞ்சிய பற்றுள்ளவரா யில்லாமலும், எனது மொழிகளில் நம்பிக்கையுள்ளவராயும் இருப்பவர்க்கு பக்தியோகம் பயன் தருவதாகும்."

உங்கள் மனதிற்குள்ளே முற்கூறியவற்றைச் சிந்தித்து ஆராய்ந்து பார்ப்பீர்களாகில், யார் யார் எந்தெந்த யோகமுறைக்குத் தகுதியுள்ளவர் என்பதை நீங்களே உங்கட்கு முடிபுகட்டிக் கொள்ளலாகும். உலகப் பொருள்களிற் செல்ல ஒட்டாது மனத்தை இழுத்துத் திருப்பியவர் எண்ணிக்கையில் பலரல்லர்; ஆதலின் ஞானயோகம் பழகுதற்கு அருகராயிருப்பார் மிகச் சிலரேயாவர். உலகப்பொருள்களிடத்து அளவிற்கு மிஞ்சிய பற்றுள்ளவர்க்குக் கருமங்களை விட்டொழித்தல் இயலாத காரியமாகும். ஆதலின் நடுத்தர வழியைப் பின்பற்றுபவர், அதாவது, முழுதும் பற்றற்றவராகாமலும், பெரும் ஆசையில் மூழ்கியுள்ளவராகாமலும், பக

வானிடத்து நம்பிக்கையும் பக்தியும் உடையவராயும் இருப்பவர், பக்திநெறியைப் பின்பற்றுதல் மூலமாக எளிதாக ஞானத்தை அடைவார். இப்பக்தி நெறியைப் பின்பற்றுதல் விரைவில் பயனை அளிக்கும்; அதைப் பழகத் தொடங்குபவர் துவைதத்தில் ஆரம்பித்தல் வேண்டும். அந்த பக்தி இறைவனது அருளால் முதிரும்போது, அத்துவித ஞானம் தானாகவே வந்துவிடுகிறது.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

பகவத்கீதை சிறியதொரு நூலேயாகும். ஆனால் அதுவே ஹிந்து மதத்தின் தலை நூலாக விளங்குகிறது. பெருந் தத்துவங்கள் அதன்கண் காணக் கிடக்கின்றன. வாழ்க்கைப் பிரச்னைகள் பலவற்றிற்கு அதனில் விடை காணலாம். துறவிகள் அல்லது முதியோர்கள் மட்டுமே அதைப் படிக்கவேண்டுமென்பதில்லை. பாலர், பாமரர், பண்டிதர், பெண்டிர்—அனைவரும் அதைப் படித்துப் பயன் பெறலாம். ஆனால் படிப்பவரது உள்ள வளர்ச்சிக்கேற்றபடி அதனுடைய பொருள் விரிவுபடும். அது ஒரு வற்றாத ஊற்று. இறைக்க இறைக்க அதினின்றும் தண்ணீர் ஊறிக்கொண்டேயிருக்கும். பகவத்கீதையில் இன்னுமொரு விசேஷமுமுண்டு. கிருஷ்ணபகவான் அதை அமைதி நிறைந்த குகையொன்றில் சீடனொருவனுக்கு உபதேசிக்கவில்லை. யுத்தகளத்தினிடையில் போர் வீரனுக்கே அது கூறப்பட்டது. வாழ்க்கையே ஒரு பெரும் போராட்டம். நாமனைவரும் அதில் ஈடுபட்டுள்ள வீரர்களாவோம். கீதையே நம்மனைவருக்கும் வழி காட்டியாகும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் பகவத்கீதைக்கு ஒப்பாவார். சிறுவரும் அவரது வாழ்க்கை நூலைப் படித்துப் பல படிப்பினைகளைப் பெறக்கூடும். முற்றும்துறந்த முனிவரும் ஞானிகளும்கூட அவரிடமிருந்து அறியவேண்டிய விஷயங்கள் பல உள்ளன. இல்லறவாசிகளுக்கென அவரது வாழ்வில் தனிப்படிப்பினைகள் ஏராளமாக உள்ளன. ஸ்ரீராமகிருஷ்ணரது விரிவான ஜீவிய நூலைச் சில முறைகள் படித்துவிட்டால் அவரைப் பற்றி அறியவேண்டிய விஷயம் இனி யாதும் இல்லை என்ற எண்ணம் நம் மனத்தே தோன்றலாம். அம்மாதிரி எண்ணுவது பெருந் தவறாகும். அவரது வாழ்க்கையைத் தியானம் செய்யச் செய்யப் புதிய ஒளி தோன்றிக்கொண்டேயிருக்கும்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லற வாழ்வைப்பற்றிச் சற்றுச் சிந்திப்போம். காமகாஞ்சனமென்பதைக் கனவிலும் கருதாத இப்பெரியார் தாமாக வலியப் போய்த் திருமணம் செய்துகொண்டதும், (தமது தாய் தமக்குத் திருமண முயற்சி செய்த பொழுது அவர் அதை எதிர்க்கவேயில்லை) பகவத் தரிசனம் கிடைத்த பிறகும் தம்மிடம் வந்த மனைவியை நீக்கிவிடாமல் அவளை ஏற்றதும் வியப்பைத் தரும் விஷயங்களேயாம். துவராஜனைக விளங்கிய இம்மகான் தமது முக்கிய சீடர்களைத் துறவில் ஈடுபடச் செய்தாரேனும் உலக மக்களில் பெரும்பாலோர் இல்லற வாழ்வையே ஏற்று நிற்பர் என்பதை எண்ணியே அப்பெரும்பாலோருக்கும் தமது வாழ்வு பயன்படத் தக்கதாக விருக்கவேண்டுமென்ற கருணை நோக்குடன் தாமே இல்லறத்தைப் பின்பற்றியருளினர்.

குடும்ப வாழ்வே நாட்டு வாழ்வுக்கு அடிப்படையாக உள்ளது. குடும்பவாழ்வு சீர்ப்பட்டால் தேசீய நலனும் ஏற்பட்டு வரும். குடும்ப வாழ்வை நடத்துவோர் ஆண் பெண் என்ற இருபாலாருமாவார். இவ்விருவரும் நல்வழிப்பட்டாலொழியக் குடும்ப நிலை முன்னேறாது.

பண்டை நாளிலே நமது நாட்டில் பெண்டிர் பதிவிரதா தருமம் என்னும் நெறியைக் கைப்பற்றவேண்டு மென்று போதிக்கப்பட்டனர். கணவனையே குருவாகவும் தெய்வமாகவும் ஏற்று அவன் மன அமைப்புக்கேற்றவாறு இல்லாள் ஒழுக வேண்டு மென்பது அந்நெறியின் தத்துவமாகும். இந்நெறியை வியப்பை அளிக்கும் உயர்ந்த முறையில் பின்பற்றியவர் சீதாபிராட்டியாவார். இராமனைத் தவிர வேறு சிந்தனையற்ற அம்மாது நமது நாட்டுப் பெண்டிருக்கு நிரந்தரமான இலக்ஷியமாவார். சீதாபிராட்டியின் மகிமை பாரதநாடு அறிந்ததொரு விஷயம்.

சீதாபிராட்டியின் இலக்ஷியத்தைப் பாரத நாடு மறக்கக்கூடா தென்பதைக் காட்டவே போலும் ஸ்ரீராமகிருஷ்ணர் சாரதாதேவியைத் தம் வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டார். பதிவிரதை எனும் சொல் சாரதாதேவிக்கு மிகவும் நன்றாகப் பொருந்தும். குருதேவர் உயிருடனிருந்தபொழுதும் அவர் பூதவுடல் நீத்த பிறகும் அவர் தம் நாதனைப் போற்றுவதையே தமது தினசரிக் கடமையாகக் கொண்டார். சாரதா தேவியின் ஜீவிய சரிதத்தைப் படிப்பவர்கள் இதற்கான பல நிதரிசனங்களைக் காணலாம்.

ஸ்ரீ அபேதாநந்த சுவாமிகள் சாரதா தேவியைக் குறித்துச் செய்துள்ள பிரார்த்தனை யொன்றில் அவ்வம்மையின் குணத்தை அழகாக ஒரே சுலோகத்தில் சுருக்கிக் கூறியிருக்கிறார். "ராமகிருஷ்ண கதப்ராணாம் தந்நாம ச்ரவணப்ரியாம்—தத்பாவரஞ்சிதாகாரம், விச்வமாத்ருஸ்வரூபிணீம்." சாரதாதேவியின் உயிர் குருதேவரிடையே நிலைத்துநின்றது. அவரது அருங்குணங்களைப் பேசுவதிலேயே அவருக்கு இன்பமும் அதிகம். தேவியாரது உடல் பொருள் ஆவி யாவும் குருதேவரிடமே லயித்து நின்றன.

சாரதாதேவியின் மூலம் பதிவிரதா இலக்ஷியத்தை உலகிற்கு எடுத்துக் காட்டிய ஸ்ரீராமகிருஷ்ணர் தமது வாழ்க்கையின்மூலம் வேறோர் உயர் இலக்ஷியத்தை மக்களுக்கு விளக்குகிறார்.

பெண்டிர் பதிவிரதைகளாக இருப்பது எவ்வளவு இன்றியமையாததோ அவ்வளவு இன்றியமையாததுதான் ஆண்கள் "பத்னீ விரதர்கள்" ஆக இருப்பதும். பத்னியைத் தெய்வமாகக் காண்பவனே "பத்னிவிரதன்" ஆவான்.

இராமபிரான் ஏகபத்னீ விரதர் என்று போற்றப்படுகின்றார். அவர் "பத்னீ விரத"ருந்தான். சீதையிடம் அவருக்கிருந்த அன்பின் ஆழம் அளவிட முடியாதது. இராஜ்யத்தை விட்டுத் துரத்தப்பட்டபொழுது கடுகளவு வருத்தமும் அடையாத இராமர் சீதை களவாடப் பட்டதும் எய்திய வருத்தத்திற்கு அளவேயில்லை. சீதையைத் திரும்பப் பெறும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டார். சீதாபிராட்டியை அக்னிப் பிரவேசம் செய்யுமாறு வற்புறுத்தியதும் பட்டாபிஷேகத்திற்குப் பிறகு அவளை மீண்டும் வனமனுப்பியதும் வெளிப் பார்வைக்குக் கொடூரச் செய்கைகளாகத் தோன்றிய பொழுதிலும் உண்மையில் அன்புச் செய்கைகளேயாகும். இராமருக்குச் சீதாபிராட்டியாரிடமிருந்த பேரன்பு சுய நல அன்பல்ல. அவ்வம்மையின் புகழும் மானமும் காப்பாற்றப்படும் பொருட்டுத் தாம் அவளை விட்டுப் பிரிய நேர்ந்தாலும்

இராமர் அப்பிரிவை பொருட்படுத்தினு ரில்லை. உண்மை யன்பின் அடையாள மென்ன? தன் துயரைப் பொருட்படுத் தாது அன்புப் பொருளின் மீடிருந்த நன்மையை நாடுவதேயாகும்.

ஸ்ரீராமகிருஷ்ணருடைய இல்லற வாழ்வை ஒரு சொல்லில் விவரிக்க வேண்டு மாயின் அவர் ஒரு 'பத்னீ விரதர்' என்று கூறலாம். மனைவியைத் தவிர மற் றெல்லா மாதரையும் அன்னையின் வடிவமாகப் பாவிக்க வேண்டுமென் பது ஆன்றோர் மொழி. ஆனுல் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது மனைவி உட்பட அனைவரையும் அன்னையின் வடிவங்க ளாகப் போற்றினுர். சாரதாதேவியிடம் அவர் கொண்டிருந்த பேரன்பு இணையற்ற தொரு பற்றுகும். கோயிலில் இருப்புக் கொண்டிருந்த ஜகன்மாதாவே உயிரும் உடலும் கொண்டுத் தம்முடன் சாரதா தேவியாக நின்றதாக அவர் உணர்ந்தார்.

இரும்பைப் பொன்னுக்கும் குளிகை யொன்றுண்டாம். தெய்விகத் தொடர்பு என்பது அத்தகைய குளிகையாகும். வாழ்வில் எது தெய்விகத் தொடர்பு பெறு கிறதோ அது பொன்னுக மாறுகிறது. ஆசை பொல்லாதுதான். ஆனுல் தெய்வத் தினிடத்து ஆசை கொள்ளுவது மிகவும் நல்லதேயாகும். தற்பெருமை கெட்டது தான். ஆனுல் நான் பகவானது குழந் தை என்று பெருமை கொள்ளுவது நலனையே தரும். அவ்வாறே இல்லற வாழ்வு மோக்ஷ சாதனத்திற்குப் பெரும் இடையூறுதான். ஆனுல் அவ்வாழ்வைத் தெய்விகத் தொடர்பு உடையதாகச் செய் தால் அதுவே மோக்ஷ நிலையை எய்து வதற்குப் பெரும் உதவியாகும். இப் பேருண்மையையே ஸ்ரீராமகிருஷ்ணரது திருஜன்ம தர்மானுஷ்டானம் நமக்குப் போற்றுகிறது. பெண்கள் அனைவரும் பதிவிரதைகளாகவும் ஆண்கள் அனை வரும் பத்னீவிரதர்களாகவும் ஆகவேண் டும் என்பதே ஸ்ரீராமகிருஷ்ணரது பேரவா.

ஒரு விஷயத்தை மட்டும் நாம் நினைவி லிருத்துவோம். பண்டை நாளிலே ஜன கன் என்றொரு மகான் இருந்தார். அவர் ஒரு மகாராஜா. அதனேடு சிறந்த ஞானியு மாவார். சீதாப்பிராட்டியின் வளர்ப்புத் தந்தையாக விருக்கும் பாக்கியத்தையும் ஆற்றலையும் பெற்றவர். அவர் உலகில் இருந்து கொண்டே ஜீவன் முக்தரானவர். ஆனுல் உலக சரித்திரத்தில் ஒரு ஜனகனே இருந்துள்ளார் என்பது குறிப்பிடத் தக் கது. அவ்வாறே ஸ்ரீராமகிருஷ்ணரும் உல கில் ஒருவரே இருக்க முடியும். ஒவ் வொரு மனிதனும் ஒரு ஸ்ரீராமகிருஷ்ண ராகவும் ஒவ்வொரு பெண்ணும் ஒரு சாரதாதேவியுமாக ஆய்விட முடியு மென்று எண்ணிவிட வேண்டாம். ஸ்ரீராம கிருஷ்ணர் கதிரவனை யொத்தவர். கதிர வனை நாம் நெருங்க முடியாது. அதன் சோபையை நாம் முற்றிலும் உணருவது கூடச் சாத்தியமில்லை. ஆனுல் கதிரவ னது வெய்யிலின் உதவியாலேயே நாம் உயிர் வாழ்கிறேம். ஸ்ரீராமகிருஷ்ணர் ஓர் அமுதக் கடல். அக்கடல் முழுவதையும் பருகுவதும் நம்மால் முடியாது. அதற்கு அவசியமும் கூட இல்லை. 'நமக்குப் போதை தருவதற்கு ஒரு கோப்பைச் சாராயம் போதுமென்றுல் சாராயப் பீப் பாய்களைப் பற்றிய கவலை நமக்கேன்?'

இன்னுமொரு விஷயமும் கவனித்தற் குரியது. இல்லற வாழ்வில் இருந்து கொண்டே மோக்ஷ நிலை எய்தலாம் என்று கூறுவதால் சிலர் துறவறமே அவசிய மில்லை என்று எண்ணி விடுகின்றனர். அவ்வாறு எண்ணுவது பெருந்தவறுகும். துறவிகள் நித்திய சாதகர்கள். போர்க் களத்திற்கே சென்று விட்ட போர் வீரர் கள்; நாள் முழுதும் சுத்தக் காற்றுப்

பெறும் நந்தவன வாசிகள். இல்லற வாசிகள் கோட்டைக்குள் இருந்து கொண்டு போருக்குப் பழகுகின்றவர். நெருக்கம் நிறைந்த நகரத்தின் இடுக்குகளில் வாழுகின்ற மக்கள் மாலை நேரத்தில் மட்டும் தோட்டங்களுக்குச் சென்று ஒரு மணி நேரம் காற்று வாங்கி வருவதில்லையா? அதைப்போல அவர்கள் சிற்சில சமயங்களில் பகவத் சிந்தையில் ஈடுபடுகின்றனர். இல்லறவாழ்வைச் சரியான முறையில் நடத்தினால் துறவறத்திற்கான மனப்பக்குவம் நாளடைவில் கிட்டுவது திண்ணம். வீட்டைவிட்டு வெளியேறினாலும் இல்லாவிடினும், காஷாயவஸ்திரம் ஏற்றாலும் ஏற்காவிடினும், துறவியின் வைராக்கியபுத்தியும், பற்றற்ற (ஆனால் திறமை மிக்க) சேவா-சக்தியும், தியாகமும், தெய்விகநோக்கும் அனைவரும் பெறுவது அவசியமாகும். சீரிய இல்லற வாழ்வு அதற்கான பயிற்சியை நமக்கு அளிக்கும்.

இல்லறவாசிகளால் எளிதில்கையாளும்படியான சில சாதனங்களை ஸ்ரீ ராமகிருஷ்ணர் எடுத்துக் காட்டியுள்ளார். அவற்றை நினைப்பூட்டிக் கொள்ளுவோம்.

வேலையிருக்கும் பொழுது ஒரு கையால் அவ்வேலையைச் செய்து கொண்டு மற்றொரு கையால் பகவானது பாதங்களைப் பிடித்துக் கொள்ளுவோம். வேலை முடிந்ததும் இரு கைகளாலும் பகவானது பாதங்களைப் பிடித்துக் கொள்ளுவோம்... ...குடும்ப உறவினர்களுக்குச் சேவை புரியும் பொழுது பகவானுக்கே சேவை செய்வதாக நினைக்கவேண்டும்......துறவறத்தின் மூலம் அகிலபுவனத்திற்கும் சேவை செய்வது முடியும். விவாகத்தின் மூலம் சுருக்கமான துறையில் சேவை செய்யலாம்.

சகோதரி நிவேதிதை ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளைப் பற்றி எழுதியுள்ள நூல் ஒன்றில் "இல்லறமும் துறவறமும்" என்ற தலைப்பின்கீழ் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளுடைய கருத்துக்களைக் குறித்துள்ளார். அக்கருத்துக்களிற் சிலவற்றை ஈண்டு வரைவோம்.

விவாகம் எனும் ஸ்தாபனத்தைப் பற்றி எண்ணும் பொழுதெல்லாம் ஆத்மீய மோக்ஷம் எனும் இலக்ஷியத்தைக் கொண்டே விவேகாநந்தர் எண்ணுவார். விவாகத்தின் மூலம் விவாகத்திற்கு அதீதமான நிலையை அடைவதற்கு முயற்சி செய்வதைப் பற்றி அவர் குறையேதும் கூறவில்லை. தமது குருநாதரான ஸ்ரீ ராமகிருஷ்ணர், தமது தோழரான யோகாநந்தர், தமது சீடரான ஸ்வரூபாநந்தர்—இவர்களுடைய விவாகமே மாசற்ற விவாகமென்று அவர் கருதுவார். (ஆனால் நமது உயர்ந்த இலக்ஷியம் எல்லாவித பந்தங்களையும் அறுத்தெறிவதேயாம் என்பதை மறக்கக்கூடாது.) "சந்நியாசியின் வாழ்வையும் இல்லற வாசியின் வாழ்வையும் ஒப்பிட்டுப் பார்ப்பதும் மகாமேருவுடன் மணல் ஒன்றையும், சூரியனுடன் மினுமினுப் பூச்சியையும் ஒப்பிடுவதேயாகும்" என்று ஒரு சமயம் அவர் கூறினர். மனைவியை அன்னையின் வடிவமாக ஏற்றுக் கொள்ளும் பொழுதே மண வாழ்வு பக்குவமடைகிறது. அதாவது புருஷனும் மனைவியும் பிரம்மசரிய வாழ்வை ஏற்றுக் கொள்ளுவதால்தான் அது கூடும். அப்பொழுது மனுஷ்யத் தொடர்பு உள்ளது தெய்விகத் தொடர்புள்ளதாக மாறும். வாழ்வே புதியதொரு தன்மையைப் பெற்றுவிடும்.

* * *

பண்டை பாரதத்தில் வாழ்வை நான்கு பிரிவுகளாகப் பிரித்திருந்தனர். ஒவ்வொரு பிரிவும் ஒரு தூய ஆசிரமம் தான். ஆனால் இல்லறமென்பது இரண்டாவது ஆசிரம

மேயாகும். அதற்கு மேல் உள்ளது வானப்ரஸ்தமாகும். இந்நிலையில் புருஷனும் மனைவியும் சரீர உணர்ச்சி சம்பந்தமான தொடர்பை உதறி எறிந்து ஞான வாழ்வில் ஈடுபடுகின்றனர். யாவற்றிற்கும் கடைசியான நிலை சந்நியாச ஆசிரமம். இப்பாருபாட்டின் உட்கருத்தை நன்கு அறிவோமாக.

---

# நாம் வசிக்கும் வீடு

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழாசிரியர், சித்தூர்)

மக்களுயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவன உணவு, உடை, உறைவிடம் என்னுமிம் மூன்றுமேயாம். இம்மூன்றுமின்றி வாழ்க்கையை நடத்த வியலாது என்பது திண்ணம். இயற்கையிலின்று விதிவிலக்குப் பெற்றவர்களாகவுள்ள மக்கள் தங்கள் செல்வம் குடும்பநிலை முதலியவற்றிற்கேற்பப் பல்வேறு விதமாக இருக்கைகளை யமைத்துக்கொள்கின்றனர். சிறு குடிலாகவோ பெருமாளிகையாகவோ—சொந்தத்திற்கோ, குடிக்கூலிக்கோ—அமைத்துக்கொள்ளப்படும் அவ்விருக்கை—வீடு—உடல் நலனுக்கு ஊறுபாடுண்டாக்காத வகையில் ஒதுக் கொள்ளாததாயும் காற்றோட்டமுடையதாயும், சுருங்கக் கூறின், சுகாதார விதிமுறை தவறாமல்—அமைக்கப்படுதல்வேண்டும். அங்ஙனம் அமைக்கப்பெறாததாயின், அவ்வீட்டிலுறைவோர் நோய்களால் பீடிக்கப்பெற்று உடல் நலங்குன்றி வருந்துவர்; தீராத் துன்பமே அன்னாரைப்பற்றி நிற்கும்; சுகவாழ்வென்பது குதிரைக் கொம்பாகிவிடும். சுகாதார முறைப்படி நன்கமைக்கப்பட்ட வீடேயாயினும், நாடோறும் குப்பை, கூளம் முதலிய வசுத்தப் பொருட்கள் சேராதவாறு பார்த்துக்கொள்வதோடு, அடிக்கடி வெள்ளையடித்தல் முதலிய செயல்களாலும் பரிசுத்தப்படுத்தாதொழியினும் அவ்வீடு வாசயோக்கிய மற்றதாகிவிடும். எல்லாப்படியாலும் நல்ல முறையிலமைக்கப்பட்டதும் பரிசுத்தமாக விருப்பதுமான வீட்டிலுறைவோர், இருக்கையைப் பற்றிய வரையில், ஆரோக்கியமுள்ளவர்களாகவே வாழ்வார்களென்பதில் யாதோரையப்பாடு மின்று. மக்களுயிர் வாழ்க்கைக்கு அத்தியாவசியமானவை யென மேலே கூறப்பட்ட மூன்றனுள், இருக்கைச் சுத்தம் சுகவாழ்க்கைக்கேதுவாமெனக் கூறியதனால் ஏனைய விரண்டின் சுத்தமும் இன்றியமையாதனவேயாமென்பது கூறாமலே விளங்கும். எனவே, சுகவாழ்வை யவாவுவோர், உண்டி உடை உறையுள் இம்மூன்றிலும் பரிசுத்தமுடையராதல் வேண்டுமென்பது பெறப்படுகின்றது.

நமக்கிருக்கையாக விருப்பது மண், கல் முதலியவற்றா லாக்கப்பட்ட மேற்கூறிய வீடுமாத்திரமன்று; வேறு சில வீடுகளுமுண்டென்பது சிறிது ஊன்றி நோக்கின் புலனாகும். சாதாரணமாக, 'நாம்' என்பதற்குக் கொள்ளும் பொருளாகிய உடலைவிட்டு, அவ்வுடலினுறையும் ஜீவர்கள் என்று பொருள்கொண்டால், 'உடலானது ஜீவனுக்கு வீடாக விருப்பதேயாம்; உடலாகிய வீட்டிற்றான் அவனுறைகின்றான்; அவனுக் கிருக்கையாகவே உடலமைந்திருக்கின்ற'தென்பது விளங்கும். ஆகவே, நாம் வசிக்கும் வீடு எனப்படுவது உடலேயன்றி மண் கல்லா

தியவற்றாலாய வீடன்று. எனினும், அஃது உடலுக்கு வீடாகவிருத்தல் வாயிலாக உபசாரமாக நமது வீடு எனச் சொல்லப்படுகின்றது; ஆனால், உண்மையிலன்று. உடலின் வீடு மண் கல் முதலிய வற்றால் ஆக்கப்பெற்றிருத்தல்போல, இவ்வுடலாகிய வீடும் என்பு, நரம்பு, தசை முதலியவற்றால் ஆக்கப்பட் டிருப்பது; அதனால் யாக்கையென்னும்பெயரும் பெற்றிருப்பது சுகாதார முறைப்படி பரிசுத்தமாக விருக்கத்தக்கது; பரிசுத்தமின்றேல் தவறின் கேடுற்றழிவது; அதன்வாயிலாக ஜீவனுக்குத் துன்பம் விளைவிப்பது. உடலாகிய வீடு பழுதடையின் அதனுளுறையும் ஜீவன் துன்பமடையும். வசிப்பதற்குத் தகுதியற்ற அவ்வீட்டில் ஜீவன் தங்கியிராது. வாழ்க்கையை வெறுக்கச்செய்யும். ஆகலின், ஜீவன் சுகமாக விருக்க வேண்டுமாயின் அவனுறைவிடமாகிய வீடு பரிசுத்தமுடையதாக விருத்த லவசியமாகும். சுத்த உணவு, சுத்த உடை, சுத்த காற்று, சுத்த இருக்கை முதலியவற்றால் பரிசுத்தமான நிலையிலிருக்க உடலைக் காப்பது ஒவ்வொருவருக்கு முரிய முக்கிய கடமையாம். உடலினிருக்கையான வீடு சிதைந்து கெடுமாயின் வேறு நல்ல வீடு நம் விருப்பப்படி யமைத்துக்கொள்ளலாம். ஆனால், இவ்வுடலாகிய வீடு அவ்வாறாயின் நம்மிஷ்டப்படி வேறு நல்ல உடலை யமைத்துக்கொள்ளமுடியாது. அது நம் வசப்பட்ட செயலன்று. எத்தகைய வீடு-உடல்-கிடைக்குமென்பது ஒருவருக்கும் தெரியாது. இத்தகைய நல்ல வீடு-மனித உடல்-நமக்கு வாய்த்தது மிக்க புண்ணியத்தின் செயலேயாம். இத்தகைய அரிய வீட்டை-கிடைத்தற்கரிய வீட்டை-நாம் எல்லாவற்றினும் சிறந்த பொக்கிஷமாகக் கருதிக் காப்பாற்ற வேண்டும். மண், கல்லாதியவற்றாலாய வீடு நன்கமைந்திருத்தல் வேண்டுமென்பதும் இவ்வீட்டின் நலத்தின் பொருட்டேயன்றோ! சிலர் இந்த வீட்டை "மலபாண்டம் அழியுந் தன்மையது, துக்கங்களுக்கிருப்பிடம், இதை ஏன் போஷிக்க வேண்டும்?" என்றெல்லாம் இழித்துக் கூறிக்கொண்டு அழிவுக்குட் படுத்துவர்; உடலின் இழிதகைமை, நிலையாமைகளைப்பற்றி விவரிக்கும் நூல்களுமுண்டு. தேகமே நானெக் கருதி அதனை யலங்கரித்துப் போஷித்தலையே தமது கடமையாகக் கொண்டுழலும் மதியில்லா மாந்தர்க்கு அறிவுச் சுடர் கொளுத்தவே அந்நூல்கள் அவ்வாறுரைகின்றன வென்பதை நாம் அறிதல் வேண்டும். வேறு சிலர் தங்கள் அறியாமையின் காரணமாக இவ்வீட்டைப் பலவித பிணிகளுக்கிருப்பிடமாக்கி வாதையுற்றழிவர். கஷ்டப்பட்டுக் கரும்பைப் பயிரிட்டோர் அதன் பயனாகிய சாரத்தை யடைந்தபின், சாரமற்ற அக்கரும்பினிடத்து (சக்கையினிடத்து) பற்றுக்கொள்ளாது எறிந்துவிடுதல்போல, உடம்பினைப் பெற்றதனாலடையவேண்டிய பெரும் பயனாகிய, மீண்டும் உடம்பினைப் பெறாத நிலையைத் தரும் ஆன்ம ஞானத்தை யடைந்திட்ட பெரியோர்கள், உடம்பினிடத்துப் பற்றுக் கொள்ளாது அதன் பாதுகாப்பை அசட்டை செய்வதியற்கையே. அவர்களது அச்செய்கையை ஏனையோரும் பின்பற்றுவது புலியைப் பார்த்து பூனை சூடிட்டுக்கொள்வதற்கே ஒப்பாகும்.

"உடம்பா ரழியின் உயிரா ரழிவார்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு
மாட்டார்;"

"உடம்பினு ளுத்தமன் கோயில்
கொண்டானென்
றுடம்பினை யானிருந் தோம்புகின்
றேனே"

என்பன போன்ற ஆன்றோரமுத மொழிகள் ஜீவனுக்கு வீடாகவுள்ள உடலை மிக

வும் எச்சரிக்கையோடு காப்பாற்ற வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தல் காண்க.

அதே சமயத்தில் அளவுக்கு மீறிய போஷணைக்குட்படுத்தி விடாமல், அவ்வாறு செய்வதும் நோய் பிறத்தற்குக் காரணமாமென்பதையும் சுகநிலையிலிருத்தற்குரியமுறைக்கேற்றவளவில் போஷித்தலே யுக்தமாமென்பதையு முணர்ந்து நடந்துகொள்ளுதல் ஏற்ற செயலாகும்.

நமக்கு-ஜீவனுக்கு-சரீரமாகிய இந்த வீடு மாத்திரமே வீடன்று; மற்றொரு வீடுமுண்டு. அந்த வீட்டு விஷயத்தில் நாம் மிகவும் எச்சரிக்கையோ டிருத்தல் வேண்டும். மேலே கூறிய வீடுகள் போல் அழியுந்தன்மையதாகவின்றி இது நம்மை அழிக்குந்தன்மையதாக விருப்பது. உண்மையில் இதுவே நமது வீடு. இதற்கு வீடாக அமைந்திருப்பதே உடலாகிய வீடு. அவ்வீடு எது? அதுவே சூக்கும சரீரம், நுண்ணுடல் எனப்படுவதாகிய அந்தக்கரணம். நமது இன்பமோ துன்பமோ — ஆக்கமோ அழிவோ — உயர்வோ தாழ்வோ—எல்லாம் இந்த வீட்டின் சுத்தாசுத்த நிலைகளைப் பொறுத்தனவேயாம். அழுக்கு சேராதபடி மாசுபடியாதபடி எப்பொழுதும் இடைவிடாமல் சர்வ ஜாக்கிரதையுடன் பார்த்துக் கொள்ளவேண்டியது அந்த வீட்டில் வசிக்கும் ஜீவனுடைய கடமை. இன்றேல் அந்தோ! அந்த ஜீவனுடைய நிலைமை நினைப்பதற்கு வியலாத கொடிய பயங்கர நிலையாகும். மனமாகிய (அந்தக்கரணமாகிய) அவ்வீட்டில் சேரும் அசுத்தங்கள் எவை? பொய், பொறாமை, வஞ்சனை, காமம், குரோதம், லோபம்; அம்மம்ம! இத்துணையெனக் கூறுதற்கெவர் வல்லார்! இவ்வசுத்தங்கள் பெரும்பான்மையாக எல்லா வீடுகளிலும் நிறைந்திருக்கின்றன. இவ்வசுத்தங்கள் ஜீவனை யரித்துத்தின்று பாழாக்கும் கொடிய கிரிமிகளென வுணர்ந்து, அவற்றை யறவே அகற்றவும் மீண்டும் சேராதவாறு தடுக்கவும் பெரும்பாலோர் நினைப்பதேயில்லை. சரீரத்தோடு ஒன்றி, 'சரீரமே நான்' என்று சிலர் நினைப்பதுபோலசிலர் இந்தச் சூக்கும சரீரமெனப்படும் அந்தக்கரணமாகிய மனம் என்னும் வீட்டையும் தங்களையும் ஒன்றாகக் கருதி, அதனோடு அத்வைதப்பட்டு 'அது வேறு, நாம் வேறு, நமக்கு அஃது இருக்கையாகவே யமைந்துளது, அது பரிசுத்தமாக வைக்கப்படுதல்வேண்டும், இன்றேல் அதன் அசுத்தம் நம்மை அழித்துவிடும்" என்னுமுண்மையைச் சிறிதுமறியாதிருக்கின்றனர். இது பெரிதும் பரிதபிக்கத்தக்க விஷயம். மற்ற வீடுகளின் அசுத்தமோ நமக்குத் துன்பமாத்திரம் விளைப்பனவாக, இவ்வீட்டின் அசுத்தமோ அழிவையே யுண்டுபண்ணுவதாகும். ஆகலின், நாம் இவ்வீட்டின் விஷயத்தில் மிக்க கவனஞ் செலுத்துதல் வேண்டும். "அந்தக்கரணம் நாமல்ல; நமக்கு வாசஸ்தானமேயாகும்" என்பதை முதலில் அறிதல்வேண்டும். அறிந்து மற்ற வீடுகளைப்போலவே இதனையும் நன்னிலையிலிருத்த முயலவேண்டும்.

மண் கல்லாதியவற்றாலமைந்த வீட்டைக் காலைமாலைகளில் பெருக்கியும், அடிக்கடி மெழுகியும், வெள்ளையடித்தும் சுத்தமாக வைத்துக்கொள்ளுகிறோம். உடலாகிய வீட்டையும் நாடோறும் கழுவிச் சுத்தமாக்குகிறோம்; ஆடையணிகளாலலங்கரிக்கிறோம்; நோய்களணுகாதவாறு பாதுகாக்கிறோம்; வியாதி சம்பவிக்கின் பணத்தைத் தாராளமாகச் செலவிட்டுச் சீர்ப்படுத்த முயல்கின்றோம். இவ்விரு வீடுகளையும் பரிசுத்தமாகவும் அழகாகவும் வைப்பதுபோலவே, மற்றொரு வீடாகிய அந்தக்கரணத்தையும் சுத்தமாகவும் அழகாகவும் வைக்க நாம் என்னமுயற்சிசெய்

கிறோம் என்னும் வினு ஒவ்வொருவருள்ளத்தும் எழுதல்வேண்டும். " இன்று நல்லநாள் விரதநாள்-வீட்டை அலகிட்டு மெழுக்கிட்டுச் சுத்தஞ்செய்தோம். ஆற்றிலோ குளத்திலோ நீராடி உடலைச் சுத்தமாக்கினேம். ஆனுல், அந்தக்கரணமாகிய வீடு எப்படியிருக்கிறது ? சுத்தமாயிருக்கிறதா ? அதிற்சேர்ந்துள்ள அசுத்தங்களை யகற்றினேமா ? என்று சிந்தித்தல் ஒவ்வொருவர்க்கு முரிய முதற்கடமையாகும். சிறிதேனு மசுத்தமிருப்பதாகத் தோன்றின் உடனே அதனையகற்றுவதிற் சிறிதும் தாமதம் செய்தலாகாது. இவ்வாறிவ்வீட்டைச் சுத்தஞ்செய்யாமல், மற்றைப்புற வீடுகளைமாத்திரம் சீர்ப்படுத்துவது உட்சுவர் உப்புளுக்கப் புறஞ்சுவர் கோலஞ்செய்வதாகும். நமது சுகத்திற்கு-ஆன்ம ஈடேற்றத்திற்கு-இதுவே-மனச் சுத்தமே-இன்றியமையாது வேண்டப்படுவதாகும். துர்க்குணங்களாகிய அவ்வசுத்தங்களை அப்போதைக்கப்போது-அவை சேரும்போதெல்லாம் மிக்க ஜாக்கிரதையுடன் பார்த்துப் பார்த்து விலக்கித் துடைத்து, சத்தியம், சாந்தம், தயையாகிய நற்குணங்களா லலங்கரித்தல் வேண்டும். அதுவே - மனச் சுத்தமே-இம்மையின்பமும் மறுமையின்பமும் ஈயவல்லதாகும். இதுகாறும் இயம்பியவாற்றுல் 'நாம்' என்னும் சொல்லுக்குப் பொருள் ஜீவனின்றும், அதற்கு இருப்பிடம் அந்தக்கரண மெனப்படுவதாகிய மனமென்றும், அந்த மனத்திற்கு இருக்கையாக விருப்பது சரீரமென்றும், அச்சரீர வாசத்தினிமித்த மமைக்கப்படுவதே மண் கல்லாதியவற்ருலாகிய வீடென்றும், சுக வாழ்க்கைக்கு இம்மூன்றும் நன்னிலையிலிருத்தலவசியமென்றும், இம்மூன்றனுள்ளும் ஜீவனுக்கு மனமானது உபசாரமாகவின்றி உண்மை வாசஸ்தானமாயிருத்தலின் அதுவே ஏனைய விரண்டினும் மிக மிகச் சுத்தமாக விருத்தல் அவசியமென்றும், இம்மை மறுமையின்பங்களுக்குக் காரணமாகிய மனச்சுத்தத்தை ஓம்புதல் நமது தலையாய கடமையாமென்றும் அறிந்தோம். அறிந்தவாறே இச்சிறந்த நெறியில் நின்று பிறவிப் பெரும் பயனைப் பெற இறையினருள்கொண்டு முயல்வோமாக.

---

## ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவர் அருளிச்செய்த

# பிரார்த்தனையின் தமிழ்மொழி பெயர்ப்பு

ஏழைக் கிரங்குமரு ளிறையே!—எனை
எப்பொழுதுங் காத்தருளல் முறையே;
தாழும் அடியவர்க்குத் துணையே!—ஒரு
சார்பு நினதுபத விணையே. (ஏழை)

ஞானமன்பு மாதவமொன் றறியேன்;—மனம்
நாடுதற்கு வேறுதுணை குறியேன்;
வானின்மழை போற்கருணை புரிவாய்;—திரு
மன்னியநின் காட்சியினைத் தருவாய். (ஏழை)

புண்ணியர்கள் போற்றுதெய்வத் தாயே!—பரி
பூரணியே! உற்றதுணை நீயே;
மண்ணிலத்தோர் நன்மதிப்பை வேண்டேன்;—இழி
வானஉடல் இன்பினைநான் தீண்டேன். (புண்ணியர்)

சீர்யமுனை கங்கையினைக் கூடும்;—இந்தச்
சேயினுயிர் நின்னடியை நாடும்;
ஆருமற்ற ஏழைநின தடிமை;—உனை
அண்டிநின்றாற் றீருமென்றன் மிடிமை. (புண்ணியர்)

சொல்லினொரு யந்திரம்நான் தாயே!—அதைச்
சுற்றி யியக்குபவள் நீயே;
நல்லமனை யாகிநின்றேன் யானே;—அதில்
நாடி யுறைபவள்நீ தானே. (புண்ணியர்)

வாராற் சமைத்தஉறை யானே;—அங்கு
வாட்படையாய் நிற்பவள்நீ தானே;
தேரா யமைந்துநின்றேன் யானே;—அது
செலநடத்துஞ் சாரதிநீ தானே. (புண்ணியர்)

நீபணித்த செய்கையினைச் செய்வேன்;—நாளும்
நின்னுரையே என்னுரையாய் உய்வேன்;
நீநடத்தும் பாதையிலே நடப்பேன்—என்றும்
நின்னருளால் எத்துயருங் கடப்பேன். (புண்ணியர்)

நானெனவொன் றில்லையெனக் கொண்டேன்;—எங்கும்
'நானலநீ,' 'நானலநீ,' கண்டேன்;
ஆனவின்ப மாக்கடலே! தாயே!—ஞான
அன்புருவே! என்முன்வரு வாயே. (புண்ணியர்)

—சுவாமி விபுலாநந்தர்

# விச்வாமித்ரர்—ஓர் ஆராய்ச்சி

(ஸ்ரீ T. S. ஸ்ரீநிவாசன்)

க

## விச்வாமித்ர ராஜன்

விச்வாமித்ர ராஜன் விச்வாமித்ர ரிஷியாக மாறிய விஷயம் ஸ்ரீமத் ராமாயணத்தில் ஒரு சுவாரஸ்யமான பாகமாகும். இக்கதையில் ஒவ்வொரு ஸம்பவமும் நமது ஹிந்து தர்மத்தின் முக்கியமான கருத்தையும் தத்வங்களேயும் எடுத்துரைப்பதோடு, திருஷ்டாந்த பூர்வமாய் நிரூபித்தும் காண்பிக்கின்றது. மானிட மனோபாவங்களைப்பற்றிய ஆராச்சியில் அதன் மஹிமை மேலானது என்று அதிகமாய் ஊன்றிப் படிக்காதவனுக்குக் கூடத் தோன்றும். ஆனல், கதைசொல்லும் விஷயத்தில் வால்மீகி மஹாமுனிவரின் ஸாமர்த்தியம் அவ்வளவு பரிபூர்ணமானதால், படிப்படியாய், கொஞ்சங்கொஞ்சமாய் விச்வாமித்ரரிடத்தில் உண்டான மாறுதல் வாசகரின்கவனத்திலிருந்து நழுவியிருக்கக்கூடும். கதை எல்லோரும் அறிந்ததாதலால் அதை மறுபடியும் உரைக்கவேண்டியது அனுவச்யம். ஒரு ஸமயம் விஸ்வாமித்ரர் சுற்றுப்பிரயாணம் ஒன்று செய்யும்பொழுது வஸிஷ்ட முனிவரின் ரமணீயமான ஆச்ரமத்தை அடையும்படி நேரிட்டது. இனிமேல் நிகழப்போகும் ஓர் பெரிய அதிருஷ்டத்திற்கு அறிகுறியோ இவர் இங்கு வந்தது! அப்பொழுது விச்வாமித்ரர் தர்மநெறிவழுவாத ஒரு மன்னர். எவ்வளவு தூரம் ஸரி தப்பு என்று இவைகளின் தன்மைகளே அறிந்திருந்தாரோ, அவ்வளவுமட்டில் ராஜ்யத்தை நன்ருய்ப் பரிபாலனம் செய்ய வேண்டுமென்ற எண்ணங் கொண்டவர். ஸாமான்ய மனிதனுக்கு ஸ்வபாவமாக உள்ள குற்றங்களிலிருந்து விடுபட்டவரல்ல. இதுவரையில் அவர் விருப்பங்களில் ஒன்றுகூட நிராகரிக்கப்படவில்லை. அனுயாஸமாகவும், நினைத்தமாத்திரத்திலும், காரியங்களும் ஆசைகளும் நிறைவேற்றப்பட்டுவந்தன. ஆகவே, சுகத்தின் அடிப்படையான தத்வம் எது என்று நிர்ணயிப்பதற்கோ, சுகத்தின் அம்சங்களே ஊன்றி ஆராய்ந்து அறிவதற்கோ எத்தனிக்க அவர்க்கு ஸந்தர்ப்பம் வாய்க்கவில்லை. எவ்வித ஆசையையும் திருப்தியாய் அனுபவித்துக்கொள்ளும் மார்க்கத்தில் யாதொரு இடையூறும் இதுவரை வராததால் விசுவாமித்ரருக்குள் புதைந்து கிடக்கும் மனோநீதிகள் ஒவ்வொன்ருய் வெளிவர சமயம் வாய்க்காமல் போய் விட்டது.

உ

## தோள் வலிமையின் கர்வம்

எந்தக் காமதேனுவின் உதவியால் தம் மனோபிஷ்டங்களே எல்லாம் பூர்த்தி செய்துகொள்ளலாமோ அப்பசுவே விச்வாமித்ரரின் மனதை—வஸிஸ்டர் செய்த அதிதிஸத்காரத்தின் பயனய் — கவர ஆரம்பித்துவிட்டது. அதை எவ்விதத்திலும் அடைந்துவிடவேண்டும் என்று தீர்மானிக்கின்ருர். சுரபியோ வஸிஷ்டருடையது; அதைவிட்டுப் பிரிவதற்கு மஹர்ஷிக்குக் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. இங்கு தான், விச்வாமித்ரரின் வாழ்க்கையில் முதல் முதலாய் அவருடைய ஆசைகளுக்கு ஓர் முட்டுக்கட்டை போடப்பட்டது. ஒரே பொருள், இருவ

ரும் ஆசைப்படுகிறார்கள். சுரபியின் தூண்டுதலினாலேயே தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் சக்தியை பிரயோகித்த போதிலும், வெளிப்படையாய்ப் பார்க்குமளவில், வஸிஷ்டரும் விச்வாமித்ரரைப் போல், அப்பசுவை வைத்துக்கொள்வதில் ஆதுரமாய் இருந்தாரென்று தான் தோன்றும். விச்வாமித்ரருக்கு சுரபி வேண்டும்; வஸிஷ்டருக்கும் வேண்டும்; யார்தான் அடைவது? பசுவிற்காக அளவற்ற திரவியங்களைக் கொடுத்து, அவ்விதமாய், சுரபி என்ன அவ்வளவு முக்கியமானது என்ன, என்று வஸிஷ்டருடைய மனதிற்குப்படும்படி செய்துவிட வேண்டுமென்று விச்வாமித்ரர் எண்ணினார். இப்படி ஏராளமான பொருளை வஸிஷ்டருக்குக் கொடுப்பதாய் நிச்சயித்ததிலிருந்து, தாமே அக்காமதேனுவிற்கு ஓர் உயர்ந்த மதிப்பைக் கொடுத்துவிட்டதை மறந்துவிட்டார் போலும். இப் பரிவர்த்தனைக்கு வஸிஷ்டர் ஒருநாளும் ஸம்மதிக்க மாட்டார்; சுரபியைவிட்டு ஒரு க்ஷணமும் பிரிந்திருக்க மாட்டார். விக்ரம மன்னர் விச்வாமித்ரர் தம் மனம் புண்பட்டதாக நினைத்தார்; தம்முள் அடங்கிக் கிடந்த ஆத்திரங்களெல்லாம் ஆர்வத்துடன் தலைவிரித்தாட ஆரம்பித்து விட்டன; இது நியாயம் அது அநியாயம் என்று பகுத்தறியும் புத்தியே மழுங்கிவிட்டது; இப்பொழுதுதான் ஆசார உபசாரங்களுடன் வரவேற்று அபூர்வமான விருந்தளித்த வஸிஷ்டர் தம்முடைய அத்யந்த ஆப்தரென்பதை மறந்து விட்டார். வஸிஷ்டர் ஓர் பிராம்மணோத்தம ரென்றும், தாம் ஓர் வீர க்ஷத்திரியர் தான் என்றும், ஓர் பிராம்மணரிடமிருந்து யாசிப்பது பொருத்தமற்றது என்றும் மறந்துவிட்டார். வஸிஷ்டர் அவருடைய உரிமையில் ஊன்றி நிற்பதற்குப் பாத்தியப்பட்டவர் தான். விஸ்வாமித்ரர் பிறரின் சொத்திற்கு ஆசைப்படுவது நியாயமற்றது என்றும் நினைக்கவேயில்லை; ஒரு விஷயத்தில் அபிலாஷை ஏற்பட்டுவிட்டது; அதை எப்படியாவது அடைந்து விடவேண்டும். அந்த ஸமயத்தில் அவர் மனோபாவம் அப்படித்தானிருந்தது; வேறு ஒரு விஷயமும் அப்பொழுது அவர் மனதில் புகாது. அவருடைய ருசிகரமான வற்புறுத்தல் வியர்த்தமாகவே, பலாத்காரத்திற்கு ஆரம்பிக்கின்றார்; தோள் வலிமையினாலும், மந்திர மஹிமையினாலும் பிரயோகிக்கக் கூடிய சக்தியுள்ள ஆயுதங்களினால் நிஷ்பலனாய் வஸிஷ்டரைத் தாக்கப் பிரயத்தனப் படுகிறார். வஸிஷ்டர், சுரபியினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சேனைகளை ஏவுகின்றார். இவைகளின் எதிரே விச்வாமித்ரரின் பலம் பிரயோஜனப்படவில்லை. தபஸ் செய்ய ஓடுகின்றார். தபோபலத்தினால் சிவபிரானிடமிருந்து சில திவ்ய அஸ்திரங்களைப் பெற்று திரும்பவும் வருகின்றார்; தர்மாத்மாவாயும், ஸாத்விகராயு முள்ள வஸிஷ்டர்மேல் புதிதாய் ஸம்பாதித்த பாணங்களை விடுகிறார். இவைகளெல்லாவற்றையும் விழுங்கிவிட்டு சாந்தராய் திருடகாத்திரராய் அவர் விளங்குகிறார். வஸிஷ்டரின் அதிசயமான பிரம்ம தேஜஸின் பிரபாவத்திற்கு முன் எது நிற்க முடியும்! பிரம்ம தேஜஸின் பலத்திற்கு எதிரே தோள் வலிமை ஆயுத பலம் முதலியவைகள் எவ்வளவு பெரியனவாயிருந்த போதிலும் அல்பமே என்று அப்பொழுதுதான் விச்வாமித்ரர் அறிந்தார்.

௯

## தபோ வலிமையின் கர்வம்

இப்பிரம்ம தேஜஸுக்கு வஸிஷ்டர் தான் ஸர்வ ஸ்வதந்திர பாத்திய முள்ளவரா? ஒருநாளும் இருக்க முடியாது. நேர்மையான பிரயாஸையால் விச்வாமித்ர

ரும் அதை அவச்யம் அடையக்கூடும். அப்படி யடைவது மனிதனின் முயற்சியால் ஸாத்தியப்படக் கூடியதாயிருந்தால் இவருக்கு மாத்திரம் ஏன் முடியாது? இது காறும் இவருக்கு மிகப் பிரீதியாயுள்ள காமதேனு இவர் மனக்கண் முன்னிருந்து மறைய ஆரம்பித்துவிட்டது. பிரம்மதேஜஸை எப்படி யடைவது என்பதுதான் இப்பொழுது அவருடைய முக்கியக் குறி. தன்னுடைய அகண்டமான ராஜ்யம், அதைச் சார்ந்த மற்றுமுள்ள ஸகலவித ராஜ்ய போகங்கள், எல்லாவற்றையும் பரித்யாகம் செய்யத் தயாராகவிருக்கிறார். வஸிஷ்டர் எந்த தேஜஸினால் பலவானாக விருக்கிறாரோ அந்த தேஜஸை அடைய அதிசிரத்தையுடனும் ஆவேசத்துடனும் கிளம்புகிறார். அப்பொழுது தாம் அடைந்த அபஜெயத்தின் ஞாபகம் அவர் மனதைவிட்டு அகலவில்லை; அவர் தபஸ் செய்துகொண்டிருக்கும்பொழுதும் அவர் மனது வஸிஷ்டரிடம் உண்டான வைஷம்யத்தி விருந்து விடுபடவில்லை. அந்த ஸமயத்தில்தான் திரிசங்கு மன்னன் ஓர் விசித்திரமான வேண்டுகோளுடன் விச்வாமித்ரரை நெருங்குகின்றான். வஸிஷ்டராலும் அவருடைய புத்திரர்களாலும் திரிசங்கு பகிஷ்க்கரிக்கப் பட்டவன்; அவனுக் குதவிபுரிய விச்வாமித்ரருக்கு இந்த வியாஜம் போதாதா? நல்ல சந்தர்ப்பம் வாய்த்தது என்று எண்ணினார். வஸிஷ்டரை 'ஒரு கை பார்ப்போம்' என்றார். அவருக்கு ஒப்பிடும்போது தாம் மேலானவர் என்பதை நிரூபிக்க இது தான் தருணம் என்று எண்ணினார். வஸிஷ்டர் எக்காரியத்தை முடியாதென்றாரோ அக்காரியத்தை விச்வாமித்ரர் ஸாதிக்கவேண்டும். குலகுருக்களால் சபிக்கப்பட்ட திரிசங்கு இப்பொழுது சண்டாளனாய் இருந்தாலென்ன? அவ்வளவுக் கவ்வளவு நல்லதே. இந்தச் சண்டாள சரீரத்தோடேயே அவன் ஸ்வர்க்கத்தை அடையவேண்டும். வஸிஷ்டரிட முண்டான பொறாமையே விச்வாமித்ரரின் இவ்வித ஸங்கல்பத்திற்குத் தூண்டுகோல். திரிசங்குவின் அவா நியாயமானதா ஒழுங்கற்றதா என்றுகூட ஆலோசித்துப் பார்க்காமலிருக்கிறார். ஸமீபத்தில் புரிந்த தவத்தின் பயனாய்க் கிடைத்த தபோவலிமையின் கர்வத்தால், யாகத்தில் ஹோதாவா யிருக்க யோக்யதை யில்லாத ஓர் க்ஷத்திரியர் தாம் என்பதையும் மறந்து விடுகிறார். ஏற்கனவே எப்படி தாம் தோள்வலிமை படைத்த ஓர் வீரரென்று மமதை கொண்டிருந்தாரோ அப்படியே இப்பொழுதும் தாம் தபோபலம் மிகுந்த ஓர் மகான் என்று அகம்பாவம் அடைந்திருக்கிறார். அத் தபோபலத்தின் பிரபாவத்தால் இப்பொழுது திரிசங்குவிற்கு ஓர் ஸ்தானம் கொடுக்கும்படித் தேவர்களையும் ஒப்புக் கொள்ளும்படிச் செய்து விடுவதாக அவர் தீர்மானம். விச்வாமித்ரரின் ஜம்பம் தேவர்களிடம் பலிக்கவில்லை. விச்வாமித்ரரின் கோபாக்னி கொழுந்து விட்டெரிகிறது; இப்பொழுதிருக்கும் லோகங்களை எல்லாம் நாசம் செய்து புதிதான லோகங்களை ஸ்ருஷ்டி செய்யத் தயாராக இருக்கிறார்; இவருடைய மனோரதங்களுக்கு இடுக்கண்கள் நேரிடும்பொழுது, அப்பப்ப! இவர் கோபத்தின் வேகம்தான் என்னே! இவர் விருப்பம் கைகூடாமலிருக்கும் பொருட்டு இந்திரனே துணிந்து எதிர்நிற்பதால், அவனையே த்வம்ஸம் செய்துவிட எத்தனிக்கிறார். தேவர்கள் குறுக்கிட்டு அவர் செய்யும் அடாத காரியத்தின் அனர்த்தத்தை அவருக்கே எடுத்துரைக்கின்றனர். சாந்தமடைகிறார்; ஆனால், இவர் ஸ்ருஷ்டித்தவைகளை எல்லாம் ஜகத்தில் ஸ்திரமாயிருக்கும்படிச் செய்கிறேனென்று இந்திரன் வாக்களித்த

பிறகே, அவர் மமதை திருப்தியடைகிறது. "வைத்த குறியிலிருந்து நழுவி விட்டேனே, தபோ பலத்தில் பெரும் பாகத்தை ஏதோ வேறொரு விஷயத்தில் வீணாக்கி விட்டேனே" என்பது வெகு தாமதித்துத் தான் அவர் புத்தியில் படுகிறது. முதலில், தம் தோள் பலத்தைப் பிரயோகம் செய்யும்பொழுது, காமதேனுவைக் கைப்பற்ற வேண்டுமென்ற தம் மவாவைப் பூர்த்தி செய்து கொள்வதில் குறியாயிருந்தார். இப்பொழுது தம் தபோ பலத்தை உபயோகிப்பதில் தம் முதவியை நாடியவனின் விருப்பத்தை ஸபலமாக்குவதிலேயே ஊக்கமாயிருந்தார். இவ்விரண்டு விஷயங்களிலும், அவர் ஆசை நியாய விரோதமானதே; ஆனால், தாம் பலவான் என்ற உணர்ச்சியும், தம் கர்வம் தகர்க்கப்பட்டது என்ற விடா ஞாபகமும் இவ்வித பிரவிருத்திக்குத் தூண்டுதலாயிருந்தன. முதலில் நடந்த ஸம்பவத்தில் இவருடைய ஆசை வஸிஷ்டருடைய ஆசையோடு மோதப்பெற்றது; எப்படி என்றால் இருவரும் சுரபியை இச்சித்தார்கள். திரிசங்குவின் விருப்பங்களுக்கும் இவருடையதிற்கும் அவ்விதமான விரோதமொன்று மில்லை; திரிசங்குவின் விஷயத்தில் அவர் மனம் இளகியதால் அவனுடைய மனோரதங்களைப் பூர்த்தி செய்ய எத்தனித்தார். ஆனால், அவ்விருப்பங்களின் முறை தவறிய நிலையைப் பொருட்படுத்தாததாலும், அனுதாபம் ஒரு பக்கமிருக்க மற்றொரு பக்கம் வஸிஷ்டரிடம் குரோதமும், பொறாமையும் இருந்தபடியாலும், அவர் காட்டிய அனுதாபம் நியாயமற்றது. தம் தீர்மானம் விதிவிகிதங்களால் எதிர்க்கப்பட்டபோது, தேவர்களிடமே தம் ஆக்கிரத்தைக் காண்பிக்கின்றார். இருந்தாலும், சித்தம் சுத்தியாகும் விஷயத்தில் அவர் எவ்வளவோ விருத்தியடைந் திருக்கிறார் என்று இந்த சம்பவம் தெளிவாய் விளக்குகின்றது. முதல் சம்பவத்தில்போலல்லாமல், திரிசங்குவிற்கு உதவி புரிவதில் தன்னலம் கருதாமலிருந்ததால்தான் அவர் மனம் பரிசுத்தமடைய ஏது ஏற்பட்டது.

சுனச்சேபன் நிமித்தம் விஸ்வாமித்ரர் உதவி செய்ய முன் வந்தது முற்றிலும் நியாயமானதே. ஏதோ தம் மனதிற்குத் தோன்றிய ஓர் விருப்பத்தை அடைவதற்கல்ல. ஆனால், யாகசாலையிலுள்ள யூபஸ்தம்பத்தில் தனக்காகக் காத்திருக்கும் மரணத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளுவதற்காகவே விச்வாமித்ரரை சுனச்சேபன் உயிர்ப்பிச்சை வேண்டுகிறான். இங்கு விச்வாமித்ரரின் அனுதாபம் அற சுத்தமானது; ஏனெனில், சுனச்சேபனின் வேண்டுகோளில் யாதொருவித முறைத்தவறும் இல்லாததாலும், விச்வாமித்ரரின் அனுதாபத்தின் சுத்த நிலையைக் குலைப்பதற் குண்டான பொறாமை முதலான கேடுகளொன்றும் இல்லாததாலும் கேவலம் சுத்த காருண்யத்தினால் சுனச்சேபனைக் காப்பாற்றுகிறார். ஆனால், இந்த ஸந்தர்ப்பத்திலும் தம் தபோ பலத்தின் அகங்காரம் அவரை விட்டொழியவில்லை; அவருடைய பூர்வ குரூரஸ்வபாவத்திலிருந்தும் முற்றிலும் தம்மை மீட்டுக்கொள்ளவில்லை. சுனஸ்சேபனுக்காகத் தங்கள் உயிரைத் தியாகம் செய்ய மறுத்ததினால்கூட அல்ல, ஆனால் அவர்களின் அடக்கமற்ற பதிலால் தம் புத்திரர்களையும் கோபாவேசத்தினால் சபிக்கின்றார்.

௪

### ஆத்ம வச்யத்தின் கர்வம்

இன்னும் தம் அரிஷ்ட வர்க்கங்களை (காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம்) அடக்க முடியவில்

லேயே என்று ஏங்குகிறார். இவ்வந்தரங்க விரோதிகளை ஜெயிக்கக் கருதிக் கடும் தவம் புரியக் கானகத்தை யடைகிறார். காசிக்குப் போயும் கர்மம் தொலையவில்லை மேனகை தேவலோகத்திலிருந்து விச்வா மித்திரரின் தபோவனத்தை யடைந்து அவருக்குத் திருப்திகரமாய்ப் பணிவிடைகள் செய்து கொண்டிருக்கிறாள். தம்மை யறியாமலே அவளிடத்தில் மோகம் கொண்டுவிடுகிறார். கடைசியில் அவள் மாயவலையில் சிக்கிக்கொள்கிறார். வெகுகாலம் கழிந்த பின்பே தம் தப்பிதத்தைத் தெரிந்து கொள்ளுகிறார். ஸ்வயஞானம் உதயமாகின்றது. ஆனால், அவளிடம் இவ்வளவு காலம் அனுபவித்த சுகங்களை எல்லாம் சீக்கிரம் மறந்துவிட முடியுமா? அவளிடம் அனுபவிந்தது அனுபவித்தாய் விட்டது. ஆனால், தாம் எதை உத்தேசித்து தபஸை ஆரம்பித்தாரோ அது கைகூடாமல் தாமதிக்கப்பட்டதே என்று வருத்தமுறுகிறார். மேனகையிடம் கோபித்துக்கொள்ள அவர் மனம் இடங்கொடுக்கவில்லை. நல்ல வார்த்தைகள் சொல்லி அவளை அனுப்பிவிட்டு ஏற்கனவே ஆரம்பித்த தீவிர தபஸை இன்னும் உக்கிரமாகச் செய்கின்றார்.

மனதிற்கு, ஆசாபாசங்களினால் அலைக்கப்பட இடங்கொடுப்பது அறிவீனம் என்றும், அக்காமக் குரோதாதிகளை அறுத்தெறிய வேண்டும் என்றும் இதற்குள் விச்வாமித்ரர் அறிந்துகொண்டு விட்டார். "அனுபவிக்கும் தன்மை" என்று வேதாந்திகள் சொல்லுவார்கள். ஒரு பதார்த்தத்தில் ஒருவன் இந்த "அனுபவிக்கும் தன்மை"யைக் காண விரும்பினாலொழிய பதார்த்தங்கள் அவைகளின் ஸ்வபாவ நிலைமையில் விரும்பத் தக்கனவல்ல. இவ்விஷயத்தை விச்வாமித்ரர் உணரவில்லை. "இவ்வனுபவிக்கும் தன்மை" என்பது மனதைச் சேர்ந்த ஏதோ ஒன்று. பதார்த்தத்தினிடத்திலேயே அதற்கு நிரந்தரமான ஆஸக்தி கிடையாது. அப்படி யிருக்குமளவில் ஒரே பதார்த்தம் ஒவ்வொருவருக்கும் எக் காலத்திலும் அனுபவ வஸ்துவா யிருக்கலாம்; ஆனால், அது அப்படி யிருப்பதில்லை. மனப் பூர்வமாய் விச்வாமித்ரர் காமக்குரோதாதிகளை வெல்ல முயற்சித் திருக்கிறார்; ஆனால், மனதையடக்கவேண்டு மென்ற விஷயத்தை மறந்து விடுகிறார்; பதார்த்தங்களல்லவோ தைர்யமாய் ஆசை காட்டுகின்றன; ஆகவே பதார்த்தங்கள் பேரில் தான் குற்றம் என்று எண்ணுகிறார். இவரை மயக்க இந்திரன் ரம்பையை அனுப்பிக்கும்பொழுது, இவருடைய கோபங்களெல்லாம் அவளை நோக்கிச் செல்லுகின்றன. ஆசைகளெல்லாவற்றையும் வெல்லுவதில் இப்பொழுது ஈடுபட்டிருக்கின்றார். ஒரு குறிப்பிட்ட ஆசையை ஏற்கவோ உதறித்தள்ளவோ தம்மிடமே சக்தியிருக்கின்றது என்பதை மறந்துவிடுகிறார். ரம்பை அனுபவிக்கத் தகுந்தவள் என்று அவளை நோக்குகிறார். இவ்வுணர்ச்சி அவருள் உறங்கிக்கிடக்கும் விஷயபோக ஆசையை எழுப்புகிறது. ஸமயத்தில் நல்ல ஞாபகம் வந்து விடுகிறது. உடனே ஆசைக்கு வழிகொடுக்க மறுத்து விடுகிறார்; ஆனால், தாம் குறிப்பை அடைவதற்குப் பிரதி கூலமாய் வந்து தம்மை மயக்க எத்தனிக்கின்ற வஸ்துவை விடக்கூடாது என்று நினைக்கின்றார். விஷயாபிலாஷையை விரட்டியடிக்கின்றார்; ஆனால், அப்படிச் செய்யும் பொழுது கோபத்திற்கு வசமாகி விடுகிறார். அவர், ஆசையை ஜெயித்திருக்கலாம், ஆனால் ஆத்மவச்யத்தை இன்னும் அடையவில்லை. இவரை மயக்க ரம்பை துணிந்து வரும் பொழுது அவருடைய பெருமை பங்கப் படுகிறது; அவரால் அவள் சபிக்கப்படுகிறாள். அடுத்த நிமிஷம் ஸத்புத்தியை

அடைந்து, "அடடா! மயங்கிப் போகும்படியாய் அவ்வளவு மனத்தளர்ச்சியுள்ளவனாய்ப் போய் விட்டேனே!" என்று வருந்துகிறார். தமது புத்திமயக்கத்தினால் அவனைச் சபிக்கும்படி ஏற்பட்டதே என்றுதான் அவருக்கு ஜாஸ்திவருத்தம். எப்படி யிருந்தாலும் அவருக்கு நஷ்டம் நஷ்டம் தான்.

௫

## வைராக்யத்தின் ஆனந்தம்

பரிபூர்ணமான தீவிர வைராக்யம் கைகூடும் வரை எழுந்திருப்பதில்லை என்ற விரதத்தோடு பலமான தபஸ் செய்கிறார். ஆயிரம் வருஷங்கள் உபவாஸம்; அதன் பிறகே அவர்முன் ஆகாரம் ஸமர்ப்பிக்கப்படுகிறது. இந்திரன் ஓர் ஏழைப் பிராம்மண வேடம் பூண்டு விச்வாமித்ரரின் முன் வைத்திருக்கும் அன்னத்தை யாசிக்கின்றான். வஸிஷ்டாசிரமத்தில், காமதேனு வஸிஷ்டராலும் விச்வாமித்ரராலும் விரும்பப்பட்டது; இங்கும், ஒரே பதார்த்தம், இப்பொழுது ஆகாரம், ஏழைப் பிராம்மணனாலும் விச்வாமித்ரராலும் இச்சிக்கப்படுகிறது. சுரபி வஸிஷ்டரின் சொத்து. அப்படி யிருந்தும் விச்வாமித்ரர் பலாத்காரமாகவாவது அடைய விரும்பினர். இங்கு, இந்த ஆகாரம் விச்வாமித்ரருடையது. அதை அவர் சந்தோஷமாய் அந்தப் பிராம்மணனுக்குக் கொடுக்கத் தயார். சுரபி ஆவச்யகமான பொருளல்ல; ஓர் காமிய வஸ்துவே அது; இருந்தும் அப்பொழுது விச்வாமித்ரருக்கு அதனிடத்தில் பெரிய ஆசை. இங்கே, ஆகாரம் அத்யாவச்யமான பிராணாதாரமான பொருள்; அதைத் தானம் செய்ய ஆக்ஷேபணையே கிடையாது. கொஞ்சமேனும் தயங்காமல் பசியுள்ள பிராம்மணருக்கு அன்னமளிக்கிறார். பிராம்மணனுடைய திருப்தி இவரைத் திருப்தி செய்கிறது. உண்மையாய் சுயநலத்தை இப்பொழுது முற்றிலும் துறந்து விட்டார். பதார்த்தங்களை அனுபவிப்பதிலிருந்து வரும் சுகத்தைக் காட்டிலும், பரிபூர்ண, ஸர்வஸங்க பரித்யாகத்தினால் உண்டாகும் சாந்தியும் ஆனந்தமும், பதின்மடங்கு மேலானது என்று உணர்ந்தார். ஆசையைத் திருப்தி பண்ணுவதில் அல்ல, அதை ஒழிப்பதிலேயேதான் உண்மையான ஆனந்தம் இருக்கிறது என்றும் அறிந்துகொண்டார். இந்திரிய கோசரமான ஒவ்வொரு வஸ்துவையும் அனுபவிப்பதிலிருந்து ஆரம்பித்து, ஆசையையே அடியோடு அழித்ததில் முடித்தார். அனுபவ வஸ்துக்கள் அனைத்தும் இப்பொழுது அவர் ஆதீனம். அவைகளிடம், பரிபக்குவமான அவரது வைராக்கிய சித்தம், செல்லவில்லை. வஸிஷ்டரின் ஜன்ம வைரி இப்பொழுது வஸிஷ்டரின் ஆப்த ஸகாவாக மாற்றப்பட்டார்; லோகத்திற்கே ஓர் பெரிய பந்துவாகி விட்டார். அகண்ட புவனத்தின் அதிபதியா யிருந்தவர் இப்பொழுது ஸர்வ ஸங்க பரித்யாகியாய், பதாசாரியாய், பரிவ்ராஜகராய், லோக சஞ்சாரம் செய்யத் தலைப்பட்டு விட்டார். விச்வாமித்ரரின் முன்னேற்றத்தின் வழி சுரபியினிடத்திலுண்டான ஆசையிலிருந்து ஆரம்பித்தது. இப்பொழுது அதனிடத்தில் அவருக்கு ஞாபகமே கிடையாது. காமிய வஸ்துவாயிருந்தாலும் உண்மையாய் ஊக்கத்துடன், நியாயம் தவறாமல் நாடிச் செல்பவனுக்கு, இறுதியில், நித்ய அகண்ட, பரிபூர்ண ஆனந்தம் நிச்சயம் ஸித்திக்கு மென்பதற்கு விச்வாமித்ர மஹாமுனிவரின் சரித்திரமே ஒரு பெரிய அத்தாக்ஷியாகும்.

---

# சந்தேகம் தெளிதல்

வினு:—பசியின் மிகுதியாலும், காலம் இடம் இவைகளின் வசதிக் குறைவினுலும், நாம் செய்யவேண்டிய நித்தியானுஷ்டான விதிகளைச் சரியாய்ச் செய்ய முடியாமல், அவசரப்பட்டு உண்ணவேண்டிய சில சந்தர்ப்பங்கள் நேரிடுகின்றனவே, அவ்வாறு செய்தல் தகுமா? P. கோ.

விடை:—நித்யானுஷ்டானங்களைத் தவருது செய்துமுடிக்கும் பழக்கம் ஒன்றை, எவ்வளவு சிரமப்பட்டாயினும், உண்டாக்கிக் கொள்ளல்வேண்டும். இது அவசியமாகும். இவ்வாறு பழக்கம் ஏற்பட்டபின், நித்யானுஷ்டானங்களைச் செய்து முடிக்கும்வரை பசியும் சற்று அடங்கியே இருக்கும். காலம் இடம் பசிமிகுதி இவற்ருல் வசதிக்குறைவு ஏற்படுவது உலகவாழ்க்கையில் மனிதர்க்கு நேரக்கூடியதொன்றேயாம். வசதி கிடையாத போது, கிரியைகளைச் சுருக்கிக்கொள்ளலாம்; இன்னின்னவாறு சுருக்கிக்கொள்ளலாம் என்பதும் தொன்றுதொட்டுப் பெரியோர் கூறிவருகின்றனர். கிரியைகளைச் செய்ய வழியே இல்லாது போயின், மனதினுல் செய்யத் தகுந்த தியானம், ஜெபம் முதலியவற்றை யேனும் செய்தல்வேண்டும்; இதற்கு இடவசதியும் மற்ற வசதிகளும் அவ்வளவு வேண்டியிரா; மனவசதி மட்டும் உண்டாயின் அவைகளை இயற்றுதல் இயலும். குறைந்த காலமே மிஞ்சுமாயின், அதற்குள்ளாயினும் ஜெபம் தியானம் முதலியவற்றைச் செய்தல் வேண்டும். பொதுவாகப் பதினைந்து நிமிஷ நேரமாயினும் தியானத்திலோ ஜெபத்திலோ இருத்தல் நன்ருகும். இதற்கும் வசதியில்லையாயின், உண்மையாகவே வசதியில்லையாயின், நேரத்தை இன்னும் குறைத்துக் கொள்ளலுமாகும். மனம் முன்னமே பழக்கப்பட்டிருக்குமாயின், அனுஷ்டானத்தைச் செய்தாலொழிய அமைதியை அடையாது. ஆனல் சோம்பேறித் தனத்தினுலும், சிரத்தையின்மையாலும், மனவெறுப்பினுலும், அனுஷ்டானத்தைக் குறைக்கும் விருப்பத்திற்கு இடம் கொடுத்தல் தகாது. பொதுவாக நோக்குமிடத்து, அனுஷ்டானத்திற்குப் பொழுதில்லை என்று உண்மையாக மனப்பூர்வமாகக் கூறத் தகுந்தவர் மிகமிகச் சிலரேயாவார்; பிறரெல்லாம் வீண்பேச்சிலும் மற்ற வேலைகளிலும் பொழுதைக் கழித்துவிட்டு, அனுஷ்டானத்திற்கு மட்டும் பொழுதில்லையே என்பர்; இது பொருந்தாத செயலாகும். ஐந்து நிமிஷம் தியானம் பண்ணினுலும் மனதை அதில் இயன்றவரை குவியச் செய்தல் வேண்டும். மனதிற்கு இயல்பாகவே ஏற்பட்ட திரியும் குணத்தால், சிரத்தையின்மையால், அனுஷ்டானங்களை விட்டு விடுவதா யிருக்குமாயின், அதைத்தடுத்து அவைகளில் ஈடுபடும்படிச் செய்தல்வேண்டும்.

வினு:—கார்த்திகை முதலிய விரதங்களை அனுஷ்டிக்கும் முறை எப்படி? பட்டினி கிடக்கவேண்டுமா? அவ்வாறு செய்யும் பொழுது மனம் பசியை நீக்கும்பொருட்டு ஆகாரத்தைத் தானே ஆவலுடன் எதிர்பார்க்கிறது. அச்சமயம் கடவுளின் நினைவு சிறிது குறைந்து போகிறதே. P. கோ.

விடை:—விரதங்களை உடலின் நன்மைக்காகவும், மனதின் நன்மைக்காகவும், ஒழுக்கத்தைச் சீர்திருத்துவதற்காகவும் அனுஷ்டிக்கலாம். பட்டினி கிடத்தலை மட்டும் விரதமாகக் கொள்ளுவார்க்கு,

அதனால் உடல் நன்மை மட்டும் விளையும். பட்டினி கிடத்தலினால் உடல் ஒருவாறு தூய்மை யடைகிறது. உடலிலுள்ள ஜீரணைக் கருவிகள் ஓய்வடைகின்றன. சில நோய்கள் உடலைவிட்டு நீங்குகின்றன. உடல் போதிய அளவு வளர்ச்சி யடைந்த பின், வளரும் காலம் முடிந்தபின், இடையிடையே பட்டினி கிடத்தல் உடலிற்கு நன்மை பயக்கும்; ஆயுள் நீடிக்கும். "அற்றால் அளவறிந்து உண்க, அஃதுடம்பு பெற்றான் நெடிதுய்க்குமாறு" என்றார் நாயனார். விரதம் உணவைக் குறைத்தலிலும், அதன் இயல்பை மாற்றுவதிலும் மட்டும் அடங்கி யிருக்கிறதென்று கருதுவோரும் விரதத்தால் முற்கூறிய பயன்களை அடைவர். விரதத்தை உடலளவாக மட்டும் பற்றாது, மன அடக்கத்திற்காகப் பின் பற்றுவோர் மனவலிமை பெறுவார்; உடலை விரதங்களின் மூலமாக அடக்கி ஒடுக்கி யாள்பவர் மனத்திண்மையைப் பெறுவார்; மன ஆற்றல் அதனால் வளர்ந்துவரும்; உடலையும் மனத்தையும் நாம் நினைத்தவாறு ஆட்டிவைக்கும் சக்தி பெருகும். உடலிற்கும் மனதிற்கும் உண்டாகும் துன்பத்தைப் பொறுத்தலினால் மனவலிமை மிகுகின்றது. தவத்தின் ஆற்றற்கு இதுவே வித்து. துன்பத்தை சகித்துக் கொள்ளும் சக்தியாகிய பொறுமையே உயர்ந்த மன அடக்கமாகப் பின் முதிர்கின்றது. "உற்ற நோய் நோன்றல் பிறர்க் குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற்கு உரு" என்றார் குறளாசிரியர். விரதங்களினால் விளையும் உடல் துன்பத்தையும் மனத்துன்பத்தையும் பொறுக்கும் ஆற்றலை வளர்க்கவேண்டும் என்னும் எண்ணத்தோடும் விரதங்களை அனுஷ்டிக்கலாம். மூன்றாவதாக விரதங்களினால் ஒழுக்க வலிமையையும் மனத் தூய்மையையும் பெற முயற்சிக்கலாம். இதுவே, மிக உயர்ந்த பயனையும் உண்மையான நன்மையையும் அவைகளால் அடைதற்கு வழியாகும். பட்டினி கிடப்பதும், அதனால் வரும் துன்பத்தைப் பொறுத்துக் கொள்வதும் இறைவனையே மனத்தினுற் சிந்தித்தற்கும் வாயினாற் பாடுதற்கும் இன்றியமையாத பிடிகைகளேயாம். வயிற்றில் ஆகாரம் குறைந்திருக்கும்போதும், சத்வ குணத்தை உண்டு பண்ணும் ஆகாரமே உண்ணப்படும்போதும், மனம் இயல்பாகவே தியானத்திற்கு ஏற்ற நிலையை அடைகிறது. அந்த நிலையில் கடவுளைப் பற்றிய சிந்தனையில் மனதைச் செலுத்தினால் மனம் தூய்மையை மெல்ல மெல்ல அடையும்.

விரதங்களை அனுஷ்டிக்க விரும்புவார் முற்கூறிய மூன்று பயன்களில் ஒன்றையோ இரண்டையோ மூன்றையுமோ பெறும் நோக்கத்தோடு அனுஷ்டிப்பார். ஆனால் மூன்றாவது பயனே அனைத்தினும் சிறந்ததாகும். இப்பயனைப் பெறும் விருப்பத்தோடு, பட்டினி கிடத்தலை இதற்குத் துணையாகப் பழகுவோர் மூவகைப் பயன்களையும் பெற்று மகிழ்வார். ஆதலால், கார்த்திகை முதலிய விரதங்களை அனுஷ்டிக்க விரும்புவோர், முதலில் சோறு காய்கறிகள் முதலியவற்றைத் தவிர்த்து, தோசை உப்புமா முதலிய பலகாரங்களை மட்டும் உண்டு பழகவேண்டும்; பின்னர், இப்பழக்கத்தினால் உடலுக்குத் துன்பம் தோன்றாதபோது, பால் பழம் இரண்டையும் உண்டு வரவேண்டும்; இதனாலும் உடலிற்குத் தளர்ச்சியும் துன்பமும் உண்டாகும் நிலை வந்தபின், முழுப் பட்டினியையும் பின்பற்றலாம். ஆனால் உடலின் பொறுக்கும் சக்தியைச் சிறிது சிறிதாகப் படிப்படியாக அதிகப்படுத்தி வரவேண்டும். கடுமையான விரதத்தினால் பயன் உண்டாகாது போகலாம்; கேடும் விளையலாம். விரதம் பழகும்போது, மனம் உடலைப்பற்றி அதிகமாக நினையாம

லிருக்கும் பொருட்டு, நல்ல நூல்களை வாசித்தல் பாராயணம் ஜெபம் பஜனை தியானம் செய்தல் முதலிய நல்லதூய கருமங்களில் மனதை ஈடுபடுத்த வேண்டும். இவ்வாறு செய்யாதபோது, உயர்ந்த பயன் கைகூடாமற் போகும். இம் மூன்றுவது பயனுக்கு இடையூறு விளையாதபடி, பட்டினியை, உடல் தாங்கும் அளவை ஆராய்ந்து கைக்கொள்ளல் வேண்டும். பட்டினி கிடக்க இயலாதபோது, அது அவசியமுமல்ல; உணவையே நினைந்துகொண்டு பட்டினி கிடப்பதினுல், விரதத்தின் முக்கியமான பயன் விளையாது. உடலையும் மனதையும் படிப்படியாகத்தான் அடக்கி வருதல் வேண்டும். பட்டினி கிடப்பதன் கருத்து தியானத்திற்கு ஏற்ற நிலையில் உடலையும் மனதையும் வைப்பதை என்பதை மறந்துவிடக் கூடாது; அந்த அளவிற்கு மேற்பட்டு உடலை வருத்துதல் நன்றன்று. விரத தினங்களில் நமது இஷ்ட தெய்வத்தை வழிபடலாம்; அல்லது, அந்த தினத்திற்குப் பொருத்தமான தெய்வத்தையோ பெரியாரையோ பற்றிச் சிந்திக்கலாம். கார்த்திகையன்று முருகப் பிரானையும், விநாயக சதுர்த்தியன்று விநாயகப் பெருமானையும், சிவராத்திரியன்று சிவபரம் பொருளையும், இம் மாதிரியே அந்தந்த நாள்கட்குத் தக்கபடி அந்தந்த தெய்வத்தையும் பெரியாரையும் பற்றிச் சிந்தித்து, நாளை அவமாக்காது தவமுயற்சியிற் செலவு செய்யலாம். விரத நாளில் உணவைக் குறைத்தலையே நோக்கமாகக் கொண்டு, விரதத்தை நிறைவேற்ற வேண்டும். சில சமயங்களில் இறைவனுக்கு அளிக்கப்படும் நல்லுணவைத் தூய பிரசாதமாகக் கொண்டு உண்ணலும் உண்டு. முற்கூறிய வற்றினின்றும் விரதம் அனுஷ்டிக்க வேண்டிய முறையும் அதன் பண்பும் பயனும் விளங்கும்.

வினு:—விக்கிரகங்களுக்குப் பால் எண்ணெய் முதலியவைகளை அபிஷேகம் செய்து, ஒருவருக்கும் பயன்படாது போகிறது. அவற்றை ஏழைகளுக்கு ஆண்டவன் பெயரைச் சொல்லி அளித்தல் நலம் என்ற எண்ணம் உண்டாதல் சரியா?

P. கோ.

விடை:—ஆண்டவன் ஒருவன் உளன் என்றும், அவன் விக்கிரகங்களிலும் உளன் என்றும் கருதுவார்க்கு இத்தகைய சந்தேகம் உண்டாக வழியில்லை. விக்கிரகங்களைக் கல்லாகக் கருதுவார் அவைகட்குப் பால் எண்ணெய் முதலியவைகளை அபிஷேகம் செய்வாராயின், அவைகள் வீணுகும் என்பதற்கு ஐயமில்லை; ஆனுல் அவ்வாறு நினைப்பார் அவ்வாறு செய்யமாட்டார் என்பது வெளிப்படை. விக்கிரகங்களைத் தெய்வத்தினது உருவத்திருமேனியாக நினைத்துப் பால் எண்ணெய் அபிஷேகம் ஒருவர் செய்வாராயின், அது வீணுகவில்லை என்பது அந்த அடியவர்க்குத் தெரியும். சில ஏழை மக்கட்குப் பால்கொடுத்தால் எப்படி அவர்கள் திருப்தியடைவதிலிருந்து கொடுப்பவன் மகிழ்கின்றுனே, அது போல், உருவத்திருமேனியுடைய இறைவனுக்குப் பால் எண்ணெய் அளிப்பதிலிருந்து, இறைவன் மனமகிழ்வதனுல், கொடுப்பவனும் மனமகிழ்கின்றனன்; அன்றியும் இச்செயலின் பயனுகப் பெரும் நன்மை அவனுக்கு விளைகின்றது. அம்மட்டோ! அபிஷேகம் செய்த பால் எண்ணெய் முதலிய தூய பொருள்களைப் பிரசாதங்களாக எண்ணிப் பெறும் அன்பரெல்லாம் மிக்க தூய்மையை அடைகின்றனர். (ஆண்டவனது பெயரைச்சொல்லி) ஏழைமக்கட்குப் பால்கொடுப்பது நல்ல பயனைத்தரும் என்ற கருத்தினுலன்றோ, இக்கேள்வி பிறக்கின்றது? அவ்வாருயின் ஆண்டவனே எதிரில் இருப்பதாகக்

கருதி, அவனுக்கே அன்போடு அப்பொருள்கள் சமர்ப்பிக்கப்படுமாயின், அதனால் அதனினும் மிக்க பயன் விளையுமன்றோ? இறைவன் மக்களின் மீது கருணைகொண்டு, அவர்கள் எளிதே உய்வடையும்பொருட்டுத் தனது அளவிலாத சக்தி ஞானம் முதலியவற்றை உள்ளடக்கிக்கொண்டு, தூலக் கண்ணுக்கு முன் தோன்றக் கூடிய ஓர் உருவத் திருமேனியோடு எழுந்தருளியிருந்து, மக்கள் அன்போடுசெய்யும் பணிவிடைகளையும் அன்போடு சமர்ப்பிக்கும் பொருள்களையும் மகிழ்ந்து பெற்றுத் தூய பிரசாதமாக்கி, அவைகளை உண்ணுபவரெல்லாம் பயனடையுமாறு சங்கற்பித்து, மெய்யன்போடு உருகுவார்க்குத் தனது உண்மையான வடிவத்தை அவ்வுருவவாயிலாகவே காட்டியும், மெய்ஞ்ஞான மருளியும், இன்னும் பலவாறாகவும் மக்களை உய்வித்துக் கொண்டு வருகிறான் என்பதே, விக்கிரகங்களை வழிபடுவோரது அனுபவமாகும். இவ்வாறு வழிபடுவோர்க்கும் வழிபட முயல்வோர்க்கும், இவ்வினாவில் குறிக்கப்பட்டுள்ள எண்ணம் உண்டாகாது; உண்டாகுமாயின், விக்கிரகங்களை உண்மையாக வழிபடுபவரல்லர், வழிபட முயலுபவருமல்லர் என்பது நிச்சயம். ஆனால் உலகமக்கள் அனைவரும் இந்த உருவவழிபாடு மூலமாகத்தான் உய்வடையவேண்டும் என்ற நியதியில்லை. ஆண்டவன் பெயரைச் சொல்லி, ஏழைகட்கு அன்னமிடுதல் முதலியன நல்ல அறச்செயல்களேயாம் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இறைவனது பெயரைச் சொல்லிக்கொண்டு அவர்களை மனிதர்களாக எண்ணி உதவிசெய்வதினும், அவர்களை இறைவனது வடிவங்களாக எண்ணி, செய்யும் செயல்களை அவர்கட்குள் மறைந்தொளிரும் ஆண்டவனுக்குச் செய்யும் பூஜை வடிவமான செயல்கள் என்று கருதி, ஏழை மக்களை இவ்வாறு வழிபட்டால், அதனால் மிக உயர்ந்த பயன் வழிபடுவோர்க்கும் வழிபடப்படும் அம்மக்கட்கும் உண்டாகும் என்பது, மெய்ப்பொருட்காட்சி யடைந்த, பெரியாரது துணிபாகும். உண்மையை நோக்குமிடத்து இறைவனை அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் எழுந்தருளியிருக்கிறானன்றோ? ஆதலின், இம்முறையில் ஏழைகள் வாயிலாக (உயிருள்ள விக்கிரகங்கள் வாயிலாக) இறைவனை வழிபடுவோனும் உயர்ந்த பூஜையைக்கைக்கொண்டவனே யாவான். இம்முறையினின்றும் சிறிதும் வழுவாது, மூன்று நாள் மனிதனொருவனை இறைவனாக எண்ணி வழிபடுவோன் உயர்வர உயர்ந்த ஞான நிலையை அடைவது உறுதியென்றும் மெய்ஞ்ஞானியர் கூறுவர்.

---

# உண்மை யோகியின் சாதனையும் இலக்ஷியமும்

(ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள்)

க

**மனம்** அடக்கப்படவேண்டுவது அவசியமே. அதனோடு அது தெய்விக எண்ணங்களால் நிரப்பப்படவேண்டும். இன்றேல் அடக்கப்பட்ட மனதால் எந்த பலனும் ஏற்படாது. சோம்பலும் மந்தமும் கொள்ளுமே யொழிய ஒருபோதும் பவித்திரப்படாது. நாம் சதா விழித்திருந்து, மனம் சற்று அடங்கும்போது உடனே அதனிடம் தெய்விக எண்ணங்கள் எழச் செய்யாமற் போவோமானல் மனம் கீழான நிலைக்குப்போய் ஏதமுறுவதற்கு ஏதுக்கள் பல இருக்கின்றன. யோகி வேண்டுவது உயர்ந்த தெய்விக நிலையான சாத்விகமே; மரம் கல்போன்ற உயிரற்ற சடவாழ்க்கையினை யன்று.

சித்த விருத்திகள் அலைகள் போன்று வெளிவந்து சிதறு வண்ணம் அவைகளை அடக்குவதே யோக மெனப்படும்.... ஆழ்ந்த உறக்கத்தின்போதும் மனிதன் முற்றும் தன்னை மறந்து தற்போதம் இழந்துவிடுகிறதில்லை. தன்னை மறந்தநிலையென்று கூறப்படும்போதெல்லாம் கருவி கரணங்கள் யாவும் சிறிது அயர்ந்து தம் காரியங்களில் முறையுடன் ஈடுபடுகின்றன. ஜீவன் தன்னை மறந்த நிலையையே தற்போதமிழந்த நிலையென நாம் கருத வேண்டும். அறியாமையாகிய கோசங்களால் தற்போதம் கவிந்து மூடப்பட்டுள்ளது. ஆழ்ந்து உறங்குவதினலேயே நாம் ஞானவான்களாகி விடமாட்டோம்; மயக்கம் தீரப் பெற்றவர்களாகிவிடமாட்டோம். மூளையும் சரீரமும் மாத்திரம் சிறிது களைதீர்ந்து உற்சாகம் பெறும். அவ்வளவே.

சமாதியின் கீழ்நிலைகளிலே சுவாசமும், ஹிருதயத் துடிப்பும் இருந்துகொண்டே இருக்கும். ஆனல் உயர்ந்த நிலையில் அவ்விரண்டும் அடங்கி நின்றுவிடும்.

காரணத்திலிருந்து சூக்ஷ்மமும், சூக்ஷ்மத்திலிருந்து இத்தூலமனமும் உண்டாயின. மனம் ஒருபெரிய கடல்போன்றது. இத்தூலமனத்தை அதன் மத்தியிலிருக்கும் தீவுஎன்று கூறலாம். மனத்தின் கீழ்நிலையில் எப்போதும் அலைகள்போன்று அசைவு ஏற்படுகின்றது. ஆழ்ந்த அடிவாரத்திலோ சிறிதும் அசைவு கிடையாது.

உ

'அசத்துவினிடத்துள்ள நம்பிக்கை மனத்தை அசத்தோடு சேர்க்கிறதுபோல சத்திலுள்ள நம்பிக்கை, வியவகாரிக நிலையிலிருந்து விடுவித்து அசத்துவினைக் கடந்து செல்லவுதவுகின்றது.'

சத்துவினிடத்து வளர்தல் தேய்தல் என்பன கிடையாது. உண்டாதல் என்றல் ஒரு நாள் அது ஒழிந்து போகவேண்டும். உண்டாதல் ஒழிதல் என்பன வெல்லாம் வியவகாரிக நிலையிலேயே நிகழ்வனவாம். இறுதியில் எல்லாம் இருப்பதாகிய சத்தோடு ஒன்றுகிவிடுகின்றன. ஆத்மீகத் துறையின் உயர்ந்த படியில் நின்று பார்க்கும்போது வளர்தல் என்பது ஒரு பொய்யே; உண்மையல்ல. ஆனல் வளர்தல் வியவகாரிக நிலையில் ஒரு குறிப்பிட்ட அளவு நன்மை பயக்குவதாகும். நமது மகரிஷிகள் நமக்குப் போதித்த அனைத்திலும் முற்றறிவுடையவர்களாக விருந்தனர். உண்மை அதன் விளைவு இவைகளைக் கண்டு அவர்கள் சிறிதும் அஞ்சினர்களில்லை.

அத்வைத வாதிகள் சத்து வளருகின்றது என்பதில் நம்பிக்கை யுடையவர்களல்ல. சத்து என்று சொல்லப்படுவது எந்தவிகாரத்துக்கும் உட்படாதது. நிலைத்துள்ள நித்திய வஸ்து வளர்தல் தேய்தலுக் குட்படாது. ஆக, இருப்பது சத்து ஒன்றே; ஏனைய தோன்றி மறைவன வனைத்தும் மித்தையே. ஆத்மவின் தற்போதத்தில் எந்த இடையூறும் ஏற்படுகின்றதில்லை. பொய்க் கற்பனைகளான அறியாமையாகிய கோசங்களால் அது மூடப்பட்டிருக்கலாம். அவ்வளவே.

௫

தற்போத மிழப்பதுதான் ஆத்மஞான மென்பதல்ல. அது உண்மையானது; அது உண்மையை உடையதாக இருக்க வேண்டும். ஒன்றுமில்லை என்று கூறும் நிலையினதல்ல; உயிரற்றசடம் போன்ற தன் எதிர் மறையானதாகும் அது. நினைவுக்கும் கீழ்போவது மிருகம் போன்ற நிலையாகும். அது எப்படி ஞானவாழ்க்கையாக முடியும்? இவ்வுண்மை மேனாட்டில் பொதுப்பட மாறுபடக் கொள்ளப்படுகிறது; தாம் பேசுவது இன்னதென்றுணராத சமயப் பிரசாரகர்கள் இதனைச் சித்திரவதை செய்து விடுகின்றார்கள்.

ஆத்மஞான நிலையில் ஆத்மன் தன் சுய நிலையை உணரப் பெறுகின்றது. மற்ற போது மனத்தின் பலவேறு விகாரங்களுடன் தன்னை ஐக்கியபடுத்திக் கொள்ளுகின்றது. இவ்விகாரங்களிலிருந்து ஆத்மனைப் பிரிப்பதே யோகத்தின் செயலாகும். ஆத்மன், மனம் சரீரம் இவ்விரண்டிற்கும் முற்றும் அப்பாற் பட்டதாகும்; அத்தகைய ஆத்மனிடத்தில் வளர்தல் தேய்தல் கிடையாது; அல்லது உண்டாதலும் ஒழிதலும் இல்லை. சத்து—உள்ளத ஆத்மன்-விகசிக்கின்றது, வளர்கின்றது என்பனவெல்லாம் தப்பே. வளர்தல் என்றால் வேறுபாடாகும்; எது மாறுபடுகின்றதோ அது ஒருபோதும் உண்மையாகாது; சத்தாகாது.

௬

ஜீவ போதத்திற் கன்னியமான பிரம்ம ஐக்கியமே வேண்டப்படுவது. ஆனால் இடையிலே சிற்சில ஆபத்துக்கள் இருக்கின்றன. ஆனந்தமய கோசமாகிய காரண சரீரத்தையே பிரம்ம போதம் என்று மருள் கொள்வதும் ஏற்படலாம்; ஆனந்த மயகோசம் நமக்கு உற்சாக மூட்டி சந்தோஷிப்பிக்கிற தென்றாலும் அதுவே முடிவல்ல.

'அனைத்துயிர்க்கும் ஆதாரமாயிலங்கி சுயம்பிரகாசமாக விளங்குவது பிரம்மம். செவிக்குச் செவியாக, கண்ணுக்குக் கண்ணாக, மனதுக்கு மனதாக எல்லா ஜீவ சக்திக்கும் ஆதாரமாகவும் இருப்பது அது. இதை யறிந்த ஞானியர்கள் இந்திரியங்கள், மனம் முதலியனவற்றோடு ஆத்மனை ஒன்றுபடுத்தாமல் சாகா நிலையை யெய்துகின்றனர்.'

'அது கண்ணுக்குப் புலப்படாதது, வாக்குக்கு எட்டாதது, மனதால் அறிய முடியாதது. நாம் அதனை அறிகிறதில்லை; நாம் அதனைப் பார்க்கிறதும் கிடையாது. அதனைப் பற்றிப் பிறர்க்கு எங்ஙனம் எடுத்தோத முடியும்? நமக்குத் தெரிந்தவை, தோன்றியுள்ளவை அனைத்துக்கும் அந்நியமானது; தோன்றாதனவும், நாம் அறியாதனவுமான எல்லாவற்றிற்கும்கூட அது வேறானதாகும். எங்களுக் கெடுத்துரைத்த பண்டைய ரிஷிகளிடமிருந்து இங்ஙனமே நாங்கள் அதனைப் பற்றிக் கேள்விப்பட்டோம்.'

'எது எவருடைய மனத்தினாலும் அறிய முடியாததோ, அது அனைவருடைய மனத்தையும் அறிகின்றது; எது எவராலும் கண்கொண்டு காணமுடியா

தேதோ அது கண்ணின் காட்சியைக் காண்கின்றது; அதனையே பிரம்மம் என்று அறிவாய்; மற்று இங்கு மக்களால் உபாசிப்பது (பிரம்மம்) ஆகாது.'

௫

சிறிதளவான உலகப்பற்றுதலுள்ளவர்கள், உலகப்பற்றிலிருந்து முற்றும் விடுபடாதவர்கள் ஆகியமக்கள் வேதாந்தத்துக்கோ அல்லது கிருஸ்து நாதரது போதனைக்கோ முற்றும் கவனம்செலுத்த மாட்டார்கள். இத்தகைய மக்கள் இவ்வித உபதேசங்களை விரும்புகிறதில்லை. ஏன் எனில் மெய்ஞ்ஞானிகள் எல்லோரும் ஆத்மனையடைய தியாகத்தினைத் தவிர்த்து வேறு வழியில்லையென்று கூறுகிறார்கள். வாழ்க்கையில் அடக்கம், ஒழுக்கம் பரிசுத்தம், பற்றற்றதன்மை இவற்றினை அனுசரிக்காதவர்கள் மெய்ஞ்ஞான வாழ்க்கைக்கு வெகு தொலைவிலுள்ளவராவர்; வாழ்க்கையின் இலக்ஷியத்தினை அடைய அவர்கள் அருகராகார். விவேகம், வைராக்யம், பரிசுத்தம், பற்றற்றதன்மை, அஹிம்சை இவைகளை மனம் வாக்கு காயம் மூன்றாலும் அநுஷ்டியாதவர்க்கு ஆத்மீய வாழ்க்கை இல்லையென்றே சொல்லிவிடலாம். இவைகள் இல்லாமல் அநுஷ்டிக்கப்படும் வாழ்க்கைக்கு எந்த பெயரை வைத்துக் கூப்பிட்டாலும் அது மெய்ஞ்ஞான வாழ்க்கையாகிவிடாது.

பற்றுதலைத் தியஜிக்க விரும்பாதவர், காமம், கோபம், ஆசைகளின் ஏவல்களின் ஏவல்களுக்குட்பட்டு வாழ விரும்புபவர்கள் எவரும் மெய்ஞ்ஞான வாழ்க்கைக்கு-கடவுள் வாழ்க்கைக்கு-ஆத்மீய வாழ்க்கைக்கு அருகராகார். அவர்கள் உண்மையில் கிருஸ்துநாதரின் அடியார்களாகார். இங்கே நான் கிருஸ்துவராகார் என்று கூறவில்லை. ஏன்? கிருஸ்துவர்கள் என்று கூறுபவர்களில் பெரும்பான்மையோர் கிருஸ்துநாதனுக்கும் தமக்கும் யாதொரு சம்பந்தமும் வைத்துக்கொண்டு வாழ்கிறார்களில்லையாதலால்.

௬

பிரார்த்தனை ஜப காலங்களில், பகவந் நாமத்தினை உச்சரிக்கும் ஒவ்வொருமுறையும், அது மனத்தைப் பரிசுத்தப்படுத்தவும், அப்புனித நாமம் மனத்தின் சகல கல்மஷங்களையும் கழுவவும், ஆசாபாசங்கள் அறியாமை ஆகிய முடிகளையகற்றி ஆத்மன் பிரகாசிக்கவும், செய்யும்படியாக ஆழ்ந்த எண்ணங்களை உம்மனத்தில் எழுப்புவீராக.

பிறகு ஆரம்பத்தில் அநுஷ்டிக்க வேண்டிய இயம நியமங்களை சிறிதும் வழுவாது அநுஷ்டிக்கவேண்டும். இது மேலெழுந்த வாரியாக செய்யப்படுவது மாத்திரமன்று; வெறும் சரீரத்தினால் மாத்திரம் செய்வதோடு நின்று விடுவதன்று. முழுமனதுடன் இவ்வநுஷ்டானங்களில் ஈடுபடவேண்டும். அதற்கு முன் உம்மால் ஒன்றும் அடையமுடியாது. இவற்றினை அநுஷ்டிக்காமல் எங்ஙனம் மேலேற முடியும்? இவைகளை நீர் அநுஷ்டிக்கவில்லையானால் உம்வாழ்க்கையில் எந்த மாறுதலும் ஏற்படாது; எதனையும் நீர் அடையமாட்டீர். இவைகளை முழுதும் அநுஷ்டிக்கவேண்டும் என்பதால் முதலில் கொஞ்சம் கஷ்டமாகத்தானிருக்கும்; கொஞ்சம் அதிக சிரமம் ஏற்க வேண்டித்தான் இருக்கும். என் செய்யலாம், வேறு குறுக்கு வழியில்லையே! முதலில் சிரமமாக விருந்தாலும் நாளடைவில் அது நமது வாழ்க்கையோடு ஒன்றுபட்டு விடும்; சர்வ சாதாரணமாக ஆகிவிடும்! பின்னாளில் சுலபமாகவே தோன்றும். என்றாலும் ஆரம்பத்தில் இது கடினமாகத் தோன்றும்; சிரமங் கொடுக்கக் கூடியதாகத் தோன்றும் பாதையில் சென்றுதான் ஆகவேண்டும்; இன்றேல் ஆத்மீய வாழ்க்கையை மனவருத்தத்துடன் ஒதுக்கித் தள்ளவேண்டியதுதான். வேறு வழியில்லை.

# குறியீடு

('ஹிருதயகமலன்')

ஆங்கில அரசாங்கத்தில், இந்தியாவின் சில இடங்களில் ஓர் அதிகாரி பல உத்தியோகங்கள் வகிப்பதைக் காணலாம். ஒரு சமயம் கிராம அதிகாரியாகவும், மற்றொரு சமயம் நீதிபதியாகவும், மற்றும் வேறு காரியங்களை மேற்கொண்டு நடத்துபவராகவும் ஒருவர் உத்தியோகம் வகிப்பது சாதாரணமே. இது போலவே ஹிந்துக்களும் சர்வேஸ்வரனை ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களிலும் ஈடுபட்டிருப்பதாக எண்ணி வழிபடுங்கால், முறையே பிரம்மா, விஷ்ணு, சிவன் எனப்பெயரிட்டழைக்கின்றனர். மற்றும் பல பெயர்களாலும் போற்றப்படுவதுண்டு; என்றாலும், இம்மூன்று பெயர்களும் இந்து மதசார்பினர் யாவருக்கும் முக்கியமானவையாகும்.

முக்கியமதாசாரியர்களான, ஸ்ரீசங்கரர், ஸ்ரீராமனுஜர், ஸ்ரீமத்வர் இம்மூன்று ஆசார்ய புருஷர்களில் யாரேனும் ஒருவரை வேதங்களை நம்பியுள்ள ஹிந்துக்கள் பின்பற்றுவார்கள். சங்கரர் சிவபிரானையும், மற்ற ஆசாரியர்கள் விஷ்ணுவையும் மிகப் பாராட்டுவார்கள். இவ்வாசாரியர்களைப் பின் பற்றும் சிலர் விஷ்ணுவையும், சிலர் சிவனையும் துவேஷிப்பது சகஜம். ஆனால் அவர்கள் அம்மாதிரி துவேஷிப்பது, அவர்கள் பின்பற்றும் ஆசார்யர்களுடைய குற்றமாகாது. ஆசார்யர்கள் போதித்தது யாதெனில், தங்களுக்கு இஷ்டமான ஸ்வரூபத்தின் மஹிமையை எடுத்துரைத்ததே ஒழிய வேறில்லை. இந்த நாம ரூப பேதங்களே இம் மூன்று ஆசார்யர்களைப் பின் பற்றுவர்களிடம் நாம் சில சமயம் காணும் பகைமைக்குக் காரணம். திருவநந்தபுரத்திலுள்ள ஸ்ரீ அனந்தபத்மநாபஸ்வாமிகோவில், உடுப்பி மத்வாசார்ய மடத்தைச் சார்ந்த ஆசாரியார் ஒருவரால் அக்காலத்து அரசனின் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்தாபனம் செய்யப்பட்டது என்பது ஐதிகம். ஆதலால் அக் கோவிலில் உள்ள கடவுள் விஷ்ணு ஸ்வரூபமாக இருத்தல் வேண்டும். ஆனால் அவ்விடத்தில் விஷ்ணுவே சிவபெருமானை ஆராதனை செய்வதாகக் காண்கின்றோம். வீர சைவன் ஒருவன் விஷ்ணுவிடம் மிகக் குரோதத்துடன், சிவபிரானைப் பூஜிக்குங்கால், சிவபெருமான் தன் ஒரு பாதியில் விஷ்ணு ஸ்வரூபத்தைக் காட்டினார் என்ற கதையை நாம் வாசித்துள்ளோம். அப்பெயர்கள் இரண்டும் உண்மையில் ஒரே சர்வேஸ்வரனைக் குறிக்கின்றனவேயொழிய வேறில்லை. மக்கள் தமதுபிரியம்போல்பூஜிப்பதற்காக ஏற்பட்டவையே சர்வேஸ்வரனுடைய திருநாமங்கள்யாவும்; பல வேறு நாமங்களால் துதிக்கின்றவர்களிடையே சண்டை சச்சரவு ஏற்படுவதற்காகவல்ல.

இந்துக்கள் வெவ்வேறு சம்பிரதாயங்களை அனுஷ்டிப்பவர்கள் என்பதைக்காட்டுவதற்காகப் பலவித குறியீடுகள் ஏற்பட்டுள்ளன. அவைகளின் உண்மையான தத்துவம் வேற்றுமையைக் காண்பிப்பதல்ல. எவ்வகையான மோக்ஷ சாதனத்திற்கும் அடிப்படையாய் அமைந்துள்ள தூய்மை, பக்தி, ஆன்மார்த்தம் என்பவைகளை எடுத்துக் காட்டுவதற்காகவே அக்குறிகள் ஏற்பட்டுள்ளன. முக்கியமாக, மேல் ஜாதியினர் மூவருக்கும் பொதுவாக ஏற்பட்டுள்ள யஞ்ஞோபவீதத்தை எடுத்துக் கொள்ளுவோம். பூணூலை அணியும் விதி இந்துக்களின் பழக்கவழக்கத்தில்

ஸ்தாபனமாவதற்கு முன்னமே, நிஷ்டையின் மஹிமையை ஞானிகள் அறிந்திருந்தனர். எவரும் சிறு பிராயத்திலிருந்தே தியானம் பழகவேண்டுமென அவர்கள் போதித்து வந்தனர். பிரம்மசர்யத்திற்கேற்ற வயது வந்தவுடன், ஒரு பையனுக்குப் பூணூல்போடுகின்றனர். குறித்த காலங்களில் சில மந்திரங்களை உச்சாடனம் செய்யச் சொல்லுகின்றனர். பூணூலிலுள்ள மூன்று நூல்களும் முறையே மனம், வாக்கு, உடல் இம்மூன்றையும் அதிலுள்ள முடிப்பு அம்மூன்றின்மேல் ஏற்பட்டுள்ள அதிகாரத்தையும் காட்டுவதாகும். ஆதலால் பூணூல் தரித்திருப்பவன் கெட்ட எண்ணங்களை நினைக்காமலும் நலமற்றவார்த்தைகளைப்பேசாமலும் கொடூர கிரியைகளைச் செய்யாமலுமிருப்பானென எதிர்பார்க்கப்படுகின்றது என்பதை பூணூல் குறிக்கின்றது

சைவர்கள் நெற்றியிலும் மார்பிலும் வீபூதி தரிப்பதை நாம் கண்டிருக்கின்றோம். மற்ற வஸ்துக்களெல்லாம் எரிந்தபின் தங்கும் சாம்பலாகிய வீபூதி பரிசுத்தத்தின் அறிகுறியன்றோ? மேலும், உலகிலுள்ள ஸ்திரமற்ற அசுத்தமான பொருள்களெல்லாம் எரிந்தபின் மிஞ்சும் பரிசுத்த நிச்சய வஸ்துவின் அறிகுறியாகவும் அது கருதப்படுகின்றது. வீபூதியால் இடும் மூன்று கோடுகளும் முறையே மனம், வாக்கு, காயம் இவைகளின் பரிசுத்தத்தை எடுத்துக் காட்டுகின்றன. காம்ய கர்மம் பரிசுத்தமானதல்ல; ஆதலால் நிஷ்காம்ய கர்மம்தான் ஏற்றதென்பது ஹிந்துக்களின் கருத்து. ஞானக்னியால் எரிக்கப்பட்டதும், பலனை எதிர்பாராது செய்யப்பட்டதும் ஆன நிஷ்காம்ய கர்மம்தான் பரிசுத்தமானது அதனால் புண்யமோ, பாவமோ ஏற்படாது. அப்பேர்ப்பட்ட நிஷ்காம்ய கர்மத்தின் அறிகுறியாகவும் வீபூதியை நாம் காண்கின்றோம். வீபூதியைக் குறுக்காக இடுவதிலும் ஓர் தாத்பர்யம் உள்ளது. ஒரு வஸ்துவை அக்னியால் எரித்தபின், அதனால் நேராக நிற்கமுடியாதல்லவா? அதுபோல, ஞானக்னியால் எரிக்கப்பட்ட கர்மமும் நேரே நிற்க இயலாது என்பதே, வீபூதியை குறுக்காக இடுவதின் அடிப்படைக் கருத்தாகின்றது.

மாத்வர்கள் நெற்றியின் மத்தியில் மெல்லியதொரு நேர் கோடிட்டு, அதன் கீழ் ஒரு சிறிய வட்டம் போடுகின்றார்கள். அச் சிறிய வட்டம் ஸ்தூல வஸ்துக்களையும், நேர் கோடு அவ்வஸ்துக்களுக்கு அதிபதியான பாரமார்த்திகத்தையும் குறிப்பிடுவனவாகும். பாரமார்த்திகம் கைக்கெட்டாத பொருளாதலின், அதைக் குறிப்பிட ஏற்பட்டுள்ளது அந்த மெல்லிய கோடு. பாரமார்த்திகம் மேல் நோக்கியது; சன்னக் கோடும் மேல் நோக்கித் தான் போடப்படுகிறது. அந்த சிறிய வட்டத்தைக் கரியால் போடுகின்றோம்; அதன் காரணம் யாது? உயிர்ப் பொருள்களைப்பற்றிய ரசாயன நூலோருடைய கருத்துப்படி, கரி வஸ்துவே உலகில் நாம் காணும் பல உயிருள்ள வஸ்துக்களிலும் அடிப்படையானது என்பதாகும். அக் கலையைக் கல்லாதிருந்தும், அவ்வுண்மையை உணர்ந்த ஸ்ரீ மத்வாச்சாரியரின் மெய்யறிவு வியக்கத்தக்கதே!

வைஷ்ணவர்கள் இடும் இரண்டு வெள்ளைக் கோடுகள் விஷ்ணுவின் இருபாதாரவிந்தங்களையும், நடுவே இடும் சிவப்புக் கோடு லக்ஷ்மியையும், முழு நாமமும் ஸ்ரீ பாதத்தினருகே லக்ஷ்மி தேவி இருப்பதையும் காட்ட அறிகுறியாகின்றன. அம் மஹத்தான நாமத்தை நெற்றியில் தரித்துக் கொள்ளுதல் தூய்மை, பக்தி, எக்காலத்தும் பகவத் தியானம் இம் மூன்றையும் குறிப்பிடும் அறிகுறியாகின்றது. வெண்மை விஷ்ணு

வின் ஆத்மார்த்தத்தைக் காண்பிக்கின்றது. இந்தியாவில்எக்காலத்தும் தூயவெண்மை ஆத்மார்த்தத்தின் அறிகுறியாகக் கருதப் பட்டுள்ளதின் காரணம் யாதெனில், வெண்மை ஒரு நிறத்துடனும் சேர்க்கப் படாமையால் எந்நிறத்தையும் அது ஏற் றுக்கொள்ளும். விஷ்ணுவின் பாதத்தி னருகே வீற்றிருக்கும் லக்ஷ்மி சகல ஐச் வர்யங்களுக்கும் தேவி. பகவத் பாதார விந்தங்களினிடையே வீற்றிருப்பதால், உலகின்கண் காணும் சகல வஸ்துக்களும் ஆத்மார்த்தத்திற்குக் கீழ்ப்பட்டதென்ப தும், ஆத்மார்த்த சாதனம் அவைகளுக்கு அத்தியாவசியமானதென்பதும் புலப்படு கின்றன.

மற்றும் ஹிந்துக்களினிடையே நாம் காணும் வேறொரு பழக்கம் என்னவென் றால், சதா காலமும் ராமா, கிருஷ்ணு நாராயணு என்னும் பெயர்களை உச்சரித் தலேயாகும். இப் பெயர்கள் நம் மனதி னிடையே தூய்மையையும், உன்னத நோக்கத்தையும் எப்போதும் நிலைநாட்டக் காரணமாகின்றன, நாம் எந்த சர்வேஸ் வரனை இப் பெயர்களால் பஜிக்கின் ருேமோ, அவருடைய தூய குணங்களை யறியா பிற மதஸ்தர் சிலர் இதனைக்கண்ட னம் செய்கின்ருர்கள். ஆதி நாராயண மூர்த்தியின் ஸ்ரீ கிருஷ்ணுவதார மஹி மையை, நம்மிடத்து உலகப் பான்மை மிகுதியாகக் குடிகொண்டிருக்குமளவும் நாம் அறிய இயலாது. உத்தம ஞானி, புருஷோத்தமர், உத்தம யோகி, உத்தம நண்பர் எனக் கருதப்பட்டு, கோட்டி முதல் தொண்டைமான்வரை யாவராலும் இந்தியா முழுதும் பூஜிக்கப்படுபவர் ஸ்ரீ கிருஷ்ணர். அவர் மஹிமையை கேவலம் சிருஷ்டி புத்தியுள்ள மனிதர்களால் எவ் வாறு அறியவியலும்? ஸ்ரீ கிருஷ்ணர் தருமபுத்திரரை உலகத்திலுள்ள மிக்கக் கொடிய மனிதனையும், துரியோதனனை மிக்க பரிசுத்த மனிதனையும் காண்பிக்கு மாறு கேட்டார். பரிசுத்த புத்தியுடைய தருமபுத்திரருக்கு எவரிடத்திலும் சிறி தேனும் தீமையிருப்பதாகத் தோன்ற வில்லை. தூர்க்குணமுள்ள துரியோதன னுக்கென்ருலோ, தூய குணமுடையோன் ஒருவனும் தோன்றவில்லை. நம்மை நாம் எங்ஙனம் கருதுகின்ருேமோ, அங்ஙனமே நாம் பிறரைக் கருதுதல் இயல்பு. ஸ்ரீ கிருஷ்ணரை உபாசனை செய்து, அவர் மஹிமையை யறிந்து, அவரது அனுக் கிரஹம் பெற வேண்டுமானுல் மாசற்ற தூய்மையுடைய நெஞ்சம் இன்றியமை யாததாகும்.

இவ்வுலகின்கண், இந்தியாவைத் தவிர வேறு எத்தேசமும் பலமதத்தினர் அமை தியுடன் வசிப்பதற்கேற்றதன்று. எந்த தேசத்தில் பல மதங்கள் பரவியிருக்கின் றனவோ அந்த தேசமல்லவோ சர்வமதங் களின்ஒற்றுமையைப் போற்றக் கூடிய தேசம். ஆனுல் தற்காலத்தில் இந்து, கிரு ஸ்துவ முகமதிய மதத்தினரிடையே பல வித்தியாசங்கள் ஏற்பட்டு, அவ்வித்தியா சங்கள் நிமித்தமாக தேசம் அமைதியற்றி ருக்கின்றது. முகமது எவ்விஷயங்களை எடுத்துக் கூறினுரோ, அவ்விஷயங்களே வேறுவிதத்தில் ஸ்ரீ கிருஷ்ணராலும் ஏசு நாதராலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன என்ற எண்ணம் நாட்டின்கண் பரவா மையே இம்மடமைக்குக் காரணம். மற்றும் ஒரு காரணம் யாதெனின், இந்து சாஸ்திரங்களை ஏனைய மதத்தினர் அந்த சாஸ்திரங்களில் விற்பன்னராகிய குருவின் கீழ்க் கற்றறிய முயலாமல், உயி ரற்ற புத்தகங்கள் மூலம் அறிய முயற்சிப் பதால், இந்து சாஸ்திரங்களின் ஆன்மார்த் தத்தை யறிய இயலாமல், அவர்கள் தப் பாக அர்த்தம் செய்து கொள்ளுதலே. மேல் நாட்டினரது கலை ஞானமும் நாகரீக மும் அயல் நாட்டினரது கல்வி, வாழ்க்கை

முறைகளினிடையே நமக்கு உள்ளன்பு பரவும்படிச் செய்து, அவர்களின் அதிசயத்தை அநுபவிக்கச் செய்ப இயலாது, ஆக்கிரமிக்கச் செய்வது துக்ககரமான விஷயமேயாகும். அந்நாட்டினரது நாகரீகம் காலத்தில் இந்தியர்களிடமும் பரவி, இந்தியாவின் ஆன்மாவாகிய பாரமார்த்திகத்தை மறக்கச்செய்தது; அந்நாட்டினரைப்போல், "நாளை நாம் உயிர் தரிப்பது நிச்சயமில்லை; இறந்தபின், எங்குச் செல்வோமென்பதையும் அறியோமாதலால் இன்று உயிருள்ளபோது உண்டு களித்து வேடிக்கையா யிருப்போம்" என்ற சித்தாந்தத்தைப் பரப்பலாயிற்று. இந்த சித்தாந்தத்தை ஏசுநாதர் உபதேசித்தாரா? அல்லது முகமது தான் உபதேசித்தாரா? ஸ்ரீகிருஷ்ணர்தாம் போதித்தாரா? என்றால் ஒருவரும் போதிக்கவில்லை. இத்தகைய நிலைக்கு மருந்து யாது என ஐயமுறலாகும். ஆம், இவ்வியாதிக்கும் ஒரு மருந்துள்ளது. அம் மருந்து தற்கால அவஸ்தையில், ஓர் தச்சன் மகனாகவோ, அல்லது, சிறு வியாபாரி மகனாகவோ பிறவாமல், ஏழைப்பிராம்மணன் மகனாக அவதாரமாயிற்று. ஏன் பிராம்மண குலத்தில் பிறக்கவேண்டும்? முகம்மதிய குலத்திலோ, அல்லது கிருஸ்தவகுலத்திலோ ஏன் பிறக்கலாகாது என்ற கேள்விகள் பிறக்கலாம். ஸ்ரீகிருஷ்ணர், ஏசுநாதர், முகம்மது மூவரும் ஏகோபித்த மனதுடன் பிராம்மண குலத்தில் தோன்றி, இந்துக்களுக்கு ஸ்ரீகிருஷ்ணராகவும், முகம்மதியர்களுக்கு முகம்மதாகவும், கிருஸ்துவர்களுக்கு ஏசுநாதராகவுமிருந்து சர்வ மதங்களின் ஒற்றுமையை உபதேசிக்கத் தீர்மானம் செய்தது போல் தோன்றுகின்றது. முகமதியனொருவனோ, அல்லது கிருஸ்துவனொருவனோ சர்வ மதங்களின் ஐக்கியத்தைப் பற்றி எடுத்துரைத்தால், மற்றமதத்தினர் அதை ஏற்றுக்கொள்ளுதலரிது. பிராம்மண குலத்தில் தோன்றி மும்மதத்தினருக்கும் எல்லா மதங்களின் ஒற்றுமையைப் போதித்தல் சமயத்திற்கு ஏற்றதாயிற்று.

அந்த அவதார புருடன் ஜனித்த இடம் வங்கநாட்டில் ஹூக்ளி ஜில்லாவிலுள்ள கமார் புகார் எனும் ஓர் சிறிய கிராமம். அவ்விடத்தில் ஏன் அவதரிக்கவேண்டுமென்றால், வங்கநாடு, அக்காலத்தில் தெய்வீகப் பற்றின்மைக்கு முதன்மை பெற்றிருந்தது; பலர் அங்கே இந்துமதத்தை விட்டுப் பிறமதங்களைத் தழுவலானார்கள். இம் மஹான் அற்ப வட்டறிவாளி; கோர காளி விக்கிரஹ பூஜையில் ஆரம்பித்து, தியான மஹிமையைக் கண்டறிந்து, பிறகு எக்காலத்தும் சர்வேஸ்வரனிடையே தம் மனதை வைத்து மெய்ம்மறந்த பிரான்; பிற்காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் என உலகம் போற்றும் மஹாநுபாவரானார். இம் மஹான் முறையே விஷ்ணு, ராமர், கிருஷ்ணர், சிவன் ஆகிய சொரூபங்களை தியான மூலம் அநுபவித்து, அதன் பின் முறையே ஏசுநாத அவதாரத்தையும் அவர் உபதேசமொழிகளையும், அல்லாவையும் அவர் மொழிகளையும் நிஷ்டையிலேயே அநுபவித்துளார். சர்வேஸ்வரனது ஸ்வரூபத்தை முகம்மதிய மதமூலமாக அநுபவிக்கும் கால், ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருமுகம்மதியசந்நியாசியை அடைந்து முகம்மதியர்போலவே உணவுண்டும், ஆடையுடுத்துமுள்ளனர்.

இதுபோல் பல்வேறு துறைகளின் மூலம் சர்வேஸ்வரன் ஒன்றே என்பதை உணர்ந்து, பின் எல்லா ஜீவராசிகளிடத்தும் சர்வேஸ்வரனைக் கண்டு, தாழ்ந்த குலத்தினன் என்பதையும் கவனியாமல், யாவருடனும் சமத்துவமாகவே பழகலானார். ஞானிக்கு மனித வர்க்கத்தினுள் பேதம் தோன்றாது என ஸ்ரீ கிருஷ்ணர் உரைத்துளார். உண்மை ஒன்றே, விவே

கிகள் அதைப் பல பெயர்களிட்டழைக்கின்றனர் என்ற உபநிஷத்துக்களின் மொழியை ஸ்ரீ ராமகிருஷ்ணர் மறுபடியும் காலத்திற்கேற்றவாறு நிலை நாட்டினார். இம்மதங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் வித்தியாசங்களெல்லாம் அந்த மதத்தினர்களுடைய குறியீடுகளால் ஏற்பட்ட வித்தியாசங்களேயொழிய, அடிப்படையாக அம் மதங்கள் கொண்டுள்ள கருத்துக்களின் வித்தியாசத்தினால் ஏற்பட்டனவல்ல என்றும், அக்கருத்துக்களெல்லாம் ஒன்றே என்பதையும் அவர் நிலை நாட்டினார்.

பௌதிக சாஸ்திரமும் மானிடவர்க்கத்தினுள் ஒற்றுமை ஏற்பட்டுளது என்று ஸ்தாபிக்கின்றது. யாதொரு பௌதிக சாஸ்திரியும் நீக்ரோ ஜாதியினருடைய உடலில் கருப்பு மைதான் ஓடுகின்றதென்றும் ரத்தமில்லை என்றும் நிரூபிக்கவில்லை. உண்மை, பரிசுத்தம், பரிபக்குவம் இம் மூன்று குணங்களும் மானிட வர்க்கத்திற்கே பொதுவாக உள்ள குணங்கள். கிருஸ்துவ மஹாத்மாவிற்கோ, இஸ்லாமிய மஹானுக்கோ, பிராம்மண ரிஷிக்கோ, அல்லது தாழ்மைப்பட்ட சண்டாளனுக்கோ மட்டும் உரியனவல்ல. இந்து கிருஸ்துவனுடனும், முகமதியன் இந்துவுடனும் சண்டையிடுவதின் காரணமெல்லாம், கேவலம் நாமரூப பேதத்தால் ஏற்பட்டதே ஒழிய, சச்சிதானந்தப் பொருளாகிய சர்வேஸ்வரனால் ஏற்பட்டதேயல்ல.

---

# நமது சிகர ஜோதி

இப் பகுதியில் :—'தேவியின் திருவாக்கு': இக்கட்டுரை மூலமாகவும் அன்பர்கள்மீது காட்டும் தேவியாரது அளவற்ற அன்பு காணக் கிடக்கிறது. 'துவைதத்திலிருந்தும் அத்துவிதத்திற்கு': ஆரம்பத்திலிருந்தே அத்துவித மார்க்கத்தை அநுஷ்டிப்பது நன்மை யெனினும் அது செயலளவில் கொண்டுவருவது சிரமமென்றும் பரிசுத்த பக்தியின் மூலமாக ஞானத்தை யடைவது எளிதென்றும், எம்முறையும் மனத்தைப் பரிசுத்தமாக்குவதனால்தான் கைகூடும் என்றும் ஸ்ரீ துரியாநந்த சுவாமிகள் தெளிவுபட இக்கட்டுரையில் கூறியுள்ளார். 'ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை': நாட்டு வாழ்க்கைக்கு அடிப்படையாகவுள்ளது பரிசுத்த குடும்ப வாழ்க்கை யென்பதும் அவ்வித புனித குடும்ப வாழ்க்கையை துறவிக்கு வேந்தராய பகவான் ராமகிருஷ்ணர் எவ்விதம் ஓர் எடுத்துக் காட்டாக வாழ்ந்து காட்டினார் என்பதும் இக்கட்டுரையில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. 'நாம் வசிக்கும் வீடு': பண்டித ஸ்ரீ. ஸ்ரீனிவாசன் அவர்கள், இக்கட்டுரையில் ஜீவனின் குடியிருப்பு வீடுகளாகிய மண்வீடு, உடல்வீடு, முக்கியமான மனவீடு இம்மூன்றும் பரிசுத்தமடையப் பார்ப்போமானால் நாம் பிறவிப் பிணியை அகற்றலாம் என்று அழகுபட எடுத்துக் கூறுகின்றார். 'விஸ்வாமித்ரர்—ஓர் ஆராய்ச்சி': அற்பப் பொருளுக்காக ஆசைப்பட்டு விஸ்வாமித்திரரால் ஆரம்பிக்கப்பட்ட தபசு படிப்படியாக எங்ஙனம் அவரை மிகவுயர்ந்த நிலைக்குக்கொண்டு சென்றது என்பதை ஸ்ரீ. T. S. ஸ்ரீனிவாசன் அவர்கள் இக்கட்டுரையில் விளக்கியிருக்கிறார். 'குறியீடு': 'ஹிருதய கமலன்' என்ற புனைப் பெயர்கொண்ட நமது புது நண்பர் சமயத்தின் பெயரினால் ஏற்படும் எல்லா சச்சரவுகளும் ஒன்றான கடவுளையே பல நாமரூபங்களும் குறிக்கின்

றன என்றும் உண்மையை அறியாதத னால்தான் என எடுத்துக் காட்டுகின்றார். 'உண்மை யோகியின் சாதனையும் இலக்ஷிய மும்': உண்மை சாதகனுக் கவசியமான சில கருத்துக்களை வழக்கம்போல் இக் கட்டுரையின் மூலம் ஸ்ரீ எதீஸ்வராநந்த சுவாமிகள் விளங்க வுரைக்கின்றார்.

## "ஆதாரம் பெருகவைத்த அழகன்"

வானத்தை அளாவிய ஒரு நீல மால் வரையில் உச்சியினின்றும் அருவி யொன்று மலைச்சரிவின்மீது விரைந் தோடிக் கீழே ஒரு சுனையிற் பாய்ந்து கொண்டிருந்தது. மலையின் நிலவளமும், சோலைவளமும், அருகே மலர்ந்திருந்த பலவகைப் பூக்களின் நறுமணமும் அழ கும், எங்கும் அடர்ந்து படர்ந்திருந்த செடிகொடிகளின் மிகுதியும், காண்போ ரது கண்ணையும் மனதையும் கவரும் வனப்புவாய்ந்திருந்தன. ஒரு சமயம் இந்த அருவிக்கு முன்னே வெவ்வேறிடங் களிலிருந்த பல மனிதர் இக்காட்சியினைக் கண்ட வண்ணமாக சிறிது நேரம் இருந் தனர் அனைவரும் பின்னர் எழுந்திருந்து நடந்து அருவிக்கு முன் சிறிது தொலையி லுள்ள ஒரு மண்டபத்திலே தற்செயலா கக் கூடலாயினர். அவர்களில் ஒருவ ரான மருத்துவ நிபுணர் தம் மருகே இருந்தவரை நோக்கி, "நண்பரே! பார்த் தீரோ இந்த மலைவளத்தை; இதைச் சிறிது நேரமாகக் கூர்ந்துநோக்கி ஆராய்ந் தேன். இதில் எத்தனை அருமையான ஓஷதிகளும் தருக்களும் செடிகளும் நிறைந்துள்ளன. மிகக் கொடிய, தீர்த் தற்கரிய நீண்ட பிணிகளையும் ஒழித்தற்கு உதவும் அருமையான சில செடிகளையும் மரங்களையும் கண்ட யான் இங்கே ஒரு மருத்துவசாலை அமைக்க விரும்பினேன்" என்று கூறினர். அப்போது அருகே அமர்ந்த ஒரு சித்திரக்காரர், "ஆஹா! இதன் இயற்கை அழகை நான் என் னென்றுரைப்பது! இப்பொழுது யான் கண்டபடியே என்மனமாகிய திரையில் கற்பனையெனும் ஓவியக்காரனது துணை யால் ஒரு படம் வரைந்துவைத்துக் கொண்டேன். இக்காட்சியை ஒரு திரை யின்மீது இயற்கை நிலையினின்றும் வழு வாது எழுதி, இதை நேரிற் காணாதவரும் இதன் அழகை அனுபவிக்குமாறு செய்ய உத்தேசித்துள்ளேன்" என்றனர். அதைக் கேட்ட செஞ்சொற்கவி யொருவர் உடனே அவர்களை நோக்கி, "நண்பீர், நான் இம் மலையினழகைச் சொற்களைக் கொண்டு சித்தரித்து ஒரு கவி பாடியுள்ளேன்; அதைச் சிந்திப்பார்க்குத் தெவிட்டாத இன்பத்தை ஊட்ட நினைந்துள்ளேன்" என்றார். இதற்குச் செவிசாய்த்த ஒரு யந்திர நூல் வல்லார், மற்றவர்களை நோக்கி, "நண்பீர், இதுவரை கூறியவர்களது யோசனைகளால் உலகத்தார்க்கு என்ன பெரும் பயன் விளையப்போகிறது? இந்த நீர்வீழ்ச்சியின் அபாரமான சக்தியைக் கொண்டு மின்சாரத்தை ஏராளமாக உண் டாக்கும் ஒரு யந்திரத்தை ஓட்டினால், அதிலிருந்து பெறும் மின்சாரத்தைக் கொண்டு பத்துமைல் சுற்றளவுவரையி லும் உள்ள ஊர்களிலெல்லாம் மின்சார வண்டிகளையும் மின்சார யந்திரங்களையும் மின்சார விளக்குகளையும் தாராளமாக ஏற்படுத்தி, ஊர் மக்கட்கு நாகரிக வாழ்க் கைக்குரிய வசதிகளை யெல்லாம் அளிக்க லாம்" என்றார். அப்போது அங்கிருந்த காளைப் பருவத்தினன் ஒருவன், தனது காதலியைப் பிரிந்து தனித்துயரெய்தி யிருந்தவன் பிறரைப் பார்த்து, "இத் தகைய குறிஞ்சி நிலங்களிலேதான் முதல் முதலாகத் தமிழ் மக்களது இதயத்தில் காதல் அரும்பி மலர்ந்து, கனிந்து, மன தைப் பண்படுத்திற்று. இங்கே சில

மாதங்களேனும் என் உயிர்க் காதலியோடு வைகிக் காதலின் பண்பையும் பயனையும் நுகரப் போவதைப்பற்றிச் சிந்தித்துள்ளேன்" என்றான். இவையனைத்தையும் கேட்ட இன்னொருவன், "இத்தகைய ரமணீயமான இடங்களிலே இறைவன் தனது உரைக்க ஒண்ணாத அழகை இயற்கையின் வாயிலாக ஒருவாறு வெளிப்படுத்தி, மாந்தரின் மனங்களை இயற்கையழகு வாயிலாக உயர்த்தி முடிவில் தனது அழகில் ஈடுபடுத்திப் பேரின்பத்தை நல்குகின்றான்; ஆதலின் இங்கே ஓர் அழகிய கோயிலை அமைக்க நினைத்தேன்" என்று முடித்தான்.

முற்கூறிய அறுவரும் நேரிற் கண்ணாரக் கண்டதும், தமது கண்களால் இமை கொட்டாது சிறிது நேரம் முகந்து பருகியதும், கண்முன்னிருந்த ஒரே காட்சியையே. ஆயினும் ஒவ்வொருவரும் அவரவரது மனப்பான்மைக்குத் தக்கவாறே அக்காட்சியைக் கண்டு உணர்ந்து சிந்தித்து, வெவ்வேறு வகையான அனுபவங்களைப் பெற்றனர். இதன் காரணம் யாது? காட்சிக்குரிய பொருள் ஒன்றாயினும், காணுவாரது உள்ளங்கள் இயல்பாகவே வேறுபட்டுக் கிடத்தலால் வெவ்வேறு வகையான நினைவுகளும் அனுபவங்களும் உண்டாயின என்பது வெளிப்படை. புறத்துள்ள பொருள் நமது உள்ளத்துக் கீழே அடங்கிக் கிடக்கும் நினைவுத் தொகுதிகளையும் உணர்ச்சித் தொகுதிகளையும் மேலே எழுப்புவதற்கு ஒரு தூண்டுகோலாவதன்றி வேறில்லை. அவ்வாறு கிளம்பும் தொகுதிகள் உள்ளத்தை ஒருவாறு திரிவுபடுத்த, அந் நிலையிலேயே ஒவ்வொருவரும் புறப் பொருளைத் தத்தமக்குத் தோன்றுகிறபடியே உரைக்கின்றனர். ஒவ்வொருவரது உள்ளத்திலுள்ள நினைவுத் தொகுதிகளும் தமது தமது பழைய கருமங்கட்குத் தக்கவாறு அமைந்திருத்தலின், அவை களும் வேறுபட்டிருத்தலின், காட்சியும் வேறுபடுகின்றது. இதனால் அறியக் கிடப்பது யாதெனின், உள்ளம் உலகத்திலுள்ள எப்பொருளை நோக்குவதாயினும், அது பெறும் காட்சியும் அறிவும் உணர்ச்சியும் அந்த உள்ளத்தின் இயல்பை (அதாவது, அதனுள் அடங்கிக் கிடக்கும் நினைவுத் தொகுதிகளையும் அவைகளின் பயன்களையும்) பொறுத்துள்ளன. இத் தொகுதிகளைப் பழக்கங்களின் பயன்களென்னலாம்; அது வரை உள்ளத்தால் நினைத்தும் இச்சித்தும் சங்கற்பித்தும் வந்துள்ள கருமங்களின் பயன்களாகிய மனப்பதிவுகள் என்றும், சார்புகள் என்றும் கூறலாகும். நமது உள்ளத்துப் பதிந்துகிடக்கும் இச்சார்புகளே நமது புறப்பொருட்காட்சியைத் திரந்து விடுகின்றன. ஆதலின் இச்சார்புகள் தூயனவாயிருக்குமாயின், புறஉலகப் பொருள்களும் தூயனவாய்த் தோன்றும்; இவை மாசுள்ளனவா யிருக்குமாயின், புறப்பொருள்களும் மாசுள்ளன வாகவே தோன்றும். துரியோதனனுக்கு உலகில் நல்லவர் எவரும் இல்லையென்று தோன்றியதும், தருமர்க்கு உலகில் தீயோர் எவரும் இல்லை எனத் தோன்றியதும், இவ்வுண்மையையே விளக்குகின்றன. ஒரு கண்ணாடிவழியாக ஒரு பொருளைப் பார்க்குங்கால், அக்கண்ணாடி அழுக்கும் நிறமும் பெற்றிருந்தால், அப்பொருளும் அழுக்கும் நிறமும் உடையதாகத் தோன்றும்; அக்கண்ணாடி தூயதாயின், காட்சியும் தூயதாயிருக்கும். அது போல் நமது காட்சிகள் யாவும், மனக்கண்ணாடி வழியாக நோக்கும்போது நாம் பெறும் காட்சிகளாமே யன்றி, உண்மைக் காட்சியாகா, கண்ணாடியையும் களைந்தொழிந்த பின் நோக்கும்போது காணும் காட்சியே மெய்க்காட்சியாகும்.

முற்கூறிய கருத்துகள் பொதுவாக எல்லாவிதப் பொருள்களின் காட்சிக்கும் பொருந்துமாயினும், சிறப்பாக நமது நாட்டில் தொன்றுதொட்டுவரும் வழிபாட்டுக்கு முற்றும் பொருந்தும். நம்நாட்டில் பல இடங்களிலும் காணப்படும் கோயில்களில் உள்ள தெய்வ உருவங்களைப் பலர் காண்கின்றனர். ஆயினும் பலர் பலவாறான கருத்துக்களோடு நோக்கி, வெவ்வேறு வகைப்பட்ட பல பயன்களை அனுபவிக்கின்றனர். ஒரு சிற்பி அவ்வடிவத்தை நோக்கும்போது, சிற்பத்திறமை அதில் எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதையும், சிற்பி தன் மனதில் அவ்வடிவவாயிலாக வெளிப்படுத்த நினைந்த உட்கருத்துகள் இன்னின்னவை என்பதையும், அவைகள் எந்த அளவிற்கு நன்றாகப் பொருத்தமாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்பதையும் மட்டும் கண்டு, அந்த உருவத்தின் அழகை அனுபவிக்கின்றான். ஒரு சாதாரண மனிதனும் அவ்வடிவத்தின் பற்பல உறுப்புகளின் அமைதியையும் அழகையும் கண்டு இன்புறுகின்றான். ஒரு தத்துவ ஞானி அதே வடிவத்தைக் காணுங்கால் அவ்வடிவத்தில் திருவடியின் கீழமைந்துள்ள தாமரை மலர் இன்னதைக்குறிக்கின்றதென்றும் திருமுடி இன்னதைக் குறிக்கின்றதென்றும், வடிவின் கையிலுள்ள ஆபரணங்களும் ஆயுதங்களும் இன்னின்ன கருத்துக்களைத் தெரிவித்தற்கு ஏதுவாகின்றன என்றும் சிந்தித்து இன்புறுகின்றான். ஆனால் பக்தி நிறைந்தவனது கண்ணிற்கோ அவ்வுருவம் இறைவனுடைய திவ்விய உருவத் திருமேனியாகத் தோன்றுகிறது; அப்போது இறைவனையே நேரில் அங்கு கண்டு பேரின்ப வயப்படுகின்றான்.

ஸ்ரீரங்கம் என்னும் திருப்பதியிலே இறைவன் பாம்பணைமேற் பள்ளிகொண்டிருத்தலைப் பலரும் அறிவார். அவரைக் கண்ணாரக் காண்பவரும் பலர் உளர். ஆயினும், அன்பர்கள் அவரைக் கண்ணாற் காணும்போது, பக்திகனிந்த நெஞ்சினோடு காண்பார்கள். இறைவன் தனது எல்லாம்வல்ல சக்தியையும் எல்லாம் அறியும் இயல்பையும் அடக்கிக்கொண்டும், ஒடுக்கிக்கொண்டும், தூலக்கண்ணுக்குத்தோன்றக் கூடிய ஒரு திருமேனியோடு, வெளிப்பார்வைக்குத் தூங்குபவன் போலும், உண்மையில் உலகத்திலுள்ள மக்கட்கு எப்பொழுதும் என்ன ஆபத்து உண்டாகுமோ என்று கவனித்துக் கொண்டும், வேண்டியவற்றையெல்லாம் அவ்வப்போது உலகமெங்கும் ஆணையால் இயற்றிக் கொண்டும், இவ்வாறு அறிதுயிலில் அமர்ந்து வருவதாக அடியார்கட்குத் தோன்றுவான். பயிர் பச்சைகளைக் காப்பவன் தனது நிலத்திற்கருகே ஒரு சிறு குடில்கட்டிக்கொண்டு அங்கே வாழ்ந்து வருவதுபோல, பகவானும் இவ்வுலகத்துள்ள மக்களைக் காக்கும்பொருட்டு, அவர்களது கண்ணிற்குப் புலனாகும் வடிவங்கொண்டு, அவ்வுலகிலேயே வாழ்ந்து வருகின்றான். தன்னை அடைந்து வழிபட்டு உய்வடைய விரும்புவார்க்குத் தன்னுடைய உண்மையான வடிவைக்காட்டித் தன்பால் ஈடுபடுத்திக் கொள்வான். தன்னோடு பேசவும், தனக்குத் தொண்டு செய்யவும், அன்பொடு பழகவும் விரும்புவார்க்கு அவரவரது விருப்பத்தின்படியே நடந்தும், அவர்களது அன்பைப் பன்மடங்கு பெருக்கியும் வருவான்; தன்னைக் கண்ணார உண்மையான வடிவிற் காணும் அன்பர்க்கும் பேரின்பத்தை ஊட்டி வருவான். இவ்வாறு "தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானாய் தமருகந்தது எப்பேர் மற்றப்பேர் தமருகந்து, எவ்வண்ணம் சிந்தித்து இமையாது இருப்பரே, அவ்வண்ணம்" இறைவன் அடியார்கட்காகத் தன்னை அமைத்துக்

கொண்டிருக்கும் நிலையை வைணவர் "அர்ச்சாவதாரம்" என்பர். [தமர் உகந்தது—தம்மைச் சேர்ந்த அன்பர்கள் விரும்பியது; அர்ச்சாவதாரம்—விக்கிரக வடிவமாக எழுந்தருளியிருக்கும் நிலை.] இத்தகைய நிலையை அறியாது, அவ்வடிவத்தைக் கல்லுருவாகவோ, சிற்பமாகவோ, குறியாகவோ நினைப்பார், மிக எளிதாக இறைவனை அடையும் ஒரு வழியினை இழந்தவராவார்.

திருக்கோயில்களில் உருவத் திருமேனியோடு எழுந்தருளியிருக்கும் இறைவனைச் சாதாரண மனிதர் அவ்வாறு காணாது போயின், அக்குற்றம் அம்மனிதரது குற்றம் ஆகுமேயன்றி, இறைவனைச் சார்ந்ததன்று. உயிரோடு எழுந்தருளியிருக்கும் இறைவனைத் திருக்கோயில்களில் திருவடிவங்களில் நேராகத் தெரிசித்துள்ள எண்ணிறந்த அன்பர்கள் இந்நாட்டில் இருந்துள்ளனர். இன்றும் உள்ளனர். இனியும் இருப்பர். இந்திவ்விய தரிசனங்களைக் கற்பனைக் காட்சியென்பர் சிலர். உண்மையைக் கண்ட மெய்யடியார்கட்குத் தோன்றும் காட்சி கற்பனைக் காட்சியாமாயின், நமது பண்படாத மாசு படிந்த கண்காட்சிக்கு இலக்காவது கற்பனையாகாது என்பது நமக்கு உறுதியோ? தூய மனத்தார்க்குப் "பார்க்குமிடம் எங்கும் ஒருநீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தம்" தோன்றுமாயின், அதுவன்றோ உண்மைப் பொருட் காட்சியாகும். அன்னாரது உள்ளங்களில், காட்சியைத் திரிபுபடச் செய்யும் மனச்சார்பு ஒன்றும் இல்லையாதலின், "வினையின் நீங்கி விளங்கிய அறிவோடு" கூடிய அவர்க்குப் புலப்படுவதே மெய்யான காட்சியாதல் வேண்டும். நம்மவரது உள்ளங்களில் நாமாகக் கற்பித்துக் கொண்ட பலவகை எண்ணங்களும் இருத்தலின், அழுக்கு நிறைந்த இம்மனத்தால் காணப்படும் காட்சியே கற்பனைக் காட்சியாகும். நந்தனார் தில்லையில் கண்ட காட்சியும் கண்ணப்பர் காளத்தியிற் கண்ட காட்சியும், ஆண்டாள் அரங்கத்தில்கண்ட காட்சியும் மாசற்றோரது காட்சியாதலின், மெய்க்காட்சியேயாம். அக்காட்சியை உள்ளவாறே காணும் பேறு பெறாத பிறரெல்லாம், இறைவனைக் கல்லாகக் காணும் கற்பனைக்காட்சியை உடையவராகின்றனர். பூமாலையைக் கண்டு சர்ப்பமென மயங்குவது மயக்கக் காட்சியாவது போல, இறைவனைக் கல்லாகக் காண்பார் மயக்கக் காட்சியுள்ளவரே. இது சர்ப்பமன்று, பூமாலையே என்று தெளிவு பிறந்தவர்க்குப் பூமாலையே தோன்றுவது போல, மெய்ப்பொருளைக் கண்டவர்க்கு இறைவனது வடிவமே திருவுருவங்களில் தோன்றும். அவ்வாறு தோன்றாத காரணம் மயக்க அறிவாதலின் (தூய்மையற்ற மனமாதலின்), அதனை ஒழித்தற்கு உண்மைக் காட்சியையே பாவித்தல்வேண்டும். பாம்பாகத் தோன்றுவது பாம்பல்ல, மாலையே என்ற எண்ணத்தை உறுதியாகக்கொண்டு மாலையாகப் பாவித்தல்வேண்டும்; மாலையாக அதைச் சிந்தித்தல்வேண்டும். அது போல் கோயில்களிலுள்ள உருவத் திருமேனிகளை இறைவனது திருமேனிகளாகவே முதலில் பாவித்தல்வேண்டும், நெடுநேரம் சிந்தித்தல்வேண்டும், இறைவனது முன்னிலையில் உண்மையாக இருப்பதாகவே ஒழுகவேண்டும்; அங்கே இறைவனுக்குப் பலவிதத் தொண்டுகளும் புரிதல் வேண்டும். இவ்வாறு செய்யின், நமது பழைய பொய்ப் பாவனையை (கல் என்ற பாவனையை) உண்மையைப் பற்றிய பாவனை (இறைவனே என்ற பாவனை) நாளடைவில் போக்கிவிடும். பொய்ப் பாவனையை அழிக்கும் மெய்ப்பாவனையும் பின்னர் தானாகச் சவுந்தடு தடிபோல அழியும்; அப்போது இறைவனது உண்மையான வடிவம் (பாவனாதீதமான மெய்

புருவம்) எனப்படும்; அநுபூதிக்கு இலக்காகும். இத்தகைய உயர்ந்த நிலையை அடைதற்கு இறைவனது உருவத் திருமேனிகளாக எண்ணிக் கோயிலினுள்ள விக்கிரகங்களை வழிபடுதலே முறையாகும். இதைக் கருதியே மெய்யன்பருள் ஒருவராகிய அப்பர் சுவாமிகள் :—"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சேநீவா, நித்தமும்எம்பிரானுடைய கோயில்புக்குப் புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித், தலையினாற் கும்பிட்டுக் கூத்துமாடிச் சங்கரா சய போற்றி போற்றி யென்றும், அலைபுனல் சேர் செஞ்சடையெம் ஆதியென்றும், ஆரூரா என்றென்றும் அலறா நில்லே" என்று தமது நெஞ்சுக்கும் உலகத்தார்க்கும் உபதேசிக்கின்றார். இதனினும் மிக எளிய வழி காண்பது அரிதாகும்; அன்றியும், உயர்வற உயர்ந்த ஞான நிலையை எய்த இது ஒன்றே போதுமானதாகும். சிலர் விக்கிரகத்திலே இறைவனைக் காணுதல் தாழ்ந்தபடியென்று கருதுவார்; ஆனால் இவ் விக்கிரகத்திலேயே பூரணமான அநுபவமும் கிடைக்கும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்விக்கிரஹ ஆராதனை வாயிலாகவே அடைதற்குரிய அநுபவங்களனைத்தையும் பெற்றார் என்பது வெளிப்படை.

உண்மையாக இறைவனைக் கண்டு மகிழவேண்டும் என்னும் இச்சை யுடையார்க்குக் கோயிலினுள்ள இறைவன் பலவகையாக அருள் புரிவான். உலக போகங்களிலே அழுந்திக் கிடந்து, "கண்டதே காட்சி, கொண்டதே கோலம்" என்று திரிபவர் கோயிலினுள்ள இறைவனைப் பணியும்போது, அவன் அருள் சுரந்து தனது உண்மை வடிவைக் காட்டித் தன்பால் அவர்களது நெஞ்சங்களைக் கவர்ந்து கொள்கின்றான் இவ்வனுபவத்தை ஓர் ஆழ்வார் பின்வருமாறு குறிப்பிடுகிறார். "சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடு இசைந்த காலம் மாதரார் கயற்கண் என்னும் வலையுட்பட்டு அழுந்துவேனைப், போதரே யென்று சொல்லிப் புந்தியுட் புகுந்து தம்பால், ஆதரம்பெருக வைத்த அழகனூர் அரங்க மன்றே." மாதர்களது வடிவழகிலே ஈடுபட்டு அவர்கள்பால் மனம் அழுந்தி நின்ற ஆழ்வாரைத் திருத்துவதற்காக, இறைவன் தனது உரைக்கவொண்ணு வடிவழகைக் காட்டி; உலக இன்பங்களினின்றும் மீட்டி ஆழ்வாரது மனதைத் தன்பால் நிலை நாட்டி, சிற்றின்ப விழைவை அகல ஓட்டி தன்பாற் காதலைக் கடலினும் பெருகச் செய்தான்; ஆழ்வார் திருந்தி, "அச்சுதா அமரர் ஏறே ஆயர்தம் கொழுந்தே யென்னும், இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும், அச்சுவை பெறினும் வேண்டேன்" என்று அரங்கநாதரிடம் கூறலானார். அரங்கனைக் கண்குளிரக் காணப் பன்னாள் ஆசைப்பட்டுக் கொண்டிருந்த திருப்பாணாழ்வார் இறைவனைக் கோயிலில் சேவிக்கும் பாக்கியத்தைப் பெற்றதும், எம்பெருமானது அழகைக் கண்டு, அநுபவித்து, "மாயனார் செய்ய வாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே" என்றும் "அரங்கத்து அமலன் முகத்து...பெரியவாய் கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே" என்றும் கூறி, இறுதியில் "வெண்ணெயுண்ட வாயன், என் உள்ளங்கவர்ந்தானை, அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக், கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணவே" என்றபடி, இறைவனது அழகைக் கண்ட பின் வேறெதையும் காண விரும்பாது இறைவனோடு ஐக்கியமும் அடைந்தார். திருக்குறுங்குடியில் எழுந்தருளி யிருக்கும் இறைவனது அழகைக் கண்ட நம்மாழ்வார் "நங்கள் கோலத்திருக்குறுங்

ருடி. நம்பியை நான்கண்டபின், சங்கினோ டும்நேமியோடும் தாமரைக்கண்களோடும் செங்கனிவாய் ஒன்றினொடும் செல்கின்றது நெஞ்சமே" என்று தம்மை வசப்படுத்திய அழகைக் கூறினார். ஒரு நங்கையின் கண் ணழகில் ஈடுபட்டு அவளுக்குத் தொண்டு செய்து வந்த ஒரு காதலனுக்கு ஸ்ரீராமா நுஜர், அரங்கநாதனது உவமையற்ற கண் ணழகைக் காட்ட, அக்கணமே அவ்வழ கில் ஈடுபட்ட அவன் அதற்கு வசப்பட்டு, அரங்கனுக்கு அந்தரங்க பக்தனானான். இவ்வாறு இறைவனது உருவத்திருமேனி யின் அழகைக் கண்ணுற்கண்டு பரவச மடைந்து, அதனால் மெய்யன்பெழுப்பெற் றார் எண்ணிறந்தார். தூயநெஞ்சொடும் அன்பொடும் நோக்குவார்க்குக் கோயிலிற் காணும் உருவவாயிலாக இறைவன் தனது வடிவழகைக் காட்டி, அடியார்களது உள் ளத்தைக் கவர்கின்றான். இறைவன் 'உள் ளங்கவர் கள்வன்' அன்றோ? இன்றும், காண்பாரது கண்ணையும் மனத்தையும் கவரும் அழகு கோயிலில் உள்ள உருவங் களில் மறைந்தொளிர்கின்றது. நெஞ்சாரக் காண விழைவார்க்கு, அவ்வழகு இன்றும் காணற்குரியதாகும். காணும் விழைவுடை யார் உளரோ?

---

# சமாசாரங்கள்

### ஸ்ரீ ஜோதிர்மயாநந்த சுவாமிகள்

சிறு பிராயத்திலேயே ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்து சன்னியாசம் பூண்டு சுமார் 25 ஆண்டுகள் மடத்தின் பல அலுவல் களில் ஈடுபட்டிருந்த ஸ்ரீ ஜோதிர்மயாநந்த சுவாமிகள் திடீரென பிப்ரவரி மாதம் 29உ தலைமைமடமாகிய பேலூர் மடத்தில் உடலை நீத்து விட்டார் என்ற செய்தி கேட்டுப் பலர் வருந்துவர். பேலூர் தலைமை காரியாலயத் தின் 'ட்ரஸ்டி'களுக்கு உதவுவதற்காக அமைக் கப்பட்ட காரியக் கமிட்டியில் அவர் அங்கம் வகித்துச் சிலவருஷங்கள் தொண்டு புரிந்தார். அநேகமாக எல்லா கஷ்ட நிவாரண தொண்டு களிலும் அவர் முக்கிய பங்கெடுத்துக் கொண் டிருக்கிறார். 1924-ம் ஆண்டு ஏற்பட்ட பெரும் காவேரி வெள்ளத்தின்போது அவர் தென் னியா வந்து தஞ்சை, மாயூரம் தாலுக்காவில் தொண்டு ஆற்றியது குறிப்பிடத்தக்கது. பக வானது திருவடி நீழலடைந்த அவரது ஆத்மா சாந்தமடைவதாக.

### பிரசாரத் தொண்டு

சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடம் தலைமை சுவாமிகளின் விருப்பப்படி, ஸ்ரீகோவிந்தர், ஸ்ரீ நரசிம்மமூர்த்தி என்னும் நம்மடத்து இரண்டு பிரம்மசாரிகள் பிரசார நிமித்தமாக தஞ்சை ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய் கிறார்கள். ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்துக்குச் சந்தா சேர்ப்பதும், மடத்து ஆங்கில தமிழ்ப் பிரசுரங்களைத் தஞ்சை நாட்டிலே பரவச்செய் வதும் அவர்களது முக்கிய தொண்டாகும். 'விஜயம்' வாசிக்கும் தஞ்சை அன்பர்கள் அவர் களுக்குத் தக்க உதவிசெய்து பகவான் ஸ்ரீராம கிருஷ்ணர் அருளுக்குப் பாத்திராமாறு கேட்டுக்கொள்ளப் படுகின்றார்கள்.

---

## கடிதங்கள்

(முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசீயக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணு 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப் பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணு 3

---

## ஜகஜ்ஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணு 12. சந்தாதாரருக்கு அணு 10.

---

# ப ஜ ஞ வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவ தவசியம்.

விலை அணு 12.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உக] . விஷு ஞு சித்திரை மீ [பகுதி—ச

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தரால் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அநுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப்பட்டுள்ளது; வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உக } விஷு வருஷ சித்திரைமீ { பகுதி-ச


## பிரார்த்தனை

---

தன்னே ரில்லான், தனக்கென உருவம்
ஒன்றும் இல்லான், தன்னல மில்லா
நந்நலம் கருதித் தன்றூற் றலினுல்
வடிவம் பலவும் வாய்ப்பக் கொண்டோன்;
உலகம் யாவும் உதித்தன அவனிடம்;
தோற்றிய போல ஒடுங்குவ ஆண்டே;
இத்தகை இலகும் இறைவன்
நல்ல சிந்தை நல்குக நமக்கே.

—ஸ்வேதேஸ்வதர உபநிடதம், (IV-1.)

---

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

உண்மையே இறுதியாக வெற்றி பெறும் என்று நம்புவோராகிய நாம் எக்காலத்திலும் அதிகமாக இக்காலத்தில், நமது சுய வாழ்க்கையை நன்கு ஒழுங்குபடுத்த முயலவேண்டும். உலகச்சக்திகள் அனைத்திலும் அன்பே வலியது என்று அன்பின் பெருவலியைப் பறைசாற்றி வரும் நாம், நமது சுயவாழ்க்கையிலேயே அவ்வுண்மையை நிலைநாட்டுதற் பொருட்டு, முன்னையினும் அதிகமாக இன்று முயலவேண்டும்.

தற்காலத்தில், சாதாரணமான ஒரு மனிதனது தனி நன்மை பொது மக்களது மொத்த நன்மையைப் பொறுத்ததாயுள்ளது; ஆனால் மொத்த நன்மையைப் பெறுதற்கு வழி ஒன்றேதான் உண்டு; அது யாதெனில், நாம் ஒவ்வொருவரும் தனித் தனியாக நமது சுயவாழ்க்கையை ஒழுங்கு படுத்தி அமைத்து, அவ்வாயிலாக ஞானக் கொள்கைகட்கு எந் நாளும் தோல்வியில்லை என்ற உண்மையை உறுதியாக உணர்ந்து வாழ் தலேயாம்.

நமது சுயமுயற்சிகள் நமக்குப் புலப்படும் படியான பயன்களை உடனே விளையாமற் போவதைக் கண்டு நாம் ஏமாற்ற மடைவதும் மனத் தளர்ச்சியடைவதும் நமக்கு சகஜமாயிருக்கலாம்; ஆனால், வாழ்க்கைக்கு அடிப்படையான மிக உயர்ந்த உண்மைகளை வியாபார முறைப்படி மதிப் பிடுதல் ஒண்ணாது. நமது வாழ்க்கையின் வலிமை, நமது அசைக்கமுடியாத உறுதியுணர்வையே முழுதும் பொறுத்ததாகிறது; உயர்ந்த கொள்கை களின் மீது நமக்குள்ள நிலையான அன்பினை நமக்குறும் ஆபத்தும் மரண பயமும் அசைக்கமாட்டாதவையாகும்.

—ஓர் அறிஞர்.

# தேவியின் திருவாக்கு

(ஸ்ரீமான் ரா. ராமகிருஷ்ணன், M.A., L.T., மொழி பெயர்த்தது.)

**1911,** ஆகஸ்டு, 3-ம் தேதி: இன்று அதிகாலையில் நான் பாக்பஜார் சென்றேன். இன்றையதினம் அன்னையாரிடமிருந்து தீக்ஷை பெறுவதற்கு விரும்பினேன். அதற்காகச் சில பொருள்களை நான் எடுத்துச் சென்றேன். பொருள்களின் ஜாபிதா ஒன்றை கௌரீமா எனக்குத் தந்தார். தூய அன்னையாரின் வீட்டிற்கு கௌரீமாவும் என்னுடன் வந்தார். நான் வந்து சேர்ந்தபொழுது அன்னையார் பூஜையில் ஆழ்ந்திருப்பதைக் கண்டேன். ஓரிடத்தில் அமர்ந்து கொள்ளுமாறு அன்னை எனக்குச் சமிக்ஞை செய்தார். பூஜை முடிந்த பிறகு என் தீக்ஷை சம்பந்தமான பேச்சை கௌரீமா துவக்கினார். நானும் ஒரு நாள் அன்னையாரிடம் அவ்விஷயத்தைப்பற்றிப் பேசியிருந்தேன். நல்ல வாழைப் பழங்களை நான் கொண்டு வந்திருந்தேன். பழங்களைப் பார்த்து அன்னையார் பெருங்களிப் பெய்தினார். "ஆ! இன்னும் அதிகமான வாழைப் பழங்களை நீ கொண்டுவந்திருப்பதைக் காண்கிறேன்" என்று கூறினார். அங்கிருந்த சந்நியாசிகளுள் ஒருவர் அப்பழங்களின் மீது தமக்குள்ள விருப்பைத் தெரிவித்தார். அன்னையார் "அந்த ஜமுக்காளத்தில் என் இடது புறத்தில் அமர்ந்து கொள்" என்று பணித்தார். "நான் கங்கையில் இன்னமும் நீராடவில்லையே" என்று பதில் கூறினேன்.

அன்னையார்: அதனால் பாதகமில்லை நீ உன் உடையை மாற்றிக்கொண்டு விட்டாயல்லவா?

நான் அன்னையின் அருகில் அமர்ந்தேன். என் இருதயம் படபடவென்றடித்ததை உணர்ந்தேன். மற்றவர் அனைவரையும் வெளியே செல்லுமாறு கூறிவிட்டு அன்னை என்னிடம் "கனவில் உனக்குத் தெரிவிக்கப்பட்ட மந்திரமெதுவோ அதை என்னிடம் கூறு" என்று கேட்டார்.

சிஷ்யை: நான் அச்சொற்களைக் கூறட்டுமா அல்லது எழுதட்டுமா?

அன்னையார்: நீ அவற்றை என்னிடம் கூறலாம்.

நான் கனவில் பெற்றிருந்த மந்திரத்தின் பொருளை அன்னையார் எனக்குத் தீக்ஷைதந்த சமயத்தில் விளக்கிக் கூறினார். அந்த மந்திரத்தை முதலில் உச்சரிக்கும்படி கூறி, அதன் பின்னர் நான் தியானத்துடன் பின்னால் உச்சரிக்கவேண்டிய புதியதொரு மந்திரத்தையும் எனக்கு உபதேசித்தார்.

மந்திரத்தின் பொருளை எனக்கு விளக்கிக் கூறுமுன் சில நிமிஷங்கள் அன்னையார் தியானத்தில் ஆழ்ந்திருந்ததைக் கண்டேன். தீக்ஷைபெற்ற சமயத்தில் என்னுடல் முழுவதும் நடுக்கமுற்றது. நான் அழுவதற்கு ஆரம்பித்தேன். இதன் காரணமென்னவென்று அறிவது என்னால் கூடவில்லை. எனது நெற்றியில் சிவப்புச்சந்தனத்தால் அன்னைத் திலகமிட்டனர். பூஜை அறையில் காணிக்கையாகச் சமர்ப்பிக்குமாறு நான் அன்னைக்குச் சில ரூபாய்கள் தந்தேன். அன்னையார் அந்தத் தொகையை கோலாப்மாவிடம் கொடுத்தார்.

தீக்ஷை யளித்த சமயத்தில் அன்னை அமைதி நிறைந்த கம்பீரத்துடன் விளங்கியதை நான் கவனித்தேன். அதன் பின்னர் அன்னையார் பூஜை செய்யும் இடத்தினின்றும் எழுந்திருந்தார். மந்திரத்தைச் சில தடவைகள் உச்சரித்து விட்டுத் தியானமும் பிரார்த்தனையும் செய்யுமாறு அன்னை பணித்தார். நான் அவ்வாறே செய்தேன். அன்னையின் பாதங்களில் நான் பணிந்தபொழுது "நீ பகவத் பக்தியைப் பெறுவாயாக!" என்று கூறி என்னை அவர் ஆசிர்வதித்தார். இப்பொழுதும் நான் அவ்வார்த்தைகளை ஞாபகப் படுத்திக் கொண்டு "அன்னையே! உங்களுடைய ஆசிர்வாதத்தை மறந்து விடாதீர்கள். அதன் நற்பயன் எனக்கு என்றும் நீடித்திருக்கட்டும்!" என்று பிரார்த்திக்கின்றேன்.

---

# இராவண தத்துவம்

(சுவாமி சித்பவானந்தர்)

### ஆராய்ச்சி

**உலகில்** தோன்றியுள்ள உயிர்வகைகளையும் ஏனையவற்றையும் நல்லவை தீயவை யென்று இருநாமமாகத் திட்டப்படுத்தி வகுக்க முடியாது. நலம் பொலம் ஆகிய இரண்டும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டே இருக்கின்றன. நல்லது என்று சொல்லப்படும் அமிர்தத்தை முறைதவறிக் கையாண்டால் அது நஞ்சு ஆய்விடும். விஷத்தைப் பாங்குடன் பிரயோகித்தால் அது மருந்து ஆகும். எப்பொருள் எத்தன்மை உடையதாயிருப்பினும் அதில் குணமும் குற்றமும் சேர்ந்தே இருக்கின்றன.

மனிதரில் சிலரை நினைவுக்குக்கொண்டு வருங்கால் அவர்கள் கேடு அனைத்துக்கும் உறைவிடம் என்னும் எண்ணம் வருகிறது. அத்தகையவர்களுள் ஒருவன் இராவணன். கொடுமைக்கும் கீழ்மைக்கும் எடுத்துக்காட்டாக அவன் இலங்குகிறான். கருத்தில் வைப்பதற்கும் தகுதியற்றவன் என்கிற எண்ணமே அவனைப்பற்றி ஊட்டப்படுகிறது. ஆனால் உண்மை அங்ஙனமன்று. ஓரம் சார்ந்த ஆராய்ச்சியே அத்தகைய மனநிலையை உண்டுபண்ணுகிறது. நடுநிலையினின்று ஆராயுங்கால் இராவணனுடைய வாழ்க்கையினின்று நமக்குக் கணக்கற்ற தத்துவங்கள் கிடைக்கின்றன. அத்தத்துவங்களெல்லாம் நமது வாழ்க்கைக்குப் பயன்படுபவைகள். இராமனுடைய சரிதம் நமக்கு ஒரு போக்கில் பாடம் புகட்டுகிறது. இராவணனுடைய சரிதம் வேறு ஒருபோக்கில் புகட்டுகிறது. உடன்பாட்டில் அமைவது இராமனுடைய போதனை. எதிர்மறையில் அமைவது இராவணனுடைய போதனை. உபமானம் ஒன்று எடுத்துக் கொண்டால், 'நீ எவ்வளவு வல்லவனா யிருந்தாலும் தீயில் கையை வைக்காதே' என்னும் பாடத்தை இராவண வரலாறு புகட்டுகிறது. 'தீயைச் சமைக்கவும் குளிர்காயவும் பயன்படுத்திக்கொள்' என்னும் பாடத்தை இராம வரலாறு விளக்குகிறது. இந்த இரண்டு போதனைகளையும் சேர்த்து எடுத்துக் கொள்ளும் பொழுதே நாம் கற்கும் கல்வி பூர்த்தியாகிறது.

இராமாயணம் என்னும் அற்புதமான நாடகம் இன்றைக்கும் இயற்கையில் ஓயாது நடைபெற்றுக்கொண்டிருக்கிறது

அன்று அந்த நாடகத்தைக் கண்கூடாக நடாத்திக் காட்டவந்த பாத்திரம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தத்துவத்தின் பிரதிநிதியாகத் தோன்றிவந்தார். இராமன் பரமாத்மாவின் வடிவம்; சீதை ஜீவாத்மாவின் வடிவம்; இராவணனே மனே தத்துவத்தின் வடிவம். இன்று ஸ்தூல உடலில் இராமனும் சீதையும் இராவணனும் இல்லை. ஆனால் தத்துவங்களாகிய பரமாத்மனும், ஜீவாத்மனும், மனதும் இருக்கின்றன. அத்தத்துவங்கள் தத்தம் தொழிலைச் செய்துகொண்டும் இருக்கின்றன. ஆகையால்தான் இராமாயணமும் ஓயாது நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இராவணனுடைய பராக்கிரமங்களை இன்று நாம் கண்டுகொண்டே இருக்கிறோம்.

## பிறப்பு

நவீன வகுப்பு வாதத்தை இராமாயணத்தில் கொண்டுவந்து வலிந்து திணிப்பவர் இராவணனுடைய பிறப்பைத் தெரிந்துகொள்ளுவது அவசியம். வருணத்தில் அவன் பிராம்மணன்; பிரம்மாவுடைய கொள்ளுப்பேரன். அறிவு, ஒழுக்கம், தபோமஹிமை முதலிய மேன்மைகளனைத்துக்கும் நிலைக்களமா யிருப்பவர் பிரம்மா. சீலத்திலும் தர்மத்திலும் பிரம்மாவுக்கேற்ற பிள்ளையாகப் பிறந்தவர் புலஸ்த்தியர் என்னும் பிரஜாபதி. அவருக்கு மகவாகப் பிறந்தவர் விஸ்ரவஸ் என்னும் பிரம்மரிஷி. தம் தந்தையைப் போன்றும் பாட்டனரைப் போன்றும் இந்த பிரம்மரிஷியும் செந்நெறி வழுவாதவராயிருந்தார். இவருக்குப் புத்திரனகப் பிறந்தவன் இராவணன். ஆகையால் இவன் குலத்தில் யாருக்கும் கீழ்ப்பட்டவன் அல்லன். குலத்தைப் பற்றிப் பெருமை பேசுகின்றவர்கள் கூட்டத்திலே இராவணன் எப்பொழுதும் முதன்மை வகிக்கக் கூடும். மேலாம் குலத்தினின்று உண்டாகின்ற பிரபாவங்களெல்லாம் இயல்பாக அவனுக்கு வந்து அமைந்திருந்தன.

கல்வி என்னும் கடலின் கரையையும் அவன் ஒருவாறு கண்டறிந்தவன். வேதங்களும் சாஸ்திரங்களும் அவனல் கசடு அறக் கற்கப்பட்டிருந்தன. கலைஞானங்கள் அனைத்தும் இராவணனிடத்தே மிளிர்வனவாயின. சுருங்கச் சொல்லின் அவன் ஓதி உணராத கல்வி ஒன்றும் இல்லவே இல்லை.

உடன் பிறந்தார் மூவரில் தமோகுணத்தோடு கூடிய மனேதத்துவமே கும்பகர்ணன். முற்றிலும் சத்துவமயமானவன் விபீஷணன். இராவணனே ரஜோ குணத்தோடு கூடிய மனதின் அவதார புருஷன். ஆத்மாவானது பிரகிருதியாகப் பரிணமிக்கும் பொழுது முதலில் அது ஆனந்தமயகோசமாகிறது. அதினின்று விஞ்ஞானமயகோசம் வருகிறது. மனேமய கோசம் விஞ்ஞானமய கோசத்தினின்று உருவெடுக்கிறது. ஆக, மனமானது ஆத்மாவுக்குக் கொள்ளுப்பேரன் என்னும் முறைமையைப் பெறுகிறது. பிரம்மாவுக்கும் இராவணனுக்கும் எத்தகைய உறவோ அதே உறவு ஆத்மாவுக்கும் மனதுக்கும் அமைந்திருப்பது கருதற்பாலது.

## தோற்றம்

இராவணன் பத்து தலைகளையுடையவன். இதன் அடிப்படையான கருத்து ஆராய்தற்கு உரியது. இயற்கையின் அமைப்பில் அனுவசியமாய் எதுவும் ஏற்படுவதில்லை. ஒரு தலை செய்கிற தொழிலை இரண்டு தலைகளைக்கொண்டு செய்விப்பது இயற்கையின்போக்கு அன்று. சிக்கனமே வடிவெடுத்தது என்று இயற்கையைச் சொல்ல வேண்டும். பயன்படாதது

ஒன்றையும் அது படைப்பதில்லை. பயன் படுபவைகளையும் அளவெடுத்தே அது அமைக்கிறது. அப்படியாயின் இராவண னுக்குப் பத்துத் தலைகள் எதற்காக? இரண்டு தலைகளுடன்பிறக்கும் குழந்தை ஒன்று உயிர் வாழ்வதை நாம் காண்ப தில்லை. பயன்படாத பேருறுப்பே அதை மாய்த்து விடுகிறது. பின்பு இராவணன் எங்ஙனம் பத்துத் தலைகளுடன் உயிர் வாழ்ந்திருக்கக் கூடும்? மனதைப்பற்றிய ஒரு பேருண்மை இராவணன் மூலம் உருவகப்படுத்தி இயம்பப் படுகிறது. கருமேந்திரியம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து ஆகிய பத்து இந்திரியங்கள் வாயி லாக மனது வேலை செய்கிறது. பத்து இந்திரியங்களும் அதற்குப் பத்துத் தலை போன்றவைகள்.

இஷ்டப்பட்டபடி இராவணன் ஒருதலை யுடன் இருப்பான், ஒன்றுக்கு மேற்பட் டுப் பத்துத் தலைகளுடனும் இருப்பான். வேண்டும் வடிவங்களை யெல்லாம் எடுத் துக் கொள்ளும் தன்மை அவனுக்குண்டு. இன்றைக்கும் இக்கூற்றுகளை நமது மனது நிரூபிக்கிறது. எப்பொழுது மனது எதை எண்ணுகிறதோ அப் பொழுதே அது எண்ணப்பட்ட பொரு ளின் வடிவத்தை எடுத்துக் கொள்ளு கிறது. பத்து இந்திரியங்களுள் தனக்கு இஷ்டப்பட்ட இந்திரியங்களைக் கொண்டு மனது ஏககாலத்தில் வேலை செய்கிறது. ஆக மனதின் செயல்களை இராவண னுடைய வாழ்க்கை உருப்படுத்தி விளக்கு கிறது. இரண்டையும் சீர்தூக்கி ஆராய் பவரே இராவணனுடைய உருமாறும் தன்மையை நன்கு ரசிக்க வல்லவர் ஆவர்.

சமஸ்த இலக்ஷணங்களும் அமையப் பெற்றவன் இராவணன். சுந்தர சொரூபி என்று அவனைத்தான் சொல்ல வேண்டும். அவனுடையகாயம் காந்தியுடன்மிளிர்ந்து கொண்டிருந்தது. தேஜசே வடிவெடுத்தது அவனுடைய தேகம். செந்தாமரை போன்று சிவந்த கண்களை யுடையவன் அவன். இராஜலக்ஷணத்தோடு கூடிய நீண்ட புஜங்கள் அவனுக்கு உண்டு. பொன் குடத்துக்குச் சந்தனப் பொட்டு வைத்தாற் போன்று அவன் யாண்டும் செஞ்சந்தனத்தை மேனியில் பூசிக் கொண்டிருந்தான். அதனால் அவ னுடைய இலாவண்யம் மேலும் அதிகரித் தது. இந்திரனுடன் போராடியபொழுது ஐராவதத்தின் தந்தங்களால் தாக்குண்டு உண்டான காயங்களின் காய்ப்புகள் வீரத் துக்கு அறிகுறியாக விளங்கின. அவ னுடைய பருத்த தோள்களில் இந்திர னுடைய வஜ்ராயுதத்தின் அடிகள் திகழ் ந்துகொண்டிருந்தன. அவ்வாறே விஷ்ணு தேவனுடைய சக்ராயுதத்தின் அறுப்பு களும் அவனுடைய தோள்களில் திகழ் வனவாயின. பருத்த உடலுக்கு ஏற்ற படி தோள்களும் தக்க வலிவு பெற்று விளங்கின. சுப லக்ஷணங்களோடு கூடிய நகங்களையும் விரல்களையும் உடைய அவ னது உள்ளங்கைகள் பார்ப்பதற்கு ரமணீ யமாயிருந்தன. அவனுடைய இரு கரங் களை இரும்புத் தடியோடு அல்லது யானை யின் துதிக்கையோடு ஒப்பிடலாகும்.

இராவணனுடையமேனியைப் போன்று அழகும் ஆற்றலும் வாய்க்கப் பெற்ற மனதைப் பெற்றிருப்பது மக்களுக்கு இயலும். அவனுடைய உடலில் பதிந்து கிடந்த தழும்புகள் அவனுடைய வீரச் செயல்களை விளக்கியது போன்று உயர்ந்த சம்ஸ்காரங்களை நமது மனதில் பதிப்பிப் பது நம்மால் செய்யக்கூடிய செயலாகும்.

### தபசு

மனதை ஒருமைப் படுத்துதற்கு உற்ற உபாயம் தபசு. எவ்வுலகில் எதைப் பெற வேண்டுமானாலும் அதற்கேற்ற தபசைச் செய்யவேண்டும் பொருளையும் இன்பத்

றையும் நாடுவது காமிய தபசு. வீடுபேறு அல்லது இறைவனை அடைதற்காகச் செய்யும் முயற்சிக்கு நிஷ்காமிய தபசு என்று பெயர். முக்தியில் உள்ள விருப்பமும் முடிவில் போய்விடுகிறது. ஆதலால்தான் அது நிஷ்காமிய தபசு என்று சொல்லப்படுகிறது. எதைப் பெறுதற்கு மனது தகுதியுடையதாகிறதோ அது எளிதில் கிடைக்கப்படுகிறது. மனதைத் தகுதியுடையதாக்குதலே அனைத்துக்கும் மூல காரணம். இம்மையில் அல்லது மறுமையில் யார் எதைப் பெறுகின்றனரோ அவர் அதன் பொருட்டுத் தம்மைப் பக்குவப்படுத்திக்கொண்ட பின்பே அது அடையப்படுகிறது. தம்மைத் தகுதியுடையவராகச் செய்துகொள்வது எல்லார்க்கும் பொதுவாக ஏற்பட்டுள்ள விதி. ஆகையால்தான் தபசின் வாயிலாக எதையும் பெறலாம் என்று சொல்லப்படுகிறது. தேவர் அசுரர் ஆகிய இருதரத்தாருக்கும் தபசு வேண்டற்பாலது.

இராவணன் நெடுங்காலம் தவம்புரிந்தான். அவனுடைய தவம் நமக்கு உயர்ந்த பாடத்தைப் புகட்டுகிறது. தபசு என்றால் என்ன என்பதையும் அவனிடத்திருந்து நாம் கற்றுக்கொள்ளக்கூடும். பதினாயிரம் வருஷம் அவன் கடுந்தவம் புரிந்தான். காலம் மனதுக்கு அன்னியமானதன்று. ஆதலால் மனது ஒழுங்குபடும் பரியந்தம் அவன் நெடுநாள் நிஷ்டையிலிருந்தான் என்பது பொருள். அது போழ்து அவன் ஆகாரம் எதையும் எடுத்துக்கொள்ளவில்லை. இந்திரியங்கள் தத்தம் தொழிலைச் செய்யாதிருக்கும்படி அடக்குவதற்கும் ஆகாரம் ஏலாதிருத்தல் என்றுபெயர். ஓர் ஆயிரம் வருஷம் நிஷ்டையில் கழிந்ததும் தன் பத்துத் தலைகளில் ஒன்றை அறுத்து வேள்வித்தீயில் ஆகுதியாகப் போட்டுவிடுகிறான். இரண்டாவது ஆயிரம் வருஷம் முடிவுபெற்றதும் மற்றொரு தலை ஹோதாக்கினியில் வீழ்கிறது. மூன்றாம் ஆயிரத்தில் இன்னொருதலை சாய்கிறது. இப்படி ஒன்பது தலைகள் போய் விடுகின்றன. பதினாயிரம் ஆண்டின் இறுதியில் பத்தாவது தலையும் கிள்ளப்படப்போகிறது! அந்த நெருக்கடியில் பிரம்மா பிரசன்னமாகிறார். வேண்டும் வரத்தைத்தர அவர் முற்படுகிறார்.

இது மனதை ஒட்டிய உயர்ந்ததொரு தத்துவம். நூலின் இழைகள் பலவாறாகப் பிரிந்திருக்கும்போது அந்தநூலை ஊசியில் கோக்கமுடியாது. இழைகளை முறுக்கி ஒருமுனைப்படுத்தும் போது நூலை ஊசியில் செலுத்துவது எளிது. மனதும் அத்தகையது. இந்திரியங்கள் என்று சொல்லப்படும் பத்துவாயில்கள் வழியாக அது சிதறடைகிறது. அப்படி விடாது அதை ஒருமுகப்படுத்தினால் வலிவு மிகப்பெறுகிறது. இன்னும் சிதறடைந்து பூமியில்விழும் சூரியக் கிரணங்களைப் பூதக்கண்ணாடியின் வாயிலாக ஒருமுகப்படுத்தினால் தீமூட்டும் வலிவு அதற்கு வந்துவிடுகிறது. ஒருமுகப்பட்ட மனதுக்கு எதையும் சாதிக்கும் வலிவு வந்துவிடுகிறது.

கண் இல்லாதவனுக்குக் கேட்கும்சக்தி அதிகரிக்கிறது. காது இல்லாதவனுக்குப் பார்க்கும் சக்தி வலுக்கிறது. இப்படி ஓர் இந்திரியத்தை அடக்கிவிட்டால் மனத்தின் ஆற்றல் மற்றோர் இந்திரியத்தில் மிகைபடத் தோன்றுகிறது. எல்லா இந்திரியங்களையும் ஒன்றன்பின் ஒன்றாக அடக்கிவிட்டால் மனது பேராற்றலைப் பெறுகிறது. எதையும் சாதிக்கும் வன்மை அதற்கு உண்டாகிறது. இப்பேருண்மையை இராவணனுடைய தபசு விளக்குகிறது. பிரம்மா அவனுக்குப் பிரசன்னமானார் என்பது பிரபஞ்சத்தில் எதையும் சாதிக்கும் சக்தி அவனுக்கு வந்துவிட்டதென்பதாகிறது.

வரம்

இராவணனிடத்துப் பிரீதியடைந்த பிரம்மா அவனுக்கு வேண்டியவரத்தைக் கேட்கும்படி. வினுர். தான் என்றும் சாகாத நிலையை அடைய வேண்டுமென்று இராவணன் விண்ணப்பித்தான். அது சாத்தியப்படாது என்றார் நான்முகன். பிரகிருதிக்கு உட்பட்டிருக்கும் அனைத்துக்கும் அழியும் தன்மையுண்டு. பிரம்மாவுக்கே அழிவுண்டு. மற்ற ஜீவர்களைப் பற்றிப் பின்பு பேசுவானேன்! இவ்வுண்மையைக் கேட்டறிந்த இராவணன் தான் முதலில் கேட்ட வரத்துக்குக் கிட்டத்தட்டச் சமனுயிருந்த மற்றொரு வரத்தை வேண்டினன். அதாவது கருடன், நாகன், யக்ஷன், தைத்யன், தானவன், ராக்ஷசன், தேவன் ஆகிய இந்த கணங்களால் தனக்கு ஒரு காலும் மரணம் நேரிடக்கூடாது என்று விரும்பினன். மனிதர்களைப்பற்றி அவன் கவலைப்படவில்லை. ஏனென்றால் அற்ப துரும்பைப்போன்ற மனிதர்களிடமிருந்தா அவனுக்கு மரணம் வரப்போகிறது. அத்தகைய வரத்தைக் கேட்பது இராவணன் போன்ற பராக்கிரமசாலிகளுக்குத் தகுமா?

கவிதைக்கு ஏற்ற கருத்துடன் கூடியது இராவணன் பெற்ற வரம். அவனுடைய இயல்புக்கு அது முற்றிலும் பொருத்தியதே. போற்றத்தக்க பொருள் ஒன்றும் அதன் கண் புதைந்து கிடக்கிறது. தேவர்களோடும் அசுரர்களோடும் சீர் தூக்கிப் பார்க்கின் மனிதன் அற்பப் பிராணி என்பது உண்மை. உடல் வலிவில் அவன் உயர்ந்தவன் அல்லன். பலவிதமான பிணிகளுக்கெல்லாம் அவனுடைய உடல் உறைவிடமாகிறது. ஆயினும் அந்த அற்ப மனிதன் ஒருவனுக்கே மனது என்னும் அரக்கனைமாய்க்க இயலுகிறது. ஞானேந்திரியங்கள் ஐந்து, கருமேந்திரியங்கள் ஐந்து ஆகிய பத்துத் தலைகளோடு கூடி ஓயாது வியவகாரம் செய்யும்மனதே இராவணன் என்றுசொல்லப்படுகிறது. அத்தகைய மனதை வெல்ல அல்லது கொல்ல எந்தத் தேவனுக்கும் ராக்ஷசனுக்கும், தானவனுக்கும் தைத்யனுக்கும், யக்ஷனுக்கும் இயலாது. மனிதனுகப் பிறப்பவனே மனதைக் கொல்ல வல்லவனுகிறான். மனது மாய்ந்த இடமே முக்தி என்று சொல்லப்படுவது. மனம் ஒடுங்கிய இடமே ஈசுவரசான்னித்தியம். மனதை மாய்த்தவன், பெறுபவைகளுள் பெரியதைப் பெற்றவன் ஆகிறான். அத்தகைய செய்தற்கு அரிய செயல் மனிதனுகப் பிறப்பவனது தனி யுரிமையாகின்றது. ஆதலாலேதான் எண்ணரிய பிறவிகளுள் மானுடப் பிறவி அரிதிலும் அரிதாய் அமைகிறது.

இராவணன் கேட்ட வரத்துக்கு அனுசரணையாக பிரம்மா இன்னும் இரண்டு வரங்களைத் தந்தார். அவைகளுள் ஒன்று வேள்வித்தீயில் பலியாகக் கொடுத்த ஒன்பது தலைகளையும் திருப்பிப்பெறுதலாம். பொறி வாயில்களை அவித்தல் என்பதன் கருத்து அவைகளைப் பாழாக்குதல் என்பதல்ல. கண்ணைக் குருடாக்குதலும் காதைச் செவிடாக்குதலும் இந்திரிய நிக்கிரகங்கள் ஆகா. மனது அவைகள் வாயிலாக வீணில் அலையாது தடுக்கவேண்டும். ஒவ்வொரு இந்திரியத்தையும் தீயிலிட்டு அவித்துவிட்டது போன்று பாவனை செய்து, மனது அதன்கண் செல்லாது விலகி நிற்பது தபசு. அப்படி எல்லா இந்திரியங்களிடமிருந்தும் மனது எவ்வளவுக்கெவ்வளவு விலகி யிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது வலிவையும் தெய்வத்தன்மையையும் பெறுகிறது. வலிவைப் பெற்றபிறகு மனதானது வகையுடன் இந்திரியங்கள் வாயிலாக வேலை செய்யலாம். வகையுடன் கரணங்களைக்

கையாள்வதில் சிரமமை யொன்றுமில்லை. அப்படி அவைகளைப் பயன்படுத்துதலே வெந்த தலைகளைத் திரும்பப் பெறுவது என்பதாகிறது. இராவணன் தன் தலைகளைப் பழையபடி பெறுவதன் மூலம், அடக்கப் பழகிய மனது பொறிகள் வாயிலாக வேலைசெய்யலாம் என்பது புகட்டப் படுகிறது.

தான் விரும்பும் வடிவத்தை எடுப்பது இராவணன் பெற்ற மற்றொருவரமாகும். இப்பேருண்மை நம் மெல்லோர்க்கும் பொருந்தியுள்ளது. விரும்பிய வடிவெடுக்கும் தன்மை நம்மிடத்திலும் அமைந்துள்ளது. ஆழ்ந்து ஒன்றை எண்ணும் தருணத்திலும் மனது எண்ணப்படும் பொருளாய்விடுகிறது. ஒவ்வொரு எண்ணத்துக்கும் வடிவம் இருக்கிறது. பூர்வத்தில் உண்டான எண்ணத்திரளின் பரிணாமமே இப்பொழுது நாம் படைத்துள்ள தேகமாகிறது. பிறவிதோறும் நம் விருப்பத்துக்கு ஏற்றவாறு புதிய ரூபத்தை நாம் எடுத்துக்கொண்டிருக்கிறோம். ஆகையால் ' காமரூபின் ', என்னும் வரப்பிரசாதம் இராவணனுக்கு இருந்ததுபோன்று மனதை உடைய நம் மெல்லோர்க்கும் உண்டு. மனதில் உண்டாகும் எண்ணங்கள் தெய்வத்தன்மை வாய்ந்தவைகளாயிருந்தால் தெய்வத்தன்மையோடு கூடிய வடிவங்களை நாம் எடுக்கக்கூடும்.

(தொடரும்)

---

# சந்தேகம் தெளிதல்

வினா :—இளம்பிராயமுள்ள தம்பதிகள் இருவர் மெய்யன்போடு வாழ்ந்து வரும் நாளில் திடீரெனக் கணவன் கடுமையான நோய்க்காளாகிறான். அப்போது மனைவி மனங் கசிந்து கடவுளை வேண்டுகிறாள். அப்போது இறைவன் அப்பிரார்த்தனைக்கு இணங்கி, அவனது நோயைத் தீர்த்தல் வேண்டுமன்றோ? செய்யாவிடில் அவன் கல் நெஞ்சினனன்றோ? கணவன் இறந்தால், காதலியினது வாழ்க்கை உலகத்தில் வீணானதாக ரசமற்றதாக ஆய்விடும் அன்றோ?

குழந்தையிடம் விளையாட்டுப் பொருளைக் கொடுத்துவிட்டுத் தன் காரியத்தைப் பார்த்துவரும் தாய், குழந்தை 'ஓ' என்று அலறும்போது, ஓடிவருவாளன்றோ? அதுபோல் இச் சமயம் மனைவிக்கு உதவி செய்ய ஏன் பகவான் முன்வரக்கூடாது? இம்மாதிரிச் சமயங்களில் உதவியை பகவான் அளித்தாலன்றோ, அவனிடத்தில் பக்தி பெருகும்? அவனையே கதியென்று கதறுகிறவர்கட்குக் கருணைபுரிய அவன் முன் வரவேண்டுமன்றோ?

இளமையில் கணவனை இழக்கும் மாதர்கட்கு மட்டும் ஏன் மறுமணம் கூடாது?

P. கோ.

விடை :—இறைவன் தனது அருமை மக்களை ஆட்கொள்ளும்போது, அறக் கருணையாலும் மறக் கருணையாலும் அவர்களைத் திருத்தி நல் வழிப்படுத்த முயலுவதுண்டு. இன்பத்தைக் கொடுத்தும் தனது கருணையைக் காட்டுவான், துன்பத்தைக் கொடுத்தும் தனது கருணையைக் காட்டுவான். மக்களது நன்மையிலேயே கண்ணும் கருத்துமாகி, அவர்கட்குரிய பிறவிப்பிணியை ஒழிக்க நினைக்கும் மருத்துவனாகிய பகவான் மிகக் கசப்பான மருந்துகளையும் ஊட்டுவார்; வாளால் அறுத்தும், நெருப்பால் சுட்டும் சில சமயம் புண்களைக் குணப் படுத்து

வார். இச் செயல்களைச் செய்யும் மருத்து வனைக் கொடூரமான நெஞ்சினன் என்ப துண்டோ ? அதுபோல ஈசனும், பிறவி நோயைத் தீர்த்தற்குக் கடுமையான முறைகளையும் கையாளுவான் ; அது எல்லாம் அறிந்த அவன் நோயாளியின் இயல்பையும், நோயின் முதிர்ச்சியையும், அதன் காரணத்தையும் கண்டறிந்து செய்யும் செயலாகும். நமது கண்ணிற்கு வெளிப்பார்வைக்குத் துன்பந்தருவது, உண்மையில் முடிவில் இன்பந்தருவதை நாம் பலமுறை கண்டுள்ளோம் ; ஆதலின், முடிவை நாம் பொறுத்திருந்து காணுது குறை கூறுதல், பொருந்தாத காரியமாகும். மனைவிக்குக் கணவனை இழத்தல், இருவரது ஞான முன்னேற்றத்திற்கும் ஏதுவாகலாம் ; அது உண்மையா என்பதைப் பல ஆண்டு கழிந்த பின்னரே ஒருவர் அறிந்து கூற இயலும்; அன்றி, மறுபிறவியின் நிகழ்ச்சிகளைக் கொண்டே ஆராய்ந்து கூறவேண்டிவரும். அவ்வளவு எட்டி ஆராயும் திறமையில்லாதவர் இறைவனது செயல்களைப் பற்றி முடிவு கட்டுதல் முறையாகாது. முற்பிறவியையும் பிற்பிறவியையும் நன்கறியும் ஞானக்கண் பெற்றிருக்கும் அறிஞர்கள் இறைவனைக் கன்னெஞ்சனென்றோ நீதியற்றவனென்றோ கூறுவதில்லை. மேலும், ஒருவனோடு நெருங்கிப் பழகி அவனது செயல்களை ஆராய்ந்து பார்த்தாலன்றி, அவனது குணத்தைச் சீர்தூக்கி அபிப்பிராயம் கூறுதல் முடியாது என்பது வெளிப்படை. "இறைவன் கொடியன், துஷ்டன்" என்று கூறிய ஒருவரிடம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறிய பதில் இங்கு கருதத் தக்கது. அவர் சொன்னதாவது :- "பையனே, இறைவன் ஒருவன் உளன் என்பதை முதலில் அறிந்து கொள்க. அவனை நேரிற்காணும் வழியைப் பின் பற்றி, அவனைக் கண்டு கொள்க. கண்ட பின் அவனை இத்தன்மையனென நீயே அறிந்து கொள்க." முதல் முதலாக இறைவன் உளன் என்பதை நாம் உணர்ந்து கொண்டபின், அவனோடு நெருங்கிப்பழகி, அவன் கொடியனோ அன்புடையவனோ, துஷ்டனோ நல்லவனோ என்பதை அறிய முயலுதலே முறை. அவனை நேரிற் கண்டவர்களும் அவனோடு நெருங்கிப் பழகியவர்களும் அவனை எல்லையற்ற அன்புடையவன் என்கின்றனர் ; ஆதலின் பிறர் வேறு வகையாகக் கூறுதல் பிழைபட்டதேயாகும். துன்பமே மக்கட்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தும் ஆசான் ஆவதை நாம் பன்முறை கண்டுள்ளோம். அதை யறிந்தும், இறைவன் அடியார்க்குத் துன்பத்தை அளிக்கும்போது, குறை கூறுகின்றோம். இறைவனது கண்ணால் அவனது செயல்களைக் காண முயலாது, நமது ஊனக் கண்ணால் அவைகளை அறிந்ததாக முடிவு கட்டிவிடுகிறோம் ; இது பேதைமை யன்றோ ?

நாம் செய்த செயல்களின் பயனை நாம் அனுபவிக்கும்போது, இறைவன் உதாசீனனாக இருப்பான். கொலை செய்தவன் கொலைக் குள்ளாக வேண்டும் என்னும் விதியை ஏற்படுத்திய அரசன் கொலை செய்த குற்றத்திற்காக உயிரிழக்கும் போது கண்ணீர் விடுவதில்லை ; அதனால் அவன் கொடிய சித்த முடையவன் என்பதும் பொருந்ாது. ஒவ்வொருவரும் தாம் தாம் செய்த கருமங்களின் பயன்களை உரிய காலத்துப் பெறுமாறு செய்பவனும் இறைவனே ; அதுவும் அவனது அருளாலேயே நிகழ்வ தொன்றும்.

இறைவனிடத்து மெய்யன்பு பூண்டு, அவனையே நம்பியிருக்கும் அடியார்கட்கு ஒரோவழி பெருந்துன்பம் நேரும்போது, அவர்கள் இறைவனைப் பிரார்த்திப்பாராயின், இறைவன் அப் பிரார்த்தனையை நிறைவேற்றுவதும் உண்டு. ஆனல் அவன்

விரும்புங்கால், துன்பத்தை நீக்காதிருப்பதும் உண்டு. சுந்தரமூர்த்தி நாயனாராகிய மெய்யன்பர் மணம் புரியும் அமயத்தில் அளித்த வாக்கிற்கு மாறாக நடந்தபோது, கண்ணை இழக்கும்படி நேர்ந்தது. இறைவனைப் பார்த்து, "நான் வருந்துகின்றேனே, நீர் எனக்குக் கருணை புரியீரோ, நீரும் கோயிலில் இல்லையோ" என்று மனமுருகிக் கூறியபோது, "உளோம், போகீர்" என்று மட்டும் பதில் மொழிந்தார். பின்னர் சிறிது காலம் அவரை வருத்தியபின், மறுபடியும் சுந்தரர் இறைவனிடம் கண்ணை வேண்ட, அப்போது அருளினர். நாயனாரை மணப் பந்தலில் மணத்தைத் தடுத்து ஆட்கொண்ட சிவபெருமானார் தாமே சங்கிலியாரையும் பரவையாரையும் நாயனார்க்கு மணஞ் செய்வித்தனர். ஆதலின் இறைவன் மக்கட்கு எது எவ்வமயத்தில் நன்று என்பதை அறிந்து, அதற்கேற்ப இன்பத்தையோ துன்பத்தையோ அளிப்பான்; அதனை அறியும் ஞானமுடையார்க்கே அச்செயல்களின் பொருத்தமும் முறைமையும் விளங்கும். பிறர்க்கு அவை விளங்கா.

குழந்தை கதறும்போது, உண்மையான ஆபத்து அதற்கு உண்டானதென்று தாய் அறிந்தால், தாய் உடனே ஓடி வருவாள். அஜீரணமுள்ள குழந்தை கதறும்போதும், தாய் பால் கொடாள்; உண்டது சமித்து, நன்றாகப் பசியெழுந்து மீண்டும் கதறும்வரை, அதன் அழுகுரலைத் தாய் பொருட்படுத்தாள். அதுபோல, இறைவனும் மனைவிக்குக் கணவனை இழக்கும் துயரம் அவசியம் என்றும், அதனால் அவளது குணம் தீயிலிட்ட பொன்போல ஒளிரும் என்றும் கருதும்போது, உதவுவதில்லை. இறைவனையே கதியென்று உண்மையாக நம்பி யிருப்பவர்களாயின், அம்மெய்யடியார்கட்கு, இறைவன் துன்பமே விளைத்தாலும் இன்பமே சொரிந்தாலும், அவர்கள் 'எல்லாம் எனையாளும் ஈசன் செயல்' என்று ஆறி அமர்ந்து வாழ்ந்து, அனைத்தையும் அவனது அருட்பிரசாதம் என்றே மகிழ்ந்து, நன்றியோடு ஏற்றுக் கொள்வர். இவ்வாறு ஒழுகாதவர்கள் உண்மையான பக்தி யற்றவர்களேயாவார்; இதை அவர்கள் அறியும் பொருட்டும், சோதனையாக இறைவன் துன்பத்தைக் கொடுப்பது உண்டு.

இளம்பிராயத்திலே கைம்பெண்ணாகும் நங்கையர், மறுமணம் புரிந்து கொள்ளுதல் முறையா அன்றா என்பதை, அறிவும் ஒழுக்கமும் ஞான இச்சையும் பெற்ற மங்கையர் தாமே முடிபு கட்டிக் கொள்ளல் வேண்டும், அதில் ஆடவர் தலையிடல் வேண்டா, என்பர் ஸ்ரீ சுவாமி விவேகாநந்தர். அத்தகைய மாதர் இது காறும் மறுமணம் புரிய விரும்பாமைக்குக் காரணம், அத்தகைய செயல் கற்பொழுக்கத்தோடு முரணும் என்பதை உணர்ந்ததே தான். அவ்வழக்கத்தை நன்மையானதென்று மாதர் கருதி வந்ததே, அது இதுவரை இருந்து வருவதற்குக் காரணமாகும்.

வினா:—ஸ்ரீமத் பாகவதத்தில் க்ஷீர சமுத்திரத்தைத் தேவர்களும் அசுரர்களும் கடைந்ததனால் கிடைத்த அமிர்தத்தை ஸ்ரீ ஹரியானவர் தம்முடைய மாயையினால் ஜார ஸ்திரீயின் உருவம் கொண்டு தேவர்கள் அடையும்படிச் செய்தார் என்றும், அசுரர்கள் சமுத்திரத்தைக் கடைந்த சிரமத்தைத் தவிர வேறொன்றையும் பெறவில்லை யென்றும் கூறியுள்ளது.

இது, நிலத்தை உழுது பயிரிட்டவன் ஒருவன் இருக்க, மற்றொருவன் தன் சாதுர்யத்தினால் அந்நிலத்தின் மாசூலை அடைவது தர்மம் என்றும், சாஸ்திர யுக்தம் என்றும், பறைசாற்றுவதுபோலிருக்கிறது. இந்த முடிவு சரியா?

P. இ.

விடை:—அமுதமதனம் நடப்பதற்கு முன்னும் நடந்தபோதும், நடந்த பின்னும் நிகழ்ந்த சில காரியங்களை நாம் பாகவதத்தில் கூறியுள்ளபடியே அறிந்துகொள்வோம். முக்கியமான பொருத்தமான சிலவற்றையே எடுத்தளிப்போம். (1) அசுரர்கள் பிறரை வருத்துவதிலேயே கருத்தாயிருப்பவர்கள்; தேவர்கள் பிறர்க்கு நன்மை செய்வதிலே கருத்தூன்றியவர்கள். இதை யறிந்த பகவான் முதலிலேயே தேவர்களை நோக்கி, "அசுரர்கள் விரும்புவதை நீங்கள் புகழவேண்டாம். ஆலகால விஷத்தால் பயமடைய வேண்டாம்; (கடையும்போது) கடலிலிருந்து உண்டாகும் பொருள்களினிடத்து எப்போதும் லோபமும் கோபமும் காமமும் அடையக்கூடாது" என்று புத்திமதி கூறுகிறார்; (8-6-24,25 பாகவதம்) அதன்படி அவர்கள் நடக்கிறார்கள். தேவர்களை சமாதானமாக அசுரர்களை வேண்டிக்கொள்ள, இருவர்களும் சேர்ந்து மந்தரமலையைக் கொண்டுவருகிறார்கள். (2) கடலைக் கடைய ஆரம்பிக்கும்போது, வாசுகியின் முகத்தை விஷ்ணு பிடித்துக்கொண்டார்; தேவர்களும் முகத்தைப் பிடித்துக்கொண்டார்கள். அதைக் கண்ட அசுரர்கள் பொறாமையாலும் மமதையாலும், "நாங்கள் படித்தவர்கள், வேத அத்யயனம் பண்ணியவர்கள்! அசுத்தமான வால் பாகத்தை நாங்கள் பிடித்துக்கொள்ள மாட்டோம்" என்று கோபத்தோடு கூறினார்கள். விஷ்ணு உடனே முகத்தைவிட்டு வாலின் பக்கம் வர, தேவர்களும் அவ்வாறே வந்தனர். (3) அமிருதத்தைத் தன்வந்திரி கொணர்ந்ததும், (கடலிலிருந்து வெளியே கொணர்ந்ததும்) அதை அசுரர்கள் பலவந்தமாகப் பிடுங்கிக்கொண்டு சென்றனர். அசுரர்கள் லோபத்தால் செய்த இக்காரியத்தைத் தேவர்கள் பார்த்தும் சண்டை போடவில்லை. விஷ்ணுவிடம் பிரார்த்தனை செய்து, தமக்கு அமுதம் கிடைக்காத துக்கத்தைத் தெரிவித்தனர். பலவந்தமாக அபகரித்துச் சென்ற அசுரர்கள் தமக்குள்ளே ஆத்திரத்தால் சண்டை செய்துகொண்டனர்; பலமில்லாத அசுரர்கள் பலமுற்ற அசுரரிடம் "பலன் இருவர்க்கும் சமமாக வேண்டும்" என்று கூறி, அவர்களது செயலைக் கண்டித்தனர். (4) மோஹினி முன்னால் நின்றதும், அவளைக்கண்டு காமத்தால் அறிவிழந்த அசுரர் அவளிடம், "நாங்கள் தேவர்கட்கு விரோதிகள், ஞாதிகள்; நீ இந்த அமிர்தத்தை நீதிதவறாமல் பங்கிட்டுக் கொடு" என்று தாமாக வேண்டினர். (8-9-6-பாகவதம்.) அப்போது மோஹினியான விஷ்ணு, "பண்டிதர்கள் ஸ்திரீகளிடம் விசுவாசம் கொள்ளமாட்டார்; ஆதலின் என்னை நம்பாதேயுங்கள்" என்று புத்திமதியும் கூறினர். பின்னும், மோஹினியிடம் அமிர்த கலசத்தைக் கொடுத்து, அசுரர்கள் மீண்டும் பங்கிட்டுக் கொடுக்குமாறு வேண்டினர். அப்போது மோஹினி, "அசுரர்களே, நான் செய்வது நல்லதாயினும் கெட்டதாயினும், எதையும் நீங்கள் ஒப்புக்கொள்வதானால், உங்கட்கு இந்த அமிர்தத்தைப் பங்கிட்டுக் கொடுக்கிறேன்" என்றாள். அதற்கு அசுரர்கள் இணங்கி, "நீ சொன்னவிதமே செய்கிறோம்" என்று கூறி ஒப்புக்கொண்டனர். (5) தேவர்கள் ஒரு பக்கமும் அசுரர்கள் ஒரு பக்கமும் நின்று கடைந்தபோதிலும், விஷ்ணுவே கூட இருந்து பேருதவி புரிந்து, தாமும் கடைந்து, அமுதம் எழச் செய்தனர். மந்திரமலை கீழேதாழ ஆரம்பித்தபோது, விஷ்ணுவே கூர்மாவதாரம் எடுத்து, மலையை முதுகில் தாங்கி, பாற்கடலைக் கடையத் துணைபுரிந்தார். உண்மையை ஆராய்ந்துபார்ப்பார்க்கு விஷ்ணுவே தமது சக்தியைக் கொண்டு

கடைந்தார் என்பதும், தேவர்களையும் அசுரர்களையும் கருவிகளாகக் கொண்டார் என்பதும் விளங்கும்.

இதுவரை கூறிய இவைகளைக் கொண்டு, அசுரர்கள் அமிர்தம் பெறாத காரணத்தை ஆராய்வோம். அசுரர்கள் லோபத்திற்கும் கோபத்திற்கும் காமத்திற்கும் எப்போதும் ஆளாபவர்; எவ்வளவு எச்சரிக்கப்பட்டபோதும், அமிருதம் கடையும் சமயத்திலும் பின்னரும் தங்களது இயல்புகளாகிய காம குரோத லோபங்கட்கு வசப்பட்டனர். அசுரர்களிடம் மமதையும் பொறாமையும் குடிகொண்டிருந்தன. அவர்கள் பிறரை இம்சை செய்வதிலேயே கண்ணுயிருப்பவர்கள்; இவர்கட்கு அமுதம் கிடைக்குமாயின் உலகத்திலே அவர்களால் வரும் துன்பத்திற்கு அளவு இல்லாது போய் விடும். குரூரர்கட்கு அமுதம் அளிப்பது, பாம்புக்குப் பால்வார்ப்பது போலவாதலால், அவர்கட்கு அமுதம் கொடுக்கப் பகவான் விரும்பவில்லை. அசுரர்கள் அமிர்தத்தை இழக்க, அவர்களது காமமும் குரோதமும் லோபமுமே காரணங்களாகும்.

மோஹினி ரூபத்தில் விஷ்ணு அசுரர்கட்குத் தன்னை (ஸ்திரீயை) நம்பவேண்டாம் என்று எச்சரிக்கை செய்தார். எச்சரித்தும், தமக்குள் ஏற்பட்ட சண்டையாலும், பொறாமையாலும், மோஹினியைப் பங்கிட்டுக் கொடுக்கும்படி அவர்களே வேண்டினர்; நீதி தவறாமல் பங்கிட்டுக் கொடுக்கவேண்டும் என்றும் வேண்டித் தாமாகக் கொடுத்தனர். மோஹினியாகிய விஷ்ணுவும் தாம் எதைச் செய்தபோதிலும் அதை ஒப்புக்கொள்ள வேண்டும் என்றும் வற்புறுத்தினர். அதற்கும் அவர்கள் இணங்கினர். பின் எது நியாயமோ, எது நியாயமென்று பகவானுக்குத் தோன்றிற்றோ, அதைப் பகவான் செய்தார்; அதைத் தடுத்துரைக்கவும் வலியற்றவர்களாக அசுரர்கள் அறிவிழந்த நிலையில் இருந்தனர். ஆக, பிழை அசுரர்களது ஆகுமே யன்றி, பகவானைச் சாரவழியில்லை. பாம்புக்குப் பால்வார்ப்பது அறிவின்மையன்றோ? அநீதியுமன்றோ?

காமிகட்குக் காமத்தின் கேட்டை அறிவிக்க வழி, அக்காமத்திற்கு வசப்படுவதால் அவர்கட்குப் பெரு நஷ்டம் விளையும் என்பதை எடுத்துக் காட்டுவதேயாம். அதுபோல, காமம் குரோதம் லோபம் ஆகிய மூன்றுக்கும் உட்பட்டுள்ள அசுரர்க்கு, அமிர்த மதனம் என்னும் செயலின் வாயிலாக, அம்மூன்று குணங்களாலும் விளையக்கூடிய பெருங்கேடுகளை உணர்தற்கும் பற்பல சந்தர்ப்பங்கள் விளைந்தன; அந்தந்த சமயங்களிலும் எச்சரிக்கைகள் முன்னமேயே செய்யப்பட்டன. ஆயினும் அவைகளைப் பொருட்படுத்தாமையின், தமது தீக்குணங்களினால் அசுரர்கள் வருந்தவேண்டியிருந்தது. பகவான் மோஹினியவதாரம் எடுத்தது, அசுரர்கட்கு அவர்களது காமத்தின் மிகுதியைப் புலப்படுத்தி அறிவுறுத்தற்காகவேயாம். தேவர்கள் பகவானுடைய ஆணைக்கு இணங்கி, பயத்தையும் காமத்தையும் மமதையையும் லோபத்தையும் அதே சந்தர்ப்பங்களில் நீக்கிவிட்டனர். ஆதலின் பகவானிடம் பக்ஷபாதமோ வஞ்சனையோ இல்லையென்பது புலப்படுகின்றது.

மேலும், "தேசம் காலம் ஹேது அர்த்தம் கருமம் அறிவு இவைகளில் சமானமானவர்களாயினும், தேவர்களும் அசுரர்களும் பலனில் வேறுபாடடைந்தனர்." (8-9-28) இதன் காரணம் யாது? முற்கூறியவை மட்டும் முடிவில் நல்ல பயனை எய்தப் போதிய காரண மாகா. (அமிர்த கலசத்தைப் பலாத்காரமாகப் பிடுங்கிச்

சென்றது, பேராசையையும் மமதையையும் காட்டுமன்றோ?) காமம் குரோதம் லோபம் இவைகளினின்றும் நீங்கி இருத்தலும் வேண்டும்; நீங்கா திருப்பின் எடுத்த கருமம் மிக்க வருத்தத்தையும் முயற்சியையும் தருவதன்றி நற்பயனைத் தாராதுபோம். அன்றியும், அமிர்தம் பகவானது முயற்சியினாலும் கருணையினாலும் பெற்ற பேறு என்பதை அசுரர்கள் மறந்தனர். தேவர்கள் நினைந்து கொண்டிருந்தனர். எவ்வளவு பெருமுயற்சியை ஒருவர் செய்தபோதிலும், இறைவனது அருள் இன்றேல் பயன் கைகூடாது. இது ஒரு பேருண்மை. ஆணவ முனைப்பால் செய்யும் முயற்சி இறைவனது கருணைக்குப் புறம்பாகி விடுகின்றது; "எல்லாம் அவன் செயல்" என்று 'தான்' ஒழிந்து, பெருமுயற்சி செய்த பின்னும் "உன் அருள் உண்டாயின், பலன் வரட்டும்; இல்லையேல் வாரா தொழியட்டும்" என்று சரண்புகுபவர்க்கே அருள் எளிதில் இறங்கும்; காரிய சித்தியும் உண்டாகும். இது உலக முயற்சிக்கும் ஞான முயற்சிக்கும் இரண்டிற்கும் பொதுவான கொள்கையே யாம்.

இறுதியாக, அமிர்தமதனத்தையும், தேவர்கள் அமிர்தம் பெற்றதையும் கூறி முடிக்கும்போது, சுகப்பிரம்ம ரிஷி பின்வரும் உண்மையைப் போதிக்கிறார்:— "(காரியம் ஒன்றேயாயினும், முயற்சியும் சமமாயினும், செய்வோரது நோக்கத்தையும் மன நிலையையும் பொறுத்துப் பயன் வேறுபடுகின்றது.) கடவுளைக் குறித்துச் செய்வது பலனைத் தருகின்றது; பொருள், காமம், மனம், பிராணன், தேகம், புத்திரன் முதலியவற்றை உத்தேசித்து மனிதன் செய்யும் காரியம் வீணேயாகின்றது, பயனற்றதாகின்றது. எதுபோல் என்னில், கிளைகளில் விடும் நீர் மரத்திற்குப் பயன்படாது போகிறது; வேரில் ஊற்றப்படும் நீர் மரத்திற்கு நல்ல பயனை உண்டாக்குகிறது; இதைப் போல்." மனித வாழ்க்கைக்கு வேரா யமைபவர் பகவானே யன்றோ?

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

மகாபாரதக் கதையில் முக்கிய கதாபாத்திரர்களாக விளங்குகின்றவர் ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ஜுனனுமே யாவர். இவ்விருவரும் நெருங்கிய தோழர். அவர்களை நரநாராயண அவதாரங்கள் எனவும் குறிப்பிடுவதுண்டு. கிருஷ்ணனுடைய சமயோசிதமான உதவியைப் பெற்றதனாலேயே அர்ஜுனன் செயற்கரிய செய்கைகள் பலவற்றைச் செய்தான். கிருஷ்ணனும் தன்னுடைய திவ்வியலீலை வெற்றிகரமாக நடைபெறுவதற்கு அர்ஜுனனையே கருவியாகக் கொண்டார். கடவுளை அடைவதற்கு ஏற்பட்டுள்ள பல வழிகளுள் அவரிடம் நட்புக்கொண்டு பக்தி செலுத்துவதும் ஒரு முறையாகும். அம்முறைக்குச் சிறந்த உதாரணமாக உள்ளவர் அர்ஜுனன்தான். பாரதப் போரில் அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனைகப் பணிசெய்யும் பொறுப்பையன்றோ கிருஷ்ணன் ஏற்றார்! அர்ஜுனனுக்கு இவ்வாறு பணிசெய்த பார்த்தசாரதி நம்மெல்லோருக்கும் சாரதிதான். வாழ்வெனும் தேரை நாம் அவரிடம் ஒப்படைத்துவிட்டால் நாம் நமது இலக்ஷியத்தைச் சீக்கிரத்தில் அடைந்துவிடுவோம். பகவத்கீதையில் ஈசனுடைய பிரபாவம் எங்

கெங்கு அதிகமாகக் காணப்படுகிறது என்பதை விளக்கும்பொழுது கிருஷ்ணபகவான் "விருஷ்ணிகளுக்குள் நான் வாசுதேவன்; பாண்டவர்களுள் நான் தனஞ்சயன்" என்று குறிப்பிடுகிறார். தர்மமே உருவெடுத்த யுதிஷ்டிரரை இங்கு குறிப்பிடாமல் அர்ஜுனன் பெயரைக் கூறியது கவனிக்தற்பாலது. மேலும் பகவத் கீதையின் கடைசி சுலோகத்தில், திருதராஷ்டிரனுக்கு பாரதப்போரைக் கூறி வரும் சஞ்சயன் தனது நம்பிக்கையை இவ்வாறு விளக்குகிறார்: "யோகேசுவரனை கிருஷ்ணனும் வில்லாளியான பார்த்னும் எங்கு உள்ளனரோ அங்கு எல்லா நலன்களும் உண்டாகும்."

அநேக நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்தது பாரதக்கதை. அக்கதையின் நிகழ்ச்சிகள் பலவற்றுள் கிருஷ்ணார்ஜுன லீலையே சுவைமிகுந்தது, பொருள்நிறைந்தது, படிப்பினை மிகக்கொண்டது, ஞான வாழ்விற்கு ஊக்கம் தருவது. சமீபகாலத்தில் இதேமாதிரியான லீலை ஒன்று நடந்தது. ஆராய்ந்து பார்ப்பவருக்கு அதன் மகிமை விளங்கும். அன்றொரு பாரதமாக்கவந்த கிருஷ்ணனும் அர்ஜுனனுமே இன்று பாரதத்தை மீண்டும் ஆக்குவதற்குத் தோன்றினார்கள்போலும். இந்த நவீன லீலையில் அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணர், விவேகானந்தர் எனப்பெயர் பூண்டனர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு யோகேசுவரர் என்பது பலருமறிந்த விஷயம். அவர் வேதாந்த உண்மையைக் கண்டறிந்தவர் மட்டுமல்ல; அந்த உண்மைக்கு இட்டுச் செல்லும் வழிகள் யாவற்றின் மூலமும் யாத்திரை செய்தவர். பிரம்ம சாக்ஷாத்காரம் எனும் கங்கையில் நீராடியவர் மட்டுமல்ல; அந்நதியின் உற்பத்தி ஸ்தானம் முதல் முகத்துவாரம் வரையிலுள்ள எல்லாத் துறைகளிலும் மூழ்கி நதியின் ஆழங்கள் யாவற்றையும் கண்டவர். சர்க்கரையைச் சுவைத்தவர் மட்டுமல்ல; அச் சர்க்கரையைக் கொண்டு பலவேறு சுவை கொண்ட பணியாரங்களைச் செய்து அவற்றின் பல திறப்பட்ட ருசிகளை உணர்ந்தவர். யோகி மட்டும் அல்ல; யோகேசுவரர். ஞானிமட்டும் அல்ல; விஞ்ஞானி. பிறவிக்கடலைத் தாண்டியவர் மட்டும் அல்ல; பிறரையும் தாண்டுவிக்கவல்ல பெருந்தோணி. ஜீவன் முக்தர் மட்டுமல்ல; அவதார புருஷர். துறவிமட்டும் அல்ல பரமஹம்ஸர். மதாசாரியர் மட்டுமல்ல; எல்லா மதங்களும் ஒன்று கூடுகின்ற சங்கம க்ஷேத்திரம்.

நமது நாட்டின் பெருங் கவியான இரவீந்திரநாததாகூர் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரது நூற்றாண்டு விழாக் கொண்டாடப்பட்ட காலத்தில் பரமஹம்ஸ தேவருக்குக் கவியாலான புகழ்மாலையொன்று சூட்டினார். அக்கவியின்பொருள் பின்வருமாறு உள்ளது: "ஆத்மீயப் பக்குவம் எனும் ஊற்றுகள் பலவற்றினின்றும், வெவ்வேறு வகையாக பகவத் ஆராதனை எனும் நீர்ப்போக்குகள் உமது தியானத்தில் ஒன்றாகக் கலக்கின்றன. அகண்டப் பொருளின் ஆனந்தமானது பலவாகப் பிரத்தியட்சமாகிறது; அப் பிரத்தியட்ச ஆனந்தம் உமது வாழ்வில் சமரஸம் எனும் ஆலயத்தை உருவாக்கியிருக்கிறது. அவ்வாலயத்திற்குக் கிட்டவிருந்தும் தூரவிருந்தும் (பக்தர்களுடைய) வந்தனங்கள் வந்து சேருகின்றன. அவ்வந்தனங்களுடன் என் வந்தனத்தையும் சேர்ப்பிக்கிறேன்."

பரமஹம்ஸ தேவருக்கு அர்ஜுனன் போன்றிருந்தார் சுவாமி விவேகானந்தர். விவேகானந்தர் அர்ஜுனனைப்போன்ற வீர இளைஞர். ஆண்மை நிறைந்தவர். போர் செய்யும் குணமுடையவர்; பலவீனம், மூட நம்பிக்கை, இருள்—இவற்றுடன்

போரிடுபவர். தர்ம ராஜ்யத்தை நிலை நிறுத்துவதற்கு அரும்பாடுபட்டவர். ஆனால் கிருஷ்ணருடைய ஒளியின் உதவியின்றி அர்ஜுனன் தனது கடமையில் தவறியிருப்பான் என்பது திண்ணமேயல்லவா? அம்மாதிரியே விவேகாநந்தருக்கு ஒளிவிளக்கானவர் பரமஹம்ஸ தேவர். பாரதப்போர் தொடங்கவிருந்த பொழுது அர்ஜுனனுக்கு மனக்குழப்பம் ஏற்பட்டு அவன் தனது கடமையினின்றும் நழுவ விருந்தபொழுது கிருஷ்ணன் அவனுக்கு உபதேசம் செய்து அவனைக் காத்தருளினர். அம்மாதிரியேவிவேகாநந்தரது இளமையில் அவருக்கு மனக் குழப்பம் ஏற்பட்டது. அவர் நிறம்பப் படித்தவர். ஆனால் கடவுளுண்மையைப்பற்றிய நிச்சயமான முடிவை அறிய முடியாமல் தவித்தார். பலரிடம் அவர் சென்றார். அவருக்கு மனவமைதி ஏற்படவில்லை. ஆனால் குருதேவரிடம்வந்ததும் அவர், தாம்கடவுளைப் பிரத்தியட்சமாய்க் காண்பதாயும் பிறருக்கும் கடவுளைக் காட்டக்கூடுமென்றும் கூறினர். கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்கு விசுவரூப தரிசனத்தை அருளிய பொழுது "அர்ஜுனா, உனக்குத் திவ்வியமான பார்வையைத்தருகிறேன். என் யோக மகிமையைப்பார்" என்று கூறினர். இந்தத் திவ்வியப் பார்வையை விவேகாநந்தருக்கு அருளினர் பரமஹம்ஸர். விவேகாநந்தரது உள்ளம் ஆத்மீயப் பெருக்கால் நிறைந்தது.

ஞான மெனும் வில் தாங்கி, உலகமெங்கும் திக்விஜயம் செய்தார் வேதாந்த கேசரியான விவேகாநந்தர். பாரதப்போர் தொடங்குவதற்கு முன் சேனைத் தலைவர் யாவரும், கண்ணனும், அர்ஜுனனும் சங்கநாதம் செய்ததாகப் பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளது. தனஞ்சயன் தேவதத்தம் எனும் சங்கை ஊதியதாகக் கீதை சொல்லுகிறது. பரமஹம்ஸரிடமிருந்து சாக்ஷாத்காரம் அல்லது பரிபூரண அறிவு எனும் தனத்தைப் பெற்ற விவேகாநந்தர் பரமஹம்ஸ தேவரால் அளிக்கப்பட்டதொரு சங்கத்தைச் சிகாகோ சர்வமத மகாசபையில் ஊதினர். அதன் ஒலி உலகெங்கும் பரவிற்று. அவ்வொலி கூறியதென்ன?

"சகோதர சகோதரிகளே! உதவிசெய்ய வாருங்கள். சச்சர விடவேண்டாம். பிறரது கொள்கைகளை ஏற்றுத் தமதாக்குங்கள். அழித்தல் வேண்டாம். சமரஸமும் அமைதியும் நிலவட்டும். வேற்றுமை உணர்ச்சி ஒழியட்டும். ஹிந்துக்களுக்குப் பிரம்மனாகவும், ஜாரதுஷ்டிரர்களுக்கு அஹுர்மஸ்தாவாகவும், பௌத்தர்களுக்குப் புத்தராகவும், யூதருக்கு ஜெஹோவாவாகவும், கிறிஸ்தவருக்கு மோக்ஷ உலகில் உள்ள பிதாவாகவும் விளங்குகின்ற பகவான் நமக்குப் பல மளிக்கட்டும்!... ...ஒவ்வொரு ஜீவனும் மறைந்துள்ள தெய்வத்தன்மையை உடையவன். இந்த தெய்வத்தன்மையை வெளிப்படுத்துதலே இலக்ஷிய மாகும்......நதிகள் யாவும் கடலைச் சேருவதைப் போலவே சமயங்கள் யாவும் பரம் பொருளை நாடுகின்றன.

சிகாகோவில் கர்ஜித்த குரல் விவேகாநந்தருடையதுதான். அக்குரலின் கருத்து தக்ஷிணேசுவரத்தில் வாழ்ந்திருந்த பரமஹம்ஸ தேவருடைய தாகும்.

யோகேசுவரனும் வில்லாளியும் இருக்குமிடத்தில் வெற்றி நிச்சயம் என்ற கீதையின்உண்மை இன்று கண்கூடாகக்காணப்படுகிறது. பத்தொன்பதாவது நூற்றாண்டில் இந்தியாவின் குக்கிராம மொன்றில் ஜனித்து, ஏழைக் குடும்பத்தில் வளர்ந்து, எழுத்தறிவுமின்றி, மிக எளியவராய் வாழ்ந்து, இராஜீயத்துறையில் கலக்காமல், பிரசங்கங்கள் புரியாமல், நூல் ஒன்றும் வரையாமல், குழந்தை போன்று தமது வாழ்வை நடத்தி, ஐம்பதாண்டுகளே

வாழ்ந்து பின் உலகினின்றும் மறைந்த ஒருவரது புகழ் இன்று உலகின் பலவிடங்களில் பரவுவானேன்! ஸ்ரீ ராமகிருஷ்ணர் மறைந்தபொழுது சில சிறுவர்களே அவருக்குச் சீடராகவிருந்தனர். அவர்களுக்குப் பொருளும் இல்லை, ஆதரவும் இல்லை. உடலைக் காப்பாற்றிக் கொள்ளப் போதிய உணவும்கூடக் கிடைப்பது அரிதாயிற்று. அவர்களுடைய தலைவரான விவேகாநந்தர் முன்னேற்பாடுகள் யாதுமின்றி அமெரிக்கா சென்றார். இச்சிறு கூட்டம் இன்று பெரியதொரு ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கமாக வளர்ந்திருப்பதேன்! தெய்வத்தின் வலிமையைத் தடுக்க யாரால் முடியும்?

விவேகாநந்தருடைய வாக்கினாலேயே இவ் விஷயத்தை விளக்குவோம். "கண்ணிருந்தால் நீங்கள் காண்பீர்கள். உங்கள் இருதயம் திறந்திருந்தால் ஏற்பீர்கள். உண்மையை நாடுவோர்களாயின் அறிவீர்கள். காலத்தின் அடையாளங்களைக் காணாதவன் குருடனே யாவான். ஆம், உங்களிற் பலர் காதாலும் கேட்டிராத ஒரு குக்கிராமத்தில் ஏழைப்பிராம்மண குலத்தில் ஜனித்த இச் சிறுவர், பல நூற்றாண்டுகளாக நமது வந்தனை முறையைப்பற்றிக் குறைகூறி வந்துள்ள நாடுகளில், உண்மையாகவே பூஜிக்கப்படுகிறார். இது யாருடைய சக்தி? என்னுடையதா, உங்களுடையதா? ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் என்று வெளிப் போந்துள்ள சக்தியே யாகும் அது."

தூய அன்னையான சாரதா தேவியார் ஒரு நாள் திவ்வியக் காட்சி யொன்றைக் கண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் கங்கையாற்றுள் இறங்கியதையும் அவ்வாற்றின் புண்ணிய தீர்த்தத்தில் அவரது உடல் கலந்து போனதையும் அவர் கண்டார். சுவாமி விவேகானந்தர் அப்புனித நீரை எடுத்து, 'ஜய ராமகிருஷ்ண' என்று கூறியவராய்க் கணக்கற்ற மக்கள் மீது தெளித்தார். இக்காட்சி மனத்தில் நன்றாகப் பதிந்து விட்டதால், தூய அன்னையார் கொஞ்சகாலம் வரையில் கங்கையில் இறங்குவதற்குத் தயங்கினர். குருதேவரின் உடல் கலந்திருந்த அந்நீரினுள் இறங்குவதற்கு அவருக்கு மனம் வரவில்லை. சுவாமி விவேகானந்தர் தமது மதப் பிரசார வேலையை ஆரம்பித்த காலத்திற்கு ஏறக்குறைய நேரான சமயத்திலேயே இக்காட்சி தோன்றியதென்பதும் குறிப்பிடத்தக்கது.

நாஸ்திகம், சமயச் சண்டை, மதவெறி, இத்தகைய அரக்கர்களை வெல்லுவதற்குத் தோன்றினர் பரமஹம்ஸதேவர்.

"அர்ஜுனா! எதிரிகள் அனைவரும் என்னால் முன்பே கொல்லப்பட்டுப் போயினர். நீ காரணமாக மட்டும் இரு" என்ற கிருஷ்ணனின் சொல்லை நினைப்பூட்டிக் கொள்வோம். தாம் செய்த அருஞ் செய்கைகள் யாவும் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய பிரபாவத்தாலேயே என்று விவேகானந்தர் கூறியுள்ளார்.

---

# பிரணவோபாசனை

(ஸ்ரீமான் கே. வி. டி. சாஸ்திரி)

பிரணவம் ஓங்காரம்; ஓங்காரமேபிரம்மஸ்வரூபம். "பிரணவரூப பிரம்மம் நான்" என்று ஒரு கணம்கூட இடைவிடாது தியானித்தல் பிரணவோபாசனை என்று கூறப்படும். இவ்வுபாசனை இருவகைப்படும். ஒன்று பரப்பிரம்மமாக பிரணவத்தைத் தியானித்தல், மற்றொன்று அபர பிரம்மமாகப் பிரணவத்தை தியானித்தல். நிர்க்குண பிரம்மம் பரபிரம்மமென்றும், சகுண பிரம்மம் அபரபிரம்மமென்றும் கூறப்படும். பரபிரம்மரூபமாக பிரணவத்தை தியானிப்பவன் மோக்ஷமடைகிறான். ब्रह्मसंस्थोऽमृतत्वमेति (छा, उ, २-२३-१) என்ற உபநிடதம் அங்ஙனமே முறையிடுகிறதைக் காண்க. அபர பிரம்மமாக பிரணவத்தைத் தியானிப்பவன் பிரம்மலோகத்தையடைந்து, அங்கு வேதாந்த விசாரம் செய்து அபரோக்ஷ அறிவு பெற்று கிரமமுக்தி யடைகிறான் என்பது சாத்திரங்களின் உள்ளம். மோக்ஷத்தில் இச்சையுடையவன் அபர பிரம்மமாகபிரணவத்தை தியானித்தல் கூடாது. அத்தகைய தியானத்தால் உண்டாகும் பலானுபவம் இவனுக்குப் பிரதிபந்தமாகவே முடியும். ஆதலால் நிர்க்குண பிரம்மம் பிரணவம். அத்தகைய பிரணவரூப பிரம்மம் நான் என்று தியானித்தலே செய்யத்தக்கது.

உலகத்திற் றோன்றும் ஏனைய வஸ்துக்களும் ஓங்கார ஸ்வரூபமே. ஏனைய வஸ்துக்களிலும், நாமம், ரூபம் என விரண்டு அம்சங்களுண்டு. குடத்தில் குடம் என்ற நாமமும், குடத்தின் உருவமும் புலப்படுகின்றன. அவ்விரண்டில் ரூபம் நாமத்தைவிட்டு வேறாக இருப்பதில்லை. நாமமே ரூபமாயிருக்கிறது. உலகத்தில் ஏதேனுமொரு பொருளை கிரகிக்க வேண்டுமானாலும், தள்ளவேண்டுமானாலும், அப்பொருளின் அறிவு நமக்கு மிகவும் இன்றியமையாதது. அப்பொருளை அப்பொருளின் நாமத்தைக்கொண்டே அறியவேண்டுமே யொழிய வேறுவிதமாக முடியாது. பிறகு அப்பொருளின் நாமத்தை உச்சரித்து குடம் வேண்டும், படம் வேண்டாமென்று கிரகிக்கவும் தள்ளவும் செய்கின்றோம். நாமம் அறியப்படாவிட்டால் கேவல ரூபத்தைக்கொண்டு கிரஹணமும், தியாகமும் ஏற்படுவதில்லை. ஆதலால் நமது வியவஹாரத்திற்கு நாமமே முக்கியமானதென்று சித்திக்கின்றது. நாம ரூபங்களில், நாமம் அழிகிறது, ரூபம் அழிகின்றதில்லை. குடம் அழிகின்றது; குடம் என்ற பெயர் அழிகின்றதில்லை. குடம் அழிந்தாலும், மண் அழிகின்றதில்லை. அங்ஙனமே ரூபமழிந்தாலும் நாமமழிகின்றதில்லை. குடமழிந்து மண் மிஞ்சுவதுபோல ரூபமழிந்து நாமம் மிஞ்சுகிறது. மிஞ்சுகிற நாமத்தைவிட ரூபம் வேறாகவில்லை, நாம வடிவமாகவே இருக்கின்றது. மேலும் குடம், சட்டி, பானை, முதலிய மண்ணாலாயவற்றிலெல்லாம் மண் அனுகதமாகவே இருக்கின்றது. அனுகதமாக விருப்பது ஊமைப் பொருள். கடம், சட்டி, பானை முதலிய ரூபங்கள் ஒன்றை பொன்று உபசரிக்கின்றன. குடத்தில் சட்டியின் ரூபமில்லை. சட்டியில் குடத்தின் ரூபமும் இல்லை. இவ்விரண்டின்

ரூபம் பானையிலும், பானையின் ரூபம் இவ்விரண்டிலுமில்லை. ஆதலால் இம் மூன்றும் ஒன்றையொன்று விவசரிப்பவைகளாம். எவை விபசரிக்கின்றவைகளோ அவை அநித்தமாம். இங்ஙனமே ஒன்றையொன்று விபசரிக்கின்ற ரூபங்களில் குடம் என்ற பெயர் அனுகதமாக விருக்கின்றது. ஆதலால் விபசரிக்கக் கூடிய ரூபங்கள் விபசரியாத அனுகதமாய நாமத்தைத் தவிர வேறல்ல. இவ்வண்ணமே, ஏனைய வஸ்துக்களின் ரூபங்களும் விபசரிக்கின்றன. நாமமோ, விபசரிப்பதில்லை. ஆதலால் நாமத்தைத் தவிர ரூபம் வேறில்லை. ரூபம் நாம வடிவமாகவே இருக்கின்றது. நாமங்கள் ஓங்கார வடிவமே. ஓங்காரத்தின் நின்றும் ஏனைய நாமங்களும் உண்டாகின்றன. अकारोवैसर्वावाक् என்ற உபநிஷத வாக்கு ஓங்காரத்தின் ஓர் அம்சமாக அகரமே நாமமெல்லாம் என்று கூறுகின்றது. ஆதலால் ஏனைய நாமங்களும் ஓங்கார வடிவமே. எல்லாம் ஓங்காரமாகவிருப்பது போல எல்லாம் பிரம்மமாகவிருக்கின்றது. ஆதலால் ஓங்காரம் பிரம்மம்.

மேலும், ஓங்காரத்தின் பொருள் பிரம்மம். ஓங்காரம் பிரம்மத்திற்கு வாசகம். ஓங்காரத்திற்குப் பிரம்மம் வாச்சியம். வாச்சிய வாசகங்களுக்கு வேற்றுமையில்லை, அபேதமே. ஆதலாலும் ஓங்காரம் பிரம்மமே.

மேலும், ஓங்காராக்ஷரம் பிரம்மத்தில் அத்யஸ்தமா யிருக்கின்றது. பிரம்மம் ஓங்காராக்ஷரத்திற்கு அதிஷ்டானமாக விருக்கிறது. எப்பொருள் எப்பொருளில் அத்யஸ்தமாக விருக்கின்றதோ அப்பொருள் அப்பொருளைவிட வேறுயதல்ல. அதாவது அத்யஸ்தம் அதிஷ்டானத்தைத் தவிர வேறுயதல்ல. கயிற்றிற் பாம்பு அத்யஸ்தமா யிருக்கிறது. பாம்பு கயிற்றைவிட வேறுயதல்ல. கயிறு பாம்புக்கு அதிஷ்டானம். அதிஷ்டானத்தைவிட வேறுயதல்ல, அத்யஸ்தமாய பொருள். ஆதலால் ஓங்காரத்தை பிரம்மமாக தியானம் செய்தல் தகும்.

அத்தகைய நிர்க்குண பிரம்ம ரூப ஓங்காரம் ஆத்மாவுக்கு (தனக்கு) வேறன்று என்று தியானம் செய்ய வேண்டும். ஏனெனில் ஆத்மாவுக்கும் பிரம்மத்திற்கும் வேற்றுமையில்லை. பிரம்மத்திற்கு நான்கு பாதங்கள் உண்டு. ஆத்மாவுக்கும் நான்கு பாதங்கள் உண்டு. பாதம் = பாகம் = அம்சம். விராட புருஷன், ஹிரண்யகர்பன், ஈஸ்வரன், ஈஸ்வர சாக்ஷி இந்நான்கும் பிரம்மத்தின் பாதங்கள். விசுவன், தைஜஸன், பிராஞ்ஞன், வீரியன் இந்நான்கும் ஆத்மாவின் பாகங்கள். सर्वंह्येतत् ब्रह्मायमात्मा. ब्रह्म सोयमात्मा चतुष्पात् என்ற மாண்டுக்ய உபநிஷதத்தில் காண்க. ஜாக்கிரத அபிமானியான ஜீவனுக்கு விசுவன் என்று பெயர். ஸ்வப்னுபிமானியான ஜீவனுக்கு தைஜஸன் என்று பெயர். சுஷுப்தி அபிமானி ஜீவனுக்கு பிராஞ்ஞன் என்று பெயர். விராட புருஷரூப விசுவனுக்கு ஏழு அங்கங்கள் உண்டு. 19 முகங்களுண்டு. 7 அங்கங்களாவன: சுதேஜோலோகம் மூர்த்தா, சூரியன் சக்ஷுஸ், வாயு பிராணன், ஆகாயம் மார்பு, சமுத்திரம் பஸ்தி (மூத்திரப்பை), பிருதிவி பாதம், ஆஹவநீயாக்னி முகம். 19 முகங்களாவன: பிராணன் 5, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, அந்தக்கரணம் 4. இவை 19 முகங்கள் போல போக சாதனங்களாக விருப்பதால் முகங்கள் என்று எண்ணத்தக்கவை. जागरितस्थानो बहिष्प्रज्ञः सप्तांगः एकोनविंशतिमुखः स्थूलभुक् वैश्वानरः प्रथमः पादः என்ற உபநிஷதம் சான்றாகக் காட்டுவோம்.

स्वप्नस्थानः अन्तः प्रज्ञः सप्तांगः एकोनविंशतिमुखः
प्रविविक्तभुक्तैजसः द्रितीयः पादः
सुषुप्तस्थान एकीभूतः प्रज्ञानघन एवानन्दमयो ह्यानन्दभुक्चेतोमुखः प्राज्ञः तृतीयः पादः

பிரம்மத்தின் முதற்பாதம் விராட் புருஷன். ஜீவாத்மாவின் முதற் பாதம் விசுவன். ஓங்காரத்தின் முதன் மாத்திரை அகரம். பாதங்களை மாத்திரையாகவும் மாத்திரைகளை பாதங்களாகவும் தியானித்தல் வேண்டும். पादामात्रा मात्रश्च पादाः என்ற உபநிடத வாக்கு ஈண்டு கவனிக்கத்தக்கது. விராட் புருஷனுக்கும், விசுவனுக்கும் வேற்றுமை இல்லாததுபோல ஓங்காரத்தின் முதல் மாத்திரையாகிய அகரத்திற்கும் விராட் விசுவர்களுக்கும் வேற்றுமை இல்லை. ஆதலால் விராட் விசுவன் அகரம் இம் மூன்றையும் அபேதமாக தியானித்தல் வேண்டும். இதுவே விராட் விசுவ அகாராபேத த்யானம் என்று கூறப்படும்.

பிரம்மத்தின் இரண்டாவது பாதம் ஹிரண்ய கர்பன். ஜீவாத்மாவின் இரண்டாவது பாதம் தைஜஸன். ஓங்காரத்தின் இரண்டாவது பாதம் உகரம். முன் போல இம்மூன்றையும் அபேதமாக தியானித்தல் வேண்டும். இதற்கு ஹிரண்யகர்பதைஜஸ உகாராபேதத்தியானம் என்றுபெயர். ஹிரண்ய கர்பனுடைய உபாதி சூக்ஷ்மம். தைஜஸனுடைய உபாதியும் சூக்ஷ்மம். ஆதலால் இரண்டும் ஒன்று என்றறிந்த பிறகு உகாரத்தையும் அபேதமாக தியானம் செய்யவேண்டும்.

பிரம்மத்தின் மூன்றாவது பாதம் ஈசுவரன். ஜீவனுடைய மூன்றாவது பாதம் பிராஞ்ஞன். ஈசுவரனுடைய உபாதிகாரணம் பிராஞ்ஞனுடைய உபாதி காரணம். ஆதலால் இரண்டும் ஒன்றும் ஈசுவரனும், பிராஞ்ஞனும் மூன்றாவது பாதங்கள் மகாரம் ஓங்காரத்தின் மூன்றாவது பாதம் இம் மூன்றையும் அபேதமாக தியானித்தல் வேண்டும். விசுவன், தைஜஸன், பிராஞ்ஞன் இம்மூன்றுக்கும் உண்மையில் வேற்றுமையில்லை. ஆனால் உபாதி நிமித்தமாக பேதமுடையவை போலக் காணப்படுகின்றன. விசுவனுக்கு ஸ்தூல, சூக்ஷ்ம அஞ்ஞானம் என்ற மூன்று உபாதிகள் உண்டு. தைஜஸனுக்கு சூக்ஷ்ம அஞ்ஞானம் என்ற இரண்டு உபாதிகளே உண்டு. பிராஞ்ஞனுக்கு அஞ்ஞானமென்ற ஓர் உபாதியே உண்டு.

இம்மூன்று உபாதிகளிலும் அனுகதமாயசேதனம் உண்மையில் மூன்று உபாதிகளின் சம்பந்தமன்றியிலிருக்கிறது. இவ்வுபாதிகளின் அதிஷ்டானம் துரீயம். இது அந்தப் பிரஞ்ஞனன்று. பகிர்ப்பிரஞ்ஞனன்று. கர்மேந்திரியத்திற்கும், ஞானேந்திரியத்திற்கும், புத்திக்கும், சப்தத்திற்கும் விஷயமன்று. இதுவே பரமாத்மாவின் நான்காம் பாதம். ஈசுவர சாக்ஷி யென்று கூறப்படும் சுத்தப் பிரம்மமிதுவே.

இங்ஙனம் ஆத்மாவுக்கு பரமார்தம், அபரமார்தம் எனவிரண்டு ரூபங்கள் மூன்று பாதங்களாக முன் கூறப்பட்டுள்ளவை அபரமார்த்த ரூபம். நான்காவது பாதமே பரமார்த்த ரூபம். இவ்வண்ணமே ஓங்காரத்திற்கு மிரண்டு ரூபங்களுள் அகார உகார மகாரங்கள் அபரமார்த்த ரூபம். இம்மூன்றிலும் அனுகதலியிருக்கும் ஸச்சிதானந்த ரூபசேதனமே பரமார்த்த ரூபம். பரமார்த்த ரூபம் அமாத்திரையென்று கூறப்படும் இவ்வுருவத்தில் மாத்திரைகளின் சம்பந்தமில்லை.

இங்ஙனம் பாரமார்த்திகா பாரமார்த்திக ரூபங்களுடைய ஓங்காரமும், ஆன்மாவும் ஒன்று என்று அறிய வேண்டும்.

இங்ஙனம் ஓங்கார உபாசனையில் அதிகாரமுடையவன் யார்? முன் கூறியபடி ஓங்கார சிந்தனை செய்பவன் முனி. இவ்விதம் சிந்திக்கப்பட்ட ஓங்காரம் பரமஹம்ஸனுடைய கோப்பியப் பொருள். பகிர்முகனாகிய கிரஹஸ்தனுக்கு இதில் அதிகாரம் இல்லை. அந்தர்முகனாகிய பரமஹம்ஸனுக்கே இதில் அதிகாரம்.

முன் சொன்னபடி ஓங்கார சிந்தனை செய்பவன் ஞானதுவாரா முத்தி பெறுகிறான். ஆனால் எவனுக்கு இவ்வுலகத்திலோ, பிரம்ம லோகத்திலோ ஆசை இருக்கிறதோ அவன் முத்தி பெறுவதில்லை. அவனுக்கு அந்த ஆசை முத்திக்குப் பெரும் தடையாக விருக்கின்றது. நிர்ப்பந்தமாக ஆசையைத் தடுத்து, புத்திர மித்திர களத்திராதிகளைத் தியாகம் செய்து, குருவின் உபதேசம் பெற்று தியானம் செய்பவன், இவ்வுடல் அழிந்த பிறகு வேறு உடல்பெற்று, செல்வம் நிறைந்தவர்களின் குலத்தில் உதித்து முன் பிறப்பின் ஆசைகளையெல்லாம் நிறைவேற்றி முன் பிறப்பின் தியான வாசனையால் தியானமோ விசாரமோ செய்து ஞானம் பெற்று முத்தி பெறுகிறான்.

---

# உண்மை யோகியின் இலக்ஷியங்கள்

(ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள்)

க

சமய வாழ்க்கை யென்பது சிறு சிறு மாத்திரைகளால் நோய் நீங்கும் ஹோமியோபதி முறையன்று; கசப்பும், காரமுமான மருந்துகளும், ஊசி மூலம் உள் செலுத்தும் முறையான ஆங்கில மருந்துக் கொப்பானதாகும். காரமும், கசப்பும் உண்ண உள்ளம் உடன்படாது; ஊசி குத்துங்கால் நோகத்தான் செய்யும். என் செய்வது? அம்முறை மூலம்தான் நோய் நீங்கும், வேறு வழியில்லை யென்றால் ஏற்றுத்தானே ஆகவேண்டும். அதே போலத்தான் சமயவாழ்க்கை. ஆரம்பத்தில் சிறிது சிரமமாகத் தோன்றும். தண்ணீர்கலந்து சாரத்தைக் குறைக்கும் அளவுக்கு மருந்தின் நோய் நீக்கும் சக்தியும் குறையும். கிருஸ்து மதமும் இங்ஙனமே ஆகிவிட்டது. ஏசுநாதர் போதித்த —வாழ்ந்த உயரியதியாகம், பிரம்மசர்யம் இவைகளைவிட்டு வாழ்க்கையில் இலேசாக—சிரமமின்றி அநுஷ்டிக்கும் சில கொள்கைகளையே கொண்டதாக உளது. ஆகவே கிருஸ்துவுக்கும் அவரைப் பின் பற்றுபவர்கள் என்று கூறுபவர்க்கும் உள்ள அபார வேறுபாடு.

ஆசைகளும், ஐம்புலன்களும் நமது சதாகால சத்ருக்களாகும். அவைகளைப் போர்புரிந்து வெல்லவேண்டிய தவசியம்; அவைகள் நமக்கு அடங்கிய வாழ்க்கையினை நாம் வாழ்தல்வேண்டும். எல்லாவற்றினையும் விழுங்கும் தன்மையதான ஆசையினுக்கோர் அளவில்லை. இவ்வாசைக் குட்பட்டு அது இழுக்கிறபடி ஓடும் இயல்புள்ள வரையில் உண்மையில் நாம் மெய்ஞ்ஞான வழிகாட்டும் எந்த மஹான்களதுவார்த்தைகட்கும் செவிசாய்க்க இயலாதவர்களாகி விடுவோம். மறந்தும்கூட இவ்வாசையாகிய பிசாசுக்கு இடங்கொடுத்தல் தவறு.

காம எண்ணங்கள் மனத்தில் சதா எழும்படியான வாழ்க்கை யுடையவருக்

கும் சமய வாழ்க்கைக்கும் வெகுதூரம் ஆகும். அந்தகையோர் மெய்ஞ்ஞான வாழ்க்கையை அனுசரிப்பதென்பது கபடமும் போலியுமாகும். இந்த நவ நாகரிக காலத்திலே காம ஆசைகளைத் தூண்டத் தக்கப் பல சம்பவங்கள் எப்பக்கமும் நடைபெறுகின்றன. உதாரணமாக திரைப் படங்கள் (டாக்கி), நாவல்கள், நடனம், சங்கீதம், சம்பாஷணைகள், மருந்துகள், மயக்க லாகிரி வஸ்துக்கள் போன்ற பல அதனைத் தூபம் போட்டு வளர்ப்பன வாக விருக்கின்றன. காம எண்ணங்கள் அறவே அகற்றப்படவேண்டும் என்ற சிந்தனை சிறிது மற்றவர்கள் ஆத்மீய வாழ்க்கையை மூட்டை கட்டி மூலையில் வைத்துவிட வேண்டும்தான்.

உண்மையிலேயே இது கலியுகம். எல்லாம் சரீர சம்பந்தமாக வுள்ளன; கொடிய மிருக வியல்பு எங்கும் தாண்டவமாடுகின்றது. புத்தர், கிருஸ்து, ஸ்ரீ ராம கிருஷ்ணர் போன்ற தெய்வீக புருஷர்களும், மக்களுலகத்துக்கு நல்வழி காட்டி வரும் புண்ணிய புருஷரான மகாத்மா காந்தியடிகளும் காம சம்பந்தப்பட்ட சகலத்தோடும் எதிர்த்துப் போராடுவதை நாம் காணவில்லையா? காமம் சகலத்துக்கும் காலனாக அமைகின்றது. எங்கு காமம் இருக்கின்றதோ அங்கு மிருக இயல்பும் இணைபிரியா துறையும்; அவையிரண்டும் ஒன்று சேர்ந்திருப்பன. தற்கால நாகரிகம் காமத்தைக் கடவுள் நிலைக்கு உயர்த்திவிட்டது என்னலாம். காம ரசம் ததும்பும் பாட்டுக்களும், கட்டுரைகளும் கொண்ட புத்தகங்கள் பல வெளி வருகின்றன. சாதாரண வாழ்க்கை, டாக்கிகள், நாடகமேடைகள் பலவும் போதுப்பட காம எண்ணங்களை கிளரக்கூடியனவாகவே அமைந்திருக்கின்றன. நம்மைச் சுற்றும் நடைபெறுவன அனைத்தும் மனிதனை காமமயமான மிகத் தாழ்ந்த மிருகத்தோடு சேர்க்கும் கருவிகளாகவே இருக்கின்றன.

ஆத்மீய வாழ்க்கைக்கு குற்றமற்ற, பரிசுத்த ஒருமை மனது வேண்டும். பிறவிப்பயனைப்பெறும் ஆசைகொண்டு அதனையடைய முயலும் மனது வேண்டும்.

ஆசைகளை ஒவ்வொன்றாக ஆராய்ந்து ஒன்றன்பின் ஒன்றாக 'அகற்றுதல் என்பது இயலாது. அது முடியவேமுடியாது. ஈவு இரக்கங் காட்டாது அனைத்தையும் ஒருங்கே படுகொலை செய்வோமாக. நாம் தெய்வத்தின்பால் திரும்பும் போது அவனை நம் உள்ளத்திலே ஒளி விளக்கை ஏற்றவிடுவோம்; அவ்விளக்கு ஏற்றப்பட்ட அளவிலே அறியாமையாகிய காரிருள் அகன்று உள்ளம் ஒளிவீசும். அதன் பிறகு அவனே நமக்காகப் போர் முகத்தில் தோன்றிப் போரை நடத்துகிறான். பகவான் தம் காரியத்தைச் செய்கின்றார்; என்றாலும் நாம் பகவானிடமிருந்து வேறுபட்ட தனித்த ஜீவன்கள் என்ற எண்ணம் இருக்கும் வரையில் நம்முடைய கடமையையும் செய்யவேண்டுவது அவசியம். நீர்க்குமிழியன்ன தோற்ற உலகத்தின்மீதுள்ள பற்றுதல்களை அறவே அகற்றி யொழிப்போமாக. எல்லா சரீர ஆசைகளையும் உலகமையல்களையும் ஒழித்துத் தள்ளுவோம். பற்றுதல்களையும் பற்றுதல்கள் சம்பந்தப்பட்ட கடமைகளையும் களைந்தெறிவோம். ஆன்ம வெளிச்சத்தினின்று நம்மைத் தடுத்து நிற்கும் இருளையும், வாழ்க்கையின் இதர துன்பங்களையும் கஷ்டங்களையும் களைந்தெறிவதற்கு இதுவே மார்க்கமாகும். இவ்வழியின்றி வேறு வழியில்லை யென்னலாம். நம்மிடம் தெய்வீக மாறுதல் ஏற்படுத்த எம்பிரானுக்கு இடங்கொடுப்போம். உயர்ந்த வாழ்க்கையைப் பின்பற்ற அவன் நமக்குப் போதிய ஆற்றல் அருளுவானாக. எவ்வளவு முக்கிய அவசியமோ

அதற்கதிகமாக ஒரு சிறிதும் உலகப் பற்றுதல்களில் தலையிடாதிருப்போமாக. நாம் கோவிலுக்கு வெளியே இருந்தாலும், கோவிலுக்கு உள்ளே மடத்துக்குள் இருந்தாலும் அதன் வெளியில் இருந்தாலும் நாம் உலகத்தில் இருப்பவரே யாவோம். உலகத்தினின்றும் ஓடிவிட நம்மால் இயலாது. ஆனால் உலகம் நமது முழுகவனத்தையும் கவர்ந்து கொள்ளவிடல் கூடாது.

நமக்கிருக்கும் மனம் சரீரம் சம்பந்தப்பட்ட ஆற்றல் சொற்ப அளவினதே. அது முழுதும் ஆத்மீயத் துறையில் ஈடுபடுத்தப்படவேண்டும். இலௌகிகத்திலும் இலௌகிகத்திற்காகவும் அதனைப் பாழ்படுத்தா திருப்போமாக. இது இலேசாகச் சாதிக்கக் கூடிய காரியமன்று. இருந்தாலும் இதனை அநுஷ்டித்துத்தான் ஆகவேண்டும். இதனைத்தவிர்த்து வேறுசுலபமான குறுக்குவழி இல்லை. விராட்சக்தியான ஈஸ்வரசக்தியோடு நாமும் ஒன்று சேர்ந்து போவோம். பிறகு அந்த விராட் சக்தி நம்மூலம் வெளித்தோன்றி வேலை செய்யும். இது நமது சுய அறிவுடன் நடக்கவேண்டும். அறிவு மறந்த காலத்திலன்று. பொதுப்பட சுயநினைவு அற்ற காலங்களிலேயே இது நிகழ்கின்றது. அங்ஙனம் கூடாது.

நாம் மஹாமாயையின் வலையில் சிக்குண்டு விட்டோம். அதனிலிருந்து நாம் விடுபட வேண்டும். மாயையாகிற கொந்தளிக்கும் பிறவிச் சாகரத்தைக் கடந்து அழியாத அமிர்தத்வமாகிற கரை சேர பகவானை நமது படகுக்காரனாக ஆக்கிக் கொள்வோம்.

'எனது சிவபிரானே! நான் ஏறும் ஓடத்தைச் செலுத்தும் நாயகனே! என்னை இப்பிறப்பாகிய சமுத்திரத்தின் அக்கரை சேர்ப்பாய்!'

உ

இந்த ஓடக்காரனிடம் நாம் முழுதும் சரணாகதி யடைந்துவிட வேண்டும்; முழு மனதுடன் நம்மை அவன்மாட்டு ஒப்படைத்துவிட வேண்டும். உண்மை சரணாகதி சீக்கிரம் சுலபமாக உண்டாகாது. உக்கிரமமான போராட்டத்துக்குப் பிறகே அது உண்டாகும்.

சந்தேகங்களுக்கு இடந்தர வேண்டாம். உள்ளத்தில் சந்தேகம் எழும்போது விவேக புத்தி கொண்டு அதனை ஒழித்து விடுவீர். சிரத்தை யென்பதற்கு நம்பிக்கை என்று மாத்திரம் பொருளன்று. சிரத்தை சாதகனுக்குத் தன்னிடத்திலும் நம்பிக்கை எழச் செய்கிறது. கடோபநிஷதத்தில் நசிகேதன் 'நான் பயனற்ற மனிதனல்ல' என்று சொல்வதை நாம் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். நீர் அற்பமானவர், உபயோகமற்றவர் என்று என்றும் எண்ணாதீர். ஆத்மீய சாதனத்துக்கு சாவே வருகிறதென்றாலும் தயங்காது ஏற்பீர்.

நம்மைச் சமய வாழ்க்கையின் மேல் நிலைக்கு உயர்த்தவும், மரண வாழ்க்கையிலிருந்து நம்மை மாற்றவும் திறனற்ற நம்பிக்கை இருந்தும் ஒன்றுதான், இல்லாதும் ஒன்றுதான். சமய வாழ்க்கையைப் பின்பற்ற அதிபலம் பொருந்தியவர்களாக ஆக்க வேண்டும் அது.

முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டைகள் போன்று சம்பவிக்கும் சந்தேகங்கட்கு ஒருவன் இடங் கொடுப்பானானால் அவன் நாசமுறுவது திண்ணம்.

'சிரத்தை யில்லாததோடு அறிவில்லாதவனும், சதா சந்தேகப்படுபவர்களும் நாசமுறுவர்' என்று கூறப்பட்டுள்ளது பகவத் கீதையிலே.

நம்பிக்கை அநுபவத்தோடு ஒன்று சேரும்போதுதான் அந் நம்பிக்கை அசைக்க முடியாததாக அமைகிறது.

ரு

ஆத்ம - ஞானம் வாழ்வினை முற்றும் மாற்றி விடுகிறது. இவ்வாத்ம ஞானம் அடையப் பெற்றவர் தமது வாழ்வினை மாற்றிக் கொள்வதோடு ஏனையோரது வாழ்வினையும் நலமிகுமாக மாற்றியமைக் கின்றனர். நாம் ஆண்டவனைக் காண வில்லையானால் அது நமது அறியாமையா லேயே; உள்ளம் அழுக்குண்டிருப்பத னால்தான் நாம் அவனைக் காண முடிகிற தில்லை. அப்படியிருக்க கடவுள் இல்லை என்று கூறுவது எவ்வளவு பேதமைத் தனம்! இறைவன் இருக்கின்றான் என் றால் சீக்கிரமாகவோ, பொறுத்தோ ஒரு நாள் அவனைப் பார்ப்போம். ஆனால், முதலாக அவனைக் காணும் நமது உளக் கண்ணைச் சரிப்படுத்திக் கொள்வோம். அதனிடம் இருக்கும் அப்பழுக்குகளை அகற்ற முயலுவோம். இன்று நமது உள்ளம் அழுக்குத் தோய்ந்து தடித்திருக் கிறது. அத்தடித்த மனத்தால் இவ் வெளியுலகையே நம்மால் காண முடியும். ஜடத்தையன்றி எந்த சூக்ஷ்ம நிலையையும் இம்மனத்தின் மூலம் காண இயலாது.

மனதூரதிருஷ்டிக் கண்ணாடி ஒன்று பெறுவோம். இது பெறுவதற்கு யாவ ராலும் இயலும். இது வெளியிலிருந்து பெறப்படுவதன்று; நமது உண்மை சுபா வத்துக்கு மாறுபட்டதாக நம்மிடம் வந்து சேர்வதும் அன்று. நம்முள்ளிருக்கும் ஒன்றாகும் இது. இதனை நாம் வெளிக்குக் கொண்டு வாராமையாலேயே அது இருந்த இடத்தனிலேயே மறைந்து கிடக்கின் றது. மனம் ஓரளவுக்குப் பரிசுத்தப்பட் டதும், நிலைத்த வெகு விசாலமான தொன்று நம்முள்ளிருப்பது நமக்குத் தெரியவரும். மனத்தைப் படிப்படியாக அதிசூக்ஷ்ம நிலைக்குக் கொண்டுவருவதே ஆத்மீய வாழ்க்கை எனப்படும். விசாரணை யில் அது நுட்பமாகப் புகுவது என்ப தல்ல. நமது வாழ்க்கையில் எந்த அநு பவத்தையும் உண்டாக்காமல், புத்தி வன் மையை மாத்திரம் காண்பித்துத் தர்க்கத் தோடே நின்றுவிடும் தர்க்கங்களில் சிக்கு றாமல் நம்மைக் காத்துக்கொள்வோம். கேவலம் தர்க்கம் பேசித்திரியும் ஞான வானைக் காட்டிலும் பக்தராக இருப்பது மிக நல்லது. மனத்தைப் பரிபூரணமா கப் பரிசுத்தப்படுத்தினவராலல்லாது ஏனையோரால் ஞானவான்களாகமுடியாது. எனவே நாம் காணும் போலிஞானிகள் விஷயத்தில் நாம் கருத்துச் செலுத்தா திருப்போமாக. தமது மனம் புத்தி வல்லமைகளால் அதிக உயரம் பறக்கும் சில மக்களுளர். ஆனால் அத்தர்க்கங்கள் யாவும் அவர்களது வாழ்க்கையை இம்மி யளவும் மாற்றுகிறதில்லை. அது ஆபத்து மானது. சாதாரணமாக சகலரும் சுலபமாக வும் சீக்கிரமாகவும் அநுஷ்டிக்கக் கூடிய மார்க்கம் பக்திமார்க்கமே; அதுவோ சிறித ளவு மாத்திரம் இருந்தால் மிக மிக நல் லது. இதுவே ஸ்ரீவிவேகாநந்த சுவாமி கள் உண்மையில் விரும்பியது. சிலர் அதி நுட்பம் வாய்ந்த மனது படைத்தவர்க ளாக இருக்கின்றனர். அவர்கள் எவரும் விரும்பாவிடினும் எவருக்கும் எந்த நன் மையும் பயக்காது போயினும் —சாமர்த் தியமாக அதி விசித்ரமாக உயர்ந்த வகை யில் தர்க்கம் செய்யக்கூடியவர்கள். அத் வைதத்தின் சிறப்பினை வெகு அழகுபட உயர்த்திப் பேசி வார்த்தைகள் மூலமாக அக்கொள்கையை ஸ்தாபிக்கும் மனிதர் பலரை நான் காண்கிறேன். அவர்களை யும் அவர்களது அறிவினையும் காணும் போது எனக்குச் சிறிது அச்சமுண்டா

கிறது. அவர்கள் பேசுவது இன்னதென்பது அவர்களுக்கே தெரியாது.

௬

நாம் காணும் இச்சடவுலகத்தினைக் காட்டிலும் மனவுலகம் பல மடங்கு பெரியது. எண்ண உலகத்தின் மின்னொளி போன்று அற்ப தோற்றமேனும் நமக்குக் கிடைக்குமாயின் இந்த சடவுலகமும் அதனுடைய எல்லா பற்றுதல்களும் நம்மை ஒரு சிறிதும் வசீகரிக்கா. ஆனால் நாம் இந்த அக உலகத்தினைப் பெறுவதற்கு அருகராக நம்மை முற்றும் ஆக்கிக் கொள்ள வேண்டுவது மிக அவசியம்.

'ஒரு பாத்திரத்தினின்றும் மற்றொரு பாத்திரத்துக்கு ஊற்றப்படும் தைலதாரை போன்று தொடர்ந்து (இறைவனிடம்) செலுத்தப்படும் எண்ணத்துக்குத் தியானம் என்று சொல்லப்படும். இந்த தியானம் தொடர்ந்து பல நாட்கள் செய்யப்படும்போது அது சமாதியில் லயமடைகின்றது.'

'சாந்தத்தின் ருசியை நீர் எப்போதேனும் நுகர்ந்திருந்தால் அதனை நீர் ஞாபகத்துக்குக் கொணர்வீர். அது உமது மனதுக்கு சற்று ஆறுதலும் சாந்தமும் அளிக்கும். அதனைப் பற்றியே நீவிர் சிந்தனை செய்வீர். சாதாரணமாக நாம் பயனற்ற சம்பவங்களையே நம் சிந்தனைக்குக் கொண்டு வருகின்றோம். இவைகளை விடுத்து உன்னத கருத்துக்களை ஏன் சிந்தனைக்குக் கொண்டு வருதல் கூடாது?'

'ஓ தனஞ்சயா! யோகத்தில் நிலை நின்று, பற்றுதல்களை ஒழித்து, வெற்றி தோல்விகளில் கவலையற்று தொழில் புரிவாய்.'

'சாத்வீகம், ராஜசம், தாமசம் என்னும் பிரகிருதியில் ஜனித்த இம் முக்குணங்களும், ஓ, வில்வீரனே! நாசரகிதமான சரீரியை சரீரத்துக்குள்ளே அடைத்து வைக்கின்றன.'

'இவைகளில் சாத்விக குணம், களங்கமற்றும், பிரகாசம் பொருந்தியும், தீங்கற்றுமிருப்பதனால், ஓ பாபாகிதனே! சந்தோஷத்தினிடத்தும் அறிவினிடத்தும் பற்றுதலுண்டாக்கிப் பந்தப்படுத்துகின்றது.'

'தாபத்துக்கும் பற்றுதலுக்கும் காரணமாய ராஜசம், காம சுபாவம் பொருந்தியதென்பதறிவாய். கர்மத்தினாலும், பற்றுதல் மூலமாகவும், ஓ குந்தீ புத்ரா! அது சரீரியை பந்தப்படுத்துகின்றது.'

'எல்லா சரீரிகளையும் பந்தப்படுத்தும் தாமசம் அறியாமையில் ஜனித்தது என்பதறிவாய். சோம்பல், மந்தம், தூக்கம் முதலியவைகளால், ஏ, பாரத புத்ரா! அது இறுகக் கட்டுகின்றது.'

பொதுப்பட நாம் நமது சுபாவத்திற்கு அடிமைகளாக விருக்கின்றோம். உண்மையில் நாம் உயர்வாழ்க்கையை விரும்பினால் நமது இயல்புகளிடம் அடிமைப்படாதிருப்போம். அவைகள் முற்றும் நமக்கு அடங்கப் பண்ணுவோம்.

குணம் என்றால் கயிறு அல்லது ஆத்மாவைக் கட்டுவது என்பது பொருள். ஆத்மா இக் குணங்களின் வலையில் அகப்பட்டுக் கொள்ளுகின்றது.

ஆத்மீய வாழ்க்கை, செய்கைக்குதவாத வெறும் எண்ணம் மாத்திரமன்று; அல்லது அகங்காரத்தன்மை வாய்ந்ததுமன்று. சக்கரத்தின் ஒரு மூலை மாத்திரமல்ல, முழுச் சக்கரத்தின் மீதும் நமது கருத்துச் செல்ல வேண்டும்.

ஆத்ம ஞான சாதகனது மனம் சமத்துவ நிலையிலே இருக்க வேண்டும்; அதனுடன் அது சமத்துவத்துக்கு அப்பாற்பட்ட நிலையிலும் கருத்தினைத் திருப்ப முயற்சி கொள்ளவேண்டும்.

'ஆத்ம சாக்ஷாத்காரத்தினாலான தெளிவு பட்ட புத்தியினாதித்த ஆனந்தமே, முதலில் விஷம்போல் தோன்றிப் பிறகு முடிவில் அமிர்த மயமாகும் சாத்விகம் எனப்படும்.'

நாம் நம்மை அகண்டத்தோடு சம்பந்தப்பட்டவர் என்பதை மறந்தலாகாது. யாவும் அவ்வகண்டப் பொருளின் அம்சங்களே. இவ்வித எண்ணத்தில் நிலைத்து நிற்போம். இன்றேல் அறியாமை யென்னும் அலைகளால் அலைக்கழிக்கப்படுவோம். அப்படிச் செய்வோமானால் நமது மனத்தின் அடிவாரத்தில் என்றும் சாந்தம் குடிகொண் டுறையும். புயலும் மலை போன்றெழும் கொடிய அலைகளும் மனத்தின் மேற்பாகத்தில் கொந்தளிப்புண்டாக்கும்; அடிவாரம் சிறிதும் அலையாது முற்றும் சாந்த முற்றிருக்கும்.

நம்முடைய முழுச் சுபாவமே மாறுதலடைய வில்லை யென்றால் சாத்வீகவுணவினால் எந்த பயனும் ஏற்படாது. அழுக்கும், அசுத்தமுமான எந்த வுணவையும் ஏற்றுக்கொள்ள இயலாத அவ்வளவு சாத்விகம் பொருந்தியதாக விருந்தது பகவான் ஸ்ரீராமகிருஷ்ண தேவரது சரீரம். வெறும் சாதாரண உணவு மாத்திரம் நம்மை எந்த விதத்திலும் உயர்ந்தவர்களாக்கி விடாது ; நம்மிடம் எந்த மாறுதலையும் ஏற்படுத்தாது. இதனை மறந்த பலரை நான் காண்கின்றேன். அழுக்கு மனத்தினைக் கட்டிப்பிடித்துக்கொள்கின்றனர்; ஆபாசச்சாக்கடையில் இந்திரியங்களை ஓடவிடுகின்றார்கள். ஆனால் வயிற்றையும் அதற்கான உணவையும் மாத்திரம் சுத்தம் செய்கின்றார்கள் இத்தகைய மக்கள். என்ன அறியாத்தனம்! கண்கள், செவிகள் உணர்ச்சி முதலியவற்றின் மூலமாக நான் கொள்ளும் உணவு அசுத்தமாயிருக்க, வயிற்றுக்கு ஏற்கும் இந்த மண் உணவு மாத்திரம் பரிசுத்தமாயிருந்தால் எந்த நன்மையும் உண்டாகாது. ஆத்மீய வாழ்க்கை அடுப்பங்கரைப் பானையின் மூலம் சித்திக்காது.

ரு

'எல்லாக்கெடுதிகளையும் கெடுத்தொழிப்பதும், என்றும் மாறாததும், எல்லாவற்றினும் இரண்டற்று ஒன்றாகவிருப்பதும், பிரகாசம் பொருந்தியதும் எங்கும் வியாபித்திருப்பதுவே நான்காவது.' (கௌடபாத)

இதுவே நமது இலக்ஷியம்; இதனை நாம் அறியவேண்டும்; அதனை அறிந்த பின்னர் அதன் மகிமையினையும் பெருமையினையும் பற்றியே பேசிக் களித்திருப்பதை விட்டு அதனை அடையச் செய்யும் மார்க்கத்தில் இறங்கப் பிரயத்தனஞ் செய்வோம். ஏதாவது பிரயோசனப்படவேண்டுமாயின் வேதாந்தம் அநுபவமாக்கப் படவேண்டும்.

---

# சாது சங்கத்தின் பலவகைப் பயன்

[இராய வேலூர், சாது திருவேங்கடானந்தர்]

மிகவும் அற்பமான அறிவைப் பூரண மாக்குவதாயும், விடயங்களால் வரும் ஆபத்துக்களை அவையின்றிய சம் பத் தாக்குவதாயும், ஒரு சிறிதும் சுக மற்ற அமங்கலத்தை சர்வ விதத்திலும் சுகவடிவான மங்கலம் ஆக்குவதாயு மிருப் பதோடு, யாவராலு முடியாததை முடித்து வைக்கும் விசேடம் வாய்ந்த மகான்கள் சங்கமென்கிற கங்கையினது குளிர்ந்த ஜலத்தில் ஸ்நாநம் செய்தவர்களுக்கு, சிவந்த அக்கினி காரியமான யாகங்களும், கெடாத தபசுகளும், மகா தானங்களும், புண்ணிய தீர்த்தங்களும் வேண்டுவதில்லை. துக்கமாகிய பந்த நாசஞ் செய்வதால் யாவருக்கும் இனிமையுள்ளவராயும் ஜநந மென்னுஞ் சமுத்திரத்தைக் கடப்பதற் குக் கப்பலாயு மிருக்கின்ற அறிவு நிறைந்த மகான்களை எவ்விதத்தினுலும் இனிது சேவிக்க வேண்டுமென்பதும், ஒருவன் பெரியவர்களை அவர் மகிழத் தக்கனவற்றைச் செய்து, தமக்குச் சிறந்த வனாகக் கொண்டொழுகுதல். அவன் பெறும் பேறுகளெல்லா வற்றுள்ளும் சிறந்த தென்பதும் ஆன்றோர் துணிபு களாம்.

பெரியோர்களுக்குச் சேவை செய்வ தால் நமக்கு என்ன பலனெனின் :— மனம், வாக்கு, காயமென்னும் முக்கரணங் களால் செய்யப்பட்டதன் பயனுக, அந்தக் காரணத்தின்கண் பொருந்தியுள்ள பாவங் களனைத்தும், பரிபூரணக் கடவுளை ஆன்ம வடிவமாய்ச் சாக்ஷாத் கரித்த ஞானியின் கிருபா நோக்கம்பட்ட வக்கணமே நீங் கும். ஈசுவர சொரூபமாகிய மகான் இருக் கின்ற இடத்தே யிருப்பதுவே மோக்ஷம். அந்த ஞானிக்கு மனம், வாக்கு, காய மென்னும் முக்கரணங்களாலும் ஏவற் பணிவிடை செய்பவனது பாக்கிய சாலி குற்றமில்லாத மேன்மை பொருந்திய தேசிகராம் மனன சீலருக்கு யோசிக்கில் மஹேஸ்வரரும் ஒப்பல்லர், மேலான அரி யும் சமானமல்லர், பிரம்மாவும் சமானமல் லர் என்றால் வேறு யார்தான் ஒப்பாவார்?

ஈஸ்வர சேவையால் காலாந்தரத்தில் அதிர்ஷ்ட (காணப் படாத) பலமாகிய புண்ணியம் மாத்திரம் உண்டாகும்; குரு சேவையால் அவ்வதிர்ஷ்ட பலத்தோடு அவரது பிரசன்னத் தன்மையால் அவரது திருமுகத்தினின்று வெளிப்படும் உப தேச மொழிகளால் உபாசகனது அஞ் ஞானங்களெலா மொழிந்து, உண்மை உணர்ச்சியால் அளவிலானந்தத்தினை யநு பவித்தலாகிய திருஷ்ட (பிரத்தியக்ஷ) பலமும் உண்டாகிறது.

ஆகையால் ஜீவன் முக்தர்களைச் சேவித் தவர்கள் அரன், அயன், அரி என்னும் மூவரும் சந்தோஷிக்கக் கிருச்சிர சாந் திராயண முதலிய தவங்களனைத்தையுங் குறைவறச் செய்தவரைப்போல் பரிசுத்த மானவர்களாவார். இவ்வாறு சசிவன்ன போதம், பிரமகீதை, ஸ்ரீ ஞானவாசிட்ட முதலிய சாஸ்திரங்கள் பிரதி பாதியா நிற்கும்.

சாதுக்கள் இணக்கத்தினல் உலக சம் பந்தமாகிய புறப்பற்றுக்கள் நீங்கும்; நீங் கவே மனத்தின் சார்பாகிய அகப்பற்று என்னும் வாசனையுடன் அஞ்ஞானம் நாச மாகும். உட்சார்பு அற்றவர்கள் சலன

மற்ற கடவுளினிடத்தில் ஒன்றுகிறார்கள்; ஆதலின், ஜீவன் முக்தி அடைந்த அப்படிப்பட்டவரின் சேர்க்கையை (தரிசனத்தை) அன்புடன் ஒவ்வொருவரும் பெற முயலவேண்டும்.

ரிபு கீதை

"திடஞானி தெரிசனமே தீர்த்த மாடல்
திடஞானி தெரிசனமே தேவ பூஜை
திடஞானி தெரிசனமே செபத பங்கள்
திடஞானி தெரிசனமே செயும றங்கள்
திடஞானி தெரிசனமே சிவத்தைக் காணல்
திடஞானி தெரிசனமே சிவத்தின் சேவை
திடஞானி தெரிசனமே மேவு தற்குத்
திரிவிதமா முலகத்து மரிதா மியார்க்கும்."

குளிர்ந்த சந்திர கிரணங்களால் தாபம் போகும்; திவ்விய லோகத்திலுள்ள கற்பத் தருவினால் ஏழைமை போகும்; கங்கையினால் பாபம் போகும். துக்கம், தரித்திரம், தீவினை இம்மூன்றும் தமக்குச் சமானமில்லாத சாதுக்களுடைய மகத்தான தரிசனத்தால் நீங்கும். பெரியாருடன் கூடல் பேரின்பமாமே. இதனால் சாது சங்கத்திற்குப் பூரணமான உவமை மூன்று உலகங்களிலும் கிடையாது; அதனால்தான் திரிலோகத்திலும் ஒரு ஞானி அரிது என்று பெரியார் கூறி இருக்கின்றனர். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சரிதத்தாலும், திருவண்ணாமலை பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகளுடைய தரிசனத்தாலும் சாதுக்களின் மகிமையை யாவரும் நன்றாக அறிந்தவர்களாவோம்.

---

# கடோபநிடதம்

(தொகுதி 20. 113-ம் பக்கத் தொடர்ச்சி)

देवैरत्रापि विचिकित्सितं किल त्वं च मृत्यो
यन्न सुज्ञेयमात्थ ।
वक्ता चास्य त्वादृगन्यो न लभ्यो नान्यो
वरस्तुल्य एतस्य कश्चित् ॥ २२ ॥

22. (ப-ரை) अत्र - இதில் (இப்பொருளில்), किल - உண்மையாகவே, देवैः - தேவர்களால், (पुरा - முன்பு), विचिकित्सितं - சந்தேகிக்கப்பட்டதே, यत् - எது, त्वंच - நீயும், मृत्यो - யமனே, न सुज्ञेयं - அறிதற்கு எளிதன்று, आत्थ - சொல்லுகிறாயோ, अस्य - இதற்கு (இப்பொருளுக்கு), वक्ता च - சொல்லுபவனும், त्वादृक् - நீயன்றி (உன்னைப்போல்), अन्यः - வேறொருவன், न लभ्यः - அடையத் தகுந்தவனல்லன், (अतः - ஆதலின்), एतस्य - இதற்கு (இவ்வரத்திற்கு), तुल्यः - இணையான, अन्यः - வேறொரு, कश्चित् - எந்த, वरः - வரம், न (अस्ति) - இல்லை. (நசிகேதர் கூறியது.)

(பொ-ரை) இப்பொருளைக் குறித்துத் தேவர்களும், சந்தேகித்துள்ளனர்; யமதேவரே! நீரும் அதை, அறிதற்கு எளிதன்று என்று கூறினீர்; இப்பொருளைப் பற்றி அறிதற்கு உம்மையன்றி வேறொரு குரவரைப் பெறுதல் அரிது; ஆதலின், இதற்கு இணையாகப் பிறிதொரு வரம் இல்லையென்று கருதுகிறேன்.

(கு-ம்) இப் பொருளைக்......அரிது— யமதேவர் மரணத்திற்குக் கடவுளாயும், உலகவாழ்க்கைக்குப் பின் மனிதர்க்குரிய விதியை ஆள்பவரில் முதன்மை பெற்றவராயும் இருத்தலின், மரணத்திற்குப் பின் மனிதர் எய்தும் நிலையைப்பற்றி அறிவுறுத்தற்கு அவரினும் சீரியரைப் பெறு

தல் அரிதாகும்; இக்கதை ஒருபாற் கிடக்கட்டும்; வாழ்க்கையைப் பற்றிய மறைவான உண்மையை மரணம் தன்னகத்தே வைத்துக்கொண்டுள்ளது; அறிவோடு அதனை நாடி வினவுவார்க்கு, அது அனைத்திற்கும் அதீதமான ஆத்மனின் உண்மையை வெளிக்காட்டாதிருப்பதில்லை. மரணத்தைப்பற்றிச் சிந்தனை செய்வதால், உடல் வாழ்க்கையின் நிலையற்ற தன்மையை அழுத்தமாக உணர்தல் எளிதாகும்; இன்னும் நமது உண்மையியல்பாகிய தூய அறிவு எனப்படும் நிலையுற்ற பகுதியினின்றும் அதை எவ்வாற்றானும் முற்றிலும் ஏற்பட்டது என்பதும் தெற்றென விளங்க, அச் சிந்தனை உதவிபுரியும். மக்களது வாழ்க்கைச் சரிதத்தில் மிகப் பழமையான காலமுதலே, சமயத்தையும் சமய வாழ்க்கையையும் முன்னேறும்படிப் பெருவலியோடு தூண்டிவந்த சக்திகட்குள் ஒன்றாயிருந்துள்ளது, மரணத்தைப் பற்றிய இவ் வெண்ணம் என்க. ஆதலின் முத்திப் பேற்றிற் பேரவாவுடையோனுக்கு, மரணத்தைப் பற்றிய சிந்தனை சிறப்பாக விதிக்கப்பட்டுள்ளது.

**शतायुषः पुत्रपौत्रान् वृणीष्व**
**बहून् पशून् हस्तिहिरण्यमश्वान् ।**
**भूमेर्महदायतनं वृणीष्व**
**स्वयंच जीव शरदो यावदिच्छसि**
**॥ २३ ॥**

23. (ப - ரை) शतायुषः - நூறாண்டு ஆயுள் உள்ளவர்களான, पुत्रपौत्रान्-பிள்ளைகளையும் பேரர்களையும், वृणीष्व - வேண்டிக் கொள்; बहून् - பல, पशून् - பசுக்களையும், हस्तिहिरण्यं - யானைகளையும் பொன்னையும், अश्वान् - குதிரைகளையும், भूमेः - பூமியில், महत् आयतन - பரந்த நாட்டையும், वृणीष्व - வேண்டிக்கொள்; च இன்னும், स्वयं -நீயும், यावत् - எவ்வளவு' शरदः - ஆண்டுகள், (जीवितम् - வாழ்வதற்கு), इच्छसि - விரும்புகிறாய், (तावत् - அவ்வளவு நீண்ட காலமும்), जीव - வாழ்க.

(யமதேவர் கூறியதாவது:)

நூறாண்டு ஆயுளை உடைய பிள்ளைகளையும் பேரர்களையும், பசுக் கூட்டங்களையும், யானைகளையும், குதிரைகளையும், பொன்னையும் வேண்டிக் கொள்ளும்; பூமியில் ஒரு பரந்த நாட்டையும் வேண்டிக் கொள்ளும்; உமது விருப்பத்தின்படியே எத்தனை ஆண்டுகளாயினும் நீரும் வாழ்ந்து கொள்ளும்.

**एतत् तुल्यं यदि मन्यसे वरं**
**वृणीष्व वित्तं चिरजीविकां च ।**
**महाभूमौ नचिकेतस्त्वमेधि**
**कामानां त्वा कामभाजं करोमि**
**॥ २४ ॥**

27. (ப - ரை) एतत् तुल्यं - இதற்கு இணையான, वरं - (வேறொரு) வரத்தை, मन्यसे यदि - நினைப்பாயானால், वित्तं - செல்வத்தையும், चिरजीविकां च - நீண்ட ஆயுளையும், (यथा - போன்ற வற்றை), वृणीष्व - வேண்டிக் கொள்க, नचिकेत :—நசிகேதரே, महाभूमौ இப்பரந்த உலகிற்கு (நாட்டிற்கு). त्व - நீர், (राजा - அரசர்), एधि ஆவீர், (अहं - யான்), त्वा - உம்மை, कामानां - (எல்லா) ஆசைகட்கும், कामभाजं - அனுபவிப்போராக, करोमि - செய்கிறேன்.

(பொ - ரை.) இதற்கு இணையானதாக நீர் கருதும் வேறொரு வரத்தை, செல்வம் நீண்ட ஆயுள் போன்றவற்றை, வேண்டிக் கொள்ளும்; நசிகேதரே, இப்பரந்த உலகிற்கு அரசராகக் கடவீர்; எல்லா ஆசைகளையும் அனுபவிப்பவராக நான் உம்மை ஆக்குவேன்.

(இதற்கு - பிரம்ம வித்தைக்கு; முற்கூறிய வரத்திற்கு.)

ये ये कामा दुर्लभा मर्त्यलोके
सर्वान् कामांश्छन्दतः प्रार्थयस्व ।
इमा रामाः सरथाः सतूर्या
नहीदृशा लम्भनीया मनुष्यैः ।
आभिर्मत्प्रत्ताभिः परिचारयस्व
नचिकेतो मरणं मानुप्राक्षीः ॥ २४ ॥

25. (ப ரை.) येये - எங்கெந்த कामा - விருப்பங்கள், मर्त्य लोके - மனித உலகத்தில், दुर्लभाः - அடைதற்கு அருமையானவையோ, (तान् - அவைகளை) सर्वान् - எல்லா कामान् - விருப்பங்களை, छन्दतः - உமது பிரியம்போல், प्रार्थयस्व - வேண்டிக் கொள்ளும், इमाः - இந்த, सरथा - இரதத்துடன் கூடிய, सतूर्याः - தூரியம் எனும் இசைக் கருவியோடு கூடிய. रामाः - அழகிய மங்கையர், ईदृशाः - இத்தகைய (மங்கையர்) मनुष्यैः - மனிதர்களால், न लम्भनीयाः हि - அடையத்தகாதவர்களே, मत्प्रत्ताभिः - என்னால் அளிக்கப்பட்ட, आभिः - இவர்களால் (இம் மங்கையர்களால்), परिचारयस्व - பணி செய்வித்துக் கொள்ளும்; नचिकेतः - நசிகேதஸே, मरणं - மரணத்தை(ப் பற்றி) मा अनुप्राक्षीः - மீண்டும் வேண்டாதேயும்.

(பொ - ரை.) இம் மக்களுலகத்து எந்தெந்த விருப்பங்கள் அடைதற்கு அரியவையோ, அவைகள் யாவையும் உமது விருப்பத்தின்படியே வேண்டிக் கொள்ளும். மனிதர்களால் அடைய முடியாதவர்களாகிய, இரதங்களோடும் தூரியங்களோடும் கூடிய இவ்வழகிய மங்கையர்களைக்கொண்டு - என்னால் உமக்கு அளிக்கப்பட்ட இவர்களைக்கொண்டு - உமக்குப் பணி செய்வித்துக் கொள்ளும். ஆனால் மரணத்தைப்பற்றி மீண்டும் என்னிடம் ஒன்றும் கேளாதேயும்.

---

# ஒரு வினா விடை

(இலஞ்சி)

பங்குனி விஜயத்தில் "சந்தேகந் தெளிதல்" என்னுந் தலைப்பின் கீழ்,

"விக்ரகங்களுக்குப் பால் எண்ணெய் முதலியவைகளை அபிஷேகம் செய்து, ஒருவருக்கும் பயன்படாது போகிறது. அவற்றை ஏழைகளுக்கு ஆண்டவன்பெயரைச் சொல்லி அளித்தல் நலம் என்ற எண்ணம் உண்டாதல் சரியா?" என்ற வினவும் அதற்கு விடையும் காணப்பட்டன. அவ்விடையை ஒட்டி வேறு சில குறிப்புகள் இங்கு காட்டப்படுகின்றன:—

ஆலயங்களிலுள்ள மண்டபத் தூண்களில் அநேகமான உருவங்கள் அமைந்திருப்பதை யாவரும் அறிவார்கள். ஆயினும் அவற்றை யாரும் ஆண்டவனுடைய திருவுருவங்களாக எண்ணி வணங்குவதில்லை. காரணம் என்னவெனில், மூலஸ்தானங்களிலுள்ளவை வெறும் விக்கிரகங்கள் மாத்திரமல்ல, விக்ரகங்களும் அவற்றின் அடியில் யந்திரங்களுமாம். ஆகாய விமானம், மோட்டார், ரயில் வண்டிகள் போலவே, ஆலயங்களிலும், யந்திரங்கள் உயிரும் விக்கிரகங்கள் உடலும் ஆகும். விக்கிரக ஆராதனையைக் கண்டிப்பவர், இவ்வியந்திரங்களின் உண்மையை மறந்தவராவர்.

இனி, கடவுளை, உள்ளத்தைக் கடந்தவனாகிய ஆண்டவனை, அனுபவித்தல் மாத்திரம் இயலுமன்றி, "இப்படியன்,

இங்கிறத்தன், இவ்வண்ணத்தன், இவன் அவன் என்று எழுதிக் காட்ட வொண் ணுது'', மனம் வாக்குக் கெட்டாதவனுத லின். ஆகையால் "அவனருளே கண்ணு கக் கண்ட'' அரும் பெரும் முனிவர், நம் போன்ற சிற்றறிவர் நன்மையைக் கருதி, ஆண்டவனுடைய அனந்த கலியாண குணங்களில் ஒரு சிலவற்றை எடுத்துக் காட்டும் உருவங்களாக அவன் வடிவை வகுத்து வைத்தனர். அவ்வுருவங்கள் நம் போன்ற சாதாரண மக்களால் மனம் போன போக்கில் வகுக்கப்பட்டவையல்ல. யான் எனதென்னும் செருக்கற்ற, திருவ ருள் நிறைந்த பெரியோர்களால் ஒவ்வொரு அங்கமும் ஒரு பொருளைக் குறிக்கும் நோக்கத்தோடு அமைக்கப்பட்டவையாம். ஆகவே ஆலய விக்கிரங்கள், ஆண்டவனு டைய குணங்களையும் அவன் திருப்பா தங்களை யடையும் முறைகளையும் எடுத் துக் காட்டும் அறிகுறிப் பொருள்க ளாம்.

மேற்கூறிய விக்கிரகங்கள் சிறுபொருட் செலவில் செய்யப்படுமாயினும் அவற்றின் அடியில் அமைக்கப்பெறும் யந்திரங்கள் மிகுந்த முயற்சியுடனும் பெருவாரியான பணச்செலவுடனும் ஸ்தாபிக்கப்படுவதி லிருந்து பின்னவற்றின் முக்கியத்துவம் ஒருவாறு அறியப்படும். ஆலயத்திற்கு உயிரங்கமாக இருக்கும் யந்திரங்கள் மேலுலக தெய்வீக அருட்சக்திகளை ஸ்தூல உலக உணர்ச்சிக்கு இறக்கும் அருள்நெறிக் கருவிகளாம்; ஆகாயத்தில் பரப்பிய வானொலியைக் காதொலியாக இறக்கும் ரேடியோ போல. ஆண்டவ னுடைய அருட்சத்திகள் அனந்தமா யிருப்பதுபோல அவற்றிற்குரிய யந்திரங் களும் மந்திரங்களும் அனந்தமாம்.

சமீபத்தில், அதாவது மார்ச்சு மாதம் 23உ வெளிவந்த "Times of India" பத் திரிகையில், அமெரிக்கா தேசத்து காலி போர்னியா நாட்ஸன் டாக்டர் என்பவர் ஓர் ஒலிக்கருவி அமைத்திருப்பதாகவும் அதில் நின்றும் எழும்பும் காதுக்கு அடை படாத பலவித ஒலி அலைகளால், தொட் டியிலுள்ள தண்ணீர் சிறுகுன்றுபோல நிமிர்ந்து நிற்றல், முட்டை வேகுதல் தண்ணீர் கொதித்தல், கண்ணுடி மாப் போலப் பொடிதல், விறகு தீப்பற்றி எறி தல் முதலிய அற்புதங்கள் செய்யப்படு கின்றன என்றும் நாதமானது ஆக்கல், அருளல், அழித்தல் ஆகிய முத்தொழிலை யும் இயற்றுவது கண்கூடாகக் காட்டப் படுகிறதென்றும், ஆபத்தான ஒலிகள் அறைக்கு வெளியே சென்றுவிடா வண் ணம் அறையின் சுவர்கள் பலவித உறை களால் மூடப்பட்டிருக்கின்றன வென் றும் எழுதப்பட்டிருக்கிறது. இவ்வித ஒலிக்கருவி யொன்றிருப்பது உண்மையா யின் "கண்டதேகாட்சி கொண்டதே கோல'' மென்ற தற்கால சர்வ சந்தேக நாகரீகத்திலுங்கூட மந்திர ஒலியின் மகிமை மறுக்க ஒண்ணுததாகும். நிறை மொழி மாந்தர் நாட்டிய இத்தகைய மறை மொழிகளே ஆலய யந்திரங்களுக்கு சக்தியூட்டும் உணவாம்.

முன்கூறிய ஸ்தூல யந்திரங்கள் தொழிற்படுவதற்கு பெட்ரோல், தண் ணீர், எண்ணெய் முதலிய ஆவசியப் படுவதுபோல, ஆலயத்திலுள்ள சூக்ஷ்ம யந்திரங்களுக்கு மந்திரங்கள், முத்திரை கள், அர்ச்சனைகள், தீப தூப ஆராதனை கள் அத்தியாவசியமாகும். யந்திரங்கள் சரிவர ஊட்டப்படினும் அவற்றால் இயக் கப்படும் வண்டிகளும், கருவிகளும், தந் திக்கம்பிகளும் சரிவர பேணப்படாவிட் டால் சக்தியானது பலனின்றி ஒழுகிப் போகும். ஆலய யந்திர மூலாக இறங் கும் அருட் பொழிவை, உலகில் நாற்புற மும் பரப்புவதற்காக அமைந்த வாய்க் கால் அல்லது கருவி அல்லது அருள்

நெறி விக்கிரகங்களாம். அவற்றை உயர்ந்த வசீகர நிலையில் (Highly magnetic condition) நிறுத்துவதற்காகவே எண்ணெய்க் காப்பு, பால் பஞ்சாமிருதம், ஸ்நபன ஜலம் முதலிய அபிஷேகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. பழனி, திருச்செந்தூர் போன்ற ஓரே மூர்த்தி எழுந்தருளியிருக்கும் பல ஆலயங்களில் அருட் பிரவாகம் கூடுதல் குறைவாகக் காணப்படுவதற்குக் காரணம், அபிஷேகம், ஆராதனை இவற்றின் வேறுபாட்டினாலேயாம். அபிஷேகம் என்று சொல்வது வெறும் பாலைக் கொண்டுவந்து சுவாமி தலையில் கொட்டி விடுவதென்பதல்ல. பெரும்பாலான ஆலயங்களில் அபிஷேகம் அவ்விதம் நடத்தப்படுவது ஆலய நிர்வாகஸ்தரின் அறியாமையினாலேயாம். முறைகளை அவர்கள் ஒரு சிறிதாவது அறிந்திருப்பின் பூஜாரிகளைக் கண்டிப்பதற்கு இடமுண்டு. "பரார்த்த பூஜா விதி" என்ற அகோரசிவாசாரியார் பத்ததியைப் (தமிழில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது) பார்ப்பவருக்கு, அபிஷேகப் பொருள்கள் மந்திர பூர்வமாகத் தயாரிக்கப்படும் முறை நன்கு புலப்படும்.

மேற்சொன்ன கருத்துக்களை ஒப்புபவருக்கு பால், எண்ணெய் முதலிய அபிஷேகங்கள் பயன்படாது போகாவென்பது தெளிவாகும். ஆயினும் உலகம் பலவிதம்; விக்கிரக ஆராதனையிலும் ஆலய வழிபாட்டிலும் பற்றில்லாதவர்கள் "ஒருவனை வஞ்சிப்பதோரும் அவா" என்ற குறளுக்கு இலக்காகிப் பால், பழம் முதலியவற்றை தமக்கென்றே வைத்துப் பூட்டிக் கொள்ளாமல், ஏழை மக்களுக்காவது உதவுவது உத்தமமாகும். ஆலய வழிபாட்டில் அதிக வாஞ்சையுள்ளவருக்கு இது வெறும் அன்னதானமேயாகும். அதில் மிகவுயர்ந்தது கல்விதானம், எழுமையும் ஏமாப்புடைத்தாகையால். அதனையொத்ததாகும் அருள்தானம். அப்பேற்றையே, முறைப்படி செய்யப்படும் ஆலய அபிஷேகங்கள் கொடுப்பனவாம்.

---

# நமது சிகர ஜோதி

இப் பகுதியில் :— 'இராவண தத்துவம்': நமது வாழ்க்கைத் தத்துவ வரலாறுகளை பாமர மக்கட்கு எளிதில் விளக்க வைத்தற்கு நமது பண்டைய ரிஷிகள் அநுசரித்த வழிகள் பல. நம் நாட்டுப் புராண இதிகாசங்களில் கூறப்படும் கதாபுருஷர்களும் அவர்களையொட்டிய வாழ்க்கைகளும் அவற்றுள் முக்கியமானவை. இந்த மக்கள் எல்லோராலும் ஏற்கவும் போற்றவும்படுவது இராமாயணம். இராமனும் இராவணனும் அன்று நடத்திய வாழ்க்கை இன்று நம் ஒவ்வொருவரிடத்தும் நடைபெறும் தத்துவ விளக்கமே என்பது ஆராய்ச்சியாளரது முடிபாகும். இராமாயணத்தின் முக்கிய பாத்திரத்திலொன்றான இராவண தத்துவத்தின் பிறப்பு, தோற்றம், தபசு என்பவைகளைப்பற்றி ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இவ்விதழின் இக்கட்டுரையில் வெகு தெளிவாக விளக்கி யிருக்கிறார்கள். 'ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை': ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகாநந்தரது வாழ்க்கை பண்டைய கிருஷ்ணார்ஜுன வாழ்க்கைக் கொப்ப அமைந்துளது என்பது இக்

கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது. 'பிராணோபாசனை': இக் கட்டுரையில் ஸ்ரீமான் K. V. D. சாஸ்திரியார் அவர்கள் பிரணவ ரூப பிரம்மத்தை விளக்கி, ஓங்காரமே பிரம்மம் என்றும், ஓங்கார உபாசனையே பிரம்ம சாக்ஷாத்காரத்துக்கு அநுகுணமானதென்றும் எடுத்துக் கூறுகின்றார்கள். 'உண்மை யோகியின் இலக்ஷியங்கள்': சகலமும் சரீர சம்பந்தமான எண்ணங்களையே எழுப்பும் இக் கலிகாலத்தில் ஞானசாதகன் அநுஷ்டிக்க வேண்டிய நிபந்தனைகளை ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள் இக் கட்டுரையில் வலியுறுத்துகிறார்கள். வெறும் பேச்சு மாத்திரமல்ல; நம்பிக்கை மாத்திரமும் போதாது; அநுபவமும் தொடர்ந்து செல்லுவதே உண்மை யோகியின் இலக்ஷியம் என்பதையும் தெளிவுபட இங்கு விவரித்திருக்கிறார்.

## எச்சில் இலைபோல் இரு

'தனக்குத் தானே நண்பன், தனக்குத்தானே சத்ரு' (ஆத்மைவ ஆத்மனோபந்து, ஆத்மைவரிபு: ஆத்மன:) என்று கூறினர் கீதாசாரியாராகிய கண்ணபிரானர். ஞான வாழ்க்கையில் முன்னேற்றமடைய உண்மையாக விழையும் ஒருவற்கு அவனையன்றி உலகில் வேறொரு பகைவன் இருத்தல் இயலாது. 'நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும்,' 'தன்னை நிலை கலக்கிக் கீழிடுவானும்' தான் என்றார் முற்றுந்துறந்த முனிவர்களில் ஒருவர். உண்மையான அன்பர்களைக் காணில் தனக்கு இனிய நண்பர்களாகவும், தன்னை நோக்குங்கால் தனக்குப் பெரும் சத்துருவாகவும் கருதுதல் வேண்டும் என்று ஒரு வைணவ குரவர் கூறியருளினர். ஐம்பெரும் பூதங்களினாலாய உடலையும், மனத்தையும் பற்றியெழும் அகங்காரத்தையும் (மமகாரத்தையும்) பார்க்கிலும் ஒரு பெரும் பகைவன் மனிதனுக்கு இல்லையென்பர் மெய்யுணர்ந்தோர். பிறப்பகைவர் எத்துணைய வலிமையுடையவராயினும், அகங்காரம் எனும் பகைவன் நமக்குள்ளேயே இருந்து துணை செய்யாவிடில், நம்மை அவர் ஒன்றும் செய்ய இயலாதவராவார். அழியும் தன்மையவாய உடலினின்றும் மனத்தினின்றும் பெறும் இன்பங்களில் எழும் அவாவினால் மனிதன் பொதுவாகக் கட்டுண்டவனாகிறான்; உலகப் பற்றுகள் அனைத்திற்கும் வேராயிருப்பது 'யான்' எனும் பற்றே. இப்பற்றுள்ள வரைக்கும் ஞானமும் கிட்டாததாகும்.

'நான்' 'நான்' என்று சதா எழுந்து கொண்டிருக்கும் இந்த அகங்காரஉணர்ச்சி மனிதனிடத்து ஆதியிலும் முடிவிலும் இல்லாததொன்று; இது மிகத் தாழ்ந்த நிலையிலும் மிக உயர்ந்த நிலையிலும் இல்லாததொன்றேயாம். பிறக்கும் முன்னும் நம்மிடத்து அகங்காரம்தோன்றுவதில்லை. இறந்த பின்னும் அது உணரப்படுவதில்லை. குழந்தையின் உள்ளத்தும் அது தோன்றுவதில்லை; தீரத்துறந்து கட்டற்ற உயர்ந்த ஞானியினிடத்தும் அவ்வுணர்ச்சி காணப்படுவதில்லை. நடுவிலே முளைத்ததாகும், இந்த அகங்கார உணர்ச்சி. எது ஆதியில் இல்லையோ, அந்தத்தும் இல்லையோ, அது இடையிலும் இல்லை யென்பது, கற்றோரால் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு முடிபாகும். உள்ளம் முதிர்ச்சியடையாத குழந்தைப் பருவத்தும், உள்ளம் பூரண முதிர்ச்சியும் மலர்ச்சியும் அடைந்துள்ள ஞான நிலையிலும் அகங்காரம் என்பது சிறிதும் தலை யெடுப்பதில்லை. ஆதலின் நடுவே முளைத்த இது உண்மையிலேயே எக்காலத்தும் எத்தேசத்தும் எந்நிலையிலும் மாயாதிருப்ப தொன்றில்லை யென்பது நமக்கு ஊக்கத்தை விளைக்கின்றது. 'யான்' எனும் முற்கூறிய

உணர்ச்சி அழிதற்குரிய ஒன்றாயின், அது நிலையற்றதாயின், நமது வாழ்க்கையில் விளையும் எல்லாவகைத் துன்பங்கட்கும் வேராயுள்ள அவ்வுணர்ச்சியைத் தொலைக்கும் வழியைத் தேடுதல் அறிவுடையாரது கடமையாகின்றது. அதை அழிக்க ஒரு வழியாவது, 'நான்' எனும் உணர்ச்சியெழும்போதெல்லாம், அதன் அற்பத் தன்மையை உணர்ந்து, அதனை வரவரத் தேய்த்து, இறுதியில் இல்லையென்னும்படி ஆக்குதலேயாம். உண்மையிலேயே உடலைப் பற்றியும் மனத்தைப் பற்றியும் எழும் 'நான்' மிகவும் அற்பமானது தான். 'மின்னின் நிலையில மன்னுயிர் ஆக்கைகள்' என்பது அனுபவமேயாம்; அன்றியும் உடல் உயிரோடிருக்கும்போதும், கணந்தோறும் அதன் ஒவ்வொரு பகுதியும் மாறி மாறி வருகின்றது என்பது, உடல் நூலார் கண்கூடாகக் கண்டுள்ள ஓர் உண்மையாகும். இம்மாதிரியே நமது மனமும் "நின்றவா நில்லா நெஞ்சாதலின்" சதா சலித்துக் கொண்டும் மாறிக்கொண்டும் இருப்பதேயாம். ஆதலின் இவ்விரண்டையும் பற்றி எழுவது அகங்காரமாயின், அது நிலையற்றது என்பது விளங்கும். இவ்வுலகமும், அதிலுள்ள பொருள்களும், உடல்களும் பிறவும் "பிரவாஹரூபேண நித்யம்" என்பர் ஆன்றோர். அதாவது, ஓர் ஆறு கணந்தோறும் மாறிக்கொண்டேயிருந்தும், 'ஆறு' என்ற வடிவம் நிலையானது போலத் தோன்றிக் கொண்டிருக்கின்றதன்றோ? அதுபோல உலகமும் உலகத்துள்ள யாவும் கணந்தோறும் மாறிக்கொண்டேயிருப்பினும், நிலையானவை போலத் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. நமது அகங்காரமும், மாறும் பொருள்களையும் அழியும் பொருள்களையும்பற்றி எழுமாயின், நிலையற்றதேயாகும். இவ்வுண்மையை அறிந்தவர் அஹங்காரத்திற்கு ஆதாரமான உடலுணர்ச்சியில் உள்ள அசுபத் தன்மையை ஊன்றி நோக்கி, அதனை வெறுப்பர். உண்மையை உணர்ந்தவரது கண்ணிற்கு இவ்வுடல், என்பும் தோலும் ஊனும் தசையும் மலமும் பிற அழுக்கார்ந்த பொருள்களும் சேர்ந்த தொகுதியாகவே தோன்றும். 'புலையனும் விரும்பாத இப் புன்புலால் யாக்கை' என்று மிக இழிவாகக் கூறுவர் மெய்யுணர்ந்தோர். "ஊத்தைக் குழியிலே மண்ணை யெடுத்தே, உதிரப் புனலிலே உண்டை சேர்த்தே, வாய்த்த குயவனார் பண்ணும் பாண்டம், வரையோட்டிற்கும் ஆகாதென் றாடு பாம்பே" என்றார் ஒரு சித்தர். (வரை ஓடு-உடைந்த ஓட்டைத் தூர எறியவாவது செய்யலாம். இறந்த உடல், கழித்துத் தூர எறிவதற்கும் தகுதியற்றது என்பது கருத்து; ஏனெனில், இது துர்நாற்றம் வீசி அழுகும் ஆதலால்). உடலுணர்ச்சியைப்பற்றி எழுந்த அகங்காரத்தால் தன்னைப் பெரியவனாக மதித்திருந்த ஒருவனைத் திருத்தும் பொருட்டு, ஒரு பெரியார் அவனை நோக்கி, "உலகத்திலே உன்னிலும் மிகக் கேவலமான ஒரு பொருளைக் கண்டு எடுத்துவா" என்றார். அவனும் வெகுநேரம் சிந்தித்து, இறுதியில் தனது மலத்தினும் கேவலமானது பிறிதொன்றில்லை யென்று தீர்மானித்து, அதனை ஒரு கோலால் எடுக்கச் சென்றான். அவ்வமயம் அது அவனை நோக்கி, "நீ என்னை மிக இழிவானதென்று நினைத்தாயே, அந் நிலைமைக்குக் காரணம் நீயே யன்றோ? நான் உனது உடலோடு சம்பந்த மடையுமுன், அனைவராலும் விரும்பத்தக்கதும், நறுமணம் நிரம்பியதும், சுவை மிகுந்ததுமான ஒரு பணியாரமா யன்றோ இருந்தேன். அத்தகைய நிலையிலிருந்த என்னை இந்த இழிவான நிலைக்குக் கொண்டுவந்த, நின்னையும் பார்க்கிலும் நான் இழிவானவனோ? சந்

தித்துப் பார்" என்று கூறியது. இதைக் கேட்டுச் சற்றே சிந்தித்தலும், அதில் அடங்கிய உண்மையைக் கண்டு, தன்னி லும் (தன் உடலிலும்) மிகுந்த இழி வுடைய தொன்று உலகில் இல்லை யென் பதை உணர்ந்துவிட்டதாக அப் பெரியா ரிடம் வந்து உரைத்தான். இந்த அஹங் காரத்தின் இழிவை மனதின் கண் பதிய வைப்பதிலேயே கருத்தா யிருப்பார் ஞானியர். 'பாரனைத்தும் பொய்யெனவே' துறந்த பட்டினத்தார் மக்கட்கு உப தேசிக்கும்போது, இவ்வாறு உடலுணர்ச் சியினால் நீ இருப்பதாக நினைப்பதினும், நின்னை இறந்தவனாகவே கருதுக என்று உபதேசித்தார். "வித்தாரமும் இடும்பும் வேண்டாம் மடநெஞ்சே, செத்தாரைப் போலே திரி" என்றார். நீ இறந்து விட் டது போலவும், உயிரற்றவரைப் போல வும் திரிதல் வேண்டும் என்று தமக்குத் தாமே கூறிக்கொண்டனர். பிறிதோ ரிடத்து, "பேய்போல் திரிந்து, பிணம் போல் கிடந்து, இட்ட பிச்சையெல்லாம் நாய்போல் அருந்தி, நரிபோல் உழன்று, நன் மங்கையரைத் தாய்போற் கருதித் தமர்போல் அனைவர்க்கும் தாழ்மை சொல் லிச் சேய்போலிருப்பர் கண்டீர் உண்மை ஞானம் தெளிந்தவரே" என்று விரிவாக உபதேசித்தார். இதில் "பிணம்போல் கிட" என்றார். 'நாய்போல் அருந்து' என்றார். 'அனைவர்க்கும் தாழ்மை சொல்' என்றார். உடலுணர்ச்சியைப்பற்றி யெழும் 'நான் எனும் அகங்காரம் நம்மை நீச ராக்குகின்றது' என்பர் வேறு பெரியார். ஆதலின், ஸ்ரீ சைதன்ய பகவான், "புல் லைப்போல் மிக அற்பமானதாக உன்னை நினைத்துக் கொள்க, மரத்தைப் போலப் பொறுமையா யிரு, மான மற்றவனா யிரு, பிறரைப் பெரிதும் மதிப்பாயாக," என்று போதித்தார். ஆதலின், அழியும் உடலைப் பற்றியும் மனம் முதலியவற்றைப் பற்றி யும் எழும் 'நான்' எனும் உணர்ச்சியை அறவே மாய்த்தல் வேண்டும் என்பதும், அதுவே உயர்ந்த ஞானத்திற்கு வழி யாகும் என்பதும் விளங்குகின்றன.

இக் கருத்தை வேறொரு உபமான வாயிலாக நமது மனத்திற் பதிய வைக் கின்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். "உன்னை எச்சிலிலையாகக் கருதுக" என்றார் இம்மா குரவர். உண்பதற்குச் சாதனமாகப் பயன் பட்டு, உண்டு முடிந்தபின் அருவருப் போடு கழித்தெறியப் படுவதன்றோ எச்சி லிலை? நம்மை நம்மிற் பலரும், உடலும் மனமும் புத்தியும் சித்தமும் அகங்கார மும் ஆகியவற்றின் தொகுதியென்றே கருதுகின்றோ மன்றோ? இத்தொகுதி உண்மையாகவே எச்சிலிலையாவது, எச்சி லிலைப்போல் அருவருக்கத் தக்கது. கழித்து எறியத் தகுந்ததேயாம். இவ் வுடல் முதலியவற்றின் உதவியால் ஜீவன் உலக இன்பங்களை யேற்றுப் புசித்த தன்றோ? ஆக, ஜீவனுக்கு உலக இன்பங் கள் யாவும் உணவாக, அவ்வுணவை ஏற்று உண்பதற்கு உடலே இலையாகின்றது. பல முறையும் உலக சம்பந்தமான சிற்றின் பங்களை உடல் வாயிலாக ஜீவன் உண் டிருத்தலின், அது எச்சிலிலையே யாகின் றது. ஒரு முறை உண்டபின்னும் எச்சி லாகு மன்றோ இலை? அதை யறிந்தும் மக்கள் பன்முறையும் அந்த எச்சிலிலை யிலேயே மீண்டும் மீண்டும் உண்கின் றனர். "தேடுகின்றனை ஐம்பொறிகளுக்கு இரை, தேடியும் கிடையாமல் வாடுகின் றனை" என்று நெஞ்சை நோக்கிக் கூறி னார் ஓர் அறிஞர். போகங்களை மேலும் மேலும் உடலில் வைத்து உண்டும், எச்சி லிலையாகிய உடலை அருவருப்பதில்லை; இது ஒரு பேதமை. நம்மை நாம் எச்சி லிலையாகக் கருதுவோமாயின், பின்னும் உடலின்மீது பற்றுவைக்க மாட்டோம்; "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்

கும் அழுக்குடம்பும், இங்ஙின்ற சீர்மை இனியாம் உறுமை" வேண்டும் என்ற அவா எழும். 'நான்' என்பது இழி வானது என்பதை உணர்தலும், அதனை ஒழிக்கும் விருப்புடையராவோம்.

உடலும் உள்ளமும் அவற்றோடு இயைந்தனவுமாகிய யாவும் ஜீவனுக்கு இறைவனால் அளிக்கப்பட்டவையே யாம். அவ்வாறு அளித்ததன் நோக்கம், அவை அனைத்தையும் இறைவனது இன்பத்திற்கே துணையாமாறும், சாதனங்களாமாறும் செய்தலேயாம். இவ்வாறு பயன்படுத்தாதவன், தனது சுய இன்பத்திற்கே அவைகளை நிலைக்களமாக்குகின்றான். ஆதலின் இவன் போகங்களை உண்டமையால் எச்சிலாகும் உடலும் பிறவும், பின்னர் இறைவனுக்கு அளிக்கப்பட உதவாதனவாகின்றன. முக்கியமாக உடலையும் மனத்தையும் எச்சிலாக்குவது காம இன்ப நுகர்ச்சியே; இதற்கு ஆளானவர், அதாவது, பிரம்மசரிய ஒழுக்கத்தினின்றும் வழுவியவர்—மீண்டும் தமது தூய்மையைப் பெறுவது மிக அரிதாகும் என்பர் ஸ்ரீ ராமகிருஷ்ணர். காகத்தினால் கொத்தப்படும் பழம், அதன் பின் இறைவனுக்கு அளிக்கப்படுந் தகுதியை இழப்பதுபோல பிரம்மசரியத்தினின்றும் வழுவாத "கிளரொளி இளமையுடைய இளஞ் சிறுவரே உயர்ந்த ஞான நிலையினை எய்தும் ஆற்றலுடையராவார் என்பர். முன்பு சிற்றின்ப நுகர்ச்சியில் அழுந்தியவரும், இறைவனது அருளால் தம்மை முற்றுந் தூயராக்கிக் கொள்வரேல், அப்போது மறுபடியும் இறைவனுக்கு சமர்ப்பிக்கப்பட உதவுவர். ஆதலின் அறிவுடையோர் தமக்கு இறைவனால் அளிக்கப்பட்டுள்ள கரணங்களைத் தமக்கெனப் பயன்படுத்தி, எச்சிலாக்காமல், தமக்கென ஒன்றுமின்றி, அவனுக்கென்றே அவைகளை ஒப்பித்து வாழ்வார். இவ்வாறு ஒழுகுபவர் 'தான்' எனும் அஹங்காரத்தை நாளடைவில் இழந்து விடுவார்.

சாதகனாகும் நிலையில் ஒருவன் தன்னை எச்சிலிலைபோல் நினைத்திருத்தல் வேண்டும். எச்சிலிலை, காற்றடித்துத் தன்னைக் கொண்டுபோகும் இடமெல்லாம் செல்லும். அது நல்ல இடமும் செல்லும், கெட்ட இடமும் செல்லும்; அது தனக்கென ஓர் இடத்தைத் தெரிந்தெடுத்துக் கொள்வதில்லை; நல்ல இடத்தை விரும்புவதுமில்லை. கெட்ட இடத்தை வெறுப்பது மில்லை. அதுபோலவே, சாதகனும் தனக்கென் ஒரு சங்கற்பமற்றவனாகி, இறைவனது சங்கற்பமெனும் காற்று தன்னை எங்கெல்லாம் உய்க்குமோ, அங்கெல்லாம் செல்லுதல் வேண்டும். இறைவன் சாதகனை நல்ல நிலையில் வைப்பினும், பலரும் இகழ்தற்குரிய நிலையில் வைப்பினும், எதனாலும் உளம்திரியாது, எல்லாம் அவனருளே என்று உறுதியாக நம்பி வாழ்தல் வேண்டும். "நன்றே செய்வாய், பிழை செய்வாய், நானோ அதற்கு நாயகமே" என்றும், "களைவாய் துன்பம், களையாதொழிவாய், களைகண் மற்றிலேன்" (களைகண்=பற்றுக்கோடு) என்றும், இறைவனது திருவடியிற் சரண் புகுந்து விடுதல் வேண்டும். உலகச் சேற்றிலே அழுந்தி, ஐம்பொறியினால் விளையும் உலக இன்பங்களை அநுபவித்தற்கு இடமாயமைந்த உடல் மனம் முதலியவற்றை, அருவருக்கத்தக்க எச்சிலிலையாக மதித்து, அவைகளை இறைவன்பால் ஒப்புவித்துவிட்டு, 'தான்' 'தனது' என்னும் நினைவுகளை வேர் முதல் மாய்த்தல் வேண்டும். இவ்வாறு பழகுவதினாலும், அகங்காரம் ஒழியும்.

அனைத்திற்கும் மேலாக, ஒருவன் தனது ஆன்மாவை இறைவனது உணவாகக் கருதவேண்டும். "அஹம் அன்னம் அன்னம்" என்றார் இருடியர். உண்மையில்

நமது ஆன்மா இறைவனது போகத்திற்கு உறுப்பாக அமைந்துள்ள ஒன்றேயாம். ஆன்மாவின் உண்மையான இயல்பே அது ; ஆதலின் ஆன்மாவை நம்மதெனக் கருதும் பெரும் பாவத்தினின்றும் நாம் விலகிக் கொள்ளல் வேண்டும். "கிம்தேன நகிருதம் பாபம் சோரேண ஆத்மாபஹாரிணு" என்றபடி (இறைவனுக்குரிய ஆத்மாவைத் தன்னதெனக் கருதுபவனால் எப்பாவம்தான் செய்யப்படாததாகும்?) அந்த ஆத்மாவாகிய இறைவனுணவைத் தாங்கி நிற்பதனுலும் இவ்வுடல் எச்சிலிலே யாகும் ; ஆனல் அப்போது இறைவனது எச்சிலையுடைய இலையாகிறது. இக் கருத்தை நினைந்து, ஒருவன் தன்னை எச்சிலிலேயாகப் பாவித்தாலும் சரியேயாம். ஆக, எல்லாவிதத்தாலும், தன்னை எச்சிலிலேயாகக் கருதுபவன் ஆணவமொழிந்து, தனது உண்மை நிலையை உணர்ந்து, பேரின்பத்தில் மூழ்குகின்றான்.

---

# மதிப்புரை

'கலைமகள்' (பொங்கல் மலர்)

—விலை 0 8 0

'கலைமகள்' தமிழ் நாட்டில் உள்ள தலைசிறந்த பத்திரிகைகளுள் ஒன்று. ஒன்பதாண்டுகள் நிறைவுற்றுப் பத்தாமாண்டிற் புகும் கலைமகள் தமிழ் மக்கட்குப் 'பொங்கல் மலர்' ஒன்றைத் தந்திருக்கின்றாள். அம்மலர் கட்டுரைகள், கதைகள், கவிதைகள் முதலியனவற்றைத் தன்னகத்தே கொண்டு நல்ல மணம் வீசி மலர்ந்திருக்கின்றது.

---

மானிட ஜாதியின் சுதந்திரம் :—(ஆசிரியர்: வெ. சாமிநாத சர்மா வெளியிடுவோர்: பாரத பந்தர், இரங்கூன். —விலை 0 8 0

ராபர்ட் கிரீன் இங்கர்ஸால் என்பவர் ஓர் அமெரிக்க அறிஞர். அவருடைய கட்டுரைகளில் பல நல்ல கருத்துக்களுண்டு. அக் கருத்துக்களைத் தமிழ் மக்களுமுணர்ந்து பயன்பெற வேண்டி திரு. சர்மா அவர்கள் மேற்கூறிய அறிஞரின் ஒரு கட்டுரையை மொழி பெயர்த்திருக்கின்றார். புத்தகம் பார்வைக்கு அழகாகவும், இனிய எளிய தமிழ் நடையைக் கொண்டதாகவும் விளங்குகின்றது.

---

சுதந்திரத்தின் தேவைகள் யாவை? (ஆசிரியர்: வெ. சாமிநாத சர்மா. வெளியிடுவோர்: பாரத பந்தர், இரங்கூன்.)

—விலை 1 8 0

சீனக் குடியரசுக்கு அடிகோலி அதனை வற்படுத்திய சன்-யாட்-ஸென் என்னும் சீனப் பெரியாரின் பதினறு சொற்பொழிவுகளின் மொழிபெயர்ப்பு அடங்கியது இப்புத்தகம். சொற்பொழிவுகளில் தோன்றும் ஐயங்களை நீக்கப் புத்தகத்தின் இறுதியில் குறிப்புகள் காணப்படுகின்றன. குடியரசு நாடுவாரின் கருத்துக்களுக்குப் பொருந்திய பல கருத்துக்கள் அடங்கிய இம்மொழிபெயர்ப்பு நல்ல நடையிலமைந்திருக்கின்றது ; புத்தகத்தின் அமைப்பும் நன்ருக இருக்கின்றது.

---

ஆச்சாரிய விவேகாநந்தா :—(வெளியிடுவோர் : சாரதா மாதர் மந்திரம், பிரேசர் டவுன், பெங்களூர். விலை அணு 10. பக்கம் 152.)

ஒரு பெரியாரின் வாழ்க்கைச் சரித்திரத்தை விட அவருடைய உபதேச மொழிகள் பரவுதல் வேண்டும். அருந்தவத்துப் பெருந் தன்மையாளராய ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளுடைய சரித்திரத்தை யாவரும் அறிவர். அப் பெரியாருடைய அருமையான சில பொன்னுரைகளையும், கருத்துக்களையும் இப் புத்தகம் தருகின்றது. பார்வைக்கும் அழகுடைய இப் புத்தகம் ஆத்மிய சாதகர்கட்கு நல்ல பயனைத் தரும். பலவகைப்பட்ட தத்துவக் கருத்துக்கள் இந் நூலுள் காணப்படுகின்றன.

---

**சக்திசிவ பக்திரஸ கீர்த்தனை**:—(இயற்றியவர்: கா. ரா. பரசுராம ஐயர். கிடைக்குமிடம்: ஆசிரியர், தென்னைமரம் தெரு, வெல்லூர், (N. A. Dt.)

இச்சிறு கீர்த்தனைப் புத்தகம் பஜனை செய்வார்க்குப் பயன்படும். இச்சிறு புத்தகத்தின் மூலம் வரும் பணம் நற்காரியங்கட்குப் பயன் படுத்தப்படுமெனக் காணப்படுகின்றது.

---

**ஸ்ரீ ராமாநந்த சரிதம்**:—(ஆசிரியர்: R. கிருஷ்ணஸ்வாமி ஐயர், வக்கீல், திருநெல்வேலி. விலை: 1—0—0.)

ஸ்ரீ ராமாநந்த சுவாமிகளின் மகனாராய திரு. கிருஷ்ணசுவாமி ஐயரே இவ்வரலாற்றினை எழுதியிருக்கின்றார். சுவாமிகளின் சரிதத்தால் அறிந்துகொள்ளக் கூடியனவற்றை அறிய ஆவலுடையோர்க்கு இந்நூல் பயன்படும். புத்தகம் பார்வைக்கு அழகாயிருப்பதோடன்றி நன்றாக அச்சிடப்பட்டுமிருக்கின்றது. —மா ரா. போ.

---

# சமாசாரங்கள்

## சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண சாரதா வித்யாலயம்

சென்னை ராஜதானியில் பெண் மக்கள் படிப்பிற்காக உழைக்கும் பல பெரிய வித்யாலயங்களில் சென்னை தியாகராய நகரில் நடைபெறும் ஸ்ரீ சாரதா வித்யாலயமும் ஒன்றாகும். இதன் வருஷாந்திர அறிக்கை சமீபத்தில் வெளிவந்துள்ளது. இங்கு ஓர் உயர்தரப் பள்ளிக்கூடமும், ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடமும், உபாத்தியாயனிகள் போதனுமுறை பாடசாலையும் நடத்தப்பட்டு வருகின்றன.

### உயர்தரப் பள்ளிக்கூடம்:

இதில் 654 பெண்பிள்ளைகள் படிக்கிறார்கள். தமிழ், தெலுங்கு இவ்விரண்டு பாஷையிலும் பாடங்கள் போதிக்கப்படுகின்றன. இதைத் தவிர கணக்கு, விஞ்ஞான சாஸ்திரங்கள், பாட்டு, சரித்திரம் முதலியவைகளும் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. வருஷக் கடைசி பரீக்ஷையில் சுமார் 100-க்கு 50 பேர் S.S.L.C. பரீக்ஷையில் தேறியிருக்கிறார்கள். மத சம்பந்தமான பாடங்கள் தனியாக போதிக்கப்படுகின்றன. சென்ற ஆகஸ்டு வரையிலும் ஆண்பிள்ளைகட்கென நடத்தப்பட்டு வந்த தற்காலிகக் கொட்டகையிலே இவ்வுயர்தர பாடசாலை இப்போது நடந்து வருகிறது. இடம் போதாமையால் கீழ் வகுப்புக்கள் சில ஆரம்பப் பாடசாலைக் கொட்டகையில் நடத்தப்பட்டு வருகின்றன.

### ஆரம்பப் பாடசாலை:

இதில் சுமார் 654 குழந்தைகள் கல்வி பயின்று வருகின்றனர். கவர்ன்மெண்ட் சிலபஸ் பிரகாரம் பாடங்கள் நடத்தப்படுகின்றன.

### போதனு முறை பாடசாலை:

இங்கு 256 பெண் மக்கள் உள்ளனர். மிகுந்த கல்வி இல்லாதவர்கள்கூட இங்கு சேர்க்கப்பட்டு நல்ல உபாத்தியாயனிகளாக்கப் படுகிறார்கள். கணவனை யிழந்த கன்னிக் கைப் பெண்களும் ஆதரவற்ற இதர ஏழைப் பெண் பிள்ளைகளும் சமூக சேவையில் ஈடுபடும்படிச் செய்தும் அதற்கு அவர்களைத் தயாராக்கவும் இப்பாடசாலை பெரிதும் முயற்சிக்கிறது. இவ்வாண்டு இங்கு பரீக்ஷை எழுதினவர்களில் மூன்றுபேர் தவிர மீதி பதின்மூன்று பேர்களும் தேறினர். மாண்டிஸ்ஸெரி விதிப்படி பாடம் கற்பிக்க சில பேர்கள் தயாரிக்கப்படுகிறார்கள். இதன் பிரகாரம் மூன்று அல்லது நான்கு வயதுள்ள 45 குழந்தைகள் பள்ளிக்கூடத்தில் வாசிக்கின்றனர்.

உயர்தரப் பாடசாலைச் சிறுமிகளுக்கொன்று, போதனுமுறை பாடசாலை மாணவிகட்கு ஒன்று, உபாத்தியாயினிகளுக்கொன்று ஆக மூன்று விடுதிகள் நடத்தப்பட்டு வருகின்றன. ஸ்ரீசாரதா தேவியாரது வாழ்க்கையை முன் மாதிரியாகக்கொண்டு தன்னலமற்ற தொண்டில் உபாத்தியாயினிகளைப் பழக்க இம் மூன்றாவது விடுதி மிகவும் பயன்படுகின்றது. நம் நாட்டு ஹிந்து சகோதரிகளின் முன்னேற்றத்துக்கு சேவை செய்வதன் பொருட்டு நம் நாடெங்கும் மேனாட்டு ஸ்தாபனங்கள் போன்று தாய்மார்களின் தவச் சாலைகள் ஏற்படுவதற்கு இவ்விடுதி வித்தாயமையவேண்டும் என்பது முக்கிய நோக்கமாகும்.

இம் மூன்று விடுதியிலுள்ளோர் பல சமயங்களில் பல பிரிவினராக நம் தென்னிந்தியாவிலுள்ள பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று வந்தனர்.

இந்தப் பள்ளிக்கூடங்களும் ஹாஸ்டல்களும் மாம்பலத்தில் வெவ்வேறு இடங்களில் தனித் தனியாக இருக்கின்றன. ஆதலால் இவைகளின் மேற்பார்வை மிகவும் கடினமாயிருக்கிறது. அதுபற்றியே இப்போது அத்யாவசியமாக மூன்று மாடிகளுடன் கூடின ஒரு பெரிய கட்டிடம் வேண்டியிருக்கிறது.

அதற்கு 30 ரூம்களும், 3 ஹால்களும் கட்டப்பட வேண்டும். ஒவ்வொரு அறைக்கும் சுமார் ரூ. 3,000-மும், ஒவ்வொரு ஹாலுக்கும் ரூ. 7,000-மும் பிடிக்கிறது. மிகவும் பரோபகார சிந்தனையுள்ள பெருமக்கள் இதற்கு மிகவும் உதவிபுரியும்படி. கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

---

### வைத்தியசாலை

சென்னை மைலாப்பூர் ஸ்ரீ ராமகிருஷ்ண தர்ம வைத்தியசாலையின் 14-வது ஆண்டு அறிக்கையில், அது மிகுந்த சிறந்த முறையில் ஏழை வியாதியஸ்தர்களுக்கு செய்த நன்மை குறிப்பிடப்பட்டிருக்கின்றது. முதல் வருஷத்தில் சுமார் 1000 பேர்களுக்கு உதவி புரிந்த இந்த வைத்தியசாலையில் 1940-ம் வருஷத்தில் 61,540 பேர்களுக்கு சிகிச்சை செய்யப்பட்டிருக்கிறது. இந்த வருஷத்தில் 1335 ஆபரேஷன்களும் செய்யப்பட்டிருக்கின்றன. இவ்வருஷத்தில் மொத்த வரவு ரூ. 6,815-1-10. செலவு ரூ. 5,725-4-0. இருந்தபோதிலும் இங்கு இன்னும் தற்காலத்திற்கேற்ற சாமான்கள் வாங்குவதற்கும், வைத்தியசாலையை சரிவர சிறப்புடன் நடத்த மாதம் 350 ரூபாய் பிடிக்கும். நம் தர்ம சிந்தனையுள்ள நண்பர்கள் தங்கள் தயாள குணத்தால், நோயால் தவிக்கும் ஏழை மக்களுக்கு உதவிபுரியும் இந்த வைத்தியசாலைக்கு ஏற்ற உதவி புரிவார்கள் என்று நம்புகிறோம்.

### சென்னை மடத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் பிறந்த தினக் கொண்டாட்டம் :-

பிப்ரவரி மாதம் 28உ வெள்ளியன்று பகவான் ஜன்மதிதி பூஜை, ஹோமம் வேத பாராயணம் பஜனை முதலிய வைதிக சடங்குகளுடன் கொண்டாடப்பட்டது. அன்று பகவானது அடியார்கள் பலர் வந்து பிரசாதம் ஏற்றனர். மார்ச்சு 2உ ஞாயிறன்று உற்சவம் கொண்டாடப்பட்டது. அன்று பகவானது திருவுருவப் படம் ஒன்று மிக அழகுபட அலங்கரிக்கப்பட்டிருந்தது. காலை 7 முதல் 10 வரையில் நடந்த பஜனைக்குப் பிறகு ஸ்ரீராமகிருஷ்ண மாணவர் விடுதியின் விளையாட்டு மைதானத்தில் சுமார் 2500 ஏழை நாராயணர்கட்கு அன்னமளிக்கப்பட்டது. பிற்பகல் இரண்டிலிருந்து நாலுவரை ஸ்ரீமான் மூர்த்திராவ் பாகவதர் அவர்களால் நடத்தப்பட்ட ஹரிகதைக் கப்புறம் மாலை ஸ்ரீ S. V. ராமமூர்த்தி, I. C S. தலைமையின் கீழ் நடந்த பொதுக்கூட்டத்தில் பகவானது சரிதம் உபதேசங்களைப் பற்றி பச்சையப்பன் கல்லூரி ஸ்ரீமான் ராமானுஜம்ராவ் நாயுடு, M. A, அவர்கள் தெலுங்கிலும், லாயலா கல்லூரி வித்வான் E K. நடேச சர்மா அவர்கள் தமிழிலும், டாக்டர் V. ராகவன் அவர்கள், M.A., P.h.D ஆங்கிலத்திலும் சொற்பொழி வாற்றினர்கள். ஸ்ரீமான் P. N. ஸ்ரீனிவாசாசாரியாரால் வந்தனோபசாரமும், பிறகு ஆராத்ரிகமும் நடந்த பிறகு கூட்டம் இனிது முடிந்தது.

---

## கடிதங்கள்

(முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசீயக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணு 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணு 3

---

## ஜகஜ்ஜீவபர விளக்க வினுவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணு 12. சந்தாதாரருக்கு அணு 10.

---

# ப ஜ ஞு வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவது அவசியம்.

விலை அணு 12.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உக] விஷு வருஷ வைகாசிமீ [பகுதி—ரு

## பொருளடக்கம்

பக்கம்



---

☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தரால் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அநுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப்பட்டுள்ளது. வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உக | விஷு வைகாசிமீ | பகுதி-டு


## பிரார்த்தனை

---

பெரிய பிரமப் பொருளே போற்றி
நெருப்பி லொளிரும் நின்மலா போற்றி
மண்ணி லிலகு மணியே போற்றி
மண்தரு மணத்தின் மருந்தே போற்றி
சொல்லே போற்றிசொல் லரசே போற்றி
போற்றி போற்றி இறைவா போற்றி.

—யஜுர் ஆரண்யகம் (1.30.)

---

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

---

இறைவன் ஒரு கொள்கையோ மதமோ கிரியையோ நம்பிக்கையோ எதற்குள்ளேனும் அடைபட்டுக் கிடப்பதில்லை. அனைத்திற்கும் ஆதாரமாயும் மாறுதலாயும் உள்ள மெய்ப்பொருளைக் காணவேண்டின் உருவத்திற்கும், கிரியைக்கும் அதிதமாகச் செல்லவேண்டும். இறைவன் உனது இறைவனும், எனது இறைவனும், ஒவ்வொருவரது இறைவனும் ஆவான். அவரை நாம் எப்பெயர் கொண்டு அழைப்பினும் சரி, எல்லோருடைய பிரார்த்தனைகளையும் ஏற்றுக்கொள்ளுமாறு அவர் பெருமையும் அன்பும் போதிய அளவு வாய்ந்தவர் என்பதை நீங்கள் நம்பவில்லையா ?

சகோதரத்வம் என்பது கனவல்ல. ஆதியிலும் முடிவிலும் எப்பொழுதும் நாம் அனைவரும் ஒரே பொதுவான உற்பத்தியை உடையோமாதலின், ஒன்றுவோம். சகோதரத்வ நிலையங்களெனப் பெயரிட்டுச் சில சங்கங்களை அமைத்தல் மட்டும் போதாது ; உண்மையான சகோதரத்வ உணர்ச்சி நம்மிடம் ஊறியிருத்தல் வேண்டும். உண்மையான பொறுமையுடையவர்களாயிருக்கக் கற்றுக்கொள்வோம். எந்த நெறிவழியாகச் செல்வாரேனும், அனைவரும் ஒரே முடிவிடத்தையே சார முயலுகின்றனர் என்பதை நினைவிலிருத்திக் கொண்டு, நமக்குரிய மதத்தை நாம் பின்பற்றுவோமாக.

—ஸ்ரீ சுவாமி பரமாநந்தர்.

---

# தேவியின் திருவாக்கு

அன்னையார் நீராடுவதற்காகக் கங்கைக்குப்போய்க்கொண்டிருந்தார். கோலப்மாவும் அவருடன் சென்றார். அன்னையாரின் ஆடையையும் துண்டையும் எடுத்துக் கொண்டு நானும் உடன் சென்றேன். மழை தூறிக் கொண்டிருந்தது. நீராடிய பிறகு ஸ்நான கட்டத்தில் இருந்த புரோகிதருக்கு அன்னையார் ஒரு நாணயமும் மாங்கனியும் கொடுத்தார். இந்தக் காணிக்கையைச் செலுத்துகையில் அன்னையார் புரோகிதரிடம் "நான் உமக்கு இந்தப் பலத்தை (பழத்தை)த் தருகிறேன், ஆனால் நான் செய்கின்ற இந்தத் தானத்தின் பலனும் (பயனும்) உமக்குச் சொந்தமாவது" என்று கூறினார். ஆ! இந்தத் தானத்தைச் செய்த அன்னையார் எத்தகைய பெரியார் என்பதை அப்புரோகிதரால் அறியக் கூடவில்லை. அன்னையார் மொழிகளின் உட்கருத்தையும் அவரால் தெரிந்து கொள்ளக் கூடவில்லை. அந்தத் திவ்விய மொழிகளின் பொருளை நாம் தான்— ஆயிரக் கணக்கான அற்ப சுய நல ஆசைகளால் அல்லற்படும், சிறுமை மிகுந்த நாம் தான்—அறிந்து கொள்ளக் கூடுமோ? *

* ஒருவருக்குத் தானம் கொடுத்தால் தானம் செய்த பலன், கொடுத்தவரைச் சேருகிறது. ஆனால் அந்தப் பலனையும் கூடப் பிறர் நலனுக்காகத் தியாகம் செய்து விடுவோரும் உண்டு. அன்னையார் புரோகிதருக்குப் பழமொன்றைக் கொடுத்ததுடன் தான் தானம் செய்த பலனையுமே கொடுத்தார். ஆனால் புரோகிதருக்குத் தூய அன்னையாரின் பெருமையும், இன்னும் அவருடைய தியாக மகிமையும் தெரியாது போயின. சுய நல ஆசையுள்ளவர்கள் தமக்குச் சேரவேண்டிய புண்ணியத்தைப் பிறர் நலனுக்காகத் தியஜிக்க விரும்ப மாட்டார்களாதலின் அன்னையாரது செய்கையின் பெருமையை உள்ளவாறு அறியக் கூடியவர் வெகு சிலரே என்பது பொருள்.

தூய அன்னையார் புதிய ஆடையைத் தரித்துக் கொண்டவராய், ஈரத் துணியை எடுத்து வருமாறு என்னிடம் கொடுத்தார். கோலப்மா முன் செல்ல, நான் பின்னால் வந்தேன். அன்னையார் எங்களிருவருக்கு மிடையில் வந்தார். ஒரு சிறு பாத்திரத்தில் சிறிது கங்கை நீரை எடுத்து வந்த அன்னையார் வழியில் இருந்த ஒவ்வோர் அரச மரத்திற்கும் (Sacred banyan) கொஞ்சம் நீர் ஊற்றினார். வீட்டின் அடித்தளத்தில் நீர்க் குழாய்க்கு அருகில் இருந்த நீர்த் தொட்டிக்குப் பக்கத்தில் தண்ணீர்ப் பாண்டமொன்றிருந்தது. அதிலிருந்த நீரால் அன்னையார் தமது பாதங்களைக் கழுவிக் கொண்டார். என்னைப் பார்த்து, "உன் பாதங்களிலும் மண் படிந்துள்ளது. கழுவிக் கொள்" என்று கூறினார். தண்ணீர் எங்கிருக்கிறதோ வென்று நான் தயங்கிய பொழுது "அந்த நீர்ச் சாலில் நீர் இருக்கிறதே, அதைக் கொண்டு ஏன் உன் பாதங்களைக் கழுவிக் கொள்ளக் கூடாது?" என்று வினவினார். நான் சற்றுத் தயக்கத்துடன் "அந்த நீரை நீங்கள் தொட்டு இருக்கிறீர்களே, நான் அதை எவ்வாறு உபயோகிக்க முடியும்?" என்று கூறினேன். "கொஞ்சம் நீரைத் தலையில் தெளித்துக்கொள்" என்றார் அன்னையார். ஆனால் நான் மீண்டும் தயங்கியதோடு "அந்த நீரை நான் உபயோகிக்க முடியாது" என்று கூறினேன். வேறொரு பாத்திரத்தில், நீர்த் தேக்கத்திலிருந்து கொஞ்சம் நீரை எடுத்து என் கை கால்களைச் சுத்தம் செய்து கொண்டேன். *

* அன்னையார் ஸ்பரிசித்த நீர் புனிதமாய் விட்டதால் அதைக் கொண்டு கால் கழுவுவதற்குச் சிஷ்யை தயங்கினாள். அதை முதலில் தலையில் தெளித்துக் கொண்டு பிறகு காலைக் கழுவலாம். இவ்வாறு செய்வது மரியாதைக் குறைவாகாது என்று அன்னையார் கூறினார்.

இவ்வளவு நேரமும் அன்னையார் எனக்காக காத்துக் கொண்டிருந்தார். பிறகு நாங்கள் மாடிக்குச் சென்றோம். இரண்டு இலைகளில் அன்னையார் நிவேதனமாயிருந்த தின்பண்டங்களையும் பழங்களையும் எடுத்துக் கொண்டவராய் என்னைத் தம் மருகில் அமருமாறு கூறினர். மிகுந்த ஆதரவுடன் அன்னை எனக்குப் பிரசாதத்தை அளித்துத் தாமும் கொஞ்சம் உண்டார்.

சிலர் சிலராகப் பல சிஷ்யைகள் ஒன்று கூடினர். அவர்களை எனக்குத் தெரியாது. அவர்கள் பகல் போஜனத்தை அங்கு உட்கொள்ளுவது வழக்கம். பூஜை முடிந்தபிறகு நாங்களனைவரும் உண்ண அமர்ந்தோம். அன்னையாரும் தம் இருப்பிடத்தில் அமர்ந்தார். அவர் மூன்று கவளங்கள் உட்கொண்டு விட்டு எனக்குக் கொஞ்சம் பிரசாதம் தந்தார். மற்ற அனைவருக்கும் பிரசாதம் விநியோகிக்கப்பட்டது. அன்னையார் இப்பொழுது எப்பொழுதும்போல இருக்கலானர். மீண்டும் குதூகலமாக ஆனர். தீக்ஷை தந்த நேரம் முதற்கொண்டு அவர் முற்றிலும் வேறான மனே நிலையில் இருந்தார். அமைதி நிறைந்த கம்பீரத்துடனும் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டும் இருந்தார். வரமளிக்கவோ கொடுமையைத் தண்டிக்கவோ தயாராகவிருக்கும் தேவதை போலவே இருந்தார். நான் வியப்புடனும் அச்சத்துடனும் நடுங்கிக்கொண்டிருந்தேன். பல சிஷ்யைகளுக்குப் பிற் காலத்தில் அன்னையார் தீக்ஷை தருவதை நான் கண்டிருக்கிறேன். ஆனால் அப்பொழுதிருந்ததைப் போல ஆழ்ந்த அமைதி நிறைந்த மனே நிலையில் அன்னையாரை நான் மீண்டும் காணவில்லை. சிரிப்புடனும் வேடிக்கையுடனும் அவர் அனேகருக்குத் தீக்ஷை யருளினர். அவர்களும் இன்பமும் திருப்தியும் அடைந்தனர். ஆவலால் தூண்டப்பட்டவளாய் நான் தீக்ஷை சமயத்தில் அன்னையார் எவ்வாறு இருந்தார் என்று சிஷ்யைகளைச் சில சமயங்களில் கேட்பதுண்டு. நடுத்தர வயதுள்ள விதவை ஒருத்தி ஒரு தடவை என்னிடம் "அன்னையார் தீக்ஷை சமயத்தில் எப்பொழுதும் காணப்படுவதைப் போலவே இருந்தார். விசேஷ மாறுதல் அவரிடம் ஏதுமில்லை. என் குலகுரு எனக்கு முன்பே தீக்ஷை தந்திருந்தார். பிறகு நான் அன்னையாரைப் பற்றிக் கேள்வியுற்று அவரிடம் தீக்ஷைபெற வந்தேன். குலகுருவிடமிருந்து பெற்றிருந்த மந்திரத்தைப் பத்துத் தடவைகள் உச்சரிக்கும்படி அன்னையார் முதலில் என்னைப் பணித்தார். அதன் பிறகு எனக்குத் தீக்ஷையருளினர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் என் குருவென்றும் வேறொரு தெய்வந்தான் என் இஷ்டமென்றும் அன்னையார் தெரிவித்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணரை இவ்வாறு வேண்டும்படி எனக்கு உபதேசித்தார் :— 'பகவானே! இந்த ஜன்மத்திலும் முன் பிறவிகளிலும் செய்துள்ள எல்லாப் பாபங்களினின்றும் என்னை விடுவிக்க அருள் கூறுங்கள்' என்றவாறு. இப்பொழுதெல்லாம் நான் மிகவும் குழம்பி யிருக்கிறேன். அதற்குக் காரணம் கூற உன்னால் முடியுமா? அரைமணிக்கு அதிகமாக மந்திரத்தை உச்சரிக்க என்னால் முடிவதில்லை. என் ஆசனத்தினின்றும் யாரோ ஒருவர் என்னைத் தள்ளி விடுவதுபோலத் தோன்றுகிறது. நீயும் அம்மாதிரியே உணருகிறாயோ? இதைப்பற்றி அன்னையாரைக் கேட்க வேண்டுமென்று அடிக்கடி நினைக்கிறேன். ஆனால் அவரைக் கேட்பது என்னால் கூடவில்லை. நீ அன்னையாருடன் வெகு தாராளமாகப் பழகுகிறாய். அவர் என்னை ஏமாற்றி விட்டாரோ?" என்றெல்லாம் கூறினர். இந்த விவரங்களையெல்லாம் அறிய நான் விரும்பவேயில்லை.

ஆனால் அந்த மாது ஒளிமறைவின்றி இதை யெல்லாம் வெளிப்படுத்தினாள். "தயவு செய்து நீங்கள் அன்னையாரிடம் உங்கள் உள்ளத்திலுள்ளதைக் கூறுங்கள். முதலில் உங்களுக்குக் கொஞ்சம் கூச்சம் தோன்றலாம். ஆனால் சிறிது நேரத்தில் அது மறைந்துபோகும். முதலில் நாங் களும் அவரிடம் தாராளமாகப் பழக முடியவில்லை. இப்பொழுதும்கூடச் சிற் சில சமயங்களில் அன்னையார் ஆழ்ந்த அமைதியுடன் இருக்கும் பொழுதெல் லாம் நாங்கள் அவரண்டையிலும் போவது முடிவதில்லை" என்று நான் விடை கூறி னேன்.

மாலையில் பெண்டிர் ஒவ்வொருவராக அன்னையாரிடம் விடைபெற்றேகினர். அன்னையார் தம் உடன் பிறந்தார் புத்திரி களைத் தியானமும் பிரார்த்தனையும் செய்யு மாறு கூறினர். அவர்கள் காலதாமதம் செய்ததால் அன்னையார் அதிருப்தியுடன் "மாலைப் பொழுதாய்விட்டது. தியானம் செய்வதற்குப் பதிலாக வம்பு பேசிக் கொண்டிருக்கின்றீரே!" என்று சொன் னார். கோலப்மா, யோகின்மா, ஏனைய சிஷ்யைகள் யாவரும் அன்னையாரை அடி பணிந்தனர். அவர்கள் சிரங்களில் கையை வைத்தோ, அவர்களது மோவாயைத் தொட்டோ, அல்லது முத்தமிட்டோ அன்னையார் அனைவரையும் ஆசீர்வதித் தார். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உருவத்தின் முன் வந்தனம் செய்துவிட்டுத் தியானா ஸனத்தில் அமர்ந்தார். அவரது தியானம் முடிந்த பிறகு நான் அன்னையாரிடம் விடைபெற்று வீடு திரும்பினேன்.

---

# அஹிம்ஸை

(ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள்)

கோழைத்தனத்தின் காரணமாக அஹிம்சையை அநுஷ்டிப்பீராகில் அது ஒன்றுக்கும் பிரயோசனப்படாது. மனி தரால் அடைய இயலும் அவ்வளவு வலிமையும் பொறுமையும் உடைய ஒருவ ராலேயே உண்மையில் அஹிம்சையை அனுஷ்டிக்கமுடியும். அதாவது அபார அன்போடு அளவுகடந்த தீரமும் வேண் டும் என்பதாகும். அருவருப்போ விரோதமோ அனுலத்தனை இருந்தாலும் அஹிம்சையை அநுஷ்டிக்க இயலாது.

ஆன்மீய உயர்வாழ்க்கையில் ஈடுபடும் போது எவரது வழியிலும் குறுக்கே நிற் காதீர்; நல்லவர் தீயவர் எவர்மீதும் வெறுப்பும், விரோதமும் உண்டாகும்படி பிரசாரம் செய்யாதீர்; எவராயிருப்பினும் காலினல் மிதித்துத் தள்ளாதீர். எவரை யும் அழுத்தி நசுக்காதீர். உமது அல்லது உமக்கு வேண்டியவரது சந்தோஷத்தின் காரணமாக, பிறரது நலன்கள் பாதிக்கும் படி நடக்காதீர். மிருகவுலகத்திலே, தகுதியுடையவனே வாழத்' தகுந்தவன் என்னும் போராட்டம் அவசியமாகிறது. ஆனால் நாம் மக்களாக வாழவிரும்பினல் மாக்கள் உலகத்துக்கும் சுபாவத்துக்கும் அப்பாற் செல்லவேண்டுவதவசியம். அன் பும் அஹிம்சையும் நமது மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றின் மூலமும் வெளிவர வேண்டும். மனோவிருத்திகளால் நாம் அலைக்கப்படக்கூடாது. விருப்பு வெறுப்பு களுக்கு அப்பாற் சென்று வெறும் சாக்ஷிமாத்திரமாக இருந்து அனைத்தை யும் கவனிப்போம்.

எவரது வழியிலும் குறுக்கிடாதும், எவரையும் அடிமையாக்காமலும் இருக்க வேண்டியது, ஆன்மநேய சாதகனது இலக்ஷியங்களாக விருத்தல் வேண்டும். ஏனெனில் அவனது இலக்ஷியம் மிருக வாழ்க்கை யல்லவாதலால், மிருக உலகின் விதிகள் அனைத்தையும் அவன் கடந்து செல்லவேண்டும். அன்றேல் அவன் மனிதனாகமாட்டான். அதிகமான தியாகம் செய்ய நேர்ந்தாலும் பிறர்க்குதவுதலில் அவன் கருத்துள்ளவனாக விருக்க வேண்டும். தமது சுயகாரிய சித்திக்காகப் பிறர் தன்னை ஈடுபடுத்துவதற்கு இடந்தரல் கூடாது.

அஹிம்சை அதியுயர்ந்த இலக்ஷியம். படிப்படியாக நாம் முன்செல்லவேண்டும். சிந்தனை— அதோடு செய்கையும் ஆகிய இரண்டின் மூலமும் அஹிம்சை அநுஷ்டிக்கப்படவேண்டும். எல்லாக் கல்மஷங்களும், வேகமும் நீக்கப்பட்டு மனம் பரிசுத்தமடையவேண்டும். முன்னேற்றம் எய்துவோமானால்தான் உண்மையில் நாம் அஹிம்சையை அநுஷ்டிக்க முடியும். நமது அஹிம்சையின் இலக்ஷியமும், அதனை முழுதும் அநுபவமாக்குவதும் ஆகிய இரண்டும் ஒன்றுக்கு ஒன்று வெகு தொலைவிலுள்ளன. எனவே நாம் நம்மன மறியப் படிப்படியாக முன் செல்வோம். நம் எண்ணம், சுபாவம் இவற்றினைத் தீர்க்கமாக ஆலோசித்து அலசிப் பார்ப்போம்.

உயர்ந்த நிலையில் நீர் ஆத்மீய சக்தி அடையப் பெறுவீர்; அதன் பிறகு ஏனையோர் உம்மைத் தமது சுயகாரியத்திற்காகப் பிரயோசனப்படுத்திக்கொள்ள முடியாதவர்களாவர். இலக்ஷிய சம்பந்தமான பிரச்னைகள் எழும்போது இளகிய மனதும், பலவீனமும் கூடாது. எது வருவதெனினும் சிறிதும் இளகாதீர். 'இணங்கிச் சரிகட்டிச் செல்வோம்' என்பதனைச் சிறிது சிறிதாக அகற்ற முயல்வோம். நமது உயர்ந்த இலக்ஷியம் நமது பார்வையிலிருந்து அகலுதல் கூடாது. மிருதுத்வம் கோழைத்தனம் ஆகியவற்றை உயர் ஒழுக்கமாகக் கொள்ளுதல் கூடாது. நம்மிடமுள்ள எல்லா ஹிம்சைகளோடும் நாம் எதிர்த்துப் போர்செய்தல் வேண்டும். மிருதுவான சுபாவம்தான் அஹிம்சை என்று எண்ணாதீர். 'ஹூஸ்' என்று சத்தம் செய்து பயமுறுத்தாமற் போனால் இந்த ஆபாசமும் கல்மஷமும் நிறைந்த உலகத்தில் உம்மால் உயிர்வாழ முடியாது. 'ஹூஸ்' என்னும் பயமுறுத்தும் வழி என்றும் நம்மிடத்தில் நிலைத்து விடவும் கூடாது.

உ

உமது விவேக புத்தி அதிகரிக்குமளவும் சமத்துவத்தைக் கைவிடாதீர். மனத்தளவிலேயே அதை அநுஷ்டிப்பீர். வெளியே காட்டவேண்டாம்.

காமக்குரோத லோபங்கள் மனத்தகத்தே எழும்போது அவைகளுக்குச் சரீரத்தில் சிறிதும் இடங்கொடாதீர்; அவை மேலும் திரும்பத்திரும்ப எழ இடங்கொடுக்காது அடக்கி அவை எழுவதற்குத் தூண்டுதலாகவுள்ள அனைத்தையும் அப்புறப்படுத்துவீர்; அவற்றினின்றும்விலகி நிற்பீர். மனத்தைச் சாந்தப்படுத்தமுயல்வீர்; எல்லாப் போகப் பொருளிலிருந்தும் மனத்தைப் படிப்படியாகவும், என்றாலும், உறுதியாகவும் விலக்க வேண்டும். ஒருமுறை அத்தகைய எண்ணம் உமது வாழ்க்கையில் ஆதிக்கியம்பெற இடந்தருவீராகில் பிறகு அதன் சுவட்டினை அகற்றுவது கஷ்டமான காரியமாக அமையும். ஒவ்வொரு துர் எண்ணமும் உமது மனத்தில் ஒரு பதிவினைச் செய்துவிட்டுச் செல்கின்றது. அதனால் ஆத்மஞான சாதகன் அப்பதிவுகளை அகற்றி மனத்தைப் பரிசுத்தப்படுத்தி முன்னேறுவதற்கு மிகுந்த சிரமம் எடுத்

துக்கொள்ள வேண்டிய தவசியமாகிறது. நீர் எப்போதுமே எண்ணியிராத பல துர் எண்ணங்கள் உமது தியான காலங்களில் எழுவது கண்டு, உண்மையில் நீர் ஆச்சர் யப்படுவீர்.

'எப்பொழுதேனும் ஆசைகள், கோபம், பொறாமை, விரோதம் இவைகளும் இவைபோன்றனவும் உம்மைத் துன் புறுத்துமாகில், அவைகளுக்குச் சிறிதும் செவிசாய்க்காது அமைதியாக ஓரிடத் தில் உட்காருவாய்'

மனப்பரிசுத்தத்தை அகற்றி, உமது சாதன வாழ்க்கையில் குறுக்கே நிற்குமா னால், அத்தகைய எண்ணம் உமது மனத்தி னின்றும் அகல மனத்தைப் பிறிதொரு நல்ல எண்ணத்தைக் கொள்ளும்படித் திருப்புவீர். துர் ஆசைக்குச் சிறிதும் இடம்கொடுக்கவேண்டாம். கொடுப்பீரேல் ஒவ்வொரு கெட்ட எண்ணமும் நீக்குவ தற்குக் கஷ்டமான பதிவினை ஏற்படுத்தி விட்டுப்போகும். ஆசைகட்கும் மன வேகங்கட்கும் அடிமைப்படுவது சுதந்தா மன்று. மற்றப்படி ஆசை முதலியவற் றிற்கு, திரும்ப அவை உம்மை ஒருபோ தும் அணுகாதபடி, நல்ல பாடம் கற் பித்து, மனம் சரீரம் ஆகிய உமது சொந்த வீட்டிற்கு நீர் எஜமானரா யிருத்தலே சரி. எவன் தனது மனோவேகங்கட்கும், ஆசாபாசங்கட்கும் இடம் கொடுக்கிறானோ அவன் சுதந்தரபுருஷனுகான். ஆனால் மக் களுள் பலர் தாங்கள் அடிமை வாழ்வு வாழ்கிறார்கள் என்பதனை அறிந்து கொள்ளுகிறதில்லை.

௩

வீண் தர்க்கங்களில் காலம் கழிக்காதீர்; பாழான புத்தகங்களைப் படிக்காதீர். காரிய மில்லாமல் கண்டவரைக் காணச்செல்லா தீர். நீர் எவருடன் பேசுகிறீரோ அவர் உண்மையில் மனமாற விரும்புகின்றாரா, உமது வார்த்தைகள் உண்மையில் அவ ருக்குப் பிரயோசனப்படுமா என்பதறிந்து வார்த்தையாடுதல் அவசியமாகும். "எது நம்மைச் சத்தியத்துக்குக் கொண்டு செல் லுமோ, அத்தகைய வாக்குவாதத்தி லேயே நாம் கலந்து கொள்ளவேண்டும்; ஏனைய வற்றிலல்ல," என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணதேவர் புத்திமதி கூறுவர்.

இவ்விஷயங்களைக் குறித்து நீர் அஜாக் கிரதையாக இருப்பீராகில், இந்த அஜாக் கிரதைக்கான சிரமம் ஒரு நாள் உம் மிடமிருந்து வட்டியுடன் வாங்கப்படும். வட்டி செலுத்துவதிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாத நிலைமை ஏற்படுவதன் முன், விழித்திருந்து காத்துக் கொள்வீர். மனவடக்க மில்லாமலும், ஆசாபாசங்களை அடக்காமலும் ஆத்மீய சாதனையில் ஈடு படுவதென்பது இயலாத காரியமாகும். ஆசாபாசங்களிலிருந்து விடுபடாமலும், விருப்பு வெறுப்பை அகற்றாமலும், நேசம் பற்றுதல்களைக் கடக்காமலும் ஆத் மீய வாழ்க்கை வாழ்வதென்பது குதிரைக் கொம்பாக அமையும்.

---

# இராவண தத்துவம்

(தொடர்ச்சி)

(சுவாமி சித்பவானந்தர்)

## இலங்கையைப் பற்றுதல்

நான்கு பக்கங்களிலும் கடலால் சூழப்பட்டிருந்த திரிகூடம் என்ற பர்வதம் ஒன்று இருந்தது. அம்மலையின் உச்சியில் இலங்கை யென்னும் பட்டணம் அமைக்கப் பெற்றிருந்தது. அமராவதியோடு ஒப்பிடுதற்கேற்ற சிறப்பு வாய்ந்தது அந்நகரம். அதைச் சுற்றிலும் வெள்ளிமயமாகி வெளுத்திருந்த பெரிய மதில் ஒன்று இருந்தது. அப்பேரூரில் மெத்தை, மேடை, முற்றம் முதலிய யாவும் பொன்மயமாயிருந்தன. வெளி வாசற்படிகளோ வைடூரிய மணியால் செய்யப்பட்டவைகள். அதில் யானைகளும் குதிரைகளும் தேர்களும் நிறைந்திருந்தன. வாத்தியங்களின் முழக்கங்களும் அவ்விடத்திருந்து ஓயாது ஒலித்துக் கொண்டிருந்தன. அத்தகைய பட்டணம் நெடுநாளாகக் குபேரனுக்குச் சொந்தமாயிருந்தது. சாமானிய மனிதர்களால் அவ்வூர் அணுக முடியாதது.

இராவணன் குபேரனுக்குத் தம்பி. மாற்றாந்தாய்மார்களுக்கு இருவரும் புதல்வர்கள். இளையவனுக்குப் பயந்து குபேரன் தன் ராஜதானியை விட்டுக் கைலாசத்துக்கு ஓடிவிட்டான். சிவ சான்னித்தியமாகிய அந்த இடத்தில் இராவணனுடைய தொல்லை யேற்படாதென்பது மூத்தவனுடைய கருத்து. எல்லாப் பொருள்களும் நிறைந்திருந்த இலங்காபுரியைப் பறிகொடுக்கும்படி அண்ணனுக்கு நேர்ந்தது. அவன் அடைந்த தோல்வி அத்துடன் நின்று விடவில்லை. எங்குச் சென்றாலும் தொந்தரவு தன்னைத் தொடர்ந்து வாராதென்று குபேரன் மனக்கோட்டை கட்டினானோ அந்தக் கயிலாய கிரியிலும் அரக்கர் கோன் அவனை எதிர்த்தான். அண்ணனானவன் தம்பியின் கையில் தோல்வியுண்டதே, அத் தாக்குதலின் விளைவாயிற்று. விரும்பிய இடத்துக்கு எடுத்துச்செல்லும் புஷ்பக விமானம் குபேரனுடைய செல்வங்களுள் சிறந்ததாயிருந்தது. இப்பொழுது அதையும் அவன் இழக்கும்படி நேரிட்டது. ஊர்களுட் சிறந்த இலங்கைக்கு வேந்தனானது மல்லாது, வாகனங்களுட் சிறந்த புஷ்பக விமானத்தையும் இராவணன் பெறுவானாயினன்.

மூலப்பிரகிருதியே எண்ணிறந்த செல்வங்களாகவும் இன்பப் பொருள்களாகவும் வடிவெடுக்கிறது. அவைகளையெல்லாம் ஒரு தேவதையாக உருவகப்படுத்தும் போது அவன் குபேரன் அல்லது தனபதி என்னும் பெயர் பெறுகிறான். நரன் தனத்துக்கு அடிமையாகின்றானாகையால் அவன் குபேரனுக்கு வாகனமாகின்றான். இயற்கையிலுள்ள செல்வங்களெல்லாம் மனதுக்கு முன் பிறந்தனவாயினும் முயற்சியால் மனது அச் செல்வங்களையெல்லாம் தன் வசப்படுத்திக் கொள்ளக்கூடும். குபேரனை இராவணன் வென்று, இலங்கையைக் கைப்பற்றிய வரலாறு இவ்வுண்மையை விளக்குகின்றது.

## பராக்கிரமம்

இராவணனுக்கு லோக-ராவணன் என்னும் பெயர் உண்டு. உலகங்களையெல்

லாம் அழச் செய்பவன் என்பது அதன் பொருள். அரக்கர் கூட்டத்துக்கு அவன் தலைவன். ஆதலால் அத்தகைய அதமர் களுக்கு எப்பொழுதும் இன்பத்தை விளை விப்பவன். தேவர்களோடும் அசுரர்க ளோடும் கின்னரர்களோடும் கூடிய எல்லா உலகங்களையும் பயப்படுத்தவல்ல ராக்ஷசப் பிரபு அவன். இந்திரன் முதலிய தேவர்களும் அவனுடைய முகத் தைப் பார்ப்பார்களாயின் அப்பொழுதே பயந்து ஓடிப்போவார்கள். அவன் எவ் விடத்திலாவது நின்றாலும் உலாவினாலும் அவ்விடத்தில் காற்றும் அச்சத்தால் மெதுவாக வீசிக்கொண்டிருக்கும். சூரியன் கொடிய கிரணங்களை உடையவனாயினும் இராவணனைக் கண்டு நடுங்கிக் குளிர்ந்த கிரணங்களைப் பரப்புவான். எங்கெங்கு அவன் சஞ்சரிப்பானோ அங்கெல்லாம் விருக்ஷங்கள் இலையும் அசையாதிருக்கும். நதிகளும் ஓடாது நின்றுகொண்டிருக் கும். முப்பத்து முக்கோடி தேவர் களையும் வென்றவன் அவனே. தனது வீரியத்தைப்பற்றி யெண்ணி அவன் பெரிதும் தற்பெருமை கொண்டிருந் தான். அவன் வகித்த உயர்நிலையில் இருக் கும் யாருக்குத்தான் கர்வம் உண்டா காது? யுத்தத்தில் பின்வாங்கியதை அவன் கனவிலும் கண்டதில்லை.

துன்பத்தை யறியாத முனிவர்களுக் கும் ரிஷிகளுக்கும் துன்பத்தை யுண்டு பண்ணுதற்குப் பத்துத்தலை இராவண னுடைய பெயரைச் சொன்னால் போது மானது. அவன் கையில் அவர்கள் பட்ட பாட்டை அத் தபோதனர்களே நன்கு உணர்வார்கள். அல்லலற்று அமைதியுற் றிருக்க விரும்பும் அன்னவர்களை அலக் கழிப்பதில் அவனுக்கு அலாதியான ஆனந்தம்.

இலங்கை வேந்தன் செய்த திக்குவிஜ யம் மூவுலகங்களிலும் பரவியது. கீழ், நடு, மேல் ஆகிய எல்லா உலகங்களுக்கும் அவன் எளிதில் போவான். அவனுக்கு சமுத்திர வேகத்தை நிகர்த்த வேகமும் வாயுவோடொத்த கமன சக்தியும் உண்டு. அவனுக்கு யுத்தம் புரிதற்கும் விளையாடு தற்கும் வித்தியாசமில்லை. வில்லோசை யால் வீணை வாசிப்பதுபோன்று செய்து சத்துருக்களை அவன் மாய்ப்பான். ஓர் அஸ்திரத்தை எடுப்பதுபோன்று மற் றொன்றை எடுத்துப் பிரயோகிப்பான். அவன் கோபித்தால் மூவுலகும் அவனை எதிர்க்க முடியாது. அத்தகைய பராக் கிரமம் வாய்க்கப்பெற்றவன் இராவணன்.

இப் பராக்கிரமங்கள் அனைத்தும் மன துக்கு உண்டு. நினைவு கனவு சுழுத்தி ஆகிய மூன்று அவஸ்தைகளிலும் அதன் ஆதிக்கம் செல்லுகிறது. நல்ல வர் கெட்டவர் ஆகிய இருதரத் தாரும் மனத்தின் வசப்பட்டவர்க ளாகவே இருக்கின்றனர். மனதோடு போராடாத முனிவர்களே இல்லை யென லாம். தீர்மானம் செய்துகொண்ட மன துக்கு எதையும் சாதிக்கும் வல்லமை யுண்டு. குளிர் வெப்பம் காற்று மழை முதலியவைகளின் குற்றங்களை நீக்கவும் குணங்களைப் பெருக்கவும் வல்லது மனது. என்னென்ன காரியங்களை யெல்லாம் மன தைக்கொண்டு சாதிக்கலாம் என்பதை இராவணன் தன்னுடைய பராக்கிரமங் களால் விளக்குகிறான். மனது செயலற் றுக் கிடப்பது சிறப்பன்று. செய்ய வேண்டியதைச் சீருடனும் வலிவுடனும் செய்து சாதிப்பதே வாழ்வின் நோக்க மாகும்.

## ஆட்சி முறை

அயோத்தி, கிஷ்கிந்தை, இலங்கை ஆகிய மூன்று தலைமைப் பட்டணங்களி லிருந்த அரசாங்கங்களை வால்மீகி மகரிஷி விளக்குகின்றார். தர்மத்துக்கு இருப்பிடம்

அயோத்தி. ஆனால் அங்கு அரும் பெருஞ் செயல்களின் வெளித்தோற்றம் மிகக் குறைவு. நெறியைத் திரிவு படுத்துதலும், ஆற்றலை நன்கு பயன்படுத்தாமையும் கிஷ்கிந்தையில் காணப்படுகின்றன. மக்கள் இம்மையில் இன்புற்று வாழ்தற்கு அரசனுடைய ஆற்றல் எவ்வளவு தூரம் பயன்படும் என்பதை இராவணனுடைய ஆட்சி விளக்குகின்றது. அவனுடைய குடிகள் துன்பம் ஒன்றையும் அறிந்திலர். எல்லாவிதமான இன்பங்களையும் அவர்கள் வேண்டியவாறு துய்த்துத் திருப்தி யடைந்திருந்தனர். உள்நாட்டுக் கலகத்துக்கும் ஆட்சி முறையைப்பற்றிய அதிருப்திக்கும் ஆங்கு இடமில்லை. ராஜ துவேஷத்தையும் இலங்கையில் காணமுடியாது. வேந்தனுக்காக வென்று குடிகள் எதையும் செய்ய ஆயத்தமா யிருந்தனர். நுழைதற்கரிய இலங்கையினுள் புகுந்து பார்த்த அனுமானுக்கு இத்தகைய காட்சி தென்பட்டது.

மந்திராலோசனை செய்யாது இராவணன் எக்காரியத்திலும் பிரவேசிப்பதில்லை. அமைச்சருடைய எண்ணத்தை அனுசரித்தே அவன் ஒழுகுவானாயினன். ராஜநீதியில் அவன் பண்டிதன். வேண்டுமானால் சர்வாதிகாரங்களையும் தானே குறைவின்றி நடத்தக்கூடும். அத்தகைய அறிவும் ஆற்றலும் இருந்தும் அமைச்சர்களுடைய அபிப்பிராயத்தைத் தழுவியே ஆட்சி புரிந்தது, அவன் அடைந்திருந்த பண்பை நன்கு விளக்குகின்றது. செயலற்று, ஒன்றுக்கும் உதவாது பெயரளவில் அரசனாயிருக்கும் கீழ்மை ஒருபுற முண்டு. ஆணவத்தால் தன் போக்கிலே முயன்று, மக்களுக்கிடையில் துயரத்தை வழங்கும் கொடுங்கோன்மை மற்றொரு புறமுண்டு. இவ்விருதாக் கயமைகளையும் இராவணன் விலக்கினான். முடியரசும் குடியரசும் அவன்பால் ஒன்றிக்கலாயின.

இலங்கேசனுடைய ஜனஸ்தானம் வடக்கே பஞ்சவடி பரியந்தம் எட்டுகிறது. இப்படி நாற்றிசையிலும் நெடுந்தூரத்தில் அவனுடைய படைகள் எதிரிகளைத் தாக்கவும் நாட்டின் எல்லைப்புறத்தைக் காக்கவும் ஆயத்தமாயிருக்கின்றன. ராமனுக்கும் கரனுக்கும் நடந்த குட்டிப் போர் உடனே தலைமைப் பட்டணத்துக்கு எட்டுகிறது. ஆங்காங்கு அமர்த்தப் பட்டிருக்கும் ஒற்றர்களே விரைவில் வினையாற்றுதற்கு மூலகாரண மாகின்றனர். எதிரிகள் உள்ளே நுழையா வண்ணம் இலங்காபுரி பாதுகாத்து வைக்கப் பட்டிருந்த முறையானது எக்காலத்தவர்க்கும் பாடம் புகட்டக் கூடியதாம். உள்நாட்டு ஒற்றுமையும் இனிய வாழ்க்கையும், வெளிநாட்டில் வேண்டியவர்களோடு செய்துகொண்ட உடன்படிக்கையும், வேண்டாதவர்களோடு நிகழ்த்திய போரும்—ஆகிய இவையாவும் இராவணனுடைய சீரிய ஆட்சிமுறையை நன்கு விளக்குகின்றன. அரசாங்கம் எத்தகைய உறுதி வாய்ந்ததாயிருக்க வேண்டும் என்பதற்கு இராவணனுடைய ஆட்சியே சான்றாகும்.

மனது ஆற்றலுடையதாயும் பண்பட்டதாயும் இருக்குமாயின் ஒவ்வொரு செயலிலும் அதன் மேன்மை விளங்கும்.

### சீர் அமைப்பு

எதிரியை வெல்லுதற்காக என்று இலங்கையினுள் பிரவேசித்த ராமன், அவ்வூரின் அமைப்பைப் பார்த்து அதிசயிக்கிறான். அத்துறையில் தான் கற்றுக் கொள்ளுதற்கான பாடம் பகைவனிடத்து உண்டு என்பதையும் அவன் அறிகிறான். இலங்கையின் சீர் அழகை அயோத்தியி

லும் செய்விக்கவேண்டுமென்று அவன் எண்ணியிருக்கக்கூடும்.

இயற்கை யழகு பொருந்திய திரிகூட பர்வதத்தைப் பட்டணம் கட்டுதற் கென்று பார்த்தெடுத்தவன் நுண்ணறி வாளனாயிருந்திருக்க வேண்டும். அப் பீடபூமி மட்டமாகவும் விசாலமாகவும் இருந்தது. ஊரை வேண்டியவாறு விரிப்ப தற்கு அது இடம் கொடுத்தது. அகன்ற வீதிகள் நேராக வகுக்கப்பட்டிருந்தன. மாளிகைகள் ஒன்றோடொன்று பிணைந்து கொள்ளாது தனித்தனியாகவும் அணி யணியாகவும் அமைந்திருந்தன. இரண்டு வீடுகள் ஒரேவிதமாய் அமைக்கப்பட் டிருப்பதை எங்கும் காணமுடியாது. ஒவ் வொரு மாளிகையும் தனக்குத்தானே மாதிரியாயிருந்தது. மூலை முடுக்கு ஆகிய எங்கும் ஒரே துப்புரவு. மரம் செடி கொடிகளின் வளமும் நீர் நிலைகளின் வனப்பும் மனத்தைக் கவர்வனவாயின. மான் மயில் குயில் முதலியன அவ்வூரைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்ட வைகள் போலக் குலாவி விளையாடின. பூஞ்சோலைக்கிடையில் ஊர் அமைந்ததா அல்லது ஊருக்கிடையில் பூஞ்சோலை அமைந்ததா என்பது சந்தேகம். இயற் கை யழகும் செயற்கை யழகும் அங்ஙனம் ஒன்றித்து இலங்குவன வாயின.

ஊரைச்சுற்றிலும் ஆழமான அகழி. அதன்மீது நான்கு திக்குகளிலும் பாலம். வேண்டும்பொழுது பாலத்தை யந்திரத் தால் மாட்டிவைக்கவும் மடக்கிவைக்கவும் கூடும். சூரிய கிரணம் மிகைபடா மலும் குறைபடாமலும் இலங்கையில் விழும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வேண்டியவாறு வீதிகளில் நீர் தெளிக்க வும், காற்றைக் கொண்டு தூசியை உறிஞ்சியெடுக்கவும் கற்றுக்கொண்டிருந் தனர். வருணனும் வாயுவும் வேலைசெய் தார்களென்று இக்கருத்து உருவகப்ப டுத்தி இயம்பப்படுகிறது.

விருக்ஷங்கள் வருஷ முழுதும் புஷ்பங் களையும் பழங்களையும் தந்துகொண்டிருந் தன. இராவணன் விரும்பியபொழுது மலை களும் மேகங்களும் ஜலத்தைக் கொடுத் தன. நவீன பௌதிக சாஸ்திரம் நமக் குத் தந்துள்ள தனிச் சௌகரியங்கள் பல வற்றை அக்காலத்தே இராவணன் உலகுக் குத் தந்திருப்பதாகத் தெரியவருகிறது. இயற்கையின்கண் உள்ள மேன்மைகள் எக்காலத்துக்கும் பொதுவானவைகளே. கையாள முயலும்பொழு தெல்லாம் அவைகள் பயன்படுகின்றன. இக்காலத் திய மக்கள் பஞ்ச பூதங்களையும் நான விதங்களில் பயன்படுத்திக் கொள்வது போன்று முற்காலத்தவரும் பயன்படுத்தி யிருந்திருக்கலாம்.

ஒருவன் குடியிருக்கும் வீட்டையும் அதில் அவன் வைத்திருக்கும் பண்டங் களையும் பார்த்தால் அவனுடைய மனப் பான்மை விளங்கிவிடும். உள் உலகு ஆகிய மனது ஓர்மைப்படுகின்ற அளவு வெளி யுலகில் ஓர்மையாகவும் அழகாகவும் அது வடிவெடுக்கிறது. இராவணன் பண்பட்ட மனதையுடையவன் என்பதற்கு அவ னுடைய ராஜதானியில் பொலியும் சீர் அமைப்பே சான்றாகும். அவனுடைய மனது முற்றிலும் தகைமை பெற்றது என்பதை ஒவ்வொரு சிறு பொருளும் விளக்குகின்றது. இராவணன் முதல்தர மான இரசிகன் ஆவன். எப்பொருளை எங்ஙனம் கையாண்டால் அது பண்பும் பயனும் பெறும் என்பது அவனுக்குத் தெற்றெனத் தெரியும்.

பத்து இந்திரியங்களோடு கூடிய மன தின் அவதாரபுருஷனாகிய இராவணன் இக லோக வாழ்க்கையை வாழ்தல் இவ்வாறு என்பதைத் தன் செயலால் விளக்குகிறான்.

மனதின் அழகையும் ஆற்றலையும் பாழ்படுத்துவது மேன்மை எனப்படமாட்டாது. உள்ளத்தில் புதைந்து மறைந்து கிடக்கும் இனிமையையும் எழிலையும் தகைமையையும் தோற்றுவித்தலே வாழ்க்கைப் பயனாம். இப்பொழுது கைவசமுள்ள இவ்வுலக வாழ்க்கையை முறையாகப் பயன்படுத்திக்கொள்ள இயலாதவர் எவ்வுலக வாழ்க்கைக்கும் உரியவர் ஆகார். எப்படியோ உயிர் வாழ்ந்தால் அல்லது காலத்தைக் கடத்தினால் போதாது. பெருவாழ்வு வாழ்பவரே பேறு அனைத்துக்கும் உரியவர் ஆவர். திட்பமும் ஊக்கமும் வாய்ந்த மனமுடையாரே பெருவாழ்வுக்குத் தகுதியுடையவர். இராவணனுடைய வாழ்க்கை புகட்டும் பாடம் இதுவே.

(முடிவுறும்)

---

# சந்தேகம் தெளிதல்

வினா:—என் இளம்பருவ முதற்கொண்டே நம்மை ஆட்டுவிக்கும் தெய்வம் ஒன்று உண்டு என்னும் எண்ணமும் பக்தியும் கொண்டுள்ளேன்; ஆனாலும், எவ்வுருவத்தாலும் அவரை வழிபட என்றால் முடியவில்லை. எதாவது ஓர் உருவத்தை நினைத்து வழிபட்டால்தான் என் மனம் நிம்மதி அடையும் என்று தோன்றுகிறது; ஆனால் எவ்வித உருவமும் தென்படவில்லை. இதற்கு என்ன வழி?

—சு. சொ.

விடை:—அவரவர்க்குத் தனியாக மோக்ஷசாதனமாக உள்ள ஞான சாதனத்தை (உபாசனா மார்க்கத்தை) அவரவரது பழைய வாசனைகளிலிருந்து ஊன்றி நோக்கி அறிந்து, அதற்கேற்ப ஒரு நெறியைத் தெரிந்தெடுத்துக் கூறுவது, அவரவர்க்குத் தீக்ஷையளிக்கும், ஞான குரவரது கடமையாகும். ஆயினும், அத்தகைய ஞான குரவர் ஒருவரைப் பெறும் வரை, சித்தசுத்தியை எய்துவதற்காகவும், மோக்ஷ இச்சையையும் வைராக்கியத்தையும் வளர்த்தகற்காகவும் சாதனம் பழகுதல் மிகவும் நன்றாகும். பின்கூறப்படுவது ஒருவாறு மனதிற்கு நிம்மதியையும் நலத்தையும் உண்டு பண்ணலாம் என்று தோன்றுகிறது.

திவ்விய குணங்களையும் திவ்விய வடிவத்தையும் கொண்ட பகவானை வணங்குவது உலகத்துள்ள பலர்க்கும் ஆறுதலளிக்கக் கூடியதாகும். நமது மனம் எப்பொழுதும் உலக வாழ்க்கையில் நாமரூபமுள்ள பொருள்களின் வாயிலாகவே சாந்தியையும் இன்பத்தையும் பெற்று வந்துள்ள பழக்கமுடையதன்றோ? ஆதலின் ஒரு வடிவத்தைப் பற்ற மனம் ஆசைப் படுதலில் ஆச்சரியம் யாதும் இல்லை. நற்குணங்கட்கெல்லாம் உறைவிடமாகும் ஒரு தெய்வ வடிவத்தைத் தெரிந்தெடுத்துக் கொள்ளுதல் மிக நன்றாகும். எல்லா வடிவங்களும் தெய்வீக குணங்கட்கு இருப்பிடங்களே என்றாலும், சிற்சில குணங்கள் ஒரு வடிவினிடத்துச் சிறப்பாக விளங்குமாதலின், நமது அன்புக்கும் புகழுக்கும் உரிய யாதேனும் ஒன்றைத் தெரிந்தெடுத்தல் வேண்டும். ஓர் உருவத்தை வழிபட்டாலன்றி மனம் நிம்மதி அடையாது என்னும் உணர்ச்சி உள்ளேயிருந்து தோன்றுதலே அதன் அவசியத்தை வெளிக் காட்டும் ஓர் அறிகுறியாகும். நமது மனம் எந்தத் தெய்வ

வடிவினிடத்துச் சிறப்பாக ஈடுபடுகின்றது என்பதை அறிவதற்கு ஒரு வழி உண்டு. நூற்றெட்டு திவ்விய தேசங்களில் உள்ள எம்பெருமான்களிடத்தில் யார்யாரிடத்தில் ஆண்டாளுக்கு விசேஷ பிரீதி ஏற்படுகின்றது என்பதைக் கண்டு பிடிக்க, அவரது தகப்பனாராகிய பெரியாழ்வார் ஓர் உபாயத்தைக் கைக் கொண்டனர். ஒவ்வொரு தேசத்திலுமுள்ள எம்பெருமானது வடிவழகையும் குணவழகையும் வைபவத்தையும் ஆழ்வார் தமது திருமகளார்க்கு எடுத்துரைத்து வந்தார்; வரும்போதே, அவரது அகக் காதலை வெளிப்படுத்தும் புறச் சின்னங்கள் எப்போது உண்டாகின்றன என்பதைக் கவனித்து வந்தார். திருமாலிருஞ் சோலை அழகரையும் திருவேங்கடத்துள்ள எம்பெருமானையும் பற்றிக் கூறும்போது, காதல் நெஞ்சத் தடங்காது பொசிந்து வெளிவந்ததையும், அரங்க நாதனைப்பற்றிக் கேள்வி யுற்றதும், காதலாதரம் கடலினும் பெருகிச் சிந்தையையும் உணர்ச்சியையும் அரித்துச் சென்றதையும் ஆழ்வார் கண்டார்; அதினின்றும் அரங்கனுக்கே ஆண்டாள் உரியவராதலை அறிந்தார். அம்மாதிரியே நம்மை நாம் சோதித்து, நமது விசேஷ விருப்பை உணர்ந்து கொள்ளலாகும். இந்துவாகப் பிறந்து, இந்துக்களின் சமயச் சார்புகட்கிடையிலே வளர்ந்து வந்த ஒருவர்க்குப் பொதுவாகக் கிறிஸ்து மகம்மது முதலான பெரியார்களிடத்து உள்ளூரக்காதல் ஏற்படுவது அருமையாகும். ஆதலின் ஸ்ரீ ராமபிரானது பெருமையைக் கூறும் இராமாயணத்தையோ, கண்ணபிரானது மகிமையைக்கூறும் பாகவதத்தையோ, முருகப்பிரானது அன்பைக்கூறும் ஸ்காந்தத்தையோ, சிவபிரானது பேரருளை எடுத்துரைக்கும் திருவிளையாடற்புராணத்தையோ, தேவியின் திருவிளையாடலைக் கூறும் தேவி பாகவதத்தையோ, புத்தர் பிரானது வரலாற்றைக்கூறும் சரித்திர நூலையோ, பிரேமையன்பின் உருவமேயான சைதன்யரது சரிதத்தையோ, உலகெலாம் போற்றும் மாகுரவராய ஸ்ரீராமகிருஷ்ணர் ஸ்ரீ சுவாமி விவேகானந்தர் இவர்களது சரித்திரத்தையோ நாமாக முழுமனதோடு வாசித்தல் வேண்டும்; அல்லது, முற்கூறிய நூல்களைப் பக்தி சிரத்தையோடு வாசித்துப் பொருளுரைக்கும் அன்பர்களது பிரசங்கங்களைக் கேட்டல்வேண்டும்; இது முன்னையதினும் மேலானதாகும். நமது மனம் நம்வசமாகாதே தானாக எவருடைய சரித்திரத்தில் ஈடுபடுகின்றது என்பதைச் சற்றே கவனிக்கவேண்டும். பொதுவாக எல்லா தெய்வீக வரலாறுகளிலும் மனம் பிரியம் கொண்டாலும், எதில் சிறப்பாக அன்பு பெருகுகின்றது என்பதைக் கவனித்தல் வேண்டும். பின் அந்த வடிவத்திலே பக்தியை முதிரச்செய்யலாம். திரும்பத்திரும்ப அப்பெரியாரது சரித நிகழ்ச்சிகளைவாசித்தும் சிந்தித்தும், அவ்வடிவத்து உண்டாகும் அன்பை வளர்க்கலாம். அன்பு விளைதற்குக் கற்பனா சக்தியே உரமாகும், நினைவே தண்ணீராகும். முற்கூறிய பெரியோர்களது வாழ்க்கைகளைப்பற்றிச் சிந்திக்குங்கால், அவர்களைத் தெய்வ வடிவங்களாகவே கருதவேண்டும். அவர்கள் எந்நாளும் எவ்விடத்தும் எந்நிலையிலும் நமக்குள்ளும் புறத்தும் நின்று, நம்மைக் கவனித்தும் அன்போடு ஆண்டும் காப்பாற்றியும், வருவதாகத் தியானித்தல் வேண்டும். அவர்களை வடிவுகொண்ட "உலவா இன்பச் சுடர்"களாகவும், உண்மை—அறிவு—இன்ப வடிவுடையவர்களாகவும், மனமெனும் திரையில் கற்பனையெனும் கோல் கொண்டு அழகான படம் வரைந்து கொள்ளவேண்டும். பின் அப் படங்களிலேயும், அப் பெரியார்களது

குணம் செயல் முதலியவைகளிலேயும் மனதைச் செலவிடவேண்டும். இவ்வாறு செய்வதால் நாளடைவில் அன்பு வளர்ந்து பக்தியாக மலரும். இப்பெரியார்களை இவ்வாறு தியானிக்கும்போது, நமது அன்பையெல்லாம் வெளியில் முழுதும் இழுக்கும் ஒருவித உறவு முறையை (கடவுளைத் தந்தையாகவோ தாயாகவோ நண்பராகவோ குழந்தையாகவோ காதலனாகவோ கருதும் முறையைக் கைக்கொள்ளவேண்டும். இவ்வாறு பழகும்போது, நமது மனச்சார்பு தானாக வெளித்தோன்றுவதை நாமே அறியலாகும்.

எவ்வித உருவ வழிபாட்டிலும் மனம் ஈடுபடவில்லையாயின், அதனாலும் குற்றமில்லை. மனம் அருவ வழிபாட்டில் எளிதே ருசியுடையதாகலாம். இறைவனுக்கு உருவத் திருமேனியும் அருவத் திருமேனியும் உண்டாதலின் திவ்விய குணங்கட்கெல்லாம் இருப்பிடமாகிய அருவத்தையும் வழிபடலாம். அருவத்தை வழிபடும் போதும், மனம் நிம்மதியடையலாகும். இத்தகைய வழிபாட்டில் இறங்க விரும்புவார், இறைவனை ஒரு வடிவமுடையவனாகக் கருதாமல், பெருஞ்சோதி வடிவாகக் கருதுவதுண்டு. இக் கருத்தையும் பெரியார் ஆதரிக்கின்றனர். இவ்வாறு தியானிப்பதில் பிரியமுடையோர், அந்த சோதியை 'அங்கு இங்குளதபடி எங்கும்' பரந்த உயிருள்ள அறிவுடைய சோதியாகவும், அழிவற்றசாந்தி இன்பம் சக்தி அன்பு அறிவு இவைகட்குப் பிறப்பிடமாயும், அனைத்துலகையும் அனைத்துயிர்களையும் தானே ஆக்கியும் அளித்தும் அழித்தும் வருவதாகவும், தமக்கு உள்ளேயும் வெளியேயும் எப்போதும் இருப்பதாகவும்பொழுது கிடைக்கும்போதெல்லாம், தியானிக்க வேண்டும். இந்த ஜோதி நமக்குள்ளிருந்து கொண்டே நம்மை அழைப்பதாகவும், நம்முடன் பேசவும் நம்மை மருவவும் ஆசைப்படுவதாகவும், நமது விருப்பின்மையாலேயே அது தடைப்படுவதாகவும் பாவித்தல் வேண்டும். அத்தகைய சோதியினும் சிறந்த துணை யொன்று வேறு நமக்கில்லை, என்ற உறுதி பிறக்க வேண்டும். இந்த உருவற்ற எல்லையற்ற சோதியை நினைக்கும்போது, அதைக் காணுதலும் தொடுதலும் அதனோடு நெருங்கி உறவாடுதலும் இயலும் என்று சந்தேகமற நினைத்தல் வேண்டும். அந்த சோதியை அழகுக்கு நிலைக்களமென்றும் கருதலாம். அந்த சோதிக் கடலிலே நமது உடலும் மனமும் உயிரும் துரும்பென மிதந்து செல்வதாகவும், நாம் அதனால் ஆட்டுவிக்கப்படும் கருவியென்பதாகவும், மனப்பூர்வமாக நினைந்து, நம்மை அதனிடத்து ஒப்பித்துவிட்டுச் சும்மா இருக்கலாம்; அதன் கருணையை நினைந்து மனமுருகி, நமது பிரார்த்தனையை அச்சோதிக் கடலிடைச் செலுத்தி, மனச்சாந்தி அடையலாம். உருவத்தில் மனம் ஈடுபடமாட்டாதவர்க்கு இத்தகைய வழிபாட்டு முறை மிக்க பயனைத்தரும். இந்த அரும்பெரும் சோதியே, வேண்டுவார்க்குவேண்டிய வடிவத்தோடு காட்சி அளிக்கின்றது என்றும் நினைவோமானால், உருவ அருவத் திருமேனிகட்குள்ள முரண்பாடும் நீங்கிவிடும். இத்தகைய சோதி வடிவத்தைக் காணவும் தழுவவும் ஆசைப்படலாம்; இதுவும் உயர்ந்த தூய பக்தியேயாகும்.

முற்கூறிய உருவ வழிபாடு மனதிற்குப் பொருந்தாது போவார் பிற்கூறிய வழிபாட்டு முறையிலேனும் இறங்கி, முயற்சி செய்யலாம்.

வினா:—நமக்கு அருமையானவர்கள் இறந்தபின் நாம் அவர்கட்குப் பிரியமான பொருள்களையோ உணவு மற்றவைகளையோ படைப்பதும், அவர்களை வணங்கு

வரும், அவர்கள் ஆத்மாவுக்கு விருப்ப மாகுமா? அதனல் அவர்கட்கும் நமக்கும் நன்மை உண்டா?

சு - சோ.

விடை :—அவர்கட்கு நமது அன் பார்ந்த செயல்கள் மகிழ்ச்சியை விளைக் கும் என்பதில் ஐயமில்லை; இச் செயல் களை இறந்த மூதாதையர் உணர்ந்தாலும் உணராவிட்டாலும் பயன் உண்டாகும் என்பது மட்டும் உறுதியே. இத்தகைய செயல்களினுல் செய்பவர்க்கும் செயலைப் பெறுவார்க்கும் நன்மை உண்டு.

முதல் முதலாக, ஒவ்வொருவர்க்கும் உள்ள கடமைகளில் இறந்தோர்க்குச் செய்யவேண்டிய கடமையும் ஒன்றாகும். "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக் கல்தான்" (ஒக்கல் - சுற்றத்தார்) என் னும் ஐவர்க்கும் ஒருவன் செய்யவேண் டிய கடமைகள் உள. வேள்வியினுலேயே உலகம் நிலைபெற்று நிற்கின்றது என்பர் ஆன்றோர். மனிதனுக்கு ஐவகை வேள்வி கள் மறையினுல் விதிக்கப்பட்டுள்ளன; அவைகளுளொன்று, பிதிரர்க்குச் செய்ய வேண்டிய வேள்வி. இவ்வேள்வி இயற் றுதல் நமக்குக் கடமையாவது எக்கார ணத்தால் எனின், அவர்கட்கு அவர்க ளிடமிருந்து நாம் பெற்ற உதவிக்குப் பதிலாக நாம் ஆற்றவேண்டிய நன்றி உண்டு என்பதினுல். பிறரிடமிருந்து நாம் நன்மையைப் பெற்றபின் அவர்கட்கு நன்றி செலுத்தா தொழியின், நாம் திருட ராவோம் என்பர் கீதாசாரியார். "எந் நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பர் திருவள்ளுவ நாயனர். நமக்கு உடலையளித்து, அதைப்பேணி வளர்த்து, நமக்கு வேண்டிய பல்வகை நலன்களை யும் ஆராய்ந்து கண்டு, அவற்றை உதவி யருளிய நமது முன்னேர்களிடத்து நாம் நன்றி பாராட்டல் வேண்டும் என்பது சொல்லாமலே விளங்குவதொன்ருகும். இக்கடமையை நிறைவேற்ரு தொழியின் நாம் பாவஞ் செய்தவராவோம். நாம் நமது கடமைகளை முறை தவருது செய்வதினு லேயே, பயனை விழையாது இயற்றுவதி னுலேயே, சித்த சுத்தியை நாளடைவில் அடைகிருேம்; பின்னர் அவ்வாயிலாக ஞானம்பெறத் தகுதியுடையவராகிருேம். நமது அன்பிற்குரியரான உறவினரை இறந்தபின் மறந்துவிடுதல் நமது அன்பின் மையைக் குறிக்கும். அவரைத் தெய்வமா கக்கருதி வழிபடுதலும், அவர்கட்கு விருப் மான உணவுகளையும் பொருள்களையும் பக்தி சிரத்தையோடு அளிப்பதும் அவர் கட்கு மிக்க நன்மை பயக்கும். நமக்கும் மிக்க நன்மை பயக்கும். தூய நெஞ்சின ஞய மகன் தனது தந்தைக்குச் செய்யும் சிரார்த்தம் முதலிய கிரியைகளால் (உள் ளன்போடு செய்யும் அத்தகைய வழி பாட்டினுல்) தந்தை கரையேறுவதும் உண்டு; ஜீவன் முக்தனுன மகனெருவன் செய்யும் சிரார்த்தத்தால், முன்னேர்கள் ஏழுதலை முறையினேரும், பின் வருபவர் கள் ஏழுதலை முறையினேரும், பக்கக் கிளைஞரில் ஏழு கிளையினரும் முத்தியடை வார் என்று மறைகள் கூறுகின்றன. தூய அன்பினும் மிக்க வலியுடையது யாது உள்ளது? அன்பு, இறந்த பின்னும் இறந் தாரைப் பின்தொடர்ந்து பாதுகாக்கும் வலிமை யுடையதாகும். சத்தியவான் உயிர்பிழைத்து எழுந்ததன் உட்கருத்து இதுவன்ருே? ஆதலின் கடமையை ஆற்றுவோரது உள்ளத்தின் பக்குவத் திற் கேற்ப, இறந்தோரும் இறந்த பின் னும் நலமடைவர்.

நமது இறந்த உறவினரை நன்கு வழி படுதற் பொருட்டு, மனிதர்களிற் சிலரை (குணமும் தகுதியும் வாய்ந்த சிலரை) பிதிர்த் தேவதைகளாகவும், நமது இறந்த உறவினராகவும் பாவித்து, அவர்கட்கு

வர்க்கத்தின் வழிபாடுகளை ஆற்றுவது, நமது நாட்டுப் பண்டைய வழக்கமாகின்றது. இவ்வாறு செய்வதால் பிதிர் தேவதைகளும் நமது முன்னோர்களும் மகிழ்கின்றனர் என்பது நமது நம்பிக்கை. இந் நம்பிக்கையில் உண்மைக்கு மாறான தொன்றும் இல்லை. இங்கே மனிதர்க்குச் செய்யும் வழிபாடு, இறந்த முன்னோர்களைப் போய்ச் சேருமோ என்று சிலர் ஐயுறுகின்றனர். இவ் வழிபாடுகளை ஏற்கும் மனிதர் தபால் நிலையத்தாரோ என்றும் ஏசுகின்றனர். ஐந்நூறு ரூபாயை இங்கிருந்து அன்னிய நாட்டினற்கு அனுப்பும் போது, தபால் நிலையத்தார் அந்தத் தொகையை அப்படியே அன்னிய நாட்டிற்கு அனுப்புவதில்லை; ஆயினும் இங்கே பணம் சேர்ந்தபின், சில நாளில் அன்னிய நாட்டில் யாரைக் குறித்துத் தொகை அனுப்பப் பட்டதோ, அவர்க்கு ஐந்நூறு ரூபாய்க்குச் சமமான அன்னிய நாட்டு (அந்த நாட்டு) நாணயம் வழங்கப் படுகின்றது. அதுபோல், நாம் இங்கே மனிதர்க்குப் பிதிரர்களைக் குறித்துச் செய்யும் செயல்களும், அளிக்கும் பொருள்களும், பிதிர்த் தெய்வங்கள் என்னும் தபால்நிலையத்தாரால் பிதிருலகத்திற்குரிய பொருள்களாக மாற்றப்பட்டு வழங்கப்படுகின்றன; எவர்களைக் குறித்து இங்கே வழங்கப்படுகின்றனவோ, அவர்கட்கே அவர்கள் எங்கிருப்பினும் (நிலவுலகத்திலிருப்பினும்) பிதிருலகத்திலிருப்பினும் அவை அந்தந்த உலகத்திற்கு ஏற்ற பொருள்களாக மாற்றப்பட்டு வழங்கப்படுகின்றன. ஆதலால் அவர்கள் மகிழ்ச்சி அடைகின்றனர். நாம் இங்கே பிதிரர்களை நினைந்து வழங்கும் உணவு அவர்கட்கு உறைவிடமாய பிதிருலகத்திற்குச் செல்வதில்லை. பிதிரர்கட்கு இவ்வுணவு அவசியமில்லை. இவ்வுணவின் ஸாரமாய், அவர்கட்குப் பசியை ஆற்றும் இயல்புடைய நாகும் வேறொரு உணவுப் பொருளாக அது மாறுகின்றது. அவர்கள் அப்பொருள்களால் மனமகிழ்ச்சி அடையும்போது, தங்களது ஆசிகளையும் அன்பையும் வாழ்த்துரைகளையும் அனுப்புகின்றனர்; அப்பயனும் பிதிர்த்தேவதைகள் மூலமாக இவ்வுலகத்தில் வாழும் உறவினர்க்கு நன்மை வடிவமாக வந்து சேர்கின்றது. இந்நன்மை, உலக வாழ்க்கைச் செழிப்பு வாயிலாகவும் நன்மக்கட்பேறு வாயிலாகவும் பிதிர்க்கடனை இயற்றுவோரை வந்தடையும். ஆக பிதிர்க்கடனை இயற்றுவோரும் அதனைப் பெறுவோரும் பயன் பெறுகின்றனர். நமது இறந்த முன்னோர் பிதிருலகத்து வாழினும், மண்ணுலகில் மறுபிறப்பெடுத்து வாழினும், வேறு ஓர் உலகில் வாழினும், நமது வழிபாட்டின் பலன் அவர்களை அடையும்; நமக்கும் அதனால் நன்மை விளையும். அன்பு வழிபாடு என்னும் உணர்ச்சியோடு கூடிய நினைவு மிக்க வல்லமை யுடையதாகும்; அந்த சக்தி அழிவடைவதில்லை; அது உரிய பயனை வழிபடுபவர்க்கும் வழிபடப் பட்டவர்க்கும் நல்கியே தீரும். இறந்த உறவினரை மனிதராகவும் உறவினராகவும் எண்ணி வழிபடுவதைக் காட்டிலும், அவர்களைத் தெய்வமாக நினைந்து பக்தியோடு வணங்குவார்க்குப் பல்வகை நலன்களும் உண்டாம்.

---

# பக்தியும் சிரத்தையும்

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழாசிரியர், சித்தூர்)

ஏதேனுமொரு காரியத்தின் பயனை அடைய அவாவுவோர் அக்காரியத்தைப் பேரூக்கத்தோடு இடைவிடாது முயன்று சாதித்தாலன்றி அதன் பயனை அடையார். கல்வியில் தேர்ச்சி பெற விரும்பும் மாணவன் அல்லும் பகலும் தன் எண்ணத்தை நிறைவேற்றுவதையே நோக்கமாகக் கொண்டு வேறெதினும் சிந்தையைச் செலுத்தாது தன் பாடங்களைச் செவ்வனே படித்து வருவானாயின், தான் நினைத்தவாறே கல்வியில் தேர்ச்சியடைவான் என்பது திண்ணம். அங்ஙனமே, பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ளவொருவன் தன் மெய் வருத்தத்தைச் சிறிதும் கவனியாமலும் ஊணுறக்க மின்றியும் அத்தொழிலிலேயே தன் முழு கவனத்தையும் செலுத்தானாயின், அவ்வேளாண்மையால் அடையத்தகும் பயனை எங்ஙனம் அடையப் பெறுவான்? தனது பெருமுயற்சியால், மிக்க எளிய நிலைமையினின்று, உண்ண உணவுமின்றி வறுமையால் வாடிக்கிடந்தோன் சிறு முதலைக்கொண்டு தொடங்கிய தொழிலால் பேருதியம் பெற்றுப் பெருஞ் செல்வனான வரலாற்றினை நாமனைவரும் அறிந்துளோமல்லவா? இவ்வாறே, எத்தொழிலைச் செய்வோரும் தாம் மேற்கொண்ட காரியத்தின் பயனை நன்கடைய விழைவரின், அக்காரியத்திலேயே தம் சித்தத்தைச் சிதையாது செலுத்தி, ஏற்ற நெறியில் முயன்று, அதற்கிடையூறாக எத்துணைக்கஷ்டங்கள் நேரினும் சோர்வின்றிச் சலிப்பின்றிப் பெருமுயற்சி யென்னும் வாளினால் வென்று, முன்னேறின் வெற்றி வீரர்களாக விளங்குவரென்பதில் யாதோரையப்பாடு மின்றாம்.

> " மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் [கண்துஞ்சார்
> எவ்வெவர் தீமையுமேற்கொள்ளார்—[செவ்வி
> அருமையும் பாரார் அவமதிப்பும் [கொள்ளார்
> [கருமமே கண்ணாயி னார்."

" முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்" என்பன போன்ற ஆன்றோர் வாக்கியங்களானும் இவ்வுண்மை எளிதினுணரப்படும்.

ஆகவே, பெரும் பயனை நல்குவதென நம்மால் ஒரு காரியம் நன்கு கருதப்படுமாயின், மற்றெல்லாக் காரியங்களினும் மிக மிகச் சிறந்ததாக அதனை நாம் கருதுவதுண்மையாயின், அதனைச் செய்து அதன் பயனை அடைவதில் நமது முழுக் கருத்தையும் செலுத்துதல் அத்தியாவசியமாகும். அங்ஙனம் செய்யா தொழிவமேல் அதன் பயனை எதிர்பார்த்தல் அறிவீனமாகும். " உழுகிற நாளில் ஊர் திரிந்துவிட்டு அறுவடை காலத்தில் அரிவாளை எடுத்துச் செல்பவனுக்கு" யாது பயன் கிடைக்கும்?

உலக விவகாரங்களைச் செய்துகொண்டிருக்கும் நாம் அவ்விவகாரங்களுக்கிடையில் கடவுளைப் பற்றியும், அவரை அடைவதா லுண்டாகும் பயனைப் பற்றியும், அப்பயனை யெய்தும் முறைகளைப் பற்றியும் அறிந்துகொண்டு, அக்கடவுளை—கடவுளின் அருளை—பெற விரும்புகின்றோம். அவருடைய அருள் கிடைக்க வேண்டு

மென்று அவாவுமளவிற்கு எற்றவாறு முயற்சி இருக்கின்றதா என்பதைக் கவனித்தல் நமது கடமையன்றோ! உலக வாழ்க்கையி னிமித்தம் நமக்கு வேண்டற்பாலனவாகவுள்ள பொருள்களுக்காக நாம் மேற்கொள்ளும் முயற்சிக்கும், கடவுளருளைப் பெறுவதற்காக மேற்கொள்ளும் முயற்சிக்கும் உள்ள பேதத்தைச் சிறிது ஊன்றி நோக்குவோமாயின் நாம் பெருவியப்பினை யெய்துவோம்.

மனைவி, மக்கள், செல்வம் முதலியவற்றின்மேல் நாம் கொண்டுள்ள அவாவையும் கடவுளை யடைவதிற் கொண்டுள்ள அவாவினையும் ஓர் துலையின் இரு தட்டுக்களினிடையேயும் வைத்துத் தூக்கி நோக்குவோமாயின், எத்தட்டு மிக்க பாரம் உடையதாகும்? இவ்வுலகப் பொருளின்மேற் கொண்டுள்ள அவாவை வைத்திருக்கும் தட்டேயன்றோ மிக்க கனமுடையதாய்த் தாழ்ந்து நிற்கும்? இந்நிலையில் உள்ளவர்கள் கடவுளருளைப் பெறுதல் எங்ஙனம் இயலும்?

ஒரு காலத்தில் மெய்யுணர்ந்த சுவாமிகளிடம் ஒருவர் சென்று "கடவுளருளை எப்படிப் பெறலாம்?" எனக் கேட்டாராக, சுவாமிகள், அதற்கு யாதொரு விடையும் கூறாது, அவரை ஒரு நீர்நிலைக்கண் ஈர்த்துச் சென்று, அந்நீரினுள் அழுத்திய வண்ணம் சிறிது போழ்திருத்திப் பின்னர் வெளியில் அழைத்துச் சென்று அவரை நோக்கி, "நான் உன்னை நீர்க்குள் அழுத்திப்பிடித்திருந்த காலத்தில் நீ என்ன நினைத்தாய்?" எனக் கேட்க, "சுவாமி! ஒரு சிறு மூச்சுக் காற்றுக்காக நான் தத்தளித்துத் தடுமாறி பேரவாக் கொண்டிருந்தேன்" என விடைகூற, அதற்குச் சுவாமிகள் "கடவுளைப் பெறுவதிலும் அத்தகைய அவாவை நீ எப்பொழுது கொள்வாயோ அப்பொழுது அவரருளை நீ பெறுவாய்" என விடை பிறுத்தார் என நாமறிகிறோம். அத்தகைய பேரவாவைக் கொள்ளாதவரையில் அவருடைய அருளை எய்துதல் இயலாது.

இருபத்து நான்குமணி நேரங்கொண்ட ஒரு நாளில் எத்துணைக் காலத்தை இவ்வுலகப் பொருள்களி னிமித்தம் செலவிடுகின்றோம்? கடவுள் விஷயத்தில் எவ்வளவு நேரத்தைச் செலவிடுகின்றோம் என்பதை ஆராய்ந்து நோக்கின், ஒரு கணத்தையேனும் கடவுளருளைப் பெறுதற்காகச் செலவிடுகின்றோமா என்பதும் சந்தேகமே என்பது புலனாகும். இந்நிலையில் நம்மை நாம் ஆஸ்திகரென்றோ, கடவுள் பக்தரென்றோ, கூறிக் கொள்ளுதலோ அல்லது நினைத்துக் கொள்ளுதலோ எத்துணைத் தகுதியற்ற செய்கை! உலக பக்தர், மனைவி பக்தர், மக்களடியார், பொருளடியார் என்னும் பெயருக்கே நாம் அருகராவோம். ஏதோ ஒரு காலத்தில் ஆலயத்துக்குச் சென்று வருவதாலோ, ஏதோ ஒரு சமயத்தில் பல்வகை எண்ணங்களுக் கிடையில் பூசை முதலியவற்றைச் செய்வதினாலோ, திருநீறு திருநாமங்களையும், உருத்திராக்க துளபமாலைகளையும் தரித்துக் கொள்ளுவதினாலோ, காலா காலங்களில் முறை தவறான வகைகளில் விரதாதிகளைக் கைக்கொள்வதினாலோ, ஆஸ்திகர்களாகவோ பக்தர்களாகவோ, கடவுளருளுக்குப் பாத்திரர்களாகவோ ஆகமுடியாது. மேடையின் மேலேறி அரிச்சந்திரன்போல் நடிக்கும் ஒருவன் அரிச்சந்திரனாக முடியாதது போல, கடவுட் பக்தனாக நடிக்கும் ஒருவனும் கடவுட் பக்தனாக மாட்டான்.

"நாடகத்தா லுன்னடியார் போனடித்து [நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் [விரைகின்றேன்

ஆடகச்சீர் மணிக்குன்றே யிடையறு
[அன்புனக்கென்
ஊடகந்தே நின்றுருகத் தந்தருளெம்
[முடையானே "

என்னும் மணிவாசகப் பெருமான் திருவாக்கையும் ஓர்க. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவர் அம்பிகையின் அருளைப் பெறுதற்குப் பட்டபாடுகளை அவரது சரிதையின் வாயிலாக நாம் அறிகின்ற காலத்து அம்மம்ம! மெய் சிலிர்ப்புறுகின்றது. "அம்பிகே! இற்றை நாளும் கழிந்ததே! நின்னருள் கிடைத்திலதே" என்றேங்கிக் கதறுவராம். ஆண்டவனருளைப் பெறுதற்கு ஆன்றோர் பட்டபாடுதான் என்னே! என்னே! இராமதாஸரென்ன, துளசிதாஸரென்ன, பெரியபுராணத்திற் பேசப்பட்டுள்ள நாயன்மார்களென்ன, ஆழ்வார்களென்ன இன்னோரன்னோரது சரிதைகளை முன் மாதிரியாகக் கொண்டு ஆண்டவனருளைப் பெறுதற்கு அப்பெரியார்கள் புரிந்த பெருந் தியாக தீரச் செயல்களைச் சிந்தையில் மறவாதிருத்தி, அவர்களைப் பின்பற்றி நடக்கின்றவர்களே பகவானது அருளைப் பெறுதற்குத் தகுதியுடையோராவர்.

"ஆமாறுன் திருவடிக்கே யகங்குழை
[யே னன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்
[துரையேன் புத்தேளிர்
கோமானின் திருக்கோயில் தூகேன்
[மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே
[சார்வானே "

"உள்ளெலா முருகிக் குரறழுத் தொழிந்
[தேனுடம் பெலாங் கண்ணீர் சோர
நள்ளிருளளவும் பகலுநானழைப்பனு
[ராயனு வென்று நாமம்"

என்ற ஆன்றோரருளிச்செயலுக் கேற்ற முறையில் நாம் நடந்து கொண்டால் இறைவன் திருவருளை எய்தலாம். மாதர் மோகங்கொண்டா னொருவன் தான் எப்படி முழுவதும் அவர் வசப்பட்டு மயங்கித் திரிவனோ, மகவாசை கொண்டா னொருவன் அம்மகவைத்தன் உயிரினும் பெரிதாகக் கருதி எவ்வாறொழுகுவனோ, பொருளாசை கொண்டவனொருவன் அப்பொருளைப் பெறுதற்குப் பல்வகையானும் எங்ஙனம் சோர்வுறாது அலைவனோ, அங்ஙனமே கடவுளன்பு கொண்டோனும் அல்லும் பகலும் "ஆண்டவன்! ஆண்டவன்" என்னும் ஆர்வமுற்றவனாதல் வேண்டும். அத்தகைய ஆர்வத்தைப் பெறுவதற்கு அடிப்படையாகவுள்ள நெறிகளை ஆன்றோர் வாயிலாக அன்னார் கூட்டுறவின் வாயிலாக வறிந்து, அவனருளாலே அவனருள் வணங்க முயலுவோமாக.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

இந்திய நாடு தோன்றிய நாள் முதற்கொண்டு அந்நாட்டுப் பெரியார் செய்து வந்துள்ள பணியை ஒரு சொல்லில் கூற வேண்டுமாயின், 'தெய்வசிந்தனை' என்னும் சொல்லால் அதைக் குறிக்கலாம். இந்திய நாட்டின் ஆதிநூலான வேதமே தெய்வத்தை விவரிக்கும் முயற்சியில் ஈடுபட்டது. பரம்பொருள் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத வஸ்துவே யாயினும் மனிதன் தனது மன நிலைக்கேற்றவாறு அப்பரவஸ்துவைப் பாவனை செய்து கொள்ளுகிறான். இப்பாவனைகள் யாவும்

உண்மையின் ஓர் அம்சம் பெற்றவையே யாம். சூரியனை இங்கிருந்து பார்க்கும் நமக்கு அது சிறியதாகத் தோன்றுகிறது; அதன் அருகில் போய்ப்பார்ப்பது கூடுமா ஞல் சூரியன் வெகு பெரியதாய்த் தோன் றும். ஆனால் நாம் இங்கிருந்து பார்ப்பது சூரியன் அல்லவென்று கூறிவிடலாமோ? அதைப்போலவே பக்தரும் ஞானிகளும் பரம்பொருளைப்பற்றிச் செய்துள்ள பாவ னைகள் யாவும் போற்றற்குரியவையே யாம்.

நம் நாட்டுப் பெரியார் முதற்பொருளைப் பற்றி ஏற்படுத்தியுள்ள கருத்துக்களுள் மூன்று வெகு அழகானவை. அவை யாவன: சிவன், விஷ்ணு, காளி.

சிவனுடைய பெருமையை யாரே விளக்கவல்லார்? அவர் பரமயோகி, மகே சுவரன், அர்த்தநாரி, காமனை வென்றவர், நடராஜர், பசுபதி, நித்யதபஸ்வி, ஸம்ஹார மூர்த்தி, மங்கள நாயகன், நீலகண்டன்.

விஷ்ணுவும் எப்பொழுதும் யோக நித் திரையில் ஆழ்ந்திருக்கிறார். அவர் நித்ய கல்யாணர், புராணபுருஷர், பகவான், தர்மரக்ஷகர், மாயாவி, துஷ்டநிக்கிரகர்.

காளிதேவியோ பிரகிருதி ஸ்வரூபி, ஜகன்மாதா, பவதாரிணி, மகாதேவி, அப யம் தருபவள், சக்திமயமானவள்.

இம் மூன்று தெய்விக பாவனைகளும் ஸ்ரீ ராமகிருஷ்ணரது வாழ்க்கையில் நெரு ங்கிய தொடர்புடையனவா யிருந்தன. ஏனெனில் பரம்பொருள் எனும் கடலின் எல்லா மடுக்களிலும் அவர் அமிழ்ந்து வெளிப்போந்தவர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரைச் சந்திப்பதற்கு முன்னரே இராணி ராசமணியார் தக்ஷி ணேசுவரத்துக் கோயிலைக் கட்டத் தொடங்கினர். ஆனால் பிற்காலத்தில் அக்கோயில் ஸ்ரீ ராமகிருஷ்ணரது உறை விடமாக ஆயிற்று. அவருக்காகவே அக் கோயில் கட்டப்பட வேண்டுமென்று தேவியம்மையார் திருவுளங் கொண்டனர் போலும்! அக்கோயிலில் மேலே கூறிய மூன்று தெய்வ பாவனைகளும் போற்றப் படுகின்றன. கோயிலின்கண் பன்னிரு சிறு சிவன்கோயில்கள் உள்ளன. இவற் றுடன் காளியம்மையின் ஆலயமும் இராதா காந்தர் எனும் விஷ்ணு ஆலயமும் இருக்கின்றன.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அன்னையான சந்திரமணி தேவியார் ஒரு நாள் காமார்ப்பு கூரின் சிவன் கோயிலில் சேவித்துக் கொண்டிருந்த பொழுது, சிவலிங்கத்தி னின்றும் ஒளிரேகைகள் தம்முள் செல்லு வதுபோலக் காட்சி கண்டதாகவும், அதன்பின் தாம் கருத் தரித்திருந்ததை உணர்ந்ததாகவும் அவரது சரிதத்தில் கூறப்பட்டுள்ளது. சிவனது அருள் பெற்று ஜனித்த கதாதரர் சிறுவயதில் சிவராத்திரி யன்று சிவவேடம் பூண்டு நாடகம் நடிக்கச்சென்றதும், மேடைமீது தோன்றிய உடன் சிவபோதம் மேலிட் டவரானதும் அதனால் நாடகம் நின்றதும் மறுநாட் காலையிலேயே அவர் உலக உணர்வைப் பெற்றதும் அவரது நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. மதுர நாதர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் காளிகோயி லின் பூசையில் ஈடுபடுமாறு செய்யும் முன் ஒரு நாள் சிவனது உருவமொன்றை ஸ்ரீ ராமகிருஷ்ணர் பூசிப்பதைக்கண்டு அவ்வு ருவம் ஸ்ரீ ராமகிருஷ்ணராலேயே ஆக்கப் பட்ட தென்பதையும் அறிந்து வியப்புற் றார். பிற்காலத்தில் ஒரு நாள் ஸ்ரீ ராம கிருஷ்ணரைத் தூரவிருந்து கவனித்துக் கொண்டிருந்த மதுரருக்கு ஸ்ரீ ராமகிருஷ் ணர் ஒருபுறமாக உலவுகையில் சிவனாக வும், மறுபுறமாக உலவுகையில் காளியாக வும் புலப்பட்டார். காசிக்கு யாத்திரை சென்ற ஸ்ரீ ராமகிருஷ்ணர் அந்தச் சிவ புரியை ஸ்வர்ணமயமாகவே கண்டார். மணிகர்ணிகா கட்டத்தில் சிவபிரானும்

ஜகன்மாதாவும் ஒவ்வொரு ஜீவனுக்கும் முக்தியளிக்கிறதாக அவர் ஒரு திவ்விய காட்சியைக் கண்டார். இச்சம்பவங்கள் ஒருபுறமிருக்க, ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வாழ்வே சிவமயமாக விருந்ததென்று கூறுதல் மிகையாகாது.

"இந்திய மக்களே! நீங்கள் போற்று கின்ற தெய்வம் பரமயோகியும், தியாகிபு மான சங்கரன், உமாநாதன் என்பதை மறந்துவிடாதீர்கள்!" என்று சுவாமி விவேகாநந்தர் ஒருதடவை கூறினார். இந்தியாவின் மறுமலர்ச்சிக்கு முதற்காரணரான ஸ்ரீ ராமகிருஷ்ணர் சிவபிரானுடைய இலக்ஷியங்கள் நிறைந்தவராக இருந்தார் என்பதில் வியப்பேதுமில்லை. அவர் சிவனைப் போலவே யாவற்றையும் தியஜித்தவர். பொன்னை ஸ்பரிசிக்காதவர். காமத்தை அறவே வென்றவர். பிறருடைய பாபமாகிற விஷத்தைத் தாமே ஏற்று அவர்களை உய்வித்த உத்தமர். சதா காலமும் ஞானயோகத்தில் நிலைத்து நின்றவர். அவர் அர்த்தநாரியும் கூட ஆவார். அவர் ஆணுக்கு ஆணாகவும் பெண்ணுக்குப் பெண்ணாகவும் இருந்தார். சாதனைக் காலத்தில் அவர் தம்மைப் பெண்ணாக நினைத்தபொழுது பெண் தன்மையே அவரிடம் மேலிட்டு நின்றது. ஆண்பெண் என்ற வேற்றுமை ஆன்மாவிற்கு இல்லை என்பதை நடைமுறையில் காட்டிய பெரியார் அவர். மேலும் பொதுவாகவே அவரது தன்மையில் பெண்மைக்கு அடையாளமான மிருதுத் தன்மையும், எழிலும், அமைதியும் நிரம்பியிருந்தன. அவரது தர்மபத்தினியான சாரதாதேவியார் உமாதேவிக்கு ஒப்பானவர். நீண்ட தவத்தின் மூலம் உமாதேவி பரமசிவனை மணந்தார். பரமேசுவரனுடைய உடலில் பாதியைப் பெறும் தபோமகிமை அவளுக் கிருந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அவதார நோக்கத்தில் பாதிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார் சாரதா தேவியார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய குலதெய்வம் இரகுவீரர் ஆவர். அவரது தந்தை சிறந்ததோர் இராமபக்தர். அவர் கயைக்குச் சென்றிருந்தபொழுது கயா நாதனாகிய கதாதரப் பெருமாள் தமக்கு மகனாக அவதரிக்கப் போவதாகக் காட்சியொன்றைக் கண்டு உள்ளம் பூரித்தார். பிற்காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது சாதனையின் பொழுது இராம உபாசனையும் செய்தார். ஹநுமாரைப் போன்று வாழ்ந்து இராம சிந்தனை செய்தார். சீதா பிராட்டியாரின் திவ்விய தரிசனம் கண்டார். இராமலாலா எனும் விக்கிரகத்தின் மூலம் பாலராமனுடன் நெருங்கிப் பழகினார். விஷ்ணுவின் இன்னொரு அம்சமான கிருஷ்ண பகவானுடன் அவர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். தம்மைக் கோபியர் குலப் பெண்ணாகப் பாவித்துக்கொண்டு மதுரபாவம் எனும் அரிய சாதனை பயின்றார். கிருஷ்ணனுடைய வாழ்வை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். அவர் கோபி வல்லபன்; அத்துடன் கீதாசாரியன். இராதையைப் போன்ற பேரன்பைப் பெற்றிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர், கீதாசாரியனைப் போலவே பலவேறு சமயங்களையும் சாதனை முறைகளையும் சமரஸப்படுத்தி வைத்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் காளியம்மையின் செல்வக் குழந்தை யாவார். தக்ஷிணேசுவரத்துக் கோயிற்பூசனை வேளையில் ஈடுபட்ட அவர் தாம் தொழுதுவந்த காளி விக்கிரகத்தின் பின்னுள்ள உண்மைப் பொருளை அடைவதற்குப் பேரவாக் கொண்டவராய், அவ்வொரே நோக்குடையவராய், ஊணுறக்கம் உடல் நலம் யாவையும் மறந்து, எவருடைய உதவியுமின்றி, தம் முயற்சியாலேயே, தமது பக்தியின் பெருமையாலேயே, காளியம்

மையின் தரிசனம் பெற்றார். அதன் பின்னர் ஜகன்மாதா அவருக்கு உண்மையில் ஒரு தாய்போலவே ஆய்விட்டாள். ஐயம் வந்துற்ற காலையில் அல்லது புதிய சாதனை ஒன்றில் புகுவதற்கு முன் அவர் அன்னையின் உதவியையே நாடுவார். அன்னையின் மயமாய் விட்டார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். காளியைப்பற்றிப் பலர்கொண்டுள்ள தவறான கருத்துக்களை அவர் போக்கிறார்.

* * *

மகாவிஷ்ணு காத்தல் தொழிலைப் புரிகிறார் என்று மறைகள் கூறும். உலகில் அதர்மம் ஓங்கும்பொழுது, மறம் வளர்ச்சியடையும்பொழுது, அவர் தர்மத்தை மீண்டும் நிலைநாட்டும் கடமையை ஏற்றுக்கொள்ளுகிறார். கீதையில் கிருஷ்ண பகவானும் இந்த உண்மையைக் கூறுகிறார். ஸ்ரீ ராமகிருஷ்ணரைப்பற்றி அவருடைய முக்கிய சீடரான விவேகானந்தர் இயற்றியுள்ள பிரார்த்தனை யொன்றுள்ளது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் போற்றப்படும் இடங்களிலெல்லாம் அந்திப்பொழுதில் பூஜை நடைபெறும் சமயத்தில் அப்பிரார்த்தனை பாடப்பெறுகிறது. குருதேவரின் மகிமையைச் சொல்லில் விளக்க வேண்டுமானால் அப்பணியைச் செய்யும் வன்மையுடையவர் சுவாமி விவேகானந்தர் ஒருவர் தான். அவரும் கூடத் தம்மால் குருதேவர் பெருமையை முற்றிலும் கூறுவது இயலாத காரியம் என்று அடிக்கடி சொல்லுவார். அப்பிரார்த்தனையில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அவதார நோக்கத்தை அவர் இரு அழகான அர்த்த புஷ்டியுடைய சொற்களில் குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தர்மஸ்தாபகர் என்றும், சர்வ தர்மஸ்வரூபி என்றும் அவர் கூறுகிறார். நம் நாட்டிலும் ஏனைய நாடுகளிலும் வாழ்க்கையின் லக்ஷியம் என்ன தென்பதைப்பற்றித் தவறான நம்பிக்கைகள் பரவியிருந்த சமயத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தோன்றி, வாழ்க்கைக்கும் கடவுளுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை விளக்கியதுடன் எல்லா மதங்களும் பரம்பொருளையே நாடுகின்றன என்பதையும் தம் உபதேசமொழிகளாலும் அனுபவத்தாலும் எடுத்துக் காட்டினார்.

ஞானவாழ்வின் உயர்நிலையின் உதாரணமாக விளங்குகிறார் சிவபிரான். ஆசை, மாசு, மோகம், காமம் இவை அவரண்டையிலும் இரா. அவர் தியாக மூர்த்தி. மற்றவருக்கு அச்சத்தைத் தரும் மயானம் அவருக்கு இருப்பிடம். உலகை அழிக்க வல்ல நஞ்சு அவருக்குப் பூஷணம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம்முடைய சாதனைக் காலத்தில் பல தடவைகளில் மயானம் சென்று தியானம் செய்வதுண்டு. பொன், பெண்ணாசைகள் அவரிடம் அற்றுப்போயிருந்தன. உலகினரால் வெறுத்துத் தள்ளப்பட்ட விலைமாதரிடமும் அவர் ஜகன்மாதாவையே கண்டார். சிவனுடைய சரீரத்தைப் போலவே ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உடலும் தெய்விக உணர்வு நிரம்பியதாயிற்று. அவரது உடல் பொன்னின் பரிசத்தைக்கூடப் பொறுக்காது. கடவுள் சம்பந்தமற்ற பேச்சைதுவும் அவரால் சகிக்க முடியாததாயிற்று. சிவபெருமான் நஞ்சை உட்கொண்டு உலகினரைக் காத்ததுபோல ஸ்ரீ ராமகிருஷ்ணர் பொல்லாக் குணங்கள் பல நிறைந்திருந்த கிரீஷ சந்திர கோஷர் போன்றவரைத் தூய்மைப்படுத்தினார்.

காளியைக் கோரரூபமுடைய தாமஸிகத் தெய்வமாகச் சிலர் கருதுகின்றனர். இது தவறாகும். அவளது உருவம் பயங்கரமாகத்தான் இருக்கிறது. மனித சிரங்களாலான மாலையை அவள் தரித்திருக்கிறாள். வெட்டுண்ட தலையொன்று அவள் கையில் இருக்கிறது. அவள் தாண்டவம் புரியும்பொழுது அண்டமே

நடுங்குகிறது. ஆனால் அவள் தன் பக்தர்களுக்கு அபயமும் தருகிறாள். பரமோத்கிருஷ்டமான நிர்விகல்ப நிலையையும் அவள் தந்தருள்கிறாள். காளியைக் கோரஸ்வரூபிணியாகப் பாவனை செய்வதில் பெரியதொரு தத்துவம் அடங்கியிருக்கிறது. புவனம் முழுவதும் வாசுதேவமயம் என்று மறைகள் கூறும். ஆனால் மக்கள் பொதுவாக மனத்திற்கு இரமணீயமாயுள்ள விஷயங்களிலேயே பகவானைச் சம்பந்தப்படுத்துகின்றனர். ஈசனை அநந்த கல்யாண குணங்களையுடையவன் என்று கருதுகின்றனர். ஆனால் நோயிலும், மரணத்திலும், கேட்டிலும், துயரிலும், கூடப் பரமன் உள்ளான். தென்றலாக வீசி நம் களைப்பைப் போக்குவதும் அவன்தான். கடும்புயலாக வீசி ஊர்களை நாசப்படுத்துவதும் அவன்தான். இலக்ஷ்மியின் கடாக்ஷமும் அவனது அருள்தான். ஏழைமையும் பசியும் அவனது அருள்தான். கதிரவன் ஒளி அவன் பிரகாசம்தான். காரிருளும் அவன் ஜோதிதான். லோக சம்ரக்ஷகனான விஷ்ணுவும் அவன்தான். லோகநாசகனான ருத்ரனும் அவன்தான். மாந்தரின் புன்சிரிப்பிலும் அவன் உள்ளான். மக்களின் அழுகையிலும் அவன் உள்ளான். இத்தகைய ஞானமே பூரண ஞானமாகும். அதனாலேயே பயங்கரரூபத்திலும் பரமனைப் போற்ற வேண்டுமென்று சுவாமி விவேகாநந்தர் கூறுவதுண்டு. காளியைப் பற்றி விவேகாநந்தர் ஆங்கில மொழியில் இயற்றியுள்ள அருட்கவியொன்று இக் கருத்தை நன்றாக விளக்குகிறது. அக் கவியின் கருத்துக்களாவன:

"நக்ஷத்திரங்கள் அவிக்கப்பட்டுப் போயின. மேகங்கள் ஒன்றின்மீதொன்றாகச் சுருண்டுகிடக்கின்றன. காரிருள் ஒலித்துக் கொண்டும் துடித்துக் கொண்டும் இருக்கிறது. கர்ஜிக்கின்ற சுழற்காற்றில் பைத்தியக்காரர்களின் ஜீவன்கள் இப்பொழுதே சிறைக்கூடத்தினின்றும் விடுபட்டவர்களாய், மரங்களை வேருடன் பிடுங்கிப் பாதையினின்றும் யாவற்றையும் ஒதுக்கித்தள்ளுகின்றனர். கடலும் இப்போரில் கலந்துகொண்டு இருண்ட வானம் வரையிலும் செல்லுகின்ற மலை போன்ற அலைகளைக் கிளப்புகிறது. பயங்கர ஒளியின் பிரகாசத்தில் நாலா பக்கங்களிலும் இருண்ட, கரிய மரணமே ஆயிரக்கணக்கான வகைகளில் தோற்றமளிக்கிறது.

"நோயையும் துயரையும் வாரி இறைத்துக்கொண்டு, ஆனந்தவெறியில் தாண்டவமாடிக் கொண்டுவா, அன்னையே, வா!

"உன் பெயரே பயங்கரம். உன் மூச்சிலேயே மரணம் இருக்கிறது. நீ ஆடியாடி வைக்கின்ற ஒவ்வோர் அடியும் ஒரு புவனத்தையே முற்றிலும் அழித்து விடுகிறது. நீயே காலஸ்வரூபி! யாவற்றையும் அழிப்பவள்! வா, அன்னையே! வா!

"துயரை விரும்புவதற்கு எவனிடம் தைரிய முண்டோ, எவன் பிரளயத்தாண்டவத்தில் நடனம் புரிகின்றானோ, எவன் மரணத்தை ஆலிங்கனம் செய்கின்றானோ-அவனிடமே அன்னை வருகின்றாள்."

இத்தகைய சொல்லற்கரிய பெருமை வாய்ந்த ஜகன்மாதாவே ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பிரத்தியக்ஷ அன்னையா யிருந்தாள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் சைவரா, வைஷ்ணவரா, சாக்தரா? இதுதான் அவர் இது அவர் இல்லை என்று கூறமுடியாது. பல வேறு சங்கீத ஒலிகளின் கூட்டுக்கானமாக விருந்தார் பரமஹம்ஸ தேவர்.

# புத்தரின் கண்ணீர்

## அன்னவேட்டை

(ம. ரா. பாலகணபதி, B.A., L.T.,)

(ஆங்கிலப் பாட்டைத் தழுவி யெழுதியது)

[பின்னர் புத்தர் என்று புகழ்பெற்ற சித்தார்த்தரும், புத்தரின் தந்தையாகிய அரசரும், அவ்வரசின் அமைச்சரும், புத்தருக்குத் தம்பி முறையுள்ள தேவதத்தரும், அவரது வேலையாளும், இவ் அவினக் காட்சியில் வருகின்றனர்.]

அரசர் :

அடிக்கடி வேட்டையில் அமைந்து நின்று
மானை விட்டு மலை திரும் பிடுவன்.
பந்தயம் பாதி வந்துறும் போது
திரும்பி வருவன் குதிரைக் கிரங்கி.

அமைச்சர் :

சாக்கிய மன்ன, நம் முந்தையர் வாழ்வு
சாந்தமும் அன்பும் தழைந்த தன்றோ!

(சித்தார்த்தரும், தேவதத்தரும் வருகின்றனர்.)

தேவதத்தர் :

ஓரிரு மானோ ஒருகால் அன்னமோ [டை.
கொன்றுளம் இன்புறக் குறுகுவம் வேட்
அன்றேல் வருக, பொழுதுபோக் காக.

சித்தார்த்தர் :

போது போக் காகப் போக்குவ தோஉயிர்?
சோம்பர் தொலையத் தொல்லுயிர் மாய்ப்ப
நாளும் போதும் நம்முயிர் ஈரும் [தோ?
நமன்கை வாளென நவின்றனர் புலவர்.

(சோர்ந்து கீழே அமர்கின்றார்)

அரசர் :

அமைச்ச! அவன்நிலை அறிந்தா யோநீ?
ஆண்தகை தவிர்ந்து பெண்டிர் போன்ற
மெலிந்த போக்கே வகுத்துவ [திம்
தென்னே.

அமைச்சர் :

இளவரசு அமர்ந்து இளைப்பாறு கின்றார்.

அரசர் :

அவ்வா றில்லை அமைச்ச! அந்நிலை
ஆறுதல் இல்லை; அலைகின்றது உள்ளம்.
மைந்தன் பிறந்த அந்த நாளில்
நிமித்திகர் உரைத்ததை நினைவு கூர்க.
புகழ்மிகு புரவலன் இகழ்தரும் இரவலன்
இரண்டு நிலைகளில் எதனை ஏற்பல்
என்று நினைந்து இரண்டுள் ஒன்றைத்
தேர்ந்து கொள்ளும் நாளொன் றுண்டே
அன்று கூறினர் அன்றோ அமைச்ச! [ன
இழிந்த இரவலர் ஏழை வாழ்வே
இளவர சிற்குப் பிடித்ததோ என்று
கவலுவல் யானும்; பதறுமா லென்னுளம்.

அமைச்சர் :

எளியவர் வாழ்வைக் கண்டிலர் இளவல்.
காணா ஒன்றில் கவனம் செல்லுமோ?
ஆகையி னாலே அரச வாழ்க்கையை
விட்டுச் செல்லார் செல்வர் அரசே!

அரசர் :

ஆம்ஆம் அவனை அவ்வழி நிறுத்துவல்.
இதயத் துளியினும் எனக்கவன் இனியன்
கண்மணி அவனும் மண்ணில் வாழ்வை
ஏழையர் போலப் பாழாக் குவதோ?
பிறவிப் பேறாப் உள்ளநம் அரசும்
அவ்வரசின் வலி வவ்வுபே ரரசும்
பகைவர் ஒடுக்கமும் தகைசால் புகழும்
கைமேற் கண்ட கண்ணியப் பொருளாய்,
வாய்த்ததை விட்டு வாயா ஒன்று,
இன்னதென் றறிகலா எளிமை யுடைத்து,
தன்னலம் பேறாத் தறிதலை வாழ்வு,

பிச்சனு பிரம்பாப் பிச்சு வாழ்வு
அதனை விரும்ப அவனை விடுவனோ ?

(புண்பட்ட ஓர் அன்னத்தைச் சித்தார்த்தர் தூக்கி வருகின்றார்)

விடுவதிருக்க - அவன்செயல் பாராய்.

அமைச்சர் :

பறவை யதனைப் பரிவுட னணைத்தாநம்
இளங்கோ வருதல் இனியது ஆ ஆ!

சித்தார்த்தர் :

இனிய அன்னமே! இன்னல் உழந்தாய்.
மனிதன் அம்பால் துடித்தது உன்னுடலம்
மனிதன் வன்பால் துடித்தது என்உளம்

(தேவதத்தரின் ஆள் வருகின்றான்)

அவ்வாள் :

அடிமையின் தலைவர் அடித்த அவ் [அன்னம்
அவர்க்கே உரித்ததைத் தருகஎன் [கைவசம்.

சித்தார்த்தர் :

அதனைத் தந்திட முடியா தென்னல்.
இறந்தா லல்லவோ எய்தவற் கென்பர் ?
அன்னம் உயிருடன் அமைதல் காண்பாய்.
அன்னம் அல்ல அவன்வீழ்த் தியது ;
தெய்வம் தந்த சிறகின் சீரைக் [யானே.
கொய்து கெடுத்தனன், எடுத்தவன்
எடுத்தவன் விடுவனோ ஏழை யழுங்கிட ?

(தேவதத்தர் மெல்லென நுழைகின்றார்.)

தேவதத்தர் :

எடுப்பவன் நீயோ, எய்தவன் நானெனில்?
பறப்பது பாரில் யார்க்கும் உரித்திலை.
உயிரோ டெனினும் சிறகை முறித்து
வீழ்த்தவன் கொள்ளல் மனுமுறை [கண்டாய்.

சித்தார்த்தர் :

வீழ்த்த உனக்கு வழங்கேன் உறுதி.

அரசர் :

ஏன்அக் கூச்சல்? என்ன நடந்தது ?

தேவதத்தர் :

அன்னம் ஈது எய்தவன் யானே. [வன்.
கொய்ததும் எடுத்ததும் குழறுகின் றனி
குழறுதல் நீக்கித் தருகஎன் உரிமை.

சித்தார்த்தர் :

உரிமையும் வழக்கும் உயிர்ப்பொருட் [டன்றோ ?
உயிரைக் கொன்ற செயிருடை யவனோ
உயிரைக் காத்த ஒருவனோ உயிர்க்கு
உரிமை படைத்தான் ? உரைக்க நியாயம்.

அரசர் :

சிறந்தது சீவ காருணிய மெனினும்
பெண்போற் பரிதல் ஆண்அழ கன்று.

(தேவதத்தரை நோக்கி)

உனக்கே அன்னம் உரியது தந்தா !

சித்தார்த்தர் :

அடைக்கல மடைந்த பொருளை [விடுவதோ ?

அரசர் :

என்சொல் ஏற்காது எறிந்திடு வாயோ ?

சித்தார்த்தர் :

பொறுப்பல்அத் துன்பம்நின் பொறு [மையும் வேண்டுவல்,
உயிர்க்கொலை பொறுத்தல் ஒண்ணாது அதனால்.

அமைச்சர் :

கடமை கடத்தல் கண்ணியம் அன்றே ?

அரசர் :

தந்தைசொல் மிக்க மந்திர முண்டோ ?

அமைச்சர் :

உந்தையும் ஆவர் ஒறுக்கும் வேந்தர்.

சித்தார்த்தர் :

எந்தையும் ஆனீர், இறந்தது ஒறுக்கும்
வேந்தும் ஆவீர் ; மறந்தீர் ஒன்றை :
புண்பட் டோரைப் போற்றுதல் காவலர்

முதன்மை யான கடமை யன்றோ?
காவலர் கால்வழி வந்தவ னாகையால்
நான்இப் பறவையைக் கைவிடேன் உறுதி.

(பறவையை வெடுக்கெனப் பிடுங்கிக் கொண்டு)

தேவதத்தர் :

கோழை மனிதனாய் கொன்றிலே பேசினாய்;
அன்னம் பறிக்கக் கொண்டனை தந்திரம்.
தந்திரம் அன்றெனின், கொன்றிலே
[நானெனின்,
இவ்வனம் என்கை வந்ததை மீண்டும்
கொள்ளவும் வல்லேயோ, கொன்திறம்
காட்டே!

(சித்தார்த்தர் அன்னத்தைப் பிடுங்கிக்கொள்கிறார். அத்தாக்கலின் அதிர்ச்சியைத் தாங்காது தேவதத்தர் சோர்கின்றார்)

அரசர் :

(தேவதத்தரிடம்)

கொன்மகன் கோழைஎன் றழைத்தனை
[பேதாய்!
இழைத்தவன் இங்கைப் பொறுத்தேன்
[போபோ.

(சித்தார்த்தரிடம்)

குழைந்தவன் நெஞ்சுக்கு உழந்தனன்
[மைந்தா!
குழைவான் ஒருவனைக் கோழையே
[என்பர்.
தம்பிகள் சென்ற தழுகண் எங்கனும்
செலுத்துதல் மன்னரின் சிறந்த வலிமை.

(சித்தார்த்தர் பொய்கை சேர்ந்து அன்னத்தின் புண்ணைக் கழுவுகின்றார்)

சித்தார்த்தர் :

வேட்டையிற் பட்ட காட்டின் அன்னமே!
உன்துயர்க்கு இரங்கினேன், கேட்பை
[யோ என்துயர்?
மனிதன் கேளான் மதத்தின் பிடியால்.
ஈயும் பல்லியும் பாம்பும் பறவையும்
மொய்த்துஇப் பொதும்பர்த் துய்த்தன
[இன்பம்.
ஆயினும் ஈயைப் பல்லியும், பல்லியைப்
பாம்பும், பாம்பைப் பறவையும் பற்றி
உண்டிட ஒடுங்கி மண்டியிட் டலைந்தன.
உண்டிக் கென்று உயிரைக் கொன்று
திரிந்தன வேனும்அவ் உண்டி தன்னைக்
குஞ்சுக்கு ஊட்டிக் கொஞ்சி அன்பின்
பள்ளியிற் பால பாடம் பயின்றன!
ஆனால் அறிவுடை மனிதன், ஆஅ!
வயிறுக் கன்றிச் செயிரும் இன்றி
வெற்றுவிளை யாட்டில் செற்றனன்
[உயிரை!
வயிறும் செயிரும் விளையாட் டின்பமும்
இனைப்பல ஏது ஒன்றும் இன்றி
தன்னினங் கொல்லச் சமைந்தனன்
மனிதன்!
உயிரைக் கொன்று உயிரை வளர்க்க
எண்ணி அலைந்தான் ஏழை மனிதன்!
உயிரை வளர்க்கும் உபாயம் ஒன்று
செயிர்தீர் அன்பு, அன்பே என்று
காட்டுவார் உண்டோ? காட்டுவார்
[உண்டேல்
காண்போர் உண்டோ காண்போர்
[உண்டோ?

# ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளின் கடிதம்

ஒரு சிஷ்யருக்கு எழுதியது

அன்பார்ந்த அ—

ஈசுவர கிருபையால் நீ சில நாட்களை ஆத்ம சாதனம் செய்வதில் கழிக்க விரும்புகிறாய் என்பதையும், அதற்கேற்ற வசதியான இடம் ஒன்றைத் தேடிக்கொண்டுள்ளாய் என்பதையும், என் கடிதத்திலிருந்து அறிந்து நான் மகிழ்வடைகிறேன். எல்லாம் ஒழுங்காக அமைந்திருக்கிறது. நீ இன்னும் இளைஞன். இந்த சந்தர்ப்பத்தை மிக நன்றாகப் பயன்படுத்திக்கொள். உன்னுடைய அரிய காலத்தை வீணாக்காதே. பெரும் பெரும் தத்துவ ஆராய்ச்சிகளைப் பற்றித் தொந்தரவு படுதற்குப் பதிலாக, உறுதியுடன் சாதனத்தில் ஈடுபடு; நீ உண்மையை சுவானுபவத்தில் அறிவாய். சிரத்தையுடன் மேல்நோக்கிச் செல். ஸ்திரமான அப்பியாசத்தாலன்றி நீ எதையும் அடையமாட்டாய். தத்துவங்களைப் பற்றிய கேள்விகளைப்பற்றி நூல் ஆராய்ச்சி செய்தற்கு உன் ஆயுள் முழுதையும் செலவழித்தாலும் நீ ஒரு நன்மையையும் அடையமாட்டாய். இப்பொழுது அனைத்தும் அனுகூலமாய் அமைந்திருக்கையில் ஓராண்டாவது அமைதியாகச் சாதனம் செய்ய அமர்ந்துகொள். உனது உடலும் உள்ளமும் தூய்மை யடையும்; இறைவனுடைய அருளால் நீ அரியன பலவற்றை அறிந்து கொள்வாய்.

நான் உனக்குப் புகட்டுவதாவது: வேறு எண்ணமின்றி உன் முழுமனதையும் அவனுக்குக் கொடுத்துவிடு. எப்பொழுதும் தியானத்திலும், ஜபத்திலும், ஸ்மரணை-மனனத்திலும் ஈடுபடு. வீண் பேச்சிலும், பிறர்க்கு வலியப்போய் புத்தி புகட்டுவதிலும் கருத்தைச் செலுத்தாதே. உனக்கு உடல் வலிவு இருக்கிறது. மனதிலும் கெட்ட எண்ணம் எதுவும் பதிந்து உபத்திரவப் படுத்தாதிருக்கிறது. ஆத்ம சாதனங்கள் செய்வதற்கு இதுவே தருணம். மனது தூயதாயும், படியும் தன்மையுடையதாயும் இருக்கும்பொழுதே அதற்கு நல்ல வடிவம் கொடுப்பது எளிது. உனக்கு அத்தகைய மனது இருக்கிறது. ஆதலால் சாதனத்தில் ஆழ்ந்து மூழ்கி அருள் தாகத்தோடு இறைவனை இறைஞ்சு. உன்னுடைய சந்தேகங்களையும் கஷ்டங்களையும் அவன் அகற்றி வைப்பான். இத்தருணத்தை நீ நழுவ விடுவாயாகில் பின்னால் ஏதாவது சாதனம் செய்வதற்கு நீ மிகக் கஷ்டப்படவேண்டிவரும்.

கூடுமான வரையில் உன்னுடைய வினாக்களுக்குத்தக்க விடைகளை நான் இங்குத் தருகிறேன். சொற்ப காலத்துக்காவது நீ அவைகளைக் கையாள்வாயாகில் நீ அவசியம் அசீர்வதிக்கப்படுவாய்; உன்னுடைய வாழ்க்கையைப் பற்றிய பல பிரச்னைகளும் தாமே நீங்கிவிடும்.

வினா:—ஒரு நாளைக்கு நாம் ஜபம், தியானத்தில் எத்தனை மணி நேரமும், பூஜை, சாஸ்திரம் படித்தல் ஆகியவைகளில் எத்தனை மணி நேரமும் கழிக்க வேண்டும்?

விடை :—இவைகளிலெல்லாம் அதிகப்படி நேரம் போக்குவதற்கு ஏற்ப உனக்கு சவுகரியம் வாய்க்கும். மனதை முற்றும் உள்முகமாகத் திருப்பி வாழ்பவர் குறைந்தது பதினாறு மணி நேரம் ஜபத்திலும் தியானத்திலும் செலவிடவேண்டும். அநுஷ்டானத்தைத் தொடர்ந்து செய்வாயாகில் இவ்வேளையை இன்னும் அதிகப்படுத்த நீ வல்லவனாவாய். மனது எவ்வளவுக் கெவ்வளவு உள்முகமாகத் திரும்புகிறதோ அவ்வளவுக் கவ்வளவு ஆனந்தம் அதிகரிக்கும். அதை நீ ஒரு தடவை சுவைத்தால் அதில் அவா மேலும் மேலும் வளரும். பின்பு சாதனத்தில் எவ்வளவு நேரம் போக்குவது என்பதை உன் மனமே சொல்லும். இந்த நிலையை அடையு முன்பு உன்னுடைய தினசரி அநுஷ்டானத்தின் மூன்றில் இரண்டு பாகத்தை ஜபத்துக்கும் தியானத்துக்குமாக வென்று ஒதுக்கி வைப்பது உசிதம். சாஸ்திரங்கள் படிப்பதிலும், தியான வேளையில் உன் மனதில் எழும் பலவித மான எண்ணங்களை அலசி ஆராய்ச்சி செய்வதிலும் பாக்கி நேரத்தைக் கழிக்க வேண்டும். மேலும் நல்ல எண்ணங்கள் கெட்டவைகளினின்று சலித்து எடுக்கப்படுகின்றனவா வென்று நீ பார்ப்பது அவசியம். பிறகு படிப்படியாகக் கெட்ட எண்ணங்களை நீக்கவும் அவைகளுக்குப் பதிலாக நல்ல எண்ணங்களை நிலைநாட்டவும் வேண்டும். பேரெச்சரிக்கையுடனும் சிரிய கருத்துடனும் இந்த நல்லெண்ணங்களை ஒர்மைப்படுத்துதலும் வேண்டும். மனதில் சஞ்சலத்தை உண்டுபண்ணுவதற்கு ஏதுவான இயல்புகளை இவ்வாறு அடக்கி நேர்மைப்படுத்துவதால், உண்மையான தியான நிலையை நீ அடையக்கூடும். வெறுமனே கண்ணை மூடிக்கொண்டு ஜபமாலையை உருட்டுவது, அல்லது தானாக மனதில் எழும் கடவுளைப்பற்றிய சிந்தனையானது நீ விரும்பும் ஈசுவரானுபூதியை உனக்குக் கொண்டுவந்து சேர்க்காது.

நித்யானந்தத்தையும் சாந்தியையும் நாடுபவர் ஒருமை மனதாகக் கடவுளைப் பற்றி ஆழ்ந்து எண்ணவேண்டும். அமைதியும் சாந்தமும் மனதில் உண்டாகும்படிச் செய்வதே மனனத்தின் உத்தேசமாகும். இதில் நீ வெற்றியடையாவிட்டால், அல்லது ஆனந்தத்தைப் பெறாதிருந்தால் பகவத்சிந்தனையை சரியானவழியில் நீ செலுத்தவில்லை என்று அறியவேண்டும். மற்றொரு கருத்தை நான் உன் மனதில் படியும்படி செய்ய விரும்புகிறேன்; அதாவது, உனக்கு உணவையும் அவசியமான மற்ற பொருள்களையும் யார் அளிக்கிறாரோ அவர் நீ சேகரிக்கும் புண்ணியத்தில் ஒரு பகுதிக்குப் பாத்திரம் ஆகிறார்; ஆதலால் இங்ஙனம் கணக்குத் தீர்த்த பிறகு வேண்டிய அளவு உனக்கு எஞ்சியிருக்கும்படி தபோபலனைத் தேடிக்கொள்.

வினா :—சில வேளைகளில் மனது தியானம் பண்ண மறுதலிக்கும்போது நான் என் செய்வது; அப்பொழுது நான் சாஸ்திரங்கள் படிப்பதா, அல்லது பலவந்தமாக மனதை தியானத்தில் ஈடுபடுத்துவதா?

விடை :—பழக்கம் உறுதி பெறுதற்பொருட்டு, ஆரம்பதசையில் உன் மனதை தியானத்தில் வற்புறுத்திச் செலுத்த வேண்டும். வேலையைப் புறக்கணிப்பதும் எப்பொழுதும் சுகத்தையும் சொகுசையும் நாடுவதும் மனதின் இயல்பு. ஆனால் நீ உண்மையில் சாசுவதமான சாந்தியை நாடுவாயாகில், நீ கஷ்டப்பட்டு உழைக்க வேண்டும். நெடிது தொடர்ந்து உட்கார்ந்திருப்பது உனக்குச் சிரமமாகத் தோன்றினால், படுக்கையில் படுத்துக் கொண்டு ஜபம் பண்ண ஆரம்பிக்கலாம்; அப்படிச் செய்வதால் தூக்கம் வருமாகில் இங்குமங்கும் நடந்துகொண்டு ஜபம்

பண்ணு. எவ்விதத்திலும் மனதை எப்பொழுதும் ஈசுவர சிந்தனையிலேயே ஈடுபடுத்தி வை. இதற்கு மாறாக மனதுக்கு இளக்கம் கொடுப்பாயாகில், உறுதியான வாழ்க்கை முறையில் பயிற்சிபெற நீ வல்லவனாகாய். பழக்க வழக்கங்களில் ஒழுங்கும் உறுதியும் இல்லாதவர்கள் ஆத்ம சாதனத்தில் மேல்நோக்கிச் செல்லவும் முடியாது. ஆதலால் மனதோடு முறையாகப் போராடி அதை முற்றும் ஒழுங்குப்படுத்து. சாதனம் என்று சொல்லப்படுவது இதுவே; எல்லா சாதனங்களின் முடிவும் மனதை வசப்படுத்துதலாம்.

வினா:—ஹடயோக முறைகள், பிராணாயாமம், ஆசனம் முதலியவைகள் ஆத்ம சாதனத்துக்கு ஓரளவாவது வேண்டப்படுகின்றனவா? அவைகளும் வேண்டப்படுபவைகளானால் அவைகளின்பொருட்டு எவ்வளவு நேரம் எடுத்துக்கொள்ளவேண்டும்?

விடை:—இப்பொழுது அவைபோன்ற சாதனங்கள் உனக்குத் தேவையில்லை. இறைவனைக் குறித்து தியானம் பண்ணுவது ஒன்றே முற்றிலும் வேண்டப்படுகிறது. முழுமனதோடு ஓயாது அவனிடத்துப் பிரார்த்தனை பண்ணு. அவனிடத்து இடையறாத் தொடர்பு வைத்திருப்பதுதான் முக்கியமானது. ஆதலால் இவ்விதியைப் பின்பற்று; அவனும் உனக்கு எது நல்லதோ அதைச் செய்யும்படித் தூண்டுவான்.

ஹடயோக அப்பியாசத்தைப்பற்றிக் கேட்கிறாய். அதனிடமிருந்து நீ அடியோடு விலகிக் கொள்ளாவிட்டால் அதனால் விளையும் தீமையைப்பற்றி நீ பின்னால் வருந்தவேண்டிவரும். தகுந்த குரு ஒருவரின் உதவியில்லையெனின் அது மிக அபாயகரமான மார்க்கமாகும். அதை நீ பெரிதும் விரும்புகிறாயெனின், ஸ்ரீராமகிருஷ்ணரின் சிஷ்யர்களில் ஒருவரோடு வாழ்ந்திருக்கும் பொழுதுமட்டும், முற்றிலும் அவருடைய போதனைக்கு உட்பட்டு நீ அதை அனுஷ்டிக்கலாம்.

வினா:—சாதகன் ஒருவன் எவ்வளவு நேரம் தூங்கலாம்? உறக்கத்துக்கென்று வழக்கமாக நியமிக்கப்பட்டுள்ள நேரத்துக்கு மேல் உடலுக்கும் உள்ளத்துக்கும் ஓய்வுகொடுக்க இன்னும் சிறிதுநேரம் எடுத்துக் கொள்ளலாமா?

விடை:—ஆரோக்கியமாக இருக்கிற சாதகன் ஒருவனுக்கு சாதாரணமாக நான்குமணி நேரம் நித்திரை போதுமானது; ஐந்து மணி நேரத்துக்குமேல் உறங்குவது ஓய்வல்ல, நோய் என்று சொல்லவேண்டும். அது பெரும் தீங்கை உண்டுபண்ணுகிறது. ஆத்மசாதகன் ஒருவன் தூக்கத்தில் காலத்தைப் போக்குவது ஒருக்காலும் ஒவ்வாது. தேகமும் மனதும் திட்பம் வாய்க்கப்பெற்றிருக்கும் இளமையே சாதனத்துக்கு முற்றும் பொருந்திய பருவமாதலால் சாதகன் ஒருவன் அதை நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும். வாழ்க்கையில் பெரிதும் வழுக்குடைய வழிகளை வழுவாது கடந்து முக்தியாம் நிலை சேர்தற்கு வேண்டிய அளவு ஆத்ம சக்தியை இந்த இளமையிலேயே அவன் சேகரித்து வைக்க வேண்டும். எனவே ஆத்மீகத் துறையில் இப்பொழுது நீ முன்னேற்றமடையாவிட்டால் பின்னால் அது பெரிதும் சாத்தியப்படாது. என் பிள்ளாய், நீ இன்னும் இளைஞன், உன் மனதுக்கு தெய்வப்பேற்றி கொடு. முழு மனதோடு சாதனத்தில் மூழ்கிக் காலத்தை நன்கு பயன் படுத்து. இளைப்பாறும் காலம் வேண்டியவாறு பின்னால் வந்தமையும்.

சாதனத் துறையில் பெரும் பாடுபட வேண்டுமென்று ஒருவனை வேண்டினால், அவன் உடனே ஆதாரவில்லாச் சாக்குகள் பல சொல்ல ஆரம்பிப்பான். உடல் மெலிந்

திருக்கிறதென்றும் ஓய்வு வேண்டப்படுகிறதென்றும் அவன் இயம்புவான். உண்மையில் அவனுக்கு சாதனத்தில் விருப்பமில்லை. ஞான வாழ்க்கையை ஒழுங்காக நடாத்துகின்றவர்களுடைய இந்திரியங்கள் தாமே நேர்மையைப் பெற்றுவிடுகின்றன. ஆதலால் தேகத்தை ஆரோக்கியமாகவும் உறுதியுடையதாகவும் வைத்திருப்பதற்கு நான்கு மணிநேர உறக்கமே போதுமானது. இவ்வுண்மையை சாதகன் அறிந்திருக்க வேண்டும். முறை தவறிய வாழ்க்கை வாழ்வதால் உடலுக்கும் உள்ளத்துக்கும் பெருமிதமான களைப்பு ஏற்படுகிறது. பிறகு ஆக்கைக்கு உற்சாகம் தருதற்கு எட்டு அல்லது பத்து மணி நேர உறக்கமும் போதாததாகிறது. ஆதலால் ஞானச் செல்வ, உன்னை நான் வேண்டுவது இதுவே—வாழ்க்கையை யாண்டும் ஓர்மைப்படுத்து; அதனால் உன் உடலும் உள்ளமும் ஊக்கம் படைத்து உழைக்க வல்லவைகளாகும். இனிக் காலத்தை வீணாக்காதே. அருட்செல்வம் வேண்டுமானால் அதற்காகவென்று உழை. நல் வாழ்க்கை வாழ்ந்தாலொழிய வீண் பேச்சும் உயர்ந்த தத்துவ ஆராய்ச்சியும் ஒன்றுக்கும் உதவா.

வினா:—உணவைப்பற்றி நான் கையாள வேண்டிய கட்டுப் பாடுகள் என்ன? எனக்கு அளிக்கப்படும் ஆகாரம் எதுவாயினும் அதை ஏற்றுக்கொள்ளட்டுமா, அல்லது நல்லது எது என்று பாகுபடுத்திப் பார்க்கட்டுமா? மதுகரி ஆகாரம் நல்லதா, அல்லது தற்செயலாய்க் கிடைப்பது நல்லதா? (மதுகரி ஆகாரம் என்பது தேனீ புஷ்பந்தோறும் தேன் சேகரிப்பது போன்று, சாது ஒருவன் பல வீடுகளில் சிறிது சிறிதாகக்கேட்டுச் சேகரிக்கும் உணவு.)

விடை:—சாதன தசையில் இருக்கும் பொழுது நல்ல ஆகாரம் எது என்று சிறிது விசாரித்துப் பார்ப்பது மேல். சில ஆகாரங்கள் உறக்கத்தையும் சோம்பலையும் உண்டு பண்ணுகின்றன; சாதகன் ஒருவனுக்கு அவைகளே பரம சத்துருக்கள் ஆதலால் அவைகளை எடுத்துக்கொள்ளாதிருப்பதே எப்பொழுதும் உத்தமமானது. தித்திப்பு, புளிப்பு முதலியவைகளை மட்டுக்கு மிஞ்சிப் புசிப்பது தகாது. உளுத்தம் பருப்பையும் அதில் செய்யப்பட்டுள்ள பட்சணங்களையும் புசிப்பதால் ஆத்மசாதன வளர்ச்சி தடைப்படுகிறது. இவைபோன்ற உணவுகள் தமோகுண விருத்தியை உண்டு பண்ணுகின்றன. இதன் பலனாக தியான வேளையில் சோம்பல் உண்டாகிறது. ஞான வாழ்க்கையில் முன்னேற்றம் ஆவதில்லை.

அருள் நாட்ட முடையவன் ஆகாரத்தைப்பற்றி எச்சரிக்கையா யிருப்பது மன்றி எளிதில் சமிக்கக்கூடிய உணவையே உண்ணவேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் வயிற்றில் முக்காற்பங்குக்கு மேல் உணவைக்கொண்டு நிறைக்கலாகாது. இப்படிச் செய்வதால் அவனுடைய வலிவும் சக்தியும் அதிகரிக்கும்; அவைகளை நல்வழியில் பயன்படுத்தவும் சாத்தியப்படும். ஆனால் வயிற்றைப் பெருமிதமாக நிரப்பினால் ஆகாரத்தைச் செரிப்பதிலேயே சக்தி முழுதையும் செலவிட வேண்டி வரும். தியானம் பண்ணுதற்கு ஆற்றலோ எண்ணமோ உண்டாகாது. மேலும் உடல் நலத்தையும் அது கலைக்கும். சாதனத்துக்கு ஆரோக்கியம் துணை புரிகிறது என்பதை நீ நன்கு அறிவாய். ஆதலால் சமயம் உனக்கு அனுகூலமா யிருக்கும் இது போழ்து உடல் நலனை நீ பெரிதும் காப்பாற்றுவாயாக.

மதுகரி ஆகாரம் மிகப் பரிசுத்தமானது. அது உன்னை ஒரு நிபந்தனையிலும் கட்டுப் படுத்துவதில்லை. ஆனால் தனித்த ஒரு மனிதனிடமிருந்து நீ உணவை ஏற்றுக்

கொண்டால் அது உன்னைக் கட்டுப்படுத்துகிறது. உன்னுடைய தபோ பலனில் ஒரு சிறிது அம்மனிதனுக்கும் போகிறது. இடையறாது தியானம் செய்ய இயலாமையால் சிறிது நேரத்துக்கு வினை மாற்றம் வேண்டுமென்று விரும்புபவர்க்குத் தனி முறையில் மதுகரி பயன் படுகிறது. ஓய்வு வேளையை உதவாத பேச்சிலே போக்குதற்குப் பதிலாக மதுகரி பிக்ஷை சேகரிப்பதில் போக்கினால் இரண்டுவித நன்மைகள் வந்து வாய்க்கின்றன. வேளையை வீண் விரயம் செய்யாமை என்பது முதல் நன்மை. தனி மனிதனிடமிருந்து உணவைப் பெறாமையினால் யாருக்கும் கடமைப் படாதிருப்பது இரண்டாவது நலன்.

வினா:—சாதன தசையில் இருக்கும் பொழுது மௌன விரதம் எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியமா? அப்படியானால், விலக்க முடியாத சம்பவங்கள் அவ்விரதத்தைக் கலைக்கும்படி வற்புறுத்தினால், அல்லது மனதானது அவ்விரதத்தை முன்னிட்டுச் சீற்றம் கொள்ளுமானால் அப்பொழுது என்ன செய்வது?

விடை:—அல்ல; எதை நீ மௌன விரதம் என்று எண்ணுகிறாயோ அது தேவையல்ல. பலவந்தமாகப் பேசாதிருப்பதும், பெருமிதமாக வீண்பேச்சில் ஈடுபடுவதும் ஆகிய இரண்டும் மனிதனுக்குக் கேடு விளைவிக்கின்றன. மனம் அடங்கப் பெற்றிருப்பது வாய்திறந்து பேசாதிருப்பதைவிட நிச்சயமாக மேலானது. ஆதலால் எப்பொழுதும் மனமடங்கியிருக்க முயலு. பேசா விரதத்தைப் பலவந்தமாக மேற்கொள்வதைவிட, தேவையுள்ளவளவுதான் பேசுவது என்று வைத்துக்கொண்டால் அதினின்று தீங்கு ஒன்றும் விளையாது. மேலும் முறையான மௌன விரதத்தின் பலனும் அதினின்று கிடைக்கும்.

வினா:—துணி வகைகளில் சாதகன் எவ்வளவு வைத்துக்கொள்ள வேண்டும்? குளிர்வெப்பத்தை எவ்வளவு தூரம் சகிக்க வேண்டும்? தாங்கவொண்ணாத் தனுப்பினின்று தன்னைக் காத்துக்கொள்ளுதற்கு ஒருவர் ஆடைகளை அளித்தால் அவைகளை ஏற்றுக்கொள்ளலாமா?

விடை:—குளிர் வெப்பத்திலிருந்து உடலைக் காத்துக் கொள்ளுதற்காகவும், அதை ஆரோக்கியமாக வைத்திருப்பதற்காகவும் உடை எவ்வளவு தேவையோ அவ்வளவு மட்டும் நீ வைத்துக்கொள். மெலிந்த தேகத்தோடிருப்பவர் தவம் புரியுங்கால் வேண்டிய வசதிகளையெல்லாம் தேடிக்கொள்ளவேண்டும் என்பதையும் நீ ஞாபகத்தில் வைத்துக்கொள். நீ கொண்டுள்ள லட்சியம் இறைவனை அடைவதற்கே யொழிய வீண் கஷ்டப்படுவதற்கல்ல. பிறர் கொடுப்பதை ஏற்கப் புகுமுன்பு அது உனக்கு முற்றிலும் தேவையா என்று நீதான் மனமாரத் தீர்மானிக்க வேண்டும். உண்மையில் உனக்கு ஒரு பொருள் தேவையாயிருந்தால்தான் நீ அதை ஏற்றுக்கொள்ள வேண்டும்; இல்லாவிட்டால் அதை ஏற்காதே. யார் எதைக் கொடுத்தாலும் சேகரித்து வைப்பதற்காக அதை ஏற்றுக் கொள்வது சாதகன் ஒருவன் செய்யும் பெருங் குற்றமாகும்.

வினா:—தங்களிடத்திருந்தும் தெய்வத்திடத்திருந்தும் என்மீது எல்லையில்லாக் கருணை வந்து பொழிகிறது என்பதை நான் அறிகிறேன். இக்கருணை முழுதையும் நான் நன்றாக உணரும்படி என்னை ஆசீர்வதியுங்கள். உறுதியானதும் மாறாததுமான விசுவாசம் எனக்கு உங்களிடத்து உண்டாகும்படியும் ஆசீர்வதியுங்கள். உங்களுடைய அருளாலன்றி எதையும் சாதிக்கும் வல்லமை எனக்கில்லை என்று நான் உணர்வதால் என்னை

முற்றும் உங்களுடைய அருளுக்கு ஏற்ப ஆட்டிவைக்க மாட்டீர்களா?

விடை:—எல்லையில்லா ஆற்றல் உன்னிடத்திருக்கிறது. அருட்செல்வ, சுய நம்பிக்கையை நீ ஒருபொழுதும் இழந்துவிடாதே; உன்னிடத்து இறைவன் உறைந்துள்ளான். அவனுடைய அருளும் இருக்கிறது. எல்லார்க்கும் அவன் அருள் புரிபவன். அவனுடைய கரைகாணாக் கிருபையாலேதான் நீ இந்த ராமகிருஷ்ண மடத்தில் சேர்ந்துள்ளாய் என்பதையும், நிச்சயமாகத் தெரிந்துகொள். சாதன காலத்தில் இருக்க இடமும் உண்ண உணவும் கொடுக்க நல்லான் முன் வந்திருப்பதும் இறைவனுடைய கருணையாலேயே. ஆக, விசுவாசம் வைத்திரு; அவனிடத்து உறுதியான நம்பிக்கைவை. மாறாத் தீர்மானத்துடன் முயலுவாயாகில் அவன் உனக்கு முழுஞானத்தையும் நல்குவான். ஓயாது உழை. நீ அவனை அறிவாய்; அவனுடைய கரைகாணாக் காருண்யத்தையும் உணர்வாய். வீண்காலம் போக்காதே. இந்த ஜன்மத்திலேயே இறைவனுடைய அநுபூதி கிடைக்கும் பரியந்தம் நீ ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யர்கள் காட்டியுள்ள வழியை உறுதியாகக் கடைப்பிடி. பெரிய கேள்விகளைக் குறித்து மேலும் சஞ்சலப்படாதே. ஆக்கத்துக்கு ஏதுவான ஒன்றைச் செய். இத்தருணத்தை நன்கு பயன்படுத்தி ஆசிர்வதிக்கப் படுபவன் ஆவாயாக.

உன் வினாக்களுக்கெல்லாம் நான் விடை கூறியாய்விட்டது. இனி அவைகளை வாழ்க்கையில் கையாளமுயலு. உனக்கு இடமும் உணவும் அளித்து வருபவர் ஒரு பக்தர் என்று உன் கடிதத்திலிருந்து நான் அறிய வருகிறேன். பணக்காரர் நல்ல காரியங்களுக்குப் பணத்தைச் செலவழிப்பது அரிது; அப்படிச் செய்ய முன் வருபவரது தொகை மிகச் சிறியது. அந்த அன்பர் உனக்கு அவ்வளவு சௌகரியம் செய்து கொடுத்திருக்கிறார். அவர் செலவு செய்தது வீண் போகாதபடி நீ பார்த்துக்கொள். உன்னுடைய வாழ்க்கை முறையைப் பார்த்து நல்ல காரியங்களில் இன்னும் அதிகமாகப் பணத்தைச் செலவழிக்க வேண்டும் என்னும் எண்ணம் அவருக்கு உண்டாக வேண்டும். உன்னை அவர் ஆதரிக்கின்றபடியால் உன்னுடைய பாப புண்ணியம் இரண்டிலும் அவருக்குப் பங்குண்டு. ஆதலால் அவருக்குக் கேடுவாராது பார்த்துக் கொள்வது உன் கடமை. பேரும் புகழும் தேடாது எச்சரிக்கையாயிரு. துறவி ஆகாமலேயே நீ அவைகளைப் பெறக் கூடும். பேரும் புகழும் என்னும் வலைகளினின்று தப்பி வந்த நீ மேலும் போய் அவைகளில் மாட்டிக் கொள்ளாதே. கீர்த்தி என்னும் குற்றம் படிந்து உன்னுடைய தூய உள்ளத்தை அணுவளவும் அழுக்குப் படுத்தாதிருக்க வேண்டு மென்று நீ அவனை மானமார வழுத்து.

உனக்கும் உன்னை ஆதரிக்கின்ற நண்பருக்கும் எனது அன்பும் ஆசிர்வாதமும் உரியன வாகுக. நீ கொண்டுள்ள கருத்து நிறைவேற வேண்டுமென்று நான் எப்பொழுதும் இறைவனை வேண்டுகிறேன். பக்தியும் ஞானமும் நல்கி உன்னை அவன் நல்லோனுக்குவானாக.

---

# பிரம்ம வித்தை

(சுவாமி வீரராகவர், செங்கற்பட்டு)

பிரம்மவித்தையோ? வென்று சர்வ சாதாரணமாக ஒரு சுலபமான காரியத்தை முன்னிட்டுப் பேசும்போது சொல்லும் வழக்கமுண்டு. இப்படிச் சொல்வதால் பிரம்மவித்தை ஏதோ ஓர் உயர்ந்த விஷயம் என்பது பெறப்படுகிற தல்லவா? பிரம்மவித்தை என்பது யாது? இதைப் பிரம்மஞான மென்றும் பரவித்தை யென்றும், இதை அடையும் மார்க்கத்தை சிரேயஸ் மார்க்கமென்றும் கூறுவர் பெரியோர். (Theosophy) தியாசபி - பிரம்ம+ ஸோபியா - ஞானம் [பிரம்ம ஞானம்.] எனப் பொருள்கொள்ளப்படுகிறது. தற்கால இந்தியாவிலும் பல பாகங்களில் புது முறைகளோடு பிரம்மஞான சங்கங்கள் திகழ்கின்றனவே; இவற்றின் உண்மையான பூர்வநோக்கங்கள் பரவித்தையைப் பரப்புவதே யாகும். ஆனால் இவற்றில் தற்கால உலகில் நவீன நாகரீகப் பழக்க வழக்கங்கள் பல விதத்தில் புகுந்து விரவியிருக்கின்றமையால், உண்மையான நிலைகளை (நோக்கங்களை) வெளிப்படையாகக் காண்பது சுலபமாய் இல்லை. பிரம்ம ஞானமென்பது நூதனமல்ல. சிருஷ்டி காலம் முதலாக, உலக மக்கட்கு மத உணர்ச்சி ஏற்பட்ட காலந்தொட்டும் அதற்கு முன்பும் ஞானம் இருந்திருக்கிறது. ஆனால் இதனை அறிந்து நமது அனுபவத்தில் கடைப்பிடித்து உணர்ந்த மஹான்கள் தத்தம் அனுபவங்களுக்கேற்ப முறைகளை வெளியிட்டு மக்கட்கு உதவினர். பிரம்மஞான மென்பது ஒன்று தான். ஆனால் அதை அடையும் வழிகள் வெவ்வேறாய் இருக்கலாம். "வேறுபடும் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்...மாறுபடும் கருத்தில்லை" என்பது பெரியோர் வாக்கு. ஒவ்வொருமதத்தின் உண்மைகளையும் ஆராய்ந்து பார்த்தால், உயிர்பாகம் ஒன்றும் உடல்பாகம் ஒன்றும், ஆக இரண்டாகப் பிரிக்கலாம். இவ்வுயிர்பாகம் ஞானகாண்டம் என்றும், உடல் பாகம் கர்மகாண்டம் என்றும் அவற்றின் தத்துவங்களைப் பிரித்துக் காட்டலாம். சமயங்களில் ஞானகாண்டத்தைப் பொருந்திய வரையில் வித்தியாசமில்லை. கர்மகாண்டத்தைப் பொருந்தியவரையில் பலவேற்றுமைகள் காணப்படுகின்றன. இதற்குக் காரணம்—அவ்வச்சமயங்கள் தோன்றிய காலத்தில் நாட்டின் நிலை, காலம், தீர்க்க தரிசிகளின் நோக்கங்கள் இவைகளுக்குத் தக்கபடியாக கர்மானுஷ்டானங்களும் ஆசாரங்களும் உபாசனை முறைகளும் ஏற்பட்டன. மதஸ்தாபகர்களனைவரும் அதீதானந்தானுபவம் பெற்றவர்களாதலால், கர்மானுஷ்டான முறைகள் வேறுபட்டாலும் ஞானகாண்ட உண்மைகள் ஒரே விதத் தன்மை பெற்றனவாயின; ஒரே பரம்பொருளை வருணிக்கின்றன. அந்தப் பிரம்மவித்தையை ஞானமார்க்க, கர்ம மார்க்கங்களைச் சிறிதும் வழுவில்லாமல் அனுஷ்டிப்பது மிகவும் சிரமமான காரியமாதலால்தான் 'இதென்ன பிரம்ம வித்தையா?' என்னும் வினா நிகழ்கின்றது. இந்தக் கடினமான மார்க்கத்தை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவருவது தான் சிரமசாத்தியம். அதைக் காரியத்திற் (அனுபவத்திற்) கொண்டுவந்த பிறகு அம்மஹானுக்கு ஏதுவும் கஷ்ட

மில்லை. பகவான் அவன் சொற்படி ஆடுகிறார்.

மனம் ஒரு மாட்டிற்குச் சமானம்; மனமானது ஆன்மாவால் தூண்டப்படும் ஓர் ஆச்சர்யமான தெய்வீகமான உணர்ச்சியுடையது. ஆன்மாவை சாத்விகமான பசுவென்பர் பெரியோர். ஆகவே இந்த மனமென்னும் முரட்டு மாட்டை அறிவென்னும் அருமைக் கயிற்றால் திட வைராக்கியம் அதாவது மன உறுதியென்னும் வைரக் கட்டுமுளையில் கட்டி பகவன் நாமாவாகிய அமுதப்புல்லை ஊட்டவேண்டும். உலகில் மனிதர்செய்யும் காரியங்கள் அனைத்திற்கும் மனமே காரணம். விவேகத்தினுதவியால் மனம் காலாகாலங்களில் செய்யவேண்டிய சத்கருமாக்களில் நம்மைத் தூண்டுகிறது. மஹான்கள் இந்த மனம் வசமாக வேண்டுமென்று இறைவனை வேண்டுகின்றார்கள். மனம் நாசமானால்தான் கர்மம் நசிக்கும், கர்மம் தொடருகின்றவரையில், பிறவி நம்மை விடவே விடாது. ஆகவே பெரியோர் பிறவித் துன்பத்தை யொழிக்க, மனம் மாய வேண்டுமென்றார்கள். இம்மனோ நாசமுண்டாவதோ சர்வசாதாரணமான காரியமன்று; இவ்வுலகத்திலேயே மிக அரிதிலும் அரிதென்று கூறப்படுவதொன்றுளதாயின், அதுவே இம்மனதைக் கட்டுப்படுத்துவதாகும். ஆசைகளை வென்று பற்றுக்களை ஜயித்த புண்ணிய பாக்கியசாலிகளான உத்தமமான பெரியோர்களுங்கூட "சிந்தையை யடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது" (தாயுமானவர்) என்றும் "சிந்தைதான் தெளியாது சுழலும் வகையென்னே" (தாயுமானவர்)என அஞ்சிக்கூறுகின்றனர். ஆயினும் பெரியோர்கள் மனதைமட்டும் அடக்க வேண்டுமென்று சொல்லவில்லை. ஹிதமான உபாயங்களை ஆங்காங்கே அவரவர்கள் அனுபவ சித்திக்கேற்பக் கூறியுள்ளார். அனுதினமும் சிறிது சிறிதாக, பொன் பெண் இவற்றிலுள்ள இச்சைகளை விட்டு வரவேண்டும். மனதை, ஐம்புலன்களையும் தூண்டாதவாறு ஜாக்கிரதையாகத் தடுத்து வர வேண்டும்.

இந்திரியங்களை யடக்கியவர்களே முக்தி என்னும் ஈடில்லாப்பேரின்பப் பெருவாழ்வைப் பெறுவர்; இதை எப்படிச் செய்வது? உதாரணமாக:—முதலில் கண்களை எடுத்துக்கொள்வோம். இயற்கையிலேயே இதற்கு எந்தப் பொருளையும் பார்க்கக் கூடிய சக்திவாய்ந்திருக்கிறது. இக்கண் பரஸ்திரீயைப் பார்க்கும்போது, அதன் மூலஸ்தானம்—அதாவது எஜமானனான மனம்—இச்சை கொண்டு, தேக அவயவங்களாகிய தூதர்களைக் கிளப்பி, தன் இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ளும்வரை இடைவிடாமல் முயற்சித்துக் கொண்டே இருக்கும். ஆகவே மேன்மேலும் இன்பதுன்பமோ பாபமோ சம்பவிக்கின்றது. ஆகவே பிறன்மனைவியைப் பார்க்கும்போது ஒரு நிமிஷம் கண்களை மூடிக்கொண்டு பகவத் ஸ்மரணை செய்வது ஓர் சுலபமான ஆரம்பக்கல்வி போன்ற பழக்கமாகும். இப்படிச்செய்து கொண்டு வந்தால் சொற்ப காலத்தில் இந்த இந்திரியத்தை வசமாக்கி விடலாம். இப்படி ஒவ்வொரு இந்திரியத்தையும் படிப்படியாக வென்று, மஹான்கள் நற்கதிபெற்றனர். அழிவற்ற ஞானத்தை சம்பாதிக்கவே நாம் இவ்வுலகில் ஜனித்திருக்கிறோம்.—வாழ்க்கையே ஒருவகைப் போர்க்களந்தான்! மனோ சக்தி என்னும் வேல் வீசப்பட வேண்டும்; மனம் துளியேனும் கலங்க வேண்டாமென்றார் பெரியோர்; போர் வீரனைப்போல ஒரு சிரிப்பு சிரித்துவிட வேண்டும். "இடுக்கண்வருங்கால் நகுக!" (திருக்குறள்) வெள்ளம்போலத் துன்பங்கள் பெருகிவந்த போதிலும் கூட, அறி

வாளிகளுடைய ஞானசக்தியும் மனோ சக்தியும் அந்தத் துன்பங்களுக்கெல்லாம் துன்பமாகி, அவற்றைப் போக்கிவிடும். மனம் வேறு விஷயத்தை நாடியிருப்பதைப்பற்றி விசேஷ வளர்ச்சி உண்டாவதில்லை என்பதை யுணர்ந்து, நாம் பரப்பிரம்மத்தின் ஆனந்த சாகரத்தில் மூழ்கி அமிர்த பானம் செய்து அவர் கிருபைக்குப் பாத்திரர்களாவோமாக.

ஓம் சாந்தி.

---

# நமது சிகர ஜோதி

இப் பகுதியில் :—'தேவியின் திருவாக்கு': வழக்கமாக வெளிவருகின்ற இத்தலைப்பின் கீழ் தேவியாரின் வாழ்க்கைப் பகுதி காட்டப்பட்டிருக்கின்றது. 'அஹிம்சை': ஸ்ரீ எதீஸ்வரானந்த சுவாமிகள் அருளியது; நம் வாசகர்கட்கு மகிழ்வையும் அறிவையும் ஊட்டும் இக்கட்டுரையும் வழக்கம்போல் வெளிவருகின்றது. அஹிம்ஸை வழியைப் பின்பற்றுவோன் கோழை என இக்காலத்தே சிலர் எண்ணுகின்றனர்; அவர்கள் கொண்டுள்ள கருத்து சரியன்று. கோழை மனதுடையவன் அஹிம்ஸை வாதியாக மாட்டான். இக்கருத்தினை இக்கட்டுரை நன்கு காட்டுகின்றது. 'இராவண தத்துவம்': ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இக்கட்டுரையில் இலங்கை யமைப்பு, இராவணனது பராக்கிரமம் அவனது ஆட்சி முறைகளை அழகுபட எடுத்துக் காட்டுவதோடு எங்ஙனம் அவை மனத்தின் செயலோடு ஒக்கும் என்பதனை விளங்க வுரைக்கின்றார்கள். 'பக்தியும் சிரத்தையும்': ஒரு பொருளையோ நிலையையோ அடைய வேண்டுவோர் அதற்கான ஆவல் மிக்க முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுவது அவசியம். அதாவது சிரத்தை வேண்டும். இந்த பக்தியும் சிரத்தையும் சேர்ந்த விடத்தேதான் வெற்றி. இக்கருத்தை பண்டிதர், பு. ஸ்ரீனிவாசன் அவர்கள் பல மேற்கோள்களுடன் விளக்கிக் காட்டியிருக்கின்றார் இக்கட்டுரையில், சிவபெருமான், திருமால், காளிதேவி ஆய முத்தேவர்களின் நிலையினைக் காட்டி அம் மூன்று கடவுளர்களையும் தம்மகத்தே கொண்டு உலவிய பெரியார் ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை என்னும் கட்டுரை காட்டுகின்றது. 'புத்தரின் கண்ணீர்': இந் நாடகப் பாட்டு ஓர் ஆங்கில நாடகப் பாட்டினைத் தழுவியது; அஹிம்ஸை கோழைத்தனத்தை உடையதன்று என்பது சித்தார்த்தர் தேவதத்தரிடமிருந்து அன்னத்தைப் பிடுங்கிக் கொள்வதினின்றும் வெளியாகின்றது. புத்தர் அவதாரமான இந்த மாதத்தில் அவருடைய சரித்திரத்தின் ஒளி வீசும் ஒரு பகுதியை நினைவுபடுத்திக் கொள்ளுதல் நல்லதன்றோ?

## வேதாந்தம் அளிக்கும் விழுமிய கருத்து

**மனிதனது** இயல்பு, பொதுப்பட நோக்கும்போது, மிகக் கெட்டதாகும். உலகத்துள்ள மனிதர்களில் கோடியில் ஒருவரைத் தவிரப் பிறரெல்லாம் கெட்ட மனதையே உடையராயிருப்பர். இது உலகத்தாரது இயல்பை ஆராய்ந்து பார்ப்போர் அனைவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஓர் உண்மையாகும். மனது எப்போதும் தன் இயல்பாலே உலகப் பொருள்களை நோக்கிச் சென்று கொண்டிருப்பதாகும். ஐம்பொறிகளும் ஐந்து முரட்டுக் குதிரைகளைப் போன்று எப்போதும் மனத்தை

இழுத்துக்கொண்டு, பலவிடங்களிலும் அடிபோடி யதேச்சையாகத் திரிந்து கொண்டிருக்கும். மனிதனுடைய மனம் பல எண்ணிறந்த பிறவிகளாக இவ்வாறு புற உலகப் பொருள்களை நோக்கிச் சலிப்படையாது சென்று, அவைகட்கு இடையே திரிந்து, இன்பதுன்பங்களை அனுபவித்து வந்துள்ளது. இன்பத்திலும் இன்பத்தைத் தரும் பொருள்களிலும் விருப்பும், துன்பத்திலும் துன்பத்தைத் தரும் பொருள்களிலும் வெறுப்பும் கொண்டு, விருப்பு வெறுப்புகள் என்னும் வலையிற் சிக்கிக் கொண்டு அல்லற்படுகின்றது. இடையிடையே அனுபவத்திலிருந்து, மனதை அடக்குதலே நன்று என்னும் உண்மை உணரப்பட்டாலும், அதைப் பின்பற்றுதல் மிக மிக அரிதாகின்றது. விருப்பு வெறுப்பின்றி வாழ்தல் பெருநலம் பயக்கும் என்பதை அறிந்தும், அவைகளை விடுதல் செயற்கரியதாகின்றது. "நான் தருமத்தை அறிவேன், அதில் என் மனம் செல்வதில்லை; நான் அதருமத்தை அறிவேன், அதிலிருந்து விலக அறியேன்" என்று துரியோதனன் தன் நிலைமையைப் பற்றிக் கூறினான். இவ்வாறு கூறிய உண்மை நம்மிற் பலர்க்கும் பொருத்தமாகும் என்பதில் ஐயமில்லை. நமது மனம் உண்மையாகவே பாவஞ் செய்வதில் வெகுகாலம் ஈடுபட்டிருந்தது. பாவஞ் செய்யும் இயல்பு அக்காரணத்தால் அதனிடத்து நன்கு வேருன்றிக் கிடக்கின்றது. இந்த இயல்பு வேரூன்றிக் கண்ணிற்கு மறைந்து கிடப்பது, நம்போன்ற மனிதரிடத்து மட்டுமன்று; பன்னெடுங் காலம் காய்கனி தின்று கானகத்தே கடுந்தவம் புரியும் முனிவரிடத்தும் அவ்வேர் இருக்கின்றது; பல ஆண்டுகளாக இறைவனை வணங்கியும் அவனிடத்து அன்பு பூண்டும் வாழும் அடியார்களிடத்தும் இவ்வியல்பு காத்துறைகின்றது. நமது மனம் பாவத்திலே பிறந்தது, பாவத்திலே வளர்ந்தது, பாவத்தாலே உருப்பெற்றது. "என், ஒருவன் பிரிய மில்லாதிருந்தும், பலவந்தமாகப் பாவஞ்செய்யும்படிப் புகுத்தப்படுகிறான்?" என்று ஸ்ரீ கிருஷ்ண பகவானை நோக்கி அருச்சுனன் வினவினன்; அதற்கு அவர் "அது காமத்தாலே, குரோதத்தாலே; இவையிரண்டும் எதையும் விழுங்கிவிடும்; மிக்க பாவங்களைச் செய்ய ஏதுவாகும் இவைகளை நித்திய விரோதிகளாகக் கருதவேண்டும்" என்று எச்சரிக்கிறார். இவையிரண்டிற்கும் அஹங்காரமே விளைநிலமாதலின், அதனினும் பெரிய பகைவன் மனிதனுக்கு வேறில்லை. அஹங்காரம் சூரபத்மன் என்னும் அரக்கனைப் போன்றது. அவனைக் கொல்வதற்காக முருகப் பெருமான் பெரும் போராடினர். பெருமான் அவனது ஒரு தலையை வெட்டி வீழ்த்தியதும் வேறொரு தலை அவனது கழுத்தின்மீது முளைக்கும்; அத்தலையை வெட்டி வீழ்த்தியதும் வேறொருதலை முளைக்கும். தலை முளைக்குந்தோறும் அதை முருகப் பெருமான் வெட்டிக்கொண்டே யிருந்தார். இறுதியில் சூரபத்மன் முருகப்பெருமானின் அடிபணிந்து வாகனமானன். இதன் குறிப்புப் பொருளாவது, அகங்காரத்தை வேரறுப்பது என்பது எளிதான காரியமன்று; இடைவிடாது போராடி, அது எவ்வழியில் எவ்வுருக்கொண்டுவரினும் சலியாது பகைமை கொண்டு, அதை நசுக்க முயலவேண்டும்; பின்னர் ஒருநாள் அது நமக்கு அடிபணிந்துவிடும். இந்நிலையை அடைவோர் மிகமிகச் சிலரே. இறைவனோடு இரண்டறக் கலக்கும்வரை, அகங்காரத்தையோ அம்முளையினின்று விளையும் விருப்பு வெறுப்புகளையோ ஒருவன் முற்றும் அடிமைப்படுத்தி வைக்கவொண்ணாது; வெற்றிபெற்றுவிட்டதாக

நினைப்பினும், அதுவும் அகங்காரத்தின் விளைவாகவே முடியும். சாதாரண பக்தர்களைக் காட்டிலும் மிக உயர்ந்த நிலைகளில் நின்ற ஆழ்வார்களும் நாயன்மார்களும் கூட, மனத்தின் கொடுமையை நினைந்து, தம்மை இகழ்ந்தும், இறைவனைப் புகழ்ந்தும் போற்றியும் வேண்டியும் வந்தனர். உதாரணமாக, மயர்வற மதிநலம் அருளப்பெற்ற நம்மாழ்வாரும், "விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை. மண்ணுள் என்னைப் பெற்றால் என் செய்யா மற்று நீயும் விட்டால்?" என்று கதறுகிறார். அறிவாற் சிவனே யாகும் மணிவாசகப் பெருமான் "நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து நானடுவே, வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்" என்றும், "விச்சுக்கேடு பொய்க்கு ஆகாதென்று இங்கு எனைவைத்தாய்" என்றும் பெரிதும் நொந்துகொள்கின்றார். ஆசாரியர்கட்குள் மிகப் பெரியாருள் ஒருவராய யாமுனேயர் தமது ஸ்தோத்திர ரத்தினத்தில், "அமர்யாத: க்ஷுத்ர: சலமதி: அஸூயாப்ரஸவபூ:, க்ருதக்னோதுர்மானீ ஸ்மர பரவசோ வஞ்சனபர: ந்ருசம்ஸ பாபிஷ்ட:" என்றெல்லாம் தமது நெஞ்சின் தீய தன்மையைக் குறித்துப் பாடியுள்ளனர். இப்பெரியார்கள் தம்மைத் தண்ணியராகப் பாவித்துக் கொண்டாரேயன்றி, உண்மையில் அத்தகையா ரல்லர் என்று சிலர் கூறுவர். அது ஒருவாறு உண்மையே எனினும், அவர்கள் தம் நெஞ்சத்துள் அடங்கிக்கிடந்த (ஆலின் விதையினும் மிக நுண்ணியதாய தீய இயல்பின் முளையையும் நுண்ணுணர்வினால் நோக்கி அறிந்து உரைத்தார் என்பதே முழு உண்மையாகும். இவ்வித்தே பல்லோரிடத்தும் பண்ணைப் பணைத்து வளர்ந்த பெரிய ஆலமரமா யிருக்கின்றது. எனினும், வித்து இரண்டிடத்தும் உண்டன்றோ? இவ்விருந்து வித்தின் அளவாக நிற்கும்போதும், அதைக்கண்டு அஞ்சுவர் சாதகர்கள். "தவஞ் செய்வோர்கள் வெருவறச் சென்று அடைவெகுளி காமம் என" என்று கல்வியிற் பெரிய கம்பநாட்டாழ்வார் கூறினான்றோ? இவ்வித்தையும் சுட்டெரித்துச் சுவடற ஒழித்தற்கு இறைவனது அருள் எனும் நெருப்பே வேண்டியதாகும். இவ்வருளால் மனிதனது இயல்பு மாறக்கூடியது என்பது உண்மை யெனினும், தீய இயல்பு நெஞ்சில் இயல்பாக உறைவது உண்மையே யன்றோ? ஆக, நாம் தீய இயல்பு குடிகொண்டுறையப் பெற்றுள்ளோம் என்பது எவ்வாற்றானும் ஒருபேருண்மையாகின்றது.

இப்பேருண்மையை ஞானவாழ்க்கையில் இறங்கத் துணியும் ஒவ்வொருவரும் மனதில் நன்கு பதித்து வைத்துக்கொள்ளல் வேண்டும்; இவ்வாறு செய்யாவிடில் மிகப் பெரும் ஏமாற்றத்தை அடைந்து அல்லற்படுவது உறுதியேயாகும். இவ்வுண்மையை நன்கறிந்த நம் மேற்றிசை மக்களாகிய கிறிஸ்தவர்கள் மனிதனது இயல்பைப்பற்றிப் பேசும்போதெல்லாம் 'மனிதன் இயல்பாகவே பாவமுடையவன்' என்று சித்தாந்தம் செய்துள்ளனர். புராண கதை வாயிலாக இவ்வுண்மையை விளக்கும்போது, கிறிஸ்தவர்கள் "மனிதன் பாவியே; ஆதி மனிதரும், மக்கள் குலத்திற்கெல்லாம் பெற்றோரும் ஆகிய ஆதாம் ஏவாள் என்பவரை ஈடன் தோட்டத்தில் பகவான் தமது பரவுலகில் அமர்த்தியபோது, அவர்கள் முதல் முதலாகத் தூயராயிருந்தார். ஆனால் உடலுணர்ச்சியும் அற்றுத் தூயராயிருந்த அவர் சாத்தானது போதனைக்குச் செவி சாய்த்து, (விவகார அறிவெனும் மாத்தின் கனியை உண்டு) பகவானது ஆணைக்கு மீறினர். இப்பாவச் செயலுக்

குப் பின், இருவரும் உடலுணர்ச்சியும் நாணமும் பெற்று, நாயக நாயகி முறையோடு வாழ்ந்தனர். இதன் பயனாக மக்களெல்லாம் அவ்விருவர் வாயிலாக உண்டாயினர்" என்கின்றனர். இதனால் அறியக்கிடப்பது யாதெனின், மக்கள் தோன்றியது, ஆதாம் ஏவாள் இருவரும் பாவம் புரிந்தபின்னரே என்பது. ஆதலின், மனிதனது பிறப்பே பாவத்தின் காரணமாக ஏற்பட்டதொன்றாகும். மனிதன் இயல்பினாலேயே பாவமுடையவனாவான். அவன் பாவத்திலே வளர்ந்து உருப்பெறுகின்றவன். அப்பாவ இயல்பு உலகவாழ்க்கையில் நாளும் முதிர்ந்து வருவதொன்றேயல்லாது, குறைவதில்லை. நமது அற்பமான சிற்றறிவிற்கு எட்டிய வரை முயன்றாலும், பிறவியிலேயே கருவிலேயே ஏற்பட்ட பாவம் நம்மைவிட்டு அகலாது; நாம் ஒழிக்கப் பெரிதும் முயன்றாலும், அதனை நம்மால் ஒழிக்கவொண்ணாது. நமது இயல்பே பாவமாதலின், அதற்குள் நிற்கும் ஒருவற்கு அதற்கு வசப்பட்டுள்ள ஒருவற்கு, அதனைத் தாண்டிச் செல்லல் என்பது இயலாத காரியமாகும். நாம் இறைவனது அவதாரத்தில் நம்பிக்கை வைத்து, நாம் திருந்தவே இறைவன் உலகில் தனது பெருமையை அடக்கிக்கொண்டு சிறுமையும் எய்தி, நம்முடன் மனிதனாக நின்று நம்மை உய்விக்கின்றான் என்பதை நம்பி, அவனையே புகலாகப் பற்றி வாழ்வோமாயின், நாம் உய்வடைவோம். இத்தகைய கருத்துக்களையே பெரிதும் வழங்குகிறது, கிறிஸ்தவ மதம். பைபிள் என்னும் கிறிஸ்தவ வேதத்திலும் "மனிதர்களே! நீங்கள் அனைவரும் பாபிகள்...... பாபிகள் உய்வடையும்பொருட்டே இயேசு நாதர் தம் உயிரையும் துறந்தனர்" என்று போதிக்கப்படுகின்றது.

பைபிள் இவ்வாறு மனிதர்களைப் பாவிகள் என்று கூறுவதாக, மெய்ப்பொருளை உணர்ந்த மிகப் பழமையான பாரதநாட்டு இருடியர் மக்களை நோக்கி, "அழிவின்மை யென்னும் நிலையின் குழந்தைகளே!" என்று அழைக்கின்றனர். மறைகட்குத் தலையணியாக விளங்கும் உபநிடதத்துள் (வேதாந்தத்துள்) மனிதனது இயல்பைப் பற்றிய விழுமிய கருத்து ஒன்று எடுத்தோதப்படுகின்றது. அக்கருத்தாவது:— மனிதன் உண்மையாகவே ஆத்மன் ஆகின்றான்; ஆத்மன் தன் இயல்பாலே அளவற்ற அழிவற்ற ஆற்றலுக்கும் அறிவிற்கும் இன்பத்திற்கும் உறைவிடமாகின்றது; இதுவே மனிதனது உண்மையான இயல்பாகும். வேதாந்தம் இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு மக்கள் விடுதலை யடைதற்குரிய ஓர் அனுபவ நெறியையும் போதிக்கின்றது. உண்மையாகவே தூய்மைக்கும் சாந்திக்கும் பேரின்பத்திற்கும் நிலைக்களமாகிய ஆத்மனே நான்; நான் இறப்பதுமில்லை, பிறப்பதுமில்லை, எதனையும் அஞ்சேன்; உலகத்தில் உள்ள எதுவும் என்னைக் கட்டுப்படுத்த மாட்டாது; நான் இயல்பாகவே மனத்திற்கும் உடலிற்கும் அதீதமான அறிவுமயமான தெய்வத்தன்மை வாய்ந்த மெய்ப்பொருள் ஆவேன். நான் இப்போது என்னை உடலாகவும் மனமாகவும் கருதுவதெல்லாம், எனது உண்மையியல்பை மறந்து, உடலாகவும் மனமாகவும் பலப்பல பிறவிகளாக நினைந்து வந்த பழக்கத்தின் பயனேயாகும். பாவனையால் வந்த இந்த குணம் என்னை உண்மையாகச் சார்ந்ததன்று. என்னைச் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடைய சிறியோனாகக் கருதுவது இடையில் என்னிடத்து வந்தேறியதொன்று; நான் ஆத்மனாவது, எக்காலத்தும் அழியாத இயல்பினாலே; இவ்வுண்மை இயல்பை எதனாலும் அழிக்கவொண்ணாது.

'ஆத்மன்' என்ற கருத்து நமது இந்து மதத்தின் அடிப்படையான கருத்துக்களில் ஒன்றாகும். ஆத்மனின் மேன்மையையும் புகழையும் பற்றிச் சதா சிந்தித்துக் கொண்டிருப்பவனிடத்து, ஆத்மனது உண்மையான இயல்பு வரவர வெளிப் படும். இந்த விழுமிய வேதாந்தக் கருத் தைப்பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம் சர் கூறியதாவது :—"தன்னை ஆத்மனாக உண்மையாக முழுநம்பிக்கையோடு பாவிப் பவன் முடிவில் ஆத்மனாகவே ஆகிவிடு கின்றான். விடப் பாம்பு ஒன்று ஒருவனைக் கடித்துவிடுமாயினும், 'என்னை விடம் கொல்ல முடியாது' என்று உறுதியாக நம்பி, அதை மந்திரமாகக் கூறிச் சிந்திப் பவன் உயிரிழக்கமாட்டான் ; விடம் அவனை ஒன்றும் செய்யமாட்டாது. அதைப்போல் எவன் தன்னை ஆத்மனாகப் பாவிக்கின்றானோ, அவன் முடிவில் முத் திக் கரையேறிவிடுவான் என்பதில் ஐய மில்லை." இக்கருத்தை சூத்திரமாகக் கொண்டு, அதற்குத் தமது மேம்பட்ட வாழ்க்கையாலும் தமது தூய அறிவினின் றும் எழுந்த உறுதியும் மதுரமும் பயக் கும் திவ்விய கூற்றுக்களாலும் பெரிய தொரு பாஷ்யம் ஒன்றை, ஊரும் நாடும் உலகமும் அறியும்படி எழுதியருளினார் ஸ்ரீ சுவாமி விவேகாநந்தர். "தெய்வ மில்லை யென்பான் நாஸ்திகனல்லன், தன் னிடத்து நம்பிக்கை யற்றவனே நாஸ் திகன்" என்று முழங்கினார் வேதாந்த கேசரியாய் விளங்கிய அவ்வீரர். ஆத்ம னிடத்திலே அடங்கிக் கிடக்கும் வரம் பிலா ஆற்றலை எல்லாத் துறைகளி லும் வெளிப்படுத்திக் காட்டினார் அப் பெரியார். "நாயம் ஆத்மா பலஹீனேன லப்யதே" (இந்த ஆத்மன் பலவீனத்தை யுடையவனால் அடையமுடியாதது) என்ற வேதவாக்கியத்தைப் பகிரங்கப்படுத்தி னார். "முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார், எத்தினால் இடர்க்க டற் கிடத்தி ஏழை நெஞ்சமே" என்று தம் மனதைத் தைரியப்படுத்தினார் திரு மழிசை யாழ்வார். நம்மாழ்வாரும் "தளர் விலராகில் சார்வது சதிரே" என்று கூறு மிடத்து, தளர்வே பாவம் என்னும் கருத் தை வற்புறுத்தினார். ஸ்ரீ சுவாமி விவே காநந்தரும் "பலவீனமே பாவமென்பது ; பலம் ஒன்றே வேண்டுவது. பாவிகளுக்கு மருந்தாவது பலமே. உலகவாழ்க்கையில் காணப்படும் பற்பல அல்லல்கட்கும் பல மொன்றே மருந்தாகும். உன்னைத் தெய் வத்தன்மையுடையவனாக எண்ணுக; அச்சத்தை அகற்றிவிடுக. உன்னுள் மறைந்தொளிரும் தெய்வத் தன்மையை வெளிக்காட்டுக ; அனைத்தும் அடங்கி ஒழுங்காக அமையும்" என்று, பலவீனத் தில் மூழ்கிக்கிடக்கும் நமது நாட்டு மக் கட்குக் கூறி, உறக்கத்தினின்றும் அவர் களை எழுப்பினார். மேற்றிசை நாடுகளி லே அவர் "மனிதனைப் பாவியென்று கூறுவதினும் பாவம் பிறிதொன்றில்லை. மனிதனது உண்மையான இயல்பிற்கு மறுதலையாக அவ்வாறு கூறுதலால் அனர்த்தங்கள் பலவும் விளைகின்றன. அழிவற்ற ஆனந்தத்தின் செல்வக் குழந்தைகளே அனைவரும்" என்று கர்ச் சித்து வந்தார். "மனிதன் தன்னைப்பற்றி நினைப்பதற்கு ஏற்ப ஒரு வாழ்வினைப் பெறுகின்றான்" என்று போதித்தார் புத்தர்பிரான் ; ஆகவின் ஆத்மனாகப் பாவிப்பவன் ஆத்மனாகவே வாழ்வான். நமது மனமே பழக்கத்தின் வயப்பட்டுத் தீயசார்புகளில் அழுந்திக் கிடக்கின்றது ; எனினும் நாம் மனமல்ல, மனதிற்கு அதீ தமான தூய ஆத்மனே.

மேற்றிசையாரது தத்துவ நூலினும் உள்ள நூலினும் "ஆத்மன்" என்னும் பதத்திற்குச் சரியான மொழி இல்லை.

ஆத்மனின் இருப்பு என்பது மேற்றிசையார்க்குப் புதியதொரு கருத்தேயாகும். அவர் மனத்திற்கு மேலாக ஒன்று மனிதனிடத்து இல்லையென்பார், மனிதனது நெஞ்சின் இயல்பாகிய தீமையே மனிதனது இயல்பு என்பர். "யான் ஒரு சில வெடிகுண்டுகளை எறியப்போகின்றேன்" என்று ஸ்ரீ சுவாமி விவேகானந்தர் மேல்நாட்டில் தமது நண்பர்களிடம் மொழிந்தார்; அவ்வாறே செய்தார். மன உலகத்திலும் அறிவுலகத்திலும் பல வீணக் கொள்கைகளை அடியோடு எரித்தழிக்கும் ஆற்றல்வாய்ந்த மாபெரும் கருத்துகளாகிய வெடிகுண்டுகளையே ஞானாக்கினியை உள்ளே பொதிந்து எறிந்தார். அஞ்ஞானமென்னும் அடர்ந்த கானகம் எரியுண்டு நீறுபட்டு அழியும்படி விழுமிய வேதாந்தக் கருத்துகள் சிலவற்றை மேலைநாடுகளிலே சிதறினார். உலகமனைத்தையும் ஆட்டுவிப்பது உயர்ந்த கருத்தினால் எழும் சக்தியேயாகும். உயர்ந்த மேம்பட்ட கருத்து ஒன்று மனிதனது உள்ளத்து ஊறி நிரம்பிச் சொல்லாலும் செயலாலும் வெளியே வழிய ஆரம்பித்துவிடுமாயின், அதன் சக்தியைத் தடுத்தல் அரிதாகும். உலகவாழ்க்கையென்பது அரும்பெருங் கருத்துக்களின் தூல வடிவமேயாம். 'ஆத்மன்' எனும் வேதாந்தக் கருத்து உலகெங்கும் பரவுமாயின், பின்னர் செயல்வாயிலாக வெளிப்படுமாயின், உலகமெங்கும் சாந்தமும் இன்பமும் அன்பும் குடிகொண்டுவிடும். மண்ணுலகமே விண்ணுலகமாகும். இக்கருத்து மனிதனுடை தனிவாழ்க்கையையும் ஸமூக வாழ்க்கையையும் திருத்தியமைத்துப் புத்தொளி வீசிப் பேரெழில் சொரியும் ஞான வாழ்க்கையாக மாற்றும் பெருவலியுடையதாகும்.

---

## கடிதங்கள்

(முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசியக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணு 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணு 3

---

## ஜகஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணு 12. சந்தாதாரருக்கு அணு 10.

---

# ப ஜ ஞ வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவ தவசியம்.

விலை அணு 12.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—௨௧]  விஷு வருஷ ஆனிமீ  [பகுதி—௯

## பொருளடக்கம்



சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால் தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தராற் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

நமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அனுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப்பட்டுள்ளது. வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உக } விஷு ஆனிமீ { பகுதி-சு


## பிரார்த்தனை

ஆணுநீ பெண்ணுநீ இளையன்நீ இளையள்நீ
ஊன்றுகோல் தாங்கியும் உடலாடு கிழவன்நீ
பன்முக உருவிலே தோன்றினாய் தோன்றலே!

பிறவாப் பெருமை உன்னதே யாகலின்
பிறவியும் இறவியும் அஞ்சுமென் போல்பவர்
உன்னைப் புகலா யுற்றனர் உன்னி,
தீயன தீய்க்குமுன் தென்முகக் கண்ணளி
போற்றி போற்றி எம்மைப் போற்றுக.

—*சுவேதாசுவதர உபநிஷதம்.* (IV. 3, 21.)

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

மனம் ஏதாவதொன்றை விரும்பும்போதும், ஏதாவதொன்றைக் குறித்து வருந்தும்போதும், யாதேனும் ஒன்றை வெறுத்துத் தள்ளும் போதும், விரும்பி ஏற்றுக்கொள்ளும்போதும், ஒருவர்மீது கோபமும் மற்றொருவரிடம் பிரீதியும் கொள்ளும்போதும், அது பந்த நிலையி லுள்ளது. ஒன்றையும் விரும்பாமலும், எதைக் குறித்தும் வருந்தா மலும், ஒன்றையும் தள்ளாமலும் ஏற்றுக்கொள்ளாமலும், ஒருவரோடும் கோபமும் பிரீதியும் செலுத்தாமலும் உள்ளபோது, அந்த மனம் விடு தலையை அடைந்துவிட்டதாகக் கருதப்படல்வேண்டும். பந்த நிலையில் நெஞ்சு ஒரு குறிப்பிட்ட நோக்கினைக் கொள்வதில் பற்றுடையதாகின்றது; விடுபட்ட நிலையில் அத்தகைய பற்றுதல் இல்லாது போகிறது. அகங் காரம் இல்லாதபோது, அது முத்தியாகிறது; அகங்காரம் பிடிவாதமாக இருக்கும்போது, அது பந்தமாகிறது. இதை அறிந்துகொண்டு, ஒன்றை யும் வெறுக்கவும் விரும்பவும் வேண்டாம்; உனக்குள்ளே முழுச் சாந்தி யோடு வாழ்க.

—அஷ்டாவக்ர கீதை.

# தேவியின் திருவாக்கு

பாடசாலை வேலையின் மிகுதி காரணமாக நான் சில தினங்களாக அன்னையைக் காண்பதற்கு முடியாதவளாயினேன். இன்றைய தினம் நான் அவரை அடிபணிந்தவுடன் அன்னையார் என்மீது தமக்கிருந்த அன்பை எண்ணிறந்த முறைகளில் காட்டலானார். பூதேவ் என்பவன் மகாபாரதத்தைப் படித்துக்கொண்டிருந்தான். பூதேவ் சிறு பையனாதலின் அவனால் தங்கு தடையின்றிப் படிக்க முடியவில்லை. அன்னையும் வேறு கடமைகளைக் கவனிக்க வேண்டியவராயிருந்தார். மாலைப்பொழுதும் நெருங்கிற்று. என்னைச் சுட்டிக் காட்டி அன்னையார் பூதேவினிடம் "அவளிடம் புத்தகத்தைக் கொடு. அவள் அதை வெகு சுலபமாகப் படிப்பாள். இந்த அத்தியாயத்தை முடிக்காமல் புத்தகத்தை மூடுவதும் முடியாது" என்று கூறினார். அவருடைய ஆக்ஞையையொட்டி நான் மகா பாரதத்தைப் படிக்கலானேன். அன்னையாரின் முன்னிலையில் நான் அதுவரையில் புத்தக மேதும் படித்ததில்லை. முதலில் எனக்குக் கொஞ்சம் கூச்சமாக விருந்தது. ஆனாலும் எவ்வாறோ அந்த அத்தியாயத்தைப் படித்து முடித்தேன். கூப்பிய கைகளுடன் அன்னையார் புத்தகத்தை வணங்கினார். மாலைப் பூஜையைக் காணும்பொருட்டு நாங்கள் பூஜை யறைக்குச் சென்றோம். அன்னையார் தாம் வழக்கமாக அமரும் இடத்தில் அமர்ந்து சீக்கிரத்தில் தியானத்தில் ஆழ்ந்துவிட்டார்.

ஜபம் முடிந்ததும் அன்னையார் உரத்த குரலில் பகவானது நாமத்தை உச்சரித்துவிட்டு, ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உருவத்தின் முன் பணிந்தார். பின்னர் யாவருக்கும் பிரசாதம் விநியோகிக்கப்பட்டது. இதன் பிறகு நமது தினசரிக் கடமைகளைப் பற்றிப் பேச்சு எழுந்தது. ஜயராம்பட்டியில் தாம் வசித்தபொழுது தாம் எவ்வளவு சுறுசுறுப்பாக இருந்தார் என்பதைக் குறிப்பிட்டுவிட்டு அன்னையார் எங்களையும் எக்காலத்திலும் ஏதாவதொரு வேலையில் ஈடுபட்டிருக்குமாறு உபதேசித்தார். அம்மாதிரி ஈடுபட்டிருப்பது சரீரம், மனம் இரண்டினுடைய ஆரோக்கியத்திற்கும் நலன் தருவதாகும் என்று அவர் கூறினார்.

தீமையிலும் நன்மையைக் காணல்: தூய அன்னையின் வீட்டின்முன் இருந்த வெளியில், இந்திய நாட்டின் வேறு பாகங்களைச் சேர்ந்த (வங்காளத்தைச் சேராதவர்கள்) சில மக்கள் வசித்து வந்தனர். கடுமையான சரீர உழைப்பின் மூலம் அவர்கள் தங்கள் ஜீவனோபாயத்தைச் சம்பாதித்து வந்தனர். அவர்களுள் ஒருவன் வைப்பாட்டி யொருத்தியை வைத்திருந்தான். அவர்களிருவரும் ஒன்றாக வாழ்ந்தனர். ஒருசமயம் அப்பெண் கடுமையான நோய்வாய்ப்பட்டாள். அந்த நோயைக் குறிப்பிட்டுத் தூய அன்னையார் கூறினார்: "அவன் வெகு அதிகமான பற்றுடன் அவளுக்குச் சிசுருஷை செய்தான். அம்மாதிரியான சேவையை அதற்குமுன் நான் கண்டதேயில்லை. சேவையின் உண்மையான தத்துவத்தை அவன் வெளிக் காட்டினான்." இம்மனிதனின் அன்பைப்பற்றி அன்னையார் வெகுவாகச் சிலாகித்துப் பேசலானார்.

வைப்பாட்டி என்ற எண்ணமே நமக்குப் பெரும் வெறுப்பை உண்டுபண்ணும் என்பது திண்ணம். ஆ! தீமை எனும்

ஆடையில் மறைந்துகிடக்கும் நன்மையை நாம் எத்தனை தடவைகள் அறிந்துகொள்ளத் தவறிவிடுகின்றோம்!

தெருவுக்கு அப்பாலிருந்த வீட்டில் இருந்து ஏழ்மை மிகுந்த நாட்டுப்புறப் பெண் ஒருத்தி நோய்ப்பட்ட சிசுவொன்றைக் கைகளில் எடுத்துக்கொண்டு தூய அன்னையாரிடம் வந்தாள். அன்னையின் ஆசிகளை அவள் வேண்டினாள். அக்குழந்தையினிடம் அன்னையார் பேரன்பு காட்டினார். குழந்தை சீக்கிரமே குணமடையுமென்று கூறி அதை ஆசீர்வதித்தார். இரு பெரும் மாதுளைக் கனிகளும் சில திராக்ஷைகளும் பூஜை அறையில் நிவேதனமாயிருந்தன. இப்பழங்களையெல்லாம் அன்னையார் அவ்வேழைப்பெண்ணிடம் கொடுத்துவிட்டு, "நோயுற்றுள்ள உன் குழந்தைக்கும் இவற்றைக் கொடு" என்று கூறினார். அன்னையின் இப் பேரன்பைக் கண்டு அந்த ஸ்திரீ பேரின்பம் எய்தியவளாய் அன்னையின் முன்னர் மீண்டும் மீண்டும் பணிந்தாள்.

### 1912, பெப்ருவரி, 11-ம் தேதி

இன்றைய தினம் நான் தூய அன்னையாரைச் சந்தித்து அவருக்கு வந்தனம் செய்து உட்கார்ந்துகொண்டவுடன், அவர் பெருந் துக்கத்துடன் கூறலானார்: ஆ! கிரீஷ் பாபு காலமாய்விட்டார். அவர் இறந்து இன்று நான்காவது நாள் ஆகும். அவருடைய வீட்டுக்காரர் இங்கு வந்து என்னைத் தம் வீட்டிற்கு வருமாறு அழைத்தனர். இனிமேல் அந்த வீட்டிற்குப் போவது என்றால் கூடுமா? கிரீஷ் இராமகிருஷ்ணரிடம் எவ்வளவு பக்தியும் நம்பிக்கையும் வைத்திருந்தார்! இந்தச் சம்பவத்தை நீ கேட்டிருக்கிறாயா? இராமகிருஷ்ணர் தனக்குப் புத்திரனாக ஜனிக்க வேண்டுமென்று கிரீஷ் விரும்பினார். இராமகிருஷ்ணர் அவரிடம் "உமது புத்திரனாக ஜனிப்பதற்கு நான் ஏனோ விரும்பவேண்டும்?" என்று விடை கூறிவிட்டார். ஆனால் குழந்தையே! பகவானுடைய அறிதற்கரிய முறைகளை யாரே அறியவல்லார்! ஸ்ரீ ராமகிருஷ்ணர் காலமான சிறிதுகாலத்திற்குப் பிறகு கிரீஷுக்கு ஒரு புத்திரன் ஜனித்தான். அப் பையன் உண்மையிலேயே அசாதாரணமானவன்! அவனுக்கு வயது நான்கு ஆனபொழுதும் அவன் எவரிடமும் ஒரு வார்த்தையும் பேசமாட்டான். அவனுடைய சமிக்ஞைகளின் மூலமே அவன் மனத்தை மக்கள் அறிந்துகொள்ளுவர். அவனது தாய் தந்தையர் அவனை ஸ்ரீ ராமகிருஷ்ணராகவே கருதினர். அவனுக்குச் சொந்தமான எல்லாப் பொருள்களையும்—அவனது உடை, தட்டு, கிண்ணம், கண்ணாடிச் சாமான் முதலியவற்றை—அவர்கள் தனியாக வைத்திருந்தனர். அவற்றை வேறு எவரும் உபயோகப்படுத்தினதில்லை!...ஒருநாள் அப்பையன் என்னைக் காணுவதற்கு வெகு ஆவலுடையவனானான். அவ்வீட்டின் மாடியில் என் படமொன்று இருந்தது. அப் பையன் வீட்டிலுள்ள யாவரையும் மாடிக்கு இழுத்துச் சென்று, சத்தமிட்டு யாவருக்கும் அப் படத்தைக் காட்டினான். முதலில் அவன் விருப்பம் என்னவென்பதை அவர்கள் தெரிந்துகொள்ளவில்லை. பிறகு அவனை என்னிடம் இட்டு வந்தனர். நான்கு வயதே நிரம்பியிருந்த சிறு குழந்தையேயானாலும் அவன் என்முன் வணங்கினான். பிறகு அவன் கீழே சென்று அவன் தந்தையை (நான் இருந்த மேல்மாடிக்கு வருமாறு) வேஷ்டியைப் பிடித்து இழுத்தான். தன் தந்தையும் என்னைக் காணவேண்டுமென்று அவன் விரும்பினான். கிரீஷ் மனமுருகி அழுது "என் அன்பே! தூய அன்னையாரை நான் காண்பது முடியாது. நான் ஒரு

பெரும் பாபி!" என்று கூறினர். ஆனால் பையனோ பிடிவாதமாயிருந்தான். அதனால் கிரீஷ் இணங்க வேண்டியவரானார். அவர் தம் புதல்வனைக் கைகளில் தூக்கிக் கொண்டார். சரீரம் முழுவதும் நடுநடுங்க, கன்னங்களில் கண்ணீர் பெருகி யோட, மாடிக்குவந்து என்முன் தரையில் அடிபணிந்தார். "தாயே! உங்கள் புண்ணிய பதங்களைத் தரிசிக்குமாறு இப் பையன் வழிசெய்தான்" என்றார் கிரீஷ். ஆனால் நான்கு வயது ஆனபொழுது அப் பையன் இறந்துபோனான். இச்சம்பவம் நடந்ததற்குக் கொஞ்ச காலத்திற்கு முன் ஒரு சமயம் கிரீஷும் அவர் மனைவியும் தங்கள் வீட்டு மாடியில் இருந்தனர். அப்பொழுது நான் பலராமனுடைய வீட்டில் தங்கியிருந்தேன். இரண்டு வீடுகளும் சமீபத்தில் இருந்தன. நானும் அன்று மாடிக்குச் சென்றேன். தன் வீட்டு மாடியிலிருந்துகொண்டு கிரீஷ் என்னைப் பார்க்கக்கூடும் என்பதை நான் கவனிக்கவில்லை. கிரீஷின் மனைவி அவரிடம் "அதோ பாருங்கள்! தூய அன்னையார் அந்த வீட்டின் மாடிமீது உலவுகின்றார்" என்று காட்டினர். கிரீஷ் உடனே எனக்கு முதுகைக் காட்டித் திரும்பிநின்று தன் மனைவியிடம், "வேண்டாம், வேண்டாம். நான் இவ்வாறு திருட்டுத்தனமாகத் தூய அன்னையாரைப் பார்க்கக்கூடாது. என் கண்கள் பொல்லாதவை" என்று சொன்னார். மாடியிலிருந்தும் உடனே கீழே இறங்கிவிட்டார். அவருடைய மனைவியிடமிருந்தே இச்சம்பவத்தை நான் கேள்வியுற்றேன்.

---

# உள்ளொளி பெருக்குக

ஸ்ரீ சுவாமி பரமாநந்தர்

"தெய்விக உள்ளொளி பலரிடத்தும் மங்கிப்போயுள்ளது. இரும்புக் கூட்டிற்குள் வைக்கப்பட்ட ஒளிபோன்றுள்ளது அது. அக்கூட்டின் வழியாக ஒரு சிறு ஒளிக் கதிரும் நுழைந்து வெளிவர முடியாது. ஆயினும், நாளடைவில் மெல்ல மெல்ல நமது தூய்மையாலும் தன்னயமின்மையாலும் உள்ளொளியை மறைக்கும் பொருளை மிக மெல்லியதாக்கி, முடிவில் அதைக் கண்ணாடியைப் போல ஒளிபுகும் பொருளாக மாற்றிவிடக் கூடும்" இவ்வாறு கூறினர் ஸ்ரீ சுவாமி விவேகாநந்தர். இந்த அற்புதமான கருத்தை உங்கட்கு எடுத்துரைப்பதற்கு ஒரு காரணம் உண்டு. சிலர் "தெய்வம் நெஞ்சிலே குடிகொண்டு வாழுமாயின், நாம் அதை யேன் காண்பதில்லை? நாம் அதைக் காண்பதில்லை யாதலின் அதை நம்பமுடியாது" என்று கூறுகின்றனர். தாம் காணமுடியாத தொன்றே, அது இல்லை யென்பதற்கு முடிவான காரணம் என்று அவர்கள் கருதுகின்றனர். உண்மை யாதெனில், அவர்கள் கதியற்றுத் திண்டாடும்போது பகவானது இனிய குரலைக் கேட்கும் ஆற்ற லிலராகின்றனர். மனம் அமைதியடையும் போது அக்குரலிற்குச் செவிசாய்க்கும் திறமை இல்லாதவராகின்றனர். காரணம் யாதெனில், அதற்கு வேண்டிய நல்லுணர்ச்சியை அவர்கள் இழந்து விட்டமையே யாம். மோனநிலையில் ஒலி ஏது என்பர் சாதாரண மக்கள்; கஷ்டங்கள் நம்மைச் சூழ்ந்துகொள்ளும் போது, நம்மில் எத்தனைபேர் நம்முள் வாழும் தெய்வ சந்நிதியை மோனநிலை

யோடு சார்கின்றோம்? எப்பொழுதும் நமக்கு ஆறுதல் அளிக்கவும் சாந்தத்தை யூட்டவும் காத்துக்கொண்டிருக்கும் அப் பெருமானை நாடுவார் எவரே? துன்பம் வந்தும் நம்மிற் பலர் முதன் முதலாகச் செய்வது, மனிதத் துணையை நாடுதலே யாகும். இந்த மனிதரிடமோ அந்த மனிதரிடமோ, யாரேனும் ஒருவரிடம் நாம் செல்கிறோம்; ஆனால், அதன் பயனாக நமது சங்கடத்தை அவர் அதிகப் படுத்திவிடுகிறார். ஏனெனில் அவரது நெஞ்சத்தும் சந்தேகமும் குழப்பமும் நிரம்பியுள்ளன வன்றோ?

மெல்ல மெல்ல, அநுபவம் உண்டாக உண்டாக, நாம் உலகப்பொருள்களினிடமிருந்து நமது உள்ளத்தை இழுத்துக் கொண்டு பற்றற்றிருத்தல் வேண்டும் என்பதைக் கற்றுக்கொள்கிறோம். ஒவ்வொருவரும் இதைச் செய்தே தீரவேண்டும்; ஆனால் திடீரென்று உடனே இதைச் செய்துவிட முடியாது. இதைச் செய்வதற்கு வழி இது என்பதைக் கூற யான் முன்வரவில்லை; ஒவ்வொருவர்க்கும் அவரவரது சுபாவத்திற்கு ஏற்றவாறு ஒரு வழி உள்ளது. ஒருவரிடத்துப் பக்தி அதிகமாக இருக்கலாம்; இன்னொருவரிடத்து, மனதைப் புறத்தே போகவிடாமல் மடக்கி உண்முகமாக்கும் திறமை இருக்கலாம்; நமது சொந்த நெறி இது என்பதை நாமே ஆராய்ந்து கண்டுபிடித்துக்கொள்ள வேண்டும். ஒருவரும் நம்மை அந்த நெறியிற் செல்லும்படி கட்டாயப்படுத்த முடியாது. தமது மதத்திற் பற்றுள்ள சிலர் தமது நம்பிக்கைகளையும் கொள்கைகளையும் பிறர்மீது பலவந்தமாகச் சுமத்த முயல்கின்றனர். இதனால் அவர்கள் நினைப்பதற்கு எதிரான பயனே பலமுறையும் விளைகின்றது.

ஆனால், ஒரு பெயரினாலும் ஒரு கொள்கையினாலும் பொருக்கிணைய ஒரு நம்பிக்கையினாலும் யாது பயன்? நமது குருதேவராய ஸ்ரீ ராமகிருஷ்ணர் பின்வருமாறு போதித்துள்ளனர்:—"பஞ்சாங்கத்தில் இந்த வருஷத்திற்கு இவ்வளவு மழையென்று எழுதப்பட்டுள்ளது; அதைப் பிழிந்தால் ஒரு சொட்டுத் தண்ணீரேனும் உண்டாகுமா?" சாஸ்திரங்கள், வேதங்கள், சின்னங்கள், கிரியைகள் எனப்படும் தூய்மையான பொருள்களில் யாதொன்றும், நமது நம்பிக்கையைக் கிளம்பச் செய்தாலன்றி, தெய்வ சாந்நித்யத்தை உணரும் திறமையை எழச்செய்தாலன்றி, நம்மிடம் ஒரு பயனையும் உண்டாக்காதொழியும். ஆதலின் தெய்வ சந்நிதியின் இருப்பை உணர்வதெப்படியென்பதும், அதன் முன் வாழ்வது எப்படியென்பதுமே நமக்குரிய கேள்விகளாகும். இதையே நாம் சற்றுச் சிந்திப்போம்.

எப்பொழுதும் ஒரு நண்பனை நாடுவதே மனிதனது இயல்பாகும்; இக்குணம் இல்லாதவன் எவனும் உலகில் இல்லை. நமது வாழ்க்கை முழுவதிலும் நாம், நமது மனங்களின் போக்குக்கட்குத் தக்கபடி, மக்களோடும் கருத்துக்களோடும், இலக்ஷியங்களோடும் நட்புக் கொண்டாடியே வருகின்றோம். ஆனால் அழிவற்ற நண்பராகிய பகவான் ஒருவர் இருப்பதை உணராதே போகிறோம். நமது வாழ்க்கையே நமக்குக் குறுக்கிடுகின்றது. உலகச் சுமைகளும், நமது மனத்தையே மூழ்கச் செய்யும் கவலைகளும், இன்னும் பிறவும்-இவைவொவ்வொன்றும் நம்மைச் சோதிக்க வருகின்றது; முடிவில் மனதும் நெஞ்சும் அறிவும்—நமது உடலும் மனமும் முழுவதுமே—ஒளியற்றன போலத் தோன்றுகின்றன. இம்மாதிரியான நிலைமைகளை எதிர்ப்பது எவ்வாறு? மற்றொரு நினைவுத்தாரையைப் புகவிடுவது தான் இதற்கு ஒரேவழியாகும். அதைச்

செய்வது எப்படி? குழந்தையைப் போன்று எளிமைபெற்றிருத்தலே. ஒரு மனிதன் மிக்க புகழ்பெற்றிருக்கலாம், ஒரு பெரிய மேதாவியாய் இருக்கலாம்; ஆயினும், அவன் எவ்வளவு பெரியவனுயி னும், யாராயினும், உலவாத பரம்பொரு ளின் முன்பு நிற்கும்போது, அவன் தன் னைப்பற்றிக் கருதும் பெருமை யெல்லாம் பறந்துபோம்; அவன் உடனே ஒரு சிறு குழந்தையாகிறான். உள்ளொளியின் இருப்பை நாம் உணரவேண்டின், இந்த ஒரு முறையை நாம் திட்டமாக அனுசரிக் கலாம்.

குழந்தையாய் இருக்கும்போது நீ உனது தாயின் மார்பிலோ உன் தந்தை யின் கைகளிலோ படுத்துக்கொள்கிறாய்; உனது பெற்றோர்கள் உன்னைக் காப் பாற்றுவார்களோ என்ற கேள்வியும் எழு வதில்லை. ஏன்? அவர்கள் காப்பாற்று வார்கள் என்பதை நீ நன்கறிவாய். ஆனால், வயது முதிர முதிர, அவர்கள் பாதுகாப் பார் என்ற உணர்ச்சியை நீ இழந்துவிடு கிறாய். நீ மனதிற் கவலையைப் புகவிடுகி றாய். நீ மக்களை நம்புவதில்லை. மஹத்தான தாயனைய அழியாத பரம்பொருளின் முன்னிலையில், அதுபோல் கேள்வியும் சந்தேகமும் நமக்கு உண்டாகா. காலம் வருமுன்னே முதுமை யெய்திவிட் டோமே என்ற உணர்ச்சி முழுதும் உன்னை விட்டுவிடுகிறது; ஒருவரும் உனக்கு உதவிக்கு இல்லையே என்ற உணர்ச்சியும், நீ தனியே இருப்பதாகக் கருதும் உணர்ச்சியும் நீங்கிவிடுகின்றன. வெல்லற்கரிய ஒரு பேராற்றலின் வசப் பட்டு நிற்பதையும், உனக்குப் பயப்பட ஏது ஒன்றும் இல்லை என்பதையும் நீ அறி வாய். பரம்பொருள், இதுவரை எப்போ தும் உன்னைப் பாதுகாத்து வந்ததுபோல இனியும் உன்னைப் பாதுகாக்கும். மூடு பனியும் பிறவும் நம்மைச் சூழ்ந்து கொண்டு, நமது தைரியத்தைப் பறித்துக் கொண்டு போய்விட்டன; ஆனால், உண் மையான சூரியன் முன்பு பனி மறைந்து விடுகின்றது. இக் காரணத்தினாலேயே, உள்ளொளியின் துணையைப் பெற ஒரு திட்டமான, உண்மையான வழியைக் கண்டு பிடித்ததும், நமது கவலைகளும் சந்தேகங்களும் அச்சங்களும் உடனே மறைந்து விடுகின்றன. இது ஏதோ ஒரு கொள்கையளவாய் நிற்ப தொன்றன்று. இத்தகைய அச்ச நிவிர்த்தியும் ஆசையின் பூர்த்தியும் ஒரு கொள்கையைப் பற்றிய அறிவினால் உண்டாகமாட்டா. அவை அனுபவத்திலிருந்து தொடங்குகின்றன; நமது மனம் சரியான திசையை நோக்கித் திரும்பியதும், நாம் அதை அனுபவத்தில் உணரலாகும்.

உண்மையான ஞானவாழ்க்கை யென் பது, எல்லாவித உலகச் சார்புகளினின் றும் நமது மனத்தை முற்றும் நீக்கி விடு தலேயாம். ஒருவன் தனது ஆன்மாவிற் குள்ளே ஒடுங்கி விடுதல் என்பதும், அதற் குரிய திறமையைப் பெறுதல் என்பதும் எவ்வளவு ஆச்சரியம்! "எனக்கு ஓய்வு நேரம் வேண்டும். எனக்குத் தனியாய் இருக்க விருப்பம்" என்று நாம் பன்முறை யும் சொல்கிறோம். ஆயினும் நாம் அந்தச் சமயத்தை உபயோகிப்பது அரிதாகி விடுகிறது. உலகத்தை விட்டொழிந்து, சிந்திக்கவும், நமது உயர்ந்த இயல்போடும் இறைவனோடும் உண்மைப் பொருளோடும் அளவளாவவும், நமக்கு ஒரு சந்தர்ப்பம் வாய்க்கும்போது நேரத்தை எப்படிக் கழிப்பது என்பதைப்பற்றி ஏற்பாடு செய் யத் தொடங்குகிறோம். நாம் புதிய விலங்குகளையும் புதிய காரியங்களையும் பூட்டிக் கொள்ளுகிறோம். நாம் வாழும் மாதிரிகளே மிகச் சிக்கலாயுள்ளன; நமது வழக்கங்களை மாற்றி நாம் சாதாரணமாக வாழும்வரை, நமது குழம்பிய மனப்

பான்மையின் பயன்களை நாம் பொறுத்தே தீரவேண்டும்; ஏனெனில் பகவான் நமக்கு அளித்திருக்கும் சுவாதீனத்தைத் தகைந்து விடமாட்டார். அவர் நமக்கு மனத்தையும் உடலையும் அளித்துள்ளார்; நாம் இன்னின்ன முறையைப் பின்பற்றல் வேண்டும் என்பதை ஆராய்ந்து தெரிந்தெடுத்தல் நமது கடமையாகிறது.

"நீர் உமது கதவுகளை அடைத்து, அறையை இருட்டாக்கியதும், நீர் தனிமையா யிருப்பதாகச் சொல்லிக் கொள்ளக் கூடாது என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளும்; ஏனெனில் நீர் அப்போது தனிமையா யிருப்பவரல்லர். பகவான் உள்ளே உள்ளனர்; உமது பேரறிவின் ஒளி உள்ளே இருக்கின்றது; நீர் இன்னின்ன செய்துகொண்டிருக்கிறீர் என்பதைக் காண அப் பகவானுக்கும் அவ்வொளிக்கும் புற உலக ஒளி வேண்டாம்" என்று எபிக் டீடஸ் எனும் கிரேக்க ஞானியார் கூறுகின்றனர். இது ஒரு மிக முக்கியமான கருத்தாகும். நீர் மனதைக் கொண்டும் உடலைக் கொண்டும் செய்வதெல்லாவற்றையும் மேற் பார்த்துக் கொண்டு பகவான் உமது அருகே நிற்கின்றார் என்பதை மட்டும் நீர் எப்போதும் ஞாபகம் வைத்துக்கொள்வீராயின், உமது பிரார்த்தனைகளிலும் உமது செயல்களிலும் நீர் ஒருகாலும் தவறமாட்டீர். பகவான் உம்முடன் வாழ்வதை நீர் உணர்வீர். ஸ்ரீ ராமகிருஷ்ணரது வாழ்க்கையிலிருந்தும் உபதேசத்திலிருந்தும் நாம் கற்றுக்கொள்ளும் மிக ஆச்சரியமான பொருள்களுள் ஒன்று இதுவே. அவர் பாசாங்கு செய்யவில்லை. தெய்வத்தின் (தேவியின்) முன்னிலையி லிருப்பதொன்றையே பழகிவந்தார். அவர் அதையே நாடோறும் தவறாது செய்து வந்தார்.

ஒரு முறை ஒரு பண்டிதர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைச் சார்ந்தார்; சீடன் தான் கேட்கும் கேள்விக்கெல்லாம் குரு பதிலளிப்பார் என்று எதிர்பார்ப்பதுபோல, அப் பண்டிதரும் அவரை வினவினர். ஆனால் அந்தச் சமயம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் விடையளிக்கவில்லை. "எனது நண்பரே, நான் அதை அறியேன். தேவியம்மை இன்று என் மூலமாகப் பேசுவதாகத் தெரியவில்லையே" என்றார். இது எவ்வளவு அசாதாரணமான ஒரு நிகழ்ச்சி! பொது மக்களுடைய புகழைப் பெற்றுள்ள யாராவது ஒரு மருத்துவரோ, ஓர் ஆசிரியரோ, இவ்வாறு ஒப்புக் கொள்ளுவதைத் தற்காலத்தில் நம்மாற் காண இயலுமா? நாம் அவரிடத்து எந்தக் கேள்வி கேட்டாலென்? உடனே அவர் பதிலளித்து விடுவாரன்றோ? ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணரோ, தேவியம்மை தம் வாயிலாக ஒன்றும் கூறுமையாலே, தாமும் ஒன்றும்கூற இயலாதவராயினர். இது நம்மனைவர்க்கும் ஒரு படிப்பினையாகும். பகவானது பெருவாக்குப் பேசினலொழிய, மக்கள் பேசாது மௌனமா யிருந்துவிடுவாராயின், உலகம் எவ்வளவு அமைதியாயிருக்கும்! எவ்வளவு சமாதானம் எங்கும் நிலவும்!

நமது வாழ்க்கையில் ஏற்படும் சங்கடங்களை யெல்லாம் நமது அகந்தை நிறைந்த, பேராசை மிக்க, சூக்குரலிடும் இயல்புடைய, குழப்ப மிகுந்த அகங்காரத்தின் உதவியினல் தீர்க்க முயல்வதினுலேயே, நமது வாழ்க்கையில் பற்பல குழப்பங்கள் ஏற்படுகின்றன. நமது மனதிற்குரிய பொறி வாயில்களைப் புற உலகத்தோடு சம்பந்தப்படாத வண்ணம் அடைத்துவிட்டு, குழப்பத்தை உண்டு பண்ணும் புறவுலகச் சத்தங்களைக் கேட்க முடியாத வண்ணம் காதுகளைப் பொத்திக் கொண்டு, மனதை உள்முகமாகத் திருப்பி, அங்கே சதா எழுந்தருளி யிருக்கும் (நம்மைக்) காப்பவராகிய பகவானிடம் நமது சஙகடங்களை ஒப்படைத்து, அவரைத்

தீர்த்துவைக்கும்படி வேண்டினேமாயின், ஒவ்வொன்றும் அக்கணமே மாறிவிடும். நாம் அற்புதங்களிடத்து நம்பிக்கையில்லா தவராகலாம்; ஆனாலும் ஓர் அற்புதம் உடனே நடந்துவிடும். இது உண்மையாயினும், நாம் கோழை நெஞ்சுடையவரா கின்றோம். நாம் ஒரு கொள்கையை நம்புவதாகப் பாவனை புரிகின்றோம்; யுத்த களத்தில் உயிர் துறக்கவும் பீரங்கிக்கு முன் நின்று உயிர்விடவும் நாம் அஞ்சுவதில்லை; ஆயினும், கிறிஸ்துவும் புத்தரும் காட்டும் வழியைப் பின்பற்ற நமக்குத் தைரியம் உண்டாவதில்லை. நம்மிடம் வீரத்தனம் இல்லையென்பதில்லை; நமது வீரம் தவறான வழியில் செலுத்தப்படுகிறது. நமது வாழ்வு பகவானால் அளிக்கப்பட்டது; அதை நாம் உணர்ந்ததும், நிலையற்ற மனித வாழ்க்கையைப் பற்றிய சமாசாரங்களைக் காட்டிலும் மேலான தொன்றே நமது விதியாகின்றது. மனித வாழ்க்கையைப் பற்றிய சங்கடங்களைத் தீர்க்க, பலர் தமது மூளையைப் பெரிதும் துன்பப்படுத்தி யிருக்கின்றனர்; ஆயினும் அவைகளைத் தீர்க்கமுடியாதவராயினர். அம்மட்டோ! அவர்களது முயற்சியின் பயனாக, காரியங்கள் அதிகக் குழப்பத்தை அடைகின்றன. அவ்வாறாகவும், நாம் மனிதத் துணையினும் மேலான ஒரு துணையை ஏன் நாடக்கூடாது? இரண்டு மூன்று நாளேனும் மனதை உண் முகப் படுத்தி, உள்ளொளியாகிய தோன்றாத் துணையை நாடுங்கள்; அவ்வொளியைப் பற்றி உறுதியாக நீங்கள் அதிக அறிவைப் பெறுவீர்கள்.

என் வார்த்தை யென்பதற்காகவோ, அல்லது ஞான நூல்களில் உள்ள மேலோரது வார்த்தை யென்பதற்காகவோ ஒரு காரியமும் செய்யவேண்டாம். உங்களது சுயபுத்தியையும் யுக்தியையும் ஞானக்காட்சியையும், உபயோகப்படுத்திக்கொண்டு காரியத்தைத் தொடருங்கள். ஞானம் என்பது உங்கள் மேல் பிறரால் சுமத்தக்கூடிய தொன்றல்ல; நீரும் பிறர் மேல் அதைச் சுமத்தமுடியாது. நீர் உண்மையாகவே ஞானவாழ்க்கையில் ஆசையுடையீராயின், உமது வாழ்க்கையாலும் இருப்பாலும் நீர் பிறர்க்குத் தூண்டுகோலாகி ஞான வாழ்க்கையில் உற்சாகத்தை ஊட்டுவீர். நாம் பிறர்க்குச் செய்யும் பெரும் பணியாவது, நாம் நம்மை யறியாமலே வீசும் சோதியேயாகும். உம்மிடத்துள்ள ஒளியை ஒரு கூடையினால் மூடி மறைக்க முடியாது. உம்மிடத்தில் ஒளி இருப்பின், அது தானாகவே வெளித் தோன்றுவதாகும். உம்மைச் சாரும் ஒவ்வொருவரும் அதை உணர்ந்தே தீரவேண்டும்.

நமக்குள்ளே ஒரு துணை உள்ளது. புத்தகங்களும் வேதங்களும் பெரியோர்களும் தமது உபதேச மொழிகளாலும், தமது வாழ்க்கையினால் வீசும் சோதியாலும், நமக்குள் மறைந்து கிடக்கும் சோதியை நாடுவதற்குத் தூண்டுகோல்களை அளிக்கின்றனர்; அவ்வளவேதான். இந்த இலக்ஷியங்கள் உள்ளன, இதுவரை இருந்து வந்துள்ளன என்பதை நாம் அறிவதோடு நின்றுவிடாமல், அவைகளை உயிருள்ளவைகளாகச் செய்து, நமது முயற்சியினால் அவைகளை வெளிப்படச் செய்தல் வேண்டும். மற்றக் காரியங்கட்காக நாம் முயற்சி செய்வது போலவே, ஞானப் பழக்கங்களையும் நாம் பழகிக் கொள்வோமானால், அது சொல்லற்கரிய பெருநலம் பயக்கும். ஞான வாழ்க்கையின் சாரம் வேண்டும் என்பர். இதில் அடங்கிய கருத்து யாது? நாம் நமது நினைவுகள் சொற்கள் செயல்கள் ஒவ்வொன்றிலும் இறைவனையே நோக்க வேண்டும்; வேறொருவரையும் மற்றொன்றையும் நோக்கலாகாது என்பதே. எவர் தமக்கு அமைதி இறைவனிடத்தினின்று

உண்டாகுமாறு செய்துகொள்ளக் கற்றுக் கொள்கின்றனரோ, அவர்களது இயல்பு உயிருள்ளதாகவும் தெய்வத்தன்மையுள்ளதாகவும் ஆகிவிடும்.

தெய்வத்தன்மையைப் பற்றிய நினைவே தெய்வ ஸாந்நித்யத்தை உண்டுபண்ணுகின்றது. ஒரு மஹான் நமது வீட்டுக்கு விருந்தினராக வரும்போது, அதற்கு முன்பே வீட்டைத் தூயதாக்கி, மலரும் மணமும் அழகுள்ள பிறவும் அதில் நிரப்பி, அவரை வரவேற்கத் தயாராக்கிக் கொள்கிறோமன்றோ? பகவானை, அழகுள்ள பொருள்களிலெல்லாம் மிக அழகுள்ளவரை, நமது அருமை விருந்தாளியாகப் பெறவேண்டுமானால், அவரை வரவேற்கும் பொருட்டு நம்மைத் தயாராக்கி வைத்துக் கொள்ளவேண்டும்; அவரை வரவேற்பதற்காக, ஒரு மாளிகையையும், அதில் ஒரு தூய அறையையும், அதில் ஒரு தூய சிம்மாசனத்தையும் மனப்பூர்வமான அன்போடு தயாராக்கி வைத்துக் கொள்ளவேண்டும்; நமது உள்ளத்தில் தெய்விக உணர்ச்சிகளையும், அனைத்தையும் இறைவர்க்கே சமர்ப்பிக்கும் மனப்பான்மையையும், உண்மையான பக்தியையும் நிரப்பிவைத்துக்கொண்டு, அவரை வரவேற்கத் தயாராகவேண்டும். பகவான் அன்பு வடிவினர்; அன்பே சிவம். ஆதலின் இறைவன் மீதும் மக்கள் மீதும் பேரன்பு கொள்ளல் வேண்டும். இவைகளே உள்ளொளியைப் பெருக்கும் வழிகளாம்.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

பாரத நாட்டின் ஒளி விளக்குக்களாக விளங்கும் பெரியார் பலருள் புத்தபகவானையும் சங்கராசாரியாரையும் வெகு முக்கியமானவராகக் கொள்ளலாம். இவ்விருவரும் 'சரித்திர' காலத்தில் வாழ்ந்தவர்கள். அதாவது இவ்விருவரும் உலகில் வாழ்ந்தனர் என்பதற்குச் சரித்திரத்தில் சான்றுகள் பல உள்ளன. இராமர், கிருஷ்ணர் போன்றவர்கள் இருந்தார்கள் என்பதற்கு அத்தகைய சான்றுகள் இல்லை என்று ஒரு சாரார் கூறலாம். ஆனால் புத்தரையும் சங்கரரையும் அவ்வாறு மறுத்துக்கூறுவது முடியாத காரியமாகும். இவ்விரு பெரியார்களும் காலத்தால் வேறுபட்டவர். ஆனால் இருவரும் பாரத நாட்டின் நலனுக்காகவும் உலகின் நலனுக்காகவும் உழைத்தனர். பேரன்பு எனும் கிடைத்தற்கரிய குணமே புத்த பகவானாக உருக்கொண்டது. பேரறிவு எனும் குணமே சங்கரராக ஆயிற்று. இராமகிருஷ்ண தேவரிடம் பேரன்பும் பேரறிவும் கலந்து விளங்கின.

சங்கரர் உலகில் சிறிது காலமே வாழ்ந்தார். நீண்ட ஆயுளை ஈசன் அவருக்கு அருளவில்லை. ஆனால் அக்குறுகிய காலத்துள் அவர் செய்து முடித்த தொண்டு இக்காலத்தவருக்கும் வியப்பைத் தருகிறது. மலையாள நாட்டிலே குக்கிராமமொன்றில் ஏழைக் குடும்பத்தில் ஜனித்த இவர் எல்லாக் கலைகளையும் இளமையிலேயே பயின்று, தேச சஞ்சாரம் செய்து, ஹிந்து மதத்தைப் புதுப்பித்தார். அவர் இயற்றியுள்ள நூல்களைப் படித்துப் பொருள் தெரிந்துகொள்ளுவதற்கே ஒரு ஜீவிய காலம் போதாது என்பது மக்கள் கண்ட அனுபவமாகும். நவீன பிரயாண வசதிகளும், அச்சு முதலான சௌகரியங்களும் இல்லாத அக்காலத்தில் சங்கரர் இப்பெரும் பணியை எவ்வாறு செய்து முடித்தார் என்பதை

மிகைத்தால் அம்மகானது சக்தி நமக்குப் புலப்படும். அவருடைய நூல்கள் வேதாந்த தத்துவ நூல்களாக இருப்ப தோடு கவிதை மழுகும் நிரம்பியுள்ளன. அத்வைதத்தையே கர்ஜித்த அவர் மது ரம் நிறைந்த பக்திகீதங்கள் பலவற்றை யும் பாடியிருக்கிறார். சங்கரர் தோன் ருது போயிருப்பின் நம் நாடு ஞானத் துறையில் வற்றிப்போய்க் கீழ் நிலையை எட்டியிருக்கும்.

சங்கருடைய வாழ்வைப் போல அமையவில்லை இராமகிருஷ்ணரது வாழ்வு. சங்கரர் பெரிய பண்டிதர். இராமகிருஷ்ணருடைய ஏட்டறிவு வெகு வெகு சொற்பமானது. சங்கரர் புகழ் மிகுந்த நூலாசிரியர். இராமகிருஷ்ணர் நூல் ஒன்றையேனும் எழுதினவரல்லர். சங்கரர் நாடெங்கும் தர்ம திக் விஜயம் செய்தார். இராமகிருஷ்ணர் அதிகமாகத் தீர்த்த யாத்திரை செய்யவில்லை. அவரது வாழ்வின் பெரும் பகுதி தக்ஷிணேசுவர ஆலயத்தின் அறையொன்றினில் கழிக் கப்பட்டது. ஆயினும் சங்கருடைய ஆற்றல், அவரது நுண்ணிய அறிவு, ஆழ்ந்த ஞானம், நுட்பமான தத்துவங் களைத் தெளிவாக விளக்கும் சக்தி இவை பரமஹம்ஸதேவரிடமும் காணப்பட்டன. இராமகிருஷ்ணதேவரைக் காணச் சென்ற வர்கள் அவருடைய இனிமை மிகுந்த உபதேச வெள்ளத்தைப் பருகுவதில் லயித்துப் போவர். ஈசனுடைய பிரபா வத்தைப்பற்றி அவர் பேசுவதற்கு ஆரம் பித்துவிட்டால் மடை திறந்த வெள்ளம் போலப் பேசுவார். வாழ்க்கையெனும் நூலினின்றும், இயற்கையெனும் இதி ஹாஸத்தினின்றும் உதாரணங்கள் கூறி விஷயங்களைத் தெளிவாக விளக்குவார். தமது ஆத்மீய அனுபவம் எனும் அள விடற்கரிய ஆழமுடைய கடலினின்றும் முத்துக்களை வெளிக் கொணர்ந்து சீடர் களை ஆனந்தப்படுத்துவார். நவீனப் படிப்பும் விஞ்ஞான ஆராய்ச்சியும் காரண மாகக் கலையுலகில் புகழ்பெற்று விளங்கிய பண்டிதர் பலர் படிப்பற்ற இப்பிராம்மண ரின் முன் குழந்தைகள் போலவன்றோ நடந்துகொண்டனர்! தற்போழ்து பல வேறு மொழிகளில் வெளிவந்துள்ள இராமகிருஷ்ணரது வசனாமிருதமும் உப தேச மொழிகளும் மக்கள் பலருக்கு ஆறு தலும் சாந்தியும் அளித்து வருகின்றன என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். இராமகிருஷ்ணரை நேராகச் சந்தித்து அவருடைய அமுதமொழிகளைப் பருகிய வர் அடைந்த சாந்தியை இக்காலத்திய நம்மவரால் ஒருவாறு ஊகிக்கவே முடியும். முற்றுந் துறந்தவராயினும் சங்கரர் உல கினருக்கு உபதேசம் செய்வதற்கான அகங்காரத்தை மட்டும் வைத்திருந்தார் என்று இராமகிருஷ்ணர் கூறுவதுண்டு. அவ்வாறே பரமஹம்ஸதேவரும் தமது இயற்கையான நிலை நிர்விகற்ப நிலையே யானாலும் மனதை வெளியுலக நினைவில் நிறுத்திப் பக்தர்களுடன் உறவாடி மக்க ளுக்கு ஞானோபதேசம் செய்வதில் ஊக் கம் கொண்டார்.

வேறொரு முறையில் சங்கரருக்கும் இராமகிருஷ்ணருக்கும் நெருங்கிய ஒற் றுமை இருந்ததெனலாம். சுவாமி விவே காநந்தர் இராமகிருஷ்ணரின் சீடரானா லும் அவரை இராமகிருஷ்ணர் என்ற ஜீவனின் ஒரு பகுதியெனவே கருது வது பொருந்தும். ஈருடலும் ஓருயிரு மாகத் திகழ்ந்தவர் ஆவர் இராம கிருஷ்ண விவேகாநந்தர். விவேகாநந் தர் ஆனதெல்லாம் பரமஹம்ஸ தேவர் தான். அத்தகைய விவேகாநந்தரை நவீன காலத்தில் தோன்றிய சங்கரர் என்று கூறுவது முற்றும் பொருந் தும். சங்கரரைப் போன்ற புத்தி வன் மையும், வியத்தற்குரிய நூலறிவும் சொல்

வன்மையும், எழுத்து வன்மையும், தேஜஸ் நிறைந்த உடலும், வசீகர சக்தியுடைய மனமும், விவேகாநந்தரிடம் காணப்பட்டன. அவரும் சங்கரரைப் போலவே தர்ம திக்விஜயம் செய்தார். புத்தமதம் க்ஷீணித்திருந்த காலையில் இந்தியாவில் தோன்றிய சங்கரர், வலியிழந்த வற்றைப் போக்கி வலியுள்ள அம்சங்களை நாட்டுச் சமய வாழ்வினுள் புகுத்தினர். அம்மாதிரியே மேனாட்டுக் கலையெனும் வெள்ளத்தின் மோதுதலால் நிலை தடுமாறியிருந்த இந்திய நாகரிகத்தைச் செப்பனிட்டார் விவேகாநந்தர். சங்கரரைப் போலவே விவேகாநந்தரும் தாம் துவக்கிய பணி தொடர்ந்து நடப்பதற்காக ஸ்தாபனமொன்றை ஏற்படுத்தினர்.

பாரதநாட்டின் கலையானது ஜீவநதியொன்றைப் போல ஆதிகாலந் தொட்டுப் பிரவகித்து வருகிறது. இந்நதியின் போக்கில் தடை ஏற்பட்ட பொழுதெல்லாம் மகான்கள் தோன்றி அத்தடையை நீக்கியுள்ளனர். சங்கருடைய மரபில் தோன்றியவர்தான் இராமகிருஷ்ணர். காலடியில் ஜனித்த ஞானச் சிங்கமும், காமார்புகூரில் பிறந்த வேதாந்த ஹம்ஸமும், கோகுலத்தில் லீலைகள் செய்து குருக்ஷேத்திரத்தில் கீதையை ஒலித்த கண்ணபிரானது குலத்தைச் சேர்ந்தவர்களே யாவர்.

* * *

பரந்த இருதயமும் கருணை பொழியும் கண்களும் உடையவர் புத்தர்பிரான். மன்னர் குலத் துதித்த அவர் குறைவற்ற போகவாழ்வில் ஈடுபட்டிருந்தும் பிறர் துயரைப் போக்கும் நோக்குடன் அரசு, மனைவி, மகன் யாவற்றையும் தியாகம் செய்துவிட்டுக் கானகம் சென்று கடுந்தவம் புரிந்து வாழ்வின் இரகசியத்தைக் கண்டறிந்து மக்களை உயர்வாழ்வில் ஈடுபடுமாறு செய்யத் தம் வாழ்நாள் முழுதும் அரும்பாடுபட்டார். அவரது பேரன்புக்கு மக்கள் உலகம் மட்டுமே இலக்காகவில்லை. அவரது அருள் எல்லா ஜீவராசிகளுக்கும் கிட்டியது. இந்திய நாட்டினரால் அவதாரபுருடரெனப் போற்றப்பட்டு உலகில் உள்ள மக்களில் பெரும் பகுதியினரால் பின்பற்றப்படுகின்ற புத்தரைப்போன்று தனிப்பெருங்கருணையை உடையவராயிருந்தார் பரமஹம்ஸதேவர். திவ்வியானந்தத்தைப் பருக வருமாறு உலகத்தினரை வலிய அழைத்தார் அவர். ஒரு ஜீவனுக் குதவுவதற்காயினும் தாம் எத்தனையோ பிறவிகள் எடுக்கத் தயாராகவிருப்பதாகக் கூறிய பெருமான் அவர். பலருடைய தீச்செயல்களின் கடுமையைத் தம் மீது ஏற்றுத் தம்முடலை வருத்திப் பலரை உய்வித்த அருளாளர் அவர்.

பரம்பொருளை 'சித்ஸ்வரூபி' என்கிறோம். ஈசன் அறிவு மயமானவர். அதே சமயத்தில் அவர் அருட் கடலாகவும் திகழ்கின்றார். இராமகிருஷ்ணரை நாடுகின்றவருக்கு நல் வரங்கள் கிட்டுகின்றன. அறிவுக்கு நிறைவு கொடுக்கும் பாவித்தையை அவர் தருகின்றார். ஆத்மீய தாகத்தை நீக்க வல்ல கருணை மழையும் அவர் பொழிகின்றார். உடல் பொருள் ஆவி யனைத்தையும் மானிட ஜாதியின் நலனுக்காகத் தத்தம் செய்த கர்ணன் அவர். தம் நிழலை வந்தடைந்தவருக்கு அமரத் தன்மையை அருளவல்ல கற்பகத்தருவும் அவர்.

# உண்மை ஞானம்

பாகவதர், மு. கிருஷ்ணசாமி, நாகைவேளி.

**உலகில்** எல்லாச் சீவர்களும் இச்சிப்பது யாதெனில், துக்கமென்பதின்றி எப்போதும் சுகமாயிருக்கவேண்டு மென்பதே. அங்ஙனமாயின் அச்சுகவாழ்வு எங்ஙனம் இருக்கின்றது என்று தன்னனுபவத்தாற் காணப்புகின்,

பெருவாழ்வு மிக்க தானே தன்னிடத்தினிற்போராத பிரியமதனால், 'அருகாத பிரியஞ் சுகத்தில் வருமாதலா லானந்தமா மைந்தனே' என்றபடி சுகானுபவமே பிரியத்திற்குக் காரணமாயிருக்கின்றது. ஆதலால் யாவருக்கும் தன்னிடத்திலேயே பரமப் பிரியமிருப்பதாலும், மனதற்ற நித்திரையில் தின அனுபவத்தாற் காணும் தன் சுபாவமான மாறாச் சுகநிலையை யடையத் தன்னைத்தா னறிதலே, உண்மை ஞானம் எனச் சுருதிகள் கோஷிக்கின்றன. அதற்கு விசார ஞானமே முக்கிய சாதனமாம். இங்ஙன மிருக்கவும், மாந்தர்கள் சுகப்பிராப்தியின் பொருட்டு ஸ்திரீ, தன, புத்திராதிகளே அடையத்தகுவனவாமென்று தேடுகிறார்கள். துக்க நிவர்த்தியின் பொருட்டு அநேகர் முப்பத்திரண்டு தானதர்மங்களை வழங்குகின்றார்கள், மற்றும் சிலர் அநேகவித முயற்சிகளும் அப்பியாசங்களும் செய்கின்றார்கள். ஆனல் இப்படிப்பட்ட எவ்வித முயற்சியாலும் துக்கமற்ற ஆனந்தம் கிடைக்கிறதில்லை என்பது அனுபவ சித்தம். சர்வ துக்கங்களுக்கும் காரணம் எதுவோ அது நீங்காமல் சுகம் உண்டாகமாட்டா தென்று உபநிஷத்துக்கள் முறையிடுகின்றன. அங்ஙனமாயின் துக்கமற்ற சுகமே ஸ்வரூபமாயுள்ள பொருள் யாதென விசாரிக்கின், சச்சிதானந்த வடிவமாயுள்ள ஆன்மாவே (பரம ஆன்மா) ஆங் கடவுளே, சோகமற்ற சுகஸ்வரூபியாமென்பது முடிவாகும். அதற்கு வேறானதெல்லாம் துக்கமென்பதும், அதுவே அஞ்ஞானமென்பதும் அதன் காரியமான காணப்படும் தேகாதி நாம ரூப பிரபஞ்ச வஸ்துக்கள் யாவும், பரம்பொருட்கு வேறாக இருப்பதால் அவைகளே துக்கரூபமாமென்பதுந் துணியப்படும். ஆகையால் அஞ்ஞானம் நிவர்த்தியாகாத வரையில் துக்கம் அடியோடு நிவர்த்தியாகமாட்டாது. இந்த அஞ்ஞானம் ஞானத்தால்தான் நிவர்த்தியாகும். ஞானமென்பதோ, நான் யார், கடவுள் என்பவர் யாவர், உலகமென்பது யாது, என் ஞானங்க ளெவை என்பதை விசாரித்தறிவதேயாம். அஃதாவது,

> " உலகெது யாமா ரென்ன
> வுற்றுநின் றுணரு மட்டும்
> கலகமார் பிறவி மோகங்
> கங்குல்போல் மூடி நிற்கும்
> அலகிலா வுலகும் யாமும்
> அழிவில்சிற் சோதியன்றே "

என்பதை ஞானசாரியர் முன்னிலையில் ஐயந் திரிபற விசாரித் தறிந்து அவ்வுண்மைப் பொருளாகவே நிலைத் தனுபவத்திற் காண்டலையே உண்மை ஞானமெனச் சாஸ்திரங்களும் சத்துக்களும் கூறுப.

எங்ஙனமெனில், கடவுளை உண்மையாய் அடைய விரும்பும் பிரதி சீவரும், முன்னம் சகுணமாகிய திரிமூர்த்திகளை யாவது, நிர்க்குணமாகிய பரப்பிரம்மத்தை யாவது அன்பா யுபாசிக்கவேண்டும். இதனு லக்கினியில் விழுந்த சருகைப்

போல் சகல ஆகாமிய பாபங்களும் பஸ்ம
மாய்ப் போய்ப் புண்ணியம் மேலிடும்.

இப்புண்ணிய மேலீட்டால் அநித்திய
மாகிய சம்சாரம் துன்பமாய்த் தோன்றுவ
தன்றி நித்தியமான மோக்ஷமார்க்கத்தைக்
காட்டும் சற்குரு தரிசனங் கிடைக்கும்.
அந்த சற்குருநாதனுக் கன்புடன் பணி
விடை செய்வதால் பெருங்காற்றாற் சித
றிப்போகும் மேகத்தைப்போலச் சஞ்சித
கர்மங்களெல்லாம் சிதறுண்டுபோம். இத
னால் அதிக சந்தோஷ முண்டாகும்.
பின்பு ஆசாரிய ருபதேசிக்கும் மகா வாக்
கியத்தை ஏகாந்த ஸ்தானத்திலிருந்து
தைலதாரைபோல் தியானிக்கவேண்டும்.
இதனால் காற்றில்லா விடத்துள்ள தீபத்
தைப்போலச் சகல சஞ்சலங்களும் நீங்கி
ஏகாக்ர சித்தமுண்டாகும். பிறகு சற்குரு
முன்னிலையில் தேகத்தையும், இதிலிருக்
குந் துவாரங்களையும், இதனுள்ளுலாவும்
சுவாசத்தையும், இதிலிருந் துதிக்கும் அந்
தக்கரண விருத்திகளையும், இவைகளை
யெல்லாம் நானென்றிருக்குஞ் சீவனையும்,
இதனுக் காதாரமான சுத்த சூன்யமாகிய
அஞ்ஞானத்தையும், ஜாக்ராவஸ்தையில்
கருவிகளின் சேஷ்டையையும், சொப்
பனத்தில் மனக்கூத்தையும், சுழுப்தியிற்
சூன்யத்தையும் அறிந்துகொண்டிருக்கும்
சாக்ஷியாகிய தானும், இப்படியே சரா
சரங்களிலுஞ் சாக்ஷியா யிருக்குஞ்
சர்வ சாக்ஷியாகிய பிரம்மமும் ஒன்றே
யெனக் காட்டும் மகா வாக்கியார்த்த
சிரவணஞ் செய்யவேண்டும். இதனாற்
சூரியோதயத்தால் நீங்கு மிருளைப் போல
அஞ்ஞானம் நீங்கிப்போகும். பின்பு
தேகம் அநித்தியம், நாம் நித்தியம்.
இந்திரியங்கள் துக்கமயம், நாம் ஆனந்த
மயம். அந்தக்கரணம் சலன சுபாவம்,
நாம் நிர்ச்சலன சுபாவம். பிராண வாயு
தேகத்துக்கு ஆதாரம், நாம் சமஸ்
தத்துக்கும் ஆதாரம். ஜீவன் நானென்
னும் பாவனை, நாம் நானற்ற பாவனை.
அஞ்ஞானம் சுத்த சூன்யம், நாம் அகண்ட
பரிபூரணம் என்று மண்டுகத்தின் கண்
டத்தைப்போலவும், சிசுக்களின் உச்சி
யைப்போலவும், மானிடர்களி னிருதயத்
தைப்போலவும், சமாதானம் பண்ண
வேண்டும். இதனால், தீர்ப்பானபின் வாதி
யின் சந்தேகமறுவதுபோலச் சகல சந்தே
கங்களுந் தலையெடுக்காமற் சாகும். பிறகு,
தேகாதிகள் நாமல்லாததால் நமக்கு தர்மா
தர்ம பந்த மோக்ஷ ஜரா மரணங்கள் முக்
காலத்திலு மில்லை. ஆதலால் பல துளி
களுங்கூடிப் பெரு வெள்ளமானதுபோலச்
சகல சாக்ஷிகளின் கூட்டமே சர்வ சாக்ஷி
யாகிய பிரம்மமென்றும், பிரம்மமே
சாக்ஷி ஸ்வரூபமாகிய நானென்றும்,
ஜனனமில்லாத வெனக்கு மரணமேதென்
றும், ரூபமில்லாத வெனக்கு விகார
மேதென்றும், சங்கல்பமில்லாத வெனக்கு
விகல்ப மேதென்றும், மரணமில்லாத
வெனக்குப் பயமேதென்றும், எங்கும்
பரிபூரணமாயிருக்கும் எனக்குத் தேக
மேதென்றும், முக்காலத்திலும் ஓரியல்பா
யிருக்கும் எனக்குக் காலமேதென்றும்,
என்றைக்கு மழியாமலிருக்கும் என்பால்
முன்னும் பின்னும் மித்தையான இந்திர
ஜால வித்தைபோன்ற இப் பிரபஞ்சம்
முழுமித்தையென்றும், என்றும் அழியா
திருக்கும் பிரம்மமே நானென்பதற்குச்
சந்தேகமேயில்லையென்றும் திடமாய்நிதித்
தியாசனத்தாற் றெளிவதே ஞானமாம்.

இதனால் தீபமேற்றியபின் சர்ப்ப பயம்
நீங்கிப் பழுதையென்று காலாற் றள்ளி
விடுவதுபோலப் பிரபஞ்சம் மெய்யென்
றும், தேகந்தானென்றும், பந்தமோக்ஷங்க
ளுண்டென்றும் நினைக்கச் செய்யும் விப
ரீத பாவனை யொழிந்துபோம். பிறகு
தேக மிருந்தாலென்ன மரித்தாலென்ன,
காட்டிலிருந்தாலும் நாட்டிலிருந்தாலும்,
பிராரப்தாதீதமான இத்துலம் சுகத்தை

யும் துக்கத்தையும் அனுபவித்தே நீக்க வேண்டுமென்றும், பலதரம் மிச்சித்து நினைத்தாலும் வராது வரவே வராது; பலதரம் வேண்டாமென்று நிக்கிரகித்தாலும் போகாது போகவே போகாதென்று,நிரேதுவாய் சகல இச்சைகளுமற்றுப் புற்றினுள்ளிருந்து புறப்படும் ஈசலைப் போல் உள்ளத்திருந்து உதிக்கும் சங்கற்பங்களை இந்திரியங்களின் வழியாய்ச் செல்லாமல் மீனை யுண்ணுங் கொக்கைப்போலுண்டு, இச்சை யென்னும் மடுவிலிருக்கும் நினைப்பென்னும் மச்சங்களை யெல்லாம் நாசஞ்செய்து, இச்சையின் வழியாய் மனதைச் செல்லாமல் நிக்ரகித்து நிஸ்தரங்க சமுத்திரத்தைப்போல அசைவற்றுக் கூடஸ்த பிரம்ம மாத்திரமாயிருப்பதே சமாதியென்று சொல்லப்படும். இதனால் சுழுப்தியி லுண்டாகும் சுகத்தைப்போல அகண்டானந்த முண்டாகும். இத்தகைய எல்லையில்லாச் சுகானந்தக் கடலிற் படிந்து, தன்னை மறந்து தலைவனிற் கலந்து திக்குத் தேசாதிகளிறந்து, திருக்ஸ்வரூபத்திற் கரைந்து, எங்கணும் நிறைந்து தானின்னனென்றுந் தெரியாமல் சுத்தா சுத்தத்தையுங் குறியாமல் பேசுவதும் உண்ணுவதும் சொப்பனத்திற் கண்டும் காணாத காட்சிபோலுணர்ந்து முணராமல், பேயன் உன்மத்தன் பித்தன் சிசுவைப்போ லாகி, இந்திராதி தேவதைகள் பிரத்தியக்ஷமானாலும் மாயா மயமென் றறிந்து தலையைக் கொய்வதுந் தெரியாத ஆனந்தாவேசம் மேலிட்டு, நனவிற் சுழுப்தியின் னிலையை மேவி, பிரம்ம மாத்திரமாயிருப்பதுவே சாக்ஷாத்காரமாம். இதனாற் கற்புள்ள கன்னிகைக்குச் சாயுச்சியங் கிடைப்பது போல சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய மென்னும் நான்கு பதங்கட் கப்பாற்பட்ட ஐந்தாம் பதமாகிய ஆனந்த மாத்திரமான கைவல்யங் கிடைக்கும். ஆதலால் முக்கியமாய்ப் பரமாசாரியர்மீதும்,இஷ்டதேவதையின் மீதும், சிரவணார்த்தங்களின் மீதும் பூரணமான சிரத்தையிருக்கவேண்டும். பரமாசாரியர்மீதிருக்கும் பரிபூரண சிரத்தையே மேலான உண்மை ஞானத்தைக் கொடுக்கும். இஷ்டதேவதையின் மீதிருக்கும் பூரண சிரத்தையே பாப விமோசனமாக்கும். சிரவணார்த்தத்தில் பூரண சிரத்தையில்லாதவனுக்கு ஞானம் லபிக்கமாட்டாது. எப்படி ருதுவாகாக் கன்னிகைக்கு கர்ப்பந் தரிக்காதோ அப்படியே சிரத்தை யில்லாதவனுக்கு ஞானார்த்தம் மனதில் தரிக்காது. சிரத்தையே—ருது; உபதேசமே பிந்து; ஞானமே கர்ப்பம்;ஆனந்தமே சிசுவென்று உரைக்கத் தகும். குருகிருபை யில்லாவிட்டால் சிரவணாதிகள் பலிக்கமாட்டா. சீவபோதமாகிய தன்னை மறக்கிற பரியந்தம் மேற் சொன்ன மூன்றினிடத்திலும் பூரணமான சிரத்தை யுள்ளவனுக்கே பிரம்மானந்தம் உதயமாம். எப்போது ஆசாரியருடைய பரிபூரண கிருபையைப் பெறுவானோ அப்போதே உதயமாகும் ஞானப்ரகாசம். அற்றுப்போகும் அஞ்ஞான பாசம். விஸ்தரிக்கும் ஆத்மவிலாசம். இருக்காது சிந்தனம் லவலேசம். சஞ்சித கர்மங்கள் நாசமாய்ப் போகும். தன்னை மறக்கச் செய்துவிடும் பிரம்மோபதேசம். சகல பற்றுக்களு மற்றுப்போம் படியாகச்செய்யும் சாதுக்கள் நேசம். இவ்வளவு மேன்மையா யிருக்கின்றது குரு விசுவாசம். தேகம் அசேதன மூடசடம். உண்மையான தான் நித்திய சுஞ்ஞான சேதனம். தேகம் கண்டப்பட்ட ரூப நாமம். தான் அகண்ட பரிபூரண நிரூப நிர்நாமம். தேகம் விகார பல துக்கம். நீ நிர்விகார நிர்மலானந்த முக்தம். உனக்கேனினி தேகாபிமானம். உன்னுடைய ஸ்வரூப மென்றைக்கும் ஓரே நிதானம். உன்னை யார் இப்படிச் செய்யப்போகிறார்

கள் சமாதானம்? உன்னுடைய எதார்த்த ஸ்வரூபம் எவராலும் உரைப்பதற்கரிய மோனம். இதுவே வேதவேதாந்தங்களின் முடிவான உண்மை ஞானம். மற்றவைகளெல்லாம் மூடஞ்ஞானம். தற்சுதந்திரமற்றிருப்பதே ஆசாரியருக்கு அளிக்குந் தானம். நானென்பதற்றவர்கட்கும் உண்டோ ஈனம்? நானற்ற பிரம்ம ஞானியே மூவர்க்குஞ் சமானம். தேகத்தை நடப்பித்துப் பிராணனை நடப்பிப்பது சீவன். சீவனை விளங்கச் செய்வது ஆத்ம ஞானம். ஆதலால், தேகாதிகளை நானல்லவென்றே யிருக்கவேண்டும். பிராரப்தாதீனமான இவ்வுடலைக் குறித்து, உனக்கக்கரையென்ன? தேகாபிமானத்தை இன்றுடன் விட்டுவிடு. 'உன்னை நீ யறிவையாகி லுனக்கொரு கேடுமில்லை' என்றபடி உன்னை நீயே நன்றாய் ஆராய்ந்துபார். தன்னை ஆராய்பவர்கட்கே எல்லையற்ற ஆனந்தமுண்டாகும். தேகாதிகளை அசைவற நிறுத்தினவனுக்கு நித்தியானந்தம் வந்தடைவதுபோலத் துரிய திருஷ்டியை மேவி பிரம்மமாத்திரமாயிருப்பவர்கட்கே ஆனந்தோதயமாகும். நித்திரையானது தன்னை மறக்கச் செய்வதுபோல ஆனந்த நித்திரையே உன்னை மறக்கச் செய்யும். நீ முக்காலத்திலும் முக்தனாகவே யிருக்கின்றாய். இத்தகைய உண்மையையே ஸ்வானுபவத்தால் அறியவேண்டும். இஃதன்றி வாசாஞ்ஞான மாத்திரமாய் அனந்தம் கோடிநாளிருந்து அனந்தக் கிரந்தங்களைப் பரிசிலனை பண்ணியும் சங்கையறப் பெறாதவர்களா யிருப்பின் அவர்கள் பந்தத்துக் குட்பட்டே தீர்வார்கள். ஆகவே திரிகுணங்களும் திரிகுண சேஷ்டைகளும் பஞ்ச பூதங்களும் பஞ்ச கர்த்தர்களும் மாயையால் நிர்மாணிக்கப் பட்டவைகளேயாம். நீயோ, சர்வ சாக்ஷி. இவைகளையெல்லாம் சாட்சியாயிருந்தறிகிற உனக்கு மாயையும் திரிகுணங்களும் பஞ்சபூத விகாரங்களும் ஒரு காலத்திலு மில்லவே யில்லை. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசங்களிலும் நிறைந்திருக்கும் நீ பிரம்மமேயாம். இவ்வித ஐக்கிய வித்யானுபவத்திலேயே சீவ பாவ மொழியவேண்டும். இந்த அனுபவமே நான்கு வேதத்திலும், வசிஷ்டசங்கிதை, சூதசங்கிதை, பகவத்கீதை, ஆத்மகீதை, ராமகீதை, உத்தரகீதை, ரிபுகீதை, குருகீதை, பாண்டவகீதை, பிரம்மகீதை, அஷ்டாவக்கிர கீதைகளிலும் வேதவியாசருரைத்த பதினெண் புராணத்தினுள் மச்சிய புராணத்திலும், விஷ்ணு புராணத்திலும், கூர்ம புராணத்திலும், சூரிய புராணம் அக்கினி புராணங்களிலும், கணபதி புராணம் சத்தி புராணம் முதலான புராதன புராணங்களிலும் சொல்லப்பட் டிருக்கின்ற தன்றி வேறல்ல. இங்ஙனமாயுள்ள பரம உண்மையை மதபேதத்தால் திரஸ்கரிப்பவர்களுக்கு ரௌரவாதி நரகமே பிராப்தியாகும். ஆதலால் 'ஏகம் நாராயணம் துவிதம் நாஸ்தி' யெனவும், 'ஏகம் சிவம் துவிதம் நாஸ்தி' எனவும் சுருதி சத்தியஞ் செய்திருப்பதையே இங்கு ஏகம் பிரம்மம் துவிதம் நாஸ்தி யெனச் சத்தியமாய்க் குரு ஸ்வானுபவத்தில் அறியவேண்டும். அதுவே உண்மை ஞானமாம். இதனையே கைவல்லியத்தில்,

'ஞான மெய் மகனே உன்னை நம்மாணை
[மறந்திடாதே'

என்பதனாலும்,

'சுருதியுத்தி யொத்ததுபோ லநுபவமுங்
[கேள்சுழுத்தி சுகவானந்த
மிருதிவடி வாதலினவ் வானந்தமே யறி
[வாம் வேறங்கில்லை
கருதுபிராள யஞ்சுழுத்தி யிரண்டிலுநீ
[யிருந்திருளைக் காண்கின்றாயே
யிருதயத்திப் படிநோக்கி யேகபரி பூரண
[மா யிருந்திடாயே'

என்பதனாலுங் காண்க.

ஓம் தத் ஸத்

# கடோபநிடதம்

श्वोऽभावा मर्त्यस्य यदन्तकैतत्
सर्वेन्द्रियाणां जरयन्ति तेजः ।
अपि सर्वं जीवितमल्पमेव
तवैव वाहास्तव नृत्यगीते ॥ २६ ॥

26. (ப - ரை.) अन्तक - யமதேவரே, यदुक्ता: भोगा: - உம்மாற் கூறப்பட்ட இன்பங்கள்), श्वोऽभावा:- நாளை நில்லாதவை (நிலையற்றன); (किञ्च - இன்னும்), मर्त्यस्य - மனிதனுடைய, सर्वेन्द्रियाणां - எல்லாப் புலன்களுடைய, यत् एतत् - யாதொரு, तेजः - ஒளியை (பலத்தை), जरयन्ति - தேய்க்கின்றவை; अपि - மேலும், सर्वं - எல்லா, जीवितं- வாழ்வும், अल्पं एव - கொஞ்சம்தான்; तव - உம்முடைய, वाहाः - குதிரைகளும், नृत्यगीते (नृत्यं गीतं) - ஆட்டமும் பாட்டும் (ஆடல் பாடல்களும்), तव एव - உமக்கே, (तिष्ठन्तु - இருக்கட்டும்.)

(நசிகேதர் கூறுவதாவது :—)

(பொ - ரை.) யமதேவரே, இவையாவும் சிறிதளவும் நிலையற்றன. மனிதனுடைய எல்லாப் புலன்களினுடைய பலத்தையும் அவை தேய்த்துவிடுகின்றன. வாழ்வு முழுவதும் சுருங்கியதேயாகும். ஆதலின், உமது குதிரைகளையும், ஆடல்பாடல்களையும் உமக்கே வைத்துக் கொள்ளும்.

(கு - ம்.) இவையாவும்...நிலையற்றன: படைப்பு என்பதே மாறுபாடாதலின், ஒருபொருள் மற்றொன்றைக் காட்டிலும் நீடித்து நிற்பினும், படைக்கப்பட்ட பொருள் எதுவும் நிலையுற்றதன்று. மனித ஆயுள் பல விலங்குகளின் ஆயுளினும் நீடித்திருக்கலாம்; தேவதைகளின் ஆயுள் மனித ஆயுளினும் நீடித்ததாகலாம்; தோற்றமாம் படைப்பு ஒடுங்கும் வரையுள்ள காலவட்டத்தின் அளவைக் குறிக்கும் கல்பம் எனும் பிரமதேவனது ஆயுள், அனைத்திலும் மிக நீண்டதாகக் கருதப்படலாம்; ஆயினும், வரையறையில்லாக் காலத்தோடு ஒப்பிடும்போது, எல்லைக்குட்பட்ட ஆயுள்களில் அடங்கியுள்ள, எண்ணிக்கைக் குட்படும் ஆண்டுகள் அற்பமாகும் கணப்பொழுதினும் சுருங்கியவாகும்; காலத்தினையும் கடந்து நிற்கும் பரவாழ்வு நிலையினின்று நோக்குங்கால், அவ்வாண்டுகள் இன்னும் மிக மிகச் சுருங்கித் தோன்றும். இப் பரவாழ்வே 'அமிருதத்வம்' எனப்படும் அழியாப் பெருவாழ்வாகும்; உணர்ந்தோ உணராமலோ மனிதன் இதையே தாகமொடு நாடுகின்றனன். மரணத்தையும் மண்ணக வாழ்க்கைக் குரிய மாறுபாடுகட்கு உள்ளாகும் தன்மையையும் கடந்து நிற்கும் மெய்ப்பொருளையே, நசிகேதர் உணர விழைகிறார்; ஆதலின், வரையறைக் குட்பட்ட வாழ்க்கைகள் யாவும், எவ்வளவு பெருமையான தோற்றமுடையனவாயினும், அவைகளை நிலையற்றனவாக ஒதுக்கித் தள்ளுதல் நசிகேதர்க்கு இயற்கையே யன்றோ?

न वित्तेन तर्पणीयो मनुष्यो
लप्स्यामहे वित्तमद्राक्ष्म चेत्त्वा ।
जीविष्यामो यावदीशिष्यसि त्वं
वरस्तु मे वरणीयः स एव ॥ २७ ॥

27. (ப - ரை.) मनुष्यः - மனிதன், वित्तेन - செல்வத்தினால், न तर्पणीयः - திருப்தியடையத்தக்கவனன்று; (वयं - நாம்)

त्वा - உம்மை, अद्राक्ष्म चेत् - கண்டுள்ளோமாகில், वित्तं - செல்வத்தை, लप्स्यामहे - அடைவோம்; (तथा एव - அம்மாதிரியே போல), यावत्-எதுவரை, त्वं - நீர், ईशिष्यसि - ஆட்சிசெய்வீரோ, (அதுவரை), जीविष्यामः - பிழைத்திருப்போம்; तु - ஆனால், सः वरः एव - அந்த வரம் ஒன்றே, मे - எனக்கு, वरणीयः - வரிக்கத் தகுந்தது.

(பொ - ரை.) மனிதன் செல்வத்தால் ஒருபோதும் மனத்திருப்தியடைவதில்லை. (மேலும்) நாங்கள் உம்மைக் காண்பதினாலேயே செல்வம் பெறுவது உறுதியாகும்; நீர் ஆட்சிசெய்யும் வரை நாமும் வாழ்வோம். ஆயினும், என்னால் வேண்டத்தக்கது அவ்வரமொன்றே.

(கு - ம்.) நாம் உம்மைக் காண்பதினாலேயே...... வாழ்வோம்: நசிகேதரது கருத்தாவது, யமதேவரைக் காணும் பேறு பெற்றுள்ள தமக்குப் பிற்காலத்து என்றேனும் வறுமையால் வருந்துதல் நேராது என்பதே. இன்னும், யமதேவரே தமக்குத் தீ வேள்வியைப் பற்றிய அறிவை உதவியிருத்தலின், அவரது ஆட்சி உள்ளளவும், தமக்கு இறக்கவொண்ணாது; இக்காரணத்தினால், தாம் நீண்ட ஆயுளையும் செல்வத்தையும் வேண்டுவது மிகையாகும் என்பது குறிப்பு. நசிகேதர்க்குத் தாம் நிற்கும் நிலையில், தமது விருப்ப மொன்றாலேயே அவைகளைப் பெறுவது உறுதி.

அவ்வரமொன்றே - இறந்தபின் மனிதன் எய்தும் வாழ்வைப்பற்றித் தமக்குப் போதிக்க வேண்டும் என்று நசிகேதர் வேண்டிய வரமே.

अजीर्यताममृतानामुपेत्य
जीर्यन् मर्त्यः क्वधःस्थः प्रजानन् ।
अभिध्यायन् वर्णरतिप्रमोदा-
नतिदीर्घे जीविते को रमेत ॥ २८ ॥

28. (ப - ரை.) अजीर्यतां - அழிவற்ற, अमृतानां - மரணமற்றவர்களை, (सकाशं - (அவர்களது முன்னிலையை) उपेत्य - அடைந்துவிட்டு, (तेभ्यः उत्कृष्टतरं प्राप्तव्यं प्रयोजनं - அவர்களிடமிருந்து அடையத்தக்க மிக மேம்பட்ட பொருள்களை), प्रजानन् - அறிந்துகொண்டு, क्वधः स्थः - கீழே பூமியில் உள்ள, जीर्यन् - அழியக்கூடிய, कः - எந்த, मर्त्यः - மனிதன், (अपिच - மேலும்), वर्णरतिप्रमोदान् (वर्णः, रतिः, प्रमोदः) - ஆடல்பாடல்களை அனுபவித்து, अभिध्यायन् - நன்கு ஆராய்ந்து விட்டு, अतिदीर्घं - மிக நீண்டகால, जीविते - வாழ்விலே, रमेत - ஆனந்திப்பான்.

(பொ - ரை.) அழிவற்ற அமரர்களை அடைந்த பின்னும், அழியும் இயல்புடையவனும் (அவர்களிடமிருந்து பெறத்தக்க மிகமேம்பட்ட வரங்களை) அறிந்தவனும் ஆன எம்மனிதன்தான் ஆடல்பாடல்களாகிய இன்பங்களை நன்கு ஆராய்ந்த பின், மிக நீண்ட ஆயுளைப் பெறுவதில் ஆனந்திக்கக் கூடும்?

(கு - ம்.) ஐம்புல இன்பங்கள் முற்றினும் இழிவானவை; மண்ணகவாழ்க்கையை மனிதர்க்கு ஏற்பட்ட ஆயுட்கால வரையறைக்கும் அப்பாலாகும்படி நீடிக்கச் செய்யினும், அது நிலையற்ற இயல்புடையதேயாம்; இவ்விரண்டையும் பற்றிய உறுதியுணர்வு நசிகேதரது உள்ளத்து எவ்வளவு ஆழ்ந்து பதிந்திருந்தது என்பதற்கு, இம்மந்திரமும் இதற்கு முன்னுள்ள இரண்டும் தெளிவான சான்றாகும். தனது அழியும் இயல்பை உணர்ந்துள்ள ஓர் அறிவாளனுக்கு அமரர்களிடமிருந்து கணத்தினில் மறையும் உலக இன்பங்களை வேண்டுதல் ஒண்ணாது என்று அவர் கருதுகிறார். தானும் அழியாமையை எய்துவதை யன்றி வேறெதையும் அவன் கேட்டல் தகாது

என்று என்னுகிறார். அமிருதத்வம் என்னும் இறவா நிலையைப் பெறுதலில் இவர்க்குள்ள பெருவேட்கை, மேம்பட்ட வாழ்க்கையில் இவர்க்குள்ள பேரவாவை - வீடு பேற்றின்கண் உள்ள முதிர்ந்த விருப்பத்தை - உண்மையாகக் காட்டுகின்றது.

மிக நீண்ட ஆயுளை......கூடும்? எவ்வாறெனில், வாழ்வு எவ்வளவு நீண்டதாயினும், அது தோன்றுதற்கு ஏதுவாயிருந்த விதிப்படியே அது முடிவும் அடைதல் வேண்டுமன்றோ? ஆன்ம உணர்விலன்றி, வேறெதிலும் அழிவற்ற வாழ்வு என்பது இல்லை.

ஆடல்......ஆராய்ந்த பின் - அத்தகைய ஐம்புல இன்பங்கள் வெறும் உணர்ச்சிகளே யென்பதையும், அவை தோன்றி மறைவன என்பதையும், அக்காரணத்தால், அவை கேடும் இறப்புமாய் இரண்டாலும் பிடிபடுதலினின்றும் உய்யும் ஆற்றலை மனிதனுக்கு அளிக்கும் திறமையற்றனவாகும் என்பதையும், நன்கு உணர்ந்தபின்.

---

# குணவதி

(ஸ்ரீமதி விசாலாக்ஷி ராமசுவாமி, சேலம்.)

மாதவசிங் என்ற சிற்றரசன் ஒருவன் முற்காலத்தில் ரஜபுத்திர நாடு ஒன்றை ஆண்டு வந்தான். அவன் நல்ல ஒழுக்கமும் நல்ல குணங்களுங் கொண்டவன். குடிகளுக்குக் குறைவு ஒன்றும் ஏற்படாதவாறு காத்து நாடாண்டவன். பலராலும் போற்றப்பட்டவன். இம் மன்னனுக்குக் குணவதி என்ற மாதரசி வாழ்க்கைத் துணைவியாக வாய்த்திருந்தாள். அம்மாது கற்பிற் சிறந்த காரிகை. பதிபக்தி மிகுந்த பதிவிரதை. கணவனது சொற் கடவாதவள். கொண்டானையன்றிப் பிறனைக் கண்ணெடுத்தும் பாராத சிறப்புடையவள். பதிபக்தியோடு தெய்வ பக்தியுங் கொண்டவள். அன்புடைய மனமுடையவள். அருளுடைய நோக்குடையவள். இவர்களுக்கு இருமைந்தர் இருந்தனர். அரசிக்குப் புத்திரர்களிடத்தில் அதிக வாஞ்சையுண்டு. கண்ணுங் கருத்துமாக அவர்களை வெகு அன்போடு வளர்த்து வந்தாள். பலரும் புகழக்கூடிய மேலான வழிகளைப் பின்பற்றித் தனது குழந்தைகள் பரோபகார சீலர்களாக உலகில் வாழ்ந்திட வேண்டுமென்று எம்பெருமானை எப்போதும் வேண்டி வருவாள்.

அரசிக்குத் தோழிமார்கள் பலர் இருந்தனர். அவர்களில், தாதி ஒருத்தி, சதா ஹரிநாமத்தை மனத்தில் உச்சரித்துக் கொண்டே இருப்பாள். மானசீகமாகப் பூஜையில் ஈடுபட்டிருந்த அவளது உதடுகள் எப்பொழுதும் துடித்துக்கொண்டே இருக்கும். இதனைக் கண்ணுற்ற அரசி ஒருநாள் அத்தாதியை நோக்கிச் "சேடி! உன் உதடுகள் எப்பொழுதும் துடித்துக் கொண்டே இருக்கின்றதற்குக் காரணம் ஏதாவது உண்டா?" என்று வினவினாள்.

பணிவுடன் தாதி அரசியின் வினவுக்குப் பதிலளித்தாள்: "தலைவியே! மன்னிக்கவேண்டும். தாதியாக இருந்தும் தகாதன செய்ததாகக் கோபித்தலாகாது. அம்மா! எனக்கு இந்தச் சதமற்ற சம்சார சாகரத்தில் ஒரு சிறு பற்றுதலும் இல்லை. அழிவற்ற நித்தியானந்த மயமான மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடைந்திடல் வேண்டுமென்ற கருத்து ஒன்றே எனக்குள்ள ஒரு பேராசையாகும். பிறவிப்

பிணியை ஒழிக்கவும், சம்சார சாகரத் தைக் கடக்கவும் பேரானந்தத்தை யடைய வும் வழி ஒன்று உண்டென்று கற்ற றிந்த பெரியோர்கள் கூறுவர். அதுவே இம்மையிலும் மறுமையிலும் கடைத் தேறச் செய்யும் தாரக மந்திர ஜபமென் பர் உண்மையறிந்த உத்தமர்கள். ராம நாம பஜனை யென்றும் அதனைப் பெரி யோர்கள் சொல்லுவர். அவ்விரண்டு எழுத்தின் மகிமையை அளவிட்டுக் கூற முடியாதென்று யாவுமுணர்ந்த சான்றோர் நன்கு கூறுவர். அம்மந்திர சக்தி நன்மையும் செல்வமும் நாளும் நல்கும். அது தீமையும் பாவமும் சிதைந்து தேய்ந்து போம்படி செய்யும். ஜன்ம மும் மரணமும் இல்லையாம்படி அழித் திடும். என்றுக் கடங்காத மற்றுமுள்ள அதன் பெருமையை ஒன்று மறியாத பேதையேன் என்னவென்று வகுத்துச் சொல்லுவேன். தாயே! அல்லும் பகலும் நான் எப்பொழுதும் அம் மகானுபாவ ளுகிய புண்ணிய மூர்த்தி ராமனது திரு நாமத்தையே உச்சரித்துக்கொண்டு இருக் கின்றேன். இதுதான் என் உதடுகள் அசைந்து நிற்பதின் காரணமாகும்" என்று கூறினுள்.

பாங்கியின் மொழிகளைச் செவியுட் கொண்ட அரசியின் உள்ளம் பக்தி பரவசமாகி நின்றது. ஜன்மம் கடைத் தேறும் வழியைத் தனக்கும் போதிக்கு மாறு கேட்டுக்கொண்டாள். ஹரிநாம சங்கீர்த்தனம் செய்யவேண்டிய விதி களைத் தனக்கும் உபதேசிக்குமாறு வேண்டி நின்றுள். "மாதே! எனக்குப் பணிவிடைகள் செய்யும் சாமானியமான பணிப்பெண் என்று நினைத்திருந்து உனது பெருமைகளை அறியாது போனேன். சன்மார்க்க நெறியில் மேம் பாடுற்றுள்ள உன்னைச் சாமானியமான தாதிபென்று எண்ணி ஏமாற்ற மடைந் தேன். பக்தியாகிய பெருவாரிக்கு ஒரு எல்லையும் உண்டோ? ஆணுகிலென், பெண்ணுகில் என்? ஐந்துமிரண்டும் அறி யாத பச்சிளங் குழந்தைதான் ஆகில் என்? அனந்தகோடி ஜீவராசிகளில் எவ்வுயிரா கில்தான் என்? பரம்பொருளின் பக்தி எல்லாருக்கும் உரியதுதான், சொந்த மானதுதான். என்னைக் கரையேற்ற வந்த என் அன்பான தோழீ! எனக்கும் நீ பின்பற்றும் பக்திநெறி விதிகளைத் தெரி யச்சொல்லு. என் பிறவியும் சாபல்ய மடை யட்டும்" என்று கேட்டுக்கொண்டாள்.

அரசியின் இச்சைப்படியே தோழி ஹரிநாமசங்கீர்த்தனம் செய்யும் முறை களை அவளுக்கு எடுத்துக் கூறினுள். ஸ்ரீராமபிரானது விக்கிரக மொன்றையும் அரசியிடம் கொடுத்து, அதை பக்தியு டன் ஆராதித்து வரும்படியும் சொன் னுள். குணவதி அம்மையும் கிடைத்தற் கரிய மாணிக்கம் கிட்டியதாக நினைத்து, விக்கிரகத்தை நல்ல இட மொன்றில் வைத்து பக்திநியமங்களுடன் நித்தமும் அதற்குப் பூஜை செய்து வந்தாள். ஹரி பக்தியில் விருப்பமும் பூஜா விஷயங்களில் நினைவும் அதிகரிக்க, அதிகரிக்க, அரசிக் குப் பிரபஞ்ச விவகாரங்களிலும் அநித் திய வாழ்க்கையிலும் பற்றுதல் குறைந்து கொண்டே வந்தது.

நாட்கள் பல இங்ஙனமாகச் சென்றன. வெளிவிஷயங்களில் கொஞ்சமும் பற்றில் லாதிருப்பதைக் கண்ட அரசன், தனது மனைவி குணவதிக்குத் தீயோர் கூற்றுல் ஏதோ வெறிபிடித்துக்கொண்டு வாட்டு வதாகக் கருதினுன். பலவிதத்திலும் சிகிச்சைகள் செய்தான். தக்க வைத்தியர் களைக் கொண்டு மருந்துகள் கொடுப்பித் தான். புத்திமதிகள் பல சொல்லியும் பார்த்தான். குணவதியோ இவற்றில் ஒன்றுலும் மனமாறிடாது சலியாதிருந் தாள். தனக்கு எவ்விதமான மாறுதலும்

தன்னிடத்தில் இருப்பதாகத் தோன்ற வில்லை யென்று அரசனிடம் கூறுவாள். தனக்கு வீணாக வைத்தியம் செய்ய வேண்டாமென்பாள். தான் கையாண்ட எவ்வுபாயமும் அரசியை உலகப் பற்றுக் களில் ஈடுபடச் செய்யாமற் போகவே, அரசன் வெந்து நொந்த மனத்தவனாகி அவளை நோக்கி, "பெண்ணே! நீ இவ் வாறு பிரபஞ்ச விவரங்களை மறந்து பித்தேறியவளைப்போ லிருப்பதற்குக் காரணம் யாது?" என்று கேட்டான்.

அரசி, "எனது கண்கண்ட தெய்வ மாகிய பதியே! என்னைத் தவறாக எண்ண வேண்டாம். கணவனது சொல்லை மீறி அவனது சொற்களைப் புறக்கணித்து நடந்திடும் எண்ணம் எனக்கு எக்காலத் திலும் கிடையாது. என் மனம் சிறிது காலமாக பக்தவத்ஸலனாகிய பரமனின் தியானத்தால் உருகி நிற்கின்றது. அக் கருணாநிதி எனக்கு இன்னும் காட்சி யளிக்கவில்லை. அவனது திருக்காட்சி எனக்குமட்டுமன்று, நம் குலத்திற்கும், நம் நாட்டிற்கும் க்ஷேமத்தை உண் டாக்கும்" என்றாள்.

அரசன், "போதும்; உனது பிரசங்கங் கள் போதும். பொய்யான கபடர்களின் சூழ்ச்சி வலையிலே சிக்குண்டு நீ, ஏதே தோ பிதற்றுகின்றாய். பரமனாவது உனக்குக் காட்சியளிப்பதாவது? ஏதோ பகற் கனவு கண்டுகொண்டிருக்கின்றாய். எட்டாத விஷயத்திற்கு முயற்சி ஏன் செய்கிறாய்? வீணாக உனது புத்தியை மழுங்கடித்துக்கொண்டு, உனது எழிலை யும் சுகபோகங்களையும் போக்கடித்துக் கொள்கிறாய். இந்த வெறிவாழ்வை உடனே விட்டுவிடு. எனது தணியாக் கோபத்திற்குப் பாத்திரமாகாதே" என்று, தனது கண்களில் தீப்பொறி பறக்க மிகுந்த கோபத்தோடு கடிந் துரைத்தான். குணவதி அரசனது சினத் திற்கு அஞ்சினவளாகித் தனது கண்களை மூடிக்கொண்டாள்.

கணவனது நிலையைக் கண்ட கற்பரசி குணவதியின் மனம் தத்தளித்தது. பல வாறாக அவளது மனம் எண்ணிப் பதை பதைத்தது. "அந்தோ! கணவரது மனம் கோண நடந்துவிட்டோமே!" என்று எண்ணி வாடியது. "பரந்தாமா! இந்தச் சங்கடமான நிலையிலிருந்து நீ தான் என்னைக் காக்கவேண்டும்" என்று மனத் துள்ளே ஓலமிட்டுக் கூவி முறையிட்டு அழுதாள். தனது பக்தி மிகக் கொண்ட குணவதி மனமுருகி நிற்றலை யுணர்ந்த தீனரக்ஷகனாகிய பரந்தாமன் பிறருக்குத் தோன்றாதவாறு அவளுக்கு மட்டும் காட்சி யளித்து, "மாதே! மனங் கலங் காதே. உனக்கு ஒரு துன்பமும் வந் திடாது. உனக்குத் துணை என்றும் நான் உள்ளேன்" என்று அபயமளித்து மறைந் தார்.

பரம்பொருளின் காட்சியால் பாவை குணவதி பேரானந்த மடைந்தாள். முன் னிலும் பதின்மடங்கு அதிகமாக அவ ரைப் புகழ்ந்து தோத்திரம் பாடினாள்; ஆடிப் பாடி மகிழ்ந்தாள். கணவனது முகத் தைப் புன்னகையோடும் பார்த்தாள். "மன்னா! மனம் பதறவேண்டாம்! நம் பியவரை அம் மகானுபாவன் என்றும் கைவிடான். கண்டேன்! அவன் திவ்ய ரூபலாவண்யத்தைக் கண்டேன். ஆனந் தம் கொண்டேன். மெய்மறந்து நின் றேன்" என்று ஏதேதோ பேசினாள். பக்திநெறியில் பரிபக்குவ மடையாதவனா கலின் அரசனுக்குக் குணவதி கூறுவது ஒன்றும் விளங்கவில்லை. "ஏதோ பிதற்று கின்றாள்" என்றே நினைத்தான். "பெண் ணே, குணவதி! நீ என் மனைவி யென் பதையும், நான் உன் கணவனென்பதை யும், நான் நாடாளும் மன்னன் என் பதையும் நீ மறந்துவிட்டாய் போலும்!

இனியும் நீ இவ்வாறே பிதற்றுவாயாகில், எனது கொடிய கோபத்திற்கு ஆளாவது மட்டுமன்றிக் கடுந் தண்டனையும் அடைவாய். யோசித்துக் காரியங்களைச் செய்" என்று கடுமொழிகள் கூறி வெளியே போனான். அங்கிருந்த காவலாளர்களைப் பார்த்து "அரசி யாரோ ஒரு துறவியின் மொழி வழி இருக்கிறாள். புத்திமாறி நிற்கின்றாள். ஆகவின் நீங்கள் இவ்விடத்திற்கு ஒருவரும் வாராமல் பார்த்துக் கொள்க. உள்ளே எவரும் போகக் கூடாது" என்று பலித்துவிட்டுச் சென்றான்.

மற்றும் சில நாட்கள் கழிந்தன. அரசன் ராஜகாரியங்களை மந்திரியிடம் கவனித்து வரும்படி ஒப்படைத்துவிட்டு, வேட்டையின் நிமித்தம் தனது பரிவாரங்களுடன் காட்டிற்குச் சென்றான். குணவதி ஹரிநாம ஸங்கீர்த்தனமும் பஜனையும் செய்துகொண்டு, பகவத் பக்தர்களைப் பூஜித்து வருவாளாயினள். முன்னினும் அதிகமாகப் பூஜா விஷயங்களில் அரசி மனம் செலுத்துவதை மந்திரி வேட்டைக்குச் சென்ற அரசனுக்குக் கடித மூலமாக அவ்வப்போது தெரிவித்து வந்தான்.

மனைவியின் விஷயங்கள் ஒன்றும் தனக்கு விளங்காது போகவே, கடுஞ் சினங் கொண்ட அரசன் அவளைக் கொன்று, தன் கண்முன் அவள் இல்லாது செய்வதே சரியென்று துணிந்தான். திட சரீரமும் கடுமனமும் கொண்ட கொலைஞர் நால்வரை யழைத்து அரசன், "முன்பின் யோசியாது நீங்கள் அரசியிருக்கும் அந்தப்புரம் சென்று அவளை இருதுண்டாக வெட்டி உயிரைப் போக்கி வாருங்கள்" என்று பணித்தான். வேட்டையாடிக் காட்டிலிருக்கும் அரசனது ஆணையை ஏற்றுக் கொலைக்காரர்கள் நாட்டை யடைந்து, அரசி பூஜை செய்து கொண்டிருக்கும் பள்ளிக்கு வந்தார்கள். களங்கமற்ற பக்தியில் ஈடுபட்டிருந்த குணவதி கொலையாளிகள் வந்ததைக் கவனிக்கவில்லை. வாளை உருவிய கையோடும் கொல்லும் திட எண்ணத்தோடும் கொலைஞர் அரசியை நெருங்கி வந்தனர். தனது பதிவிரதா சிரோமணிக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தை யுணர்ந்த ஸ்ரீமந் நாராயணன், குணவதி பூஜிக்கும் சிறிய விக்ரஹத்திலிருந்து, கொடிய கோரமான புலியுருவோடு வெளியே வந்தார். கண் திறந்து பார்த்த குணவதி, தன் முன் புலியிருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தாள். "கருணாகரா! சாந்த ரூபனாக எனக்குக் காட்சியளித்திடாது, இந்தக் கோரமான உருத் தாங்கி ஏன் வந்தாய்?" என்று ஆனந்தக் கண்ணீர் அருவியாக ஓட, கைதொழுது கேட்டாள். பரமன் பதிலொன்றும் மொழிந்திடாது பக்கலில் நின்ற கொலையாளிகளைக் கொன்று கீழே தள்ளிவிட்டுத் திடீரென்று மறைந்துவிட்டார். குணவதிக்கு ஒன்றும் தோன்றவில்லை. "அநாதரக்ஷக! பரந்தாமா! கருணாகடாக்ஷா! இவர்களைக் கொல்லும் பொருட்டுத்தான் தாங்கள் திருமேனியின் அழகைக் கெடுத்துக்கொண்டு கோரமான புலி ரூபத்தோடு வந்தீர்களோ? சர்வலோக சரண்யா! ஏழை என்மீது உமக்கு இவ்வளவு கருணையா? அபலையென்றால் உங்களுக்கு இவ்வளவு கஷ்டங்களா?" என்று கண்ணீர்விட்டுக் கதறியழுதாள். பூஜாக்கிருகத்தில் நடந்த விருத்தாந்தங்கள் யாவற்றையும் காவலாளர்கள் மந்திரியிடத்தில் அறிவித்தார்கள். 'கருணாநிதியாகிய பரந்தாமனின் திருவிளையாடல்களே இவை' என்பதை அறிந்து அதிசயித்த மந்திரி, பக்தி விநயத்தோடு அரசனுக்கு உடனே செய்தி யனுப்பினான். மனைவியின் பக்தி விசேடங்களைக் கேட்ட அரசன் ஓடோடியும் நாடுவந்து சேர்ந்தான். குணவதியிடம்

சென்று "பெண்பாவாய்! உன் உயர்ந்த பக்தி நிலையை உள்ளபடி அறியாது உனக்குத் தவறுகள் பல செய்துவிட்டேன். கணவனென்ற கருத்தால் நீயும் என்னை க்ஷமித்து வந்தாய். குணவதி! நீ நற்குணமென்னும் குன்றேறி நிற்கும் ஒப்பற்ற மாதரசியே யாவாய். உன்னை மனைவியாக அடைந்த என் பாக்கியமே பாக்கியம். உனக்குள்ள பக்தியில் கடுகளவாவது உனது கணவனாகிய எனக்கு இல்லாமல் இருப்பது என் பூர்வகர்ம வினையே யாகும்" என்று பலவாறாகக் கூறி இறைஞ்சி நின்றான்.

அன்றைய தினத்திலிருந்து அரசனும் தெய்வபக்தியில் சிறந்து விளங்குவானாயினன். ராமநாம பஜனை செய்யும் பக்த கோடிகளைப் போற்றிவந்தான். தேவாலயங்களைப் பண்படுத்திச் சீராக்கினன். பக்தர்களுக்கு அன்ன சத்திரங்கள் கட்டி வைத்தான். அழியாப் புகழுக்குப் பாத்திரனாகித் தனது எஞ்சிய காலத்தைச் சுகமே தனது மனைவியோடும் மைந்தரோடும் கழித்துவந்தான்.

---

# இராவண தத்துவம்

(தொடர்ச்சி)

(சுவாமி சித்பவானந்தர்)

### கயிலையை எடுக்க முயன்றது

இலங்கை வேந்தனுடைய புஷ்பக விமானம் செல்லாத இடம் கிடையாது. மூன்று லோகங்களிலும் எங்கு வேண்டுமானாலும் அது போகும். இராவணன் விரும்புவதுதான் பாக்கி; அவன் எண்ணியாங்கு அது விரைந்து பாயும். ஆனால் ஒரே ஒரு இடத்தில்மட்டும் அது செயலற்று நின்றுவிடுகிறது. கயிலைமலைச் சாரலில் அண்ணன் குபேரன் எளிதில் வெல்லப்பட்டான். தான் அடைந்த வெற்றியில் தம்பிக்குத் தனிப் பெருமை யொன்றும் கிடையாது. இதுபோன்று எத்தனை வெற்றிகளை அவன் எங்கெங்குக் கண்டுள்ளான்! உடன் பிறந்தவனை எளிதில் வென்றுவிட்டு எப்பக்கம் போவதென்று அவன் பார்க்கிறான். கண்ணெதிரே கயிலைமலையானது கனகமயமாகக் காட்சி கொடுக்கிறது. விமானத்தை அதன்மீது விடு, விடு என்கிறான். ஆனால் அது அசையமாட்டேனென்கிறது. அரக்கர் கோனுக்கு அடங்காக் கோபம் வந்துவிடுகிறது. அழகிய அம்மலையைப் பெயர்த்துத் தன் ஊரில் கொணர்ந்து நாட்டிவிட நினைக்கிறான். திட்பமே வடிவெடுத்த தோள்கொண்டு அதைத் தாவிப் பிடிக்கிறான். பற்றிய வேகத்தால் மலையும் சிறிது அசைகிறது. அதிலுள்ள சிவ கணங்கள் அஞ்சி நடுங்குகின்றன. மலைமகளாகிய பார்வதியும் பயந்து பரமசிவனைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளுகிறாள்.

அப்பொழுது இறைவன் விளையாட்டாகக் காலின் பெருவிரலால் அந்த மலையை அழுத்தினார். பத்துத் தலையானுடைய புஜங்கள் அதன்கீழ் அகப்பட்டு நசுங்கின. ராக்ஷசாதிபதி ரோஷத்தாலும் வலியாலும் மெய்ம்மறந்து மூன்று லோகங்களும் நடுங்கும்படி கூச்சலிட்டான். ஊழிக்காலம் வந்துவிட்டதோ வென்று உயிர்களெல்லாம் கலங்கின. தேவதைகள் தாங்கள் போகும் வழியில் அசைவுற்றுத் தவறிக் கீழே விழுந்தார்கள். கடல்கள் கலங்கின. மலைகள் நடுங்கின. யக்ஷ வித்யாதர சித்த

கணங்கள் இதென்னவென்று ஆச்சரியப் பட்டார்கள். அரக்க வேந்தனது அமைச் சர்கள் அவனைப் பார்த்து, "உமாபதியைத் தவிர வேறு கதியில்லை. ஆகையால் நீல கண்டனை வணக்கமாக வழுத்தி அவரைச் சரணமடைவதே நலம்" என்றார்கள். அப்படியே இராவணன் சாம கானத்தால் ஆயிரம் ஆண்டுகளாகப் பரமசிவனைப் பக்தியுடன் துதித்தான். கடவுளும் களிப்படைந்து அவனை விடுவித்தார்.

சக்தியின் பல்வேறு வடிவங்களாகத் தோன்றுவது உலகம். இத்தனைவகைத் தோற்றங்களில் மனது எதையும் மிச்சம் வைப்பதில்லை. அதனுடைய ஆதிக்கம் அவை யாவற்றின் மீதும் பரவுகிறது. அணு முதல் அண்டம் வரையில் உள்ள அனைத்தையும் அது தன்வசப்படுத்து கிறது. அவைகளை உருமாற்றி அமைக்க வும், இடம் மாறி வைக்கவும் வல்லது மனது. சிறியதைப் பெரியதாக்குவதும் பெரியதைச் சிறியதாக்குவதும் அதற்கு விளையாட்டுப்போன்றவை. இப்படி உலகை வேண்டியவாறு எடுத்து விளையாடுவதால் வல்லமையில் தனக்கு நிகரானவர் யாரு மில்லை என்னும் செருக்கு மனதுக்கு வந்துவிடுகிறது.

கயிலாயகிரி முற்றும் சிவமயமானது. அறிவுக்கறிவாய், உயிருக்குயிராய் இருப் பது சிவம். அதைத் தாக்கவோ, புறக் கணிக்கவோ, அழிக்கவோ மனது முயன் றால் அது தானே தட்டழிந்து போய் விடும். அழிவின்று தன்னைக் காத்துக் கொள்ள விரும்பினால் தனக்கும் மூல காரணமாகிய சிவத்தை வாழ்த்தி வணங் குவதைவிட வேறு உபாயம் அதற்குக் கிடையாது. உயிரைப் பாராட்டுபவர் உயிரைப் பெறுகின்றனர். அறிவை ஆத ரிப்பவர் அறிவைப் பெறுகின்றனர். உயி ரையும் அறிவையும் புறக்கணிப்பவர் தாமே அழிந்துபோகின்றனர். உயிரை யும் அறிவையும் இழக்கும் நிலைமைக்கு வந்துவிட்ட இராவணன் எப்படித் தக்க முறையில் சிவபூஜை பண்ணித் தனது தனி வியக்தியைத் திரும்பவும் பெற்றான் என்று தேவாரத்தில் திரும்பத்திரும்பச் சொல்லப்பட்டிருக்கிறது. நமது மனதை யும் சிவசான்னித்தியத்தில் நிலைத்திருக் கும்படி செய்துவிட்டால் அது சிறு மையை யகற்றிப் பெருமையைப் பெற்று விடும்.

## சாபம்

அமைச்சர்களுடன் ஆலோசிக்காது அரக்கர்கோன் எக்காரியத்திலும் ஈடுபடுவ தில்லை. அவர்களுடைய அபிப்பிரா யத்தை அனுசரித்துச் செயலில் இறங் கியதே அவன் அடைந்த வெற்றிகளுக் கெல்லாம் முக்கியமான காரணமென லாம். அறிவுடையோருடைய போது வெண்ணம் இறைவனுடைய திருவுளத் துக்கு ஒப்பானதன்றோ? ஆனால் ஒரு சமயத்தில் மட்டும் அவர்களுடைய மந் திராலோசனையை இராவணன் பொருட் படுத்துவதில்லை. கூடுமான வரையில் அவர்களுக்குத் தெரிவிக்காது தன் காரி யத்தில் இறங்கிவிடுவான். வசதி வாய்க் கும்பொழுதெல்லாம் வனிதைகளை அப கரிப்பது அத்தொழிலாகும். அவன் கண்ணுக்குத் தென்படுகின்ற மடந்தையர் அவன் கையில் அகப்படுவதும் திண்ணம். எந்தக் கன்னிகையாவது பார்ப்பதற்கு அழகாயிருந்தால், அவளுடைய பந்துக் களை யுத்தம் செய்து கொன்றுவிட்டு, அவளைப் புஷ்பகத்தில் ஏற்றிக் காவல் வைப்பான். இப்படிப் பன்னக, ராக்ஷஸ, அசுர, மனுஷ்ய, யக்ஷ, தானவ கன்னியர் களைக் கூட்டங் கூட்டமாகச் சேர்த்தான். அவர்களெல்லோரும் உற்றார் உறவினர் களை விட்டுப் பிரிந்த வருத்தத்தால் மனம் வாடி அக்கினிக் கொழுந்துகள் போன்ற கண்ணீர்களை உதிர்த்தார்கள். ஆறுக

ளால் கடல்கள் நிறைவது போன்று அவர்களுடைய கண்ணீரால் அந்த விமானம் நிறைந்தது. அதில் எங்கே பார்த்தாலும் அழுகையும் கூக்குரலும் புலம்பலுமா யிருந்தன.

இராவணன் மங்கையரைச் சிறை யெடுத்தற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. காமநோய்க்கு உட்பட்டிருந்ததும், போர்புரிவதில் ஆர்வம் கொண்டிருந்ததும் அக்காரணங்களாயின. அவன் பெண்ணாசைக்கு இலக்காகி அவர்களை அபகரித்துக்கொண்டு வந்ததுண்டு. சில மடந்தையர் மன்மதபாதை பொறுக்க முடியாமல் தாமே இராவணனை வந்தடைந்தனர். ஆனால் அவனால் பலாத்காரம் செய்து பெண்களெல்லாம் கொண்டு போகப்பட்டது எப்பொழுதுமே காமத்தால் தூண்டப்பட்டன்று. யாராவது ஒரு வீரனோடு சண்டை செய்ய விரும்பினால் அவனுக்குரிய பெண்களை இராவணன் அபகரிப்பான். அச்செயலும் அவனைப் போரில் கொண்டு சேர்த்துவிடும். இங்ஙனம் காமத்தாலும் சண்டைத் திமிராலும் தூண்டப்பட்டு அவன் மங்கையரைப் பெருமிதமாகத் தூக்கிக்கொண்டு போனான்.

புஞ்ஜிகஸ்தலை என்னும் அழகுவாய்ந்த அப்சர மடந்தை யொருத்தி பிரம்மா விடத்தில் பக்தி பூண்டவளா யிருந்தாள். அவள் ஆகாயத்தில் பிரம்மதேவனது பவனத்துக்குப் போய்க்கொண்டிருக்கையில் அகஸ்மாத்தாக இராவணன் அவளைக் கண்டான். எந்த ஸ்திரீயைக் கண்டாலும் ஏதேனும் ஒரு விதத்தில் அவளை மான பங்கம் செய்வது அவனுடைய வழக்கம். புஞ்ஜிகஸ்தலை அவ்வழக்கத்தினின்று தப்பித்துக்கொள்ள இயலாதவளாயினள். பத்துமுகனால் தாக்குண்டு தவித்துக் கொண்டுபோய் நான்முகனிடம் முறையிட்டாள். தமது அருளுக்குரிய கன்னிகை யடைந்த கீழ்மையைக் கேட்ட பிரம்மாவுக்குப் பகரவொண்ணுக் கோபம் மூண்டுவிட்டது. "நீ பரஸ்திரீகளைப் பலவந்தமாகச் சேர்வாயாயின் உன் தலை நூறு சுக்கலாக வெடிக்கும்" என்று அவர் இராவணனைப் பார்த்துச் சாபமிட்டார். இந்தச் சாபத்துக்குப் பிறகு இலங்கேசன் பெண்களைச் சிறைப்படுத்த முடிந்ததே யொழிய அவர்களுடைய கற்பை அழிக்க முடியவில்லை.

மனோதத்துவம் எக்காலத்தும் இந்தச் சாபத்துக்கு உட்பட்டதா யிருக்கிறது. தனக்கு உரியது அல்லாதது எதையும் அது அனுபவிக்க முடியாது. அப்படி அனுபவிக்கு மளவு அது சிறுமையையே அடைந்து வருகிறது. நம்மில் பெரும் பாலாருடைய மனது நூறு சுக்கல் அல்ல, எண்ணிறந்த சுக்கல்களாகச் சிதறடைந்து வருகிறது. இந்த மனம் கொள்ளும் ஆசைக் கோர் அளவில்லை. உலகத்தில் உள்ள அனைத்தையும் அது அனுபவிக்க வேண்டுமென்கிறது. அப்படி அனுபவிக்கப் புகுமுன்பு தன்னைத் தானே கேள்வி யொன்று கேட்கவேண்டும்:— "இப்பொருளை அல்லது பதவியை அனுபவிப்பதற்கு எம்முறையில் நான் தகுதியுடையவன்? இதற்கும் எனக்கும் உள்ள தொடர்பு யாது?" நம்மை நாமே கேட்பது போன்று உலகத்தவரோடு மந்திராலோசனை செய்தாலும் நமது உரிமையின் எல்லை நமக்கு விளக்கிக்காட்டப்படும். முறையுடன் பாடுபட்டு ஒன்றைச் சம்பாதித்து அனுபவித்தால், இராவணனுடைய அமைச்சர்களைப் போன்று உலகமும் அதை ஆமோதிக்கும்; மனதும் அத்தகைய நற்செயலின் மூலம் திட்பத்தையும் மேன்மையையும் பெறும். ஆனால் போகத்தையும் பொருளையுமே முறைதவறி அபகரிக்கின்ற மனது உலகத்தவர் கருத்தைக் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை.

பின்பு தெய்வத்தன்மையை இழந்து அது துக்கத்துக்கு இருப்பிடமாகிறது.

### ராம இராவண யுத்தம்

தன் மந்திரிகளுக்குத் தெரிவிக்காது இராவணன் சீதையை அபகரிக்கப் போகிறான். ராமனை அவள் பிரிந்திருக்கும் சமயம் பார்த்துச் சந்தேகத்துக்கு இடமில்லாத சன்னியாசி வேடம் பூண்டு அவளை ஏமாற்றி வஞ்சகமாகத் தூக்கிக்கொண்டு போய்விடுகிறான். ராமனோடு யுத்தம்புரிய அவன் ஆயத்தமாயில்லை. சீதை தனக்கு வசப்பட்டால் போதுமானது. ஆனால் உண்மையில் அவள் ராமனைத்தவிர வேறு உயிர்த்துணையை அறியாள். இந்த நிலையில் அனுசமுடியாத இலங்கைக்குள் ராமன் தன் பரிவாரங்களோடு பிரவேசித்துவிட்டான். சீதையைத்தன்னிடம் ஒப்படைத்து விட்டால் சமாதானமாகத் தான் இலங்கையைவிட்டுப் பின்வாங்க ஆயத்தமாயிருப்பதாக ராமன் தெரிவிக்கிறான். இராவணன் அதற்கு இசைந்தபாடில்லை. யுத்தம் துவங்குகிறது. உயிர்ச்சேதமும் பொருட்சேதமும் பெருமிதமாய் விளைகின்றன. இப்பொழுதாவது எதிரியின் எண்ணம் மாறிவிட்டதாவென்று ராமன் ஆராய்ந்து பார்க்கிறான். பிறகு அவனுடைய சேனைத் தலைவர்களும் உற்றாரும் உறவினரும் உடன் பிறந்தவனும் மாய்கின்றனர். அப்பொழுதும் அரக்கர் கோனுக்கு அறிவு வரவில்லை. தன்னுடைய ஆற்றலெல்லாம் திரண்டு ஒரு வடிவாக வந்த இந்திரஜித்தும் மடிகிறான். இப்பொழுது இராவணன் தானே யுத்தரங்கத்தில் தோன்றுகிறான். ராம இராவண யுத்தம் பார்ப்பதற்குப் பயங்கரமாயிருக்கிறது. தேவர்களும் ரிஷிகளும் அதைப் பார்த்து அதிசயிக்கின்றனர். இராவணனுடைய தலைகள் வெட்ட வெட்டப் புதிது புதிதாக முளைத்துக்கொண்டேயிருக்கின்றன. ராமன் புதிய புதிய அஸ்திரங்களைப் பிரயோகிக்கிறான். விதவிதமாகவும் போர் புரிகிறான். ஆனால் அரக்கர் தலைவன் மட்டும் அழிந்தபாடில்லை. முடிவாக ராமன் பிரம்மாஸ்திரத்தை எடுத்து ஏவுகிறான். ராவணன் திரும்பவும் தலை தூக்காவண்ணம் தரையில் வீழ்ந்து மடிகிறான். சீதை ராமனைச் சேர்கிறாள்.

ஜீவர்கள் எல்லாரும் சீதா தேவியின் அம்சங்களாயிருக்கின்றனர். மனது என்னும் இராவணன் உயிர்களை இறைவனிடமிருந்து பிரித்து வைக்கிறது. சீதை அசோக வனத்தில் அழுதுகொண்டிருந்தது போன்று ஜீவர்கள் பரமாத்மனை நாடி ஏங்கி யிருத்தலே அவர்கள் செய்யும் சாதனங்களாகும். ஆஞ்ஜனேயர் சீதைக்கு நம்பிக்கை யூட்டியது போன்று குருவானவர் ஜீவனுக்கும் பரமாத்மனுக்கும் உள்ள தொடர்பைக் காட்டுகிறார். ராமன் கையில் ராவணனுடைய பக்க பலங்களெல்லாம் குறைந்தது போன்று இறைவன் அருளால் மனதின் வேகங்களெல்லாம் கெடுகின்றன. பிரமாஸ்திரத்தால் இராவணன் வீழ்ந்தது போன்று பிரம்ம ஞானத்தால் மனது ஒடுங்குகிறது. ஜீவன் சிவத்தோடு சேர்கிறது. மனது வாழ்க்கை என்னும் இராமாயணம் இங்ஙனம் பூர்த்தியாகவேண்டும்.

### புகட்டும் பாடம்

பல விதங்களில் நாம் இராவணனைப் பின்பற்றுவது பொருந்தும். அவனுடைய ஆண்மை, மனவலி, தூக்கி விளையாடும் தன்மை, இடையறா முயற்சி, ஆக்கத்துக்கு ஏதுவான செயல்கள், ஆட்சிமுறை முதலாயின எல்லார்க்கும் எக்காலத்தும் பாடம் புகட்டுவன வாகின்றன. மக்களை மேல் நிலைக்கு எடுத்துச் செல்லுதற்கு அவன் அடைந்திருந்த பண்பில் ஒருசிறு பகுதி போதுமானது. ஆண்மையில்

பயிற்சி பெறுபவர் இராவணனை மாதிரி மனிதனாக வைத்துக்கொள்வது தகும்.

பின்பு இராவணனிடத்திருந்த குற்றந் தான் என்ன? எக்காரணத்தால் அவனுடைய ஒப்பற்ற வாழ்க்கையே பெருந் தோல்வியாக முடிந்தது? பராக்கிரமங்கள் பல படைத்திருந்தும் காமம் ஒன்று நெஞ்சினுள் நுழைந்து அவைகளை யெல்லாம் தேய்த்துவிட்டது. இந்த ஒரு குற்றம் அவனிடத்தி லில்லாதிருந்தால் அவன் எவ்வளவு மேலானவனாயிருந்திருப்பான்! பிற மேன்மைகள் பல இருந்தும் இந்த ஒரு குற்றம் வந்து அவனை எவ்வளவு சிறியவன் ஆக்கிவிட்டது! நமது மனது ஆசையை வெல்லும் போது அது தேவனாகிறது; ஆசைக்கு உட்படும்போது அது அரக்கனாகிறது. இராவணனுடைய வாழ்க்கை இதற்கு எடுத்துக்காட்டாகும்.

ஆள் பலத்திலும் ஆயுத பலத்திலும் லங்கா ராஜ்யம் ஒப்பு உயர்வு அற்றது. ஆயினும் வெறும் கால் நடையாக வந்த ராமன் காட்டுக் குரங்குகளின் உதவியைக் கொண்டு அத்தகைய ராஜ்யத்தை அறவே அழித்துவிட்டான். ராமனுக்குத் துணையாயிருந்தது தர்மம். தர்ம தேவதை துணையாயிருக்கும்பொழுது அற்பப் பிராணிகளும் ஒப்பற்ற உபகரணங்களாகின்றன. இராவணனுக்கோ தர்மத்தின் சகாய மின்மையால் ஏனைய ஒப்பற்ற பலங்களெல்லாம் பயனற்றவைகளாயின. தர்மத்தை வெல்ல வல்லது எதுவும் இல்லை.

நம்முடைய வாழ்க்கையில் நாம் ராமனுடைய தர்மத்தையும் இராவணனுடைய இதர பலத்தையும் ஒன்று சேர்த்தால் எத்தகைய சீரும் சிறப்பும் வாய்க்கப் பெற்றவர்களாவோம்! ராம இராவண நன்மைகளை இணைக்கத் தெரிந்து கொண்டால் இவ்வுலகில் அல்லது வேறு எவ்வுலகிலாயினும் நாம் அடைய முடியாத மேன்மை யாது உளது? (முற்றும்)

---

# உள்ளங் கவர்ந்த உத்தமர்

(திருவான்மியூர். முத்து - கண்ணப்பன்)

அன்(று) ஒரு நன்னாள் அந்திப் பொழுதில்
சென்றுகொண் டிருந்தேன் திருமயி லைக்கு ;
அந்தச் சமயத்(து) அழகிய மதிலுள்
கந்தம் வீசும் கனிபல கொழிக்கும்
நந்த வனத்தின் நடுவில் மிளிரும்
சுந்தரச் சிகரத் தூய கோயிலுள்
பல்லோர் செல்லப் பார்த்தே, யானும்
மெல்ல நுழைந்தேன் ; மேனி சிலிர்த்தது ;
சொல்லிட இயலாச் சூட்சும சக்தி
'ஒல்லை வா 'என ஓடிய(து) இழுத்து ;
மோன நிலையில், முழுமுதற் பொருளிடம்
போன நெஞ்சினர், புனித அன்பினர்
உருவம் பலஆங்(கு) ஒளிர்தல் கண்டேன் ;
திருஅங்(கு) எங்கும் திகழ்தல் கண்டேன் ;
என்னை யறியா(து) ஏதோ ஒன்(று) அங்கு
என்றன் நெஞ்சை இழுத்தது மாடிமேல் ;
மேலே சென்றேன் ; மெய்யுருக் கண்டேன் ;
மேலே பேச முடிய வில்லையே!
சோதிச் சொரூபம்! தூய கருணை,
கோதில் அன்பு கொண்டமா வுருவம்!
அழகின் சிகரம்! அறிவின் சிகரம்!
பழத்தும் பாலிலும் பாகிலும் தேனிலும்
கன்னல் தனிலுங் காணா இனிமை!
தன்னிகர் இல்லாத் தனிப்பேர் இனிமை!
இனிமை! இனிமை! இயம்பரும் இனிமை!
புனிதம் நிறைந்த புதியதோர் இனிமை!
அத்தகை யினிமை யார்கட லுள்ளே
அத்தினத்(து) இறங்கிய அடியேன் உள்ளம்
இத்தினம் இதுவரை திரும்ப வில்லையே?
உத்தம! உள்ளம் பறித்த கள்வ!
உள்ளங் கவர்ந்தாய், உயிரும் உடலும்
கள்ளந் தவிர்ந்துனைக் கலக்கக் காணாய்!
நன்றோ நாயேன் நலிதல்? நவிலே
என்றோ வந்தென் இடுக்கண் களைவை?

என்றன் இதயத் தாமரை மலர்மேல்
சந்தத மும்திகழ் கின்றோய்! 'நின்றன்
நாமம் என்னை நவில்க'.... என்றால்
"ராம கிருஷ்ணன் என்பார் இங்கே;
ஆனால் எனக்கோ ஆயிரக் கணக்கில்
மாநா மங்கள் வழங்கி யுள்ளனர்;
திருமால் என்பர்; சிவனே என்பர்;
முருகன் என்பர்; முதல்வன் என்பர்;
மாசில் புத்தன், வீரன் என்பர்;
யேசு வென்பர்; இறைவன் என்பர்;
அல்லா வென்பர்; அருகன் என்பர்;
எல்லாம் என்பேர்; எதனைச் சொல்வேன்."
என்றே நகைத்து இயம்பு கின்றீர்;
'என்றே நும்அருள் ஈவீர்'? என்றால்,
"அவசரம் வேண்டாம்; அச்சம் வேண்டாம்;
கவலை வேண்டாம்; கஷ்டம் வேண்டாம்!
ஏழையை ஏற்று இன்சொல் இயம்பு;
கோழை நெஞ்சம், கோபம், வஞ்சம்;
பொய்மை வேண்டாம்; பொறாமை வேண்டாம்;
எல்லா வுயிரிலும் இறைவனைக் கண்டிடு;
நல்லன வேசெய்; நடுநிலை யேநட;
உள்ளும் புறமும் ஒன்றியே ஒழுகு;
உள்ளும், மெய்யும், உரையும், தூய்மை
யுள்ளன வாக ஒழுங்காய் நடப்பாய்;
கூடிய சீக்கிரம் கூடுவை என்னை;
நாடிய நின்னை நான்விடு வேனோ?"
எனப்பல வாசகம் இன்புற இயம்பி,
மனத்தைக் கவர்ந்தீர் மறைவது என்னை?
புகன்ற வாசகம் பொன்னெனப் போற்றித்
தகுந்த படியே தான்நடக் கின்றேன்;
பேதையேன் பலகால் பிழைத்தலும் உண்டு;
யாதும்நும் திருவிளை யாடலே யன்றோ?
ஒல்லை வாரீர்; உம்மருள் தாரீர்;
பல்லோர் போற்றும் பரம ஹம்ச
ஸ்ரீராம கிருஷ்ணச் செல்வ! உமது
சீரார் கமலச் சேவடி கதியே.

---

# ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளின் கடிதம்

அன்பார்ந்த அ—

உன்னுடையவும் ப-வுடையவும் கடிதங்கள் கிடைக்கப்பெற்றேன். அவனுடைய எண்ணம் தெளிவாயில்லை. மணம் புரிந்து கொள்ளுவது அவனது விருப்பமன்று. தேசசேவை செய்ய அவன் விரும்புகிறான். அது சரியே, ஆனால் அவன் மேல்நாட்டுப் படிப்பைச் சரியாகக் கற்றுக்கொள்ளவில்லையென்று எனக்குத் தோன்றுகிறது. ஒருவனுடைய உள்ளம் பண்படு முன்பு நாட்டுக்காவது மக்களுக்காவது எவ்வளவு தூரம் தொண்டுபுரிய முடியுமென்பது எனக்கு விளங்கவில்லை. தன்னுடைய பிரச்னைகளையே தீர்த்துக்கொள்ள இயலாதவன் பிறர்க்கு அதிகம் பயன்பட மாட்டான் என்று எனக்குத் தோன்றுகிறது. அவ் விளைஞனோ நல்லவன். தூய வாழ்க்கை வாழ்ந்தால் அருள் நிலையின் சுவையை அவன் அறியக்கூடும்.

"கடவுளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு உலக காரியங்களை இயற்று. அப்பொழுது எல்லா ஆபத்துக்களினின்றும் நீ விடுபடுவாய்," என்று ஸ்ரீ இராமகிருஷ்ணர் பகர்வதுண்டு. கண்ணாமூச்சி விளையாட்டில் பாட்டியைத் தொட்டுவிட்டால் பிறகு ஒருவன் கள்ளனாகான். அவ்வாறே கடவுளை அறிந்த பிறகு உலக பாசங்கள் நம்மைப் பந்தப்படுத்தமாட்டா என்றும் அவர் சொல்லுவதுண்டு.

வாழ்க்கையின் குறிக்கோள் கடவுளை அறிதல் என்பதை நீ எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். முதலில் அவனை நாடு. அவனுடைய அடியிணையில் பக்தியும் விசுவாசமும் வலுக்கட்டும். பிறகு நீ விரும்பியதைச் செய்யலாம். நீ உயிர்வாழ்ந்திருக்குமளவு ஏதாவது ஒரு சத்கருமத்தைச் செய்தே ஆகவேண்டும். சரீர சம்ரக்ஷணையில் உனக்குக் குறையேற்படா விட்டாலும் சரீர நலத்துக்காகவோ, அகங்காரத்தால் தூண்டப்பட்டோ, பூர்வ சம்ஸ்காரங்களால் ஏவப்பட்டோ நீ யாதாம் ஒன்றைச் செய்துகொண்டிருப்பாய். எனவே கருமம் செய்தே ஆகவேண்டுமென்றால் உன் மனதுக்கு அமைதியை உண்டுபண்ணக் கூடியவைகளும், பிறர்க்கு நன்மை யுண்டு பண்ணக் கூடியவைகளுமான கருமங்களைச் செய்வது மேல். இறைவனுடைய திருவடிகளில் தஞ்சம் புகுந்து அவனுடைய அருளைப் பெற்றவர்கள் ஒருபொழுதும் நெறிதவறிவிட மாட்டார்கள். அவர்கள் பேசும் ஒவ்வொருபேச்சும் செய்கின்ற ஒவ்வொரு செயலும் உலகத்துக்கு நன்மையை உண்டுபண்ணும்.

விவாகம் செய்துகொள்ளா திருப்பது நன்று: பிரம்மசரியத்தைக் காப்பவர் பேராற்றலைப் பெறுகின்றனர். அத்தகையவர் மூலமே அருட்சக்திகள் தோன்றுவனவாகின்றன. "பக்தனுடைய உள்ளம் இறைவனுக்குச் சிம்மாசனம்" என்று ஸ்ரீ இராமகிருஷ்ணர் சொல்லுவதுண்டு. இறைவனுக்குத் தொண்டர்களாக வேண்டுமானால் நாம் பரிசுத்தவான்களாக வேண்டும். ஏனென்றால் தூய உள்ளங்களிலேதான் அவன் வாசஞ்செய்யக் கூடும். தீயவர்க்கு அவன் வெகுதூரத்தில் இருப்பவன். ஸ்படிகம் போன்று தெளிவுடையதாக உன் உள்ளம் ஆய்விடும்போதே கடவுளுக்கு அது இருப்பிடமாகிறது. நீ கடவுளுக்கு உரியவன் என்று சொல்லிக்கொள்ளும் உரிமையும் அப்பொழுதே உனக்கு வருகிறது. தெளிவான கண்ணாடியில் பிம்பம் நன்றா

கத் தென்படுவது போன்று தூய உள்ளத்தில் அவன் உள்ளபடி ஒளிர்கின்றான். நீ இளைஞனாகவும் மாசுபடியாத மனதை யுடையவனாகவும் இருக்கிறாய். பகவானை உன் இருதயத்தில் பிரதிஷ்டை பண்ணி வேறொன்றுக்கும் ஆங்கு இடந் தராதே. தூயவாழ்க்கையாலன்றி அவனை அறிந்து கொள்ள இயலாது. இப்பிறவியிலேயே அவனை அடைதற்கு இதுவே வழி.

அந்த யுவன் நல்லவன்; மங்களகரமான சில சின்னங்களும் அவன் மேனியில் உண்டு. தொடர்ந்து முயன்றால் அவன் ஆத்மஞானத்தில் முன்னேற முடியும். பி. ஏ. அல்லது எம். ஏ. வரையில் படித்து வக்கீல் ஆகிப் பணம் சம்பாதிப்பது ஜீவியத்தில் பெரிய லட்சியம் ஆய்விடாது; அது நிலையற்ற சுகத்தை மட்டும் தருகின்றது. மானுடப் பிறவியின் குறிக்கோளாகிய அருட்பேற்றைப் பெறுதற்கு அது உதவாது. முதலில் உன் உள்ளத்தை ஒழுங்குபடுத்திப் பரிபூரண முடையதாகச் செய். பிறகு நீ மேற்கொள்ளும் காரியத்தை எளிதில் சாதிக்க வல்லவனாவாய். பி. ஏ. அல்லது எம். ஏ. படிப்பதற்கு நீ வீணாகச் செலவிடும் காலத்தின் பன்னிரண்டில் ஒரு பாகத்தை நல்ல சாஸ்திரங்கள் படிப்பதில் செலவிட்டால் சீரிய வாழ்க்கைக் கேற்ற உயர்ந்த கருத்துக்கள் பலவற்றை நீ அறிந்து கொள்வாய். மேலான கருத்துக்களைப் புகட்டும் நூல்களைப் படிக்கும்படி மாணாக்கர்களுக்குச் சொன்னால் அதற்கு நேரம் கிடைப்பதில்லை யென்று அவர்கள் முறையிடுகின்றனர். என் அன்புக் குரிய சிறுவ, நீ ஆண்மையைப் பெற்று நித்யானந்தத்தை அனுபவிக்க விரும்பினால் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கு. அவனை அடைய அல்லது அம்முயற்சியில் உயிரைக் கொடுக்கத் தீர்மானம் செய்துகொள்.

இவ்வுலக இன்பங்களை அநுபவிக்க விரும்புபவர்கள் கல்லூரிப் பட்டங்களுக்கு ஆசைப்படட்டும். ஆனால் பேரானந்தத்தை விரும்புபவர்களுக்குக் கலாசாலைப் பட்டங்கள் தேவையில்லை. “கிரந்தங்களெல்லாம் கிரந்திகள்” (நூல்களெல்லாம் முடிச்சுக்கள்) என்று ஸ்ரீ இராமகிருஷ்ணர் சொல்லுவதுண்டு. உபநிஷதங்கள், விவேகானந்த சுவாமிகள் இயற்றிய நூல்கள் முதலியன அத்தகைய முடிச்சுக்கள் ஆகா. அபரவித்தைக்கு ஏதுவான புஸ்தகங்களைப் படிப்பதால் வீண் பெருமையும் தீய இயல்பும், உண்டாகின்றன. அதனால் மக்கள் ஈசுவரனிடத்திருந்து அப்பால் எடுத்துச் செல்லப்படுகின்றனர். பக்தி விசுவாசத்தை ஊட்டாத புஸ்தகம் எவ்வளவு ருசிகரமாயிருந்தாலும் முடிவில் துன்பத்தையே விளைவிக்கும். கல்விச் செருக்கு மனிதனைக் கடவுளிடத்திருந்து அப்புறப் படுத்தக் கூடியது. பணம் படைத்திருப்பதும் அதே கேட்டை விளைவிக்கிறது. செல்வமானது நன்மையை விடக் கேட்டையே அதிகமாகச் செய்கின்றது.

உறங்கும்பொழுதும் விழித்திருக்கும் பொழுதும் ஸ்ரீ இராமகிருஷ்ணர் பணத்தைத் தொடமுடியாது. தியாகத்தாலன்றிக் கடவுளை அடைய வேறு வழியில்லையென்பதை அவர் தமது ஜீவியத்தின் மூலம் விளக்கியுள்ளார். இந்திரிய சுகங்களை நாடி யோடுவதால் மனிதன் மிருகத்தின் நிலைக்கு இறங்கிவிடுகிறான். புருஷன் என்னும் சொல்லுக்குத் தகுதியுடையவன் ஆக விரும்பினால் நீ தியாகம் செய்து பழகு; பக்தி பண்ணி இறைவனை அடை; சிற்றின்பங்களை விடுவதால் பேரின்பத்துக்கு நீ தகுதியுடையவன் ஆவாய். இம்மைக் குரிய இந்திரிய சுகங்களை விடுவதுதான் தியாகம் என்பதன் கருத்து. இறைவனது தாமரை யடியிணையில் தஞ்சம் புகுவாயாக; பக்தியால் பித்தன்

அருக. ஸ்ரீ இராமகிருஷ்ணருடைய ஜீவியத்தை எண்ணிப் பார்த்து உண்மையான முறையில் நீ மனிதன் ஆகவேண்டும்.

தியாகம் ஒன்றே உனக்குச் சாந்தியளிக்கும். அவன் பொருட்டு அனைத்தையும் தியாகம் செய். கடவுள் ஒருவனையே உனக்குச் சொந்தமாக்கிக்கொண்டு அவனை வழுத்து "தந்தையும் நீ, தாயும் நீ, சகோதரனும் நீ, சகோதரியும் நீ, அனைத்தும் நீயே." என்று இகலோக வாழ்க்கையின் சுகங்களைப் பற்றிய எண்ணங்களையெல்லாம் ஒழித்துவிட்டு அல்லும் பகலும் அவனையே எண்ணி வழிபட வல்லவனாகும்பொழுது நீ பேரானந்தத்தை உணரவும் புருஷத்தன்மையைப் பெறவும் செய்வாய். அவ்வின்பத்தைச் சொல்லால் விளக்க முடியாது அதைக் கொள்ளுதற்கு மானுட உள்ளம் மிகச் சிறியது. பேரின்ப நிலையை அடையும்பொழுது அவனுடைய அருளும் அன்பும் சாந்நித்தியமும் இடையறாது உன்னால் உணரப்படும்.

மானுடப் பிறவி, முக்தியில் விருப்பம், மேலோர் இணக்கம் ஆகிய மூன்றும் ஈசுவரானுபூதிக்கு இன்றியமையாதவைகள். அவனருளால் இம் மூன்றும் உனக்குக் கிடைத்திருக்கின்றன. இனி அவைகளை நன்கு பயன்படுத்தி, மானுடப்பிறவியின் பயனைப் பெறுவாயாக. நித்யானந்தத்தைப் பெற நீ வல்லவனாயிருக்கும்பொழுது அற்ப சுகங்களை நாடி ஓடுவானேன்? அனைத்தையும் துறந்துவிட்டு அவனை அடைதற்காக அவனுடைய திருவடிகளில் நீ தஞ்சம் புகுந்துள்ளாய்; ஆக உன் வாழ்க்கை அனர்த்தமாகாதபடி நீ பார்த்துக்கொள். அருமைச் சிறுவ, இன்னொரு தடவை மானுடப் பிறவி பெடுப்பதும், அருள் தாகத்தோடு கூடியிருப்பதும் சாத்தியம். ஆனால் நீ இப்பொழுது அடைந்திருப்பது போன்று ஸ்ரீ இராமகிருஷ்ணருடைய சிஷ்யர்களின் சகவாசத்தைப் பெறுவது சாத்தியமன்று. அது உனக்கு அருமையாகக் கிடைத்த வாய்ப்பு என்று உறுதி கூறுகிறேன். நீ இதை ஞாபகத்தில் வைத்துக்கொள். பல பிறவிகளில் செய்த புண்ணியத்தின் பலனாகவே இத்தகைய சத்சங்கம் கிடைத்திருக்கிறது. ஆகையால் உன் வாழ்க்கையை வீணாக்காது இச் சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக்கொள்.

குரு வாக்கியத்தில் உறுதியான நம்பிக்கையானது எதையும் எளிதாக்கிவிடும். நம்பிக்கை யில்லாதவனுக்கு வெறும் கிரியைகளும், சமய அநுஷ்டானங்களும் பயன்படா. பூனைக்குட்டி தன் தாயை நம்பியிருப்பது போன்று நீ உன் குருவை முற்றும் நம்பி யிரு. அப்பொழுது அவர் உன்னைக் காக்கவும் உனக்கு அனைத்தையும் அளிக்கவும் செய்வார். களங்கமற்ற நம்பிக்கைவைப்பது ஒன்றே உன் கடமை.

உன்னுடைய அறிவு உன்னை எவ்வளவு தூரம் எடுத்துச்செல்ல வல்லது? உன்னுடைய க்ஷேமத்தில் நீ கொண்டுள்ள பொறுப்பை விட அதிகம் உன்னை ஆட்கொண்டவருக்கு உண்டு என்பதை அவர் உணர்கிறார். ஆபத்துக்களினின்றும் கஷ்டங்களினின்றும் அவர் உன்னைக் காப்பார். குருவுடைய கருணைக்குப் பாத்திரமாயிருக்கிற மெய்ச் சீடன் ஒருவனுக்குக் கேடு ஒன்றும் வாராது.

கடவுளைப் பற்றிய அநுபூதி உண்டாகு முன்பு மக்கள் தவறுதல் அடைதற்கு இடமுண்டு. ஆனால் குருவினிடத்தில் அடைக்கலம் புகுந்துவிட்டால் அவர்கள் தவறுதல் செய்தற்கு அதிக இடமில்லை. வயலினிடையே ஒடுங்கிய வரப்பின் மீது நடக்கும் தந்தை தனயனைப் பற்றி ஸ்ரீ இராமகிருஷ்ணர் பகர்ந்த உபமானக் கதையை ஞாபகத்தில் வைத்துக்கொள். பிதாவே பிள்ளையினுடைய கையைப் பிடித்துக்கொண்டால் சிறுவன் கால் வழுக்

கிக் கீழே விழுவான் என்னும் பயமில்லை; ஆனால் மகன் தகப்பனுடைய கையைப் பிடித்துக்கொள்ள முயன்றால் அவன் கீழே விழ இடமுண்டு. தகுதியுள்ள குரு ஒருவருடைய கிருபைக்கு உட்படுவோர்கள் தங்கள் குற்றங்களையெல்லாம் அவர் நீக்கி வைக்க வேண்டுமென்று அவரிடம் ஒப்படைத்துவிட்டு நிம்மதியா யிருப்பார்களாக.

சாந்தியும் ஆநந்தமும் பெறுதற்குத் தியாகம் இன்றியமையாததாதலால் அனைத்தும் இறைவன் பொருட்டுத் துறக்கப்படவேண்டும். கடவுளை நாடுபவர்க்கு இடையறாத பிரம்மசரியமும் வேண்டும். பிரம்மசரியத்தை அனுஷ்டிக்காதவன் மிருகத்துக்கு ஒப்பாவான். விவேகமே மனிதனை மாக்களிடத்திலிருந்து பிரித்துக் காட்டுகிறது. முயன்றால் மனிதன் கடவுளை அடையக்கூடும்; ஆனால் முற்றும் இந்திரியங்களின் வசப்பட்டுக் கிடக்கும் மிருகங்கள் அங்ஙனம் அடையமாட்டா.

இப் பிறவியிலேயே பேரமைதியும் ஆனந்தமும் படைத்திருக்க நீ விரும்புவாயாகில் உனக் குரியவைகளைத் துறந்துவிட்டுக் கடவுளை உறுதியாகப் பிடித்துக்கொள். உடல் முழுதும் திருநீற்றைப் பூசிக்கொண்டு, கையில் தீமூட்டும் இடுக்கி ஒன்றைத் தூக்கிக்கொண்டு ஊரூராய்த் திரிவது தியாகம் என்று எண்ணாதே. துறவுக்குரிய வெறும் வெளி வேடத்தால் பயன் ஒன்றுமில்லை; ஒரு விதத்தில் அவை தீங்கிழைக்கின்றன. தன்னை ஈசுவர திருவுளத்தினிடத்து ஒப்படைப்பதே தியாகம். "இறைவ, என் உடல், உள்ளம், உடைமை அனைத்தும் உன்னுடையனவே; உன்னுடைய திருவுளப் பாங்கின்படி நீ அவைகளைக் கையாண்டுகொள்" என்று நீ கடவுளிடத்துப் பிரார்த்தனை பண்ணு. அகிலாண்டேசுவரியைத் தவிர ஸ்ரீ ராமகிருஷ்ணர் எதையும் அறியவில்லை யென்பதைப்பற்றியும், அவளுடைய ஆணையா லன்றி அவர் எதையும் செய்யவில்லை யென்பதைப் பற்றியும் நீ கேள்விப்பட்ட தில்லையா? ஆதலால், "அண்ணலே, நல்லது தீயது நான் அறியேன்; நான் உன் தொண்டன் மட்டும் ஆவேன்; உன் திருவுளப் பாங்கு நிறைவேறுக," என்று எப்பொழுதும் இறைவனை வேண்டிக்கொள்.

இந்த மனநிலை உறுதி யடைதற்பொருட்டு இடையறாது பாடுபடு. அறவே உன்னை நீ அவனிடத்து ஒப்படைத்துவிட்டால், வேண்டப் படுவனவற்றையெல்லாம் அவன் உன்மூலம் செய்து முடிப்பான். ஆகையால் வழுத்து, யாண்டும் வழுத்து. அவனுடைய அடியிணையில் சரணமடை. இன்னொன்றை நான் உனக்கு வற்புறுத்த விரும்புகிறேன். நீ போற்றப்பட்டாலும் சரி, தூற்றப்பட்டாலும் சரி. உலகில் உனக்கு இருக்க இடம் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. உன் உடல் இருந்தாலும் சரி இறந்தாலும் சரி. பிறந்ததன் பயன் பகவானை அடைதல் என்பதைத் தெரிந்து கொண்டபின் இம்மியளவும் இந்த லட்சியத்தினின்று பிறழாதே. "நான் இங்கு இப்பொழுதே எப்படியாவது கடவுளை அடைந்தாக வேண்டும்," என்று உனக்கு நீயே உறுதியாகச் சொல்லிக்கொள்.

உன்னுடைய வாழ்க்கைக்கு இத்தகைய வடிவு கொடுத்தால்தான் உன்னை நீ மனிதன் என்று சொல்லிக்கொள்ளுதற்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அருட் செல்வன் என்று சொல்லிக் கொள்ளுதற்கும் தகுதியுடையவன் ஆவாய். சத்சங்கம் பண்ணியதன் பலனையும் நீ அப்பொழுதே பெற்று ஆசீர்வதிக்கப்படுவாய். அப்படியில்லாவிடில் உன்னுடைய வாழ்நாள் வீண் நாளாய்ப் போய்விடும். பிறகு உனக்கும் விலங்குக்கும் வித்தியாசம் இராது.

ஸ்ரீ இராமகிருஷ்ணருக்குத் தகுந்த செல்வன் என்று உன்னைச் சொல்லுவதும் ஒவ்வாது.

இன்னொரு விஷயத்தை நீ எப்பொழுதும் மனதில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன். சிஷ்யனுடைய காதில் ஏதோ ஒரு மந்திரத்தை இரகசியமாக ஓதுபவர் குரு என்று பொதுமக்கள் எண்ணுகின்றனர். உண்மையான ஆசானுக்கு இருக்கவேண்டிய தன்மைகளெல்லாம் அவரிடத்துண்டாவென்று அவர்கள் கவனிப்பதில்லை. எனினும் இக்காலில் அத்தகைய கொள்கை வேர் அறுகிறது. ஆத்ம ஞானம் அடைந்தவனே ஆசாரியன் ஆவதற்குத் தகுதியுடையவன் என்பது இப்பொழுது அங்கீகரிக்கப்படுகிறது. தானே வழியை அறியாத ஒருவன் அதை மற்றவர்களுக்குக் காட்டமுடியாது. மந்திரங்களுக்கு எப்பொழுதும் உள்ள சக்தி இப்பொழுதும் உண்டு; ஆனால் பாரமார்த்திகத் துறையை வியாபாரம் செய்வது போன்று பயன்படுத்துபவர்களுக்கு மந்திரங்களைப் பற்றிய விதிகள் விளங்கமாட்டா. அத்தகைய மனிதர்களும் ஆத்மிகத் துறையில் முன்னேற்ற மடைவதில்லை. அவர்களுடைய சிஷ்யர்களின் முன்னேற்றமோ அதைவிடக் குறைவு. இனி அவர்களுக்குச் சாந்தியும் ஆனந்தமும் உண்டாவது எங்ஙனம்?

ஸ்ரீ இராமகிருஷ்ணரிடத்திருந்து புதியதோர் அருள் வெள்ளம் பெருக்கெடுத்துப் பாய்கிறது. மதிப்பிடுதற்கரிய ஆத்மீயப் பொக்கிஷங்கள் அவருடைய சிஷ்யர்களுக்கிடையில் காணப்படுகின்றன. ஸ்ரீ இராமகிருஷ்ணருடைய சிஷ்யர்களிடத்திருந்து ஆசிர்வாதத்தைப் பெற்றுள்ளவர்கள் பாக்கியவான்களே. அம்மகா புருஷருடைய அருட் புதல்வர்களைச் சிரத்தையுடனும் மாறாத பக்தியுடனும் பின்பற்றுவார்களானால் அவர்கள் பேரானந்தத்தை அடைவது உறுதி. இக்காலத்துக் கேற்ற ஆத்மீயச் சாதனங்களையெல்லாம் ஸ்ரீ இராமகிருஷ்ணருடைய உத்தம சிஷ்யர்களெல்லாம் நன்கு அறிந்திருக்கிறார்கள். ஞான உதவியை நாடித் தங்களிடம் வருபவர்களுக்குத் தகுந்த சாதன வகைகளை அப்பெரியார்கள் புகட்டியருள்கின்றனர். உனக்கேற்ற மார்க்கத்தில் நீ நடாத்தப்படுகின்ற அளவில் நீ பாக்கியவானாகின்றாய். அதில் விரைந்து முன்னேறிச் செல். குழந்தையைப் போன்று முழு நம்பிக்கையுடையவனாக உன் குருவிடத்தில் பிரார்த்தனை பண்ணு; உனக்குத் தேவையானவைகளையெல்லாம் அவர் நிச்சயமாகச் செய்வார். தம்முடைய ஆக்கையின் அழிவையும் பொருள்படுத்தாது சிஷ்யர்களின் முக்தியில் கருத்துடையவராக எவர் இருக்கிறாரோ அவரே முதல்தரமான குரு ஆவார். தம்முடைய பூதவுடல் மறைந்த பின்பும் சிஷ்யர்களை ஆசீர்வதித்து அவர்களை நல்வழியில் நடாத்துதற்குக் குருவானவர் திருமேனி தாங்கித் தோன்றுவதே இக்காலத்தின் தனி விசேஷமாகும்.

இடையறாது முயற்சி செய். ஐயங்களை அகற்று. உன்னுடைய குருவிடமிருந்து கற்றுக்கொண்டதை சுவானுபவத்தின் மூலம் உன்னுடையதாக்கிக் கொள்ளுதற்குச் சாதனத்தில் மூழ்கு. வெளிப்பகட்டுக்காகவோ அல்லது மற்றவர்களுடைய மதிப்பைப் பெறுதற்காகவோ சாதனம் செய்யாதே; உன்னுடைய அயலானுக்கும் அதைப்பற்றி ஒன்றும் தெரியாதவாறு அவ்வளவு அமைதியாகவும் ஒழுங்காகவும் அதைச்செய்து கொண்டிரு. உன்னைப் பரிகசிப்பதற்கும் உன்னுடைய சிரத்தையைக் கலைப்பதற்கும் மக்கள் முன் வருவார்கள். வேறு பலர் புகழ்ச்சியாலும்

போற்றுதலாலும் உன்னுடைய அகங்கா ரத்தை வளர்ப்பார்கள். ஆதலால் ஸ்ரீ இராமகிருஷ்ணருடைய இந்த உயர்ந்த உபதேசத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள் :—"மனதினுள், வனத்தினுள், அல்லது ஒரு அமைதியான மூலையில் இருந்துகொண்டு தியானம் பண்ணு." மற்றவர்களுக்கு விளம்பரம் பண்ணாது தனித்திருந்து சாதனம் செய்யவேண்டும் என்பதே இதன் கருத்து. சிறிது காலத் துக்காவது இப்படி முறையாகச் சாதனம் செய்தால் எத்தகைய ஆனந்தம் உன்னை வந்தடைகிறது என்பதை உணர்வாய். நீ அடியோடு மாறுபட்டவன் ஆவாய். இறை வன் பொருட்டு உலகத்தைத் துறந்துள்ள நீ, "இப்பொழுது, இந்த ஜன்மத்தி லேயே கடவுளை அடைந்தாகவேண் டும்," என்று உனக்குச் சொல்லிக்கொள். ஆம், இது உன் வாழ்க்கையின் ஒப்பற்ற லட்சியமாயிருக்கட்டும். சத்குரு ஒருவ ருடைய ஆசிர்வாதத்தைப் பெற்றிருக் கின்றபடியால் நீ வெற்றியடைவது திண் ணம். என் அருட்செல்வ. அதைப்பற்றிச் சிறிதளவும் சந்தேகமில்லை.

---

# நமது சிகரஜோதி

இப்பகுதியில் :— தேவியின் திரு வாக்கு: இதில், சதா வேலையில் ஈடுபட் டிருப்பதினால் விளையும் நன்மையும், அன்னையார் தீயோரிடத்தும் நல்லதை நாடிக்காணும் இயல்புடையவர் என்பதும், கிரீச சந்திரா என்னும் அடியார்க்கு ஸ்ரீராமகிருஷ்ணரிடமிருந்த பெரும்பக்தி யும், அன்னையாரின் தூய அருளும் எடுத் துக் காட்டப்படுகின்றன. உள்ளொலி பெருக்குக: இதில் ஸ்ரீசுவாமி பரமாநந் தர், இறைவனைத் துணைக்கொண்டு இன்ப மாக வாழும் முறையை யாரும் அறியும் படி விளக்குகிறார். ஸ்ரீ இராமகிருஷ்ண லீலை: இதில் ஸ்ரீ இராமகிருஷ்ணர், பேரறிவு பேரன்பு இவ்விரண்டிற்கும் முறையே வடிவங்களா யமைந்த ஸ்ரீ சங் கரர் ஸ்ரீ புத்தர் என்றும் இருபெருங் குர வரது இயல்புகளையும் தம்மிடத்தே கொண்டவர் என்பது உரைக்கப்படுகிறது. உண்மை ஞானம்: இதில், அத்வைத ஞானத்தின் இயல்பும், அதை அடையும் முறையும் சுருங்க விளங்கக் கூறப்பட்டுள் ளன. குணவதி: உண்மையான தெய்வ பக்தியுடையார்க்கு வரும் உலகத்துன்பங் களை இறைவனே களைந்தருளுகிறான் என்பதை விளக்கும் சிறுகதை இது. இராவண தத்வம்: இதில், கைலையங் கிரியை எடுத்தல், நான்முகனது சாபம் பெறல், இராம இராவண யுத்தம் இவற் றின் உட்கருத்தும், இராவணனது சரித் திரம் நமக்குப் பொதுவாகப் புகட்டும் பாடமும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. உள்ளங் கவர்ந்த உத்தமர்: ஓர் அன்பர் தாம் ஸ்ரீ இராமகிருஷ்ணரது உத்தம இயல்புக்கு வசப்பட்டதைப் பத்திரசம் ததும்பும் மொழிகளால் வருணிக்கிறார். ஸ்ரீ பிரம்மாநந்த சுவாமிகளது கடிதம்: இதில், ஞானம்பெற்று முத்தி அடைய விரும்பும் இளைஞர்க்கு வேண்டிய அரிய இன்றியமையாத உபதேசங்கள் வழங்கப் பட்டுள்ளன. அவைகள் அனைத்தும் அனுபவத்தினின்று எழுந்தவையாதலா லும், ஞானமடைந்த ஒருவரது உபதேச மாகையாலும், பெரிதும் பின்பற்றத் தகுந்தனவாகும்.

## நமக்கு ஏன் கடவுளைக் காண முடியவில்லை?

"பகற்காலத்தில் வானத்தில் நக்ஷத்திரங்கள் கண்ணிற்குத் தென்படுவதில்லை. ஆயினும் நக்ஷத்திரங்கள் இல்லாமற் போவதில்லை" என்று போதித்தார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். இதன் கண் ஒரு பேருண்மை அடங்கியுள்ளது. நமது காட்சிக்கு ஒரு பொருள் இலக்காவதில்லை என்ற காரணத்தால் அதை இல்லையென்பது பொருந்தாததாகும். கடவுள் தமது கண்ணுக்குப் புலப்படுவதில்லையென்ற ஒரே காரணத்தால் பலர் தற்காலத்துக் கடவுள் இல்லையென்று முடிவு கட்டுகின்றனர்; அது தவறு என்பதையே முற்கூறிய உபதேசம் வற்புறுத்துகின்றது. ஒரு சடப்பொருள் தூலவுலகத்தில் நமது தூலக் கண்ணுக்குப் புலனாக வேண்டின், அதற்குரிய நிபந்தனைகள் நிறைவேறியாதல் வேண்டும். உதாரணமாக, ஒளி சடப் பொருளின்மீது விழவேண்டும்; அவ்வொளி அப்பொருளால் திருப்பப்பட்டு, கண்ணிற் படல்வேண்டும்; கண் குருடற்றதாய் இருத்தல்வேண்டும்; மனம் கண்ணோடு இயைந்து நிற்றல்வேண்டும்; இவையனைத்தும் நிகழும் போதுதான், தூலப் பொருள் கண்ணிற்குப் புலப்படும். அதுபோல், கடவுள் என்னும் மெய்ப்பொருளைக் காண வேண்டின், அக்காட்சிக்குரிய கண் குருடற்றதா யிருத்தல்வேண்டும்; அக்காட்சி நிகழ்தற்குரிய நிலைமைகளும் நிறைவேறியாதல் வேண்டும்; அப்பொழுதுதான் அக் காட்சி நிகழும். ஆகலின், கடவுளைக் காண வேண்டுவார் அக்காட்சியைப் பெறுதற்குரிய நிலைமைகளை நன்கு ஆராய்ந்து, அவைகளை நிறைவேற்றல் வேண்டும். பகற்காலத்தில் சூரியனது ஒளியின் முன்பு நக்ஷத்திரங்கள் தோன்றாது போவதுபோல், ஆணவம் என்னும் சூரியன் நம்மிடத்துப் பிரகாசிக்கும் போது, கடவுள் புலப்படுவதில்லை. ஆணவ ஒளி மழுங்கி இருள் சூழும் போது, மெய்ப்பொருளும் கண்ணிற்குத் தோன்றும். ஆணவ ஒளி மழுங்கும்போது எழும் இருள் உலகத்தார்க்கு இருள் போன்று காணப்படும். "எது எல்லா உயிர்கட்கும் இரவாமோ அதுவே ஞானிகட்குப் பகலாகும்" என்பர் கீதாசாரியார். ஆணவ ஒளியற்ற இருளில், "ஊரெல்லாம் துஞ்ச உலகெல்லாம் நள்ளிருளா"கும் காலத்தில் ஞான ஒளியே பிரகாசிக்கும்; அவ்வொளியில் அகக் கண்ணாகிய ஞானக் கண்ணிற்கு மெய்ப்பொருள் காணப்படும். மெய்ப்பொருள் எக்காலத்தும் எவ்விடத்தும் எந்நிலையிலும் இருப்பினும், ஆணவம் தலையெடுத்துள்ளபோது, மெய்ப்பொருள் தென்படுவதில்லை; ஆனால் அது தென்படாத காரணம்பற்றி அதனை இல்லையென்பதும் பொருந்தாத கூற்றாகும். ஒரு பொருளின் உண்மை, நாம் அதனை உணர்வதையும் உணராததையும் பொறுத்ததன்று.

"மனைவி மக்கட்காகவும் பொருளுக்காகவும், அவைகளைப் பெறாத துக்கத்தினால் மக்கள் குடங்குடமாகக் கண்ணீர் வார்க்கின்றனர். ஆனால் இறைவனுக்காக மக்கள் ஒரு துளி கண்ணீர்கூட விடுவதில்லையே!" என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் இரங்கிக் கூறுவர். மனைவியை இழந்து பரிதபிக்கும் ஓர் ஆண்மகன் பிரிவுத்துன்பம் பொறாது உயிரை மாய்த்துக் கொள்ளவும் துணிகின்றான். ஒருதினத்திலே பெருநிதியை இழக்கும் உலகமனிதன் அதனை இழந்த பெருவருத்தத்தால் உலகவாழ்க்கையில் வெறுப்புற்றுத் தன் உடலையும் மனத்தையும் வாட்டுகிறான். வருத்தத்தின் பெருமையை என்னென்பது! பெறுதற்கரிய பெருந்து

றவை எளிதாகத் தானாக வந்தடையும் படிச் செய்கிறது. மக்களையும் மனைவியையும் செல்வத்தையும் இழந்த வருத்தமே இத்தகையதாகின்றதாயின், இறைவனைப் பிரிந்த பெருந்துயரம் எத்தகைய துறவை உண்டாக்காது! மனைவி மக்களிலும் உலகப் பொருள்களிலும் வைக்கும் ஆசையில் ஆயிரத்தில் ஒரு கூறு இறைவன்மீது செலுத்தப்படுமாயின், இறைவன் நம்மை நோக்கி விரைந்து வருவான். நாம் இறைவனை நோக்கி ஓரடி எடுத்து வைப்போமாயின், இறைவன் நம்மை நோக்கிப் பத்தடி எடுத்துவைத்து நடந்துவருவான். ஆனால் பெண்ணையும் பொன்னையும் வேண்டும் இவ்வளவாயினும் இறைவனை வேண்டுவாரில்லையே. "அவிவிவேகிகட்கு உலக விஷயங்களில் எவ்வளவு பிரீதி உண்டாகுமோ அவ்வளவு பிரீதி எனக்கும் உம்மீதும் உண்டாவதாக!" என்றன்றோ இறைவனிடம் தலையடியாராய பிரஹ்லாதர் பிரார்த்தித்தார். ஆதலின் இறைவனைத் தாகமொடு வேண்டுவார்க்கன்றிப் பிறர்க்கு இறைவனைக்காணும் பேறு வாய்க்காதுபோகும். இத்தாகம் பெறுதற்கரிய பெருந்தாகமாக வளரும்போதுதான், காட்சியும் அடையப்படுகிறது. அத்தகைய தாகமே முமுக்ஷுத்வம் எனப்படும். முத்தியை நாடும் விருப்பம் ஓங்கி வளர்ந்து, மெய்க்காட்சி பெறுவிடில் உயிரும் தரியாது என்னும் தீவிர நிலை வருமாயின், அக்கணம் அக்காட்சியைப் பெறுதல் உறுதியாகும். "யான் கடவுளைக் காணல் வேண்டும்" என்றுகூறிய சீடனைக் குருவானவர் தண்ணீரில் நன்கு கீழே அமிழ்த்தி, மூச்சுக்காகத் திணறும் வரை மேலெழ வொட்டாது தடுத்தார். பின்னர் அவனைத் தண்ணீர்க்குமேல் வர இடங்கொடுத்துவிட்டு, "குழந்தாய், நீ சற்றுமுன்பு நீர்க்குள் பலாத்காரமாக அமிழ்த்தப்பட்டபோது, நீ ஆசைப்பட்டது எது?" என்று வினவினர். "சிறிது மூச்சு" என்றான் சீடன்: "அந்த மூச்சுக்கு அப்போது நீ ஆசைப்பட்டது போன்று, இறைவனைக்காண நீ ஆசைப்பட்டாயாயின், அக்கணமே இறைவனைக் காண்பாய்" என்று போதித்தார் குரவர். ஆதலின் நாம் இறைவனைக் காண முடியாத காரணம், நமக்கு இறைவனைக் காண வேண்டும் என்ற ஆசை போதிய அளவு இல்லாமையே.

முற்கூறிய ஆசை உண்டாகாதிருப்பதற்கும் ஓர் உண்மையான காரணம் உண்டு. யாதானும் ஒரு பொருளின்மீது தானாக ஆசை எழுவது எக்காரணம்பற்றியெனின், அப்பொருள் (மற்றொன்றினும் மிக்க) மதிப்புள்ளது என்பது பற்றியே; அம்மதிப்பு அப்பொருளால் நாம் விளைவதாகக் கருதும் இன்பத்தையோ அறிவையோ ஆற்றலையோ பொறுத்ததாகின்றது. நமது மனம் ஒவ்வொரு பொருளையும்பற்றி முற்கூறியவாறு மதிப்பிடும் வழக்கம் ஒன்றைத் தனது பழைய வாசனையால் பெற்றுள்ளது; நாம் அறியாதே அம்மதிப்புக்குத் தக்கவாறு ஒரு பொருளை ஆசைப்படுகின்றது; அதனினும் குறைந்த மதிப்புள்ள ஒன்றைக் கைவிடுகின்றது. நமது மனம் ஒன்றைவிட்டு மற்றொன்றைத் தேர்ந்தெடுக்கும்போதெல்லாம், அது தன்னியல்பாலே முன்னரே அளித்துள்ள மதிப்பே மனத்தை அவ்வாறு ஆட்டிவைக்கின்றது. இம்மதிப்பிடும் இயல்பு குழந்தையின் உள்ளத்தும் ஊறிப்பதிந்து கிடக்கின்றது. ஐந்துவயதுக் குழந்தையாயினும், அதன் ஒரு கையில் ஒரு ரூபாயையும் மற்றொரு கையில் நூறு ரூபாயையும் வைத்து இவ்விரண்டில் எதை நீ ஆசைப்படுகிறாய் என்று கேட்பின், நூறு ரூபாயையே என்ற விடை எளிதாக வெளிவரும். ஐந்து ரூபாய் முத்திரைத்தாளையும் ஆயிர ரூபாய்

முத்திரைத் தாளையும் நம் முன் வைத்து, இவ்விரண்டில் எதை நீ தெரிந்தெடுக்கிறாய் என்று வினவின், மனம் சிறிதும் தயங்காது பின்னதையே யென்று விடையளிக்கும். பின்னது முன்னதினும் மிக்க மதிப்புள்ளது என்ற உறுதியுணர்வினு லன்றோ மனம் அவ்வாறு துணிகின்றது. இதுபோன்று, இறைவனே உலகிலுள்ள பொருள்களனைத்திலும் மிக்க மதிப்புள்ள பொருள், மிக்க இன்பத்தையும் ஆற்றலையும் அளிக்கக்கூடிய பொருள் என்ற உறுதியுணர்வு அல்லது மனத்தெளிவு ஏற்பட்டிருக்குமாயின், நமது மனமும் தானாக எப்பொருளையும் விட்டு இறைவனையே தயக்கமின்றியும் சிரமமின்றியும் பற்றும். ஆதலின், இறைவனைக் காணத் துடிக்க வேண்டுமாயின், இறைவனோடு ஒப்பிடுங்கால், மற்றவை யனைத்தும் இரவி முன்னிற்கும் மின்மினிபோல மதிப்பற்றன என்ற உண்மை நமது உள்ளத்தில் தெள்ளத் தெளிய விளங்கிக்கொண்டிருக்கும்படி, அடிக்கடி மனத்திற்கு இறைவனின் நிகரிலா மதிப்பைப் போதித்து வருதல் வேண்டும். இவ்வாறு போதியாமையே நாம் கடவுளைக் காணமுடியாமைக்குக் காரணமாகும்.

கடவுளை நாம் காண முடியாமைக்கு மற்றொரு காரணம், கடவுளைப் புற உலகத்தே தூலக் கண்ணாற் காண முயற்சிக்கின்றமையே. இறைவன் எங்குள்ளான் எனின், நமது நெஞ்சிற்குள்ளே எழுந்தருளி யிருக்கின்றான். நமது மனம் ஐம்பொறிகளால் இழுப்புண்டு, அலைப்புண்டு, புறஉலகப் பொருள்கட்கிடையே சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றது. உள்ளே எழுந்தருளியிருக்கும் இறைவனைக் காணவேண்டின், மனத்தை உலக முகமாகச் செல்வதினின்றும் தடுத்து மடக்கி அகமுகமாக்க வேண்டும். உலகப் பொருள்கள் மனத்தைப் பொறிகள் வாயிலாக எப்போதும் வெளியே இழுத்துக் கொண்டிருக்கின்றன; வெளி நோக்கிச் செல்லுமாறே பொறிகள் படைக்கப்பட்டுள்ளன. இந்நிலையில், காவலிற் புலனை வைத்து, மனத்தை வெளியே ஓடவொட்டாது தடுத்து, ஒருமுகமாக்கிக் குவியச் செய்து, மனத்திற்குள் எழுந்தருளியிருக்கும் பரம்பொருளை நோக்கும்படிச் செய்தல் வேண்டும். மனத்தை வெளியே இழுப்பது புற உலகப் பொருள்களின்மீதுள்ள பற்றேயாதலின், அதனைச் சிறிது சிறிதாகத் தேய்த்தாலன்றி, மனம் உண்முகமாக நோக்காது. ஆசை யொழிந்தாலன்றி மனம் சாந்தியடையாது; சாந்தியைப் பெற்றாலன்றிப் பரம்பொருளின் ஒளி மனத்தின்மேல் வீசாது. மனம் புறஉலகப் பொருள்களால் பொறிகள் வாயிலாக இழுக்கப்படா விடினும், தன்னிலையிலே உள்ளடங்கியுள்ள வாசனைகளினாலே சதா சலித்துக்கொண்டே யிருக்கும். இச்சலிப்பையும் அடக்கி மனத்தைத் தெளிய வைத்தாலன்றிப் பரம்பொருட் காட்சி எய்தப்பட மாட்டாது. அகத்தே இறைவனை இழந்துவிட்டு நாம் புறத்தே தேடியலைகின்றோம். ஊசியை வீட்டிற்குள்ளே தவறி வைத்து இழந்து நிற்கும் நிலையில், அதனை வெளியே பன்னாள் தேடி அலைந்த போதிலும், அதனைப் பெறுதல் இயலாததாகும். அதுபோல் இறைவனை அகத்தே காண முயல்வதைத் தவிர்த்து, புறத்தே எத்தனை யுகங்கள் அதைத் தேடித் திரியினும் அதைப் பெறுவது எவ்வாறு முடியும்? நம்மில் மிகப் பெரும்பாலார் மனத்தை வெளியே திரிய விடுதலே அகத்தே இறைவனைக் காண முடியாமைக்கு ஏதுவாகின்றது.

இன்னும், இறைவனைக் காண விரும்புவார்க்கு, உள்ளும் புறமும் ஒத்த தன்மை வேண்டும். உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று நடிக்கும் இயல்புடையார்க்கு மனம்

தூயதாகாது. இத்தகைய ஒழுக்கம் வாய்மைக்கு எதிரானதன்றோ? அகத் தூய்மையைப் பெற வாய்மையினும் சிறந்த சாதனம் உண்டோ? "யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனத் தோன்றும் வாய்மையின் நல்ல பிற" என்று நாயனுர் கூறினரன்றோ? "இறைவனே, நின்னை யான் காணல்வேண்டும்; காணேனுயின் நான் உயிரை மாய்த்துக் கொள்வேன்" என்று மனமார உண்மையாகக் கூறுவோமாயின், இறைவன் அக்கணமே நம் கண் முன் தோன்றுவான்.

இறைவன் நம்மினும் நமக்கினியன், அவனினும் நமது நலத்தை அதிகமாகக் கோருபவர் எவரும் இவ்வுலகில் இல்லை. ஆயிரம் தந்தையினும் ஆயிரம் தாயினும் பேரன்பு நம்பாலுடையவன் இறைவன்; அவனது அருமைக் குழந்தைகளே நாம். குழந்தையொன்று தாய் தந்தையரது மடிமீதிருக்கும்போது, அவர்கள் தன்னைப் பாதுகாப்பார்கள் என்ற பூரண நம்பிக்கையோடு, தன்மீது பாரமொன்றின்றி ஒழுகுகிறது; தாய் தந்தையரும் அதனை மிக்க அன்போடு அதனைக் காத்து வருகின்றனர். அதுபோல, நாமும் குழந்தைபோன்று இறைவன்மீது நம்பிக்கை வைத்து, அவரிடம் நம்மை ஒப்புவித்துவிடின், அவர் நமக்கு வேண்டியவெல்லாம் இயற்றுவார். அவரிடம் நமது குறைகளை நெஞ்சார வெளியிட்டுப் பிரார்த்திப்போமாயின், அவர் அவைகளை நீக்கி, நமது ஆசைகளை நிறைவேற்றுவார். "பாலில் நெய்யுளது" என்று கூறுவது மட்டும் போதாது. "உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினல், முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே" என்றூர் சமய குரவர் நால்வருள் ஒருவர். ஆக, இறைவன்மீது உறவு பூண்டு காதலாகிக் கண்ணீர் மல்கிப் பேற்றினை இரந்தாலன்றி, இறைவனைக் காணல் அரிதாகும்.

---

## சமாசாரங்கள்

### புயல்கஷ்ட நிவாரணம்

**மலையாளத்தில்** சமீபகாலத்துக்கு முன்பு ஏற்பட்ட சுழற்காற்றினல் விளைந்த பெருஞ்சேதத்தைப் பொதுஜனங்கள் உணர்ந்திருக்கலாம். சேதத்திற்கு உட்பட்ட பிரதேசங்களிலிருந்து வந்துள்ள செய்திகள் கேட்போரது நெஞ்சத்தை உருக்கக் கூடியனவாகின்றன. நூற்றுக் கணக்கான குடும்பங்கள் குடியிருக்க வீடற்று ஒருதவியுமின்றித் தத்தளிக்கின்றன. சாலைகளும் பாலங்களும் சேதமடைந்துள்ள காரணத்தால், கஷ்டப்படுபவர்கட்கு உதவிபோய்ச் சேர்வதுகூட வெகு சிரமமாயிருக்கிறது. மீன்பிடிப்பவர்களும் இன்னும் மற்ற ஏழைமக்களும் தங்களுடைய குடிசைகளை இழந்து, பள்ளிக்கூடக் கட்டடங்களையும் திறந்த வெளிகளையும் புகலாகக் கொண்டு வருந்துகின்றனர். பல உறுதியான கட்டடங்களும் சிறு பள்ளிக்கூடங்களும் சாய்ந்துவிட்டன. கட்டடங்களும் மரங்களும் சாய்வதனுலும், வெள்ளத்தினுலும், தோணிகளும் கப்பல்களும் கவிழ்த்தப்பட்டமையாலும், மக்கள் பலர் உயிரிழந்தனர். நெல் வயல்களும், தென்னந்தோப்புகளும் பாக்குத் தோப்புகளும் மிக்க சேதமடைந்துள்ளன; அவை பாழாகிக்கிடக்கும நிலைமையைப் பார்க்கும்போது, மீண்டும் அவைகளை வயல்களாகவும் தோப்புகளாகவும் செம்மையாக்க முடியுமோ என்பதும் சந்தேகமாகின்றது.

கஷ்டப்படும் மக்கட்கு உதவியை விரைவாகவும் உடனேயும் செய்தல் மிக அவசியமாகின்றது. சில நாள் தாமதித்துச் செய்யப்படும் உதவியும் பயனற்றதாகும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தைச் சார்ந்த தொண்டர்கள் புயலால் விளைந்த சேதத்தைப் பற்றிக் கேள்வியுற்றதும் உடனே சேதமடைந்த இடங்கட்குச் சென்றனர். கஷ்டப் படுபவர்கட்கு முதலுதவி செய்யவேண்டியிருக்கின்றது; பட்டினியால் வாடும் குடும்பங்கட்கு அரிசி கொடுக்கவேண்டியிருக்கின்றது; வீடில்லாத ஏழை மக்கட்குக் குடிசைகள் கட்டிக்கொடுத்தல் அவசியமாகின்றது. திருச்சூரிலிருந்து தொடங்கி, அதைச்சுற்றி நாலைந்து மைல் சுற்றளவுக்குள் உள்ள இருபது கிராமங்கட்கு உதவிசெய்வதாகத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தார் இதற்கு முன்பு இம்மாதிரியான சங்கடங்கள் ஏற்பட்ட காலங்களில் மக்கட்குப் பற்பல இடங்களிலும் போதுமான உதவியை அளித்து வந்தது, உலகமறிந்த உண்மையே. இச்சங்கத்தார்க்கு அனுப்பப்படும் ஒவ்வொரு காசும் வீணாகாது. ஏழைமக்களது ஸேவைக்கே பயன்படும் என்பது உறுதி.

சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சுவாமி சர்வக்ஞாநந்தர் இரண்டு வெவ்வேறு இடங்களில் புயற்கஷ்ட நிவாரண வேலையைத் தொடங்கியுள்ளனர். திருச்சூர் வட்டாரத்தில் குடிசைகள் கட்டுதற்கு இன்றியமையாத மூங்கிற்கழைகள், ஓலைகள் முதலியன 68 ஏழைக்குடும்பங்கட்கு வழங்கப்பட்டுள்ளன. பிரிட்டிஷ் மலையாளத்தைச் சேர்ந்த மற்றொருவட்டாரத்தில் 42 ஏழைக் குடும்பங்கட்கு அரிசி வழங்கப்பட்டுள்ளது. சமுத்திரக்கரையோரமாக மீன் பிடிக்கும் தொழிலுடையவர்கள் படும் கஷ்டம் மிகப்பெரிது என்பதை சுவாமிகள் அறிவிக்கின்றனர். அவர்களது ஓடங்களும், குடிசைகளும் வலைகளும் பிறவும் சேதமாகி விட்டபடியால், அவர்கள் பட்டினி கிடந்து வருந்துகின்றனர். அவர்கள் உணவு கண்டு பலநாள் ஆகின்றன. இவர்கட்கு உதவி மிகமிக அவசியம்.

இவ்வாறு வருந்தும் தீனமக்களது ஸேவைக்காகப் பணம் வேண்டியுள்ளது என்று மயிலை ஸ்ரீராமகிருஷ்ண மடம் தலைவர் ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார். மிக அற்பமான தொகையும் பின்வரும் விலாசத்திற்கு அனுப்பப்படலாம்:—" மைலாப்பூர் ஸ்ரீராமகிருஷ்ணமடம் தலைவர் அவர்கட்கு ". ஏழைகட்கு இரங்கும் நெஞ்சுடையார் இதில் ஈடுபடுவாராக!

## செங்கற்பட்டு, ஸ்ரீராமகிருஷ்ண சங்க வித்யாலய குருகுலங்கள்.

சென்னைக்கடுத்த செங்கற்பட்டில் ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தார் சிறுவர்கட்கு உலகக் கல்வியையும் ஞானக்கல்வியையும் ஒருங்கே போதித்து, அவர்களது உடலையும் உள்ளத்தையும் அறிவையும் பயிற்றுவித்து, பக்தியும் அறிவும் அன்பும் நிறைந்த தொண்டர்களாமாறு செய்தற்கேற்ற முறையில், ஒரு வித்யாலயத்தையும் அதை யொட்டி ஒரு குருகுல இல்லத்தையும் நடத்தி வருகின்றனர்கள். நல்ல காற்றும், போதிய விளையாடு மிடமும், சுருங்கிய தொகையுள்ள மாணவர்களையுடைய (ஒவ்வொன்றுக்கு மேற்படாத) வகுப்புகளும், திறமையுள்ள மேற்பார்வையும், பெற்றோர்களைப் போன்று பையன்களை ஆதரிக்கும் இயல்பும், நல்ல சத்துள்ள உணவுகளை இல்லங்களிற் போல் அளித்தலும், ஒழுங்குற முறைப்படிக் கடமைகள் இயற்றும் பழக்கத்தை ஏற்படுத்த வசதிகளும் முற்கூறிய வித்யாலயம் இல்லம் என்றும் இரண்டின் சிறப்பியல்புகளாம். ஐந்தாம் வகுப்பிலிருந்து தொடங்கி மூன்றாம் பாரம் (எட்டாம் வகுப்பு) முடிய இப்போது கல்வி கற்பிக்கப்படுகின்றது. அடுத்த ஆண்டு ஜூன்மாதத்தில் நான்காம்பாரம் ஐந்தாம்பாரம் ஆறும்பாரம் எனும் மூன்று வகுப்புக்களும் தொடங்கப் பெற்று, வித்யாலயம் ஒரு உயர்தரப்பள்ளிக்கூடமாக (ஹைஸ்கூலாக) விளங்கும். வித்யாலயமும் இல்லமும் ஜூன் 26-ம் தேதியன்று திறக்கப்படும். பையன்களை இவைகளிற் சேர்க்க விருப்ப முள்ளவர் விரைவில் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தல் வேண்டும். வித்யாலய மாணவரில்லங்களிற் சேர்த்தற்குரிய மனுக்களை; "செங்கற்பட்டு ஸ்ரீராமகிருஷ்ண சங்க வித்யால குருகுல இல்லம், காரியதரிசி" என்ற விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

---

## கடிதங்கள்

(முதற் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தையும், தேசீயக் கனலையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணு 10.

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணு 3

## ஜகஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்தவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணு 12. சந்தாதாரருக்கு அணு 10.

---

## ப ஜ ன வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவ தவசியம்.

விலை அணு 12.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—உக] விஷு வருஷ ஆடி மீ [பகுதி—எ

## பொருளடக்கம்



☞ சந்தாநேயர்கள் யாரேனும் எதையாவது குறித்து எழுதவேண்டின் தங்கள் சந்தா இலக்கத்தைக் காட்டி எழுதவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். விலாசத்தை மாற்ற வேண்டுமானால். தமிழ் மாதம் முதல் தேதிக்கு ஒரு வாரம் முன்னும், பிரதிகள் கிடைக்கவில்லையானால் தமிழ் மாதம் முதல் வாரத்திலேயும் அறிவிக்கப்படவேண்டும்.

## விவேகாநந்த ஞான தீபம்

ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் அருளிச்செய்த வசன நூல்கள், செய்யுள் நூல்கள், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் செய்த உபந்நியாசங்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் செய்த விரிவுரைகள், உபதேச மொழிகள், கடிதங்கள், சம்வாதங்கள் ஆகிய அருமருந்தன்ன வாசகங்களனைத்தும் "விவேகாநந்த ஞான தீபம்" என்னும் பெயரோடு பத்துப் புத்தகங்களாக வெளிவரும்.

சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், இராஜயோகம், இராஜயோக சங்கிரகம், பதஞ்சலி யோக சூத்திரம், யோக சூத்திர விரிவுரை என்றிவையெல்லா மடங்கிய முதற் புத்தகம் அழகான கடிதத்தில் வர்ணந் தீட்டிய திருவுருவப் படத்தோடு செம்மையாக அச்சிடப்பட்டு வெளி வந்திருக்கிறது. மொழிபெயர்ப்பு எளிய இனிய செந்தமிழ் நடையிலே ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தராற் செய்யப்பட்டது. அறுநூறு பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம்; விலை ரூபா இரண்டு மாத்திரமே விதிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2

---

## திருக் கயிலாயகிரி யாத்திரை

விஜயத்தில் தொடர்ச்சியாக வெளியான திருக்கயிலாயகிரி யாத்திரையைப் பற்றிய சிறந்த கட்டுரைகள் அன்பர்களின் விருப்பத்துக்கிணங்க புத்தக ரூபமாக வெளிவந்துள்ளது. அழகான அநேக படங்களுடன் கைப் புத்தக அளவில் உள்ளது. விலை அணா 12

---

## எனது குருநாதர்

தமது குருநாதரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப்பற்றி உலகம் போற்றும் ஸ்ரீ விவேகாநந்த அடிகள் செய்த ஒப்பற்ற பிரசங்க மொன்றின் மொழிபெயர்ப்பான இந்நூலில் பகவானது வாழ்க்கைச் சரிதம் சுருதி யுக்தி அனுபவம் ஆகிய பிரமாணங்கள் மூலமாக வெகு அழகுபட எடுத்துரைக்கப்பட்டுள்ளது. வெகு எளிய நடை. விலை அணா 3

---

## ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரது அற்புத சரிதம் இப்போதே வெளி வந்துள்ளது. இதன் ஆசிரியரான ஸ்ரீ சித்பவாநந்த சுவாமிகள் இச்சரிதத்தில் இதுவரை வெளிவராதிருந்த புது நிகழ்ச்சிகளையும், அன்னையாரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பல இடங்களில் வாசிப்போர் பலனடையக் கூடிய வகையிலும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விலை அணா 8



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே—அப்பர்.

தொகுதி-உக } விஷு௵ ஆடிமீ { பகுதி-எ


## பிரார்த்தனை

---

அருளார்ந்த பரம்பொருளே !

நீரே எமது அன்புகனிந்த அன்னையார் ஆவீர், எம்மைக் காக்கும் எமது உலவாத தந்தையார் ஆவீர் !

நீரே எமது நண்பரும் தோழரும் ஆவீர் !

நீரே எமக்கு அனைத்துமாவீர் !

நீரே எமக்குப் பலமாதலின், உமது கருணையுற்ற கரத்தினால் எம்மை நடத்தியருளும்.

நாங்கள் தோல்வியோ தடுமாற்றமோ அடையாதிருப்போமாக.

எமது நெஞ்சங்கள் உமது ஒளியால்—உமது அன்பின் ஒளியால்—நிறைவுற்றிருக்குமாறு எம்மை வழி நடத்தியருளும்.

உமது அன்பால் உருகும் இயல்புடைய உமது சந்நிதியை விட்டு நாங்கள் விலகாதிருப்போமாக.

எமக்கும் எல்லா உயிர்கட்கும் சாந்தி உண்டாவதாக—சாந்தி, சாந்தி, சாந்தி.

—ஸ்ரீ சுவாமி பரமானந்தர்.

---

# உயர்ந்தோர் கூறும் உறுதிமொழிகள்

---

பகவான் தமது உலக நிர்வாஹ முழுவதிலும், நமது நன்மைக் காகவே முயற்சி செய்கிறார். நமது செழிப்பு நிலையில் அவர் நமது நன்றியைச் சோதிக்கிறார். நமது சாதாரண நிலையில் நமது திருப்தியையும், துரதிருஷ்ட நிலையில் நமது அடங்கியொழுகும் தன்மையையும், இருளார்ந்த நிலையில் நமது நம்பிக்கையையும், மயக்கும் பொருள்கட் கிடைப் படும் நிலையில் நமது மன உறுதியையும், எக்காலத்தும் நமது கீழ்ப்படிவையும், தம்மிடத்து வைக்கும் நம்பிக்கையையும் பகவான் சோதிக்கிறார். பகவான் உலகத்தை ஆட்சி செய்கிறார்; நாம் நமது கடமையை ஞானத்தோடு நிறைவேற்றிவிட்டு, செயலின் பயனை அவர்க்கே விட்டுவிட வேண்டும்.

—ஜாண் ஜே.

---

# தேவியின் திருவாக்கு

**1912, ஜூன், 15-ம் தேதி:** சிஷ்யைகள் பலர் சூழ அன்னையார் வீற்றிருந்தார். அச் சிஷ்யைகளுள் சிலருடன் எனக்குப் பரிசயம் உண்டு. இக் கூட்டத்தில் அன்னையார் அதிக மனோல்லாசத்துடன் காணப்பட்டார். புன்சிரிப்புடன் என்னை வரவேற்றார். சகோதரி நிவேதிதையின் வாழ்க்கைச் சரித்திரம், சுவாமி விவேகாநந்தரின் இந்திய சொற்பொழிவுகள் ஆகிய இரு நூல்களையும் புத்தகச் சாலையிலிருந்து கொண்டு வருமாறு நான் கௌரீமாவை வேண்டினேன். சகோதரி நிவேதிதையின் ஜீவிய நூலினின்றும் ஒரு பகுதியைப் படிக்க வேண்டுமென்பது என் அவா. அன்னையும் அதை அங்கீகரித்து "நிவேதிதையின் சரிதத்தினின்றும் (ஒரு பகுதியைப்) படி. அன்றொரு நாள் எனக்கும் அப் புத்தகத்தின் பிரதி ஒன்று கிடைத்தது, ஆனல் இன்னமும் நான் அதைத் திறந்து பார்க்கவில்லை" என்று கூறினர். பலர் முன் புத்தகத்தைப் படிப்பதற்கு எனக்குக் கொஞ்சம் கூச்சமாகவே இருந்தது, ஆனலும் ஸரளபாலா என்பவர் எழுதியிருந்த வெகு அழகான (சகோதரி நிவேதிதையைப்பற்றிய) ஜீவிய நூலினின்றும் ஒரு பகுதியை அன்னைக்குப் படித்துக்காட்டவேண்டுமென்ற ஆவல் எனக்கு மிகுந்திருந்தது. ஆகவே அன்னையின் ஆக்ஞைக்கு உட்பட்டேன். கூரிய கவனத்துடன் அன்னையும் ஏனைய சிஷ்யைகளும் செவி சாய்த்தனர். நிவேதிதையின் மகத்தான பக்தியைப்பற்றிக் கேள்வியுற்று அவர்கள் கண்ணீர் நிரம்பியவராயினர். அன்னையின் கன்னங்களில் கண்ணீர் வடிந்தது. நிவேதிதையைப்பற்றி அன்னையார் கூறினர்: "நிவேதிதையின் பக்திதான் எவ்வளவு இருதய பூர்வமான பக்தி! எனக்கான சேவை எதையும் அவள் தன்னல் ஆகாததொன்றாக ஒருபொழுதும் எண்ணவில்லை. அவள் இரவு நேரத்தில் அடிக்கடி என்னைக் காணவருவாள். என் கண்களில் வெளிச்சம் படுவதைக்கண்டு அவள் விளக்கிற்குக் காகிதத்தாலான மூடி ஒன்று போட்டாள். அவள் என் முன் அடிபணிந்து, தன் கைக்குட்டையால் என் பாததூளியை மிகுந்த பரிவுடன் கொள்ளுவாள். என்பாதங்களைத் தொடவும் அவள் தயங்கினள் என்பதை நான் உணர்ந்தேன்" நிவேதிதையின் ஞாபகத்தால் அன்னையின் மன உணர்ச்சிகள் மடை திறந்த வெள்ளமெனப் போந்தன. அவர் திடீரென்று அந்தர் முகப்பான்மை யுடையவரானர்.

அங்கு இருந்த மற்றவர் சகோதரி நிவேதிதையைப்பற்றிய தம் தம் ஞாபகங்களைத் தெரிவிக்கலானர்கள். துர்க்கா திதீ "அவ்வளவு சிறிய வயதில் நிவேதிதை காலமடைந்தது இந்தியாவின் துரதிருஷ்டமாகும்" என்றார். வேறொருமாது கூறினர், "நிவேதிதை இந்தியாவைத் தனது தாய் நாடெனவே கருதினர். அவளே அநேகம் தடவைகள் அவ்வாறு கூறியுள்ளார். சரஸ்வதி பூஜையன்று ஹோமாக்னியிலிருந்து எடுத்த திருநீற்றை நெற்றியில் அணிந்தவளாய், காலில் பாதரக்ஷையின்றியே அவள் நடந்து செல்லுவாள்." நிவேதிதையின் வாழ்க்கை நூலிலிருந்து பகுதி யொன்றை நான் அவர்களுக்குப் படித்து முடித்தேன். நிவேதிதையின் மீது தமக்கிருந்த உணர்ச்சியை இடையிடையே அன்னை வெளியிட்டார், கடைசியில் அவர், "சிரத்தையுடன் கூடிய பக்

தர் ஒருவரிடம், அந்தராத்மாவிற்கு உணர்ச்சி மிகுதி ஏற்படுகிறது" என்று கூறினர். சகோதரி நிவேதிதை என்பவர் சுவாமி விவேகாநந்தருடைய மேனாட்டுச் சிஷ்யைகளுள் முதன்மையானவர்: மிஸ் மார்கரட்நோபிள் என்ற பெயர் பெற்ற இவ்வுத்தமி சுவாமிஜியைத் தமது குரு நாதராக ஏற்றதோடு பாரதத்தாயையும் தமது அன்னையாக ஏற்றார். நிவேதிதை என்ற பெயர் சுவாமிஜியின் ஞானபுத்திரி யான பிறகு அவருக்குக் கிடைத்தது. பெண் கல்வியில் இவர் வெகு ஊக்கம் கொண்டிருந்தார். இந்திய தேசிய வாழ்வை விளக்குகின்ற சில நூல்களையும் வரைந்தார். நிவேதிதைக்கு அன்னை யிடம் அளவற்ற பிரேமையும் பக்தியும் உண்டு.

பிற்பகல் ஆராதனைக்கு நேரமா யிற்று. அன்னையார் உடை மாற்றிக் கொண்டு ராமகிருஷ்ணரின் உருவத்தின் முன்னர் ஜமுக்காளத்தின் மீது அமர்ந் தார். குருதேவரின் திருவுருவத்தை அலங்கரிக்கச் சில மலர் மாலைகளை அன்னை யார் தமது திருக்கரங்களாலேயே தொடுத் திருந்தார்; மாலைகளுக்கருகில் நிவேதனத் திற்கான சில பக்ஷணங்களை இராஷ் பிஹாரி என்ற இளம் பிரம்மசாரி வைத் திருந்தார். எறும்புகள் பக்ஷணங்களைச் சூழ்ந்திருந்தன. மாலைகளிலும் சில எறும்புகள் காணப்பட்டன. அன்னையார் சிரித்துக்கொண்டே "இராஷ்பிஹாரி செய்திருப்பதைப்பார்! இந்த எறும்புகள் இராமகிருஷ்ணரைக் கடிக்குமே" என்றார். எறும்புகளை நீக்கிவிட்டு அன்னையார் மாலை களைக் கொண்டு வெகு பரிவுடன் திருவுரு வத்தை அலங்கரித்தார். பிறர் முன்னிலை யில் இவ்வாறு தமது நாதரின் உருவத்தை மலர்கள்கொண்டு அன்னையார் அலங்கரிப் பதைக்கண்ட அவரது சகோதரரின் மனைவி சிரித்தாள். (இந்தஸ்திரீ தான் ராது என்ற பெண்ணின் தாயார். அன்னையாரின் கடைசிச் சகோதரரான அபயசரணர் என்பவரது மனைவி. இவளுடைய புத்தி தடுமாறி யிருந்தது. இவளும் இவள் பெண்ணான ராதுவும் அன்னைக்குப் பேர ளவில் தொந்திரவு கொடுத்து வந்தனர். ஆனால் அன்னை அவர்களிடம் பெருங் கருணை காட்டி வந்தார்.) பிறகு அனைவ ருக்கும் பிரசாதம் விநியோகிக்கப் பட் டது.

பெண் கல்வியும் விவாகமும்: ஒரு சிஷ்யை கூறினாள்: "அன்னையே! எனக்கு ஐந்து புத்திரிகள் உண்டு. அவர்களுக் கேற்ற கணவர்களைத் தேடுவது என்னால் கூடவில்லை. இதைப் பற்றி எனக்குப் பெருங் கவலையாய் இருக்கிறது."

அன்னை: அவர்களது விவாகத்தைப் பற்றி நீ என் கவலை கொள்ளுகிறாய்? அவர்களுக்கேற்ற கணவர்களைப் பெறு வது முடியவில்லையானால் அவர்களை சகோ தரி நிவேதிதையின் பெண் பாடசாலைக்கு அனுப்பிவிடு. அங்கு அவர்கள் பயிற்சி பெறுவர். பாடசாலையில் அவர்கள் சந் தோஷமாகக் காலம் கழிப்பர்.

வேறொரு சிஷ்யை: உமக்கு அன்னை யிடம் நம்பிக்கை யிருக்குமானால் அவர் கூறுவதைப்போலவே செய்யுங்கள். அவ் வாறு செய்வது உமது நலனுக்கேயாகும். அன்னை சொற் கேட்டால் உமது கவலை நீங்கும்.

ஆனால் ஐந்து பெண்களின் தாயாரான அந்த ஸ்திரீ மேலே கூறிய நற்போதனை யின் நலத்தை உணர்ந்துகொள்ளவில்லை.

இன்னுமொரு சிஷ்யை: இக் காலத் தில் தகுந்த மணமகர்களைக் கண்டுபிடிப் பது பெருங் கஷ்டமாயுள்ளது. பல வாலிபர் விவாகம் செய்துகொள்ள மறுக் கின்றனர்.

அன்னை : ஆம். பையன்களுக்கு விவேகம் தோன்றியுள்ளது. உலக இன்பம் நிலைத்ததல்ல என்பதை அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக அறிந்து வருகின்றனர். உலகப் பற்றுக் குறையும் அளவிற்கு மனோசாந்தியை அதிகமாகப் பெற்று இன்புறலாம்.

அன்றிரவு வெகு நேரம் கழித்தே நான் அன்னையாரிடம் விடைபெற்றுச் சென்றேன்.

---

# ஸ்ரீசங்கரரும் ஸ்ரீராமானுஜரும்

(பேராசிரியர் P. N. ஸ்ரீநிவாஸாசாரியார்.)

"பிரம்மம் ஸத்தியம் ஜகத் மித்யா" என்னும் நான்கு வார்த்தைகட்குள் சங்கரர் தமதுமதக் கொள்கைகளையெல்லாம் சுருங்கக் கூறுகிறார்; இவ் வாக்கியம் பல முறை எடுத்தாளப்படுவ தொன்றேயாம். பிரம்மம் மெய்ப்பொருளாகும், உலகம் பொய்ப் பொருளாகும். மித்தையை அல்லது மாயையை வித்தை அல்லது மெய்யுணர்வு ஒன்றாலேயே அழிக்கலாகும். இம் மெய்யறிவாவது. 'அஹம் பிரம்மாஸ்மி' (நான் பிரம்மமாகிறேன்) என்னும் வேதாந்த மஹா வாக்கியத்தில் வெளியிடப்பட்டுள்ள உண்மையை, நான் என்பதற்கு அடியான பரம் பொருளோடு முற்றிலும் ஐக்கியம் பெற்றது பிரம்மன் என்பதை அனுபூதிக் காட்சியால் நேராக உணர்தலேயாகும். ஜீவன் முக்தன் அஹம் - இதம் (நான் - இது) என்னும் சம்பந்தத்திற்கு அப்பால் நிற்கும்போது, அவன் பிரம்மத்தோடொன்று யுள்ளான்; முக்தி யென்பது அப்போது மயக்கத் தெளிவு மாத்திரமேயாகும், அவித்தையைத் தாண்டிச் செல்லுவதேயாகும். சமயம் தத்துவக் கோட்பாடு ஆகிய இரண்டிற்கும் அறுதியான பிரமாணமாகச் சங்கரர் வேதத்தைக் கொள்கின்றனர்; ஏனெனில், பண்டைய ரிஷிகளால் ஞானக்காட்சியால் உணரப்பட்ட பிரம்ம ஞானம் என்னும் அழிவற்ற அபௌருஷேயமான உண்மையை அதுவே உள்ளடக்கி வைத்துக்கொண்டிருக்கிறது. அதே ஞானக் காட்சியைத் தகுதிவாய்ந்த ஒவ்வொரு முமுக்ஷுவும் பெறலாகும். தன்னை யுணரும் தன்மையே அறிவிற்கு உரை கல்லாகும். "ஆன்மாவைப் பற்றிய உண்மை எவனுக்காயினும் யாதேனும் ஒன்றைப் பொறுத்துள்ளது என்பதில்லை; ஏனெனில் அது தானாக விளங்குவதொன்றே. அதன் உண்மையை மறுத்தல் எவனுக்கும் இயலாது; ஏனெனில், அதை மறுப்பவனது ஸ்வரூபமே அதுவாகும்." சங்கரரது அத்வைத தரிசனம் இரண்டற்ற அனுபவத்தினின்றும் அனுமானத்தால் எய்தப்படுவது. பிறமதத்தார் தமது கொள்கைகட்கு வியாவகாரிக அனுபவத்தையே ஆதாரமாகக் கொள்கின்றனர்; ஆனால் சங்கரரோ துரிய நிலையில் உணரப்படும் பாரமார்த்திக அனுபூதியினின்றே வியாவகாரிக அனுபவத்தை நிலைநாட்டுகின்றார். சங்கரர் "வேதாந்த சூத்திரங்கள்" என்னும் தமது நூலின் முன்னுரையில், பிரம்ம விசாரணையில் இறங்குபவனுக்கு நான்கு அவசியமான இலக்ஷணங்கள் அமையவேண்டும் என்று கூறுகின்றார். அவையாவன:—நித்ய அநித்ய வஸ்து விவேகம், இகவுலக பரவுலக

போகங்களை வெறுத்துத் தள்ளிவிடல், மன அடக்கம், இந்திரிய ஒடுக்கம், சாந்தம், இன்ப துன்பங்களிலும் வெம்மை குளிர்களிலும் பிற துவந்தங்களிலும் உபேக்ஷை, அத்வைத உண்மையிலும் அதைப் போதிக்கும் குருவினிடத்தும் நம்பிக்கை, மன அமைதி, முக்திப்பேற்றில் பெரும் விழைவு என்பன. முதல் மூன்றும், ஞானம் இச்சைகிரியை எனும் மூன்றையும் பயிற்றிப் பண்படுத்தலைக் குறிக்கும்; அப்பயிற்சியின் நிறைவே அத்வைத அனுபூதியினிடத்துள்ள தாகமாக அரும்பும்.

பிரம்மன் என்னும் பொருள் தானாக இருப்பது, ஸத்தானது; தன்னாலே தான் அறியப்படும் தன்மை வாய்ந்தது. அதற்கு இலக்கணத்தை வரையறுக்க ஒண்ணாது, ஆயினும் அனுபூதியால் மட்டும் அறியத்தக்கதாகும். அதைப் புத்தியால் அறிய இயலாது; ஏனெனில் அறிதல் நிகழும்போதெல்லாம் அது அறிபவனாதலன்றி அறியப்படும் பொருளாவதில்லை. நேதி முறையால் (இது வன்று இது வன்று என்னும் முறையால்) எதிர் மறைமுகமாகமட்டும் அதனை அறியலாகும். "இரண்டாவதொன்றின்றி ஒரு பொருளே இருந்தது" — "ஒன்று" "இரண்டாவதொன்றின்றி" "இருந்தது" என்னும் மொழிகள் அத்வைதத்தை துவைத அனுபவத்தினின்றும் வேறுபடுத்துவதன் மூலமாக அத்வைதத்தை நிலைநாட்டுகின்றன. அது நித்யமான 'இதம்' (இது) எனும் உணர்ச்சியற்ற உணர்வாகும்; நாமம் உருவம் எனும் வேறுபாடற்ற பரஞ்சோதி மயமான பெருக்கடலாகும். அறியப்படுவ தெல்லாம் பொய்ம்மையேயாம்; ஆதலின் பிரம்மன் அறியப்படும் பொருளாகாது அறியும் பொருளேயாகும். "இந்த ஆதியஞ்சோதி, சோதிகட்கெல்லாம் தலையாய சோதி, தன்மயக்கத்தால் விளையும் உலகப் பொய்ம்மை யெனும் இருளினுக்கு அப்பாலான சோதி, எவ்வகை வேறுபாடு மற்று ஒரே தன்மையைதான ஸத்தாகிய ஆதியான ஏகப்பொருள், சுத்த ஸச்சிதானந்தமே (இயல் உண்மை-அறிவு-இன்ப வடிவமான மெய்ப்பொருளே). இது பொருளற்ற கருத்தன்று, உடன்பாட்டு முகமாகத் தன்னை வற்புறுத்தும் தகைமையது." பிரம்மனிடத்து உண்மையையும் அறிவும் இன்பமும் உள என்பது இதன் பொருளன்று; பிரம்மனே உண்மையையும் அறிவும் இன்பமும் ஆம் என்பது பொருளாகும். இக்குணங்கள் நமது அஞ்ஞானக் காட்சிக்குத் தோன்றுவனவேயாம். ஸத்து என்பது தேசகாலவரையறைகளைத் தாண்டி நிற்பதாகும், அழிவற்றதாகும். சித்து என்பது பிறபொருள்களால் தான் விளக்கப்படாது, பிற பொருள்களைத்தானே விளங்கச் செய்வதாம். இச்சித்தின் ஒளியே மேலுள்ள சூரிய நக்ஷத்திரங்களையும், கீழுள்ள மனிதனது ஆன்மாவையும் ஒளியுடையதாக்குகிறது. ஆனந்தம் என்பது, உரைக்கவொண்ணாத நிலையான வருணனைக் கெட்டாத பேரின்பமாகும். தொடும் உணர்ச்சியால் ஏற்படும் சுகம், அவ்வுணர்ச்சி மறையும்போது, தானும் மறையும்; ஆனால் பிரம்மனைப் பற்றி வரும் பேரின்பமோ அனைத்திற்கும் அதீதமானது. பிரம்மன் என்பது 'பூமா' எனப்படுவது: தருக்க அறிவாலே அளவிட்டறிய வொண்ணாததும், ஸத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் நிர்க்குணமாகவும் உள்ள பேரின்பமே அது.

மாயை யென்பது ஓர் ஆச்சரியமான கொள்கை; அது உலகமளாவிய ஒரு பொய்த்தோற்றம்; அது பிரம்மனை ஒரு மேகம்போல மறைத்து, ஒன்றினின்றும் பலவற்றைத் தோற்றுவிக்கின்றது. துவை

தமாகிய இவ்வுலகம் இப்பொய்ம்மையி னின்றெழும் ஒரு கற்பனையேயாகும்; அது பகற்கனவிற் கட்டும் மனக்கோட்டை போன்றது, ஒரு பூமாலையிற் பொய்யாகத் தோன்றும் அரவுபோன்றது. ஆதலால் ஆதாரமற்ற இவ்வுலகிற்கு ஆதாரமாவது மாயையே. "ஒரு சித்திரத்தில் பற் பல உருவங்கள் வரையப்பட்டிருத்தல் போல், இப்புறவுலகமும் மாயையினுல் பிரம்மனைப்பற்றி நிற்பதாகக் கருதப்படு கிறது." விரைவாகச் சுற்றும் கொள்ளிக் கட்டை தீவட்டமாகத் தோன்றுவது போல், சைதன்யம் ஒன்று. 'நான்' 'இது' எனும் இரண்டாகத் தோற்று கிறது. அவித்தை உள்ளதுதான்; ஏனெ னில், அது அனைவரது அனுபவத்திலும் அறியப்படுவதொன்றன்றே? அது உள்ள தன்றுதான்; ஏனெனில், அது மெய்யறி வால் அழியக்கூடியதொன்றன்றே? பிரம் மத்திற்கு அன்னியமாக அதைக் கருத இயலாதாகலான. அது மற்றொன்றைச் சார்ந்து நிற்கும் பொருளேயாம்; அது எல்லாம் வல்லதாகின்றது; எவ்வாறெனில் அதன் வல்லமையாலன்றோ ஜீவர்கள் ஸம் ஸார சக்கரத்தில் மேலும் கீழுமாக மாறி மாறிச் சுழன்று வருகிறார்கள். "அது தத்துவமு மன்று, நிகழ்ச்சியு மன்று, இரண்டுங் கலந்த ஒன்று மன்று; அது வேறு படுத்தப் படுவதுமன்று, வேறு படுத்தப்படாததுமன்று, இரண்டுமற்றது மன்று." அது அநிர்வசனீயம் (உரைக்கடங் காதது); அதற்கு ஆதியில்லை யெனினும், முத்தி நிலையில் அதற்கு அந்தமுண்டாகி மறைந்துவிடுகின்றது." உலகம் ஆன்மா விற்கு அன்னியமாக இருப்பதில்லை; ஆன்மா பிரம்மனுக்கு அன்னியமாக இருப்பதில்லை. ஒன்று மன்றொன்றின்றி இருக்க முடியாதபோது, இரண்டும் ஒன் றேயாம். இக்காரணத்தால், சமாதி யென் னும் ஆனந்த வெள்ளத்தில் தோற்ற மாகிய தூல உலகமும் ஓயாதெழும் 'நான்' எனும் அகந்தையும் தமது இருப்பை யிழந்து, அதனோடு ஒன்றாகி விடுகின்றன.

ஈசுவர தத்துவமும் ஜீவ தத்துவமும் பிரம்மத்தினின்றெழும் பொய்த் தோற் றங்களே, உண்மையற்ற போலிகளே. மாயை என்பது ஆவரணத்தையும் விக்ஷே பத்தையும் அடக்கியது. முன்னது உண் மையை மறைக்கின்றது. பின்னது உல கத் தோற்றத்தைப் படைக்கின்றது. மாயையில் பிரதிபிம்பிக்கப்பட்ட பிரம்ம னிடத்தினின்றும் காரியப் பிரம்மனுகிய மாயையின் தலைவன் உண்டாகின்றான். அவித்தையில் (அதாவது, தனித்தனியா கக் கூறுக்கப்பட்ட மாயையில்) பிரதிபிம் பித்த பிரம்மனிடத்தினின்றும் ஜீவன் உண்டாகின்றது. இவ்வாறாயினும், ஈசன் மாயையால் விகாரமடைப்வனல்லன்; ஒரு காடு பல மரங்களின் தொகுதியாவது போல், ஆன்மாக்கள் அனைத்தும் சேர்ந்த முழுமையே அவன். ஈசுவரனும் ஜீவனும் முறையே மாயையோடும் அவித்தையோ டும் இணைந்து, உலகத்தைப் படைக்கின் றனர்; இப்படைப்புத் தொழிலால், காரண நிலை சூக்கும நிலையாகி, சூக்கும நிலை பின் னர்த் தூல நிலையாகிறது. காரண நிலை யில், உலகமளாவிய மாயை சுழுத்தி நிலை யில் இருப்பதுபோல, பாகுபடுத்தவொண் ணுத நிலையில் இருத்தல் அவசியம் என் னும் அளவாகமட்டும் பிரம்மத்தோடு உட னுள்ளது; அந்நிலையில் உலகமளாவிய ஆன்ம தத்துவம் ஈசுவரனெனவும், ஒவ் வொரு சீவனிடத்துமுள்ள ஆன்ம தத்து வம் பிராக்ஞன் எனவும் உரைக்கப்படும். அடுத்தபடியில் உலகமளாவும் ஆன்மதத் துவம் இரணியகர்ப்ப வடிவத்தில், சூக் கும உடல்களில் தங்கும் கனவுநிலையி லுள்ள ஆன்மாக்களனைத்தையும், முத் துக்கள் கயிற்றால் ஒன்றாகக் கோக்கப்பட்

டுள்ள முத்து வடம்போல ஒன்றாகப் பிணைக்கின்றது. அதற் கடுத்தபடியில், அப்பரம்பொருள் விழிப்பு நிலையிலுள்ள சேதனப்பொருள்களனைத்தின் முழுமை யாகிய விராட் ஆகிறது. இம்மாதிரிப் படிப்படியாக உண்டாகும் முறை ஒரு தோற்றமட்டுமேயாம். ஈசுவரனே அவ் வகைத் தோற்றங்கட்குள் முதலாவதான கற்பனைத் தோற்றம். ஆயினும் உலகம் உண்மையாகுமளவும் அவன் உண்மை யாவான்; உலகமளாவிய மாயையின் தனித் தனியாக வேறுபாடுள்ள விளைவாகிய ஜீவன் சைதன்யமெனும் அலையின் முக மாகும்; அதுவும் உண்மையற்றதே. மக வில்லாதபோது ஒரு மனிதன் தந்தை யாகான்; பேரனில்லாதபோது அவன் பாட்டனாகான். மாயை அழியும்போது ஈசுவரன் ஜீவன் என்னும் வேறுபாடின்றி யும் நாமரூபமயமான உலகமெனும் வேறு பாடின்றியும், ஏகமாய பரம்பொருளே உள்ளதாகின்றது.

படைக்கப்பட்ட உலகம் இருவகைப் படும்; மனிதனது படைப்பாகிய ஜீவ சிருஷ்டியும், ஈசனது படைப்பாகிய ஈசுவர சிருஷ்டியும் அவை. தார்க்கிகர்கள் அணு வாதத்தை முதன் முதலாக நிலை நாட்டி னார்கள்; ஆனால் சாங்கியர்களோ பரிணாம வாதம் என்னும் வேறொருவாதத்தைப் பின்பற்றினார்கள்; இப்பரிணாமவாதப்படி, பொருள்கள் விகாசமடைந்து உயர்ந்த தகுதியைப் பெறுகின்றன; இவ்விகாச (மலர்ச்சி) முறையில், காரணமே காரிய மாக வேறுபாடடைகின்றது; பிரகிருதியே மூலப்பொருளே பல்வகைப்பட்ட உலக மாக மாறுகிறது. சங்கராசாரியார், வியாவ காரிக நிலையிலிருந்து நோக்கும் காலத்துப் பரிணாமவாதத்தை ஒப்புக்கொள்கிறார்; ஆனால் விகாசமுறையைப்பற்றி அப்பெரி யார் கொண்ட கருத்து அவரது பாரமார்த் திகத்தில் சித்தாந்த ரீதியாகப் பார்க்கு மிடத்து, விவர்த்தவாதத்தை ஆதாரமாகக் கொண்டதேயாகும். விவர்த்தவாதத்தின் படி, சிருஷ்டி யென்பது பரம்பொருளின் மீது நாமரூபங்களை ஏற்றிடுவதன் பயனாக, மாயையினால் விளையும் பொய்த்தோற்றமே யாகும். வியாவகாரிக நிலையிலிருந்து இனி நோக்குவோம். இதன்படி, ஆதியில் இரண்டாவது பொருளென ஒன்று மின்றி, ஸத் எனும் பொருளே இருந்தது. "நான் பெருகிப் பல பொருள்களாக ஆவேன்" என்று அது சங்கற்பித்தது: பரம்பொருள் ஒன்றன்பின் ஒன்றாக வரி சையாக உண்டாக்கும், தகையுயர்ந்து வரும் கிளர்ச்சிகளில், தானே பாய்ந்தோடு கின்றது. ஈசுவரன் வரையறைக்கப்பாற் பட்ட பொருளுக்கும் வரையறைக்கு உட் பட்ட பொருளுக்கும் நடுவிலிருந்து, இரண்டையும் ஒன்றாக இணைக்கின்றான். அத் தத்வம் வரையறைக்கு உட்படாத தும் உட்பட்டதுமாகின்றது. இம்மாதிரி யான கருத்து வியாவகாரிக உணர்ச்சியை யுடையார்க்காக விடப்பட்ட ஒரு போக்கே யாகும். இக்காரணத்தால் விகாச முறை பொய்ம்மையால் விளைவதென்றும், மாயை யின் மாயமென்றும் விவர்த்தவாதம் விவகரிக்கின்றது. ஒரு பொருளின் இருப்பு தோற்றமாயிருத்தல் வேண்டும் அல்லது அனுபவத்தால் அறியத்தக்கதா தல் வேண்டும், அல்லது உண்மையாயிருத் தல் வேண்டும் (பிராதிபாஸிகமாய் அல்லது வியாவகாரிகமாய் அல்லது பாரமார்த்திக மாய் இருத்தல்வேண்டும்). உலகம், நாம் காணும் நிகழ்ச்சியளவில் உண்மையென் பர் ஒரு சாரார்; அதன் மெய்ம்மையற்ற தன்மையை வற்புறுத்துவார் சிலர்; அது ஒரு நிழலனையது என்பர் வேறு சிலர். ஆனால் சங்கரரோ, ஒரு மந்திரவாதி தோற்றுவிக்குங் காட்சியைப் போல அது பொய்த்தோற்றம் என்பர். சாங்கியர்களது பிரகிருதியைப்போல உலகம் உண்மை

யானதுமல்ல; புத்தமதத்தினைச் சார்ந்த சூனியவாதிகள் சொல்வதுபோல் அது பொய்யானது மல்ல; அதற்கு ஒரு நிலையில் உண்மை உள்ளது என்பதும், ஆனால் சமாதி நிலையில் மெய்ப்பொருட் போதம் எழும்போது அது மறைந்து விடுகிறது என்பதும், சங்கராது மதம். மாயையென்பது 'ஸத்தையின் ஒரு நிலையற்ற காட்சி மட்டுமே யாகும். அது அதன் ஒரு பகுதியளவேயாகும்; ஆதலின், உண்மையாகவே இது அனைத்தும் பிரம்மமே' என்ற வாக்கியம் காரணமும் அதுவும் ஒன்றே யென்பதையும், காரியம் உண்மையற்றது என்பதையும் குறிப்பிடுகின்றதாகும்.

சங்கராது உலகம் தனக்குத் தானே முரண்பட்டதொன்று. எவ்வாறெனில், பிரம்மனும் உலகமும் ஒரே சமயத்தில் உண்மையாக ஒன்றுது. பிரம்மன் என்பது, உள்ள பொருள்கள் அனைத்தின் தொகுதியன்று. 'நானே யெல்லாம்' என்னும் உணர்ச்சிக்கு அதீதமான சுத்த சைதன்யமே அதுவாகும். சுவாமி விவேகானந்தர் கூறுகிறபடி, "ஆத்மன் அனைத்திற்கும் அப்பாற்பட்டது. அது மேஜையுமாகும், சுவருமாகும், நாமரூபம் ஒழிந்த ஒவ்வொன்றும் ஆகும்." சங்கராது அபிப்பிராயப்படி, புற உலகம் வியாவகாரிக நிலையிலாவது புறம்பே தோன்றும் ஓர் உண்மைப் பொருளாகின்றது; பிரம்மன் அதன் அடிப்படை உண்மையாக எப்போதும் இருத்தலின், அதனைச் சூன்யமென்று கூறுதலும் பொருந்தாது.

(தொடரும்)

---

# சந்தேகம் தெளிதல்

வினு:—கிறிஸ்தவர் புனர் ஜென்மம் இல்லையென்றும், தம் மதமே உண்மையென்றும், மற்றவையெல்லாம் பிசாசின் வேலையென்றும், பலமாக வாதிக்கின்றனர். இது உண்மையா?

உண்மையானது ஒன்றே, அது கிறிஸ்துமதம் ஒன்றேதான், மற்றவையாவும் பொய் என்கின்றனர். பல நதிகள் சமுத்திரத்தில் சேர்வதுபோலவே, எல்லா மதங்களும் ஆண்டவனிடமே சேர்ப்பிப்பன என்பதும் பொய் என்கின்றனர். இது உண்மையா? T. K. கோ.

விடை:—புனர் ஜென்மம் இல்லையென்று கூறுதல், சுருதியுக்தி அனுபவங்கட்கு முரண்பாடாக இருத்தலின், அக்கொள்கை ஒப்புக்கொள்ளத் தக்கதன்று. உலகத்திலுள்ள முக்கிய பெரிய பழைய மதங்கள் பலவற்றுள் இக்கொள்கை ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. மேற்கோள்களாகப் பெரியோர்களால் கருதப்பட்டுள்ள ஞான நூல்கள் பலவற்றுள் இக்கொள்கை கூறப்பட்டுள்ளது. இந்து மதம், புத்த மதம், ஜெயின மதம், சீக்கிய மதம் என்னும் மதங்களில் புனர் ஜன்மத்தைப்பற்றிப் பற்பல இடங்களில் பேசப்படுதலின், மேற்கோள்களை எடுத்துக் காட்டுதல் அவசியமற்றதாகும். பைபிளும் கொரானும் புனர்ஜென்மத்தைப் பற்றித் தெளிவாக வெளிப்படையாகக் கூறவில்லையென்பது உண்மையே; ஆனால் அவ்விரு வேதங்களும் இக்கொள்கையை மறுத்துரைக்கவும் இல்லை. மேலும், எலிஜா என்னும் தீர்க்கதரிசியே ஞானஸ்நானம் செய்பவராகிய ஜாண் என்பவராக மீண்டும் பிறந்தார் என்று இயேசு கிறிஸ்துநாதர் கூறினர். "பாருங்கள்,

பகவான் அவதரிக்கும் மிகப் பெரிய பயங்கரமான நாளைக்குமுன்பே, தீர்க்கதரிசியாகிய எலிஜாவை நான் உங்கட்கு அனுப்புவேன்." (பைபிள்) "ஞான ஸ்நானம் செய்யும் ஜானைக் குறித்து, அங்குக் கூடியிருந்த மக்களைப் பார்த்தாக் கூறத் தொடங்கினார். எல்லாத் தீர்க்க தரிசிகளும் நியதியும், ஜான் வரை முன்னுணர்ந்து கூறி வந்ததை நீங்கள் ஏற்றுக்கொள்வீராகில், வரப்போவதாக இருந்தவர் இலியாஸ் என்னும்எலிஜா என்பவரேயாவர்." (பைபிள். மாத்தியூ).

"ஹெராட் என்னும் அரசன் சிறைச் சாலையில் ஜானின் தலையைக் கொய்தான்......."

"அவரது சீடர்கள் அவரைக் கேட்டனர்...இயேசுவும்...இலியாஸ் என்பவர் முன்னமே வந்துவிட்டதாகவும், ஆனால் மக்கள் அவரை அறியாதுபோயினர் என்பதாகவும், தமக்குத் தோன்றியவாறே அவர்கள் அவர்க்குச் செயல்கள் இழைத்தனர் என்பதாகவும் மறுமொழி கூறினர்... அப்போது, அவர் ஞான ஸ்நானஞ் செய்பவராகிய ஜான் என்பவரைப்பற்றிப் பேசியதாகச் சீடர்கள் உணர்ந்தனர்." (பை).

மகம்மது நபியும் பின்வருமாறு கூறியுள்ளார் :—"மனிதனே, உனது நாதராயும் உனது ஆன்மாவாயும் உள்ள பகவானிடமே, பெரும் பாடும் பெருவருத்தமும் பட்டும், படிப்படியாக மேலுயர்ந்தும், பூமி பூமியாக முன்னேறியும், மீண்டும் வந்தடைய வேண்டும்." (கொரான்.)

"பஹூனாம் ஜன்மனாம் அந்தே ஞானவான் மாம்பிரபத்யதே" (பலப்பல ஜன்மங்கட்குப் பின்னர் ஞானவான் என்னை வந்தடைகின்றனன்) என்றார் கீதை யருளிய பிரான். கொரானில் உள்ள சில பகுதிகளை உள்ளவாறு உணர்ந்தோமாயின், உலகங்கள் மீண்டும் மீண்டும் படைக்கவும் அழிக்கவும் படுவதுபோல், மனிதனும் திரும்பத் திரும்பப் பிறக்கவும் மரிக்கவும் செய்கிறான் என்பதும் பெறப்படுகின்றது. "பூமியிலிருந்து உனக்குப் பிறவியளித்துளேன்; அதற்கே உன்னை மீண்டும் அனுப்புவேன், அதனிடத்திலிருந்தே மீண்டும் உன்னைத் தோற்றுவிப்பேன்; இவ்வாறு முடிவுவரை மறுபடியும் மறுபடியும் செய்து வருவேன்" (கொரான்). "நீ இறந்தபின் உனக்கு மீண்டும் பிறப்பைக் கொடுத்தேன்; எதற்காகவெனின், என்னைப்பற்றி நீ நன்றியோடு நினைத்தற்காகவே." (கொரான்). "நீ இறந்தபின் உன்னைப் பிறக்கச் செய்தவரும், முடிவில் நீ அவரை அடையும் வரை மறுபடியும் உன்னை இறக்கவும் பிறக்கவும் செய்பவருமான உனது கடவுளை நீ இல்லையென்று எவ்வாறு மறுக்கமுடியும்?" (கொரான்). இன்னும், பிறவிக் குருடனாகிய ஒருவனைப் பற்றி இயேசுவினிடம் அவருடைய சீடர்கள் கேள்வி கேட்கும்போது, "இவன் குருடனாயிருத்தல் தனது பாவத்தாலோ இவனது பெற்றோர்களுடைய பாவத்தாலோ?..." என்று வினவினர்; அப்போது இயேசுவும், "அது அவனுடைய பாவத்தாலுமன்று, அவனுடைய பெற்றோர்களது பாவத்தாலுமன்று..." என்று கூறினார். பிறவிக் குருடனுக்கு 'அவனது பாவம்' என்பது முற் பிறவியிற் செய்த பாவமேயாகும் என்பது வெளிப்படையன்றோ?

ஆன்றோரது வாக்கியங்கள் அவ்வாறு கிடக்கட்டும்; யுக்தியால் ஆராயும்போதும், புனர்ஜென்மம் என்ற கொள்கை உண்மையென்பது புலப்படும். ஒரு மனிதனுக்கு ஒரு பிறவியே கொடுக்கப்படும் என்பதும், இயல்பாகவே. பாபியாயுள்ளவன் அந்த ஒரு பிறவியிலேயே இறைவனை நம்பிச்

சரண்புகுந்து உய்வடைய வேண்டும் என்பதும், இல்லையேல் அவன் நித்திய நரகம் எய்தவேண்டும் என்பதும், இறைவனது கருணைக்கு இயைந்த கருத்துக்களாகா. மீண்டும் மீண்டும் பிறவி இல்லாதபோது, ஞான மலர்ச்சிக்கு வழி இல்லை. மேற்றிசை உயிர்நூலாரும் தமது ஆராய்ச்சியால் ஒருயிர் பற்பல உருவங்களை முறைப்படி ஏறும் வகையில் எடுத்து, விகாச முறையில் முன்னேறி வருகின்றது என்பதை நிலைநாட்டியுள்ளனர். மரணத்திற்குப் பின் மனிதரது நிலை இன்னது என்பதைப்பற்றிப் பலவாறு சோதனைகளால் ஆராய்ந்தவரும் மேற்றிசை அறிஞர்களும், மனிதரது வாழ்க்கை உடலின் அழிவோடு முடிவடைகின்றதன்று என்பதை முடிவு கட்டியுள்ளனர். அன்றியும் யோகம் பழகியுள்ள பெரியார் பலர் தமது பழம்பிறப்புக்களின் உணர்ச்சியைப் பெற்றுள்ளனர். முற்பிறப்புணர்ச்சியைப் பெற்ற சாதாரண மனிதர் பலருளர் என்பதையும் தற்காலத்தில் நாம் செய்தித் தாள்கள் மூலமாக அறிந்துள்ளோம். புத்தர் பகவான் தமது பழம் பிறப்புக்கள் பலவற்றை உணர்ந்து எடுத்துரைத்து, கரும நியதி ஊழ்வினை இவைகளை நன்கு விளக்கியுள்ளனர். இப்பிறவியில் ஒருவர் படும் துயரத்தின் காரணத்தை ஆராயும் யோகக் காட்சியர் சிலர் முற்பிறவியிற் செய்த செயல்களின் பயனாக அது விளைந்தது என்று கூறியுள்ளது அறிவிற்கு மிகவும் பொருத்தமாகப் பலமுறையும் காணப்படுகின்றது. ஒவ்வொருவரும் சிற்சில யோக சாதனங்களைப் பழகுவதனால் முற்பிறப்புணர்ச்சியை எய்தலாகும் என்று சோதனை வாயிலாக யோக நூலார் துணிந்து கூறுகின்றனர். ஆக, சுருதி யுக்தி அனுபவம் என்னும் மூன்று முக்கிய பிரமாணங்களாலும் மறுபிறப்பு நிலைநாட்டப்படுவதாகின்றது.

தம் மதமே உண்மையென்றும், பிறமதங்கள் பிசாசின் வேலையென்றும் வாதிப்பவர் மதவெறுப்பின் பயனாக அவ்வாறு கூறுகின்றனர். தம் மதம் உண்மையென்பதை நிலை நாட்டுவதற்காகவும் பிறமதங்களில் மனம் செல்லாதிருப்பதற்காகவும் இம்மாதிரிக் கூறுவது ஒருவகையான மூடபக்தியாகும். ஒரு மதம் உண்மையாவதற்குப் பிறமதங்கள் பொய்யாக வேண்டும் என்னும் அவசியமே இல்லை. ஒரு மங்கை தனது நாயகன்மீது பக்தி கொள்வதற்பொருட்டுப் பிற ஆடவரை இழிவாகக் கருதல்வேண்டும் என்னும் அவசியமில்லை. பிற மதங்களைப் பிசாசின் வேலையென்று கூறுவது, தமது மதத்தின் பெருமைக்கு ஒரு சான்றாகும் என்று பலர் கருதுகின்றனர். உண்மையை நன்கு ஆராய்ந்து பார்ப்போமாயின், ஒரு மதம் உண்மையானதன்று என்பது நிலைநாட்டப்படுமாயின், பிறமதங்களும் உண்மையானவல்ல என்பது தானே முடிபாகும். உண்மையில் மதம் என்பது அனுபவமே; அவ் வனுபவம் ஒன்றேயாம். ஆயினும், அவ்வனுபவத்தைப் பலர் பலவாறு கூறுவர். இதுவே நான்மறைகளின் முடிபாகும்; மற்றும் வேதங்கட்கு ஒப்பான பிற மத நூல்களின் முடிபும் அதுவேயாம். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்பதே எங்கும் மெய்ப்பொரு ளுணர்ந்த பெரியோரது அனுபவம்.

ஒவ்வொரு மதத்தினரும் ஞானமெய்த விரும்பும் தம்மவரைத் தமது மதம் போதிக்கும் ஒரு நெறியையே விடாது சலியாது ஒரு நிலைப்பட்ட மனத்தோடு பின்பற்ற வேண்டும் என்று வற்புறுத்துகின்றார். இக்கொள்கை ஞான சாதனத்திற்கு இன்றியமையாத ஒரு நிலைமையைக் குறிக்கின்றது. இஷ்ட நிஷ்டை - அல்லது, ஒரு குறிக்கோளையே மன ஒரு

மையோடு பின்பற்றி உண்மை யனுபவம் எய்தல்—ஞான சாதனங்களில் வெற்றி பெற மிகவும் அவசியம் என்பதை உணர்ந்தே, சான்றோர்கள் ஒரு மதத்தையே மாறாது பின்பற்றுதல் வேண்டும் என்பதை வற்புறுத்தி வந்தனர். இதனால், காளடைவில் அக்கருத்து அனுபவமற்ற சாதாரண மக்களால் திரிபுபடக் கருதப்பட்டுப் பிற மதங்களில் முதலில் உபேக்ஷையையும் பின்னர் துவேஷத்தையும் உண்டுபண்ணலாயிற்று. இது அச் சான்றோர்களின் பிழையன்று, அறியாமையால் உண்மையை மாறுபடக் கருதும் அம்மக்களின் பிழையேயாம். பிசாசின் வேலை பிற மதங்கள் என்பது, அறியாமையால் எழும் வெறுப்பின் பயனேயாம்.

உண்மையென்பது ஒன்றே-இவ்வுரை மெய்; ஆனால் மாசற்ற காட்சியவர் பலர் அதைப் பலவாறாகக் கூறி வருகின்றனர். இவ் வுண்மையை அநுபவ வாயிலாக நிலை காட்டிப் போந்த பெரியார், ஸ்ரீ ராமகிருஷ்ணர். இவருடைய வாழ்க்கைச் சரிதம் முற்கூறிய பேருண்மையின் அரும் பெரும் விரிவுரையாகவே அமைந்துள்ளது. இச்சரித நிகழ்ச்சிகள் யாவும் ஒரு நூறு வருடத்திற்குள் பலரும் கண்ணாரக் காண நிகழ்ந்தனவாதலின், இன்னும், கற்றூர் பலரது ஆராய்ச்சிக்கும் சோதனைக்கும் உட்படுத்தப்பட்டு நிலை நாட்டப் பட்டுள்ளவையாதலின், இவைகளைப்பற்றிய ஐயம் எதுவற்றதாகும். ஆதலின், கிறிஸ்தவமத அபிமானிகளுடைய கூற்று அபிமானத்தால் எழும் உரையே யாம்; அது மெய்யுரையன்று. வினையினின்றும் நீங்கி விளங்கிய அறிவோடு கூடிய மெய்யுணர்ந்தோரது உரையே ஒப்புக்கொள்ளத் தக்கதாகும்.

வினா:—ஜீவாத்மாவானது பரமாத்மாவின் அம்சமென்றால், அந்த ஜீவாத்மா பரமாத்மாவைவிட்டுச் சிதைவுபட்டு, ஐம்பொறிக் கூட்டிற்குள் புகுந்து ஆடல் புரிவானேன்? T. K. கோ.

விடை:—ஜீவாத்மா பரமாத்மாவின் அம்சமே தான்; ஆயினும் அது தன் னியல்பை மறந்து தத்தளிக்கின்றது. ஓரரசன் மாறுவேடத்தோடு தனது நாட்டுக்குள் புகுந்து உலவும்போது, ஏழை மக்கள் சிலர் உதவியில்லாமல் தமது காரியம் ஒன்றை இயற்றமுடியாது வருந்திக் கொண்டிருந்ததைப் பார்த்து, அவர்களுடன் ஒரு வேலையாளாகச் சேர்ந்து, வேண்டிய உதவியை இயற்றி வந்தான். இரண்டு மூன்று நாள்கட்குள் அரசன் தன் உண்மை நிலையை மறந்தவனாக, வேலையாளனைப்போலவே, பிறருடன் கூடி, அவர்களுடைய சுக துக்கங்களையே தானும் அனுபவித்து வந்தான். இவ்வாறு தன்னை மறந்து துன்பத்தில் ஆழ்ந்திருக்கும் நாளில், ஒருகாலையில் அரசனது மந்திரி அவ்விடம் வந்து, அரசன் வேலையாளனாக அமர்ந்திருப்பதை உற்று நோக்கி வியப்பும் இரக்கமும் எய்தி, அவன் தனித்திருக்கும் வேளையில் அவனை நண்ணித் துன்பங்களைக் கூறக் கேட்கவும், மந்திரி அரசனை நோக்கி, "நீர் அரசரன்றே? யான் மந்திரியன்றே?" என்று ஞாபக மூட்டினர். இவ் வுரையைக் கேட்டுத் தெளிந்த அரசனும் தான் அரசனாவதை உணர்ந்து, தனது மயக்கத்தைக் கண்டு நகைத்து, அரசனாகவே அரண்மனை மீண்டனன். இதுபோலவே, ஜீவாத்மா தனது உண்மை இயல்பை மறந்து, அதன் பயனாகத் தன்னை உடற் சிறைக்குள் கட்டுப்பட்டவனாகக் கருதிற்று; அப்பேதமையால் விளைந்தது பெருந் துயரம். அதை நீக்க உண்மை யியல்பை உணர்தலே வழியாம். ஏன் மறந்தது என்னும் கேள்விக்குப் பதில் உரைத்தல் இயலாது; மேலும், கிணற்றுக்குள் விழ்ந்து பரிதவிப்பவன் அதைவிட்டு வெளியேறுவதைப்பற்றிச்

சிந்தித்தலே முதலிற் செய்யவேண்டியது. கரையேறிய பின்தான் எவ்வாறு கிணற்றில் வீழ்ந்தான் என்பதை ஆராய்தல் வேண்டும். ஆனல் பிறவிக் கிணற்றுக்குள் வீழ்ந்தவன் அதனின்றும் கரையேறியபின் வீழ்ந்த வகையைச் சிந்திக்கும்போது, ஓர் ஆச்சரியமான உண்மை விளங்குகிறது. அது யாதெனில், தான் என்றைக்கும் கட்டுப்படாதவன் என்பதும், கட்டுப்பட்டதாகக் கருதியது கற்பனையே என்பதும் ஆன உண்மையே. உண்மையை நோக்குவோமாயின், ஜீவாத்மா பரமாத்மாவைவிட்டுப் பிரிந்து துயரப்படும் பந்த நிலையில், அந்நிலை எவ்வாறு வந்தது என்பதை அறிதல் ஒண்ணுது. பந்தம் நீங்கி விடுதலை பெற்றபின், கட்டுப்பட்டதான நினைவே எழாது போகின்றது; ஆதலின் அப்போதும் பந்தம் வந்த வகையைப்பற்றிய வினு எழுவதில்லை. இது அநுபவத்தால் உணரப்படும் உண்மையாதலின், வழக்கிற்கு அதீதமானதாகும். பந்தத்திற்கு அதீதமான நிலையிலிருந்த ஆன்மா எவ்வாறு பந்தத்திற்கு உட்பட்டது என்ற வினு, தருக்க முறைப்படிப் பார்க்கும்போது முரண்பாடான பொருத்தமற்ற வினுவேயாகும். இம்மாதிரியான ஒரு வினு, ஓர் அடிப்படை உண்மையைப்பற்றிய வினு, ஒவ்வொரு மதத்திலும் விடை யளித்தற்கு முடியாததாகும். இதுவே முடிபென்ப.

---

# ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை

ஸ்ரீ ராமகிருஷ்ணதேவரது வாழ்க்கையை ஆராய்ந்துள்ள அறிஞர், அம்மகானது திவ்விய வாழ்வின் ஒவ்வொரு சம்பவமும் ஆழ்ந்ததொரு படிப்பினையைக் கொண்டது என்று கூறுகின்றனர். இதற்கு உதாரணமாக, ஸ்ரீ ராமகிருஷ்ணரது திருமணத்தைக் குறிப்பிடலாம். காமதகனனை இப் பெரியார், சந்நியாசிகளுக் கெல்லாம் பூஷணமாக விளங்கிய இம்மகரிஷி, விவாகம் செய்து கொண்டதும், தமது வாழ்நாள் முழுவதும் தமது மனைவியைத் தம்மிடமே வைத்திருந்ததும், இல்லற வாழ்வை ஏற்று வாழவேண்டிய பல கோடிமக்களுக்கு வழி காட்டுவதற்காகவே யாகும். ஆனல் இவரது திருமணத்தில் இன்னுமொரு விசேஷமும் உள்ளது. பாலிய விவாகம் என்பதை இக்காலத்தில் யாவரும் கண்டிக்கின்றனர். அவ்வழக்கமும் சட்டம், பொருளாதார நிலை, சமூக முன்னேற்றம் ஆகிய பல காரணங்களால் வெகு வேகமாக மறைந்து வருகிறது. நவீன இந்தியாவின் பிரச்னைகள் யாவற்றிற்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது வாழ்வின் மூலம் விடைகளை அளித்துள்ளார் என்பது உண்மையானல், அவர் காரணராகவிருந்த பால்ய விவாகத்தினின்று நாம் அறிய வேண்டிய படிப்பினை யாது?

ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குத் திருமணம் நடக்கும்பொழுது அவருக்கு வயது 23. அவரது மனைவிக்கு வயது 5! ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஏற்கனவே ஞான சாதனையில் வெகுதூரம் முன்னேறியிருந்தார். அவருக்குத் தீவிரமான கடவுட் பித்து பிடித்திருந்தது. இத்தகைய இளைஞர், பால் மணம் மாறுத பச்சைக் குழந்தையென்று சொல்லக்கூடிய பெண் ஒருத்தியை மணம் செய்து கொண்டது ஏன்? அவருடைய குடும்பத்தாரே இதற்குப் பொறுப்பாளிகளென்றுநாம் குறை கூறுவது முடியாது.

ஏனெனில் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கேற்ற பெண் கிடைக்காமல் அவரது தாயாரும் சகோதரரும் ஏக்கமுற்றிருந்த பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரே இந்த ஊரில் இந்தப் பெண் தமக்குக் கிடைப்பாள் என்று அவர்களிடம் கூறி, முயற்சி செய்யுமாறு தூண்டினார். ஆகவின் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய எண்ணத்திற்கு விரோதமாகவோ, அல்லது அவர் எதிர்பாராதவிதத்திலோ திருமணம் ஏற்பாடு செய்யப்படப் வில்லை. ஞான வாழ்வையே தமது குறிக்கோளாக ஏற்ற ஸ்ரீ ராமகிருஷ்ணர் திருமணம் செய்துகொள்ளச் சம்மதித்தது ஒருபுறம் நமக்கு வியப்பைத் தருகிறது. அவ்வியப்பு ஒருபுறமிருக்க, அவர் சிறு குழந்தையைத் தமது மனைவியாக ஏற்க நிச்சயித்தது நமக்குப் பிரமிப்பை யளிக்கிறது. 14, 15 வயதான பெண் ஒருத்தியை அவர் பொறுக்கியிருக்கக் கூடாதா? அல்லது தமக்கு இல்லாளாக வாய்க்க வேண்டிய பெண் தன்னைவிடப் பதினெட்டு ஆண்டுகள் சிறியவளாக இருக்குமாறு நேர்ந்து போனாலும், அப்பெண் மணப் பருவம் எய்தும் வரையில் இராமகிருஷ்ணர் திருமணத்தைத் தள்ளி வைத்திருக்கக் கூடாதா? ஸ்ரீ சாரதா தேவியின் பாலிய மணத்தில் தத்துவம் ஏதேனும் மறைந்துள்ளதோ? சமீபத்தில் ஆங்கிலத்தில் வெளியான சாரதாதேவின் ஜீவிய சரிதத்தில் அவரது திருமணத்தைக் கூறும் பகுதியில் இப்பிரச்னை சம்பந்தமான விளக்கம் விரிவாகத் தரப்பட்டுள்ளது. அதன் சாரத்தை இங்குத் தருகிறோம்.

புராதன காலத்தில் ஹிந்து பாலிய விவாகம் என்பது பொது விதியாக இருக்கவில்லை. பையன்களைப் போலவே பெண்களும் வனங்களிலிருந்த குருகுலங்களில் கல்வி பயின்று வந்தனர். பெண்கள் கல்வி பெறுவது சம்பந்தமான இலக்ஷியத்தில் மாறுதல் ஒன்று ஏற்படவே பெண்கள் பருவமடையும் முன்னமேயே விவாகம் செய்வதென்ற வழக்கம் ஏற்பட்டது. புராதன ஆரிய சமூகத்தில் பெண்களும் பையன்களைப் போலவே உபநயனம் செய்விக்கப்பட்டு வேதாத்தியனத்தில் ஈடுபட்டனர். பெண்கள் யாகங்களும் கூடச் செய்தனர். விவாக சமயத்தில் கூறப்படும் மந்திரங்களைக் கவனித்தாலும் வதூவரர்கள் யௌவனம் எய்தியவர்களே என்பது புலனாகின்றது. காலக்கிரமத்தில் பெண்களுக்கு உபநயனம் செய்விக்கும் வழக்கம் நின்றுவிட்டது. உபநயன ஸம்ஸ்காரத்தைப் பெறாதவர்கள் வேதாத்தியயனம் செய்வது கூடாதாகையால், பெண்களுக்கு வேதக் கல்வியும் அதற்கவசியமான குரு குலவாசமும் இல்லாது போயின.

ஆனால் பெண்களுக்கு உபநயனம் இல்லாது போனதற்குக் காரணம் என்னவென்று ஆராய்வோம். பெண்களுக்குப் படிப்பும் குருகுலவாசப் பயிற்சியும் இல்லாது போக வேண்டுமென்ற எண்ணத்துடன் அம்மாறுதலைச் செய்தனரில்லை. பெண்களுக்கு விவாகமே உபநயனம் போன்ற சடங்காக ஏற்கப்பட்டு, இதன் பயனாக அவள் குருவினிடம் சென்று பக்குவமடைவதற்குப் பதிலாகப் புருஷனிடம் சென்று பயிற்சி பெறலாம் என்ற முறை சமூகத்தில் ஏற்பட்டுவிட்டது. பையன்களுக்கு உபநயனம் சிறுவயதிலேயே செய்வது போன்று, பெண்களுக்கும் (உபநயனத்திற் கொப்பான,) விவாகச் சடங்கைச் சிறுவயதிலேயே முடித்துவிடும் வழக்கம் இதன்பயனாக எழுந்தது. சிறுவயதிலேயே ஒரு பையனைக் குருவினிடம் சேர்ப்பித்தால் தான் அவன் அக்குருவினிடம் வாசம் செய்வதால் பெறக்கூடிய பயனை நன்றாகப் பெறுவான். ஐந்தில் வளையாதது ஐம்பதில் விளையாதல்லவா? அதைப் போலவே பெண்

ஒருத்தியை இளமையிலேயே புருஷனிடம் சேர்ப்பித்தால்தான் அவளது மனம் புருஷனுடைய இலக்ஷியங்களுக்கேற்ப இயைந்து வளரும்; அதன் மூலம் சதிபதிகளுக்கிடையே ஐக்கிய புத்தியும் முரண்பாடின்மையும் வளரும். பெண் ஒருத்திக்கு வயது வந்தபிறகு மணம் செய்வித்தால் அவளது புருஷனுடைய மனப்பான்மையும் அவளது இயல்பும் வேறுபாடுடையனவாயிருக்கும் காரணத்தால் இவ்வாழ்வில் குழப்பம் ஏற்படுகிறது. மனப்பான்மைப் பொருத்தம் இல்லாதுபோகும் காரணத்தால் (Temperamental incompatibility) மேனாட்டில் விவாக ரத்துக்கள் ஏராளமாக நடைபெறுகின்றன.

மேலும் பண்டை நாளில் சிறு பெண் ஒருத்தியை மனைவியாக ஏற்கும் இளைஞன் தனது மணத்திற்கு முன்னர் பிரமசரிய ஆசிரமத்தில் நீண்டகாலம் பயிற்சி பெற்றிருப்பானாதலின், அவனிடம் தன்னடக்கம் முதலான உயர் குணங்கள் பக்குவமடைந்திருக்கும். அவனது முதற் கடமை மனைவிக்கு ஆசாரியனாக இருப்பதுதான். அதன்பிறகே வம்சவிருத்தியெனும் கடமையைச் செய்ய அவன் முற்படுவான்.

இதுதான் பாலியவிவாகமெனும் சமூக வழக்கத்தின் இலக்ஷியமாகும். சிறு பையன்கள் இளமையிலேயே குருகுல வாசம் செய்யச் சென்றதைப்போல, சிறுமிகள் சிறு வயதிலேயே புருஷகுல வாசம் செய்யச் சென்றனர்.

ஆனால் ஒரு வழக்கமானது தனது புராதன இலக்ஷியத்தினின்றும் நாளடைவில் நழுவிப் போவதும், நடைமுறையில் அந்த லக்ஷியத்திற்கு மாறாக இருப்பதும் நாம் அநுபவத்தில் காணும் விஷயங்களல்லவா? அம்மாதிரியே பாலிய விவாகமெனும் வழக்கமும் நாளடைவில் உயர் இலக்ஷியத்தினின்றும் நழுவி விட்டது. பாலிய விவாகம் நற்பயனுற வேண்டுமாயின், மணமகன் உண்மையிலேயே ஒரு மகரிஷியாக விருக்கவேண்டும். தனது மனைவியைப் போகத்திற்குரிய பொருளாகக் கருதாமல் அவளையும் பரம்பொருளின் அம்சமான ஜீவனாகவே கருதும் மனோதிடம் அவனிடம் இருக்கவேண்டும். காமப் புத்திரர்களைப்பெறாமல் அவன் தவப் புதல்வர்களைப் பெறவேண்டும். இத்தகைய பெருமை வாய்ந்த புருஷர்கள் எத்தனை பேர் உள்ளனர்? ஆதலின் நாளடைவில் பாலிய விவாகத்தால் கேடுகளே விளையலாயின. பெண்கள் சிறு வயதிலேயே தாய்மார்கள் ஆகும் கொடுமை நிகழலாயிற்று. அதனால் நாட்டின் பலமே குன்றிப்போயிற்று. ஆனால் நடைமுறையில் குறைகள் ஏற்பட்டு விடுவதால் இலக்ஷியமென்று பொய்யாகப் போய் விடாதல்லவா? இடம் பாத்திரங்கள் இவை வேண்டியவாறு அமைந்தால் அந்த இலக்ஷியம் எக்காலத்திலும் நற்பயனை யளிப்பது திண்ணம். இதற்குச் சிறந்த உதாரணமாக விளங்குபவர் ஸ்ரீராமகிருஷ்ணரும் சாரதா தேவியுமாவர்.

சாரதாதேவியார் தமது ஐந்தாவது வயதிலேயே மணம் புரிந்து கொண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் ஞான நெறியைக் கைப்பிடித்த உத்தமர்; சாரதாதேவியாரும் அவருடைய உயர்ந்த மனோ நிலைக்கேற்ப நடந்து கொள்ளக்கூடிய மனப்பக்குவம் வாய்ந்த பெண்ணாயிருந்தார். ஆதலால் அவ்விருவருடைய இல்லற வாழ்வு உலகோர் கண்டு வியக்கக்கூடிய தொன்றாயிற்று. சரீரசம்பந்தம் எள்ளளவும் அற்ற; காமம் என்பது கனவிலும் கருதப்படாத, உறவு ஒன்று அவர்களிடையே ஏற்பட்டது. மனைவி, புருஷருடைய சிஷ்யையானாள். புருஷரின் ஞான மாட்சிமையில் பங்கு கொண்டாள். ஞானப்பணியில்

புருஷருடைய தோழியாக ஈடுபட்டாள். கொண்டமனைவிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் காட்டிலும் அதிக நலன் புரிந்த புருஷரு மில்லை; அடைந்த புருஷனுடைய நோக்க மறிந்து அவர் வழியில் ஒத்துழைத்து அவருக்கு உண்மைத்துணைவியாய் விளங்குவதற்கு, சாரதாதேவியைக் காட்டிலும் சிறந்தவொரு உதாரணத்தை நாம் காணவும் முடியாது.

ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் பாலியவிவாகத்தைத் தமது வாழ்விலேயே நடத்திக் காட்டியதால் அவர் நம்மனைவரையும் பாலிய விவாகம் செய்யுமாறு தூண்டுவதாகக் கொண்டுவிடக் கூடாது. தேவர்களும் மகான்களும் செய்கின்ற காரியங்களையெல்லாம் சாதாரண மக்களும் செய்ய முற்படுவது தகாதகாரியமாகும்; அவர்கள் பொதுமக்களுக்கென அளிக்கின்ற உபதேசங்களையே நாம் பின்பற்ற வேண்டும்; அதே சமயத்தில் பெரியாருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளின் உண்மையான தத்துவத்தைக் கண்டறிந்து அத் தத்துவத்தை நமது வாழ்வில் நமது சக்திக்கேற்ப வெளிப்படுத்த முயலவேண்டும்; அவ்வாறு செய்யாமல் ஸ்தூல அளவில் மட்டும் மகான்களது காரியங்களை நாமும் பின்பற்ற முயல்வதால் தீமையே விளையும். தனது குரு ஒரு சமயம் மதுபானம் செய்ததைக் கண்ட சிடன் தானும் மதுபானம் செய்யத் தொடங்கியதாகவும், வேறொரு சமயம் குரு உருக்கிய ஈயத்தை நீர் போலப் பருகுவதைக் கண்ட சிடன் தயங்கி நின்றதாகவும் ஒரு கதை உண்டு. இக்கதை உண்மையாகவோ பொய்யாகவோ இருக்கலாம். ஆனால் கதையின் கருத்து சிறந்தவொன்றாகும். உருக்கிய ஈயத்தையும் பருகக்கூடிய சக்தி குருவுக்கு இருந்ததால், அவர்க்கு மதுபானம் செய்ததால் ஹானி ஏற்படாதிருக்கலாம். சிடன் குருவைப் பார்த்துத் தானும் மதுபானம் செய்வது தகாத காரியமேயாகும்.

இந்திய தேசிய வாழ்வில் பல இலக்ஷியங்கள் தொன்று தொட்டு இருந்து வந்துள்ளன. இந்த இலக்ஷியங்கள் நாளடைவில் மலின மடைந்தும் உண்மை இயல்பு நீங்கியும் உருமாறியும் போயுள்ளன. அந்த இலக்ஷியங்களில் சிலவற்றை நாம் இன்னமும் கொண்டிருந்தாலும் அவற்றின் சாரத்தைவிட்டுச் சக்கையையே கொண்டுள்ளோம். இந்த இலக்ஷியங்களைத் தூய்மையான முறையில் அவற்றின் முழுத்தத்துவமும் வெளிவரும் வகையில் ஸ்ரீராமகிருஷ்ணர் அனுஷ்டித்துக் காட்டியுள்ளார். ஒன்றிரண்டு உதாரணங்களால் இதை விளக்கலாம். பக்தி மார்க்கங்களுள் தலை சிறந்தது மதுர பாவனை என்பது. பக்தனும் பகவானும் நாயகி நாயக பாவனையில் உறவாடுவதாகும் இது. ஆனால் இம் முறையைக் கையாடுகின்றவரிற் பலர் வீழ்ச்சியடைகின்றனர். காமம், தேகப்பற்று, சிற்றின்பமோகம் இவை அறவே அற்றுப்போன ஒருவனே இம்முறையில் பூரண வெற்றியடைய முடியும். சாதாரணமக்கள் மனப்பக்குவம் எய்தும் முன்னரே இம்முறையைக் கைக்கொள்ளுவது மதியீனமேயாகும். மதுர பாவனை எனும் இலக்ஷியத்தை மாசற்ற முறையில் நடத்திக் காட்டினார் ஸ்ரீராமகிருஷ்ணர். அவ்வாறே தாந்திரிக சாதனையென்பது வெகு கடினமான தொன்றாகும். வைராக்கிய புத்தி, மனோதிடம் இவை முற்றியிருந்தாலன்றி அச்சாதனையில் ஈடுபடுகின்றவர் உயர் இலக்ஷியத்தினின்று நழுவி விடுவது சர்வ சாதாரண சம்பவமாகும்; ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தாந்திரிக சாதனைகள் யாவையும் தூய முறையில் அனுஷ்டித்து வெகு சீக்கிரமான காலத்தில் அவற்றில் பக்குவம் எய்தினார். ஸ்ரீராமகிருஷ்ணர் சந்நியாச தீக்ஷை

பெற்ற பிறகும் தமது மனைவியைத் தம் அண்டையிலேயே வைத்திருந்தார். இது சாதாரணமாக எல்லா சந்நியாசிகளும் செய்யக்கூடிய காரியமாகுமா? ஸ்ரீராம கிருஷ்ணர் அவ்வாறு செய்தது ஏனெனில் அவர் கிருஹஸ்தம், சந்நியாசம் ஆகிய இரு ஆசிரமவாசிகளுக்கும் வழி காண் பிக்கவேண்டியவராயிருந்தார்.

இவ்வாறே அவர் பாலிய விவாகம் செய்து காட்டியதும் அம்முறையின் உயர்ந்த பலன் எவ்வாறு சாத்தியமாகும் என்பதை உலகினருக்குப் புகட்டுவதற்கே யாகும். புண்ணிய ஸம்ஸ்காரங்கள் நிறை யப் பெற்ற சதிபதிகள் இளமையிலேயே மண வாழ்வு வாழ ஆரம்பித்தால், இருவ ருடைய ஞான வாழ்விற்கும் அதனால் நற் பயன் ஏற்படலாம். பெண் வித்யா சக்தி நிறைந்தவளாகவும் புருஷன் முமுக்ஷு வாகவும் இருப்பது முற்றிலும் அவசிய மாகும். இந்த வசதி இல்லாதவிடத்து பாலிய விவாகத்தால் நலனைவிடக் கேடே அதிகமாகும். இளமையிலேயே சதிபதி கள் காம வாழ்வில் ஈடுபடுவதால் அவர்க ளது மனோவளர்ச்சி குன்றிப் போவ துடன், அவர்கள் மூலம் விருத்தியடை கின்ற இனமும் பலங் குன்றியதாகப் போகிறது. ஒரு செயலை நல்லதென்றோ பொல்லாததென்றோ மொத்தமாகக் கூற முடியாது. செய்யவேண்டிய முறையில் அதைச் செய்வது நலனையே தரும். உள் நோக்க மறியாது குருட்டுத்தனமாகச் செய்யப்படும் செய்கையால் தீமையே ஏற் படும்.

மகாத்மாக்களுடைய வாழ்க்கையில் எண்ணிறந்த படிப்பினைகள் உள்ளன. அவற்றை நன்கு ஆராய்ந்து நமது இயல் புக்கேற்ற அளவிற்கு நமது பான்மைக் குகந்தவற்றை நம்முடையதாகச் செய்து கொள்வதால் நலனுண்டாம். கடலில் உண்டு ஏராளமான நீர். குடமொன்று நிறைவுபெறக் கடல் நீர் முழுவதையும் உட்கொள்ள வேண்டிய அவசியமில்லை. அவ்வாறு செய்வது சாத்தியமுமில்லை. தன் அளவிற்கேற்ற நீரைக் கொள்ளுவ தாலேயே குடம் நிரம்பிவிடும்.

---

# தியானம்

க

தியானம் என்பது மனத்தின் நிரோத பரிணாமம். அப்பரிணாம வடிவ தியான மானது. தியானிக்கப்படும் பொரு ளின் தன்மைக்கு ஏற்றவாறு பலன் தரு கின்றது. நாம் யாவரும் லௌகிக அலௌ கிக பலன்களனைத்தையும் தியானத் தாலேயே பெறுகின்றோம். ஒருவன் ஒரு காரியத்தை முன்னிட்டு, பலநாளோ பல மணி நேரமோ தியானித்துத் தான் அதை ஒருவகை நிச்சயஞ் செய்து, பின் னர் அதற்கேற்ற முயற்சியின் வலியால் பயனைச் சிறிது முன்னாகவோ பின்னா கவோ பெறுகின்றான். இதனால் நாம் தியானிக்கப்படும் பொருளை தியான வலிமையால் அவசியம். அடைந்தே வரு கின்றோம். அலௌகிக பரம்பொருள் அல்லது சகுண பரமேஸ்வரன் (நிர்க் குணம் சகுணம்) இவைகளில் நமக்கிஷ்ட மான ஒன்றை உள்ளன்போடு தியானிக் கின் அவசியம் அதனைப் பெறுகின்றோம்.

உ

சச்சிதானந்தமாய் எங்கும் நீக்கமின்றி நிறைந்துள்ள ஆன்ம தத்துவம் நிர்க்

குணம் என்று பெயர். அச்சச்சிதானந்த பரம்பொருள் சத்துவ ரஜஸ் தமஸென்னும் பிரகிருதியைத் தன் வசம் செய்து கொண்டு அப்பிரகிருதியால் சிருஷ்டி திதி சம்ஹாரம் என்னும் முத்தொழில் நடத்தும் காரண வியவகாரமுடையதாயிருக்கும்போது, சகுணமென்ற பெயர் பெறுகின்றது. சர்வேஸ்வரத்துவம் முதலான ஆறு குணங்களையுடையதாதலால் சகுணம். சர்வேஸ்வரன் 1. சர்வக்ஞன் 2. சர்வாந்திரியாமி 3. சர்வகாரணன் 4. சர்வ நியந்தான் 5. சர்வசக்திமான் 6. என ஆறு நாமங்களும் உடையதாகின்றது. இக்குணங்கள் தியானிப்பவர்கள் சிந்திக்கத் தக்கவையாகும்.

௩

பக்குவம் நிறைந்த சாதகருக்கு நிர்க்குணம் பிரியமாயிருக்கும். பக்குவம் குறைந்த சாதகருக்கு சகுணம் பிரியமாயிருக்கும்.

௪

தியானஞ் செய்யுஞ் ஜீவன் தியாதா; தியானிக்கப்படும் பரம்பொருள் (சகுணம் நிர்க்குணம்) தியேயம்; தியேய வடிவ பாமனை இடைவிடாது நேயத்தோடு நெடுங்காலம் தியானிக்கும் மனோவிருத்தி தியானம்.

௫

தியானத்தால் பரம்பொருள் காக்ஷி பெற்றுவிடின் மனம் மீண்டும் உலக இன்பங்களை நாடாது. தியானத்தால் அவசியம் பரம்பொருட் காக்ஷியைப் பெற்று விடுவோமென்று துணிந்தவன்தான் தியானத்தால் பயனெய்த முடியும்.

௬

ஆரம்ப காலங்களில் தியானஞ் செய்பவர்கள் அவசியம் தனியிடத்திருந்தே பழக வேண்டும். ஏனென்றால், தனியிடத்திலிருந்து தியானஞ்செய்யும்போது மனத்தின் போராட்டம் ஒன்றே தானுண்டு. அதனோடு போராடி எப்படியாவது, குரு ஈஸ்வர கிருபையால் மனத்திலுள்ள மலினங்களைப் போக்க முயற்சி செய்யும் உத்தமர்கள் அவசியம் முயற்சியின் வலியால் சுலபமாக அம்மன மலினங்களை நீக்கியே விடலாம். இது திண்ணம். பின்னர் மனம் நின்மலமாகி பாலில் கலந்த ஜலம்போல் அகண்ட ஆனந்த மஹோததியும் பர வாசுதேவருமான ஆன்மாவில் கலந்துவிடும். அதனால் நிருவிகல்ப பரமசுகம் பெறலாகும். சங்கங்களில் இருந்துகொண்டு எத்தனை தியானஞ் செய்தாலும் மனம் குறித்த லக்ஷியத்தில் அமைதிபெறுவது வெகு கஷ்டம். கண், காது, துவக்கு என்ற இம் மூன்று ஞானேந்திரியங்களும் வெகு சீக்கிரத்தில் மனதை வெளியில் செல்ல விடுவதில் சமர்த்துடையன. இதனை நல்ல அப்பியாசிகள் அறிவார்கள். இம்மூன்றிலும் செவி வெகு பிரதிபந்தங்களைச் சங்கங்களிலிருந்து தியானஞ் செய்பவர்களுக்குக் கொடுக்கச் சமர்த்துடையது; இவைகளோடு மலின மனமும் சேர்ந்துகொண்டால் கட்குடித்த குரங்கைத் தேள் கொட்டின கதையாகத் தான் முடியும்.

௭

தியானிப்பவர்கள் மனத்தின் சலனத்தைப் போக்கத் தக்கதாக அதற்குப் பிரதிகூல சுத்த ஆன்ம வாசனையை நன்ருகப் பழகவேண்டும். அவ்வாறு நன்ருகப் பழகும்போது மனத்திலுள்ள துர்வாசனைகள் தீயிற்பட்ட பஞ்சுபோல் சாம்பராகிவிடும். எவ்வளவிற்கெவ்வளவு ஆன்ம வாசனை உண்டாகின்றதோ அவ்வளவிற்கவ்வளவு மலின வாசனைகள் நாசமாகும். எவ்வளவிற்கெவ்வளவு மலின வாசனைகள் கழிகின்றனவோ அவ்வளவிற்

கவ்வளவு மனம் ஏகாக்கிரமடையும்; அவ்வேகாக்கிர மனத்தின் ஆரம்பத்திலேயே சுக ஆரம்பம் காணப்படும். அதுதான் மனத்தின் சுத்த அவஸ்தையின் ஆரம்பமாகும்.

அப்பியாசிகளுக்கு அத்தியாவசியமான ஒரு விரதம் வேண்டும். அஃதாவது, நான் சகல ஸ்திரீகளையும் பார்வதியாகக் காண்கின்றேன் அல்லது லக்ஷ்மியாகக் காண்கின்றேன் அல்லது யாவரையும் பரம்பொருளாகக் காண்கின்றேன்—இது சத்தியம் என்ற திட நம்பிக்கையை மனத்திற்குக் கற்பித்துப் பிரமசரியத்தை நன்ருகக் காப்பாற்ற வேண்டும். பிரமசரியமில்லாதவன் செய்யும் அப்பியாசமெல்லாம் சாம்பலில் விட்ட அவிசு (நெய்) போலாகும். பிரமசரியத்தை நன்ருகக் காப்பாற்றி அதனோடு தியானஞ் செய்தால்தான் மனம் தடுமாற்றமின்றிக் குறித்த லக்ஷியத்திற் செல்லும். சிறிய நூல் கயிற்றை சாதாரணமாக அறுத்துவிடலாம். ஆனால் அதில் ஒருவகைப் பசையைப் பூசிவிட்டால் முன்போலறுக்க முடியாது. இதுபோல பிரமசரியமின்றியவனது வாழ்க்கையும் தியானமும் விஷய அரக்கர்களால் அறுபட்டுப் போகும். பிரமசரியமுடையவனது வாழ்க்கையும் தியானமும் எவ்வித அரக்கர்களாலும் நாசமாக்கப்படா. அவன் கைக்கொண்ட வாழ்க்கையின் பலனை அவசியம் பெறும்படி இறைவன் எல்லா வகையிலும் அநுக்கிரகஞ் செய்கின்றனர்.

௬

தியான அப்பியாசிகள் அடிக்கடி சாதுக்களைத் தரிசிக்கவேண்டும். அவர்கள் மறந்திருந்த சுத்த வாசனையை நினைவிற்கு வரும்படிச் செய்வார்கள். அதனால் மனம் சலியாமல் நிற்கப் பேருதவியாகின்றது. ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ விவேகானந்தர் போன்ற சுத்த பிரமசரிய மஹான்களது சரித்திரம் உபதேசம் ஆகிய இவைகளை அடிக்கடி வாசித்து அவைகளின் அருத்தங்களை மனனஞ் செய்தல் வேண்டும். அதனால் மனம் மிகப் பரிசுத்தமடையும். சுத்த வாசனையுடையவன்தான் மனித சிரேஷ்டன்; அவன் ஒன்று மற்றவனுயினும் எல்லாமுடையவனாவான். அவன்தான் முக்தன். (ஓம்.)

---

# மாயைக்கு அதிஷ்டானம் யாது?

(K. V. D. Sastri)

அவித்தையென்றும், அஞ்ஞானமென்றும், விவஹரிக்கப்படும் மாயைக்கு அதிஷ்டானம் யாது? வித்தையால் நாசமடைவதால், அவித்தையென்றும், ஸ்வரூபத்தை மறைப்பதால் அஞ்ஞானமென்றும், மனோவாசாமகோசரமாய சக்தியுள்ளதுபற்றி மாயை யென்றும் ஒரே பொருள் பலவிதமாக விவஹரிக்கப்படுகின்றது.

இதின் அதிஷ்டானத்தைப்பற்றி வாசஸ்பதி மிச்சிரர் என்ற பெரியாரின் கருத்து ஒருவிதம். விவரணுசாரிய ஸ்வாமிகளின் அபிப்பிராயம் வேருெருவிதம். வாசஸ்பதி மிச்சிரரின் கருத்து. மாயைக்கு அதிஷ்டானம் ஜீவன், விஷயம் பிரம்மம். அதாவது ஜீவனிடத்திலுள்ள அஞ்ஞானம் பிரம்மத்தை மறைக்கின்றது. நான் அஞ்ஞானி, பிரம்மத்தை நான் அறி

யேன் என்று நமக்கு அநுபவம் உண்டா கின்றது. இவ்வநுபவத்தில் நான் என்பது ஜீவன். ஜீவன் நான் அஞ்ஞானி யென்று சொல்வதால், அஞ்ஞானத் திற்கு அதிஷ்டானமென்று சித்திக்கிறது. பிரம்மத்தை யறியவில்லை என்று சொல்வதால் பிரம்மம் விஷயமென்றும் சித்திக்கின்றது. இவ்வஞ்ஞானம் பல, ஒன்றல்ல. அஞ்ஞானம் ஒன்று என்று கூறிய ஒருவனுடைய அஞ்ஞானம் நாசமானல் மற்றவர்களுக்கு அஞ்ஞானமும் அதன் காரியமாகிய பிரபஞ்சமும் தோன்றக்கூடாது; தோன்றுகிறதினல் ஒருவனுமே ஞானியாகவில்லை, ஒருவனுக்கும் அஞ்ஞானம் நாசமாகவில்லை என்று கூறில், இனிமேலும் ஒருவனும் ஞானியாக மாட்டான், ஒருவனுக்கும் அஞ்ஞானம் நாசமாகாது என்று திட்டமாகக் கூறலாம். அங்ஙனமாகில் ஞானத்தின்பொருட்டு உபநிடதங்களில் விதிக்கப்பட்டுள்ள சிரவண மனன நிதித்தியாஸங்கள் வீணகப் போகும். வீணன சிரவணதிகளைக் கூறும் உபநிடதங்களும் அப்பிரமாணங்கள் ஆகும். ஆதலால் அநேகம் ஜீவர்களை யாசிரயித்து அஞ்ஞானமும் அநேகமென்றே கூறவேண்டும். எந்த ஜீவனுக்கு ஞானமுண்டாகி அஞ்ஞானம் நாசமடைகின்றதோ அந்த ஜீவனுக்கு அஞ்ஞானமும், அதின் காரியமாய் பிரபஞ்சமும் தோன்றுவதில்லை என்பதே வாசஸ்பதி மதம்.

விவரணசாரிய ஸ்வாமிகளின் அபிப்பிராயம். மாயை, ஜீவன் ஈசுவரன் எனும் பாகுபாடு இல்லாத சுத்த சித்தை யண்டி யிருக்கின்றது. அது அநாதி. அதாவது அதற்கு உற்பத்தியில்லை. மாயைக்கு உற்பத்தி கூறில் ஜடமாய ஜகத்திலிருந்தோ, ஜீவனிடத்திருந்தோ, ஈசுவரனிடத் திருந்தோ கூறவேண்டும். ஜகத்திலிருந்து கூறுவது ஒவ்வாது. ஏனெனில் மாயையிலிருந்து உண்டாய ஜகம் எங்ஙனம் மாயைக்குக் காரணமாகும்? பிதாவினிடத்திருந்து உற்பத்தியாய புத்திரன் பிதாவின் உற்பத்திக்கு ஏதுவாவானே? இங்ஙனமே மாண்டுக்கிய காரிகையில் கௌடபாதாசாரியர் மாயைக்கு உற்பத்திக் கூறுவோரைப்பற்றி அங்கம் குலுங்க நகைத்துள்ளார்.

ஜீவனிடத்திருந்தோ, ஈசுவரனிடத் திருந்தோ உற்பத்தி கூறுவோமெனில் ஈசுவரனும் ஜீவனும், மாயையின் காரியங்கள். மாயையில்லையேல், ஈசுவர ஸ்வரூபமும், ஜீவஸ்வரூபமுமே சித்திப்பதில்லை. ஆதலால் ஜீவனும், ஈசுவரனும் மாயையின் உற்பத்திக்கு ஏதுவல்ல. சுத்த சேதனத்தினிடத்திருந்து உற்பத்தி கூறுவோமாகில் சுத்த சேதனம், அசங்கம், (பற்றற்றது) நிஷ்கிரியம் (கிரியையற்றது) ஆதலால், அது மாயையின் உற்பத்திக்கு ஏது என்பதுமொவ்வாது. சுத்த சேதனம், மாயையின் உற்பத்திக்கு ஏதுவென்று கூறில், அது விகாரியாய் விடும். முத்தி தசையிலும் சுத்த சேதனமிருப்பதால் மாயை உற்பத்தியாகலாம். உற்பத்தியானல் முத்தியின்பொருட்டு நாம் செய்த பிரஸாஸங்கள் எல்லாம் வீணகுமன்றோ? ஆதலால் மாயை அநாதி. அம்மாயை சுத்த சித்தை ஆசிரயித்து சுத்த சித்தையே மறைத்துக் கொண்டு மிருக்கிறது. வீட்டிலிருக்கும் இருள்வீட்டை மறைத்துக்கொண்டுமிருப்பதுபோல.

# கடவுளின் குழந்தை

கடவுள் நம்மிடம் காட்டுகிற அன்பு எவ்வளவு பெரிதென்று சொல்ல நம்மால் முடியாது. உண்மையில் கடவுள் யார்? நாம் யார்? அவரை நமது அன்பான தந்தையாகக் கொண்டால், நாம் அவருடைய குழந்தைகளாகிறோம். தந்தையின் அந்தஸ்து மேன்மையான பதவி, அமோகமான செல்வாக்கு, திரண்ட ஐஸ்வர்யம் எவ்வளவு இருந்தால்தான் என்ன?

அவ்வளவும் குழந்தைக்குச் சொந்தமல்லவா. பிச்சைக்காரனுடைய குழந்தைக்குப் பெருமை எது? அரச குமாரனுக்கே ராஜ கௌரவம் உரியது. நாம் கடவுளின் குழந்தைகளென்பது உண்மையானால் அவருடைய ஞானமெல்லாம் நம்முடையதுதான். சந்தேகமில்லை.

பார்க்கப் போனால் உலகத்திலுள்ள ஜீவர்களெல்லாம் ஒருவிதத்தில் கடவுளின் குழந்தைகளே. அவர் நம்மைச் சிருஷ்டிக்கவில்லையா, பராமரிக்கவில்லையா? ஆனால் துஷ்கிருத்தியங்களின் பலனாய்ச் சில சமயங்களில் நமக்கும் கடவுளுக்குமுள்ள தொடர்பு அறுந்துபோகிறதுபோல் நமக்குத் தோன்றுகிறது.

கடவுளைவிட்டு நாம் பிரிந்துவிடுகிறோம், தூரத் தொலைவுக்குப் போய்விடுகிறோம். உலக வாழ்க்கைக்கு அடிமைப்படுகிறோம். புத்தி சித்தம்கெட்டு ஆத்ம ஸ்வரூபமிழந்து மகா கேவல தரித்திர நிலைமைக்கு வந்துவிடுகிறோம்.

அப்படி வந்திருந்தாலும் பழம்பெருமை பேசுகிற குணம் நம்மைவிட்டு நீங்குவதில்லை. இன்னமும் நாம் கடவுளின் குழந்தையே யென்று மனப்பால் குடிக்கிறோம். போதாக் குறைக்கு மற்றவர்கள் நம்மை 'நீ கடவுளின் குழந்தை' என்று கூறுகிறார்கள். நமக்கோ பெருமை பிடிபடுகிறதில்லை. அகங்காரம் மேலிடுகிறது.

உலகக் குழந்தை கடவுளின் குழந்தையாக முடியுமா? முடியும். தான் எனும் பேய்கெட்டு மனம் சன்மார்க்கத்தில் திரும்பவேண்டும். இதற்கு வழி என்ன? மன்னிப்பு தான். ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய கொள்கையிலே மன்னிப்புக்குப் பிரதம ஸ்தானம் உண்டு.

கிருஸ்து கூறுவதைக் கவனி: 'உன் சத்துருவை நேசி. சபித்தவனை ஆசீர்வதி. பகைவனுக்கு அருள்செய்வாய். நிந்தித்தவனுக்காக ஜெபம் செய். துன்பப்படுகிறவனுக்காகப் பிரார்த்தனை பண்ணு. அப்போதுதான் பரலோகத்தில் உள்ள உன் பிதாவுக்கு உகந்த பிள்ளையாய் இருப்பாய்."

இவையெல்லாம் கடவுளின் குணம்ருதம். பிதாவைப்போலப் பிள்ளை யென்பது பிரமாணமாய் இருக்கவேண்டு மல்லவா?

ஏ, உலகக் குழந்தையே! மன்னிக்கும் நினைவு உன் நெஞ்சிலே உண்டா? நன்மையே செய்யும் எண்ணமிருக்கிறதா? பகை, விரோதம், கோபம், கெட்டதில் வைராக்கியம், பிடிவாதம், தீமையே செய்யும் சுபாவம் என்பவைதானே உலக இயற்கை? உலகத்தோடு அல்லும் பகலும் அனவரதமும் ஊடாடும் உனக்கும் இந்தக் குணங்களெல்லாம் இயற்கை தானே! அப்படி இருக்கும்போது என்னைக் கடவுளின் குழந்தையென்று சொல்லிக் கொள்ள என்ன உரிமை உண்டு?

அருமைக் குழந்தையே, மூன்று குணம் உனக்கு அவசியம் வேண்டும். சகிக்க, மன்னிக்க, பொறுக்கக் கற்றுக்கொள்.

இந்தக் குணங்களெல்லாம் இலேசிலே வரா. இதயத்திலே பாவ நினைவுகள் பூர்த்தியாய் நிறைந்திருக்கும் வரையில் இவை வாரா. பிறகு, நீ மேலான நிலைக்கு—ஆண்டவன் அழைக்கிற மேலான நிலைக்குப் போகிற வழி என்ன?

இதயத்தைத் தூய்மைப்படுத்த முயல வேண்டும். விஷ விருக்ஷத்தின் கிளைகளை மட்டும் வெட்டுவதில் பிரயோஜனமுண்டா? இல்லை. காலக்கிரமத்திலே எண்ணிக்கையே இல்லாத புதுக் கிளைகளை விடும். கிளைகள் வேண்டாமென்றால், விஷ விருக்ஷத்தை வேரோடு வெட்டி வீழ்த்த வேண்டும்.

மாசற்ற இதயம் வேண்டுமென்றால், நினைவுகளைக் குறித்துச் சர்வ ஜாக்கிரதையெடுத்துக்கொள்ள வேண்டும். ஏனென்றால், உலகத்திலே தென்படுகிற அநீதிகளுக்கெல்லாம் ஆதிபீஜம் நினைவு தான். எல்லா பாவங்களுக்கும் நினைவே தாய். பேச்சே தந்தை. செயலே குழந்தை.

ஒரு பழமொழி உண்டு. குட்டி உறவு தாய் பகை. அதுபோல, எண்ணத்தினிடத்தில் உறவுகொண்டு செயலை விரோதம் செய்துகொள்ள முடியாது. கெட்ட நினைவுக்கு உள்ளத்திலே இடம் கொடுத்தால், கெட்ட செயலுக்கும் இடம் கொடுக்கத்தான் வேண்டும்.

அன்பான குழந்தையே, தீர ஆலோசனை செய்து பாரு. இதுவரை நீ செய்த புத்திஹீனமான செயல்கள், சொன்ன புத்தி, குறைவான சொற்களெல்லாம் இதயத்தின் ஆழத்திலிருந்து கிளம்பினவையே யென்று அறிவாய். எனவே, இதயத்தைச் சுத்தப்செய்யும் பணியில் இன்றே இறங்கு.

இதயத்தில் குடிகொண்டிருக்கும் கெட்ட நினைவுகளை அடியோடு ஒழித்து விட முடியுமா? முடியும்; நினைவினாலே நினைவை ஒழிக்கவேண்டும், முள்ளினாலே முள்ளை யெடுப்பதைப்போல. ஒரே இடத்தில், ஒரே நிமிஷம் பூனையும் எலியும் ஒன்றாக இருக்கமுடியுமா? ஒரே இதயத்தில் கெட்டஎண்ணமும் நல்நினைவும் ஒற்றுமையாகக் குடி இருக்கமுடியாது.

தடி பிடித்தவன் தண்டல்காரன். எந்த எண்ணத்துக்கு வலிவு மிகுதியோ, அது மற்ற எண்ணங்களை ஆக்ரமிக்கும். கருமேகக் கூட்டம் ஆகாயத்தில் திரண்டிருக்கலாம். ஆனாலுமென்ன? பிரசண்டமாருதம் கிளம்பும்போது மேகத்திரள் இருந்த இடம் தெரியாமல் பறந்துபோகுமல்லவா. அதுபோல் தான் நல் நினைவுகளின் கூட்டம் இதய வீட்டில் திரளாக நிறைய நிறைய, கெட்ட நினைவுகள் ஓடி விடுவதில்லை; உருமாறி விடுகின்றன. நல்ல நினைவுகளின் அம்சமாக மாறி விடுகின்றன.

ஆசைக் குழந்தையே, இதோடு வியவகாரம் முற்றுப்புள்ளியைப் பெற்றுவிட்டதென்று எண்ணி ஏமாறாதே. இனிமேல் தான் பாரதப்போர் இருக்கிறது. கெட்ட சம்ஸ்காரங்களிலேயே பழகிப் பழகித் தேர்ச்சியடைந்த இதயம் நல்நினைவுகளின் அம்சங்களை உதறித் தள்ள முயலும் சமயம் மட்டும் சரியாக வார்த்துவிடுமானால், நாயைக் குளிப்பாட்டி நடு வீட்டில் வைத்த கதைதான். பழையபடி துஷ்கிருத்தியங்களைச் செய்யப் போய்விடும்.

அப்படிப் போகாமல் இருக்க முதல் வழி, சத் கிரந்தபடனம். நல்ல நீதி மொழிகளை இடைவிடாமல் வாசித்தல். ஆத்ம சாக்ஷாத்காரமடைந்த பெரியோர்களின் சரிதத்தை மனனம் செய்யல். இதயம் முழுமையும் ஆசீர்வதிக்கப்பட்ட வசனங்களினாலேயே நிறைத்தல். எல்லாவற்றிலும் முக்கியமானது—மனதிலே முளைவிடும் ஒவ்வொரு நினைவையும் பகவானுடைய பாதத்தின்கீழ் சிறைப்படுத்தல்

இப்படியெல்லாம் செய்வது எளி தென்று எண்ணிவிடாதே, குழந்தாய்! எவ்வளவோ மனோதிடம் வேண்டும். பம் பரத்தைப் போன்றது மனம். ஒவ்வொரு சுற்றிலும் பம்பரத்தின் விசை குறைந்து கொண்டே வரும். அதுபோலவே, எந்த ஒரு எண்ணத்தை எண்ணுந்தோறும் மனோதிடங் கொஞ்சங் கொஞ்சமாக மாண்டு வருகிறதென்பதை நினைவில் கொள்ளு.

எனவே, போராட்டத்தோடு போராட்டமாக மனோ பலத்தைத் தேட முயலவேண்டும். திடமான மனோபலமே பிற்காலத்தில் ஆத்ம சக்தியாக மாறு மாகையால், அது எவ்வளவு அவசிய மென்று சொல்லவேண்டியதில்லை.

மனோ பலத்தைத் தேடுகிற மார்க்க மென்ன? நிறைய ஜெபம் செய்வதே. இடைவிடாத ஜெபம்—ஆண்டவனோடு இணைக்கும் ஜெபம்—செய்ய அந்த வேளை இந்த வேளையென்று தேட வேண்டிய தில்லை. உட்கார்ந்திருக்கும்போதோ, நடக் கும்போதோ, படுத்திருக்கும்போதோ எப்போது வேண்டுமானாலும் ஜெபம் செய்யலாம். சதா இதயத்தில் ஜெப அனல்கொழுந்துவிட்டு எரிந்துகொண்டே இருக்கவேண்டும்.

ஜெபத்திலேயே ஜீவியம் போய்க் கொண்டிருக்கும்போது எது நேர்ந்தாலும் சரியே; சந்தோஷமோ, துக்கமோ, லாபமோ நஷ்டமோ, நல்லதோ கெட் டதோ சகலத்தையும் ஆண்டவனுடைய சரணாரவிந்தத்திலே அர்ப்பணம் செய். உன்னால் அர்ப்பணம் செய்யப்பட்டது, அணுவாய் இருந்தாலும் பிரம்மாண்ட மாய் இருந்தாலும் ஏற்றுக்கொள்ள அவர் ஆயத்தமாயிருக்கிறார் எப்போதும். 'உங் கள்மீதுள்ள சுமைப்பளுவை நான் ஏற் றுக்கொள்கிறேன்' என்று ஏசு கிறிஸ்து கூறியதின் கருத்து இதுவே.

சதா ஜெபத்தில் ஈடுபட்டிருந்தாலும் சில சில சமயங்களில் சோர்வு ஏற்படலாம். ஏதோ ஒருசமயம் ஏற்படும் மனோ பலக் குறைவினால், என் குழந்தையே! உனது அனைத்தையும் நீ இழந்துவிடாதே. முத லில் நீ ஒரு கரத்தினால் மட்டுமே பகவா னுடைய பாதாரவிந்தங்களைப் பிடித்துக் கொண்டிருப்பாய். அதனாலே இத்தகைய சோர்வு ஏற்பட்டிருக்கலாம். இப்போது நீ செய்யவேண்டியது, இரு கரங்களாலும் கடவுளின் கமலப் பதமலர்களைப் பிடித் துக் கொள்ளு.

போராட்டமெல்லாம் நீங்கிப்
பூரண வெற்றி காண்பாய்

'துஞ்சும்போது நினைமின்,
துயர்வரில் நினைமின்;
துயரிலீர் சொல்லினும் நன்றாம்,
நஞ்சுதான் கண்டீர்
நம்முடை வினைக்கு,
நாராயணா வெனும் நாமம்.'

என்ற திருமங்கையாழ்வாருடைய வேத சத்திய வசனம் வீண் போகாது.

ஜெபதப தியானம், என் குழந்தையே! ஆரம்பத்தில் ருசிக் குறைவாய்த் தான் இருக்கும். கண்களை மூடிக்கொண்டால் இஷ்டதேவதை பிரசன்னமாக மாட்டாள். தூக்க தேவதையே தோன்றுவாள். அவளை ஓட ஓட விரட்டு அப்பனே! அவ ளுக்குப் பிறகு அவளுடைய அருமைக் குழந்தையான அவ நம்பிக்கை உன்னி டம் கூடிக் குலாவவரும்.

தாயின் பிடிப்பைவிடக் குழந்தையின் பிடிப்பு வெகு திடமாயிருக்கும். திடமான இப் பிடிப்பினின்றும்கூட நீ அவசியம் தப்பவேண்டும்.

மார்க்கம்-சதசங்கம்.
ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்!
நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்.

என்ற ஸ்ரீ சங்கரரின் திருவாக்கைக் கவனி.

நடுக்கடலில் கப்பல் உடையப் பெற்ற தானே மாலுமியின் இதயமும் உடைந்து போகிறது. அந்நிலையிலேயே ஒரு தீவிலே ஒதுக்கப்படுகிறான். மனுஷ சஞ்சாரமில்லாத தீவோ அதுவென்று மாலுமி மனமுடைகிறான். அந்தச் சமயத்திலே, கடற்கரையில் யாரோ ஒரு மனுஷனுடைய காலடிக் குறிகள் காணப்படுகின்றன. மாலுமி தைரியம் கொள்கிறான்.

குழந்தாய், நீயும் அந்த மாலுமியைப் போலவே மனோ தைரியமுள்ளவனா மாற வேண்டுமானால், நல்லவர்களுடைய சிநேகத்தை நாடு. மீன் வேண்டுபவன் மீன் கடைக்கும், பூ வேண்டுபவன் பூக்கடைக்கும் போவதே ஒழுங்கு. உலகமாகிற மீன் கடையிலே, என் குழந்தையே! உனக்குப் பூ கிடைக்காது.

பூவாகிற சங்கம் வேண்டுமென்றால், மோக்ஷத்தையே வாழ்க்கையின் குறிக்கோளாய்க் கொண்டிருக்கிற நல்லவர் இருக்குமிடம் போ. ஒரு விறகு எரிவது எப்படி? ஒரு காடே புரிவது எப்படி? ஒரு விறகின் தீ சீக்கிரத்தில் தணிவடையும். தனி மரம் தோப்பாகாது.

ஒரு மனிதனே தனி வழி நடப்பது சீக்கிரமே சோர்வை உண்டாக்கும். ஆகவே நல்ல வழியில் ஒரு மனப் பட்டப் பரிசுத்தவான்களோடு கூடிப் பகவானைப் பற்றிச் சம்பாஷிக்க வேண்டும். அவனுடைய திருநாமத்தை ஜெபிக்க வேண்டும். வாசிக்க வேண்டும். படிக்க வேண்டும். யோசிக்க வேண்டும். எழுதவேண்டும்.

இப்படிச் செய், குழந்தையே! புது பலம் உள்ளத்திலே மிகும். நம்பிக்கை உண்டாகும். உத்ஸாகம் கிளம்பும்.

காலம் சுருக்கம். ஓயாமல் வேலைசெய். சுறுசுறுப்புள்ளவர்களே பாக்கியவான்கள் இன்றைக்கு இருக்கிறோம்; நாளைக்கு இருப்போமென்ற திடமுண்டா? அரிதானது மானிடப் பிறவி. இது தவறினால் எந்தப் பிறவி வாய்க்குமோ?

காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளு. பாவ ஜீவியத்தைப் புனிதம் செய்து கொள்ளு. நாளைக்கு என்று நினைக்காதே. இன்றே முயலு. பரமபிதாவைப் பிரிந்து விட்டோம். உலக விளையாட்டைத் தியஜித்து, அப்பனைப் போய் அடையவேண்டாமா?

குழந்தையே, இன்னமா உறக்கம்?

---

# பரமஹம்சரின் உபதேச மொழிகள்

(வித்வான் உமைதாணு பிள்ளை.)

### ஆத்மஞானம்

எல்லாம் வல்ல இறைவா நீ
இந்த உலகா மரங்கத்தை
வல்லமை யாக ஆட்டுகின்றாய்
வாழு மடியே னுன்கரத்தில்
புல்லைப் போல விளங்குகின்றேன்
புகலு மெனது பொருளாக
இல்லை யென்னும் உண்மையினை
இன்றே யானு மறிந்துகொண்டேன். 1

### கடவுள்

ஈச னென்று மிவ்வுலகில்
எல்லா ரிடமும் நிறைந்துள்ளான்
ஈச னிடத்தில் மாந்தருள்ளம்
இல்லை இல்லை இதுவுண்மை
பேச வினிக்கும் மொழியாளே
பேதைய ரென்றும் பெயர் தாங்கி
ஆசை வெறியா லன்பரெல்லாம்
ஆயுள் முழுது மழிவது மேன்? 2

### மாயை

நஞ்சை யுடைய நாகமது
நாளு மதனல் நலிந்திடுமோ?
அஞ்சிக் கடிக்கும் வேளையிலே
அரிய உயிரும் அகலாதோ?
தஞ்ச மடைந்த மாயையுமே
தனிப்பெரும் பொருளை வருத்திடுமோ?
மிஞ்ச விடாம லிவ் வுலகை
விரும்பித் தன்கீழ் அடக்காதோ? 3

### பகவத்ப்ரேமை

பையை நிறைக்கப் பணந்தேடிப்
பாரி லலையும் லோபியே போல்
மெய்யா யுன்றன் நினைவெல்லாம்
மேலா மந்தப் பரம்பொருள் மேல்
ஐயா நீயும் வைப்பாயேல்
அவனை யடையும் வழியறிவாய்
உய்யும் வழியும் இதுவல்லால்
உண்டோ அதனை யுரைப்பாயே! 4

தூங்க விரும்பும் ஓர்மகவு
சுண்டப் பசிக்கும் வேளையிலே
தூங்கா தென்னை யெழுப்பென்றே
சொல்லித் தாயை யருகழைக்கப்
பாங்கர் நின்ற தாய்வந்து
பசியே உன்னை யெழுப்பிடுமே
தூங்கு தூங்கு என்றுசொல்லித்
தொட்டில் தன்னை ஆட்டிநின்றாள். 5

பொங்கு மலைசூ ழிவ்வுலகில்
போற்றும் புகழில் நாட்டமில்லை
தங்கா தழியும் போகத்தில்
சற்று மெனக்கு விருப்பமில்லை
கங்கை யமுனை கலப்பதுபோல்
கடையேன் ஆத்மா உன்னடியில்
தங்கிக் கூடிக் களிப்புறவே
தாயே எனக்கும் அருளுதியே. 6

பக்தி யில்லை யோகமில்லை
படைக்கப் பொருளுஞ் சற்றுமில்லை
ஒக்கல் துணைவ ரொருவரில்லை
உண்மை யுரைப்பார் யாருமில்லை
துக்கக் கடலில் உழலுமென்னைத்
துயரம் போக்கி யுன்னடியில்
தக்கவ னாக வைத்தென்றும்
தாயே என்னை யாளுதியே. 7

### பகவத் கிருபை

அரசன் தங்கும் மாளிகையில்
அவனைக் காண ஆசையுறில்
வரிசை யாக வமைந்துள்ள
வாச லனைத்துந் தாண்டியல்லால்

புரக்கு மந்தப் பூபதியைப்
புலவன் கண்டு மீள்வானோ?
சுருக்கு வழியும் ஈங்கில்லை
சொன்னேன் உண்மைத் தொண்ட
[ருக்கே. 8

### மத வொற்றுமை

மண்ணை யளந்து வரம்பிட்டு
மண்ணி னெல்லை காண்பீரேல்
விண்ணை யாய்ந்தே மதியாமல்
வீணா யிருப்ப தேனையா
திண்ண மாக இவ்வுலகில்
தெய்வம் ஒன்றே வேறல்லால்
எண்ணி யெண்ணி யழிந்ததினால்
ஏதும் பயனைக் கண்டீரோ? 9

ஆண்டவன் பெயரை ஆய்வோமேல்
அதுவு மளவி லடங்கிடுமோ?
ஈண்டுநா மெடுக்கும் வடிவங்கள்
எட்டி யெழுதப் போந்திடுமோ?
வேண்டும் நாம உருவோடு
மேதினியி லென்றும் வணங்குவோரின்
தூண்டு துன்பந் துடைத்தவனும்
தூய வாழ்வைத் தாரானோ? 10

### நானாவகை

கூண்டா மிந்த உடம்பதிலே
கூடி வாழு முயிர்க்கிளியாம்
கூண்டை விட்டுக் கிளிபறந்தால்
கூட்டை யாருங் காப்பாரோ?
ஆண்டு பலவாய் அமர்ந்தகிளி
அகன்ற மாயம் அறிவீரோ?
மீண்டுந் தங்கி வாழ்ந்திடவே
விரும்பி யதுவும் வந்திடுமோ? 11

பட்டம் பதவி பணமெல்லாம்
பார்த்து மகிழ நிலைத்திடுமோ?
வட்ட மிட்டும் புகழ்ந்தென்றும்
வம்பே பேசு மாந்தர்களே
பட்ட மரம்போல் நம்முடலும்
பாரி லழியும் வேளையிலே
வட்டக் காசும் நம்மோடு
வருமோ அந்த வழிதேடி? 12

உற்ற உங்கள் தெய்வத்தை
ஒருங்கே நாளுந் தொழுதாலும்
மற்று மிந்த உலகத்தில்
மக்கள் வணங்கும் பரம்பொருளைக்
குற்றங் குறைகள் கூறாமல்
குணத்தைச் சொல்லி வாழ்வீரே
பற்றாய் அவரும் நம்மைப்போல்
பயந்து பணிந்து வணங்காரோ? 13

---

## ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகள் எழுதிய கடிதங்களின் பகுதிகள்.

இறைவனோடு இணக்கம் பண்ணுவதிலேயே மனதை ஈடுபடுத்து; அப்பொழுது மனதின் கேடுகளெல்லாம் நீங்கி விடும். நித்திய வழிபாட்டுக்கு ஓர் அறையை ஒதுக்கிவைத்துக்கொள்; காலை மாலைதோறும் அங்கு ஓர் ஆசனத்தின் மீது தனித்திரு; பின்பு உன்னால் இயலுமளவு ஜபம் தியானம் பிரார்த்தனை முதலியவைகளை ஒழுங்காகச் செய். இப்பூவுலகில் மனிதனாகப் பிறந்துள்ள நீ கடவுளைப் பற்றிச் சிந்திக்குமளவு உன் வாழ்க்கையானது மேலானதாகும்; உலகின் அற்பத் தனங்களின் மீது நீ பற்றுவைக்குமளவு மனதில் சாந்தியற்ற தன்மையுண்டாகும்.

உன்னை நன்னெறியில் நடத்தும்படிக் கருணாநிதியாகிய கடவுளிடத்துப் பிரார்த்தனை பண்ணுகிறேன்!

இறைவனை ஆராதிக்காது நீ மனவமைதியைப் பெறமாட்டாய் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். ஆகையால் நாள்தோறும் குறிப்பிட்ட சில வேளைகளில் மற்ற அலுவல்களை யெல்லாம் அடியோடு நிறுத்திவைத்துவிட்டுக் கடவுளை வழிபடவும், அவனுடைய பெருமையைப் பாடவும் செய். இடையறாது நெடுங்காலம் செய்யும் சாதனத்தின் பலனாகவே மெய்யன்பும், சிரத்தையும், ஞானமும் உண்டாகின்றன. தாங்கள் செய்யும் அற்ப முயற்சியின் பலனாக ஈசுவர அனுபூதியும் பேரானந்தமும் உண்டாகாவிட்டால் பெரும்பாலர் நம்பிக்கையிழந்து விடுகின்றனர். அதற்குக் காரணத்தைக் கண்டுபிடிப்பது கஷ்ட மன்று. இத்தகையவர்களுக்குக் கடவுளிடத்து உண்மையான அன்பு பிறக்கவில்லை, ஆதலால் சாதனத்தைத் தொடர்ந்து செய்வது அவர்களுக்குக் கஷ்டமாயிருக்கிறது. சாதனம் என்பது அவர்களுக்கு சிரம சாத்தியமானதாகிறது.

அருளுக்காகத் தாகமும் பேரன்பும் இல்லாத மனது உலர்ந்து போய் சஞ்சலத்தை யடைகிறது. ஆனால் இறைவன் பொருட்டு நீ துன்பப்படுகின்ற வளவு இறுதியில் இன்பத்தை யடைவாய். "அன்ப, நீ உற்சாகத்துடன் முயன்றால் இன்னல்களை வெல்லுவாய்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வதுண்டு. ஆதலால் பேரூக்கத்துடன் சாதனத்தில் பிரவேசி; உயிரே போவதா யிருந்தாலும் பின் வாங்காதே.

* * *

முழுமனதுடனும் முறையாகவும் நீ சாதனங்களைச் செய்துகொண்டிருக்கிறாய் என்பதை அறிந்து நான் மகிழ்வடைகிறேன். இடையீடின்றிச் சில ஆண்டுகளுக்கு நீ இங்ஙனம் முயன்றால் அதன் பலனை நீ அடைந்துவிடுவாய் என்று உறுதிகூறுகிறேன். மற்று உன் உடல் வலிவற்றிருப்பதால் நீ இந்நிலையில் தொடர்ந்து நெடுநேரம் சாதனம் செய்ய வேண்டாமென்று நான் உனக்குத் தெரிவிக்கிறேன்; பின்பு நிதானமாகவும் தளரா முயற்சியுடனும் நாடிய கருமத்தில் பிரவேசி.

* * *

நான் அடுத்த ஜூன் மாதம் காசிக்கும் மற்ற க்ஷேத்திரங்களுக்கும் யாத்திரை போய் அவ்விடங்களில் மூன்று அல்லது நான்கு மாதம் தங்குவதாகவும், அது போழ்து ஆத்ம சாதனங்கள் பழகுவதாகவும் எண்ணியிருக்கிறேன்; ஆனால் இவ் வெண்ணம் நிறைவேறுவது இறைவன் கையிலிருக்கிறது.

வைராக்கியம் இல்லாவிட்டால் கடவுளைப்பற்றிய எண்ணம் மனதில் உதிக்கவே உதியாது. வைராக்கியம் வலுக்கின்றவளவு மனிதன் சாந்தத்தை அனுபவிக்கிறான்—என்பது என்னுடைய முடிவான கொள்கை. விவேகமும் வைராக்கியமும் மானுட வடிவெடுத்திருப்பதாக நாங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரிடத்துக் கண்டோம். காலக்கிரமத்தில்தான் நாங்கள் அவரை மேலும் மேலும் அறிய வல்லவர்களானோம். விவேகத்தையும் வைராக்கியத்தையும் பற்றிப் புஸ்தகத்தில் படிப்பது ஒன்று, அவரிடத்தில் அவைகள் உருவெடுத்திருப்பதைப் பார்ப்பது வேறு ஒன்று. விவேகமும் வைராக்கியமும் மானுட வடிவெடுத்து வந்த அவருடைய திருவடிகளுக்கு ஆளாகிய பிறகும் நாங்கள் அவைகளைப் பெறுதிருப்பது எங்களுடைய தௌர்ப்பாக்கியமாகும்.

ஆத்மசாதனம் பழகுதற்கு நீ காசிக்குப் போக விரும்புகிறாய்; நல்லது, நான் மனப்பூர்வமாய் அனுமதி கொடுக்கிறேன். ஆனால் ஒரு விஷயம்,—அப்புண்ணிய க்ஷேத்திரத்தில் வசிப்பதற்கு என்னையும் அங்கு அழைத்துக் கொள்ள மறந்து விடாதே. ஆத்ம சாதனத்துக்கென்றே அமைந்துள்ள அப்புண்ணிய க்ஷேத்திரத்தைப் பற்றி என்னென்பேன்! அங்கு வசிக்க எந்தச் சாதகன்தான் விரும்ப மாட்டான்? சாதனத்துக்குத் தகுந்த இடம் எது என்று யாராவது கேட்டால் காசி என்று நான் பதில் சொல்லுவதுண்டு. அங்குச் சென்று இடையறாத தியானத்திலும் பிரார்த்தனையிலும் ஈடுபடும்படி நான் சொல்லுகிறேன். இப்பதியை எண்ணியதும், ஏனைய அலுவல்களை யெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு அங்குச் செல்ல நான் விரும்புறேன்; வேறு ஒன்றிலும் எனக்கு விருப்பம் வருவதில்லை. என்னுடைய வாழ்க்கையின் இறுதிக் காலத்தைக் காசியில்கழிக்க நான் விரும்புகிறேன், நீயும் என்னை அங்ஙனம் தூண்டுவாயாகில் என் எண்ணம் நிச்சயமாய் நிறைவேறும். காசிக்குச் சென்றால்மட்டும் போதாது, அங்கே தனித்திருந்து பித்தம் தருகிற பேரன்பில் மூழ்கினால்தான் அந்த வாசத்தின் சீரிய நோக்கம் நிறைவேறியதாகும்.

---

# வேதமும் வேதாந்தமும்

(T. S. ஸ்ரீநிவாசன்)

வேதம் என்றால் என்ன? வேதம் என்னும் பதம் "வித்" (அறிவது) என்னும் தாதுவிலிருந்து உண்டானது. ஆகவே, வேதம் என்றால் ஞானம் என்று பொருள்படும். ஆனால், வேதம் எவ்வகைப் பட்ட ஞானம்? ஞானம் இரு வழிகளில் செல்லுகின்றது—ஒன்று ஸ்தூலம், மற்றொன்று ஸூக்ஷ்மம். ஸ்தூலம், இன்னும் ஸ்தூலம், அதி ஸ்தூலத்திற்கு முதல் வழி செல்லுகிறது: ஸூக்ஷ்மம், இன்னும் ஸூக்ஷ்மம், அதி ஸூக்ஷ்மத்திற்கு மற்றொன்று செல்லுகிறது. ஆகவே, ஞான ஸமுதாயமானது அதிஸூக்ஷ்மமான நிலையிலிருந்து படிப்படியாய்ச் சென்று அதி ஸ்தூலமான ரூபத்தையடைந்துவிட்டது. இவ் வகண்டமான ஞான சமுதாயமே வேதமென வழங்கப் படுகிறது. வேதவாக்கும் "வேதங்கள் அனந்தம்" (முடிவில்லாதவை) என முறையிடுகிறது. வேதங்கள் அனந்தமானதால் அவைகளனைத்தையும் படித்து முடித்துவிட முடியாது. அவைகள், கேவலம் நான்கு புத்தகங்களில் அடங்கிவிடவில்லை. ரிக், ஸாமம், யஜுஸ், அதர்வணம் என்பவை வேதங்களுக்கு அளித்த பெயர்கள். ஸமுத்திரம்போல் விசாலமாயுள்ள வேதத்தின் ஞான ஸமுதாயம் இந்த நான்கு பாகங்களில் சுருக்கி யமைக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான், எந்நாளும் குன்றாத ஞானக் களஞ்சியத்திற்கே ஓர் சிகரம்போல் வேதம் பிரகாசித்து விளங்குகிறது. இந்த ஸூக்ஷ்ம ஞானப் பிரவாகத்திலிருந்துதான் எல்லா ஸ்தூல ஞானப் பிரவாகங்களும் உற்பத்தியாகின்றன. ரிக் முதலிய புஸ்தகங்கள்தான் வேதமென்றும் மற்ற ஞானங்களெல்லாம்

வேதத்திற்குப் புறம்பானது என்றும் அபிப்பிராயப் படுவோர்களை வேதத்தை நன்கு உணர்ந்தவர்களென்று கருதமுடியாது. வேதத்திற்கு எல்லையில்லை. எல்லையற்ற நாமரூபமற்ற பரப்ரஹ்மத்தின் ஞானத்தன்மையே வேதமெனப்படும். "அங்கங்களோடும் உப-அங்கங்களோடும் கூடிய வேதங்கள்" என்ற வசனம் சர்வ சாதாரணமாய் எல்லோராலும் சொல்லப் படுகிறது. இதன் அர்த்தம் என்ன? எனக்குச் சரீரமிருக்கிறது; அங்கங்களிருக்கின்றன. ஆனால், நான் சரீரமல்ல, அதினின்றும் வேறுபட்ட ஏதோ ஒன்று. நான் ஒரு தேஹி (தேகத்தை யடைந்தவன்) ஏனெனில், எனக்கோர் தேக மிருக்கிறது. முதலில், நான் யார், எவ்வகைப் பட்டவன், என்று அறிய, நான் என் சரீரத்தையோ, உறுப்புக்களையோ அறிந்துகொள்ளவேண்டும். அப்பொழுது தான் என்னுள்ளே வசிக்கும் "நான்" என் தேகத்தினிடமிருந்து வேறுபட்டவன் என்று உணரலாம். என் சரீரத்தையோ அவயவங்களையோ நீ நன்கு அறியாமலிருக்கும்போது என்னைப்பற்றி நீ நன்றாய் அறிந்தவனென்று எப்படிக் கூறுவது? அதுபோல், வேதத்திற்கும் சில அங்கங்களும், உப-அங்கங்களுமிருக்கின்றன. ஆனால், இவைகள்தான் வேதம் என்று எப்படிச் சொல்லலாம்? வேதம், பிரஹ்மம், அங்கங்களினின்றும் உப-அங்கங்களினின்றும் வேறுபட்டது. இவ்வங்கங்களும் உப-அங்கங்களும் வேதமென்கிற சரீரத்தின் உறுப்புக்களே. இப்பாகங்களையும் கிளைப்பாகங்களையும் அறிந்தாலொழிய வேதத்தைப் பூரணமாய் அறிய முடியாது. என்னை அறிய என் சரீரத்தை யறியவேண்டிய தவசியம். அதுபோல், வேதத்தையறிய, அங்கங்களையும் உப-அங்கங்களையும் முதன் முதலில் முக்கியமாய் அறிந்து கொள்ளவேண்டும்.

வேதத்திற்கு ஆறு பிரதான அங்கங்களுண்டு:—(1) சிக்ஷா, (2) வியாகரணம், (3) நிருக்தம், (4) ஜோதிஷம், (5) கல்பம், (6) சந்தஸ். இவைகளில் சிக்ஷா என்பது வேதத்தின் மூக்கென்றும், வியாகரணம் வாயென்றும், நிருக்தம் காதுகளென்றும், ஜோதிஷம் கண்களென்றும், கல்பம் கைகளென்றும், சந்தஸ் பாதங்களென்றும் சொல்லப்படுகின்றன. இந்த ஆறு அங்கங்களைத்தவிர சில உப-அங்கங்களுமிருக்கின்றன. வேதமென்பது, ஸாங்க—உபாங்க-வேதம்.

சிக்ஷா வேதத்தின் மூக்கென்று ஏன் சொல்லப்படவேண்டும்? சுவாச சம்பந்தமான காரியங்களை மூக்கினால் செய்கிறோம். மூக்கின் இக்காரியம் நின்று விட்டால் சாவையடைகிறோம். மூக்கின் காரியத்தை வாய் செய்கிறதென்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது மூக்கினால் மூச்சு விடாவிட்டாலும் சாவையடைகிறதில்லை. சுவாச சம்பந்தமான காரியம் மூக்கைச் சேர்ந்தது. ஆனால், வாய் மூக்கின் காரியத்தைச் செய்தால் அப்போது வாய் வாயாகாது, மூக்காக மாறிவிடுகிறது. ஒருவனின் கைகளோ, கால்களோ, காதுகளோ, கண்களோ அவைகளின் காரியங்களைச் செய்யத்தவறினாலும் அவன் மரணமடைவதில்லை—மூக்கின் காரியம் நின்று விட்டாலோ நிச்சயம் அவன் வாழ்வே நின்று விடுகிறது. ஆகவே, ஒரு மனிதனின் அங்கங்களில் மூக்கே முக்கியமானது. அதைப்போல், வேதத்தின் அங்க, உப-அங்கங்களில், சிக்ஷா பிரதானமானது. மூக்கின் வழியாய் சுவாசமானது, சரீரத்தின் எந்த பாகத்திற்கும் கொண்டு போகப்படுகிறது. மார்புப் பிரதேசத்திலுள்ள ஹிருதயத்திற்கும் கொண்டு போகப்படுகிறது. ஹிருதயம் சரீரத்தின் மத்திய பாகத்திலிருக்கிறது. ஹிருதயத்திற்குச் செல்லும் வழி மூக்கிலிருக்கிறது.

வேறு வழி கிடையாது. வேதஞ் ஞானம் என்னும் ஆலயத்தின் கர்ப்பக்கிரஹத்திற்குள், வேதத்தின் ஹிருதயத்திற்குள் பிரவேசிக்க வேண்டுமானால் சிக்ஷாவின் உதவியை நாடியே யாகவேண்டும். அதற்கு சிக்ஷாதான் ஒரே சிறந்த வழி. அது காரணம் பற்றி சிக்ஷா மூக்கென்று அழைக்கப்படுகிறது. வியாகாரணத்தை வாயென்றும், நிருக்தத்தை காதுகளென்றும் அழைப்பதற்குத் தகுந்த காரணங்களிருக்கின்றன.

சிக்ஷாவின் கருத்தைப்பற்றிச் சற்று விசாரிப்போம். எதை அவசியம் படித்தறியவேண்டுமோ, எதை அறிந்தால் எல்லாவற்றையும் எளிதில் அறிந்துவிடலாமோ, எதற்குமேல் அறியவேண்டியது வேறொன்றுமில்லையோ அப்பேர்ப்பட்ட உயர்ந்த தத்துவத்தைப் பற்றி எது நமக்கு எடுத்துக் கூறுகிறதோ அதுவே சிக்ஷா எனப்படும், அவ்வுயர்ந்த தத்வம் எது? அக்ஷர வர்க்கங்களைப்பற்றிச் சொல்லும் கிரந்தமே அவ் வுயர்ந்த தத்வமாகும். "அ" முதலிய அக்ஷரங்களை எப்படி உச்சரிப்பது, "ஆ" முதலான அக்ஷரங்கள் "அ" என்னும் அக்ஷரத்திலிருந்து எப்படிப் பிறந்தன, "அ" முதலான எழுத்துக்களிலிருந்து இப்பிரபஞ்சமே எப்படி உண்டாயிற்று—என்று இம்மாதிரியான பெரிய விஷயங்கள், அக்ஷர சாஸ்திரமான, சிக்ஷாவில் ஆராயப்பட்டிருக்கின்றன, அக்ஷரசாஸ்திரமே சகல சாஸ்திரங்களுக்கும் ஆதிகாரணம். அக்ஷர சாஸ்திரம் அறியாதவன், பதங்கள், வாக்கியங்கள், பதவாக்கிய அர்த்தங்கள், இவைகளைப்பற்றி எப்படி யறியக்கூடும்? அவன் உண்மையான ஞானத்தைப் பெறமுடியாதவனென்று சொல்லலாம். அக்ஷர சாஸ்திர ஞானம் பெற்றவன் இதர சாஸ்திரங்களைச் சுலபமாய்க் கற்றுணரலாம். பாலிய பருவத்தில் நாம் பள்ளிக்கூடங்களில் "அ, ஆ" முதலிய அக்ஷர அப்பியாசத்தைச் செய்திருக்கிறோம். ஆனால், இன்னும் அவ் வக்ஷரங்களின் பரிபூரண ஸ்வரூபத்தை யறிந்தவர்களல்ல. இவ் வக்ஷரங்களின் தத்வத்தை ஆராயப்புகுந்தால், அக்ஷரங்களையே நன்றாய்க் கற்கவில்லை என்று ஒப்புக் கொள்ளவேண்டிவரும். ஞானதாகமுள்ளவன் சிக்ஷா சாஸ்திரத்தையே, அல்லது, அக்ஷர சாஸ்திரத்தையே முக்கியப் பாடமாகப் பயிலவேண்டும். அதனால்தான் அதற்கு சிக்ஷா என்று பெயர் வந்தது.

அங்கங்களோடும் உப-அங்கங்களோடும் கூடிய வேதங்களே ஜகத்திலுள்ள லௌகிக-வைதிக முதலிய சகல சாஸ்திரங்களுக்கும் அடிப்படை. உலகத்தின் பற்பல நாடுகளிலுள்ள உயர்ந்த அறிவுகளும், சிறந்த ஆராய்ச்சிகளும், எல்லாம் வேதத்தினின்றே உண்டானவை. நவீன பௌதிக, ரசாயன, சாஸ்திரங்கள் வேதத்தின் ஒரு மந்திரத்திலோ அல்லது, ஒரு மந்திரத்தின் ஒரு பாகத்திலோ அடங்கிய தத்வத்தின் விளக்கங்களாகும். இப் பௌதிக ரசாயன சாஸ்திரங்கள் அநேக அரிய பெரிய தத்வங்களைக் கண்டுபிடித்து விட்டதாய் நினைப்பது அறிவீனம். இந்த லௌகிக சாஸ்திரங்கள் புதிதாய் ஒன்றையும் கண்டுபிடித்து விடவில்லை என்று வேதத்தை நன்றாய்க் கற்றுணர்ந்து அனுபவித்த உண்மை ஞானிக்குத் தெளிவாய் விளங்கும். அவ்வப்போது இவைகள் திருப்பித் திருப்பி வேதத்தில் சொல்லப் பட்டவைகள் தான். ஆகவே, எவ்வித அறிவு விஷயமாகட்டும், அது ஒரு நாளும் வேதத்திற்கு முரண்பட்டதாயிருக்க முடியாது. உலகத்திலுள்ள அறிவாளிகளோ, ஆசிரியர்களோ, வேதத்தை அறிந்தாலும் சரி அறியாவிட்டாலும் சரி, எதாவதொரு

விஷயத்தைப் பற்றி எழுத விரும்பினால், வேதத்தை அவசியம் அனுசரித்தேயாக வேண்டும். வேதத்தில் ஒன்றிரண்டு வார்த்தைகளால் குறிப்பிடும் விஷயங்களை இவ்வாசிரியர்கள் விவரித்துத் தெளிவாய் எழுதவேண்டியதைத் தவிர வேறொன் றும் செய்யவேண்டிய தில்லை. இச்சிறிய காரியத்திற்கே அவர்களை உலகம் பாராட்டு கிறது. ஆனால், அவர்கள் வேதத்தின் பாஷையையும் உட்கருத்தையும் ஊன்றி ஆராய்ந்து அறிந்தார்களானால், தாங்கள் ஒன்றும் புதிதான விஷயங்களைக் கண்டு பிடித்து விடவில்லை என்று தாங்களே கண்டு கொள்வார்கள். அப்பொழுது அவர்கள் பெருமைக்கும் கௌரவத்திற் கும் பங்கம் விளைந்து விட்டதாக எண்ணு வார்கள். ஆகவே, உலகில் எல்லாத் துறைகளிலும் முன்னேற்ற மடைந்த நாடுகள் பணிவுடனும் பக்தியுடனும் வேதத்தைப் பாராட்டுவதில் என்ன ஆச் சரிய மிருக்கிறது?

இதுவரை வேதத்தைப் பற்றி விசாரித் தாம். வேதாந்தத்தைப் பற்றிக் கொஞ்சம் கவனிப்போம். வேதப் படிப்பு வேதாந் தப்படிப்பில் முடிவடைகிற தென்று நினைப்பது ஸகஜம். ஆனால், உண்மை அப்படியல்ல. வேதமோ, முன் சொன்ன படி, எல்லையற்றது—எல்லையற்ற, முடி வற்ற வேதத்திற்கு எங்கிருந்து எல்லை யும் முடிவும் வரும்? வேதத்திற்கு ஓர் அந்தமிருக்குமானால் எல்லையற்ற அது கட்டிற் கடங்கிவிடும்; அனந்தமான வேதம் அநித்திய மாய்விடும். வேதத் திற்கும் வேதாந்தத்திற்கும் பரஸ்பரம் விரோத மிருக்கும் போல் காண்பிக்கும். ஆதலால், வேதாந்த சாஸ்திரத்தின் தத் வார்த்தத்தைத் தெளிவாய் ஆராய வேண் டிய தவசியமாகும். வேதாந்தம் என் னும் தொடர் மொழி ஷஷ்டீ தத்புருஷ ஸமாஸத்தைச் சேர்ந்தது—பிரிக்கு மள வில், "வேதானும் அந்த:" என்றுகிறது. "அந்த" என்றால் "சமீபம்" என்று பொருள்படும்; ஆகவே, வேதாந்த மென் றால் "வேதங்களின் சமீபம்" என்று அர்த்தம். வேதாந்தத்தைக் கற்றுணர்ந் தால்தான் வேதஞானத்தை யணுகலாம். வேதத்தின் தத்வ சாஸ்திரத்தைப் புத்த கத்தில் மாத்திரம் நாம் கண்டிருக்கி றோம்.

வேதத்தின் சமீபத்தை அணுகுதலி லிருந்து மாத்திரம் வேதசாஸ்திர ஞானத் தைப் பெற்றுவிடலாம் என்பது முடி யாத காரியம். எல்லையில்லாத அகாதமான ஞான சாகரத்தின் கரையில் நின்று கொண்டிருந்தால் மாத்திரம் எவ்விதம் ஞானத்தை யடைவது? ஜலத்தில் இறங்க வேண்டும், மூழ்கவேண்டும். இதைத் தான் வேத சாஸ்திரம், தாரணை, தியா னம், சமாதி என்று சொல்லுகிறது. புத்தகப் படிப்பு மாத்திரம் போதவே போதாது. ஐக்கியப்படுத்தும் மற்று பாவம், அனுபவ சாதனம், அல்லது யோகம் அவசியம் வேண்டும். வேதத்தை அத்தியயனம் செய்யும் பொழுதே யோகாப்பியாசத்தையும் கைக்கொள்ள வேண்டும். வேத ஞானம் ஏட்டுச் சுவடி யிலில்லை, யோகத்தினால் அனுபவத்தில் ஸாதித்துக் கொள்வதொன்று. ஆகவே, வேதத்தை ஆராய விரும்புவோன் ஓர் ஸத்குருவின் உபதேசத்தைப் பெற்று, தாரணம், தியானம், ஸமாதி இவைகளை அப்பியாசம் செய்யவேண்டும். அவ்வித மாய் யோகத்தைப் பயிலும்போது, படிப் படியாய், வைகரீயிலிருந்து மத்தியமத் திற்கும், மத்தியமத்திலிருந்து பச்யந் தீக்கும், பச்யந்தியிலிருந்து பராவிற்கும் மேலும் மேலும் செல்ல ஸாத்தியமாகும். அப்பொழுதுதான், ஸமாதி நிலையில், வேதமாதா தன் நிஜ ஸ்வரூபத்தைக் காட்டியருள்வாள். அந்த ஸமாதி நிலை

யில்தான் ஸர்வஸங்கபரித்யாகியான ஸாதகன் வேதமாதாவின் அனுக்ரஹத்தால் வேத சாஸ்திரத்தின் பரிபூர்ண ஞானத்தையடைகிறான். ஸாதனப்பயிற்சியில்லாதவன், தற்காலத்தியப் பள்ளிக்கூட கலாசாலை மாணவர்களைப் போல், ஞானத்தின் ஸ்தூல பாகத்திலேயே உழன்று கொண்டிருக்க வேண்டியதுதான். இந்தஸ்தூல ஞானத்தோடு நிற்குமளவில், நிஜ ஆனந்தத்தையும்மனத்திருப்தியையும் அடைவது முடியாது.

வேதம், சாஸ்திரங்களுக் கெல்லாம் சாஸ்திரம். வேதமென்னும் மஹா சாஸ்திரத்தை ரிஷிகள் முதலில் அறிந்தார்கள். அவர்களே ஞானத்தின் அடியார்கள். வேத ஞானத்தை யடைந்ததினுல் தான் உலகிலே ஓர் உன்னத ஸ்தானத்தை எய்தினர். அவர்களின் ஞானம் ஏட்டுச் சுவடியிலிருந்து ஏற்பட்டதல்ல. அவர்கள் மஹாயோகிகள். அவர்களுடைய ஞானம் ஸ்வஸ்ருப அனுஸந்தானத்தினுல் (தன்னைத்தானறிவது) கிட்டியது. அவர்களில் ஒவ்வொருவரும் ஓர் வேதவித், விஞ்ஞானவித்; ஆகவே, ஸாதிக்கக் கூடாத காரியங்களைச் செய்வனேசெய்து முடிக்கும் வல்லமை வாய்ந்தவர். அவர்கள் ஸர்வசக்திகளையு முடைய ஸர்வஞ்ஞர்கள்.

ஞானத்தை வளர்க்காமல் ஒரு நாடும் முன்னேற்றமடைய முடியாது. ஏதோ கொஞ்சம் ஞானவிருத்தியினுல் தான் மேல் நாடுகள் தற்ஸமயம் அவ்வளவு மேன்மை ஸ்தானம் பெற்று விளங்குகின்றன. ஞானத்தை அசட்டை செய்ததினுல் தான் நம் நாடு இவ்வளவு க்ஷீண தசையையடைய நேரிட்டது. வேத மாதாவின் அனுக்ரஹம் எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவுதான் ஒரு நாடு அபிவிருத்தியை யடைய முடியும். ஆதலால் மேலும் மேலும் வளர்ச்சியை விரும்பும் நாடுகள் வேதமாதாவிற்குத் தங்கள் காணிக்கையைச் சரிவரச் செலுத்தியே யாகவேண்டும்.

லோகமனைத்தும் வேதமாதாவை வணங்கவேண்டும். ஞானத்தின் ஸ்தூல பாகங்களில் மேல் நாடுகள் எவ்வளவு தேர்ச்சியை யடைந்திருக்கின்றன! இப்பொழுது அந்த நாடுகள் ஞானத்தின் ஸூக்ஷ்மத் துறைகளி லிறங்க வேண்டும். பாரத வர்ஷத்தின் ரிஷிகளின் ஸாதனங்களைப் பெற்று ஸர்வ ஜனங்களுக்கும் ஹிதத்தையே செய்ய முன்வர வேண்டும். மேல்நாடுகளைப் போல், நம் இந்தியநாடு ஞானத்தின் ஸ்தூலபாகங்களிலும் வளர்ச்சியை யடையவேண்டும். ஸ்தூல வழியிலேயே சென்று கொண்டிருப்பதால் ஞானதாகம் தீரவில்லை என்று நம் நாடு உணர்ந்தால், அப்பொது தானுகவே மறுபடியும் ஸூக்ஷ்ம வழியில் செல்ல ஆரம்பித்துவிடும்: ஏனெனில், வெளியிலேயே சஞ்சரித்துக்கொண்டிருக்கும் மனுேந்தியானது உள் நோக்கிச் செல்ல, அதன் ஓட்டத்தைத் தடுக்க ஓர் அணை அவசியம் வேண்டும். அப்படித் தடுக்கப்பட்ட போது தான், தன் உயர்ந்த உரிமையைப்பற்றி மனிதனுக்கு ஞாபகத்திற்கு வரும். அப்போதுதான், ரிஷிகளால் அனுஷ்டிக்கப்பட்ட ஸாதனங்களைக் கடைப்பிடித்து அதனுல் அதி ஸூக்ஷ்மமான ஞான வழியை யடைய மனம் நாடும். மேற்றிசை நாடுகளும் கீழ்த்திசை நாடுகளும் ஒன்று சேர்ந்து ஜகதனைத்தையும், ஞான ஒளியின் சாந்த கிரணங்கள் வியாபிக்கும் ஓர் ஆனந்த வாசஸ்தானமாய்ச் செய்யக் கருணைநிதியான வேதமாதா அருள்புரியட்டும்!

# கடோபநிடதம்

(219-ம் பக்கத் தொடர்ச்சி)

**यस्मिन्निदं विचिकित्सन्ति मृत्यो**
**यद साम्पराये महति ब्रूहि नस्तत् ।**
**योऽयं वरो गूढमनुप्रविष्टो**
**नान्यं तस्मान्नचिकेता वृणीते ॥ २९ ॥**

29. (ப-ரை) मृत्यो - யமதேவரே, यस्मिन् - எதில், महति - மேன்மையான, सांपराये - இறந்தபின் உள்ள வாழ்க்கையில், यत् इदं - யாதொரு பொருளைப்பற்றி, विचिकित्सन्ति - சந்தேகப்படுகின்றார்களோ, नः - எங்கட்கு, तत् - அதை, ब्रूहि - சொல்லும், यः अयं - யாதொரு, गूढं - இரகசியமான (அறிதற்கரிய), अनुप्रविष्टः - புகுந்துள்ள (சம்பந்தப்பட்ட), वरः - வரம், (विद्यते - இருக்கிறதோ), तस्मात् - அதைக் காட்டிலும், अन्यं - வேறொன்றை, नचिकेताः - நசிகேதர், न वृणीते - தெரிந்தெடுக்கவில்லை.

(பொ - ரை) யமதேவரே, எதைப்பற்றி மக்கள் ஐயப்படுகின்றார்களோ, அந்த மேன்மையான - மரணத்திற்குப் பின் உள்ள - வாழ்க்கையைப்பற்றி எங்கட்குச் சொல்லும். அறிதற்கரிய அவ்வொன்றைத்தவிர வேறொரு வரத்தை நசிகேதர் தெரிந்தெடுக்கவில்லை.

(கு - ம்) முன்னுரையிற் கூறியபடியே, உண்மையான உபநிடதம், அதாவது பரவித்தை, இந்நூலின் இரண்டாம் அத்தியாயத்தினின்றே தொடங்குகின்றது; அதிலிருந்தே, வாழ்க்கையின் உயர்ந்த உண்மையைப்பற்றிய உபதேச மொழி தொடங்குகின்றது. இப்பரம்பொருளைப் பற்றிய அறிவையே தமது மூன்றாவது வரமாகத் தேர்ந்தெடுக்கிறார். ஆனால் இப் பொருள் மிக உயர்ந்ததும் அதீதமுமாதலின், அதை உள்ளவாறு உணர்தற்கு மிக்க பயிற்சியும் தூய்மையும் பக்குவமும் பெற்ற மனமே வேண்டியதாகும். ஆகவே, சாதன சதுஷ்டயம் என்னும் நான்கு இன்றியமையாத இலக்கணங்கள் அமையப் பெற்றுள்ளார்க்கன்றி ஏனையோர்க்கு ஆத்மவித்யை முறையாக அறியவொண்ணாததாகும் என்பது பொதுவான நம்பிக்கையாகின்றது; அவையாவன:—(1) இஹாமுத்ர பலபோக விராகம் - இம்மையிலும் மறுமையிலும் பெறுதற்குரிய சுகங்களின்மீது விருப்பின்மை, (2) நித்யாநித்ய வஸ்து விவேகம்-அழிபொருள் அழியாப்பொருள் ஆகிய இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டுணர்வு, (3) சமதமாதி ஷட்க ஸம்பத்தி-மன அமைதி, பொறிகளை அடக்கல், அவாக்களை அறுத்தல், பொறை, மனத்தெளிவு, நம்பிக்கை யென்னும் அறுவகைக் குணங்கள், (4) முமுக்ஷுத்வம் - இயற்கைக் கட்டுகளினின்றும் முற்றும் விடுபடுதலிலுள்ள பேரவா. இது பற்றியே யமதேவர் முதன்முதலாக நசிகேதர்க்கு அத்தனை ஆசைகளைக் காட்டி, அவரது உள்ளத்தின் தன்மையை ஆராய்கிறார்; நசிகேதர் தாம் வேண்டிய பரவித்தையைப் பெறுதற்குரிய தகுதி தம்மிடம் இருப்பதற்குச் சான்று காட்டுமாறு, அவ்வண்ணம் யமதேவர் சோதிக்கிறார். மந்திரங்கள் 22, 26 முதல் 29, ஆகிய ஐந்தும், உண்மையாகவே மெய்ப்பொருளை நாடுவார்க்குரிய முற்கூறிய இன்றியமையாத இலக்கணங்கள்யாவும் நசிகேதரிடத்து வாய்ந்திருப்பதை அழகாகவும் குறிப்பாகவும் காட்டுகின்றன; அன்றியும், ஒருவர்

நசிகேதனைப்போல் இருந்தாலன்றி, ஆத்ம வித்தையைப் பற்றிய இவ் உபதேசத்தை முறையாகப் பெறத் தகுதியுற்றவராகார் என்ற உண்மையை அவ்வாயிலாக வலகமாக அறிவுறுத்துகின்றது. இந்த உபநிடத வித்தை தத்துவத்தைப் பற்றிய வெறும் ஆராய்ச்சி யளவாக நின்று விடுவதில்லை; மெய்ப்பொருளை நேராக முறைப்படிக்காண்பதே அவ் வித்தையாகும். இம் மெய்ப்பொருட் காட்சி கைகூட வேண்டின், காமவடிவமாகவும் ஐம்புல இன்பப்பற்று வடிவமாகவும் உள்ளத்தில் உறையும் மலங்கள் அனைத்தையும் வேர்பறித்து எறிதல் வேண்டும். இதைச் சுருதிதானே பின் ஓரிடத்து மிகத் தெளிவாகவும் வற்புறுத்தியும் உரைக்கும்.

---

## இரண்டாம் அத்யாயம்.

---

अन्यच्छ्रेयोऽन्यदुतैव प्रेय
स्ते उभे नानार्थे पुरुषं सिनीतः।
तयोः श्रेयः आददानस्य
साधुर्भवति हीयतेऽर्थाद्य उ प्रेयो वृणीतेः
॥ १ ॥

1· (ப-ரை) अन्यत् - வேறுபட்டது, श्रेयः- மேன்மையானது (நலமுள்ளது), उत - இன்னும், अन्यत् - வேறானது, एव - தான் (உண்மையாகவே), प्रेयः - இனியது, ते - அவை, उभे - இரண்டும், नानार्थे - வெவ்வேறு பயன்களை யுடையனவாய், (सति - இருந்துகொண்டு), पुरुषं - மனிதனை, सिनीतः- கட்டுப்படுத்துகின்றன, उभौ - இவ்விரண்டிற்குள், श्रेयः - மேன்மையானது, आद-दानस्य - ஏற்பவனுக்கு (பின்பற்றுபவனுக்கு), साधुः - நன்மை, भवति - உண்டாகிறது, सः उ - அவனும், अर्थात् - பயனிலிருந்து, हीयते - நீங்கிவிடுகிறான், यः - எவன், प्रेयः - இனியதை, वृणीते - தெரிந்தெடுக்கிறான்.

(பொ - ரை) மேன்மையானது ஒன்று; இனியது அதனின்றும் (முற்றிலும்) வேறுபட்டதுதான். இவை யிரண்டும் வெவ்வேறு பயன்களைப்பற்றியவை யாதலின், மனிதனைக் கட்டுப்படுத்துகின்றன. மேன்மையைப் பின்பற்றுபவனுக்கு மேன்மை உண்டாகின்றது; இனிமையைப் பின்பற்றுபவனே பயனை இழந்தவனாகின்றான்.

(கு - ம்) மேன்மையானது - பரமான மெய்ப்பொருள், எதை அறிந்தால் மனிதனுக்கு முக்தியுண்டாகுமோ அது.

இனிமையானது - ஐம்புல இன்பம்.

வெவ்வேறு பயன்களைப் பற்றியவை - ஒவ்வொன்றும் அதைப் பின்பற்றுவோரை வேறுபட்ட ஒரு முடிவுக்குக் கொண்டுய்க்கும்.

இவையிரண்டும் மனிதனைக் கட்டுப்படுத்துகின்றன - ஆத்மனாகிய புருடன் தன் இயல்பாலே நிறைவுற்றவனாகிறான். அவன் எச்செயலிற்கும் ஒருநாளும் கருத்தா (இயற்றுபவன்) ஆவதில்லை. ஆயினும், அறியாமையால் எழும் மயக்கம் காரணமாக, அவன் தன்னைக் கட்டுற்றவனாகவும், குறைகளை யுடைமையின் எல்லைக்குட்பட்டவனாகவும் கருதுகிறான். இக் காரணம்பற்றியே, அனைத்தையும் கடந்த ஆத்மனது நிலையினின்று நோக்குங்கால், ஐம்புல இன்ப ஆசையும் முத்திப்பேற்றில் ஆசையும் - பின்னது இறுதியில் அவனை மயக்கத்தினின்றும் விடுவிக்குமெனினும் - இருவகை ஆசைகளும் கட்டுகளே யாகும். ஆத்மன் என்றும் விடுபட்டதே. அது இதற்குமுன் என்றேனும் கட்டுற்றதுமில்லை, இன்று கட்டுப்பட்டுள்ளதுமில்லை, இனிப் பின் என்றே

றும் கட்டுப்படப் போவதுமில்லை. ஆதலின், தன்னை விடுவித்தற் பொருட்டுத் தன்னிடத்து எழும் எம்முயற்சியும் மயக்கத்தாலும் கட்டுப்பட்ட தன்மையாலும் எழுவதன்றி வேறொன்றுலன்று. ஆயினும், சாதாரணமான. மயக்கத்திற்குட்பட்ட ஆன்மாவுக்கு (உயிர்க்கு) முத்திப் பேற்றில் உள்ள ஆசை இன்றியமையாது வேண்டப்படுவதொன்றேயாம். இவ்வாசையும், வாழ்க்கையிலுள்ள அறியாமையை ஓட்டிவிட்டு, இறுதியில் தன்னையும் இல்லாததாக்கிக் கொள்கின்றது.

பயனை - வாழ்க்கைக்குரிய கட்டுகளினின்றும் ஆன்மாவை அறுதியாக விடுவித்தலிலுள்ள மிக உயர்ந்த பேரின்பத்தை.

---

# நமது சிகரஜோதி

இப்பகுதியில் :—தேவியின் திருவாக்கு - இதில் ஸ்ரீ சுவாமி விவேகாநந்தரின் மேற்றிசைச் சிஷ்யைகளுள் முதன்மையான சகோதரி நிவேதித அம்மையாரின் பக்தியைப்பற்றியும், பெண் கல்வியைப்பற்றியும் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீ சங்கரரும் ஸ்ரீ ராமாநுஜரும் - உலகத்தையும், சிறப்பாகத் தென்னாட்டையும் உய்விக்குமாறு அவதரித்த இவ்விரு மாகுரவர்களையும் ஒப்பிட்டு ஆராயும் கருத்தோடு, முதன்முதலாகப் பேராசிரியர் ஸ்ரீ P. N. ஸ்ரீநிவாஸாசாரியார் மிகச் சுருக்கமாகவும் தெளிவாகவும் அழகாகவும் சங்கரரின் அத்வைதக் கொள்கைகளைப் பண்டிதரும் பாமரரும் களிக்கும்படி எடுத்துரைக்கிறார் சந்தேகம் தெளிதல் - இதில் மறுபிறப்புண்மையைப் பற்றிய ஐயம் பல மத நூல்களினின்றும் பொறுக்கப்பட்டுள்ள மேற்கோள்களாலும் அனுமானத்தாலும் களையப்படுகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ண லீலை - இதில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஐந்து வயதுள்ள ஒரு சிறுமியை மணந்துகொண்டதில் அடங்கியுள்ள நுட்பமான பெருங்கருத்து விளக்கப்படுகிறது; பெண்கட்கு மணம் உபநயனச் சடங்கேயாகும் என்பதும், அவர்கட்குக் கணவர் வீட்டுவாசம் குருகுல வாசமாகும் என்பதும் விளக்கப்பட்டுள்ளன. தியானம் — தியானத்தின் இயல்பும், அதைப் பழகும் முறையும் இதில் கூறப்படுகின்றன. மாயைக்கு அதிஷ்டானம் யாது? - இதில் மாயைப்பற்றி வாசஸ்பதி மிச்ரரும் விவரணாசாரியாரும் முறையே கொண்ட கருத்துகள் எடுத்துக் காட்டப்படுகின்றன. கடவுளின் குழந்தை - நம்மைக் கடவுளின் குழந்தையாகப் பாவித்துப் பக்தி பண்ணும் வழியும் அதன் நலமும் ஜெபத்தின் அவசியமும் புகட்டப் படுகின்றன. வேதமும் வேதாந்தமும் - வேதத்தின் அங்கங்களுடைய மேன்மையும் வேதாந்தத்தின் பெருமையும் இதில் உரைக்கப்படுகின்றன.

## இலக்ஷியங்களும் ஆசைகளும்.

அறிவுடைய மனிதன் வெற்றியடைகிறான். நாம் தோல்வியடைவோமாயின், அதன் காரணம் நமது அறியாமையே. நம்மை முன்னேறச் செய்வதற்கு நன்மை பயக்கும் என்று நாம் கருதுகின்ற பொருள்களை நாம் பன்முறையும் பெறுவதில்லை. இதன் காரணம் யாதெனில், நமது மேலான முன்னேற்றத்தைக்

குறித்து நாம் அவ்வளவு மனப்பூர்வமாகக் கவலைப்படுவதில்லை என்பதே. ஏனெனில், நமது உத்தமமான முன்னேற்றத்திற்கு நன்மை பயக்கத் தக்கதும், அனுகூலமாயிருக்கத்தக்கதும், அம் முன்னேற்றத்தைக் குறித்து வேலை செய்யும் இறைவனது ஆணை யென்னும் நியதியின் பயனாக நமக்கு உரியனவாகும். "நாம் உண்மையாக மனப்பூர்வமாக ஒழுகுகிறோமோ" என்பது தான் கேள்வி. நாம் அறிந்த வரையிலே நமக்கு நன்மைபயக்கும் என்று கருதுகிறவைகளை நாம் உண்மையாகவே வேண்டுகிறோமோ? இல்லையாயின், முற்றிலும் உலக நன்மைகளையே தரும் பொருள்களை வேட்டையாடிக் கொண்டு திரிவதிலேயே நாம் மனத் திருத்தியடைந்து விடுகின்றோமா? நமக்கு உண்மையாக நன்மையளிப்பதும், நமது வளர்ச்சிக்கு ஏதுவாவது மான எதையும் விட்டுவிடுகிறோமா? நாம் நம்மையே நன்கு ஆராய்ந்து, நாம் பெரிதும் தேடியலையும் பொருள் யாது என்பதைக் கண்டுபிடிப்போம். அப்போது பிழை நம்மிடத்திலேயே இருப்பதை அறிவது உறுதியாகும்.

நாம் தோல்வியடைவோமாயின் நாம் நம்மையே குற்றஞ்சாட்டிக்கொள்ளல் வேண்டும். நாம் மனப்பூர்வமாகவும் உண்மையாகவும் ஒன்றை விழைவோமாயின், நமக்கு உண்மையிலேயே முன்னேற்றத்தை அளிக்கக்கூடியதாக அது அமையுமாயின் இயற்கையே நமக்கு வேண்டிய உதவியைத் தவறாது இயற்றும். மேன்மையான, உண்மையேடொத்துள்ள ஆசைகளை நாம் கொண்டோமாயின், இவ்வுலகத்திலுள்ல எல்லா வகையான உதவியும் நம்மை வந்து நாடும். இயற்கை இவ்வுலகில் வாழும் எண்ணிறந்த விலங்கினங்கட்கு உணவை அளிக்கின்றதன்றோ? தூலஉலகில் நடப்பதுபோல, ஞானஉலகிலும் இயற்கை ஒருவர்க்கு வேண்டிய உணவை அளிப்பது திண்ணம். ஆதலின் நாம் வேண்டியவற்றைப் பெறாதுபோவோமாயின், பிழை நம்மதாகும், பிறரைச் சார்ந்ததாகாது.

முதன்முதலாக நாம் செய்யவேண்டுவதாவது, நம்மையே நாம் 'நமக்குப் பெரிதும் தேவையானது யாது?' என்று ஒளிப்பின்றிக் கேட்கவேண்டும். நமது உலக நன்மையைச் சார்ந்த பொருள்களையே நாம் வேண்டுகின்றோமல்லவா? அத்தகைய குறைகளை நீக்குவதிலேயே மனம் முழுதும் ஈடுபட்டிருக்கும்வரை, அது அதனினும் பெரிய நலமொன்றைப் பெறுதல் அரிதாகும். எளிதிலே நெகிழ்ச்சியை அடையக்கூடிய மனத்தைப் பெற்றுள்ள மக்கள், தாம் கோரிய ஆசைகள் நிறைவேறப் பெற்றதும், தமக்குக் கணக்கற்ற துன்பம் உண்டாவதையே உணர்கின்றதற்குக் காரணமும் இதுவே; எவ்வாறெனில், விழிப்புற்றவன் (சற்றே ஞான விஷயமாக விழிப்புற்றவன்) தனக்கு நன்மையற்றதொன்றை ஆசைப்படுவானாயின், துயரமே விளையும், அது மிகக் கூரியதுமாகும். இன்னதை ஆசைப்படவேண்டும், இன்னது தனக்கு உண்மையான (ஞான) மேன்மையைத்தருவது என்பதை அவன் அறிவான்; நன்மையைத் தரும் (மெய்யான) நிலையான பொருளொன்றில் மனதை நிலைநாட்ட அவன் தவறிவிடுவானாயின், இறுதியில் ஞானவழியில் தனக்கு நலத்தைத் தராத பொருள்களில் அவன் சித்தத்தை ஒருமைப்படுத்துவானாயின், அவன் ஏமாற்றமடைவது திண்ணம்; அவன் தான் படும் துயரத்தாலும் அனுபவத்தாலும் தான் கொண்டுள்ள கருத்துக்களை மாற்றித் தூய்மைப்படுத்தும் வரை அவனுக்கு ஏமாற்றமும் துயரமும் விளைந்தே தீரும்.

ஒரு மனிதன் தான் ஆசைப்படும் பொருளைப் பெருது போவதற்கு அவனே காரணமாகின்ருன். அவனுக்கு நேரும் வெற்றியும் தோல்வியும் அவனது உள்ளத்து உறையும் கருத்துக்களின் தூல வடிவங்களேயாம். ஒரு மனிதனது நிலை முழுவதும் அவனுல் நினைக்கப்படும் எண்ணங்களின் தொகுதிப்பயனேயன்றி வேறில்லை. மனம்போலே வாழ்வு என்பது பண்டைய கொள்கையேயாம். தூல உலகத்திலே பொருட்கவர்ச்சியாகத் தோன்றும் நியதியே மன உலகத்தும் ஒழுக்க உலகத்தும் வேலை செய்துகொண்டு வருகின்றது. ஒரேமாதிரியான பொருள்கள் ஒன்றையொன்று கவரும் என்ற விதிப்படியே செயல்கள் எங்கும் நடந்துவருகின்றன.

ஆயினும், வெற்றி தோல்விகளே வாழ்க்கையின் முழுமையுமாகும் என்ற கருத்தும் தவருனதாகும். தோல்வியும், இன்னின்ன இடங்களில் தோல்வியுற்ரேம் என்பதை நமக்கு எடுத்துக் காட்டுதலின் ஒழுக்கத்தைப் பண்படுத்தும் இயல்பினதாகின்றது. தோல்வியினுல் விளையும் பயன் சாலவும் பெரிது. நாம் பலமுறையும் கனவிலும் கருதியிராத பயன் நமது தோல்விகளினுல் உண்டாகின்றது. அவை நமக்கு ஒருவாறு பாடம் கற்பிக்கின்றவையாம்; அவை நேர்முகமாகப் பாடம் கற்பிக்காவிடினும், அவை நமக்கு அளிக்கும் போதம் பெரு நன்மை அளிக்கக்கூடியதாகின்றது.

வெற்றி பெறுவதே மனிதனது நோக்கமாகும். அந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு வழி யாது? முதன்முதலாக, தனக்கு எது மிக உயர்ந்த மேன்மையைத் தருவது என்பதையும் தனக்கு உண்மையான வெற்றி யாது என்பதையும் அவன் அறிய முயலவேண்டும். உயிருக்கு வெற்றியாவது, உண்மையான வெற்றி யாவது யாது? உயிருக்கு இலக்ஷியம் எதுவோ அதை உணர்தலே; அதாவது, உண்மைப் பொருளை நேராக அனுபூதி நிலையிற் காணுதலேயாம். மனிதன் தனக்கென வகுத்துக்கொள்ளும் இலக்ஷியம் எதுவோ அதன் ஞான வடிவத்தை உணர்தலே உண்மையான வெற்றியெனப்படும்.

ஆதலின் நாம் தோல்வியடையின், உண்மையான வெற்றியின் இலக்ஷியம் இது என்பதை நாம் அறியவில்லை என்பதே கருத்தாகும். வெற்றியென்பதற்குச் சரியான பொருளையுணராது தவருன பொருளை நாம் கொண்டிருக்கலாம்; ஆனுலும் அது நமது தனித்தனியான மனத்திலுள்ள பிழையே என்பது உறுதியன்ருே? வெற்றி புறவுலகத்து வெற்றியாகாது, உள்ளுலகத்து வெற்றியேயாகும். ஆதலின் நமது ஆசைகள் நிறைவேருது நாம் தோல்வியடையுந்தோறும், நமது எண்ணங்களின் மூலை முடுக்குகளை நன்கு ஆராய்ந்து பார்ப்போமாயின், பிழை நம்மிடத்திலேயே இருப்பதை உணர்ந்துவிடுவோம். நமது நோக்கங்களும் உணர்ச்சிகளும் குறிகளும் தவருனவையாகும்போது நமது வாழ்க்கை தலைகீழாகிறது, திருகியதாகிறது; அதன் பயனுக வெற்றிக்குப்பதில் தோல்வியையே நாம் பெறுகிருேம்.

பொதுவாக, மனிதனது தேவைகள், அவன் உணர்கின்ற அளவில் உடலையும் உலக வாழ்க்கையையும் பற்றியனவாகின்றன. சாதாரண மனிதன் தன்னிடத்துள்ள அழியாத மெய்ப்பொருளையொட்டி யெழும் தேவைகளைச் சிறிதும் கருதுவதில்லை. உண்மையான அழிவற்ற நிலையான வாழ்க்கை தனக்கு உண்டு என்பதை அவன் கனவிலும் சிந்திப்பதில்லை. அவனுக்குத் தான் வேறு தனது உண்மையான இயல்பு வேறு என்ற உண்

மையறிவு உண்டாகத் தொடங்கியதும், தனக்குரிய மேன்மையான தேவைகள் இவையிவை என்பதை உணர்கிறான். 'நான்' என்பது உண்மைப்பொருளின் நிழலேயானது; அவ்வபவத்தின் பலன்களைச் சேகரித்துக்கொண்டே போகும்போது, அவனது ஒழுக்கம் சைவாத்திருந்த, முடிவில் தன்னிடத்துள்ள மெய்ப்பொருளை நாடும் தேவையே பலமாக எழுகின்றது. மனிதனுக்கு உண்மையான தேவைகளாவன: உயர்ந்த ஒழுக்கமும் ஞானவாழ்க்கையை ஒட்டிய தேவைகளுமே. உயர்ந்த ஒழுக்கத்தையும் தனது உண்மையியல்பைப்பற்றிய அறிவையும் பெற முயலுபவன் ஒருவனே உண்மையான வளர்ச்சியடைகிறான்; அவன் மிக உயர்ந்த அறிவுக்கும் சக்திக்கும் இன்பத்திற்கும் சாந்திக்கும் உறைவிடமாகிய பொருள் எதுவோ அதை நோக்கி அணுகி வருகிறான்; அணுக அணுக அவனது ஒழுக்கம் பண்பட்டுவருகிறது, அவனது உணர்வும் விரிந்து தூயதாகி வருகிறது. இந்த நோக்கத்தை நிறைவேற்றுதற்குத் துணையான எந்தத் தேவையை ஒரு மனிதன் பெற முயற்சித்தாலும், அதில் வெற்றியடைவது உறுதி; இதற்கு எதிரான ஒன்றைப் பெறப் பாடுபடும்போதோ, முதலில் அற்ப வெற்றியும் பின்னர் முழு ஏமாற்றமும் பெருந்துயரமும் அவனுக்கு விளைகின்றன. மனித வாழ்க்கையின் மிக உயர்ந்த நோக்கத்தை உணரும்வரை, அதற்கியைய முயலும் வரை, ஆசைகளைப் பெறுவதில் தோல்வியை அடைவது இயல்பே; அதன் பின், தோல்வியாகத் தோன்றுவதும் மெய்யான வெற்றியாதல் உணரப்படும். நமது வாழ்க்கையின் இலக்ஷியத்திற்குக் கொண்டு சேர்க்க உதவும் ஆசையே நிறைவேற்றப்படும். இதுவே வாழ்க்கையில் அடங்கிய ஒரு மர்மமான தத்துவமாகும்.

---

" சாதனம் பழகுபவனுக்குரிய உண்மையான மனோ நிலைமையாவது: தனது பிரியமும் சங்கற்பமும் நிறைவேற வேண்டும் என்று வற்புறுத்துவதல்ல, இறைவனது சங்கற்பத்தை ஏற்றுக்கொண்டு, அதை நிறைவேற்றுவதேயாகும். 'இது எனது உரிமை, குறை, தேவை, அவசியமானது. இதை ஏன் நான் பெறவில்லை? என்று கூறுதல் நல்ல முறையன்று; தன்னை இறைவனிடம் ஒப்புவித்தலும், அவனையே சரணமாகப் பற்றுதலும், அவன் அளிப்பது யாதாயினும், அதை வருத்தமில்லாதும் எதிர்த்துப் போராடாதும் ஆனந்தமாகப் பெற்றுக் கொள்ளுதலும் - இதுவே மேன்மையான முறையாகும். இவ்வாறு வாழ்ந்தால், உனக்குக் கிடைப்பது, உனக்கு மிகவும் ஏற்றதாகும்."

—ஒரு பெரிய சாதகர்.

# மதிப்புரை

பாரத சாரம் (ஸ்ரீமான் அ. மு. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்களால் நாகர லிபியில் தொகுத்துப் பிரசுரிக்கப்பெற்றது. பக்கங்கள் viii + 144. கிடைக்குமிடம்— 22, தெற்கு மாடவீதி, திருவல்லிக்கேணி).

மஹா பாரதம் பெரியதொரு கடல். அது உப்புக்கடல் அன்று, பாற்கடல். மஹா பாரதத்தின் ஸாரமாகிய இச்சிறு நூல் அப் பாற்கடலில் கடைந்தெடுத்த அமுதம் போன்றது. இந்நூல் ஸம்ஸ்கிருதம் பயிலும் மாணவர்க்கு மட்டு மன்றித் தாமறிந்தவற்றுள் முக்கிய மானவற்றை ஞாபகத்துக்குக் கொண்டுவர விரும்பும் பண்டிதர்க்கும், உபந்நியாஸகர்கட்கும் பெரிதும் பயன்படும்.

ஸ்ரீநிவாஸாசாரியார் சென்ற பல ஆண்டுகளாக இந்த முறையில் தொண்டாற்றி வந்திருக்கிறார். ஸ்ரீமத் ராமாயணம், பாரதம், பாகவதம் இவற்றைக் கதைப்போக்கை அனுசரித்துச் சுருக்கி ஆங்கில மொழி பெயர்ப்புடன் ஸ்ரீமான் G. A. நடேசன் பிரசுரிப்பதற்கு இவரே முன் நின்று உதவியவர். இச் சிறு நூலில் இந்திர நமுசி ஸம்வாதம், துவைபாயன சுக ஸம்வாதம், ஹம்ஸோபதேசம், நாரதோபதேசம், பீஷ்மோபதேசம், தர்மப்ரமாண நிரூபணம், பராசரகீதை, பிரம்மகீதை, பகவத்கீதை, அனுகீதை, பாரத ஸாவித்ரீ முதலிய அரிய பகுதிகளின் ஸாரம் காணப்படுகின்றது.

---

# சமாசாரம்

ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தின் 36-ம் வருட (1940) அறிக்கையேடு வரப்பெற்றோம்.

நல்லவகையில் நாட்டுக்கு மிக்க பயனளிப்பதாகிய இவ்வில்லத்தின் நடைமுறைகளும் மற்றும் பல விவரங்களும் அறிக்கை யேட்டாற் புலனாகின்றன. அறிவாற்றல் வாய்ந்த ஏழை மாணவர்கட்கு அன்னதானமும் வித்யாதானமும் ஒருங்கே அளித்து, குருகுல முறையில் அவர்களது உடலையும் உள்ளத்தையும் ஒழுக்கத்தையும் வளர்த்து, தமக்கும் பிறர்க்கும் பயன்பட வாழும் வண்ணம் பயிலுவிக்கும் இவ்வில்லம், இராம கிருஷ்ண சங்கத்தின் மூலபுருஷர் இருவருடைய நோக்கத்திற்கும் தூலவடிவமாகவே பொருத்தமுற அமைந்திருக்கின்றது. இங்கே பயிற்சி பெறும் மாணவர் எதற்கும் பிறர்கையை எதிர்பார்க்கும் குறையின்றித் தமக்குரிய எல்லாக் காரியங்களையும் தாமே பார்த்துக்கொள்ளும் திறமையோடு, பிறர்க்குத் தம்மாலியன்ற பணிகளை வேண்டுமிடத்தெல்லாம் விரும்பிச்செய்யும் விழுப்பம் உடையவராதற்குரிய பயிற்சியையும் பெறுகின்றனர். முக்கியமாக இல்லத்தைச் சார்ந்த கைத்தொழிற்சாலையில் ஐந்தாறு துறைகளில் ஊதியம் தரக்கூடிய சிறு கைத்தொழில்களை மாணவர்கட்குப் போதித்து வருதல் தற்காலத்திற் கேற்பச் சிறந்த பயனளிக்க வல்லதாகின்றது.

சென்ற ஆண்டில், இல்லத்திற்குள்ள இடவசதியைப் பெருக்கும் பொருட்டு, அடுத்துள்ள ஐந்தரை ஏக்கர் தென்னங்

தோப்பு வாங்கப்பட்டுள்ளது. கல்வி கற்கும் மாணவர்களின் உடல்நல நிலைமை செவ்வனே மருத்துவநால் வல்லோரால் பெரிதும் பாதுகாக்கப்பட்டு வந்துள்ளது. இல்ல மாணவர் அன்றாடம் செய்துவரும் தோட்ட வேலையின் பயனாக, இல்லத்தைச் சூழும் தோட்டம் அழகும் சுத்தமும் வாய்ந்துள்ளதென அறிஞர்கள் பாராட்டியுள்ளனர். இல்லமாணவர்கள் தொகுதிச் சங்கீதப் போட்டியில் முதற் பரிசு பெற்றதோடு, ஒலிபரப்பும் நிலையத்தாரால் அடிக்கடி அழைக்கப்பட்டு, இசைப் பாடல்களைப் பாடி மகிழ்வித்துள்ளனர். நவராத்திரி விழாவையும் பெரியோர்களின் பிறந்தநாட்களையும் வழக்கம்போல் மாணவர்கள், பயனளிக்கும் முறையில் மிக விமரிசையாகக் கொண்டாடியுள்ளனர். அரசாங்கப் பரீக்ஷைகளில் தேறியுள்ள மாணவர்களின் தொகையும் போற்றத் தக்கதாயுள்ளது. எனவே, இல்லத்தின் நடைமுறை அதன் நோக்கத்திற்கியைய மேம்பட்டதாகின்றது.

மாணவர் தொகை முந்திய வருடத்திலும் இவ்வருடம் 10 அதிகமாயுள்ளது. இவ்வாறே இன்னும் தொகையை மிகுதிப்படுத்துவது நிர்வாகத்தாரின் நோக்கமெனவும் தெரிகிறது. அதற்கேற்ப நிர்வாகச் செலவும் மிகுவது இயல்பே. செலவுக்குரிய பொருளைப் பலவகையாலும் தளராத ஊக்கத்துடனும் ஈட்டினும், சில ஆண்டுகளாக மூலதனத்தினின்றும் எடுக்க நேர்வதாகத் தெரிகிறது. இக்குறையைப் பொதுமக்கள் கவனித்து, அதனை நீக்கி இல்லத்தை ஆதரிப்பது அவர்களது கடமையாகும். இல்லத்தின் பழைய மாணவர்கள் தம் கடமை யறிந்து, இல்லத்திற்கு இயன்ற வரை தாமே பொருள் நல்கியும் பொருளாளரைத் தூண்டியும் உதவி புரிந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

"ஆவிற்கு நீர் என்று இரப்பினும் நாவிற்கு இரப்பின் இளிவந்தது இல்" என்பதையும் பொருட்படுத்தாது, பிறர் நலம் பேணுதற்காக, இரந்தும் இல்லத்தைத் தளராது புரந்துவரும் நிர்வாகிகளின் உறுதியும் ஊக்கமும் மெச்சுவதற்குரியன.

பரமஹம்ஸ தேவரின் பரமானுக்கிரகத்தாலும் பொதுமக்களின் பேராதரவாலும் இல்லம் மென்மேலும் பாங்குடன் ஓங்குக என வாழ்த்தி, இறைவனை வழுத்துகின்றோம்.

---

## கடிதங்கள்

(மூன்றாம் பாகம்) இரண்டாம் பதிப்பு.

முதன் முதலாகப் பலருடைய உள்ளத்திலே ஆத்ம தாகத்தைபும், தேசீயக் கனவையும் எழுப்பினவை, ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள், தம் சகாக்களுக்கும், இதர தம் சிஷ்யர்களுக்கும் எழுதிய கடிதங்களேயாம். தீர்க்க தரிசியாக விளங்கும் சுவாமிகள் நம் சமய சமூக சிக்கல்களை எடுத்துக் காட்டி, எவற்றினை நீக்கவேண்டும், எவற்றினைப் போற்றவேண்டும் என்பதனை இக் கடிதங்களில் நன்கு எடுத்துக் காட்டுகின்றார்கள். இக் கடிதங்கள் என்றோ எவருக்கோ எழுதப்பட்டதாயினும் நாம் இவற்றை வாசிக்கும்போது நம் மனத்தில் எழும் ஐயங்களை நீக்கி நம்மை உற்சாகப்படுத்தவே இவைகள் எழுதப்பட்டிருப்பதாக நமக்குத் தோன்றும்படி அமைந்துள்ளன. இவ் விரண்டாம் பதிப்பில் 25 கடிதங்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணு 10.

---

## பவாஹாரி பாபா

இவர் விவேகாநந்த சுவாமிகளால் ஒரு பெரும் மகானுபாவராக மதிக்கப்பட்டவர். இவரது வாழ்க்கை மிகவும் அருமையானது. இப் பெரியார் ஞாபகார்த்தமாக ஸ்ரீமத் சுவாமிகளால் எழுதப்பட்ட இவ்வரிய சரித்திரம் படிப்போருக்கு வியப்பை உண்டுபண்ணும். விலை அணு 3

---

## ஜகஜீவபர விளக்க வினாவிடை

இது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடருள் ஒருவரான ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணாநந்தரால் இயற்றப்பட்ட ஓர் உயர் தத்துவத்தின் மொழிபெயர்ப்பாகும். பக்தி ஞான வைராக்கியங்களை உண்டாக்கக் கூடிய அரிய விஷயங்களை வெகு தெளிவாய் உணர்த்தவல்லது. தத்துவ நூலாராய்ச்சி செய்வோருக்கும் மத வுண்மைகளை உணர முயல்வோருக்கும் மிகுந்த உதவியைத் தரக்கூடிய நூலாகும்.

விலை அணு 12. சந்தாதாரருக்கு அணு 10.

---

# ப ஜ னா வ ளி

பல்வேறு பக்தர்களால் பாடப் பெற்ற சுமார் 250 பக்திரஸம் பொருந்திய பாடல்களையுடையது. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உள்ளது. பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் இந்நூல் இருக்க வேண்டுவ தவசியம்.

விலை அணு 12.